ௗ

கந்தபுராணம்

# தக்ஷ காண்டம்

## உரை





பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை

# கந்தபுராணம்

## தக்ஷ காண்டம்

### உரை

பண்டிதமணி
**சி. கணபதிப்பிள்ளை**

உ

கணபதிதுணை

திருச்சிற்றம்பலம்

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்

அருளிச்செய்த

# கந்தபுராணம்

ஆறுவது

## தக்ஷகாண்டம்

மூலமும்

பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை

செய்த

உரையும்


இந்து மாணவர் சங்கம்

இலங்கைப் பல்கலைக் கழகம்

பேராதனை

பராபவஹு] 1967 [தைமீ

உ
சிவமயம்

# வணக்கம்

ஓங்கார மூர்த்தியாகிய விநாயகப்பெருமான்
அத்தியற்புத அதிமதுர சுத்தச் செந்தமிழாகிய
கந்தபுராணத்தின் கருவூலமான
**தக்ஷ காண்டத்துக்கு**
உரையெழுதுவதோர் எழுச்சியை
**உற்பத்தி செய்தும்,**
அது முற்றுதற்கு வேண்டும் அநுகூலங்களை
**அநுக்கிரகித்தும்,**
மூலமும் உரையும்
அச்சில் வருவது கருதி
**'அஞ்சலோம்புமதி'**
என்று
கனம்பொருந்திய வைத்திய கலாநிதி
பேராசிரியர் அ. சின்னத்தம்பி அவர்கள் மூலம்
**அபயம் அளித்தும்,**
மதிப்புக்குரிய
இலங்கைப் பல்கலைக் கழக
இந்து மாணவர் சங்க வாயிலாக
**வெளியீடுசெய்தருளியும்**
**முகிழ்த்த**
பெருங் கருணைத் திறத்தை
மனமுருகி வாழ்த்தி வணங்குவாம்.

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணிபதம் நாடு.

# நன்றியுரை

**ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்** அவர்களின் மருகரும் மாணுக்கரும் ஆகிய **வித்துவசிரோமணி ந. ச. பொன்னம்பல பிள்ளை** அவர்களது மாணுக்க பரம்பரையிற் கையெழுத்தில் வழங்கிவருங் கந்தபுராண உரைக்குறிப்புக்கள்; **நாவலர்** அவர்கள் தொடக்கஞ் செய்துவைத்த கந்தபுராண வசனம்; **பானுகவி** என்பவர் எழுதிய கந்தபுராணப் பொழிப்புரை; வடமொழிக் **காந்த மஹா புராணம்** தமிழுரை என்னும் இவைகள் தக்ஷகாண்ட உரைக்கு உபகாரமான உறுதுணைகள்.

உரைக் குறிப்புக்களையும் வேண்டிய புத்தகங்களையும் ஆங்காங்குத் தேடி உபகரித்தும் ஊக்கம் அளித்தும் ஊன்று கோலாய் உதவியவர்கள், சிவபூஜாதுரந்தரரும் அன்பரும் ஆகிய அச்சுவேலி, ஆசிரியர் திரு. மு. வைத்தியலிங்கம் அவர்களும் அவர்களின் உறவினரான திரு. இ. இராசதுரை அவர்களும் ஆவர்.

கையெழுத்துப் பிரதியை அச்சுக்கேற்றவாறு அழகுற எழுதி உதவியவர், பண்டிதர் திரு. ச. சிதம்பரப்பிள்ளை. அவர் எழுதியதை மேற்பார்வை செய்து நுண்மையவாய பலவேறு திருத்தங்கள் செய்தவர் பண்டிதை த. வேதநாயகி அம்மையார். இருவரும் வேலணையில் நாவலர் அவர்களின் மாணவ பரம்பரையிற் சைவத் தையுந் தமிழையும் பேணி வளர்த்த குடும்பத்தில் உதித்தவர்கள்.

அச்சிடுதற்கேற்ற வழியைச் செய்து வைத்தவர்கள், மானிப் பாய் இந்துக்கல்லூரி அதிபர் திரு. க. முத்துவேற்பிள்ளை அவர்கள். அவர்களோடு அணுகிப் பழகும் வாய்ப்பினைச் செய்தவர் அன்பிற் குரிய திரு. அ. துரைரத்தினம் ஆசிரியர்.

இப் பதிப்பின் உயிர்நாடியாயமைந்தவர்கள், பேராசிரியரும் வைத்தியகலாநிதியும் ஆகிய திரு. அ. சின்னத்தம்பி அவர்கள். அவர்களின் வள்ளன்மை வான்சிறப்பைச் சேர்ந்தது.

அச்சுத்தாள்களை மேற்பார்வை செய்து திருத்தங் காண்பது புதியதொரு கலை. திறமைமிக்க பண்டிதர்களான திரு. வ. நடராஜா, திரு. சு. வேலுப்பிள்ளை ஆகிய இருவரும் உரிய உரிய

காலத்தில் அச்சுப்பிரதிகளைப் பார்வையிட்டுச் செய்த திருத்தங்கள் அளப்பில.

திருமகள் அழுத்தக அதிபர் திரு. மு. சபாரத்தினம் அவர்கள் ஒவ்வொரு துறையிலும் உழைத்த உழைப்புச் சொல்லுந்தரமன்று. அச்சமைப்பு முதல்வர் திரு. செ. சின்னத்துரை அவர்களின் நுட்பங்களும், திரு. ஆ. முத்தையா அவர்களின் புத்தக அமைப்புந் தனிச்சிறப்பு வாய்ந்தவை.

பலவேறு வகையில், தோன்றாத்துணையாய் உதவிய கண்ணியவான்கள் பலர்.

அண்மையில் எழுதுவினைஞர் உத்தியோகத்திற் சேர்ந்த திரு. த. தங்கவேல் என்ற இளைஞரும், திரு. சி. சதாசிவம் என்ற இளைஞரும் முறையே உரை எழுதும்போதும் அச்சிடும்போதுஞ் செய்த உதவி காலத்தினாற் செய்த உதவி. அச்சுத் திருத்தங்களிற் சதாசிவத்தின் சேவை சாதாரணமன்று.

ஆசிரியர் திரு. அ. பஞ்சாட்சரம் படிக்கிற காலந் தொடக்கம் நிழல்போலப் பிரியாது தொடர்ந்து பல துறையிலும் உதவி வருவது அனைவரும் அறிந்தது.

கண்ணியம்மிக்க பல்கலைக் கழக இந்து மாணவர் சங்கத்தவர்களும், செய்வன திருந்தச் செய்வதிற் கண்ணுங் கருத்துமான திருமகள் அழுத்தகத்தார்களும் பெரிதாய நன்றிக்குரியர்கள். இந்த இருதிறத்தாரையுங் கூட்டுறவு செய்து, பயனளித்த பெருமை திருநெல்வேலிச் சைவாசிரிய கலாசாலைப் பழைய மாணவர் சங்கத்துக்குரியது.

நன்றி, சொற்களில் அமைவதொன்றன்று. யாவருக்கும் திருமுருகன் திருவருள் பெருகுக என்று பிரார்த்திப்போமாக.

'முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்.'

கலாசாலை வீதி,
திருநெல்வேலி,
யாழ்ப்பாணம்,
பராபவஹு தைமீ.

சி. கணபதிப்பிள்ளை

# முகவுரை

உலக அன்னையாகிய ஔவைப் பிராட்டி, '[1]விதியே மதியாய் விடும்' என்கின்றாள்.

'சிவாய நம' என்று சிந்தித்துக்கொண்டு, திருவருளை முன்னிட்டிருப்பவர்களின் மதியை, விதி செய்வதொன்றில்லை. [2]'ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி சனிபாம் பிரண்டு முடனே—ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியா ரவர்க்கு மிகவே.'

அடியரல்லாதாரின் மதியை விதி தன்வயஞ் செய்துவிடும். அவர்கள் எத்துணைத் தவத்தர்களேயாயினும் அவர்களது [3]'அறவுரை புறவுரை'. அவர்கள் வினை [4]'இருள் சேர் இருவினை'.

விதி, ஊழ் எனவுங் கன்மம் எனவும் படும். ஒருவனது மதியை, அவன் விதியேயன்றி, அவனோடு தொடர்புபட்டவர்களின் விதியும், அவன் பந்தப்பட்ட அளவுக்கு அவனைப் பாதிக்கும்.

குடும்பத் தலைவனொருவனது புத்தி, அவனுடைய மனைவி மக்களுடைய புண்ணிய பாவங்களுக்குத் தக்கபடியேதான் தொழிற்படும். சனத்தலைவன் ஒருவனது புத்தி, சனங்களின் கன்மத்துக்கேற்றதாயிருக்கும். இது புராண இரகசியங்களுள் ஒன்று.

## I

தக்கன் பிரமதேவரின் புதல்வன்; பிரசாபதி. பிரசைகளுக்கு அவன் அதிபதி. மூன்று உலகத்து உயிர்களோடுந் தக்கன் தொடர்புபட்டவன்.

தக்கனுக்குச் சிறுவிதி என்பது மற்றொரு பெயர். விதி – விதித்தற் றொழிலைச் செய்யும் பிரமதேவர். தக்கன் பிரமதேவருக்கு அடுத்த படியில் உள்ள ஒரு பிரமதேவன். பிரமதேவருடைய பதின்மர் புதல்வர்களை உபப்

1. ஔவையார் : நல்வழி — 15
2. சம்பந்தர் : 2. கோளறுபதிகம் — 1
3. சம்பந்தர் : 1. திருச்சிவபுரம் — 10
4. வள்ளுவர் : கடவுள் வாழ்த்து — 5

பிரமர்கள் என்று சொல்லுவதுண்டு. அவர்களுக்குள்ளே சிறந்தவன் தக்கன்; வெகு புத்திமான்.

புத்திமானும் பிரசாபதியுமாகிய தக்கன், தந்தையாகிய பிரமதேவரிடம் வேதவேதாந்தங்களைக் கற்றுத் தெளிந்தவன்.

"சங்காரக் கடவுளுக்குப் படைத்தல் காத்தல்களைச் செய்யுங் கடவுளரிலும் பார்க்க உயர்ச்சி பேசுவதேன்? சங்காரத்தொழில் கீழான தாமதகுணத் தொழிலன்றோ?" என்று ஒரு முறை பிதாவுங் குருவுமான பிரமதேவரைத் தக்கன் வினவினன்.

சங்காரமாவது படைக்கப்பட்ட தநு கரண புவன போகங்களாகிய உலகங்களை ஒடுக்குவதாம். அச் செயலின் விளைவு ஆன்மசுகமாம். செயல், தாமத குணத்தோடு கூடிய மறச்செயலே போன்று தோன்றினும், [1]அஃது அருள் எனப்படும் அநுக்கிரகமேயாம். நடுவனாகிய இயம தருமராசனது செயல் கொடுஞ்செயல் போன்றுதோன்றுகின்றது. அவனது செயல் அரிதாகிய நீதியின் சிகரம்.

சங்காரத் தொழில்பற்றிச் சொல்லப்படுந் தாமத குணம், இறைவனுக்கு இயல்பான குணமன்று; செயற்குணம். இறைவன் நிர்க்குணன்; சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் மூன்று குணமும் இல்லாதவன். இதனாலே, இறைவன் ஒருகுணமும் இல்லாதவன் என்பது கருத்தன்று. அவன் எண்குணன்; பகவன். பகம் – அறுகுணம். எண்குணம் ஆறு ஆகவும் அடக்கிச் சொல்லப்படும்.

முக்குணம் மாற்றம் அடைபவை. எண்குணம் என்றும் ஒரேயியல்பாயிருப்பவை.

படைத்தல் காத்தல்களைச் செய்பவர்கள் முக்குண வயத்தர்கள். *அவர்கள் சாத்துவிக இராசதங்களை இறைவன் அருளால் அதிகரித்துக்கொண்டு முறையே அத்தொழில்களைச் செய்தாராயினும், அதிகரித்த அவ்வக்

---

[1] தீய தன்றடுஞ் செயலும் நல்லருள்
ஆயில் ஆவிகள் அழிந்துந் தோன்றியும்
ஓய்வி லாதுழன் றுலைவு றுமலே
மாய்வு செய்திறை வருத்தம் மாற்றலால். (உ. வ. ப. – 49)

* 'அக்குணமானவை', [அனந்தன் சா. நீ. ப. 24] என்ற செய்யுள் உரையில், விளக்கங் காண்க.

குணத்தானும் ஏனைக் குணங்களானும் வாதிக்கப்பட்டுத் தடுமாற்றம் உறுபவர்கள். இருவருக்கும் ஒவ்வோர் குணம் இயற்குணமுஞ் செயற்குணமுமாம். செயற் குணம் – செயலிற் பயன்படுங் குணம். அவர்களால் ஆன்மசுகமாகிய சங்காரத்தைச் செய்தல் இயலாது. [1]முக்குணங் கடந்த பொருளே அதனைச் செய்ய முடியும். கொலைத்தண்டனை என்கின்ற நீதியை உயர்தர நீதிமன் றமே செய்கின்றது.

என்றிம்முறையிற் சங்காரத் தொழிலின் பெருமை பேசி, [2]தொழில்பற்றிப் பேசப்படுந் தாமதம் இறைவ னது †இயற்குணமன்று என்று காட்டிச் 'சங்காரக் கடவுளே முழுமுதற் கடவுள்' அக்கடவுளிலே உலகம் ஒடுங்குகின்றது; விரிகின்றது. [3]'ஆதி பகவன் முதற்றே உலகு' [4]'அந்தம் ஆதி என்மனார் புலவர்'.

[5] 'அவனலது இறைவ னில்லை
அவனைநீ அடைதி'

என்றிவ்வாறு பிரமதேவர் உபதேசஞ்செய்வாராயினர்.

* * *

தக்கன், உபதேசத்தை ஒப்புக்கொண்டு, உலகத் துக்குக் கருத்தாவான முழுமுதற் கடவுளை நினைந்து அருந்தவஞ் செய்தான். பரமபதி அவனுக்குக் காட்சி யளித்தார்.

'.................................................................................. [6]பிறவி
மாற்றும் முத்திய திரந்திலன்; தொல்விதி வழியே
ஏற்ற புந்தியுஞ் சேறலின் மயங்கிஈது இசைப்பான்'

ஆயினன் தக்கன்.

---

[1] ஆன அச்செயல் அழிவி லாததோர்
ஞான நாயகற் கன்றி நாமெனும்
ஏனை யோர்களால் இயற்ற லாகுமோ
மேன காவலும் விதியும் என்னவே. (50)

[2] துன்று தொல்லுயிர் தொலைவு செய்திடும்
அன்று தாமதத் தடுவ தன்றியே
நன்று நன்றது ஞான நாயகற்கு
என்றும் உள்ளதோர் இயற்கை ஆகுமோ. (48)

இவை உமைவரு படலத்தில் வருகின்ற தேவியின் உப தேசங்கள்.

† இவ்வாற்றல் இத் தாமதம் முக்குணத்தில் வைத்தெண்ணப்படுந் தாமதமன் றென்க.

3. திருக்குறள் — 1
4. சிவஞானபோதம் — 1 ஆம் சூத்.
5. கந். உபதேசப்படலம்: செய். — 32
6. கந். தக்கன்றவஞ்செய் படலம்: செய். — 10

பிரம விஷ்ணுக்களுக்கும் அப்பாற்பட்ட அதிகாரங்களையும் வளங்களையும் பரமபதியிடம் அவன் கேட்டுப் பெற்றான். கேட்டவைகளுள் சிவசத்தியாகியதேவி, தனக்குப் புதல்வியாதல்வேண்டுமென்பதும் ஒன்று. இதனாலே, இறைவனைத் தனக்கு மருகன் ஆக்கவும் எண்ணினான் போலும். நிலையாய முத்தியின்பத்தில் அவன் சிந்தனை செல்லவில்லை. விதிவழியே மதி சென்றது. அவனுடைய வேத வேதாந்த விசாரங்கள் அவனுக்கு உதவவில்லை. விதியென்று சொல்லப்படும் ஊழ், பெருவலி படைத்து அவன் புத்தியை விழுங்கிவிட்டது.

தக்கன் பிரசாபதி ஆதலினாலே, தக்கனது விதி மாத்திரமன்றிப் பிரசைகளின் விதிகளுஞ் சேர்ந்து அவன் மதியை மயக்கஞ் செய்துவிட்டன.

தக்கன் புதல்வர் ஈராயிரவர்; தக்கன் கட்டளைப்படி சிருட்டித் தொழிலைச் செய்யும் பிரமர்களாகும் பொருட்டுத் தவஞ்செய்துகொண்டிருந்தவர்கள். அவர்களிடம் நாரதமுனிவர் சென்று, 'அரும்பெருந் தவஞ் செய்து நீவிர் விரும்புவதாகிய உத்தியோகத்தைப் பெறுதல் புத்தியாகாது. அது மயக்கத்தைப் பெருக்கிப் பிறவிக்கு வித்தாகும். முத்தியைப் பெறுவதே புத்தியாம்' என்று உபதேசித்தார். அவர்கள் நாரத முனிவரின் உபதேசத்தின் வழிநின்று முத்திபெற்றார்கள். அவர்கள் பிரசாபதிகள் அல்லர். ஆகையினாலே தந்தையாகிய தக்கனது புத்திபோல, அவர்களது புத்தி மயக்கம் அடையவில்லை.

தக்கன் பெரிதும் வருந்தித் தவஞ்செய்து மயக்கமேலீட்டால் நிலையற்ற வளங்களையேகேட்டுப்பெற்றான்.

* * *

இறைவன் தக்கன் கேட்ட வரங்களை நல்கி, தக்கனே,

† "நன்னெறி, நின்றி என்னின் நிலைக்கும் இச்சீர்"

என்று கூறி மறைந்தருளினார்.

ஒருவனுக்குத் தவ விசேடத்தாற் பலவகை வளங்களும் வந்து கைகூடலாம். கைகூடிய வளம் நிலைப்பதற்கு மேலுந் தவ ஒழுக்கமுந் தருமசிந்தனையும் வேண்டும். இதனை இந்த உலகம் உணருமா!

பொருளைச் சம்பாதிப்பதிலும் அதனைக் காப்பதரிது.

* * *

† தக்கன்றவஞ்செய் படலம்— 15.

பெற்ற வளங்கள் நிலைப்பதற்கு இறைவனருளிய திருவாக்கு, மயக்க மிகுதியினாலே தக்கன் செவிக்கேற வில்லை. கர்வந் தலைக்கேறியது. தக்கன் பெற்ற வளம், பித்துப் பிடித்தானொருவன் மயக்கத்தை மிகுவிக்கும் மதுவைப் பெற்றதுபோலாயிற்று. அவன் பெற்ற வளம் அவன் மயக்கத்தை மேலும் பெருக்கியது.

தந்தையாகிய பிரமதேவருந் திருமாலும் இந்திரன் முதலிய தேவர்களும் அடிபணிய அரசு வீற்றிருந்தான் தக்கப் பிரசாபதி.

தக்கனது தவவிசேடத்தினாலே உலகமாதாவாகிய தேவி அவனுக்குப் புதல்வியாய், இறைவனைப் பெறு தற்குத் தவஞ்செய்துகொண்டிருந்தார். இறைவன் மருக னாகும் நிலை கிட்டியது. திருமண வைபவம் நடந்தது. தக்கன், புதல்வியைத் தத்தஞ் செய்தான். இறைவன் இடையில் மணமண்டபத்திலிருந்து மறைந்தருளினார். இனி, மணமகள் நிலை என்னை என்று உலகம் ஏங்கியது. உலகமாதாவாகிய தேவி, இறைவன் இடையில் மறைந் ததற்குக் காரணம், தவக்குறைவே என்று கருதி மேலுந் தவஞ் செய்தார். உலகமாதா தவஞ் செய்வதாவது, ஆன்ம நாயகனைப் பெறுவதற்கு உலகந் தவஞ் செய்ய வேண்டுமென்பதேயாம். தக்கப் பிரசாபதியின் அர சியலில், ஆன்மநாயகராகிய மணமகன், தக்கனமைத்த மணமண்டபத்துக்கு எழுந்தருளி வந்தும், உலகத்தின் தவக்குறைவால் இடையில் மறையும் நிலை நேர்ந்து விட்டது.

* * *

இதனாலே தக்கப் பிரசாபதிக்குப் பித்தம் மேலுந் தலைக்கு விஞ்சியது. தனக்கு வரங்களை ஈந்த இறைவனை அவன் நிந்திக்கவுந் தொடங்கினான். தன்னை அவமதித்த இறைவனுக்கு இனி முதன்மை வழங்குவதில்லை என்ற பிரசாரம் எழுந்தது. இறைவனது முதன்மையை விலக் கும் முகமாக ஒரு யாகமுந் தொடங்கினான். எவர்க ளுடைய வினைகளினாலே தக்கனுக்கு மயக்கம் அதிகரித் ததோ அவர்களெல்லாம் அவனது யாகத்திற் பங்கு பற்றினார்கள். பாவங்களுட் கொடியது சிவநிந்தனை. சிவநிந்தனையாகிய யாகத்தில் உலகம் பங்குபற்றியது. அவ்வாறாகிய நிலையை உலகம் எய்தியிருந்தது.

[1]''அகத்தியன் சனகன் முன்னோர் அத்திரி வசிட்ட னென்பான்
சகத்துயர் பிருகு மேலாந் ததீசிவெஞ் சாபத் தீயோன்
பகைத்திடு புலத்தை வென்ற பராசரன் இனைய பாலார்''

தக்கனது யாகத்திற் பங்குபற்ற மறுத்துவிட்டார்கள்.

* * *

ததீசி மகாமுனிவர் தக்கனது யாகத்திற் பங்கு பற்றுதவராயிருந்தும், மனஞ் சகியாமல் யாகத்தைத் தடுத்து, அவனைச் சிவநெறிப்படுத்தப் பெருமுயற்சி செய்து, சிவபரத்துவம்பற்றி நீண்ட உபதேசங்கள் செய்தார். தக்கன் சிவபரம்பொருளை நிந்திக்கு முகமாக வினவிய வினுக்கள் அத்தனைக்கும் அச்சாணியன்ன விடைகள் அந்த முனிவர் பெருமானுல் இறுக்கப்பட்டு விளக்கஞ் செய்யப்பட்டன. அவ்விளக்கம் ததீசி உத்தரம் எனப்படும்.

ததீசி உத்தரத்தில் வருங் கதைகள் பல. அவற்றுள் தாருகாவனத்து முனிவர்களைப்பற்றிய கதை முக்கிய மானதொன்று.

* * *

தாருகாவனத்து முனிவர்கள் நாற்பத்தெண்ணுயிர வர். அவர்கள் யாகாதி கர்மங்களையே கடவுள் எனக் கொண்டவர்கள்; அக் 'கர்மங்களால் எதனையும் அடைய லாம். கடவுள் என்றொருவர் வேண்டுவதில்லை' என்ற கருத்துடையவர்கள்.

[2]''பரசிவ னுணர்ச்சி யின்றிப் பல்லுயிர்த் தொகையு மென்றும்
விரவிய துயர்க்கீ றெய்தி வீடுபே றடைது மென்றல்
உருவமில் விசும்பிற் றோலை யுரித்துடுப் பதற்கொப் பென்றே
பெருமறை யியம்பிற் றென்னிற் பின்னுமோர் சான்று முண்டோ''

என்பது பிரமதேவரின் உபதேசம். இந்த அருமந்த உப தேசத்தைப் புறக்கணித்தவர்கள் அந்த நாற்பத்தெண் ணுயிரவர். அவர்களை ஆட்கொள்ள நடந்த அருள் விளையாட்டு ஆழ்ந்த சிந்தனைக்குரியது.

திருமாலுஞ் சிவனுக்கு ஒருசத்தி. திருமால் மோகினி வடிவங்கொண்டு உடன்வரச் சிவபெருமான் பிக்ஷாடன ராய்த் தாருகாவனத்துக்கு எழுந்தருளினுர். முனிவர்கள் தவங்குலைந்து மோகினியைத் தொடர்ந்தார்கள். முனிவர்பத்தினிகள் பிக்ஷாடனரைத் தொடர்ந்து கருப்பந் தரித்தார்கள்.

1. கந். சாலைசெய் படலம் செய். — 50.
2. கந். உபதேசப்படலம் : செய். — 25.

[1]"இருவர் மடந்தையருக்கு என் பயன்"
என்பது திருவருட்பயன்.

'அவர் ஒருவரே ஆன்ம நாயகர்; ஆன்மாக்கள் அனைத்தும் நாயகிகள்' என்ற உண்மையை மோகினியைத் தொடர்ந்த முனிவர்கள் உணர்ந்து, சத்தியின் வேறாகாத சிவத்தைக் கண்டு, நாணித் தலை குனிந்து பெண்மையெய்தி உலக நிகழ்ச்சிகள் அனைத்துக்கும் அப்பெருமானே ஏக கருத்தா என்பதைத் தெளிந்தார்கள்.

அபிசார ஓமஞ்செய்து சிவனைக் கொல்லுதற்கு அம் முனிவர்கள் எடுத்த முயற்சிகள் அநந்தம். அவையனைத்தும் பயன் செய்யாதொழிந்தன. அபிசாரம் – தீமை குறித்துச் செய்யும் யாகம். யாகத்திலெழுந்தவைக ளெல்லாஞ் சிவனுக்கு அடிமைகளும் அணிகளும் ஆயின. "உலகத்துக்குக் கருத்தா யாவர்? சிவபெருமான்" என்கின்ற 'சைவ வினுவிடை' வசனம் முனிவர்களுக்கு அநுபவபூர்வமாயது. தாம் பொய்யாய நாயகர்; அப்பெருமானே தம் பத்தினிகளுக்கும் மெய்யாய நாயகர் என்பதை ஐயந்திரிபின்றித் தெளிய உணர்ந்தார்கள் அவர்கள்.

சர்வலோகைக நாயகரைக் கண்ணுற்ற இந்தத் தெளிவு நிலையில், சிவகருப்பத்தைக் கருவுயிர்த்த தம் பத்தினிகளை அம் முனிவர்கள் இனிச் சந்திக்குஞ் சந்திப்பு எவ்வாறமையுமென்று, இலக்கிய உலகஞ்சற்றே கற்பனை செய்தாலோ! கற்பனை கைகூடுமாயின், அகலிகை, தாரை, திரௌபதி முதலிய நித்திய கன்னிகைகள், வழங்குகின்ற இலக்கியச் சிறைகளிலிருந்து மீளுதற்கு வழி பிறக்கும்போலும். தாரை, வியாழபகவான் மனைவி. இது நிற்க.

* * *

மற்றொரு முக்கியமான கதை சிவமுஞ் சத்தியுஞ் சூது விளையாடிய கதை.

ஒருமுறை திருக்கைலாசத்தில் ஒரு சூதுபோர் நடந்தது. அம்மையும் அப்பருஞ் சூது விளையாடினார்கள். திருமால் மத்தியஸ்தராயிருந்தார். தோல்வியடைந்தவர் வென்றவருக்குத் தமது ஆபரணத்தைக் கொடுக்க வேண்டுமென்பது நிபந்தனை. ஒவ்வொரு முறையும்

1. திருவருட்பயன் — இன்புறுநிலை : செய். — 2.

அப்பராகிய சிவபெருமானே தோல்வியுற்ருர். இறுதியில் தமக்கே வென்றி என்ருர். தேவி, பெருமானது கூற்றைப் பேணியவாறே திருமாலே நோக்கினுர். திருமால் திகைப் புற்றுச் செய்வதின்னது என்று தெரியாமல், சிவத்துக்குத் தானே எச் சந்தர்ப்பத்திலும் வென்றி என்ற முறையில் மத்தியட்சங் கூறினுர். அப்பொழுது தேவி, [1]"பாராயலே கண்ணனு மாயினே" என்று திருமாலேக்கோபித்து, கண்டது மொழியாது செப்பியதனுலே, குருட்டுப் பாம்பு ஆகக் கடவை என்று சாபம் மொழிந்தார்.

சிவபெருமான், திருவருளாகிய தேவியின் நீதியை மகிழ்ந்து, பிரபஞ்ச லீலேயாகிய திருவருட்சூதின் உண்மையை உணர்த்தும்பொருட்டுப் போலும், திரு மாலேத் தவஞ்செய்யும்படி பணித்தருளி, சிருட்டி தோறுந் திருவருளுேக்கின் தொடக்கமாயும், அர்த்த சத்தப் பிரபஞ்சங்களின் சமஷ்டியான ஓங்காரத்தின் வடிவாயும் அவதரித்தருளும் விநாயகப்பெருமானுல் அவ்வுண்மையைத் தெளிவுபடுத்தியருளினுர். திருமால் விநாயகப்பெருமானேத் தரிசித்த மாத்திரையானே குருட்டுத் தன்மை நீங்கி, பிரபஞ்ச லீலேயாகிய சூதாட்டத்தில், உலகமாதாவின் வென்றியை உணரு வதன்மூலந்தான் பரமபிதாவின் வென்றியை உணர முடியும் என்னும் அநுபவ உண்மையை உணர்ந்தார்.

ஒருமுறை உமாதேவி சமேதராய்ச் சிவபெருமான் காட்சியளித்தபோது, திருமால் பெரிதும் விரைவு பட்டு, முதலிலே தேவியை வணங்கி, பின் சிவத்தை வணங்கினுர்; அவனருளாலே அவனே வணங்கினுர். நாம் முதலிலே விநாயகரை வணங்குகின்ருேம். சிவசத்தி சிருட்டிதோறும் பிரணவத்தை நோக்கியவழித் தோன் றும் அவதாரமே விநாயகப்பெருமான். திருவருளின் மூத்த பிள்ளேயார் அவர். அவரை வணங்கும் வணக்கம் சிவசத்தியை வணங்கும் வணக்கமேயாம்.

[2]'தாயுடன் சென்று தாதையைக் கூடுவதே' சிவநெறி யாகிய அருள்நெறி.

சிவத்தைக் கூடியவழிச் சிவத்தோடபின்னமாகிய சிவசத்தி சிவத்துள் மறைய, சத்தியின் சூதாட்டமான பிரபஞ்சஞ் சூனியமாம்.

---

1. கந். கயமுகனுற்பத்திப்படலம்: செய். — 173
2. பட்டினத்தார் : செய். மாயநட்டோர்.

[1]'யாவையுஞ் சூனியஞ் சத்தெதிர்'

என்பது சிவஞானபோதம்.

பிரபஞ்சஞ் சூனியமாகச் சத்தியின் வேறுகாத சிவம் ஒன்றையே காண்பவர்களே, சிவத்தின் வென்றியைக் கண்டுரைக்க வல்லவர்கள். பிரவஞ்சத்தைக் காத்துக் கிடப்பவர்கள், சத்தியின் சூதாட்டமான வென்றி யையே காண்பவர்கள். திருமால் சத்தியின் வென்றி யைக் கண்டுகொண்டே, சிவத்தின் வென்றியைக் கண் ணுரைக்காணுதே, சிவத்துக்கு வென்றி செப்பியது தப்பு ஆயிற்று.

[2]"ஆன்ற வைம்புல ஞெருவழிப் படுத்தி
யார்வம் வேரறுத் தையமொன் றின்றி
ஊன்றி ரிந்திடி னுந்நிலை திரியா
வுண்மை யேபிடித் துலகங்கண் முழுது
மீன்ற வெம்பெரு மாட்டியை நீக்கி
யெம்பி ரானையே வழிபடு மியற்கை
மூன்று தாளுடை யொருவனுக் கல்லா
லேனை யோர்களான் முடியுமோ முடியா"

என்கின்ருர் கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள். மூன்று தாளுடை ஒருவன், பிருங்கி முனிவர்.

* * *

இக்கதைகளை யடுத்துச் சந்திரனைப் பற்றிய கதையும் அமிர்தமதனம் எனப்படும் பாற்சமுத்திரங் கடைந்த கதையுந் தருமதேவதையின் கதையும் நினைவிலிருத்த வேண்டியவை.

பதினுறு கலைகளோடு கூடிய சந்திரன் தக்கனது சாபத்தால் நாளொரு கலையாய்த் தேய்வானுயினுன். பதினைந்து நாட்களிற் பதினைந்து கலைகள் தேய்ந்து ஒரு கலை எஞ்சியிருந்தது. பதினுரும் நாளில் அதுவுந் தேய்ந்து படும். சந்திரன் ஒரு கலையுடன் திருக்கைலாசபதியைச் சரணடைந்தான். கைலாசபதி எஞ்சிய அந்த ஒருகலையை எடுத்துத் தமது சடையிலே தரித்தருளினுர். அக்கலை சிவார்ப்பணமாயிற்று.

அதனுல் அக்கலை சிவத்தின் திருமுடியிலிருந்து கொண்டே, சந்திரன்பாலும் என்றுந்தேய்வின்றி இருப்ப தாயிற்று. தக்கன் சாபம் அக்கலையைச் சார்ந்திலது. முன்னர்த் தேய்ந்த கலைகள் ஒன்று ஒன்ருகத் தேய்வற்ற

1. சிவஞானபோதம் : 7ஆம் சூத்திரம்.
2. கந். கந்தவிரதப் படலம் : செய். — 80

கலையுடன் வந்து சேருவதும், பின் அவ்வாறே போவதும் ஆயின. சந்திரன் வளர்ந்துந் தேய்ந்தும் விளங்கினன். சிவார்ப்பணமான ஒருகலை என்றும் ஒரேபடித்தாய்ப் பயன்செய்துகொண்டிருந்தது.

'எவர் எது தம்பால் நிலைத்தல்வேண்டும்; எது தமக்குப் பயன் செய்யவேண்டும் என்று எண்ணுகின்றாரோ, அவர் அதைச் சிவத்தின்பால் ஒப்பிக்கற்பாலர்' என்பதைத் தெட்டத் தெளியத் தெரிவிப்பது இந்தச் சந்திரன் கதை.

நாயன்மார் பொருளுண்மை தெரிந்தவர்கள். உடைமைகளையெல்லாம் உடையானிடம் ஒப்பித்துவிட்டு நித்தியச்செல்வராய் வாழ்ந்தார்கள் அவர்கள்.

* * *

தேவர்கள் பாற்சமுத்திரத்தைக் கடைந்தார்கள். நஞ்சு எழுந்தது. [1]"இந்தப் பூமி சிவன் உய்யக் கொள்கின்ற ஆறு" என்பதை உணராத நாம், இந்த மண்ணைக் குடைகின்றோம். யாது எழுமோ யார் அறிவார்!

தேவர்களுக்குள்ளே மேலோரான திருமாலின் தலைமையிலே தேவாசுரர்கள் அமிர்தத்தைப் பெறும் பொருட்டுப் பாற்கடலைக் கடைந்தார்கள். ஆலகால விடம் எழுந்தது. யாவரும் ஓட்டம் எடுத்தார்கள். திருமால் எதிர்த்தார்; திருமேனி கரிந்தது. பின், திருவருளை முன்னிட்டுக் கடைதலைச் செய்யாத தங் குற்றத்தை உணர்ந்து, திருக்கைலாசபதியைச் சரணடைந்து, திருவருளின் உடம்பாடு பெற்றுக் கடைந்தபோது அமிர்தம் எழுந்தது. அமிர்தம் – சாவா மூவா மருந்து.

* * *

[2] "தருமமென் றொருபொரு ளுளது தாவிலா
விருமையி னின்பமு மெளிதி னுக்குமா
லருமையில் வரும்பொரு ளாகு மன்னது
மொருமையி னோர்க்கலா லுணர்தற் கொண்ணுமோ."

என்பது காசிபர் உபதேசம். 'அறஞ் செய விரும்பு' என்பது அன்னையின் வாக்கு. நமது சமயம் வைதிக சைவம். சைவம் வைதிகத்தின் வழித்து. வைதிகம், தருமத்திற்றொடங்குவது. தருமமாவது சிருட்டியின் நோக்கமாகிய திருவருட் குறிப்பு என்பர். பிறவியைப் பயன்

1. திருவாசகம் – திருப்பள்ளியெழுச்சி: செய். — 10.
2. கந். அசுரகாண். – காசிபனுபதேசப் படலம்: செய். — 12.

படுத்த எண்ணும் ஒவ்வொருவரும் விசாரித்து அநுட்டிக்கற்பாலது தருமம். இதன் அதி தெய்வம் தரும தேவதை.

தருமதேவதை இடபவடிவெடுத்து, எடுத்துச் சுமப்பானுகிய இறைவனைத் தான் சுமக்கும் பாக்கியம் படைத்தது. தன் கால்களைத் திருவருட் குறிப்பின்வழியல்லது சிறிதும் பெயர்த்தல் செய்யாதது அது.

முதல் யுகத்தில் நான்கு கால்களையும் இரண்டாம் யுகத்தில் மூன்று கால்களையும் மூன்றும் யுகத்தில் இரண்டு கால்களையும் நான்காம் யுகமாகிய கலியில் ஒரு காலையும் இந்தப் பூமியில் ஊன்றி நடக்குக என்று தருமதேவதையாகிய இடபத்துக்கு இறைவன் அநுக்கிரகஞ் செய்தார். இது சிந்தனைக்குரியதொன்று.

கலியுகத் தொடக்கத்திற் பாரத யுத்தம் நடந்தது. தருமதேவதை நூற்றுவரைப் புறக்கணித்து ஐவர் பக்கம் ஒதுங்கி நின்று விரல்மடித் தெண்ணக்கூடிய ஒரு சிலரை உய்யவைத்தது, மகாபாரதக் கதை.

கலி ஐயாயிரம் வரை தருமதேவதையின் நிழலும், அதன்மேல் இரண்டாயிரத்தைந்நூறுவரை நிழலின் நிழலும் உண்டாம் என்பர் பெரியோர். இங்ஙனமாயின் கலி ஏழாயிரத்தைந்நூற்றின்மேல் இந்தப் பூமியின் கதி என்னும்.

இப்பொழுது உலக நிலையின் போக்கை நோக்கும் போது, தருமதேவதை ஒரு காலைத்தானும் ஊன்றுதற்கு எங்கேயாவது இந்தப் பூமியில் இடம் உளதாமோ என்பது சந்தேகம்.

[1] '**உண்டிருந்து வாழ்வதற்கே உரைக்கின்றீர் உரையீரே**'

என்கின்றது பாரதம்.

இனி வரும் இதிகாசம் உண்டுறங்கும் இராமர்களைப் பற்றியதா யிருக்கும்போலும்.

* * *

ததீசி உத்தரத்திலும் அதனை அடுத்துஞ் சிவ பரத்துவம் பற்றி வருங் கதைகளுந் தத்துவ உபதேசங்களும் மிகப்பல.

---

1. வில்லிபாரதம் - கிருஷ்ணன் தூது : செய். — 44.

[1]'இன்னமும் பலவுண் டன்னுற் கியம்பிய மறையின் வாய்மை
அன்னதை எனக்கு முன்னி யறையொணு தறைவ னென்னிற்
பன்னெடுங் காலந் தேயும்; பகரினும் உலவாது'

என்பது பிரமதேவர் கூற்று.

தத்துவ உபதேசங்களுள் சிவதத்துவ, சத்திதத்துவ உபதேசம் முக்கியமானது. சிவத்தின் விகாரமற்ற சுவரூப நிலையும், சிவம் விகாரமற்றதாயினுஞ் சத்திக்கு இன்றியமையாததா யிருப்பதும், சத்தியின் திருவிளை யாடல்களாகிய பஞ்சகிருத்தியங்களும், தடத்த வடி வங்களும், அதிட்டானங்களும், பிறவுமாகிய தத்துவ உண்மைகள் உமை கயிலை நீங்கு படலத்தில் வருகின்றன. அவை வேதாகமம் வல்ல தத்துவ ஞானிகள்பாற் கேட்டுச் சிந்திக்கவேண்டியவை.

இங்ஙனமே கயமுகனுற்பத்திப் படலத்தில் வரும் விநாயகர் திருவவதாரமுங் கேட்டுச் சிந்திக்க வேண்டிய தொன்று.

சிவங் காட்ட, சிவசத்தி காண, பிரணவமாகிய ஓங்காரம் களிறும் பிடியுமாய்த் தோன்றி, ஒன்றுடன் ஒன்று சேர்ந்து, பின் பழைய நிலையை எய்துகின்றது. அப்பொழுது ஓங்கார மூர்த்தியாகிய விநாயகர் திருவவ தாரஞ் சித்திக்கின்றது.

சிவசத்தியின் சிருட்டிமுகமான திருவருணேக்கமே விநாயகர் திருவவதாரம்.

இவ்வாறே ததீசி உத்தரத்தில் வருகின்ற வைரவர், வீரபத்திரர், ஐயனர் ஆகிய சிவகுமாரர்களின் அவ தாரங்களுங் கேட்டுத் தெளிய வேண்டியவை.

* * *

[2]'கானிற் சிந்து மென்பொடு சிரத்தொகை யணியுமோ' [3]'தேவர் வெந்த சாம்பரும் பூசுமோ' [4]'உலகம் அழிந்திடும்படி உயிர்களை முடிக் குமோ' [5]'வீந்தோர் சுடலை தன்னினும் ஆடுமோ' என்றிங்ஙனம் சிவனை நிந்திக்கும் முகமாகத் தக்கன் வினவிய வினுக் களும், அவ்வினுக்களுக்குத் ததீசி முனிவர் இறுத்த உத்தரங்களுஞ் சிவபரத்துவ இரகசியமாகிய வேத உண் மைகளை அறிதற்கு உபகாரங்களாம்.

* * *

1. கந். உபதேசப் படலம்: செய். — 26
2. கந். ததீசியுத்தரப் படலம்: செய். — 1.
3. ,, ,, 1.
4. ,, ,, 2.
5. ,, ,, 5.

காணுதாற் காட்டலாகாமை திருவள்ளுவரிற் பேசப் பட்டது. ததீசிமுனிவரேயன்றித் திருநந்தி தேவருந் தேவியும் உபதேசித்துந் தக்கனுக்குத் தெளிவு பிறக்க வில்லை. உலகவினை தக்கப் பிரசாபதியின் புத்தியை மழுக்கி ஆணவ இருளில் ஆழ்த்திவிட்டது.

[1]'காணுதான் கண்டானுந் தான்கண்ட வாறு'. தக்கன் தான் பிடித்ததையே சாதிக்கத் தொடங்கினுன். யாகம் ஆரம்ப மானது. யாகத்திலே சிவனுக்கு வழங்கும் முதன்மை யைத் திருமாலுக்கு வழங்குவதென்று தீர்மானித்தான் தக்கன். திருமாலுந் தம் பெயருக்கியைய மயக்கமுற்று முதன்மையைப் பெறுதற்கு ஆயத்தராயினுர். அந்தச் சந்தர்ப்பத்திற் பிரசன்னமாயினுர் மகா வீரபத்திர உருத் திரர். யாக சங்கார பாடம் நடந்தது. பூதங்கள் யாக குண்டத்தை அசுத்தப்படுத்தின. சிவநிந்தை செய்யும் இடம் மலகூடமேயாமென்பது இதனுல் அறியத்தக்கது.

வீரபத்திரரின் முதலாவது தண்டனையைத் திருமால் பெற்றுர். திருமகள் நிலைகுலையத் திருமாலின் திருமார் பில் முதலடி விழுந்தது.

'பாவம் செய்பவர்களை நன்கு மதிப்பவர்கள் இல்லை யாயின், பாவம் செய்பவர்களும் இலர்; ஆதலால் பாவம் செய்பவர்களினும், அவர்களை நன்கு மதிப்பவர்களே பெரும்பாவிகள்' என்பது நாவலர் இரண்டாம் பால பாடத்து நீதி வாக்கியங்களுள் ஒன்று. இது திருமாலுக்கு நடந்ததில் வைத்துச் சிந்திக்கற்பாலது.

தக்கன் தலை யாககுண்ட அக்கினியில் உருண்டு விழுந்து சாம்பராயது. எல்லாருஞ் சிதைவுபட்டுச் சிதறினுர்கள். பிரமதேவர் புத்தி தெளிந்து வீரபத்திர ரைப் பிரார்த்தித்து வணங்கி அநுக்கிரகம் வேண்டினுர். இறந்தவர்கள் எழுந்தார்கள். தக்கன் தலையின்றி எழுந் தான். ஆட்டுத்தலையொன்று அவனுடலிற் பொருத்தப் பட்டது. பிரமதேவரின் புதல்வனுன தக்கதேவன் மிருக கதியை எய்தினுன். ஆயினுந் தண்டனை விசேடத்தால், அந்த ஆட்டுத்தலைக்கூடாக அவனுக்குப் புத்தி சிறிது தெளிவடைந்தது. தான் என்செய்தான் என்று அவன் இரங்கி ஏங்கினுன். அப்பொழுது பிரமதேவர், தாமுந் திருமாலும் ஒருமுறை மயக்கமுற்றுப் பரம்பொருளின் அடிமுடி தேடிய வரலாற்றை உபதேசஞ் செய்தார்.

1. திருக்குறள் — 849.

காணப்பட்ட உலகத்தின் அடிமுடிகளே தேடற்பாலன.

[1]'பிரமத்தை அறிய ஆசை' என்று தொடங்கிய பிரம சூத்திரமாகிய வேதாந்தம்,

[2]'எங்கிருந்து இதன் சிருட்டி முதலியன' என உலகத்தின் மூலமே பிரமத்தை ஆராய்ந்தது.

[3]'ஆதி பகவன் முதற்றே உலகு' என்றது தமிழ் வேதம்.

உலகத்தின் அடியும் முடியுந் தொடுமிடமே பரப்பிரமம். பரப்பிரமத்தின் அடிமுடி காண்பார் யாருமிலர். காணவொண்ணுதவற்றைக் காண்பாரார்! பரம்பொருள் புணர்ந்தாற் புணருந்தொறும் புதிது.

அடிமுடி தேடிய உபதேசத்தால், தக்கனுக்குத் தூய தெளிவு பிறந்தது. இருள் விடிந்தது. பிரசாபதி உத்தியோகந் தானே கழன்றது. மேலுந் தெளிவு அதிகரித்தது. பற்றுக்களைத் துறந்து, பற்றவேண்டியதனை இறுகப் பற்றினன்; சிவநெறி கைகூடியது. ஆயிரம் வருடஞ் சிவார்ச்சனையாகிய சிவபூசையை வேதாகம முறையிற் கிரமந் தவருது செய்து உய்தி கூடினன் தக்கன்.

எவர்களின் வினையினாலே தக்கனது புத்தி மயங்கியதோ, அவர்களின் பாவம் இன்னுந் தொலையவில்லை. நூற்றெட்டுக காலம் அசுரர்களுக்கு அடிமைகளாய்ச் செய்யாத ஏவலெல்லாஞ் செய்து, அலுத்து, தவஞ் செய்து உய்திகூடினர்கள் தேவர்கள். அவர்கள் செய்த தவத்தின் பேறே திருமுருக அவதாரம். அந்த அவதாரத்தைத் தரிசித்த தரிசன விசேடத்தால், தேவர்களை வருத்திய சூரபன்மனுஞ் சேவலும் மயிலுமாயினன்.

* * *

தக்கன் உய்ந்தான். தேவர்கள் உய்ந்தார்கள். பூதேவர்களாகிய பிராமணர்களுக்கு உய்தி கூறப்படவில்லை. தக்கனது யாகத்திற் பங்குபற்றி உண்டு களித்துத் தானமும் பெற்றவர்கள் அவர்கள்.

> [4]"மேதக்க தக்கன் மகந்தன்னில் விரைந்து புக்காங்
> கேதத் தடிசின் மிசைந்தே பொருள்யாவு மேற்றுப்
> பூதத் தரின்மாய்ந் தெழுந்தேதம் புரிக டோறும்
> பேதைத் தொழிலந் தணர்யாரும் பெயர்ந்து போனர்."

என்கின்றது கந்தபுராணம்.

---

1. பிரமசூத்திரம் - ஜிஞ்ஞாசாதிகரணம்: 1ஆம் சூத்திரம்.
2. ,, ஜந்மாத்தியதிகரணம்: 1ஆம் ,,
3. திருக்குறள் — 1
4. கந். தக்கன் சிவபூசைசெய் படலம்: செய். — 11

[1]''அங்கணுறு மறையோர்தம் முகநோக்கி
யந்தணரி லழிதூ வானீர்
உங்கள்குலத் தலைமைதனை யிழந்திட்டீர்
கேண்மினென உரைக்க லுற்றான்''

[அழிதூ–பேடி]

[2]''பேசரிய மறைகளெலாம் பராபரனீ யெனவணங்கிப் பெரிது போற்று
மீசனையு மன்பரையு நீற்றெடுகண் டிகையினையு மிகழ்ந்து நீவிர்
காசினியின் மறையவரா யெந்நாளும் பிறந்திறந்து கதியு றாது
பாசமத னிடைப்பட்டு மறையுரையா நெறியதனிற் படுதி ரென்றான்.''

என்ற செய்யுள்களால், ததீசிமுனிவரிட்ட சாபத்தை எடுத்துக் கூறி இரங்குகின்றார் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள். தக்கனது யாகத்திற் பங்குபற்றிய பிராமணர்களைப்பற்றிக் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் விரித்துப் பேசிய அளவுக்கு, முதனூல் விரித்துப் பேச வில்லை. சுவாமிகள் விரித்துப் பேசியதன் காரணம் பல்லாற்றானுஞ் சிந்தனை செய்யற்பாலதாம்.

பிராமணர்களே உலகத்துக்கு வழிகாட்டிகள்; இறைவன் கருத்தை வெளிப்படுத்தும் உரிமை பூண்டவர்கள். அவர்கள் வைதிக சைவநெறி பிறழ்ந்து குருடு படுவார்களாயின், உலகத்தின் கதி என்னும்! உலக வினை அவர்களைக் குருடுபடுத்துமாயின் எத்துணைத் தவஞ் செய்யற்பாலது இந்த உலகம்.

* * *

உபதேசங்களுந் தத்துவ விசாரங்களும்,

[3]''அரன்றன் பாதம் மறந்துசெய் அறங்க ளெல்லாம் வீண் செயல்''

என்பதை உலகுக்கு எடுத்துக்காட்டுவனவேயாம்.

[4]''தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது.''

இறைவன் தாளாகிய திருவருணோக்கத்தை விசாரியாது, தாருகாவனத்து முனிவர்களே போன்று, தம் புத்தியின்வழிச் சென்றோரெல்லாம், உலகம் துக்கமயம் என்று சொல்லிக்கொண்டு, அதற்கு வழிகாட்டப் புகுந்து, தாமும் அத் துக்கத்தில் மூழ்கியவரேயாம்.

இறைவன் தாளை விசாரியாது, இறைவன் தாளால் நெரியுண்ட இராவணனுக்கு இரங்கிய வாகீசர்,

1. கந். அனந்தன் சாபநீங்கு படலம்: செய். — 36
2. கந். அனந்தன் சாபநீங்கு படலம்: செய். — 37.
3. சிவஞானசித்தியார் – சுபக்கம் : 2ஆம் சூத். செய். — 27.
4. திருக்குறள் — 7.

திருநாவுக்கரசராய், ஊன்றிய தாளின் உண்மையை உணர்ந்து, தாளின்வழிநின்று,

[1]“இன்பமே எந்நாளுந் துன்பமில்லை”

என்றார்.

[2]“மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்”

என்பது சம்பந்தப்பிள்ளையின் திருவாக்கு.

இவ்வாற்றால், தக்கன் சரிதமான தக்ஷகாண்டம், அரன்றன் பாதம் மறந்தவழி உளவாங் கவலைகளை உலகுக்கு எடுத்துக்காட்டுவதொரு தர்ப்பணமாம். தர்ப்பணம் – கண்ணாடி. நமது ஆன்ம அழுக்குக்களையும், நெறி விலகி நடக்கும் போக்குக்களையும் நமக்கு எடுத்துக் காட்டுவதொரு ஒப்புயர்வற்ற கண்ணாடி தக்ஷகாண்டம்.

[3]“ அரனடிக் கன்பர் செய்யும் பாவமும் அறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த பாதகம் நன்மை யாய்த்தே ”.

என்கின்றது சித்தியார்.

* * *

வடமொழிக் காந்தபுராணம் ஆறு சங்கிதைகளைக் கொண்டது. அவற்றுள், சங்கரசங்கிதை என்பது ஒன்று. அது பன்னிரு கண்டங்களையுடையது. அக் கண்டங்களுள் முதலாவது கண்டம் சிவரகசிய கண்டம். இக்கண்டம் ஏழு காண்டங்களைக் கொண்டது. ஏழாவது காண்டம் உபதேச காண்டம். முதலாறு காண்டத்தையுங்கொண்டது தமிழிற் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் அருளிச் செய்த கந்தபுராணம். அதில் ஆறுவது காண்டம் தக்ஷ காண்டம்.

தக்ஷகாண்டத்திறுதியில் வருங் கந்தவிரதப் படலமும் வள்ளியம்மை திருமணப் படலமுங் கந்தபுராணத்தின் அநுபந்தம் போன்றவை. வடமொழியில் இந்த இரு படலமுந் தேவகாண்டத்தில் வருகின்றன.

## II (i)

கந்தவிரதப் படலம், கந்தசுவாமியின் விரதங்களை எடுத்துக்கூறுவது. அவ்விரதங்களை அநுட்டித்து உயர்ந்தவன் முசுகுந்தச்சக்கரவர்த்தி. அப்படலத்துக்கு அவனே கதாநாயகன்.

1. நாவுக்கரசர்: 6. நாமார்க்குங் குடியல்லோம் — 1.
2. சம்பந்தர்: 3. திருக்கழுமலம் — 1.
3. சிவஞானசித்தியார் - சுபக்கம்: 2ஆம் சூத்திரம் — 29.

தக்கன் தேவனுயிருந்து, அரன்றன் பாதங்களை மறந்து, வீண்செயல் புரிந்து, ஆட்டுமுகத்தன் ஆயினன். முசுகுந்தன் குரங்காயிருந்து, அரன்றன் பாதங்களை மறவாதிருக்கும்பொருட்டுக் குரங்குமுக மனிதனுய்ப் பிறந்து, வீண் செயல் புரியாமல், வையத்துள் வாழ் வாங்கு வாழ்ந்து, வீரவாகு முதலியோர் சேவிப்பத் தேவ உலகத்துக்குச் சென்று, தேவேந்திரனுக்கு உதவிப் பெரு நிலை எய்திப் பேரின்பம் உற்ருன்.

முசுகுந்தன் கதையிற் சிந்தனையைத் தூண்டுவ தொன்று, முசுகுந்தன் இந்திரனிடம் அவன் பூசித்த சோமாஸ்கந்த மூர்த்தியைப் பெற்ற கதை. இந்த மூர்த்தி திருமால் பூசித்த மூர்த்தி. இந்த மூர்த்தியை இந்திரன் திருமாலிடம் பெற்றவன்.

கற்புடையாளொருத்தியை ஒன்று கேட்டால், அது தன்னுலே தரக்கூடியதாயிருந்தால் தருவாள் என்பாள். அவள் தன் கற்பிலே கண்ணுங் கருத்துமாய் அதனைப் பேணிக்கொண்டிருப்பவள். இந்திரன் தனது இந்திரச் செல்வத்தை நிலைசெய்தற்கு முசுகுந்தனின் உதவியை நாடியவன். அந்த உதவிக்குக் கைம்மாருக எதனையுங் கொடுக்க அவன் ஆயத்தனுனன். திருவருளின் தூண்டுத லாலே இந்திரன் பூசித்த சோமாஸ்கந்த மூர்த்தியைத் தரும்படி முசுகுந்தன் அவனைக் கேட்டான். ஒருத்தி கற்பையுங் கொடுக்க நேருகின்றதொரு நிலை இந்திர னுக்கு உண்டானது.

நிலையற்ற செல்வத்தைச் சிறிதுகாலம் நிலை செய்தற் காக, நிலையாய அருட்செல்வத்தை இந்திரன் இழக்க வேண்டியவன் ஆனுன். அதனுல், தன்னிலையினின்றும் இழிந்து நீசன் ஆயினுன்.

திருமால், சிவயோகங் கைகூடி உட்பூசை சித்தித்த தொரு நிலையிலே சோமாஸ்கந்த மூர்த்தியை இந்திர னுக்குக் கொடுத்தாராதலின், அவருக்கிழுக்கின்மை சிந்திக்கத்தக்கது.

சிவார்ச்சனை சிவவேடம் என்றிவைகளுக்கு நாம் கருவியாயிருப்பதன்றி, அவற்றை நமக்குக் கருவியாக்கு வது உய்தியில் குற்றம்.

'அறிவுக்கு நீ கருவியாயிரு; அறிவை உனக்குக் கருவியாக்காதே' என்பது பெரியார் ஒருவரின் உபதேசம். அறிவு சிவச்சொத்து.

சமய சின்னங்களை வெறும் உலக விருத்திக்குப் பயன் படுத்துவது கொடிது! கொடிது!!

*     *     *

முசுகுந்தன் கதையில் ஆழ்ந்த சிந்தனைக்குரியதும், தருமத்தின் அருமையைப் புலப்படுத்துவதுமான மற்ருெரு சம்பவம், வீரவாகுதேவர் முதலிய இலக்கத் தொன்பதின்மரும், திருவருட்குறிப்பை மனம் ஒருப்பட்டுச் சிரமேற் கொள்ளத் தவறினமை. [1]"நோற்றல் கூடிய முசுகுந்தன்" என்றற்ருெடக்கத்துச் செய்யுள்கள் சிந்தனைக்குரியவை. இச்சம்பவத்தால் அயரா அன்பினரான அடியார் பெருமையும் அறியற்பாலதாம்.

*     *     *

## (ii) அ

இனி வள்ளிநாயகியாரின் திருமணம் வாயிலாகத் திருமுருகன் திருமணம்பற்றிச் சிந்திப்போம்.

> [2]"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
> தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்டு
> அந்நிய மின்மையின் அரன்கழல் செலுமே"

என்பது சிவஞானபோதம்.

> [3]"மன்னவன்தன் மகன்வேட ரிடத்தே தங்கி
> வளர்ந்துஅவனை அறியாது மயங்கி நிற்பப்
> பின்னவனும் என்மகன்நீ என்றுஅவரிற் பிரித்துப்
> பெருமையொடுந் தானுக்கிப் பேணு மாபோல்
> துன்னியஐம் புலவேடர் சுழலிற் பட்டுத்
> துணைவனையும் அறியாது துயருறுந்தொல் லுயிரை
> மன்னும்அருட் குருவாகி வந்துஅவரின் நீக்கி
> மலம்அகற்றித் தானுக்கி மலரடிக்கீழ் வைப்பன்".

என்பது சிவஞான சித்தியார்.

பக்குவான்மாவை ஆட்கொள்ளும் வரலாறே வள்ளி நாயகி திருமணம். ஐம்புல வேடரிடைப்பட்ட வள்ளி நாயகியார் திருமுருகன் தாடலைப்பட்டார்.

> [4]"முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
> மூர்த்தி அவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
> பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
> பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனுள்

1. கந். கந்தவிரதப் படலம் : செய். — 29.
2. சிவஞானபோதம் : 8ஆம் சூத்திரம்
3. சிவஞானசித்தியார் – சுபக்கம் : 8ஆம் சூத்திரம் — 1.
4. நாவுக்கரசர் : 6. திருவாரூர் — 7.

அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசா ரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னாமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே''.

என்பது திருநாவுக்கரசுநாயனார் தேவாரம்.

வேதம் அறிவு நூல். தமிழ் அன்பு. ஆகமம் அருணூல்.

அருள் அறியற்பாலது. அது தனக்குவமையில்லாதான் தாள்; மனக்கவலை மாற்றும் மருந்து.

ஒன்றை அறிவது வேறு. அறிந்ததனில் நிற்பது வேறு. அறியற்பாலதனை அறிந்தவழி அதில் நிற்கச் செய்வது அன்பு. அந்த அன்பின் ஆராய்வே தமிழ். அறிவறிந்த அகத்தியராதி முனிவர்கள், அறிவில் நிற்றற்கு அன்பாகிய தமிழைச் சங்கமிருந்து ஆராய்ந்தார்கள்.

அன்பு, களவு கற்பு என இருதிறத்தது. கற்பு, களவின்வழி வருவது. [1]''கற்பெனப் படுவது களவின் வழித்தே'' என்பது அன்பினைந்திணைக் களவியற் சூத்திரம்.

களவாவது பந்தங்களை விடமுடியாமையும் அதே சமயத்திற் பதியைத் தொடராமலிருக்க முடியாமையுமாகியதொரு நிலை. இப்படியானதொரு நிலை அருச்சுனனுக்கு யுத்தமுனையில் ஒருநாள் உதித்தது. சாரதியுங் குருவுமான கண்ணனைத் தொடராமலிருக்கவும் அவனால் முடியவில்லை; அதே சமயத்திற் பந்தங்களாகிய பந்துக்கள் மீது பாணந்தொடுத்துப் பந்தங்களை அறுத்தெறியவும் அவனால் முடியவில்லை. இவ்வாறாகியதொருநிலை உலக பந்தமாகிய தினைப்புனத்திலே தத்துவாதீதமான பரண் மீதமர்ந்த வள்ளிநாயகியார்பால் ஒருதினம் உதயமானது.

திருமுருகன் பரணருகே நிற்கின்றான். ஐம்புல வேடர்கள் வருகின்றார்கள். வள்ளிநாயகியாரின் களவு நிலையை உணர்ந்து முருகன் மரமாயினான். மரம் வேங்கை மரம். புதுவது முளைத்த மரத்தை வேருடன் அழிக்க வேடர்கள் தலைப்படுகின்றார்கள். வள்ளிநாயகியார் அதன் வரலாற்றை மறைக்கின்றார். களவு நிலையாகிய அன்பு நிலை அது.

---

1. இறையனார் களவியல் — 15.

கற்பு நிலைக்கு உதாரணம் தெய்வநாயகியம்மையார். [1]'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்கின்ற, பொதுமை குடிபோனதொரு உயர்ந்த நிலை கற்புநிலை.

களவுநிலை கைகூடிக் கற்புநிலை கால்கொள்ளுகின்ற வள்ளிநாயகியாரைக் கண்ணுற்றபோது,

[2]"ஈங்கொரு தமிய ளாகி இருந்திடு வேனுக்கு இன்று ஓர்
பாங்கிவந் துற்றவாறு நன்று"

எனப் பரிவு கூர்ந்தார் தெய்வநாயகி அம்மையார் என்கின்றது புராணம்.

[3]'ஊருணி உற்றவர்க்கு ஊரன்மற் றியாவர்க்கும் ஊதியமே'

என்பது திருக்கோவையாரில் நானூறும் பாட்டின் நான்காவது அடி. மாணிக்கவாசகப் பெருமானது திருவாயிலிருந்தொழுகிய இறுதித் தேன்துளி அது. தலைவி கற்புநிலை முற்றுப்பெற்றுத் தலைவனை 'ஊருணி' என்று காணுகின்றாள். அதனாலே, அவன் 'யாவர்க்கும் ஊதியம்' என்கின்றாள்.

தெய்வநாயகியார் திருமுருகனை, 'ஊருணி' என்று கண்டு, அந்த 'ஊதிய'த்தை வள்ளிநாயகியாரும் அநுபவிக்கும் நிலை எய்தியதை மகிழ்ந்து, தாம் பெற்ற இன்பத்தைத் தம் பாங்கி நுகர்தலிற் பரிவு கூருகின்றார்.

தெய்வநாயகியாரை,

[4]'மறுவில் கற்பின் வாணுதல்'

என்கின்றது திருமுருகு.

இவ்வாற்றால், திருமுருகன் திருமணம், களவுங் கற்புமாகிய தமிழ் மணம்; அன்பு மணம்.

* * *

## (ii) ஆ

கந்தபுராணம் பதினாயிரஞ் சொன்ன கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகளின், பதினாயிரத்து முந்நூற்று நாற்பத்திரண்டாஞ் செய்யுள், [5]'பொய்யற்ற கீரன்' என்று தொடங்குகின்றது. தம் வழிபடு தெய்வமாகிய திருமுருகன்பால் ஆற்றுப்படை அருளிய நக்கீரனாரை,

1. திருமந்திரம் — 147.
2. கந். வள்ளி திருமணம்: செய். — 235.
3. திருச்சிற்றம்பலக் கோவையார்.
4. திருமுருகாற்றுப்படை: திருப்பரங்குன்றம்.
5. கந். வள்ளி திருமணம்: செய். — 264.

'பொய்யற்ற' என்ற விசேடணத்தை வழங்கிச் சிறப்பிக்கின் றுர் சிவாசாரிய சுவாமிகள்.

திருமுருகாற்றுப்படையிலே திருவாவினன்குடியிலே, திருமாலுக்கும் இந்திரனுக்கும் மத்தியில் உருத்திர மூர்த்தியை உள்ளிட்டதொரு மகாதிருக்கூட்டம், பிரம தேவரைச் சிறைவீடு குறித்துத் திருமுருகனிடம் அணி வகுத்துச் செல்லுகின்றது. அந்த அணிவகுப்பில் முன் னணியில், முருகு இனிது முகஞ்செய்யும்பொருட்டுப் போலும், முனிவர் குழாத்தை அமைத்துக்கொண்டது அந்த மகாதிருக்கூட்டம். முனிவர்களை முன்னிட்டுச் செல்லுங் கூட்டம் அக்கூட்டம்.

முன்னணியிலே திருமுருக சந்நிதிக்குச் செல்லும் பாக்கியம் படைத்த அம் முனிவர்களை, [1]'துனியில் காட்சி முனிவர் முற்புக' என்று, 'துனியில் காட்சி' என்ற விசே டணத்தை வழங்கிச் சிறப்பித்தருளுகின்றுர் பொய்யற்ற கீரனுர்.

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள், 'பொய்யற்ற' என்ற விசேடணத்தை வழங்கியதற்கு, கீரனுர் 'துனியில் காட்சி' என்ற விசேடணத்தை முனிவர்களுக்கு வழங்கிய தொன்றே போதுமானது என்றுர் சிந்தனையாளராகிய பெரியார் ஒருவர்.

துனி – வெறுப்பு. வெறுப்பற்ற நோக்குடையவர்கள் முனிவர்கள். உலக சிருட்டியாகிய திருவருள் விளையாட் டின் நீதியை அறிந்தவர்கள் அவர்கள். [2]'மேன்மை கொள் சைவநீதி'யைக் கண்டுகொண்டிருப்பவர்கள் அவர் கள். அவர்களுக்குத் திருவருள் நடத்துகின்ற உலக நிகழ்ச்சிகளாகிய உலக நீதியில் வெறுப்பேது!

> [3]'சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
> வகைதெரிவான் கட்டே யுலகு'

என்றுர் நாயனுர்.

இருவினையொத்த சமத்துவ புத்திமான்கள் முனி வர்கள்.

நாரதமுனிவர், துனியில் காட்சி முனிவர் குழாத்தில் வைத்துப் போற்றத்தக்க பெருமை படைத்த மகா

1. திருமுருகாற்றுப்படை: திருவாவினன்குடி.
2. கந். வாழ்த்து — 5.
3. திருக்குறள் — 27.

முனிவர். எப்படிப்பட்ட தெய்வ சந்நிதியிலும் முற்புகும் பரிபக்குவர் அவர்.

துனியில் காட்சி மகாமுனிவரான நாரதரைத் திரி லோக சஞ்சாரி என்பார்கள். அவர் திரிலோகத்திலுந் திருவருள் நீதியைக் கண்டு களித்துப் பாடுபவர்.

இத்துணைச் சிறந்த அந்த மகாமுனிவர் கந்த புராணத்திற் பல இடங்களிற் காட்சியளிக்கின்றார். எடுத்துக்கொண்ட தக்ஷகாண்டத்தில் ஐந்து முறை அம் மகாமுனிவரின் காட்சி நமக்குக் கிடைக்கின்றது.*

தக்கனுடைய புதல்வர்கள் தக்கன் கட்டளையை மேற்கொண்டு தவஞ் செய்தபோது, அங்கே நாரத முனிவர் தோன்றி, அவர்களை வீட்டுநெறிப்படுத்தியது முன் பேசப்பட்டது. அங்கே நாரதரின் தோற்றரவு நாம் அவரைக் காணும் முதலாம் இரண்டாங் காட்சிகள்.

மூன்றாவது காட்சி திருக்கைலாசத்திற் கிடைக்கின்றது. பூமியிலே நிகழுகின்றதொரு புதுமையை விரைந்து சென்று கைலாசபதிக்கு முறையிடுகின்றார் நாரத மகா முனிவர். புதுமையாவது சிவபெருமானை விலக்கி வீண் செயலாகியதொரு யாகத்தைத் தக்கன் துணிந்து நடத்துவதாம்.

நான்காவது காட்சி புளகம் உறுதற்குரியதொரு காட்சி. நாரதர் விண்ணுலகத்திற் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்றார். அப்பொழுது மண்ணுலகத்திலே, தத்துவ சோபானங்கள் என்று சொல்லத்தக்க ஏணிப்படிகளிலே திருவடி வைத்துத் தினைப்புனத்தின் மத்தியிலே அமைந்த பரண்மீது ஏறி அமர்கின்றார் வள்ளிநாயகியார். பரிபக்குவங் கனிந்து திருமுருகன் வரவை எதிர்பார்ப்பவர் போன்று எல்லாத் திசைகளையும் நோக்கியபடி யிருக்கின்றார் அம்மையார். இந்தக் காட்சி நாரத மகா முனிவரின் தூய மனத்திரையிலே தோன்றுகின்றது. அக்கணமே விரைவுபட்டு மண்ணுலகை நோக்கி, அந்தத் தினைப்புனத்தில் அமைந்த பரணுக்கண்மையிலே இறங்குகின்றார் நாரதமுனிவர். அவருடைய கண்கள் ஆனந்த பாஷ்பத்திலே முழுகி முழுகி அம்மையாரின் பரிபக்குவக் கனிவைக் கண்ணாரப் பருகிக் களிகொள்ளுகின்றன. அவருடைய கால்களோ அங்குத் தரிக்கலாற்

* அடிமுடி தேடுமிடத்தில் நாரதரின் ஞானமும், கந்தவிரதத்தில் அவரது விரதமுங் காட்டப்பட்டன. இவற்றுடன் சேர்த்தெண்ணி ஏழு காட்சி எனினுமாம்.

ருவாய்த் திருத்தணிகையை நோக்கித் தணிகைப் பிரபு வான திருமுருகனிடம் ஓட்டம் எடுக்கின்றன.

இந்நிலையில் நாரத முனிவர் விம்மிதமுறுவதைக் கண்ணுற்ற தணிகைப் பிரபு, முனிவரை அருணேக்கஞ் செய்தவாறே பக்குவ மிக்காருறைகின்ற தினைப்புனத்துப் பரணுக்கருகே அம்மையாரை அணைந்து ஆட்கொண் டருளச் செவ்வி நோக்கி நிற்கின்ருர். கற்பியலுக்கு வழி செய்வதாகிய களவியன்மணம் நிகழுகின்றது.

பக்குவங் கனிந்ததொரு சமயத்திலே தனியிடமாகிய தொரு சோலையிலே,

[1]'' முந்நான்கு தோளும் முகங்களோர் மூவிரண்டுங்
கொன்ஞர்வை வேலுங் குலிசமுமே னைப்படையும்
பொன்ஞர் மணிமயிலு மாகப் புனக்குறவர்
மின்ஞள்கண் காண வெளிநின் றனன்விறலோன்''.

[2]' ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்குஞ்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந்
திருந்துசாத் துவிகமே யாக'

வள்ளிநாயகியார் இருமையின் ஒருமை யெய்தித் திரு முருகன் வயத்தராய்த் திருமுருகேயாய்த் திருமுருகை நுகர்வாராயினர்.

அந்த அரும்பெரு நிலையில் ஐம்புலவேடுவர்கள் தோன்றி உள்ளங்கவர் கள்வராகிய திருமுருகை வளைந்து அம்பு தொடுப்பாராயினர். அவ்வம்புகள்,

[3]''கட்டழ குடைய செவ்வேற் கருணையங் கடலின் மீது
பட்டன பட்ட லோடும் பைந்தொடி பதை'' பதைத்தாள்.

[4]'காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்து ளோருயிர் கண்டனம்..............................
.............................................................
தோகைக்குந் தோன்றற்கு மொன்ருய் வருமின்பத் துன்பங்களே'

என்கின்றது அன்பினைந்திணைக் கோவையாகிய திருச் சிற்றம்பலக் கோவையார்.

தேவி பதைபதைப்பதை அயலில்நின்ற பன்மணுகிய சேவல் ஆற்ருது, தன் சிறகுகளை அகல விரித்தடித்து, கழுத்தை உயர நீட்டி வளைத்து, உரக்கக் கூவியது.

---

1. கந். வள்ளி திருமணம் : செய். — 116.
2. பெரியபுராணம் - தடுத்தாட்கொண்ட : செய். — 106.
3. கந், வள்ளி திருமணம்: செய். — 182.
4. திருக்கோவையார் : செய். — 71.

சேவல் கூவுதற்கு முன்னமே சிறகுகளை அடித்த மாத்திரத்திலேதானே, நம்பியரசனையுள்ளிட்ட வேடுவர்கள் ஆவி சோர்ந்து விழுந்திறந்தார்கள்.

அத்தருணத்தில் திருமுருகன் அவ்விடத்தை யகன்று செல்வானுயினுன். அம்மையார் அரைக்கணமுந் தரியாது, அன்னையையும் அத்தனையும் பொருள்செய்யாது, அகலிடத்தார் ஆசாரத்தை நீத்துத் தொடர்தற்குரியானைத் தொடர்ந்து உடன்போக்குச் செய்வாராயினுர். உடன்போக்கின் உச்சநிலை நிகழாநின்றது.

நாயகி, சர்வலோகைக நாயகனைத் தொடருவதான இந்த அருமந்த பரிபக்குவ அன்பு நிலையை அள்ளிப் பருகுவதற்குரியதொரு தவம் நாரதமுனிவருக்கு வாய்க்கின்றது.

இது நாம் நாரதரைக் காணுகின்ற ஐந்தாவது காட்சி. முனிவர் வள்ளிநாயகியாரின் போக்கைக் கண்ணுரக் கண்டு உள்ளம் உருகித் திருமுருகன் திருவடியில் வீழ்ந்து ஐம்புல வேடுவர்களையும் ஆட்கொள்ள வேண்டுமென்று பிரார்த்திக்கின்ருர். திருமுருகன் அநுக்கிரகஞ் செய்கின்ருன். வேடுவர்கள் உயிர்த்தெழுந்து, ஒருமை எய்தித் திருமுருகனுக்கு வள்ளிநாயகியாரைத் திருமணஞ் செய்து வைக்கின்ருர்கள்.

திருமணச் சடங்கைச் செய்துவைக்கும் பாக்கியம் நாரத முனிவருக்குக் கிடைத்தது. நாரதரின் தவம் இருந்தவாறு!

நாரத மகாமுனிவரின் அடிச்சுவட்டைத் தொடர வல்லவர்கள், புராண இரகசியங்களையும் வேதாகம உண்மைகளையும் அறிய வல்லர் ஆவர்.

நமது பாரத தருமம், 'துனியில் காட்சி' முனிவர்களின் வழிவந்தது. அதனைப் பேணும் முறையிற் பேணி' உய்தி கூடுவதாகுக இந்த அருமந்த உலகம்.



# பொருளடக்கம்

உ

சிவமயம்

# புராண படன பஞ்சரத்தினம்

க

சைவர்கள், பல சமயத்தாருக்கும் பொதுவகையால் வேண்டப்படும் இலக்கணங்களை முன்னே வழுவாது தழுவிக்கொண்டே, பின்பு தங்களுக்குச் சிறப்புவகையால் வேண்டப்படும் இலக்கணங்களை உடையர்களாய் ஒழுகல்வேண்டும்.

உ

*சிறப்புவகையாகிய இருபத்துமூன்று இலக்கணங்களுள் ஒன்றாகிய சிவபுராணங் கேட்டல், தான் ஓரிலக்கணமாய் நிற்றலன்றித் தன்னையும் தன்னை ஒழிந்த சிறப்பிலக்கணங்களையும் மற்றைப் பொதுவிலக்கணங்களையும் வருவித்தற்குக் கருவியாயும் நிற்றலுடையது.

ந

சிவபுராணம் படித்துப் பொருள் சொல்லுதற்கு உரிய இடங்களாவன தேவாலயம், திருமடம், நதிக்கரை, குளக்கரை, திருநந்தனவனம், யாகசாலை முதலிய சுத்தஸ்தானங்களாம்.

ச

நாடோறும் புராணந் தொடங்கும்போதும் முடிக்கும்போதும் காப்புச் சொல்லல் வேண்டும். காப்புக்கு முன்னும் பின்னும் "**திருச்சிற்றம்பலம்**" என்று உச்சரித்தல் வேண்டும். காப்புச் சொல்லும்பொழுது யாவருங் கும்பிட்டுக்கொண்டிருத்தல் வேண்டும்.

ரு

புராணம் வாசிப்பவர் சபையார் யாவருங் கேட்கும்பொருட்டுத் தெளிவுபெற வாசித்தல் வேண்டும். வாசிக்குங் காலத்துக்கும் எடுத்துக்கொண்ட விஷயத்தினது குணத்துக்கும் ஏற்ற இராகத்தில் வாசித்தல் வேண்டும். எச்சுதியில் எவ்விராகத்தில் வாசிக்கப்படுகின்றதோ அச்சுதியில் அவ்விராகத்திற்றானே பொருள் சொல்லப்படல் வேண்டும். இலக்கணப் பிழையில்லாமலும், வெளிப்படையாகவும், இன்றியமையாவிடங்களில் விரிவாகவும் பொருள் சொல்லல் வேண்டும்.

— **நாவலர்**

* பொதுச்சிறப்பிலக்கணங்களைச் சிவபுராண படன விதியிற் காண்க.

உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

# கந்தபுராணம்

## விநாயகர் காப்பு

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

உச்சியின் மகுட மின்ன வொளிர்தர நுதலி னோடை
வச்சிர மருப்பி னொற்றை மணிகொள்கிம் புரிவ யங்க
மெய்ச்செவிக் கவரி தூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியின் விகட சக்ர கணபதிக் கன்பு செய்வாம்.

## சுப்பிரமணியர் காப்பு

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவருந் துதிக்க நின்ற இராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேண் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

திருச்சிற்றம்பலம்

## நூற்பயன்

இந்திர ராகிப் பார்மே லின்பமுற் றினிது மேவிச்
சிந்தையி னினைந்த முற்றிச் சிவகதி யதனிற் சேர்வர்
அந்தமி லவுணர் தங்க ளடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணந் தன்னைக் காதலித் தோது வோரே.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

ஆருவது

# தக்ஷகாண்டம்

## உபதேசப்படலம்

மாயையின் வலியோ ஞகி மான்முத லோரை வென்றே
யாயிரத் தோரெட் டண்ட மரசுசெய் துகநூற் றெட்டுக்
காயம தழிவின் ருகிக் கடவுளர்க் கலக்கண் செய்த
தீயசூர் முதலைச் செற்ற குமரன்ருள் சென்னி வைப்பாம்.

மாயையின் வலியோஞகி—மாயைச் சார்பாலெய்திய வன்மை உடையனாய், மால் முதலோரை வென்று—திருமால் முதலிய தேவர்களையெல்லாம் வெற்றிகொண்டு, நூற்றெட்டுகம்—நூற்றெட்டு உககாலம், ஆயிரத்தோரெட்டு அண்டம் அரசு செய்து—ஆயிரத்தெட்டு அண்டங்களை அரசுபுரிந்து, காயம் அழிவது இன்று ஆகி—சரீரம் அழிவது இல்லையாய், கடவுளர்க்கு அலக்கண் செய்த—தேவர்களுக்குத் துன்பம் விளைத்த, தீயசூர் முதலைச் செற்ற—தீமையை உடைய சூரபன்மனுகிய முதல்வனை அழித்த, குமரன் தாள் சென்னி வைப்பாம்—குமாரக்கடவுளின் பாதங்களைச் சிரமேற்கொண்டு வணங்குவாம்.

ஆன்மாச் சார்ந்ததன் வண்ணமானது. அதன் சார்பு பொய்ச்சார்பு மெய்ச்சார்பு என இருவகைத்து. மாயைச்சார்பு பொய்ச்சார்பு. பொய்ம்மை நிலையாமை மேற்று. யாதொன்று நிலையாததோ அது காலத்தானும் இடத்தானும் எல்லை உறுவதாம். ஈண்டுப் பொய்ச்சார்பா னெய்திய வலி, நூற்றெட்டுகம் ஆயிரத்தெட்டு அண்டம் எனக் கால இடங்களால் எல்லை யுறுவது காண்க. மாயைச்சார்பு பொய்யாய் நிலையாததாயினும், மெய்ச்சார்பை அடைதற்கு உபகாரப்படுதலின், அது பேணும் முறையிற் பேணற்பாலதாம். அங்ஙனம் ஆகாதவழித் தீமை பயப்பதாம். அங்ஙனமாதல் 'தீயசூர்' என்புழி விசேடணத்தாற் பெறுதும். அன்றி, வென்று செய்த என்ற எச்சங்களானும் பெறுதும்.

மால், மயக்கம் என்ற பொருளையுந் தரும். அப்பதப் பிரயோகத்தால் மான்முதலோராய கடவுளர் மாயையின் வலியோனுக்கு அடங்குவாராதல் அநீதியன்மையும் அறிக. நூற்றெட்டுகம் என்னுங் கால எல்லையைச் சூர்முத லின் ஒவ்வொரு செயலுக்குங் கூட்டியுரைக்க. அது என்பது காயம் அழிவது எனப் பிரித்துக் கூட்டி உரைக்கப்பட்டது. இனிக் காயமது என வைத்து அது பகுதிப் பொருள் விகுதியெனக் கொள்ளினுமாம். கால நீட்டம் பற்றிக் காயமதழிவின்றாகி என்றார்.

ஆகி வென்று செய்து ஆகி செய்த சூர் என்க.

செற்றமில்லான் செறுகை தூய்மை செய்வதே யாதலின், 'தீயசூர் முதலைச் செற்ற' என்பது 'தூய சூர் முதலை ஆக்கிய' என்னும் பொருட் டாம். செற்ற தாள் என்க. குமரன்றாள் 'மதனுடை நோன்றாள்'. மதம் எனப்படுஞ் செருக்கை உடைத்தலால் வலி பெற்ற தாள். அவன்றாளைச் சென்னிமேற் கோடலாவது தாடலைப்படுதலாம். 'கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான் தாளை வணங்காத் தலை'. இனிச் சென்னி வைப்பு [சென்னியை வைக்குமிடம்] தாளாம் எனக் கூட்டிப் பொருளுரைப் பினும் அமையும்.

தீயசூர், தூய சூராய்க் குமரன் மதனுடை நோன்றாளைத் தோகையாய்ச் சுமந்து, தன் சென்னிவைப்பை நாடித் தாடலைப்படுதற்கு முயலுமாறு காண்க. (1)

உலகினுண் மேல தாகி யோங்குபே ரொளியாய் வான்மேற்
றலைமைய தாகி வைகுஞ் சத்திய வுலகந் தன்னிற்
புலனுணர் முனிவர் தேவர் புதல்வர்கள் புடையிற் போற்ற
மலரயன் றனது கோயின் மன்றில்வீற் றிருந்தா னன்றே.

உலகினுள் மேல தாகி—உலகங்களுள்ளே மேலானதாய், ஓங்கு பேரொளி யாய்—வளர்கின்ற பேரொளியை உடையதாய், வான் மேல் தலைமையதாகி— பூலோகத்துக்கு மேலேயுள்ள வான உலகங்களுக்குள்ளே முதன்மையான தாய், வைகும்—இருக்கின்ற, சத்திய உலகந் தன்னில்—சத்திய உலகத்தில், புலன் உணர் முனிவர்—ஐம்புலன்களின் போக்கை உணர்ந்த முனிவர் களும், தேவர்—தேவர்களும், புதல்வர்கள்—உபப்பிரமர்களாகிய புதல்வர் களும், புடையிற் போற்ற—இரு பக்கத்திலுந் துதிசெய்ய, மலரயன்— தாமரையாசனரான பிரமதேவர், தனது கோயில் மன்றில் வீற்றிருந்தான்— தமது கோயிலிலுள்ள மண்டபத்தில் வீற்றிருந்தார்.

வைகுந்தத்துக்குக் கீழே மேலானதுந் தலைமையானதுஞ் சத்திய உலக மென்க. (2)

இருந்திடு காலை வேதா யாவையு மளிப்ப மேனாட்
டெரிந்தருள் பதின்ம ராகுஞ் சீர்கெழு குமரர் தம்முட்
பொருந்திய தக்க னென்னும் புந்தியின் மேலோன் முன்செய்
அருந்தவ நெறியா லீதொன் றையனை வினவ லுற்றான்.

வேதா இருந்திடு காலை—பிரமதேவர் அவ்வாறு வீற்றிருந்த போது, யாவையும் அளிப்ப—அனைத்தையும் படைத்தலாகிய தொழிலைச் செய்யும் பொருட்டு, மேனாள் தெரிந்து அருள்—முன்னாளிற் சிந்தித்துப் பெற்ற, சீர்கெழு பதின்ம ராகும் குமரர் தம்முள்—சிறப்பு வாய்ந்த பதின்மர் புதல்வர்களுள், பொருந்திய தக்கன் என்னும் புந்தியின் மேலோன்—ஆண்டு வதிந்த தக்கன் என்னும் அறிவால் மிக்கோன், முன்செய் அருந்தவ நெறியால்—முன்னர்ச் செய்து வைத்த அரிய தவநெறி காரணமாக, ஐயனை—தந்தையாகிய பிரமதேவரை, ஈது ஒன்று வினவல் உற்றான்—பின்வருவதோர் ஐயத்தை வினவினான்.

தெரிந்தருள் பதின்மர்—தெரிந்தெடுக்கப்பட்ட பதின்மர் எனினுமாம். ஐயம், தெளிவுக்கு முந்தியதாதலின், 'முன்செய் அருந்தவ நெறியால் வினவலுற்றான்' என்றார். வினவிய அதனானே புந்தியின் மேலோன் எனப் பட்டான். (3)

தேவரின் முதல்வ ராகிச் சிற்குணத் தலைவ ராகி
மூவரி லுயர்ந்தோ ராகி முடிவிலா வொருவ ராகி
யோவற வுயிர்க டோறு முயிரென வுறைவோ ராகி
மேவினர் தம்மைத் தேற விளம்புதி மேலோ யென்றான்.

தேவரின் முதல்வர் ஆகி—தேவர்களின் தலைவராய், சிற்குணத் தலைவர் ஆகி—ஞான குண முதல்வராய், மூவரில் உயர்ந்தோர் ஆகி—மும்மூர்த்திகளில் உயர்ந்தவராய், முடிவிலா ஒருவர் ஆகி—இறுதியில்லாத ஏக வஸ்துவாய், உயிர்கள் தோறும் உயிர் என—உயிர்கள் தோறும் உயிர்க்குயிராய், ஓவு அற உறைவோராகி—அவ்வுயிர்களை எக்காலத்திலாயினும் நீங்குதலின்றிக் கலந்துறைவோராய், மேவினர் தம்மை—இருப்பவராகிய முழுமுதற் கடவுளை, தேற—இவர் என்று தெளிவுபெற, மேலோய் விளம்புதி என்றான்—மேன்மை பொருந்திய பிதாவே உபதேசித்தருளுக என்று தக்கன் வினவினான்.

'மூவரில் உயர்ந்தோர்' என்பது இரட்டுற மொழிதலாய், மூவரினும் வேறாய் அவரினும் உயர்ந்தவர் என்றும், மூவர்களுள்ளே மற்றை இருவரிலும் உயர்ந்தவர் என்றும் இருபொருள் தந்து நின்றது.

மூவரினும் வேறாய் உயர்ந்தோர் மகாசங்கார உருத்திரர். அவரே முழுமுதற் கடவுள். மூவரிலொருவராய உருத்திரர் மகாசங்காரத்துக்குக் கீழ்ப்பட்ட சங்காரத் தொழிலைச் செய்பவர். இவர் முழுமுதற் கடவுள் அல்லராயினும் ஏனையிருவர் போல மயக்கமுறாது, தம் செயலனைத்துந் தம்மை அதிட்டித்த முழுமுதற் கடவுளின் செயலாய் அமைந்தவர் ஆதலின், முழுமுதற் கடவுளாகவும் உபசரிக்கப்படுவர் என்க. இதனானே, இரட்டுற மொழிதலா னிழுக்கின்மையு மறிக. (4)

என்றுதன் மைந்தனிவ்வா றியம்பலு மலரோன் கேளா
நன்றிது மொழிவன் கேட்டி நாரணன் முனும் யானு
மன்றம ரியற்று மெல்லே யழலென வெழுந்து வானிற்
சென்றதோர் சிவனே யார்க்கு மேலவன் றெளிநீ யென்றுன்.

என்று இவ்வாறு தன் மைந்தன் இயம்பலும்—என்றிங்ஙனம் தம்புதல்வ ஞகிய தக்கன் வினவ, மலரோன் கேளா—பிரமதேவர் கேட்டு, இது நன்று—நீ வினவிய இது நன்று ; மொழிவன் கேட்டி—உனது விஞவுக்கு விடை கூறுவேன் கேட்பாயாக ; நாரணன் தானும் யானும்—விஷ்ணுவும் பிரமஞகிய நானும், அன்று அமர் இயற்றும் எல்லே—அன்ருெருநாள் முழு முதற் பரம்பொருளே நிச்சயிக்கும் பொருட்டுப் போரிடும்போது, அழல் என எழுந்து—பரம்பொருள் அக்கினி வடிவாய் நமக்கு மத்தியில் எழுந்து, வானிற் சென்றது—வான்மேற் சென்றது ; ஓர்—இச் சம்பவத்தை நீ ஓர்வா யாக ; சிவனே—முழுமுதற் பரம்பொருள் சிவபெருமானேயாம்; யார்க்கும் மேலவன்—அச் சிவபெருமானே இருவர்க்கும் மூவர்க்கும் யாவர்க்கும் மேலானவர் ; நீ தெளி என்றுன்—தக்கனே நீ திரிபு ஐயம் இன்றித் தெளி வாயாக என்று உபதேசித்தார்.

அரி அயன் அமரியற்றிய வரலாறு அடிமுடி தேடு படலத்துக் காண்க. சென்றதற்கு வினேமுதல் வருவித் துரைக்கப்பட்டது. அழலென எழுந்த வரலாறு பிரசித்தமாதலின், எழுந்தார் யார் என்பதை எடுத்துரையாதே 'ஓர்' என்ருர். முன்னமே தக்கன் ஓர்ந்த வரலாருமென்க. அதனுனே, அவ் வரலாற்றை ஞாபகஞ் செய்து, அவ்வரலாற்ருற் போந்த முடிபைச் ' சிவனே யார்க்கும் மேலவன்' என்ருர் என்க. இனி ஓர் சிவனே என்பதற்குப் பரம் பொருளாகிய ஏகவஸ்து சிவபெருமானே என்றுரைப்பினுமாம். (5)

தருசெயல் வல்லோ னீது சாற்றலுஞ் செயலோர் மூன்றி
னிருசெயல் புரியு நீவி ரேதில ராகப் பின்ன
ரொருசெயல் புரியு மீச னுங்களுக் கிறைவ ஞகி
வருசெய லென்னே சிந்தை மயக்கற வுரைத்தி யென்றுன்.

தருசெயல் வல்லோன்—சிருட்டித் தொழிலில் வல்லோரான பிரமதேவர், ஈது சாற்றலும்—பரம்பொருள் சிவபெருமானே என்கின்ற இந்த உண்மையை எடுத்து உபதேசித்தலும், செயல் ஓர் மூன்றின்—முத்தொழில்களில், இரு செயல் புரியும் நீவிர்—படைத்தல் காத்தலாகிய தொழில்களேச் செய்யும் பிரம விஷ்ணுக்களாகிய நீவிர், ஏதிலர் ஆக—தலேமையின்றி அயலோராக, பின்னர்—படைத்தல் காத்தல் ஆகிய தொழில்களுக்குப் பின்னர் நிகழ்வதாகிய, ஒரு செயல் புரியும்—அழித்தல் என்கிறதொரு செயலேச் செய்கின்ற, ஈசன்—உருத்திரர், உங்களுக்கு இறைவஞகி வருசெயல் என்—உங்கள் இருவருக்குந் தலேவராகி வந்த காரணம் என்னே, சிந்தை மயக்கு அற—மனமயக்கம் நீங்க, உரைத்தி என்றுன்—உபதேசித்தருள்வாயாக என்று வினவிஞன்.

'ஒருசெயல்' மகாசங்காரமுமாம், அதற்குக் கீழ்ப்பட்ட சங்காரமுமாம். அவ்வாறே 'ஈசன்' மகாசங்கார உருத்திரருமாம், மூவரிலொருவராய உருத்திரருமாம். இவ்வாறு இரட்டுற மொழிந்த வழியும் அதிகரித்தபொருள் மகாசங்காரமும் மகாசங்கார உருத்திரருமா மென்பது, 'மூவரிலுயர்ந் தோர்' என்பதற்கு உரைத்தவாற்ருனறியப்படும்.

இருசெயலே அரிய செயல்; செயற்கருஞ் செயல். அவற்ருேடொப்பிடு மிடத்து அழித்தல் அற்பம் என்ற கருத்தில் 'ஒரு செயல்' என்ருெனென்க.

ஏதிலர் எளியோர் என்றுமாம். (6)

தற்புகழ் கருத்தின் மிக்க தக்கனீ துரைத்த லோடுஞ்
சிற்பர னிலைமை யன்ஞ னருளினுற் றெரிந்த வேதாச்
சொற்படு மறைகண் முன்னீ துகளறக் கற்றுத் தூய
நற்பொரு டெரிந்த வாறு நன்றுநன் றென்ன நக்கான்.

தன் புகழ் கருத்தின் மிக்க தக்கன்—பிதாவாகிய தம்மைப் புகழுங் கருத்தில் மிகுதிப்பாடு கொண்ட தக்கன், ஈது உரைத்தலோடும்—ஈசனை இகழுங் குறிப்பில் இதனை உரைத்தவுடனே, சிற்பரன் நிலைமை—சிவபெருமானின் இயல்புகளை, அன்னுன் அருளினுல் தெரிந்த வேதா—அப்பெருமானின் திருவருளால் உணர்ந்த பிரமதேவர், நீ—தக்கனே நீ, சொல்படு மறைகள்—குரு சீட முறையிற் சொல்லப்பட்டு வருகின்ற வேதங்களை, முன்—முன்னர், துகள் அறக் கற்று—கசடறக் கற்று, தூய நல் பொருள் தெரிந்த வாறு—தூய்மையுடைய நன்மையாகிய மெய்ப்பொருளைத் தெளிந்தவாறு, நன்று நன்று என்ன நக்கான்—நல்லது நல்லது என்று கூறிச் சிரித்தார்.

முத்தொழிலிற் படைத்தலே அரியதென்பது தக்கன் கருத்து. அதனுலே பிதாவைப் புகழுங் கருத்தில் மிக்கான் என்க. நகை இகழ்ச்சிக் குறிப்பு. 'தற்புகழ்' என்பதற்குத் தன்னைத் தானே புகழுகின்ற எனினுமாம். தக்கன் சிறுவிதி; சிருட்டியை உயர்த்துப் பேச முனைந்தானுதலின் தற்புகழ் கருத்தின் மிக்கானுயினுன். (7)

பின்னுற முடிப்பான் றன்னைப் பிரானெனத் தேற்றுந் தன்மை
யென்னென வுரைத்தி மைந்த வெங்களைச் சுரரை யேனைத்
துன்னிய வுயிர்க டம்மைத் தொலைவுசெய் திடுவ னீற்றி
லன்னவ னென்னின் முன்ன மளித்தவ னவனே யன்ருே.

பின்—சங்கார காலத்தில், உற முடிப்பான் தன்னை—ஒருங்கு அனைத்தையுஞ் சங்கரிப்பவரான உருத்திரக் கடவுளை, பிரான் எனத் தேற்றுந் தன்மை—தலைமைக் கடவுள் என்று தெளிவிக்கும் இயல்பு, என் என உரைத்தி—என்னை என வினவினை, மைந்த—மகனே, எங்களை—பிரம விஷ்ணுக்களாகிய எங்களையும், சுரரை—இந்திரன் முதலிய தேவர்களையும், ஏனைத்துன்னிய

உயிர்கள் தம்மை—மற்றைய செறிந்த உயிர்வர்க்கங்களையும், ஈற்றில்—சங்கார காலத்தில், தொலைவு செய்திடுவன் அன்னவன்—சங்கரித்தருளுபவர் அவ் வுருத்திரரேயாவர், என்னின்—இங்ஙனம் இருந்தவாற்றால், முன்னம்—சிருட்டி யாரம்ப காலத்திலே, அளித்தவன்—சிருட்டி செய்தருளியவரும், அவனே அன்றோ—அந்த உருத்திரக் கடவுளேயாவர் அன்றோ.

சங்காரமாவது ஒடுக்கம். ஒடுங்கிய தானமே உற்பத்தித் தானமும் ஆதலின், 'அளித்தவன் அவனே யன்றோ' என்றார். 'அந்தம் ஆதி' என்றது சிவஞானபோதம். அளித்தல் காத்தலும் ஆதலின் காப்பவரும் அவரே யாவர். ஆகவே முத்தொழிலுக்குங் கருத்தா அவரே என்றவாறு. உலகத் துக்குக் கருத்தா சிவபெருமான் என்றது சைவவினாவிடை. 'ஆதிபகவன் முதற்றே உலகு'.

*"உரைத்தஇத் தொழில்கள் மூன்றும் மூவருக் குலகம் ஓத
வரைத்தொரு வனுக்கே யாக்கி வைத்ததிங் கென்னை யென்னின்
விரைக்கம லத்தோன் மாலும் ஏவலான் மேவி னோர்கள்
புரைத்ததி கார சத்தி புண்ணியம் நண்ண லாலே."

§"இறுதியாங் காலந் தன்னில் ஒருவனே இருவ ருந்தம்
உறுதியின் நின்று ரென்னின் இறுதிதா னுண்டா காதாம்
அறுதியில் அரனே யெல்லாம் அழித்தலால் அவனு லின்னும்
பெறுதுநாம் ஆக்கம் நோக்கம் பேரதி கரணத் தாலே."

என்ற சித்தியார்ச் செய்யுள்கள் ஈண்டுச் சிந்திக்கத்தக்கவை. தேற்றும் தன்வினையுமாம். (8)

அந்தநா ளொருவ னாகி யாருயிர்த் தொகையைத் தொன்னாள்
வந்தவா றொடுங்கச் செய்து மன்னியே மீட்டு மன்னை
தந்தையா யுயிர்கட் கேற்ற தனுமுத லளிக்கு முக்க
ணெந்தைதன் செய்கை முற்று மினையதென் றிசைக்கற் பாற்றோ.

அந்த நாள் ஒருவன் ஆகி—அந்தச் சங்கார காலத்தில் தாம் ஒருவரே யாய், ஆர் உயிர்த் தொகையை—அரிய உயிர்க்கூட்டத்தை, தொன்னாள் வந்தவாறு—சிருட்டி யாரம்ப காலத்திலே தோன்றியவாறு, ஒடுங்கச் செய்து—ஒடுங்கும்படி செய்து, மன்னி—அந்நிலைக்கேற்றவாறு நிலைபெற்று, மீட்டும்—பின்னரும், அன்னை தந்தையாய்—அன்னையும் பிதாவுமாய், உயிர் கட்கு ஏற்ற தனுமுதல் அளிக்கும்—உயிர்களுக்கு அவற்றின் வினைக்கு ஏற்ற உடல் முதலியவைகளை அளித்தருளுவர்; முக்கண் எந்தை தன் செய்கை முற்றும்—முக்கண்ணராகிய எம்பெருமானுடைய செயல் அனைத்தையும், இனையதென்று—தனித்தனி இத்தகையது இத்தகையது என்று, இசைக்கற் பாற்றோ—இயம்புதல் கூடுமோ.

*, § சிவஞானசித்தியார் சுபக்கம் — பாடல்கள்: 34, 35.

வந்தவாறு ஒடுங்குதல் எங்கிருந்து தோன்றியதோ அங்குச் சென்று ஒடுங்குதல். மன்னுதல் உயிர்கள் இளைப்பாறு நிலையையும், மீட்டுமென்பது புனருற்பவத்தையுங் குறிப்பன. அளிக்கும் என்பதைப் பெயரெச்சம் எனக் கொள்ளினும் அமையும்.

எந்தைதன் செய்கையாவது, ஒடுக்கம் உற்பவம் என்றிவைகளை மீட்டும் மீட்டும் நிகழ்த்தாது நிகழ்த்துவதாம். 'ஒடுங்கி மலத்துளதாம்' என்பது சிவஞானபோதம். (9)

செங்கண்மா றன்னை யென்னைத் திண்டிறன் மொய்ம்பி னல்கி
யங்கண்மா ஞாலங் காப்பு மளிப்பது முதவி யாமு
முங்கள்பா லிருத்து மென்றெம் முயிருணின் றியற்று நின்று
னெங்களான் முடியுஞ் செய்கை யாவது மில்லை கண்டாய்.

செங்கண்மால் தன்னை—சிவந்த கண்களையுடைய திருமாலையும், என்னை—பிரமனாகிய என்னையும், திண் திறல் மொய்ம்பின் நல்கி—திண்ணிய திறல் அமைந்த தமது புயங்களிலிருந்து சிருட்டி செய்து, அங்கண் மா ஞாலம் காப்பும் அளிப்பதும் உதவி—அழகிய இடமகன்ற பெரிய உலகத்தைக் காத்தலும் படைத்தலுமாகிய தொழில்களை எங்களுக்கு அருளி, யாமும் உங்கள்பால் இருத்தும்—யாமும் உங்களை விலகாமல் உங்கள்பால் இருப்போம், என்று—என்று கூறியருளி, எம் உயிருள் நின்று—எங்கள் உயிர்களுள்ளே உயிர்க்குயிராய் நின்று, இயற்றுநின்றுன்—எமது தொழில்களாகிய படைத்தல் காத்தல்களையும் அப்பெருமானே இயற்றி அருளுகின்றார்; எங்களால் முடியும் செய்கை யாவதும் இல்லை—அப்பெருமானை விலகி எங்களால் முடியுஞ் செயல் யாதொன்று மில்லை.

கண்டாய் அசை.

அவனன்றி அணுவும் அசையாது. படைத்தல் காத்தலாகிய எங்கள் செயலும் அப்பரம்பொருளின் செயலே; நாம் வெறுங் கருவிகள் என்றவாறு. (10)

உயிருணின் றியற்ற லன்றி யுற்றநஞ் சிந்தை யுள்ளு
மியன்முறை வழாது காப்போ னிருவிழி யகத்து மானன்
மயலுறு பொழுது மெம்பால் வந்தருள் செய்வன் றனோர்
செயல்புரி கின்றன் போல வெம்மொடு செறிவ னன்றே.

இயல் முறை—தம் இயல்பாகிய முறையானே, வழாது காப்போன்—தவறுதலின்றி எவ்வுயிர்களையுங் காத்தருள்பவராகிய முதல்வர், நம் உயிருள் நின்று இயற்றல் அன்றி—பிரம விஷ்ணுக்களாகிய நமது உயிருக்குள்ளே உயிர்க்குயிராய்க் கலந்து நின்று நமது தொழில்களைச் செய்து வைத்தலன்றி, உற்ற—கருவியாய்ப் பொருந்திய, நம் சிந்தையுள்ளும் இருவிழி அகத்தும் ஆனன்—நமது மனத்துள்ளும் இரண்டாகிய கண்ணுக்

குள்ளும் கலந்து நின்று சிந்தித்தல் காண்டல் ஆகிய தொழில்களைச் செய்வதற்கும் இன்றியமையாதவராயினர்; மயல் உறு பொழுதும்—முக்குண வயத்தான் நாம் மயக்கமுறுங் காலத்தும், எம்பால் வந்து அருள் செய்வன்—எம்மிடத்து வெளிப்பட்டு அருள் புரிவார்; தான் ஓர் செயல் புரிகின்றான் போல—(இவ்வாறு முத்தொழிலுக்கும் முழுமுதற் கர்த்தாவா யிருந்து கொண்டே) தாம் ஒரு செயலாகிய அழித்தலை மாத்திரஞ் செய்தருளுபவர் போல, எம்மொடு செறிவன்—பிரம விஷ்ணு உருத்திரர் என எமது வரிசையிலும் வைத்தெண்ணப்படுவர்.

உருத்திரரை அதிட்டித்துச் செய்யுந் தொழில்பற்றி எம்மொடு மெண்ணப்படுவ ராயினும், அன்னர் அல்லர் என்பதாம். 'தான் ஓர் செயல் புரிகின்றான் போல' என்பதனால் ஓர் தொழிலுக்கு மாத்திரம் உரியர் அல்லர் என்றவாறும்.

இருவிழி யகத்து மாணுன் என்றதனானே, ஏனைப் பொறியகத்து மாணுன் என்றுங் கொள்க. 'மயலுறு பொழுது மெம்பால் வந்தருள் செய்வன்' என்பதற்கு எடுத்துக்காட்டு அடிமுடி தேடு படலம். (11)

எள்ளுறு மெண்ணெ யென்ன வெறிமணி யரவ மென்னக்
கள்ளுறு போது கான்ற கடியெனச் சலாகை தன்னிற்
றள்ளுற வரிய சோதி தானென வுலக மெங்கு
முள்ளொடு புறமு மாகி யொருமையாற் பரவு மன்றே.

எள்உறும் எண்ணெய் என்ன—எள்ளிற் பொருந்திய நெய்யைப் போலவும், எறி மணி அரவம் என்ன—அடிக்கப்படுகின்ற மணியில் எழும் ஓசை போலவும், கள்ளுறு போது கான்ற கடி என—தேன் பொருந்திய மலரில் அது கான்ற மணம் போலவும், சலாகை தன்னில்—இரத்தினத்தில், தள்ளுற அரிய சோதி தான் என—நீங்கலாகாத சோதி போலவும், உலகம் எங்கும்—உலகம் முழுவதிலும், உள்ளொடு புறமும் ஆகி—உள்ளும் புறமுமாய், ஒருமையால் பரவும்—பிரிவில்லாத ஒருமைப்பாட்டால் வியாபித்து நின்றருளுவர்.

இயன் முறை வழாது காப்போன் பரவும் என்க. எண்ணெய் நெய் என்னும் பொருட்டு. எண்ணெயாதி உபமானங்கள் தம் பற்றுக்கோட்டின் உள்ளும் புறமும் ஒருமையாற் பரவுதல் காண்க. (12)

வேதமே முதலா வுள்ள வியன்கலை யனைத்துந் தொன்னா
ளோதினு னவனே யெங்கட் குரைத்திட வுணர்ந்தா மன்றே
யீதுநீ யவற்றிற் காண்டி யாருமொன் றுகக் கொண்டாய்
பேதையோ பெரிது மென்னப் பிதாமக னினைய சொற்றான்.

வேதமே முதலா உள்ள வியன் கலை அனைத்தும்—வேதம் முதலிய பெரிய கலைக ளனைத்தையும், தொன்னாள் ஓதினன் அவனே—சிருட்டி

ஆரம்ப காலத்தில் ஓதியருளியவர் அப் பரம்பொருளே யாவர்; எங்கட்கு உரைத்திட உணர்ந்தாம்—அப் பரம்பொருளே அவ் வேதங்களை எங்களுக்கு உபதேசிக்க நாங்கள் உணர்ந்தோம்; ஈது நீ அவற்றில் காண்டி—இந்த உண்மையை நீ அவ்வேதங்களிற் காண்பாயாக; யாரும் ஒன்றுகக் கொண்டாய்—நீயோ பரம்பொருளையும் அகப்படுத்தி யாவரையும் ஒன்றுக மதித்தாய்; ஓ பெரிதும் பேதை—தக்கனே நீ பெரிதும் பேதையாயினுய்; என்ன பிதாமகன் இனைய சொற்றுன்—என்று பிரமதேவர் இவ்வாறு கூறினர்.

ஓ இகழ்ச்சிக் குறிப்பு. 'வரிசை யறிதலோ அரிதே' யென்க. (13)

அவனிது புகறலோடு மருண்மக னிசைப்பான் மேலாஞ்
சிவனருள் வேதம் பூதத் திறத்தையு முயிர்க ளோடு
மெவரையும் பிரம மென்றே யிசைப்பதென் னெனது நெஞ்சங்
கவலுறு கின்ற தெந்தை கழறுதி கடிதி னென்றுன்.

அவன் இது புகல்தலோடும்—பிரமதேவர் இவ்வாறு கூறியவுடனே, அருள் மகன் இசைப்பான்—பிரமதேவர் பெற்ற புதல்வனுகிய தக்கன் கூறுவான், மேலாம் சிவன் அருள் வேதம்—முழுமுதற் கடவுளாகிய சிவ பெருமான் அருளிய வேதம், உயிர்களோடும் பூதத் திறத்தையும்—உயிர்களையும் பஞ்ச பூதங்களையும், எவரையும்—யாவரையும், பிரமம் என்றே இசைப்பதென்—பிரமம் என்றே ஆங்காங்கு எடுத்துச் சொல்லுவதென்னை; எனது நெஞ்சம் கவல் உறுகின்றது—எனது மனம் பிரம நிச்சயம் பெருது கவற்சி உறுகின்றது; எந்தை கடிது கழறுதி என்றுன்—என் பிதாவே விரைவாக எனது ஐயத்தைத் தெளிவிப்பாயாக என்றுன்.

சடம், சித்து, இரண்டன் கூட்டரவு ஆகிய முத்திறம் பற்றி, பூதத் திறத்தையும் உயிர்களோடு மெவரையு மென்றுர். உயிர்கள் என்றது அஃறிணையுயிர்களையும் எவரையு மென்றது உயர்திணை உயிர்களையும் எனக் கோடலுமாம். அன்னம் பிரமம், பிராணன் பிரமம், ஆன்மாப் பிரமம் என்றிங்ஙனம் வேதம் இசைப்பது காண்க. 'அவனன்றி அணுவும் அசையாது' 'சராசரங்க ளானுன் சிவன்' என்றிங்ஙனம், பரம்பொருளின் கலப்பு விசேடம் உணர்த்து முகமாக எவரையும் எவற்றையும் பிரமம் என்று வேதம் இசைக்கும் என்க. 'அன்றி ஒன்றில்லை' என்றவாறு. அருண்மகன் மருண் மகனுமாம். (14)

என்னலுங் கமலத் தண்ண லியாவருந் தெரித றேற்று
வுன்னரும் பெற்றி யீதென் றுணர்தரக் கேட்டி யன்னுன்
சொன்னதோர் மறைக டம்மிற் றுணிபுகே ளிறுதி யில்லா
முன்னவற் காத லுண்மை யொழிந்தன முகம னுமால்.

என்னலும்—என்று தக்கன் வினவ, கமலத்து அண்ணல்—தாமரை ஆசனரான பிரமதேவர் கூறுவார், யாவரும் தெரிதல் தேற்று—எவரானும்

உணர்தற்கு முடியாத, உன்னரும் பெற்றி—நினைத்தற்கரிய வேதக் கருத்தி னியல்பை, ஈது என்று உணர்தரக் கேட்டி—இஃது என்று நீ உணரும்படி கூறுவேன் கேட்பாயாக ; அன்னான் சொன்னது ஓர் மறைகள் தம்மில் துணிபு கேள்—அச் சிவபெருமானாற் சொல்லப்பட்டனவும் ஓர்ந்துணரற் பாலனவுமான வேதங்களில் முடிந்த முடிபாகிய வேதக்கருத்தை உற்றுக் கேள் ; இறுதி இல்லா முன்னவற்கு—இறுதியில்லாத முதல்வராகிய சிவபெருமானுக்கு, ஆதல் உண்மை—சிவமே பரப்பிரமம் என்னுங் கூற்று இயைபுடைத்தாதல் சத்தியம் ; ஒழிந்தன முகமன் ஆம்—எவரையும் எவற் றையும் பிரமம் என்று கூறுவன அனைத்தும் உபசாரமாம் என்க.

மறைகள் பலவாயினும் வேதம் என்ற வார்த்தையாற் குறிப்பிடப் படுதலின் சொன்னது என்றார்.

ஒழிந்தன சிவபரம்பொருளுக்குக் கூறும் ஏற்றங்கள் தவிர்ந்த ஏற்றங்கள். உண்மை விதிவாதம். முகமன் துதிவாதம். (15)

ஆதலா லீச னல்லா வனைவர்க்கு முயிர்க்கு மைந்தாம்
பூதமா னவைக்கு மேற்றம் புகலுதன் முகம னாகு
மோதலா மேல தாக வொருபொருள் புகழ வேண்டின்
வேதபா ரகரை யன்றோ யானென விளம்பு கின்றார்.

ஆதலால்—உண்மையும் உபசாரமுமாகிய வேதவழக்கு இருந்தவாற்றால், ஈசன் அல்லா அனைவர்க்கும்—சிவபெருமானல்லாத யாவருக்கும், உயிர்க் கும்—ஆன்மாக்களுக்கும், பூதமானவைக்கும்—பஞ்ச பூதங்களுக்கும், ஏற்றம் புகலுதல் முகமன் ஆகும்—உயர்வு கூறுதல் உபசாரமாம் ; ஒரு பொருள் புகழ வேண்டின்—ஒரு பொருளைப் புகழவேண்டுமானால், மேலது ஆக ஓதலாம்—அதன் நிலையினும் ஏற்றம் உடையதாக ஓதுதல் நூல் வழக்காம் ; வேத பாரகரை—வேத முணர்ந்த பிராமணரை, யான் என அன்றோ—பிர மாக்கள் என்று என் பெயராலன்றோ, விளம்புகின்றார்—உபசரித்து வழங்கு கின்றார்கள்.

அன்று ஓ அசை நிலைகள். இவ்வசை நிலைகளை உரைக்கட் கூட்டி உரைப்பது இனிதாம். ‘புகழ வேண்டின்’ என்பதால் எடுத்துக்கொண்ட பொருள் புகழுதற்குரியதாதல் வேண்டுமென்க. மேலதாக ஓதுதலுக்கு எடுத்துக்காட்டு வேதபாரகரை விளம்புதல் என்க.

‘அனைவர்க்கும்’ என்பதில் உயிர் அடங்குமாயினும் சிறப்புப்பற்றி எடுத்துக் கூறப்பட்டது. பஞ்சபூதம் சூரியன் சந்திரன் ஆன்மாவாகிய அட்ட மூர்த்தங்களுள் ஆன்மாச் சிறந்ததென்க. ஆன்மாத் தனக்கென வண்ணமின்றிச் சார்பின் வண்ணமாவது. சிவ பரம்பொருளாகிய பிரமத் துக்கு மூர்த்தமாகும்போது, தானும் பிரம வண்ணமாயிருப்பது அதன் தனிச்சிறப்பாம். ஆன்மாத் தனக்கென வண்ணமின்றிப் பிரமச் சார்பிற் பிரம வண்ணமாயிருப்பதுபற்றி, உபநிடதங்கள் ஆன்மாவைப் பிரமமென்று மிகுத்தெடுத்துரைக்கும். அஃது உபசாரம். இஃதுணராதே ஆன்மாவே பிரமம் என்றல் அடாதாம். (16)

யாதொரு பொருளை யாவ ரிறைஞ்சினு மதுபோய் முக்க
ணாதியை யடையு மம்மா வங்கது போலத் தொல்லை
வேதம துரைக்க நின்ற வியன்புக ழனைத்து மேலா
நாதனை யணுகு மெல்லா நதிகளுங் கடல்சென் றென்ன.

யாதொரு பொருளை யாவர் இறைஞ்சினும்—யாதொரு பொருளாயிருந் தாலும் அப்பொருளை யாவர் வணங்கினாலும், அது முக்கண் ஆதியைப் போய் அடையும்—அவ்வணக்கம் மூன்று கண்களையுடைய முதல்வராகிய சிவபெருமானைச் சென்றடையும், அங்கு அதுபோல—அங்கு அது அடைவது போல, தொல்லை வேதம் உரைக்க நின்ற வியன்புகழ் அனைத்தும்—பழைமை யான வேதங்கள் எடுத்துரைக்கத்தக்கவாறு விளங்கி நின்ற பெரிய புகழ் அனைத்தும், எல்லா நதிகளும் கடல் சென்றென்ன—எல்லா நதிகளுங் கடலை அடைந்தாலொப்ப, மேலாம் நாதனை அணுகும்—முதல்வராகிய சிவபெரு மானை அடையும்.

அது பகுதிப்பொருள் விகுதி. 'வியன்புகழ்' மற்றைத் தேவர்கள் முதலாயினாருக்கு உரைக்கும் புகழ்கள்.

புகழனைத்தும், போல என்ன அணுகும் என்க. புகழனைத்தும் நாதனை அணுகுதற்கு இரண்டு உபமானங்கள் கூறப்பட்டன. உடம்பொடு புணர்த் தலால் முதல் உபமானத்தையும் உபமேயமாகக் கொண்டு, அதற்கும் நதிகள் கடற்கட் சேறலை உபமானமாகக் கொள்க. நதிகள் நெறி வேறு பாட்டால் கடலைச் சேர்தல் பல வேறுபாடாம். மெய்ஞ்ஞானிகள் யாதொரு பொருளுக்கூடாகவும் இறைவனை வணங்கும் வணக்கம் முக்கண் ஆதியை அடைதல் வளைவற்ற நேர் நெறியாம். மற்றையோர் யாதொரு பொருளை வணங்கும் வணக்கம், அவர் அப்பொருளை அறிந்த அறிவு நிலைக்கேற்றவாறு யமையுமென்பது உய்த்துணரற்பாலதாம். இவ்வாறே வேதம் உரைக்கும் வியன்புகழ் அனைத்தும் நாதனை அணுகக் காண்டலும், புகழப்படும் பொருளை நோக்கும் நிலைக்கேற்ப அமையுமென்க. இங்ஙனமாதல்,

''நம்மையும் பரமென் றுன்னி நாதனிற் சிறப்புச் செய்யும்
வெம்மைகொ ணெஞ்சர் தீரா விழுமவெந் நிரயம் வீழ்வர்
தம்மையஃ தெடுத்தல் செய்யா சமமெனப் புகல்கிற் போர்க
ளெம்மையுந் துயர மென்னு மிருங்கடற் படுப்ப ரன்றே.''

''கானுறு புலித்தோ லாடைக் கண்ணுதற் கடவுட் கன்ப
ரானவ ரென்று மன்றுற் கடித்தொழில் புரிந்து வாழும்
வானவ ரென்று மெம்மை வழுத்தினர்க் கருள்வோ மல்லா
வேனையர் தம்மைத் தெவ்வென் றெண்ணியே யிருத்தும் யாமே.''

என்னும் பிரமதேவர் கூற்றாய்ப் பின்வருஞ் செய்யுள்களால் தெளியப்படும்.

அந்தரியாமியும் ஊட்டுவானும் அவனேயாகலின் 'ஆதியை அடையும்,' 'நாதனை அணுகும்' என்றார்.

யாதொரு பொருளே வணங்கும் வணக்கமும், வேதம் எடுத்துப் பேசத் தக்க யாதொரு பொருளின் புகழும் மூலமாகிய பரம்பொருளேயே சென் றடையுமென்க.

* புல்பூண்டாதிய உயிர்களே யெல்லாம் வணங்கும் வணக்கம், அவைகளே அன்றி அவற்றுளந்தரியாமியாய் இருக்குஞ் சிவத்தை அடைதலின் அது குற்றமன்றென்க. ஸ்ரீ உருத்திர சமக நமகத்தில் சகல உயிர்களேயும் பர மெனக் கொண்டு, அவற்றுக்கெல்லாம் நமஸ்காரம் சொல்லப்பட்டிருக்கிற தென்க. (17)

கேளினி மைந்த வேதக் கிளேயெலா மியம்பு கின்ற
சூளுரை சிவனே யெல்லாந் தோற்றுவித் தளித்து மாற்றி
மீளவுந் தருகின் ருனும் வியனுயிர்க் கருளே நல்கி
யாளுநா யகனு மாதி யந்தமி லோனு மென்னும்.

இனி—முழுமுதல்வன் இயல்பு இருந்தபடி இங்ஙனமாதலின் இனி, மைந்த—மகனே, வேதக் கிளே எல்லாம் இயம்புகின்ற சூள் உரை கேள்—வேத சாகைகள் அனைத்தும் எடுத்தறைகின்ற ஆணைமொழியைக் கேட்பா யாக; எல்லாந் தோற்றுவித்து அளித்து மாற்றி—அனைத்தையும் படைத்துக் காத்து ஒடுக்கி, மீளவும் தருகின்ருனும்—ஒடுக்கியவாறே மீண்டும் படைப் பவனும், வியன் உயிர்க்கு அருளே நல்கி ஆளும் நாயகனும்—பக்குவ ஆன்மாக் களுக்கு அநுக்கிரகஞ் செய்து ஆட்கொள்ளும் முதல்வனும், ஆதி அந்தம் இலோனும்—ஆதியும் அந்தமும் இல்லாதவனும், சிவனே என்னும்—அந்தச் சிவபெருமானே என்று அந்த வேத சாகைகள் மொழியும்.

ஆதியந்தம் இல்லானே ஆதி யந்தம் வல்லான் என்க.

'என்னும்' என்று ஈண்டும் பின்னும் வருவனவற்றிற்குச் சூளுரையை எழுவாயாகக் கோடலுமாம். (18)

அத்தனும் பகவன் ருனு மருவமு முருவு மாகுஞ்
சுத்தனு முணர்தற் கொண்ணுச் சோதியு மியாண்டு மேவுஞ்
சித்தனு மநாதி தானுந் தேவர்க டேவு மென்று
நித்தனு முயிர்க்கு ணீங்கா நிருத்தனு மவனே யென்னும்.

அத்தனும்—பரமபிதாவும், பகவனும்—ஆறுகுணங்களுடையானும், அரு வமும் உருவும் ஆகும் சுத்தனும்—அருவம் உருவம் அருவுருவம் ஆகின்ற சுத்தனும், உணர்தற் கொண்ணுச் சோதியும்—அறிதற்கரிய சோதியும், யாண்டும் மேவும் சித்தனும்—எங்கும் வியாபித்திருக்கின்ற சித்துப் பொரு ளும், அநாதி தானும்—அநாதியும், தேவர்கள் தேவும்—தேவதேவும், என்றும்

* இப்பகுதி வித்துவசிரோமணி பொன்னம்பலபிள்ளேயின் வழிவழி வந்த உரைக் குறிப்பிற் கண்டது. மேல் இக்குறியீட்டில் வருவனவற்றையும் இங்ஙனங் கொள்க.

நித்தனும்—என்றுமுள்ள நித்தியப் பொருளும், உயிர்க்குள் நீங்கா நிருத்த னும்—உயிருக்குள்ளே உயிர்க்குயிராய் நீங்காது நட்டஞ் செய்வோனும், அவனே என்னும்—அந்தச் சிவபெருமானே என்றும் அந்தச் சாகைகள் இயம்பும்.

பகம்—ஆறு. எண்குணத்தை ஆறாக அடக்குவதுண்டு. அருவும் உருவும் கூறியதனானே அருவுரு வருவிக்கப்பட்டது. அரு, அருவுரு, உரு தடத்தம். தடத்தத்தாற் சுவரூபம் பாதிக்கப்படாமையின் சுத்தன் என்றார். நிருத்தன் நள்ளிருளில் நட்டம் பயில்பவன். *(19)*

மூன்றெனு முலகந் தன்னின் முளைத்திடு பொருளை யெல்லா
மீன்றருள் புரியுந் தாதை யெனுந்திரயம் பகனும் யார்க்குஞ்
சான்றென நிற்கின்றோனுந் தாணுவும் பரனுந் தன்னைப்
போன்றவ ருயர்ந்தோ ரில்லாப் புங்கவன் றானு மென்னும்.

மூன்று எனும் உலகந் தன்னில்—மூன்றாகிய உலகத்துள், முளைத்திடு பொருளை எல்லாம் ஈன்று—தோன்றும் பொருள் அனைத்தையும் படைத்து, அருள்புரியும்—அவற்றுக்கு அநுக்கிரகஞ் செய்கின்ற, தாதை எனும் திரயம் பகனும்—மூன்று உலகத்துக்கும் பிதா என்னும் பொருளைத் தருகின்ற திரயம் பகன் என்னும் நாமத்தையுடையவனும், யார்க்கும் சான்றென நிற்கின் றோனும்—எல்லாருக்குஞ் சாட்சியாய் நிற்பவனும், தாணுவும்—அழிவற் றவனும், பரனும்—மேலானவனும், தன்னைப் போன்றவர் உயர்ந்தோர் இல்லாப் புங்கவன் தானும்—தனக்கு ஒப்பார் மிக்கார் இல்லாத சிரேட் டனும், என்னும்—அந்தச் சிவபெருமானே என்றுங் கூறும்.

அவனே என்னும் சாகைகள் என்க. மேலும் இவ்வாறு கொள்க. உலகங்கள் மேல் கீழ் மத்தி என மூன்றாய் அடங்கும்.

எல்லாம் ஈன்று அருள் புரிதலால் தாதையாயினன் என்க. திரயம் பகன் என்பதற்கு முக்கண்ணன் என்று பொருள் கூறலாமாயினும், மேலுரைத்த பொருளே ஈண்டைக்குப் பொருத்தமாதலை விசேடணத்தா னறிக. தாணு என்பதற்கு அசைவில்லாதவன், ஆதாரமானவன் எனினு மாம். *(20)*

அண்ணலு மேகன் றானு மளப்பருங் குணத்தி னானுங்
கண்ணனு மயனுந் தம்மாற் காணிய நில்லான் றானும்
பெண்ணொடா ணலிய தென்னும் பெற்றியி லோனும் யாரு
மெண்ணிய வெண்ணி யாங்கே யீபவன் றானு மென்னும்.

அண்ணலும்—பெருமையிற் சிறந்தோனும், ஏகன்றானும்—ஏக வஸ்துவும், அளப்பு அருங் குணத்தினனும்—அளத்தற்கரிய குணம் உடையவனும், கண்ணனும் அயனும் தம்மால் காணிய நில்லான் தானும்—திருமால் அயன்

ஆகிய அவர்களால் தேடிக் காணுதற்கு எட்டாதவனும், பெண்ணொடு ஆண் அலி என்னும் பெற்றி இலோனும்—பெண் ஆண் அலி என்னுந் தன்மை இல்லாதவனும், யாரும் எண்ணிய எண்ணியாங்கு ஈபவன் தானும்—எவரும் நினைத்தவைகளை நினைத்தவண்ணமே அளிப்பவனும், என்னும்—அச் சிவ பெருமானே என்றுங் கூறும். (21)

விதிமுத லுரைக்க நின்ற வியனுயிர்த் தொகைகட் கெல்லாம்
பதியென வருளுந் தொன்மைப் பசுபதி தானு மன்னோர்க்
கதிகனென் றெவருந் தேற வாங்கவர் துஞ்ச வெந்த
பொதிதரு பலியு மென்பும் புனைபவன் றானு மென்னும்.

விதி முதல் உரைக்க நின்ற வியன் உயிர்த் தொகைகட்கு எல்லாம்—பிரமன் முதலாக எடுத்துச் சொல்லும்படி நிலைபெற்ற பெரிய உயிர்க் கூட்டம் அனைத்துக்கும், பதி என அருளும் தொன்மைப் பசுபதி தானும்—பதியாய் அருள் புரிகின்ற பழைமையாகிய பசுபதியும், அன்னோர்க்கு அதிகன் என்று எவருந் தேற—அப்பிரமனாதியருக்கு மேலானவன் என்று யாவருந் தெளிந்துணருமாறு, ஆங்கவர் துஞ்ச—அப்பிரமனாதியர் இறக்க, வெந்த பொதிதரு பலியும்—வெந்துபோன அவருடைய உடலாலான சாம் பரும், என்பும்—அவருடைய எலும்பும், புனைந்தவன் தானும்—தரித்திருப் பவனும், என்னும்—அந்தச் சிவபெருமானே என்றுங் கூறும்.

பொதி—உடற்பொதி. (22)

ஊன்புகு மெவரை யுந்தன் னொண்குணத் தொடுக்கித் தானே
வான்புக லாகி நின்று மற்றவர் குணங்க ளூடு
தான்புக லில்லா தோனுந் தன்னிய லினைய தென்றே
யான்புக லரிய தேவு மீசனு மவனே யென்னும்.

ஊன் புகும் எவரையும்—ஊனுலாகிய உடம்புட் புகும் எவர்களையும், தன் ஒண்குணத் தொடுக்கி—தமது சிறந்த குணத்துக்குள்ளே ஒடுங்கச் செய்து, தானே வான் புகல் ஆகி நின்று—தானே யாவருக்கும் புகலிடமாகி நிலைபெற்று, அவர் குணங்கள் ஊடு தான் புகல் இல்லாதோனும்—பிறப் பெடுத்த அவர்களின் மாயா குணங்களுக்குள்ளே தான் கலத்தல் இல்லாத வனும், தன் இயல் இனையது என்று—தன்னுடைய தன்மை இத்தகையது என்று, யான் புகல் அரிய தேவும்—என்னால் உரைத்தற்கு ஏலாத தெய்வமும், ஈசனும்—தலைவனும், அவனே என்னும்—அந்தச் சிவபெருமானே என்றுங் கூறும்.

சிவபெருமான் முக்குண மற்ற நிர்க்குணர் ஆதலின், உயிர்க்குணங்க ளூடே கலந்துங் கலவாதிருப்பர் என்றவாறு.

* தம்மையடைந்த அதிதீவிர பக்குவர்களை யெல்லாந் தமதிறைமைக் குணவயத்தராக்கலன்றித் தாம் அப்பசுக் குணவயத்த ராதலில ரென்பார் இவ்வாறு கூறினர். ஆன்மாக்களைத் தங்குணத் தடக்கினுந் தம் முதன்மை அவைக்கின்றென்பதுங் காண்க. (23)

அன்றியு மொன்று கேண்மோ வம்புய னாதி யாகி
நின்றவர் தம்மை யெல்லா நீக்கியச் சிவனென் றுள்ள
வொன்றொரு முதல்வன் றானே யுய்த்திடு முத்தி வேண்டி
னென்றுமஃ தியம்பிற் றென்னின் யாவரே தேவ ராவார்.

அன்றியும்—மேற்கூறியவாற்றா னல்லாமலும், ஒன்று கேள்—முக்கியமான தொன்றைத் தக்கனே கேட்பாயாக, முத்தி வேண்டின்—ஒருவர் முத்தியை வேண்டினால், அம்புயன் ஆதி யாகி நின்றவர் தம்மை எல்லாம் நீக்கி—அம் முத்தியை நல்க வல்லார் பிரமன் முதலாகி நின்ற தேவர்கள் அல்லர் என்று அவர்களையெல்லாம் விலக்கி, சிவன் என்று உள்ள ஒன்றொரு முதல்வன் தானே உய்த்திடும் என்றும்—சிவன் என்று சொல்லப்பட்டுள்ள ஒருவன் என்னும் ஒருவனாகிய முதல்வனே முத்தியை வழங்க வல்லா னென்றும், அஃது இயம்பிற்று—அந்த வேதம் முழங்கிற்று; என்னில்—வேத முழக்கு இங்ஙனம் இருந்தவாற்றால், தேவர் ஆவார் யாவர்—முழுமுதற் கடவுளாவார் யாவர் நீயே கூறுவாயாக.

அஃது மேற் குறிப்பிட்ட வேதக் கிளையெலாம் என்க. (24)

பரசிவ னுணர்ச்சி யின்றிப் பல்லுயிர்த் தொகையு மென்றும்
விரவிய துயர்க்கீ றெய்தி வீடுபே றடைது மென்ற
லுருவமில் விசும்பிற் றோலை யுரித்துடுப் பதற்கொப் பென்றே
பெருமறை யியம்பிற் றென்னிற் பின்னுமோர் சான்று முண்டோ.

பரசிவன் உணர்ச்சி இன்றி—பரம்பொருளாகிய சிவபெருமானை உணரும் உணர்ச்சி இல்லாமல், பல் உயிர்த் தொகையும்—பலவாகிய உயிர்க் கூட்டமும், என்றும் விரவிய துயர்க்கு ஈறு எய்தி—தம்பால் தொன்றுதொட்டு விரவியதாகிய துன்பத்துக்கு இறுதி கண்டு, வீடு பேறு அடைதும் என்றல்—நாம் நமது முயற்சியினால் வீடுபேறு அடைவேம் என்று எண்ணுவதுண்டானால் அவ்வெண்ணம், உருவம் இல் விசும்பின் தோலை உரித்து—உருவம் இல்லாத ஆகாயத்தின் தோலை உரித்து, உடுப்பதற்கு—உடுத்தல் சாலும் என்று எண்ணும் எண்ணத்துக்கு, ஒப்பு என்று பெருமறை இயம்பிற்று—ஒப்பாகும் என்று பெருமை பொருந்திய வேதம் உரைத்தது, என்னின்—வேதத்தின் கருத்து இங்ஙனமாயபோது, பின்னும் ஓர் சான்றும் உண்டோ—அதற்கு மேலும் ஒரு சாட்சியம் உளதாமோ.

பல்லுயிர்த்தொகைக்குப் பரசிவ னுணர்ச்சியின்றி வீடுபேறு கைகூடா தென்பதற்கு வேதத்தை விஞ்சிய சாட்சியம் இல்லையாம் என்றவாறு. எனவே சிவனே பரம்பொருள் என்பதற்கு வேறு சாட்சி வேண்டா என் பதாம். என்றும் விரவிய துயர்—அநாதி தொட்டு விரவிய ஆணவத் துயர். என்றல், உடுப்பது ஆகுபெயர். (25)

இன்னமும் பலவுண் டன்னுற் கியம்பிய மறையின் வாய்மை
யன்னதை யெனக்கு முன்னி யறையொணு தறைவ னென்னிற்
பன்னெடுங் காலந் தேயும் பகரினு முலவா தென்பான்
முன்னமீ துணர்ந்தா யேனு மோகமுற் றுய்கொ லையா.

அன்னுற்கு—அந்தச் சிவபரம்பொருளுக்கு, இயம்பிய மறையின் வாய்மை—சிவபரம்பொருள் பற்றிக் கூறிய வேத உண்மைகள், இன்னமும் பல உண்டு—மேற்காட்டியவையன்றி இன்னமும் பல உண்டு; அன்னதை—அந்த வேத உண்மையை, எனக்கும் முன்னி அறையொணுது—வேதத்துக்குரிய என்னுலும் சிந்தித்து உரைத்தல் இயலாது; அறைவன் என்னில்—ஒருவாறு உரைக்கத் தொடங்குவேன் ஆனுல், பல்நெடுங் காலம் தேயும்—பலவாகிய நெடுங்காலங் கழியும்; பகரினும் உலவாது—நீண்டகாலம் சொல்லிக்கொண்டே யிருந்தாலும் பரம்பொருள் பற்றிய மெய்ம்மை முற்றுப் பெருது; முன்னம் என்பால் ஈது உணர்ந்தாயேனும்—முன்பு என்னிடம் இந்த இரகசியத்தை நீ உணர்ந்திருந்தா யாயினும், ஐயா—அப்பனே, மோகமுற்றுய் கொல்—இப்பொழுது நீ மயக்கங் கொண்டனை போலும்.

வாய்மை பால்பகா வஃறிணைப் பெயர். ஈது, பரம்பொருள் பற்றிய வேதவாய்மை அறைதற் கருமையும், பரம்பொருள் மெய்ம்மை எவ்வாற் ருனும் முற்றுப் பெருமையுமாகிய இயல்பைச் சுட்டி நின்றது. மகனை ஐயா என்று விளித்தது, மகனின் மோகம் பற்றிய இரக்கக் குறிப்பு. மோக மில்வழி இங்ஙனம் ஐயுற்று வினவுதல் செய்யாய் என்றவாறு. (26)

காரெழில் புரையு மேனிக் கண்ணனை யென்னைப் பின்னை
யாரையும் புகழும் வேத மரன்றனைத் துதித்த தேபோ
லோருரை விளம்பிற் றுண்டோ வுரைத்தது முகம னென்றே
பேருல கறிய முன்னும் பின்னரும் விலக்கிற் றன்றே.

கார் புரையும் எழில் மேனிக் கண்ணனை—மேகத்தை ஒத்த அழகிய திருமேனியையுடைய திருமாலையும், என்னை—பிரமனுகிய என்னையும், பின்னை யாரையும்—மற்றை இந்திரன் முதலிய தேவர்கள் யாவரையும், புகழும் வேதம்—புகழ்ந்துரைக்கின்ற வேதம், அரன் தனைத் துதித்தது போல்—சிவ பெருமானைத் துதிசெய்தது போல, ஓர் உரை விளம்பிற்று உண்டோ—எம்மனேரையுந் துதி செய்து ஒரு வார்த்தையாவது பேசியதில்லை; உரைத்தது முகமன்—எம்மனேரைப் புகழ்ந்துரைத்த துண்டானுல் அது

உபசாரமாம்; என்று பேருலகு அறிய—என்றிவ்வாறு பெரிய உலகம் அறியு மாறு, முன்னும் விலக்கிற்று—தொடக்கத்திலும் எம்மை விலக்கிவைத்தது; பின்னரும் விலக்கிற்று—இறுதியிலும் எம்மை விலக்கிவைத்தது.

யாம் சிவபரம்பொருளின் வரிசையில் வைத்து உரைத்தற்குரியோம் அல்லோம் என்றவாறு. உண்மை யுரைக்கும் உபசார உரைக்கும் பேதம் பெரிதாதலின், 'துதித்ததேபோல் ஒருரை விளம்பிற் றுண்டோ' என்றார். எதிர்மறைவாய்பாடு விளம்பாமையை வலிசெய்தவாறு. முகமனுக்குரியாரை வேதம் முன்னும் பின்னும் விலக்கியமை பெரியபுராணத்துத் திருமலைச் சிறப்புச் சூசனத்துச் சிவபரத்துவம் என்றெடுத்துக்கொண்டு சிறிது காட்டப் பட்டது. ஆண்டுக் காண்க.

* முன்னும் பின்னும் ஆதியிலும் அந்தத்திலும். (27)

நான்மறை தனிலோர் பாக நாரமார் கடவுட் சென்னி
மேன்மைய தியம்பு மெம்மை விண்ணவர் தம்மை யேனைப்
பான்மைகொள் பூதந் தன்னைப் பல்பொரு டனையும் பாதி
தான்மொழிந் திடுமா லீது தவறல வுணர்தி தக்கோய்.

நான்மறை தனில் ஓர் பாகம்—நான்கு வேதங்களில் ஒப்பில்லாத பாக மாகிய பாதி வேதம், நாரம் ஆர் சென்னிக் கடவுள் மேன்மையது இயம்பும்—கங்கையைத் தரித்த சென்னியையுடைய சிவபெருமானின் பரத்துவ நிலையை எடுத்துக் கூறும்; பாதிதான்—மிகுதியாகிய பாதி வேதந் தான், எம்மை—திருமாலைப் பற்றியும் என்னைப் பற்றியும், ஏனை விண்ணவர் தம்மை—ஏனைய தேவர்களைப் பற்றியும், பான்மை கொள் பூதந் தன்னை—தத்தம் இயல்பைப் பொருந்திய பிருதிவி முதலிய பூதங்களைப் பற்றியும், பல்பொருள் தனையும்—பூதகாரியங்களாகிய பல பொருள்களைப் பற்றியும், மொழிந்திடும்—கூறும்; ஈது தவறல—இங்ஙனமாதல் பாரபட்சமன்று; தக்கோய் உணர்தி—தக்கனே நீ சிவபரம் பொருளை அதிகரித்து நிற்கும் வேதத்தின் உண்மையை உணரக்கடவாய்.

ஓர் ஒப்பின்மை குறித்தது. பின் பாதி என வருதலின் பாகம் பாதியாம். உணரத்தக்கோனே என்றுமாம். (28)

நம்மையும் பரமென் றுன்னி நாதனிற் சிறப்புச் செய்யும்
வெம்மைகொ ணெஞ்சர் தீரா விழுமவெந் நிரயம் வீழ்வர்
தம்மையஃ தெடுத்தல் செய்யா சமமெனப் புகல்கிற் போர்க
ளெம்மையுந் துயர மென்னு மிருங்கடற் படுப்ப ரன்றே.

நம்மையும் பரம் என்று உன்னி—தேவர்களாகிய நம்மையும் பரம் பொருள் என்று கருதி, நாதனின் சிறப்புச் செய்யும்—நாதனாகிய பரம் பொருளுக்குச் செய்யுஞ் சிறப்புப்போல நமக்குஞ் சிறப்புச் செய்கின்ற, வெம்மை கொள் நெஞ்சர்—அறியாமையாகிய கொடுமையைக் கொண்ட

மனத்தினையுடையவர்கள், தீரா விழும வெம் நிரயம் வீழ்வர்—நீங்காத துன்பத்தைச் செய்கின்ற வெவ்விய நரகத்தில் விழுவார்கள்; தம்மை அஃது எடுத்தல் செய்யா—அவர்களை அந்நரகம் கரையேற்ருது; சமம் எனப் புகல்கிற்போர்கள்—பரம்பொருளோடு எம்மையும் வலிதிற் சமஞ் செய்து கூறுபவர்கள், எம்மையும்—தம்மையேயன்றி எம்மையும், துயரம் என்னும் இரும் கடற் படுப்பர்—துன்பம் என்கின்ற பெரிய கடலிலே தள்ளுவோர் ஆவர்.

செய்யாது இறுதி கெட்டு நின்றது. சமத்துவம் சகித்தற்கருமையின், 'துயர மென்னும் இருங்கடற் படுப்பர்' என்ருர். எம்மையும்—எப்பிறப் பிலும், தம்மைத் துயர்க்கடற் படுப்பர் என்றுமாம்.

*தம்மையன்றி நம்மையுந் துன்பக்கடலில் அமிழ்த்துவரென்றதென் னையோவென்ருல், நம்மிருவேமையும் அவர், பதி எனக்கொண்டு வழிபட்ட வழி நாமுந் திரிகுண வயத்தோமாதலின் நாமே பரமபதி என்று தாமத குண வயத்தோமாய்ச் சிவதூஷணஞ் செய்து நரகத்திற்கடிப்படையோ மாதலின் அப்பாதக சிரோமணிகள் தம்மையன்றி எம்மையுந் துயரமென் னும் இருங்கடற்படுப்பரென்ருர். இதனனே ஸ்மார்த்தரையும் வைணவ ரையுங் கண்டனஞ் செய்தனருமாமென்க. *(29)*

கானுறு புலித்தோ லாடைக் கண்ணுதற் கடவுட் கன்ப
ரானவ ரென்று மன்னுற் கடித்தொழில் புரிந்து வாழும்
வானவ ரென்று மெம்மை வழுத்தினர்க் கருள்வோ மல்லா
வேனயர் தம்மைத் தெவ்வென் றெண்ணியே யிருத்தும் யாமே.

கான் உறு புலித்தோல் ஆடைக் கண்ணுதற் கடவுட்கு—காட்டில் வாழும் புலியின் தோலை ஆடையாகவுடைய நெற்றிக்கண்ணரான சிவபெரு மானுக்கு, அன்பர் ஆனவர் என்றும்—அன்பராய் இருப்பவர் என்றும், அன்னுற்கு அடித்தொழில் புரிந்து வாழும் வானவர் என்றும்—அச் சிவ பெருமானுக்கு அடித்தொண்டு செய்து வாழுந் தேவர்கள் என்றுங் கருதி, எம்மை வழுத்தினர்க்கு—எம்மை வணங்குகின்றவர்களுக்கு, யாம் அருள் வோம்—நாம் அவர்கள் விரும்பியவைகளை அநுக்கிரகஞ் செய்வோம்; அல்லா—அவ்வாறல்லாத, ஏனையர் தம்மை—சமத்துவ புத்திமான்களாகிய வரிசை தெரியாத மற்றையோரை, தெவ் என்றே எண்ணி இருத்தும்—நம் பகைவர் என்றே கருதுவோம்.

நமது நாதனை இகழ்ந்து நம்மொடு சமஞ் செய்வோர் நம் பகைவரே யாவர் என்பதாம். *(30)*

பதியரன் பாசந் தன்னிற் பட்டுழல் பசுநா மென்றே
விதியொடு மறைகள் கூறு மெய்ம்மையைத் தெளிய வேண்டி
னிதுவென வுரைப்பன் யாங்க ளிவ்வர சியற்ற வீச
னதிர்கழ லருச்சித் தேத்து மாலயம் பலவுங் காண்டி.

அரன் பதி—சிவபெருமானே முழுமுதற் கடவுளாகிய பதி; பாசம் தன்னிற் பட்டு உழல் நாம் பசு—மும்மலங்களாகிய பாசத்தாற் பிணிக்கப் பட்டு உழலுகின்ற நாம் பசு; என்று மறைகள் விதியொடு கூறும்—என் றிவ்வாறு வேதங்கள் உடன்பாட்டு வாய்பாட்டானே மொழியும்; மெய்ம் மையைத் தெளிய வேண்டின்—இந்த வேத உண்மையைத் தெளிவாயறிய விரும்பினுல், இது என உரைப்பன்—அதற்குரிய பிரமாணத்தை இது என்று சுட்டிக்காட்டிப் பின்வருமாறு கூறுவேன்; யாங்கள்—பிரம விஷ்ணுக்களாகிய நாங்கள், இவ்வரசு இயற்ற—படைத்தல் காத்தலாகிய இந்த உத்தி யோகத்தை இடையூறின்றி நடத்தும்பொருட்டு, ஈசன் அதிர் கழல் அருச் சித்து ஏத்தும்—சிவபெருமானுடைய ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த திருவடிகளை அருச்சித்துத் துதிக்கின்ற, ஆலயம் பலவும் காண்டி—சிவாலயங்கள் பல வற்றையுங் காண்பாயாக.

யாங்கள் என்பதில் இந்திரனுதியரும் அடங்குவர். நாம் பசு என்பதற்குப் பிரத்தியட்சப் பிரமாணம் நாம் பூசிக்கும் சிவாலயங்களாகும் என்றவாறு.

பிரமா பூசித்த சிவஸ்தலங்களில் ஒன்று சீர்காழியாகிய பிரமபுரம். திருமால் பூசித்த சிவஸ்தலங்களில் ஒன்று திருவீழிமிழலே. (31)

அவனருள் பெருது முத்தி யடைந்தன ரில்லே யல்லா
லவனரு ளின்றி வாழு மமரரும் யாரு மில்லே
யவனரு ளெய்தி னெய்தா வரும்பொரு ளில்லே யாணே
யவனல திறைவ னில்லே யவனேநீ யடைதி யென்முன்.

அவன் அருள் பெருது முத்தி அடைந்தனர் இல்லே—அச் சிவபெருமா னது அருளேப் பெருமல் மோட்சமடைந்தவர்கள் இல்லே; அல்லால்—அவ்வா றல்லாமல், அவன் அருள் இன்றி—அச் சிவபெருமானது அருளின்றி, வாழும் யாரும் அமரரும் இல்லே—வாழுகின்ற யார் ஒருவர் தேவரும் இல்லே; அவன் அருள் எய்தின்—அச் சிவபெருமானது அருள் கிடைக்கப் பெற்றுல், எய்தா அரும் பொருள் இல்லே—கிடையாத அரிய பொருளென்று ஒன்று இல்லே; ஆணே—இந்த வேத உண்மைகளே ஆஞ்ஞையிட்டுரைக்கின் றேன்; அவன் அலது இறைவன் இல்லே—இவ்வாற்ருல் அச் சிவபெருமானே அல்லாமல் முதல்வர் என்று மற்றெருவரில்லே; அவனே நீ அடைதி—ஆகையினுலே அச்சிவபெருமானேச் சரண் என்று நீ அடைவாயாக, என்முன்—என்று பிரமதேவர் தக்கனுக்கு உபதேசஞ் செய்தார்.

எல்லா முதன்மையும் எல்லா அநுக்கிரகமும் உள்ள முழுமுதற் பரம் பொருள் சிவபெருமானே என்பதாம்.

இப்படலத்திலே வேதக் கருத்துக்களே எடுத்துப் பேசுஞ் செய்யுள் ஒவ் வொன்றும் ஒவ்வோருபநிடத சாரமாமென்பர் பெரியோர். (32)

உபதேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 32

---

# தக்கன் றவஞ்செய் படலம்

தந்தை யிவ்வகை யுரைத்தலுங் கேட்டுணர் தக்கன்
முந்து வீடுசேர் நெறியினை முன்னலன் முக்க
ணெந்தை யாலயன் முதலவர் தம்மினும் யானோற்
றந்த மில்வளம் பெறுவனென் றுன்னின னகத்துள்.

தந்தை இவ்வகை உரைத்தலும்—பிதாவான பிரமதேவர் இவ்வாறு கூற, கேட்டு உணர் தக்கன்—அவைகளைக் கேட்டு உணர்ந்த தக்கன், முந்து வீடு சேர் நெறியினை முன்னலன்—முதன்மையான வீட்டினை அடையும் நெறியை நினைத்தானல்லன்; அயன் முதலவர் தம்மினும் யான் நோற்று—பிரமதேவர் முதலியவர்களிலும் பார்க்க யான் கூடிய தவஞ்செய்து, முக்கண் எந்தையால்—மூன்று கண்களையுடைய சிவபெருமானிடம், அந்தமில் வளம் பெறுவன் என்று அகத்துள் உன்னினன்—முடிவில்லாத வளங்களைப் பெறுவேன் என்று மனத்துள் நினைந்தான். (1)

ஏத வல்வினை யுழந்திடு மூழினு லிதனைக்
காத லோடுனித் தந்தையை வணங்கிநீ கழறு
மாதி தன்னையான் பரமென வறிந்தன னவன்பால்
மாத வத்தினுற் பெற்றிட வேண்டினன் வளனே.

வல்வினை ஏதம் உழந்திடும் ஊழினுல்—வல்வினையால் வருந் துன்பத்தை உழத்தற்குரிய ஊழினுல், இதனை காதலோடு உனி—வளம் பெறுதலாகிய இதனை மிக்க விருப்பத்தோடு நினைத்து, தந்தையை வணங்கி—பிதாவை வணங்கி, நீ கழறும் ஆதி தன்னை பரம் என யான் அறிந்தனன்—நீ உரைக்கின்ற ஆதியாகிய சிவபெருமானைப் பரம்பொருள் என்று யான் அறிந்து கொண்டேன்; அவன்பால் வளன் மாதவத்தினுல் பெற்றிட வேண்டினன்—அப் பரம்பொருளிடத்தில் வளங்களை மகா தவஞ் செய்து பெறுதற்கு விரும்பினேன். (2)

கணிப்பின் மாதவம் புரிதர வோரிடங் கடிதிற்
பணித்து நல்குதி விடையென நான்முகப் பகவ
னிணைப்பி லாததன் மனத்திடைத் தொல்லைநா ளெழுந்த
மணிப்பெ ருந்தடத் தேகென விடுத்தனன் மன்னோ.

கணிப்பு இல் மாதவம் புரிதர—அளவற்ற பெரிய தவத்தைச் செய் தற்கு, ஓர் இடம் கடிதில் பணித்து—உரியதோ ரிடத்தை விரைவிற் கட்டளை செய்து, விடை நல்குதி என—விடையளிப்பாயாக என்று தக்கன் கேட்ப, நான்முகப் பகவன்—நான்கு முகங்களையுடைய பிரமதேவர், தொல்லைநாள் இணைப்பு இலாத தன் மனத்திடை எழுந்த—முன்னொரு காலத்திலே ஒப் பில்லாத தமது மனத்தின்கண் உண்டான, மணிப் பெருந் தடத்து ஏக என விடுத்தான்—அழகிய பெரிய மானச வாவிக்குச் செல்லுக என்று விடைகொடுத் தனுப்பினர். (3)

ஈச னல்லரு ளன்னதோர் மானத மென்னும்
வாச நீர்த்தடம் போகியோர் சாரிடை வைகி
வீசு கான்மழை யாதபம் பனிபட மெலியாப்
பாச நீக்குந ராமென வருந்தவம் பயின்ருன்.

ஈசன் நல் அருள் அன்னது ஓர் மானதம் என்னும் வாச நீர்த்தடம் போகி—சிவபெருமானுடைய நல்ல அருளை ஒத்ததும் ஒப்பற்றதுமான மானசம் என்னும் பெயரினையுடைய வாசனை பொருந்திய நீர் நிறைந்த வாவியை அடைந்து, ஓர் சாரிடை வைகி—அதன் ஒரு புறத்திலிருந்து, வீசு கால் மழை ஆதபம் பனிபட மெலியா—வீசுகின்ற காற்று மழை வெயில் பனி என்றிவைகள் தன்மீது படுதலால் மெலிந்து, பாசம் நீக்குநர் ஆம் என—பாசமாகிய மலத்தை ஒழிப்பவரை ஒப்ப, அருந்தவம் பயின்ருன்—அரிய தவத்தைச் செய்தான். (4)

காலை நேர்பெற வோட்டியே கனலினை மூட்டிப்
பால மார்பயன் வீட்டியே தன்னுறு படிவத்
தேலு மன்பினின் மஞ்சன மாட்டியே யிறைக்குச்
சீல மாமலர் சூட்டியுட் பூசனை செய்தான்.

காலை நேர்பெற ஓட்டி—பிராண வாயுவை நேராக ஓடச்செய்து, கனலினை மூட்டி—மூலாக்கினியை எழுப்பி, பாலம் ஆர் பயன் வீட்டி—நெற்றிக்கட் பொருந்திய அமிர்தத்தினை உருக்கி, தன் உறு படிவத்து ஏலும் அன் பினின் மஞ்சனம் ஆட்டி—தனது பரிசுத்தம் மிக்க வடிவத்திற் சுரக்கின்ற அன்பாகிய தீர்த்தத்தினல் அபிடேகஞ் செய்து, சீல மா மலர் சூட்டி—கொல்லாமை முதலிய சீலங்களாகிய பெருமை பொருந்திய மலர்களைச் சூட்டி, உட்பூசனை—மனத்தாற் செய்யும் உட்பூசனையை, இறைக்குச் செய் தான்—சிவபெருமானுக்குச் செய்தான்.

பாலம்—நெற்றி. பயன்—பயம்; அமிர்தம். வீட்டுதல் உருக்குதல் என் னும் பொருட்டு. சீலம் ஒழுக்கம்.

உட்பூசனைக்குரிய சீலமாமலர்: கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்னும் எட்டு மாம். (5)

சுத்த நீடிய தன்னுள மொருமையிற் றொடர
வித்தி றத்தினு லெம்பிராற் கருச்சனை யியற்றிச்
சித்த மேலவ னுமமும் விதிமுறை செப்பிப்
பத்து நூறியாண் டருந்தவம் புரிந்தனன் பழையோன்

பழையோன்—பழையோனுகிய தக்கன், சுத்தம் நீடிய தன் உளம் ஒருமையின் தொடர—தூய்மை மிக்க தன் உள்ளம் ஒரு நெறிப்படர, இத்திறத்தினுல் எம்பிராற்கு அருச்சனை இயற்றி—மேற்கூறிய பிரகாரம் எம்பெருமானுக்கு அருச்சனை செய்து, சித்தம் மேல் அவன் நாமமும் விதிமுறை செப்பி—உள்ளத்தின்கண் சிவபெருமானின் திருநாமத்தையும் விதிப்படி உச்சரித்து, பத்து நூறு யாண்டு அருந்தவம் புரிந்தனன்—ஆயிரம் வருடம் அரிய தவத்தைச் செய்தான். (6)

அன்ன மூர்திசே யன்னமா தவஞ்செயு மதனை
முன்னி நல்வள னுதவுவான் மூரிவெள் ளேற்றிற்
பொன்னின் மால்வரை வெள்ளியங் கிரிமிசைப் போந்தா
லென்ன வந்தன னுமையுட னெம்மையா ளிறைவன்.

அன்னம் ஊர்தி சேய் அன்ன மாதவம் செயும் அதனை—அன்ன வாகனரான பிரமதேவரின் புதல்வனுகிய தக்கன் அத்தன்மையான பெரிய தவத்தைச் செய்கின்ற அதனை, எம்மை ஆள் இறைவன் முன்னி—எம்மை ஆளுகின்ற சிவபெருமான் திருவுளங்கொண்டு, நல் வளன் உதவுவான்—அவனுக்கு நல்ல வளங்களை நல்கும்பொருட்டு, பொன்னின் மால்வரை—பொன்னுலாகிய பெரியமலை, அம் வெள்ளிக் கிரிமிசைப் போந்தா லென்ன—அழகிய வெள்ளிமலைமீது இவர்ந்து வந்தாற் போல, மூரி வெள் ஏற்றில்—வலிய வெள்ளிய இடபத்தின்மீது, உமையுடன் வந்தான்—உமாதேவியாருடன் எழுந்தருளினர். (7)

வந்த செய்கையைத் தெரிதலும் விரைந்தெழீஇ மற்றென்
சிந்தை யெண்ணமு முடிந்தன வாலெனச் செப்பி
யுந்து காதலுங் களிப்புமுள் புக்குநின் றுலவ
வெந்தை தன்னடி பரவுவல் யானென வெதிர்ந்தான்.

வந்த செய்கையைத் தெரிதலும் விரைந்து எழீஇ—சிவபெருமான் எழுந்தருளிய தன்மையை அறிந்தவுடன் விரைந்து எழுந்து, என் சிந்தை

எண்ணமும் முடிந்தன எனச் செப்பி—என் மன எண்ணங்கள் அனைத்தும் நிறைவெய்தின எனக் கூறி, உந்து காதலும்—பிடர்பிடித்துத் தள்ளுகின்ற ஆசையும், களிப்பும்—ஆசை சித்திப்பதா லுண்டாகுஞ் செருக்கும், உள்புக்கு நின்று உலவ—உள்ளத்தினுள்ளே புகுந்து நிலைத்து நின்று உலாவ, எந்தைதன் அடி யான் பரவுவல் என எதிர்ந்தான்—எம்பெருமானின் திருவடிகளை யான் துதிப்பேன் என்று எதிர்சென்றான்.

மற்று, ஆல் அசை. (8)

சென்று கண்ணுத லடிமுறை வணங்கியே சிறப்பித்
தொன்று போலிய வாயிரந் துதிமுறை யுரையா
நின்ற காலையி லுன்செயன் மகிழ்ந்தன நினக்கென்
னின்று வேண்டிய தியம்புதி யாற்கடி தெனலும்.

சென்று—எதிரே சென்று, கண்ணுதல் அடிமுறை வணங்கிச் சிறப்பித்து—நெற்றிக்கண்ணரான சிவபெருமானின் திருவடிகளை முறையாக வணங்கிப் புகழ்ந்து, ஒன்று போலிய துதி ஆயிரம் முறை உரையா—ஒன்றை ஒன்று ஒத்த பலவேறு தோத்திரங்களை ஆயிரம் முறை உரைத்து, நின்ற காலையில்—நின்ற சமயத்தில், உன் செயல் மகிழ்ந்தனம்—தக்கனே உன் செயலுக்கு மகிழ்ந்தோம், நினக்கு வேண்டியது என்—உனக்கு வேண்டியது என்னை, இன்று கடிது இயம்புதி எனலும்—இப்பொழுது விரைவாக உரைப்பாயாக என்று சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுதலும். (9)

ஆற்று தற்கரு நோன்மைய னாகியோ னமலன்
பேற்றின் வேண்டுவ கொள்கென விசைத்தலும் பிறவி
மாற்று முத்திய திரந்திலன் றொல்விதி வழியே
யேற்ற புந்தியுஞ் சேறலின் மயங்கியீ திசைப்பான்.

அமலன் பேற்றின் வேண்டுவ கொள்க என இசைத்தலும்—மலமில்லாதவராகிய சிவபெருமான் பேறுகளுக்குள்ளே நீ விரும்புவனவாகிய பேறுகளைப் பெற்றுக்கொள்வாயாக என்று கூறியருளுதலும், ஆற்றுதற்கு அரும் நோன்மையன் ஆகியோன்—செய்தற்கரிய தவத்தைச் செய்தவனான தக்கன், பிறவி மாற்றும் முத்தி இரந்திலன்—பிறவியைப் போக்குகின்ற முத்தியை இரந்து கேட்டானல்லன், தொல் விதி வழியே—பழைமையாகிய ஊழின் வழியே, ஏற்ற புந்தியும் சேறலின்—ஊழுக்கேற்ற அவன் புத்தியும் அவ் ஊழின்வழியே செல்லுதலால், மயங்கி ஈது இசைப்பான்—மயக்கங் கொண்டு இவ்வாறு கூறுவான்.

'விதியே மதியாய் விடும்' என்றவாறு, சிறுவிதி மதி, விதிவழி சென்றது. (10)

## வேறு

நீணி லப்பெரு வைப்பு நிகரிலா
வீணை வல்லவ ரேனையர் மேவிய
சேணு மாலய னூருந் திசையுமென்
ஞணை செல்ல வளித்தருள் செய்தியால்.

நீள் பெரு நில வைப்பும்—நீண்ட பெரிய பூமியினிடமும், நிகர் இலா வீணை வல்லவர் ஏனையர் மேவிய சேணும்—ஒப்பில்லா வீணையில் வல்லோரான காந்தருவரும் ஏனையோரும் வசிக்கின்ற மேலுலகமும், மால் அயன் ஊரும்—பிரம விஷ்ணுக்களின் உலகங்களும், திசையும்—திக்குக்களுமாகிய எவ்விடங்களிலும், என் ஆணை செல்ல—எனது ஆஞ்ஞை செல்லுமாறு, அளித்து அருள்செய்—வரந்தந்தருள்வீராக. (11)

உன்னை வந்து வழுத்து முயிரெலா
மென்னை வந்து வழுத்தவும் யானினி
நின்னை யன்றிநெஞ் சாலும் பிறர்தமைப்
பின்னை வந்தியாப் பெற்றியு மீதியால்.

உன்னை வந்து வழுத்தும் உயிர் எலாம்—தேவரீரை வந்து வணங்கும் உயிரனைத்தும், இனி என்னை வந்து வழுத்தவும்—இனி என்னையும் வந்து வணங்கவும், பின்னை—இன்று தொடக்கம், யான் நின்னை அன்றி பிறர் தமை நெஞ்சாலும் வந்தியாப் பெற்றியும்—யான் தேவரீரையன்றிப் பிறரை மனசாலும் வணங்காத தன்மையும், ஈதி—அளித்தருள்வீராக. (12)

ஆய தேவ ரவுணர்கள் யாரும்யா
னேய செய்கை யியற்றவு மெற்குநற்
சேயி னேர்களுஞ் சிற்றிடை மாதரு
மாய்வில் கொள்கையின் மல்கவு நல்குதி.

ஆய தேவர் அவுணர்கள் யாரும்—உயர்ந்தோராய தேவர்களும் அவுணர்களும் யாவரும், யான் ஏய செய்கை இயற்றவும்—யான் ஏவிய ஏவல்களைச் செய்யவும், எற்கு—எனக்கு, நல் சேயினேர்களும் சிற்றிடை மாதரும்—நல்ல ஆண்பிள்ளைகளும் சிறிய இடையையுடைய பெண்பிள்ளைகளும், மாய்வில் கொள்கையின்—தீர்க்காயுளோடு கூடியவர்களாய், மல்கவும் நல்குதி—பெருகுமாறும் அருள்புரிவீராக.

மாய்வு—இறப்பு. இறப்பில்லாத கொள்கையாவது நீண்ட ஆயுள் உளதாதல். (13)

ஆதி யாகி யனைத்தையு மீன்றநின்
பாதி யான பராபரை யான்பெறு
மாத ராக மறையவ ளுகிநீ
காத லாகக் கடிமணஞ் செய்தியால்.

ஆதி ஆகி—ஆதிசத்தியாய், அனைத்தையும் ஈன்ற—சராசர மனைத்தையும் ஈன்றருளிய, நின் பாதியான பராபரை—தேவரீரது பாதியுருவமான பராபரையாகிய தேவி, யான் பெறு மாதர் ஆக—யான் பெற்ற பெண்ணுகுக; நீ மறையவன் ஆகி—தேவரீர் மறையவராய், காதல் ஆக கடிமணம்செய்தி—காதல் உண்டாகத் திருக்கலியாணஞ் செய்தருளுவீராக.

கடவுள் மறையவராய்க் காதல் மணமாகிய களவுமணம் புரிதல் பின் வருமாறு காண்க. மறையவராதல் களவுக்குப் பொருத்தமாதலுங் காண்க. *(14)*

என்று தக்க னியம்பலு மிங்கிது
நன்று னக்கது நல்கின நன்னெறி
நின்றி யென்னி னிலைக்குமிச் சீரெனு
மன்று ளாடிய வானவன் போயினுன்.

என்று தக்கன் இயம்பலும்—என்றிவ்வாறு தக்கன் உரைத்தலும், இங்கு இது நன்று—இவ்விடத்து நீ வேண்டுகின்ற இவ்வரம் நல்லது; அது உனக்கு நல்கினம்—அவ்வரத்தை உனக்குத் தந்தோம்; நல் நெறி நின்றி என்னில்—தக்கனே நீ சன்மார்க்க நெறியில் நிற்பாயானுல், இச் சீர் நிலைக்கும் எனு—நீ பெற்ற இந்தச் சிறப்பு நிலைக்கும் என்று கூறியருளி, மன்றுள் ஆடிய வானவன் போயினுன்—திருவம்பலத்தில் திருநிருத்தஞ் செய்தருளிய மகாதேவரான சிவபெருமான் மறைந்தருளினர். *(15)*

ஈச னவ்வர மீந்தன னேகலு
நேச மோடவ னீர்மையைப் போற்றியே
தேசின் மிக்க சிறுவிதி யாரினும்
பேசொ ணுத பெருமகிழ் வெய்தினுன்.

ஈசன் அவ்வரம் ஈந்தனன் ஏகலும்—சிவபெருமான் தக்கன் கேட்ட அவ்வரங்களைக் கொடுத்துப் போதலும், தேசின் மிக்க சிறுவிதி—வரப்பிரசாதத்தாற் பிரகாசம் மிக்க தக்கன், அவன் நீர்மையை நேசமோடு போற்றி—சிவபெருமானின்இயல்புகளை ஆராமையோடு துதித்து, யாரினும் பேசொணுத பெரு மகிழ்வு எய்தினுன்—யாவரினும் பார்க்கப் பேசுதற்கரிய பெரு மகிழ்ச்சியை அடைந்தான். *(16)*

ஓகை மேயவ ஞேதிம வூர்திமே
லேகு மையனை யெண்ணலு மச்செய
லாக மீதுகண் டன்னவன் மங்கையோர்
பாக னீந்த பரிசுணர்ந் தானரோ.

ஓகை மேயவன்—உவகையடைந்த தக்கன், ஓதிம ஊர்திமேல் ஏகும் ஐயனை எண்ணலும்—அன்னவாகனத்திற் செல்லுந் தன்னுடைய தந்தையாகிய பிரமதேவரை நினைத்தலும், அன்னவன்—அப்பிரமதேவர், அச்செயல் ஆக மீது கண்டு—தக்கன் நினைத்ததைத் தம் உள்ளத்துள் உணர்ந்து, மங்கையோர்பாகன் ஈந்த பரிசு உணர்ந்தான்—உமாதேவி பாகராகிய சிவபெருமான் தக்கனுக்குக் கொடுத்த வரத்தி னியல்பை அறிந்தார். (17)

## வேறு

பெற்றிடு மதலை யெய்தும் பேற்றினை யவன்பான் மேல்வந்
துற்றிடு திறத்தை யெல்லா மொருங்குற வுணர்வா னுடித்
தெற்றென வுணர்ந்து தக்கன் சிவனடி யுன்னிப் பன்னு
ணற்றவம் புரிந்த வாறு நன்றென வுயிர்த்து நக்கான்.

பெற்றிடும் மதலை எய்தும் பேற்றினை—தாம் பெற்ற புதல்வனை தக்கன் வரத்தால் எய்தும் பேறுகளும், அவன்பால் வந்து உற்றிடு திறத்தை—அப்பேறு காரணமாக அவனிடத்தில் உண்டாகும் மாற்றங்களும், எல்லாம்—ஆகிய அனைத்தையும், ஒருங்கு உற உணர்வான் நாடி தெற்றென உணர்ந்து—ஒரு சேர உள்ளுணர்வால் ஆராய்ந்து விரைவாக அறிந்து, தக்கன் சிவன் அடி உன்னி—தக்கன் சிவபெருமானின் திருவடிகளை நினைந்து, பன்னுள் நல் தவம் புரிந்தவாறு—பலகாலம் நல்ல தவஞ் செய்தவாறு, நன்று என உயிர்த்து நக்கான்—நல்லது என்று பெருமூச்சு விட்டுச் சிரித்தார். (18)

முப்புர முடிய முன்னுண் முனிந்தவ னிலைமை யான
மெய்ப்பொருள் பகர்ந்தேன் மைந்தன் வீடுபெற் றுய்ய வன்னு
னிப்பரி சானு னந்தோ வென்னினிச் செய்கே னிம்பங்
கைப்பது போமோ நாளுங் கடலமிர் துதவி னாலும்.

மைந்தன் வீடு பெற்று உய்ய—என் புதல்வன் முத்தி பெற்று உய்யும் பொருட்டு, முன்னுள் முப்புரம் முடிய முனிந்தவன்—முன்னாளில் முப்புரங்கள் அழியும்படி கோபித்தருளிய சிவபெருமானின், மெய்ப்பொருள் நிலைமை ஆன பகர்ந்தேன்—மெய்ம்மையாகிய பரம்பொருள் இயல்புகள் ஆயினவற்றை உபதேசித்தேன்; அன்னான் இப்பரிசு ஆனான்—அவனே இவ்வண்ணம் ஆயினான்; அந்தோ இனி என் செய்கேன்—ஐயகோ இனி என்ன செய்வேன்; நாளும் கடல் அமிர்து உதவினாலும்—நாள்தோறும் கடலி

னுண்டான அமிர்தத்தைப் பொழிந்தாலும், நிம்பம் கைப்பது போமோ—வேம்பு கசக்குந் தன்மை நீங்குமோ நீங்காதே. (19)

ஆலமார் களத்தோன் றானே யாதியென் றுணர்ந்து போந்து
சாலவே யிந்நாள் காறுந் தலையதாந் தவத்துட் டங்கி
ஞாலமே லென்று நீங்கா நவையொடு பவமும் பெற்றான்
மேலைநாள் வினைக்கீ டுற்ற விதியையார் விலக்க வல்லார்.

ஆலம் ஆர் களத்தோன் தானே ஆதி என்று உணர்ந்து—விடம் பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமான்தானே பரம்பொருள் என்று உணர்ந்து, போந்து—அவ்வுணர்ச்சியோடுதானே போய், இந்நாள் காறும் தலையதாம் தவத்துள் சாலத் தங்கி—இந்நாள்வரை சிறந்ததாகிய தவ ஒழுக்கத்திலேயே மிகுதிப்பட்டிருந்தும், ஞாலம் மேல் என்று—உலக போகமே மேலானது என்று கருதி, நீங்கா நவையொடு பவமும் பெற்றான்—நீங்காத குற்றங்களையும் அவற்றா னெய்தும் பிறவியையுமே பெற்றுக்கொண்டான்; மேலை நாள் வினைக்கு—மேலைநாளிற் சம்பாதித்து வைத்த வினைக்கு, ஈடு உற்ற விதியை—தகுதியாய் வந்து பொருந்திய விதியை, விலக்க வல்லார் யார்—விலக்க வல்லுநர் யாவர்.

தங்கியும் என உம்மையும் பவமுமே என ஏகாரமும் வருவிக்கப்பட்டன. மேலைநாள்வினை, சஞ்சிதமும் முகந்துகொண்ட பிராரத்தமுமாம். ஈடுற்ற விதி ஆகாமியம். ஆகாமியமாவது இனிச் சம்பாதிக்குஞ் சம்பாத்தியமாம். அது சஞ்சித பிராரத்தங்களுக்கு ஏற்றவாறே பெரிதும் அமையுமென்பதாம். (20)

செய்வதென் னினியா னென்னுச் சிந்தையி னவலஞ் செய்து
மைவளர் தீய புந்தி மைந்தனை யடைந்து வல்லே
மெய்வகை யாசி கூறி மேவலும் வெய்ய தக்கன்
இவ்விடை நகர மொன்றை யியற்றுதி யைய வென்றான்.

இனி யான் செய்வது என் என்னு—இனி யான் செய்யத்தக்கது யாது என்று, சிந்தையின் அவலஞ் செய்து—மனத்திலே துன்பம் உற்று, மைவளர் தீய புந்தி மைந்தனை வல்லே அடைந்து—மயக்கம் வளருகின்ற கொடிய புத்தியினையுடைய புதல்வனை தக்கனை விரைவாக அடைந்து, மெய்வகை ஆசி கூறி—உருவத்தால் மெய்ம்மை வகையைச் சேர்ந்த ஆசி மொழி பகர்ந்து, மேவலும்—இருத்தலும், வெய்ய தக்கன்—கொடிய தக்கன், ஐய—பிதாவே, இவ்விடை நகரம் ஒன்றை இயற்றுதி என்றான்—இவ்விடத்தில் ஒரு நகரத்தை உண்டாக்குவாயாக என்று கூறினன்.

மனத்தொடு படாத ஆசி ஆதலின், மெய்வகை ஆசி என்றார். (21)

என்னவத் தக்கன் கூற விமைப்பினி லமைப்ப னென்றே
கொன்னுறு கமலத் தண்ணல் குறிப்பொடு கரங்க ளாலே
தன்னக ரென்ன வொன்று தக்கமா புரியீ தென்றே
பொன்னகர் நாணுக் கொள்ளப் புவியிடைப் புரிந்தா னன்றே.

அத்தக்கன் என்னக் கூற—அத்தக்கன் என்றிவ்வாறு கூற, கொன் உறு கமலத்து அண்ணல்—பெருமை பொருந்திய தாமரை ஆசனரான பிரமதேவர், இமைப்பினில் அமைப்பன் என்று—இமைப்பொழுதில் செய்வேன் என்று கூறி, குறிப்பொடு—தனது குறிப்பின் வழியே, ஒன்று—ஒரு நகரத்தை, ஈது—அந்நகரம், தக்க மா புரி என்று—தக்கமாபுரி என்று பெயர் சொல்லப் பட்டு, தன் நகர் என்ன—தமது சத்திய உலகத்திலுள்ள நகரத்தை ஒப்ப, பொன் நகர் நாணுக் கொள்ள—சுவர்க்கநகரம் வெட்கம் உற, கரங் களால்—தமது கரங்களாலே, புவியிடைப் புரிந்தான்—இப்பூவுலகத்திலே இயற்றினுர்.

கொன் அச்சமுமாம். தக்கன் நிலை அச்சத்துக்கேதுவாம். (22)

அந்தமா நகரந் தன்னி லருந்தவத் தக்கன் சென்று
சிந்தையு ளுவகை பூத்துச் சேணகர் தன்னு ளொன்று
மிந்தவா றணிய தன்று லிணையிதற் கிஃதே யென்னுத்
தந்தைபா லன்பு செய்து தன்பெருங் கோயில் புக்கான்.

அந்த மா நகரந்தன்னில்—அந்தப் பெருமை பொருந்திய தக்கமா புரிக்குள், அருந் தவத் தக்கன் சென்று—அரிய தவத்தைச் செய்த தக்கன் பிரவேசித்து, சிந்தையுள் உவகை பூத்து—மனத்துள் மகிழ்ச்சி மிக்கு, சேண்நகர் தன்னுள் ஒன்றும்—வானுலக நகரத்துள் எதுவும், இந்தவாறு அணியது அன்று—இதுபோல அழகியது அன்று, இதற்கு இஃதே இணை என்னு—இதற்கு இதுவே ஒப்பு என்று, தந்தை பால் அன்பு செய்து—அந்நகரைப் படைத்த பிதாவினிடம் அன்பு கூர்ந்து, தன் பெருங் கோயில் புக்கான்—தனக்குரிய பெரிய மாளிகையை அடைந்தான். (23)

தன்பெருங் கோயி லெய்தித் தவமுனி வரர்வந் தேத்த
மன்பெருந் தன்மை கூறு மடங்கலந் தவிசி னும்ப
ரின்புறு திருவி னேடு மினிதுவீற் றிருந்தா னென்ப
பொன்புனை கிரியின் மீது பொலஞ்சுடர்க் கதிருற் றென்ன.

தன் பெருங் கோயில் எய்தி—தனது பெரிய மாளிகையை அடைந்து, தவ முனிவரர் வந்து ஏத்த—தவத்தினையுடைய முனிசிரேட்டர்கள் வந்து துதிக்க, மன்பெருந் தன்மை கூறும்—பெருமையோடு கூடிய தலைமைத் தன்மையைக் காட்டுகின்ற, மடங்கல் அம் தவிசின் உம்பர்—அழகிய சிங்

காசனத்தின் மீது, பொன் புனை கிரியின் மீது பொலஞ் சுடர்க் கதிர் உற்றென்ன—பொன்னுலான மேருமலையின்மீது பொன்மயமான கிரணங்களையுடைய சூரியன் உதயஞ் செய்தாற் போல, இன்புஉறு திருவினேடும் இனிதுவீற்றிருந்தான்—இன்பம் மிகுகின்ற செல்வங்களோடும் இனிதாக அரசு வீற்றிருந்தான்.

என்ப அசை. (24)

கேசரி யணையின் மீது கெழீஇயின தக்க னெண்டோ
ளீசனல் வரம்பெற் றுள்ள வியற்கையை யேமஞ் சான்ற
தேசிக னுகும் பொன்போய்ச் செப்பலுந் துனுக்க மெய்தி
வாசவன் முதலா வுள்ள வானவர் யாரும் போந்தார்.

கேசரி அணையின் மீது கெழீஇயின தக்கன்—சிங்காசனத்தின்மீது அரசுவீற்றிருந்த தக்கனுனவன், எண்தோள் ஈசன் நல் வரம் பெற்றுள்ள இயற்கையை—எட்டுப் புயங்களையுடைய சிவபெருமானிடத்தில் நல்ல வரம்பெற்றுள்ள தன்மையை, ஏமம் சான்ற தேசிகன் ஆகும் பொன் போய்ச் செப்பலும்—கலக்கம் மிக்க தேவ குரு ஆகும் வியாழபகவான் இந்திராதி தேவர்களிடஞ் சென்று கூறுதலும், வாசவன் முதலா உள்ள வானவர் யாரும் துனுக்கம் எய்தி—இந்திரன் முதலிய தேவர்களெல்லாம் துன்பம் அடைந்து, போந்தார்—தக்கனிடஞ் சென்றூர்கள்.

தக்கனின் தகவின்மை நோக்கித் தேவ குரு கலங்கினுர் என்க. ஏமம்—கலக்கம். தேவருக்கு ஏமஞ் செய்தலில் மிக்க எனினுமாம். இப்பொருளில், ஏமம்—சேமம். (25)

வானவர் போந்த பான்மை வரன்முறை தெரிந்து மற்றைத்
தானவர் குரவ னுனேன் றயித்தியர்க் கிறையைச் சார்ந்து
போனதுன் னவல மஞ்சேல் புரந்தரன் றனக்குத் தக்க
னுனவன் றலைவ னுனு னன்னவற் சேர்தி யென்றூன்.

வானவர் போந்த பான்மை—தேவர்கள் தக்கன்பாற் சென்ற தன்மையையும், வரல் முறை—செல்லற்பாலதாகிய முறைமையினையும், தானவர் குரவன் ஆனேன் தெரிந்து—அசுர குருவாகிய சுக்கிரபகவான் அறிந்து, தயித்தியர்க்கு இறையைச் சார்ந்து—அசுரர்க் கரசனுகிய அசுரேந்திரனை அடைந்து, உன் அவலம் போனது—உனக்குத் தேவர்களாலுண்டான துன்பந் தொலைந்தது; அஞ்சேல்—அஞ்சற்க (என்று ஆசி வழங்கி), புரந்தரன் தனக்கு தக்கன் தலைவன் ஆனுன்—இந்திரனுக்குத் தக்கன் தலைவனுய்விட்டான்; (என்று காரணத்தையுங் கூறி), அன்னவன் சேர்தி என்றூன்—அத்தக்கனை நீ அடையக் கடவாய் என்று கூறினுர். (26)

தகுதியில்லான் தலைவனுயது, தானவ னெருவன் தலைவனுதலிலும் மேல் ஆதலின், 'போனதுன் அவலம்; அஞ்சேல்' என்றூர் என்க.

சேருதி யென்னு மாற்றஞ் செவிதளிர்ப் பெய்தக் கேளா
வாரமிர் தருந்தி னுன்போ லகமுறு முவகை பொங்க
மேருவி னெருசார் வைகும் வெந்திற லவுணர் கோமான்
காரென வெழுந்து தொல்லைக் கிளைஞரைக் கலந்து போந்தான்.

மேருவின் ஒருசார் வைகும் வெம் திறல் அவுணர் கோமான்—மேரு மலையின் ஒருபக்கத்தில் ஒதுங்கியிருக்கும் கொடுந்திறலினை யுடையவனுகிய அசுரேந்திரன், சேருதி என்னும் மாற்றம்—நீ தக்கனைச் சென்றடைவாய் என்று சுக்கிரபகவான் கூறிய வார்த்தையை, செவி தளிர்ப்பு எய்தக் கேளா—காது குளிரக் கேட்டு, ஆர் அமிர்து அருந்தினுன் போல் அகம் உறும் உவகை பொங்க—அரிய அமிர்தத்தை உண்டவனைப்போல அகத்தே பெருகிய உவகை புறத்தே பொங்க, கார் என எழுந்து—சூல்கொண்ட மேகம் போலெழுந்து, தொல்லைக் கிளைஞரைக் கலந்து—பழைய சுற்றத்தினரைக் கலந்து, போந்தான்—அவர்களுடன் தக்கனிடஞ் சென்றுன். *(27)*

ஆளரி யேறு போலு மவுணர்கோன் சேற லோடும்
வாளுறு கதிர்ப்புத் தேளு மதியமு மற்று முள்ள
கோளொடு நாளு மேனைக் குழுவுறு கணத்தி னேரு
நீளிருந் தடந்தேர் மீது மானத்து நெறியிற் சென்ருர்.

ஆள் அரி ஏறு போலும் அவுணர்கோன் சேறலோடும்—நரசிங்கத்தை ஒத்த அசுரேந்திரன் செல்லுதலும், வாள் உறு கதிர்ப் புத்தேளும்—ஒளி பொருந்திய கிரணங்களையுடைய சூரியதேவனும், மதியமும்—சந்திரனும், மற்றும் உள்ள கோள் ஒடு நாளும்—ஏனைய கோள்களும் நாள்களும், ஏனைக் குழுவு உறு கணத்தினேரும்—மற்றைய கூட்டமான கணங்களா யுள்ளவரும், நீள் இரும் தடம் தேர் மீதும்—நீண்ட பெரிய அகன்ற தேர்மீதும், மானத்தும்—விமானமீதும், நெறியிற் சென்ருர்—தக்கப் பிரசாபதியிடஞ் செல்லும் முறையிற் சென்ருர்கள். *(28)*

மங்குறேய் விண்ணின் பாலார் மாதிரங் காவ லோர்க
ளங்கத நிலயத் துள்ளா ரனையவர் பிறரு முற்று
ரிங்கிவர் யாருந் தக்க னிணையடி வணங்கி யீசன்
பொங்குபே ரருளி னுற்றல் புகழ்ந்தன ராகி நின்ருர்.

மங்குல் தோய் விண்ணின் பாலார்—மேகம் படிகின்ற வானில் உள்ளார், மாதிரம் காவலோர்கள்—திக்குப் பாலகர், அங்கத நிலையத்து உள்ளார்—பாம்புகள் உறைகின்ற பாதலத்தில் உள்ளார், அனையவர் பிறரும்—ஆகிய அவர்களும் பிறரும், உற்ருர்—தக்கனைச் சென்றடைந்தார்கள்; இங்கிவர் யாரும் தக்கன் இணையடி வணங்கி—இவர்க ளனைவரும் தக்கனுடைய இரண்

டாகிய பாதங்களை வணங்கி, ஈசன் பொங்கு பேர் அருளின் ஆற்றல்—சிவபெருமானுடைய பெருகுகின்ற பெரிய அருளினாலே தக்கனுக்குக் கிடைத்த ஆற்றல்களை, புகழ்ந்தனர் ஆகிநின்றார்—புகழ்ந்தபடி நின்றார்கள். (29)

அவ்வகை முளரி யண்ண லாதியா மமரர் தத்தஞ்
செய்வினை யாக வுன்னி வைகலுஞ் செறிந்து போற்ற
மெய்வகை யுணராத் தக்கன் வியன்மதிக் குடையுங் கோலு
மெவ்வகை யுலகுஞ் செல்ல விருந்தர சியற்றல் செய்தான்.

அவ்வகை முளரி அண்ணல் ஆதி ஆம் அமரர்—இவ்வாறு தாமரை ஆசனரான பிரமதேவர் முதலிய அமரர்கள், தம் தம் செய்வினை ஆக உன்னி—தாம் தாம் செய்யக்கடவ செய்தொழிலாகக் கருதி, வைகலும் செறிந்து போற்ற—தினந்தோறும் நெருங்கிச் சென்று துதிக்க, மெய் வகை உணராத் தக்கன்—மெய்யுணர்ச்சி இல்லாதவனான தக்கன், வியன் மதிக் குடையும் கோலும்—பெரிய சந்திரவட்டக் குடையும் ஆஞ்ஞையும், எவ்வகை உலகும் செல்ல—எல்லா உலகத்திலும் செல்லுமாறு, அரசு இருந்து இயற்றல் செய்தான்—அரசு வீற்றிருந்து பரிபாலனஞ் செய்வானாயினான்.

கோடினான் கோல் ஆதலின், ஆஞ்ஞை என்றுரை செய்யப்பட்டது. (30)

தக்கன் றவஞ்செய் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 62

---

# தக்கன் மகப்பெறு படலம்

ஆங்கவன் றேவி யான ளருந்ததிக் கற்பின் மிக்காள்
வாங்கிய நுசுப்பி னல்லாண் மறைக்கொடி யெனுநா மத்தாள்
பூங்கம லத்துப் புத்தேள் பொன்னடி தன்னில் வந்தா
ளோங்குதொல் லுலகுக் கெல்லா மொருதனி முதல்வி யானள்.

பூங்கமலத்துப் புத்தேள் பொன்னடி தன்னில் வந்தாள்—தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவரின் அழகிய பாதத்தில் உதித்தவள், வாங்கிய நுசுப்பின் நல்லாள்—துவளுகின்ற இடையினையுடைய நல்லவள், மறைக்கொடி எனும் நாமத்தாள்—வேதவல்லி என்னும் பெயருடையவள், அருந்ததிக் கற்பின் மிக்காள்—அருந்ததியின் கற்புப்போன்ற கற்பினால் சிறந்தவள், ஆங்கவன் தேவி ஆனாள்—அந்தத் தக்கனுக்கு மனைவியானாள்; ஓங்கு தொல் உலகுக்கு எல்லாம் ஒரு தனி முதல்வி ஆனாள்—அதனாலே அவ் வேதவல்லி உயர்ந்த பழைமையான உலகம் அனைத்துக்கும் ஒப்பற்றதொரு தலைவியாயினாள். (1)

வேறு

சேயிழை யவளொடு செறிந்து புல்லியே
மீயுயர் கமலமேல் விரிஞ்சன் காதலன்
மாயிரும் பணிபதி மணிக ளீன்றென
வாயிர மைந்தரை யருளி னானரோ.

மீ உயர் கமலமேல் விரிஞ்சன் காதலன்—புஷ்பங்களுக்குள்ளே மேலான தாய் உயர்ந்து விளங்குகின்ற தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவரின் புதல்வனான தக்கன், சேயிழை அவளொடு செறிந்து புல்லி—செம்மையாகிய ஆபரணங்களை அணிந்த அந்த வேதவல்லியோடு ஒருமையெய்திச் சேர்ந்து, மா இரும் பணி பதி மணிகள் ஈன்றென—பெருமைமிக்க சர்ப்பங்களின் அரசனான ஆதிசேடன் இரத்தினங்களை உதவினாற் போல, ஆயிரம் மைந்தரை அருளினான்—ஆயிரம் புதல்வர்களைப் பெற்றான்.

ஆதிசேடன் ஆயிரந் தலையுடையவன். ஆகவே, பணிபதி ஆயிரம் மணிகளை ஈன்றாற்போல, தக்கன் ஆயிரம் மைந்தரைப் பெற்றானென்க. (2)

அப்பெரு மைந்தர்க ளாயி னோர்க்கெலா
முப்புரி நூல்விதி முறையி னாற்றியே
செப்பரு மறைகளின் றிறமு மீந்துபின்
னிப்பரி சொன்றினை யிசைத்தன் மேயினன்.

அப்பெரு மைந்தர்கள் ஆயினேர்க்கு எலாம்—அந்த எண்ணிக்கையாற் பெரிய புதல்வராயுள்ளா ரனைவருக்கும், முப்புரிநூல் விதிமுறையின் ஆற்றி—முப்புரிநூல் தரித்தலாகிய சடங்கை வேதவிதிப்பிரகாரஞ் செய்து, செப்பு அரும் மறைகளின் திறமும் ஈந்து—அதிகாரிகளல்லாதார் ஓதலாகாத வேதங்களின் மந்திரங்களை ஓதும் அதிகாரத்தையுங் கொடுத்து, பின்—அதன்மேல், இப்பரிசு ஒன்றினை இசைத்தல் மேயினுன்—இவ்வா றென்று கூறினுன். (3)

நல்லதோர் மானத நணுகி நீவிர்க<br>
ளெல்லிரு மீசனை யெண்ணி நோற்றிரீஇப்<br>
பல்லுயி ருந்தரும் பரிசு பெற்றிவட்<br>
செல்லுதி ராலெனச் செப்பி யேவினுன்

நீவிர்கள் எல்லிரும்—நீவிர் எல்லாம், நல்லது ஓர் மானதம் நணுகி—நல்லதாகிய ஒப்பற்ற மானத வாவியை அடைந்து, இரீஇ—அங்கே தங்கி, ஈசனை எண்ணி நோற்று—சிவபெருமானை நினைந்து தவஞ்செய்து, பல் உயிரும் தரும் பரிசு பெற்று—பலவாகிய உயிர்களையும் படைக்கின்ற உத்தியோகத்தைப் பெற்றுக்கொண்டு, இவண் செல்லுதிர் எனச் செப்பி ஏவினுன்—இவ்விடத்துக்கு வாருங்கள் என்று கூறி அனுப்பினுன். (4)

ஏயின காலையி லிறைஞ்சி மைந்தர்கள்<br>
போயினர் மானதப் பொய்கை புக்கன<br>
ராயிடைப் படிந்தன ரரனை யுன்னியே<br>
மாயிரு நோன்பினை யியற்றி வைகினுர்

ஏயின காலையில் —மேற்கூறியவாறு ஏவிய சமயத்தில், மைந்தர்கள் இறைஞ்சி—புதல்வர்கள் தந்தையாகிய தக்கனை வணங்கி, மானதப் பொய்கை போயினர் புக்கனர்—மானத வாவியைப் போயடைந்து, ஆயிடைப் படிந்தனர்—அவ்வாவியில் முழுகி, அரனை உன்னி—சிவபெருமானை நினைந்து, மா இரு நோன்பினை இயற்றி வைகினுர்—மிகப்பெரிய தவத்தைச் செய்துகொண்டிருந்தனர். (5)

நேரற வின்னண நெடிது நோற்புழி<br>
நாரத னென்பவ னண்ணி யாயிடை<br>
வாரியு ளாற்றவும் வருந்து கிற்றிராற்<br>
காரியம் யாவது கழறு வீரென்றுன்.

இன்னணம்—இவ்வாறு, நேர் அற—நிகரில்லாமல், நெடிது நோற்புழி—நீண்டகாலம் அப்புதல்வர்கள் தவஞ் செய்துகொண்டிருக்கும்போது, அ இடை நாரதன் என்பவன் நண்ணி—அவ்விடத்துக்கு நாரதர் என்கின்ற முனிவர்

சென்று, வாரியுள் ஆற்றவும் வருந்துகிற்றிர் — நீர் நிலையில் தவங்கிடந்து பெரிதும் வருந்துவதிற்றிளைக்கின்றீர்கள்; காரியம் யாவது—இதனுற் பெறும் பயன் யாதோ, கழறுவீர் என்ருன்—சொல்லுங்கள் என்று வினவினுர். (6)

என்னலு முனிவகே ளியாங்க ணல்கிட
முன்னுற நல்குவான் முயன்று முக்கணுன்
றன்னடி யுன்னியே தவத்தை யாற்றுது
மன்னது மெந்தைதன் ஞணை யாலென்ருர்.

என்னலும்—என்று நாரதமுனிவர் வினவ, முனிவ கேள்—முனிவரே கேட்பீராக; யாங்கள் முன் உற—தக்கன் புதல்வர்களாகிய நாங்கள் முதன்மை பெற, நல்கிட — சிருட்டித்தொழிலைச் செய்யும்பொருட்டு, முக்கணுன் நல்குவான்—மூன்று கண்களையுடைய சிவபெருமான் அருளுவதற்காக, தன் அடி உன்னி—அச் சிவபெருமானுடைய பாதங்களை நினைந்து, தவத்தை முயன்று ஆற்றுதும்—தவத்தை முயன்று செய்கின்ருேம், அன்னதும்—அவ்வாறு செய்வதும், எந்தை தன் ஆணையால் என்ருர்—எம்முடைய தந்தையின் கட்டளையினுலேயாம் என்று கூறினுர்கள். (7)

அறிந்திடு முனிவர னதனைக் கேட்டலுஞ்
செறிந்திடு கரத்தொடு செங்கை தாக்குற
வெறிந்தன னகைத்தன னிதுகொ லீசனுற்
பெறும்பரி சேயெனப் பின்னுங் கூறினுன்.

அறிந்திடும் முனிவரன்—அறிவறிந்த முனிவர்பிரானுகிய நாரதர், அதனைக் கேட்டதும்—அவர்கள் கூறியதனைக் கேட்ட உடனே, செறிந்திடு கரத்தொடு— மற்றைக் கையைச் சென்று செறிகின்ற கையோடு, செங்கை தாக்குற—அவ்வாறு சென்று செறிகின்ற செம்மையாகிய மற்றைக் கையுந் தாக்குதலைச் செய்ய, எறிந்தனன்—கைகொட்டி, நகைத்தனன்—சிரித்து, இது கொல்—இது தானு, ஈசனுல் பெறும் பரிசு என—சிவபெருமானிடத்துப் பெறும் பேறு என்று, பின்னும் கூறினுன்—மேலுங் கூறினுர். (8)

ஈசனை யேநினைந் திறைஞ்சி யேத்தியே
பேசரு மருந்தவம் பிடித்து மூவகைப்
பாசம தகனெறி படரச் சிந்தியீ
ராசுறு படைப்பினுக் கார்வஞ் செய்திரோ.

ஈசனையே நினைந்து இறைஞ்சி ஏத்தி—சிவபெருமானையே நினைந்து வணங்கித் துதித்து, பேசு அரும் அருந்தவம் பிடித்தும்—பேசுதற்கு அரிய அருமையான தவத்தைச் செய்தும், மூவகைப் பாசமது அகல் நெறிபடரச் சிந்தியீர்—

மூன்று வகையான பாசமும் அகலும் வழியிற் செல்லுதற்குச் சிந்தனை செய்திலீர்; ஆசு உறு படைப்பினுக்கு ஆர்வம் செய்திர்—குற்றம் பெருகுதற்குரிய படைத்தற் றொழிலைப் பெறுதற்கு இச்சை வைத்தீர்.

நும் அறிவு இருந்தபடி என்னை என்றவாறு. (9)

சிறப்புள வருந்தவஞ் செய்து நீரினி
யுறப்படு கதிமுறை யுரைப்பக் கேட்டிராற்
பிறப்புள திடருள தன்றிப் பின்னரு
மிறப்புள ததுநுமக் கினிய தாகுமோ.

நீர் சிறப்புள அரும் தவம் செய்தும்—நீவிர் சிறப்பு வாய்ந்த அரிய தவத்தைச் செய்துவைத்தும் (பெற வேண்டுவதைப் பெற விரும்பாமையால்), இனி உறப்படும்—இனி நும்மால் அடையப்படும், கதி முறை உரைப்பக் கேட்டிர்—கதிகளின் கிரமத்தை விளக்கிச் சொல்லக் கேட்பீராக; பிறப்பு உளது—நீர் விரும்பும் நெறியில் பிறப்பென்பதொன்று உண்டு; இடர் உளது—பிறப்பினால் இடர் உண்டாம்; அன்றி—அல்லாமல், பின்னரும்—அவற்றின்மேலும், இறப்பு உளது—அஞ்சுதற்குரிய இறப்பும் உண்டாம்; அது—இத்துணை இடரை வருவிக்கின்ற அப்படைத்தற் றொழில், நுமக்கு இனியது ஆகுமோ—தவத்தர்களாகிய நுமக்கு இனிமை செய்வதாகுமா?

'இறப்பதனுக் கென்கடவேன்' என்ப ஆதலின், அஞ்சுதற்குரிய என்பது வருவிக்கப்பட்டது. தவஞ்செய்து இனி நீர் பெறுகின்ற சிருட்டித் தொழிலின் முறையை என்று உரைப்பினும் அமையும். (10)

இன்றுநீர் வெஃகிய தியற்று நான்முகன்
றன்றலை யைந்தினி லொன்று சங்கரன்
பொன்றிகழ் கரங்கொளப் புகுந்த தீமையு
நின்றதோர் பழியையு நினைக்கி லீர்கொலோ.

இன்று நீர் வெஃகியது—இப்பொழுது நீவிர் விரும்பியதாகிய படைத்தற் றொழிலை, இயற்றும் நான்முகன்—இயற்றிக்கொண்டிருக்கின்ற பிரமதேவர், தன் தலை ஐந்தினில் ஒன்று—தமது ஐந்து தலைகளில் ஒன்றை, சங்கரன் பொன் திகழ் கரம் கொள—சங்கரராகிய சிவபெருமான் அழகு விளங்குகின்ற திருக்கரத்தால் கிள்ளி எடுக்கும்பொருட்டு, புகுந்த தீமையும்—பிரமதேவரிடம் உண்டான அகங்காரமாகிய தீமையையும், நின்றது ஓர் பழியையும்—அதனால் நிலைபெற்ற வசையையும், நினைக்கிலீர்கொல்—நினைக்கின்றிலீர்போலும்.

ஐந்தலைகளுள் ஒன்று போயினமையின், பிரமதேவரை நான் முகன் என்றார். கரம்கொள என்பதற்குக் கரத்தில் ஏந்த என்றுமாம். (11)

என்னல திறையவ ரில்லை யார்க்கும்யான்
முன்னவ னென்றுநான் முகத்தன் மாலொடு
பன்னெடு நாளமர் பயின்று சோதிகண்
டன்னம தானது மறிந்தி லீர்கொலோ.

என் அலது இறையவர் இல்லை—என்னை அல்லாமல் தலைமைக்கடவுள் என்று ஒருவர் இலர், யான் யார்க்கும் முன்னவன்—படைப்போனாகிய யானே யாவர்க்கும் முதலிலுள்ளவன், என்று—என்று கூறி, நான்முகத்தன் மாலொடு பல் நெடுநாள் அமர் பயின்று—பிரமதேவர் திருமாலோடு பலநெடுங் காலம் போர்செய்து, சோதி கண்டு—பரம்பொருளைச் சோதிவடிவிற் கண்டு, அன்னம் அது ஆனது—அச் சோதியைத் தேட அன்னப்பறவை வடிவெடுத்த கதையை, அறிந்திலீர் கொல்—நீவிர் அறிந்திலீர் போலும். (12)

நேயமெண் ணுற்றென நிறைந்த கண்ணுத
னுயகன் விதித்திட நம்மில் யாவையு
மாயவென் றகந்தையுற் றமர்வ னன்னவன்
மாயமென் றுரைத்திடுந் தளையின் வன்மையால்.

நேயம் எண் உற்றென—நெய் எள்ளில் நிறைந்து நின்றாற்போல, நிறைந்த கண்ணுதல் நாயகன் யாவையும் விதித்திட—எங்கும் நிறைந்த நெற்றிக் கண்ணராகிய சிவபெருமான் அனைத்தையுஞ் சிருட்டி செய்திடவும், நம்மில் ஆய என்று—அவையெல்லாம் நம்மாற் சிருட்டிக்கப்பட்டன என்று, அன்னவன்—அந்தப் பிரமதேவர், மாயம் என்று உரைத்திடும் தளையின் வன்மையால்—வஞ்சனை என்று சொல்லப்படும் மலப்பிணிப்பின் வலியால், அகந்தை உற்று அமர்வன்—அகந்தை கொண்டிருப்பர்.

மலப்பிணிப் புளதாயவழி அகந்தையுறுதல் தப்பாதென்க. நம் என்ற பன்மை வாய்பாடு அகந்தையின் விளைவைக் குறிப்பதுபோலும். மாயம் தளையின் காரியம். தளையை மாயம் என்றது உபசாரம். (13)

பற்றொடு முழுதுயிர் படைக்கும் பான்மையாற்
பெற்றிடு பயனெவன் பெருமை யல்லது
நற்றவ முனிவிர்கா ணன்கி தென்றொரு
பொற்றளை தம்பதம் பூட்ட லாகுமோ.

நல் தவ முனிவிர்காள்—நல்ல தவம் உடைய முனிவர்களே, பற்றொடு—பற்றுக் காரணமாக, முழுது உயிர் படைக்கும் பான்மையால்—அனைத்துயிரையும் படைக்குந் தொழிலைப் பெற்றுக்கொள்ளும் இயல்பினால், பெருமை அல்லது—வீண் பெருமையே யல்லாமல், பெற்றிடு பயன் எவன்—பெறக்கடவதாகிய நிலையாய பேறு யாது, ஒரு பொன் தளை இது நன்கு என்று—பொன்

விலங் கொன்றினை இது அழகிது என்று, தம் பதம் பூட்டல் ஆகுமோ—தம்முடைய கால்களிற் பூட்டிக்கொள்ளுதல் விவேகம் ஆகுமா?

பற்றொடு பட்ட படைத்தற்றொழில் பயனற்றதென உணர்த்தலை வேண்டி, நற்றவ முனிவிர்காள் என்று விளித்தார் என்க. (14)

எத்துணை யெத்துணை யின்பம் வேண்டுநர்க்
கத்துணை யலக்கண்வந் தடையு மாங்கது
மெய்த்திற நீவிரும் விதியி னிற்றிரேற்
கைத்துறு துயரெனுங் கடலிற் சார்திரால்.

எத்துணை எத்துணை இன்பம் வேண்டுநர்க்கு—எவ்வளவு எவ்வளவு இன்பத்தினை விரும்புகின்றார்களோ அவர்களுக்கு, அத்துணை அலக்கண் வந்து அடையும்—அவ்வளவு அவ்வளவு துன்பம் வந்து சேரும்; ஆங்கு அது மெய்த்திறம்—அவ்வாறுதல் சத்தியமாம்; நீவிரும் விதியில் நிற்றிரேல்—நீங்களும் படைத்தற்றொழிலை விரும்பி அதில் நிற்றலைச் செய்வீராயின், கைத்து—ஒரு காலத்தில் வெறுப்புற்று, உறு துயர் எனும் கடலில் சார்திர்—மிக்க துன்பமாகிய கடலில் முழுகுதலைச் செய்வீர்.

அடுக்கு மிகுதி குறித்தது. கைத்து உறு—வெறுப்புப் பொருந்திய எனினுமாம். (15)

அன்றியு மீசனை யயர்த்தி யாமிறை
யென்றுள முன்னுதி ரிசைவி றீவினை
மன்றவு மாற்றுதிர் மயக்கங் கொள்ளுதி
ரொன்றிய பேருணர் வொருவிப் போதிரால்.

அன்றியும்—அல்லாமலும், ஈசனை அயர்த்து—இறைவனை மறந்து, யாம் இறை என்று உளம் உன்னுதிர்—படைக்கின்ற யாமே பரப்பிரமம் என்று மனத்தில் நினைத்தலைச் செய்வீர்; இசைவு இல் தீவினை மன்றவும் ஆற்றுதிர்—அதனாலே பொருத்தமற்ற கொடிய வினைகளை மிகுதியுஞ் செய்வீர்; மயக்கம் கொள்ளுதிர்—இவ்வாற்றால் மயக்கம் உறுவீர்; ஒன்றிய பேருணர்வு ஒருவிப் போதிர்—இறைவனோடொன்றிய பேரறிவை விலகி நடப்பீர். (16)

வீட்டிடு மிச்செயல் வீடு சேர்தர
மோட்டுறு நிலைகொடு முயன்று கூடுதி
ரீட்டுறு நன்னெறிக் கியைவ தொன்றினைக்
காட்டியே யினைத்தெனக் கழற லாகுமோ.

இச் செயல் வீட்டிடும்—கேட்டுக்குக் காரணமான இப்படைப்புத்தொழில் விருப்பை விட்டுவிடுங்கள்; மோடு உறு நிலை கொடு—உயர்ச்சிமிக்க நிலையில் நின்றுகொண்டு, வீடு சேர்தர முயன்று கூடுதிர்—முத்தியடைதற்கு முயன்று செய்வன செய்ம்மின்கள்; ஈட்டுறு நல் நெறிக்கு—சம்பாதிக்கப்படுவதாகிய நல்ல வீட்டு நெறிக்கு, இயைவது ஒன்றினைக் காட்டி—ஒத்ததொன்றை எடுத்துக் காட்டி, இனைத்து என—அவ்வீட்டு நெறியை இவ்வியல்பிற்று என்று, கழறல் ஆகுமோ—உவமை முகத்தால் உரைத்தல் இயலுமா?

வீடு ஒப்புயர்வு அற்றதென்றவாறு. (17)

அற்றமி றவம்புரிந் தரிய வீட்டினைப்
பெற்றவ ரளப்பிலர் பெறுவ தாகியே
யுற்றவ ரளப்பில ருலகிற் சிற்சில
மற்றவர் தமதியல் வகுப்பக் கேண்மினே.

உலகில்—வினையீட்டத்துக்குரியதாகிய இவ்வுலகில், அற்றம் இல் தவம் புரிந்து—அழிவில்லாத தவத்தைச் செய்து, அரிய வீட்டினைப் பெற்றவர் அளப்பு இலர்—பெறுதற்கரிய வீடுபேற்றைப் பெற்றவர்கள் அளவில்லாதவர்கள்; பெறுவது ஆகி உற்றவர் அளப்பு இலர்—வீடு பேற்றைப் பெறுவதை மேற்கொண்டு முயல்பவர்களும் அளவில்லாதவர்கள்; அவர் தமது சிற்சில இயல்—வீடு பெற முயல்பவரது சிற்சில இயல்பை, வகுப்பக் கேண்மின்—வகுத்துச் சொல்லக் கேட்பீராக.

வீடு பெற முயல்வாரது இயல்பே ஈண்டைக்கு வேண்டுவதாதலின், அதனை வகுப்பாராயினரென்க. (18)

சுற்றம தரனடித் தொண்ட ரல்லது
மற்றில ரவனடி மலர்க ளேயலாற்
பற்றிலர் சாலவு மினிய பண்பினர்
குற்றம தகன்றதோர் கொள்கை மேயினர்.

சுற்றம்—வீட்டைக் காதலிப்போருக்குச் சுற்றம் ஆவார், அரன் அடித் தொண்டர்—சிவபெருமான் திருவடிக்குத் தொண்டு செய்யும் சிவனடியாராவர்; அல்லது மற்று இலர்—சிவனடியா ரல்லாமல் வேறு சுற்றம் அவர்களுக்கு இல்லை; அவன் அடி மலர்களே அலால் பற்று இலர்—சிவபெருமானுடைய திருவடித் தாமரைகளி லல்லாமல் மற்றொன்றிற் பற்று இல்லாதவர்கள் அவர்கள், சாலவும் இனிய பண்பினர்—இவ்வாற்றால் மிகவும் இனிதாய பண்பினை யுடையவர்கள்; குற்றம் அகன்றது ஓர் கொள்கை மேயினர்—குற்றம் அற்றதான ஒப்பில்லாத கோட்பாட்டை மேற்கொண்டவர்கள் என்க.

ஈரிடத்தும் 'அது' பகுதிப்பொருள் விகுதி. தந்தை தாயரும் சுற்றமன்மையின் மற்றிலர் என்றார். 'உற்றார் ஆருளரோ' என்றவாறு. (19)

நேசமுற் றடைபவர் நினைப்பி னீக்கரு
மாசறுத் தருள்பொழி யறிவின் மேலையோ
ரீசனைக் குறுகியெஞ் ஞான்றும் வாழ்பவர்
பேசுதற் கரியதோர் பெருமை யெய்தினர்.

நேசம் உற்று—வீட்டைக் காதலித்து, அடைபவர்—அதனை அடைதற்குத் தவமுயற்சி செய்பவர் ஆகிய, நீக்கரும் ஆசு நினைப்பின் அறுத்து—நீக்குதற்கரிய தாகிய மாசினை நினைப்பினின்றும் நீக்கி, அருள் பொழி அறிவின் மேலை யோர்—திருவருளால் அநுக்கிரகிக்கப்பட்ட ஞான அறிவான் மிக்கோர், ஈசனைக் குறுகி—சிவபெருமானை அணுகி, எஞ்ஞான்றும் வாழ்பவர்—எக்காலத் தும் மாற்றம் அற்ற பெருவாழ்வு படைத்தவர் ஆவர்; பேசுதற்கு அரியது ஓர் பெருமை எய்தினர்—அதனாலே பேசுதற்கரியதும் ஒப்பற்றதுமான பெரு மையைப் பெற்றார் ஆயினர்.

அடைபவராகிய மேலையோர் என்க. (20)

ஆதலி னவரென வவாவின் றுற்றிடு
மேதகு நெறியுறீஇ வீடு சேருதி
ரேதமில் வெறுக்கைபெற் றெண்ணந் தீர்ந்திடுந்
தாதைதன் பணியினைத் தவிர்தி ரென்னவே.

ஆதலின்—வீடு காதலிப்பா ரியல்பு இங்ஙனம் ஆதலினாலே, அவர் என— அவர்களைப்போல, அவா இன்று—மற்றொரு பற்று இன்றி, உற்றிடும் மேதகு நெறி உறீஇ—அடைதற்குரிய மேன்மை தக்க வீட்டு நெறியைப் பேணி, ஏதம் இல் வெறுக்கை பெற்று—குற்றம் இல்லாத அருட் செல்வத்தைப் பெற்று, வீடு சேருதிர்—வீட்டினை அடையக் கடவீர்கள்; எண்ணம் தீர்ந்திடும் தாதை தன் பணியினைத் தவிர்திர்—நல்லெண்ணம் இல்லாத உங்கள் தந்தையின் கட் டளையை விட்டுவிடுங்கள்; என்ன—என்றிங்ஙனம் நாரத முனிவர் கூற.

வெறுக்கை பெற்று எண்ணந் தீர்ந்திடும் தாதை எனக் கிடக்கை முறை யில் வைத்துரைப்பினும் அமையும். அவ்வாறுரைப்பின், ஏதம் உள் வெறுக் கையை ஏதம் இல் வெறுக்கை என மங்கலஞ் செய்தவாறும். அன்றி, ஏதமே யன்றிப் பிறிதொன்று மில்லாத வெறுக்கையெனக் கொள்ளினுமாம். (21)

அந்தமில் வீடுபே றடையு மூழுடை
மைந்தர்க ளோர்புடை வந்து தேர்வுறுத்
தந்தைசொல் லினுமிது தக்க தேயெனப்
புந்திகொண் டடிகளை வணங்கிப் போற்றினர்.

அந்தம் இல் வீடு பேறு அடையும் ஊழ் உடை மைந்தர்கள்—முடிவில் லாத வீடுபேற்றினை அடைதற்குரிய ஊழினையுடைய அந்தப் புதல்வர்கள்,

ஓர் புடை வந்து—ஒரு பக்கத்தே ஒன்று சேர்ந்து, தேர்வு உரு—ஆலோசனை செய்து, இது—இந்த உபதேசம், தந்தை சொல்லினும் தக்கது எனப் புந்தி கொண்டு—தந்தையாகிய தக்கனின் கட்டளையினும் உயர்ந்ததாம் என்று புத்தி பண்ணி, அடிகளை வணங்கிப் போற்றினர்—குருவாய் எழுந்தருளிய நாரத மகா முனிவரின் திருவடிகளை வணங்கித் துதித்தார்கள்.

வீடுபே றடையும் ஆகூழ் உடைமையால், ஓர் புடை வந்து தேர்ந்து தெளிந்தார்க ளென்க. (22)

## வேறு

போற்று மைந்த ரைப்பெ ரும்பு றந்த ழீஇய ரன்புகழ்
சாற்றி வீடு வெஃகு றுந்த வத்தி னோர்க ணிலையினைத்
தேற்றி மந்தி ரங்க ளுஞ்செ யற்கை யும்பு ணர்த்தியே
மாற்றி னன்றொல் லுணர்வு தன்னை மற்றொ ருண்மை யுதவினன்.

போற்றும் மைந்தரை பெரும் புறம் தழீஇ—தம்மைத் துதிக்கின்ற தக்கன் புதல்வர்களைப் பெருமை பொருந்திய முதுகு தைவந்து, அரன் புகழ் சாற்றி—சிவபெருமானின் புகழை எடுத்துச் சொல்லி, வீடு வெஃகுறும் தவத்தினோர்கள் நிலையினைத் தேற்றி—வீடு காதலிக்குந் தவத்தார்கள் நிற்கும் நிலையைத் தெளிவித்து, மந்திரங்களும் செயற்கையும் புணர்த்து—அதற்குரிய மந்திரங்களையுங் கிரியைகளையும் பயிலச் செய்து, தொல் உணர்வு தன்னை மாற்றினன்—பழைய எண்ணத்தை மாற்றி, ஓர் உண்மை உதவினன்—ஒன்றாகிய வீட்டு நெறி உண்மையை உபதேசித்தார்.

புறம் என்றதனால், தழுவுதல் தைவருதலாம். நாரதர் தைவருதலால் புறம் பெருமையுற்றதென்க. செயற்கை, தியான பாவனைகளுமாம். தொல் லுணர்வு படைப்புத்தொழில் பெறும் எண்ணம். (23)

வேறொ ருண்மை யுதவல் செய்து விதியி னாடி வேதநூல்
கூறு கின்ற முறைபு ரிந்து குமரர் யாரு மின்னண
மீறின் மாத வங்க ளாற்றி யெல்லை தீர்ந்த முத்தியிற்
சேறி ரென்று முனிவ னொல்லை சேணெ ழுந்து போயினன்.

வேறு ஓர் உண்மை உதவல் செய்து—வேறானதும் ஒன்றானதுமான முத்தியுண்மையை உபதேசஞ் செய்து, குமரர் யாரும்—குமரர்களே நீவிர் எல்லாம், விதியின்நாடி—முறைப்படி ஆராய்ந்து, வேத நூல் கூறுகின்ற முறை புரிந்து—வேத சாத்திரம் கூறுகின்ற முறைகளை அநுட்டித்து, இன்னணம் ஈறில் மாதவங்கள் ஆற்றி—இவ்வாற்றால் அழிவில்லாத சிறந்த தவங்களைச் செய்து, எல்லை தீர்ந்த முத்தியில் சேறிர் என்று—எல்லையற்ற முத்தி நெறியிற் செல்லக் கடவீர் என்று கூறி, முனிவன் சேண் எழுந்து ஒல்லை போயினன்—நாரத முனிவர் ஆகாய வழிக்கொண்டு விரைந்து சென்றார்.

தொல்லை யுணர்வுக்கு வேறான தாதலின் வேறு என்றார். ஓர் குறுகி ஓர் என்றாயிற்று. புணர்ந்தாற் புணருந் தொறும் புதிது ஆதலின், எல்லை தீர்ந்த முத்தி என்றார். (24)

போகு நார தற்பு கழ்ந்து பொன்ன டித்த லத்தின்மே
லோகை யோடு தாழ்ந்து முன்னு ணர்த்து பான்மை யுன்னியே
மோக மாதி யான தீமை முழுது மாற்றி மோனிக
ளாகி மைந்த ரெவரு மங்க ணாற்றி னார ருந்தவம்

போகும் நாரதன் புகழ்ந்து—ஆகாய வழிக்கொண்டு செல்லுகின்ற நாரத முனிவரைப் புகழ்ந்து, பொன் அடித் தலத்தின் மேல் ஓகையோடு தாழ்ந்து—அவருடைய பொன்போலும் பாதங்களின்மீது உவகையோடு வணக்கஞ் செய்து, முன் உணர்த்து பான்மை உன்னி—முன்னர் உபதேசித்த முத்தி நெறி இயல்புகளை நினைந்து, மோகம் ஆதியான தீமை முழுதும் மாற்றி—மோகம் முதலிய குற்றங்கள் முழுவதையும் நீக்கி, மோனிகள் ஆகி—மௌன விரதர்களாய், மைந்தர் எவரும் அங்கண் அருந் தவம் ஆற்றினார்—தக்கன் புதல்வரெல்லாம் அவ்விடத்தில் செய்தற்கரிய தவத்தைச் செய்தார்கள்.

காமக் குரோத லோப மோக மத மாற்சரியம் எனப்படும் அறுவகைக் குற்றங்கள் ஈண்டு மோகமாதியான எனப்பட்டன. ஒன்றனைக் கைவிட்ட வழியும், அதன்பால் உளதாய மோகம் நீக்குதற்கரியதாதலின், அதனை முன்னிட்டு மோக மாதியான என்றார். (25)

அருந்த வங்கள் பலவு மாற்றி யவர்கள் வீடு சேர்தலு
மிருந்த வம்பு ரிந்த தக்க னிளைஞர் பெற்றி யின்னமுந்
தெரிந்த தில்லை யென்று சிந்தை செய்து போத வுணர்வினாற்
பொருந்த நோக்க லுற்ற வட்பு குந்த பான்மை கண்டனன்.

அருந் தவங்கள் பலவும் ஆற்றி—அரிய தவங்கள் பலவற்றையுஞ் செய்து, அவர்கள் வீடு சேர்தலும்— அப்புதல்வர்கள் வீடுபேற்றை அடைதலும், இரும் தவம் புரிந்த தக்கன்—பெரிய தவங்களைச் செய்த தக்கன், இளைஞர் பெற்றி இன்னமும் தெரிந்ததில்லை—புதல்வர்களின் நிலைமை இத்தகையது என்று இதுவரை தெரியவில்லை; என்று சிந்தை செய்து—என்றிவ்வாறு நினைந்து, போத உணர்வினால் பொருந்த நோக்கல் உற்று—ஞான உணர்வினாலே இயைபுற நோக்கி, அவண் புகுந்த பான்மை கண்டனன்—அவ்விடம் நடந்தவைகளை அறிந்தான்.

போதம் ஆத்மபோதம். அது பசு ஞானம் எனப்படும். இருந்து அவம் புரிந்த தக்கனுமாம். (26)

மான தத்த டத்தி னூடு மாற்ற ருந்த வத்தராய்
மோன முற்ற சிறுவர் பாலின் முன்னி வந்து நாரதன்
ஞான முற்று மோதி யென்சொ னவைய தென்று மாற்றியே
மேனி லைக்க ணுய்த்து மீண்டு விண்ப டர்ந்து போயினான்.

மானதத் தடத்தின் ஊடு—மானத தடாகத்தின் கண்ணே, மாற்று அரும் தவத்தராய்—நீக்குதற்கரிய தவத்தை மேற்கொண்டவராய், மோனம் உற்ற சிறுவர்பால்—மௌன நிலையிலிருந்த என் குழந்தைகளிடம், நாரதன் முன்னி வந்து—நாரதமுனிவன் மனச் சங்கற்பஞ் செய்துகொண்டு வந்து, ஞானம் முற்றும் ஓதி—வீட்டு நெறிக்குரிய ஞானம் முழுவதையும் உபதேசித்து, என் சொல் நவையது என்று மாற்றி—என் கட்டளையைக் குற்றமுடையதென்று விலக்கி, மேல் நிலைக்கண் உய்த்து—மேலாய வீட்டு நெறிக்கண் அவர்களைச் செல்லும்படி செய்து, மீண்டு—பின்பு, விண் படர்ந்து போயினன்—ஆகாய வழிக்கொண்டு சென்றுவிட்டான். (27)

மிக்க மைந்த ரவனு ரைத்த விதியி னின்று வீடுபே
றொக்க லோடு மேயி னார்க ளொருவ ரின்றி யெற்கினி
மக்க ளின்றெ னத் தெரீஇ வருத்த முற்றி ருந்திடுந்
தக்கன் மற்று மாயி ரந்த வச்சி றாரை யுதவினான்

மிக்க மைந்தர்—ஆயிரவர் மைந்தரும், ஒருவர் இன்றி—ஒருவர்தாமும் எஞ்சுதல் இன்றி, ஒக்கலோடும்—சுற்றத்தோடனைவரும், அவன் உரைத்த விதியின் நின்று—அந்த நாரதமுனிவன் உபதேசித்த வீட்டு நெறியில் நின்று, வீடு பேறு மேயினார்கள்—வீடுபேறெய்தினார்கள்; இனி எற்கு மக்கள் இன்று—இனி எனக்கு மக்கள் உளராதல் இல்லை, எனத் தெரீஇ—என்று தெரிந்து, வருத்தம் உற்று—துன்பம் அடைந்து, இருந்திடும் தக்கன்—வாளா இருந்த தக்கன், மற்றும் ஆயிரம் தவச் சிறாரை உதவினான்—மீண்டும் ஆயிரவர் தவஞ் செய்தற்குரிய புதல்வர்களைப் பெற்றான்.

அவர்களுக் கவர்களே சுற்றம் என்க. சுற்றம் மற்றிலர் என்பதாம். (28)

பெற்ற மைந்த ரைத் தழீஇப் பிறங்கு காமர் மீச்செல
வற்ற மில்சி றப்பின் வேத மறிவு றுத்தி யாதியா
நெற்றி யங்க ணானை யுன்னி நீவிர் யாவு நல்குவா
னற்ற வஞ்செய் தணைதிர் மான தத்த டத்தி லென்னவே.

பிறங்கு காமர் மீச் செல—புதல்வர்ப் பேற்றால் விளங்குகின்ற அழகு மேன்மேற் கிளர, பெற்ற மைந்தரைத் தழீஇ—தான் பெற்ற புதல்வர்களைத் தழுவி, அற்றம் இல் சிறப்பின் வேதம் அறிவு உறுத்து—அழிவில்லாத சிறப்பினை யுடைய வேதங்களை அறிவுறுத்தி, நீவிர்—நீவிரெல்லாம், ஆதி ஆம் நெற்றி அம் கணானை உன்னி—முதல்வராகிய அழகிய நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானை நினைந்து, யாவும் நல்குவான்—யாவற்றையுஞ் சிருட்டி செய்யும் பொருட்டு, மானதத் தடத்தில் நல் தவஞ்செய்து அணைதிர் என்ன -மானத வாவியை அடைந்து நல்ல தவஞ் செய்து வாருங்கள் என்று கூற. (29)

கேட்ட மைந்தர் தாதை தாள்கெ ழீஇய தங்கள் சென்னியிற்
சூட்டி யேவல் போற்றி யன்ன தூம லர்த்த டத்திடை
யீட்ட மோடு சென்றி ருந்தி ருந்த வம்பு ரிந்தனர்
காட்டி லுள்ள கயமு னிக்க ணங்க ளங்க ணுற்றென.

கேட்ட மைந்தர்—இவ்வாறு தக்கன் கூறியவைகளைக் கேட்ட புதல்வர்கள், தாதை தாள் தங்கள் சென்னியில் கெழீஇய சூட்டி—பிதாவின் பாதங்களைத் தங்கள் சிரசிற் செறிந்து பொருந்தும்படி சூட்டி, ஏவல் போற்றி—பிதாவின் கட்டளையைப் பேணி, அன்னதூ மலர்த் தடத்திடை ஈட்டமோடு சென்று—அந்தப் பரிசுத்தமான மலர்களையுடைய மானதவாவியைக் கூட்டமாக அடைந்து, காட்டில் உள்ள கயமுனிக் கணங்கள்—காட்டிலுள்ள யானைக் கன்றின் கூட்டங்கள், அங்கண் உற்றென இருந்து—அவ்விடத்தில் வந்து குழுமினாற்போலக் குழுமியிருந்து, இரும் தவம் புரிந்தனர்—பெரிய தவத்தைச் செய்தார்கள். (30)

**வேறு**

ஆன காலையி லனைய மைந்தர்க
ளூன மின்றிநோற் றொழுக முன்னரே
போன நாரதன் புணர்ப்பொன் றோர்ந்திடா
மான தத்தட மருங்கி லெய்தினான்.

ஆன காலையில்—அவ்வாறாய சமயத்தில், அனைய மைந்தர்கள்—அப்புதல்வர்கள், ஊனம் இன்றி நோற்று ஒழுக—குறைபாடு இன்றித் தவத்தை மேற்கொண்டிருக்க, முன்னர் போன நாரதன்—முன்னர் அவ்விடத்துக்குச் சென்ற நாரத முனிவர், ஒன்று புணர்ப்பு ஓர்ந்திடா—ஓர் உபாயத்தைச் சிந்தித்துக் கொண்டு, மானதத் தடம் மருங்கில்—மானதத் தடாகக் கரைக்கண், எய்தினான்—பின்னரும் சென்றார்.

முன்னர் என்றதனால் பின்னர் வருவிக்கப்பட்டது. முன்னையவர்களிடஞ் சென்றவாறு பின்னையவர்களிடமுஞ் சென்றா ரென்க. (31)

எய்தி யாவர்நீர் யாரு மாதவஞ்
செய்தி ரெப்பொருள் சேர்தல் வெஃகினீர்
நொய்தி லன்னது நுவல வேண்டுமாற்
கைத வம்பெறுக் கருத்தி னீரென.

எய்தி—தக்கன் புதல்வர்கள் தவஞ்செய்யும் இடத்தை அடைந்து, கைதவம் பெறுக் கருத்தினீர்—வஞ்சகம் இல்லாத மனத்தை யுடையவர்களே, மாதவம் செய்திர் நீர் யாரும் யாவர்—பெரிய தவத்தைச் செய்வீராகிய நீவிரெல்லாம் யாவிர்; எப்பொருள் சேர்தல் வெஃகினீர்—தவத்தால் எப்

பொருளை அடைய விரும்பினீர்; நொய்தில் அன்னது நுவறல் வேண்டும்—விரைவில் உங்கள் கருத்தைச் சொல்லுதல் வேண்டும்; என—என்று நாரத முனிவர் வினவ. (32)

தந்தை யாகியோன் றக்க னுங்கவற்
கந்தி வண்ணனு ரருளும் பேற்றினல்
வந்த மைந்தரேம் யாங்கண் மற்றவ
னிந்த வான்றடத் தெம்மை யேவினுன்.

தக்கன் ஆகியோன் தந்தை—தக்கன் என்று சொல்லப்படுபவன் எங்கள் பிதா; ஆங்கு அவற்கு—அந்தத் தக்கனுக்கு, அந்தி வண்ணனர் அருளும் பேற்றினல்—அந்திவண்ணரான சிவபெருமான் அருளிய வரத்தினல், வந்த மைந்தரேம் யாங்கள்—பிறந்த பிள்ளைகள் நாங்கள்; அவன் இந்த வான் தடத்து எம்மை ஏவினுன்—பிதாவாகிய அத்தக்கன் இந்த உயர்ச்சி பொருந்திய தடாகத்துக்கு எங்களை அனுப்பினுன். (33)

தேவ தேவனைச் சிந்தை யிற்கொடே
யாவி யோடுட லலச நோற்றிரீஇ
யோவில் பல்லுயி ருதவல் பெற்றிட
வேவி னுனெமை யென்று சொற்றனர்.

தேவதேவனை சிந்தையில் இரீஇக் கொடு—மகாதேவராகிய சிவபெருமானை மனத்தில் இருத்திக்கொண்டு, ஆவியோடு உடல் அலச நோற்று—உயிரும் உடம்பும் வருந்தத் தவஞ்செய்து, ஓவு இல் பல் உயிர் உதவல் பெற்றிட—ஒழிதல் இல்லாத பலவாகிய உயிர்களைப் படைக்குந் தொழிலைப் பெறும் பொருட்டு, எமை ஏவினுன் என்று சொற்றனர்—எங்களை அனுப்பினுன் என்று சொன்னுர்கள். (34)

சொற்ற காலையிற் றுகளி றூயவ
னற்ற வஞ்செய்வீர் நாதன் றளையே
பற்ற தாவுளீர் பயனென் றுன்னலீர்
குற்றம் யாவரே குறுக லார்களே.

சொற்ற காலையில்—தக்கன் புதல்வர்கள் இவ்வாறு கூறியபொழுது, துகள் இல் தூயவன்—குற்றமற்ற தூயோராகிய நாரதமுனிவர், நல் தவம் செய்வீர்—நன்மையாகிய தவத்தைச் செய்பவர்களே, நாதன் தாளையே பற்றதா உளீர்—நீவிர் முதல்வராகிய சிவபெருமானின் திருவடிகளையே பற்றுக்கோடாகக் கொண்டுள்ளீர், பயன் என்று உன்னலீர்—அவ்வாறு திருவடிகளைப் பற்றிக்

கொண்டிருப்பதையே முக்கியப் பிரயோசனம் என்று கருதுகின்றிலீர் ; குற்றம் குறுகலார்கள் யாவர்—இவ்வுலகில் இலக்கைத் தவறுதலாகிய குற்றத்தை அடையாதவர்கள் யாவர் ?

யாவரும் குற்றத்தில் தவறி வீழ்கின்றார்கள் ஆதலின், சிறுவர்களாகிய நும்பாற் குற்றங்காணுவதிற் பயனின் றென்பதாம். (35)

நோற்றி யாவையு நோக்கிச் செய்வினைப்
பேற்றை யெய்துவீர் பிறப்பு மாய்வது
மாற்று வீரலீர் மயக்கந் தீர்திரோ
வேற்ற மென்கொனீ ரீகின் றீரினும்.

நோற்று—தவஞ்செய்து, யாவையும் நோக்கி—எல்லா உயிர்களின் நிலையையும் பார்த்து, செய்வினைப் பேற்றை—படைத்தற் றொழிலைச் செய்வதாகிய உத்தியோகத்தை, எய்துவீர்—எய்துதற்குத் தவம் புரிபவர்களே, நீர் ஈகின்றீர்—தவத்தின் பயனாக நீவிர் படைக்கின்றீர் என்று வைத்துக்கொள்வோம், பிறப்பும் மாய்வதும் மாற்றுவீர்—எடுத்துக்கொண்ட தொழில் விசேடத்தாற் பிறப் பிறப்பாகிய துன்பத்தை மாற்ற வல்லீரா ?, அலீர்—மாற்ற வல்லீர் அல்லீர் ; மயக்கம் தீர்திரோ—அது நிற்க, போக்குதற்பாலதாய அஞ்ஞானமாகிய மயக்கத்தைத்தான் போக்கிக்கொள்வீரா ? அதுவும் இயலாதே ; இனும் ஏற்றம் என் கொல்—இவ்வாற்றால் இப்பொழுதைய நிலையினும் நீவிர் பெறும் படைப்புத் தொழிலாற் பெறும் உயர்ச்சி யாதோ ?

அத்தொழிலால் அடையற்பாலனவாய ஏற்றம் இல்லையா மென்றவாறு. பிறப்பிறப்பை மாற்றுவதும் மயக்கந் தீர்வதுமே உண்மையான ஏற்றம் என்க. மாற்றுவீர் வினாவாதல் உச்சரித்துக் காண்க. (36)

மேய மாசுதோய் விழைவின் மெய்யினர்
தூய தோர்தடந் துறையை யெய்தியுஞ்
சேய சேதகந் திளைத்தல் போலுமா
னீயிர் கொண்டதோர் நிலைமை தானுமே.

மேய—முன்னமே பொருந்திய, மாசு தோய்—அழுக்கு மூடிய, விழைவு இல் மெய்யினர்—விரும்பத்தகாத உடலினை யுடையவர், தூயது ஓர் தடம் துறையில் எய்தியும்—பரிசுத்தமானதும் ஒப்பில்லாததுமாகிய பெரிய நீர்த் துறையை அடைந்தும், சேய சேதகம் திளைத்தல்—அண்மைக்கண்ணதாகிய நீரைப் பயன் செய்யாது சேய்மைக்கண்ணதாகிய சேற்றில் முழுகுதலும், நீயிர் கொண்டது ஓர் நிலையும்—நீவிர்கள் மேற்கொண்ட தொன்றாகிய இந் நிலைமையும், போலும்—தம்முள் ஒக்கும்.

உடலினர் சேதகம் திளைத்தலும் நீயிர் படைப்பை மேற்கோடலும் ஒக்கும் என்றவாறு. சேயது 'து' கெட்டது. திளைத்தலும் என உம்மை வருவிக்க.

ஆல், ஓ, தான் அசை. செய்மை என்றதனுல் அண்மை வருவிக்கப்பட்டது. திருவடியைப் பற்றித் தவஞ்செய்தலாகிய நீர்நிலையில் நின்றுகொண்டு, படைப்பாகிய சேதகத்தை விழைதல் எத்துணைப் பேதைமை என்றதாம். (37)

தலையய தாகிய தவந்த னக்குநீர்
விலையய தாப்பெறும் விதியின் செய்கையு
நிலையய தாகுமோ நீடு நாளொடே
யுலக மீதுசீ ருறுவ தன்றியே.

தலையது ஆகிய தவம் தனக்கு—உயர்ச்சியுடையதாகிய தவத்துக்கு, நீர் விலையதா பெறும் விதியின் செய்கையும்—நீங்கள் விலையாகப் பெறுகின்ற சிருட்டித் தொழில் தானும், உலகமீது நீடு நாளொடு சீர் உறுவது அன்றி—நிலையாத இவ்வுலகத்திலே நீண்டகாலம் சிறப்புற்று வாழ்வதற்கு உபகார மாவ தன்றி, நிலையது ஆகுமோ—நிலையானது ஆகுமா?

விலை, பயன் என்னும் பொருட்டு. நிலையாயது பெறுதற்குரிய தவத்துக்கு விலையாக நிலையற்றது பெறுமாறு என்னை என்றவாறு. (38)

வேறு

போவதும் வருவதும் பொருமலு நன்குமின்
றுவதோர் கதியதே யாருயிர்க் குறுதியா
நீவிரக் கதியினை நினைகிலீ ரிறுதியு
மோவரும் பிறவியு மும்மைவிட் டகலுமோ.

போவதும் வருவதும்—இறப்பும் பிறப்பும், பொருமலும் நன்கும்—துன்பமும் இன்பமும் ஆகிய இரட்டைகள், இன்று ஆவது ஓர் கதியதே ஆர் உயிர்க்கு உறுதியாம்—இல்லையாய் உளதாவதொரு வீட்டு நெறியே அரிய உயிர்க்கு உறுதிபயப்பதாம்; அக்கதியினை நீவிர் நினைகிலீர்—அவ்வாருகிய வீட்டு நெறியினை நீவிர் நினைக்கின்றிலீர்; உம்மை—வீட்டு நெறியை நினையாத உங்களை, இறுதியும் ஓவு அரும் பிறவியும் விட்டகலுமோ—இறப்பும் ஒழிதல் இல்லாத பிறப்பும் விட்டு நீங்குமோ நீங்காவே.

இறப்புப் பிறப்பு நீங்காவாகவே துன்பும் அதுபோன்ற நிலையற்ற இன்பும் அவ்வாறே நீங்காவாம் என்றவாறு. (39)

சிறுவர்தம் முள்ளமுஞ் சேயிழை மகளிர்தம்
மறிவுமா லெய்தினேர் சிந்தையு மானவா
லுறுவதோர் பனுவலு முற்றிடும் பெற்றியே
பெறுவதா மன்றியே பின்னரொன் றுகுமோ.

சிறுவர்தம் உள்ளமும்—சிறுவர்களின் உள்ளத்தையும், சேயிழை மகளிர் தம் அறிவும்—செம்மையாகிய ஆபரணங்களை அணிந்த மகளிரின் அறிவையும்,

மால் எய்தினோர் சிந்தையும்—மயக்கம் எய்தினவர்களின் நினைவையும், மான—போல, உறுவதோர்பனுவலும்—நீவிர் தவஞ் செய்து படைப்புத் தொழிலைப் பெறுவதொருபுத்தியும், உற்றிடும் பெற்றியே பெறுவதாம்—இயல்பானே எய்தும் பெற்றியைப் பெறுவதேயாம்; அன்றி பின்னர் ஒன்று ஆகுமோ—அவ்வாறன்றி வேறொன்று ஆகுமா ஆகாதே.

அடையத்தகும் பெற்றியைப் பெறுவதே ஆங்காரியம். அதுவே புத்தியாம் என்றவாறு. ஆல் அசை. ஆன எனப் பிரிப்பினும் உவம உருபெனக் கொள்க.

பனுவல் ஆகுபெயர். பெறுவதாம்—பெறுவதற்குபகாரமாம். உற்றிடும் பெற்றி, விதியே மதியாகும் பெற்றி. (40)

ஆதலா லுங்களுக் கருள்செயுந் தன்மையான்
றாதையா கின்றதோர் தக்கனே யெனினவன்
பேதையா மீசனாற் பெருவளம் பெற்றவன்
பாததா மரையினிற் பரிவுறு நெறிமையால்.

ஆதலால்—இவ்வாற்றால், உங்களுக்கு அருள் செயும் தன்மையான்—உங்களுக்குப் பனுவலை உபதேசிக்கும் பண்பினனாய தேசிகனும், தாதை ஆகின்றது ஓர் தக்கனே—தந்தை ஆகிய தவறுதலில் ஒப்பில்லாத தக்கனே யாவன்; அவன் எனின்—அத்தக்கனோ வென்றால், பேதையாம்—அறிவிலி யாவன்; ஈசனால் பாத தாமரையினில் பரிவு உறு நெறிமையால்—ஆதலினாற்றானே சிவபெருமானிடம் அப்பெருமானின் பாதகமலங்களில் அன்பு பொருந்துறுத நெறியில், பெருவளம் பெற்றவன்—நிலையற்ற பெரிய வளங்களைக் கேட்டுப் பெற்றவன்.

ஆகின்றது தொழிற் பெயர். பேதையின் புத்தி கேட்கற்பாலதன்றாம். (41)

ஆங்கவன் மையலோ னாதலா லவனரு
ணீங்களு மனையரே நெறிதருந் தேசிகன்
றீங்கெலா நீக்கியே சிவகதிப் பாற்பட
வோங்குபே ரருளொடு முணர்த்துவா னல்லனோ.

ஆங்கு அவன்—அத்தக்கன், மையலோன் ஆதலால்—மயக்க அறிவினன் ஆகையினாலே, அவன் அருள் நீங்களும் அனையரே—அம்மயக்கமுடையோன் பெற்ற நீவிரும் அம் மயக்கமுடையீர் ஆவிர்; நெறி தரும் தேசிகன்—ஞான நெறியைப் போதிக்குந் தேசிகராவார், தீங்கு எலாம் நீக்கி—புன்னெறி யதனிற் செல்லும் போக்குக்கள் அனைத்தையும் விலக்கி, சிவகதிப் பாற்பட—சிவகதியைப் பற்றும்பொருட்டு, ஓங்கு பேர் அருளொடு—மிகுகின்ற பேரருளை முன்னிட்டுக்கொண்டு, உணர்த்துவான் அல்லனோ—உபதேசித்தருளுவார் அன்றோ.

அல்லனோ தேற்றப் பொருட்டு. (42)

முந்துமா யிரவரு முன்பரிப் பொய்கைவாய்த்
தந்தைதன் பணியின்மூ தாதைபோ னல்கவே
வந்துளார் நோற்றுழி மயலறத் தேற்றியே
யந்தமா நெறிநிறீஇ யரியவீ டருளினும்.

முந்தும்—முன்னரும், முன்பர் ஆயிரவரும்—நும் தமையன்மார் ஆயிர வர்களும், தந்தைதன் பணியின்—தந்தையாகிய தக்கனின் கட்டளையால், மூதாதை போல் நல்க—தந்தையின் தந்தையாகிய பிரமதேவரைப்போலப் படைத்தற் றொழிலைச் செய்யும் பொருட்டு, இப் பொய்கைவாய் வந்துளார்—இப்பொய்கையினிடத்து வந்து தவஞ் செய்துகொண் டிருந்தவர்கள், நோற் றுழி—அவ்வாறு அவர்கள் தவஞ்செய்துகொண்டிருக்கும்போது, மயல் அறத் தேற்றி—அவர்களுடைய மயக்கம் ஒழியும்படி உபதேசஞ் செய்து, அந்தம் மா நெறி நிறீஇ—முடிந்த பெருநெறியாகிய முத்திநெறியில் அவர்களை நிறுத்தி, அரிய வீடு அருளினும்—பெறுதற்கரிய வீடுபேற்றைக் கொடுத்தோம். (43)

என்னலு நாரத னெழின்மலர்த் தாளிணை
சென்னிமேற் சேர்த்தியே சிறியரே முய்யவே
யுன்னியீண் டேகிநீ ருணர்த்துமெய்ந் நெறியினை
யின்னதென் றுணர்கிலே மெமக்கருள் புரிதிரால்.

நாரதன் என்னலும்—நாரத மகாமுனிவர் என்றிவ்வாறு கூறுதலும், எழில் மலர் தாள் இணை சென்னிமேல் சேர்த்தி—நாரத முனிவருடைய அழகிய மலர்போன்ற இரண்டாகிய திருவடிகளைத் தமது சிரமேற் கொண்டு, சிறிய ரேம் உய்ய—சிறியேங்களும் உய்யும் பொருட்டு, உன்னி ஈண்டு ஏகி—திரு வுளங்கொண்டு ஈண்டு எழுந்தருளி, உணர்த்தும் மெய்ந்நெறியினை—எமக்கு உணர்த்துவதாகிய உண்மை நெறியை, இன்னது என்று உணர்கிலேம்—இத்தகையது என்று அறியேம், நீர் எமக்கு அருள் புரிதிர்—தேவரீர் சிறி யேங்களுக்கு உபதேசித்தருளுவீராக.

சிறியேமும் என உம்மை வருவிக்கப்பட்டது. நமர்களாகிய தமையன்மா ரன்றி நாமும் என்றவாறு. (44)

என்பவர்க் கருள்புரிந் தெண்ணிலார் வத்தொடு
நன்பொருட் காட்சியை நானுமக் குதவியே
வன்புலத் தாறுபோய் மதிமருண் டின்பமுந்
துன்புமுற் றுழல்பவந் தொலைவுசெய் திடுவனால்.

என்பவர்க்கு—என்றிவ்வாறு வேண்டுபவர்களாகிய தக்கன் புதல்வர் களுக்கு, எண் இல் ஆர்வத்தொடு அருள் புரிந்து—எல்லைகடந்த ஆராமை யோடுங் கிருபை பாலித்து, நான் உமக்கு நன் பொருட்காட்சியை உதவி—நான் நுங்களுக்கு நன்மையாகிய மெய்ப்பொருட்காட்சியை வருவித்து, வன் புலத்து ஆறு போய்—வலிய ஐம்புல வழியிற் சென்று, மதி மருண்டு—புத்தி

கலங்கி, இன்பமும் துன்பும் உற்று—இன்பத் துன்பச் சுழலிற் பட்டு, உழல் பவம்—உழலுகின்ற பிறவித் துன்பத்தை, தொலைவு செய்திடுவன்—ஒழித்தலைச் செய்து வைப்பேன். (45)

ஆதியார் தாளிணை யருளொடே வழிபடு
நீதியா நீரினர் நிலைமையாய் நின்றிடும்
பாதநான் கவர்பெறும் பதமுநான் கதனுளே
யோதியார் பெறுவதோ ருயர்பெருங் கதியதே.

ஆதியார் தாள் இணை—ஆதியாகிய சிவபெருமானுடைய திருவடிகளை, அருளொடு வழிபடும் நீதிஆம் நீரினர்—அப்பெருமானின் அருளால் வழி படுகின்ற நீதியாகிய இயல்பினையுடையவர்கள், நிலைமையாய் நின்றிடும் பாதம் நான்கு—சாதித்து நிலையாய் நிற்கும் பாதங்கள் நான்காம், பெறும் பதமும் நான்கு—அச்சாதகத்தாற் பெறும் பதங்களும் நான்காம், அதனுள்—அந்நான்கனுள், ஓதியார் பெறுவது—ஞானபாத சாதகர்கள் பெறுவது, ஓர் உயர் பெருங் கதி—ஒப்பில்லாத உயர்பெருங் கதியாகிய நான்காவதாம்.

அதுதான் சாயுச்சியம் எனப்படும் முத்தியாம்.

பாதம் நான்காவன சரியை கிரியை யோகம் ஞானம். பதம் நான் காவன சாலோக சாமீப சாரூப சாயுச்சியமாம். பதம் நிலை. இந்திரன் முதலிய இறையவர் பதம் என்புழிப் பதம் வேறு; இது வேறு. பலம் என்றும் பாடம். பலம் பயன். அது, பகுதிப்பொருள் விகுதி. (46)

முத்தியென் றிடுவதே மொழிவதோர் நாமமா
மத்திறங் கடவுளர்க் காயினுந் தெரிவதோ
நித்தனன் புறுவதோர் நெறியரா யிருவினை
யொத்தபண் போர்களா லுணரலா மல்லதே.

மொழிவதோர் நாமம்—அவ் வுயர்பெருங் கதிக்குச் சொல்லப்படுவதொரு பெயர், முத்தி என்றிடுவதாம்—முத்தி என்பதாம்; அத்திறம்—அம் முத்தியின் இயல்பு, நித்தன் அன்பு உறுவது ஓர் நெறியராய்—நித்தராகிய சிவபெருமான் மீது அன்பு மிகுவதொரு ஞான நெறியினராய், இருவினை ஒத்த பண்போர் களால்—இருவினை ஒப்புற்ற மலபரிபாகர்களால், உணரல் ஆம் அல்லது—ஒருவாறுணர்தல் கூடும் அல்லாமல், கடவுளர்க்கு ஆயினும் தெரிவதோ—தேவர்களுக்குத்தானுந் தெரிதற் கரியதாம். (47)

அந்நிலைக் கண்ணுளா ராதியார் தாளடைந்
தின்னலுக் கிடையதா மிப்பெரும் பிறவியுட்
பின்னருற் றிடுகிலர் பேசுதற் கரியதோர்
நன்னலத் தொடுகெழீஇ நாளுமின் புறுவரே.

அந்நிலைக் கண்ணுளார்—அந்த ஞான சாதகர், ஆதியார் தாள் அடைந்து—சிவபெருமானுடைய திருவடிகளைத் தலைப்பட்டு, இன்னலுக்கு இடையது ஆம் இப்பெரும் பிறவியுள்—துன்பத்துக்கிடமானதாகிய இந்தப் பெரிய பிறவிச் சுழியுள், பின்னர் உற்றிடுகிலர்—இனி வீழார்; பேசுதற்கு அரியது ஓர் நல் நலத்தொடு—வாக்குக்கெட்டாததும் ஒன்ருயதும்ஆகிய சிவத்தோடு, கெழீஇ—இருமையின் ஒருமை எய்தி, நாளும்—கணந்தோறும், இன்பு உறுவர்—புணர்ந் தாற் புணருந்தொறும் புதிதாகிய இன்பத்தில் ஒருகாலைக் கொருகான் மிகுவர்.

பேசுதற்கரியது என்றதனுல் இனம்பற்றி மனத்துக்கெட்டாததுமாம். இரண்டாவதொரு பதி யின்மையின் ஓர் என்ருர். நன்னலம் சிவம். நாள் ஆகுபெயர். (48)

ஆதலா னீவிரு மந்நெறிப் பாலுறீஇ
மேதைசால் யோகினுல் வீடுசே ருதிரெனு
வாதியா மிறைவனூ லறையுமுண் மைகளெலா
நாதனு ரருளினு ணரத னுரைசெய்தான்.

ஆதலால் நீவிரும் அ நெறிப்பால் உறீஇ—ஆதலினுலே நீங்களும் அந்த ஞானமார்க்கத்தில் நின்று, மேதை சால் யோகினுல்—பேரறிவு மிக்க ஞான யோக சாதகத்தால், வீடு சேருதிர் எனு—முத்தி யடையக் கடவீர்கள் என்று, ஆதியாம் இறைவன் நூல் அறையும் உண்மைகள் எலாம்—முதல்வராகிய சிவபெருமான் அருளிய முதனூல்களாகிய வேதாகமங்கள் முழங்கும் உண்மைகள் அனைத்தையும், நாதனுர் அருளினுல்—சிவபெருமானுடைய திருவருளினுலே, நாரதன் உரை செய்தான்—நாரத மகாமுனிவர் உபதேசித் தார். (49)

அன்றுநா ரதமுனி யவரெலா மவ்வழி
நின்றிடும் படிநிறீஇ நெறிகொள்வா னுலகமேற்
சென்றனன் பின்னரச் சிறுவரா யிரவரு
மொன்றுசிந் தனையினு லுயர்தவத் தொழுகினுர்.

நாரத முனி—நாரத மகாமுனிவர், அவர் எலாம்—தமது உபதேசத்தைக் கேட்ட அவர்கள் எல்லாம், அன்று அவ்வழி நின்றிடும்படி நிறீஇ—அப் பொழுதே அந்த ஞான நெறியில் நிற்கும்படி நிறுத்தி, வான் நெறிகொள் மேல் உலகம் சென்றனன்—ஆகாய வழியைக் கொண்ட மேல் உலகத்துக்குச் சென்ருர்; பின்னர்—அதன்மேல், அ சிறுவர் ஆயிரவரும்—ஆயிரவர் சிறுவர் களும், ஒன்று சிந்தனையினுல்—ஒருமையுறுகின்ற நினைவோடு, உயர் தவத்து ஒழுகினுர்—உயர்ந்த தவநிலையில் நின்ருர்கள். (50)

உயர்தவக் கிழமையி லொழுகியே யுற்றுளோர்
மயறொலைத் தருள்சிவன் மன்னுபே ரருளினால்
வியனெறிப் பாலதாம் வீடுபே றெய்தினா
ரயன்மகற் கினிமைகூ ராயிரங் குமரரும்.

அயன் மகற்கு இனிமை கூர் ஆயிரம் குமரரும்—பிரமபுத்திரனான தக்கனுக்கு மிக்க இனிமை செய்வோரான ஆயிரம் புதல்வர்களும், உயர் தவக் கிழமையில் ஒழுகி—உயர்ந்த தவ சம்பந்தம் உற்று அதில் ஒழுகி, உற்றுளோர் மயல் தொலைத்து அருள் சிவன் மன்னு பேர் அருளினால்—தம்மை அடைந்தவர்களின் மயக்கத்தைப் போக்கி அருள் புரிகின்ற சிவபெருமானுடைய நிலைபெற்ற பெரிய திருவருளினாலே, வியன் நெறிப் பாலதாம் வீடு பேறு எய்தினர்—உயர் நெறிப்பாலதாகிய வீடுபேற்றை எய்தினார்கள், (51)

உங்ஙன நாரத னோதிய துணர்வுறு
மிங்ஙனம் வீடுபே றெய்தலுஞ் சிறுவர்க
ளெங்ஙனம் போயினா ரின்னும்வந் திலரெனா
வங்ஙனஞ் சிறுவிதி யயருவா னாயினான்.

உங்ஙனம்—மேற்கூறிய பிரகாரம், நாரதன் ஓதியது உணர்வு உறு—நாரதமுனிவர் உபதேசித்த முத்தி மார்க்கத்தை உணர்ந்து, சிறுவர்கள் இங்ஙனம் வீடு பேறு எய்தலும்—புதல்வர்கள் ஆயிரவரும் இவ்வாறு முத்திப் பெரும்பேறு எய்தினர் ஆக, சிறுவர்கள் இன்னும் வந்திலர்—தவஞ்செய்யச் சென்ற புதல்வர்கள் இன்னமும் வந்தாரில்லை, எங்ஙனம் போயினர் எனா—இவர்களும் எவ்வாறாயினரோ என்று, அங்ஙனம்—அவ்வாற்றால், சிறுவிதி அயருவான் ஆயினான்—தந்தையாகிய தக்கன் அயர்ச்சி உறுவான் ஆயினான். சிறுவர்கள் பின்னுங் கூட்டப்பட்டது. (52)

வேறு

போதத் துணர்வா லவர்க்கண்ணுறும் போழ்து தன்னின்
மேதக்க மைந்தர் தமைநாரதன் மேவி மேலா
மோதித் திறமுள் ளனகூற வுணர்ந்து நோற்றுத்
தீதற்று வீடு புகுதன்மை தெரிந்த தன்றே.

போதத்து உணர்வால்—ஞான திருஷ்டியினால், அவர்க் கண்ணுறும் போழ்து தன்னில்—அப்புதல்வர்களை நோக்கியபோது, மேதக்க மைந்தர் தமை—மேன்மை வாய்ந்த புதல்வர்களை, நாரதன் மேவி—நாரத முனிவர் அடைந்து, மேலாம் ஓதி திறம் உள்ளன கூற—மேலாகிய ஞானத் திறங்களாய் உள்ளனவற்றை உபதேசிக்க, உணர்ந்து நோற்று—அவைகளை உணர்ந்து அவ்வழியிலே தவஞ்செய்து, தீது அற்று—தீமைகள் நீங்கி, வீடு புகு தன்மை தெரிந்தது—முத்தியடைந்த விதம் புலப்பட்டது. (53)

தெரிகின்ற வேலைக் கிளர்கின்றது சீற்ற முள்ளம்
பரிகின்ற தாவி பதைக்கின்றது பையுண் மாலை
விரிகின்ற தம்மா வியர்க்கின்றது மேனி விண்ணின்
றிரிகின் றதுகோ ளிரங்குற்றது ஞால மெல்லாம்.

தெரிகின்ற வேலை—தக்கன் ஞான திருட்டியால் நடந்தவைகளை அறிந்த போது, சீற்றம் கிளர்கின்றது—கோபம் மேன்மேற் கிளர்ந்தது, உள்ளம் பரிகின்றது—மனம் வருந்தியது, ஆவி பதைக்கின்றது—உயிர் பதைபதைத்தது, பையுள் மாலை விரிகின்றது—துன்பவரிசை விரிந்தது, மேனி வியர்க்கின்றது—உடல் வியர்த்தது, கோள் விண் இன்று இரிகின்றது—கோள்கள் ஆகாயத்தில் இல்லாமல் ஓடின, ஞாலம் எல்லாம் இரங்குற்றது—உலக முழுவதும் புலம்பியது.

தக்கன்பால் நிகழ்ந்தவை, அப்பொழுதைய நிலையைப் புலப்படுத்து முகத்தால் நிகழ்காலத்து வைத்துரைக்கப்பட்டன. (54)

தன்பா லகர்தஞ் செயல்கண்டு தளர்ந்து சோரும்
வன்பா லினனு கியதக்கன் வரத்தை வேண்டு
மென்பால ரென்பா லிலதாக்கின னெண்ண மிக்கு
நன்பா லுலகத் துழல்வானினி நாளு மென்றான்.

தன் பாலகர் செயல் கண்டு—தன் புதல்வர்கள் நாரதமுனிவர் சொற் கேட்டுச் செய்த செய்கையை நோக்கி, தளர்ந்து சோரும்—தளர்ந்து சோருகின்ற, வன் பாலினன் ஆகிய தக்கன்—வன்கண்மையனுகிய தக்கன், வரத்தை வேண்டும் என்பாலர்—படைத்தற் றெழிலுக்குரிய வரத்தை விரும்பும் என் புதல்வர்களை, என்பால் இலது—என் சார்பின்வழி நிற்றல் இல்லாமல், ஆக்கினன்—மனமாற்றஞ் செய்தவன் எவனே அவன், எண்ணம் மிக்கு—எண்ணங்கள் அதிகரித்து, நன்பால் உலகத்து—நன்மைப் பகுதியை உடைய இவ்வுலகத்தில், இனி நாளும் உழல்வான் என்றான்—இனி நாடோறும் உழன்று திரியக்கடவன் என்று சாபமிட்டான்.

இவ்வுலகம் அமைதி கைகூடுதற்குரிய நன்பால் உலகம். இப்படிப்பட்ட உலகத்திலே எண்ணிறந்த எண்ணங்களைச் சுமந்துகொண்டு நாரதன் திரிவானுக என்றவாறு. (55)

மேனு ரதன்செய் புணர்ப்புன்னி வெகுண்டு தக்க
னேனது சாப நுவன்றேநனி நோற்க மைந்த
ராளுரை நல்கேன் மகப்பெற்ற தமையு மென்னு
மானர் தமையே புரியத்தன் மனம்வ லித்தான்.

தக்கன் நாரதன் செய் புணர்ப்பு உன்னி—தக்கன் நாரதமுனிவர் செய்த சூழ்ச்சியை நினைந்து, நோனது—பொறுமை இழந்து, வெகுண்டு—கோபித்து, சாபம் நுவன்று—சாபமொழி பகர்ந்து, மேல்—அதன்மேல், நோற்க—படைப்புத் தொழிலைப் பெறத் தவஞ்செய்யும் பொருட்டு, மைந்தர் ஆனரை நனி நல்கேன்—புதல்வர்க ளாயினரை ஆயிரக்கணக்கிற் பெறுதலைச் செய்யேன்; மகப் பெற்றது அமையும்—ஆண்மக்களைப் பெற்றது போதும்; என்ன—என்று கருதி, மானர் தமையே புரிய—மான்போன்ற பெண்மக்களையே இனிப் பெறுதற்கு, மனம் வலித்தான்—மனத்தில் நினைந்தான். (56)

## வேறு

இருபதின் மேலு மூவ ரேந்திழை மாரை நல்கிப்
பெருமைகொ டக்கன் றன்மன் பிருகுவே மரீசி யென்போன்
கருணைகொள் புலத்தி யன்னங் கிராப்புல கன்வ சிட்டன்
திரிவிலத் திரிதீ வேள்வி சீர்ப்பித ராவுக் கீந்தான்.

பெருமை கொள் தக்கன்—பெருமை படைத்தோன தக்கன், இருபதின் மேலும் மூவர் ஏந்திழைமாரை நல்கி—இருபத்துமூவர் பெண்பிள்ளைகளைப் பெற்று, தன்மன் பிருகு மரீசி என்போன்—தருமன் பிருகு மரீசி என்று சொல்லப்படுபவன், கருணைகொள் புலத்தியன்—இரக்கமுடைய புலத்தியன், அங்கிரா புலகன் வசிட்டன்—, திரிவு இல் அத்திரி—கெடுதலில்லாத அத்திரி, தீ—அக்கினி, வேள்வி—கிரது, சீர்ப்பிதராவுக்கு—சிறப்புப் பொருந்திய பிதரா ஆகிய பதினொருவருக்கு, ஈந்தான்—மணஞ்செய்து கொடுத்தான்.

* தன்மன்—தருமன் எனப் பெயரிய முனிவன். வேள்வியின் பரியாய நாமங் கிரது ஆதலால் கிரதுவை வேள்வி எனக் கூறினர். (57)

துய்யதோர் சுபுத்தி புத்தி சுரைசையே திருதி துட்டை
செய்யநற் கிரியை கீர்த்தி சிரத்தையோ டிலச்சை மேதா
மைவிழிக் கத்தி சாந்தை வபுவைமுன் றருமன் வேட்டுப்
பொய்தவி ரிருபா னேழு புதல்வரை யளித்தான் மன்னே.

துய்யதோர் சுபுத்தி—தூய்மையுடைய ஒப்பில்லாத சுபுத்தி, புத்தி சுரசை திருதி துட்டை—, செய்ய நல் கிரியை—செவ்விய நல்ல கிரியை, கீர்த்தி சிரத்தை இலச்சை மேதா—, மைவிழிக் கத்தி—கரிய விழியினளாய கத்தி, சாந்தை வபுவை—சாந்தை வபு ஆகிய பதின்மூவரை, முன் தருமன் வேட்டு—முதற்கண் தருமன் மணந்து, பொய் தவிர் இருபான் ஏழு புதல்வரை அளித்தான்—சத்திய சந்தரான இருபத்தேழு புதல்வர்களைப் பெற்றான். (58)

கேதமில் பிருகு வென்பான் கியாதியைக் கொண்டு புல்லி
யேதமில் விதாதாத் தாதா வென்றிரு சிறுரை யீன்று
சீதள வனசங் கொண்ட செந்திரு வையுமுன் றந்து
மாதவன் றனக்கு நல்கி மாதவத் திருந்தான் மாதோ.

கேதம் இல் பிருகு என்பான் கியாதியைக் கொண்டு புல்லி—குற்றமற்ற பிருகு என்பவன் கியாதியை மணந்து கலந்து, சீதள வனசங் கொண்ட செந்திருவை முன் தந்து—குளிர்ச்சி பொருந்திய தாமரை மலரை இடமாகக் கொண்ட திருமகளை முதற்கட் பெற்று, மாதவன் தனக்கு நல்கி—திருமாலுக்கு மணஞ்செய்து கொடுத்து, ஏதம் இல் விதாதா தாதா என்று இரு சிறுரையும் ஈன்று—பின் துன்பம் இல்லாத விதாதா தாதா என்று சொல்லப் படுகின்ற இரு புதல்வர்களையும் பெற்று, மாதவத்து இருந்தான்—சிறந்த தவத்திலிருந்தான்.

முன் என்பதனுல் பின் என்பது வருவிக்கப்பட்டது. திருவையும் என்புழி உம்மை சிறுருடன் கூட்டப்பட்டது. (59)

தாரணி புகழ்ம ரீசி சம்பூதி தன்னை வேட்டாங்
கீரிரு பிணுக்க ளீந்தா னிவர்வழிப் பிறந்தார் பல்லோர்
போரியல் புலத்தை வென்ற புலத்திய முனிவ னென்பா
ஞரிசன் னதியை வேட்டு நன்மகார் பலரைத் தந்தான்.

தாரணி புகழ் மரீசி சம்பூதி தன்னை வேட்டு—உலகம் புகழும் மரீசி சம்பூதியை மணந்து, ஈர் இரு பிணுக்கள் ஈந்தான்—நான்கு பெண்களைப் பெற்றுன்; இவர்வழிப் பல்லோர் பிறந்தார்—இந் நால்வர்வழியிற் பலர் பிறந்தனர்; போர் இயல் புலத்தை வென்ற புலத்திய முனிவ னென்பான்—போரிடுகின்ற ஐம்புலன்களை வென்ற புலத்திய முனிவன், நாரி சன்னதியை வேட்டு—நாரி சன்னதியை மணந்து, நன் மகார் பலரைத் தந்தான்—நன் மக்கள் பலரைப் பெற்றுன்.

* நாரி சன்னதி—சன்னதியாய பெண். (60)

அங்கிரா மிருதி யென்னு மாயிழை தனைம ணந்து
பங்கமி லங்கி தீரன் பரதனு மகாரைப் பெற்று
மங்கையர் நால்வர் தம்மை மகிழ்ந்துட னளித்தா னன்ஞர்
தங்குடிப் பிறந்த மேலைத் தவத்தரு மளப்பி லோரால்.

அங்கிரா மிருதி என்னும் ஆயிழை தனை மணந்து—அங்கிரா மிருதி என்னும் பெண்ணை மணந்து, பங்கம் இல் அங்கிதீரன் பரதனும் மகாரைப் பெற்று—குற்றமற்ற அங்கிதீரன் பரதன் ஆகிய புதல்வர்களைப் பெற்று, மங்கையர் நால்வர் தம்மை மகிழ்ந்து உடன் அளித்தான்—நான்கு பெண் பிள்ளைகளையும் மகிழ்ச்சியுடன் பெற்றுன்; அன்ஞர் தம் குடிப்பிறந்த மேலைத் தவத்தரும் அளப்பிலர்—அவர்கள் குடியிற் பிறந்த உயர்ந்த தவமுடையாரும் அநேகர். (61)

பெருமைகொள் புலக னென்போன் பிருதியைக் கொண்டு தத்தாத்
திரிதனைப் பயந்தா னன்னோன் சீர்வழிக் கும்பன் போந்தா
னொருமைசேர் வசிட்ட னென்போ னூற்சையை மணஞ்செய் தாங்கோர்
தெரிவையை நல்கி மைந்த ரெழுவரைச் சிறப்பிற் றந்தான்.

பெருமை கொள் புலகன் என்போன் பிருதியைக் கொண்டு—பெருமை பொருந்திய புலகன் பிருதியை மணந்து, தத்தாத்திரிதனைப் பயந்தான்—தத்தாத்திரி என்னும் புதல்வனைப் பெற்றான்; அன்னோன் சீர் வழிக் கும்பன் போந்தான்—அத் தத்தாத்திரியின் சிறப்புப் பொருந்திய வழியிற் கும்பன் என்பான் பிறந்தான்; ஒருமை சேர் வசிட்டன் என்போன்—ஒருமை வாய்ந்த வசிட்டன், ஊற்சையை மணம் செய்து—, ஓர் தெரிவையை நல்கி—ஒரு புத்திரியைப் பெற்று, மைந்தர் எழுவரைச் சிறப்பில் தந்தான்—ஏழு புதல்வர்களையும் சிறப்போடு பெற்றான்.

கும்பன் அகஸ்தியர். ஒருமை—மன ஒருமை. (62)

அத்திரி யென்னு மேலோ னனசூயை தன்னை வேட்டுச்
சத்திநேத் திரனே திங்கள் சனிசங்க தான னென்னும்
புத்திரர் தம்மைத் தந்தான் பொங்குதீச் சுவாவை வேட்டு
மெய்த்திறல் படைத்த மைந்தர் மூவரை விரைவொ டீந்தான்.

அத்திரி என்னும் மேலோன் அனசூயை தன்னை வேட்டு—அத்திரி என்னும் உயர்ந்தோன் அனசூயையை மணந்து, சத்திநேத்திரன் திங்கள் சனி சங்க தானன் என்னும் புத்திரர் தம்மைத் தந்தான்—சத்திநேத்திரன் சந்திரன் சனி சங்கதானன் என்னும் புத்திரர்களைப் பெற்றான், பொங்கு தீ சுவாவை வேட்டு—பொங்குகின்ற அக்கினி சுவா என்பவளை மணந்து, மெய்த்திறல் படைத்த மைந்தர் மூவரை விரைவொடு ஈந்தான்—சீரவன்மை வாய்ந்த மூவர் மைந்தரை விரைந்து பெற்றான்.

சுவா—சுவாகாதேவி. (63)

கவிபுகழ் கிரது வானோன் கமைதனை மணத்திற் கூடி
யுவகையின் மூன்று பால ருதவினன் பிதரா வென்போன்
சுவதையென் றிசைக்க நின்ற துடியிடை தன்னை வேட்டுத்
தவலருஞ் சிறப்பின் மேனை தரணிமங் கையரைத் தந்தான்.

கவி புகழ் கிரது ஆனோன் கமை தனை மணத்திற் கூடி—கவிந்த புகழினை யுடைய கிரது என்பான் கமை என்பாளை மணஞ்செய்து கூடி, உவகையின் மூன்று பாலர் உதவினன்—உவகையோடு மூவர் புதல்வர்களைப் பெற்றான்; பிதரா என்போன் சுவதை என்று இசைக்க நின்ற துடி இடை தன்னை வேட்டு—பிதரா என்பவன் சுவதை என்று சொல்லப்பட்டு இளையளாய் நின்ற

துடிபோன்ற இடையினை யுடையாளை மணந்து, தவல் அரும் சிறப்பின் மேனை தரணி மங்கையரைத் தந்தான்—கேடில்லாத சிறப்பினையுடைய மேனை பூமி என்னும் புதல்வியர்களைப் பெற்றான்.

கவி—வெள்ளி. வெள்ளியாற் புகழப்படும் கிரது எனினுமாம். (64)

அந்தநன் மேனை தன்னை யார்வமோ டிமவான் கொண்டான்
முந்துறு தரணி தன்னை முறையினுன் மேரு வேட்டு
மந்தர கிரியை நல்க மற்றது நோற்று முக்க
ணெந்தைதன் னிடத்தெஞ் ஞான்று மிருந்திடப் பெற்ற தன்றே.

அந்த நல் மேனை தன்னை—அந்த நல்ல மேனை என்பவளை, இமவான் ஆர்வமோடு கொண்டான்—இமயமலையரசன் விருப்பத்தோடு மணந்தான்; முந்து உறு தரணி தன்னை—முதன்மை மிக்க பூமியை, மேரு முறையினுல் வேட்டு—மேருமலை முறைப்படி மணஞ்செய்து, மந்தர கிரியை நல்க—மந்தர கிரியைப் பெற்றதாக, அது—அம் மந்தரகிரி, நோற்று—தவஞ்செய்து, முக்கண் எந்தை தன்னிடத்து எஞ்ஞான்றும் இருந்திடப் பெற்றது—முக்கண்ணராகிய சிவபெருமான் தன்னிடத்தில் எந்நாளும் எழுந்தருளியிருக்கப்பெற்றது. (65)

விண்ணுயர் மேருப் பின்னர் வேலையென் பவளை நல்கித்
தண்ணுறு கடற்கு நல்கச் சரவணி யென்ன வாங்கோர்
பெண்ணினை யனையன் பெற்றுப் பெரும்புகழ்ப் பிராசி னப்பே
ரண்ணலுக் குதவ வன்னு னையிரு மகாரைத் தந்தான்.

விண் உயர் மேரு பின்னர் வேலை என்பவளை நல்கி—ஆகாய மளாவிய மேரு அதன்மேல் வேலை என்பவளைப் பெற்று, தண் உறு கடற்கு நல்க—தண்மை மிக்க வருணனுக்கு மணஞ்செய்து கொடுக்க, அனையன் சரவணி என்ன ஆங்கு ஓர் பெண்ணினைப் பெற்று—அவன் சரவணி என்னும் ஒரு பெண்ணைப் பெற்று, பெரும் புகழ் பிராசினப்பேர் அண்ணலுக்கு உதவ—பெரும் புகழினையும் பிராசினன் என்னும் பெயரினையு முடைய பெருமையிற் சிறந்த முனிவனுக்கு மணஞ்செய்து கொடுக்க, அன்னுன் ஐயிரு மகாரைத் தந்தான்—அந்தப் பிராசின முனிவன் பத்துப் புதல்வர்களைப் பெற்றான்.

கடல், கடற்கரசனுன வருணன். (66)

தக்கன் மகப்பெறு படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் 128.

---

## சந்திர சாபப் படலம்

இன்னபல் கிளைகண் மல்க விருந்திடுந் தக்கன் பின்னர்த்
துன்னிய நாண்மீ னத்துட் டொகைபெறு மிருபா னேழு
கன்னியர் தம்மை நல்கிக் கடிமண விதியி னீராற்
றன்னிக ரில்லாப் பொற்பிற் றண்மதிக் கடவுட் கீந்தான்.

இன்ன பல் கிளைகள் மல்க—இத்தன்மையவாய பல கிளைகள் பெருக, இருந்திடும் தக்கன்—அரசு வீற்றிருந்த தக்கன், பின்னர்—அதன்மேல், துன்னிய நாண் மீனத்துள்—செறிந்த நட்சத்திரங்களுக்குள்ளே, இருபான் ஏழு தொகை பெறு கன்னியர் தம்மை நல்கி—இருபத்தேழு என்னுந் தொகையைப் பெற்ற அசுவினி முதலிய பெண்களைப் பெற்று, கடி மண விதியின் நீரால்—விவாக விதிப்படி, தன் நிகர் இல்லாப் பொற்பின் தண் மதிக் கடவுட்கு ஈந்தான்—தனக்கு ஒப்பில்லாத அழகினையுடைய குளிர்ந்த சந்திரதேவனுக்கு மணஞ் செய்து கொடுத்தான். (1)

ஈந்தபின் மதியை நோக்கி யார்க்குமோர் பெற்றித் தாக
வாய்ந்திடு மார்வ முய்த்து மருவுதி சிலர்பா லன்பிற்
றோய்ந்தொரு சிலரை யெள்ளிச் சுளிகிற்பா யல்லை யென்னு
வாய்ந்திவை புகன்று தேற்றி யனையரோ டேகச் செய்தான்.

ஈந்தபின்—மணஞ்செய்து கொடுத்தபின், மதியை நோக்கி—சந்திரனைப் பார்த்து, யார்க்கும் ஓர் பெற்றித்து ஆக வாய்ந்திடும் ஆர்வம் உய்த்து மருவுதி—யாவரிடத்தும் ஒரு தன்மைத்தாக வாய்ப்பாகிய காதலைச் செய்து கூடக்கடவை, சிலர் பால் அன்பில் தோய்ந்து—சிலரிடத்து அன்போடு கூடி, ஒரு சிலரை எள்ளி—மற்றொரு சிலரை இகழ்ந்து, சுளிகிற்பாய் அல்லை என்னு—வெறுத்தல் செய்யாதே என்று, இவை ஆய்ந்து புகன்று தேற்றி—இப்புத்தி மதிகளை ஆராய்ந்து கூறித் தெளிவித்து, அனையரோடு ஏகச் செய்தான்—அப் பெண்களோடு செல்லும்படி செய்தான். (2)

ஏகிய கடவுட் டிங்க ளிலங்கெழின் மானத் தேறி
மாகநீ ணெறியிற் போந்து மடந்தைய ரவ்வரை யெல்லா
மோகையான் மேவ வுன்னி யோர்பகற் கொருவர் பாலாய்ப்
போகமா ரின்ப மாற்றி வைகலும் புணர்ச்சி செய்தான்.

ஏகிய கடவுள் திங்கள்—அவ்விடத்தை விட்டு நீங்கிய சந்திரதேவன், இலங்கு எழில் மானத்து ஏறி—விளங்குகின்ற அழகிய விமானத்தில் ஏறி, நீள் மாக நெறியில் போந்து—நீண்ட ஆகாய வழியிற் சென்று, மடந்தையர் அவரை எல்லாம்—மனைவியராகிய அப் பெண்கள் அனைவரையும், ஓகையால் மேவ உன்னி—உவகையோடு மருவ எண்ணி, ஓர் பகற்கு ஒருவர் பாலாய்—ஒரு தினத்துக்கு ஒருத்தி பக்கல்ஆகி, ஆர் இன்ப போகம் ஆற்றி—தெவிட்டாத இன்ப போகத்தை அநுபவித்து, வைகலும் புணர்ச்சி செய்தான்—நாள்தோறும் கூடி வாழ்ந்தான். (3)

இன்னணம் புணர்ச்சி போற்றி யேகிய திங்கட் புத்தேள்
பன்னிய ரனையர் தம்மிற் பழுதிலா வார ருனும்
பின்னவ டானு மாற்றப் பேரெழி லுடைய ராக
வன்னவர் திறத்து மேலா மார்வமோ டணுக லுற்றான்.

இன்னணம்—இவ்வாறு, புணர்ச்சி போற்றி ஏகிய திங்கட் புத்தேள்—கூட்டரவு நிகழ்த்திய சந்திரதேவன், பன்னியர் அனையர் தம்மில்—அம் மனைவியருள், பழுது இலா ஆரல் தானும் பின்னவள் தானும்—குற்றமற்ற கார்த்திகையும் உரோகிணியும், ஆற்றப் பேர் எழில் உடையர் ஆக-மிக்க பேரழகினை உடையராக, அன்னவர் திறத்து மேலாம் ஆர்வமோடு அணுகல் உற்றான்—அவர்கள்பால் மிக்க காதலோடு கூட்டரவு செய்தான். (4)

ஏனையர் தம்பாற் சேரா னிருதுவின் வேலை பூத்த
தேனிமிர் சொல்லார் மாட்டுச் சேருருக் கணவ ரேபோல்
வானிடை மதியப் புத்தேண் மறுத்தனன் றிரியும் வேலை
யானதோர் பான்மை நோக்கி யவரெலா முனிந்து போனார்.

ஏனையர் தம்பால் சேரான்—மற்றைய மனைவியர்களை அணுகானாய், பூத்த இருதுவின் வேலை—பூப்பெய்திய இருது காலத்திலே, தேன் நிமிர் சொல்லார் மாட்டுச் சேர் உருக் கணவர் போல்—தேனையொத்த இனிய சொல்லினை யுடைய பெண்களிடம் அணுகலுறாத கணவரைப்போல, மதியப் புத்தேள் மறுத்தனன்—சந்திரதேவன் அணுக மறுத்து, வான் இடை திரியும் வேலை—ஆகாயத்திற் சஞ்சரிக்கும்போது, ஆனது ஓர் பான்மை நோக்கி—அவ்வாறாகிய அவன் தன்மையைக் கண்டு, அவர் எலாம் முனிந்து போனார்—மற்றைப் பெண்களாகிய அவரனைவரும் கோபித்துக்கொண்டு சென்றனர்.

இருது காலம்—சூதக காலம். (5)

போந்தனர் தக்கன் றன்பாற் பொருமியே பொலம்பூட் கொங்கை
யேந்திழை மாதர் தங்கள் கேள்வன தியற்கை கூறக்
காந்திய வுளத்த னாகிக் கனன்றவன் கலைக ளெல்லாந்
தேய்ந்தில வாக வென்று தீமொழிச் சாபஞ் செய்தான்.

பொலம் பூண் கொங்கை ஏந்து இழை மாதர்—பொன்னலாய பூணை அணிந்த கொங்கைகளையும் ஏந்திய ஆபரணங்களையும் உடைய அப்பெண்கள், தக்கன் தன்பால் போந்தனர்—தக்கனிடஞ் சென்று, பொருமி—துன்புற்று, தங்கள் கேள்வன் இயற்கை கூற—தமது கணவனின் இயல்பை உரைக்க, காந்திய உளத்தன் ஆகி கனன்று—தக்கன் எரிந்த உள்ளத்தை உடையவனுய்க் கோபித்து, அவன் கலைகள் எல்லாம் தேய்ந்து இல ஆக என்று—அச்சந்திர னுடைய கலைகள் அனைத்தும் தேய்ந்து இல்லையாகுக என்று, தீ மொழிச் சாபம் செய்தான்—கொடு மொழிகளினுற் சாபம் இட்டான். (6)

செப்பருந் திருவில் வைகுஞ் சிறுவிதி யென்பான் சொற்ற
விப்பெருஞ் சாபந் தன்னு லென்றுமெஞ் சாத திங்க
ளொப்பருங் கலைகள் வைகற் கோரொரு கலையா யஃகாப்
பொய்ப்பெருஞ் செல்வம் பெற்ருேன் புகழெனக் குறைந்த வன்றே.

செப்பு அரும் திருவில் வைகும் சிறுவிதி என்பான் சொற்ற இப்பெரும் சாபந்தன்னுல்—சொல்லுதற்கரிய செல்வத்திலிருக்கின்ற தக்கன் இட்ட இந்தப் பெரிய சாபத்தால், என்றும் எஞ்சாத திங்கள் ஒப்பு அரும் கலைகள்—என்றுங் குறையாத சந்திரனுடைய ஒப்பற்ற கலைகள், வைகற்கு ஓர் ஒரு கலையாய்—நாளொன்றுக்கு ஒவ்வொரு கலை தேய்வதாய், பொய்ப் பெரும் செல்வம் பெற்ருேன் புகழ் என—பொய்யாகிய பெரிய செல்வத்தைப் பெற்றவனுடைய பொய்ப்புகழ் தேய்வது போல, அஃகா குறைந்த—தேய்ந்து தேய்ந்து குறைந் தன. (7)

மூன்றுற ழைந்து வைகன் முடிந்துழி மதிய மென்போ
னான்றதண் கலையின் மூவைந் தழிதலு மவனே யென்னச்
சான்றுரை செய்தல் போலோர் தண்கலை யிருத்த லோடு
மான்றனன் மெலிந்து வெள்கி வானவர் கோனை யுற்ருன்.

மூன்று உறழ் ஐந்து வைகல் முடிந்துழி—பதினைந்து நாள் கழிந்தபோது, மதியம் என்போன்—சந்திரன் ஆனவன், ஆன்ற தண் கலையில் மூவைந்து அழிதலும்—நிறைந்த குளிர்ந்த கலைகளிற் பதினைந்துதேய்ந்து அழிந்துபோத லும், ஓர் தண் கலை—எஞ்சிய ஒரு தண்ணிய கலை மாத்திரம், அவனே என்னச் சான்று உரை செய்தல் போல—இவன்ருன் அந்தச் சந்திரன் என்று சான்று பகர்வது போல, இருத்தலோடும்—எஞ்சியிருக்க, மான்றனன் மெலிந்து வெள்கி—அதனுல் மயங்கி மெலிந்து நாணி, வானவர்கோனை உற்ருன்—தேவர்கள் தலைவனுகிய இந்திரனை அடைந்தான்.

ஒரு கலை, அடையாள மாத்திரையாய் எஞ்சியிருந்ததென்க. அதுவுந் தொலையுமாயின் சந்திரன் என்ருருவ னிலனு மென்பது. (8)

தக்கனென் பவன்சா பத்தாற் றண்கலை யனைத்தும் போகி
யிக்கலை யொன்று நின்ற தீதுமின் றிறக்கு மென்னின்
மிக்கவென் னியல்புங் குன்றும் வியன்பெயர் தொலையும் யாண்டும்
புக்கதொல் புகழும் போகும் புகல்வசை யாகு மன்றே.

தக்கன் என்பவன் சாபத்தால் தண்கலை அனைத்தும் போகி—தக்கன் இட்ட சாபத்தாற் குளிர்ந்த கலைகளனைத்துந் தொலைந்து, இக்கலை ஒன்று நின்றது—இந்த ஒரு கலை மாத்திரம் எஞ்சியிருந்தது ; ஈதும் இன்று இறக்கும் என்னின்—இக்கலையும் இன்றோடு தொலையுமாயின், மிக்க என் இயல்பும் குன்றும்—மேலான எனது தன்மையுங் குறையும்; வியன்பெயர் தொலையும்—பெரிய பெயருந் தொலையும்; யாண்டும் புக்க தொல் புகழும் போகும்—எங்கும் பரவிய பழைமையான புகழும் நீங்கும் ; வசை புகல் ஆகும்—வசைதான் எனக்குப் புகலிடமாகும்.

* மிக்க இயல்பு பூரணசந்திரன் என்னும் இயல்பு. வியன்பெயர் கலாநிதி என்னும் பெயர். புகழ், சீதள கிரணங்களைப் பரப்பிப் பலவகை உயிர்களைப் பெருகச் செய்யும் புகழ். (9)

ஈங்கினிச் செய்வ தென்னோ வுணர்கிலே னெற்கோர் புந்தி
தீங்கற வுரைத்தி யென்னச் செப்பின னிரங்கி யேங்கித்
தாங்கரும் பையுள் வேலை சார்தலுந் தழுவி யெற்கோர்
பாங்கனே யஞ்ச லென்னா விவைசில பகர்த லுற்றான்.

இனி ஈங்கு செய்வது என்—இனி இங்குச் செய்யவேண்டுவ தென்னே ?, உணர்கிலேன்—யான் ஒன்றும் அறியேன், தீங்கு அற எற்கு ஓர் புந்தி உரைத்தி என்ன—குறைவு நீங்க எனக்கு ஒரு புத்தி உரைப்பாயாக என்று, செப்பினன் இரங்கி ஏங்கி—கூறிப் புலம்பி ஏங்கி, தாங்கு அரும் பையுள் வேலை சார்தலும்—தாங்குதற்கரிய துன்பக்கடலுள் மூழ்குதலும், தழுவி—அந்தச் சந்திரனை அணைத்து, எனக்கு ஓர் பாங்கனே—எனக்கு ஒப்பில்லாத தோழமையுடையாய், அஞ்சல் என்னா—அஞ்சாதே என்று, சில இவை பகர்தல் உற்றான்—இந்திரன் சிலவற்றைச் சொல்லுவான் ஆயினான். (10)

எந்தைவாழ் கயிலை தன்னி லிபமுகன் முதிரை யாவுந்
தந்தபே ரகடு மங்கைச் சகுலியு நோக்கி நக்கா
யந்தநா ளனையான் சீறி யாருநிற் காணா ராகி
நிந்தைசெய் தகல வேநீ நீசரிற் றிகழ்தி யென்றான்.

அந்த நாள்—முன்னொரு காலத்திலே, எந்தை வாழ் கயிலை தன்னில்—சிவபெருமான் இருக்குந் திருக்கைலாசமலையில், இபமுகன்—விநாயகப்பெருமானுடைய, முதிரை யாவும் தந்த பேர் அகடும்—முதிரை வருக்கங்கள் அனைத்

தையும் உட்கொண்ட பெரிய திருவயிற்றையும், அங்கைச் சகுலியும்—அழகிய திருக்கையில் உள்ள மோதகத்தையும், நோக்கி நக்காய்—பார்த்துச் சிரித்தாய்; அனையான் சீறி—அவ்விநாயகப்பெருமான் அப்பொழுது உன்னைக் கோபித்து, யாரும் நின் காணுர் ஆகி—எவரும் உன்னை நோக்காராய், நிந்தை செய்து அகல—உன்னை இகழ்ந்து விலகிச்செல்லும்பொருட்டு, நீ நீசரின் திகழ்தி என்றுன்—நீ நீசரைப்போல இருக்கக்கடவை என்று சாபமிட்டார்.

முதிரை ஆகுபெயர்; சிறு தானிய உணவு. (11)

என்றவச் சாபந் தன்னு லியாவரு மிறப்ப வெள்ளி
யன்றுதொட் டுனைநோக் காரா யகலநீ வெள்கி விண்மேற்
சென்றிலை யொடுங்க லுடித் திசைமுகன் முதலோர் வெள்ளிக்
குன்றிடை யேகி முன்னேன் குரைகழல் பணிந்து சொல்வார்.

என்ற அச் சாபந் தன்னுல்—என்றிங்ஙனம் விநாயகப்பெருமான் இட்ட சாபத்தால், அன்று தொட்டு யாவரும் உனை நோக்காராய்—அன்று தொடக்கம் யாவரும் உன்னைப் பாராதவர்களாய், இறப்ப எள்ளி அகல—மிகவும் இகழ்ந்து அகன்றுராக, நீ வெள்கி விண்மேற் சென்றிலை—நீ வெட்கமுற்று ஆகாயத்திற் சஞ்சரித்தாயல்லை; ஒடுங்கல் நாடி—உன் மெலிவைக் கண்டு, திசைமுகன் முதலோர் வெள்ளிக் குன்றிடை ஏகி—பிரமதேவர் முதலானவர்கள் வெள்ளிமலையாகிய திருக்கைலாசத்துக்குப் போய், முன்னேன் குரை கழல் பணிந்து சொல்வார்—மூத்தபிள்ளையாரின் ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த பாதங்களை வணங்கி விண்ணப்பஞ் செய்வாராய்.

சொல்வார் என்றுர் என, வருஞ் செய்யுளில் முடிபு செய்க. (12)

காண்டகு நினது மேன்மை கருதிடா னிகழ்ந்து மாசு
பூண்டன னதனுற் றிங்கள் பொருமலுற் றெடுங்கு மன்னுன்
வேண்டுமிவ் வுலகிற் கெந்தை விதித்திடு சாபத் தன்மை
யாண்டொரு வைகல் போற்ற வருள்புரிந் தளித்தி யென்றுர்.

காண் தகு நினது மேன்மை கருதிடான்—தரிசித்தற்குரிய தேவரீருடைய மேன்மையைக் கருதாதவனுய், திங்கள் இகழ்ந்து மாசு பூண்டனன்—சந்திரன் தேவரீரை இகழ்ச்சிசெய்து குற்றம்உடையோன் ஆயினுன்; அதனுல் பொருமல் உற்று ஒடுங்கும்—அதனுலே துன்பம் அடைந்து ஒடுங்குகின்றுன்; அன்னுன் இவ்வுலகிற்கு வேண்டும்—அச்சந்திரன் இவ்வுலகத்துக்கு வேண்டியவன்; எந்தை விதித்திடும் சாபத் தன்மை—ஆகையினுலே எம்பெருமானே தேவரீர் இட்ட சாபப்பயனை, ஆண்டு ஒரு வைகல் போற்ற—ஓராண்டுக்கு ஒருநாள் அநுசரிக்க, அருள் புரிந்து—கிருபை செய்து, அளித்தி என்றுர்—அச்சந்திரனை இரட்சிப்பீராக என்று பிரார்த்தித்தார்கள். (13)

ஐங்கர னதனைக் கேளா வவ்வகை யருள வெய்யோன்
றிங்களின் முதலாம் பாலிற் செல்லுறு நாலாம் வைகன்
மங்குல்சூ ழுலக நோக்கா மரபினுல் வதிந்தாய் மற்றப்
புங்கவற் கந்நாண் மிக்க பூசனை புரிய மேலோர்.

ஐங்கரன் அதனைக் கேளா—ஐந்து கரங்களையுடைய விநாயகப்பெருமான் அவர்களுடைய வேண்டுகோளைக் கேட்டு, அவ்வகை அருள—அவ்வாறே ஆகுக என்று அருள்புரிய, வெய்யோன் திங்களின்—சூரியனுக்குரிய மாசமாகிய ஆவணியில், முதலாம் பாலில் செல்லுறும் நாலாம் வைகல்—பூர்வ பக்கத்தில் வரும் சதுர்த்தித் தினத்தில், மங்குல் சூழ் உலகம்—மேகம் தவழும் ஆகாயத்தை, உலகம் நோக்கா மரபினுல்—உலகத்தவர் நோக்காததொரு முறையில், மேலோர் அந்நாள் அப் புங்கவற்கு மிக்க பூசனை புரிய—மேலோர்கள் அந்த ஆவணிச் சதுர்த்தியில் அவ்விநாயகப்பெருமானுக்கு விசேட பூசனைகள் செய்ய, வதிந்தாய்—நீசத்துவத்தோடு கூடிய நீ ஒதுங்கி வாழ்ந்தாய்.

ஆவணி சிங்க சங்கிராந்தி. சிங்கம் சூரியனுக்குரிய இராசி. அதனுலே ஆவணி ஞாயிறு சூரியனுக்குச் சிறந்ததாலும் நோக்குக. முதலாம் பால் பூர்வ பக்கம். உலகம் பின்னுங் கூட்டப்பட்டது. உலகம் நோக்கக் கூசுதலின் ஒதுக்கம் வருவித்துரைக்கப்பட்டது. (14)

இதுபழி யொன்று நிற்க வின்றுநீ தக்கன் றன்னுற்
புதியதோர் குறையும் பெற்ருய் பொலிவொடு திருவுந் தீர்ந்தாய்
மதியினை மதிய தற்ருய் மற்றினி வல்லை சென்று
விதியொடு பகர்தி சேயை வேண்டியீ தகற்று மென்ருன்.

இது பழி ஒன்று நிற்க—இப்பழி ஒன்றுமே போதுமானதாயிருக்க, இன்று நீ தக்கன் தன்னுல் புதியது ஓர் குறையும் பெற்ருய்—இப்பொழுது நீ தக்கனுற் புதியதொரு பழியையுஞ் சேர்த்துக்கொண்டாய்; மதியினை மதி அற்ருய்—மதியமே நீ மதியற்ருய்; இனி வல்லை சென்று—இனி விரைந்து சென்று, விதியொடு பகர்தி—பிரமதேவரிடம் முறையீடு செய்; சேயை வேண்டி—பிரமதேவர் தம் புதல்வனுகிய தக்கனை வேண்டுதல் செய்து, ஈது அகற்றும் என்ருன்—இச் சாபத்தை நீக்குவார் என்று இந்திரன் மொழிந்தான். (15)

வச்சிர மெடுத்த செம்மன் மற்றிவை புகலு மெல்லை
யிச்செய லினிது வல்லே யேகுவ லவ்வா றென்னு
வச்சென வெழுந்து திங்க ளவன்பணி தலைக்கொண் டேகி
முச்சகந் தன்னின் மேலா முளரியா னுலகம் புக்கான்.

வச்சிரம் எடுத்த செம்மல்—வச்சிராயுதத்தைத் தாங்கிய இந்திரன், இவை புகலும் எல்லை—இவற்றைச் சொல்லும்போது, இச் செயல் இனிது—

இவ்வாறு செய்தல் நன்று; அவ்வாறு வல்லே ஏகுவன் என்னு—அவ்வாறு செய்தற்கு விரைந்து செல்லுவேன் என்று, அவன் பணி தலைக்கொண்டு—அவ்விந்திரன் பணியைத் தலைமேற்கொண்டு, திங்கள் அச்சென எழுந்து ஏகி—சந்திரன் விரைந்து எழுந்து சென்று, முச் சகம் தன்னின் மேலாம் முளரியான் உலகம் புக்கான்—மூன்று உலகங்களிலும் உயர்ந்த தாமரையாசனரான பிரமதேவருடைய உலகத்தை அடைந்தான். (16)

தாமரை யென்னுந் தண்பூந் தவிசிடைத் திகழ்ந்த வண்ணன்
மாமல ரடியின் வீழா மாதுலன் வெகுண்டு சொற்ற
தீமொழி யுணர்த்தி யுன்றன் சேயினைத் தெருட்டித் தீயேன்
றேுமுறு கவலை மாற்றித் துடைத்தியிச் சாப மென்றான்.

தாமரை என்னும் தண் பூந்தவிசிடைத் திகழ்ந்த அண்ணல் மா மலர் அடியில் வீழா—தாமரை என்னுந் தண்ணிய மலராசனத்தில் விளங்குகின்ற பிரமதேவருடைய சிறந்த மலர்ப்பாதங்களில் வீழ்ந்து வணங்கி, மாதுலன் வெகுண்டு சொற்ற தீமொழி உணர்த்தி—மாமனான தக்கன் கோபித்துச் சொன்ன கொடிய சாபத்தைச் சொல்லி, உன் தன் சேயினைத் தெருட்டி—உம்முடைய புதல்வனைத் தெளியச் செய்து, தீயேன் உறும் தோம் கவலை மாற்றி—தீயேன் அநுபவிக்கின்ற குற்றமாகிய கவலையைப் போக்கி, இச் சாபம் துடைத்தி என்றான்—இச்சாபத்தை நீக்கியருள்வீராக என்று வேண்டினான். (17)

அன்னது மொழிந்த திங்கட் கம்புயன் மொழிவா னீண்டுத்
தன்னுள நெறிப்பா லன்றிச் சார்கிலன் றக்க னென்பா
னென்னுரை யிறையுங் கொள்ளான் யானவன் மாட்டுஞ் செல்லேன்
முன்னுள னல்லன் யார்க்கு முதல்வனே யாகி நின்றான்.

அன்னது மொழிந்த திங்கட்கு—அதனை உரைத்த சந்திரனுக்கு, அம்புயன் மொழிவான்—பிரமதேவர் கூறுவார், தக்கன் என்பான் ஈண்டு தன் உளம் நெறிப்பால் அன்றி சார்கிலன்—தக்கன் இப்பொழுது தன் மனம் போன போக்கிற் போபவன் அல்லாமல் மற்றொரு சார்பைக் கொள்பவன் அல்லன்; என் உரை இறையும் கொள்ளான்—என் வார்த்தையைச் சிறிதும் கேளான்; யானும் அவன் மாட்டுச் செல்லேன்—யானும் அவன்பாற் போகேன்; முன் உளன் அல்லன்—அவனே முன்னிருந்த நிலைமையன் அல்லன்; யார்க்கும் முதல்வனே ஆகி நின்றான்—யாவர்க்குந் தான் தலைவனாய்த் தலையெடுப்புற் றிருக்கின்றான்.

அம்புயன் மொழிவான், என்றலும் என முப்பத்தைந்தாஞ் செய்யுளில் முடிபு காண்க. (18)

சொல்லுவ பிறவென் வேறு தொல்லைநாள் யானே கூற
வல்லுறழ் கண்டத் தெந்தை யரும்பெருந் தன்மை யாவு
மொல்லையி னுணர்ந்து பன்னா ளுழந்ததோர் தவத்தா லிந்த
வெல்லையி றிருவின் வைகி யிறையுமங் கவனை யெண்ணான்.

பிற வேறு சொல்லுவ என்—இதற்கு மேலே அவனைப்பற்றி வேறு பிற சொல்லவேண்டுவன என்னை, தொல்லை நாள் யானே கூற—முன்னாளிலே யானே உபதேசிக்க, அல் உறழ் கண்டத்து எந்தை அரும் பெரும் தன்மை யாவும் ஒல்லையில் உணர்ந்து—நீலகண்டராகிய சிவபெருமானுடைய அரிய பெரிய இயல்புகள் யாவற்றையும் விரைவாக உணர்ந்து, பல் நாள் உழந்த ஓர் தவத்தால்—பலகாலம் முயன்று செய்த ஒப்பில்லாத தவத்தின் பயனாக, இந்த எல்லை இல் திருவின் வைகி—அளவில்லாத இந்தச் செல்வத்தைப் பெற்று அதில் முழுகி, அங்கு அவனை இறையும் எண்ணான்—அச் செல்வத்தை வழங்கிய சிவபெருமானையுஞ் சிறிதும் மதியாதவன் ஆயினான். (19)

### வேறு

செக்கரிற் படர்சடைத் தீயின் றோற்றமா
முக்கணா யகனெதிர் மொழிந்து வேண்டலா
மெக்குறை யாயினு மெவரு மீண்டையிற்
றக்கன்முன் னோருரை சாற்ற லாகுமோ.

செக்கரிற் படர் சடை—செவ்வானம்போலும் விரிந்த சடையும், தீயின் தோற்றம்—அக்கினியின் வடிவும், ஆம்—பொருந்திய, முக்கண் நாயகன் எதிர்—முக்கண்ணராகிய சிவபெருமான் முன்னிலையில், எவரும் எக்குறையாயினும் வேண்டலாம்—யாவரேயாயினும் எவ்வித குறையையேனும் முறையீடு செய்து வேண்டுதல் செய்யலாம்; ஈண்டையில் தக்கன் முன்—இப்பொழுதைய தக்கன் எதிரில், எவரும்—எப்படிப்பட்ட பெருமை படைத்தவராயினும், ஓர் உரை சாற்றல் ஆகுமோ—ஒரு வார்த்தைதானுஞ் சொல்லுதல் கூடுமோ.

எவரும் பின்னுங் கூட்டப்பட்டது. (20)

அண்ணலந் திருவிடை யழுந்தி யாரையு
மெண்ணலன் செந்நெறி யியற்ற வோர்கிலன்
கண்ணிலன் மதியிலன் களிப்பி னோர்மகன்
மண்ணிடை விரைவொடும் வழிக்கொண் டாலென.

கண் இலன்—கண்ணில்லாதவன், மதி இலன்—அதன் மேலும் புத்தி இல்லாதவன், களிப்பின் ஓர் மகன்—இவ்விரண்டுமமையாமல் கள்ளுண்டு களித்தலையு முடையானாகிய முழுமகன் ஒருவன், மண்ணிடை விரைவொடு வழிக்கொண்டால் என—துணை வேண்டானாய்ப் பூமியில் விரைவாகத் தானே

வழிபிடித்து நடந்தாற்போல, அண்ணல் அம் திருவிடை அழுந்தி—பெருமை பொருந்திய அழகிய செல்வத்துள் முழுகி, யாரையும் எண்ணலன்—எவரையும் மதியாதவனுய், செம் நெறி இயற்ற ஓர்கிலன்—செம்மையாய ஒழுக்க நெறியை நடத்தச் சிந்தியாதவனுயினன்.

தான் நினைத்த வழியிற் செல்கின்ருன் என்றவாறு. (21)

களியுறு பெற்றியன் கறுவு சிந்தைய
னளியறு முகத்தின னருளில் வாய்மையன்
றெளிதரு முணர்விலன் சிதைந்து மேலிவன்
விளிவுறு பொருட்டினிம் மேன்மை பெற்றுளான்.

களி உறு பெற்றியன்—மிக்க களிப்பை உடையவன், கறுவு சிந்தையன்—கறுவுகின்ற மனத்தினையுடையவன், அளி அறு முகத்தினன்—தண்ணளியற்ற முகத்தினை யுடையவன், அருள் இல் வாய்மையன்—இரக்கமற்ற சொல்லினை யுடையவன், தெளி தரும் உணர்வு இலன்—தெளிந்த உணர்வு இல்லாதவன், இவன்—இப்படிப்பட்ட தக்கன், மேல் சிதைந்து விளிவு உறு பொருட்டின்—இனிமேல் சிதைந்து அழிந்து தொலைவுறும்பொருட்டே, இம் மேன்மை பெற்றுளான்—இம்மேன்மைகளை யெல்லாம் பெற்றிருக்கின்ருன். (22)

ஈண்டிவன் விளிதலு மின்றி யெம்மனோர்
பூண்டநன் னிலைகளும் போக்கல் சிந்தியா
னீண்டசெஞ் சடைமுடி நிமல னன்னவன்
வேண்டிய வரமெலாம் விரைவி னல்கினுன்.

ஈண்டு இவன்—இங்கு இத் தக்கன், விளிதலும் இன்றி—தான் தொலைதலும் இல்லாமல், எம்மனோர் பூண்ட நன்னிலைகள்—எம்போலிகள் மேற்கொண்ட நன்னிலைகள், போக்கலும் சிந்தியான்—தன்னுற் கெடுக்கப்படுதலையும் மனத்திற் பொருள் செய்யான்; நீண்ட செஞ்சடை நிமலன்—நீண்ட செஞ்சடையையுடைய சிவபெருமான், அன்னவன் வேண்டிய வரம் எலாம் விரைவின் நல்கினுன்—அத்துட்டன் விரும்பிய வரங்களையெல்லாம் விரைவிற் கொடுத்தருளினுர்.

எம்பெருமான் கருத்தை யாவரே அறியவல்லார். விரைவு நன்மைக்கன்று போலும். நிலைகளும் என்புழி உம்மை, போக்கல் என்பதனேடு கூட்டப்பட்டது. (23)

அன்னது நிற்கயா மவனை வேண்டுவ
மென்னினு முனிவுரு விகழு மெம்மையு
நின்னுறு சாபமு நீக்க லானினிப்
பின்னெரு நெறியுள பேசக் கேண்மியா.

அன்னது நிற்க—அது நிற்க, யாம் அவனை வேண்டுவம் என்னினும்—யாமிருவேமும் அவனை இரந்து கேட்போமாயினும், முனிவு உறு—கோபித்து, எம்மையும் இகழும்—எம்மையும் இகழுவான்; நின் உறு சாபமும் நீக்கலான்—உனக்குற்ற சாபத்தையும் நீக்கான்; இனி பின்—இங்ஙனமாயபோது, உள—என்றும் உள்ள, ஒரு நெறி—ஒன்ருகிய நெறியை, பேசக் கேள்—சொல்லக் கேட்பாயாக.

இது என்றும் எந்நிலையிலும் சித்திதரு நெறியாதலின், உளநெறி, ஒரு நெறி எனப்பட்டது. (24)

செய்யனைக் கண்ணுதற் சிவனை யெம்மனோர்க்
கையனை யடிகளை யமல ஞகிய
மெய்யனை யடைந்துநின் மேனி மாசினை
யொய்யென வகற்றிலை யுணர்வி லாய்கொலோ.

செய்யன்—செம்மையுடையவரும், நம்மனோர்க்கு ஐயன்—நம்மவர்களுக்குத் தலைவரும், அடிகள்—பரமாசாரியரும், அமலன் ஆகிய மெய்யன்—நிருமலராகிய பரமாப்தரும் ஆகிய, கண்ணுதற் சிவனை அடைந்து—நெற்றிக்கண்களையுடைய பரமசிவனை யடைந்து, நின் மேனி மாசினை ஒய் என அகற்றிலை—உன் உடற் குற்றத்தை விரைந்து போக்குதற்குரியை, அங்ஙனம் செய்தாயல்லை; உணர்வு இலாய் கொல்—அவ்வாருன உணர்ச்சி கைவரப்பெற்றிலாய் போலும்.

செம்மை செந்நிறம்; நடுநிலையுமாம். (25)

ஈதவன் முன்புசென் றிசைக்க நீக்குநின்
பேதுற வனையது பேசல் வேண்டுமோ
மேதகு மிருளினுன் விளங்கி டாதவை
யாதவன் காட்டுதற் கையஞ் செய்வரோ.

அவன் முன்பு சென்று—சிவபெருமானின் முன்னிலையிற் சென்று, ஈது இசைக்க—இச் சாப வரலாற்றை விண்ணப்பிக்க, நின் பேதுறவு நீக்கும்—உன் கலக்கமாகிய குறையை நீக்கியருளுவார்; அனையது பேசல் வேண்டுமோ—அவ்வாறு செய்தருளுவார் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ; மேதகும் இருளினுல் விளங்கிடாதவை—மிகுதியான இருளினுல் மூடுண்டு விளங்காத பொருள்களை, ஆதவன் காட்டுதற்கு ஐயம் செய்வரோ—சூரியன் விளக்கஞ் செய்து காட்டுவன் என்பதில் யாருஞ் சந்தேகங் கொள்ளுவார்களா?

சிவபெருமானிடஞ் செல்லின் நின்குறை சூரியனை எதிர்ப்பட்ட இருள் போலாம் என்றவாறு. (26)

சிறாரென நமையெலாஞ் சிறப்பி னல்கிய
விறல்புரை சடைமுடி யெந்தைக் கன்பரா
யுறுதவர் தம்மையு முற்ற பான்மையர்
பெறுததோர் பொருளையும் பேச வல்லமோ.

நமை எலாம் சிறார் என சிறப்பின் நல்கிய—நம்மை எல்லாந் தமது குழந்தைகளை ஒப்பச் சிறப்பின்கண் வைத்தருளிய, இறல் புரை சடை முடி எந்தைக்கு—தேனிறலை ஒத்த சிவந்த சடைமுடியையுடைய எம் பரமபிதாவுக்கு, அன்பராய் உறுதவர் தம்மையும்—அன்பராய்ச் சரணடையாதாரியல்பையும், உற்ற பான்மையர்—அன்பராய்ச் சரணடைந்தவர்கள், பெறுதது ஓர் பொருளையும்—பெறமுடியா திருப்பதொரு செல்வத்தையும், பேச வல்லமோ—யாம் எடுத்துச் சொல்ல வல்லோமா?

உறுதார் உறு அல்லலும், உற்றார் உறுச் செல்வமும் இல்லை என்பதாம். மையும் எனப் பிரித்து, மை—குற்றம், பொருள்—குணம் எனப் பொருள் கூறுவதுமுண்டு. (27)

தெருளொடு தன்னடி சேருந் தொண்டினோர்
பருவர லொழித்திடும் பான்மைக் கல்லவோ
விரிசுடர் கெழுமிய வெள்ளி யோங்கலி
னருளுரு வெய்தியே யமலன் மேயதே.

விரிசுடர் கெழுமிய வெள்ளி ஓங்கலில்—விரிந்த சுடர்கள் செறிந்த வெள்ளி மலையாகிய திருக்கைலாசத்தில், அமலன் அருள் உரு எய்தி மேயது—சிவபெருமான் அருள்வடிவங் கொண்டு எழுந்தருளியிருப்பது, தெருளொடு தன் அடி சேரும் தொண்டினோர்—தெளிந்த புத்தியோடு தமது திருவடிகளைச் சரண் என்றடைகின்ற அடியார்களுடைய, பருவரல் ஒழித்திடும் பான்மைக்கு அல்லவோ—துன்பங்களை நீக்கியருளும் பொருட்டன்றோ. (28)

இடுக்கணங் கொருவர்மாட் டெய்தி னெந்தைதன்
னடித்துணை யரணமென் றடைவ ரேயெனிற்
றுடைத்தவர் வினைகளுந் தொலைக்கு மிப்பொருள்
பிடித்திலை யாற்றவும் பேதை நீரைநீ.

ஒருவர் மாட்டு இடுக்கண் எய்தின்—ஒருவரிடத்துத் துன்பம் உண்டாயின், எந்தைதன் அடித்துணை அரணம் என்று அடைவர் எனின்—அவர் எமது பிதாவாகிய சிவபெருமானுடைய இரண்டாகிய திருவடிகளைச் சரண் என்று அடைவாரேயானால், துடைத்து—அவருக்குண்டான இடுக்கணையும் பற்றறக் களைந்து, அவர் வினைகளும் தொலைக்கும்—அவருடைய வினைகளையுந் தொலைத் தருளுவர்; நீ இப்பொருள் பிடித்திலை—சந்திரனே நீ இவ்வுண்மைப் பொருளைக்

கடைப்பிடித்தாயல்லை ; ஆற்றவும் பேதை நீரை—அதனுற் பெரிதும் பேதைமை உடையை ஆயினை. (29)

அந்தியஞ் சடைமுடி யண்ண றன்னடி
சிந்தைசெய் தடைந்திடு சிறுவன் மேல்வரு
வெந்திற னடுவனை விலக்கி யன்றுமுன்
வந்தருள் புரிந்தது மறத்தி போலுமால்.

அந்தி அம் சடை முடி அண்ணல் தன் அடி சிந்தை செய்து—அந்திக் காலத்து வானம் போன்ற அழகிய சடைமுடியையுடைய சிவபெருமானின் திருவடிகளை மனத்தில் இருத்திக்கொண்டு, அடைந்திடும்—அப்பெருமானின் திருவடிகளேயே சரண் என்று அடைந்த, சிறுவன் மேல் வரு வெம் திறல் நடுவனை—சிறுவராகிய மார்க்கண்டேய முனிவர்மீது வந்த கொடிய வலி படைத்த இயமனை, விலக்கி—உதைத்து விலக்கி, அன்று—அப்பொழுதே, முன்வந்து—அம் முனிவர் முன்னிலையிலே தோன்றியருளி, அருள் புரிந்தது—திருவருள் பாலித்ததை, மறத்தி போலும்—மதியே மறத்தலைச் செய்வாய் போலும்.

மறத்தலாகா தென்றவாறு. (30)

விஞ்சிய திரைகெழு வேலை தன்வயி
னஞ்சமன் றெழுதலு நடுங்கி நாமவன்
றஞ்செென வடியிணை சாரத் தான்மிசைந்
தஞ்சலென் றருளிய தயர்க்க லாகுமோ.

விஞ்சிய திரை கெழு வேலை தன் வயின்—மிக்க திரை செறிந்த பாற் கடலில், அன்று—கடைந்த காலத்தில், நஞ்சம் எழுதலும்—ஆலகால விடம் எழுதலும், நாம் நடுங்கி அவன் தஞ்சு என அடி இணை சார—நாமெல்லாம் நடுக்கங்கொண்டு அப்பெருமானே புகலிடம் என்று திருவடிகளிற் சரண் புக, தான் மிசைந்து—அவர் தாம் அதனைத் திருவமுது செய்து, அஞ்சல் என்று அருளியது—அஞ்சற்க என்று திருவருள் செய்ததை, அயர்க்கல் ஆகுமோ—மறத்தல் கூடுமோ ?

அது மறக்கத்தக்க சம்பவம் அன்றே என்றவாறு. (31)

வார்த்தன வுமையவண் மலர்க்கைத் தோன்றியே
யார்த்தெழு கங்கையிவ் வகில மெங்கணும்
போர்த்திட வெருவியாம் போற்றச் சென்னியிற்
சேர்த்தியன் றளித்ததுந் தேற்றி லாய்கொலோ.

வார் தன உமையவள் மலர்க்கை தோன்றி—கச்சணிந்த தனத்தினை யுடைய உமாதேவியாரின் மலர்போலுந் திருக்கரத்தில் உண்டாகி, ஆர்த்து எழு கங்கை—ஆரவாரித் தெழுந்த கங்கையானது, இ அகிலம் எங்கணும் போர்த்திட—இந்த உலகம் முழுவதையும் மூடிக்கொள்ள, யாம் வெருவிப் போற்ற—நாம் அதற்குப் பயந்து துதிக்க, சென்னியிற் சேர்த்தி—அக் கங்கை யைத் திருமுடியில் இருத்தி, அன்று அளித்ததும்—அந்நாளில் நம்மைப் பாது காத்தருளியதையும், தேற்றிலாய் கொல்—தெளிந்தாயில்லையோ? (32)

அளப்பருங் குணத்தினெம் மண்ண லன்பராற்
கொளப்படும் பேரருள் கூற்றின் பாலதோ
கிளத்திட வரியதேற் கேடில் பல்பக
லுளப்பட வுன்னினு முலவிற் றாகுமோ.

அளப்பு அரும் குணத்தின் எம் அண்ணல்—அளவிடுதற்கரிய குணங்களை யுடைய எமது இறைவன், அன்பரால் கொளப்படும் பேரருள்—அன்பர்கள் பொருட்டுச் செய்தருளிய பேரருட்டிறம், கூற்றின் பாலதோ—சொல்லில் அடங்குவ தாகுமோ, கிளத்திடல் அரியதேல்- சொல்லில் அடங்காதாயின் மனத்தால் நினைக்கலாமே யெனின், கேடு இல் பல் பகல் உளப்பட உன்னி னும்—இடையீடுபடாத பலவாகிய காலம் மனத்திற் பொருந்த நினைத்தா லும், உலவிற்று ஆகுமோ—முடிவு பெறுவது ஆகுமா? (33)

ஆதலி னீண்டுநின் றாதி நாயகன்
காதலின் மேயவக் கயிலை யுற்றவன்
பாதமிங் கரணெனப் பற்றி வல்லைநின்
பேதுற வொழிமதி பெருந்தண் மாமதி.

ஆதலின்—ஆதலினாலே, பெரும் தண் மா மதி—பெரிய தண்ணிய சிறந்த சந்திரனே, ஈண்டு நின்று—இவ்விடத்தினின்றும் நீங்கி, ஆதி நாயகன் காதலின் மேய அ கயிலை உற்று—முழுமுதல்வராகிய சிவபெருமான் விருப்போடு வீற் றிருக்கின்ற அந்தத் திருக்கைலாசத்தை அடைந்து, அவன் பாதம் இங்கு அரண் என பற்றி—அப்பெருமானின் பாதங்களை இனிச் சரண் என்று இறுகப் பற்றி, நின் பேதுறவு ஒல்லை ஒழி மதி—உன்னுடைய சாபத்துயரை விரைந்து நீக்குவாயாக.

மதி அசை. (34)

என்றலு மயன்பதத் திறைஞ்சி யெம்பிரா
னன்றிவை புகன்றனை ஞான மூர்த்திபாற்
சென்றடை வேனெனச் செப்பி வெள்ளியங்
குன்றினை யணைந்துபொற் கோயின் மேயினான்.

என்றலும்—பிரமதேவர் இவ்வாறு கூறுதலும், அயன் பதத்து இறைஞ்சி—அவருடைய பாதங்களை வணங்கி, எம்பிரான் நன்று இவை புகன்றனை—எம் பெருமானே நன்மையாகிய இவைகளை உரைத்தீர்; ஞான மூர்த்திபால் சென்று அடைவேன் என செப்பி—ஞான வடிவினராகிய சிவபெருமானிடம் போயடைவேன் என்று கூறி, வெள்ளி அம் குன்றினை அடைந்து—அழகிய திருக்கைலாசமலையை அடைந்து, பொன் கோயில் மேயினன்—செம்பொற் றிருக்கோயிலை அணுகினன்.

பதினெட்டாஞ் செய்யுளில் வந்த அம்புயன் மொழிவான், ஈண்டு என்றலும் என முடிவு பெறுதல் காண்க. (35)

தன்னுறு பருவரல் சாற்றக் காவலோன்
மன்னரு ணிலையொடு மரபி னுய்த்திடப்
பொன்னவிர் செஞ்சடைப் புனித நாயகன்
முன்னுற வணங்கினன் முடிவி லன்பினல்.

தன் உறு பருவரல் சாற்ற—தனக்குற்ற துயரத்தை விண்ணப்பஞ் செய்ய, காவலோன்—வாயில் காப்போரான திருநந்திதேவர், மன் அருள் நிலையொடு மரபின் உய்த்திட—இறைவனுடைய அநுமதிப்படி முறைப்படி உள்ளே செலுத்த, பொன் அவிர் செம் சடைப் புனித நாயகன் முன்—பொன்மயமாக விளங்குகின்ற சிவந்த சடையையுடைய புனிதராகிய சிவபெருமான் முன்னிலையில், முடிவு இல் அன்பினல் உற வணங்கினன்—எல்லையில்லாத அன்போடு பெரிதும் வணங்கினன். (36)

மேற்றிக ழுபநிட வேத வாய்மையாற்
போற்றலும் வந்ததென் புகறி யாலெனச்
சாற்றின னுயிர்தொறுந் தங்கித் தொல்வினை
தேற்றுபு வினைமுறை செலுத்துந் தொன்மையோன்.

மேல் திகழ் வேத உபநிட வாய்மையால் போற்றலும்—உயர்ந்து விளங்குகின்ற வேத உபநிடத வாக்குக்களாற் றுதித்தலும், உயிர்தொறும் தங்கி—உயிர்கள்தோறும் உயிர்க்குயிரா யிருந்து, தொல்வினை தேற்றுபு—அவ்வுயிர்களின் பழைமையான வினைகளை அறிந்து, வினை முறை செலுத்தும்—முகந்து கொண்ட பிராரத்த வினையை முறைப்படி நுகர்விக்கின்ற, தொன்மையோன்—பழையோரான சிவபெருமான், வந்தது என் புகல்தி என சாற்றினன்—நீ இங்கே வந்தது என்னை சொல்லுதி என்று அறியார்போல வினவியருளினர். (37)

தொல்வினை சஞ்சிதம்.

நங்களை யலைத்திடு நண்ண லன்றனை
யிங்கிவ ணடுதுமென் றிருட்கள் சூழ்ந்தென
மங்குலி னிறங்கொடு வடிவம் வேறதாந்
திங்கணின் றெம்பிராற் கினைய செப்புவான்.

நங்களை அலைத்திடும் நண்ணலன் தனை—நம்மை வருத்துகின்ற பகைவனை, இங்கு இவண் அடுதும் என்று—இவ்விடத்தில் அழிப்போம் என்று, இருள்கள் சூழ்ந்தென—இருட்படலங்கள் சூழ்ந்தாற்போல, மங்குலின் நிறம் கொடு—இருளின் நிறம் பொருந்தி, வடிவம் வேறு ஆம் திங்கள் நின்று—வடிவம் வேறுபட்ட சந்திரன் சிவபெருமான் முன்னிலையில் நின்று, எம்பிராற்கு இனைய செப்புவான்—எம்பெருமானுக்கு இவ்வாறு கூறுவான். (38)

வன்றிறற் றக்கன்முன் வழங்கு தீச்சொலாற்
றுன்றிருங் கலையெலாந் தொலைந்து போந்திட
வொன்றிவ ணிருந்ததா லுதுவும் தேய்ந்திடு
மின்றினி வினையினே னியாது செய்வதே.

வன் திறல் தக்கன் முன் வழங்கு தீச் சொலால்—வலிய திறலினையுடைய தக்கன் முன் இட்ட சாபத்தால், துன்று இரும் கலை எலாம் தொலைந்து போந்திட—செறிந்த பெரிய கலையனைத்துந் தேய்ந்துபோக, ஒன்று இவண் இருந்தது—ஒரு கலை மாத்திரம் எஞ்சியிருந்தது; உதுவும் இன்று தேய்ந்திடும்—இதுவும் இன்று தேய்ந்து ஒழியும்; வினையினேன் இனிச் செய்வது யாது—பாவியேன் இனிச் செய்வது என்னை.

பயனற்றவனுயினேன் என்றவாறு. (39)

எஞ்சிய விக்கலை யிருக்கத் தேய்தரு
விஞ்சிய கலையெலா மேவ நல்குதி
தஞ்சநின் னலதிலை யென்னத் தண்மதி
யஞ்சலை யென்றன னருளி னாழியான்.

எஞ்சிய இக்கலை இருக்க—எஞ்சியிருந்த இந்தக் கலை தேயாமலிருக்கவும், தேய்தரு விஞ்சிய கலை எலாம் மேவ—தேய்ந்தொழிந்த மிக்க கலையனைத்தும் வந்து பொருந்தவும், நல்குதி—அருள் செய்வீராக; நின் அலது தஞ்சம் இலை என—தேவரீரையன்றி எனக்குப் புகலிடம் இல்லை என்று பிரார்த்திக்க, அருளின் ஆழியான்—கிருபா சமுத்திரமாகிய சிவபெருமான், தண்மதி அஞ்சலை என்றனன்—தண்ணிய சந்திரனே அஞ்சற்க என்று அபயம் அளித்தருளினார். (40)

தீர்ந்தன வன்றியே திங்க டன்னிடை
யார்ந்திடு கலையினை யங்கை யாற்கொளா
வார்ந்திடு சடைமிசை வயங்கச் சேர்த்தினன்
சார்ந்தில தவ்வழித் தக்கன் சாபமே.

தீர்ந்தன அன்றி—தேய்ந்துபோன கலைகளைச் சேராமல், திங்கள் தன் இடை ஆர்ந்திடு கலையினை—சந்திரனிடத்தில் எஞ்சியிருந்த ஒரு கலையை, அம் கையால் கொளா—அழகிய திருக்கரத்தாலெடுத்து, வார்ந்திடு சடைமிசை வயங்கச் சேர்த்தினன்—நீண்ட சடையின்மீது விளங்குமாறு தரித்தருளினர்; தக்கன் சாபம் அவ்வழி சார்ந்திலது—தக்கனிட்ட சாபம் அவ்விடம் அணுகிற் றிலது. (41)

மேக்குயர் தலைவராம் விண்ணு ளோர்கள்பாற்
றுக்குறு வினையையுஞ் சாபம் யாவையு
நீக்கிய தலைவனிந் நிலவின் சாபத்தைப்
போக்கின னென்பது புகழின் பாலதோ.

மேக்கு உயர் தலைவராம் விண்ணுளோர்கள் பால்—மிக உயர்ந்த தலைவர்களான தேவர்களிடம், தாக்குறு வினையையும் யாவை சாபமும் நீக்கிய தலைவன்-அவர்களை வருத்துகின்ற மிக்க வினைகளையும் எப்படிப்பட்ட சாபங்களையும் நீக்கி அநுக்கிரகம் புரிந்த முதல்வராகிய சிவபெருமான், இந் நிலவின் சாபத்தை—இந்தச் சந்திரனின் அற்ப சாபத்தை, போக்கினன் என்பது—போக்கியருளினர் என்று கூறுவது, புகழின் பாலதோ—சிவபராக்கிரமமென்று எடுத்துப் புகழற்பாலதொன்றுமோ?

அப்பெருமானின் கருணைப் பிரவாகத்துக்குச் சந்திர சாபம் எம்மாத்திரம் என்றவாறு. (42)

நெற்றியங் கண்ணுடை நிமலத் தெம்பிரா
னுற்றவர்க் கருள்புரி கின்ற வுண்மையைத்
தெற்றென வுணர்த்தல்போற் றிங்க ளின்கலை
கற்றையஞ் சடைமிசைக் கவின்று பூத்ததே.

நெற்றி அம் கண் உடை நிமலத்து எம்பிரான்—அழகிய நெற்றிக்கண்ணையுடைய நின்மலராகிய சிவபெருமான், உற்றவர்க்கு அருள் புரிகின்ற உண்மையை—தம்மைச் சரண் என்று அடைந்தவர்களுக்கு அருள் புரிகின்ற உண்மையை, தெற்றென உணர்த்தல் போல்—விரைந்து தெரிவிப்பது போல, திங்களின் கலை கற்றை அம் சடை மிசை கவின்று பூத்தது—சந்திரனுடைய அக் கலையானது தொகுதியாகிய அழகிய சடையின்மீது அழகு செய்து பொலிந்தது. (43)

## வேறு

எந்தை யவ்வழி மதியினை நோக்கிநீ யாதுஞ்
சிந்தை செய்திடே லெம்முடிச் சேர்த்திய சிறப்பா
லந்த மில்லையிக் கலையிவ ணிருந்திடு மதனால்
வந்து தோன்றுநின் கலையெலா நாடொறு மரபால்.

எந்தை அவ்வழி மதியினை நோக்கி—சிவபெருமான் அப்பொழுது சந்திர னைப் பார்த்து, நீ யாதும் சிந்தை செய்திடேல்—நீ சிறிதும் மனசிற் கலக்கங் கொள்ளாதே; எம் முடிச் சேர்த்திய சிறப்பால்—எமது முடியிலே தரித்த சிறப்பினுல், அந்தம் இல்லை—எஞ்சியிருந்த இந்த ஒரு கலைக்குத் தேய்வு ஆகிய அழிவு இல்லை; இக்கலை இவண் இருந்திடும்—இந்தக் கலை எமது முடி யாகிய இவ்விடத்தில் நிலைத்து இருக்கும்; அதனுல்—எம் முடிக்கண் இருக்குஞ் சிறப்பினுல், நின் கலை எலாம்—தேய்ந்துபோன உன் கலைகளனைத்தும், நாள் தொறும் மரபால் வந்து தோன்றும்—நாள்தோறும் நாளுக்கு ஒன்று என்ற முறையில் உன்பால் வந்து வளர்ந்து தோன்றும்.

'அந்தம் இல்லை' 'இவண் இருந்திடும்' என்றதனுல், எங்குமாய பரம் பொருளின் முடிக்க ணிருந்துகொண்டே, சந்திரன்பாலும் அக்கலை தேய்வின்றி இருக்கும் என்பதாம். இவ்வாற்றுல் யாதொன்று நிலைத்தல் வேண்டுமோ, அது சிவ பரம்பொருளுக்கு நிவேதிக்கற்பாலதா மென்பது.

முடிச்சேர்த்திய சிறப்பால் அந்தமின்மையும், முடிக்கண் இருந்திடுஞ் சிறப்பால் தேய்ந்தவை வந்து தோன்றுதலுஞ் சித்தித்தவாறும். (44)

நின்ன தொல்கலை யைந்துமுப் பகலிடை நிரம்பிப்
பின்ன ரவ்வழி தேய்ந்துவந் தோர்கலை பிரியா
தின்ன பான்மையே நிகழுமெக் காலமு மென்ருன்
முன்னை யாவிதோ றிருந்தெலா மியற்றிய முதல்வன்.

முன்னை ஆவிதோறு இருந்து எலாம் இயற்றிய முதல்வன்—பழைமை யாகிய உயிர்கள்தோறும் ஒன்ருய்க் கலந்திருந்து அனைத்தும் இயற்றி அருளிய முதல்வராகிய சிவபெருமான், நின்ன தொல் கலை—உன்னுடைய தேய்ந்து போன பழைய கலைகள், ஐந்து முப் பகலிடை நிரம்பி—பதினைந்து நாளில் நிரம்பி, பின்னர் அவ்வழி தேய்ந்து வந்து—பின்பு அம்முறையானே தேய்ந்து வந்து, ஓர் கலை பிரியாது—ஒருகலை தேய்தலைப் பொருந்தாமல் நிலைக்கும்; எக்காலமும் இன்ன பான்மை நிகழும்—இனி எக்காலமும் இவ்வாருய வளர்வுந் தேய்வும் ஆகிய இயல்பு நிகழ்ந்துகொண்டிருக்கும், என்ருன்—என்று கூறி யருளினர்.

தொல்கலை வினைகளை ஓர் கலை வினையுடன் முடிக்க. நிரம்ப தேய்ந்துவர என்பவற்றின் திரிபு எனக் கொள்ளினுமாம்.

முடிச்சேர்த்திய சிறப்பால் ஓர்கலை பிரியாதாயிற்று. (45)

முதல்வ னிவ்வகை யருள்புரிந் திடுதலு முளரிப்
பதயு கங்களில் வணங்கினன் விடைகொடு படரா
மதிய வானவன் றன்னுல கடைந்துதொன் மரபிற்
கதிகொள் செய்வினை புரிந்தனன் வளர்ந்தன கலையே.

முதல்வன் இவ்வகை அருள் புரிந்திடுதலும்—சிவபெருமான் இவ்வாறு திருவருள் செய்ய, முளரி பத யுகங்களில் வணங்கினன்—தாமரைமலர்போன்ற அவருடைய இரண்டாகிய பாதங்களில் வணங்கி, விடை கொடு படரா—விடை பெற்றுக்கொண்டு சென்று, மதிய வானவன் தன் உலகு அடைந்து—சந்திர தேவன் தன் உலகினை அடைந்து, தொன் மரபில் கதிகொள் செய்வினை புரிந்தனன்—பழைய முறைப்படி சஞ்சரித்த லாகிய தனது தொழிலைச் செய் தான்; கலை வளர்ந்தன—தேய்ந்த கலைகள் வளர்ந்தன. (46)

ஒன்று வைகலுக் கோர்கலை யாய்நிறைந் தோங்கி
நின்ற தொன்னிலை நிரம்பியே பின்னுற நெறியே
சென்று தேய்ந்துவந் தொருகலை சிதைவுரு தாகி
யென்று மாவது மழிவதும் போன்றன னிரவோன்.

இரவோன்—இரவுக் குரியோனான சந்திரன், ஒன்று வைகலுக்கு ஓர் கலையாய்—ஒரு தினத்துக்கு ஒருகலை வளர்வதாய், நிறைந்து ஓங்கி—நிறைந்து உயர்ந்து, நின்ற தொல் நிலை நிரம்பி—நிலைபெற்ற பழைய நிலையில் நிரம்பி, பின்னுற நெறியே சென்று தேய்ந்துவந்து—பூரணமாய பின்பு முறைப்படி சென்று தேய்வுற்று, ஒரு கலை சிதைவு உருது ஆகி—ஒரு கலை தேய்வைப் பொருந்தாததாகி, என்றும்—இவ்வாற்றால் நாள்தோறும், அழிவதும் ஆவதும் போன்றனன்—இறத்தலையும் பிறத்தலையும் உடையா னொத்தான். (47)

செங்க ணன்முத லனைவரு மம்மதித் திறத்தை
யங்க ணடியே தக்கனு லிவன்கலை யனைத்து
மங்கு மாறுமேல் வளர்வது மியற்கையா வகுத்தா
னெங்க ணயகன் செய்கையா ரறிந்தன ரென்றார்.

செங்கணன் முதல் அனைவரும்—சிவந்த கண்ணையுடைய விஷ்ணு முதலிய அனைவரும், அம் மதித் திறத்தை—அந்தச் சந்திரனுடைய தன்மையை, அங்கண் நாடி—அச் சந்திரன்பால் நோக்கி, இவன் கலை அனைத்தும்—இச் சந்திரனின் கலைகள் அனைத்தும், தக்கனால் மங்குமாறும்—தக்கன் சாபத்தாற் றேய்ந்து போவதையும், மேல்—அதன் பிறகு ஒரு கலை திருமுடிக்கண் இருந்திடுஞ் சிறப் பால், வளர்வதும்—வளர்ந்து வருவதையும், இயற்கையா வகுத்தான்—இச் சந்திரனுக்கு இயல்பு ஆகும்படி வகுத்தருளினர்; எங்கள் நாயகன் செய்கை யார் அறிந்தனர் என்றார்—எமது தலைவரான சிவபெருமானுடைய திருவருட் செய்கையை யாவர் அறிய வல்லவர் என்று கூறினார்கள்.

அனைத்தும் என்றது ஒரு கலை தவிர்ந்த அனைத்தையும் என்க. 'ஆட்பா லவர்க் கருளும் வண்ணமும் ஆதி மாண்பும் கேட்பான் புகின் அளவில்லை கிளக்க வேண்டா' என்ற சம்பந்தப்பெருமான் திருவாக்கை, 'எங்க ணயகன் செய்கையா ரறிவார்' என்பது ஞாபகஞ் செய்தவாறு. (48)

செக்கர் வானமேற் கிளர்ந்தெழு திங்களின் செயலை
யொக்க நாடிய சிந்தையாந் தூதினு லுணர்ந்து
தக்க னென்பவன் கனன்றியா னுரைத்தசா பத்தை
நக்க னேகொலாந் தடுக்கவல் லானென நகைத்தான்.

செக்கர் வான மேல் கிளர்ந்து எழு திங்களின் செயலை—செவ்வானத்தின் மீது விளங்கி எழுகின்ற சந்திரனின் இயல்பை, ஒக்க நாடிய தக்கன் என்பவன்—இயைபுற நாடுதல் செய்த தக்கனுனவன், சிந்தை ஆம் தூதினுல் உணர்ந்து—மனமாகிய தூதினுல் நடந்தவை யனைத்தையும் அறிந்து, கனன்று—கோபித்து, யான் உரைத்த சாபத்தை—நான் இட்ட சாபத்தை, தடுக்க வல்லான் நக்கனே கொல் என நகைத்தான்—தடுக்க வல்லவன் நக்கனுே என்று நகை செய்தான்.

நக்கன்—சிவன். (49)

எந்தை தன்றந்தை யாவரு மருகனுக் கியான்முன்
றந்த வாய்மையை விலக்கிலர் விலக்கவென் றன்முன்
வந்தும் வேண்டில ரச்சமுற் றிருந்தனர் மற்றத்
தந்தை தாயிலா வொருவனு மென்னுரை தடுப்பான்.

மருகனுக்கு யான் முன் தந்த வாய்மையை—மருகனுகிய சந்திரனுக்கு யான் முன் இட்ட சாபத்தை, எந்தை—என் தந்தையாகிய பிரமாவும், தன் தந்தை—அவர் தந்தையான திருமாலும், யாவரும்—மற்றைய யாவரும், விலக்கிலர்—தடுத்திலர்; விலக்க என்தன் முன் வந்தும் வேண்டிலர்—விலக்கும் பொருட்டு என்னெதிரில் வந்து வேண்டினரு மல்லர்; அச்சம் உற்று இருந் தனர்—யாவரும் அச்சங்கொண் டிருந்தார்கள்; என் உரை தடுப்பான்—அங்ஙனமாகவும் யானிட்ட சாபத்தைத் தடுப்பவன், தந்தை தாய் இலா ஒருவனும்—தந்தையும் தாயுமில்லாத ஏகனுகிய சிவனும்.

நன்று நன்று என்றவாறு. சிவன், 'ஒருவன் என்னும் ஒருவன் காண்க' என்பது திருவாசகம். (50)

நன்று நன்றியாம் பரம்பொரு ளுன்முகன் முதலாந்
துன்று தொல்லுயிர் யாவையு மழித்துமைந் தொழிலு
நின்று நாம்புரி கின்றன மெங்கணு நீங்கா
மென்று தன்மனத் தகந்தையுற் ருன்கொலோ வீசன்.

யாம் பரம் பொருள்—நாமே பரம்பொருள்; நான்முகன் முதலாம் துன்று தொல் உயிர் யாவையும் அழித்தும்—பிரமன் முதலிய செறிந்த உயிர்கள் யாவற்றையுஞ் சங்கரித்தும், நாம் நின்று—நாம் அழிவின்றி நின்று, ஐந் தொழிலும் புரிகின்றனம்—ஐந்தொழிலையும் புரிகின்ருேம்; எங்கணும் நீங்காம்—

எங்கும் வியாபித்திருக்கின்றோம்; என்று தன் மனத்து ஈசன் அகந்தை உற்றான் கொல்—என்றிவ்வாறு தன் மனத்தில் அச்சிவன் அகங்காரங் கொண்டான் போலும், நன்று! நன்று!—. (51)

அன்ன தன்றியே யின்னமொன் றுண்டுபா ரகத்திற்
றன்னை யேநிகர் தக்கனு நோற்றிடு தவத்தா
னென்ன வித்திரு வுதவின மென்பதை நினைந்தோ
வென்ன தாணையை யிகழ்ந்தன னித்திற மிழைத்தான்.

அன்னது அன்றி—அஃதன்றி, இன்னம் ஒன்று உண்டு—மற்று மொன் றுண்டு; பார் அகத்தில்—பூவுலகில், தன்னையே நிகர் தக்கனும்—தனக்குத் தானே நிகரான தக்கன்றானும், நோற்றிடு தவத்தான் என்ன—எம்மை நோக்கிச் செய்த தவத்தையுடையானென்று, இத்திரு உதவினம்—இவ் வளங் களையெல்லாம் நாமே அவனுக்கு நல்கினோம்; என்பதை நினைந்தோ—என்பதை எண்ணித்தானோ, என்னது ஆணையை இகழ்ந்தனன்—எனது ஆணையைப் பொருள் செய்யாது, இத்திறம் இழைத்தான்—இவ்வாறு செய்தான்.

தவத்தால் நென்னல் இத்திரு எனவும் பாடம். (52)

செய்ய தோர்பரம் பொருளியா மென்பது தெளிந்தும்
வைய மீதிலித் திருவெலாம் பெற்றுநம் மலர்த்தாள்
கையி னாற்றொழா னென்றுகொன் முன்னியான் கழறும்
வெய்ய வாய்மையை விலக்கினன் சிவனென வெகுண்டான்.

செய்யது ஓர் பரம் பொருள் யாம் என்பது தெளிந்தும்—செம்பொரு ளாகிய ஒப்பற்ற பரம்பொருள் யாம் என்பதைத் தெளிந்து வைத்தும், வையம் மீது இத் திரு எலாம் பெற்றும்—உலகத்தில் இச் செல்வம் அனைத்தை யும் எம்மிடம் பெற்றிருந்தும், நம் மலர்த்தாள் கையினால் தொழான் என்று கொல்—நமது மலரடிகளைத் தக்கன் கையெடுத்துங் கும்பிடான் என்று கருதிப் போலும், முன் யான் கழறும் வெய்ய வாய்மையை—முன் யான் சந்திரனுக் கிட்ட கொடிய சாபத்தை, சிவன் விலக்கினன் என வெகுண்டான்—சிவன் விலக்கினான் என்று கோபித்தான். (53)

தகவு மீரமு நீங்கிய புரைநெறித் தக்கன்
புகலும் வாய்மையைத் தேர்ந்துழிப் புலகனென் றுரைப்போ
னிகரில் கண்ணுதற் கடவுளை யெள்ளலை நின்னை
யிகழ்வர் யாவரு மெஞ்சுமுன் வெறுக்கையு மென்றான்.

தகவும் ஈரமும் நீங்கிய புரை நெறித் தக்கன்—நடுநிலையும் அன்பும் இல்லாத குற்றமாகிய் நெறிக்கட் செல்வோனான தக்கன், புகலும் வாய்மை

யைத் தேர்ந்துழி—சொல்லுகின்ற வார்த்தையைக் கேட்டபொழுது, புலகன் என்று உரைப்போன்—புலகர் என்று சொல்லப்படும் முனிவர், நிகர் இல் கண் நுதல் கடவுளை எள்ளலை—ஒப்பில்லா நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானை இகழாதே; நின்னை யாவரும் இகழ்வர்—இகழின் உன்னை யாவரும் இகழ்வர்; உன் வெறுக்கையும் எஞ்சும் என்றான்—உன் செல்வமும் அழியும் என்று கூறினர்.

இப் புலக முனிவர் தக்கனின் மற்றொரு மருகர் ஆகிய புலகர் போலும். (54)

என்ற வன்முக நோக்கியே தவத்தினு லென்க
ணின்ற வித்திரு நீங்குமோ நெடியமான் முதலோ
ரென்று மென்பணி மறுத்தில ரெள்ளுவ துண்டோ
நன்று நன்றுநின் னுணர்வெனச் சிறுவிதி நக்கான்.

என்றவன் முகம் நோக்கி—என்று கூறிய புலக முனிவருடைய முகத்தைப் பார்த்து, தவத்தினுல் என் கண் நின்ற இத் திரு நீங்குமோ—நான் செய்த தவத்தினுல் என்னிடத்தில் நிலைபெற்ற இச் செல்வம் என்றாயினும் நீங்குமா; நெடிய மால் முதலோர் என்றும் என் பணி மறுத்திலர்—திருநெடுமால் முதலியவர்கள் என்றாயினும் என் கட்டளையை மறுத்தாரல்லர்; எள்ளுவது உண்டோ—அப்படிப்பட்டவர்கள் என்னை இகழ்வதும் உளதாமோ; நின் உணர்வு நன்று நன்று என சிறுவிதி நக்கான்—புலகரே உமது அறிவு இருந்தபடி நல்லது நல்லது என்று கூறித் தக்கன் சிரித்தான். (55)

முறுவ லித்திடு தக்கனைக் கண்ணுறீஇ முனிவன்
பிறரி ழிப்புரை கூடுறு தென்னினும் பெருஞ்சீர்
குறைவு பெற்றிடா தென்னினு நினக்கருள் கொடுத்த
விறைவ னைப்பழித் திடுவது தகுவதோ வென்றான்.

முறுவலித்திடு தக்கனை முனிவன் கண்ணுறீஇ—இகழ்ச்சிச் சிரிப்புச் சிரித்த தக்கனைப் புலக முனிவர் நோக்கி, பிறர் இழிப்பு உரை கூடுறுது என்னினும்—பிறர் இகழும் இகழ்ச்சியுரை உன்னைச் சாராதாயினும், பெருஞ் சீர் குறைவு பெற்றிடாது என்னினும்—நீ பெற்ற பெருவளம் குறைவுபடாதாயினும், நினக்கு அருள் கொடுத்த இறைவனைப் பழித்திடுவது தகுவதோ என்றான்—உனக்கு அருள்புரிந்த சிவபெருமானைப் பழிப்பது தகுமோ என்றார்.

§'எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்றார் என்க. (56)

புலக னென்றிடு முனிவர னினையன புகல
விலகு தீநெறி யாற்றிய சிறுவிதி வினவி
யலகி லாததன் ஞற்றலும் பெருந்திரு வனைத்து
முலகி னீங்குவான் பெருமிதங் கொண்டிவை யுரைப்பான்.

---

§ திருக்குறள் – 110

புலகன் என்றிடு முனிவரன் இனையன புகல—புலகர் என்கின்ற முனி சிரேட்டர் இவற்றைக் கூற, விலகு தீ நெறி ஆற்றிய சிறுவிதி வினவி— பெரியோர் விலகுகின்ற தீநெறியிற் சென்ற தக்கன் அவைகளைக் கேட்டு, அலகு இலாத தன் ஆற்றலும்—அளவில்லாத தனது தவ வலியும், பெருந் திரு அனைத்தும்—தவத்தாற் பெற்ற பெருஞ் செல்வம் அனைத்தும், உலகில் நீங்குவான் பெருமிதம் கொண்டு—இவ்வுலகத்திற் கெட்டொழியும்படி இறு மாப்புக் கொண்டு, இவை உரைப்பான்—இவைகளைச் சொல்லுவான். (57)

நோற்று முன்னியான் பெற்றவித் திருநுகர்ந் திடுமுன்
மாற்று வானலன் செய்வினை முறையலால் வலிதி
னேற்ற மாகவொன் றிழைக்கல ஞதலா லென்பா
லாற்ற லாலரன் செய்கின்ற தென்னென வறைந்தான்.

முன் யான் நோற்று பெற்ற இத் திரு—முன்னர் யான் தவஞ் செய்து பெற்ற இச் செல்வத்தினை, நுகர்ந்திடு முன் மாற்றுவான் அலன்—அநுபவித் தற்கு முன்னர் உதவினேன் மாற்றுவானல்லன், செய் வினை முறை அலால்— ஒருவன் செய்த வினைக்குத் தக்க முறையால் அல்லாமல், ஏற்றம் ஆக வலிதில் ஒன்று இழைக்கலன்—அவ் வினையின் அளவுக்கு அதிகமாக வலிதாய் ஒன்றைச் செய்பவன் அல்லன்; ஆதலால் என்பால் அரன் ஆற்றலால் செய்கின்றது என்—ஆதலினல் என்னிடத்திற் சிவன் தன் வலியினுற் செய்வதென்னை, என அறைந்தான்—என்று கூறினுன். (58)

அறைத லோடுமப் புலகனென் றுரைப்பவ னனைத்தே
யுறுதி யாயினு மீசனை யிகழ்ந்தவ ருய்யார்
மறையெ லாமவை சொற்றது மற்றவன் றன்னை
யிறையு மெள்ளலை மனங்கொடு பராவுதி யினிநீ.

அறைதலோடும்—இவ்வாறு தக்கன் கூற, அப்புலகன் என்று உரைப்பவன்— அந்தப் புலக முனிவர், அனைத்தே உறுதி ஆயினும்—நீ சொல்லியதே உறுதி யாயினும், ஈசனை இகழ்ந்தவர் உய்யார்—சிவபெருமானை இகழ்ந்தவர் உய்ய மாட்டார்; மறை எலாம் அவை சொற்றது—வேதம் முழுவதும் அவற்றை அறுதியிட்டுரைத்தது; அவன் தன்னை இறையும் எள்ளலை—அச்சிவபெருமானைச் சிறிதும் இகழாதே; இனி நீ மனங்கொடு பராவுதி—இனி நீ மனத்தால் அப் பெருமானைப் பரவுவாயாக.

அவை என்றது இகழ்ந்தவர் உய்யாமையோடு மேற்குறிப்பிட்டவையு மாம். (59)

தன்ன டைந்தவ ராகுல மாற்றியே தகவா
லென்ன தோர்பொருள் வெஃகினு மீகின்ற தியற்கை
யன்ன வற்கது மதிதெரிந் தடைதலு மவன்பா
னின்னி னுற்றசா பத்தினை நீக்கின னெறியான்.

தன் அடைந்தவர் ஆகுலம் மாற்றி—தம்மைச் சரணடைந்தவர்களின் துன்பத்தினை ஒழித்து, தகவால் என்னது ஓர் பொருள் வெஃகினும்—தகுதிப் பாட்டோடு எப்படிப்பட்டதொரு பொருளை விரும்பினாலும், ஈகின்றது அன்னவற்கு இயற்கை—விரும்பியதைக் கொடுத்தருளுவது அச் சிவபெருமானுக்கு இயல்பாம்; அது மதி தெரிந்து—அவ்வியல்பைச் சந்திரன் அறிந்து, அவன்பால் அடைதலும்—அப்பெருமானிடஞ் சரணடைதலும், நெறியால்—அப்பெருமான் தமக்கியல்பான முறையானே, நின்னின் உற்ற சாபத்தினை நீக்கினன்—உன்னால் எய்திய சாபத்தினை நீக்கியருளினர். (60)

கற்றை வான்கலை நிறைந்தபின் முன்னநீ கனன்று
சொற்ற வாய்மையு நிறுவின னுடொறுஞ் சுருங்கச்
செற்ற மென்னினித் திங்கணின் மருகனச் சிவனும்
பெற்ற மூர்தியு மம்முறை யாவனுற் பின்னுள்.

கற்றை வான்கலை நிறைந்தபின்—தொகுதியாகிய உயர்ந்த கலைகள் நிறைந்த பிறகு, நாள்தொறும் சுருங்க—நிறைந்தவாறே நாடோறுங் குறைந்து தேய்தலால், நீ கனன்று முன்னம் சொற்ற வாய்மையும் நிறுவினன்—நீ கோபித்துச் சொன்ன சாபத்தையும் நிலைக்கச் செய்தாருமாயினர்; இனி செற்றம் என்—இவ்வாற்றால் இனிக் கோபத்தாற் பயன் என்னை, அது நிற்க; திங்கள் நின் மருகன்—சந்திரனே உன் மருமகன்; சிவனும் பெற்றம் ஊர்தியும் பின்னுள் அம்முறை ஆவன்—இடபவாகனத்தை யுடையராகிய அச் சிவபெருமானும் பின்னுளில் உனக்கு அம் முறையினர் ஆவர்.

உறவு முறையானுஞ் செற்றம் செய்தற் கிடமின்று மென்பது. (61)

என்ன வித்திற மொழிதலுஞ் சினமகன் றிமையோ
ரன்ன மூர்தியோ னியாவரும் புகழ்தர வனையான்
பன்னெ டும்பக லரசின்வீற் றிருந்தனன் பரையாங்
கன்னி மற்றவன் மகண்மையாய் வருதல்கட் டுரைப்பாம்.

என்ன இத் திறம் மொழிதலும்—என் றிவ்வண்ணம் புலக முனிவர் உரைத்தலும், சினம் அகன்று—கோபம் நீங்கி, இமையோர் அன்னம் ஊர்தியோன் யாவரும் புகழ்தர—தேவர்களும் அன்ன வாகனத்தையுடைய பிரமதேவரும் யாவரும் புகழாநிற்ப, பல் நெடும் பகல் அரசின் வீற்றிருந்தனன்—பலநெடுங்காலம் அரசுவீற்றிருந்தான் தக்கன்; அவன் மகண்மையாய்—அத் தக்கனுக்கு மகளாய், பரையாம் கன்னி வருதல் கட்டுரைப்பாம்—பரையாகிய உமாதேவியார் திருவவதாரஞ் செய்த கதையை இனிச் சொல்லுவாம். (62)

சந்திர சாபப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—190

---

# உமை கயிலை நீங்கு படலம்

கமல மூர்த்தியுங் கண்ணனுங் காண்கிலா
வமல மேனியை யன்பினர் காணுற
நிமல மாகிய நீள்கயி லாயமேல்
விமல நாயகன் வீற்றிருந் தானரோ.

கமல மூர்த்தியும் கண்ணனும் காண்கிலா அமல மேனியை—பிரம விஷ்ணுக்களாலுந் தேடிக் காண்டற்கரியதாகிய அமலமான தமது அருட்டிரு மேனியை, அன்பினர் காணுற—அன்பினையுடைய அடியார்கள் தரிசித்து உய்யும் பொருட்டு, விமல நாயகன்—அநாதி மலமுத்தரான சிவபெருமான், நீள் நிமலமாகிய கயிலாயமேல்—நீண்ட பரிசுத்தமாகிய திருக்கைலாச மலையின்கண்ணே, வீற்றிருந்தான்—அநுக்கிரக முகமாக எழுந்தருளியிருந்தார்.

கமல மூர்த்தி—தாமரைமலரில் இருக்குங் கடவுள். சிவபெருமான் விமல நாயகன்; அவர் திருமேனி அமலமேனி; அவருறைவிடம் நிமலமாகிய கைலாயம். அ, நி, வி இன்மைப்பொருள் குறித்தவை. காலத்தா லழிவின்மையின் நீள் கயிலாயம் என்றார். (1)

வீற்றி ருந்தவன் மெல்லடி கைதொழூஉப்
போற்றி யுன்றன் பொருவரு மெய்ம்மையைச்
சாற்று வாயெனச் சங்கரி வேண்டலு
மாற்ற வன்புசெய் தாங்கருள் செய்குவான்.

வீற்றிருந்தவன் மெல்லடி—திருக்கைலாசத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீகண்ட பரமேசுவரனுடைய மென்மையாகிய திருவடிகளை, சங்கரி கைதொழூஉப் போற்றி—உமையம்மையார் கைகூப்பி வணங்கித் துதித்து, உன் தன் பொருவு அரு மெய்ம்மையைச் சாற்றுவாய் என வேண்டலும்—தேவரீரின் ஒப்பற்ற உண்மைத் தன்மையைத் திருவாய்மலர்ந்தருளல் வேண்டுமென்று பிரார்த்திக்க, ஆற்ற அன்பு செய்து—அவ்வம்மையார்மீது மிக்க அன்பு செய்து, ஆங்கு அருள் செய்குவான்—அப்பொழுது திருவாய்மலர்ந்தருளுவாராயினர்.

சங்கரி—சுகஞ் செய்பவள். ஆங்கு அவ்விடமுமாம். (2)

வேறு

உருவொடு குணஞ்செய லொன்று மின்றியே
நிருமல மாய்ச்சிவ னிறைந்து நின்றதும்
பரவிய வுயிர்த்தொகைப் பந்த நீக்குவா
னொருதனிச் சத்தியா லுன்ன லுற்றதும்.

உருவொடு குணம் செயல் ஒன்றும் இன்றி—உருவம் குணம் செயல் என்னும் இவற்றில் ஒன்றும் இல்லாமல், நிருமலமாய்—சுத்தமாய், சிவன் நிறைந்து நின்றதும்—சச்சிதானந்த சொரூப சிவம் எங்கும் நிறைந்து நின்ற தன்னியல்பும், பரவிய உயிர்த்தொகைப் பந்தம் நீக்குவான்—பரந்த உயிர்க் கூட்டத்தின் பந்தத்தை நீக்கும்பொருட்டு, ஒரு தனிச் சத்தியால்—ஒப்பில் லாத ஏக சத்தி மூலமாக, உன்னல் உற்றதும்—சங்கற்பம் உளதாயதும்.

ஒன்றும் இன்றி என்றதனுல் உருவத்துக்கினமான அருவுரு, உரு ஆகிய நிலைகளும், செயலுக்கினமான அறிவு இச்சைகளுங் கொள்க. குணம்—முக் குணம். உயிர்ப்பரப்புக்கு எல்லையின்மையின், 'பரவிய உயிர்த்தொகை' என்ருர். ஒரு தனி என்ற விசேடணம் உன்னலாகிய சங்கற்பத்துக்கு முந்திய சத்தியின் விகாரமற்ற சொரூப நிலையை ஞாபகஞ் செய்வதாம்.

நிறைந்து நின்றதும் என்றதனுற் சொரூப நிலையும், உன்னல் உற்றதும் என்றதனுற் சிவம் சத்தி என்கின்ற தடத்த நிலையுங் குறிப்பிட்டவாறு. (3)

* 'சிவனரு வுருவு மல்லன் சித்தினே டசித்து மல்லன்
பவமுதற் ருெழில்க ளொன்றும் பண்ணிடு வானு மல்லன்
தவமுத லியோக போகந் தரிப்பவ னல்லன் ருனே
யிவைபெற வியைந்து மொன்று மியைந்திடா வியல்பி னுனே.'

என்ற சித்தியார்ப் பாடலும்,

§ 'தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்னமிலா னெங்கள் பிரான்'

என்ற திருவருட்பயனும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கவை.

ஐந்தியற் சத்திக ளாயி னுேர்தமைத்
தந்தது மருவுருத் தாங்கி யவ்வழிச்
சிந்தனை யருச்சனை செய்தி யாவரு
முய்ந்திடச் சதாசிவ வுருவைந் துற்றதும்.

ஐந்து இயல் சத்திகள் ஆயினுேர் தமைத் தந்ததும்—ஐந்து வகையான இயல்பினையுடைய பஞ்ச சத்திகளை உதவியதும், அவ்வழி—அப்பஞ்ச சத்தி களின் வழியாய், அரு உருத் தாங்கி—அருவுருவத்தைப் பொருந்தி, சதாசிவ உரு ஐந்து—சதாசிவ உருவம் என்று சொல்லப்படுகின்ற பஞ்ச சாதாக்கிய

* சிவஞானசித்தியார் சுபக்கம் - 70.

§ திருவருட்பயன் 1ஆம் அத். 2.

வடிவம், சிந்தனை அருச்சனை செய்து யாவரும் உய்ந்திட—தியானமும் பூசனை யுஞ் செய்து அனைவரும் உய்யும்பொருட்டு, உற்றதும்—உளதாயதும்.

பஞ்சசத்திகள் பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியா சத்தி. இவற்றினம்சமாய் முறையே சிவசாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கி யம், மூர்த்தி சாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம், கன்ம சாதாக்கியம் என்று சாதாக்கியம் ஐந்து வகையாம்.

கன்ம சாதாக்கியம் நாதமயமாகிய இலிங்கமும் பிந்துமயமாகிய பீடமுங் கூடியதாய்ப் பஞ்ச கிருத்தியத்தை யுடையதாயிருக்கும்' கன்ம சாதாக்கியர் இலிங்கமும் பீடமுமாயிருப்பினும், ஐந்து திருமுகமும் பத்துத் திருக்கரங்களு முடையவராய்த் தியான ரூபராயிருப்பர். (4)

இருபதின் மேலுமைந் தீசன் கேவல
வுருவம தாகியே யுறைந்த பெற்றியும்
விரவிய குடிலையின் விளைவு செய்துபின்
னருள்புரி மூர்த்திக ளாய பேதமும்.

இருபதின் மேலும் ஐந்து ஈசன் கேவல உருவம் ஆகி—இருபத்தைந்து மகேசுர மூர்த்தம் என்று சொல்லப்படும் கேவல வடிவம் உளதாய், உறைந்த பெற்றியும்—அமைந்த இயல்பும், விரவிய குடிலையின் விளைவு செய்து—வியா பகமான சுத்தமாயையில் விளைதல் உளதாகச் செய்து, பின்—அதன் மேலும், அருள் புரி மூர்த்திகள் ஆய பேதமும்—திருவருள் புரிகின்ற அதிட்டான வாயில் கள் எனப்படும் மூர்த்திகள் ஆகிய பேத நிலையும்.

குடிலையின் விளைவை, நிருமலமாய்ச் சிவன் நிறைந்து நின்றதாகிய சுவரூப நிலை தவிர்ந்த தடத்தங்களுக்குக் கொள்க. பஞ்ச சத்திகளுள் பராசத்தியைச் சுவரூபமெனக் கோடலுண்டு.

மகேசுர வடிவம் சந்திரசேகரர் தொடக்கம் இலிங்கோற்பவர் இறுதி யாக இருபத்தைந்தாம். அருள்புரி மூர்த்திகள் அநந்தேசுரர் ஸ்ரீகண்டர் முதலாய அதிட்டான பேதங்களாம்.

செய்து ஆய என்க. (5)

முந்திய மாயைகண் மூல மாகவே
யந்தமி றத்துவ மாறு டாறுமுன்
வந்திட வளித்தது மரபி னைந்தொழில்
சிந்தைகொள் கருணையா னடாத்துஞ் செய்கையும்.

முந்திய மாயைகள் மூலமாக—ஆதியாய மாயைகளை மூலமாகக்கொண்டு, அந்தம் இல் தத்துவம் ஆறுஆறும்—முடிவற்ற தத்துவங்கள் முப்பத் தாறும், முன் வந்திட அளித்ததும்—அம்மாயைகளிலே தோன்ற உதவியதும், மரபின் ஐந்தொழில் சிந்தைகொள் கருணையால் நடாத்தும் செய்கையும்—

முறையானே பஞ்ச கிருத்தியங்களைத் திருவுளத்திற் பொருந்திய கருணை யாகிய திருவருளால் நடத்துகின்ற தன்மையும்.

மாயைகள் சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை. மூலம் முதற் காரணம். தத்துவங்கள் எல்லைகாண்பரியவாதலின் அந்தமில் என்றார். (6)

விதித்திடு மூவகை வியனு யிர்த்தொகை
கதித்திடு தத்துவக் கணங்க ளங்குளா
ருதித்திடு முறைமையி னொடுங்கச் செய்துதான்
மதித்தொரு தன்மையாய் மன்னி நிற்பதும்.

விதித்திடு—சிருட்டி செய்யப்பட்ட, மூவகை வியன் உயிர்த்தொகை—மூன்று வகையான பெரிய உயிர்க்கூட்டங்களும், கதித்திடு—ஒன்றிலிருந்து ஒன்று உயர்ந்து கதிக்கின்ற, தத்துவக் கணங்கள்—தத்துவக் கூட்டங்களாகிய, அங்குளார்—அங்கே வசிக்குந் தத்துவ வாசிகளும், உதித்திடு முறைமையின்—சிருட்டிக்கிரமம் இருந்தவாறே, ஒடுங்கச் செய்து—ஒடுங்கும்படி செய்து, தான் ஒரு தன்மையாய் மதித்து மன்னி நிற்பதும்—தாம் ஏக வஸ்துவாய்க் கருதப்பட்டு விகாரமின்றி நிலைத்து நிற்பதும்.

மூவகை உயிர்த்தொகை—விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்கின்ற மூவகை உயிர்க்கூட்டம்.

கதித்திடுதல் தாத்துவிகங்களாய்க் கதித்திடுதலுமாம்.

'தான் மதித்தொரு தன்மையாய் மன்னி நிற்பது', 'உருவொடு குணஞ் செயலொன்று மின்றி நிருமலமாய்ச் சிவன் நிறைந்து' நிற்பதாம் என்க. (7)

ஆனதன் னியற்கைக ளனைத்துங் கண்ணுதல்
வானவ னாகம மறையின் வாய்மையான்
மேனிகழ் தொகைவகை விரிய தாகவே
தானருள் புரிந்தனன் றலைவி கேட்கவே.

ஆன—இவ்வாறான, தன் இயற்கைகள் அனைத்தும்—தமது சுவரூபம் தடத்த மாகிய இயற்கைகள் அனைத்தையும், கண்ணுதல் வானவன் தான்—நெற்றிக் கண்ணையுடைய ஸ்ரீகண்ட பரமேசுரராகிய தாம், தலைவி கேட்க—உலக மாதா வாகிய உமையம்மையார் கேட்க, ஆகம மறையின் வாய்மையால்—ஆகமத்திற் சென்று முற்றுகின்ற வேத சத்திய வாக்குக்களால், மேல் நிகழ்—மேன்மை யுடைத்தாய் நிகழ்கின்ற, தொகை வகை விரி அது ஆக—தொகை வகை விரி என்னும் அம்முறை அமைய, அருள் புரிந்தனன்—திருவாய் மலர்ந் தருளினர்.

நின்றதும் உற்றதும் உற்றதும் பேதமும் செய்கையும் நிற்பதும் ஆன என்க. சுவரூபம் இருந்தபடி இருக்கத் தடத்தம் அவ்வாறமையும் ஆதலின் அதுவும் இயற்கை எனப்பட்டது. (8)

சுந்தரி யிவ்வகை யுணர்ந்து தோமிலா
வெந்தைநிற் குருவிலே யென்றி பின்னுற
வைந்தொடு பலவுரு வடைந்த தென்னெனக்
கந்தனை யருளுவான் கழறன் மேயினுன்.

சுந்தரி—உமையம்மையார், இவ்வகை—சுவரூபமும் தடத்தமுமாகிய சிவ பரம்பொருளின் இயல்புகளாகிய இவ்வகைகளை, உணர்ந்து—அறிந்து, தோம் இலா எந்தை—குற்றமில்லாத எம்பெருமானே, நிற்கு உருவு இலை என்றி—தேவரீருக்கு உருவம் முதலிய ஒன்றும் இல்லை என்று அருளிச்செய்தீர்; பின் உற—பின்பு அதற்கு மாறுக, ஐந்தொடு பல உரு அடைந்தது என் என—பஞ்ச சாதாக்கியத்தோடு வேறு பல வடிவங்களையும் பொருந்தியது என்னை என்று வினவ, கந்தனை அருளுவான் கழறன் மேயினுன்—கந்தக்கடவுளைத் தந்தருளுபவராகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுவாராயினுர். (9)

உருவிலே நமக்கென வொன்று நம்வயி
னருளுரு வவையெலா மென்ன வன்னதோர்
பொருளென வுன்னியே புவன மீன்றவள்
பெருமகிழ் வெய்தியிப் பெற்றி கூறினுள்.

நமக்கு என உருவு இலே—நமக்கு என்று ஓர் உருவம் இல்லை; அவை எலாம் நம் வயின் ஒன்றும் அருள் உரு என்ன—மேற் குறிப்பிட்ட வடிவங்கள் எல்லாம் நம்மிடத்து நம்மோ டபின்னமாய் ஒருமைப்பட்டிருக்குஞ் சத்தி காரியமாகிய அருள் வடிவங்களாம் என்று அருளிச்செய்ய, அன்னது ஓர் பொருள் என உன்னி—அவ்வாறு கூறியருளியதைத் தமக்கு வாய்ப்பான தொரு பொருளாகக் கருதி, பெரு மகிழ்வு எய்தி—அதனுற் பெரு மகிழ்ச்சி யுற்று, புவனம் ஈன்றவள் இப்பெற்றி கூறினுள்—உலகங்களை ஈன்றருளிய உமையம்மையார் இத்தன்மையைக் கூறியருளினுர். (10)

அந்நிலே வடிவெலா மருளி னுதலா
லுன்னருள் யானென வுரைப்ப துண்மையே
யென்னுரு வாமவை யென்று பாங்கமர்
கன்னிகை வியந்தனள் கழறும் வேலேயே.

அ வடிவு நிலே எலாம்—மேலே குறிப்பிட்ட உருவ நிலைகள் அனைத்தும், அருளின் ஆதலால்—அருட்சத்தியினுல் உண்டாதலினுலும், உன் அருள் யான் என உரைப்பது உண்மை ஆதலால்—தேவரீரின் அருட்சத்தி யானே என்று சொல்வது சத்தியம் ஆதலினுலும், அவை என் உரு ஆம்—அவ்வடிவங்கள் அனைத்தும் என் வடிவமேயாம்; என்று பாங்கு அமர் கன்னிகை வியந்தனள்—என்று கூறி வாமபாகத்தில் வீற்றிருந்த உமையம்மையார் தம்மைத் தாமே வியந்தருளினுர்; கழறும் வேலே—அவ்வாறு வியந்தருளும்போது. ஆதலால், உண்மை என்பதனேடுங் கூட்டப்பட்டது. (11)

கயந்தன தீருரி கவின்று பொற்புறப்
புயந்தனி லணிந்தருள் புனித னங்கைநீ
நயந்தரு நின்புகழ் நாடி நம்முனம்
வியந்தனை யுனையென விளம்பி மேலுமே.

கயம் தனது ஈர் உரி—யானையினது உரித்த தோலானது, கவின்று பொற்பு உற—விளங்கி அழகு மிக, புயம்தனில் அணிந்து அருள் புனிதன்—திருப் புயத்தில் அணிந்தருளிய பரிசுத்தராகிய சிவபெருமான், நங்கை நீ—உமையே நீ, நயம் தரு நின் புகழ் நாடி—ஆன்மாக்களுக்கு நன்மையைச் செய்கின்ற உன் புகழை நீ விரும்பி, நம் முனம் உனை வியந்தனை—நம் முன்னிலையில் உன்னை நீயே வியந்துகொண்டாய்; என விளம்பி—என்று திருவாய்மலர்ந் தருளி, மேலும்—பின்னரும்.

மேலும் புகலவேண்டுமோ காண்கெனு நீங்கினன் என வருஞ் செய்யுளோ டியைத்து முடிக்க. (12)

இருளுறு முயிர்தொறு மிருந்து மற்றவை
தெருளுற வியற்றுது மதனைத் தீர்துமேன்
மருளுறு சடமதாய் மாயு மேனைய
பொருளுறு நிலைமையைப் புகல வேண்டுமோ.

இருள் உறும் உயிர்தொறும் இருந்து—இருளாகிய ஆணவ மலத்திற் கட்டுண்டு கிடக்கும் உயிர்கள் தோறும் ஒன்றாய்க் கலந்திருந்து, அவை தெருள் உறவு—அவ்வுயிர்கள் இருணீங்கி ஞானம் உறுதலை, இயற்றுதும்—நிகழ்த்துவோம்; அதனைத் தீர்துமேல்—கலந்திருந்துகொண்டே அந் நிகழ்த்து கையை நீங்குவோமானால், மருள் உறும் சடம் ஆய் மாயும்—மயக்கம் பொருந் திய சடப்பொருளாய் அவ்வுயிர்கள் அழிந்துபடும்; ஏனைய பொருள் உறும் நிலைமையை புகல வேண்டுமோ—சித்துப்பொருள்களின் நிலைமை அவ்வா றானால் ஏனைய சடப்பொருள்கள் அடையுந் தன்மையைச் சொல்லவும் வேண்டுமோ.

சிவம் உயிர்தொறும் இருந்தபடி இருக்கத் தெருளுறவு நிகழும் என்க. தெருளுறவுக்குத் தாமே கருத்தாவாதலின் இயற்றுதும் என்றருளினர். தெருள் உற இயற்றுதும் எனப் பிரித்துரைப்பினும் அமையும். (13)

உன்னிடை தனினும்யா முறுத லில்வழி
நின்னுயி ருணர்வுறு நினக்குக் காட்டுது
மன்னது காண்கெனு வயனை யாதிய
மன்னுயி ரியற்றிடும் வண்ண நீங்கினன்.

உன்னிடை தனினும்—உமையே எம்மோடு அபின்னமாயிருக்கும் உன் னிடத்திலேதானும், யாம் உறுதல் இல்வழி—யாம் தெருள் உற வியற்றுதலைப்

பொருந்தாதவழி, நின் உயிர் உணர்வு உரு(து)—உன்னுடைய ஆன்மாவும் உணர்ச்சி கைகூடாது; அன்னது நினக்குக் காட்டுதும் காண்க எனு—அவ்வியல்பை உனக்குக் காட்டுவோம் காண்பாயாக என்று கூறியருளி, அயன் ஆதிய மன்னுயிர் இயற்றிடும் வண்ணம் நீங்கினன்—பிரமா முதலிய நிலைபெற்ற உயிர்களை இயங்குவிக்குந் தன்மையை நீங்கிச் சும்மாவிருந் தருளினர்.

உயிர்கள்தோறும் இருத்தலை நீங்காதே உயிர்கள்தோறும் இயற்றிடும் வண்ணம் நீங்கினன் என்க. நினக்குக் காட்டுதும் என்றதனால் இயற்றிடும் வண்ணம் நீங்கியதை உமை தவிர்ந்த உயிர்களுக்குக் கொள்க. உருது ஈறு கெட்டு நின்றது. காண்க 'அ' கெட்டது. ஐ சாரியை. (14)

தேவர்க ணாயகன் செயலி லாமையா
லாவிகள் யாவையுஞ் சடம தாகியே
யோவிய மேயென வுணர்வின் றுற்றன
பூவுல கேமுதற் புவனம் யாவினும்.

தேவர்கள் நாயகன் செயல் இலாமையால்—தேவர்கள் நாயகரான சிவ பெருமான் தெருளுற இயக்கும் செயல் இன்றிச் சும்மா இருந்தமையால், பூவுலகு முதற் புவனம் யாவினும் ஆவிகள் யாவையும்—பூவுலகம் முதலிய புவனங்கள் அனைத்திலுமுள்ள உயிர்கள் அனைத்தும், சடம் ஆகி—சடங்களாய், ஓவியம் என உணர்வு இன்று உற்றன—பாவைகளைப்போல அறிவின்றிக் கிடந்தன.

ஓவியம் சித்திரம் எனினுமாம். (15)

ஆட்டுவித் திடுபவ னதுசெ யாவழிக்
கூட்டுடைப் பாவைகள் குலைந்து வீழ்ந்தென
நாட்டிய பரனரு ணடாத்த லின்மையா
லீட்டுபல் லுயிர்த்தொகை யெனைத்து மாய்ந்தவே.

ஆட்டுவித்திடுபவன்—நூலை ஆட்டுதல்மூலம் பாவைகளை ஆட வைப்பவன், அது செயாவழி—அவ்வாட்டுதற்றொழிலைச் செய்யாதபோது, கூட்டுடைப் பாவைகள்—கூட்டுதலையுடைய பாவைகள், குலைந்து வீழ்ந்தென—கூட்டுதல் இல்லாதபோது நிலைகுலைந்து வீழ்ந்தாற்போல, நாட்டிய பரன்—யாவற் றையும் நிலைக்கச் செய்த பரம்பொருளாகிய சிவபெருமான், அருள் நடாத்தல் இன்மையால்—தமது திருவருளை நடாத்தல் செய்யாது சும்மா இருந்தமை யால், ஈட்டு பல் உயிர்த்தொகை எனைத்தும்—வினைகளை ஈட்டுகின்ற பல வாகிய உயிர்க்கூட்டம் எல்லாம், மாய்ந்த—உணர்வின்றி மாய்ந்து போயின.

நூலசைவினாற் பாவை இயங்குவதுபோலத் திருவருள் அசைவினால் உலகம் இயங்கும் என்க. அருளசைவுக்குக் கருத்தா இறைவன். (16)

இந்தவா றுயிர்த்தொகை யாவு மொல்லையி
னந்தியே சடமதாய் நணிய வெல்லையிற்
சிந்தைசெய் தினையது தெருமந் தஞ்சியே
சுந்தரி யரனடி தொழுது சொல்லுவாள்.

இந்தவாறு—இவ்வண்ணம், உயிர்த்தொகை யாவும் ஒல்லையில் நந்தி—உயிர்க்கூட்டம் முழுவதும் விரைவில் உணர்வு கெட்டு, சடமதாய் நணிய எல்லையில்—சடமாய்ப்போன சமயத்தில், சுந்தரி இனையது சிந்தை செய்து—உமையம்மையார் இவ்வாறாய தன்மையைச் சிந்தித்து, தெருமந்து அஞ்சி—கலங்கிப் பயந்து, அரன் அடி தொழுது சொல்லுவாள்—சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கிக் கூறுவார். *(17)*

அறிகில னெந்தைநீ யனைத்து மாகியே
செறிவது முழுதுயிர்த் திறனி யற்றியே
யுறுவதை யென்பொருட் டொருவி நின்றனை
இறுதியி னவையெலா மிருளின் மூழ்கவே.

எந்தை நீ அனைத்தும் ஆகி செறிவது முழுது அறிகிலன்—எம்பெருமானே தேவரீர் எல்லாமாய்க் கலந்திருப்பதன் பயன் முழுவதையும் யான் அறிய வல்லேன் அல்லேன், உயிர்த்திறன் இயற்றி உறுவதை—உயிர்வகைகளினிடத்திலே தெருளுறவு ஆகிய ஞானத்தை நிகழச் செய்து தேவரீ ரிருப்பதை, என்பொருட்டு ஒருவி—இப்பொழுது எனக்கு உணர்த்தும்பொருட்டு நீங்கி, அவை எலாம் இறுதியின் இருளின் மூழ்க நின்றனை—அவ்வுயிர்கள் அனைத்தும் இறுதிக் காலத்திற்போல இருளின் மூழ்குமாறு நின்றருளினீர்.

அனைத்துமாகிச் செறிவதன் பயன்களுள் ஒன்று, உயிர்த்திறங்கள்பால் தெருளுறவு இயற்றல் என்க. *(18)*

ஓரிறை யாகுமீ துனக்கு யிர்க்கெலாம்
பேருக மளப்பில பெயரு மென்பிழை
சீரிய வுளங்கொள றேற்றம் பெற்றெழீஇ
யாருயிர் மல்குமா றருளு வாயெனா.

ஈது—தேவரீர் ஒருவி நின்றருளிய இச் செயல் நிகழ்ச்சிக் காலம், உனக்கு ஓர் இறையாகும்—தேவரீருக்கு ஓரிறைப்பொழுது ஆகும், உயிர்க்கு எலாம் அளப்பில பேருகம் பெயரும்—உயிர்வர்க்கங்களுக்கெல்லாம் அநேக உகங்கள் கழியுங் காலமாகும்; என் பிழை சீரிய உளம் கொளல்—என்னால் நிகழ்ந்த இப்பிழையைச் சிறப்புப் பொருந்திய திருவுள்ளத்திற் கொள்ளாதொழிக; ஆர் உயிர் தேற்றம் பெற்று எழீஇ மல்குமாறு—அரிய உயிர்கள் தெளிவு பெற்று எழுந்து விருத்தியுறுமாறு, அருளுவாய் எனா—அருள் புரிவீராக என்று.

எனப் பரவினள் பணிந்து நிற்றலும் என வருஞ் செய்யுளில் முடிபு காண்க. (19)

பன்முறை பரவினள் பணிந்து நிற்றலு
மன்மலி கூந்தலுக் கருளி யாவிக
டொன்மையில் வினைப்பயன் றுய்ப்ப நல்குவா
னின்மல னினைந்தனன் கருணை நீர்மையால்.

பன்முறை பரவினள் பணிந்து நிற்றலும்—பலமுறை துதித்து வணங்கி நிற்க, அல் மலி கூந்தலுக்கு அருளி—கருமை மிக்க கூந்தலினையுடைய உமையம்மையாருக்கு அருள்செய்து, ஆவிகள் தொன்மையில் வினைப்பயன் துய்ப்ப நல்குவான்—உயிர்கள் முன்புபோல வினைப்பயன்களை நுகர்தற்கு அருளும்படி, கருணை நீர்மையால் நின்மலன் நினைந்தனன்—இயல்பாகிய கருணையினால் நின்மலரான சிவபெருமான் திருவுளங்கொண்டருளினார். (20)

திருத்தகு தனதருள் சேர்ந்த பல்வகை
யுருத்திரர் தமக்குமுன் னுணர்வு செய்துழி
நிருத்தனை யவ்வழி நினைவுற் றிச்செயல்
கருத்திடை யாதெனக் கருதி நாடினார்.

முன்—முதற்கண், தனது திருத்தகு அருள் சேர்ந்த—தமது செவ்விய திருவருளை அடைந்த, பல்வகை உருத்திரர் தமக்கு—பலவகை உருத்திரர்களுக்கு, உணர்வு செய்துழி—உணர்வு உதிக்கும்படி செய்தருளியபோது, அவ்வழி—அது வாயிலாக, நிருத்தனை நினைவு உற்று—நள்ளிருளில் நட்டம் பயில்பவராகிய சிவபெருமானை அவ்வுருத்திரர்கள் நினைவு கூர்ந்து, இச் செயல் யாது என—இந்நிகழ்ச்சி யாதோ என்று, கருத்திடைக் கருதி நாடினார்—தம் மனத்தின்கட் சிந்தித்து ஆராய்ந்தார்கள்.

சாரூபம் பெற்றவர் ஆதலின் அருள் சேர்ந்த என்றார். பல்வகை யுருத்திரர் பதினோருருத்திரர். ஐந்து மாறுமாம் மெய்வகை யுருத்திரர் எனப் பின் வருதல் காண்க. பக்குவம் மிக்காராதலின் முதற்கண் உருத்திரர் தமக்கு உணர்வு நல்கப்பட்டது. (21)

நாடிய வெல்லையி னான்மு கத்தன்மா
றேடிய வண்ணறன் செய்கை யீதெனக்
கூடிய வோதியாற் குறித்து முன்னுற
வீடிய வுயிர்த்தொகை யெழுப்ப வெஃகியே.

நாடிய எல்லையில்—'இச் செயல் யாது' என்று ஆராய்ந்த சமயத்தில், ஈது—இச்செயல், நான்முகத்தன் மால் தேடிய அண்ணல் தன் செய்கை என—பிரமாவுந் திருமாலுந் தேடிய சிவபெருமானுடைய செயலேயாம் என்று,

கூடிய ஓதியால் குறித்து—கைகூடிய ஞானத்தினால் அறிந்து, வீடிய உயிர்த் தொகை—உணர்வு மாய்ந்து சடமாய்ப்போன உயிர்க்கூட்டம், முன் உற எழுப்ப வெஃகி—முன்னிலைமையை உறும்பொருட்டு எழுப்ப விரும்பி. (22)

கண்ணுத லெந்தைதன் கழல்க ளர்ச்சனை
பண்ணுத லுன்னியப் பகவன் றொல்சுடர்
விண்ணிடை யின்மையின் வேலை காண்கிலா
மண்ணிடை யருச்சுன வட்டத் தெய்தினர்.

கண்ணுதல் எந்தைதன் கழல்கள் அர்ச்சனை பண்ணுதல் உன்னி—கண்ணுதலாகிய எம்பெருமானின் பாதங்களை அருச்சனை செய்வதைக் கருத்துட்கொண்டு, அப்பகவன் தொல் சுடர் விண் இடை இன்மையின்—அப்பகவானின் பழைமையாகிய சுடர்கள் ஆகாயத்தில் இயக்கம் இன்மையால், வேலை காண்கிலா மண்ணிடை—காலந் தெரியாமல் இருக்கின்ற பூமியின்கண்ணே, அருச்சுன வட்டத்து எய்தினர்—திருவிடை மருதூரை அடைந்தார்கள்.

உயிர்த்தொகை எழுப்ப வெஃகி அர்ச்சனை பண்ணுதல் உன்னினர் என்க. சுடர், சந்திர சூரியர். அணியாயும் விழியாயும் மூர்த்தமாயும் அமைதலின் பகவன் றொல்சுடர் என்றார். இன்மையின் காண்கிலா என்க.

அருச்சுனம் மருதமரம். அருச்சுனப் பெயரால் வழங்கும் மூன்று தலங்களுள் இத்தலம் இடைக்கண்ணது. அதனால் மத்தியார்ச்சுனம் எனப்படும். வட்டம்—எல்லை. இங்கே எல்லைப்படுத்தப்படுவதாகிய ஊர். ''தில்லை வட்டம்'' எனத் தேவாரத்தில் வருதல் காண்க.

'இந்தப் பூமி சிவனுய்யக் கொள்கின்றவாறு' என்பது திருவாசகம். 'வானிடத்தவரும் மண்மேல் வந்தரன்றனை யர்ச்சிப்பர்' என்பது சித்தியார். உருத்திரர் தம் பதத்தினீங்கி, அர்ச்சனைபண்ணுதல் உன்னி மண்ணிடை எய்தினரென்க. (23)

எங்கணுங் கனையிரு ளிறப்ப வீசலிற்
கங்குலே போன்றதிக் காலை கண்ணுதற்
புங்கவற் கேற்றிடு பூசை செய்துமென்
றங்கவர் யாவரு மாய்தன் மேயினர்.

எங்கணும் கனை இருள் இறப்ப வீசலின்—எவ்விடத்திலும் செறிந்த இருள் மிக்குப் பரவுதலால், கங்குலே போன்றது—அக்காலம் இராக்காலம் போன்றிருந்தது; இக்காலை—இப்படிப்பட்ட காலத்தில், கண்ணுதற் புங்கவற்கு—கண்ணுதலாகிய சிவபெருமானுக்கு, ஏற்றிடும் பூசை செய்தும் என்று—ஏற்ற பூசையைச் செய்யக்கடவேம் என்று, அங்கு அவர் யாவரும் ஆய்தன் மேயினர்—அவ்விடத்தில் அவ்வுருத்திரர் யாவரும் பூசைக் கிரமத்தைச் சிந்திப்பாராயினர். (24)

முண்டக மலர்கெழு முக்கண் மேலையோன்
கொண்டதோ ரைம்பெருங் கோலத் தேவரு
மெண்டகு மூவகை யியல்பு ளாங்கவர்
மண்டல விதியினுல் வடிவ தாக்கியே.

எண் தகும் மூவகை இயல்புள்—எண்ணப்படும் அரு அருவுரு உரு என்கின்ற மூவகைத் தடத்த இயல்புள்ளே, முண்டக மலர் கெழு முக்கண் மேலையோன்—தாமரை மலர்போல விளங்குகின்ற மூன்று கண்களையுடைய சிவபெருமான், கொண்டது ஓர் ஐம் பெருங் கோலத்து வரும் வடிவது—அமைந்தருளிய பஞ்ச சாதாக்கியத்துட் பொருந்திய அருவுருவத் திருமேனியை, ஆங்கு அவர் மண்டல விதியினுல் ஆக்கி—அவ்விடத்தில் அவ்வுருத்திரர் மண்டலவிதிப் பிரகாரம் தாபனஞ் செய்து.

மூவகையியல்புள் ஐம்பெருங் கோலத்து வரும் வடிவம் அருவுருவம் என்க. அது பகுதிப்பொருள் விகுதி. குண்டம் மண்டலம் வேதிகை என்ற மூன்றனுள் மண்டலம் என்க. இம் மண்டலத்தை ஏகாதச மண்டலம் என்றலுமாம். ஏகாதசம் பதினென்று. (25)

எண்ணிரு திறத்தவா யியன்ற நற்பொரு
ளுண்ணிக ழளியொடு முய்த்து வேதனுங்
கண்ணனும் வழிபடு கங்குற் பூசையைப்
பண்ணுதன் முயன்றனர் பரிவின் மேலையோர்.

பரிவின் மேலையோர்—அன்பின் மிக்கோரான அவ்வுருத்திரர், உள் நிகழ் அளியொடு—உள்ளத்துள் எழுகின்ற அன்போடு, எண்ணிரு திறத்தவாய் இயன்ற நற்பொருளும் உய்த்து—பதினுறு வகையாய்ப் பொருந்திய நல்ல உபசாரப் பொருள்களையும் அமைத்துக்கொண்டு, வேதனும் கண்ணனும் வழிபடு கங்குற் பூசையை—பிரமாவுந் திருமாலுஞ் செய்து வழிபட்ட சிவராத்திரிப் பூசையை, பண்ணுதல் முயன்றனர்—செய்ய முயன்ருர்கள்.

எண்ணிரு பொருள் சோடசோபசாரப் பொருள். ஒடும் என்புழி உம்மை பொருள் என்பதனேடு கூட்டப்பட்டது. வழிபடுபூசை வினைத்தொகை. அப்பூசை சிவராத்திரிப்பூசை. (26)

ஆறிரு நாலுட னஞ்செ ழுத்தையுங்
கூறின ரெண்ணினர் கோதில் கண்டிகை
நீறெடு புனைந்திறை நிலைமை யுட்கொளா
வேறுள முறையெலாம் விதியிற் செய்துபின்.

நீறெடு கோதில் கண்டிகை புனைந்து—விபூதியையுங் குற்றமற்ற உருத்திராக்கத்தையுந் தரித்து, இறை நிலைமை உட்கொளா—சிவபெருமானுடைய

அருவுருவத் திருமேனியையும் அவர் இயல்புகளையுந் தியானஞ்செய்து, ஆறிரு நாலுடன் அஞ்செழுத்தையும் எண்ணினர் கூறினர்—சோடச கலாப் பிராசாத மந்திரத்தையும் பஞ்சாக்கர மந்திரத்தையுஞ் சிந்தித்துச் செபித்து, வேறு உள முறை எலாம்—வேறு செய்யற்பாலனவாயுள்ள முறை அனைத்தையும், விதியிற் செய்து பின்—விதிப்படி செய்து பின்னர்.

உடன் எண்ணும்மைப் பொருட்டு. சோடசம் பதினாறு. பிராசாத மந்திரம் பிரணவ பீசங்களுடன் கூடிப் பதினாறு மாத்திரைகள் ஒலிக்குஞ் சூக்கும பஞ்சாக்கரம் என்பர். கூறினர் எண்ணினர் எச்சமுற்று. கோதின்மை நீற்றுக்குமாம். இறையும் நிலைமையு மென்க. மேல் ஐம்பெருங் கோலத்து வடிவு என்றதனால் அருவுருவத் திருமேனியாகிய சதாசிவ வடிவைத் தியானித்தன ரென்க. வேறுள முறை யென்றது பூதசுத்தி அந்தரியாகம் முதலியவற்றை. பின் என்றதனால் முன்னிகழ்ந்தது அகப்பூசை; இனி நிகழ்வது புறப்பூசை என்க. (27)

வான்குலாம் வில்லுவ மருமென் பாசடை
தேன்குலா மரையிதழ் செய்ய சாதிவீ
கான்குலாம் வலம்புரி கடவுட் டொல்பெயர்
நான்கியா மத்தினு நவின்று சாத்தியே.

வான்குலாம் வில்லுவ மருமென் பாசடை—பெருமை பொருந்திய மணமும் மென்மையும் வாய்ந்த பசிய வில்வப்பத்திரம், தேன் குலாம் மரை இதழ்—தேன் பொருந்திய தாமரைமல ரிதழ், செய்ய சாதி வீ—செம்மை பொருந்திய சாதிப் புஷ்பம், கான் குலாம் வலம்புரி—வாசனை பொருந்திய நந்தியாவர்த்தம் ஆகிய இவைகளால், நான்கு யாமத்திலும்—முறையே நான்கு யாமங்களிலும், கடவுள் தொல் பெயர் நவின்று சாத்தி—பழைமையாகிய சிவநாம மந்திரங்களைச் சொல்லி அருச்சித்து.

சிவநிசிப் பூசைக்குச் சிறந்ததாய்ப் பெருமை படைத்தது வில்வம். வில்லுவ அடை என்று கூட்டுக. சாதி, சிறு சண்பகம். சாதி மல்லிகை என்பாரு முளர். (28)

ஏயவான் பயறுபா லெண்ண லோதனந்
தூயநல் லுணவிவை தொகுத்துக் கண்ணுத
லுயகன் முன்னுற நான்கி யாமத்து
நேயமொ டம்முறை நிவேதித் தேத்தியே.

வான் ஏய நல்—உயர்ச்சி பொருந்திய நல்ல, பயறு பால் எள் ஓதனம்—முற்கான்னம் பாலன்னம் திலான்னம், தூய நல் உணவு—சுத்தான்னம், இவை தொகுத்து—ஆகிய இவைகளை அமைத்து, அம்முறை—அந்த முறையானே, நான்கு யாமத்தும்—நான்கு யாமங்களினும், கண்ணுதல் நாயகன் முன்னுற

நேயமொடு நிவேதித்து ஏத்தி—கண்ணுதலாகிய சிவபெருமானது முன்னிலை யில் அன்போடு நிவேதனஞ் செய்து துதித்து.

முற்கம் பச்சைப்பயறு. பால் ஓதனம் பாயசான்னமுமாம். (29)

பின்னரு மியற்றிடு பெற்றி யாவையுந்
தொன்னிலை விதிகளிற் றேமு றுவகை
யுன்னினர் புரிந்துழி யுவந்து ருத்திரர்
முன்னுற வந்தனன் முக்கண் மூர்த்தியே.

பின்னரும்—மேலும், இயற்றிடு பெற்றி யாவையும்—செயற்பாலனவாய செய்கைகள் யாவற்றையும், தொல் நிலை விதிகளில் தோம் உறு வகை—பழைமையாகிய நிலைபெற்ற விதிகளினின்றும் வழு வாராத பிரகாரம், உன்னினர் புரிந்துழி—சிந்தித்துச் செய்த சமயத்தில், முக்கண் மூர்த்தி உவந்து—மூன்று கண்களையுடைய சிவபெருமான் தமக்கு அவர்கள் செய்த பூசைக்கு மகிழ்ந்து, உருத்திரர் முன்னுற வந்தனன்—அவ்வுருத்திரர்களுக்கு முன்னே தோன்றியருளினர். (30)

அவ்விடை மருதினி லைந்து மாறுமா
மெய்வகை யுருத்திரர் வேண்டி யாங்கருள்
செய்வதோர் கண்ணுதற் றேவன் றென்மைபோ
லெவ்வகை யுயிரையு மியற்ற வுன்னலும்.

அ இடை மருதினில்—அந்தத் திருவிடை மருதூரில், மெய்வகை ஐந்தும் ஆறும் ஆம் உருத்திரர்—சிவபெருமானுடைய வடிவத்தைக் கொண்ட வகை யினரான பதினொ ருருத்திரர்களும், வேண்டியாங்கு—விரும்பியவாறு, அருள் செய்வது ஓர் கண்ணுதல் தேவன்—அருள் செய்வதை மேற்கொண்டருளியவ ராகிய சிவபெருமான், எவ்வகை உயிரையும்—இயக்கமற்றுக் கிடந்த எவ் வகைப்பட்ட உயிர்களையும், இயற்ற—அவ்வுயிர்கள் இயக்கம் உற, உன்னலும்—திருவுளங் கொண்டருளுதலும்.

உருத்திரர்கள் வேண்டியது, 'முன்னுற, வீடிய உயிர்த்தொகை எழுப்ப வெஃகி' என முன்னுரைக்கப்பட்டது. (31)

எழுந்தனர் மாலய னிந்தி ராதிய
ரெழுந்தன ரெழுந்தனர் யாரும் வானவ
ரெழுந்தனர் முனிவர ரேனை யோர்களு
மெழுந்தன வுயிர்த்தொகை யிருளு நீங்கிற்றால்.

மால் அயன் எழுந்தனர்—பிரம விட்டுணுக்கள் எழுந்தார்கள்; இந்தி ராதியர் எழுந்தனர்—இந்திரன் முதலிய திக்குப்பாலகர்கள் எழுந்தார்கள்;

வானவர் யாரும் எழுந்தனர்—தேவர்கள் அனைவரும் எழுந்தார்கள்; முனிவரர் எழுந்தனர்—முனி சிரேட்டர்கள் எழுந்தார்கள்; ஏனையோர்களும் எழுந்தனர்—மற்றைய முனிவர்கள் சித்தர்கள் கிம்புருடர் என்றித்திறத்தார் யாவரும் எழுந்தார்கள்; உயிர்த்தொகை எழுந்தன—உயிர்க்கூட்டம் அனைத்தும் எழுந்தன; இருளும் நீங்கிற்று—வேலை காண்கிலா இருளும் நீங்கியது.

உன்னலும் யாவரும் எழுந்தனர்; யாவும் எழுந்தன என்க. (32)

அல்லிடை யுறங்கின ரறிவு சேர்ந்துழி
மெல்லென வயர்ந்தகண் விழித்தெ ழுந்தபோ
லெல்லையி லுயிர்த்தொகை யாவு மவ்வழி
யொல்லையி லெழுந்தன வுலகி லெங்கணும்.

அல்லிடை உறங்கினர்—இரவில் உறங்கியவர்கள், அறிவு சேர்ந்துழி—அறிவு வந்து கூடியபோது, அயர்ந்த கண் மெல்லென விழித்து எழுந்தபோல்—அயர்ச்சி யெய்திய கண்ணை மெல்லென்று விழித்து எழுந்தவாறு போல, எல்லை இல் உயிர்த்தொகை யாவும்—அளவற்ற உயிர்க்கூட்டம் அனைத்தும், அவ்வழி உலகில் எங்கணும் ஒல்லையில் எழுந்தன—அப்பொழுது உலகில் எவ்விடங்களிலும் விரைவில் எழுச்சியுற்றெழுந்தன.

அயர்ந்த கண்—மூடிய கண். (33)

ஓங்கலுங் கரிகளு முலப்பி னாகமுந்
தாங்கின தரணிபா தலத்திற் கூர்மமா
மாங்கது போற்றிய தண்டந் தன்னிடைத்
தீங்கதிர் மதியுடுப் பிறவுஞ் சென்றவே.

ஓங்கலும் கரிகளும் உலப்பு இல் நாகமும்—அட்ட குல மலைகள் அட்ட யானைகள் கெடுதலில்லாத அட்டமா நாகங்கள் ஆகிய அனைத்தும், தரணி தாங்கின—பூமியை முன் சுமந்தவாறே சுமந்தன; பாதலத்தில் ஆங்கு கூர்ம மாம் அது போற்றியது—பாதலமாகிய அவ்விடத்தில் ஆதி கூர்மமாகிய அது முன்போலப் பூமியைத் தாங்கியது; அண்டம் தன்னிடை—ஆகாயத்தின் கண்ணே, தீம் கதிர் மதி உடு பிறவும் சென்ற—இனிய சூரியன் சந்திரன் நட்சத்திரம் என்பனவும் பிறவுஞ் சஞ்சாரஞ் செய்தன.

இருளில் மூழ்கியோர்க் கினிமை செய்தலின் தீங்கதிர் மதி உடு என்றார். பிற ஏனைய கிரகம். (34)

அன்னதோர் திறமெலா மமல னாணையாற்
றன்னிலை யமைந்தவத் தொடர்பு நோக்கியே
யிந்நெறி யாவையு மீசன் செய்கையே
பின்னிலை யென்றனர் பிரம னாதியோர்.

அன்னதோர் திறம் எலாம்—ஒப்பில்லாத அத்தகைய செயலனைத்தும், அமலன் ஆணையால்—சிவபெருமானின் ஆஞ்ஞையால், தொல் நிலை அமைந்த—முன் அமைந்திருந்தவாறு அமைந்தன ; அத் தொடர்பு—முன்போலமைந்த அவ்வியல்பை, பிரமன் ஆதியோர் நோக்கி—பிரமா முதலியவர்கள் பார்த்து, இந்நெறி யாவையும்—இவ்வாறமைந்த செயலனைத்தும், ஈசன் செய்கையே பின் இலை என்றனர்—சிவபெருமானுடைய செய்கையேயாம் வேறு இல்லை என்றார்கள். (35)

வேறு

மற்றிவை நிகழும் வேலை மன்னுயிர்க் குணர்ச்சி நல்கி
யுற்றன னெந்தை யென்றே யுருத்திர ருணர்ந்து தம்முன்
பற்றல ரெயின்மூன் றட்ட பண்ணவன் வரநேர் சென்று
பொற்றிரு வடியில் வீழ்ந்து போற்றலு மமலன் சொல்வான்.

இவை நிகழும் வேலை—இந் நிகழ்ச்சிகள் நிகழும்போது, மன் உயிர்க்கு உணர்ச்சி எந்தை உற்று நல்கினன் என்று—நிலைபெற்ற உயிர்களுக்கு இழந்த உணர்ச்சியை எம்பெருமான் எழுந்தருளி நல்கினா ரென்று, உருத்திரர் உணர்ந்து—அவ்வுருத்திரர்கள் அறிந்து, பற்றலர் எயில் மூன்று அட்ட பண்ணவன் தம்முன் வர—பகைவர்களின் மூன்று மதில்களையும் அழித்த சிவபெருமான் தமக்கு முன்னிலையில் எழுந்தருளிவர, நேர் சென்று—தாம் எதிர் சென்று, பொன் திருவடியில் வீழ்ந்து போற்றலும்—அப்பெருமானின் அழகிய திருவடிகளில் விழுந்து வணங்குதலும், அமலன் சொல்வான்—சிவபெருமான் கூறியருளுவார்.

உற்று நல்கினன் என இயைக்க. (36)

ஈண்டெமை யருச்சித் திட்ட வியல்பின லுயிர்கட் கெல்லா
மாண்டதொல் லுணர்ச்சி நல்கி யெழுப்பின மற்று நீவிர்
வேண்டின யாவுங் கேண்மின் விரைந்தென வமலன் றன்கட்
பூண்டதோ ரன்பு மிக்கோ ரினையன புகல லுற்றார்.

நீவிர்—நீவிர், ஈண்டு—இத் திருவிடை மருதூர் என்னுந் தலத்தில், எமை அருச்சித்திட்ட வியல்பினல்—எமக்கு அருச்சனை செய்த காரணத்தால், உயிர்கட்கு எல்லாம் மாண்ட தொல் உணர்ச்சி நல்கி எழுப்பினம்—உயிர்களனைத்துக்கும் மாய்ந்துபோன பழைய உணர்ச்சியை அருளி எழுப்பினோம் ; மற்று வேண்டின யாவும் விரைந்து கேண்மின் என—இதனோடமையாமல் வேறு விரும்புவன யாவற்றையும் விரைந்து கேளுங்கள் என்று அருளிச்செய்ய, அமலன் தன்கண் பூண்டது ஓர் அன்பின் மிக்கோர்—சிவபெருமானிடத்துப் பிணிப்பதாகிய ஒப்பில்லாத அன்பால் மிக்கோரான அவ்வுருத்திரர், இனையன புகலல் உற்றார்—இவற்றை உரைப்பார் ஆயினர்.

'வீடிய உயிர்த்தொகை எழுப்ப வெஃகி' அர்ச்சனை செய்தாராதலின், உணர்ச்சி நல்கி எழுப்பியருளினாரென்க. (37)

நிற்றலு மல்லி லெம்போ னின்னடி யெனைய ரேனும்
பற்றுட னருச்சித் தோர்க்குப் பழிதவிர் மாகத் திங்க
ளுற்றிரு கதிரு மொன்று மொண்பகன் முதனாட் கங்குல்
பெற்றிடு சிறப்பு நல்க வேண்டுமாற் பெரும வென்றார்.

நிற்றலும் அல்லில்—நாள்தோறும் இராக்காலத்தில், எம்போல் எனைய ரேனும் பற்றுடன் நின் அடி அருச்சித்தோர்க்கு—எம்மைப்போல எப்படிப் பட்டவரேனும் அன்போடு தேவரீரது திருவடியை அருச்சனை செய்தவருக்கு, பழி தவிர் மாகத் திங்கள்—குற்றமற்ற மாசி மாதத்தில், இரு கதிரும் உற்று ஒன்றும் ஒண்பகல்—சந்திர சூரியர்கள் ஒன்றுசேருகின்ற சிறந்த அமாவாசித் தினத்துக்கு, முதல்நாள் கங்குல்—முதனாளாகிய சதுர்த்தசியின் இரவாகிய மகாசிவராத்திரிப் பூசையில், பெற்றிடு சிறப்பு—பெறுகின்ற சிறப்பை, பெரும நல்க வேண்டும் என்றார்—பெருமானே கொடுத்தருளல் வேண்டும் என்று வேண்டினார்கள்.

நித்தலும் நிற்றலும் என நின்றது. கங்குல் ஆகுபெயர். சிறப்பு—பலன். (38)

நீவிர்செய் பூசைதன்னை நெடிதுநா மகிழ்ந்த வாற்றா
லாவிக ளனைத்து முய்ந்த வருவினை யகன்று நும்போற்
பூவினி லென்றும் பூசை புரிந்தவர்க் கெல்லாம் முத்தி
மேவர வளித்து மென்றே வியனருள் புரிந்து போந்தான்.

நீவிர் செய் பூசை தன்னை—நீவிர்கள் செய்த பூசையை, நாம் நெடிது மகிழ்ந்தவாற்றால்—யாம் பெரிதும் மகிழ்ந்து ஏற்றுக்கொண்டமையால், ஆவிகள் அனைத்தும் உய்ந்த—உயிர்களெல்லாம் உய்ந்தன; அருவினை அகன்று—நீக்குதற்கரிய வினைகள் நீங்கி, பூவினில் நும்போல் என்றும் பூசை புரிந்த வர்க்கு எல்லாம்—பூமியில் நும்மைப்போல எக்காலத்தும் நம்மைப் பூசித்தவர் களுக்கெல்லாம், முத்தி மேவர அளித்தும் என்று—மோட்சத்தை அடையு மாறு அருள்வோம் என்று, வியன் அருள் புரிந்து போந்தான்—மிக்க அருளைச் செய்து எழுந்தருளினர்.

அருவினை பாவச்செயல். பூசை இராப்பூசை. (39)

எம்பெருந் தலைவ னேக வுருத்திரர் யாரு மீண்டித்
தம்பதங் குறுகி முன்போற் சார்ந்தன ரனைய காலை
யம்புய னாதி வானோ ரனைவருங் கயிலை புக்கு
நம்பனை வணக்கஞ் செய்து தொழுதிவை நவில லுற்றார்.

எம் பெருந் தலைவன் ஏக—எமது பெரிய தலைவராகிய சிவபெருமான் எழுந்தருள, உருத்திரர் யாரும் ஈண்டி—உருத்திரர் யாவரும் ஒருங்கு திரண்டு,

தம் பதம் குறுகி முன் போல் சார்ந்தனர்—தம்முடைய பதத்தை அடைந்து முன்போல இருந்தார்கள்; அனைய காலை—அச்சமயத்தில், அம்புயன் ஆதி வானோர் அனைவரும் கயிலை புக்கு—பிரமா முதலிய தேவரனைவருந் திருக் கைலையை அடைந்து, நம்பனைத் தொழுது வணக்கஞ் செய்து இவை நவிலல் உற்றார்—சிவபெருமானைத் தொழுது வணங்கி இவற்றை உரைப்பா ராயினர். (40)

மன்னுயிர்க் குயிரா யுற்ற வள்ளல்கேள் யாங்க ளெல்லா
முன்னரு ளுருத நீரா லுணர்வொரீஇச் சடம தாகிப்
பன்னெடுங் காலம் வாளா கிடந்தனம் பவமூழ் குற்றே
மன்னது தனக்குத் தீர்வொன் றருளென வண்ணல் சொல்வான்.

மன் உயிர்க்கு உயிராய் உற்ற வள்ளல் கேள்—நிலைபெற்ற உயிருக் குயிரான அருள் வள்ளலே கேட்டருள்வீராக; யாங்கள் எல்லாம் உன் அருள் உருத நீரால்—நாமெல்லாம் தேவரீரின் அருளைப் பெருமையால், உணர்வு ஒரீஇ—அறிவிழந்து, சடம் ஆகி—சடப்பொருளாய், பல் நெடும் காலம் வாளா கிடந்தனம்—பல நெடுங்காலம் சும்மா கிடந்தோம்; பவம் மூழ்குற்றேம்—அதனாற் பாவத்தில் முழுகினோம்; அன்னது தனக்குத் தீர்வு ஒன்று அருள் என—அதற்கு ஒரு கழுவாயினை அருளிச்செய்வீராக என்று பிரார்த்திக்க, அண்ணல் சொல்வான்—சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுவார்.

விலக்கியன செய்தல்போல விதித்தன செய்யாமையும் பாவமாம். அதனால் பவம் மூழ்குற்றேம் என்றதென்க. (41)

மங்கியே யுணர்வு சிந்தி மறைமுறை புரியா நீரா
லுங்கள்பால் வருவ வெல்லா முமையிடத் தாகு மன்றே
யிங்குநீ ரின்று பற்றி யியற்றுநுங் கடன்க ளென்னப்
பங்கயா சனனுந் தேவர் யாவரும் பணிந்து போனார்.

உணர்வு சிந்தி மங்கி—அறிவு சிதறுற்று மழுங்கி, மறை முறை புரியா நீரால்—வேதாநுட்டானங்களைச் செய்யாமையால், உங்கள்பால் வருவ எல்லாம்—உங்களிடத்து வரக்கடவ பாவம் முழுவதும், உமை இடத்து ஆகும்—உமா தேவியாரிடத்துச் சேரும்; இங்கு நீர்—இவ்விடத்திலுள்ள நீவிர், இன்று பற்றி—இன்று தொடங்கி, நும் கடன்கள் இயற்றும் என்ன—உங்கள் நித்திய கடன்களைச் செய்யுங்கள் என்று திருவாய்மலர்ந்தருள, பங்கயாசனனும் தேவர் யாவரும் பணிந்து போனார்—பிரமாவும் எல்லாத் தேவரும் சிவ பெருமானை வணங்கி முன்போலத் தத்தம் கடன்களைச் செய்யும்பொருட்டுச் சென்றார்கள்.

உயிர்கள் விதித்தன செய்யாமை அவ்வுயிர்களின் முனைப்பா லாகாமையின், அவ்வுயிர்கள்பால் வருவ உமையின்பாலாயின. அன்று ஏ அசைநிலை. (42)

வேறு

வாலி தாமயன் முதலினோர் வணங்கின ரேக
வேல வார்குழ லுமையவள் பிரான்கழ லிறைஞ்சி
மேலே நாளுயிர்த் தொகையினுக் கெய்திய வினையென்
பால்வ ரும்பரி சென்கொலோ பணித்தரு ளென்ன.

வாலிது ஆம் அயன் முதலினோர் வணங்கினர் ஏக—தூயதாகிய அறிவைப் பெற்ற பிரமா முதலியவர்கள் வணங்கிச் செல்ல, ஏல வார்குழல் உமையவள் பிரான் கழல் இறைஞ்சி—மயிர்ச்சாந் தணிந்த நீண்ட கூந்தலினையுடைய உமையம்மையார் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி, மேலே நாள் உயிர்த் தொகையினுக்கு எய்திய வினை—முன்னாளிலே உயிர்க்கூட்டங்களுக்கு உண்டாகிய பாவம், என்பால் வரும் பரிசு என்—என்னிடம் வருங் காரணம் என்னை, பணித்தருள் என்ன—திருவாய்மலர்ந்தருளவேண்டும் என்று பிரார்த்திக்க. (43)

முன்பு நீயுனை வியந்தனை யத்துணை முனிந்து
நின்பொ ருட்டினு லுயிர்கடம் முணர்ச்சியை நீக்கிப்
பின்பு ணர்த்தின மாதலி னன்னவை பெற்ற
மன்பெ ரும்பவம் யாவையு நின்னிடை வருமால்.

முன்பு நீ உனை வியந்தனை—எம் முன்னிலையில் உமையே நீ உன்னை வியந்துரைத்தாய்; நின்பொருட்டு அத்துணை முனிந்து—நீ உன்னியல்பை உணரும் பொருட்டு அப்பொழுது யாம் உன்னைக் கோபித்து, உயிர்கள் தம் உணர்ச்சியை நீக்கி—உயிர்களின் உணர்ச்சியை நீங்கச்செய்து, பின்பு உணர்த்தினம்—பின்னர் அவ்வுணர்ச்சியை வருவித்தோம்; ஆதலின்—இவ்வாறு உணர்ச்சி இடையீடுபட்டதனுல், அவைபெற்ற மன் பெரும் பவம் யாவையும்—அவ்வுயிர்கள் அடைந்த மிக்க பெரும்பாவம் முழுவதும், நின்னிடை வரும்—உன்னிடம் வந்து சேரும்; முறையது ஆகும்—அவ்வாறு வந்து சேருவது நீதியேயாம்.

உணர்ச்சி இடையீடுபட்டதனுல் விதித்தன செய்யாமையால் பவம் உளதாயிற்றென்க.

முறையதாகும் என்பது, அடுத்த பாட்டின் தொடக்கம். இரங்காமலிருக்கமாட்டாமையாகிய திருவருளைத் தன்பாற் கொண்ட அருட்சத்திக்கே, விளையாட்டாகவேனும் முனைப்புளதாயவழித் தண்டனை உளதாமேல், வேகங் கெடாத மன்னுயிர்களின் முனைப்பின் பயன் யாதா மென்க. விளையாட்டாவது ஆன்மாக்களுக்குச் சிவத்தின் இயல்பு இருந்தபடியை உணர்த்து முகமாய தொரு ஆடல் என்க.

ஆன்மா, திருவருளோடொத்துச் செல்லாதே முனைப்புளதாயவழித் தன்வினைக்குத் தானே பாத்திரமாவதைத், திருவருளாகிய சத்தி சிவத்தோடொத்துப்போகாதே முனைத்தவழி அதன் நிலையே இவ்வாறுமெனச் சத்தியில் வைத்துப் பேசியவாறும். (44)

முறைய தாகுமாற் பின்னுமொன் றுண்டுயிர் முற்றும்
பெறுவ தாமுனக் கல்லது பெரும்பவ மவற்றாற்
பொறைபு ரிந்திடற் கெளியவோ போற்றுநீ யென்றான்
சிறுவி திக்கருள் பரிசினை முடிவுறச் செய்வான்.

முறையது ஆகும் பின்னும் ஒன்று உண்டு—உயிர்களின் பவம் நின்னிடை வருதல் நீதியாதலுமே யல்லாமல் மற்றொரு காரணமும் உண்டு; உயிர் முற்றும் பெறுவது ஆம் உனக்கு அல்லது—உயிர் முழுவதையும் ஈன்றருளுதலைக் கொள்ளுந் தாயாகிய உனக்கே யல்லாமல், அவற்றால் பொறை புரிந்திடற்கு—உன் குழந்தைகளாகிய அவ்வுயிர்கள் சுமத்தற்கு, பெரும் பவம் எளியவோ—அவை செய்த பெரிய பாவங்கள் எளியவாமோ; நீ போற்று—தாயாகிய நீயே சுமப்பாயாக; என்றான்—என்று திருவாய்மலர்ந்தருளினார்; சிறுவிதிக்கு அருள் பரிசினை முடிவுறச் செய்வான்—தக்கனுக்குத் தாம் முன் கொடுத்த வரத்தை இனி முற்றுவிப்பாராகிய சிவபெருமான்.

செய்வான் என்றான் என்க. செய்வான் வானீற்று வினையெச்சமுமாம். பெயராயவழிக் கருத்துடையடைகொளியாம். இதனை ஒரு வியாஜமாகக் கொண்டு பரிசினை முடிவுறச் செய்யத் திருவுளங்கொள்வா ராயினா ரென்க. பரிசு ஈண்டு வரம். 'பாதியான பராபரை யான்பெறு மாதராக' என்று முன்பெற்ற வரமென்க.

குழந்தைக்குப் பால் சுரக்கு மன்னை அதற்கு நோய் வாராமே மருந்தருந்துவதொரு முறையில் 'நீ போற்று' என்றிருளினா ரென்க. (45)

நாத னவ்வுரை யியம்பலு முளநடு நடுங்கிப்
பேதை யேன்செயும் பிழைதணித் தென்வயிற் பெருகு
மேத மாற்றவோர் பரிசினை யுணர்த்துதி யென்னாப்
பாத பங்கயந் தொழுதலு மினையன பகர்வான்.

நாதன்—சர்வலோகைக நாயகராகிய சிவபெருமான், அவ்வுரை இயம்பலும்—அவ்வார்த்தைகளைக் கூறியருள, உளம் நடுநடுங்கி—உமாதேவியார் மனம் நடுநடுங்கி, பேதையேன் செயும் பிழை தணித்து—பேதையாகிய யான் செய்யும் பிழையைப் பொறுத்து, என் வயின் பெருகும் ஏதம் மாற்ற ஓர் பரிசினை உணர்த்துதி என்னா—என்னிடம் வந்து பெருகுகின்ற பாவத்தை நீக்குதற்கு ஓர் உபாயத்தை உணர்த்தியருளுவீராக என்று, பாத பங்கயம் தொழுதலும்—திருவடிக்கமலங்களை வணங்குதலும், இனையன பகர்வான்—இவைகளைச் சிவபெருமான் கூறியருளுவாராயினார். (46)

ஆல மேபுரை நிறத்ததா யமிழ்தினுஞ் சுவைத்தாய்
ஞால மார்தர வொழுகிய காளிந்தி நதிபோய்
மூல மெய்யெழுத் தன்னதோர் முதுவலம் புரியின்
கோல மாகிநோற் றிருத்தியா லுலகருள் குறிப்பால்.

ஆலம் புரை நிறத்ததாய்—நஞ்சை ஒத்த நிறத்தினையுடையதாய், அமிழ்தினும் சுவைத்தாய்—அமிர்தினும் இனிதாய், ஞாலம் ஆர்தர ஒழுகிய—பூமியில் உள்ளவர் நுகரும்படி பெருகுதலைச் செய்த, காளிந்தி நதி போய்—காளிந்தி நதியை அடைந்து, மூலம் மெய் எழுத்து அன்னது ஓர் முது வலம்புரியின் கோலமாகி—வேத மூலமான மெய்ம்மையான பிரணவத்தை ஒத்ததாகிய ஒரு முதிய வலம்புரிச் சங்கின் வடிவமாகி, உலகு அருள் குறிப்பால் நோற்று இருத்தி—உலகத்தை இரட்சிக்குங் குறிப்போடு அந்நதியிலே தவஞ் செய்துகொண்டு இருப்பாயாக. (47)

அந்ந திக்குணீ பற்பக லிருந்துழி யயன்சே
யென்ன நின்றிடு தக்கனென் பவனவ ணெய்தி
யுன்னை நேர்ந்துசென் றெடுத்தலுங் குழவியி னுருவாய்
மன்னி யாங்கவன் பன்னிபாற் சிறுமியாய் வளர்தி.

அந் நதிக்குள் நீ பற்பகல் இருந்துழி—அந்தக் காளிந்தி நதியிற் பல காலம் நீ தவஞ்செய்துகொண்டிருக்கும்போது, அயன் சேய் என்ன நின்றிடு தக்கன் என்பவன்—பிரமாவின் புதல்வன் என்றிருக்கின்ற தக்கனுனவன், அவண் எய்தி—அங்கு அடைந்து, உன்னை நேர்ந்து சென்று—உன்னை அணுகி வந்து, எடுத்தலும்—கையில் எடுக்க, குழவியின் உருவாய் மன்னி—குழந்தையின் வடிவமாய்ப் பொருந்தி, ஆங்கு அவன் பன்னி பால்—அவன் மனைவியாகிய வேதவல்லியிடத்து, சிறுமியாய் வளர்தி—சிறு பெண்குழந்தையாய் வளர்வாயாக. (48)

ஐந்தி யாண்டெனு மளவைநிற் ககன்றுழி யதற்பின்
புந்தி யார்வமோ டெமைநினைந் தருந்தவம் புரிதி
வந்தி யாமது காணுறு மணஞ்செய்து மறையா
லிந்த மால்வரை யிடையுனைத் தருதுமென் றிசைத்தான்.

ஐந்து யாண்டு எனும் அளவை நிற்கு அகன்றுழி—ஐந்து பிராயம் என்னுங் காலம் உனக்கு நீங்கியவுடன், அதன்பின் புந்தி ஆர்வமோடு எமை நினைந்து அருந்தவம் புரிதி—அதன்பின்பு மனவிருப்பத்தோடு எம்மை நினைந்து அரிய தவஞ் செய்வாயாக; யாம் அது வந்து காணுறு—யாம் அத்தவத்தை வந்து கண்டு, மறையால் மணஞ்செய்து—மறைவிதிப்படி திருமணஞ்செய்து, இந்த மால்வரையிடை உனைத் தருதும்—இந்தப் பெரிய திருக்கைலாச மலைக்கு உன்னை அழைத்து வருவோம்; என்று இசைத்தான்—என்று திருவாய் மலர்ந்தருளினர்.

(49)

மறை, கரத்தல் ஆகிய களவுமாம்.

இசைத்த வாசக முணர்தலு மிறையுரத் தழுந்தத்
தசைத்த பூண்முலே யுமையவ ளன்னவன் சரணின்
மிசைத்தன் வார்குழ றைவர வணங்கியே விடைபெற்
றசைத்த சிந்தைய ணீங்கின ளுலகுநோற் றதனல்.

இசைத்த வாசகம் உணர்தலும்—சிவபெருமான் அருளிச்செய்த வார்த்தைகளைக் கேட்டவுடன், இறை உரத்து அழுந்தத் தசைத்த பூண் முலே உமையவள்—அச் சிவபெருமானுடைய திருமார்பில் அழுந்தும்படி பூரித்த பூண்களை அணிந்த முலேகளையுடைய உமையம்மையார், அன்னவன் சரணின் மிசை தன் வார்குழல் தைவர வணங்கி—அப்பெருமானுடைய திருவடிகளின் மீது தமது நீண்ட கூந்தல் பொருந்தும்படி வணங்கி, விடை பெற்று—விடைபெற்றுக்கொண்டு, அசைத்த சிந்தையள் உலகு நோற்றதனல் நீங்கினள்—பெருமானைப் பிரிதலால் அசைவு கொண்ட மனத்தை யுடையவராய் உலகஞ் செய்த தவத்தாற் கைலேயை நீங்கினர்.

பேதித்து நம்மை வளர்த்தெடுக்கும் பெய்வளையாகிய மாதாவின் தவம் உலகு உய்யுந் தவமாகையால், 'உலகு நோற்றதனல்' என்றார். (50)

ஆதி தேவனை யொருவியே புடவியி லணுகி
யோத வேலேயை மாறுகொள் காளிந்தி யுழிப்போய்
வேத மூலநேர் வால்வளை யுருக்கொடு விளங்கி
யேத மில்லதோர் பதுமபீ டத்தின்மே லிருந்தாள்.

ஆதி தேவனை ஒருவி புடவியில் அணுகி—உமாதேவியார் முதல்வராகிய சிவபெருமானைப் பிரிந்து பூமியை அடைந்து, ஓத வேலேயை மாறு கொள் காளிந்தி யுழிப்போய்—அலேகளை யுடைய சமுத்திரத்தோடு மாறுபடுகின்ற காளிந்தி நதிப்பாற் சென்று, வேத மூலம் நேர் வால் வளை உருக்கொடு விளங்கி—வேத மூலமான பிரணவத்தை ஒத்த வெள்ளிய சங்கின் உருவத்தைக் கொண்டு விளங்கி, ஏதம் இல்லது ஓர் பதுமபீடத்தின்மேல் இருந்தாள்—குற்றமில்லாததாகிய ஒரு தாமரைமலர்ப் பீடத்தின்மீது எழுந்தருளி,

இருந்தாள் எச்சமுற்று. (51)

தெளித ருஞ்சிவ மந்திரஞ் சிந்தனை செய்தே
யளவில் பற்பக லன்னைநோற் றிருந்தன ளவட்கண்
டுளம கிழ்ந்தெடுத் தேகுவா னேங்குகா ளிந்தி
நளிகொள் சிந்துவிற் றக்கனுற் றனவினி நவில்வாம்.

தெளி தரும் சிவமந்திரம் சிந்தனை செய்து—ஞானத்தைத் தருகின்ற சிவமூலமந்திரத்தைச் சிந்தித்துக்கொண்டு, அளவுஇல் பல்பகல் அன்னை நோற்

றிருந்தனள்—அளவில்லாத பலகாலம் உலகமாதாவாகிய தேவி தவஞ் செய்து கொண்டிருந்தார்; அவட் கண்டு—அவ்வாறு தவஞ் செய்துகொண்டிருந்த தேவியைக் கண்டு, உளம் மகிழ்ந்து—மனம் மகிழ்ந்து, எடுத்து ஏகுவான்—எடுத்துச் செல்லும்பொருட்டு, ஓங்கு காளிந்தி நளி கொள் சிந்துவில்—உயர்ந்த காளிந்தியாகிய குளிர்ச்சிபொருந்திய ஆற்றின்பால், தக்கன் உற்றன இனி நவில்வாம்—தக்கனிடம் நிகழ்ந்தவற்றை இனிக் கூறுவாம்.

இப்படலத்திலே உயிர்கள் உணர்ச்சி யிழந்து இருளில் மூழ்கியிருந்த காலத்தை, மகா சங்காரத்தின்பின் உயிர்கள் இளைப்பாறுவதாகிய காலத்தோடும், இருளில் உருத்திரர்கள் உய்யும்பொருட்டுப் பூசனைபுரிந்த காலத்தை மகா சிவராத்திரி காலத்தோடும் ஒப்பிட்டுச் சிந்திக்கும் முகத்தால், ஆணவ இருளில் முழுகி விடிவாம் அளவும் விளக்கனைய மாயையால் அறிவு சிறிது விளங்குஞ் சகலராகிய நாம், நாடோறு மெய்தும் இராப்பொழுதின் நான்கு யாமங்களையும் எவ்வாறு சிவசிந்தனையிற் பயன்செய்வதென நினைவு கூருவோமாக. (52)

உமை கயிலை நீங்கு படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 242.

---

# காளிந்திப் படலம்

நீளுந் தகைசேர் நிலமா மகடன்
கோளுந் தியபூங் குழல்வார்ந் தெனலாய்
நாளுந் தியவீ நணுகிக் கரிதாங்
காளிந் தியெனுங் கடிமா நதியே.

காளிந்தி எனும் கடி மா நதி—காளிந்தி என்னும் புதுமை பொருந்திய பெரிய நதி, நாள் உந்திய வீ நணுகி—அன்றலர்ந்த பூக்கள் பொருந்தி, நீளும் தகை சேர் நில மாமகள் தன்—நீளுகின்ற தகுதியினையுடைய பூமி தேவியின், கோள் உந்திய—குற்றம் நீங்கிய, பூங் குழல் வார்ந்து எனலாய்—பூவையணிந்த கூந்தல் வார்ந்தது என்று கூறத்தக்கதாய், கரிது ஆம்—கருநிற முடைத்தாய் விளங்கும்.

---

வார்ந்தது வார்ந்து என நின்றது. வார்தல் நீண்டொழுகுதல். கோள் உந்திய—குணம் மிக்க என்றுரைப்பினும் அமையும். காளிந்தி கருநிறத்தது; பூக்களோடு கூடியது. அதனால் பூங்குழல் வார்ந் தெனலாய் என்றார். (1)

முத்துங் கதிரும் முழுமா மணியுந்
தொத்துந் தியசெந் துகிரும் மகிலு
நத்தும் பிறவுந் நனிநல் குவபோ
லொத்துந் துவதவ் வொலிநீர் நதியே.

முத்தும்—முத்துக்களும், கதிரும் முழு மா மணியும்—ஒளி செய்யும் முழுத்த சிறந்த இரத்தினங்களும், தொத்து உந்திய செம் துகிரும்—கொத்துக்களாய் விரிந்த சிவந்த பவளங்களும், அகிலும்—அகில்களும், நத்தும் பிறவும்—சங்கு களும் பிற பொருள்களும், நனி நல்குவ போல்—அந்நதியாற் பெரிதும் வழங்கப் படுவனபோலாக, ஒத்து உந்துவது—மனமொத்துத் தன்னிடத்திலிருந்து அவைகளை வீசுதலைச் செய்வது, அ ஒலி நீர் நதி—ஒலித்தலைச் செய்கின்ற அந்த நீர் நிறைந்த காளிந்தி நதி.

செயப்படுபொருளைச் செய்வதுபோலச் செப்பும் வழக்குப்பற்றி 'நல்குவ' என்றார். இனி, நல்குவ என்பதைத் தொழிற் பெயரெனக் கொண்டு, முத்து முதலியவைகளை நல்குதலைப்போல என்றுரைப்பினுமாம். (2)

எண்மே னிமிரும் மிருநீர் பெருகி
விண்மே லுலவா விரிகின் றதொரீஇ
மண்மே லொலியா மலிகார் தழுவிக்
கொண்மூ வரவொத் துளதக் குடினை.

எண்மேல் நிமிரும்—அளவிடுதல் அரிதாகின்ற, இருநீர் பெருகி—மிக்க நீர் பெருகி, விண்மேல் உலவா விரிகின்றது ஒரீஇ—ஆகாயத்தில் உலாவி விரீகின்றதை நீங்கி, ஒலியா—ஒலித்து, மலி கார் தழுவி—மிக்க காரைத் தழுவி, மண்மேல் வரவு கொண்மூ—பூமியில் வருதலையுடைய மேகத்தை, அக் குடினை ஒத்துளது—அந்தக் காளிந்தி நதி நிகர்த்தது.

பெருகுதல் ஒருவுதல் ஒலித்தல் தழுவல் இரண்டுக்கும் பொருத்தமாதல் காண்க. கொண்மூவுக்குக் கார் கார்காலம்; நதிக்குக் கருமை. (3)

மீனர் விழிமங் கையர்விண் ணுறைவோர்
வானர் செலவின் வருநீ ளிடையிற்
கானு மெனவுங் கடலா மெனவுந்
தானு குவதத் தடமா நதியே.

நீள் இடையிற் கானும் எனவும்—நீண்ட இடத்தினையுடைய காட்டைப் போலவும், கடலாம் எனவும்—கடலைப்போலவும், தான் ஆகுவது அத் தடமா நதி—தான் தோன்றுவதாகிய அந்த விசாலமான காளிந்தி நதி, விண் உறைவோர் மீனர் விழி மங்கையர் வானர் செலவின் வரும்—விண்ணில் உறைவோராகிய மீன்போலுங் கண்களையுடைய தேவ மகளிர்கள் வானத்தின்கட் செல்லுகின்ற செல்லுகையை ஒப்பச் செல்லாநிற்கும்.

வானர மகளிரின் வான் செலவு காண்டற் கரிதாதல்போல ஆழ்ந்த நீரினை யுடைத்தாகிய இக் காளிந்தியின் செலவுங் காண்டற் கரியதுபோலும். நதியைப் பெண்மைப்படுத்தும் மரபு பற்றி அதன் செலவு மங்கையர் செலவோ டொப்பிடப்பட்டது. கருநிற மிகுதியாற் கானு மெனவும், அதனோடு ஒலி மிகுதியாற் கடலாமெனவும் ஆகுவது காளிந்தி என்க. (4)

பாரின் புடையே படரந் நதியை
நேரும் படியோர் நெடுநீ ருளதோ
காருந் தெளியாக் கடலீ தெனவே
யாரும் பெருமைத் தஃதா யிடவே.

காரும் தெளியா—மேகமும் பேதந் தெரியாமல், ஈது கடலே என ஆரும் பெருமைத்து அஃது—இது கடலேயாமென்று படிந்து நீர் பருகும் பெருமை யுடையது அந்தக் காளிந்தி நதி; பாரின் புடைபடர் அந்நதியை நேரும்படி—

பூமியின்கட் செல்லுகின்ற அந்த நதியை ஒக்கும்படி, ஆய்இட—ஆராய்ந்து சொல்ல, ஓர் நெடுநீர் உளதோ—ஒரு சமுத்திரம் உளதாமோ.

தெளியா ஈறுகெட்டு நின்றது. தெளியா ஆரும் என்க. (5)

துப்பா யினதாய்த் துவரத் தகைசே
ரப்பா யுவரற் றழிவில் பொருளின்
வைப்பா யருளால் வருமவ் வொலியற்
கொப்பா குவதோ வுவரா ழியதே.

துப்பு ஆயினதாய்—துப்பார்க்குத் துப்பாயதாய், துவரத் தகைசேர் அப்பு ஆய்—அதனுலே முற்றுந் தகுதி வாய்ந்த நீரினையுடைத்தாய், உவர் அற்று—உவர்த்தன்மையின்றி, அழிவு இல் பொருளின் வைப்பாய்—அழிவற்ற பொருளுக்கு இருப்பிடமாய், அருளால் வரும் அ ஒலியற்கு—இறைவனருளால் வாராநின்ற அந்த நதிக்கு, உவர் ஆழி ஒப்பு ஆகுவதோ—உவர்க்கடல் ஒப்பாகுமா.

துப்பு—உணவு. அழிவில் பொருள் ஈண்டுத் திருவருட் சத்தியாகிய உமை. ஒலியல்—யாறு. (6)

பாலோங் கியவிற் பணிலம் படர்வா
ணீலோங் கியவம் பொடுநே மியெலா
மேலோங் கியதன் மையின்மெய்த் துயில்கூர்
மாலோன் றனையொத் ததுமற் றதுவே.

பால் ஓங்கிய வில் பணிலம்—வெண்மை மிகுந்த ஒளியினையுடைய சங்கு, படர் நீல் வாள் ஓங்கிய அம்பு—பரக்கின்ற நீல ஒளிமிக்க நீர், நேமி—சக்கரவாகப்புள், எலாம்—ஆகிய இவையெல்லாம், மேல் ஓங்கிய தன்மையின்—தன்பால் விளங்கிய தன்மையினுல், மெய்த்துயில் கூர் மாலோன் தனை—மெய்ம்மையாகிய அறிதுயில் பயில்கின்ற திருமாலை, அது ஒத்தது—அக் காளிந்தி நதி ஒத்தது.

நதியின் பாலோங்கிய தன்மையிலே, (பால்—பாற்சமுத்திரம், வில், பணிலம்—சங்கு, பகைவர்க்குப் படர் விளைக்கும் வாள், நீல நஞ்சூட்டிய அம்பு, நேமி—சக்கரம் ஆகிய) மாலோன் மேல் ஓங்கிய தன்மை அமைதலின், அது மாலோனை ஒத்தது என்க. (7)

மீன்பட் டமையால் விரியுந் தொழுதிக்
கான்பட் டிடவுங் கழுநீ ருறலாற்
றேன்பட் டிடவுந் திரைபட் டிடவும்
வான்பட் டிடுமோ சைமலிந் ததுவே.

மீன் பட்டமையால்—மீன்கள் உண்மையால்,விரியும் தொழுதிக் கான் பட்டிடவும்-விரிகின்ற காடுபோன்ற பறவைக் கூட்டத்தின் ஒலி செறிதலானும், கழுநீர் உறலால்—கழுநீர்கள் இருத்தலால், தேன் பட்டிடவும்—வண்டுகள் வீழ்ந்தொலித்தலானும், திரை பட்டிடவும்—திரைகள் எழுந் தொலித்தலானும், வான் பட்டிடும் ஓசை மலிந்தது—வானத்தை அளாவும் ஒலி மிக்கது அந்நதி.

எழுவாய் வருவிக்கப்பட்டது. தொழுதி பறவைக்கூட்டத் தொலி. பறவைக் கூட்டமுமாம். பறவைகள் மிக்குச் செறிதலின் காடுபோன் றிருந்தன. (8)

ஊன்பெற் றலகில் லுயிர்பெற் றகிலம்
வான்பெற் றவள்வால் வளையா யுறவெங்
கோன்பெற் றிடுமக் கொடிமெய் யுருவந்
தான்பெற் றதையொத் ததுமா நதியே.

ஊன் பெற்று—ஊனுகிய உடல்களை ஈன்று, அலகில் உயிர்பெற்று—அவ்வுடல்களோடு கூட்டும் முறையில் அளவில்லாத உயிர்களை ஈன்று, அகிலம் வான் பெற்றவள்—அவ்வளவோடமையாமல் விண்ணையும் மண்ணையும் ஈன்றவளாகிய தேவி, வால் வளையாய் உற—வெள்ளிய சங்கின் வடிவமாய் எழுந்தருள, மாநதி—அதற்கு ஏற்றவாற்றுல் அந்தப் பெருமை பொருந்திய நதி, எங்கோன் பெற்றிடும் அக் கொடி மெய் உருவம்—எம்பெருமான் மணந்து கொள்ளும் அந்தக் கொடிபோன்ற தேவியினுடைய திருமேனியின் நிறத்தை, தான் பெற்றதை ஒத்தது—தான் பெற்றிருந்ததை ஒத்திருந்தது. (9)

வேறு

நஞ்செனக் கொலைசெய் கூர்ங்க ணங்கையர் குடையக் கூந்தல்
விஞ்சிய நானச் சேறும் விரைகெழு சாந்து மார்ந்து
தஞ்செனக் கொண்ட நீலத் தன்மைகுன் ருது மேலோ
ரஞ்சனப் போர்வை போர்த்தா லன்னதா லனைய நீத்தம்.

நஞ்சு எனக் கொலை செய் கூர்ங்கண் நங்கையர் குடைய—விடம்போலக் கொலை செய்கின்ற கூரிய கண்களையுடைய பெண்கள் நீராடுதல் செய்ய, கூந்தல் விஞ்சிய நானச் சேறும்—கூந்தலில் மிக்கிருந்த கஸ்தூரிக் குழம்பும், விரை கெழு சாந்தும்—வாசனை பொருந்திய சந்தனமும், ஆர்ந்து—பொருந்தப் பெற்று, தஞ்சு எனக் கொண்ட நீலத் தன்மை குன்ருது—பற்றுக்கோடாகத் தன்னைப் பற்றியிருந்த நீலநிறத் தன்மை குறையாது, அனைய நீத்தம்— அந்தக் காளிந்திநதி யிருப்பது, மேலோர் அஞ்சனப் போர்வை போர்த்தாலன்னது—வளத்தான் மிக்கோர் நீலவர்ணப் போர்வையைப் போர்த்தியிருந்தால் அவ்வாறு போர்த்தியிருப்பதை ஒப்பதாம்.

சேறும் சாந்தும் ஆர்தல் மேலோர்க்கும் பொருந்தும். (10)

இவ்வுல கத்தோ ருள்ளத் தெய்திய விருளு மன்னர்
வெவ்வினை யிருளுந் தன்பால் வீழ்த்தியே விளங்கி யேக
வவ்விரு ளனைத்துந் தான்பெற் றணைந்தென வங்கங் காராய்ச்
செவ்விதி னொழுகிற் றம்மா சீர்திகழ் யமுனை யாறே.

இவ்வுலகத்தோர் உள்ளத்து எய்திய இருளும்—இவ்வுலகத்திலுள்ளவர்கள் தமது உள்ளத்திற் பொருந்திய அகவிருளையும், அன்னர் வெவ்வினை இருளும்—அவர்கள் தங்களுடைய கொடிய தீவினை இருளையும், தன்பால் வீழ்த்தி விளங்கி ஏக—தன்னிடத்து முழுகுதலால் இட்டுப் பரிசுத்தமாகிய விளக்கம் அடைந்து செல்ல, அவ்விருள் அனைத்தும் தான் பெற்று அணைந்து என—அவர்கள் இட்டுச் சென்ற அவ்விருள் முழுவதையும் தான் பெற்று இருந்தாற்போல, அங்கம் காராய்—மேனி கருநிறமுடையதாய், செவ்விதின் ஒழுகிற்று—செப்பமுற ஒழுகுதல் செய்தது, சீர் திகழ் யமுனை யாறு—சிறப்புப் பொருந்திய காளிந்தி நதி.

காளிந்திக்கு மற்றொரு பெயர் யமுனை. (11)

எத்திறத் தோரு மஞ்ச வெழுந்துமால் வரையிற் சார்ந்து
மெய்த்தலை பலவு நீடி விரிகதிர் மணிகள் கான்றிட்
டொத்திடு கால்கண் மேவி யொலிகெழு செலவிற் றாகி
மைத்துறு புனற்கா ளிந்தி வாசுகி நிகர்த்த தன்றே.

மால் வரையிற் சார்ந்து—களிந்தம் என்னும் பெரிய மலையின்கட் பொருந்தியிருந்து, எத்திறத்தோரும் அஞ்ச எழுந்து—எத்தகையோரும் அஞ்சும்படி பிரவாகித்து, மெய்த் தலை பலவும் நீடி—மெய்ம்மையாகிய கிளைகள் பலவும் நீண்டு, விரி கதிர் மணிகள் கான்றிட்டு—விரிகின்ற கதிரினையுடைய இரத்தினங்களை வீசி, ஒத்திடு கால்கள் மேவி—இயைந்த வாய்க்கால்கள் தோறும் சென்று, ஒலி கெழு செலவிற்று ஆகி—ஒலி பொருந்திய செலவினை யுடையதாய், மைத்து உறு புனல் காளிந்தி—கருமைத்தான நீர்மிக்க காளிந்தி நதி, வாசுகி நிகர்த்தது—வாசுகி என்னும் அரவத்தை ஒத்தது.

வாசுகி, அஞ்ச எழுந்து, பெரிய மந்தர மலையைச் சார்ந்து, மெய்க்கட் பல தலை நீடி, மணிகள் கான்று, உணவாயியைந்த வாயுக்களை மிசைந்து, ஒலிகெழு செலவிற்றாய் நதிக்குவமமாதல் காண்க. வாசுகி அட்ட நாகங்களுள் ஒன்று. இனம் பற்றி அதன்பால் ஆதிசேஷனின் தன்மைகளும் பேசப்பட்டன. (12)

நிலமக ளுரோம வல்லி நிலையென நகிலி னுப்ப
ணிலகிய மணித்தா ரென்ன விருங்கடற் கேள்வன் வெஃகுங்
குலமக ளென்ன நீலக் கோலவா ரமுத மென்ன
வுலவிய யமுனை யெம்மா லுரைக்கலாந் தகைமைத் தாமோ.

நிலமகள் உரோம வல்லி நிலை என—பூமிதேவியினது உந்தியிற் பொருந்திய உரோம ரேகையைப் போலவும், நகிலின் நாப்பண் இலகிய மணித்தார் என்ன—அவளுடைய தனங்களுக்கு இடையே விளங்கிய நீலமணி மாலையைப் போலவும், இரும் கடற் கேள்வன் வெஃகும் குலமகள் என்ன—பெருமை பொருந்திய கடலாகிய நாயகன் விரும்புகின்ற குலமகளைப்போலவும், நீலக் கோல ஆர் அமுதம் என்ன—நீலநிறம் பொருந்திய தொரு அரிய அமிர்தத் தைப் போலவும், உலவிய யமுனை—ஒழுகிய காளிந்தி, எம்மால் உரைக்க லாம் தகைமைத்து ஆமோ—எம்மால் இத்தகைத்து என்று எடுத்துச் சொல் லும் இயல்பினை யுடையதாகுமா? ஆகாதென்றவாறு.

குலமகள் கங்கையுமாம். (13)

இன்னபல் வகைத்தாய் நீடு மிரும்புனல் யமுனை யின்கண்
மன்னிய நெறிசேர் மாசி மகப்புன லாட வேண்டி
யந்நிலத் தவர்கள் யாரு மடைந்தன ருலக மெல்லாந்
தன்னிக ரின்றி யாளுந் தக்கனித் தன்மை தேர்ந்தான்.

இன்ன பல் வகைத்தாய் நீடும் இரும் புனல் யமுனையின்கண்—இன்னோ ரன்ன பலவகைச் சிறப்பினையுடைத்தாய் அதனால் மிக்கு விளங்கும் பெரிய நீரினையுடைய காளிந்தி நதியின்கண், மன்னிய நெறி சேர் மாசி மகப் புனல் ஆட வேண்டி—நிலைபெற்ற நன்னெறியிற் சேர்க்கின்ற மாசி மகத் தீர்த்தம் ஆடுதலை விரும்பி, அந் நிலத்தவர்கள் யாரும் அடைந்தனர்—அந்தக் காளிந்தியை யடுத்த க்ஷேத்திரங்களில் உள்ளவர்கள் எல்லாஞ் சென்றார்கள்; இத்தன்மை—இந் நிகழ்ச்சியை, உலகம் எலாம் தன் நிகர் இன்றி ஆளும் தக்கன் தேர்ந்தான்—உலகம் முழுவதையுந் தனக் கொப்பாரின்றி அரசு புரியுந் தக்கப் பிரசாபதி அறிந்தான்.

யமுனையின்கண் ஆடல் வேண்டி என்க. (14)

மெய்ப்பய னெய்து கின்ற வினைப்படு மூழின் பாலா
லப்பெரு நதியி லஞ்ஞான் றாடலை வெஃகித் தக்கன்
மைப்படு கூர்ங்கண் வேத வல்லியை மகளி ரோடு
மொப்பில்பல் சனத்தி னோடு மொல்லைமுன் செல்ல வுய்த்தான்.

மெய்ப் பயன் எய்துகின்ற வினைப்படும் ஊழின் பாலால்—உண்மைப் பயன் கைகூடுகின்ற நல்வினைப்பாற்பட்ட ஊழின் பகுதியினால், அஞ்ஞான்று அப் பெரு நதியில் ஆடலை தக்கன் வெஃகி—அப்புண்ணிய காலத்திலே அந்தப் பெரிய புண்ணிய நதியிலே நீராடுதலைத் தக்கன் தானும் விரும்பி, மைப்படும் கூர்ங்கண் வேதவல்லியை—மை தீட்டிய கூரிய கண்களையுடைய வேதவல்லியாகிய தன் மனைவியை, மகளிரோடும்—தோழியர் முதலிய பெண்களோடும், ஒப்பில் பல் சனத்தினோடும்—ஒப்பில்லாத பல சனங்க ளோடும், ஒல்லை முன் செல்ல உய்த்தான்—விரைவாக முன்னே செல்லு மாறு அனுப்பினான். (15)

மாற்றமர் செம்பொற் கோயில் வயப்புலித் தவிசின் மீதாய்
வீற்றிருந் தருட னீங்கி விரிஞ்சனு முனிவர் யாரு
மேற்றதோ ராசி கூற விமையவர் கணமா யுள்ளோர்
போற்றிட யமுனை யென்னும் புனலியா றதன்கட் போனான்.

மாற்று அமர் செம்பொன் கோயில்—மாற்றமைந்த செம்பொன்னாலான மாளிகையில், வயப் புலித் தவிசின் மீதாய் வீற்றிருந் தருள்தல் நீங்கி—சிங்காசனத்தின்மீது வீற்றிருந்தருளுதலை நீங்கி, விரிஞ்சனும் முனிவர் யாரும் ஏற்றது ஓர் ஆசி கூற—பிரமாவும் முனிவர் யாவரும் இயைந்ததுஞ் சிறந்தது மான ஆசி மொழி கூற, இமையவர் கணமாய் உள்ளோர் போற்றிட—தேவர்கணமா யுள்ளவர்கள் துதிக்க, யமுனை என்னும் புனல் யாறு அதன்கண் போனான்—யமுனை என்று பெயர் சொல்லப்படும் நீரினையுடைய ஆறாகிய அக் காளிந்தி நதியினிடத்துச் சென்றான்.

வயப்புலி—சிங்கம். (16)

போனதோர் தக்க னென்போன் புரைதவிர் புனற்கா ளிந்தித்
தூநதி யிடைபோய் மூழ்கித் துண்ணென வரலு மோர்பாற்
றேனிமிர் கமல மொன்றிற் சிவனிடத் திருந்த தெய்வ
வானிமிர் பணிலம் வைக மற்றவ னதுகண் ணுற்றான்.

போனது ஓர் தக்கன் என்போன்—போதலைச் செய்த ஒரு தனித் தக்கன் என்பான், புரைதவிர் புனல் காளிந்தித் தூ நதியிடை போய் மூழ்கி—குற்றம் நீங்கிய நீரினையுடைய காளிந்தியாகிய பரிசுத்த நதியின்கட் சென்று முழுகி, துண்ணென வரலும்—விரைந்து திரும்பி வருதலும், ஓர் பால்—ஒரு பக்கத்தே, தேன் நிமிர் கமலம் ஒன்றில்—தேன் ததும்புகின்ற தாமரைப் புஷ்பம் ஒன்றின் மீது, சிவன் இடத்திருந்த தெய்வ வால் நிமிர் பணிலம் வைக—சிவபெருமானுடைய வாம பாகத்தில் இருந்த தெய்வத்தன்மை பொருந்திய வெண்ணிறம் மிக்க வலம்புரிச் சங்கம் எழுந்தருளியிருப்ப, அவன் அது கண்ணுற்றான்—அத்தக்கன் அதனைக் கண்டான்.

போனது காலங் காட்டுந் தொழிற்பெயர். புரை தவிர்க்கும் புனலுமாம். தெய்வப் பணிலம், வலம்புரிச் சங்கு. பணிலம் தேவியே யாதலின் சிவனிடத்திருந்த பணிலம் எனப்பட்டது. (17)

**வேறு**

கண்ணுறுவா னனிமகிழ்ந்தே கையினையுய்த்
தெடுத்திடுங்காற் காமர் பெற்ற
பெண்ணுருவத் தொருகுழவி யாதலும்விம்
மிதப்பட்டுப் பிறைதாழ் வேணி

யண்ணலருள் புரிவரத்தாற் கவுரியே
நம்புதல்வி யாஞ ளென்ஞ
வுண்ணிகழ்பே ருணர்ச்சியினுற் காணுற்றுத்
தேவர்குழா மொருவிப் போனுன்.

கண்ணுறுவான் நனி மகிழ்ந்து—காண்போனுன தக்கன் மிக மகிழ்ந்து, கையினை உய்த்து—கையை நீட்டி, எடுத்திடுங்கால்—எடுக்கும்பொழுது, காமர் பெற்ற பெண் உருவத்து ஒரு குழவி ஆதலும்—அழகு பொருந்திய பெண் உருவமான ஒரு குழந்தையாய் அச் சங்கந் தோன்றுதலும், விம்மிதப்பட்டு—ஆச்சரியம் உற்று, பிறை தாழ் வேணி அண்ணல் அருள்புரி வரத்தால்—பிறை தாங்கிய சடையினையுடைய சிவபெருமான் அளித்த வரத்தினுல், கவுரியே நம் புதல்வி ஆனுள் என்ஞ—கெளரியாகிய உமையே நமது மகளாயினுள் என்று, உள் நிகழ் பேருணர்ச்சியினுல் காணுற்று—உள்ளத்தினுள்ளே நிகழ்ந்த பேருணர்வாகிய ஞானத்தினுற் கண்டு, தேவர் குழாம் ஒருவிப் போனுன்—தேவர் கூட்டத்தை நீங்கிச் சென்றுன். (18)

அந்நதியின் பான்முன்ன ரவன்பணியாற்
சசிமுதலா மணங்கி ஞேர்க
டுன்னினராய் வாழ்த்தெடுப்பத் துவன்றுபெருங்
கிளைஞரொடுந் தூநீ ராடி
மன்னுமகன் கரையணுகி மறையிசைகேட்
டமர்வேத வல்லி யென்னும்
பன்னிதனை யெய்தியவள் கரத்தளித்தா
னுலகீன்ற பாவை தன்னை.

அந் நதியின்பால்—அக் காளிந்தி நதியின்கண், முன்னர் அவன் பணியால்—முன்னர்த் தக்கனது ஏவலின்படி, சசி முதலாம் அணங்கினேர்கள் துன்னினராய் வாழ்த்தெடுப்ப—இந்திராணி முதலிய தேவ மாதர்கள் நெருங்கி நின்று வாழ்த்தொலி செய்ய, துவன்று பெருங் கிளைஞரொடும் தூநீர் ஆடி—செறிகின்ற பெரிய சுற்றத்தாரோடும் பரிசுத்தமாகிய தீர்த்தமாடி, மன்னும் அகன் கரை அணுகி—நிலைபெற்ற அகன்ற கரையை அடைந்து, மறை இசை கேட்டு—வேதாத்தியயனத்தைக் கேட்டுக்கொண்டு, அமர் வேதவல்லி எனும் பன்னிதனை எய்தி—அமர்கின்ற வேதவல்லி என்னும் மனைவியை அடைந்து, அவள் கரத்து உலகு ஈன்ற பாவை தன்னை அளித்தான்—அவளுடைய கரங்களில் உலகங்களை ஈன்ற உலக மாதாவாகிய பெண் குழந்தையைக் கொடுத்தான். (19)

ஏந்துதனிக் குழவியினைத் தழீஇக்கொண்டு
மகிழ்ந்துகுயத் திழிபா லார்த்திக்
காந்தண்மலர் புரைசெங்கைச் சூர்மகளிர்
போற்றிசைப்பக் கடிதி னேகி

வாய்ந்ததன திருக்கையிடைப் புக்கனளாற்
றக்கனங்கண் வானோ ரோடும்
போந்துமணிக் கோயில்புக்குத் தொன்முறைபோ
லரசியற்கை புரிந்தி ருந்தான்.

ஏந்து தனிக் குழவியினை—தக்கனாற் கொடுக்கப்பெற்றுக் கரங்களில் ஏந்திய ஒப்பற்ற குழந்தையை, தழீஇக்கொண்டு மகிழ்ந்து—மார்போடணைத்துக் கொண்டு மகிழ்ந்து, குயத்து இழி பால் ஆர்த்தி—தனங்களினின்றும் உருக்கத்தாற் சுரந்தொழுகும் பாலை ஊட்டி, காந்தள் மலர் புரை செங்கைச் சூர் மகளிர் போற்றிசைப்ப—காந்தள்மலர் போன்ற சிவந்த கைகளையுடைய சூரரமகளிர்கள் துதிசெய்ய, கடிதின் ஏகி—விரைந்து சென்று, வாய்ந்த தனது இருக்கையிடைப் புக்கனள்—வளம் நிறைந்த தனது மாளிகையை அடைந்தாள்; தக்கன் அங்கண் வானோரோடும் போந்து—தக்கன் அவ்விடத்திற் கூடியிருந்த தேவர்களோடுஞ் சென்று, மணிக்கோயில் புக்கு—அழகிய தனது மாளிகையை அடைந்து, தொன் முறைபோல் அரசியற்கை புரிந்து இருந்தான்—முன்போலத் தனது அரசியல் முறையை நடாத்திக்கொண்டிருந்தான். (20)

காளிந்திப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 262.

# உமை தவம்புரி படலம்

கொண்டுதன தில்லிற் குறுகியபின் வேதவல்லி
மண்டுபெருங் காதலொடு மகண்மையா வளர்த்தனளா
லண்டமள வில்லனவு மலகிலா வுயிர்த்தொகையும்
பண்டுதன துந்தியினுற் படைத்தருளும் பராபரையை.

அளவு இல்லன அண்டமும் அலகு இலா உயிர்த்தொகையும்—அளவில்லாத அண்டங்களையும் எண்ணில்லாத உயிர்க் கூட்டங்களையும், பண்டு—சிருட்டி காலத்தில், தனது உந்தியினுற் படைத்தருளும் பராபரையை—தமது திரு வயிற்றினின்றும் படைத்தருளிய பராபரையாகிய உமாதேவியாரை, வேத வல்லி கொண்டு தனது இல்லிற் குறுகியபின்—வேதவல்லி தன் கணவ னிடம் பெற்றுக்கொண்டு தன் மாளிகையை அடைந்த பிறகு, மண்டு பெருங் காதலொடு—அதிகரிக்கின்ற மிக்க பேரன்போடு, மகண்மையா வளர்த்தனள்—தன் புதல்வியாக வளர்த்தாள். (1)

வளருமதிக் குழவியென மாநிலமேற் றவழ்தலொடுந்
தளருநடை பயில்கின்ற தாறுமுடன் றப்பியபின்
முளையெயிறுள் ளெழுபோத முளைத்ததெனத் தோன்றுதலு
மளவிலுயிர் முழுதீன்ரு ளைந்தாண்டு நிரம்பினளால்.

அளவு இல் முழுது உயிர் ஈன்றுள்—எண்ணற்ற உயிர் முழுவதையும் ஈன்றருளிய உமாதேவியார், வளரு மதிக்குழவி என—வளருகின்ற பிறைச் சந்திரன் போன்று வளர்ந்து, மா நிலமேல் தவழ்தலொடும்—பெரிய பூமியின் மீது தவழும் பருவமும், தளரு நடை பயில்கின்ற தாறும்—தளர்நடை பயில் கின்ற வருகைப் பருவமும், உடன் தப்பிய பின்—ஒருங்கு கழிந்த பிறகு, உள் எழு போதம் முளைத்தது என—உள்ளத்தினுள்ளே எழுகின்ற ஞான போதம் முளை கொண்டதுபோல, முளை எயிறு தோன்றுதலும்—நாணன் முளை போன்ற பல் முளைகொள்ள, ஆண்டும் ஐந்து நிரம்பினள்—வயசும் ஐந்து நிரம்பியவர் ஆயினர். (2)

ஆறுன வாண்டெல்லை யணைதலுமம் பிகைதனக்கோர்
கூறுன பிரான்றன்னைக் கோடன்முறை குணித்தனளாய்
மாறுது நோற்பலென மனங்கொண்டி யாய்தனக்கும்
பேறுன தக்கனெனும் பெருந்தவற்கு மிஃதுரைத்தாள்.

ஆறுன ஆண்டு எல்லே அணைதலும்—ஆறுவது வயசு வருதலும், அம்பிகை தனக்கு ஓர் கூறுன பிரான் தன்னைக் கோடன் முறை குணித்தனளாய்—உமையம்மையார் தமது ஒரு கூறுன சிவபெருமான் தம்மை மணஞ் செய்துகொள்ளும் முறையை எண்ணியவராய், மாறுது நோற்பல் என மனங் கொண்டு—தவருது தவஞ் செய்வேன் என்று திருவுளங்கொண்டு, யாய் தனக்கும்—மாதாவாகிய வேதவல்லிக்கும், பேறு ஆன தக்கன் எனும் பெருந் தவற்கும்—தவப்பேறு சித்தித்த தந்தையாகிய தக்கன் என்னும் பெரிய தவத்தோனுக்கும், இஃது உரைத்தாள்—தாம் மேற்கொண்ட இச்செயலே உரைத்தருளினர். (3)

கூறுவதொன் றுமக்குண்டாற் குரவீர்கா ளிதுகேண்மி
ஞறுபுனே செஞ்சடிலத் தண்ணலுக்கே யுரித்தாகும்
பேறுடையே னவன்வதுவை பெறுவதற்கு நோற்பலியான்
வேறெருசார் கடிமாடம் விதித்தென்னே விடுத்திரென.

குரவீர்காள்—அன்னேயுந் தந்தையு மாகிய இரு முது குரவீர்காள், உமக்குக் கூறுவது ஒன்று உண்டு—யான் உங்களுக்குக் கூறுவதொன் றுளது, இது கேண்மின்—இதனைக் கேளுங்கள், ஆறு புனே செஞ் சடிலத்து அண்ணலுக்கு உரித்து ஆகும் பேறு உடையேன்—கங்கையைத் தரித்த செம்மையாகிய சடையினையுடைய சிவபெருமானுக்குச் சத்தியாகும் பேற்றை யுடையேன் ஆகையினுலே, அவன் வதுவை பெறுவதற்கு யான் நோற்பன்—அச் சிவ பெருமான் என்னே மணத்தலாகிய வரத்தை யான் பெறுவதற்குத் தவஞ் செய்வேன், வேறு ஒரு சார் கடி மாடம் விதித்து—வேறெரு பக்கத்திலே காவல் பொருந்தியதொரு தவமாடத்தை அமைத்து, என்னே விடுத்திர் என—அதில் என்னைத் தவஞ்செய்ய விடுக்குதிர் என்று கூறியருள.

உரித்து—சத்தி. (4)

நன்றென்று மகிழ்சிறந்து நல்லாயுந் தந்தையுமாய்ப்
பொன்றுஞ்சு தமதிருக்கைப் பொருவினகர்ப் புறத்தொருசா
ரன்றங்கோர் கடிமாட மணிசிறக்கப் புனேவித்துச்
சென்றங்கட் டவமியற்றச் சேயிழையை விடுக்கின்றூர்.

நல் ஆயும் தந்தையும்—நல்ல தாயும் தந்தையும், ஆய்—ஒன்று சேர்ந்து, நன்று என்று மகிழ் சிறந்து—நல்லது என்று மகிழ்ச்சி மிக்கு, பொன் துஞ்சு தமது இருக்கைப் பொருவில் நகர்ப் புறத்து ஒரு சார்—இலக்குமி வசிக்கின்ற தமது இருப்பிடமாகிய ஒப்பில்லாத கோயிலின் அயலிலே ஒரு பக்கத்தில், அன்று அங்கு ஓர் கடி மாடம் அணி சிறக்கப் புனேவித்து—அப்பொழுது அங்கே ஒரு காவல் பொருந்திய தவச்சாலையை அழகு சிறப்பச் செய்வித்து, அங்கண் சென்று தவம் இயற்ற—அச் சாலேயிற் சென்று தவஞ்

செய்தற்கு, சேயிழையை விடுக்கின்ருர்—செம்மையாகிய ஆபரணம் அணிந்த உமாதேவியாரை விடுக்கின்றவர்கள்.

விடுக்கின்ருர் ஏகுவித்தார் என அடுத்த செய்யுளில் முடிக்க. (5)

முச்சகமுந் தருகின்ற முதல்விதனைத் தம்மகளென்
றிச்சைகொடு நனிபோற்றி யிருவருநா ரொடுநோக்கி
யுச்சியினைப் பன்முறைமோந் துயிர்த்தம்மோ வுன்னுளத்தி
னச்சியநோன் பியற்றுகென நாரியரோ டேகுவித்தார்.

முச்சகமுந் தருகின்ற முதல்விதனை—மூன்றுலகங்களையும் ஈன்றருளுகின்ற முதல்வியாகிய உமாதேவியாரை, தம் மகள் என்று இச்சை கொடு நனி போற்றி—தம்மகள் என்று விருப்பத்தோடு பெரிதும் வாழ்த்தி, இருவரும் நாரொடு நோக்கி—பெற்றோரிருவரும் அன்பால் நோக்கி, பன்முறை உச்சி மோந்து உயிர்த்து—பலமுறை உச்சி மோந்து நெட்டுயிர்த்து, அம்மோ—அம்மையே, உன் உளத்தில் நச்சிய நோன்பு இயற்றுக என—உன் மனத்தில் விரும்பிய தவத்தைச் செய்குதி என்று, நாரியரோடு ஏகுவித்தார்—சேடியர்களாகிய பெண்களோடு அனுப்பினுர்கள். (6)

மாதவர்பால் விடைபெற்று வல்விரைவுற் றேகுதலும்
வேதவல்லி யதுகாணு மெய்க்கணவன் றனைநோக்கிப்
பேதையிவள் சிவனையுணர் பெற்றிமையென் மொழிகென்ன
வீதனைய ணிலைமையென யாவுமெடுத் தியம்புகின்ருன்.

மாது அவர்பால் விடைபெற்று—உமாதேவியார் அவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு, வல் விரைவுற்று ஏகுதலும்—பெரிதும் விரைவுபட்டுத் தவச்சாலைக்குச் செல்லுதலும், அது வேதவல்லி காணு—அச்செயலை வேதவல்லி கண்டு, மெய்க் கணவன் தனை நோக்கி—மெய்ம்மையினையுடைய கணவனுகிய தக்கனை நோக்கி, பேதை இவள்—சிறுமியாகிய இவள், சிவனை உணர் பெற்றிமை என் மொழிக என்ன—சிவபெருமானை அறிந்த தன்மை என்னை உரைக்குக என்று வினவ, அனையள் நிலைமை ஈது என—அவளுடைய நிலைமை இதுவாகும் என்று, யாவும் எடுத்து இயம்புகின்ருன்—சம்பவம் முழுவதையும் தக்கன் தன் மனைவிக்குச் சொல்லுகின்ருன்.

பேதை பருவங் குறித்ததாயினும் ஈண்டுச் சிறுமி என்னும் பொருட்டு. (7)

பொங்குபுனற் றடத்திடையான் புரிகின்ற தவங்காணூஉச்
சங்கரனங் கெய்திடலுந் தாழ்வில்வரம் பலகொண்டுன்
பங்கினளென் மகளாகப் பண்ணவநீ யென்மருகாய்
மங்கலநல் வதுவையுற மறையவனுய் வருகென்றேன்.

பொங்கு புனல் தடத்திடை யான் புரிகின்ற தவம் காணூஉ சங்கரன் அங்கு எய்திடலும்—பொங்குகின்ற நீரினையுடைய மானதவாவியின்கண் யான் செய்கின்ற தவத்தைக் கண்டு சுகஞ் செய்பவராகிய சிவபெருமான் அங்கே எழுந்தருளுதலும், தாழ்வில் வரம் பல கொண்டு—குறைவில்லாத பல வரங்களைப் பெற்றுக்கொண்டு (இறுதியில்), உன் பங்கினள் என் மகள் ஆக—தேவரீரது வாமபாகத்தி லிருக்கின்ற பிராட்டி என் புதல்வியாக, பண்ணவ நீ என் மருகாய் மறையவனுய்—தேவரீர் என் மருகராய் மறையவராய், மங்கல நல் வதுவை உற—மங்களகரமான நல்ல திருமணத்தைச் செய்ய, வருக என்றேன்—வந்தருள்க என்று கேட்டுக்கொண்டேன். *(8)*

அற்ருக நின்பாலென் றருள்செய்தா னம்முறையே
கற்ருவி னேறுயர்த்த கண்ணுதலோன் முழுதுலகும்
பெற்ருளை யமுனையெனும் பெருநதியி லுய்ப்பநம்பா
லுற்ருண்மற் றெஞ்ஞான்று முணர்விஞெடு வைகினளால்.

நின்பால் அற்று ஆக என்று அருள் செய்தான்—உன்னிடம் அவ்வாருகுக என்று வரந்தந் தருளினர்; அம் முறையே—அவ் வரத்தின் வண்ணமே, கற்ருவின் ஏறு உயர்த்த கண்ணுதலோன்—ஆனேருகிய கொடியை உயர்த்தியருளிய சிவபெருமான், முழுதுலகும் பெற்ருளை யமுனை எனும் பெருநதியில் உய்ப்ப—எல்லா உலகங்களையும் பெற்றருளிய தேவியைக் காளிந்தி நதிக்கண் அனுப்ப, நம்பால் உற்ருள்—தேவி நம்மிடம் நம் மகளாய் வந்து, எஞ்ஞான்றும் உணர்விஞெடு வைகினள்—வந்தகாலந் தொட்டு எக்காலத்திலும் முன்னை உணர்வோடு இருந்தாள்.

கற்ரு, ஆன் என்னும்பொருட்டு. *(9)*

மாதவமோர் சிலவைகல் பயின்றுமதிக் கோடுபுனை
யாதிதனக் கன்பினளா யருந்துணைவி யாகின்ருள்
பேதையென நினையற்க பெருமாட்டி தனையென்னக்
காதலிவிம் மிதமெய்திக் கரையிலா மகிழ்சிறந்தாள்.

ஓர் சில வைகல் மாதவம் பயின்று—ஒரு சிலதினம் பெரிய தவஞ் செய்து, மதிக் கோடு புனை ஆதி தனக்கு அன்பினளாய்—இளம்பிறையை அணிந்த ஆதியாகிய சிவபெருமானுக்கு அன்புடையவளாய், அரும் துணைவி ஆகின்ருள்—அரிய சத்தியாகப் போகின்ருள்; பெருமாட்டி தனை பேதை என நினையற்க—இவ்வாருய எம்பெருமாட்டியைப் பேதையாகிய சிறுமியென்று கருதற்க; என்ன—என்று தக்கன் கூற, காதலி விம்மிதம் எய்தி கரை இலா மகிழ் சிறந்தாள்—காதலியாகிய வேதவல்லி ஆச்சரியமுற்று அளவில்லாத மகிழ்ச்சியிற் சிறந்தாள். *(10)*

இந்நிலைசேர் முதுகுரவ ரேவலினுற் சிலதியராங்
கன்னியர்கள் சூழ்போதக் கடிமாடம் போந்துமையாள்
சென்னிநதி புனைந்தபிரான் றிருநாம முள்ளுறுத்தி
நன்னியமந் தலைநின்று நாளுநனி நோற்கின்றாள்.

இந்நிலைசேர் முது குரவர் ஏவலினுல்—இத்தன்மையரான அன்னை தந்தையரின் கட்டளையினுல், சிலதியராம் கன்னியர்கள் சூழ் போத--சேடியர் ஆகிய கன்னியர்கள் சூழ்ந்துவர, கடிமாடம் போந்து—காவலினையுடைய தவமாடத்தை அடைந்து, உமையாள்—உமாதேவியார், சென்னி நதி புனைந்த பிரான் திருநாமம் உள்ளுறுத்தி—சிரசிற் கங்கையைத் தரித்த சிவபெருமானுடைய திருநாமமாகிய ஸ்ரீபஞ்சாட்சரத்தை மனசிற் பதித்து, நல் நியமம் தலைநின்று—நல்லநியமத்திலே தலைப்பட்டு நின்று, நாளும் நனி நோற்கின்றாள்—நாடோறும் பெரிதுந் தவம் புரிகின்றார். (11)

வேறு

ஈண்டுறு மடவார் சூழ விம்முறை யிருத்த லோடு
மாண்டுபன் னிரண்டு சென்ற வம்பிகைக் கனைய காலை
வேண்டிய வேண்டி யாங்கு விரதருக் குதவும் வண்மை
பூண்டிடு பரம னன்னாள் புரிந்திடு தவத்தைக் கண்டான்.

ஈண்டுறு மடவார் சூழ—நெருங்கிய மாதர்கள் சூழ, இம்முறை இருத்தலோடும்—இவ்வாறு தவஞ் செய்துகொண்டிருக்க, அம்பிகைக்கு ஆண்டு பன்னிரண்டு சென்ற—உமாதேவியாருக்கு வயசு பன்னிரண்டு முற்றியது; அனைய காலை—அப்பொழுது, விரதருக்கு வேண்டிய வேண்டியாங்கு உதவும் வண்மை பூண்டிடும் பரமன்—தவவிரதம் பூண்டோருக்கு விரும்பியவைகளை விரும்பியவாறே வழங்கும் வள்ளன்மையைத் தமக்கு இயல்பான குணமாகப் பூண்டருளிய சிவபெருமான், அன்னாள் புரிந்திடும் தவத்தைக் கண்டான்—அவ்வுமாதேவியார் மேற்கொண்ட தவத்தைத் திருவுளங் கொண்டருளினர். (12)

கண்டுமற் றவளை யாளக் கருதியே கயிலை யென்னும்
விண்டினை யிகந்து முந்நூல் வியன்கிழி தருப்பை யார்த்த
தண்டுகைக் கொண்டு வேதத் தலைநெறி யொழுக்கம் பூண்ட
முண்டவே தியனிற் றோன்றி முக்கணெம் பெருமான் வந்தான்.

கண்டு—உமாதேவியாரின் தவத்தைத் திருவுளங்கொண்டு, அவளை ஆளக் கருதி—அவ் வுமாதேவியாரை ஆட்கொண்டருளக் கருதி, கயிலை என்னும் விண்டினை இகந்து—கயிலாயம் என்னும் மலையை நீங்கி, முந்நூல் வியன்கிழி தருப்பை ஆர்த்த தண்டு கைக்கொண்டு—முப்புரிநூல் சிறந்த கோவணம் தருப்பை என்னும் இவைகளைக் கட்டிய ஒரு தண்டத்தைக் கையிற் பிடித்து, வேதத் தலைநெறி ஒழுக்கம் பூண்ட—வேதத்திற் சொல்லப்பட்ட முதல்

நிலையான பிரமசரிய ஒழுக்கம் பூண்ட, முண்ட வேதியனின் தோன்றி—திரி புண்டரம் அணிந்த பிராமணனைப்போல வேடங்கொண்டு, முக்கண் எம்பெருமான் வந்தான்—மூன்று கண்களையுடைய சிவபெருமான் எழுந்தருளினர். (13)

தொக்குலாஞ் சூலத் தண்ண றெல்புவி யுய்ய வேதச்
செக்கர்நூ புரத்தாள் பின்னுஞ் சேப்புற மண்மேற் போந்து
தக்கமா புரத்தி னண்ணிச் சங்கரி யென்னுந் தொல்பேர்
மைக்கணு ணோற்குந் தெய்வ மல்லன்மா ளிகையிற் புக்கான்.

தொக்கு உலாம் சூலத்து அண்ணல்—எங்கும் வியாபித்து விளங்குகின்ற சூலத்தினையுடைய சிவபெருமான், தொல்புவி உய்ய—தொன்மையாகிய பூமி உய்யும்பொருட்டு, வேத நூபுரச் செக்கர் தாள்—வேதமாகிய சிலம்பணிந்த சிவந்த திருவடிகள், பின்னும் சேப்புற மண்மேற் போந்து—மேலும் சிவக்கும் படி மண்ணில் நடந்து, தக்க மா புரத்தின் நண்ணி—தக்கபுரியை அடைந்து, சங்கரி என்னும் தொல்பேர்—சுகஞ் செய்தலால் சங்கரி என்கின்ற பழைமை யான பெயர் படைத்த, மைக்கணுள் நோற்கும்—மை தீட்டிய கண்களை யுடைய உமாதேவியார் தவஞ் செய்யும், தெய்வ மல்லல் மாளிகையில் புக்கான்—தெய்வீகமான பெருமை பொருந்திய மாளிகையின்கட் சென் றருளினர். (14)

அன்னைநோற் கின்ற கோட்டத் தணுகியே யளப்பின் மாதர்
முன்னுறு காவல் போற்று முதற்பெருங் கடையிற் சாரக்
கன்னிய ரெவரும் வந்து கழலிணை பணித லோடு
மென்னிலை தலைவிக் கம்ம வியம்புகென் றிசைத்து நின்றான்.

அன்னை நோற்கின்ற கோட்டத்து அணுகி—மாதாவாகிய உமாதேவியார் தவஞ்செய்கின்ற தவச்சாலையை அடைந்து, அளப்பு இல் மாதர் முன் உறு காவல் போற்றும்—அளவில்லாத பெண்கள் முற்பட்டுக் காவலைச் செய் கின்ற, முதற் பெருங் கடையிற் சார—பெரிய முதற் கடைவாசலிற் செல்ல, கன்னியர் எவரும் வந்து கழல் இணை பணிதலோடும்—பெண்கள் அனைவரும் வந்து தமது திருவடிகளை வணங்க, என் நிலை தலைவிக்கு இயம்புக என்று இசைத்து நின்றான்—எமது வருகையை உமது தலைவிக்கு உரைப் பீராக என்று திருவாய்மலர்ந்தருளி நின்றார். (15)

நிற்றலுங் கடைகாக் கின்ற நேரிழை மகளிர் சில்லோர்
பொற்றொடி யுமைபா லெய்திப் பொன்னடி வணங்கி யீண்டோர்
நற்றவ மறையோ னின்பா னண்ணுவான் விடுத்தா னென்ன
மற்றவன் றன்னை முன்கூய் வல்லைநீர் தம்மி னென்றாள்.

நிற்றலும்—அவ்வந்தணர் வாசலில் நிற்க, கடை காக்கின்ற நேர் இழை மகளிர் சில்லோர்—வாசலைக் காக்கின்ற இயைந்த ஆபரணத்தை அணிந்த பெண்கள் சிலர், பொற்றொடி உமைபால் எய்தி—பொன்னாலாய வளையலை யணிந்த உமாதேவியாரிடஞ் சென்று, பொன் அடி வணங்கி—அழகிய திரு வடிகளை வணங்கி, ஈண்டு ஓர் நல் தவ மறையோன்—இவ்விடத்தில் ஒரு நல்ல தவத்தையுடைய அந்தணர், நின்பால் நண்ணுவான்—தேவியாகிய நும்மை அடையும்பொருட்டு, விடுத்தான் என்ன—எம்மை நும்பால் அனுப்பினர் என்று கூற, அவன் தன்னை வல்லை கூய்—அவ்வந்தணரை விரைந்தழைத்து, நீர் முன் தம்மின் என்றாள்—நீவிர் என்முன் கொண்டுவாருங்கள் என்று பணித்தார். (16)

தம்மினீ ரென்ற லோடுந் தாழ்ந்தனர் விடைபெற் றேகி
யம்மினேர் கின்ற நாப்ப ணரிவையர் கடைமுன் னேகி
வம்மினோ வடிக ளெம்மோய் வரவருள் புரிந்தா ளென்னச்
செம்மலும் விரைவிற் சென்று தேவிதன் னிருக்கை சேர்ந்தான்.

தம்மின் நீர் என்றலோடும்—நீவிர் அழைத்து வாருங்கள் என்று கூறிய வுடன், தாழ்ந்தனர் விடை பெற்று ஏகி—வணங்கி விடைபெற்றுக்கொண்டு அவ்விடத்தை விட்டகன்று, அம் மின் நேர்கின்ற நாப்பண் அரிவையர் கடை முன் ஏகி—அழகிய மின்னலை ஒத்த இடையினையுடைய அப் பெண்கள் தலைவாய் தலிற் சென்று, அடிகள் வம்மின்—அடிகாள் வருக, எம்மோய் வர அருள் புரிந் தாள் என்ன—எம்மன்னை அங்கே அடிகள் எழுந்தருளத் திருவருள் செய்தாள் என்று விண்ணப்பிக்க, செம்மலும் விரைவிற் சென்று—இறைவராகிய அந் தணரும் விரைந்து சென்று, தேவி தன் இருக்கை சேர்ந்தான்—இறைவி தவஞ் செய்யுந் தவச்சாலையை அடைந்தார். (17)

தேவர்க டேவ னங்கோர் சீர்கெழு மறையோன் போலாய்
மேவிய காலை யம்மை விரைந்தெதி ரேகி மற்றென்
காவலர் தம்பா லன்ப ரிவரெனக் கருதி யன்னோன்
பூவடி வணங்கி வேண்டும் பூசனை புரிந்து நின்றாள்.

தேவர்கள் தேவன் அங்கு ஓர் சீர்கெழு மறையோன் போலாய் மேவிய காலை—தேவதேவரான சிவபெருமான் அவ்விடத்தில் அருட்செல்வம் பொருந் திய ஒரு பிராமணரைப் போன்ற வடிவத்தை உடையவராய் அடைந்தபோது, அம்மை விரைந்து எதிர் ஏகி—உமாதேவியார் விரைவாக எதிரே சென்று, இவர் என் காவலர் தம்பால் அன்பர் எனக் கருதி—இப்பிராமணர் எமது நாயகரான சிவபெருமான் மீது அன்புடையார் என்று கருதி, அன்னோன் பூ அடி வணங்கி வேண்டும் பூசனை புரிந்து நின்றாள்—அவருடைய மலர் போன்ற பாதங்களை வணங்கிச் செய்யவேண்டுவதாகிய பூசனையைச் செய்து நின்றார். (18)

நேயமொ டருச்சித் தேத்தி நின்றவ டன்னை நீல
ஞாயிறு நிகர்த்த மேனி நகைமதி முகத்தா யீண்டியா
மேயின தொன்றை வெஃகி விரைந்தருள் புரிதி யென்னி
னாயது புகல்வ மென்ன வம்மையிங் கிதனைச் சொல்வாள்.

நேயமொடு அருச்சித்து ஏத்தி நின்றவள் தன்னை—அன்போடு பூசித்து வணங்கி நின்ற தேவியை, நீல ஞாயிறு நிகர்த்த மேனி நகை மதி முகத்தாய்—நீல நிறமானதொரு ஞாயிற்றினை ஒத்த திருமேனியையும் ஒளி செய்கின்ற சந்திரனை யொத்த முகத்தையு முடைய பெண்ணே, யாம் ஈண்டு மேயினது ஒன்றை வெஃகி—யாம் இவ்விடத்துக்கு வந்தது ஒன்றைப் பெற விரும்பியேயாம்; விரைந்து அருள் புரிதி என்னின்—விரைந்து யாம் விரும்பியதை அநுக்கிரகஞ் செய்வாயாயின், ஆயது புகல்வம் என்ன—அதனைச் சொல்லுவோம் என்று கூற, அம்மை இங்கு இதனைச் சொல்வாள்—உமா தேவியார் இதனைச் சொல்லுவார். (19)

எனக்கிசை கின்ற தொன்றை யிசைத்தியே யென்னி னின்னே
நினக்கது கூடு மிங்ங னினைத்ததென் மொழிதி யென்ன
வுனைக்கடி மணத்தி னெய்த வுற்றன னதுவே நீயென்
றனக்கருள் புரியு மாறு தடுத்தெதிர் மொழிய லென்றான்.

எனக்கு இசைகின்றது ஒன்றை இசைத்தியே என்னின்—என்னால் உதவக் கூடியதொன்றைக் கூறுவீராயின், இன்னே நினக்கு அது கூடும்—இப்பொழுதே உமக்கு அது கைகூடும்; இங்ஙன் நினைத்தது என் மொழிதி என்ன—இவ்விடத்துப் பெற்றுக்கொள்ள எண்ணியது என்னை உரைப்பீராக என்று வினவ, உனைக் கடிமணத்தின் எய்த உற்றனன்—உன்னைத் திருமணஞ் செய்துகொள்ள வந்தோம்; அதுவே நீ என் தனக்கு அருள் புரியுமாறு—அதுவே நீ எமக்கு அநுக்கிரகஞ் செய்ய வேண்டுவது; தடுத்து எதிர் மொழியல் என்றான்—இதனைத் தடுத்து எதிர்வார்த்தை ஆடாதே என்றார். (20)

### வேறு

அத்த னீது ரைத்த லோடு மம்மை யங்கை யாற்செவி
பொத்தி வெய்தெ னக்க னன்று புந்தி நொந்து யிர்த்துநீ
இத்தி றம்பு கன்ற தென்னை யென்னை யாளு கின்றதோர்
நித்தன் வந்து வதுவை செய்ய நீட வஞ்செய் தேனியான்.

அத்தன் ஈது உரைத்தலோடும்—சிவபெருமானாகிய பிராமணர் இவ்வாறு கூறுதலும், அம்மை அங்கையாற் செவி பொத்தி—உமாதேவியார் அகங்கைகளாற் செவிகளைப் பொத்தி, வெய்து எனக் கனன்று—வெம்மை யுடைத்தாகக் கோபித்து, புந்தி நொந்து—மனம் நொந்து, உயிர்த்து—பெருமூச்சு விட்டு, என்னை ஆளுகின்றது ஓர் நித்தன் வந்து வதுவை செய்ய—என்னை

ஆளுகின்ற ஒப்பற்ற நித்தராகிய சிவபெருமான் எழுந்தருளிவந்து திருமணஞ் செய்யும்பொருட்டு, யான் நீள் தவம் செய்தேன்—யான் மிக்க தவத்தினைச் செய்தேன் அங்ஙனமாக, நீ இத்திறம் புகன்றது என்னை—நீர் இவ்வாறு கூறிய தென்னை?

என்னலோடும் என வருஞ் செய்யுளில் முடிக்க. (21)

என்ன லோடு மினைய னென்றி யாரு மென்று மிறையுமே
முன்னொ ணாது நின்ற வாதி முதல்வ னின்னை வதுவையான்
மன்னு கின்ற தரிது போலு மாத வங்க ளாற்றியே
கன்னி நீவ ருந்த லென்று கழற மாது புகலுவாள்.

என்னலோடும்—உமாதேவியார் இவ்வாறு கூறுதலும், யாரும் என்றும் இனையன் என்று இறையும் முன் ஒணாது நின்ற ஆதி முதல்வன்—யாவரும் எக்காலத்தும் இத்தன்மையர் என்று சிறிதும் நினைக்க முடியாமல் நின்ற முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான், நின்னை வதுவையால் மன்னுகின்றது அரிது போலும்—உன்னைத் திருமண முறையால் மேவுவது அரிதுபோலும்; கன்னி நீ மாதவங்கள் ஆற்றி வருந்தல் என்று கழற—கன்னிகையே நீ பெரிய தவங்களைச் செய்து வருந்தாதே என்று இடித்துரைக்க, மாது புகலுவாள்—உமாதேவியார் கூறுவார்.

போலும் ஒப்பில் போலி. (22)

பரம னேவி ரும்பி வந்து பாரின் மாம ணஞ்செய
வரிய மாத வங்கள் செய்வ லன்ன தற்கு முன்னவன்
வருகி லாது தவிர்வ னென்னின் வலிதி னாவி நீப்பன்யான்
சரத மீது பித்த னேச ழக்கு ரைத்தி ருத்திநீ.

பரமனே பாரில் விரும்பி வந்து மாமணம் செய அரிய மாதவங்கள் செய்வல்—சிவபெருமானே இந்தப் பூமியில் விரும்பி எழுந்தருளித் திருமணஞ் செய்யும்பொருட்டு அரிய பெரிய தவங்களைச் செய்வேன்; அன்னதற்கு முன்னவன் வருகிலாது தவிர்வன் என்னின்—அத்தவத்திற்கு முதல்வராகிய சிவபெருமான் வாராதொழிவாராயின், யான் வலிதின் ஆவி நீப்பன்—யான் வலிந்து உயிரை நீத்துவிடுவேன்; ஈது சரதம்—இது சத்தியம்; நீ பித்தனே—நீர் பித்துப்பிடித்தவரோ, சழக்கு உரைத்து இருத்தி—பொய் சொல்லிக்கொண்டிருக்கின்றீர்.

சழக்கு—நீதிக்கு மாறானது. (23)

போதி போதி யென்று தானுரை புடையி னேக வுவகையாய்
மாது நின்ற னன்பு முள்ள வன்மை தானு நன்றெனா
வாதி தேவ னேனை யோர்க ளறிவு றாத வகையவள்
காத னீடு தனது தொல்க வின்கொண் மேனி காட்டினான்.

போதி போதி என்று தான் ஓர் புடையின் ஏக—இவ்விடத்தினின்றும் அகன்று போக போக என்று சொல்லிக்கொண்டு தாம் வேறொரு பக்கத்தே செல்ல, உவகையாய்—மகிழ்வுடையவராய், மாது நின் தன் அன்பும் உள்ள வன்மை தானும் நன்று எனு—பெண்ணே உன்னுடைய அன்பும் மன வுறுதி யும் நன்று என்று கூறி, ஆதி தேவன் ஏனையோர்கள் அறிவுறு வகை—ஆதி யாகிய சிவபெருமான் பிறர் அறியாவண்ணம், அவள் காதல் நீடு தனது தொல் கவின்கொள் மேனி காட்டினன்—அவ்வுமாதேவியாரது காதலை மிகு விக்கின்ற தமது தொன்மையாகிய அழகினையுடைய திருமேனியைக் காட்டி யருளினர். (24)

ஆதி தன்றொ லுருவு காட்ட வமலை கண்டு மெய்பனித்
தேதி லாரெ னநி னைந்தி கழ்ந்த னன்னெ னுவவன்
பாத பங்க யங்களிற்ப ணிந்து போற்றி செய்தியான்
பேதை யேனு ணர்ந்தி லேன்பி ரான்ம றைந்து வந்ததே.

ஆதிதன் தொல் உருவு காட்ட—சிவபெருமான் தமது தொன்மையாகிய திருமேனியைக் காட்ட, அமலை கண்டு—நின்மலையாகிய உமாதேவியார் தரிசித்து, மெய் பனித்து—சரீரம் நடுங்கி, ஏதிலார் என நினைந்து இகழ்ந் தனன் எனு—அயலவரென்று தேவரீரை இகழ்ந்தேனே என்று, அவன் பாத பங்கயங்களில் பணிந்து போற்றி செய்து—அச் சிவபெருமானுடைய பாத கமலங்களில் விழுந்து வணங்கித் துதித்து, யான் பேதையேன்—யான் அறி வில்லாதவள், பிரான் மறைந்து வந்தது உணர்ந்திலேன்—தேவரீர் மறைந்து வந்ததை அறியேன். (25)

உன்ன ருட்க ணெய்து மேலு ணர்ச்சி யெய்தி நிற்பன்யான்
பின்னொர் பெற்றி யில்லை யாற்பி ழைத்த துண்டு தணிதிநீ
யென்னு நற்ற வத்தி தன்னை யினிதி னெந்தை கண்ணுறீஇ
நின்னி யற்கை நன்று நன்று நீது ளங்க லென்றனன்.

உன் அருட்கண் எய்துமேல்—தேவரீருடைய கிருபா நோக்கம் கிடைக்கு மானல், யான் உணர்ச்சி எய்தி நிற்பன்—நான் அறிவைப் பொருந்தியிருப் பேன்; பின்—கிருபாநோக்கம் கிடையாதவழி, ஓர் பெற்றி இல்லை—எனக் கென்றொரு சுதந்திரமாகிய தன்மை இல்லை; பிழைத்தது உண்டு—என்னிலை மையை யானறியாது தேவரீருக்குப் பிழை செய்ததுண்டு; நீ தணிதி—தேவரீர் கோபஞ் செய்யாது பொறுத்தருள்க; என்னும் நல் தவத்தி தன்னை—என் றிங்ஙனம் குறையிரந்து பிரார்த்திக்கின்ற நல்ல தவத்தையுடைய உமாதேவி யாரை, எந்தை இனிது கண்ணுறீஇ—எம்பெருமான் இனிது கிருபா நோக் கஞ் செய்து, நின் இயற்கை நன்று நன்று—உமையே உன் இயற்கை நல்லது! நல்லது!, நீ துளங்கல் என்றனன்—நீ அஞ்சற்க என்று அபயம் அளித் தருளினர்.

'உன்னிடை தனினும்யாம் உறுதல் இல்வழி
நின்னுயிர் உணர்வுரு நினக்குக் காட்டுது
மன்னது காண்கெனு'க் காட்டியவழிக் கண்டாராதலின் தமக்
கென 'ஓர் பெற்றி' இன்மையை உணர்ந்து, முன் தம்மைத்தாம் வியந்த
மைக்கு நாணிப், 'பிழைத்த துண்டு' என்றுரென்க. (26)

என்ற நாத னைப்பி னுமி றைஞ்சி யெம்பி ராட்டிபா
னின்ற மாத ரைத்த னுது நேத்தி ரத்தி னேக்கலா
ளொன்று முன்னல் செய்தி லாளு லப்பி லெந்தை தொல்புகழ்
நன்று போற்றெ டுத்து நிற்ப நாட்ட நீரு குத்தரோ.

எம்பிராட்டி—எம்பெருமாட்டியாகிய உமாதேவியார், என்ற நாதனை பினும் இறைஞ்சி—என்றருளிச் செய்த சிவபெருமானைப் பின்னரும் வணங்கி, பால் நின்ற மாதரை தனுது நேத்திரத்தில் நோக்கலாள்—பக்கத்தே நின்ற பெண்களைத் தமது கண்களால் நோக்காதவராய், ஒன்றும் உன்னல் செய்திலாள்—மற்றொன்றை நினையாதவராய், எந்தை உலப்பு இல் தொல் புகழ் நன்று போற்றெடுத்து—எம்பெருமானுடைய அளவற்ற தொன்மையாகிய புகழ்களை எடுத்து நன்கு துதித்து, நாட்டம் நீர் உகுத்து நிற்ப—கண்ணீர் சொரிந்துகொண்டு நிற்ப. (27)

கண்டு பாங்க ராய மாதர் கன்னி யெம்மை நோக்கலாண்
மண்டு காத லந்த ணுளன் மாயம் வல்ல னேகொலோ
பண்டு நேர்ந்து ளாரை யுற்ற பான்மை போலு மேலியா
முண்டு தேரு மாற தென்று ளத்தி லைய மெய்தினுர்.

பாங்க ராய மாதர் கண்டு—பக்கத்தில் நின்ற தோழியர் கூட்டத்தினர் இச் செயலைக் கண்டு, கன்னி எம்மை நோக்கலாள்—நமது கன்னிகையானவர் நம்மைப் பார்க்கின்றுரில்லை; மண்டு காதல் அந்தணுளன் மாயம் வல்லன் கொல்—மிக்க காதலினையுடைய இவ்வந்தணர் மாயத்தில் வல்லவர் போலும்; பண்டு நேர்ந்துளாரை உற்ற பான்மை போலும்—இவர்கள் நிலைமை முன்னே எதிர்ப்பட்டார் இருவர் ஒருவரை ஒருவர் சந்தித்த தன்மையை ஒக்கும்; மேல் யாம் தேருமாறு உண்டு—மேலே யாம் ஆராய்தற் பாலது உளது; என்று உளத்தில் ஐயம் எய்தினுர்—என்றிவ்வாறு தம் மனத்தில் ஐயங் கொண்டார்கள். (28)

சிலதி யர்க்குள் விரைவி ரைந்து சிலவர் சென்று தக்கனென்
றுலகு ரைக்கு மொருவன் வைகு முறையு ணண்ணி யுன்மக
ணிலைமை யீது கேளெ ணுநி கழ்ந்த யாவு முறையினுல்
வலிது கூற மற்ற வன்ம னத்தி லோர்த லுற்றனன்.

சிலதியர்க்குள் சிலவர் விரைவிரைந்து சென்று—தோழியருட் சிலர் மிக விரைந்து சென்று, தக்கன் என்று உலகு உரைக்கும் ஒருவன் வைகும் உறையுள் நண்ணி—தக்கன் என்று உலகினர் கூறுகின்ற ஒரு தனி முதல்வன் வீற்றிருக்கின்ற இருப்பிடத்தை அடைந்து, உன் மகள் நிலைமை ஈது-உன்னுடைய புதல்வியின் நிலை இது, கேள் என—அதனைக் கேட்பாயாக என்று, நிகழ்ந்த யாவும் முறையினால் வலிது கூற—அங்கே நிகழ்ந்தன அனைத்தையும் முறையாக வலிந்து சொல்ல, அவன் மனத்தில் ஓர்தல் உற்றனன்—அத் தக்கன் மனத்தால் நடந்தவைகளை அறிவான் ஆயினான்.

அவன் கேளாமலே கூறினமையின் வலிது கூற என்றார். (29)

போத நீடு புந்தி யாற்பு லப்ப டத்தெ ரிந்துழி
யாதி யந்த மின்றி நின்ற வண்ணல் வந்த தாகலு
மேதி லாம கிழ்ச்சி பெற்றெ ழுந்து துள்ளி யான்பெறு
மாதை யங்க வற்க ளிப்பன் வதுவை யாற்றி யென்றனன்.

போத நீடு புந்தியால் தெரிந்துழி—ஞானம் மிகுந்த புத்தியினால் ஆராய்ந்த போது, புலப்பட—நடந்தவை அனைத்தும் புலம் ஆக, ஆதி அந்தம் இன்றி நின்ற அண்ணல் வந்தது ஆகலும்—ஆதியும் அந்தமும் இல்லாமல் நின்ற இறைவன்றானே அங்கு எழுந்தருளியது தோன்றுதலும், ஏது இலா மகிழ்ச்சி பெற்று—ஒப்பில்லாத மகிழ்ச்சி அடைந்து, எழுந்து துள்ளி—இருக்கை விட்டெழுந்து கூத்தாடி, யான் பெறும் மாதை—யான் பெற்ற புதல்வியை, அங்கு அவற்கு வதுவை ஆற்றி அளிப்பன் என்றனன்—அச் சிவபெருமானுக்குத் திருமணஞ் செய்து கொடுப்பேன் என்று கூறினான். (30)

உமை தவம்புரி படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—292

---

# திருமணப் படலம்

தொல்லையில் வதுவையந் தொழின டாத்திட
வொல்லுவ தெற்றையென் றுளங்கொண் டாய்வுழி
நல்லன யாவுமந் நாளி னண்ணலு
மெல்லையி லுவகைமிக் கேம்ப லெய்தினன்.

தொல்லையில் வதுவை அம் தொழில் நடாத்திட—பழைமையான வேத விதிப்படி திருமணமாகிய மங்கள காரியத்தைச் செய்தற்கு, ஒல்லுவது எற்றை என்று உளங்கொண்டு ஆய்வுழி—இசைந்தது எந்த நாள் என்று மனத்தினால் ஆராய்ந்தவிடத்து, அந்நாளில் நல்லன யாவும் நண்ணலும்—அந்நாளிற் றானே நட்சத்திரம் முதலிய யாவும் நல்லனவாய்ப் பொருந்தியிருத்தலும், எல்லை இல் உவகை மிக்கு—அளவற்ற மகிழ்ச்சி மிகுந்து, ஏம்பல் எய்தினன்—இறுமாப்படைந்தான். (1)

அண்ணலுக் கிப்பக லணங்கை யீவனென்
றுண்ணிக ழார்வமோ டுளத்திற் றூக்கியே
விண்ணவர் யாவரும் விரைந்து செல்லிய
துண்ணென வொற்றரைத் தூண்டி னனரோ.

இப்பகல் அண்ணலுக்கு அணங்கை ஈவன் என்று—இற்றைத் தினத்திற் சிவபெருமானுக்கு என் மகளை மணஞ்செய்து கொடுப்பேன் என்று, உள் நிகழ் ஆர்வமோடு உளத்தில் தூக்கி—உள்ளத்துள்ளே நிகழுகின்ற ஆராமையுடன் மனஉறுதி செய்து, விண்ணவர் யாவரும் விரைந்து செல்லிய—தேவர்கள் அனைவரும் விரைந்து வரும்பொருட்டு, ஒற்றரைத் துண்ணெனத் தூண்டினன்—தூதுவர்களை விரைவாக அனுப்பினன். (2)

தன்னக ரணிபெறச் சமைப்பித் தாங்கதற்
பின்னுற முன்னினும் பெரிது மோர்தக
மன்னுறு கோயிலை வதுவைக் கேற்றிடப்
பொன்னகர் நாணுறப் புனைவித் தானரோ.

தன் நகர் அணிபெறச் சமைப்பித்து—தனது நகரத்தை அழகுபெற அலங்கரிப்பித்து, ஆங்கதன் பின்னுற—அதற்குப் பின்னர், மன்னுறு கோயிலை—

தான் இருக்கும் மாளிகையை, பொன் நகர் நாணுற—சுவர்க்கமும் நாணும் படி, முன்னினும் பெரிதும் ஏர் தக வதுவைக்கு ஏற்றிட புனைவித்தான்—முன்னையினும் பெரிதுஞ் சிறப்பாகத் திருமணத்துக்கு ஏற்றவாறு அலங்கரிப்பித்தான். (3)

கடிவினை புரிதரக் காசின் ருக்கிய
படியறு திருநகர் பைய நீங்கியே
கொடியுறழ் மெல்லிடைக் குமரி பால்வரு
மடிகளை யணுகின னடிகள் போற்றியே.

கடிவினை புரிதர—கடிமணஞ் செய்யும்பொருட்டு, காசு இன்று ஆக்கிய—குற்றம் இல்லாமற் புனைவித்த, படிஅறு திரு நகர் பைய நீங்கி—ஒப்பில்லாத அழகிய நகரத்தை மெல்ல நீங்கி, கொடி உறழ் மெல்லிடைக் குமரிபால் வரும்—கொடிபோன்ற மெல்லிய இடையினையுடைய உமாதேவியாரிடம் எழுந்தருளியிருக்கின்ற, அடிகளை அடிகள் போற்றி அணுகினன்—கடவுளைத் திருவடிகளில் வணங்கி அணுகினன். (4)

அணுகின னண்ணனீ யணைந்து மற்றிவண்
மணநய வேட்கையான் மாது நோற்றன
ணணுகுதி யடியனே னகரின் பாலெனு
நுணுகிய கேள்வியா னுவன்று வேண்டவே.

அணுகினன்—அணுகி, அண்ணல் நீ இவண் அணைந்து நய மண வேட்கையால்—தேவரீர் இவ்விடத்துக்கு எழுந்தருளி நன்மையாகிய திருமணத்தைச் செய்யவேண்டுமென்கின்ற விருப்பத்தால், மாது நோற்றனள்—என் புதல்வி தவஞ்செய்தாள்; அடியனேன் நகரின் பால் அணுகுதி என—ஆகையினாலே அடியேனுடைய நகரத்தின்கண்ணே தேவரீர் எழுந்தருள்வீராக என்று, நுணுகிய கேள்வியான் நுவன்று வேண்ட—நுண்ணிய கேள்வியறிவினையுடையவனாகிய தக்கன் கூறி வேண்டுதல் செய்ய. (5)

இறையவ னன்றென வெழுந்து சென்றோராய்
நறைமலர் செறிகுழ னங்கை யாளொடு
மறல்கெழு மனத்தினன் மனையுற் ருனரோ
வறைதரு நூபுரத் தடிகள் சேப்பவே.

இறையவன் நன்று என ஒராய் எழுந்து சென்று—சிவபெருமான் நல்லது என்று அவ்விடத்தினின்றும் நீங்கி எழுந்து சென்று, நறை மலர் செறி குழல் நங்கையாளொடு—தேன் பொருந்திய மலர் செறிந்த கூந்தலையுடைய உமாதேவியாரோடு, அறை தரு நூபுரத்து அடிகள் சேப்ப—ஒலிக்கின்ற நூபுரம்

அணிந்த திருவடிகள் சிவப்ப, மறல் கெழு மனத்தினுன் மனை உற்ருன்—மயக்கம் பொருந்திய மனத்தினையுடைய தக்கனது மாளிகையுட் பிரவேசித் தருளினர்.

மறல் மறதியுமாம். நூபுரம் பாதகிண்கிணி. (6)

பூந்திரு நிலவிய பொருவில் கோயின்முன்
காந்தியொ டேகலுங் கடவுண் முன்னரே
வாய்ந்ததொ ரெண்வகை மங்க லங்களு
மேந்தின ரேந்திழை மார்க ளெய்தினர்.

பூந் திரு நிலவிய பொரு இல் கோயில் முன்—பொலிவாகிய இலக்குமி வாசஞ் செய்கின்ற ஒப்பற்ற மாளிகையின் எதிரில், காந்தியொடு ஏகலும்—சுயம்பிரகாசத்தோடு எழுந்தருளுதலும், கடவுள் முன்னர்—சிவபெருமானுக்கு முன்னிலையில், வாய்ந்தது ஓர் எண்வகை மங்கலங்களும் ஏந்தினர்—சிறப்பினை யுடையதாகிய எண்வகை மங்கலப் பொருள்களையும் ஏந்திக்கொண்டு, ஏந்திழை மார்கள் எய்தினர்—பெண்கள் வந்தார்கள். (7)

தையலர் மங்கலத் தன்மை நோக்கியே
வையக முதவிய மங்கை தன்னுட
னையனு முறையுளி னடைந்து தானெரு
செய்யபொற் பீடமேற் சிறப்பின் வைகினன்.

தையலர் மங்கலத் தன்மை நோக்கி—பெண்கள் ஏந்தி வந்த மங்கலப் பொருள்களின் மங்களகரமான இயல்புகளை நோக்கிக்கொண்டு, வையகம் உதவிய மங்கை தன்னுடன் ஐயனும்—உலகத்தை ஈன்ற மங்கையாகிய அம் மாதாவும் பிதாவாகிய தாமும், உறையுளின் அடைந்து—மாளிகையினுட் சென்று, தான் ஒரு செய்ய பொற் பீடமேல் சிறப்பின் வைகினன்—தாம் ஒரு செந்நிறம் பொருந்திய பொற்பீடத்தின்மீது சிறப்பாக எழுந்தருளி யிருந்தார்.

தன் சுட்டுப்பொருட்டு. உடன் உம்மைப்பொருட்டு. தான் சிவபெருமான். (8)

அன்னது காலையி லாற்று நோன்புடைக்
கன்னியை மறைக்கொடி கண்டு புல்லியே
தன்னுறு மந்திரந் தந்து மற்றவள்
பின்னலை மென்மெலப் பிணிப்பு நீக்கினள்.

அன்னது காலையில் ஆற்று நோன்புடைக் கன்னியை—அப்பொழுது செய்யப்படுகின்ற தவத்தினையுடைய கன்னிகையாகிய புதல்வியை, மறைக்கொடி

கண்டு புல்லி—மாதாவாகிய வேதவல்லி கண்டு தழுவி, தன்னுறு மந்திரம் தந்து—தனது மாளிகைக்கு அழைத்துக் கொண்டுவந்து, அவள் பின்னலை மென்மெல பிணிப்பு நீக்கினுள்—அத் தவப்புதல்வியாருடைய கூந்தலின் பின்னற் செறிவை மெல்ல மெல்ல நீக்குவாளாயினுள். (9)

சிற்பரை யோதியின் செறிவை யாய்ந்தபின்
பொற்புறு நானநெய் பூசிப் பூந்துவர்
நற்பொடி தீற்றியே நவையில் கங்கைநீர்
பற்பல குடங்கரின் பாலுய்த் தாட்டினுள்.

சிற்பரை ஓதியின் செறிவை ஆய்ந்த பின்—அருட் சத்தியாகிய உமா தேவியாருடைய கூந்தலின் சிக்கை நீக்கியபின், பொற்பு உறு நான நெய் பூசி—அழகுவாய்ந்த புழுகு கலந்த நெய்யைப் பூசி, பூந் துவர் நற் பொடி தீற்றி—பொலிவாகிய பத்துவகைத் துவரையும் நல்ல முப்பத்திரண்டுவகைச் சரக்குக்களாலான ஓமாலிகையையும் அக் கூந்தலுக்கு ஊட்டி, நவை இல் கங்கை நீர் பற்பல குடங்கரின்பால் உய்த்து—குற்றமில்லாத கங்காசலத்தைப் பலவாகிய குடங்களில் நிறைத்து, ஆட்டினுள்—அந்நீரினுல் திருமுழுக்காட்டினுள்.

ஓமாலிகை பொடி செய்யப்பட்டதாகலின் பொடி என்றூர். (10)

ஆட்டினன் மஞ்சன மணிய பூந்தொடை
சூட்டினள் பொற்கலை சூழ்ந்து பல்கலன்
பூட்டின ளெம்பிரான் புடையி லுய்த்தன
ளீட்டுறு முயிர்த்தொகை யீன்ற வாய்தனை.

மஞ்சனம் ஆட்டினள்—திருமுழுக்குச் செய்து, அணிய பூந்தொடை சூட்டினள்—அழகிய மலர்மாலையைச் சூட்டி, பொற்கலை சூழ்ந்து—பொன்னுடையைத் தரித்து, பல் கலன் பூட்டினள்—பலவகை ஆபரணங்களை அணிந்து, ஈட்டுறும் உயிர்த்தொகை ஈன்ற ஆய்தனை—வினைகளை ஈட்டுகின்ற உயிர்க் கூட்டங்களைப் பெற்றருளிய உலகமாதாவை, எம்பிரான் புடையில் உய்த்தனள்—எம் பரமபிதாவாகிய சிவபெருமானுக்குப் பக்கத்தில் இருக்கச் செய்தாள். (11)

மணவணி முற்றுறு மாது போந்துதன்
கணவன தொருபுடை கலந்த காலையிற்
பணைமுத லாகிய பல்லி யங்களு
மிணையற வியம்பின ரியாரு மேத்தவே.

மண அணி முற்றுறு மாது போந்து—திருமண அலங்காரம் முற்றுப் பெற்ற உமையம்மையார் சென்று, தன் கணவனது ஒரு புடை கலந்த காலையில்—தம் கணவருக்கு ஒருபக்கத்தே இருந்த சமயத்தில், யாரும் ஏத்த—அதனைக் கண்ணுற்ற யாவருந் துதிசெய்ய, பணை முதலாகிய பல் இயங்களும் இணை அற இயம்பினர்—அதேசமயத்தில் முரச முதலிய பல வாத்தியங்களையும் ஒப்பின்றி முழக்கஞ் செய்தார்கள். *(12)*

தூதுவ ருரைகொளீஇத் துண்ணென் றேகியே
மாதவன் முதலிய வானு ளோரெலாம்
போதினை வளைதரு பொறிவண் டாமென
வாதியை யடைந்தன ரடிப ணிந்துளார்.

மாதவன் முதலிய வானுளோர் எலாம்—திருமால் முதலிய தேவர்களனைவரும், தூதுவர் உரை கொளீஇ—தூதுவர் சொல்லிய வார்த்தையைக் கேட்டு, துண்ணென்று ஏகி—விரைந்து சென்று, அடி பணிந்துளார்—சிவபெருமானுடைய பாதங்களை வணங்கினவர்களாய், போதினை வளைதரு பொறி வண்டா மென—அலரும் பருவத்துப் புஷ்பத்தைச் சூழ்ந்து மொய்க்கின்ற புள்ளி பொருந்திய வண்டுகளைப் போல, ஆதியை அடைந்தனர்—அப்பெருமானை அணுகிச் சூழ்ந்து நின்றார்கள். *(13)*

வீழ்குறு மிழுதெனும் வெய்ய நோன்குரற்
காழ்கிளர் திவவுடைக் கடிகொள் யாழினை
யூழ்கிளர் கின்னர ருவண ரேந்துபு
கேழ்கிளர் மங்கல கீதம் பாடினார்.

வீழ்குறு இழுது எனும்—ஒழுகுகின்ற நெய்யின் வீழ்ச்சியைப்போலும், வெய்ய நோன் குரல்—வெய்ய வலிய தந்தியினையும், காழ் கிளர் திவவு உடை—வைரம் பொருந்திய வார்க்கட்டினையு முடைய, கடி கொள் யாழினை—காப்பமைந்த யாழினை, ஊழ் கிளர் கின்னரர் உவணர் ஏந்துபு—யாழ் வாசிக்கும் முறையான் மிக்க கின்னரருங் கருடரும் ஏந்தி, கேழ்கிளர் மங்கல கீதம் பாடினார்—விளக்கம் வாய்ந்த மங்கல கீதங்களைப் பாடினார்கள். *(14)*

கானுறு பஃறலைக் காவு கான்றிடு
தேனுறு விரைமல ரடிகள் சிந்துபு
வானவர் மகளிர்கள் வணங்கி வாழ்த்துரை
யானவை புகன்றன ரமலை பாங்கரில்.

கான் உறு பல் தலை காவு கான்றிடு—வாசனை மிகுகின்ற பல தலைகளையுடைய கற்பகச் சோலையில் உண்டான, தேனுறு விரை மலர் வானவர்

மகளிர்கள் அடிகள் சிந்துபு வணங்கி—தேன் பொருந்திய மணமுள்ள மலர் களைத் தேவ மகளிர்கள் திருவடிகளில் அர்ச்சித்து வணங்கி, அமலை பாங் கரில் வாழ்த்துரை யானவை புகன்றனர்—நின்மலையாகிய உமாதேவியாருக் குப் பக்கத்தில் நின்று மங்கல வாழ்த்துப் பாடல்களைப் பாடினுர்கள். (15)

எல்லைய தாகலு மிருந்து தக்கனுங்
கொல்லையின் மறைமொழி யுரைத்துத் தன்மனை
வல்லிபொற் சிரகநீர் மரபின் வாக்குற
மெல்லென வரனடி விளக்கி னுனரோ.

எல்லையது ஆகலும்—முகூர்த்தம் வருதலும், தக்கன் ஆங்கு இருந்து—தக்கன் அவ்விடத்தில் இருந்து, மனை வல்லி பொற் சிரக நீர் மரபின் வாக்குற—தனது மனைவியாகிய வேதவல்லி பொன்னுலான கரகத்தால் நீரை முறையானே வார்க்க, மறை மொழி ஒல்லை உரைத்து—வேத மந்திரத்தை விரைந்து சொல்லி, அரன் அடி மெல்லென விளக்கினுன்—சிவபெருமானுடைய திருவடிகளை மெல்லென்று விளக்கினுன்.

இன், சாரியை. (16)

விளக்கிய பின்றையில் விரைகொள் வீமுதற்
கொளப்படு பரிசெலாங் கொணர்ந்து மற்றவற்
குளப்படு பூசனை யுதவி மாதினை
யளித்திட வுன்னின னமரர் போற்றவே.

விளக்கிய பின்றையில்—திருவடிகளை விளக்கஞ் செய்த பின்பு, விரை கொள் வீ முதல் கொளப்படு பரிசு எலாம் கொணர்ந்து—வாசனை பொருந் திய புஷ்பம் முதலிய பூசைக்குரிய உபகரணங்களை யெல்லாங் கொண்டுவந்து, உளப்படு பூசனை உதவி—மன அன்போடு கூடிய பூசையைச் செய்து, அமரர் போற்ற—தேவர்கள் துதிக்க, அவற்கு மாதினை அளித்திட உன்னினன்—சிவபெருமானுக்குத் தன் மகளைக் கொடுக்கக் கருதினுன். (17)

சிற்கன வடிவினன் செங்கை யுள்ளுமை
நற்கர நல்குபு நன்று போற்றுதி
நிற்கிவ டன்னையா னேர்ந்த னன்னெனுப்
பொற்கர கந்தரு புனலொ டீந்தனன்.

சிற்கன வடிவினன் செங்கையுள்—ஞானகன வடிவினரான சிவபெருமா னுடைய செம்மையாகிய திருக்கரத்தின்மீது, உமை நற்கரம் நல்குபு—உமா தேவியாருடைய நல்ல திருக்கரத்தை வைத்து, நிற்கு இவள் தன்னை யான்

நேர்ந்தனன்—தேவரீருக்கு இப் பெண்ணை யான் தந்தேன், நன்று போற்றுதி எனா—நன்றாகப் பாதுகாத்தருள்க என்று கூறி, பொற்கரம் தரு புனலொடு ஈந்தனன்—பொன்னாலான கரகந் தருகின்ற நீரை வார்த்துத் தத்தஞ் செய்தான். (18)

மூர்த்தமங் கதனிடை முதல்வ னம்பிகை
சீர்த்திடு மணவணி தெரிந்து கைதொழூஉ
நீர்த்தொகை கதிரொடு நிலவு கண்டுழி
யார்த்தென வழுத்தின ரமரர் யாவரும்.

மூர்த்தம் அங்கு அதனிடை—அச் சுபமுகூர்த்த காலத்தில், அமரர் யாவரும்—தேவர்களெல்லாம், முதல்வன் அம்பிகை சீர்த்திடு மண அணி தெரிந்து—முதல்வராகிய சிவபெருமானதும் உமாதேவியாரதுஞ் சிறப்புப் பொருந்திய திருமணக் கோலத்தைத் தரிசித்து, கை தொழூஉ—கைகூப்பி வணங்கி, கதிரொடு நிலவு கண்டுழி நீர்த்தொகை ஆர்த்தென—சந்திரிகையோடு கூடிய பூரண சந்திரனைக் கண்டபோது சமுத்திரங்கள் ஆரவாரித் தாற்போல, வழுத்தினர்—ஆரவாரஞ் செய்து துதித்தார்கள். (19)

மாடுறு திசைமுகன் மணஞ்செய் வேள்வியிற்
கூடுறு கலப்பைகள் கொணர்ந்து நூன்முறை
நேடினன் சடங்கெலா நிரப்ப மான்முத
லாடவ ரிசைத்தன ரமலன் வாய்மையே.

மாடு உறு திசைமுகன்—பக்கத்திலிருந்த பிரமதேவர், மணஞ்செய் வேள்வியிற் கூடுறு கலப்பைகள் கொணர்ந்து—திருமண வேள்விக்குரிய உபகரணங்களைக் கொண்டுவந்து, நூல் முறை நேடினன்—வேத விதியை ஆராய்ந்து, சடங்கெலாம் நிரப்ப—கிரியைகள் எல்லாவற்றையும் நிறைவு செய்ய, மால் முதல் ஆடவர் அமலன் வாய்மை இசைத்தனர்—திருமால் முதலிய தேவர்கள் அமலன் வாய்மைகளாகிய வேதங்களை ஓதினார்கள். (20)

அன்னுழி யுருவமு மருவு மாவியு
முன்னுறு முணர்வுமா யுலகம் யாவிற்கு
நன்னயம் புணர்த்தியே நண்ணு நாயகன்
றன்னுரு வொளித்தன னருளின் றன்மையால்.

அன்னுழி—அப்பொழுது, உருவமும் அருவும் ஆய்—உருவமாயும் அருவமாயும் அருவுருவமாயும், ஆவியும் உன்னுறும் உணர்வுமாய்—ஆன்மாக்களாகியும் அவைகளால் அறியும் அறிவுமாய், உலகம் யாவிற்கும் நல் நயம் புணர்த்தியே நண்ணு நாயகன்—உலகம் முழுவதற்கும் நல்ல சுகத்தைச்

செய்துகொண்டேயிருக்கும் ஆன்ம நாயகராகிய சிவபெருமான், அருளின் தன்மையால் தன் உரு ஒளித்தனன்—திருவருள் விசேடத்தாலே தமது வடிவத்தை மறைத்தருளினார்.

அன்னுழி ஒளித்தனன் என்க. ஆய் முன்னும் கூட்டப்பட்டது. அருவும் உருவும் சொன்னமையின் அருவுரு வருவிக்கப்பட்டது. (21)

மறைந்தன னிருத்தலு மகிணற் காண்கிலா
ளறந்தனை வளர்க்குமெம் மன்னை நோற்றுமுன்
பெறும்பெரு நிதியினைப் பிழைத்து ளோரெனத்
துறந்தன ளுவகையைத் துளங்கி மாழ்கியே.

மறைந்தனன் இருத்தலும்—சிவபெருமான் மறைந்திருந்தபோது, அறந்தனை வளர்க்கும் எம் அன்னை—முப்பத்திரண்டு தருமங்களையும் வளர்த்தருளுகின்ற எமது மாதாவாகிய உமாதேவியார், மகிணன் காண்கிலாள்—தமது நாயகரைக் காணாதவராய், நோற்று முன் பெறும் பெரும் நிதியினைப் பிழைத்துளோர் என—தவஞ்செய்து முன்னர்ப் பெறும் பெரிய செல்வத்தினைப் பின்னர் இழந்தவர்களைப்போல, துளங்கி மாழ்கி உவகையைத் துறந்தனள்—நடுங்கி மயங்கி வருந்தி மகிழ்ச்சியை இழந்தார். (22)

பொருக்கென வெழுந்தனள் பூவின் மீமிசைத்
திருக்கிளர் திருமுதற் றெரிவை மாதர்க
ணெருக்குறு சூழல்போய் நிறங்கொ டீமுகத்
துருக்கிய பொன்னென வுருகி விம்மினாள்.

பொருக்கென எழுந்தனள்—விரைவாக இருக்கைவிட்டெழுந்து, பூவின் மீமிசை திருக்கிளர் திரு முதல் தெரிவை மாதர்கள் நெருக்கு உறு சூழல் போய்—தாமரை மலரின்மீது அழகு விளங்க இருக்கின்ற இலக்குமி முதலிய தேவப்பெண்கள் செறிந்திருக்கின்ற இடத்துக்குச் சென்று, நிறம் கொள் தீ முகத்து உருக்கிய பொன் என—நிறம் விளங்குகின்ற உலைமுகத்தக்கினியில் உருக்கிய பொன்னைப்போல, உருகி விம்மினாள்—உருகிப் பொருமினார். (23)

உயிர்த்தனள் கலுழ்ந்தன ளுணர்வு மாழ்கியே
யயர்த்தனள் புலர்ந்தன ளலமந் தங்கமும்
வியர்த்தனள் வெதும்பினள் விமலன் கோலமே
மயிர்த்தொகை பொடிப்புற மனங்கொண் டுன்னுவாள்.

உயிர்த்தனள்—பெருமூச்சுவிட்டு, கலுழ்ந்தனள்—அழுது, உணர்வு மாழ்கி அயர்த்தனள்—அறிவு அழிந்து மறந்து, புலர்ந்தனள்—புலர்ந்து, அலமந்து—

சுழன்று, அங்கமும் வியர்த்தனள்—சரீரமும் வியர்த்து, வெதும்பினள்—வெதும்பி, மயிர்த்தொகை பொடிப்புற—உரோமங்கள் பொடிப்புக்கொள்ள, விமலன் கோலமே மனங்கொண்டு உன்னுவாள்—விமலராகிய நாயகரின் திருக்கோலத்தையே மனத்திற்கொண்டு நினைப்பாராயினர். (24)

புரந்தரன் மாலயன் புலவர் யாவரு
நிரந்திடு மவையிடை நிறுக்கும் வேள்விவா
யிருந்தனன் மாயையா லிறைவன் றுண்ணெனக்
கரந்தன ஞதலிற் கள்வன் போலுமால்.

புரந்தரன் மால் அயன் புலவர் யாவரும்—இந்திரன் திருமால் பிரமா முதலிய தேவர்கள் யாவரும், நிரந்திடும் அவையிடை—நிறைந்த சபையில், நிறுக்கும் வேள்விவாய்—செய்யும் விவாக வேள்விக்கண், இருந்தவன் இறைவன்—இருந்தருளியவராகிய இறைவர், மாயையால் துண்ணெனக் கரந்தனன்—மாயையால் விரைந்து மறைந்தருளினுர், கள்வன் போலும்—அதனுல் அவர் வஞ்சம் உடையாரோ? (25)

எய்தியெற் கொண்டதோ ரிறைவன் றன்னையான்
கைதவ னேயெனக் கருத லாகுமோ
மெய்தளர் பான்மையின் வினையி னேனிவட்
செய்தவஞ் சிறிதெனத் தேற்ற லின்றியே.

எய்தி—வலிந்து வந்து, என் கொண்டது ஓர் இறைவன் தன்னை—என்னை மணஞ்செய்துகொண்ட ஒப்பில்லாத இறைவரை, மெய் தளர் பான்மையில் வினையினேன் யான் இவண் செய்தவம்—உடல் வருந்தும் வகையில் தீவினையேனுகிய யான் இவ்விடத்துச் செய்த தவம், சிறிது எனத் தேற்றல் இன்றி—அற்பம் என்று தெளிதலை விட்டு, கைதவனே எனக் கருதல் ஆகுமோ—வஞ்சகர் போலும் என்று கருதுதல் பொருந்துமோ? பொருந்தாதே. (26)

வேறு

என்றென் றுன்னி யுயிர்த்திரங்கு
மிறைவி செய்கை யெதிர்நோக்கி
மன்ற ஞறுங் குழல்வேத
வல்லி புல்லி மனந்தளரே
லுன்றன் கணவற் பெறும்வாயி
றவமே யின்னு முஞற்றுகென
நின்ற திருவு நாமகளும்
பிறரு மினைய நிகழ்த்தினரால்.

என்றென்று உன்னி உயிர்த்து இரங்கும் இறைவி செய்கை—என்றிவ்வாறு நினைத்து நெட்டுயிர்த்து இரங்குகின்ற இறைவியின் செய்கையை, எதிர் நோக்கி—உற்றுநோக்கி, மன்றல் நாறுங் குழல் வேதவல்லி—மணங் கமழும் கூந்தலினையுடைய வேதவல்லியானவள், புல்லி—அணைத்து, மனம் தளரேல்—மகளே மனந் தளராதே, உன் தன் கணவன் பெறும் வாயில்—உனது கணவனை நீ அடைதற்கு வழி, தவமே—தவமேயாகும், இன்னும் உஞற்றுக என—மேலும் அதனையே செய்க என்று கூற, நின்ற திருவும் நாமகளும் பிறரும்—அங்கே நின்ற திருமகளும் நாமகளும் மற்றைத் தேவமகளிரும், இனைய நிகழ்த்தினர்—இவ்வாறு கூறினார்கள். (27)

அன்னை வாழி இதுகேண்மோ
வகில முழுது மளித்தனையா
லென்ன பொருளு நின்னுருவே
யாண்டு நீங்கா நின்கணவன்
றன்னை மறைக்கு மறையுளதோ
தவத்தை யளிப்பா னினைந்தனையோ
வுன்ன லரிதா நுமதாடன்
முழுதும் யாரே யுணர்கிற்பார்.

அன்னை இது கேள்—உலகமாதாவே இதனைக் கேட்பாயாக, அகிலம் முழுதும் அளித்தனை—உலகம் முழுவதையும் நீயே பெற்றாய்; என்ன பொருளும் நின் உருவே—எல்லாப் பொருளும் உனது வடிவமேயாம்; யாண்டும் நீங்கா நின் கணவன் தன்னை—எவ்விடத்தும் நீங்காது நிறைந்த உன் நாயகரை, மறைக்கும் மறை உளதோ—நீ காணாதே மறைக்கும் மறைப்புமொன் றுள தாமோ; தவத்தை அளிப்பான் நினைந்தனையோ—தவத்தைப் பாதுகாத்தற்குத் திருவுளங் கொண்டாய் போலும்; நுமது ஆடல் உன்னல் அரிது—நாயகரும் நீயும் செய்யுந் திருவிளையாடல் எம்மனோரால் நினைத்தற் கரிதாம்; முழுதும் உணர்கிற்பார் யார்—நும்மியல்பை முற்றும் உணரவல்லார் யாவர்?

வாழி அசை. (28)

வாக்கின் மனத்திற் றொடர்வருநின்
மகிணன் றனையு முன்றனையு
நோக்க முற்றேந் தஞ்சமென
நுவறல் செய்யா வினையாவும்
போக்க லுற்றேந் தோற்றமுறும்
புரையுந் தீர்ந்தோம் போதமனந்
தேக்க லுற்றே முய்ந்துமியாஞ்
செய்யுந் தவமுஞ் சிறிதன்றே.

வாக்கின் மனத்தின் தொடர்வு அரும்—வாக்கினுலும் மனத்தினுலுந் தொடர்தற்கரிய, நின் மகிணன் தனேயும் உன் தனேயும்-உன்னுடைய நாயகரையும் உன்னேயும், நோக்கம் உற்ருேம்—தரிசிக்கப்பெற்ருேம்; தஞ்சம் என நுவறல் செய்து வினே யாவும் போக்கல் உற்ருேம்—நுமக் கடைக்கலம் என்று கூறி எங்கள் வினேகள் முழுவதையும் போக்கிவிட்டோம்; தோற்றம் உறும் புரையும் தீர்ந்தோம்—பிறவி எடுக்குங் குற்றமும் நீங்கினேம்; மனம் போதம் தேக்கல் உற்ருேம்—மனத்தில் ஞான நிறைவு பொருந்தப்பெற்ருேம்; உய்ந்தும்—இவ்வாற்ருல் உய்தி கூடினேம்; யாம் செய்யும் தவமும் சிறிதன்று—யாம் செய்த தவமேயன்றி இனிச் செய்யுந் தவமும் அற்பம் அன்று.

உய்ந்தோமாதலின் இனிச் செய்யுந் தவமும் அற்பம் ஆகா தென்பதாம். (29)

என்ற வியம்பி வாழ்த்தெடுப்ப
விறைவி யவர்க்கண் டினிதருள்செய்
தன்ஞர் பொய்த லொருவிப்போ
யருமா தவமே புரிவாளாய்
முன்ஞ முன்னேக் கடிமாட
முயன்று போந்தா ளிவ்வனேத்து
நன்ஞ ரணனே முதலானேர்
நோக்கி நனிவிம் மிதரானர்.

என்ஞ இயம்பி வாழ்த்து எடுப்ப—என்று கூறி வாழ்த்துச் சொல்ல, இறைவி அவர்க்கண்டு இனிது அருள் செய்து—உமாதேவியார் அவர்களே நோக்கி இனிதாகத் திருவருள் செய்து, அன்ஞர் பொய்தல் ஒருவிப்போய்—அம் மகளிர்கூட்டத்தை நீங்கிச் சென்று, அரு மா தவமே புரிவாளாய்—அரிய சிறந்த தவத்தையே செய்பவராய், முன்ஞ முயன்று—அத் தவத்தினேயே திருவுளங்கொண்டு, முன்னேக் கடி மாடம் போந்தாள்—முன்னிருந்து தவஞ்செய்த காவல் பொருந்திய தவச்சாலேயை அடைந்தார்; இவ் அனேத்தும்—இவையனேத்தையும், நல் நாரணனே முதலானேர் நோக்கி—நல்ல திருமால் முதலியவர்கள் கண்டு, நனி விம்மிதர் ஆனர்—மிக ஆச்சரியம் அடைந்தார்கள். (30)

எங்குற் றனன்கொ லிறையென்பா
ரிஃதோர் மாய மெனவுரைப்பார்
மங்கைக் கொளித்த தென்னென்பார்
வாரி காண்டு மேலென்பா
ரங்கித் தகைய பலபலசொற்
றலமந் தேங்கி யதிசயித்துக்
கங்குற் போதின் மாசூர்ந்த
கதிர்போன் மாழ்கிக் கவலுற்ருர்.

இறை எங்கு உற்றனன் என்பார்—சிவபெருமான் எங்கே போயினரோ என்பார் சிலர்; இஃது ஓர் மாயம் என உரைப்பார்—இஃதொரு மாயம் இருந்தவாறு என்பார் சிலர்; மங்கைக்கு ஒளித்தது என் என்பார்—தமது தேவியாருக்கு ஒளித்தது என்னே என்பார் சிலர்; மேல் வாரி காண்டும் என்பார்—மேல் வரக்கடவதை இருந்து பார்ப்போம் என்பார் சிலர்; அங்கு இத்தகைய பல பல சொற்று—இங்ஙனமாக அங்கே இவைபோல்வன பலப்பல கூறி, அலமந்து ஏங்கி அதிசயித்து—கலங்கி ஏங்கி ஆச்சரியப்பட்டு, கங்குற் போதில் மாசு ஊர்ந்த—இராக்காலத்தில் மேகத்தால் மூடப்பட்ட, கதிர் போன்று—சந்திரனைப் போன்று, மாழ்கிக் கவல் உற்றார்—ஒளிமடங்கிக் கவலை அடைந்தார்.

மாசு—மேகம். மாழ்குதல்—மயங்குதல்; இங்கே ஒளிகுன்றுதல். *(31)*

நோக்குற் றனைய பான்மைதனை
நொய்திற் றக்க னனிகனன்று
தீக்கட் கறங்க வெய்துயிர்த்துச்
செம்பொற் கடகக் கைபுடைத்து
மூக்கிற் கரந்தொட் டகம்புழுங்க
முறுவல் செய்து முடிதுளக்கி
யாக்கத் தொடியாம் புரிவதுவை
யாற்ற வழகி தாமென்றான்.

தக்கன் அனைய பான்மைதனை நொய்தில் நோக்குற்று—தக்கன் அத்தன்மைகளையெல்லாம் விரைந்து நோக்கி, நனி கனன்று—மிகவுங் கோபங்கொண்டு, தீ கண் கறங்க வெய்துயிர்த்து—தீகாலுங் கண்கள் சுழலச் சுடுமூச்சு விட்டு, செம் பொன் கடகக் கை புடைத்து—செம்பொன்னாலான கடகமணிந்த கையைத் தட்டி, மூக்கில் கரம் தொட்டு—மூக்கின்மீது கைவிரல் வைத்து, அகம் புழுங்க முறுவல் செய்து—மனம் புழுங்கச் சிரித்து, முடி துளக்கி—தலையசைத்து, ஆக்கத்தொடு யாம் புரி வதுவை—அட்ட ஐசுவரியத்தோடு நாம் செய்த கலியாணம், ஆற்ற அழகிதாம் என்றான்—மிகவும் அழகாயிருக்கிறது என்று கூறினான். *(32)*

வரந்தா னுதவும் பெற்றியினான்
மற்றென் மகடூஉ வயின்வாரா
விரந்தா னதனை யான்வினவி
யியல்பின் வதுவை முறைநாடி
நிரந்தார் கின்ற சுரர்காண
நெறியா னேர்ந்தே னேர்ந்ததற்பின்
கரந்தான் யாரு மானமுற
நவையொன் றென்பாற் கண்டானே.

வரம் தான் உதவும் பெற்றியினுல்—வரம்வேண்டும் முறையாக, என் மகடூஉ வயின் வாரா—என் மகளிடம் வந்து, இரந்தான்—தன்னை மணஞ் செய்துகொள்ளும்படி இரந்தான், அதனை யான் வினவி—அதனை யான் கேட்டு, இயல்பின் வதுவை முறை நாடி—உலகியலாகச் செய்யப்படும் விவாக முறையை ஆராய்ந்து, நிரந்து ஆர்கின்ற சுரர் காண—செறிந்து நிறைந்த தேவர்கள் சான்ருக, நெறியால் நேர்ந்தேன்—முறையாக மணஞ்செய்து கொடுத்தேன்; நேர்ந்ததன்பின் யாரும் மானம் உற கரந்தான்—கொடுத்தபின் யாவரும் வெட்கம் உறும்படி மறைந்தான்; நவை ஒன்று என்பால் கண்டானே—யாதொரு குற்றத்தையாயினும் என்னிடத்துக் கண்டானே?

'வரம் தான் உதவும் பெற்றியினுல்' என்பதற்கு முன் மானத வாவியிலே தவஞ் செய்தபொழுது தான் எனக்குத் தந்த வரத்தின் தன்மையினுல் என்றுரைப்பினு மமையும். (33)

புனையுந் தொன்மைக் கடிவினையைப்
புன்மை யாக்கி யூறுபுணர்த்
தெனையும் பழியின் மூழ்குவித்தே
யிறையு மெண்ணு தொளித்தானே
யனையுந் தாதை யுந்தமரு
மாரு மின்றி யகன்பொதுவே
மனையென் ருடு மொருபித்தன்
மறையோ ஞகின் மயல்போமோ.

புனையும் தொன்மைக் கடிவினையைப் புன்மை ஆக்கி—செய்யாநின்ற பழைமையாகிய திருமணத்தை இழிவாக்கி, ஊறு புணர்த்து—இடையூறு செய்து, எனையும் பழியின் மூழ்குவித்து—என்னையும் பழியில் மூழ்கச்செய்து, இறையும் எண்ணுது—சிறிதும் மதியாது, ஒளித்தானே—மறைந்தானே; அனையும் தாதையும் தமரும் ஆரும் இன்றி அகன் பொதுவே மனையென்று ஆடும் ஒரு பித்தன்—தாயுந் தந்தையுஞ் சுற்றத்தினரும் ஆகிய எவருமின்றி விசாலமான அம்பலமே தனது வீடென்று கூத்தாடுகின்ற ஒரு பித்தன் அவன்; மறையோன் ஆகில் மயல் போமோ—மறையோனுய்விடின் அவனுக்கு அந்தப் பித்தம் நீங்குமா?

பொது மயானமுமாம். மறையோன், மறைதலையுடையோன், பிரா மணன் என இரு பொருள் பயந்து நின்றது. எவ்வாற்ருனும் அவன் பித்தனே பித்தன் என்ருனும். (34)

ஆயிற் றீதே யவனியற்கை
யறிந்தே னிந்நாள் யானென்று
தீயுற் றெனவே யுளம்வெதும்பித்
திருமான் முதலாந் தேவர்தமைப்

போயுற் றிடுநும் புரத்தென்று
போக விடுத்துப் புனிதன்செய்
மாயத் தினையே யுன்னியுன்னி
வதிந்தான் செற்றம் பொதிந்தானே.

ஆயின் அவன் இயற்கை தீதே—ஆராயுமிடத்து அந்தப் பித்தனின் இயற்கை தீயதே, யான் இந்நாள் அறிந்தேன் என்று—யான் இதுபோழ்து உள்ளவாறறிந்தேன் என்று கூறி, தீ உற்றென உளம் வெதும்பி—தீப்பட்டாற் போல மனங் கொதித்து, திருமால் முதலாம் தேவர் தமை நும்புரத்துப் போயுற்றிடும் என்று போகவிடுத்து—திருமால் முதலிய தேவர்களை உங்கள் நகரங்களுக்குப் போங்கள் என்று அனுப்பிவிட்டு, புனிதன் செய் மாயத் தினையே உன்னி உன்னி—புனிதராகிய சிவபெருமான் செய்த மாயத்தையே நினைந்து நினைந்து, செற்றம் பொதிந்தான் வதிந்தான்—மன வயிரத்தினலே பொதியப்பெற்றோனாய் இருந்தான். (35)

பொன்னார் மேனிக் கவுரிமுன்னைப்
பொலன்மா ளிகையிற் போந்துலப்பின்
மின்னார் செறிந்த பண்ணையுடன்
மேவி யங்கண் வீற்றிருந்து
பன்னா ளீசன் றனையெய்தப்
பரிந்து நோற்கப் பண்ணவனோர்
நன்னா ளதனிற் றாபதன்போ
லடைந்தா னவட னிடந்தானே.

பொன்னார் மேனிக் கவுரி—கிளிச்சிறை என்னும் பசும் பொன் போன்ற மேனியையுடைய கௌரியாகிய உமையம்மையார், முன்னைப் பொலன் மாளிகையிற் போந்து—முன்னர்த் தவஞ்செய்த அழகிய தவச்சாலைக்கட் சென்று, உலப்பு இல் மின்னார் செறிந்த பண்ணையுடன் மேவி—அளவற்ற செறிந்த மின்னலை ஒத்த மகளிர் கூட்டத்தோடு பொருந்தி, அங்கண் வீற்றிருந்து—அங்கே இருந்து, ஈசன் தனை எய்தப் பரிந்து—சிவபெருமானை அடையும்படி விரும்பி, பல்நாள் நோற்க—பல நாள் தவஞ்செய்ய, ஓர் நல் நாள் அதனில்—ஒரு நல்ல தினத்தில், பண்ணவன் தாபதன் போல் அவள் தன் இடம் நடந்தான்—சிவபெருமான் ஒரு தவசியைப்போல வேடம்பூண்டு அவ்வுமாதேவியார் தவஞ் செய்யும் இடத்துக்கு நடந்தருளினார்.

தாபதன் ஈண்டுக் கபாலி. தான், ஏ அசை. (36)

நலனேந் தியவெண் டலைக்கலனு
நறிய களப நீற்றணியுங்
கலனேந் தியகண் டிகைதொடுத்த
கவின்சேர் வடமுங் கடிப்பிணைய

நிலனேந் தியதா ளிடை-மிழற்று
நீடு மறையின் பரியகமும்
வலனேந் தியசூ லமும்பின்னல்
வனப்புங் காட்டி வந்தனனே.

நலன் ஏந்திய வெண் தலைக் கலனும்—பிரம விஷ்ணுக்களின் நன்மையின் பொருட்டு ஏந்திய வெண்மையாகிய சிர கபாலமாகிய பிக்ஷாபாத்திரமும், நறிய களப நீற்றணியும்—மணம் பொருந்திய கலவைச் சாந்தோடு கூடிய விபூதிப் பூச்சும், கலன் ஏந்திய—ஆபரணமாக அணிந்த, கவின்சேர் கண்டிகை தொடுத்த வடமும்—அழகிய உருத்திராக்க வடமும், கடிப் பிணையும்—காதணியும், நிலன் ஏந்திய தாளிடை—உலகுக்கு ஆதாரமாகிய பாதங்களில், மிழற்றும் நீடு மறையின் பரியகமும்—ஒலிக்கின்ற உயர்ந்த வேதச் சிலம்பும், வலன் ஏந்திய சூலமும்—வலக்கரத்திலே தாங்கிய சூலப்படையும், பின்னல் வனப்பும்—சடையின் அழகும், காட்டி—ஆகிய வடிவத்தைக் காட்டி, வந்தனன்—எழுந்தருளினர்.

தலைக்கலன் தலைமாலையுமாம். (37)

## வேறு

வந்துமை முற்பட வந்தவ னைக்கண்
டெந்தை பிராற்கினி யாரிவ ரென்னுச்
சிந்தனை செய்தெதிர் சென்றுகை கூப்பி
யந்தரி போற்றின ளன்புறு நீரால்.

வந்து—இத்தகைய கோலத்தோடு எழுந்தருளி, உமை முற்பட—உமாதேவியாருக்கு முன்னிலையிலே தோன்ற, வந்தவனைக் கண்டு—வந்த அந்தக் காபாலரைத் தரிசித்து, இவர் எந்தை பிராற்கு இனியார் என்னு சிந்தனை செய்து—இவர் எம் பரமபிதாவாகிய சிவபெருமானுக்கு இனியவர் என்று கருதி, அந்தரி எதிர் சென்று கைகூப்பி—உமாதேவியார் எதிர்சென்று கைகூப்பி, அன்புறு நீரால் போற்றினள்—அன்பு மிகுகின்ற இயல்பானே துதித்தார். (38)

பற்றெடு சென்று பராய்த்தொழு மெல்லைப்
பெற்ற மதன்மிசை பெண்ணிட மன்றி
மற்றுள தொல்வடி வத்தொடு நித்த
னுற்றன னவ்விடை யொண்டொடி காண.

பற்றெடு சென்று பராய்த் தொழும் எல்லை—ஆராமையோடு எதிர் சென்று துதித்து வணங்குஞ் சமயத்திலே, பெற்றம் அதன் மிசை—இடப வாகனத்தின்மீது, இடம் பெண் அன்றி—இடப்பாகத்தில் சத்தி இல்லாமல், நித்தன் உள தொல் வடிவத்தொடு—நித்தியராகிய சிவபெருமான் தாமாந்

தன்மை அறிதற் குரியதாயுள்ள பழையதாகிய திருவடிவத்தோடு, ஒண் தொடி காண அ இடை உற்றனன்—ஒள்ளிய வளையலையணிந்த தாக்ஷாயணி யாகிய உமாதேவியார் காணும்படி அவ்விடத்தில் வெளிப்பட்டார். (39)

பார்ப்பதி யாகிய பாவை நுதற்க
ணாற்புய னென்வயி னண்ணின னென்னு
வேற்புறு சிந்தைகொ டின்ன லிகந்தே
மேற்படு மோகையின் வீற்றின ளானாள்.

பார்ப்பதியாகிய பாவை—உமாதேவியார், நுதற்கண் நாற்புயன் என் வயின் நண்ணினன் என்னு—நெற்றிக்கண்ணையும் நான்கு புயங்களையு முடைய சிவபெருமான் என்பால் எளிவந்தருளினு ரென்று, ஏற்புறு சிந்தை கொடு— அப்பெருமான்பால் இசைவு மிக்கு ஒன்றிய மனத்தையுடையவராய், இன் னல் இகந்து—துன்பங்களைக் கடந்து, மேற்படும் ஓகையின் வீற்றினள் ஆனுள்— மேற்பட்டெழுகின்ற உவகைப்பெருக்கில் மூழ்கியவர் ஆயினர். (40)

பன்முறை வீழ்ந்துப ணிந்துப ராவி
யென்முன முந்தையி கந்தனை யின்றிப்
புன்மையை நீக்குதி போந்தனை கொல்லோ
சின்மய வென்றெதிர் சென்றுரை செய்தாள்.

பன்முறை வீழ்ந்து பணிந்து பராவி—பலமுறை விழுந்து வணங்கித் துதித்து, என்முனம் முந்தை இகந்தனை—என் முன்னிலையில் முன்னர் என்னைக் கைவிட்டு மறைந்தருளினீர்; இன்று இப் புன்மையை—இப்பொழுது என்னை இகத்தற்குக் காரணமாய் என்பாலுள்ள இச் சிறுமையை, நீக்குதி போந்தனை கொல்—நீக்கியருள்வீராய் எழுந்தருளினீர் போலும்; சின் மய என்று—ஞான மயமானவரே என்று, எதிர் சென்று உரை செய்தாள்—எதிர்சென்று குறை யிரந்து கூறினர். (41)

அம்முறை செப்பு மணங்கு தனைக்கூய்
மைம்மலி கண்டன் மலர்க்கர மோச்சித்
தெம்முனை சாடுறு சீர்விடை மேற்கொண்
டிம்மென வேத னிடத்தினில் வைத்தான்.

அம்முறை செப்பும் அணங்குதனைக் கூய்—அவ்வண்ணங் கூறும் உமா தேவியாரை வருக என்றழைத்து, மைம் மலி கண்டன் மலர்க் கரம் ஓச்சி— நீலகண்டரான சிவபெருமான் மலர்போன்ற திருக்கரத்தினை நீட்டி, தெம் முனை சாடுறு சீர் விடைமேற்கொண்டு—பகை முனையை அழிக்கின்ற சிறப்புப்

பொருந்திய இடபத்தின்மீது இவரும்படி செய்து, இம்மென தன் இடத்தினில் வைத்தான்—விரைவாகத் தமது இடப்பாகத்தில் இருத்தியருளினர். (42)

நீல்விட மேயின னேரிழை யோடும்
பால்விடை யூர்ந்துப டர்ந்தனன் வெள்ளி
மால்வரை யேகினன் மற்றவள் பாங்கர்
வேல்விழி மாதர்வி ரைந்தது கண்டார்.

நீல் விடம் மேயினன்—நீலநிறமான விடத்தைக் கண்டத்திற் பொருந்தியவராகிய சிவபெருமான், நேரிழையோடும்—உமாதேவியாருடன், பால் விடை ஊர்ந்து படர்ந்தனன்—வெள்ளிய இடபத்தை ஊர்ந்து சென்று, வெள்ளி மால்வரை ஏகினன்—பெருமை பொருந்திய திருக்கைலாச மலையை அடைந்தார்; அவள் பாங்கர் வேல் விழி மாதர்—அந்த உமாதேவியாரின் பக்கத்து நின்ற வேல் போன்ற கண்களையுடைய சேடியர்கள், விரைந்தது கண்டார்—பிராட்டி பெருமானுடன் விரைந்து சென்றதனைக் கண்டார்கள். (43)

இக்கென வுட்கி யிரங்கின ரேகித்
தக்க னிருந்திடு சங்கமு னுகிச்
செக்க ரெனத்திகழ் செஞ்சடை யண்ணல்
புக்கன னுலொரு புண்ணிய னேபோல்.

இக்கு என உட்கி—சாறுபோன உள்ளீடற்ற கரும்பு போல மனம் உட்கி, இரங்கினர் ஏகி—இரங்கிக்கொண்டு சென்று, தக்கன் இருந்திடு சங்கம் முன் ஆகி—தக்கன் இருக்குஞ் சபைமுன் அணுகி, செக்கர் எனத் திகழ் செஞ்சடை அண்ணல்—செவ்வானம்போல விளங்குகின்ற சிவந்த சடையினையுடைய சிவ பெருமான், ஒரு புண்ணியன் போல் புக்கனன்—ஒரு முனிவர் போலத் தவச் சாலையை அடைந்தார். (44)

கண்டன ணின்மகள் கைதவ மோரா
ளண்டினள் சேர்தலு மாயவன் வல்லே
பண்டை யுருக்கொடு பாற்பட வன்னுட்
கொண்டுசெல் வானிது கூறுவ தென்றுர்.

நின்மகள் கண்டனள்—உனது மகள் கண்டு, கைதவம் ஓராள்—கபடத்தை உணராமல், அண்டினள் சேர்தலும்—அணுகுதலும், ஆயவன்—அந்த வேடதாரி, வல்லே பண்டை உரு கொடு—விரைந்து பழைய உருவத்தை எடுத்துக் கொண்டு, அன்னுள் பாற்படக் கொண்டு செல்வான்—அவ்வுமையைப் பக்கத்தில் இருத்திக்கொண்டு செல்வாராயினர்; இது கூறுவது என்றுர்—இது ஈண்டு யாம் விண்ணப்பிப்பது என்றுர்கள். (45)

பாங்கிய ரின்ன பகர்ந்தன கேளாத்
தீங்கனன் மீமிசை தீயதொர் தூநெய்
யாங்குபெய் தென்ன வளப்பில செற்றந்
தாங்கி யுயிர்ப்பொடு தக்க னிருந்தான்.

பாங்கியர் இன்ன பகர்ந்தன கேளா—பாங்கியர்கள் இவ்வாறு கூறியவைகளைக் கேட்டு, தீங்கனல் மீமிசை—எரிகின்ற அக்கினியின்மீது, ஆங்கு—எரியும்போது, தீயது ஓர் தூநெய் பெய்தென்ன—உருக்கியதும் மிகத் தூயதுமாகிய நெய்யைச் சொரிந்தா லெவ்வாறுமோ அவ்வாறு, அளப்பு இல செற்றம் தாங்கி—அளவற்ற கோபங் கொண்டு, உயிர்ப்பொடு—நெட்டுயிர்ப்போடு, தக்கன் இருந்தான்—தக்கன் என்பவன் இருந்தான்.

தீக்கனல் எதுகை நோக்கித் தீங்கனல் என்றாயிற்று. (46)

அக்கணம் வானவ ராயின ரெல்லாந்
தொக்கனர் வந்து தொழுங்கட னாற்றிப்
பக்கம துடுப ராவினர் வைகத்
தக்க னவர்க்கிவை சாற்றுத லுற்றான்.

அக்கணம் வானவ ராயினர் எல்லாம் தொக்கனர் வந்து—அப்பொழுது தேவர்களெல்லாங் குழுமி வந்து, தொழும் கடன் ஆற்றி—தொழுதலாகிய கடனைச் செய்து, பக்கமதூடு பராவினர் வைக—பக்கத்திலே துதிசெய்து கொண்டிருக்க, அவர்க்கு இவை தக்கன் சாற்றுதல் உற்றான்—அத் தேவர்களுக்கு இவைகளைத் தக்கன் சொல்லுவான் ஆயினான். (47)

என்புகல் வேனினி யென்மக டன்னை
யன்புற வேட்டரு ளாலமி டற்றோன்
மன்புனை யுங்கடி மன்ற லியற்று
முன்பு கரந்தனன் முன்னரி தாகி.

இனி என் புகல்வேன்—யான் இனி என்ன சொல்லுவேன், என் மகள் தன்னை அன்பு உற வேட்டருள் ஆல மிடற்றோன்—என் புதல்வியை விருப்போடு மணந்த நீலகண்டனாகிய சிவன், மன் புனையும் கடி மன்றல் இயற்று முன்பு—பெரிதும் அலங்கரித்துச் செய்யும் மணச்சடங்கு நிறைவேறுதற்கு முன்பு, முன் அரிதாகிக் கரந்தனன்—யாவருக்கும் எதிரிலே தன் வடிவங் காணுதற் கரிதாகி மறைதலைச் செய்தனன். (48)

அற்றல தின்றுமெ னுடைவள் பாங்கிற்
கற்றை முடிக்கொள் கபாலி யெனச்சென்
றுற்றன னென்மு னுருமை லொளித்தான்
பற்றின னன்னவ ளைப்படர் கின்றான்.

அற்று அலது—அத்தன்மையே யல்லாமல், இன்றும் என் ஆடவள் பாங்கில்—இன்றும் என் மகளிடம், கற்றை முடிக்கொள் கபாலி எனச் சென்று உற்றனன்—தொகுதியான முடியினை யுடைய காபால வேடதாரி போலச் சென் றடைந்து, என்முன் உறுமல் ஒளித்தான்—என்னெதிரில் வாராமல் மறைந்து, அன்னவளைப் பற்றினன் படர்கின்றான்—அவளைக் கைப்பற்றிக்கொண்டு செல்லு கின்றான். (49)

அன்னையு மத்தனு மார்வமொ டீய
மன்னிய கேளிர் மகிழ்ந்தனர் வாழ்த்தப்
பின்னர் மகட்கொடு போர்ந்தில னீன்றோர்
தன்னை மறைத்திது செய்வது சால்போ.

அன்னையும் அத்தனும் ஆர்வமொடு ஈய—மாதாவும் பிதாவும் அன்போடு தத்தஞ் செய்ய, மன்னிய கேளிர் மகிழ்ந்தனர் வாழ்த்த—நெருங்கிய சுற்றத் தவர் மகிழ்ந்து வாழ்த்த, பின்னர்—அதன்பிறகு, மகள் கொடு போர்ந்திலன்—மகளை அழைத்துக்கொண்டு முறைப்படி சென்றானல்லன், ஈன்றோர் தன்னை மறைத்து இது செய்வது சால்போ—பெற்றோரை மறைத்து இவ்வாறு செய்வது சான்றாண்மையாகுமா? (50)

இங்கிது போல்வன யாவர்செய் கிற்பார்
சங்கர னேலிது தான்செய லாமோ
நங்கள் குலத்தை நவைக்க ணுறுத்தா
னங்கது மன்றியென் னாணையு நீத்தான்.

இங்கு இது போல்வன யாவர் செய்கிற்பார்—எனது ஆஞ்ஞைக்குட்பட்ட இங்கே இதுபோல்வன கருமத்தை யாவரே செய்ய வல்லவர்?, தான் சங்கரனேல்—தான் சுகத்தைச் செய்பவன் என்னும் பெயருடையனே யானால், இது செயல் ஆமோ—இவ்வாறு செய்தல் ஆகாதே; நங்கள் குலத்தை நவைக்கண் உறுத்தான்—நமது குலத்தைக் குற்றத்தின்கட் படுத்தினான்; அங்கு அதும் அன்றி—இங்ஙனமாத லன்றி, என் ஆணையும் நீத்தான்—என் ஆணையை யுங் கடந்தான். (51)

### வேறு

இரந்தனன் சிவனெனு மேத மெங்கணு
நிரந்தது மற்றது நிற்க விவ்விடை
கரந்தன னென்பதோ ருரையுங் காசினி
பரந்தது வேறுமோர் பழியுண் டாயதே.

சிவன் எங்கணும் இரந்தனன் எனும் ஏதம் நிரந்தது—சிவன் எங்கும் பிக்ஷை வேண்டி இரந்தான் என்கின்ற குற்றம் முன்னமே நிறைந்துள்ளது; அது நிற்க—அது அவ்வாறிருக்க; இவ்விடை கரந்தனன் என்பது ஓர் உரையும் காசினி பரந்தது—இவ்விடத்திற் கரந்தான் என்கின்றதொரு வார்த்தையும் உலகிற் பரவியது; வேறும் ஓர் பழி உண்டாயது—அந்த இரண்டன்மேல் மற்றுமொரு பழியும் இப்பொழுது உளதாயது.

அப்பழியாவது களவு. (52)

பண்டொரு பாவையைப் பரிந்து மன்றல்வா
யொண்டொடிச் செங்கையி னுதக மேவுறக்
கொண்டில னென்பதுங் கொள்ளு நீரரைக்
கண்டில னென்பதுங் காட்டி னனரோ.

பண்டு ஒரு பாவையை—முன்பு ஒரு பெண்ணை, பரிந்து—விரும்பி, மன்றல் வாய்—திருமணச் சடங்கில், ஒண் தொடிச் செங்கையில்—ஒள்ளிய கங்கணம் அணிந்த சிவந்த கையில், உதகம் மேவுற—தாரைநீரோடு பொருந்த, கொண் டிலன் என்பதும்—ஏற்றுப் பழகாதவன் என்பதையும், கொள்ளும் நீரரை—அவ்வாறு முறையானே ஏற்கும் இயல்புடையாரை, கண்டிலன் என்பதும்—கண்டும் அறியாதவன் என்பதையும், காட்டினன்—இங்கே காட்டிவிட்டான்.

மணஞ்செய்து பழக்கம் இல்லாதவன்; மணந்தாரைக் கண்டு மறியாத வன் என்றவாறு. (53)

என்றிவை பற்பல விசைத்துச் செய்நலங்
கொன்றிடு சிறுவிதி குழுமித் தன்புடைத்
துன்றிய சுரர்தமைத் தொல்லைத் தத்தமூர்
சென்றிட வேவினன் செயிர்த்து வைகினன்.

என்று இவை பற்பல இசைத்து—என்றிவ்வாறு பலவற்றைச் சொல்லி, செய்நலம் கொன்றிடு சிறு விதி—செய்ந்நன்றி கொன்றோனாகிய தக்கன், தன் புடைக் குழுமித் துன்றிய சுரர்தமை—தன் பக்கத்திற் குழுமி நெருங்கியிருந்த தேவர்களை, தத்தம் தொல்லை ஊர் சென்றிட ஏவினன்—தமது தமது பழைமை யாகிய இடங்களுக்குச் செல்லும்படி ஏவி, செயிர்த்து வைகினன்—தான் கோபித்தவாறிருந்தான். (54)

கறுவுகொ ணெஞ்சொடு கயவ னன்றுதொட்
டிறைவனை நினைக்கில னெள்ளு நீர்மையா
னுறுதலுஞ் சிலபக லுயங்கி யிச்செய
லறிதரு மயன்முத லமரர் தேர்குவார்.

கயவன்—கீழோனான தக்கன், அன்று தொட்டு—அன்று முதலாக, கறுவு கொள் நெஞ்சொடு இறைவனை நினைக்கிலன்—கறுவுதலைக் கொண்ட மனத்தோடு சிவபெருமானைச் சிந்தியாதவனாய், எள்ளும் நீர்மையான் உறுதலும்—இகழும் இயல்பினனா யிருத்தலும், இச்செயல் அறிதரும் அயன் முதல் அமரர்—இச்செயலையறிந்த பிரமா முதலிய தேவர்கள், சில பகல் உய்ங்கி—சில தினம் வருந்தி யிருந்து, தேர்குவார்—பின் சிந்திப்பாராயினர்.

சில பகல் உயங்கி உறுதலும் எனத் தக்கனுக்கேற்றி உரைப்பினும் அமையும். (55)

## திருமணப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—347.

———

146

# தக்கன் கயிலைசெல் படலம்

மெய்ம்மா தவத்தாற் றிருத்தக்கு விளங்கு தக்க
னெம்மான் றனையெண் ணிலனாவி யிழப்பன் வல்லே
யம்மா வியாமு மவனேவலை யாற்று கின்றா
நம்மா ருயிர்க்கு மிறுவாய்நணு குற்ற போலும்.

மெய் மாதவத்தால் திருத்தக்கு விளங்கு தக்கன்—உண்மையான பெரிய தவத்தாற் செல்வம் மிக்கு விளங்குகின்ற தக்கன், எம்மான்தனை எண்ணிலன்—எம்பெருமானை நினைக்கின்றிலன்; வல்லே ஆவி இழப்பன்—ஆதலினாலே விரைந்து இறந்துபடுவன்; அம்மா—அம்மவோ!, யாமும் அவன் ஏவலை ஆற்றுகின்றாம்—நாமும் அவனுடைய ஏவலைச் செய்கின்றோம்; நம் ஆருயிர்க்கும் இறுவாய் நணுகுற்றது போலும்—நமது அரிய உயிருக்கும் இறுதி கிட்டியதுபோலும். (1)

ஆனா லினித்தக் கனையெண்ணல மாயி னன்னான்
மேனா ளரனாற் பெறுகின்றதொர் மேன்மை தன்னான்
மானாத சீற்றங் கொடுநம்பத மாற்று மென்னா
வோநா மினிச்செய் பரிசென்றிவை யோர்ந்து சொல்வார்.

ஆனால்—இவ்வாற்றால், இனி தக்கனை எண்ணலம் ஆயின்—இனித் தக்கனை மதியோம் ஆனால், அன்னான் அரனால் மேல் நாள் பெறுகின்றது ஓர் மேன்மை தன்னால்—அவன் சிவபெருமானிடம் முன்னாளிற் பெற்றுள்ளதாகிய ஒப்பற்ற வரத்தின் உதவியினால், மானாத சீற்றம் கொடு—நிகரில்லாத கோபங் கொண்டு, நம் பதம் மாற்றும் என்னா—நம்பதவியை மாற்றிவிடுவான் என்று சிந்தித்து, ஓ இனி நாம் செய் பரிசு இவை என்று ஓர்ந்து—ஓகோ இனி நாம் செய்யுங் காரியம் இவையேயாம் என்று உணர்ந்து, சொல்வார்—உரைப்பார். (2)

ஈசன் கயிலை தனிற்றக்க னெழுந்து செல்ல
மாசொன்று சிந்தை கொளத்தேற்றினம் வல்லை யென்னி
னேசங் கொடுபோ யவற்காணி னிலைக்கு மிச்சீர்
நாசம் படா துமொழிவாகு நமக்கு மென்றார்.

ஈசன் கயிலை தனில் தக்கன் எழுந்து செல்ல—சிவபெருமான் எழுந்தருளி யிருக்குங் கைலாசமலைக்குத் தக்கன் இவ்விடத்தினின்றும் நீங்கிச் செல்லும் பொருட்டு, மாசு ஒன்று சிந்தை கொள—மாசு படிந்த அவனுடைய மனம் ஏற்றுக்கொள்ளும் வகையில், வல்லை தேற்றினம் என்னின்—விரைந்துஅவனைத் தேற்றுவோம் ஆயின், நேசம் கொடு போய் அவன் காணின்—அவனும் விருப்பத் தோடு சென்று சிவபெருமானைக் காணுவானுனல், இச் சீர் நிலைக்கும்— இந்தச் செல்வம் நிலையாகும், நமக்கும் நாசம் படலும் ஒழிவாகும் என்றார்— நமக்கும் நாசமாதலும் நீங்கும் என்றார்கள். (3)

வேதா முதலோ ரிதுதன்னை விதியி னாடித்
தீதான தக்கன் றனைமேவிநின் செய்த வத்தின்
மாதா னவளைச் சிவனோடு மறத்தி போலா
மேதா முனது நிலைக்கம்ம வினைய தொன்றே.

வேதா முதலோர் இது தன்னை விதியின் நாடி—பிரமா முதலியவர்கள் இதனை முறைப்படி ஆராய்ந்து, தீது ஆன தக்கன் தனை மேவி—தீமை பொருந்திய தக்கனை அடைந்து, நின் செய் தவத்தின் மாது ஆனவளை— உனது செய்யப்படுவதாகிய தவத்தினுற் பெற்ற புதல்வியாகிய அச் சிவ சத்தியை, சிவனோடு-மருகராகிய சிவபெருமானோடும், மறத்தி போலாம்— மறக்கின்றாய் போலும்; உனது நிலைக்கு—உனது உன்னத நிலைக்கு, இனையது ஒன்று ஏதாம்—இஃதொன்றிருந்தபடி யென்னே; அம்ம—இவ்வாறுதல் ஆச்சரியம். (4)

குற்றந் தெரித லஃதேகுண னென்று கொள்ளிற்
சுற்றம் மொருவற் கெவணுண்டு துறந்து நீங்கிச்
செற்றஞ்செய் கண்ணு மகிழ்வுண்டிது சிந்தி யாயேன்
மற்றுன்னை வந்தோர் வசைசூழ்தரும் வள்ள லென்றார்.

குற்றந் தெரிதல் அஃதே குணம் என்று கொள்ளின்—குற்றத்தை ஆராய்த லையே குணமாகக் கொண்டால், ஒருவற்கு சுற்றம் எவண் உண்டு—ஒருவனுக்குச் சுற்றம் எங்ஙனம் உளதாம்; துறந்து நீங்கிச் செற்றஞ் செய்கண்—சுற்றத்தை விட்டு விலகிக் கோபங்கொண்டவழி, மகிழ்வும் உண்டு—எப்பொழுதாயினும் மகிழ்ச்சியும் உளதாமோ?; இது சிந்தியாயேல்—இதனை நீ சிந்தியாது விடுதி யாயின், வள்ளல்—வள்ளலே, ஓர் வசை வந்து உன்னைச் சூழ்தரும் என்றார்— ஒப்பற்ற அபகீர்த்தி உன்னை வந்து மூடும் என்றார்கள்.

செய்கண்ணும் என்புழி உம்மை மகிழ்வுடன் கூட்டப்பட்டது. உண்டு, உண்டாமோ என்னும்பொருட்டு.

குற்றம் பார்க்கிற் சுற்றம் இல்லையாம்; சுற்றம் இல்லையாகச் செற்றம் உளதாம்; அதனல் மகிழ்ச்சி பாழாம் என்றவாறு. (5)

முன்னின் றவர்கூ றியபான்மை முறையி ஞடி
யென்னிங் கியான்செய் கடனென்ன விறைவி யோடும்
பொன்னஞ் சடையோன் றனைக்கண்டனை போதி யென்ன
மன்னுங் கயிலை வரையேக மனம்வ லித்தான்.

முன் நின்று அவர் கூறிய பான்மை முறையின் நாடி—எதிரில் நின்று அவர்கள் கூறிய தன்மையை முறைப்படி ஆராய்ந்து, இங்கு யான் செய் கடன் என் என்ன—இனி இங்கு யான் செயற்பாலது யாது என்று தக்கன் வினவ, இறைவியோடும் பொன் அம் சடையோன் தனைக் கண்டனை போதி என்ன—உமாதேவியாருடன் பொன்மயமான சடையையுடைய சிவபெருமானைச் சென்று கண்டு வருவாயாக என்று அவர்கள் கூற, மன்னும் கயிலை வரை ஏக மனம் வலித்தான்—என்றும் நிலைபெற்றிருக்கின்ற கயிலாய கிரிக்குச் செல்ல மனவுறுதியுற்றான். (6)

கானர் கமலத் தயனிந்திரன் காமர் பூத்த
வானடர் யாரு மவணுற்றிடும் வண்ண நல்கி
யானுத முன்பிற் றுணையோரொ டகன்று தக்கன்
போனு னமல னமர்வெள்ளியம் பொற்றை புக்கான்.

கான் ஆர் கமலத்து அயன் இந்திரன் காமர் பூத்த வானடர் யாரும்—வாசனை பொருந்திய தாமரை மலராசனரான பிரமா இந்திரன் அழகு வாய்ந்த வானுலகத்தவர்களாகிய தேவர்கள் ஆகிய எல்லாரையும், அவண் உற்றிடும் வண்ணம் நல்கி—அங்கே தங்கியிருக்கும்படி செய்து, முன்பின் ஆனத துணையோரொடு அகன்று தக்கன் போனான்—வலிபடைத்த மெய் காப்பாளரோடுந் தக்கன் சென்று, அமலன் அமர் வெள்ளியம் பொற்றை புக்கான்—நின்மலரான சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் வெள்ளி மயமான அழகிய கயிலாய மலையை அடைந்தான். (7)

வெள்ளிச் சயிலந் தனிலெய்தி விமலன் மேய
நள்ளுற்ற செம்பொற் பெருங்கோயிலை நண்ணி நந்தி
வள்ளற் குறையு ளெனுங்கோபுர வாயில் சாரத்
தள்ளற்ற காவன் முறைப்பூதர் தடுத்தல் செய்தார்.

வெள்ளிச் சயிலந்தனில் எய்தி—வெள்ளி மலையை அடைந்து, விமலன் மேய நள்ளுற்ற செம்பொற் பெருங் கோயிலை நண்ணி—சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற நடுவட் பொருந்திய பெருமைமிக்க செம்பொற் றிருக் கோயிலை அணுகி, வள்ளல் நந்திக்கு உறையுள் எனும் கோபுர வாயில் சார—ஞான வள்ளலாகிய நந்திதேவருக்கு உறைவிடமான கோபுர வாய்தலை

யடைய, தள்ளற்ற காவல் முறைப் பூதர்—நீங்குதலில்லாத காவலை முறை செய்கின்ற பூதர்கள், தடுத்தல் செய்தார்—தக்கனை உட்புக ஒட்டாது தடுத்தார்கள். (8)

கடிக்கொண்ட பூதர் நிரைதன்னைக் கனன்றி யான்முன்
கொடுக்கின்ற காதன் மடமான்றன் கொழுநனோடு
மடுக்கின்ற பான்மை யிவணுடி யறிவ னீவிர்
தடுக்கின்ற தென்கொ லெனக்கூறினன் றக்க னென்போன்.

கடிக்கொண்ட பூதர் நிரை தன்னைக் கனன்று—காத்தலைச் செய்த பூதக் கூட்டத்தாரைக் கோபித்து, யான் முன் கொடுக்கின்ற காதல் மடமான்—யான் முன்னர் மணஞ்செய்து கொடுத்த என தன்பிற்குரிய மடப்பம் பொருந்திய மான்போல்வாளாகிய என் புதல்வி, தன் கொழுநனோடும் அடுக்கின்ற பான்மை—தன் நாயகனோடுஞ் சேர்ந்திருக்குந் தன்மையை, இவண் நாடி அறிவல்—இவ்விடத்தில் நான் கண்டு அறிவேன்; நீவிர் தடுக்கின்றது என்கொல்—நீவிர் தடை செய்கின்ற தென்னை; எனக் கூறினன் தக்கன் என்போன்—என்று தக்கன் என்போன் கூறினான். (9)

அவ்வா சகஞ்சொல் கொடியோனை யழன்று நோக்கி
மெய்வாயில் போற்றும் பெருஞ்சாரதர் மேலை ஞான்று
மைவாழுங் கண்டன் றனையெள்ளினை மற்று நீயீண்
டெவ்வா றணைகின் றனைசால விழுதை நீராய்.

அவ் வாசகம் சொல் கொடியோனை அழன்று நோக்கி—அம்மொழி கூறிய கொடியோனாகிய தக்கனைக் கோபித்துப் பார்த்து, மெய் வாயில் போற்றும் பெருஞ்சாரதர்—மெய்ம்மையாகிய கயிலை வாய்தலைக் காக்கும் பெருமை பொருந்திய பூதர்கள், சால இழுதை நீராய்—மிக்க இழுதையின் தன்மையை உடையவனே, மேலை ஞான்று மை வாழுங் கண்டன்றனை எள்ளினை—முன்னாளில் நீலகண்டராகிய சிவபெருமானை இகழ்ந்தாய், நீ—இகழ்ந்த நீ, ஈண்டு—இம் மெய்வாய்தலின்கண், அணைகின்றனை—அணுகுகின்றாய், எவ்வாறு—பொய்யனே அஃதெவ்வாறும்.

பொய்யனுக்கும் மெய்வாய்தலுக்கும் வெகுதூரம் என்றவாறு. இழுதை அறிவிலான். (10)

முந்துற்ற தொல்லை யெயின்மூன்றுறை மொய்ம்பி னோர்க
ணந்துற்ற வையந் தனைவானை நலிவ ரேனு
மெந்தைக்கு நல்ல ரவரன்பி லிறையு நின்பால்
வந்துற்ற தில்லை யெவனோவினி வாழ்தி மன்னோ.

முந்து உற்ற—முற்காலத்திலிருந்த, தொல்லை மூன்று எயில் உறை மொய்ம் பினோர்கள்—பழைய முப்புரத்திலுள்ள வலிய அசுரர்கள், நந்து உற்ற வையந் தனை வானை நலிவரேனும்—செழிப்பு வாய்ந்த மண்ணையும் விண்ணையும் வருத் துவரேனும், எந்தைக்கு நல்லர்—எம்பெருமானுக்கு நல்லவர்கள்; நின்பால்—வேதப் பிராமணனுன உன்னிடத்தில், அவர் அன்பில் இறையும் வந்துற்றது இல்லை—அவர்களிடமிருந்த அன்பில் இறையளவு கூட உதித்ததில்லை; இனி எவண் வாழ்தி—இனி அன்பிலியே நீ எங்ஙனம் வாழ்வாய். (11)

இறக்கின்ற வேலை யிமையோர்கட மின்ன னீக்கிக்
கறுக்கின்ற நீல மிடற்றெந்தை கருணை செய்த
சிறக்கின்ற செல்வ மிசைந்தன்னவன் செய்கை யாவு
மறக்கின் றனைநீ யெவன்செய்குதி மாயை யுற்ருய்.

இறக்கின்ற வேலை—இறக்க நேர்ந்த சமயத்தில், இமையோர்கள் தம் இன்னல் நீக்கி—தேவர்களுக்குண்டான மரணத் துன்பத்தை நீக்கி, கறுக்கின்ற நீல மிடற்று எந்தை—கரிய நீலகண்டரான எம்பெருமான், கருணை செய்த சிறக்கின்ற செல்வம் மிசைந்து—தந்தருளிய சிறப்பாகிய செல்வத்தை அநு பவித்துக்கொண்டே, அன்னவன் செய்கை யாவும் மறக்கின்றனை—அப்பெரு மான் செய்த நன்றிகளனைத்தையும் மறக்கின்ருய், மாயை உற்ருய்—மாயை வசப்பட்டாய், நீ எவன் செய்குதி—நீ என்ன செய்துகொண்டிருக் கின்றனை. (12)

ஈசன் றனது மலர்த்தாளை யிறைஞ்சி யாற்ற
நேசங் கொடுபோற் றலர்தம்மொடு நேர்த லொல்லா
பாசந் தனில்வீழ் கொடியோயுனைப் பார்த்தி யாங்கள்
பேசும் படியுந் தகவோபவப் பெற்றி யன்ருே.

ஈசன் தனது மலர்த்தாளை இறைஞ்சி—சிவபெருமானுடைய மலர்ப்பாதங் களை வணங்கி, ஆற்ற நேசங் கொடு போற்றலர் தம்மொடு—மிகவும் அன்பு கொண்டு வழிபாடு செய்யாதவர்களோடு, நேர்தல் ஒல்லா—பழகுதல் கூடா; பாசம் தனில் வீழ் கொடியோய்—பாசப் பிணிப்பில் அமிழ்ந்து கின்ற பரம துட்டனே, உனைப் பார்த்து யாங்கள் பேசும்படியும் தகவோ—உன்னைப் பார்த்து நாங்கள் பேசுவதுந் தகுதியாகாதே; பவப் பெற்றி அன்ருே—பாவப் பேறேயாமன்ருே. (13)

ஆமேனு மின்னு மொருமாற்றமுண் டண்ணன் முன்னர்
நீமேவி யன்பிற் பணிவாயெனி னிற்றி யன்றேற்
பூமே லுனது நகரந்தனிற் போதி யென்னத்
தீமேல் கிளர்ந்தா லெனவாற்றவுஞ் சீற்ற முற்ருன்.

ஆமேனும் இன்னும் ஒரு மாற்றம் உண்டு—அங்ஙனமாயினும் இன்னும் ஒரு வார்த்தை உளது, அண்ணல் முன்னர் நீ மேவி—சிவபெருமானெதிரே நீ சென்று, அன்பில் பணிவாய் எனில் நிற்றி—அன்பினோடு அப்பெருமானை வழிபடுவாயாயின் இங்கே நில்; அன்றேல்—அவ்வாறு செய்யாவிடில், பூமேல் உனது நகரம் தனில் போதி என்ன—பூமியிலுள்ள உனது நகரத்துக்குப் போகக்கடவாய் என்று கூற, தீ மேல் கிளர்ந்தா லென—அக்கினிமேலே கிளர்ந்தெழுந்தாற் போல, ஆற்றவும் சீற்றம் உற்றான்—மிகவுங் கோபங் கொண்டான். (14)

பல்லா யிரவர் பெருஞ்சாரதர் பாது காக்கு
மெல்லார் செழும்பொன் மணிவாயி லிகந்து செல்ல
வல்லா னனிநா ணினனுள்ளம் வருந்தி யங்க
ணில்லாது மீள்வா னிதுவொன்று நிகழ்த்து கின்றான்.

பல்லாயிரவர் பெருஞ் சாரதர் பாதுகாக்கும்—பெரிய பூதர்கள் பல்லாயிரவர் காவல் புரிகின்ற, எல் ஆர் செழும் பொன் மணிவாயில் இகந்து செல்ல வல்லான்—ஒளி பொருந்திய அழகிய பொன்னாலும் மணியாலும் ஆகிய வாயிலைக் கடந்து செல்லமாட்டாதவனாய், நனி நாணினன் உள்ளம் வருந்தி—மிக நாணி மனம் வருந்தி, அங்கண் நில்லாது மீள்வான்—அவ்விடத்தில் நில்லாது மீள்பவன், இது ஒன்று நிகழ்த்துகின்றான்—இஃதொன்றைச் சொல்லுகின்றான். (15)

கொன்னாருஞ் செம்பொற் கடைகாக்குங் குழாங்கள் கேண்மி
னெந்நாளு முங்க ளிறைதன்னை யிறைஞ்ச லேன்யா
னன்னா னெனது மருகோனி தறிந்தி லீரோ
விந்நா ரணனு மயனும்மெனக் கேவல் செய்வார்.

கொன் ஆரும் செம்பொற் கடை காக்கும் குழாங்கள் கேண்மின்—பெருமை பொருந்திய செம்பொற் கோயிலின் வாய்தலைக் காக்கும் பூதங்களே கேளுங்கள், எந்நாளும் உங்கள் இறை தன்னை யான் இறைஞ்சலேன்—எக்காலத்திலாயினும் உங்கள் இறைவனை நான் வணங்கேன், அன்னான் எனது மருகோன்—உங்கள் இறைவன் எனது மருகன், இது அறிந்திலீரோ—இதனை நீவிர் அறிந்திலீர்போலும், இது நிற்க; இந் நாரணனும் அயனும் எனக்கு ஏவல் செய்வார்—இந்த விஷ்ணுவும் பிரமாவும் எனக்கு ஏவல் செய்பவர்கள்; அறிந்துகொள்ளுங்கள் என்றவாறு. (16)

நின்றா ரெவரு மெனதொண்டர்க ணீடு ஞாலம்
பின்றாது போற்று மிறையான்பெயர் தக்க னென்பா
ரொன்றாய வுங்கள் பெரும்பித்தனை யொல்லை மேவி
யின்றா மரபிற் பணிந்தேதொழு தேத்து கின்றேன்.

நின்றார் எவரும் என தொண்டர்கள்—பிரம விஷ்ணுக்களேயன்றி ஏனைய ராய் நின்ற யாவரும் எனக்குத் தொண்டு செய்பவர்கள், யான் நீடு ஞாலம் பின்றாது போற்றும் இறை—யானே நிலைக்கின்ற உலகத்தைத் தாழ் வில்லாது பாதுகாக்கும் மன்னன், பெயர் தக்கன் என்பார்—என்பெயர் தக்கன் என்று சொல்லுவார்கள்; இப்படிப்பட்ட யானே, ஒன்றாய உங்கள் பெரும் பித்தனை ஒல்லை மேவி—தொடர்பின்றித் தனித்த உங்களுடைய பெரிய பித்தனை விரைந்து சென்று, இன்றாம் மரபில்—இற்றைவரை என்பா லில்லாததொரு முறையில், தொழுது பணிந்து ஏத்துகின்றேன்—வணங்கிப் பணிந்து துதிப்பேன்; நன்று! நன்று! என்றவாறு. (17)

நில்லிங் கெனவே தடைசெய்த நிலைமை நும்மாற்
செல்லும் பரிசோ மருகோனுஞ் சிறுமி தானுஞ்
சொல்லும் படியல் லதுசெய்வதென் றொண்ட ரானீ
ரொல்லும் படியாற் றுதலுங்கட் குறுதி யன்றோ.

நில் இங்கு என தடை செய்த நிலைமை நும்மால் செல்லும் பரிசோ—நில் இங்கே என்று தடுத்த தன்மை உங்களால் நிகழ்த்தப்படும் பான்மை யதோ; மருகோனும் சிறுமிதானும்—மருகனாகிய பித்தனும் அந்தச் சிறுமியும், சொல்லும்படி அல்லது—சொல்லிய பிரகார மன்றி, தொண்ட ரானீர் செய்வது என்—அடிமைகளாயிருப்பவர்களே நீவிர் வேறு செய்யத்தக்க தென்னை; ஒல்லும்படி ஆற்றுதல்—அவர்களுக்கு ஏற்ற முறையிற் செய்தல், உங்கட்கு உறுதி அன்றோ—உங்களுக்குத் தகுதிதானே.

உங்கள்பாற் குற்றமில்லை என்றவாறு. (18)

தேற்றாம லின்ன வகைசூழ்ந்தநுந் தேவை யாரும்
போற்றாமல் வந்து பணியாமற் புகழ்ந்து மேன்மை
சாற்றாம லெள்ளல் புரிபான்மை சமைப்ப னென்னா
மேற்றா னிழைத்த வினையுய்த்திட மீண்டு போனான்.

தேற்றாமல் இன்ன வகை சூழ்ந்த நும் தேவை—ஆராயாமல் இவ்வாறு செய்த உங்களுடைய இறைவனை, யாரும் போற்றாமல்—இனி எவரும் துதி யாமலும், வந்து பணியாமல்—வந்து வணங்காமலும், புகழ்ந்து மேன்மை சாற்றாமல்—மேன்மைகளை எடுத்துப் புகழ்ந்து சொல்லாமலும், எள்ளல் புரி பான்மை சமைப்பன்—இகழுதலைச் செய்யுங் காரியத்தைச் செய்வேன், என்னா—என்று கூறி, மேல் தான் இழைத்த வினை உய்த்திட—முன் தான் செய்த வினை தன்னைப் பிடர்பிடித்துந்த, மீண்டு போனான்—மீண்டு தன்னகரத்துக்குச் சென்றான். (19)

## வேறு

மீண்டுதன் பதியை யெய்தி விரிஞ்சனை யாதி யாக
வீண்டுபண் ணவரை நோக்கி யென்மக ளீசன் றன்பாற்
பூண்டபே ரார்வத் தொன்றிப் புணர்ப்பதொன் றுன்னித் தங்கண்
மாண்டகு வாயி லோரான் மற்றெமைத் தடுப்பச் செய்தார்.

மீண்டு தன் பதியை எய்தி—கயிலையினின்றும் மீண்டு தன்னகரத்தை அடைந்து, விரிஞ்சனை ஆதியாக ஈண்டு பண்ணவரை நோக்கி—பிரமா முதலாக நெருங்கியுள்ள தேவர்களைப் பார்த்து, என் மகள் ஈசன் தன்பால் பூண்ட பேரார்வத்து ஒன்றி—எனது புதல்வி சிவனிடத்துக்கொண்ட பெரு விருப்பத் தால் ஒன்றுபட்டு, புணர்ப்பது ஒன்று உன்னி—இருவரும் ஓர் உபாயத் தைச் சிந்தித்து, தங்கள் மாண் தகு வாயிலோரால்—தங்களுடைய மாண்பு பொருந்திய வாயிற் காவலர்களால், எம்மைத் தடுப்பச் செய்தார்—எம்மை உட்புகாது தடுக்குமாறு செய்தார். (20)

பின்னரும் பலவுண் டம்மா பேசுவித் தனவு மவ்வா
றென்னையென் றுரைப்ப னந்தோ வெண்ணினு நாணுக் கொள்வே
னன்னவீங் கிசைப்ப னேனு மாவதென் னவர்பாற் போந்தேன்
றன்னைநொந் திடுவ தன்றித் தாழ்வுண்டோ வனையர் தம்பால்.

பின்னரும்—மேலும், பேசுவித்தனவும் பல உண்டு—நிந்தை செய்வித் தனவும் பல உள, அந்தோ அவ்வாறு என்னை என்று உரைப்பன்—ஐயகோ அந்த நிந்தை நெறியை என்னென்று வாயாற் சொல்லுவேன்; எண்ணினும் நாணுக் கொள்வேன்—அதனை இப்பொழுது நினைத்தாலும் நாணம் அடை வேன்; அன்ன ஈங்கு இசைப்பனேனும் ஆவது என்—அந்த நிந்தைகளை இங்கே உரைப்பேனாயினும் ஆவது ஒன்றும் இல்லை; அவர்பால் போந்தேன் தன்னை நொந்திடுவது அன்றி—அவர்களிடத்து வலிந்து சென்றேனாகிய என்னை யான் நோவதல்லாமல், அனையர் தம்பால் தாழ்வு உண்டோ—அவர்களிடத்துக் குற்றம் இல்லையே. (21)

நன்றுநன் றென்னை யெண்ணா நக்கனை யுமையை நீவி
ரின்றுமுன் னாக வென்று மிறைஞ்சியே பரவு கில்லீ
ரன்றியு மதித்தி ரல்லீ ரப்பணி மறுத்தீ ராயின்
மன்றநும் முரிமை யின்னே மாற்றுவன் வல்லை யென்றான்.

நன்று நன்று—நல்லது! நல்லது!, என்னை எண்ணா—என்னை மதியாத, நக்கனை உமையை—திகம்பரனையும் உமையையும், நீவிர் இன்று முன்னாக—நீவிர்கள் இன்று தொடக்கமாக, என்றும் இறைஞ்சி பரவுகில்லீர்—என்றும் வணங்கித் துதியாதொழிமின்; அன்றியும் மதித்திர் அல்லீர்—அல்லாமலும்

மதித்தலுஞ் செய்யாதீர்கள்; அப் பணி மறுத்தீராயின்—அந்தக் கட்டளையை மறுத்து நடப்பீராயின், நும் உரிமை இன்னே வல்லே மன்ற மாற்றுவன் என்றான்—உங்கள் உத்தியோக உரிமைகளை இதோ விரைந்து நிச்சயமாக நீக்குவேன் என்றான். (22)

கறுத்திவை யுரைத்தோன் றன்னைக் கடவுளர் யாரு நோக்கி
வெறுத்தெமை யுரைத்தாய் போலு மேலுநின் னேவ றன்னின்
மறுத்தன வுளவோ வின்றே மற்றுநின் பணியி னிற்றுஞ்
செறுத்திட லென்னாத் தத்தஞ் சேணகர் சென்று சேர்ந்தார்.

கறுத்து இவை உரைத்தோன் தன்னை—கோபித்து இவற்றைக் கூறிய தக்கனை, கடவுளர் யாரும் நோக்கி—தேவர்கள் யாவரும் நோக்கி, எமை வெறுத்து உரைத்தாய் போலும்—எங்களை வெறுத்து இவ்வாறு கூறினாய் போலும், மேலும்—முன்னர் எப்பொழுதாயினும், நின் ஏவல் தன்னின் மறுத்தன உளவோ—உன் ஏவல்களில் யாம் மறுத்தனவும் உண்டோ, இன்றே—இல்லையே; மற்று நின் பணியில் நிற்றும்—இனியும் உன் ஏவலின் வழியிலேயே நிற்போம்; செறுத்திடல் என்னா—இங்ஙனமாதலின் எங்களைக் கோபியாதொழி என்று கூறி, தத்தம் சேண் நகர் சென்று சேர்ந்தார்—தங்கள் தங்கள் வானுலக நகரங்களைப் போய்ச் சேர்ந்தார்கள். (23)

தக்கன் கயிலைசெல் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 370.

---

# பிரமயாகப் படலம்

இப்படிப் பன்னாள் யாரு மிவன்றனி யாணைக் கஞ்சி
யப்பணி யியற்ற லோடு மம்புய மலர்மே லண்ணன்
முப்புர முனிந்த செங்கண் முதல்வன தருளா லாங்கோர்
செப்பரும் வேள்வி யாற்ற முயன்றனன் சிந்தை செய்தான்.

இப்படிப் பன்னாள் யாரும் இவன் தனி ஆணைக்கு அஞ்சி—இப்படிப் பலகாலம் யாவரும் இத்தக்கனுடைய தனித்த ஆணைக்குப் பயந்து, அப் பணி இயற்றலோடும்—அவனுடைய ஏவலைச் செய்துகொண்டு வர, அம்புய மலர்மேல் அண்ணல்—தாமரையாசனரான பிரமா, முப்புரம் முனிந்த செங்கண் முதல்வனது அருளால்—முப்புரங்களைக் கோபித்த சிவந்த கண்களை யுடைய சிவபெருமானது கருணையினால், ஆங்கு ஓர் செப்பரும் வேள்வி ஆற்ற—ஆண்டுச் செப்புதற்கரியதொரு யாகத்தைச் செய்தற்கு, சிந்தை செய்தான் முயன்றனன்—சிந்தனை செய்து ஏற்ற முயற்சி செய்தார். (1)

வேண்டிய கலப்பை யாவும் விதியுளி மரபி னோடு
தேண்டின னுய்த்துத் தக்கன் செப்பிய துன்னி யானே
மாண்டிட வரினு முக்கண் மதிமுடிப் பரமன் றன்னை
யீண்டுதந் தவிமுன் னீவ லெனக்கிது துணிபா மென்றான்.

வேண்டிய கலப்பை யாவும்—யாகத்துக்கு வேண்டிய உபகரணங்கள் எல்லாவற்றையும், விதி உளி மரபினோடு தேண்டினன் உய்த்து—விதிப்படி சிரத்தையாகிய மரபோடு சம்பாதித்து, தக்கன் செப்பியது உன்னி—தக்கன் கூறியதனையும் நினைத்து, யானே மாண்டிட வரினும்—யானே இறக்க வரினும், முக்கண் மதிமுடிப் பரமன் தன்னை ஈண்டு தந்து—மூன்றுகண்களையும் சந்திரனைத் தரித்த முடியினையுமுடைய சிவபெருமானை யாகத்தில் வரித்து, முன் அவி ஈவல்—முதற்கண் அப்பெருமானுக்கே அவிப்பாகத்தைக் கொடுப்பேன்; இது எனக்குத் துணிபாம் என்றான்—இது எனது துணிபாகும் என்று கூறினார். (2)

இனையன புகன்று சிந்தை யாப்புறுத் தேவல் போற்றுந்
தனையர்தங் குழுவைக் கூவித் தண்டுழாய் முகுந்த னாதி
யனைவரு மவிப்பால் கொள்ள வழைத்துநீர் தம்மி னென்னாத்
துனையவே தூண்டிப் போதன் றெல்பெருங் கயிலை புக்கான்.

இனையன புகன்று—இதுபோன்ற வார்த்தைகளை மேலுஞ் சொல்லி, சிந்தை யாப்புறுத்து—மனத்தை உறுதி செய்து, ஏவல் போற்றும் தனையர் தம் குழுவைக் கூவி—தமது கட்டளையைப் பேணுகின்ற புதல்வர் கூட்டத்தை அழைத்து, தண் துழாய் முகுந்தன் ஆதி அனைவரும் அவிப்பால் கொள்ள—தண்ணிய துழாய்மாலையை யணிந்த திருமால் முதலிய அனைவரையுந் தத் தமக்குரிய அவிப்பாகத்தை ஏற்றுக்கொள்ளும்படி, நீர் அழைத்துத் தம்மின் என்னா—நீவிர் அழைத்துத் தருதிர் என்று, துனையத் தூண்டி—விரைந்து தூண்டி, போதன் தொல்பெருங் கயிலை புக்கான்—பிரமாவாகிய தாம் பழைமையாகிய பெரிய கயிலையை அடைந்தார். (3)

கயிலையி னடுவ ணுள்ள கடவுண்மா நகரி லெய்தி
யயிலுறு கணிச்சி நந்தி யருணெறி யுய்ப்ப முன்போய்ப்
பயிலுமன் பொடுநின் றேத்திப் பணிதலுஞ் சிவனீண் டுற்ற
செயலதென் மொழிதி யென்னத் திசைமுக னுரைப்ப தானான்.

கயிலையின் நடுவண் உள்ள கடவுள் மா நகரில் எய்தி—திருக்கயிலாயத்தின் மத்தியில் உள்ள சிறந்த தெய்வத்தன்மை பொருந்திய திருக்கோயிலை அடைந்து, அயில் உறு கணிச்சி நந்தி—கூர்மைமிக்க மழுவைத் தாங்கிய நந்தி தேவர், அருள் நெறி உய்ப்ப—சிவபெருமானுடைய அநுக்கிரக நெறியானே உள்ளே விடுப்ப, முன்போய்—சிவபெருமானது திருமுன் சென்று, பயிலும் அன்பொடு நின்று ஏத்திப் பணிதலும்—பழகிய அன்போடு நின்று துதித்து வணங்குதலும், சிவன் ஈண்டு உற்ற செயலது என் மொழிதி என்ன—சிவ பெருமான் பிரமனே நீ இங்கு வந்த காரியம் என்னை கூறுதி என்று திருவாய்மலர்ந்தருள, திசைமுகன் உரைப்பது ஆனான்—பிரமதேவர் கூறத் தொடங்கினார். (4)

அடியனேன் வேள்வி யொன்றை யாற்றுவ லரண மூன்றும்
பொடிபட முனிந்த சீற்றப் புனிதநீ போந்தென் செய்கை
முடிவுற வருடி யென்ன முறுவல்செய் திறைவ னந்தம்
வடிவுள நந்தி யங்கண் வருவனீ போதி யென்றான்.

அடியனேன் வேள்வி ஒன்றை ஆற்றுவல்—அடியேன் ஒரு யாகத்தைச் செய்வேன், அரணம் மூன்றும் பொடிபட முனிந்த சீற்றப் புனித—மூன்று மதில்களும் நீறுமாறு கோபித்த சீற்றத்தினையுடைய பரிசுத்தரே, நீ போந்து—தேவரீர் எழுந்தருளி, என் செய்கை முடிவு உற அருள்தி என்ன—எனது யாகக் கிரியை முற்றுதல் உறும்படி அநுக்கிரகித் தருள்வீராக வென்று பிரார்த்திக்க, இறைவன் முறுவல் செய்து—சிவபெருமான் திருப்புன்முறுவல் செய்து, நந்தம் வடிவுள நந்தி அங்கண் வருவன்—நமது சாரூபத்தைக் கொண்ட நந்தி அங்கே வருவான், நீ போதி என்றான்—நீ போவாயாக என்று அருளிச்செய்தார். (5)

போகென விடுத்த லோடும் பொன்னடி பணிந்து வல்லே
யேகிய தாதை தக்க னிருந்துழி யெய்தி யேயான்
பாகநல் வேள்வி யொன்று பண்ணுவன் முனிவர் விண்ணோ
ராகிய திறத்த ரோடு மணுகுதி யைய வென்றான்.

போக என விடுத்தலோடும்—போகக்கடவை என்று அனுப்பியவுடனே, பொன் அடி பணிந்து—சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி, வல்லே ஏகிய தாதை—விரைந்து சென்ற தந்தையாகிய பிரமா, தக்கன் இருந்துழி எய்தி—தக்கன் அரசு வீற்றிருந்த இடத்தை அடைந்து, ஐய—மகனே, யான் பாக நல் வேள்வி ஒன்று பண்ணுவன்—நான் அவிப்பாகம் நல்குதற்குரிய தொரு நல்ல யாகத்தைச் செய்வேன், முனிவர் விண்ணோர் ஆகிய திறத்த ரோடும் அணுகுதி என்றான்—நீ முனிவர்கள் தேவர்கள் ஆகிய இருதிறத்தா ரோடும் வருவாயாக என்றார். (6)

என்னலு நன்று முன்போ யியற்றுதி மகத்தை யென்னப்
பொன்னவிர் கமலத் தண்ணன் மனோவதி யதனிற் போந்து
செந்நெறி பயக்கும் வேள்விச் செய்கடன் புரித லுற்றா
னன்னதோர் செய்கை மாலோ னாதிய ரெவருந் தேர்ந்தார்.

என்னலும்—என்று கூற, நன்று முன் போய் மகத்தை இயற்றுதி என்ன— நல்லது முன்னர்ச் சென்று யாகத்தைச் செய்க என்று தக்கன் சொல்ல, பொன் அவிர் கமலத்து அண்ணல் மனோவதி அதனிற் போந்து—பொன்போல விளங்கு கின்ற தாமரையாசனரான பிரமா தமது மனோவதி நகரை யடைந்து, செந் நெறி பயக்கும் வேள்விச் செய்கடன் புரிதலுற்றான்—நன்னெறியைத் தருகின்ற யாகத்தின் செய்கிருத்தியங்களைச் செய்யலாயினர்; அன்னதோர் செய்கை— அவ்வாறாகிய செயலை, மாலோன் ஆதியர் எவரும் தேர்ந்தார்—திருமால் முதலிய யாவரும் அறிந்தார்கள். (7)

### வேறு

அக்க ணந்தனின் மாயவ னிமையவர்க் கரசன்
மிக்க தேவர்கண் முனிவரர் யாவரும் விரைந்து
தக்கன் முன்னுற மேவலு மவரொடுந் தழுவி
முக்க ணாயகற் கவியினை விலக்குவான் முயன்றான்.

அ கணம் தனில்—அப்பொழுது, மாயவன் இமையவர்க்கு அரசன் மிக்க தேவர்கள் முனிவரர் யாவரும்—திருமால் தேவர்க்கரசனான இந்திரன் அள விறந்த தேவர்கள் முனிசிரேட்டர்கள் ஆகிய யாவரும், தக்கன் முன்னுற விரைந்து மேவலும்—தக்கன் எதிரே விரைந்து அடைதலும், அவரொடும் தழுவி—அவர்களோடுஞ் சேர்ந்து, முக்கண் நாயகற்கு அவியினை விலக்குவான் முயன்றான்—முக்கண்களையுடைய சிவபெருமானுக்கு அவி கொடுப்பதை விலக் குதற்கு முயற்சி செய்தான். (8)

ஏற்ற நீங்குறு தக்கனக் கடவுள ரியாரும்
போற்றி யேதனைச் சூழ்தரத் தாதைதன் புரத்தி
லாற்றும் வேள்வியி லணைதலு மயனெழுந் தாசி
சாற்றி யார்வமொ டிருத்தினன் பாங்கரோர் தவிசின்.

ஏற்றம் நீங்குறு தக்கன்—உயர்ச்சியை இழக்குந் தக்கன், அக் கடவுளர் யாரும் போற்றி தனைச் சூழ்தர—அத்தேவர்களனைவரும் துதித்துத் தன்னைச் சூழ்ந்து வர, தாதை தன் புரத்தில் ஆற்றும் வேள்வியில் அணைதலும்—தந்தையாகிய பிரமா தமது நகரத்திற் செய்யும் வேள்விச் சாலையை அடைதலும், அயன் எழுந்து—பிரமா எழுந்து, ஆசி சாற்றி—ஆசி கூறி, பாங்கர் ஓர் தவிசில் ஆர்வமோடு இருத்தினன்—தமக்குப் பக்கத்தில் ஓராசனத்திலே அன்போடு தக்கனை இருத்தினர். (9)

கானு லாவுதண் டுளவினு னடிகள்கை தொழுதே
யான பான்மையி லோர்தவி சிருத்தின னல்லா
வேனை யோருக்கும் வீற்றுவீற் றுதவின னிடையிற்
றானொ ராசனத் திருந்தனன் மறையெலாந் தழங்க.

கான் உலாவு தண் துளவினன் அடிகள் கைதொழுது—வாசனை பொருந்திய தண்ணிய துளவமாலையணிந்த திருமாலின் திருவடிகளைக் கை கூப்பி வணங்கி, ஆன பான்மையின்—தகுந்த பிரகாரம், ஓர் தவிசு இருத்தினன்—ஓராசனத்தில் இருத்தினர் ; அல்லா ஏனையோருக்கும்—மற்றையோராகிய முனிவர்கள் தேவர்களுக்கும், வீற்று வீற்று உதவினன்—தனித்தனி ஆசனம் வழங்கினர் ; இடையில்—மத்தியில், மறை எலாம் தழங்க—வேதமனைத்தும் முழக்கஞ் செய்ய, தான் ஓராசனத்து இருந்தனன்—தாமும் ஓராசனத்திலிருந்தார். (10)

வேறு

அங்கண் ஞாலம தளித்தவ
னிவ்வகை யமர்தலு மதுபோழ்தி
னங்கை யாளொரு பங்கின
னருளொடு நந்திதே வனைநோக்கி
பங்க யாசனன் வேள்வியிற்
சென்றுநம் பாகமுங் கொடுவல்லே
யிங்கு நீவரு கென்றலும்
வணங்கியே யிசைந்தவ னேகுற்றான்.

அங்கண் ஞாலமது அளித்தவன்—அழகிய இடத்தினையுடைய உலகத்தினைப் படைத்த பிரமதேவர், இவ்வகை அமர்தலும்—இவ்வாறிருக்க, அது

போழ்தில்—அப்பொழுது, நங்கையாள் ஒரு பங்கினன் அருளொடு நந்திதேவனை நோக்கி—உமாதேவி பாகரான சிவபெருமான் கருணையோடு நந்திதேவரைப் பார்த்து, பங்கயாசனன் வேள்வியிற் சென்று—பிரமன் செய்யும் யாகத்திற் சென்று, நம் பாகமும் கொடு—நமக்குரிய அவிப்பாகத்தையும் ஏற்றுக்கொண்டு, வல்லே இங்கு நீ வருக என்றலும்—விரைவாக இங்கே நீ வருவாயாக என்று கூறியருளுதலும், அவன் வணங்கி இசைந்து ஏகல் உற்றான்—அந் நந்திதேவர் வணங்கிச் சிவாஞ்ஞையை மேற்கொண்டு செல்வாராயினார்.

உம்மையால் ஏனை உபசாரமுங் கொள்க. (11)

நூற்றுக் கோடிவெங் கணத்தவர்
சூழ்தர நொய்தினக் கிரிநீங்கி
யேற்றின் மேல்வரு மண்ணலை
யுள்ளுறுத் தேர்கொள்பங் கயப்போதிற்
றோற்று நான்முகக் கடவுண்முன்
னடைதலுந் துண்ணென வெழுந்தன்பிற்
போற்றி யேதொழு திருத்தின
னென்பவோர் பொலன்மணித் தவிசின்கண்.

நூற்றுக் கோடி வெம் கணத்தவர் சூழ்தர—நூறு கோடி வெவ்விய பூதகணத்தவர்கள் சூழ்ந்து வர, அக்கிரி நொய்தின் நீங்கி—அக் கயிலாச மலையை விரைவில் நீங்கி, ஏற்றின் மேல் வரும் அண்ணலை உள் உறுத்து—இடபத்தில் எழுந்தருளும் இறைவரை மனசில் தியானித்துக்கொண்டு, ஏர்கொள் பங்கயப் போதில் தோற்றும்—அழகிய உந்திக்கமலத்திற் பிறக்கும், நான்முகக்கடவுள் முன் அடைதலும்—பிரமதேவருக்கு எதிரே செல்ல, துண்ணென எழுந்து—பிரமதேவர் விரைந்தெழுந்து, அன்பிற் போற்றித் தொழுது—அன்போடு துதித்து வணங்கி, ஓர் பொலன் மணித் தவிசின்கண் இருத்தினன்—ஓர் அழகிய இரத்தினாசனத்தின்மீது இருத்தினார். (12)

நின்ற பாரிடத் தலைவர்க்கும்
வரன்முறை நிரந்தவா சனநேர்ந்து
பின்றை நான்முகன் வேள்விய
தியற்றலும் பிறங்கெரி யுறநோக்கி
நன்றி யில்லதோர் தக்கனக்
கிரியுறை நக்கனுக் காளாகிச்
சென்ற வன்கொலா மிவனென
நகைத்தனன் செயிர்த்திவை யுரைக்கின்றான்.

நின்ற பாரிடத் தலைவர்க்கும்—உடன் வந்த பூதத் தலைவருக்கும், வரன் முறை நிரந்த ஆசனம் நேர்ந்து—வரன்முறையே தொழில் முற்றிய ஆசனங்

களைக் கொடுத்து, பின்றை—அதன்மேல், நான்முகன் வேள்வியது இயற்றலும்—பிரமதேவர் யாகத்தைச் செய்தலும், நன்றி இல்லது ஓர் தக்கன் பிறங்கு எரி உற நோக்கி—நன்றிக்கேட்டுக்கு ஒப்பில்லாத தக்கன் சுவாலிக்கின்ற நெருப்பு எழப் பார்த்து, அக் கிரி உறை நக்கனுக்கு—அந்தக் கயிலாய கிரியிலிருக்கின்ற நிருவாணியான சிவனுக்கு, ஆளாகிச் சென்றவன் கொலாம் இவன் என—அடிமையாகி இருந்தவன்போலும் இங்கே வந்து இருந்த இவன் என்று கூறி, செயிர்த்தனன் நகைத்து இவை உரைக்கின்முன்—கோபித்துச் சிரித்து இவற்றைச் சொல்லுவான்.

இனி நக்கனுக்கு ஏவலாளாய் வந்தவன்போலும் இவன் எனினுமாம். (13)

நார ணன்முத லாகிய
கடவுளர் நளினமா மகளாதிச்
சீர ணங்கினர் மாமுனி
கணத்தவர் செறிகுந ருறைகின்ற
வார ணன்புரி வேள்வியில்
விடநுகர்ந் தாடல்செய் பவனுளுஞ்
சார தங்களு மோநடு
வுறுவது தக்கதே யிதுவென்முன்.

நாரணன் முதலாகிய கடவுளர்—திருமால் முதலிய தேவர்களும், நளின மாமகள் ஆதிச் சீர் அணங்கினர்—கமலாசனியாகிய பெருமை பொருந்திய திருமகள் முதலிய சிறந்த தேவமகளிரும், மாமுனி கணத்தவர்—பெரிய முனிவர்குழாத்தினரும், செறிகுநர் உறைகின்ற—செறிந்திருக்கின்ற, ஆரணன் புரிவேள்வியில்—வேதத்துக் குரியோரான பிரமா செய்யும் யாகத்தில், விடம் நுகர்ந்து ஆடல் செய்பவன் ஆளும்—நஞ்சையுண்டு கூத்தாடுவோனுகிய சிவனுடைய அடிமையான நந்தியும், சாரதங்களுமோ—பூதங்களுமா, நடு உறுவது—நடுவே வீற்றிருப்பது, இது தக்கதே என்முன்—இது தகுதியானது தானே என்று கூறினன். (14)

மேவ லாரெயின் முனிந்ததீ
விழியினன் வெள்ளிமால் வரைகாக்குங்
காவ லாளனு நந்தியுங்
கணத்தருங் கதுமென விவண்மேவக்
கூவி னுரெவ ரோவென
வுளத்திடைக் குறித்தனன் றெரிகுற்முன்
றேவர் யாவரும் வெருவுற
வயன்றனைச் செயிர்த்திவை யுரைக்கின்முன்.

மேவலார் எயில் முனிந்த—பகைவர்களின் மும்மதில்களைக் கோபித்த, தீ விழியினன் வெள்ளி மால்வரை காக்கும்—அக்கினிக் கண்ணராகிய சிவ பெருமானுடைய பெரிய வெள்ளிமலையைக் காவல் செய்கின்ற, காவலாளனும் நந்தியும்—காவல் புரிவோனான நந்தியும், கணத்தரும்—பூதகணத்தோரும், கதுமென இவண் மேவக் கூவினர் எவரோ என—விரைந்து இங்கு வருதற்கு அழைத்தார் யாவரோ என்று, உளத்திடைக் குறித்தனன் தெரிகுற்றான்—மனத்தின்கண் ஆராய்ந்து அறிந்து, தேவர் யாவரும் வெருவுற—தேவர்கள் யாவரும் அஞ்சும்படி, அயன்தனைச் செயிர்த்து—பிரமாவைக் கோபித்து, இவை உரைக்கின்றான்—இவற்றைச் சொல்லுகின்றான்.

'மேவலார் எயின் முனிந்த தீவிழியினன்' என்றதனாலே தன்னழிவையுந் தானறியாதே தனக்குத்தானே வாய் சோர்ந்தானுமாம். *(15)*

ஆதி நான்முகக் கடவுளை
யாகுநீ யழன்மகம் புரிசெய்கை
பேதை பாகனுக் குரைத்தனை
யவன்விடப் பெயருநந் தியையென்முன்
காத லோடுகை தொழுதுநள்
ளிருத்தினை கடவதோ நினக்கீது
தாதை யாதலிற் பிழைத்தனை
யல்லதுன் றலையினைத் தடியேனே.

நீ ஆதி நான்முகக் கடவுளை ஆகும்—நீயோ ஆதியாகிய நான்கு முகங்களையுடைய கடவுளா யிருக்கின்றாய்; அழன் மகம் புரி செய்கை பேதை பாகனுக் குரைத்தனை—அக்கினியை முன்னிட்டு யாகஞ் செய்ய இருப்பதைப் பேதையாகிய பெண்ணைப் பாகத்தில் வைத்த பித்தனுக்குத் தெரிவித்தாய்; அவன் விடப் பெயரும் நந்தியை—அப்பித்தன் அனுப்ப வந்த நந்தியை, என் முன் காதலோடு கைதொழுது நள் இருத்தினை—என் முன்னிலையில் அன்போடு கைகூப்பி வணங்கி மத்தியில் நடுநாயகமாக இருத்தினாய்; நினக்கு ஈது கடவதோ—உனக்கு இது செய்யத்தகுவதோ; தாதை ஆதலின் பிழைத்தனை—நீ என் பிதாவாதலின் உயிர் பிழைத்தாய்; அல்லது உன் தலையினைத் தடியேனே—அங்ஙனமன்றாயின் உன் தலைகளை வெட்டி வீழ்த்தேனே.

நீ உன் உயர்வினையும் என் அதிகாரத்தையும் அறிந்திலை என்றானும். *(16)*

இன்ன மொன்றியா னுரைப்பதுண்
டஞ்ஞைகே ளீமமே யிடனாகத்
துன்னு பாரிடஞ் சூழ்தரக்
கழியுடல் சூலமீ மிசையேந்தி
வன்னி யூடுநின் றாடுவான்
றனக்குநீ மகத்திடை யவிக்கூற்ற
முன்னை வைகலின் வழங்கலை
யிப்பகன் முதலவன் றனக்கின்றால்.

இன்னம் ஒன்று யான் உரைப்பது உண்டு—இன்னும் ஒன்று யான் சொல்ல வேண்டுவ துண்டு; அஞ்ஞை கேள்—மூடனே கேட்பாயாக ; ஈமமே இடன் ஆக—சுடுகாடே வாழுமிடமாக, துன்னு பாரிடம் சூழ்தர—நெருங்கிய பூதங்கள் சூழ, கழி உடல் சூல மீமிசை ஏந்தி—கங்காளத்தைச் சூலத்தின்மீதே ஏந்தி, வன்னியூடு நின்று ஆடுவான் தனக்கு—அக்கினியிலே நின்று ஆடுவானாகிய அந்தச் சிவனுக்கு, மகத்திடை அவிக்கூற்றம் முன்னை வைகலின் நீ வழங்கலை—யாகத்தில் அவிப்பாகத்தை முன்னைநாளிற் போல நீ கொடாதே; இப்பகல் முதல் அவன் தனக்கு இன்று—இனி இன்று தொடக்கம் அந்தச் சிவனுக்கு அவிப்பாகம் கிடையாது. (17)

அத்தி வெம்பணி தலைக்கலன்
றாங்கியே யடலைமேற் கொண்டுற்ற
பித்தன் வேள்வியி லவிகொளற்
குரியனோ பெயர்ந்தவிப் பகல்காறு
மெத்தி றத்தரு மறையொழுக்
கெனநினைந் தியாவது மோராமற்
சுத்த நீடவி யளித்தன
ரன்னதே தொன்மையாக் கொளற்பாற்றோ.

அத்தி வெம்பணி தலைக்கலன் தாங்கி—எலும்பு கொடிய பாம்பு தலைமாலை ஆகிய இவற்றைச் சுமந்து, அடலை மேற்கொண்டுற்ற—சாம்பரை உடம்பின் மேற் பூசிக்கொண்டிருக்கின்ற, பித்தன் வேள்வியில் அவிகொளற்கு உரியனோ—வெறும் பைத்தியக்காரன் யாகத்தில் அவிப்பாகம் ஏற்றற்கு உரியனோ; பெயர்ந்த இப் பகல்காறும்—சென்றுபோன இந்நாள்வரையும், எத்திறத்தரும்—எப்படிப்பட்டவரும், மறை ஒழுக்கு என நினைந்து—வேதாசாரம் என்று நினைந்து, யாவதும் ஓராமல்—சிறிதுஞ் சிந்தியாமல், சுத்தம் நீடு அவி அளித்தனர்—தூய்மை மிக்க அவியை அந்தச் சிவனுக்கு வழங்கி வந்தார்கள்; அன்னதே—அத் தவறான வழக்கத்தையே, தொன்மையாக் கொளற் பாற்றோ—தொன்றுதொட்ட வழக்கமாகக் கைக்கொள்ளுதல் தகுதியாமோ? (18)

மற்றை வானவர் தமக்கெலா
நல்குதி மாலையே முதலாக
விற்றை நாண்முதற் கொள்ளுதி
யிவற்குமுன் னீகுதி யவிதன்னைக்
கற்றை வார்சடை யுடையதோர்
கண்ணுதற் கடவுளே பரமென்றே
சொற்ற மாமறைச் சுருதிகள்
விலக்குதி துணிவுனக் கிதுவென்றான்.

மற்றை வானவர் தமக்கெலாம் நல்குதி—சிவன் தவிர்ந்த மற்றைத்தேவர்களுக்கெல்லாம் இவ்வவியைக் கொடுப்பாயாக; இற்றை நாள் முதல் மாலேயே முதலாகக் கொள்ளுதி—இன்று முதல் திருமாலேயே முதல்வராகக் கொள்வாயாக; அவிதன்னை இவற்கு முன் ஈகுதி—ஆகவே அவியை இத்திருமாலுக்கே முதலிற் கொடு; கற்றை வார்சடை உடையதோர் கண்ணுதற் கடவுளே பரம் என்று சொற்ற மாமறைச் சுருதிகள் விலக்குதி—கற்றையான நீண்ட சடையினையுடைய கண்ணுதற் பெருமானே பரம்பொருள் என்று கூறிய பெரிய வேதவாக்குக்களை விலக்கக்கடவாய்; உனக்கு இது துணிவு என்றான்—உனக்கு இம்முடிபே முடிந்த முடிபாம் என்றான். (19)

என்ற வாசகங் கேட்டலு
　　நந்திதன் னிருகரஞ் செவிபொத்தி
யொன்று கொள்கையி னாதிநா
　　மந்தனை யுளத்திடை நனியுன்னி
யின்றி வன்சொலுங் கேட்பவுத்
　　தனைகொலா மெம்பிரா னெனையென்னாத்
துன்று பையுளின் மூழ்குறு
　　வாயிடைத் துண்ணென வெகுளுற்றான்.

என்ற வாசகங் கேட்டலும்—என்று கூறிய வார்த்தைகளைக் கேட்டவுடன், நந்தி தன் இருகரம் செவி பொத்தி—நந்திதேவர் தமது இருகரங்களாலும் இரு செவிகளையும் பொத்தி, ஒன்று கொள்கையின் ஆதி நாமந்தனை உளத்திடை நனி உன்னி—மனம் ஒருமைப்படும் முறையிற் சிவநாமத்தை மிக்குத் தியானித்து, இன்று இவன் சொலும் கேட்ப—இன்றைக்கு இவ்வதிபாதகன் சொல்லையுங் கேட்கும்படி, எம்பிரான் எனை உய்த்தனை கொலாம் என்னா—எம்பெருமானே அடியேனை அனுப்பியருளினீரோ என்று, துன்று பையுளின் மூழ்குறு—அதிகரிக்கின்ற துன்பத்துள் முழுகி, ஆயிடைத் துண்ணென வெகுளுற்றான்—அவ்விடத்துத் திடீரென்று கோபிப்பாராயினர். (20)

பண்டு மூவெயி லழலெழ
　　நகைத்திடு பரம்பர னருணீராற்
றண்ட நாயகஞ் செய்திடு
　　சிலாதனர் தனிமகன் முனிவெய்தக்
கண்ட வானவர் யாவரு
　　முட்கினர் கனலுமுட் கவலுற்றா
னண்டம் யாவையு நடுநடுக்
　　குற்றன வசைந்தன வுயிர்யாவும்.

பண்டு மூவெயில் அழல் எழ நகைத்திடு பரம்பரன் அருள் நீரால்—முன்னாளில் முப்புரங்கள் அக்கினி மயமாக நகைசெய்த சிவபெருமானுடைய

திருவருள் நீர்மையினுல், தண்ட நாயகம் செய்திடு—வேத்திரப் படையைத் தாங்கி முதன்மையாகிய காவலைச் செய்கின்ற, சிலாதனர் தனிமகன் முனிவு எய்த—சிலாத முனிவரின் ஒப்பற்ற புதல்வரான நந்திதேவர் கோபிக்க, கண்ட வானவர் யாவரும் உட்கினர்—அதனைக் கண்ட தேவர்கள் அனைவரும் உட்கினுர்கள்; கனலும் உள் கவலுற்ருன்—அக்கினி தேவனும் உள்ளம் வெதும்பினுன்; அண்டம் யாவையும் நடுநடுக்குற்றன—அண்டங்களனைத்தும் நடுநடுங்கின; உயிர் யாவும் அசைந்தன—உயிர்களெல்லாம் அசைந்தன. (21)

ஏற்றின் மேயநம் மண்ணறன்
சீர்த்தியி லிறையுமே குறிக்கொள்ளா
தாற்ற லோடவி விலக்கிய
தக்கனுக் கஞ்சின மிசைந்தோமான்
மாற்ற மொன்றுமிங் குரைத்திட
றகாதென மற்றது பொருதந்தோ
சீற்ற முற்றன னந்தியென்
றுட்கினர் திசைமுக னெடுமாலோன்.

ஏற்றின் மேய நம் அண்ணல்தன் சீர்த்தியில் இறையுமே குறிக்கொள் ளாது—இடபத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானுடைய சீர்த்தியில் ஒருசிறிதும் எண்ணுது, ஆற்றலோடு அவி விலக்கிய தக்கனுக்கு அஞ்சினம்—வலியோடு சிவபெருமானுக்குரிய அவியைக் கொடாது தடுத்த தக்கனுக்குப் பயந்தோமாய், மாற்றம் ஒன்றும் இங்கு உரைத்திடல் தகாதென இசைந் தோம்—ஒரு வார்த்தைதானும் இங்கே கூறுதல் தகாது என்று அவன் போக்குக்கு இசைந்திருந்தோம்; அந்தோ அது பொருதே—ஐயகோ! அதனைப் பொருமலேதான், நந்தி சீற்றம் உற்றனன்—நந்திதேவர் கோபங் கொண் டார்; என்று—இனி என்ன விளையுமோ என்று, திசைமுகனெடு மாலோன் உட்கினர்—பிரமாவும் விஷ்ணுவும் மனம் உடைந்தார்கள், (22)

ஈது வேலையி னந்தியத்
தக்கனை யெரிவிழித் தெதிர்நோக்கி
மாது பாகனை யிகழ்ந்தனை
யீண்டுநின் வாய்துளைத் திடுவேனு
லாதி தன்னரு ளன்றென
விடுத்தன னுதலி னுய்ந்தாய்நீ
தீது மற்றினி யுரைத்தியேல்
வல்லைநின் சிரந்துணிக் குவனென்ருன்.

ஈது வேலையில்—இச்சமயத்தில், நந்தி அத்தக்கனை எரி விழித்து எதிர் நோக்கி—நந்திதேவர் அத்தக்கனை அக்கினி கால விழித்து எதிரே நோக்கி, மாது பாகனை இகழ்ந்தனை—உமைபாகரான சிவபெருமானை இகழ்ந்தாய்;

ஈண்டு நின் வாய் துளைத்திடுவேன்—இங்கே இகழ்ந்த உன் வாயைத் துளைத்து விடுவேன்; ஆதி தன் அருள் அன்று என விடுத்தனன்—அது சிவபெருமானுடைய ஆஞ்ஞை அன்று என்று விடுத்தேன்; ஆதலின் நீ உய்ந்தாய்—அதனாலே நீ உயிர்பிழைத்தாய்; இனி தீது உரைத்தியேல்—இனிச் சிவ தூஷணஞ் செய்வாயானால், வல்லை நின் சிரம் துணிக்குவன் என்றான்—விரைவில் உன் சிரத்தைத் துணிப்பேன் என்று கூறினார். (23)

இவைய யன்மக னுள்ளமுந்
துண்ணென விசைத்துமா மகந்தன்னி
லவிய தெம்பிராற் கிலதென
விலக்கினை யதற்கிறை யவனன்றேற்
புவன மீதுமற் றெவருளா
ரரிதனைப் பொருளெனக் கொண்டாய்நீ
சிவனை யன்றியே வேள்விசெய்
கின்றவர் சிரமறக் கடிதென்றான்.

இவை அயன் மகன் உள்ளமும் துண்ணென இசைத்து—இவைகளைப் பிரமாவின் புதல்வனான தக்கனின் மனமுந் திடுக்கிடும்படி கூறி, மாமகம் தன்னில் அவியது எம்பிராற்கு இலது என விலக்கினை—பெருமை பொருந்திய யாகத்தில் அவிப்பாகம் சிவபெருமானுக்கு இல்லை என்று விலக்கினாய்; அதற்கு இறையவன் அன்றேல் புவனம் மீது மற்று எவர் உளார்—அந்த அவியை ஏற்றுக் கொள்ளுதற்குச் சிவபெருமானன்றி இப்புவனத்தில் வேறுயாரொருவர் உளர்; நீ அரி தனைப் பொருள் எனக் கொண்டாய்—நீ விட்டுணுவைப் பரம்பொருள் என்று கொண்டாய்; சிவனை அன்றி வேள்வி செய்கின்றவர் சிரம் கடிது அற என்றான்—சிவபெருமானை முதலெனக் கொள்ளுதலின்றி யாகஞ் செய்பவரின் தலை விரைவில் அறுக என்று சாபமிட்டார்.

அதற்கு இறை அவன் எனப் பிரித்துரைப்பதுமாம். (24)

**வேறு**

இன்னதோர் சாபம தியம்பி யாங்கதற்
பின்னரு மிசைத்தனன் பிறைமு டிப்பிரான்
றன்னியன் மதிக்கிலாத் தக்க நிற்கிவண்
மன்னிய திருவெலாம் வல்லை தீர்கவே.

இன்னதோர் சாபமது இயம்பி—இத்தகைய சாப மொழியைக் கூறி, ஆங்கு அதற் பின்னரும் இசைத்தனன்—அதன்மேலுஞ் சாபமொழி இயம்புவாராயினர்; பிறை முடிப் பிரான் தன் இயல் மதிக்கிலாத் தக்க—பிறைதரித்த முடியினையுடைய சிவபெருமானுடைய இயல்புகளாகிய பெருமைகளை மதி

யாத தக்கனே, நிற்கு இவண் மன்னிய திரு எலாம் வல்லே தீர்க—உனக்கு இங்கே உள்ளனவாகிய வளங்களெல்லாம் விரைந்தழிந் தொழிவதாக. (25)

ஏறுடை யண்ணலே யிறைஞ்ச லின்றியே
மாறுகொ டிகழ்தரு வாய்கொள் புன்றலே
யீறுற வுன்றனக் கெவருங் காண்டக
வேருெரு சிறுசிரம் விரைவின் மேவவே.

ஏறு உடை அண்ணலே இறைஞ்சல் இன்றி—இடப வாகனராகிய சிவ பெருமானே வணங்காமல், மாறுகொடு இகழ்தரு வாய் கொள் புன் தலே ஈறு உற—மாறுபட்டு நிந்திக்கின்ற வாயைக்கொண்ட உனது புல்லிய தலே அழிந்துபோக; வேறு ஒரு சிறு சிரம்—உடம்போ டொவ்வாது வேறுபடுகின்ற தொரு சிறுமையைத் தருகின்ற புல்லிய தலே, எவரும் காண்தக உன்றனக்கு விரைவின் மேவ—யாவருங் காண உனக்கு விரைவில் வருவதாக. (26)

ஈரமில் புன்மனத் திழுதை மற்றுனேச்
சாருறு கடவுளர் தாமு மோர்பக
லாருயிர் மாண்டெழீஇ யளப்பி லாவுகஞ்
சூரெனு மவுணனுற் றுயரின் மூழ்கவே.

ஈரம் இல் புன்மனத்து இழுதை—ஈரமில்லாத புல்லிய மனத்தினேயுடைய மடவோனே, உனேச் சார் உறு கடவுளர் தாமும்—உன்னேச் சார்ந்த இந்தத் தேவர்களும், ஓர் பகல் ஆர் உயிர் மாண்டு எழீஇ—ஒருநாள் அரிய உயிரை இழந்து பின் உயிர்பெற் றெழுந்து, அளப்பு இலா உகம் சூர் எனும் அவுண னுல் துயரில் மூழ்க—அளவில்லாத உககாலஞ் சூரபன்மன் என்னும் அசுரனுலே துன்பத்தில் மூழ்குவாராக. (27)

என்றுமற் றினேயது மியம்பி யேர்புறீஇத்
துன்றிருங் கணநிரை சூழ வெள்ளியங்
குன்றிடை யிறைக்கிது கூறிக் கீழ்த்திசை
முன்றிரு வாயிலின் முறையின் மேயினுன்.

என்று இனேயதும் இயம்பி—என்று இந்தச் சாபங்களேயுஞ் சொல்லி, ஏர்பு உறீஇ—அவ்விடத்தைவிட்டெழுந்து, துன்று இரும் கணநிரை சூழ—செறிந்த பெரிய பூதகணங்கள் சூழ, வெள்ளியங் குன்றிடை இறைக்கு இது கூறி—அழகிய வெள்ளிமலேயை அடைந்து சிவபெருமானுக்கு அங்கே நடந்ததை விண்ணப்பஞ் செய்து, கீழ்த்திசை முன் திரு வாயிலின்—கிழக்குத் திசையி லுள்ள முதற்கடைவாய்தலின்கண், முறையின் மேயினுன்—முன்போல முறைப்படி காவல்செய்திருந்தார். (28)

முன்னுற நந்தியம் முளரி மேலவன்
மன்னுறு கடிநகர் மகத்தை நீங்கலு
மன்னதொ ரவையிடை யமரர் யாவரு
மென்னிது விளைந்ததென் றிரங்கி யேங்கினர்.

முன்னுற—முதற்கண், நந்தி அம் முளரி மேலவன் மன்னுறு கடிநகர் மகத்தை நீங்கலும்—நந்திதேவர் அழகிய கமலாசனரான பிரமதேவரின் நிலை பெற்ற காவலோடு கூடிய நகரத்தில் நடந்த யாகத்தை விட்டு நீங்குதலும், அன்னதொர் அவையிடை அமரர் யாவரும்—அந்த யாகசபையிலிருந்த தேவர்களெல்லாம், இது என் விளைந்தது என்று இரங்கி ஏங்கினர்—இஃதென்னை இவ்வாறு முடிந்ததென்று இரங்கி ஏக்கமுற்றார்கள். (29)

நந்தியெம் மடிகண்முன் னவின்ற மெய்யுரை
சிந்தைசெய் தேங்கினன் சிரம்ப னிப்புற
மைந்தன துரையையு மறுத்தற் கஞ்சினன்
வெந்துய ருழந்தனன் விரிஞ்ச னென்பவன்.

எம் நந்தி அடிகள் முன் நவின்ற மெய் உரை—எமது நந்தியடிகள் யாகத் தொடக்கத்தின்கண் மொழிந்த பொய்யாமொழியாகிய சாபத்தை, விரிஞ்சன் என்பவன் சிந்தை செய்து—பிரமதேவர் சிந்தித்து, ஏங்கினன் சிரம் பனிப்பு உற—ஏங்கித் தலை நடுங்க, மைந்தனது உரையையும் மறுத்தற்கு அஞ்சினன்—மகனான தக்கனது சொல்லையும் மறுத்தற்குப் பயந்து, வெம் துயர் உழந்தனன்—கொடிய துன்பத்தில் முழுகினன். (30)

முடித்திட வுன்னியே முயலும் வேள்வியை
நடத்திய வஞ்சின னவின்று செய்கடன்
விடுத்தன னன்னதை விமலற் கின்னவி
தடுத்தவன் கண்டரோ யாதுஞ் சாற்றலன்.

முடித்திட உன்னி முயலும் வேள்வியை—முடிக்குமாறு எண்ணி முயலுகின்ற அந்த யாகத்தை, நடத்திய அஞ்சினன்—மேலும் நடத்துதற்குப் பயந்து, நவின்று—நடத்த முடியாமையைச் சபையோருக்கு எடுத்துக்கூறி, செய்கடன் விடுத்தனன்—அந்த யாகத்திற் செய்யக்கடவனவற்றைச் செய்யாது அவ்வளவில் நிறுத்தினர்; அன்னதை—அவ்வாறு நிறுத்தியதை, விமலற்கு இன் அவி தடுத்தவன் கண்டு—சிவபெருமானுக்கு இனிய அவியைக் கொடுத்தலாகாதெனத் தடுத்தவனாகிய தக்கன் கண்டு, யாதும் சாற்றலன்—ஒன்றும் பேசாதிருந்தான்.

(31)

கறுவுகொள் பெற்றியான் கவற்சி கொண்டுளான்
வறியதோ ருவகையான் மனத்தி லச்சமுஞ்
சிறிதுகொள் பான்மையான் றேவ ரோடெழாக்
குறுகினன் றன்னகர்க் கோயின் மேயினான்.

கறுவுகொள் பெற்றியான்—கோபிக்கின்ற இயல்பினையுடையவனும், கவற்சி கொண்டுளான்—மனக்கவலை யுடையவனும், வறியதோர் உவகை யான்—மகிழ்வற்றவனும், மனத்தில் அச்சமும் சிறிது கொள் பான்மையான்—மனத்திலே சிறிதே அச்சங்கொண்ட தன்மையினனும் ஆகிய தக்கன், தேவ ரோடு எழா—தேவர்களோடு எழுந்து, தன் நகர் குறுகினன் கோயில் மேயி னான்—தனது நகரத்துக்குச் சென்று தன் மாளிகையை அடைந்தான். (32)

அலர்ந்திடு பங்கயத் தண்ண றன்மகங்
குலைந்திட வாயிடைக் குழீஇய தேவர்கள்
சலந்தனி னந்திசெய் சாபஞ் சிந்தியாப்
புலர்ந்தனர் தத்தம புரத்துப் போயினர்.

அலர்ந்திடு பங்கயத்து அண்ணல் தன் மகம் குலைந்திட—விரிந்த தாமரை மல ராசனரான பிரமதேவர் செய்த யாகம் நிறைவேறு தொழிய, ஆயிடைக் குழீஇய தேவர்கள்—அவ்விடத்துக் கூடியிருந்த தேவர்கள், நந்தி சலந்தனில் செய் சாபம் சிந்தியா—நந்திதேவர் கோபத்தால் இட்ட சாபத்தை நினைத்து, புலர்ந்தனர்—நெஞ்சு உலர்ந்து, தத்தம புரத்துப் போயினர்—தங்கள் தங்கள் நகரங்களுக்குச் சென்றனர். (33)

பிரம யாகப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 403.

---

# சாலை செய் படலம்

அன்றுமுன் னாகவே யளப்பில் காலமா
வொன்றுமவ் வேள்வியி லோம்பு கின்றிலர்
துன்றிய முனிவருஞ் சுரரும் பார்தனின்
முன்றிக ழந்தணர் முதலி னோர்களும்.

அன்று முன்னாக—அன்று முதலாக, அளப்பில் காலமா—அளவில்லாத காலமாக, அவ் வேள்வியில் ஒன்றும்—வேதத்தில் விதிக்கப்பட்ட அந்த யாகங்களில் ஒன்றனையும், துன்றிய முனிவரும்—நெருங்கிய முனிவர்களும், சுரரும்—தேவரும், பார் தனில் முன் திகழ் அந்தணர் முதலினோர்களும்—பூமியில் முதன்மைபெற்று விளங்குகின்ற பிராமணர் முதலியவர்களும், ஓம்புகின்றிலர்—செய்யாராயினர். (1)

ஓர்ந்தன னன்னதை யூழின் றீநெறி
சார்ந்திடு தக்கனோர் வைக றன்முனஞ்
சேர்ந்திடு மிமையவர் திறத்தை நோக்கியே
யீர்ந்திடு தீயதொன் றியம்பு கின்றனன்.

ஊழின் தீநெறி சார்ந்திடு தக்கன்—ஊழினாலே தீய வழியில் நடத்தலைச் செய்யுந் தக்கன், அன்னதை ஓர்ந்தனன்—யாகத்தை யாவருஞ் செய்யா திருத்தலை அறிந்து, ஓர் வைகல் தன்முனம் சேர்ந்திடும் இமையவர் திறத்தை நோக்கி—ஒருநாள் தன்முன் வந்த தேவர்கூட்டத்தை நோக்கி, ஈர்ந்திடு தீயதொன்று இயம்புகின்றனன்—உள்ளத்தைப் பிளந்திடுவதொரு கொடிய வார்த்தையைக் கூறுகின்றான். (2)

எடுத்திடு சுருதியி னியற்கை முற்றுற
வடித்திடு தேவிர்காள் வரம்பில் காலமா
வடுத்திடும் வேள்விய தாற்ற லின்றியே
விடுத்ததெ னனையது விளம்பு வீரென்றான்.

எடுத்திடு சுருதியின் இயற்கை முற்றுற வடித்திடு தேவிர்காள்—பிரமாணமாக எடுத்துப் பேசப்படும் வேதத்தின் இயல்புகளனைத்தையுங் கடைபோக நன்கு தெளிந்த தேவர்களே, வரம்பு இல் காலமா—அளவில்லாத காலமாக,

அடுத்திடும் வேள்வி ஆற்றல் இன்றி—உங்களுக் குரியதாய்ப் பொருந்திய யாகத்தைச் செய்யாமல், விடுத்தது என்—நீவிர் விட்ட காரணம் என்னை ; அனையது விளம்புவீர் என்றான்—அதனை எனக்குச் சொல்லுங்கள் என்றான். (3)

வேறு

எய்யா துவெய்ய வினையீட்டு தக்க
னிவைசெப் பலோடு மிமையோர்
மெய்யா ரணத்தன் முதனா ளியற்று
வேள்விக் களத்தி லவியூ
ணையா னனத்தர் பெறநல்க லென்றி
யதனா லுநந்தி யடிகள்
பொய்யா தசாப வுரையாலும் யாங்கள்
புரியா திருத்து மெனவே.

எய்யாது—வேத உண்மைகளை அறியாது, வெய்ய வினை ஈட்டு தக்கன்—கொடிய வினைகளைச் செய்கின்ற தக்கன், இவை செப்பலோடும்—இவ்வாறு வினவ, இமையோர்—தேவர்கள், மெய் ஆரணத்தன் முதல் நாள் இயற்று வேள்விக் களத்தில்—மெய்ம்மையான வேதங்களை உணர்ந்த பிரமதேவர் முன்னாளில் இயற்றுநின்ற யாகசாலையில், ஐ ஆனனத்தர் பெற அவி ஊண் நல்கல் என்றி—ஐந்து திருமுகங்களையுடைய சிவபெருமான் ஏற்றுக்கொள்ளும் படி அவியுணவைக் கொடாதொழிக என்று நீ கட்டளை செய்தாய் ; அதனாலும்—அக்காரணத்தினாலும், நந்தியடிகள் பொய்யாத சாப உரையாலும்—நந்திதேவரின் பொய்த்தலில்லாத சாபவார்த்தையினாலும், யாங்கள் புரியாது இருத்தும் என—நாங்கள் யாகஞ் செய்யாதிருப்போமாயினேம் என்று கூற. (4)

அந்நாளி லீசன் விடுகின்ற நந்தி
யறைகின்ற சாப மதனுக்
கிந்நாளு மஞ்சி மகவேள்வி தன்னில்
யாதுஞ் செயாது திரிவீர்
முன்னாக யானோர் பெருமா மகத்தை
முறைசெய்வன் முற்றி யிடுமேற்
பின்னாக நீவிர் புரிமின்க ளென்று
பீடில்ல வன்பு கலவே.

அந்நாளில் ஈசன் விடுகின்ற நந்தி அறைகின்ற சாபம் அதனுக்கு—அந்தக் காலத்திலே சிவபெருமான் அனுப்பிய நந்திதேவர் இட்ட சாபத்துக்கு, இந்நாளும் அஞ்சி மக வேள்வி தன்னில் யாதும் செயாது திரிவீர்—இந்தக்காலத்திலும் பயந்து யாகக் கிரியையில் யாதொன்றையுஞ் செய்யாது திரிதலைச் செய்வீர் ; முன்னாக—முன்மாதிரிகையாக, யான் ஓர் பெரு மா மகத்தை முறை செய்வன்—ஒரு பெரிய சிறந்த யாகத்தை யான் முற் கூறிய

முறைப்படி செய்வேன், முற்றியிடுமேல்—அது முடிவுபெறுமானல், பின்னுக நீவிர் புரிமின்கள் என்று—அதன்பின்பு அதனைக் கடைப்பிடித்து நீவிருஞ் செய்யுங்கள் என்று, பீடு இல்லவன் புகல—அருட்பெருமையற்ற தக்கன் கூற.

மகவேள்வி உம்மைத்தொகையுமாம்; மகமும் வேள்வியும் யாகபேதங்கள். (5)

நீமுன்னொர் வேள்வி புரிகின்ற தைய
நெறியென் றிசைப்ப வவரைப்
போமின்கள் யாரு மெனவே புகன்று
புரிதோறு மேவி மிகவு
மேமங்கொள் சிந்தை யுளதக்க னூழி
னியல்பா லதற்பி னொருநா
ளோமஞ்செய் வேள்வி புரிவான்வி ரும்பி
யுள்ளத்தி லுன்னி முயல்வான்.

ஐய நீ முன் ஒர் வேள்வி புரிகின்றது நெறி என்று இசைப்ப—ஐயனே நீயே முதற்கண் ஒரு யாகத்தைச் செய்கின்றது முறையாமென்று கூற, அவரை யாரும் போமின்கள் என புகன்று—அத்தேவர்களை நீவிர் யாவரும் போகக் கடவீர்கள் என்று கூறி, புரிதோறும் ஏவி—அவர்களுடைய நகரங்கள் தோறும் அவர்களை அனுப்பிவிட்டு, மிகவும் ஏமம் கொள் சிந்தை உள தக்கன்—மிகவும் இறுமாப்புக் கொண்ட உள்ளத்தையுடைய தக்கன், ஊழின் இயல் பால்—ஊழ் இருந்தவாற்றால், அதற்பின் ஒருநாள்—அதன்பின்பு ஒருதினம், ஓமம் செய் வேள்வி புரிவான் விரும்பி—ஆகுதி வழங்குகின்ற யாகம் ஒன்றனைச் செய்ய விரும்பி, உள்ளத்தில் உன்னி முயல்வான்—செய்யவேண்டியவைகளை மனத்தில் எண்ணி முயற்சி செய்வானாயினன்.

முயல்வான் என்பதைப் பெயராக்கி வருஞ் செய்யுளில் முடிபு காண்டலு மாம். (6)

தொட்டா மனுத்தொன் மயனைத் தனது
சுதரென்ன முன்ன முதவிக்
கட்டா மரைக்குள் விதிபோல நல்கு
கலைகற் றுளானை விளியா
முட்டாத வேள்வி யதுவொன்று செய்வன்
முனிவோர் கடேவ ருறைவா
னெட்டாத வெல்லை தனிலின்றொர் சாலை
யியல்பால் விதித்தி யெனவே.

தொட்டா மனு தொன் மயனை—துவட்டாமனு பழைய மயன் என்னு மிவர்களை, தனது சுதர் என்ன முன்னம் உதவி—தனது பிள்ளைகள் என்னும்படி

முன்னரே பெற்று, கள் தாமரைக்குள் விதிபோல—தேன் பொருந்திய தாமரைமலரின் மீதிருக்கும் பிரமாவைப்போல, நல்கு கலை கற்றுளானை—படைக்குங் கலையைக் கற்றேனுகிய விசுவகன்மனை, விளியா—அழைத்து, முட்டாத வேள்வி ஒன்று செய்வன்—இடையூறில்லாத யாகம் ஒன்று செய்வேன், முனிவோர்கள் தேவர்கள் உறைவான்—முனிவர்களும் தேவர்களும் இருக்கும்பொருட்டு, எட்டாத எல்லை தனில்—விஸ்தாரமான இடத்தில், ஓர் சாலை இயல்பால் இன்று விதித்தி என—ஒரு சாலையை முறையானே இப்பொழுது உண்டாக்கக்கடவை என்று கூற.

துவட்டா முதலியவர்கள் நல்கு கலை வல்லோர். மனு, மனுஷவர்க்கத்தைத் தோற்றுவிப்பவர். மற்றையோர் சிற்பம் வல்லோர். இங்கே நல்கு கலை சிற்பசாத்திரம். (7)

### வேறு

இனிதென விறைஞ்சியே யேகிக் கங்கையம்
புனனதி யதனெரு புடைய தாகிய
கனகல மென்பதோர் கவின்கொள் வைப்பிடை
வினைபுரி கம்மியன் விதித்தன் மேயினுன்.

வினைபுரி கம்மியன் இனிது என இறைஞ்சி ஏகி—சிற்பத் தொழிலினைச் செய்யும் விசுவகன்மன் நல்லது என்று வணங்கிச் சென்று, கங்கை அம் புனல் நதியதன் ஒரு புடையது ஆகிய—கங்கையாகிய அழகிய நீரினையுடைய நதியின் ஒருசார் பொருந்திய, கனகலம் என்பதோர் கவின்கொள் வைப்பிடை—கனகலம் என்று சொல்லப்படுகின்ற அழகியதோரிடத்தில், விதித்தன் மேயினுன்—யாகசாலையை உண்டாக்கத் தொடங்கினுன். (8)

பத்துநூ றியோசனைப் பரப்பு நீளமு
மொத்திடும் வகையதா வொல்லை நாடியே
வித்தக வன்மையான் வேள்விக் கோரர
ணத்தகு பொழுதினி லமைத்து நல்கினுன்.

பரப்பு—யாகத்துக்குரிய இடம், பத்து நூறு யோசனை நீளமும்—ஆயிரம் யோசனை நீளமும் அத்துணை அகலமும், ஒத்திடும் வகையதா—தம்முள் ஒக்கும் வகையாக, வேள்விக்கு ஓர் அரண்—அவ்வியாகசாலைக்கு ஒரு மதிலை, ஒல்லை நாடி—விரைவில் ஆராய்ந்து, வித்தக வன்மையால்—சிற்ப சாதுரிய வல்லபத்தால், அத்தகு பொழுதினில் அமைத்து நல்கினுன்—அந்த ஏற்ற சமயத்திலேதானே அமைத்தலைச் செய்வான் ஆயினுன்.

நீளமும் என்ற உம்மையான் அகலமும் வருவிக்கப்பட்டது. அது பகுதிப் பொருள் விகுதி. (9)

நாற்றிசை மருங்கினு நான்கு கோபுரம்
வீற்றுவீற் றுதவிய வியன்கொ ணொச்சியி
லேற்றிடு ஞாயில்க ளியற்றி யன்னதை
யாற்றலை யுடையதோ ரரண மாக்கினன்.

நாற்றிசை மருங்கினும் நான்கு கோபுரம் வீற்று வீற்று உதவி—நான்கு திக்குக்களிலும் நான்கு கோபுரங்களை வேறு வேறு அமைத்து, அ வியன்கொள் நொச்சியில்—அந்தப் பெருமை பொருந்திய மதிலில், ஏற்றிடு ஞாயில்கள் இயற்றி—பொருத்தமான ஞாயில்களையும் அமைத்து, அன்னதை—அந்தமதிலை, ஆற்றலை உடையது ஓர் அரணம் ஆக்கினன்—வலி படைத்ததோர் அரணாகச் செய்தான்.

ஞாயில் மதிலுறுப்பு. அது மறைந்து நின்று அம்பு எய்தற்குரியது. இதனை: ஏப்புழை, ஏவறை, முடக்கறை என்றுங் கூறுவர். இனி, ஞாயில் என்பதற்கு வாயில் என்று உரைப்பாருமுளர். அரண்—பாதுகாப்பு. *(10)*

உள்ளுற வணங்கின ருறைதற் கோரிடை
தெள்ளிதி னல்கியே தேவர் தம்மொடு
வள்ளுறை வேற்கணார் மருவி யாடுவான்
புள்ளுறை வாவியும் பொழிலு மாக்கினன்.

அணங்கினர் உள்ளுற உறைதற்கு—தேவப் பெண்கள் உள்ளே இருத்தற்கு, ஓர் இடை தெள்ளிதின் நல்கி—ஓரிடத்தை விளக்கம் உடையதாகச் செய்து, வள்ளுறை வேற்கணார்—கூர்மை பொருந்திய வேல்போன்ற கண்களையுடைய அத் தேவப்பெண்கள், தேவர் தம்மொடு மருவி ஆடுவான்—தேவர்களோடு கூடி விளையாடுதற்கு, புள் உறை வாவியும் பொழிலும் ஆக்கினன்—புட்கள் உறைகின்ற வாவிகளையுஞ் சோலைகளையும் உண்டாக்கினன்.

புள்—வண்டு; பறவையுமாம். *(11)*

அப்பரி சமைத்துமே லமரர் வேதிய
ரெப்பரி சனரும்வந் தீண்டி வெஃகின
துய்ப்பதற் கொத்திடு சுவைகொ டீம்பதம்
வைப்பதோ ரிருக்கையு மரபிற் றந்தனன்.

அப்பரிசு அமைத்து—அவ்வாறு செய்து, மேல்—அதன் பின்பு, அமரர் வேதியர் எப்பரிசனரும் வந்து ஈண்டி—தேவர்களும் பிராமணர்களும் மற்றை எல்லாப் பரிசனங்களும் வந்து செறிந்து, வெஃகின துய்ப்பதற்கு—விரும்பியவைகளை உண்ணும் பொருட்டு, சுவை கொள் ஒத்திடு தீம்பதம்—சுவைகள் மாறின்றி ஒன்றோடொன்று ஒத்திருக்கின்ற இனிய அன்னம் முதலிய உணவு

வகைகள், வைப்பது ஓர் இருக்கையும் மரபில் தந்தனன்—வைப்பதற்கேற்ற ஒப்பில்லாத சாலைகளையுஞ் சிற்பநூல் விதிப்படி உண்டாக்கினன்.

துய்ப்பதற்கு ஒத்திடு—உண்பதற்குப் பொருத்தமான, எனினுமாம். (12)

அந்தண ராதியோ ரமரர் யாவரும்
வந்துண வருந்துவான் வரம்பில் சாலைக
ளிந்திர வுலகென விமைப்பி லீந்தனன்
முந்தையின் மகவிதி முழுது நாடினன்.

முந்தையின் மகவிதி முழுதும் நாடினன்—பழைமையாகிய யாக விதிகள் முழுவதையும் ஆராய்ந் தறிந்தவனான விசுவகன்மன், அந்தணர் ஆதியோர்—பிராமணர் முதலியவர்களும், அமரர் யாவரும்—தேவர்க ளனைவரும், வந்து உணவு அருந்துவான்—வந்து உணவு அருந்துதற்கு, வரம்பில் சாலைகள்—அளவில்லாத போசன சாலைகளை, இந்திர உலகு என இமைப்பில் ஈந்தனன்—இந்திரனுடைய உலகம் என்று சொல்லும்படி இமைப்பொழுதில் உண்டாக்கினன். (13)

விருந்தினர் பெற்றிட விரைமென் பாளித
நரந்தமொ டாரம்வீ நறைகொண் மான்மத
மருந்துறு வெள்ளடை யான பாகிவை
யிருந்திடு சாலையு மியற்றி னனரோ.

விருந்தினர் பெற்றிட—விருந்தினராய் வந்தவர்கள் பெறும்வண்ணம், விரை மென் பாளிதம்—வாசனை பொருந்திய மென்மையான சந்தனக்குழம்பும், நரந்தமொடு ஆரம் வீ—வாசனைப் பொருள்களும் முத்து மாலைகளும் புஷ்பங்களும், நறை கொள் மான் மதம்—மணம்பொருந்திய கஸ்தூரியும், அருந்துறு வெள் அடை—அருந்துதற்குரிய வெற்றிலையும், பாகு—பாக்கும், ஆன இவை—ஆகிய இவைகள், இருந்திடு சாலையும் இயற்றினன்—இருக்குஞ் சாலைகளையும் உண்டாக்கினன். (14)

ஆனபல் வகையுடை யாடை செய்யபூண்
மேனதொ ரம்பொனின் வியன்கொள் குப்பைக
ளேனைய வெறுக்கைகண் மணிகள் யாவையுந்
தானம தியற்றிடத் தான நல்கினன்.

பல்வகையான உடை ஆடை—பலவகையான உடுத்தற்குரிய வஸ்திரங்கள், செய்ய பூண்—செப்பமாய ஆபரணங்கள், மேனது ஓர் அம் பொனின் வியன் கொள் குப்பைகள்—உயர்ந்த ஒப்பில்லாத அழகிய பொன்னாலாகிய பலவகைக்

குவியல்கள், ஏனைய வெறுக்கைகள்—ஏனைய செல்வங்கள், மணிகள்—இரத்தினங்கள், யாவையும்—ஆகிய எல்லாவற்றையும், தானம் இயற்றிட—தானம் வழங்குதற்கு, தானம் நல்கினன்—உரிய இடங்களை உண்டாக்கினன்.

(15)

அது பகுதிப்பொருள் விகுதி.

கடிகெழு சததளக் கமல மேலுறை
யடிகடன் னகர்கொலென் றையஞ் செய்திட
நடைதரு வேள்விசெய் நலங்கொள் சாலைய
திடையுற வமைத்தனன் யாரும் போற்றவே.

கடி கெழு சத தளக் கமல மேல் உறை—வாசனை பொருந்திய நூறு இதழ்களைக் கொண்ட தாமரைமலர்மீதிருக்கின்ற, அடிகள் தன் நகர்கொல் என்று ஐயம் செய்திட—பிரமதேவருடைய நகரமோ என்று ஐயுறும்படி, நடை தரு வேள்விசெய் நலங்கொள் சாலையது இடை—நிகழ்கின்ற யாகஞ் செய்தற்குரிய நலங்களைக்கொண்ட யாகசாலையினிடத்தே, உற—பொருந்தும்படி, யாரும் போற்ற அமைத்தனன்—யாவருந் துதிக்கும்படி முற்கூறிய அனைத்தையும் உண்டாக்கினன்.

(16)

நூறெனும் யோசனை நுவலு மெல்லையின்
மாறகல் சாலையின் வன்னி சேர்தரக்
கூறிய மூவகைக் குண்டம் வேதிகை
வேறுள பரிசெலாம் விதித்தல் செய்தனன்.

நூறு எனும் யோசனை நுவலும் எல்லையின்—நூறு யோசனை என்று சொல்லப்படும் எல்லையினை யுடைய, மாறு அகல் சாலையின்—ஒப்பில்லாத யாக சாலைக்கண்ணே, வன்னி சேர்தர—அக்கினி பொருந்துமாறு, கூறிய மூவகைக் குண்டம் வேதிகை—சாத்திரத்திற் கூறப்பட்ட சதுரம் வட்டம் கோணம் என்னும் மூவகைக் குண்டங்களும் யாக வேதிகைகளும், வேறு உள பரிசு எலாம்—வேருக யாகத்துக்குரியனவாயுள்ளன யாவும், விதித்தல் செய்தனன்—உண்டாக்கினன்.

(17)

மேலொடு கீழ்புடை வெறுக்கை யின்மிசைக்
கோலநன் மணிகளாற் குயிற்றி வாவியுஞ்
சோலையும் பறவையுந் தோமி றேவரும்
போலிய வோவியம் புனைந்திட் டானரோ.

மேலொடு கீழ் புடை—மேலுங் கீழும் பக்கமும், வெறுக்கையின் மிசை—பொன்னின் மீது, கோலநன் மணிகளாற் குயிற்றி—அழகிய நல்ல இரத்

தினங்களாற் சித்திரம் இழைத்து, வாவியும் சோலையும் பறவையும்—வாவி களுஞ் சோலைகளும் பறவைகளும், தோம் இல் தேவரும்—குற்றமற்ற தேவர் களும், போலிய ஓவியம்—போன்ற சித்திரங்களை, புனைந்திட்டான்—புனைந்து அலங்காரஞ் செய்தான். (18)

புண்டரீ காசனம் பொருந்து நான்முகன்
றண்டுள வோனிவர் தமக்கி ருக்கையு
மெண்டிசை வாணருக் கியலி ருக்கையு
மண்டருக் கிருக்கையு மருளல் செய்துமேல்.

புண்டரீக ஆசனம் பொருந்தும் நான்முகன்—தாமரை மல ராசனத்தில் இருக்கும் பிரமதேவர், தண் துளவோன்—தண்ணிய துளவமாலையை யணிந்த விஷ்ணு, இவர் தமக்கு இருக்கையும்—ஆகிய இவர்களுக்கு ஆசனங்களும், எண் திசை வாணருக்கு இயல் இருக்கையும்—திக்குப் பாலகர்க்கு இயைந்த ஆசனங்களும், அண்டருக்கு இருக்கையும்—தேவர்களுக்கு ஆசனங்களும், அருளல் செய்து—உண்டாக்கி, மேல்—அதன் பின்பு. (19)

தொக்குறு முனிவரர் தொல்லை வேதிய
ரொக்கலின் மேயின ருறையி ருக்கையுந்
தக்கனுக் கிருக்கையுஞ் சமைத்து நல்கினன்
வைக்குறு தவிசினூன் மரபி னுடியே.

தொக்குறு முனிவரர்—தொகுதியாய்ப் பொருந்திய முனி சிரேட்டர்கள், தொல்லை வேதியர்—பழைய பிராமணர்கள், ஒக்கலின் மேயினர்—சுற்றத்தவர் களாய் வந்தவர்கள், உறை இருக்கையும்—இருத்தற்குரிய ஆசனங்களையும், தக்கனுக்கு இருக்கையும்—தக்கனுக்கு ஆசனத்தையும், வைக்குறு தவிசின் நூல் மரபின் நாடி அமைத்து நல்கினன்—வைத்தல் உறுகின்ற ஆசனத்துக் குரிய நூன்முறையால் ஆராய்ந்து உண்டாக்கிக் கொடுத்தான். (20)

தக்கனை வணங்கிநின் சாலை முற்றிய
புக்கனை காண்கெனப் புனைவன் செப்பலு
மக்கண மதுதெரிந் தளவி லாதர
மிக்கனன் மகிழ்ந்தனன் விம்மி தத்தினன்.

புனைவன்—விசுவகன்மன், தக்கனை வணங்கி—தக்கனை வணக்கஞ் செய்து, நின் சாலை முற்றிய—உனது யாகத்துக்குரிய சாலைகள் முற்றுப்பெற்றன; புக்கனை காண்க எனச் செப்பலும்—சென்று காண்பாயாக என்று கூறுதலும், அக்கணம் அது தெரிந்து—அப்பொழுதே அதனைச் சென்று கண்டு, அளவு இல் ஆதரம் மிக்கனன் மகிழ்ந்தனன்—அளவில்லாத அன்பு மிகுந்து மகிழ்ந்து, விம்மிதத்தினன்—ஆச்சரியம் உடையவன் ஆயினன். (21)

பூங்கம லத்தமர் புனிதன் கான்முளை
பாங்கரின் முனிவரிற் பலரைக் கூவியே
தீங்கனன் மாமகஞ் செய்ய நூன்முறை
யாங்கனம் வலித்தன னவர்க்குச் செப்புவான்.

பூங்கமலத்து அமர் புனிதன் கான்முளை—தாமரைமலரில் இருக்கும் புனிதரான பிரமதேவரின் புதல்வனுன தக்கன், பாங்கரின் முனிவரிற் பலரைக் கூவி—பக்கத்திலிருந்த முனிவர்களிற் பலரை விளித்து, நூன்முறை—சாத்திரவிதிப்படி, தீங்கனல் மாமகம் செய்ய வலித்தனன்—நல்ல அக்கினியோடு கூடிய பெரிய யாகத்தைச் செய்தற்கு மனவுறுதிகொண்டவனுய், ஆங்கனம் அவர்க்குச் செப்புவான்—அவ்விடத்தில் அவர்களுக்குச் சொல்லுவானுயினுன். (22)

தருவுறு சமிதைகள் சாகை தண்ணடை
பரிதிகண் மதலைநாண் பறப்பை பல்பசு
வரணிநன் முதிரைக ளாதி யாவிதற்
குரியன வுய்த்திரென் ளுல்லை யேவினுன்.

தருவுறு சமிதைகள்—தருக்களிற் பொருந்திய சமித்துக்கள், சாகை—கிளைகள், தண் அடை—தண்ணிய இலைகள், பரிதிகள்—விட்டரங்கள், மதலை—யாகத்தம்பம், நாண்—தருப்பைக்கயிறு, பறப்பை—நெய்விடும் பாத்திரம், பல் பசு—பலவாகிய யாகப் பசுக்கள், அரணி—தீக்கடைகோல், நல் முதிரைகள்—நல்ல தானியங்கள், ஆதியா—முதலியனவாக, இதற்கு உரியன உய்த்திர் என்று—இந்த யாகத்துக்குரியவைகளைக் கொண்டுவாருங்கள் என்று, ஒல்லை ஏவினுன்—விரைவாக அனுப்பினுன்.

விட்டரங்கள் ஆசனமாகிய பீடங்கள். இவை யாக வேதிகையி லிடப் படுவன. வட்டவடிவினவாதல் பற்றிப் பரிதிகள் எனப்பட்டன. நாண் யாகப் பசுக் கட்டுங் கயிறுமாம். நெய்விடும் பாத்திரம் பறவை வடிவினதாதலின் பறப்பை எனப்பட்டது. யாக வேதிகையிற் சித்திரிக்கும் பறவை வடிவமும் பறப்பை எனப்படும். அதில் யாகப் பசுவை நிறுத்துதலினுலே, 'பறப்பைப் படுத்துப் பசுவேட்டு' என்றது தேவாரம். யாகத்திற் பலியிடும் ஆடு முதலியன பசுவெனப்படுதலின் பல்பசு என்ருர். பலியாவது பசுத்துவ நீக்கமாம். 'புன்மையாம் பசுத் தடிந்து' என்பது காமதகனம். காமன் புன்மையாகிய பசுத்துவம் தடியப்பட்டு உயர்நிலை எய்தி எழுந்தது யாகத்தின் பெருநிலையை உணர்த்துவதாம்.

'புன்மையாம் பசுத்த டிந்து புரையில் வேள்வி யாற்றியே
தொன்மைபோ லெழுப்பு மாறு சுருதி சொற்ற வாறு'

'காமதகனம்' எழுபத்திரண்டாஞ் செய்யுள். இங்கே வருந் தொன்மை, புன்மையாகிய முந்திய நிலை அன்றென்பது சிந்திக்கற்பாலதாம். (23)

ஆனெடு நிதிகளை மணியை யைந்தருக்
கானினை யழைத்துநம் மகத்தைக் காணிய
மாநிலத் தந்தணர் வருவ ருண்டியு
மேனைய பொருள்களு மீமென் றோதினன்.

ஆனெடு நிதிகளை—காமதேனுவையும் சங்கநிதி பதுமநிதிகளையும், மணியை—சிந்தாமணியையும், ஐந்தருக் கானினை-ஐந்தருக்களாகிய சோலைகளையும், அழைத்து—விளித்து, நம் மகத்தைக் காணிய மாநிலத்து அந்தணர் வருவர்—நமது யாகத்தைத் தரிசித்தற்குப் பெரிய பூமியில் உள்ள பிராமணர்கள் வருவார்கள், உண்டியும் ஏனைய பொருள்களும் ஈம் என்று ஓதினன்—அவர்களுக்கு உணவும் பிற பொருள்களும் உதவுங்கள் என்று பணித்தான்.

ஐந்தரு: அரிசந்தானம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பன. (24)

நல்விடை கொண்டுபோய் நவையி லான்முதற்
பல்வகை யவையெலாம் படர்ந்து வீற்றுவீற்
றொல்வதோ ரிடந்தொறு முற்ற வாயிடைச்
செல்வதோர் பொருளெலாஞ் சிறப்பி னல்கவே.

நவை இல் ஆன் முதற் பல்வகை அவை எலாம்—குற்றமில்லாத காமதேனு முதலிய பலவகைப்பட்டனவாகிய அவைகள் அனைத்தும், நல் விடை கொண்டு போய்—நன்கு விடைபெற்றுக்கொண்டு சென்று, படர்ந்து—பரந்து, வீற்று வீற்று ஒல்வதோர் இடந்தொறும்—வேறு வேறு இயைந்த இடந்தோறும், ஆயிடை—அவ்விடத்தின்கண், செல்வது ஓர் பொருள் எலாம்—கொடுத்தற்குரிய சிறந்த பொருள்களை யெல்லாம், சிறப்பின் நல்க உற்ற—சிறப்பாகக் கொடுத்தற்கு இருந்தன.

இடந்தொறுங் கொடுக்கும்முகமாக இருந்தன என்பதாம். (25)

தனதுறு கிளைஞராய்த் தணப்பி லாததோர்
முனிவரர் தங்களின் முப்ப தாயிரர்
துனியறு வோர்தமைச் சொன்றி யேனவை
யனைவரும் விருப்புற வளித்தி ரென்றனன்.

தனது உறு கிளைஞராய்—தன்னுடைய உற்ற சுற்றத்தவர்களாய், தணப்பு இலாதது ஓர் முனிவரர் தங்களில்—நீங்குதலில்லாத ஒப்பற்ற முனி சிரேட்டர்களில், துனி அறுவோர் முப்பதாயிரர் தமை—நிகழ்ச்சிகளில் வெறுப்பில்லாத முப்பதாயிரவர்களை, சொன்றி ஏனவை—சோற்றையும் ஏனையவற்றையும், அனைவரும் விருப்பு உற—யாவரும் விரும்பி ஏற்றுக்கொள்ள, அளித்திர் என்றனன்—கொடுக்குதிர் என்று பணித்தான். (26)

மற்றவர்க் கிருதிற மாத வத்தரை
யுற்றனர் யாவரு முண்டி யன்றியே
சொற்றன யாவையுந் தொலைவின் றீமென
நற்றவத் தயன்மக னயப்புற் றேவினான்.

அவர்க்கு இருதிற மாதவத்தரை—முற்கூறப்பட்ட முனிவர்களின் தொகையினும் இருமடங்கு தொகையினராகிய முனிவர்களை, உற்றனர் யாவரும்—இங்கே வந்தவர் அனைவரும், உண்டி அன்றி—உணவு அல்லாமல், சொற்றன யாவையும்—கேட்டன யாவற்றையும், தொலைவு இன்று—ஓய்வு இல்லாமல், ஈம் என—கொடுக்குதிர் என்று, நல் தவத்து அயன் மகன்—நல்ல தவத்தையுடைய பிரமாவின் புதல்வனான தக்கன், நயப்புற்று ஏவினான்—விருப்பத்தோடு பணித்தான்.

அவர்க் கிருதிறம்—அறுபதினாயிரம். (27)

தீதினை நன்றெனத் தெளியு நான்முகன்
காதல னோர்மகங் கடிதி யற்றுவான்
வேதியர் விண்ணவர் யாரு மேவுவான்
றூதரை நோக்கியே யினைய சொல்லுவான்.

தீதினை நன்று எனத் தெளியும் நான்முகன் காதலன்—குற்றத்தைக் குணமென்று துணியும் பிரம புத்திரனான தக்கன், ஓர் மகம் கடிது இயற்றுவான்—ஒப்பற்ற யாகத்தை விரைந்து செய்தற்கு, வேதியர் விண்ணவர் யாரும் மேவுவான்—பிராமணர்களுந் தேவர்களும் மற்றையோர் யாவரும் வரும் பொருட்டு, தூதரை நோக்கி இனைய சொல்லுவான்—தூதுவர்களைப் பார்த்து இவைகளைச் சொல்லுவானாயினான். (28)

நக்கனை யல்லதோர் நாகர் தங்களை
மிக்குறு முனிவரை வேத மாந்தரைத்
திக்கொடு வான்புவி யாண்டுஞ் சென்றுகூ
யுய்க்குதி ராலென வுரைத்துத் தூண்டினான்.

ஓர் நக்கனை அல்லது—சுற்றத் தொடர்பில்லாத ஒருவனும் நிர்வாணியுமான அந்தச் சிவனை அழைத்தல் செய்யாமல், நாகர் தங்களை—தேவர்களையும், மிக்கு உறு முனிவரை—எண்ணால் மிக்க முனிவர்களையும், வேத மாந்தரை—வைதிகப் பிராமணர்களையும், திக்கொடு வான் புவி யாண்டும் சென்று—திக்குக்கள் விண் மண் ஆகிய எவ்விடங்களிலுஞ் சென்று, கூய் உய்க்குதிர் என உரைத்துத் தூண்டினான்—அழைத்துக்கொண்டு வாருங்கள் என்று கூறி அனுப்பினான்.

'அல்லது', கூய் என்பதற்கு எதிர்மறையாய பொருளில் வந்தது. நக்கனே முக்கியமானவன்; அவனையன்றி மற்றையோரையுங் கூய் உய்க்குதிர் என்ற பொருள் தக்கன் வாக்கில் அவனறியாமலே அமைந்து கிடந்தமையுங் காண்க. (29)

முந்துற வரித்திடு முனிவ ரவ்வழித்
தந்தனர் மகஞ்செயத் தகுவ யாவையும்
வந்தன நோக்கியே மரபி லுய்த்திரென்
றெந்தைத நருளிலா னியம்பி னுனரோ.

முந்துற வரித்திடு முனிவர்—முன்னமே வரிக்கப்பட்ட முனிவர்கள், அவ்வழி மகஞ் செயத் தகுவ யாவையும் தந்தனர்—அவ்விடத்தில் யாகஞ் செய்தற்குத் தக்கனவாய பொருள்க ளனைத்தையுங் கொண்டுவந்தார்கள்; வந்தன நோக்கி—அவர்கள் கொண்டுவந்தனவாகிய பொருள்களைப் பார்த்து, மரபில் உய்த்திர் என்று—அவைகளை முறையானே வைக்கவேண்டிய இடங் களில் வைக்குதிர் என்று, எந்தை தன் அருள் இலான் இயம்பினுன்—எம் பெருமானுடைய திருவருளில்லாத தக்கன் கூறினுன்.

வரித்தல், ஈண்டு நியமித்தல் என்னும்பொருட்டு. இக்கிரியைக்கு இவர் என்று நியமிக்கப்பட்ட முனிவர் என்க. (30)

வரித்திடு பான்மையின் வழாது போற்றிடு
மிருத்தினர் தமிற்பலர் யாக சாலையுட்
டிருத்திய வேதிவாய்ச் செறிபல் பண்டமு
நிரைத்தனர் பறப்பையு நிலையிற் சேர்த்தினுர்.

வரித்திடு பான்மையின்—நியமிக்கப்பட்ட முறையானே, வழாது போற் றிடும் இருத்தினர் தமில் பலர்—தமக்கு விதித்தவற்றை வழுவின்றிச் செய்யும் இருத்துவிக்குக்களிற் பலர், யாக சாலையுள் திருத்திய வேதிவாய்—யாகசாலை யுட் செப்பனிடப்பட்ட வேதிகைகளில், செறி பல் பண்டமும்—செறிந்த பலவகைப் பொருள்களையும், நிரைத்தனர்—நிரைத்து, பறப்பையும் நிலையிற் சேர்த்தினுர்—நெய்ப் பாத்திரங்களையும் வைக்கவேண்டு மிடத்தில் வைத் தார்கள்.

இருத்துவிக்கு—யாக புரோகிதன். வேதி—வேதிகை; திண்ணை. (31)

அசைவறு வேதியி னணித்தி னுேரிடை
வசைதவிர் மதலைகண் மரபி னுட்டுபு
பசுநிரை யாத்தனர் பாசங் கொண்டுபின்
னிசைதரு பூசையு மியல்பி னுற்றினுர்.

அசைவு அறு வேதியின் அணித்தின் ஓர் இடை—அசைவற்ற வேதியின் சமீபத்தில் ஒரு பக்கத்தில், வசை தவிர் மதலைகள் மரபின் நாட்டுபு—குற்ற மற்ற யாகத் தம்பங்களை விதிப்படி நாட்டி, பாசங்கொண்டு பசுநிரை யாத்தனர்—கயிறுகளால் யாகப் பசுநிரைகளை அத் தம்பங்களிற் கட்டி, பின்—பின்பு, இயல்பின் இசைதரு பூசையும் ஆற்றினுர்—முறைப்படி அவற்றுக்கு விதித்த பூசையையுஞ் செய்தார்கள்.

பசு என்பது யாகத்திற் பலியிடும் ஆடு முதலியவைகளுக்கு வழங்குவதொரு குறியீடு ; பசுத்துவம் போக்கப்படுதலின் அக்குறியீடு வழங்கலாயிற்று. நிரை வரிசை என்னும்பொருட்டு. (32)

வேறு

நடையிது நிகழும் வேலை நலமிலாத் தக்க னல்கும்
விடைதலைக் கொண்டு போய வியன்பெருந் தூதர் தம்மிற்
புடவியின் மறையோர்க் கெல்லாம் புகன்றனர் சிலவர் வெய்யோ
னுடுபதி நாள்கோண் முன்ன ருரைத்தனர் சிலவ ரன்றே.

இது நடை நிகழும் வேலை—இந்த யாகக் கிரியைகள் இவ்வாறு நடந்து கொண்டிருக்க, நலம் இலாத் தக்கன் நல்கும் விடை தலைக் கொண்டு போய வியன் பெருந் தூதர் தம்மில்—அருட்செல்வம் இல்லாத தக்கன் இட்ட கட்டளையைத் தலைமேற்கொண்டு சென்ற மிகப் பெருமை படைத்த தூதுவர் களுக்குள்ளே, சிலவர் புடவியின் மறையோர்க்கெல்லாம் புகன்றனர்—சிலர் பூமியிலுள்ள பிராமணர்க ளனைவர்க்குஞ் சொன்னுர்கள்; சிலவர் வெய்யோன் உடுபதி நாள் கோள் முன்னர் உரைத்தனர்—சிலர் சூரியன் சந்திரன் நட்சத்திரம் கிரகம் என்னும் இவற்றின் முன்னிலையிற் சென்று சொன்னுர்கள். (33)

காவல ராகி வைகுங் கந்தரு வத்த ராதி
யாவதோர் திறத்தோர்க் கெல்லா மறைந்தனர் சிலவ ராசை
மேவிய கடவு ளோர்க்கும் விளம்பினர் சிலவர் முப்பாற்
றேவர்கள் யாருங் கேட்பச் செப்பினர் சிலவ ரன்றே.

சிலவர்—சிலர், காவலர் ஆகி வைகும்—அரசர்களாயிருக்கும், கந்தருவத்தர் ஆதி—கந்தருவர் முதலிய, ஆவதோர் திறத்தோர்க்கு எல்லாம்—அத்தகைய தலைமைப்பாடுடையவர்களுக் கெல்லாம், அறைந்தனர்—சொன்னுர்கள் ; சிலவர்—சிலர், ஆசை மேவிய கடவுளோர்க்கும் விளம்பினர்—திக்குக்களிற் பொருந்திய திக்குப் பாலகர்களாகிய தேவர்களுக்குஞ் சொன்னுர்கள் ; சிலவர்—சிலர், முப்பால் தேவர்கள் யாரும் கேட்பச் செப்பினர்—முத்திறத்தாராய தேவர்களெல்லாங் கேட்கும்படி சொன்னுர்கள்.

முப்பால் தேவர்கள் : வசுக்கள் உருத்திரர் மருத்துவர். இவர்களோடெண்ணப்படும் ஆதித்தியர் மேலைச் செய்யுளில் 'வெய்யோன்' என்பதிலடங்குவர். (34)

விண்ணக முதல்வ னுக்கு விளம்பினர் சிலவ ராண்டு
நண்ணிய தேவர்க் கெல்லா நவின்றனர் சிலவர் மேலைப்
புண்ணிய முனிவ ரர்க்குப் புகன்றனர் சிலவ ரேனைப்
பண்ணவர் முன்னஞ் சென்று பகர்ந்தனர் சிலவ ரம்மா.

சிலவர் விண்ணக முதல்வனுக்கு விளம்பினர்—சிலர் வானுலக முதல்வனுன இந்திரனுக்குச் சொன்னுர்கள்; சிலவர் ஆண்டு நண்ணிய தேவர்க்கெல்லாம் நவின்றனர்—சிலர் விண்ணுலகில் வாழுந் தேவர்களுக் கெல்லாஞ் சொன்னுர்கள்; சிலவர் மேலைப் புண்ணிய முனிவரர்க்குப் புகன்றனர்—சிலர் மேலுலகிகிலுள்ள புண்ணியர்களான முனிசிரேட்டர்களுக்குச் சொன்னுர்கள்; சிலவர் ஏனைப் பண்ணவர் முன்னம் சென்று பகர்ந்தனர்—சிலர் மற்றையவிடங்களிலுள்ள முனிவர்கள் எதிரே சென்று அவர்களுக்குஞ் சொன்னுர்கள்.

மேலைப் புண்ணிய முனிவர்—தேவ முனிவர். (35)

வானவர் முதுவன் றொல்லை மன்றன்மா நகரத் தெய்திக்
கோனகர் வாயி னண்ணிக் குறுகினர் காப்போ ருய்ப்ப
மேனிறை காத லோடும் விரைந்தவற் ருழ்ந்து நின்சே
யானவன் வேள்விக் கேக வடிகளென் றுரைத்தார் சில்லோர்.

வானவர் முதுவன் தொல்லை மன்றல் மாநகரத்து எய்தி—தேவர்களுள் முதியோரான பிரமதேவரின் பழைமையும் மங்களகரமும் பொருந்திய நகரமாகிய மனோவதியை அடைந்து, கோனகர் வாயில் நண்ணிக் குறுகினர்—அரசமாளிகையின் வாயிலைச் சமீபித்துப் போய், காப்போர் உய்ப்ப—காவலாளர் உள்ளே விடுப்ப, மேல் நிறை காதலோடும் விரைந்து அவற் ருழ்ந்து—மிக்கு நிறைந்த அன்போடும் விரைந்து அப்பிரமதேவரை வணங்கி, அடிகள்—சுவாமிகாள், நின்சேய் ஆனவன் வேள்விக்கு ஏக என்று—உமது குமாரனுன தக்ஷப்பிரசாபதியின் யாகத்துக்கு எழுந்தருள்க என்று, சில்லோர் உரைத்தார்—சிலர் சொன்னுர்கள். (36)

மேனகு சுடர்செய் தூய விண்டுல கதனை நண்ணி
மானிறை கின்ற கோயின் மணிக்கடை முன்ன ரெய்திச்
சேனையந் தலைவ னுய்ப்பச் சீதரற் பணிந்து வேள்விப்
பான்மைய தியம்பி யெந்தை வருகெனப் பகர்ந்தார் சில்லோர்.

மேல் நகு சுடர் செய் தூய விண்டு உலகதனை நண்ணி—மேலாகிய ஒளி காலுகின்ற தூய விட்டுணுவின் உலகத்தை அடைந்து, மால் நிறைகின்ற கோயில் மணிக்கடை முன்னர் எய்தி—பெருமையாகிய திருநிறைகின்ற அழகிய கடைத்தலை வாய்தலிற் சென்று, சேனையந் தலைவன் உய்ப்ப—சேனைத் தலைவனுன விடுவசேனன் உள்ளே விடுப்ப, சீதரற் பணிந்து—ஸ்ரீதரனுன

திருமாலை வணங்கி, வேள்விப் பான்மையது இயம்பி—யாகத்தின் வரலாற்றைச் சொல்லி, எந்தை வருக எனச் சில்லோர் பகர்ந்தார்—எம்பெருமானே எழுந்தருள்வீராக என்று சிலர் கூறினர்கள். (37)

மற்றது போழ்து தன்னின் மாயவ னெழுந்து மார்பூ
டுற்றிடு திருவும் பாரு முடன்வர வுவணர் கோமான்
பொற்றடந் தோண்மேற் கொண்டு போர்ப்படை காப்பத் தன்பாற்
பெற்றனர் சூழத் தானைப் பெருந்தகை பரவச் சென்றான்.

அது போழ்து தன்னின் மாயவன் எழுந்து—அப்பொழுது மகாவிஷ்ணு மூர்த்தியானவர் எழுந்து, மார்பு ஊடு உற்றிடு திருவும் பாரும் உடன்வர—மார்பின்கட் பொருந்திய திருமகளும் பூமகளும் உடன்வாராநிற்ப, உவணர் கோமான் பொன் தடம் தோள் மேற் கொண்டு—கருடர்கோமானின் அழகிய விசாலித்த தோள்மீதிவர்ந்து, போர்ப்படை காப்ப—பொருகின்ற சேனைகள் காத்துவர, தன்பாற் பெற்றனர் சூழ—தம்மிடம் தமது சாரூபத்தைப் பெற்றவர்களாகிய நாராயணர்கள் சூழ்ந்துவர, தானைப் பெருந்தகை பரவச் சென்றான்—சேனாபதியாகிய விடுவசேனன் துதிக்கச் சென்றார். (38)

செல்லலு மதனை நாடித் திசைமுகக் கடவு ளங்க
ணொல்லையி லெழுந்து முப்பா லொண்டொடி மாத ரோடு
மல்லியங் கமல நீங்கி யன்னமேற் கொண்டு மைந்த
ரெல்லையின் முனிவர் யாரு மேத்தினர் சூழப் போந்தான்.

செல்லலும்—இவ்வாறு மகாவிஷ்ணு செல்லுதலும், திசைமுகக் கடவுள் அதனை நாடி—பிரமதேவர் அதனை அறிந்து, அங்கண் ஒல்லையின் எழுந்து—அவ்விடத்தில் விரைந்தெழுந்து, ஒண்டொடி முப்பால் மாதரோடும்—ஒள்ளிய வளையலையணிந்த காயத்திரி சாவித்திரி சரசுவதி ஆகிய மூன்று சத்திகளோடும், அல்லி அம் கமலம் நீங்கி—அகவிதழினையுடைய அழகிய தாமரையாசனத்தை விடுத்து, அன்னம் மேற் கொண்டு—அன்னத்தின்மீதிவர்ந்து, மைந்தர்—நவப்பிரமாக்களாகிய தம்புதல்வர்கள், எல்லையில் முனிவர்—அளவற்ற முனிவர்கள், யாரும்—ஆகிய யாவரும், ஏத்தினர் சூழப் போந்தான்—துதித்துச் சூழ்ந்துவரச் சென்றார். (39)

மாலொடு பிரம னீண்டி வருதலு மகவா னென்போன்
வேலொடு வில்லும் வாளும் விண்ணவ ரேந்திச் சூழ
நாலிரு மருப்பு வெள்ளை நாகம துயர்த்துத் தங்கள்
பாலுறை குரவ ரோடு பாகமார் விருப்பில் வந்தான்.

மாலொடு பிரமன் ஈண்டி வருதலும்—விஷ்ணுவும் பிரமாவும் பரிவாரங்களோடு கூடிச் செல்லுதலும், மகவான் என்போன்—இந்திரன், விண்ணவர்

வேலொடு வில்லும் வாளும் ஏந்திச் சூழ—தேவர்கள் வேல் வில் வாள் என்கின்ற படைகளை ஏந்திக்கொண்டு சூழ்ந்து வர, நால் இரு மருப்பு வெள்ளை நாகமது உயர்த்து—நான்கு பெரிய தந்தங்களையுடைய வெள்ளை யானையாகிய ஐராவதத்தில் இவர்ந்து, தங்கள் பால் உறை—தேவர்கள்பா லுறைகின்ற, குரவரோடு—வியாழபகவான் முதலிய குரவர்களோடு, பாகம் ஆர் விருப்பில் வந்தான்—அவிப்பாகத்தை நுகரும் விருப்பத்துடன் சென்றான்.

உயர்த்து—உயரச்செய்து. தன்னை உயரச்செய்தலாவது இவர்தலாம். சுக்கிர பகவானையுஞ் சேர்த்துக் குரவர் என்றார். அவர் அசுர குருவாயினும் தேவர்கள்பா லுறைபவ ரெனக. (40)

ஆயவன் புரத்தில் வைகு மரம்பையே முதலா வுள்ள
சேயிழை மார்கள் யாருந் தேவரோ டகன்று ரெங்க
ணாயகன் போந்தா னென்றே நலமிகு சசியென் பாளுந்
தூயதோர் மானத் தேறித் தோகையர் காப்பச் சென்றாள்.

ஆயவன் புரத்தில் வைகும்—அந்த இந்திரனுடைய நகரத்தில் வசிக்கின்ற, அரம்பை முதலா உள்ள சேயிழைமார்கள் யாரும்—அரம்பை முதலிய செம்மையாகிய ஆபரணங்களை யணிந்த தெய்வப் பெண்கள் எல்லாம், தேவரோடு அகன்றார்—தேவர்களோடு சென்றார்கள்; எங்கள் நாயகன் போந்தான் என்று—எங்கள் நாயகனாகிய இந்திரன் சென்றான் என்று கூறி, நலம் மிகு சசி என் பாளும்—நலம் மிக்க இந்திராணியும், தூயது ஓர் மானத்து ஏறி—தூய்மையுடைய விமானத் திவர்ந்து, தோகையர் காப்பச் சென்றாள்—தேவப்பெண்கள் காத்துவரச் சென்றாள். (41)

எண்டிசைக் காவ லோரு மீரிரு திறத்த ரான
வண்டரு முடுக்க டாமு மாரிடத் தொகையு ளோரும்
வண்டுளர் குமுதம் போற்று மதியமு மேனைக் கோளும்
விண்டொட ரியக்கர் சித்தர் விஞ்சையர் பிறரும் போந்தார்.

எண்டிசைக் காவலோரும்—திக்குப்பாலகர்களும், ஈர் இரு திறத்தரான—ஆதித்தியர் உருத்திரர் வசுக்கள் மருத்துவர் என்னும் நான்கு பகுதியினரான, அண்டரும்—முப்பத்துமுக்கோடி தேவரும், உடுக்கள் தாமும்—நட்சத்திரங்களும், ஆரிடத் தொகையுளோரும்—இருடிகளின் கூட்டமும், வண்டு உளர் குமுதம் போற்றும்—வண்டுகள் உளருகின்ற குமுதமலர் தனக்கு நாயகன் என்று வணங்கும், மதியமும்—சந்திரனும், ஏனைக் கோளும்—ஏனைய கிரகங்களும், விண் தொடர்—விண்ணிற் சஞ்சரிக்கின்ற, இயக்கர் சித்தர் விஞ்சையர் பிறரும் போந்தார்—இயக்கர்களுஞ் சித்தர்களும் வித்தியாதரர்களும் மற்றையோர்களுஞ் சென்றார்கள்.

ஆதித்தியர் பன்னிருவர்; உருத்திரர் பதினொருவர்; வசுக்கள் எண்மர்; மருத்துவர் இருவர் ஆகத் தேவர்கள் முப்பத்துமூன்று திறத்தர் என்க. (42)

சேணிடை மதியி னோடு செறிதரு முடுக்க ளான
வாணுதன் மகளிர் யாரு மகிழ்வொடு தந்தை வேள்வி
காணிய வந்தா ரீது கண்ணுறீஇ யவுணர் கோமான்
சோணித புரத்துக் கேளிர் தொகையொடுந் தொடர்ந்து சென்றான்.

சேண் இடை மதியினோடு செறிதரும்—ஆகாயத்தின்கண்ணே சந்திரனோடு செறிந்திருக்கின்ற, உடுக்களான வாள் நுதல் மகளிர் யாரும்—அசுவினி முதலிய இருபத்தேழு நட்சத்திரங்களாகிய ஒளி பொருந்திய நெற்றியினையுடைய பெண்கள் யாவரும், தந்தை வேள்வி காணிய மகிழ்வொடு வந்தார்—தந்தையாகிய தக்கனின் யாகத்தைக் காணும்பொருட்டு மகிழ்ச்சியோடு சென்றார்கள்; அவுணர் கோமான் ஈது கண்ணுறீஇ—அசுரர்க் கரசனான அசுரேந்திரன் இதனைக் கண்டு, தொடர்ந்து—அவர்களைத் தொடர்ந்து, சோணித புரத்துக் கேளிர் தொகையொடு சென்றான்—சோணித புரமான தனது நகரத்தி லுள்ள சுற்றத்தவர்களோடு தானுஞ் சென்றான். (43)

வனைகல னிலவு பொற்றோள் வாசவன் முதலா வுள்ள
வினையரும் பிறரு மெல்லா மிருவர்தம் மருங்கு மீண்டிக்
கனகல வனத்திற் செய்த கடிமகச் சாலை யெய்த
முனிவர ரோடுந் தக்கன் முன்னெதிர் கொண்டு நின்றான்.

வனை கலன் நிலவு பொற்றோள்—அலங்கரிக்கப்பட்ட ஆபரணங்கள் பிரகாசிக்கின்ற அழகிய புயங்களையுடைய, வாசவன் முதலா உள்ள இனையரும் பிறரும் எல்லாம்—இந்திரன் முதலிய இத்தகையாரும் பிறரெல்லாரும், இருவர் தம்மருங்கும் ஈண்டி—பிரம விஷ்ணுக்களாகிய இருவரின் பக்கத்திலும் நெருங்கி, கனகல வனத்திற் செய்த கடி மகச் சாலை எய்த—கனகலம் என்னும் வனத்திற் செய்த காவல் பொருந்திய யாகசாலையை அடைய, தக்கன் முனிவரரோடு முன் எதிர்கொண்டு நின்றான்—தக்கன் முனிசிரேட்டர்களோடு அவர்கள் முன் னிலையிற் சென்று எதிர்கொண்டு நின்றான். (44)

எதிர்கொடு மகிழ்ந்து மேலா மிருவர்தங் களையு மங்கண்
முதிர்தரு காத லோடு முறைமுறை தழுவி வானோர்
பதிமுத லோரை நோக்கிப் பரிவுசெய் தினையர் தம்மைக்
கதுமெனக் கொண்டு வேள்விக் கடிமனை யிருக்கை புக்கான்.

அங்கண் எதிர்கொடு மகிழ்ந்து—அங்கே எதிர்கொண்டு மகிழ்ச்சியெய்தி, மேலாம் இருவர் தங்களையும்—மேலான பிரம விஷ்ணுக்கள் இருவரையும், முதிர்தரு காதலோடு—முதிர்ந்த ஆராமையோடு, முறை முறை தழுவி—தழுவும் முறைப்படி முறையே தழுவுதல் செய்து, வானோர் பதி முதலோரை பரிவு செய்து நோக்கி—தேவேந்திரன் முதலியவர்களை அன்புகூர்ந்து நோக்

குதல் செய்து, இனையர் தம்மை கதுமெனக் கொண்டு—இத்தகையாரை யெல்லாம் விரைந்து அழைத்துக்கொண்டு, வேள்விக் கடி மனை இருக்கை புக்கான்—யாகசாலையுள்ளே காவல்பொருந்திய தனக்குரிய மனையாகிய இருப் பிடத்தை அடைந்தான். (45)

மாலயன் றன்னை முன்னர் மணித்தவி சிருத்தி வான
மேலுறை மகவா ணுதி விண்ணவர் முனிவர் யார்க்கு
மேலுறு தவிசு நல்கி யிடைப்பட விருந்தான் றக்கன்
காலுறு கடலா மென்னக் கடவுண்மா மறைக ளார்ப்ப.

மால் அயன் தன்னை முன்னர் மணித் தவிசு இருத்தி—விட்டுணுவையும் பிரமாவையும் முதற்கண் இரத்தினாசனங்களில் இருத்தி, வானமேல் உறை மகவான் ஆதி விண்ணவர் முனிவர் யார்க்கும்—வானத்தில் வசிக்கும் இந்திரன் முதலிய தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் மற்றை யாவருக்கும், ஏல் உறு தவிசு நல்கி—அவரவர் தாரதம்மியத்துக் கேற்ற ஆசனங்களைக் கொடுத்து, கால் உறு கடலாம் என்ன—காற்றால் மோதுண்ட கடல்போல, கடவுள் மா மறைகள் ஆர்ப்ப—தெய்வத்தன்மை பொருந்திய பெரிய வேதங்கள் முழங்க, இடைப்பட இருந்தான் தக்கன்—அவர்களுக்கெல்லாம் மத்தியில் வீற்றிருந்தான் தக்கப் பிரசாபதி. (46)

அல்லியங் கமல மாது மம்புவி மகளும் வேதாப்
புல்லிய தெரிவை மாரும் பொருவிலா வுடுவி னேருஞ்
சொல்லருஞ் சசியு மேனைச் சூரினர் பிறரும் வேத
வல்லித னிருக்கை நண்ணி மரபின்வீற் றிருந்தார் மன்னோ.

அல்லி அம் கமல மாதும்—அகவிதழினையுடைய அழகிய தாமரை யாசனி யாகிய மகாலக்குமியும், அம் புவிமகளும்—அழகிய பூமிதேவியும், வேதாப் புல்லிய தெரிவைமாரும்—பிரமதேவர் மணந்த சரசுவதி சாவித்திரி காயத்திரி யாகிய மூவர் மாதரும், பொருவு இலா உடுவினேரும்—ஒப்பற்ற அசுவினி முதலிய நட்சத்திரங்களும், சொல் அரும் சசியும்—சொல்லுதற்கரிய புகழினை யுடைய இந்திராணியும், ஏனை சூரினர் பிறரும்—ஏனைய தேவமாதரும் பிறரும், வேதவல்லிதன் இருக்கை நண்ணி—தக்கன் மனைவியாகிய வேதவல்லியின் இருப்பிடத்தை அடைந்து, மரபின் வீற்றிருந்தார்—தத்தமக்கு ஏற்ற இடங் களில் இருந்தார்கள். (47)

மாமலர்க் கடவுண் மைந்தன் மகத்தினை நாடி யாருங்
காமுறு முண்டி மாந்திக் கதுமென மீடு மென்றே
பூமிசை மறையோர் தாமு முனிவரும் போந்து விண்ணோர்
தாமுறு மவையை நண்ணித் தகவினுற் சார்த லோடும்.

முனிவரும்—முனிவர்களும், மாமலர்க் கடவுள் மைந்தன் மகத்தினை நாடி—பெருமை பொருந்திய கமலாசனரான பிரமதேவரின் புதல்வனுன தக்கனுடைய யாகத்தைத் தரிசித்து, யாரும் காமுறும் உண்டி மாந்தி—யாவரும் விரும்பும் உணவை நிறைய உண்டு, கதுமென மீள்தும் என்று—விரைவில் மீண்டு வருவோம் என்று கருதி, பூமிசை மறையோர் தாமும்—பூவுலகத்துப் பிராமணர்களும், விண்ணோர் தாம் உறும் அவையை போந்து நண்ணி—தேவர்கள் மிக இருக்கும் அந்த யாகசாலையைப் போய் அணுகி, தகவினுல் சார்தலோடும்—தத்தந் தகுதிக்கேற்றவாறு சார்ந்திருக்க.

தூதர் வணங்கி நிற்ப மொழிமெனப் பேசலுற்ருர் என, வருஞ் செய்யுளில் முடிபு காண்க. (48)

அழைத்திடப் போன தூத ரனைவரும் போந்து தக்கன்
கழற்றுணை வணங்கி நிற்பக் கருணைசெய் தவரை நோக்கி
விழுத்தகு தவத்தீர் நீவிர் விளித்தனர் தமிலு ருது
பிழைத்தன ருளரோ வுண்டேன் மொழிமெனப் பேச லுற்ருர்.

அழைத்திடப் போன தூதர் அனைவரும் போந்து—அழைக்கச் சென்ற தூதுவர் அனைவரும் வந்து, தக்கன் கழல் துணை வணங்கி நிற்ப—தக்கனுடைய உபய பாதங்களையும் வணங்கி நிற்க, கருணை செய்து—அவர்களுக்குக் கிருபை பாலித்து, அவரை நோக்கி—அவர்களைப் பார்த்து, விழுத்தகு தவத்தீர்—விழுப்பம்மிக்க தவத்தினையுடைய தூதுவர்காள், நீவிர் விளித்தனர் தமில்—நீவிர் இவ்விடம் வருமாறு அழைத்தவர்களுக்குள், உருது பிழைத்தனர் உளரோ—இங்கே வாராது தவறினுரும் உளரேயோ; உண்டேல்—உளராமாயின், மொழிம் என—அவர்கள் நாமங்களைக் கூறுங்கள் என்று கூற, பேசல் உற்ருர்—அத் தூதுவர்கள் கூறுவார் ஆயினுர். (49)

அகத்தியன் சனகன் முன்னோ ரத்திரி வசிட்ட னென்பான்
சகத்துயர் பிருகு மேலாந் ததீசிவெஞ் சாபத் தீயோன்
பகைத்திடு புலத்தை வென்ற பராசர னினைய பாலார்
மகத்தினை யிகழா வீண்டு வருகிலர் போலு மென்ருர்.

அகத்தியன்—அகத்தியர், சனகன் முன்னோர்—சனகாதி முனிவரர், அத்திரி—அத்திரி முனிவர், வசிட்டன் என்பான்—வசிட்டர், சகத்து உயர் பிருகு—உலகில் உயர்ந்த பிருகு முனிவர், மேலாந் ததீசி—மேன்மை பொருந்திய ததீசி முனிவர், வெம் சாபத் தீயோன்—வெவ்விய சாபாக்கினியையுடைய துருவாச முனிவர், பகைத்திடு புலத்தை வென்ற பராசரன்—பகைக்கின்ற ஐம்புலன்களை வென்ற பராசர முனிவர், இனைய பாலார்—இவர்களும் இன்னோரன்னோரும், மகத்தினை இகழா—யாகத்தைப் பொருள்செய்து, ஈண்டு வருகிலர் போலும் என்ருர்—இவ்விடத்துக்கு வாரார்போலும் என்ருர்கள்.

இகழாது விகுதிகெட்டு நின்று, வருகிலர் என்பதன் முதனிலையோடு முடிந்தது. இனி இகழ்ந்து எனப் பொருள் உரைப்பினுமாம். (50)

மற்றது புகல லோடு மலரயன் புதல்வன் கேளா
விற்றிது செய்தார் யாரே முனிவரி லினையர் தாமோ
நெற்றியங் கண்ணி ஞர்க்கு நேயம துடைய ரென்ஞச்
செற்றமொ டுயிர்த்து நக்கான் றேவர்கள் யாரு முட்க.

அது புகலலோடும்—தூதுவர் அதனைச் சொன்னவுடனே, மலரயன் புதல்வன் கேளா—பிரம புத்திரனுன தக்கன் கேட்டு, இற்று இது—இத் தன்மைத்தாகிய இதனை, செய்தார் யாரே—செய்தார் யாவரோ ; முனிவரில் இனையர் தாமோ—முனிவர்களுள் இவர்கள்தாமா, நெற்றி அம் கண்ணி ஞர்க்கு நேயமது உடையர்—அழகிய நெற்றிக்கண்ணையுடைய பித்தருக்கு அன்புடையவர் ; என்ஞ—நன்று நன்று என்று, செற்றமொடு உயிர்த்து—கோபத் தோடு நெட்டுயிர்த்து, தேவர்கள் யாரும் உட்க நக்கான்—தேவர்கள் யாவரும் அஞ்சும்படி சிரித்தான். (51)

சாலை செய் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் – 457.

# ததீசிப் படலம்

அன்ன வேலையி லாரிடர் தம்மொடுந்
துன்னி னானொரு தொல்லிறைக் காகவே
முன்ன மாலமர் மூண்டெழ மற்றவன்
றன்னை வென்ற ததீசியென் பானரோ.

ஒரு தொல் இறைக்காக—பழைய குபன் என்னும் ஓரரசனுக்காக, முன்னம் மால்அமர் மூண்டு எழ—முன்னொருகாலத்திலே திருமாலானவர் போர் மேற்கொண் டெழுந்தபோது, அவன் தன்னை வென்ற—அந்தத் திருமாலை வென்ற, ததீசி என்பான்—ததீசி என்று எடுத்துச் சொல்லப்படும் முனிவர் பிரான், அன்ன வேலையில்—தக்க யாகம் நடந்துகொண்டிருக்குஞ் சமயத்தில், ஆரிடர் தம்மொடும் துன்னினன்—முனிவர் கூட்டத்தோடு அங்கே சென் றருளினர்.

குபன் என்னும் அரசனை ஒருசமயத்தில் ததீசி முனிவர் உதைக்க, அவனுக்காகப் போர் மேற்கொண்டவர் திருமால். (1)

கடிது போந்து கடிமகச் சாலையி
னிடைய தாகி யிமையவர் யாவரு
மடையு மெல்லை யணுகலுங் கண்ணுறீஇக்
கொடிய தக்கன் குறித்துணர் கின்றனன்.

கடிது போந்து—விரைந்து போய், கடி மகச் சாலையின் இடையது ஆகி—காவல்பொருந்திய யாகசாலையின் நடுவட் சென்று, இமையவர் யாவரும் அடையும் எல்லை அணுகலும்—தேவர்கள் எல்லாம் தங்கியிருக்கும் இடத்தை அணுகியபோது, கொடிய தக்கன் கண்ணுறீஇ—கொடியோனாகிய தக்கன் முனிவர்பிரானின் வரவைக் கண்டு, குறித்து உணர்கின்றனன்—அவரைப் பற்றிக் கூர்ந்து சிந்திக்கின்றான். (2)

ஆகு மாகு மரற்குரித் தல்லனிப்
பாக மாமகம் பார்க்கும் பொருட்டினு
லேகி னானெனக் கஞ்சியெ னுநினைந்
தோகை யெய்தி யுளங்குளிர்ப் பாகியே.

ஆகும் ஆகும்—இம் முனிவரின் வருகை தகும் தகும்; அரற்கு உரித்தல்லன்—இவர் சிவன் பக்கத்தைச் சார்ந்தவரல்லர்; இப்பாகம் ஆம் மகம் பார்க்கும் பொருட்டினுல்—இந்த அவிப்பாகத்துக்குரிய யாகத்தைத் தரிசிக்கும்பொருட்டு, எனக்கு அஞ்சி ஏகினுன் என நினைந்து—எனது ஆணைக்கு அடங்கி இங்கே வந்தனர் என்று நினைத்து, ஒகை எய்தி—உவகை யடைந்து, உளம் குளிர்ப்பு ஆகி—மனங் குளிர்ந்து. (3)

வருக வீண்டென மற்றவன் றன்னிடை
யொருபெ ருந்தவி சுய்த்தலு மாதவ
ரிரும ருங்கு மிருந்திட வாயிடைப்
பொருவின் மாதவப் புங்கவன் மேவியே.

ஈண்டு வருக என—இங்கே வருக என்று உபசார மொழி கூறி, அவன் தன்னிடை—அம் முனிவர்பிரான் எழுந்தருளியிருக்கு மிடத்துக்கு, ஒரு பெருந் தவிசு உய்த்தலும்—ஒரு பெரிய ஆசனத்தைக் கொண்டு சென்று இடுதலும், மாதவர் இரு மருங்கும் இருந்திட—பெரிய தவத்தினையுடைய முனிவர்கள் இருபக்கத்திலும் இருக்க, பொருவில் மாதவப் புங்கவன்—ஒப்பில்லாத பெரிய தவத்தினையுடைய உயர்ந்தோரான ததீசி முனிவர், ஆயிடை மேவி—அந்த ஆசனத்தில் எழுந்தருளியிருந்து. (4)

ஆக்கந் தீரு மயன்புதல் வன்றனை
நோக்கி யெம்மை நொடித்ததென் னீயிவ
ணூக்கி யுற்றதென் னெல்லையில் யாவையு
நீக்க மின்றி நிகழ்த்துதி யென்னவே.

ஆக்கம் தீரும் அயன் புதல்வன் தனை நோக்கி—ஐசுவரியத்தை இழக்கின்ற பிரமபுத்திரனுன தக்கனை நோக்கி, எம்மை நீ இவண் நொடித்தது என்—எம்மை இங்கே நீ அழைத்த காரணம் என்னை; ஊக்கி உற்றது என்—இங்கே நீ முயன்று தொடங்கிய கருமம் யாது; ஒல்லையில் யாவையும் நீக்கம் இன்றி நிகழ்த்துதி என்ன—விரைவாக அனைத்தையும் ஒன்றும் விடாமல் உரைப்பா யாக என்று கூறியருள. (5)

தக்க னுண்டுத் ததீசியை நோக்கியே
நக்க னென்பவ னுன்பெறுங் கன்னியை
மிக்க காதலின் வேட்டொளித் தோர்பக
லுக்க மேலுய்த் துயர்வரை யேகினுன்.

ஆண்டுத் தக்கன் ததீசியை நோக்கி—அவ்விடத்திலே தக்கன் ததீசி முனிவரை நோக்கி, நக்கன் என்பவன்—அந்த நிர்வாணியாகிய சிவன், நான் பெறும்

கன்னியை மிக்க காதலின் வேட்டு—என் புதல்வியை மிக்க காதலோடு மணந்து, ஒளித்து—இடையிலே மறைந்து போய், ஓர் பகல் உக்க மேல் உய்த்து—மற்றொரு தினம் தனது மருங்கில் வைத்துக்கொண்டு, உயர்வரை ஏகினன்—உயர்ந்த கைலாசமலைக்குச் சென்றுவிட்டான்.

உக்கம், இடபமுமாம். (6)

போய பின்னைப் புதல்விக்குத் தன்பெரு
மாயை செய்தனன் மற்றவர் தங்களை
யாயு மாறவ் வகன்கிரி யெய்தினே
னேய தன்மை யிருவருந் தேர்ந்தரோ.

போய பின்னை—அவ்வாறு சென்றபின்பு, புதல்விக்குத் தன் பெரு மாயை செய்தனன்—என் புதல்விக்குத் தனது பெரிய மாயையைச் செய்து வயப் படுத்திக்கொண்டான்; அவர் தங்களை ஆயுமாறு—அவர்களுடைய நிலைமையை ஆராய்ந்தறியும்பொருட்டு, அ அகன் கிரி எய்தினேன்—அந்த அகன்ற கைலாய கிரிக்கு நான் சென்றேன்; இருவரும் ஏய தன்மை தேர்ந்து—இருவரும் நான் அங்கே சென்ற தன்மையை அறிந்து. (7)

அடுத்த பூதரை யாங்கவர் கூவியே
தடுத்தி டுங்களத் தக்கனை நம்முனம்
விடுத்தி ரல்லிர் விலக்குதி ராலென
வெடுத்தி யம்பின ரேயினர் போலுமால்.

அடுத்த பூதரை ஆங்கு அவர் கூவி—தம்மை அடுத்து நின்ற பூதர்களை அவ்விடத்தில் அவ்விருவரும் அழைத்து, அத் தக்கனைத் தடுத்திடுங்கள்—அத் தக்கனை இங்கே வரவொட்டாது தடுங்கள்; நம் முனம் விடுத்திர் அல்லிர்—எம்மெதிரில் விடாதீர்; விலக்குதிர்—விலக்குங்கள்; என எடுத்து இயம்பினர்—என்று எடுத்துச் சொல்லி, ஏயினர் போலும்—என்மேல் ஏவிவிட்டார்கள் போலும். (8)

இற்று ணர்ந்தில னேகினன் பூதர்க
ணிற்றி நீயென்று நிந்தனை யெண்ணில
சொற்ற லோடுந் துணையதில் வெள்ளியம்
பொற்றை நீங்கிப் புரம்புகுந் தேனியான்.

இற்று உணர்ந்திலன் ஏகினன்—இத்தன்மைத்தாகிய நிலையை அறியேன் அங்குச் சென்றேன்; பூதர்கள் நீ நிற்றி என்று—பூதர்கள் இங்கே நீ நில் என்று என்னைத் தடுத்து, எண்ணில நிந்தனை சொற்றலோடும் துணை அதில்—எண்ணில்லாத நிந்தனைகளையுஞ் சொன்னார்கள் சொன்ன அந்தச் சமயத்தில்,

வெள்ளி அம் பொற்றை நீங்கி—வெள்ளியங்கிரியை விட்டு நீங்கி, யான் புரம் புகுந்தேன்—யான் எனது நகரஞ் சென்று சேர்ந்தேன். (9)

தங்கண் மாநகர் சார்ந்தன னீங்குழி
யெங்கண் மாது மெனேவந்து கண்டிலண்
மங்கை யென்செய்வண் மற்றவன் மாயையாற்
றுங்க மேன்மை துறந்தனள் போயினுள்.

தங்கள் மாநகர் சார்ந்தனன் நீங்குழி—தங்களுடைய பெரிய நகரத்தை அடைந்து உட்புக முடியாது நீங்குஞ் சமயத்திலாவது, எங்கள் மாதும் எனை வந்து கண்டிலள்—எங்கள் புதல்விதானும் என்னை வந்து கண்டாளில்லை; மங்கை என் செய்வள்—அவள் என்ன செய்வாள்; அவன் மாயையால்—அந்தச் சிவனுடைய மாயத்தினுல், துங்க மேன்மை—பிரசாபதியின் புத்திரி என்கின்ற உயர்ந்த மேன்மையும், துறந்தனள் போயினுள்—இழந்துவிட்டாள். (10)

அந்த வேலை யரும்பெரும் வேள்வியொன்
றெந்தை செய்துழி யான்சென் றரற்குமுன்
றந்த பாகந் தடுத்தன னவ்வழி
நந்தி சாப நவின்றனன் போயினுன்.

அந்த வேலை—அவ்வாருகிய சமயத்தில், அரும் பெரும் வேள்வி ஒன்று எந்தை செய்துழி—அரிய பெரிய யாகம் ஒன்றனை என் தந்தையாகிய பிரம தேவர் செய்தபோது, யான் சென்று—யான் அங்குச் சென்று, அரற்கு முன் தந்த பாகம் தடுத்தனன்—சிவனுக்குப் பண்டுதொட்டுக் கொடுத்துவந்த அவிப் பாகத்தைக் கொடுக்கவொட்டாது தடுத்தேன்; அவ்வழி நந்தி சாபம் நவின்றனன் போயினுன்—அப்பொழுது அதனைப் பொருத நந்தி சாபம் இட்டுச் சென்றுன். (11)

**வேறு**

எறும்படு தண்ணுமை யியம்பு கையுடைச்
சிறுதொழி லவன்மொழி தீச்சொற் கஞ்சியே
முறைபடு வேள்வியை முற்றச் செய்திலன்
குறையிடை நிறுவினன் குரவ னுகியோன்.

எறும்படு தண்ணுமை இயம்பும் கையுடை—வலியற்ற மிருதங்கத்தை ஒலிக்கின்ற கையையுடைய, சிறுதொழிலவன் மொழி—அற்பத் தொழிலைச் செய்யும் நந்தி சொன்ன, தீச் சொற்கு அஞ்சி—தீய சாபமொழிக்குப் பயந்து, குரவனுகியோன்—எனது தந்தையாகிய பிரமதேவன், முறைபடு வேள்வியை—

வேத முறையோடு கூடிய யாகத்தை, முற்றச் செய்திலன்—முடியச் செய்தானல்லன்; குறையிடை நிறுவினன்—குறையில் நிறுத்தினன்.

எறும்படு—வலிமை பொருந்திய என்றுமாம். (12)

நஞ்சமர் களனரு ணந்தி கூறிய
வெஞ்சொலு மென்பெரு விரத முந்தெரீஇ
யஞ்சின ரின்றுகா றூரும் வேள்வியை
நெஞ்சினு முன்னலர் நிகழ்த்தும் வேட்கையால்.

நஞ்சு அமர் களன் அருள் நந்தி கூறிய வெம் சொலும்—நஞ்சுபொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமானது அருளைப் பெற்ற நந்தி கூறிய கொடிய சாபத்தையும், என் பெரு விரதமும் தெரீஇ—நான் மேற்கொண்ட விரதத்தையும் அறிந்து, இன்று காறு—இற்றைநாள் வரையும், ஆரும் வேள்வியை அஞ்சினர்—யாவரும் வேள்வியைச் செய்ய அஞ்சினர்கள்; ஆல்—ஆகையால், நிகழ்த்தும் வேட்கை நெஞ்சினும் உன்னலர்—யாகஞ் செய்யும் விருப்பத்தை மனத்திலுங் கொண்டிலர். (13)

ஆனதோர் செயலுணர்ந் தைய மேற்றிடும்
வானவன் றனக்கவி மாற்றும் பான்மையா
ஞனொரு வேள்வியை நடாத்து கின்றன
னேனைய தோர்பயன் யாதும் வேண்டலன்.

ஆனதோர் செயல் உணர்ந்து—அத்தகையதொரு நிலை இருந்தபடியை யான் அறிந்து, ஐயம் ஏற்றிடும் வானவன் தனக்கு அவி மாற்றும் பான்மையால்—பிச்சையேற்று வாழுஞ் சிவனுக்கு அவியைக் கொடாது மாற்றி மற்றொருவருக்குக் கொடுப்பதொரு முறையில், நான் ஒரு வேள்வியை நடாத்துகின்றனன்—நானே முன்மாதிரியாக ஒரு வேள்வியைத் தொடங்கி நடத்துகின்றேன்; ஏனையது ஓர் பயன் யாதும் வேண்டலன்—மற்றொரு பிரயோசனம் எதனையும் விரும்பினேன் அல்லேன். (14)

அப்பெரு மகந்தனக் கமரர் மாதவ
ரெப்பரி சனரும்வந் தீண்டு தொக்கன
ரொப்பருந் தவத்தினீ ருமக்கு மித்திறஞ்
செப்பினன் விடுத்தனன் செயலி தென்னவே.

அப்பெரு மகம் தனக்கு—சுட்டிக்கூறும் பெருமை படைத்த இந்த யாகத்துக்கு, அமரர்—தேவர்களும், மாதவர்—பெரிய தவத்தர்களான முனிவர்களும், எப் பரிசனரும்—மற்றை யாவர்களும், வந்து ஈண்டு தொக்கனர்—

வந்து இங்குக் குழுமினர்கள்; ஒப்பரும் தவத்தினீர்-ஒப்பற்ற தவத்தினையுடைய முனி சிரேட்டரே, உமக்கும் இத்திறம் விடுத்தனன் செப்பினன்—உமக்கும் இந்நிகழ்ச்சியைத் தூது விடுத்துத் தெரிவித்தேன்; இது செயல்—இது யான் எண்ணித் துணிந்த கருமம்; என்ன—என்றிவ்வாறு தக்கன் கூற. (15)

### வேறு

தண்ணளி புரித தீசி தக்கன துரையைக் கேளாப்
புண்ணியம் பயனின் றம்மா பொருளினிற் பவமே யென்னு
வெண்ணினன் வினைக ளீட்டு மிழிதக னியற்கை போலா
மண்ணறன் செயலு மென்னு வணியெயி றிலங்க நக்கான்.

தண்ணளி புரி ததீசி—எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகுந் ததீசி முனிவர், தக்கனது உரையைக் கேளா—தக்கன் வார்த்தைகளைக் கேட்டு, பொருளினிற் புண்ணியம் பயனின்று—வெறும் பொருட்செல்வத்தாற் செய்யும் புண்ணியம் பயனற்றதாகும்; பொருளினிற் பவமே—அதனுற் பாவமே உண்டாகும்; என்னு எண்ணினன்—என்று சிந்தித்து, வினைகள் ஈட்டும்—தீவினைகளையே ஈட்டுகின்ற, இழிதகன் இயற்கை போலாம்—இந்தக் கீழ்மகனின் இயற்கையாகிய செயல்கள் போலாகுமா, அண்ணல் தன் செயலும் என்னு—பெருமையிற் சிறந்தோரான சிவபெருமானுடைய அருட் செயல்களும் என்று, எயிறு அணி இலங்க நக்கான்—பல்வரிசை வெளிப்பட்டு விளங்கச் சிரித்தார்.

பொருள், முன்னும் பின்னுங் கூட்டப்பட்டது.

அண்ணல் தன் செயல் எங்கே; இழிதகன் இயற்கை எங்கே யென்றவாறு. 'போலாம்' என்பது எதிர்மறை வினவாதல் உச்சரித்துக் காண்க. அம்மா இரக்கக் குறிப்பு. ஈண்டுப் புண்ணியம் பயனற்றதாயிற்றே என்றிரங்கியவாறு. (16)

நக்கதோர் வேலை தன்னி னலத்தகு மூழிக் கான்மேன்
மிக்கெழும் வடவை யென்ன வெய்துயிர்த் துரப்பிச் சீறி
முக்கண னடியான் போலு முறுவலித் திகழ்ந்தா யென்னத்
தக்கனீ துரைத்த லோடுந் ததீசிமா முனிவன் சொல்வான்.

நக்கது ஓர் வேலை தன்னில்—ததீசி முனிவர் சிரித்த சமயத்தில், நலம் தகும் ஊழிக் கால் மேல்—வேகமாகிய நலம் மிக்க ஊழிக் காற்றினாலே, மிக்கு எழும் வடவை என்ன—கிளர்ந்தெழுகின்ற வடவாமுகாக்கினி போல, வெய்து உயிர்த்து உரப்பிச் சீறி—வெம்மையுடைத்தாக உயிர்த்து உறுக்கிக் கோபித்து, முக்கணன் அடியான் போலும்—நீ முக்கண்ணனை சிவனது அடிமை போலும், முறுவலித்து இகழ்ந்தாய்—சிரித்து என்னை இகழ்ந்தாய்; என்ன—என்று, தக்கன் ஈது உரைத்தலோடும்—தக்கன் இதனைச் சொல்ல, ததீசி மாமுனிவன் சொல்வான்—ததீசி மகாமுனிவர் கூறியருளுவார். (17)

மலரயன் முதலே யாக வரம்பிலா வுயிரை முன்னந்
தலையளித் துதவு கின்ற தாதையா யளித்து மாற்றி
யுலகெலா மாகி யொன்று யுயிர்க்குயி ராகி மேலா
யிலகிய பரனை நீத்தோ யாகமொன் றியற்ற நின்றாய்.

மலரயன் முதலேயாக வரம்பிலா உயிரை—தாமரை மலரிலிருக்கும் பிரமா முதலாகவுள்ள எண்ணில்லாத உயிர்களை, முன்னம்—சிருட்டியாரம்ப காலத்தில், தலையளித்து—கருணை செய்து, உதவுகின்ற தாதையாய்—தந்தருளுகின்ற பிதாவாகியும், அளித்து மாற்றி—அவ்வுயிர்களைக் காத்தும் ஒடுக்கியும், உலகெலா மாகி ஒன்றாய்—எல்லா உலகமுந் தாமேயாகிக் கலந்திருத்தலால் ஒன்றாகியும், மேலாய்—உலகங்களுக்கு அப்பாலாய் வேறாகியும், உயிர்க்கு உயிர் ஆகி—உயிருக்குயிராய் உடனாகியும், இலகிய பரனை நீத்தோ—உபகரித்து விளங்குகின்ற பரம்பொருளாகிய சிவபெருமானை விலக்கியோ, யாகம் ஒன்று இயற்ற நின்றாய்—யாகமொன்றனைச் செய்யத் துணிந்தனை.

ஏகமாகிய பரம்பொருள் தானே, உயிர்களோ டத்துவிதமாய் அபேதமாயும் பேதமாயும் பேதாபேதமாயும் உபகரிக்குமாறு பேசியவாறும். (18)

புங்கவ ரெவர்க்கு நல்கும் புவிபுக ழவிகொள் வானு
மங்கியின் முதலும் வேள்விக் கதிபனு மளிக்கின் றானுஞ்
சங்கரன் றானே வேதஞ் சாற்றுமான் மகத்துக் காதி
யிங்கொரு தேவுண் டென்னி னெழுகென வுரைத்தி மாதோ.

புங்கவர் எவர்க்கும் நல்கும் புவி புகழ் அவி கொள்வானும்—தேவர்கள் யாவருக்குங் கொடுக்கின்ற உலகம் புகழும் அவிப்பாகங்களை ஏற்றுக்கொள்ளும் அக்கினியாயிருப்பவரும், அங்கியின் முதலும்—அவ்வக்கினிக்கு முதல்வராயிருப்பவரும், வேள்விக்கு அதிபனும்—யாகாதிபதியும், அளிக்கின்றானும்—யாகரக்ஷகரும், சங்கரன்தானே—சிவபெருமானேயாம்; வேதம் சாற்றும்—இவ்வுண்மையை வேதங்கள் எடுத்துச் சொல்லும்; மகத்துக்கு ஆதி இங்கு ஒரு தேவு உண்டு என்னின்—யாகாதிபதியாய் இங்கே மற்றொரு தேவன் உளனேயாயின், எழுக என உரைத்தி—அத்தேவன் இச் சபையிலே தலைநிமிர்ந்தெழுக என்று சொல்லு பார்ப்போம்.

அத்தேவனைப் பார்க்க விரும்புகின்றோம் என்றவாறு. அவ்வவர்க்குரிய அவியை அவரவர்பாற் சேர்ப்பிப்போன் அக்கினி பகவான்; ஆதலினாலே, தேவர்களின் நா என்று புகழப்படுபவன். (19)

மாலயன் முதலோர் யாரும் வரம்பிலித் திருவை யெய்த
மேலைநா ளளித்தோன் றானும் விமலனு மினையர்க் கெல்லா
மூலமுந் தனக்கு வேறோர் முதலிலா தவனு மெங்க
ளாலமர் கடவு ளன்றி யமரரில் யாவ ரம்மா.

மால் அயன் முதலோர் யாரும்—விஷ்ணு பிரமா முதலிய யாவரும், வரம்பு இல் இத் திருவை எய்த—அளவில்லாத இச் செல்வங்களையெல்லாம் எய்தும்பொருட்டு, மேலைநாள் அளித்தோன் தானும்—முன்னுளிற் கொடுத் தருளியவரும், விமலனும்—மலமில்லாதவரும், இனையர்க்கு எல்லாம் மூலமும்—இந்த விஷ்ணு முதலியவர்களுக்கெல்லாம் உபாதானமா யிருப்பவரும், தனக்கு வேறு ஓர் முதல் இலாதவனும்—தமக்கு மற்றோர் உபாதான மில்லாதவரும், எங்கள் ஆல் அமர் கடவுள் அன்றி—கல்லால விருட்சத்தின் கீழ்த் தக்ஷிணாமூர்த்தியா யெழுந்தருளிய எங்கள் சிவபெருமானே யன்றி, அமரரில் யாவர்—தேவர்களுக்குள் அத்தகையார் யாவர் உளர்.

இலர் என்றவாறு. (20)

தேவதே வன்மா தேவன் சிறப்புடை யீச னெங்கோன்
மூவரின் முதல்வ னேகன் முடிவிற்கு முடிவாய் நின்றோ
னாவியு ளாவி யானோ னந்தண னாதி யென்றே
யேவரை யிசைத்த வம்மா வெல்லையின் மறைக ளெல்லாம்.

தேவதேவன்—தேவாதி தேவன், மாதேவன்—மகாதேவன், சிறப்புடை ஈசன்—மகேசன், எங்கோன்—நமது நாயகன், மூவரின் முதல்வன்—மும்மூர்த்தி களுக்கும் முதல்வன், ஏகன்—ஒருவன் என்னும் ஒருவன், முடிவிற்கு முடிவாய் நின்றோன்—தனக்குப் பின் தோன்றியன யாவும் முடிந்துபோகத் தான் முடியா திருப்பவன், ஆவியுள் ஆவி ஆனோன்—உயிர்க்குயிராயிருப்பவன், அந்தணன்—பிராமணன், ஆதி—தொடக்கங்களுக் கெல்லாம் தொடக்கமாயிருப்பவன், என்று—என்றிவ்வாறு, எல்லையில் மறைகள் எல்லாம் ஏவரை இசைத்த—எல்லையில்லாத வேதங்களெல்லாம் யாவரை எடுத்துப் புகழ்ந்தன.

சிவபரம்பொருளையே யன்றோ இவ்வாறு மறைகள் எடுத்துப் புகழ்ந்தன என்றவாறு. (21)

விதிமுத லாகி யுள்ளோர் வியனுயிர்த் தொகையா மீசன்
பதியவன் பணிய தன்றே பரித்தன ரினைய ரெல்லா
மிதுவுமச் சுருதி வாய்மை யிவையெலா மயர்த்து வாளா
மதிமயங் கினையாற் பேரா மாயையூ டழுந்து கின்றாய்.

விதி முதலாகி உள்ளோர் வியன் உயிர்த்தொகையாம்—பிரமா முதலாக வுள்ள அனைவரும் பெரிய பசுவர்க்கங்கள்; ஈசன் பதி—சிவபெருமான் ஒருவரே பதி; இனையர் எல்லாம்—இத் தேவர்களெல்லாம், அவன் பணியது அன்றே பரித்தனர்—அந்தச் சிவபெருமான் இட்ட கட்டளையை யன்றோ தலைமேற் கொண்டார்கள்; இதுவும் அ சுருதி வாய்மை—இதுவும் அந்த வேத உண்மை யாம்; இவை எலாம் அயர்த்து—இவற்றையெல்லாம் நீ உணர்ந்திருந்தும் இப்பொழுது மறந்து, வாளா மதி மயங்கினை—வாளா புத்தி மயங்கி, பேரா மாயை ஊடு அழுந்துகின்றாய்—நீங்காத மாயையிலே அழுந்துகின்றாய். (22)

அந்தணர்க் காதி யீச னேனையோர்க் கரியே வேதா
விந்திர னென்று வேத மியம்பிய மறையோர் தங்கண்
முந்தையின் முதலை நீத்து முறையகன் றொழுகல் பெற்ற
தந்தையை விலக்கி வேறு தேடுவான் றன்மை யன்றே.

அந்தணர்க்கு ஆதி ஈசன்—பிராமணர்களுக்கு அதி தெய்வமுமாயிருப்பவர் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான்; ஏனையோர்க்கு ஆதி—ஏனைய மூன்று வருணத்தாருக்கும் அதி தெய்வம், அரி வேதா இந்திரன் என்று—முறையே விஷ்ணுவும் பிரமாவும் இந்திரனும் என்று, வேதம் இயம்பிய—வேதங்கள் உரைத்தன; மறையோர் தங்கள் முந்தை இன் முதலை நீத்து—பிராமணர்கள் தமது பழைமையாகிய இனிய முழுமுதலாகிய சிவபெருமானை விடுத்து, முறை அகன்று ஒழுகல்—வேதநெறி கடந்து ஒழுகுதல், பெற்ற தந்தையை விலக்கி—தன்னைப் பெற்ற பிதாவைத் தன் பிதா அல்லன் என விடுத்து, வேறு தேடுவான் தன்மை அன்றே—மற்றொருவனைத் தன் பிதாவென்று தேடிக் கொள்ளுவான் தன்மையேயாம்.

பிராமணனாகிய நீ மற்றொருவரைத் தெய்வம் என்று கொள்ளற்பாலை யல்லை என்றவாறு. எல்லார்க்குந் தான் ஈசன் ஆயினும், ஏனையோர் தத்தம் அதிதெய்வம் வாயிலாக யாக கருமத்தில் அவ்வீசனைப் பிரீதி செய்யற்பாலர் போலும். ஆதி பின்னுங் கூட்டப்பட்டது. (23)

ஆதலி னெவர்க்கு மேலா மாதியை யிகழா நிற்றல்
பேதைமை யன்றி யீதோர் பெருமித மன்று லாற்ற
நோதக வுன்னி யாரே நோற்பவ ரனையை நீயே
வேதம தொழுக்க நீத்திவ் வேள்வியைப் புரிய நின்றாய்.

ஆதலின்—ஆகையினாலே, எவர்க்கும் மேலாம் ஆதியை இகழா நிற்றல் பேதைமை—யாவருக்கும் மேலான சிவபெருமானை இகழுதல் அறியாமையே யாம்; அன்றி—அல்லாமல், ஈது ஓர் பெருமிதம் அன்று—இது ஒரு மேம் பாடு ஆகாது; ஆற்ற நோதகவு உன்னி நோற்பவர் யாரே—பெரிதுந் துன் பத்தை அநுபவிக்க விரும்பித் தவஞ் செய்வாரும் உலகத்தில் உளரோ; நீயே அனையை—நீ யொருவனே அத்தகையோனாய் இருக்கின்றாய்; வேதம் ஒழுக்கம் நீத்து—வேத நெறி கைவிட்டு, இவ் வேள்வியைப் புரிய நின்றாய்—இந்த யாகத்தைச் செய்யத் துணிந்தாய். (24)

விலக்கினை மறையின் வாய்மை வேள்விசெய் யினுமுற் றாது
கலக்குமே லமல னாணை காண்டியா லவனுக் கஞ்சா
வலத்தினர் யாவ ருண்டேன் மாய்வரே மறையு மெம்முன்
னிலைப்பொலி சூல மேந்து மேகனென் றேத்திற் றன்றே.

மறையின் வாய்மை விலக்கினை—வேதாசாரமான உண்மையை நீ கைவிட்டாய்; செய்யினும்—இத்தன்மையையாகிய நீ பெரிதும் முயன்று வேள்வியைச் செய்தாலும், வேள்வி முற்ருது—அது நிறைவேருது; மேல் அமலன் ஆணை கலக்கும்—இனிமேல் சிவபெருமானுடைய ஆக்ஞை உனது வேள்வியை முற்ருது கலக்கிவிடும்; காண்டி—அதனை நீ காண்பாயாக; அவனுக்கு அஞ்சா வலத்தினர் யாவர்—அச் சிவபெருமானுக்கு அஞ்சாத வன்மையுடையார் யார் ஒருவர் உளர்; உண்டேல் மாய்வர்—உளராயின் அவர் இறந்துபடுவர்; மறையும்—வேதங்களும், எம் முன்—எமது பரமபதி, இலைப் பொலி சூலம் ஏந்தும் ஏகன் என்று ஏத்திற்று—இலைவடிவு பொருந்திய சூலபாணியாகிய ஏகனே என்று அப்பெருமானைத் துதிசெய்தது. (25)

ஆதியு முடிவு மில்லா வமலனுக் கவியை நல்கி
வேதக முறைவ ழாது வேள்வியோம் புவது நாடாய்
தீதுநின் னெண்ண மென்னச் சிவன்றனக் கருள்பா கத்தை
மாதவன் றனக்கு நல்கி மாமகம் புரிவ னென்ருன்.

வேதக—வேத நெறியை வேறுபடுத்தும் வேத விரோதியே, ஆதியும் முடிவும் இல்லா அமலனுக்கு அவியை நல்கி—ஆதியும் அந்தமுமில்லாத சிவபெருமானுக்கு அவியை வழங்கி, முறை வழாது—வேதநெறி பிறழாமல், வேள்வி ஓம்புவது நாடாய்—யாகஞ் செய்வதை நாடினுயல்லை; நின் எண்ணம் தீது—தக்கனே உன் எண்ணந் தீயது; என்ன—என்றிவ்வாறு ததீசி மகா முனிவர் கூறியருள, சிவன் தனக்கு அருள் பாகத்தை மாதவன் தனக்கு நல்கி—சிவனுக்குக் கொடுக்கும் அவிப்பாகத்தை விட்டுணுவுக்குக் கொடுத்து, மாமகம் புரிவன் என்ருன்—பெருமை பொருந்திய யாகத்தைச் செய்வேன் என்ருன்.

வேதகம் வேறுபடுத்துவது. (26)

அவ்வுரை கொடியோன் கூற வருந்தவ முனிவன் கேளா
வெவ்வமீ துரைத்தாய் மேலா யாவரும் புகழ நின்ற
செவ்வியர் தமையி ழித்துச் சிறியரை யுயர்ச்சி செய்த
லுய்வகை யன்ரு னும்மோ ருயிர்க்கெலா முடிவீ தென்ருன்.

அவ் வுரை கொடியோன் கூற—அந்த வார்த்தையைக் கொடியோனுன தக்கன் சொல்ல, அரும் தவ முனிவன் கேளா—அரிய தவத்தினையுடைய ததீசி மகாமுனிவர் கேட்டு, எவ்வம் ஈது உரைத்தாய்—குற்றம் ஆகிய இம் மொழியைக் கூறினுய்; யாவரும் மேலா புகழ நின்ற—யாவரும் மேலாகப் புகழுதற்குப் பாத்திரமான, செவ்வியர் தமை இழித்து—மேலோரை இழிவு செய்து, சிறியரை உயர்ச்சி செய்தல்—சிறியோரை உயர்த்துதல், உய்வகை அன்று—உய்யுந்திறம் ஆகாது; ஈது நும்மோர் உயிர்க்கு எலாம் முடிவு என்ருன்—இச் செயல் நும்மவர்களுடைய உயிர்க்கெல்லாம் முடிவுக்கு ஏதுவாகும் என்று கூறியருளினர். (27)

ஊறுசேர் தக்கன் சொல்வா னுனதுருத் திரனை யொப்பா
ராறின்மே லைந்த வான வுருத்திர ரமர்வா ராசை
யீறுசேர் தருமீ சான ரிருந்தன ரவர்க்கே முன்னர்
வீறுசே ரவியை நல்கி வேள்வியை முடிப்ப னென்றான்.

ஊறு சேர் தக்கன் சொல்வான்—குற்றத்தோடு ஒன்றுபட்ட தக்கன் சொல்லுவான், உனது உருத்திரனை ஒப்பார்—உமது சிவனாகிய உருத்திரரை ஒப்பவர், அ ஆறின் மேல் ஐந்து ஆன உருத்திரர் அமர்வார்—அந்தப் பதினொருவராகிய உருத்திரர் உளர்; ஈறு சேர்தரும் ஆசை ஈசானர் இருந்தனர்—திக்கின் முடிவாய்ப் பொருந்திய வடகீழ்த்திசையில் ஈசான உருத்திரர் உளர்; அவர்க்கே முன்னர் வீறுசேர் அவியை நல்கி—அந்த உருத்திரர்களுக்கே முதற்கண் உயர்ச்சிபொருந்திய அவியைக் கொடுத்து, வேள்வியை முடிப்பன் என்றான்—யாகத்தை முடிப்பேன் என்றான். (28)

என்னலு முனிவன் சொல்வா னீறுசெய் தகில மெல்லாந்
தன்னிடை யொடுக்கி மீட்டுந் தாதையாய் நல்கி யாரு
முன்னருந் திறத்தில் வைகு முருத்திர மூர்த்திக் கொப்போ
வன்னவன் வடிவும் பேரு மவனரு ளதனாற் பெற்றோர்.

என்னலும் முனிவன் சொல்வான்—என்று தக்கன் கூறத் ததீசிமுனிவர் கூறியருளுவார், அகிலம் எல்லாம் ஈறு செய்து—உலகம் முழுவதையுஞ் சங்கரித்து, தன்னிடை ஒடுக்கி—அவற்றைத் தம்பால் ஒடுக்கி, மீட்டும் நல்கி—ஈறு செய்யுமுன் படைத்தவாறு மீட்டும் படைத்து, தாதையாய்—இவ்வாற்றால் உலகத்துக்குக் கருத்தாவாய், யாரும் உன் அரும் திறத்தில் வைகும்—எத்தகையோரும் பசு பாச ஞானங்களாற் சிந்தித்தற்கரிய இயல்பினை யுடையராயிருக்கும், உருத்திர மூர்த்திக்கு—முழுமுதலாகிய மகா உருத்திரமூர்த்திக்கு, அன்னவன் வடிவும்—அந்த உருத்திர மூர்த்தியினுடைய சாரூபமும், பேரும்—அவருடைய திருநாமமும், அவன் அருளாற் பெற்றோர்—அந்த உருத்திர மூர்த்தியினுடைய அருளாற் பெற்றோரான இந்த ஈசான உருத்திரரும் ஏகாதச உருத்திரரும், ஒப்போ—ஒப்பாவார்தாமோ.

அது, பகுப்பொருள் விகுதி. அன், சாரியை. (29)

உருத்திர மூர்த்தி யென்போ னுயர்பரம் பொருளா யுள்ளே
நிருத்தம தியற்று கின்ற நித்தனு மவன்றன் பொற்றாள்
கருத்திடை நினைந்தோ ரன்னான் காயமுந் திருப்பேர் தானும்
பரிப்பரா லனைய ரெல்லை பகர்ந்திடி னுலப்பின் றாமால்.

உருத்திர மூர்த்தி என்போன்—மகா உருத்திர மூர்த்தி என்று வேதங்களாற் புகழப்படுபவர், உயர் பரம்பொருளாய்—மேலாகிய முழுமுதற்

பொருளாய், உள்ளே நிருத்தம் இயற்றுகின்ற நித்தனும்—உயிரினுள்ளே அந்தரியாமியாய் இடையறுது நட்டம் பயில்கின்ற நித்தியர் ஆவர்; அவன் தன் பொன்தாள் கருத்திடை நினைந்தோர்—அவருடைய திருவடிகளைச் சித்தத்திற் பதித்தவர்கள், அன்னான் காயமும்—அவருடைய சாரூபமும், திருப்பேர் தானும்—அவருடைய திருநாமமும், பரிப்பர்—பொருந்துவர்கள்; அனையர் எல்லை—அத்தகையார் தொகையை, பகர்ந்திடின் உலப்பு இன்றும்—உரைப்பதென்றால் முடிபு போகாதாம்.

உருத்திரர் ஈசானரும் ஏகாதசரும் மாத்திரர் அல்லர் என்றவாறு. ஏகாதசம் பதினொன்று. அனையராவார் காயமும் பெயரும் பரித்தோர். (30)

ஆதிதன் ஞமம் பெற்ருே ரவனிய லடையார் கொண்ட
வேதமில் வடிவு மற்றே யென்னினு மிறைவ ரென்றே
பூதல முழுதும் விண்ணும் போற்றிட விருப்ப ரிந்த
வேதனும் புகழு நீரான் மெய்ந்நெறித் தலைமை சார்வார்.

ஆதி தன் நாமம் பெற்ருேர் அவன் இயல் அடையார்—ஆதியாகிய உருத்திர மூர்த்தியின் திருநாமத்தைப் பெற்ற உருத்திரர்கள் அப் பதியினிலட்சணத்தைப் பொருந்தார்கள்; கொண்ட ஏதம் இல் வடிவும் அற்றே—அவர்கள் கொண்ட சாரூபமும் பதியினிலட்சணத்தைப் பொருந்தாத அத்தன்மையை யுடைத்தாம்; என்னினும்—இங்ஙனமாயபோதும், பூதலம் முழுதும் விண்ணும் இறைவர் என்றே போற்றிட இருப்பர்—பூவுலகத்தாரும் வானுலகத்தாரும் உருவமும் நாமமும்பற்றி இறைவர் என்றே உபசாரமுகத்தால் துதிப்ப இருப்பர்; இந்த வேதனும் புகழும் நீரால்—இப் பிரமாவும் புகழுதற்குரிய நீர்மையினுல், மெய்நெறித் தலைமை சார்வார்—உண்மை நெறிக்கண் முதன்மையைச் சார்வோராவர். (31)

ஈசனை யளப்பில் கால மிதயமே லுன்னி நோற்றே
யாசக லுருவம் பெற்ற வன்பினர் போல்வ ரின்னேர்
வாசவன் முதலோர் போல வரத்தகா ரெந்தை பானீ
நேசமில் லாத தன்மை நினைந்திலர் போலு மென்ருன்.

ஈசனை அளப்பு இல் காலம் இதயமேல் உன்னி நோற்று—சிவபெருமானை அளவற்ற காலம் மனத்தின்கண் நினைத்துத் தவஞ்செய்து, ஆசு அகல் உருவம் பெற்ற—மாசில்லாத சாரூபத்தைப் பெற்ற, அன்பினர் போல்வர் இன்னேர்—பரிபக்குவரான அன்பினையுடையார் போல்வர் இவ்வேகாதச ஈசானுதி உருத்திரர்கள்; வாசவன் முதலோர் போல வரத்தகார்—இவ்வுருத்திரர்கள் இந்திரன் முதலியவர்களைப்போல இங்கே வரக்கூடியவர்களல்லர்; எந்தை பால்—எம்பெருமானிடத்து, நீ நேசமில்லாத தன்மை நினைந்திலர் போலும்—நீ அன்பற்றிருக்கும் பான்மையை நினைத்தலைச் செய்திலர் போலும்; என்ருன்—என்று ததீசி மகாமுனிவர் கூறியருளினர்.

அன்பினர் போல்வர் என்பதற்கு அன்பினர் ஆவர் எனப் பொருளுரைத்து, போல்வர் என்பதை ஒப்பில் போலிக் குறிப்பினது எனக் கொள்ளினுமாம். (32)

### வேறு

என்ற காலை யிருந்ததக் கன்னிது
நன்று நாரண னுன்முக னிற்கவீ
றென்று செய்யு முருத்திர னுதியாய்
நின்ற தென்கொ னிகழ்த்துதி யென்னவே.

என்ற காலை—ததீசி முனிவர் இவ்வாறு கூறியருளியபோது, இருந்த தக்கன்—கேட்டுக்கொண்டிருந்த தக்கன், இது நன்று—இது நல்லது நல்லது!, நாரணன் நான்முகன் நிற்க—சிருட்டி திதிகளைச் செய்யும் பிரம விட்டுணுக்கள் முதற் கடவுளல்லராக, ஈறு ஒன்று செய்யும் உருத்திரன்—அழித்தற் றெழிலைச் செய்யும் உருத்திரன் மாத்திரம், ஆதியாய் நின்றது என்—முதற்கடவுளாய் நின்ற தென்னை; நிகழ்த்துதி என்ன—கூறுக என்று வினவ. (33)

விதிசி ரங்கள் வியன்முடி வேய்ந்திடும்
பதிசி வன்றன் பதத்துணை யுட்கொடு
மதிசி றந்திட வாலிதின் வைகிய
ததீசி யென்னுந் தவமுனி சாற்றுவான்.

விதி சிரங்கள் வியன் முடி வேய்ந்திடும்—பிரமர்களின் சிரங்களைப் பெருமை பொருந்திய முடியிலே தலைமாலையாக அணியும், பதி சிவன்தன் பதத்துணை உட்கொடு—பதியாகிய சிவபெருமானுடைய இரண்டாகிய பாதங்களைத் தியானித்து, மதி சிறந்திட—புத்தி விளங்காநிற்க, வாலிதின் வைகிய—தூய்மையாகிய இயல்புடன் வீற்றிருந்த, ததீசி என்னுந் தவமுனி சாற்றுவான்—ததீசி என்கின்ற தவமுனிவர் கூறியருளுவார்.

ததிசி என்றும் பாடம். (34)

இருவர் தம்மொடு மெண்ணிய தன்மையா
லொருவ னுன வுருத்திர மூர்த்தியைப்
பெரிய னென்று பிடித்திலை யன்னதுந்
தெரிய வோதுவன் றேர்ந்தனை கேட்டியால்.

ஒருவனுன உருத்திர மூர்த்தியை—உயர்வொப்பற்ற ஏகவஸ்துவாகிய உருத்திர மூர்த்தியை, இருவர் தம்மொடும் எண்ணிய தன்மையால்—பிரம விட்டுணுக்களாகிய இருவரோடு சமத்துவம் பண்ணி நீ எண்ணிய தன்மையினுலே, பெரியன் என்று பிடித்திலை—முழுமுதற் பொருளென்று மனத்திற்

கொண்டிலை ; அன்னதும்–உருத்திர மூர்த்தியே முழுமுதற் பொருளாவதும், தெரிய ஓதுவன்–நீ அறிய ஓதுவோம் ; தேர்ந்தனை கேட்டி–கேட்டுத் தெளிவாயாக.

இருவரோடு சேர்த்து மூவர் என்று எண்ணிய தன்மையால் எனினு மாம். (35)

ஆதி யந்த மிலாதவெம் மண்ணலுக்
கோது பேரு முருவுமோர் செய்கையும்
யாது மில்லையிவ் வாற்றினை யெண்ணிலா
வேதம் யாவும் விளம்புந் துணிபினால்.

ஆதி அந்தம் இலாத எம் அண்ணலுக்கு–ஆதியும் அந்தமும் இல்லாத நமது கடவுளுக்கு, ஓது பேரும் உருவும் ஓர் செய்கையும் யாதும் இல்லை–உரைக்கப்படும் நாமமும் உருவமும் யாதாயினுமொரு செயலும் எதுவும் இல்லை ; இவ்வாற்றினை–இவ்வுண்மைநெறியை, எண்ணிலா வேதம் யாவும் துணிபினால் விளம்பும்–எண்ணில்லாத வேதங்கள் யாவும் அறுதியிட்டுக் கூறும். (36)

அன்ன தோர்பரத் தண்ணற ணையான்
முன்னை யாரிருண் மூடத்துண் மூழ்கிய
மன்னு யிர்த்தொகை வல்வினை நீக்குவா
னுன்னி யேதன்னு ளத்தருள் செய்துமேல்.

அன்னது ஓர் பரத்து அண்ணல்–அத்தகையதான ஒப்பற்ற மேன்மை பொருந்திய சிவபெருமான், முன்னை ஆர் இருள் மூடத்துள் மூழ்கிய–அநாதியே ஆணவ இருளாகிய மூடத்துள் அழுந்திக்கிடந்த, மன் உயிர்த் தொகை வல்வினை–நிலைபெற்ற உயிர்க்கூட்டத்தின் வலிய வினையை, தன் ஆணையால் நீக்குவான்–தமது அருட்சத்தியால் நீக்கும்பொருட்டு, தன் உளத்து உன்னி–தமது திருவுள்ளத்தில் நினைந்து, அருள் செய்து–கருணை கூர்ந்து, மேல்–பின்னர்.

அன்னது ஓர் பரத்து அண்ணல்–உருவும் பெயருஞ் செயலுமற்ற கடவுள். உன்னுதல் அருள் செய்தல், யாவும் ஆணையாகிய சத்தியின் செயலேயா மென்க. சிவத்தின் இன்றியமையாமை நோக்கிச் சத்தியின் செயல் சிவத்தில் ஏற்றிக் கூறப்படும். அது கிரணத்தின் செயல் சூரியன்மேலேற்றிக் கூறப் படுவதில் வைத்துணரப்படும். (37)

உருவுஞ் செய்கையு மோங்கிய பேருமுன்
னருளி னாற்கொண் டனைத்தையு முன்புபோற்
றெரிய நல்கித் திசைமுக னாதியாஞ்
சுரர்கள் யாரையுந் தொன்முறை யீந்துபின்.

உருவும் செய்கையும் ஓங்கிய பேரும்—உருவத்தையுஞ் செயலையும் விளங்கிய பெயரையும், முன்—சிருட்டி யாரம்ப காலத்திலே, அருளினுல் கொண்டு—ஆணை யாகிய சிவசத்தியாற் றரித்து, அனைத்தையும்—ஒடுங்கியிருந்த அனைத்தை யும், முன்பு போல்—முன் புனருற்பவஞ் செய்தவாறுபோல, தெரிய நல்கி—விளக்கமுறும்படி செய்து, திசைமுகன் ஆதியாம் சுரர்கள் யாரையும்—பிரமா முதலிய தேவர்கள் யாவரையும், தொன்முறை ஈந்து பின்—முன்போலவே படைத்துப் பின்பு. (38)

ஏற்ற தொல்பணி யாவு மிசைத்தவை
போற்று செய்கை புரிந்துபின் யாவையு
மாற்று கின்றது மற்றெமக் காமெனச்
சாற்றி ஞனத் தகைமையுங் கேட்டிநீ.

ஏற்ற தொல் பணி யாவும் இசைத்து—அவரவர்களுக்கேற்ற பழைமையாகிய சிருட்டி முதலிய தொழில்களைக் கொடுத்து, அவை போற்று செய்கை புரிந்து—அவைகளை நடாத்தும் முறைகளையும் உபதேசித்து, பின்—பின்னர், யாவையும் மாற்றுகின்றது—அனைத்தையுஞ் சங்காரஞ் செய்வதாகிய தொழில், எமக்கு ஆம் எனச் சாற்றினுன்—நமக்காகும் என்று கூறியருளினுர் ; அத் தகைமையும் கேட்டி நீ—அவ்வியல்பையும் நீ கேட்பாயாக. (39)

வேறு

அந்த மாதியின் ருகியே யுயிரெலா மளிக்குந்
தந்தை யாகிய தனக்கன்றி முழுதடுந் தகைமை
மைந்த ராகிய வமரரான் முடிவுரு மையினு
லெந்தை தன்வயிற் கொண்டன னீறுசெய் யியற்கை.

அந்தம் ஆதி இன்ருகி—அந்தமும் ஆதியும் இன்றி, உயிர் எலாம் அளிக்கும் தந்தையாகிய தனக்கு அன்றி—உயிரனைத்தையும் இரட்சிக்கின்ற பரம பிதா வாகிய தம்மா லன்றி, முழுது அடும் தகைமை—அனைத்தையு மடுதலாகிய செயற் கருஞ் செயல், மைந்தர் ஆகிய அமரரால் முடிவுருமையினுல்—தம் மைந்தராகிய தேவர்களால் முடியாமையினுல், எந்தை—எமது பிதாவாகிய சிவபெருமான், ஈறு செய் இயற்கை தன் வயின் கொண்டனன்—சர்வ சங்காரத் தொழிலைத் தம்மிடத்தே வைத்துக்கொண்டார். (40)

அன்று தேவர்கள் யாவரு மெம்பிரா னடியிற்
சென்று தாழ்ந்தெமக் கிப்பணி புரிந்தனை சிறியே
மென்று தீருது மிப்பர மென்றலு மெங்கோ
னென்று கூறுதுங் கேண்மினே நீவிரென் றுரைத்தான்.

அன்று தேவர்கள் யாவரும்—அந்நாளிலே தேவர்களனைவரும், எம்பிரான் அடியில் சென்று தாழ்ந்து—எம்பெருமானுடைய திருவடிகளிற் சென்று வணங்கி, எமக்கு இப்பணி புரிந்தனை—எங்களுக்குப் படைப்பு முதலிய இத் தொழில்களைத் தந்தருளினீர்; சிறியேம்—யாம் அவற்றைப் பரித்தற்கேற்ற வலியிலேம்; இப் பரம் என்று தீருதும் என்றலும்—இப்பாரம் எங்களைவிட்டு எப்பொழுது தீரும் என்று கேட்டலும், எங்கோன் ஒன்று கூறுதும் நீவிர் கேண்மின் என்று உரைத்தான்—எம்பெருமான் நாம் ஒன்று சொல்லுகின்றோம் நீவிர் கேண்மின் என்று கூறியருளினார். (41)

ஆயுண் மற்றுமக் கெத்துணை யத்துணை யளவு
நீயி ரிச்செயல் புரிமின்கள் பரமென நினைந்தீர்
தூய வித்தையா னீறுள தாக்கியே தொழுது
காய மேற்புனைந் தஞ்செழுத் துன்னுதிர் கருத்தின்.

ஆயுள் உமக்கு எத்துணை அத்துணை அளவும்—உங்களுக்கு ஆயுள் எத் துணைக்காலமோ அத்துணைக் காலமளவும், நீயிர் இச்செயல் புரிமின்கள்—நீவிர் இச்செயல்களைச் செய்ம்மின்; பரம் என நினைந்தீர்—நீவிர் இச்செயல்களைப் பாரம் என்று கருதினீர்கள்; தூய வித்தையால் நீறு உளதாக்கி—தூய்மை யான மந்திரபூர்வமாக விபூதியை உண்டாக்கி, தொழுது—அதனை வணங்கி, காயமேற் புனைந்து—அதனை உடம்பிலணிந்து, கருத்தின் அஞ்செழுத்து உன்னுதிர்—உளத்திற் பஞ்சாக்கரத்தைச் சிந்தியுங்கள்.

தூய வித்தையால்—சிரௌத பாசுபத வித்தியாப் பிரகாரம் என்றுரைப் பினுமாம். (42)

தன்மை யிங்கிவை புரிதிரே லித்தொழி றரிக்கும்
வன்மை யெய்துவீ ரன்றிநங் கலைகளும் மருங்கு
தொன்மை யுள்ளன காட்டிநின் றருளுமாற் றொலைவி
னன்மை யெய்துவீ ரென்றருள் செய்தன னம்பன்.

தன்மை இங்கு இவை புரிதிரேல்—இத்தன்மையான காரியங்களைச் செய்வீ ராயின், இத்தொழில் தரிக்கும் வன்மை எய்துவீர்—இத் தொழில்களைத் தாங்கும் வன்மையை அடைவீர்; அன்றி—அல்லாமல், நும்மருங்கு தொன்மை உள்ளன நம் கலைகள்—நும்மாட்டு முன்னமே யுள்ளனவாகிய நம் கலைகள், காட்டி நின்று அருளும்—நீவிர் காணுதவற்றைக் காட்டி நும்முடன் நின்று அருள் செய்யும்; தொலைவில்—முடிவில், நன்மை யெய்துவீர்—நன்மையை அடைவீர்கள்; என்று அருள் செய்தனன் நம்பன்—என்று நம்பராகிய சிவ பெருமான் அருளிச்செய்தார்.

தொலைவில்—அழிவில்லாத என்றுமாம். தொலைவில் நன்மையாவது வீடு பேறும். (43)

அன்ன வர்க்கொடே யெவ்வகைச் செய்கையு மளித்துப்
பின்னை யுள்ளதோர் செய்கையும் புரியுமெம் பெருமான்
முன்னை வேதங்க ளவன்றனை யைந்தொழின் முதல்வ
னென்னு மற்றிது தேருதி கேட்டியா லின்னும்.

அன்னவர் கொடு எவ்வகைச் செய்கையும் அளித்து—அத்தேவர்களைக் கொண்டே எவ்வகையான தொழில்களையுஞ் செய்வித்து, பின்னை உள்ளது ஓர் செய்கையும் எம்பெருமான் புரியும்—இறுதியில் உள்ளதாகிய சங்காரம் என்கின்ற ஒரு தொழிலையும் எம்பெருமான் தாமே செய்தருளுவார்; அவன் தனை—அந்தக் கடவுளையே, முன்னை வேதங்கள்—பழைய வேதங்கள், ஐந் தொழில் முதல்வன் என்னும்—பஞ்ச கிருத்திய கருத்தா என்று கூறும்; இது தேருதி—இதனை அறிவாயாக; இன்னும் கேட்டி—மேலும் கேள்.

அன்னவர் ஈண்டுப் பிரம விஷ்ணுக்கள். எவ்வகைச் செய்கை, படைத்தல் காத்தல். (44)

வேறு

உருத்திர னென்னு நாம மொப்பிலா வரற்கு மன்னோன்
றரத்தகு சிறார்க ளானோர் தங்கட்கு மனையன் பாதங்
கருத்திடை யுன்னிப் போற்றுங் கணங்கட்கு மவன்றன் மேனி
பரித்திடு வோர்க்குஞ் செந்தீப் பண்ணவன் றனக்கு மாமால்.

உருத்திரன் என்னும் நாமம்—உருத்திரன் என்கின்ற பெயர், ஒப்பு இலா அரற்கும்—ஒப்பற்ற மகாருத்திரர் ஆகிய சிவபெருமானுக்கும், அன்னோன் தரத் தகும் சிறார்கள் ஆனோர் தங்கட்கும்—அப்பெருமான் தருதலால் தகுதி பொருந் திய வீரபத்திரர் ஐயனர் என்கின்ற குமாரர்களுக்கும், அனையன் பாதம் கருத்திடை உன்னிப் போற்றும் கணங்கட்கும்—அப்பெருமானுடைய பாதங் களை மனத்திலே தியானித்துத் துதிக்கின்ற கணங்களுக்கும், அவன் தன் மேனி பரித்திடுவோர்க்கும்—அப்பெருமானுடைய சாரூபத்தைத் தாங்கிய காலாக்கினி ருத்திரர் முதலியோருக்கும், செந்தீப் பண்ணவன் தனக்கும்— அக்கினி தேவனுக்கும், ஆம்—செல்லாநிற்கும்.

கணம்—உருத்திரகணம். (45)

இன்னலங் கடலுட் பட்டோர் யாரையு மெடுக்கு நீரா
லுன்னரும் பரம மூர்த்தி யுருத்திர னெனும்பேர் பெற்று
னன்னவன் றரவந் தோர்க்கு மடியடைந் தோர்க்கு மன்னோன்
றன்னுரு வெய்தி னோர்க்குஞ் சார்ந்ததா லவன்ற னிப்பேர்.

இன்னல் அம் கடலுள் பட்டோர் யாரையும் எடுக்கு நீரால்—துன்பத் தைத் தருகின்ற கரைதெரியாமையாகிய அழகினையுடைய பிறவியாகிய

கடலுள் வீழ்ந்து கிடப்போர் யாவரையுந் திருவருளாகிய கையினலே தூக்கி யெடுத்து முத்திக் கரையில் விடுந் தன்மையினல், உன்னரும் பரம மூர்த்தி—நினைத்தற்கரிய பரமபதி, உருத்திரன் எனும் பேர் பெற்றான்—உருத்திர மூர்த்தி என்னும் பெயரைப் பெற்றார்; அன்னவன் தர வந்தோர்க்கும்—அவருடைய குமாரர்களுக்கும், அடி அடைந்தோர்க்கும்—அவருடைய திருவடிகளை அடைந்தோர்க்கும், அன்னான் தன் உரு எய்தினோர்க்கும்—அவருடைய சாரூபத்தை அடைந்தோர்க்கும், அவன் தனிப்பேர் சார்ந்தது—அவருடைய ஒப்பற்ற திருநாமம் உபசார நெறியிற் சென்று பொருந்தியது.

உருத்திரன்—பகைவரை அழுவிப்போன், துக்கத்தினை நீக்குவோன், தீங்கினை நீக்குவோன், சமுசார பந்தத்தினின்றும் உயிர்களை விடுவிப்போன், சப்த மயப் பிரபஞ்சத்தினைத் தன்வயஞ் செய்தவன், எல்லாச் சொற்களாலுஞ் சொல்லப்படுவோன், பிரம ஞானத்தைப் போதிப்பவன், மௌன சமாதியைப் போதிப்பவன், பிரம வித்தையினல் உயிர்களுடைய அறியாமையைக் கரைப்பவன், ஆன்மாக்களால் அழுதடையப்படுபவன், தமோ குணத்தைத் தன்வசப்படுத்திக்கொண்டவன், உயிர்களிடத்துள்ள அஞ்ஞான நிமித்தந் துயருறுவோன், எவ்வுலகுக்கும் அச்சங்கொடுப்போன் என்றிங்ஙனம் பொருளுரைப்பர் நிகண்டுரையாசிரியர். முதலிருபொருள் தவிர ஏனைப் பொருள்கள் சாபால உபநிடத உரையிற் கண்டவை. (46)

செந்தழ லென்ன நின்ற தேவனுக் குருத்தி ரப்பேர்
வந்தது புகல்வன் கேட்டி வானவர் யாரு மீண்டி
முந்தையி லவுணர் தம்மை முனிந்திட முயன்று செல்ல
வந்தமி னிதியந் தன்னை யவ்வழி யொருங்கு பெற்றார்.

செந்தழல் என்ன நின்ற தேவனுக்கு—செந்தழல் என்று சொல்ல நின்ற அக்கினிதேவனுக்கு, உருத்திரப் பேர் வந்தது புகல்வன் கேட்டி—உருத்திரன் என்னும் நாமம் வந்த காரணத்தைச் சொல்லுவேன் கேள்; முந்தையில்—முன்னொரு காலத்தில், வானவர் யாரும் ஈண்டி—தேவர்களெல்லாம் ஒருங்கு திரண்டு, அந்தம் இல் நிதியம் தன்னை—மரணத்தை இன்மை செய்யும் அமிர்தத்தை, ஒருங்கு பெற்றார்—முழுவதையுந் தாமே பெற்றுக்கொண்டவராய், அவுணர் தம்மை முனிந்து—அசுரர்களைக் கோபித்து, இட முயன்று—அவர்களோடு போரிட முயன்று, செல்ல—அவர்கள்பாற் போர்மேலிட்டுச் செல்லும் பொருட்டு, அவ்வழி—அப்பொழுது.

அந்தமில் நிதி அளவற்ற நிதியுமாம். அவ்வழி என்பதற்கு அவ்விடத்தில் எனினுமாம். பெற்றார் என்பதைப் பெயராக்கினும் அமையும். (47)

பெற்றிடு நிதிய மெல்லாம் பீடிலாக் கனல்பால் வைத்துச்
செற்றலர் தம்மேற் சென்று செருச்செய்து மீண்டு தேவ
ருற்றுழி யதுகொ டாம லோடலுந் தொடர்ந்து சூழ
மற்றவன் கலுழ்த லாலே வந்தது மறையுங் கூறும்.

தேவர் பெற்றிடு நிதியம் எல்லாம்—தேவர்கள் தாம் பெற்ற நிதியம் முழுவதையும், பீடு இலாக் கனல்பால் வைத்து—பெருமையற்ற அக்கினியினிடம் வைத்துவிட்டு, செற்றலர் தம்மேற் சென்று செரு செய்து—பகைவர் மீது சென்று போர்செய்து, மீண்டு உற்றுழி—மீண்டு வந்தபோது, அது கொடாமல் ஓடலும்—அந்த நிதியைக் கொடாமல் அக்கினி ஓட, தொடர்ந்து சூழ—தேவர்கள் அவ்வக்கினியைச் சூழ்ந்துகொள்ள, அவன் கலுழ்தலாலே வந்தது—அவ்வக்கினி ரோதனஞ் செய்தமையால் உருத்திரன் என்னும் பெயர் அக்கினிக்கு உண்டானது ; மறையும் கூறும்—இதனை வேதங்களும் எடுத்துக் கூறும்.

ரோதனம் அழுதல். பாதுகாக்கும்படி வைத்ததனைக் கொடாது அபகரித்துக்கொண்டோடினமையின் 'பீடிலாக் கனல்' என்றார் (48)

ஓதுமா மறைக டம்மி லுருத்திர னெனும்பேர் நாட்டி
யேதிலார் தம்மைச் சொற்ற தீசன்மேற் சாரா வந்த
வாதிநா யகனைச் சுட்டி யறைந்ததும் பிறர்மாட் டேறு
மேதைசா லுணர்வி னான்றோர் விகற்பமீ துணர்வ ரன்றே.

ஓதும் மா மறைகள் தம்மில்—ஓதப்படும் பெருமை பொருந்திய வேதங்களில், உருத்திரன் எனும் பேர் நாட்டி—உருத்திரன் என்னும் பெயரை இட்டு, ஏதிலார் தம்மைச் சொற்றது ஈசன் மேற் சாரா—அயலாராகிய சிறியோரைப் பற்றிக் கூறியவைகள் சிவபெருமானைச் சாராவாம் ; அந்த ஆதி நாயகனைச் சுட்டி அறைந்ததும்—அவ்வாறே ஆதியாகிய சிவபெருமானைக் குறிப்பிட்டுக் கூறியவைகளும், பிறர்மாட்டு ஏறா—பிறர்மாட்டுச் செல்லாவாம்; மேதை சால் உணர்வின் ஆன்றோர்—அறிவான் மிக்க ஞானசாதகர், ஈது விகற்பம் உணர்வர்—இவ் வேறுபாட்டை அறிவர்.

'உருத்திரன் எனும் பேர் நாட்டி' என்பதனை ஆதி நாயகனுக்குங் கொள்க. சொற்றது, அறைந்தது தொழிற் பெயர்கள். (49)

ஓங்கிய சுருதி தன்னு ளுருத்திர னெனுநா மத்தாற்
றீங்கன லோனை யேனைத் திறத்தரை யுரைத்த வாற்றை
யீங்கிவண் மொழிய லெங்கோற் கியம்பிய விடங்க ணாடி
யாங்கவன் றலைமை காண்டி யறைகுவ னின்னு மொன்றே.

ஓங்கிய சுருதி தன்னுள்—உயர்ந்த வேதங்களில், உருத்திரன் எனும் நாமத்தால்—உருத்திரன் என்னும் பெயரால், தீங்கனலோனை—தீயாகிய அக்கினி தேவனையும், ஏனைத் திறத்தரை—ஏனைய கடவுளரையும், உரைத்தவாற்றை—குறித்துக் கூறிய ஒழுகலாறுகளை, ஈங்கு இவண் மொழியல்—இங்கே சிவபெருமானிடத்து ஏற்றிக் கூறுதே ; எங்கோற்கு இயம்பிய இடங்கள் நாடி—எம்பெருமானுக்கு அப்பெருமானுடைய புகழ் பேசிய இடங்களை ஆராய்ந்து,

ஆங்கு அவன் தலைமை காண்டி--அப்பெருமானுடைய தலைமைத் திறத்தைக் காண்பாயாக; இன்னும் ஒன்று அறைகுவன்—மேலும் ஒன்று கூறுவேன்.

உருத்திரன் என்னும் நாம ஒற்றுமை பற்றி அக்கினிதேவன் முதலி யோருக் குரைத்தவற்றைச், சிவனுக்குரிய வென்று கொள்ளற்க என்ப தாம். (50)

**வேறு**

முந்தை யோர்பகன் முனிவர்கள் யாவரு முதலோ
டந்த மில்லதோர் பரமிவ ரவரென வறைந்து
தந்த மிற்சென்று வாதுசெய் தறிவருந் தகவா
னொந்து மற்றவர் பிரமனை வினவுவா னுவன்றார்.

முந்தை ஓர் பகல்—முன்னர் ஒரு தினம், முனிவர்கள் யாவரும்—முனி வர்கள் எல்லாம், முதலோடு அந்தம் இல்லதோர் பரம் அவர் இவர் என அறைந்து—ஆதியும் அந்தமும் இல்லாத ஒரு தனிப் பரம்பொருள் அவரோ இவரோ என்று சந்தேகம் பேசி, தந்தமில் வாது செய்து சென்று—தங்களுக் குள் ஒருவரோ டொருவர் வாது செய்து காலங்கழித்து, அறிவரும் தகவால் நொந்து—நிச்சயித்தறிதற் கரிய தன்மையால் வருந்தி, அவர் பிரமனை வினவு வான் நுவன்றார்—அம்முனிவர்கள் பிரமதேவரை வினவி அறிவதென்று அவரை வினவும்பொருட்டுத் தம்முட் பேசிக்கொண்டார்கள். (51)

மல்லன் மேருவின் முடிதனின் மனோவதி வைகு
மல்லி வான்கம லத்திடை யண்ணலை யணுகி
யெல்லை தீர்ந்திடு பரம்பொரு ளுணர்கிலே மிவரென்
றெல்லை தன்னினீ யுரைத்தருள் செய்யென வுரைத்தார்.

மல்லல் மேருவின் முடிதனில் மனோவதி வைகும்—பொலிவு பொருந்திய மேருமலையின் சிகரத்திலுள்ள மனோவதி என்கின்ற நகரத்தில் வசிக்கும், அல்லி வான் கமலத்திடை அண்ணலை அணுகி—அகவிதழினையுடைய உயர்ந்த கமலாசனத்திலிருக்கின்ற பிரமதேவரை அடைந்து, எல்லை தீர்ந்திடு பரம் பொருள் உணர்கிலேம்—பிரமாணுதீதரான பரம்பொருளை அறியேம்; இவர் என்று—பரம்பொருள் இவரே என்று, நீ ஒல்லை தன்னில் உரைத்தருள் செய் என உரைத்தார்—தேவரீர் விரைவிற் கூறியருள வேண்டுமென்று பிரார்த்தித் தார்கள். (52)

உரைத்த வாசகங் கேட்டலு நான்முகத் தொருவன்
கருத்தி லிங்கிவை தெளிதர மறைமொழி காட்டி
விரித்து மென்னினுந் தெளிவுறார் மெய்ம்மையால் விரைவிற்
றெரித்து மிங்கென வுன்னின னவர்மய றீர்ப்பான்.

நான்முகத்து ஒருவன்—பிரமதேவர், உரைத்த வாசகம் கேட்டலும்—முனிவர்கள் உரைத்த வார்த்தைகளைக் கேட்டவுடன், கருத்தில் தெளிதர—மனத்திலே தெளிவு உண்டாகும் பொருட்டு, இங்கு மறைமொழி இவை காட்டி விரித்தும் என்னினும்—இங்கே வேத வசனங்களாகிய இவற்றைக் காட்டி விரித்துரைத்தோமாயினும், மெய்ம்மை தெளிவுறார்—உண்மையை உணரமாட்டார்கள்; ஆல்—ஆதலால், இங்கு விரைவில் தெரித்தும் என—இங்கே மற்றோருபாயத்தால் விரைவில் உண்மையை உணர்த்துவோமென்று, அவர் மயல் தீர்ப்பான் உன்னினன்—அம் முனிவரின் மயக்கத்தைப் போக்கும்படி சிந்தித்தார். (53)

நாற்ற லைச்சிறு மாமகன் றாதைதன் னலஞ்சேர்
தோற்ற முள்ளுற வுன்னியே விழிபுனல் சொரிய
வேற்றெ ழுந்துமீக் கரமெடா வுருத்திர னென்றே
சாற்றி மும்முறை நின்றனன் றெளிதருந் தகவால்.

நால் தலைச் சிறு மாமகன்—நான்கு தலைகளையுடைய மிகச் சிறு பிள்ளையாகிய பிரமா, தாதை தன் நலம் சேர் தோற்றம் உள்ளுற உன்னி—தந்தையாகிய சிவபெருமானுடைய நன்மை பொருந்திய ஞான சொருபத்தை மனத்தினுள்ளே பொருந்தத் தியானித்து, விழி புனல் சொரிய—கண்கள் ஆனந்த அருவி சொரிய, ஏற்று எழுந்து—அவர்கள் எதிரே எழுந்து, கரம் மீ எடா—கைகளை மேலே எடுத்து, உருத்திரன் என்றே மும்முறை சாற்றி—முழுமுதற் பரம்பொருள் உருத்திரர் உருத்திரர் உருத்திரர் என்று மூன்று முறை கூறி, தெளிதருந் தகவால் நின்றனன்—அவர்கள் உண்மையை உணரும் முகமாக நின்றார்.

எழுந்து நின்று உரைத்தல் உண்மை தெரிவிப்பதோருபாயமாம். (54)

அங்க ணான்முகன் சூளினு லாதியம் பகவன்
சங்க ரன்னெனக் காட்டியே பொடிப்புமெய் தயங்க
வெங்க னற்படு மிழுதென வுருகிமீ மிசைசேர்
செங்கை மீட்டனன் முனிவருக் கினையன செப்பும்.

அங்கண் நான்முகன்—அவ்விடத்திற் பிரமதேவர், ஆதியம் பகவன் சங்கரன் எனச் சூளினுல் காட்டி—ஆதியாகிய கடவுள் மகாசங்கார உருத்திரரே என்று ஆணைமேலிட்டுக் காண்பித்து, மெய் பொடிப்புத் தயங்க—மெய்க்கட் புளகம் விளங்க, வெம் கனல் படும் இழுது என உருகி—வெவ்விய அழலிடைப்பட்ட நெய்போல மனமுருகி, மீமிசை சேர் செங்கை மீட்டனன்—மேலே எடுத்த சிவந்த கைகளை மீட்டு, முனிவருக்கு இனையன செப்பும்—முனிவர்களுக்கு இவைகளைக் கூறுவார். (55)

வம்மி னுவுமக் கோருரை மொழிகுவன் வானோர்
தம்மை யெங்களை யளித்தனன் மறைகளுந் தந்தான்
மெய்ம்மை யாவர்க்குஞ் செய்பணி யுதவினன் மேனும்
மும்மை யாகிய செய்கைநம் பாலென மொழிந்தான்.

வம்மின் உமக்கு ஓர் உரை மொழிகுவன்—முனிவர்களே வாருங்கள் உங்களுக்கு ஓர் உறுதிமொழி கூறுவேன்; வானோர் தம்மை—தேவர்களையும், எங்களை—பிரம விஷ்ணுக்களாகிய எங்களையும், மேல்நாள் அளித்தனன்—சிருட்டி ஆரம்பகாலத்தில் படைத்தருளினர்; மறைகளும் தந்தான்—வேதங்களையுந் தந்தருளினர்; யாவர்க்கும் செய்பணி மெய்ம்மை உதவினன்—யாவர்க்கும் அவரவர் செய்யும் பணியின் மெய்ம்மையைத் தெரிவித்தருளினர்; மும்மை யாகிய செய்கை—மூன்றாகிய தொழிலும், நம்பால் என மொழிந்தான்—நம்மிடத்தேயாமென்று அந்த மெய்ம்மையையுங் கூறியருளினர்.

படைத்தல் காத்தல் நாங்கள் செய்பவைகளேயாயினும், அழித்தலோடு சேர்ந்து முத்தொழில்களும் அம் மகா உருத்திரர்பாலனவேயா மென்க. மும்மையாகிய செய்கை என்பதற்கு மூன்றுவதான அழித்தற் றொழில் எனக் கூறுவாரு முளர். (56)

அருளி னீர்மையா லைந்தொழில் புரிபவ னநாதி
பரம னின்மல னேதுவுக் கேதுவாம் பகவ
னொருவர் பாலினும் பிறந்திடா னருவதா யுருவா
யிருமை யாயுறை பூரண னியாவர்க்கு மீசன்.

அருளின் நீர்மையால் ஐந்தொழில் புரிபவன்—ஆன்மாக்கள்மீது வைத்த அருட்டன்மையாற் பஞ்சகிருத்தியஞ் செய்பவர்; அநாதி—தொடக்கமில்லா தவர்; பரமன்—மேலானவர்; நின்மலன்—மலரகிதர்; ஏதுவுக்கு ஏது ஆம் பகவன்—உபாதானங்களுக் கெல்லாம் உபாதானமாய சாட்குண்ணியர்; ஒருவர் பாலினும் பிறந்திடான்—ஒருவரிடத்தும் பிறவாதவர்; அருவதாய் உருவாய் இருமையாய் உறை பூரணன்—அருவமாயும் உருவமாயும் அருவுருவ மாயும் இருக்கின்ற பரிபூரணர்; யாவர்க்கும் ஈசன்—அனைவருக்குந் தலைவர்.

உபாதானம்—காரணம். சாட்குண்ணியம்—அறுகுணமுடைமை. (57)

முற்று மாயினன் முடிவிற்கு முடிவிற்கு முடிவா
யுற்று ளானென்று முள்ளவ னனைத்தையு முடையோன்
மற்றெ னுலுரைப் பரியதோர் சீர்த்தியன் மலர்த்தாள்
பற்றி னேர்க்கன்றி யுணரவொண் ணுததோர் பழையோன்.

முற்றும் ஆயினன்—முழுதுமாயிருப்பவர்; முடிவிற்கும்—சேதனப் பிரபஞ்ச முடிவுக்கும், முடிவிற்கும்—அசேதனப் பிரபஞ்ச முடிவுக்கும், முடிவாய் உற்

றுளான்—முடிவாயிருப்பவர் ; என்றும் உள்ளவன்—அநாதி நித்தியர் ; அனைத்தையும் உடையோன்—எல்லாமுடையவர் ; என்னல் உரைப்பு அரியது ஓர் சீர்த்தியன்—என்னுல் உரைத்தற்கரிய கீர்த்தியுடையவர்; மலர்த்தாள் பற்றினோர்க்கு அன்றி—தமது மலரடிகளைப் பற்றினவர்களுக்கன்றி, உணர ஒண்ணுத தோர் பழையோன்—உணர ஒண்ணுமையையுடைய ஒப்பற்ற புராதனர்.

முடிவாயுள்ளன வென்று சொல்லப்படுவனவற்றுக்கெல்லாம் முடிவாயுள்ளனவற்றிற்கும் முடிவாயுள்ளவர் எனினுமாம். (58)

அன்ன தோர்சிவன் பரமென மறையெலா மறையு
மின்னு மாங்கவ னிலையினைக் கண்ணனும் யானு
முன்னி நாடியுங் காண்கில மவன்பதி யொழிந்தோர்
மன்னு யிர்த்தொகை யென்றன னன்னதொன் மலரோன்.

அன்னது ஓர் சிவன் பரம் என—அத்தகைய ஒப்பற்ற சிவபெருமானே பரம்பொருள் என்று, மறை எலாம் அறையும்—வேதங்களெல்லாம் முழங்கும் ; ஆங்கு அவன் நிலையினை—அச்சிவபெருமானுடைய இயல்பை, கண்ணனும் யானும் இன்னும் உன்னி நாடியும் காண்கிலம்—திருமாலும் யானும் இன்னமும் உன்னி ஆராய்ந்தும் அறியேம் ; அவன் பதி—அச்சிவனே பதிப் பொருள் ; ஒழிந்தோர் மன்னுயிர்த்தொகை—மற்றையோர் நிலைபெற்ற பசுவர்க்கங்கள் ; என்றனன்—என்று கூறினுர், அன்ன தொல் மலரோன்—அந்தப் பழையோரான பிரமதேவர். (59)

அருள்பு ரிந்துபின் சிவனடி கைதொழு தந்நாண்
மருள கன்றிடு பிதாமக னிருந்தனன் மற்றப்
பொருளி னீர்மையைத் தெரிந்துதம் புந்திமேற் கொண்ட
விருளொ ழிந்தனர் மகிழ்ந்தனர் முனிவர ரிசைப்பார்.

அருள் புரிந்து—இங்ஙனம் உபதேசஞ்செய்து, பின்—பின்பு, சிவன் அடி கை தொழுது—சிவபெருமானுடைய திருவடிகளைக் கைகூப்பி வணங்கி, மருள் அகன்றிடு பிதாமகன்—மயக்கமற்ற பிரமதேவர், அ நாள் இருந்தனன்—அந் நாளில் இருந்தார் ; அப் பொருளின் நீர்மையை—அம் மெய்ப்பொருளின் இயல்பை, தெரிந்து—தெளிந்து, தம் புந்தி மேல் கொண்ட இருள் ஒழிந்தனர்—தம் மனத்திற் கொண்ட மயக்கம் நீங்கி, மகிழ்ந்தனர்—மகிழ்ந்து, முனிவரர் இசைப்பார்—முனி சிரேட்டர்கள் கூறுவார்கள். (60)

தாதை யாயெமை யளித்தனை யாங்களுன் றனய
ராத லாலெமக் கித்திறந் தேற்றினை யடிகே
ளீத லாலின்று குரவனு மாயினை யென்றே
பாத தாமரை வணங்கினர் முனிவரர் பலரும்.

தாதையாய் எமை அளித்தனை—பிதாவாகி எங்களைப் பெற்றருளினீர் ; யாங்கள் உன் தனயர்—நாங்கள் உம்முடைய பிள்ளைகள் ; ஈது அலால்—இவ்வாறு அல்லாமல், அடிகேள் எமக்கு இத்திறம் தேற்றினை ஆதலால்—அடிகளே எங்களுக்கு இவ்வுண்மையை உபதேசித்தருளினீர் ஆகையால், இன்று குரவனும் ஆயினை—இன்று ஆசாரியரும் ஆயினீர் ; என்று முனிவரர் பலரும்—என்று கூறி முனிசிரேட்டர் பலரும், பாத தாமரை வணங்கினர்—பிரமதேவருடைய பாத கமலங்களை வணங்கினார்கள். (61)

அடிவ ணங்கினர் தமைத்தெரிந் தின்றுதொட் டமலன்
வடிவ முன்னுதி ரருச்சனை புரிகுதிர் வயங்கும்
பொடிய ணிந்துநல் லஞ்செழுத் தியம்புதிர் புரைசேர்
கொடிய வெம்பவ மகலுதி ரெனவிடை கொடுத்தான்.

அடி வணங்கினர் தமை தெரிந்து—தமது பாதங்களை வணங்கிய முனிவர்களை நோக்கி, இன்று தொட்டு அமலன் வடிவம் உன்னுதிர்—நீவிர் இன்று தொடக்கம் நின்மலரான சிவபெருமானுடைய திருவுருவத்தைத் தியானஞ் செய்குதிர் ; அருச்சனை புரிகுதிர்—அப்பெருமானுக்குப் பூசனை செய்குதிர் ; வயங்கும் பொடி அணிந்து—சிவத்துவம் விளங்கும் விபூதியைத் தரித்து, நல் அஞ்செழுத்து இயம்புதிர்—ஸ்ரீ பஞ்சாட்சரத்தைச் செபிக்குதிர் ; புரை சேர் கொடிய வெம் பவம் அகலுதிர்—குற்றம் பொருந்திய வெவ்விய கொடிய பிறவியை நீங்குதிர் ; என விடை கொடுத்தான்—என்று உபதேசஞ் செய்து விடை கொடுத்தனுப்பினர். (62)

ஆத லாலெங்க ளீசனே பரம்பொரு ளல்லா
வேதி லாரெலா முயிர்த்தொகை யாகுமா லிதனைக்
காத லாலுரைத் தேனன்று வாய்மையே காண்டி
வேத மேமுத லாகிய கலையெலாம் விளம்பும்.

ஆதலால் எங்கள் ஈசனே பரம்பொருள்—ஆதலினாலே எங்கள் சிவபெருமானே பரம்பொருள் ; அல்லா ஏதிலார் எலாம் உயிர்த்தொகையாகும்—சிவபெருமானல்லாத பிறர் எல்லாம் பசுக்களாகும் ; இதனைக் காதலால் உரைத்தேன்—இவ்வுண்மையை உன்பாற்கொண்ட அன்பினாற் கூறினேன் ; நன்று வாய்மை காண்டி—நன்மையாகிய சத்தியத்தைக் கடைப்பிடிப்பாயாக ; வேதம் முதலாகிய கலையெலாம் விளம்பும்—இவ்வுண்மையை வேதம் முதலிய கலைகளெல்லாம் மொழியும்.

காதலால் உரைத்தேன் அன்று எனப் பிரித்து, இறைவன்மீது கொண்ட காதலால் உரைத்தேனல்லேன்; வாய்மையையே உரைத்தேன் என உரைப்பினுமாம். (63)

அன்றி முன்னய னுன்றனக் கரன்புக ழனைத்து
நன்று கேட்டிட வுணர்த்தின னீயது நாடி
நின்று மாதவம் புரிந்திது பெற்றனை நினக்குப்
பொன்று காலம்வந் தெய்தலின் மறந்தனை போலாம்.

அன்றி—அல்லாமலும், முன்—முன்னர், அயன்—உன் பிதாவாகிய பிரம தேவர், அரன் புகழ் அனைத்தும் நன்று கேட்டிட உன்தனக்கு உணர்த்தினன்—சிவபெருமானுடைய புகழ் அனைத்தையும் நீ நன்கு கேட்கும்வண்ணம் உனக்கு உபதேசித்தார்; நீ அது நாடி நின்று—நீ அவ்வுபதேசத்தை ஆராய்ந்து அவ்வுபதேச வழியில் நின்று, மாதவம் புரிந்து—பெரிய தவத்தைச் செய்து, இது பெற்றனை—இச்செல்வத்தைப் பெற்றாய்; நினக்குப் பொன்று காலம் வந்து எய்தலின்—உனக்கு அழிவுகாலம் வந்து கிட்டுதலால், மறந்தனை போலாம்—உன் பிதாவின் உபதேசத்தையும் யாவற்றையும் மறந்தாய் போலும். (64)

தந்தை யேமுதல் யாவரு முடிவுறுந் தகவால்
வந்து நின்னவை யிருந்தனர் மாயையான் மருண்டா
யுய்ந்தி டும்படி நினைத்தியே லரற்கவி யுதவி
யிந்த மாமகம் புரிந்திடு வாயென விசைத்தான்.

தந்தையே முதல் யாவரும்—உன் தந்தையாகிய பிரமா முதலிய யாவரும், முடிவு உறும் தகவால் வந்து நின் அவை இருந்தனர்—இறக்கும் இயல்பால் வந்து உன் சபையில் இருந்தார்கள்; மாயையால் மருண்டாய்—நீயோ மாயையினால் மயங்கினாய்; உய்ந்திடும்படி நினைத்தியேல்—நீ உய்யும்வண்ணம் நினைப்பாயானால், அரற்கு அவி உதவி—சிவபெருமானுக்கு அவியை நல்கி, இந்த மாமகம் புரிந்திடுவாய்—இந்தப் பெரிய யாகத்தைச் செய்குதி; என இசைத்தான்—என்று ததீசி மகாமுனிவர் கூறியருளினர். (65)

ததீசிப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 519.

---

# ததீசி யுத்தரப் படலம்

இந்த வண்ணமத் ததீசிமா முனிவர னியம்பக்
கந்த மாமலர்க் கடவுள்சேய் நகைசெய்து கானிற்
சிந்து மென்பொடு சிரத்தொகை யணியுமோ தேவர்
வெந்த சாம்பரும் பூசுமோ பரனெனு மேலோன்.

இந்த வண்ணம் அ ததீசி மா முனிவரன் இயம்ப—இவ்வண்ணம் அந்தத் ததீசி மகாமுனிவரர் கூறியருள, கந்த மா மலர்க் கடவுள் சேய் நகை செய்து—வாசனை பொருந்திய சிறந்த தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவரின் புதல்வனுன தக்கன் சிரித்து, பரன் எனும் மேலோன்—பரம்பொருள் என்று கூறும் மேலோராகிய கடவுள், கானில் சிந்தும் என்பொடு சிரத்தொகை அணியுமோ—சுடுகாட்டிற் சிதறுண்டு கிடக்கும் எலும்புகளையுந் தலைமாலை களையும் அணிவாரா ; தேவர் வெந்த சாம்பரும் பூசுமோ—தேவர்கள் வெந்த தனுலுண்டான சாம்பலையும் பூசுவாரோ.

பரம்பொருளாயின் இங்ஙனஞ் செய்யாரே என்றுனும் என்க. மேலும் இவ்வாறு கொள்க. (1)

கழிந்த தீயுட லேந்தியே திரியுமோ கானி
லிழிந்த கேசமுந் தரிக்குமோ வேனத்தி னெயிறு
மொழிந்த கூருமத் தோடுமேற் கொள்ளுமோ வுலக
மழிந்தி டும்படி யுயிர்களை முடிக்குமோ வமலன்.

அமலன்—அநாதி மலமுத்தரான கடவுள், தீ—தீந்த, கழிந்த உடல் ஏந்தி திரியுமோ—கழியுடன் முழு வெலும்பாகிய கங்காளத்தை ஏந்தித் திரிவாரோ ; கானில்—மயானத்தில், இழிந்த—தலையினிழிந்த, கேசமும் தரிக்குமோ—மயிரை யுந் தரிப்பாரா ; ஏனத்தின் எயிறும்—பன்றியின் கொம்பையும், ஒழிந்த கூருமத்து ஓடும்—இறந்துபட்ட ஆமையின் ஓட்டையும், மேற்கொள்ளுமோ—அணிவாரோ ; உலகம் அழிந்திடும்படி—உலகம் அழியும்படி, உயிர்களை முடிக்குமோ—உயிர்களைச் சங்கரிப்பாரா.

ஒழிந்த என்பதற்குத் தவிர்ந்த என்றுரைப்பினுமாம். (2)

புலியி னீருரி யுடுக்குமோ தந்தியின் புன்றோல்
வலிய தன்புயம் போர்க்குமோ செந்தழன் மழுமா
னிலைகொண் முத்தலை வேற்படை யேந்துமோ வெங்கும்
பலியு மேற்குமோ நிருத்தமுஞ் செய்யுமோ பகவன்.

பகவன்—அறுகுணங்களையுடையவராகிய கடவுள், புலியின் ஈர் உரி உடுக்குமோ—புலியினது உரித்த தோலை உடுப்பாரா; தந்தியின் புன் தோல் வலிய தன் புயம் போர்க்குமோ—யானையினது புன்மையாகிய தோலை வலிய தமது புயத்தின்மீது போர்ப்பாரா; செந்தழல் மழு மான் இலைகொள் முத்தலை வேற்படை ஏந்துமோ—செந்நிறம் பொருந்திய அக்கினியையும் மழுவையும் மானையும் இலைவடிவமான மூன்று தலைகளையுடைய சூலப்படையையும் ஏந்துவாரா; எங்கும் பலியும் ஏற்குமோ—எவ்விடத்தும் பிச்சையும் ஏற்பாரா; நிருத்தமும் செய்யுமோ—கூத்தும் ஆடுவாரா.

வேல் ஆயுதப் பொது. வேற்படை, படை என்னும்பொருட்டு. (3)

மிக்க சாரதர் படையெனத் திரியுமோ விடமே
கக்கும் வெம்பணி பூணுமோ வெண்டலை கலமாச்
செக்கர் மாமுடி தரிக்குமோ வம்பரந் திசையா
நக்க னாகுமோ வேற்றுருக் கொள்ளுமோ நாதன்.

நாதன்—முதல்வராகிய கடவுள், மிக்க சாரதர் படை எனத் திரியுமோ—மிக்க பூதர்களைத் தமக்குச் சேனைகள் என்று கொண்டு திரிவாரோ; விடமே கக்கும் வெம்பணி பூணுமோ—விடத்தையே கக்குகின்ற கொடிய பாம்புகளைப் பூண்பாரோ; வெண்டலை கலமாச் செக்கர் மாமுடி தரிக்குமோ—வெண்டலையை ஆபரணமாகச் செந்நிறம்பொருந்திய பெரிய முடியின்மீது தரிப்பாரா; திசை அம்பரமா நக்கன் ஆகுமோ—திக்குக்கள் வஸ்திரமாக நிருவாணியாவாரோ; வேற்றுருக் கொள்ளுமோ—பலவேறு உருவங்களைக் கொள்ளுவாரா. (4)

விடையு மேறுமோ வாலமுங் கொள்ளுமோ வீந்தோர்
சுடலை தன்னினு மாடுமோ வொருத்தியைச் சுமந்தோர்
மடம கட்கிடங் கொடுக்குமோ மகவையும் பெறுமோ
கடிய தோர்குணம் படைக்குமோ பரமெனுங் கடவுள்.

பரம் எனும் கடவுள்—பரம்பொருள் என்று சொல்லப்படுங் கடவுள், விடையும் ஏறுமோ—இடபத்திலும் ஏறுவாரா; ஆலமும் கொள்ளுமோ—நஞ்சையும் உண்பாரா; வீந்தோர் சுடலை தன்னினும் ஆடுமோ—இறந்தோரின் இடமாகிய சுடலையிலும் ஆடுவாரா; ஒருத்தியைச் சுமந்து—ஒரு பெண்ணைத் தலையிற் சுமந்துகொண்டு, ஓர் மடமகட்கு இடம் கொடுக்குமோ—மற்றொரு மடப்பம் பொருந்திய பெண்ணுக்கு இடங் கொடுப்பாரா; மகவையும் பெறுமோ—பிள்ளையையும் பெறுவாரா; கடியது ஓர் குணம் படைக்குமோ—குணங்களுக்குள் கடியதொரு குணமாகிய தாமத குணத்தையும் பொருந்துவாரா.

இடம்—இடப்பாகம். இங்கே வேறு பொருள் தொனிக்கக் கூறப்பட்டது. (5)

ஆத லாலுங்க ளீசனோர் குணமில னவனுக்
கீத லின்றியாம் புரிகின்ற மகத்தவி யெனலு
நாத னைக்கொலோ பழிக்குவ னிவனென நகையாக்
கோதின் மாதவ முனிவர னழலெனக் கொதித்தான்.

ஆதலால்—இவ்வாற்றால், உங்கள் ஈசன்—நும்மனோர் வழிபடுங் கடவுள், ஓர் குணம் இலன்—சிறிதும் நற்குணம் இல்லாதவர்; அவனுக்கு யாம் புரிகின்ற மகத்து அவி ஈதல் இன்று—இப்படிப்பட்ட சிவனுக்கு யாஞ் செய்கின்ற யாகத்தில் அவிப்பாகங் கொடுத்தல் இல்லையாம்; எனலும்—என்றிவ்வாறு தக்கன் கூறுதலும், இவன் நாதனைக்கொலோ பழிக்குவன் என நகையா—இப் பதகன் பரம்பொருளாகிய சிவபெருமானையோ பழிப்பான் என்று சிரித்து, கோதில் மா தவ முனிவரன்—குற்றமற்ற மகா தவ சிரேட்டரான ததீசி முனிவர், அழல் எனக் கொதித்தான்—அக்கினிபோலக் கொதித்தார். (6)

தீர்த்த னுண்மையை யுணர்கில னிவனொடு சிறிதும்
வார்த்தை கூறுத றகாதுமா லயன்முதல் வானோ
ரார்த்த சங்கத்தி லிகழ்ந்தவற் கெதிர்மொழி யறைய
வீர்த்த தென்னுள முணர்த்துவன் சிலவென விசைந்தான்.

தீர்த்தன் உண்மையை உணர்கிலன்—பரிசுத்தரான சிவபெருமானுடைய உண்மையை அறிய வல்லனல்லன்; இவனொடு சிறிதும் வார்த்தை கூறுதல் தகாது—இப்படிப்பட்டவனுடன் சற்றேனும் வார்த்தையாடுதல் தகுதியன்று; ஆயினும், மால் அயன் முதல் வானோர் ஆர்த்த சங்கத்தில் இகழ்ந்தவற்கு—விஷ்ணு பிரமா முதலிய தேவர்கள் குழுமிய சபையில் எம்பெருமானை இகழ்ந்த இவனுக்கு, எதிர் மொழி அறைய என் உளம் ஈர்த்தது—மாறுத்தரம் வழங்க என் மனம் என்னை இழுத்தது; ஆகையினாலே, சில உணர்த்துவன் என—சில சமாதானங்களை உணரச் செய்வேன் என்று, இசைந்தான்—தம்மைத் தாமே உடம்பாடு செய்தருளினர்.

மாலயன் வானோர் தக்கன் ஆணைக்குக் கட்டுப்பட்டிருந்தமையின் ஆர்த்த சங்கம் என்றார். ஆர்த்தல்—கட்டுதல். (7)

இந்த வாறிசைந் தெம்பெரு மான்றனக் கிவணீ
நிந்தை போற்சில கூறினை நிமலனுக் கவைதாம்
வந்த வண்ணமோர் சிறுவது முணர்ந்திலை மருண்டாய்
புந்தி யில்லதோர் கயவநீ கேளெனப் புகல்வான்.

இந்தவாறு இசைந்து—இவ்வாறு தம்மை ஒருப்பாடு செய்துகொண்டு, எம்பெருமான் தனக்கு நிந்தைபோல் இவண் நீ சில கூறினை—எம்பெருமா

னுக்கு இழிவு போல இவ்விடத்தில் நீ சிலவற்றைக் கூறினாய்; நிமலனுக்கு அவைதாம் வந்தவண்ணம் ஓர் சிறுவதும் உணர்ந்திலை—மலரகிதரான கடவுளுக்கு அவைகள் வந்த இயல்பை ஒரு சிறிதும் அறிந்திலை; மருண்டாய்—மயங்கினாய்; புந்தி இல்லது ஓர் கயவ நீ கேள்—புத்தியில்லாததொரு கயவனே நீ கேட்பாயாக; என புகல்வான்—என்று கூறியருளுவார். (8)

நிலவு கின்றதன் னருளுருக் கொண்டிடு நிமலன்
றலைமை பெற்றிடு புங்கவர் தம்மைமுன் றந்தே
யுலகம் யாவையு மளித்தருள் செய்திட வுதவி
யலகி லாவுயிர் யாவையு மயன்கணின் றளிப்பான்.

நிலவுகின்ற தன் அருள் உருக் கொண்டிடு நிமலன்—விளங்குகின்ற தமது அருள்வடிவத்தைக் கொள்ளுகின்ற சிவபெருமான், முன்—சிருட்டியாரம்பத்தில், தலைமை பெற்றிடு புங்கவர் தம்மை தந்து—முதன்மை பொருந்திய பிரம விட்டுணுக்களைப் படைத்து, உலகம் யாவையும் அளித்து அருள் செய்திட உதவி—உலகம் முழுவதையும் படைத்துக் காக்கும்பொருட்டு உத்தியோகங்களை அவர்களுக்கு அநுக்கிரகஞ் செய்து, அயன்கண் நின்று—அவர்களுட் பிரமாவை அதிட்டித்து நின்று, அலகிலா உயிர் யாவையும் அளிப்பான்—எண்ணில்லாத உயிர்கள் யாவையும் படைத்தருளுவர்.

அருளுருக் கொண்டிடு நிமலன் என்பதனால், அருள் வாயிலாகவே படைப்பாதித் தொழில்களை இயற்றியருளுவாரென்பது பெற்றாம். (9)

மாய வன்கணின் றவையெலாம் போற்றிமற் றவைக்குத்
தூய துப்புர வருத்தியே மேல்வினை தொலைச்சி
யாய வற்றிலோர் பற்பல வீடுற வருளி
மேய வாருயி ருலகெலாம் பின்னரே வீட்டும்.

மாயவன்கண் நின்று—விஷ்ணுவை அதிட்டித்து நின்று, அவை எலாம் போற்றி—படைக்கப்பட்ட அவ்வுயிர்க ளனைத்தையுங் காத்து, அவைக்கு தூய துப்புரவு அருத்தி—அவ்வுயிர்களுக்குத் தூய்மையான போகங்களை ஊட்டி, மேல் வினை தொலைச்சி—ஆகாமிய வினையை ஒழித்து, ஆயவற்றில் ஓர் பற்பல வீடு உற அருளி—அவ்வுயிர்களில் ஒரு பகுதியவாய பல உயிர்களுக்கு வீடு பேற்றைக் கொடுத்து, மேய ஆருயிர்—வீடு பெறாது எஞ்சியிருந்த அரிய உயிர்களையும், உலகு எலாம்—உலகமனைத்தையும், பின்னர் வீட்டும்—பின்பு சங்கரித்தருளுவர்.

துப்புரவுகளைத் துய்க்குங்கா லீட்டும் வினை மேல்வினை; அஃது ஆகாமியம். (10)

அன்ன வேலையி லவையெலா மழித்தபின் னளிப்போ
ரென்ன நின்றவர் தம்மையு மொடுக்குறு மிதற்பின்
முன்ன ருள்ளதோ ரேகமா யுறையுமெம் மூர்த்தி
பின்னு மிம்முறை புரிந்திடு மென்றுமிப் பெற்றி.

அன்ன வேலையில்—அந்தச் சங்காரகாலத்தில், அவை எலாம் அழித்த பின்—அவை அனைத்தையும் அழித்த பின்பு, அளிப்போர் என்ன நின்றவர் தம்மையும் ஒடுக்குறும்—படைத்தல் காத்தல் செய்வோர் என்று சொல்லப் பட்டு நின்றோரான பிரம விட்டுணுக்களையும் ஒடுக்கியருளுவர் ; இதன் பின்—இவ்வாறாய சங்காரத்தின் பின்பு, எம் மூர்த்தி முன்னர் உள்ளது ஓர் ஏகமாய் உறையும்—எமது கடவுள் முன்னரே உளதாயதொரு ஏக வஸ்துவா யிருப்பர் ; பின்னும்—மீட்டும், இம்முறை என்றும் இப் பெற்றி புரிந்திடும்—இவ்வாறே எஞ்ஞான்றும் இப் பஞ்சகிருத்திய இயல்பைச் செய்தருளுவர். *(11)*

பரம னிவ்வகை யடுந்தொறு மடுந்தொறும் பலவாம்
பிரம னாதியோ ரென்பினைத் தரிக்குமப் பெரியோர்
சிரமெ லாந்தொடுத் தணியலா வணிந்திடுஞ் சிகைதன்
னுரமு லாவுமுந் நூலென வேயணிந் துறையும்.

பரமன் இவ்வகை அடும்தொறும் அடும்தொறும்—கடவுள் இவ்வாறு சங்கரிக்குந்தோறும் சங்கரிக்குந்தோறும், பலவாம் பிரமன் ஆதியோர் என்பினைத் தரிக்கும்—அநேகர் ஆகிய பிரமர்கள் முதலியோரின் எலும்புகளைத் தரித்தருளுவர் ; அப் பெரியோர் சிரம் எலாம் தொடுத்து அணியலா அணிந் திடும்—அந்த மேலோராகிய தேவர்களுடைய தலைகளையெல்லாந் தொடுத்து மாலையாக அணிந்தருளுவர் ; சிகை தன் உரம் உலாவு முந்நூல் என அணிந்து உறையும்—அவர்களுடைய சிகைகளை மார்பிற் பொருந்திய பூணூலாக அணிந்து எழுந்தருளுவர்.

என்பாதிகளை எம்பெருமான் தரிப்பதற்கு அவர் தவம் இருந்தவாறு பற்றி அவரை அப்பெரியோர் என்றார். அணியல்—மாலை. சிகை—மயிர்முடி. முந்நூலென என்பதற்கு முந்நூலையொப்ப என உரைப்பினும் அமையும். *(12)*

அல்ல தங்கவர் தங்களை முத்தலை யயிலான்
மெல்ல வேயெடுத் தேந்திடு மவர்தமை விழியாற்
றொல்லை நாளினீ றாக்கியும் புனைந்திடுந் தூயோன்
மல்லன் மாதவ மனையவ ரியற்றிய வகையால்.

அல்லது—இவ்வாறு செய்வதன்றி, தூயோன்—தூயோராகிய சிவபெரு மான், தொல்லை நாளில்—அந்தச் சங்காரகாலத்தில், அங்கு அவர் தங்களை—அந்தப் பிரமாதி தேவர்களை, முத்தலை அயிலான் மெல்லவே எடுத்து

ஏந்திடும்—முத்தலைச் சூலத்தினுல் மெல்லென எடுத்து ஏந்துதலுஞ் செய்தருளு வர்; அவர்தமை விழியால் நீருக்கியும் புனைந்திடும்—அவர்களை நெற்றிக் கண்ணக்கினியினுல் நீறு செய்து பூசுதலுஞ் செய்தருளுவர்; மல்லல் மா தவம் அனையவர் இயற்றிய வகையால்—இவ்வாறு செய்தல் சிறந்த பெரிய தவத்தை அவர்கள் செய்த இயல்பினுலாம் என்க. (13)

ஆத லாற்றனை வியப்பதற் கன்றவை யணித
லீத லாதொரு திறமுள தியாவரு மெவர்க்கு
நாத னேயிவ னென்றுதன் பாங்கரே நண்ணித்
தீதெ லாமொரீஇ முத்திபெற் றுய்ந்திடுஞ் செயலே.

ஆதலால் அவை அணிதல் தனை வியப்பதற்கு அன்று—ஆகையினுலே என்பு முதலியவற்றை அணிவது தம்மை வியந்துகொள்ளுவதற்கு அன்று; ஈது அலாது ஒரு திறம் உளது—இஃதன்றி இவ்வாறு செய்தற்கு மற்றெரு காரணம் உளது; யாவரும் எவர்க்கும் நாதன் இவனே என்று—எல்லாரும் எவர்க்கும் பரமபதி இவரே என்று அறிந்து, தன் பாங்கர் நண்ணி—தமது பக்கலை அணுகி, தீது எலாம் ஒரீஇ—தீமைகளையெல்லாம் நீங்கி, முத்தி பெற்று உய்ந் திடும் செயலே—வீடு பெற்று உய்தி கூடுதற்குபகாரமான அருட் செயலேயாம்.

ஒருதிறம் உய்ந்திடும் செயலேயாம் என்க. (14)

என்பு நீறொடு கழியுடல் சிகைமுடி யெனைத்து
முன்ப ணிந்திடு மியல்பினை முழுதுயிர்த் தொகைக்கு
மன்பு செய்திடுஞ் செயலிது வாமென வறிநீ
பின்பு முள்ளதுங் கேண்மதி யகந்தையாற் பெரியோய்.

என்பு நீறொடு கழியுடல் சிகைமுடி எனைத்தும்—எலும்பு நீறு கங்காளம் சிகை தலை ஆகிய எல்லாவற்றையும், முன்பு அணிந்திடும் இயல்பினை—முன் னுளிற் சிவபெருமான் அணிந்த இயல்பை, இது முழுது உயிர்த் தொகைக்கு அன்பு செய்திடும் செயல் ஆம் என—இவ்வியல்பு எல்லா ஆன்மாக்களுக்கும் அநுக்கிரகஞ் செய்யுஞ் செயலாமென்று, அகந்தையாற் பெரியோய் நீ அறி—அகந்தையால் மிக்க தக்கனே நீ அறியக்கடவாய்; பின்பும் உள்ளதும் கேள்—மேலும் நீ வினவியுள்ளதனையும் விளக்குவோம் கேட்பாயாக.

மேல் வினவியது ஏனத்தெயிறு பற்றியது. அதற்கு முந்திய விஞக்களுக்கு விளக்கம் அருளப்பட்டது. (15)

விண்ணு ளோர்க்கெலா மல்லலே வைகலும் விளைத்து
நண்ணு மாடகக் கண்ணினன் முன்னமோர் நாளின்
மண்ண கந்தனை வெளவியே வயிற்றிடை வைத்துத்
துண்ணெ னப்பிலம் புக்கன னுயிரெலாந் துளங்க.

முன்னம் ஓர் நாளில்—முன்னொருகாலத்திலே, விண்ணுளோர்க்கு எலாம் வைகலும் அல்லல் விளைத்து நண்ணும் ஆடகக் கண்ணினன்—தேவர்களுக்கெல்லாம் நாள்தோறுந் துன்பத்தினைச் செய்துகொண்டிருந்த இரணியாக்கன் என்பவன், மண்ணகம் தனை வௌவி—பூமியைக் கவர்ந்து, வயிற்றிடை வைத்து—வயிற்றினுள் அடக்கிக்கொண்டு, உயிர் எலாம் துளங்க—உயிர்களனைத்தும் நடுங்கும்படி, துண்ணெனப் பிலம் புக்கனன்—விரைவாகப் பாதாள உலகிற் புகுந்தான்.

இவன் இரணியன் தமையன். (16)

கண்டு வானவர் யாவரு மஞ்சினர் கரிய
கொண்டன் மேனியம் பண்ணவன் கோகன தத்தோன்
றுண்ட மாகிய விடத்திலோ ரேனமாய்த் தோன்றி
யண்ட மீதுபோய் வடவரை யெனவளர்ந் தார்த்தான்.

வானவர் யாவரும் கண்டு அஞ்சினர்—தேவர்களெல்லாம் இரணியாக்கன் செயலைக் கண்டு அஞ்சினார்கள்; கரிய கொண்டல் மேனி அம் பண்ணவன்—அப்பொழுது கரிய மேகம்போன்ற திருமேனியையுடைய மகாவிஷ்ணு, கோகனதத்தோன் துண்டமாகிய இடத்தில்—தாமரை யாசனரான பிரமாவின் நாசியின்கண்ணே, ஓர் ஏனமாய் தோன்றி—ஒரு பன்றியாய் உதித்து, அண்டம் மீது போய்—அண்ட முகட்டிற் சென்று, வட வரை என வளர்ந்து—மேருமலையை ஒப்ப வளர்ந்து, ஆர்த்தான்—உங்காரஞ் செய்தார்.

அண்டம் ஆகாயமுமாம். (17)

ஓரி மைக்குமுன் பாதலந் தன்னின்மா லுற்றுக்
கூரெ யிற்றினாற் பாய்ந்துபொற் கண்ணனைக் கொன்று
பாரி னைக்கொடு மீண்டுமுன் போலவே பதித்து
வீர முற்றனன் றன்னையே மதித்தனன் மிகவும்.

மால்—பன்றி வடிவெடுத்த திருமால், ஓர் இமைக்கு முன் பாதலம் தன்னில் உற்றுப் பாய்ந்து—ஓர் இமைப்பொழுதிற் பாதலத்திற் சென்று பாய்ந்து, கூர் எயிற்றினால் பொன்கண்ணனைக் கொன்று—கூரிய தந்தங்களினாலே இரணியாக்கனைக் கொன்று, பாரினைக் கொடு மீண்டு—பூமியை ஒரு தந்தத்திலே தாங்கிக்கொண்டு திரும்பிவந்து, முன் போலவே பதித்து—பூமியை முன் இருந்தபடி இருக்கச்செய்து, வீரம் உற்றனன்—அதனாற் கர்வங்கொண்டு, தன்னை மிகவும் மதித்தனன்—தம்மைத் தாமே பெரிதும் மதித்தார்.

மிகவும் மதித்தல் பரமென்று மதித்தல். (18)

மாலு மப்பக லகந்தையா யுணர்வின்றி மருப்பான்
ஞாலம் யாவையு மழிதர விடந்தவை நனிசூழ்
வேலை தன்னையு முடைத்தன னன்னதோர் வேலை
யால மார்களத் தண்ணல்கண் டெய்தினு னங்கண்.

மாலும் அ பகல் அகந்தையாய்—திருமாலும் அத்தினம் அகந்தை யுடையராய், உணர்வு இன்றி—அறிவில்லாமல், மருப்பால் ஞாலம் யாவையும் அழிதர இடந்து—கொம்புகளாற் பூமி முழுவதையும் அழியுமாறு பிளந்து, அவை நனி சூழ் வேலை தன்னையும் உடைத்தனன்—பிளந்தவைகளைப் பெருகிச் சூழ்கின்ற சமுத்திரத்தையும் நிலைகுலைத்தார்; அன்னதோர் வேலை—அவ்வாறுயதொரு சமயத்தில், ஆலம் ஆர் களத்து அண்ணல் கண்டு அங்கண் எய்தினுன்—விடம் பொருந்திய கண்டத்தினையுடைய சிவபெருமான் கண்டு அவ்விடத்துக்குச் சென்றருளினுர். (19)

கண்டு கண்ணுத லவன்மருப் பொன்றினைக் கரத்தாற்
கொண்டு வல்லையிற் பறித்தலு முணர்வுமுன் குறுக
விண்டு மற்றதும் பறிப்பனிங் கிவனென வெருவிப்
பண்டு போலநின் றேத்தலும் போயினன் பரமன்.

கண்ணுதல் கண்டு—சிவபெருமான் திருமாலின் செயலைக் கண்டு, அவன் மருப்பு ஒன்றினைக் கரத்தால் கொண்டு—திருமாலாகிய பன்றியின் கொம்பில் ஒன்றைத் தமது திருக்கரத்தாற் பிடித்து, வல்லையில் பறித்தலும்—விரைவிற் பறித்தபொழுது, முன் உணர்வு குறுக—முன்னை யுணர்வு உதிக்க, விண்டு இங்கு இவன் மற்றதும் பறிப்பன் என வெருவி—திருமால் இவ்விடத்தில் இனிச் சிவபெருமான் மற்றைக் கொம்பையும் பறித்துவிடுவார் என்று அஞ்சி, பண்டு போல நின்று ஏத்தலும்—முன்னையுருவங் கொண்டு நின்று துதிக்க, பரமன் போயினன்—சிவபெருமான் மறைந்தருளினுர். (20)

அன்று கொண்டதோர் மருப்பினைச் சின்னமா வணிந்தா
னின்று மங்கவன் மார்பிடைப் பிறையென விலங்கு
மொன்று மற்றிது கேட்டனை நின்றது முரைப்பா
நன்று தேர்ந்துணர் மறைகளு மித்திற நவிலும்.

அன்று கொண்டது ஓர் மருப்பினை—அன்று பறித்ததொரு பன்றிக் கொம்பை, சின்னமா அணிந்தான்—அடையாளமாக அணிந்தார்; இன்றும் அங்கு அவன் மார்பிடைப் பிறை என இலங்கும்—இன்றைக்கும் அங்கே அவ்ருடைய திருமார்பில் அது பிறைபோல விளங்கும்; இது ஒன்று கேட்டனை—இந்த ஒரு வரலாற்றை நீ கேட்டாய்; நின்றதும் உரைப்பாம்—இனிக்

கூறுதற்கு அடுத்துநின்ற கூருமத்தோடு மேற்கொண்ட வரலாற்றையுஞ் சொல்லுவேம்; நன்று தேர்ந்து உணர்—நன்ருக ஆராய்ந்து அறி; இ திறம் மறைகளும் நவிலும்—இந்தச் செயலை வேதங்களும் எடுத்துச் சொல்லும். (21)

அடலின் மேதகு தேவரு மவுணரு மந்நாட்
கடல்க டைந்திடு மெல்லையின் மந்தரங் கவிழ
நெடிய மாலது நிறுவியே பொருக்கென நீத்தந்
தடவி யுள்ளணைந் தாமையாய் வெரிநிடைத் தரித்தான்.

அடலின் மேதகு தேவரும் அவுணரும்—வலியான் மிக்க தேவர்களும் அசுரர்களும், அ நாள் கடல் கடைந்திடும் எல்லையில்—அக்காலத்திலே பாற் கடலைக் கடைந்தபொழுது, மந்தரம் கவிழ—மத்தாகிய மந்தர மலை கவிழ, நெடிய மால் ஆமையாய் பொருக்கென நீத்தம் தடவி உள் அணைந்து—திருநெடுமால் ஆமையாய் விரைவாக நீரில் முழுகி உட்சென்று, அது நிறுவி வெரிந் இடை தரித்தான்—அம் மந்தரமலையை நிறுத்தி முதுகின்மீது தாங் கினர். (22)

தரித்த வேலையவ் வேலையை மதித்திடத் தன்க
ணருத்தி மிக்குறு மமிர்தினைத் தருதலு மதனைத்
தெரித்து மற்றிது நமதென நமதெனச் செப்பி
மருத்தி னன்மையா லமரரு மவுணரு மலைந்தார்.

தரித்த வேலை—தாங்கியபோது, அ வேலையை மதித்திட—அக் கடலைக் கடைய, தன்கண் அருத்தி மிக்குறும் அமிர்தினைத் தருதலும்—தன்னிடத்தி னின்றும் மிக்க விருப்பத்தைக் கொடுக்கும் அமிர்தத்தைத் தருதலும், அதனைத் தெரித்து—அதனைக் கண்டு, இது நமது என நமது எனச் செப்பி— இது நமது என்று நமது என்று சொல்லி, மருத்தின் நன்மையால்—அவ் வமிர்தத்தின் நன்மை காரணமாக, அமரரும் அவுணரும் மலைந்தார்—தேவர் களும் அசுரர்களும் போர் செய்தார்கள்.

மருந்து மருத்தென் ருயிற்று. (23)

மலைந்த போரினை நீக்கலன் மாயனிவ் வரையை
யலைந்த வேலையி னிறுவியே வெரிநிடை யாற்றி
யுலைந்தி டாவகை காத்துமா லெனப்பெரி துன்னக்
கலந்த தாலவ னுளத்தினி லகந்தையங் கடலே.

மாயன் மலைந்த போரினை நீக்கலன்—திருமால் இருபகுதியாரும் புரிந்த போரினை விலக்கினரல்லர்; இ வரையை அலைந்த வேலையில் நிறுவி வெரிந்

இடை ஆற்றி—இம் மந்தர மலையை அலைதல் பொருந்திய சமுத்திரத்தில் நிறுத்தி முதுகிற் சுமந்து, உலைந்திடா வகை காத்தும் எனப் பெரிது உன்ன—உலைவுபடாதவகை காத்தோம் என்று பெரிதும் நினைக்க, அவன் உளத்தில் அகந்தையங் கடல் கலந்தது—அவருடைய உள்ளத்தில் அகந்தையாகிய கடல் உண்டானது. (24)

அகந்தை யெய்தியே யாவையுந் தேற்றலா னலைபோய்த்
திகந்த முற்றிட வேலைக ளுழக்கினன் றிரியச்
சகந்த னக்கழி வெய்தலுந் தனதருட் டன்மை
யிகந்த னன்கொலாங் கண்ணனென் றுன்னின னெங்கோன்.

அகந்தை எய்தி—அகங்காரங்கொண்டு, யாவையும் தேற்றலான்—எவற்றையும் உணராதவராய், அலை போய்த் திகந்தம் உற்றிட—அலைகள் சென்று திக்கினந்தத்தையடைய, வேலைகள் உழக்கினன் திரிய—கடல்களைக் கலக்கினவராய்த் திரிய, சகம் தனக்கு அழிவு எய்தலும்—அதனால் உலகத்துக்கு அழிவு உண்டாதலும், தனது அருள் தன்மை—தனது காவற் றொழிலை, கண்ணன் இகந்தனன்கொல் ஆம் என்று-திருமால் நீங்கினன் போலும் என்று, எம்கோன் உன்னினன்—எம்பெருமான் திருவுளங்கொண்டருளினர். (25)

அற்றை நாளவண் வல்லையி லேகியே யரிதன்
முற்ற லாமையி னுருவினை நோக்கியே முனிந்து
கற்றை வார்சடைக் கண்ணுதல் யாப்புறக் கரத்தாற்
பற்றி யாங்கவ னகந்தையும் வன்மையும் பறித்தான்.

அற்றை நாள்—அந்நாளில், கற்றை வார் சடைக் கண்ணுதல்—தொகுதியான நீண்ட சடையினையுடைய சிவபெருமான், அவண் வல்லையில் ஏகி—அவ்விடத்துக்கு விரைந்து சென்று, அரிதன் முற்றல் ஆமையின் உருவினை நோக்கி முனிந்து—மகா விஷ்ணு எடுத்த முதிர்ந்த ஆமையின் வடிவத்தை நோக்கிக் கோபித்து, கரத்தால் யாப்புறப் பற்றி—திருக்கரத்தால் இறுகப் பற்றி, ஆங்கு அவன் அகந்தையும் வன்மையும் பறித்தான்—அந்த விஷ்ணுவின் செருக்கையும் வலியையும் ஒருங்கு பறித்தருளினர். (26)

நினைந்து தொல்லுருக் கொண்டனன் புகழ்தலு நிலவைப்
புனைந்த செஞ்சடை நின்மல னவுணரைப் போக்கி
யினைந்த தேவருக் கமிர்தினை யீகென வேக
வனைந்த மேனிமான் மாயையா லவுணரை மாய்த்தான்.

நினைந்து—தண்டனையாற் பழைய நினைவு வரப்பெற்று, தொல் உருக் கொண்டனன் புகழ்தலும்—முன்னை உருவத்தை எடுத்துக்கொண்டு துதி

செய்தலும், நிலவைப் புனைந்த செம்சடை நின்மலன்—சந்திரனையணிந்த சிவந்த சடையினையுடைய சிவபெருமான், அவுணரைப் போக்கி—அசுரர்களை விலக்கி, இனைந்த தேவருக்கு—அசுரரால் வருந்திய தேவர்களுக்கு, அமிர்தினை ஈக என ஏக—அமிர்தத்தைக் கொடுப்பாயாக என்று கூறிச் சென்றருள, மால்—திருமால், வனைந்த மேனி மாயையால்—அலங்கரிக்கப்பட்ட மோகினி வடிவ மாயையினால், அவுணரை மாய்த்தான்—அசுரரை அழித்தார்.

போக்கல், அழித்தலுமாம். (27)

மாய்த்து வானவர்க் கமுதினை நல்கினன் வையங்
காத்த கண்ணனென் றுரைப்பரா லவனுறு கமட
மீத்த யங்கிய காப்பினை வாங்கியே விமலன்
சாத்தி னுன்முன மணிந்திடு மருப்புடன் சார.

வையம் காத்த கண்ணன்—பூமியைக் காத்த திருமால், மாய்த்து—அசுரரை அழித்து, வானவர்க்கு அமுதினை நல்கினன் என்று உரைப்பர்—தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுத்தார் என்று கூறுவார்கள்; அவன் உறு கமடம் மீ தயங்கிய காப்பினை—அத் திருமால் எடுத்த ஆமை வடிவத்தின் மீது பொருந்திய காப்பாகிய ஓட்டினை, விமலன் வாங்கி—சிவபெருமான் பறித்து, முனம் அணிந்திடும் மருப்புடன் சாரச் சாத்தினுன்-முன்னம் முரித்தணிந்த பன்றிக்கொம்புடன் ஒருசேரச் சாத்தியருளினுர். (28)

வாரி சூழ்புவி யகழ்தரு கேழலின் மருப்பு
மூரி யாமையி னேடுமேற் கொண்டது மொழிந்தாந்
தாரு காவனத் தெம்பிரான் பலிக்குறு தகவுஞ்
சேர வேயவ ணிகழ்ந்தவுங் கூறுதுந் தெளிநீ.

வாரி சூழ் புவி அகழ்தரு கேழலின் மருப்பும்—கடல் சூழ்ந்த பூமியை அகழ்ந்த பன்றியின் கொம்பும், மூரி யாமையின் ஓடும்—வலிய ஆமையின் ஓடும், மேற்கொண்டது மொழிந்தாம்—அணிந்த வரலாற்றைச் சொன்னேம்; தாருகா வனத்து எம்பிரான் பலிக்கு உறு தகவும்—இனித் தாருகா வனத்திலே எம்பெருமான் பலிக்குச் சென்ற தகுதிப்பாட்டினையும், அவண் சேர—அவ்விடத்துக்குச் சிவபெருமான் சென்றருள, நிகழ்ந்தவும்—நிகழ்ந்தவைகளையும், கூறுதும் நீ தெளி—கூறுகின்றேம் நீ அறியக்கடவாய்.

பலி—பிக்ஷை.

ஏனைய வினுக்களுக்கு விளக்கஞ் செய்யும் முகமாகத் தாருகாவனத்துக் கதை எடுத்துக்கொள்ளப்பட்டது. (29)

### வேறு

முன்புதா ருகவ னத்தின் முனிவரர் யாரு மீசற்
கன்பில ராகி வேள்வி யளப்பில புரிந்து தாமே
யின்புறு முத்தி தன்னை யெய்துவா னுன்னி யங்கந்
துன்புற வாளா நோற்றுத் துணிவினு லொழுக லுற்றார்.

முன்பு—முன்னொருகாலத்திலே, தாருக வனத்தின் முனிவரர் யாரும்—தாருக வனத்திலிருந்த முனிவரர்கள் யாவரும், ஈசற்கு அன்பு இலர் ஆகி—சிவபெருமானிடத்திலே அன்பில்லாதவராய், அளப்பு இல வேள்வி புரிந்து—அளவற்ற யாகங்களைச் செய்து, தாமே இன்புறு முத்திதன்னை எய்துவான் உன்னி—ஒரு கடவுளின்றித் தாமே இன்பத்தை விளைக்கும் முத்தியை எய்தக் கருதி, அங்கம் துன்புற வாளா நோற்று—உடம்பு வருந்த வீணே தவஞ் செய்து, துணிவினுல் ஒழுகல் உற்றார்—தங்கொள்கையிலே துணிவுடையோ ராய் ஒழுகுவா ராயினர்.

*" அரன்றன் பாத மறந்துசெ யறங்க ளெல்லாம் வீண்செயல் "
என்பது சித்தியார். (30)

ஒழுகிய வேலை தன்னி லுயிர்க்குயி ராகி யுற்றோன்
பழுதினை யகற்றித் தன்னோர் பாங்கரி லுமையாண் மேவ
விழுமிய கயிலை நாப்பண் வீற்றிருந் தருள்வோ னங்க
ணிழுதையர் புரியு நீர்மை யாவையு முணர்ந்தா னன்றே.

ஒழுகிய வேலை தன்னில்—முனிவர்கள் இவ்வாறு ஒழுகிவருங் காலத்தில், உயிர்க்கு உயிராகி உற்றோன்—உயிர்க்குயிரா யிருக்குஞ் சிவபெருமான், தன் ஓர் பாங்கரில்—தமது ஒரு பாகத்தில், பழுதினை அகற்றி உமையாள் மேவ—ஆன்மாக்களின் குற்றத்தை நீக்கி உமாதேவியார் மேவ, விழுமிய கயிலை நாப்பண் வீற்றிருந் தருள்வோன்—உயர்ந்த திருக்கைலாயத்தின் நடுவண் வீற்றிருந்தருளுபவர், அங்கண்—அத் தாருக வனத்தில், இழுதையர் புரியும் நீர்மை யாவையும் உணர்ந்தான்—அறிவிலிகளாகிய முனிவர்கள் செய்யுஞ் செயலனைத்தையுந் திருவுளங்கொண்டருளினர்.

உற்றோனாகிய அருள்வோன் உணர்ந்தா னென்க. (31)

முன்னவ னிதனை நாடி முழுதுணர் முகுந்தன் றன்னை
யுன்னின னன்ன பான்மை யொய்யென வுணர்ந்து மாலோ
னென்னையு முதல்வன் றன்பா லெய்துவான் பணித்தா னென்னுப்
பன்னக வமளி நீத்துப் பணியினுற் கயிலை யுற்றான்.

முன்னவன் இதனை நாடி—முதல்வராகிய சிவபெருமான் ஆடலொன்றைச் செய்ய எண்ணி, முழுது உணர் முகுந்தன் தன்னை உன்னினன்—தம்மரு

* சிவஞானசித்தியார் சுபக்கம் — சூத். 2, பாடல் 27.

ளால் முழுதுணர்வெய்திய திருமாலை நினைந்தருளினர்; மாலோன் அன்ன பான்மை ஒய்யென உணர்ந்து—திருமால் அத்தன்மையை விரைவாக உணர்ந்து, என்னையும்—ஒன்றுக்கும் பற்றாத என்னையும், முதல்வன் தன்பால் எய்துவான் பணித்தான் என்னா—முதல்வராகிய சிவபெருமான் தம்மிடத்து வரும்படி பணித்தருளினர் என்றுட்கொண்டு, பன்னக அமளி நீத்து—சர்ப்ப சயனத்தை விட்டெழுந்து, பணியினால் கயிலை உற்றான்—சிவாஞ்ஞையினாலே திருக்கைலையை அடைந்தார்.

இது என்றது பின்வரும் ஆடலை. (32)

உற்றன னகர்மு னெய்தி யுணர்த்திய நந்தி யுய்ப்பப்
பற்றலர் புரமூன் றட்ட பரனடி பணிந்து முன்போய்
நிற்றலுங் குறிப்பா லங்க ணினைத்தன வுணர்த்தி மாயன்
பொற்றடஞ் செங்கை பற்றிப் புனிதனாண் டெழுந்து போந்தான்.

உற்றனன் நகர் முன் எய்தி—திருக்கைலையை அடைந்த திருமால் செம்பொற்றிருக்கோயில் வாயிலை அடைந்து, உணர்த்தி அ நந்தி உய்ப்ப—தமது வருகையைச் சிவபெருமானுக்கு விண்ணப்பித்து அந்த நந்திதேவர் தம்மை உட்புகவிட, முன் போய்—திருமுன்பு சென்று, பற்றலர் புரம் மூன்று அட்ட பரன் அடி பணிந்து நிற்றலும்—பகைவரின் முப்புரங்களை அழித்த சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கி நிற்க, அங்கண் நினைத்தன குறிப்பால் உணர்த்தி—அங்கே திருவுளத்திற் கொண்டவற்றைத் திருமாலுக்குக் குறிப்பாலுணர்த்தி, மாயன் பொன் தடம் செம்கை பற்றி—அத்திருமாலின் அழகிய வளப்பம் பொருந்திய சிவந்த கையைப் பற்றிக்கொண்டு, புனிதன் ஆண்டு எழுந்து போந்தான்—புனிதராகிய சிவபெருமான் அவ்விடத்தினின்றும் எழுந்து சென்றருளினர். (33)

கயிலையங் கிரியை நீங்கிக் கண்ணனை நோக்கித் தொன்னா
ளியலுறு நினது பெண்மை யெய்துதி யிவணீ யென்னப்
புயலுறழ் மேனி மாயோன் பொருக்கென வளப்பில் காமர்
மயலுறு பான்மை யங்கோர் மடந்தையாய் மருங்கு வந்தான்.

கயிலையங் கிரியை நீங்கி—அழகிய கைலைமலையை விட்டு நீங்கி, கண்ணனை நோக்கி—திருமாலைப் பார்த்து, இவண் நீ தொல்நாள் இயல் உறு நினது பெண்மை எய்துதி என்ன—இவ்விடத்தில் நீ பழையகாலத்திற் கொண்ட உனது மோகினியாகிய பெண்வடிவத்தை அடையக்கடவாய் என்று கூறியருள, புயல் உறழ் மேனி மாயோன்—மேகத்தை யொத்த திருமேனியையுடைய திருமால், அளப்பில் காமர் மயல் உறு பான்மை—அளவற்ற மன்மதர்கள் மயங்கத்தக்க பான்மை பொருந்த, அங்கு ஓர் மடந்தையாய் மருங்கு பொருக்கென வந்தான்—அங்கு ஒரு பெண்ணாகிச் சிவபெருமானது பக்கத்தில் விரைந்து வந்தார்.

காமன் மயக்குவோ னன்றிப் பிறர் அழகு கண்டு மயங்காதவன். அப்படிப் பட்ட காமர்கள் மயங்கத்தக்க பேரழகு படைத்த பெண்வடிவு கொண்டார் திருமால். (34)

வந்திடு கின்ற காலை மாயைசேர் பொருண்மை முற்றுந்
தந்திடு முமையுங் காணிற் றளர்ந்துவீழ் பான்மை தானு
மந்தமில் யாணர் மேல்கொண் டாயிடைப் பெயர்ந்தான் முக்க
ணெந்தைதன் வடிவி னீர்மை யார்விரித் துரைக்கற் பாலார்.

வந்திடுகின்ற காலை—திருமால் பெண்வடிவு கொண்டு பக்கத்தில் வந்த சமயத்தில், மாயைசேர் பொருண்மை முற்றும் தந்திடும் உமையும் காணில் தளர்ந்து வீழ் பான்மை—மாயையில் உண்டாகும் பொருள் முழுவதையுந் தந்தருளுகின்ற மாயையின் முதல்வியாகிய உமாதேவியாருங் கண்டால் மனந்தளர்ந்து விழத்தக்க தன்மையாக, தானும்—தாமும், அந்தம் இல் யாணர் மேல் கொண்டு—எல்லைகாணமுடியாத அழகை மேற்கொண்டு, ஆயிடைப் பெயர்ந்தான்—அவ்விடத்திற் சென்றருளினர்; முக்கண் எந்தை தன் வடிவின் நீர்மை விரித்து உரைக்கற்பாலார் யார்—மூன்று கண்களையுடைய எம் பெருமானது வடிவத்தின் இயல்பை விரித்துரைக்கத் தக்கார் யாவர்.

யாணர், புணர்ந்தாற் புணருந்தொறும் புதிதாம் அழகு. (35)

முன்பன துருவை யெல்லா முகனுறு விழியான் மாந்தித்
துன்புறு மான்மீக் கொள்ளத் துண்ணென வரியுஞ் சோர்ந்து
மன்புடை யருளால் வந்தான் மற்றவன் றனக்கு மாலோ
னென்பதோர் பெயரு மஞ்ஞான் றெய்திய போலு மன்றே.

முன்பனது உருவை எல்லாம்—முதல்வராகிய சிவபெருமானுடைய உருவத்தின் அழகு முழுவதையும், முகன் உறு விழியால் மாந்தி—முகத்திற் பொருந்திய விழிகளால் உண்டு, துன்பு உறு மால் மீக்கொள்ள—துன்பம் மிகுகின்ற மயக்கம் மீதூர, அரியும் துண்ணென சோர்ந்தும்—திருமாலும் துண்ணென்று சோர்ந்தாராயினும், அன்புடை அருளால் வந்தான்—அன் போடு கூடிய திருவருளினாலே ஒருவாறு உடன்வருவாராயினர்; மாலோன் என்பது ஓர் பெயரும் அஞ்ஞான்று அவன் தனக்கு எய்திய போலும்—மாலோன் என்பதொரு பெயரும் அந்நாளிலேதான் அவருக்கு உண்டானது போலும்.

மயங்கின ராதலின் மாலோன் ஆயினர். உரு ஆகுபெயர். எய்தியது என்பது ஈறுகெட்டு நின்றது. (36)

நராரியி னுரிவை நீத்து நக்கனே யாகி முக்கட்
பராபரன் சூலத் தோடு பலிக்கல னங்கை கொண்டு
முராரிதன் பாங்கர் செல்ல முனிவருக் கிருக்கை யாகத்
தராதல மதிக்க நின்ற தாருகா வனத்திற் புக்கான்.

முக்கண் பராபரன்—மூன்று கண்களையுடைய பராபரர் ஆகிய சிவ பெருமான், நர அரியின் உரிவை நீத்து—நரசிங்கத்தின் தோலுடையை நீக்கி, நக்கனே ஆகி—நிருவாணியாய், சூலத்தோடு பலிக்கலன் அங்கை கொண்டு—சூலத்தையும் பிக்ஷாபாத்திரத்தையும் அங்கையி லேந்தி, முராரி தன் பாங்கர் செல்ல—மோகினியாகிய திருமால் பக்கத்தில் வர, முனிவருக்கு இருக்கை யாக—முனிவர்களுக்கு இருப்பிடமாக, தராதலம் மதிக்க நின்ற தாருகா வனத்தில் புக்கான்—உலகம் மதிக்குமாறு நின்ற தாருகா வனத்திற் சென் றருளினர். (37)

புக்கனன் மாலை நோக்கிப் போந்துநீ நமையெண் ணுது
தொக்குறு முனிவர் வைகுஞ் சூழல்க டோறு நண்ணி
மிக்கமால் பூட்டி யன்னோர் விரதங்கண் மாற்றி நந்தம்
பக்கநீ வருதி யென்னப் பகர்ந்தனன் விடுத்துச் சென்ருன்.

புக்கனன்—தாருகா வனத்துட் சென்று, மாலை நோக்கி—திருமாலைப் பார்த்து, நீ போந்து—நீ இவ்விடத்தினின்றும் நீங்கி, நமை எண்ணுது தொக்குஉறு முனிவர் வைகும் சூழல்கள் தோறும் நண்ணி—நம்மைப் பதி என்று எண்ணுமற் குழுமி மிகுதியாக முனிவர்கள் வசிக்கின்ற இடங்கள்தோறுஞ் சென்று, மிக்க மால் பூட்டி—மிக்க மோகத்தை உண்டாக்கி, அன்னோர் விர தங்கள் மாற்றி—அவர்கள் மேற்கொண்ட விரதங்களை நிலைகுலைத்து, நம் தம் பக்கம் நீ வருதி என்னப் பகர்ந்தனன்—நமது பக்கம் நீ வரக்கடவாய் என்று கூறியருளி, விடுத்துச் சென்ருன்—திருமாலை விடுத்துத் தாம் அப்பாற் சென் றருளினர். (38)

விடுத்தலு முராரி யேகி வேள்வியுந் தவமுந் தாமே
கொடுத்திடு முத்தி யென்னுங் கொள்கைசேர் முனிவர் யாரு
மடுத்திடு மவைக்க ணெய்தி யளவையி லநங்கர் வல்லே
தொடுத்திடு சரங்க ளேபோற் றுணைவிழி பரப்பி நின்ருன்.

விடுத்தலும்—சிவபெருமான் விடுக்க, முராரி ஏகி—மோகினி வடிவங் கொண்ட திருமால் சென்று, வேள்வியும் தவமும் தாமே முத்தி கொடுத் திடும்—வேள்வியுந் தவமுமாகிய இரண்டும் மற்ருெருவரின்றித் தாமே முத் தியை நல்கும்; என்னும் கொள்கை சேர்—என்கின்ற கொள்கையினை மேற் கொண்ட, முனிவர் யாரும் அடுத்திடும் அவைக்கண் எய்தி—முனிவர் யாவருங் குழுமியிருக்கின்ற அவையை யடைந்து, அளவை இல் அநங்கர் வல்லே தொடுத்திடும் சரங்களே போல்—அநேக மன்மதர்கள் விரைந்து ஒருங்கு தொடுக்கும் பாணங்களைப்போல, துணை விழி பரப்பி நின்ருன்—இரண்டாகிய கண்ணம்புகளைப் பரப்பி நின்ருர்.

கொள்கை பட்டாசாரியன் கொள்கை. இவன் சைமினி செய்த பூர்வ மீமாஞ்சைக்குப் பாடியஞ் செய்தோன். இப்பாடியம், வியாசர் செய்த

உத்தர மீமாஞ்சையாகிய பிரம சூத்திர பாடியம் போன்று, தன்கோள் நிறுவுவது. பாடியம், நூல்செய்த 'அருந்தவனுஞ் சைமினி'யின் கருத்தாகா தென்க. (39)

கண்டனர் முனிவ ரம்மா கதுமெனக் காமவேட்கை
கொண்டனர் விரத நோன்மை குலைந்தனர் மகத்தின் செய்கை
விண்டனர் மதனீர் பாய மெலிந்தனர் வெதும்பி வேழ
முண்டிடு கனியா மென்ன வுணர்வுபோ யுருகா நின்றார்.

முனிவர் கண்டனர்—முனிவர்கள் திருமாலாகிய மோகினியைக் கண்டு, கதும் என காம வேட்கை கொண்டனர்—கண்ட அந்தக் கணமே காம இச்சை எய்தி, விரத நோன்மை குலைந்தனர்—விரதமாகிய தவ ஒழுக்கம் நிலைகுலைந்து, மகத்தின் செய்கை விண்டனர்—யாக கர்மங்களை விடுத்து, மதம் நீர் பாய மெலிந்தனர் வெதும்பி—சுக்கிலம் வெளிப்பட மெலிந்து வெதும்பி, வேழம் உண்டிடு கனியாம் என்ன—வேழமுண்ட விளாங்கனி போல, உணர்வு போய்—உள்ளீடாகிய உணர்வு நீங்கி, உருகாநின்றார்—மனமுருகி நின்றொழிந்தார்கள்.

வேழம் என்பது ஒரு நோய். அந்நோய் பிடித்த விளாங்கனி உள்ளீடின்றி யிருக்கும். (40)

ஆலமார் கண்டத் தெந்தை யருளினுன் மாயோன் கொண்ட
கோலமார் வடிவ மெல்லாங் குறிப்புட னோக்கி நோக்கிச்
சீலமா மனைத்தும் வீட்டிச் செழுஞ்சுடர் மலர்ச்சி கண்ட
வோலமார் விட்டி லென்ன வொல்லென வந்து சூழ்ந்தார்.

ஆலம் ஆர் கண்டத்து எந்தை அருளினுல்—நஞ்சு பொருந்திய கண்டத்தினையுடைய சிவபெருமானது கிருபையினுல், மாயோன் கொண்ட கோலம் ஆர் வடிவம் எல்லாம்—திருமால் கொண்ட அழகு நிறைந்த மோகினி வடிவம் முழுவதையும், குறிப்புடன் நோக்கி நோக்கி—காதற் குறிப்போடு பார்த்துப் பார்த்து, சீலம் ஆம் அனைத்தும் வீட்டி—தமது ஒழுக்கம் முழுவதையும் அழித்து, செழும் சுடர் மலர்ச்சி கண்ட ஓலம் ஆர் விட்டில் என்ன—செழுமையாகிய தீபத்தின் ஒளிச்சுடர் விளக்கத்தைக் கண்ட ஒலித்தலைச் செய்கின்ற விட்டிற்பறவைகள்போல, ஒல்லென வந்து சூழ்ந்தார்—விரைந்து வந்து சூழ்ந்தார்கள். (41)

பார்கொலோ விசும்பு கொல்லோ பங்கயன் பதியோ காம
னூர்கொலோ முகுந்தன் வைகு முலகமோ வுறையு ளன்றே
னீர்கொலோ வமரர்க் காக நிருதரைத் தொலைத்தீ ரும்மை
யார்கொலோ வுணரு கிற்பா ரடியருக் கருளு மென்றார்.

உறையுள்—நீர் இருக்குமிடம், பார்கொலோ—மண்ணுலகமோ, விசும்பு கொல்லோ—விண்ணுலகமோ, பங்கயன் பதியோ—பிரமதேவருடைய சத்திய உலகமோ, காமன் ஊர்கொலோ—மன்மதனுடைய உலகமோ, முகுந்தன் வைகும் உலகமோ—விஷ்ணு உறையும் வைகுந்த உலகமோ, அன்றேல்—இவ்வுலகங்களில் ஒன்று அன்று ஆயின், உம்மை யார்கொல் உணருகிற்பார்—நும்மை எவ்விடத்தீர் என்று யாவர்தாம் அறிய வல்லவர் ; அமரர்க்கு ஆக நிருதரைத் தொலைத்தீர்—தேவர்கள் பொருட்டு மோகினி வடிவங்கொண்டு அவுணரைத் தொலைத்தவர், நீர்கொலோ—நீர்தாமா ; அடியருக்கு அருளும் என்றார்—அடியேங்களுக்கு உமது வரலாற்றைச் சற்றே உணர்த்தியருளும் என்று இரந்தார்கள். (42)

என்றிவை பலவும் பன்னி யிடருழந் தெரியிற் பட்ட
மென்றளி ரலங்க லென்ன வெதும்பியே விரகத் தீயாற்
பொன்றினர் போன்று நின்றார் பொருவரு முனிவர் பொன்னார்
கொன்றையஞ் சடையோன் செய்த செயலினைக் கூற லுற்றேன்.

என்று இவை பலவும் பன்னி—என்றிவ்வாறு பலவற்றையுங் கூறி, இடர் உழந்து—வருந்தி, எரியில் பட்ட மென் தளிர் அலங்கல் என்ன—அக்கினியிற் பட்ட மிருதுவான தளிர்களாலான மாலைபோல, விரகத் தீயால் வெதும்பி—காமாக்கினியால் வெதும்பி, பொன்றினர் போன்று—இறந்தாரை ஒத்து, பொருவரு முனிவர் நின்றார்—அந்த ஒப்பில்லாத தாருக வன முனிவர்கள் நின்றொழிந்தார்கள் ; பொன்னார் கொன்றை அம் சடையோன் செய்த செயலினை—இனிப் பொன்மயமான கொன்றைமலரை அணிந்த அழகிய சடையையுடைய சிவபெருமான் செய்த செயலை, கூறல் உற்றேன்—கூறுவேன். (43)

கண்ணனை விடுத்துத் தானோர் கலனொடு சூல மேந்தி
யெண்ணரு முனிவர் வைகு மிருக்கையின் மறுகு சென்று
பண்ணிசை மறைகள் பாடி யையமேற் படர்வார் போன்று
ளுண்ணிக ழுணர்வா யென்று முயிரினுக் குயிராய் நின்றான்.

கண்ணனை விடுத்து—திருமாலை விட்டு நீங்கி, உள் நிகழ் உணர்வாய்—உள்ளே நிகழுகின்ற அறிவாயும், உயிரினுக்கு உயிராய்—உயிர்க்குயி ராகியும், என்றும் நின்றான்—என்றும் எங்கும் நின்றருள்பவராகிய சிவபெருமான், தான் ஓர் கலனொடு சூலம் ஏந்தி—தாம் ஒரு பிக்ஷா பாத்திரத்தையுஞ் சூலத்தையும் ஏந்திக்கொண்டு, எண் அரும் முனிவர் வைகும் இருக்கையின் மறுகு சென்று—எண்ணில்லாத முனிவர்கள் வசிக்கும் இருப்பிடத்து வீதியிற் சென்று, பண் இசை மறைகள் பாடி—பண் அமைந்த இசையோடு வேத கானஞ் செய்து, ஐயமேற் படர்வார் போன்றான்—பிக்ஷையை மேற்கொண்டு செல்லுபவரைப் போன்று சென்றார்.

திருமாலை முனிவர்களிடம் விடுத்து எனினுமாம். (44)

பாட்டிய லிசையை யங்கண் முனிவர்தம் பன்னி மார்கள்
கேட்டலு மெவர்கொ லம்மா கிடைத்தன ரவரைக் காண்பான்
வேட்டன விழிக ளின்னே விரைவினிற் சேறு மென்னு
வீட்டமொ டெழுந்து வீதி யெய்தியங் கிறைவற் கண்டார்.

இயல் பாட்டு இசையை—நிகழாநின்ற வேதகானத்தை, அங்கண் முனிவர் தம் பன்னிமார்கள் கேட்டலும்—அவ்விடத்து முனிவர்களுடைய மனைவியர்கள் கேட்டபோது, கிடைத்தனர் எவர்கொல்—இங்கே வந்தவர் யாவர்; அவரை இன்னே காண்பான் விழிகள் வேட்டன—அவரை இப்பொழுதே காணும்படி எமது கண்கள் வேட்கையுற்றன; விரைவினில் சேறும் என்னு—விரைவாகச் செல்லுவோம் என்று, ஈட்டமொடு எழுந்து—கூட்டத்துடன் எழுந்து, வீதி எய்தி—வீதியை அடைந்து, அங்கு இறைவன் கண்டார்—அங்கே பிக்ஷாடனராகிய இறைவரைத் தரிசித்தார்கள். *(45)*

கண்ணுறு மாதர் யாருங் காமனைங் கணையின் மூழ்கி
யுண்ணிக ழுணர்வு மாழ்க வுயிர்பதை பதைத்துச் சோர
வண்ணறன் காத லென்னு மாழ்திரைப் பட்டா ரன்னார்
பண்ணிய செய்கை தன்னிற் சிறிதியான் பகர்த லுற்றேன்.

கண் உறு மாதர் யாரும்—பிக்ஷாடனரைக் கண்ணுற்ற முனிவர்பத்தினிமாரனைவரும், காமன் ஐங்கணையில் மூழ்கி—மன்மதன் பொழிகின்ற பஞ்சபாணங்களாகிய மழையில் முழுகி, உள்நிகழ் உணர்வு மாழ்க—உள்ளே நிகழும் உணர்ச்சி கெட, உயிர் பதைபதைத்துச் சோர—உயிர் துடிதுடித்துச் சோர, அண்ணல் தன் காதல் என்னும் ஆழ் திரைப் பட்டார்—இறைவன்பால் எழுந்த இறைகாதல் என்று சொல்லப்படுகின்ற ஆழ்ந்த திரை பொருந்திய கடலில் ஆழ்ந்தார்கள்; அன்னார்—அவ்வியல்பினராகிய அப்பெண்கள், பண்ணிய செய்கை தன்னில்—அந்நிலையிற் செய்த செயல்களுள், சிறிது யான் பகர்தலுற்றேன்—ஒரு சிலவற்றை ஒருசிறிது யான் கூறுவேன். *(46)*

### வேறு

காய மேலணி கண்டில மித்தவர்
தூய பாடலைத் துண்ணெனக் கேட்டலு
மேய காமத்தின் வீழ்ந்தன மாகையான்
மாய மேயிவ் வடிவமென் பார்சிலர்.

இத் தவர் காயம் மேல் அணி கண்டிலம்—இத் தபோதனரது திருமேனி மீது ஆடை ஆபரண மாகிய அணி ஒன்றனையுங் காணேம்; தூய பாடலைக் கேட்டலும்—தூய்மையான பாடலைக் கேட்ட அளவில், துண்ணென மேய காமத்தில் வீழ்ந்தனம்—விரைந்து கவிந்த காம சமுத்திரத்தில் ஆழ்ந்தோம்; ஆகையால் இ வடிவம் மாயமே—ஆகையினாலே இந்த வடிவம் மாயமேயாம்; என்பார் சிலர்—என்று கூறுவார்கள் சில பெண்கள்.

பிக்ஷாடனமூர்த்த நக்கராய்த் தோன்றலின், அணி கண்டிலம் என்றூர். அவ்வடிவம் மயக்குதலின் மாயம் எனப்பட்டது. (47)

ஐயர் செய்கை யறிந்தன மிவ்விடைப்
பைய வந்து பலிதனைக் கேட்பது
மெய்ய தன்றிது மெல்லிய லார்தமை
மையல் செய்திட வந்ததென் பார்சிலர்.

ஐயர் செய்கை அறிந்தனம்—பூசிக்கத்தக்கோராகிய இவருடைய செய்கையை யாம் அறிந்துகொண்டோம்; இ இடைப் பைய வந்து பலிதனைக் கேட்பது—இவ்விடத்துக்கு மெல்ல வந்து பிக்ஷை கேட்பது, மெய்யது அன்று—உண்மையன்று; இது மெல்லியலார் தமை மையல் செய்திட வந்தது—இச் செயல் மென்மையாகிய இயல்பினையுடைய பெண்களை மயக்கஞ் செய்ய எடுத்த தொரு செயலாம்; என்பார் சிலர்—என்று கூறுவார்கள் சில பெண்கள். (48)

நன்று நன்றிந்த நற்றவர்க் காந்துகி
லொன்று நல்கி யுணவளித் தோவிலா
மன்ற லின்புற மங்கைய ரேவரு
மின்று கொல்லென் றிரங்குகின் றூர்சிலர்.

நன்று நன்று—நல்லது! நல்லது!; இந்த நல் தவர்க்கு ஆம் துகில் ஒன்று நல்கி—இந்த நல்ல தவத்தருக்கு ஏற்றதொரு வஸ்திரத்தைக் கொடுத்து, உணவு அளித்து—உணவு கொடுத்து, ஓவிலா மன்றல் இன்புற—இடையீடு படாத திருமண இன்பத்தை அநுபவிக்க, மங்கையர் ஏவரும் இன்றுகொல்—உரியோராய பெண்டிர் எவரொருவரும் இந்த உலகத்தில் இல்லைப்போலும்; என்று இரங்குகின்றூர் சிலர்—என்று கூறிப் பிக்ஷை கேட்கும் அந்த நக்கர் பால் இரக்கங்கொள்கின்றூர்கள் சில பெண்கள்.

இவரைப் பெறும் பாக்கியமற்ற பெண்டிரும் உளரே, நன்று! நன்று! என்றவாறு. (49)

மாறி லாவிவ் வனத்திடை வந்தனன்
வேறெ ரூரிடை மேவிலன் போலுமாற்
றேறில் யாமுனஞ் செய்திடு செய்தவப்
பேறி தாமெனப் பேசுகின் றூர்சிலர்.

வேறு ஓர் ஊரிடை மேவிலன்—வேறு ஓர் ஊரின்கட் செல்ல விரும்பின ரல்லர்; மாறு இலா இவ் வனத்திடை வந்தனன்—ஒப்பில்லாத இந்தத் தவ வனத்தின்கண்ணே குறிக்கொண்டு வந்தருளினர்; தேறில்—ஆராய்ந்து தெளியு

மிடத்து, இது—இவர் இங்கு வந்தருளிய இது, யாம் முனம் செய்திடு செய்தவப் பேறு ஆம்—யாம் முன்னஞ் செய்துவைத்த தவத்தின் பேறேயாம்; எனப் பேசுகின்றூர் சிலர்—என்று கூறுகின்றூர்கள் சில பெண்கள்.

போலும் ஆல் அசை. செய்தவம் தவம் என்னும் பொருட்டு. (50)

ஈண்டு வந்த விருந்தவன் யாரையும்
வேண்ட லன்னிது மெய்ம்மை யவன்பதம்
பூண்டு காதலிற் போற்றுநர் போலமெய்
தீண்டு தும்மெனச் செப்புகின் றூர்சிலர்.

ஈண்டு வந்த இரும் தவன்—இங்கே போந்த பெரிய தவத்தினையுடைய இவர், யாரையும் வேண்டலன்—எவரையும் விரும்புவாரல்லர்; இது மெய்ம்மை—இது சத்தியம்; அவன் பதம் பூண்டு—ஆகையினுலே அவருடைய பாதங்களைத் தலைக்கணியாக அணிந்து, காதலிற் போற்றுநர் போல—அன்போடு வணங்குவாரை ஒப்ப, மெய் தீண்டுதும் என—அவரது திருமேனியைத் தீண்டுவோம் என்று, செப்புகின்றூர் சிலர்—கூறுகின்றூர்கள் சில பெண்கள்.

வணக்கவாயிலாக மெய்யைப் பரிசிப்போம் என உபாயங் கூறினுராம். (51)

பூணி லங்கிய பொற்றெடி சங்கின
மாணு றுந்துகின் மற்றிவை சோர்தலுங்
காணு கின்றனர் கைநெரித் தஞ்சியே
நாணி வீதி நடுவிருந் தார்சிலர்.

பூண்—ஆபரணங்களும், இலங்கிய பொன் தொடி—பிரகாசிக்கின்ற பொன் வளையல்களும், சங்கினம்—சங்கு வளையல்களும், மாண் உறும் துகில்—அழகுமிக்க ஆடைகளும், இவை சோர்தலும்—ஆகிய இவைகள் நழுவுதலும், காணுகின்றனர்—அதனைக் காண, நாணி—வெட்கங்கொண்டு, கை நெரித்து அஞ்சி—கையை நெரித்துக்கொண்டு அஞ்சி, வீதி நடு இருந்தார் சிலர்—வீதியின் நடுவண் இருந்தார்கள் சில பெண்கள்.

காணுகின்றனர் முற்றெச்சம். காணுதலால் நாணி என்க. தாமறியாதே சோர, அதனைக் காண நாணம் உளதாயிற் றென்க. (52)

ஏமம் பாயமெய் யெங்கணுங் காமவே
டுமம் பாயவை சூழ்ந்துயிர் வாட்டிட
வாமம் பாய்புனல் போன்மயிர்க் காறெறுங்
காமம் பாயக் கலுழுகின் றூர்சிலர்.

ஏமம் பாய—மயக்கம் பரவ, மெய் எங்கணும்—உடம்பினெவ்விடத்திலும், காமவேள் தூம் அம்பு ஆயவை சூழ்ந்து உயிர் வாட்டிட—மன்மதன் தூவும் அம்புகள் மொய்த்து உயிரை வாட்ட, வாமம் பாய் புனல் போல்—தனங்களி லிருந்து பாய்கின்ற பாலாகிய நீரைப்போல, மயிர்க்கால் தொறும்—மயிர்க் கால்கள்தோறும், காமம் பாய—காமநீரொழுக, கலுழுகின்றார் சிலர்—அழுகின் றார்கள் சில பெண்கள். (53)

பாச நீங்கிப் பரபத மீதென
வாசை யோடுகண் டன்புசெய் வாரென
வாச நீங்கி வளையுகுத் தையர்தங்
கோச நோக்கினர் கும்பிடு வார்சிலர்.

பாசம் நீங்கி—பாசமாகிய மலம் நீங்கப்பெற்று, பர பதம் ஈது எனக் கண்டு—அடையக்கடவதாகிய பரம பதம் இஃதென்று கண்டு, ஆசையோடு அன்பு செய்வார் என—அப் பரம பதத்தின்மீது ஆசையோடு பத்தி செய் பவர்கள்போல, வாசம் நீங்கி—வஸ்திரத்தை இழந்து, வளை உகுத்து—வளை யலுங் கழன்று, ஐயர் தம் கோசம் நோக்கினர்—அந்த நக்கரின் அந்தரங்க ஸ்தானத்தைக் கண்டு, கும்பிடுவார் சிலர்—கும்பிடுவார்கள் சில பெண்கள்.

தம்நிலைக் கேற்றவாறே இறை தரிசனங் கிடைக்கின்ற தென்கின்ற உண்மை சிந்திக்கற்பாலது. போகவிருப்பினர் இறையை அவ்வகையிற் கண்டனர். (54)

இளையி னோடுறு மெந்தைதன் வேட்கையாற்
களையி னோடு கதுமெனச் சென்றுபா
லளையி னோடுறு மோதன மங்கைவீழ்
வளையி னோடு வழங்குகின் றார்சிலர்.

இளையினோடு உறும் எந்தைதன் வேட்கையால்—இளமைச் செவ்வியோடு வருகின்ற எம்பெருமான்மீது கொண்ட வேட்கையினால், களையினோடு கது மெனச் சென்று—விரக தாபத்துடன் விரைந்து சென்று, பால் அளையினோடு உறும் ஓதனம்—பாலும் தயிரும் மிக்குக் கலந்த அன்னத்தை, அம் கை வீழ் வளையினோடு—அழகிய கையினின்றுங் கழன்று வீழ்ந்த வளையலோடு சேர்த்து, வழங்குகின்றார் சிலர்—பிக்ஷாடனருக்குப் பிக்ஷையிடுகின்றார்கள் சில பெண்கள்.

இளை—இளமை. விரகத்தாலெய்திய மெலிவை உணர்த்தியவாறும். (55)

பாவை மார்முன் பலிக்குறுந் தன்மையா
னீவி யின்றியிந் நெற்றியங் கண்ணுதன்
மேவு நந்துகில் வீழ்கினும் வீழுக
வேவ மோவெமக் கென்றுரைப் பார்சிலர்.

இ நெற்றி அம் கண்ணுதல்—இந்த அழகிய நெற்றிக்கண்ணரான நக்கர், பாவைமார் முன்—பெண்களெதிரே, நீவி இன்றிப் பலிக்கு உறும் தன்மையால்—ஆடையின்றிப் பிக்ஷைக்கு வருகின்ற தன்மையினால், மேவு எமக்கு—பிக்ஷையிட விரும்பிச் செல்லுகின்ற எமக்கு, நம் துகில் வீழ்கினும் வீழுக—நமது ஆடை நழுவி வீழினும் வீழுக; ஏவமோ—ஈண்டைக்கு இது குற்றமாமோ; என்று உரைப்பார் சிலர்—என்று கூறுவார்கள் சில பெண்கள்.

ஆடையின்றி வருவார்முன் அவ்வாறு சேறலே பொருத்தமென்றார் என்க. இதனானே, இவ்வாறு கூறும் நிலையினரான அவர்க்கு நிமலன் காட்சியும் அவர் நிலைக்கு ஏற்றவாறே அமையுமென்பது உய்த்துணரற்பாலதாம். (56)

போய நாணம் புகுந்தது மாலுளம்
தீயு மானிறை சிந்திய தாருயிர்
வீயு மெய்யும் விளிந்திடு மெம்முயி
ரீயு மெங்களுக் கென்றுரைப் பார்சிலர்.

நாணம் போய—நாணம் நீங்கியது; மால் புகுந்தது—மயக்கம் புகுந்தது; உளம் தீயும்—உள்ளந் தீகின்றது; நிறை சிந்தியது—கற்பு அழிந்தது; ஆருயிர் வீயும்—அரிய உயிர் கெடும்; மெய்யும் விளிந்திடும்—உடலும் அழியும்; எங்களுக்கு எம் உயிர் ஈயும்—ஏழையேங்களுக்கு எங்கள் உயிரைத் தந்தருளும்; என்று உரைப்பார் சிலர்—என்று கூறுவார்கள் சில பெண்கள்.

போயது ஈறு கெட்டது. (57)

தண்டு லங்கொ றவத்த ரிரப்பெனக்
கொண்டு சென்று குறுகினர் காமமா
மண்டு தீச்சுட வண்பொடி யாதலு
மண்டர் நாயகன் போலணிந் தார்சிலர்.

தவத்தர் இரப்பு தண்டுலம்கொல் என—இத்தபோதனர் இரப்பது அரிசி போலும் என்று, கொண்டு சென்று குறுகினர்—அதனை எடுத்துக்கொண்டு அவர் அருகிற் சென்றவர்கள், மண்டு காமம் ஆம் தீச் சுட—சுவாலிக்கின்ற காமாக்கினி தகிக்க, வண் பொடி ஆதலும்—அவ்வரிசி அழகிய நீறாய்ப் போதலும், அண்டர் நாயகன் போல்—தேவ நாயகராகிய சிவபெருமானைப் போல, அணிந்தார் சிலர்—அவ்வரிசிப் பொடியாகிய நீற்றைத் தாம் பூசிக் கொண்டார்கள் சில பெண்கள். (58)

வடிவி னுலெமை மாலுறுத் தாளுமென்
றடியில் வீழினு மாரருள் செய்கிலர்
கடிது போவது போலுங் கருத்திவர்க்
கிடுகி லீரைய மென்றுரைப் பார்சிலர்.

ஆளும் என்று அடியில் வீழினும் ஆர் அருள் செய்கிலர்—எம்மை ஆண் டருளும் என்று பாதத்தில் வீழ்ந்து பிரார்த்தித்தாலும் அருமையாகிய தமது அருளைச் செய்கின்றாரில்லை ; இவர்க்குக் கருத்து—இவருக்குக் கருத் தாவது, வடிவினல் எமை மால் உறுத்து—தமது வடிவத்தினல் எம்மை மயக்கம் உறும்படி செய்துவிட்டு, கடிது போவது போலும்—விரைந்து இவ்விடத்தை விட்டு அகன்று போவது போலும் ; இடுகிலீர் ஐயம்—ஆகையி னலே இவருக்குப் பிக்ஷை இடாதீர்கள் ; என்று உரைப்பார் சிலர்—என்று கூறுவார்கள் சிலபெண்கள்.

மாலுறுத்துவிட்டு வீழினும் அருள் செய்கிலர் என இருந்தவாறு வைத்துரைப்பினுமாம். (59)

ஆர மற்றன ராரமும் வீழமெய்
யீர மற்றன ரீர மதன்படை
தீர மற்றனர் தீரவு மேகலா
பார மற்றனர் பாரமற் றூர்சிலர்.

சிலர்—சில பெண்கள், ஆரம் அற்றனர்—முத்துவடம் அற்றார்கள் ; ஆரமும் வீழ மெய் ஈரம் அற்றனர்—சந்தனப்பூச்சும் உதிரும்படி மெய்க்கட் பசப்பு அற்றார்கள் ; மதன் படை ஈர தீரவும் தீரம் அற்றனர்—மன்மத பாணம் துளைக்க முற்றிலும் வலி கெட்டார்கள் ; மேகலா பாரம் அற்றனர்—அரையி லணிந்த மேகலாபரணமாகிய பாரமும் அற்றார்கள் ; பாரம் அற்றார்—இவ் வாற்றல் எல்லாப் பாரத்தையும் நீத்தா ராயினர்.

பாரமற்றார் சிலர் என எடுத்துக்கொண்டு, பொறுமை யிழந்தாராகிய சிலர் என உரைப்பினுமாம். பசப்பு—ஈரத்தன்மை. (60)

சூல முண்டு சுடர்விழி மேனிமிர்
பால முண்டு படர்சடை யுண்டுசெங்
கோல முண்டு குறைமதி யுண்டிவ
ரால முண்டவ ராகுமென் பார்சிலர்.

சூலம் உண்டு—இவரிடஞ் சூலம் உளது ; பாலம் மேல் நிமிர் சுடர் விழி உண்டு—நெற்றியின்மீது விளங்குகின்ற அக்கினிக்கண் உளது ; படர் சடை உண்டு—படர்ந்த சடை உளது ; செம் கோலம் உண்டு—செந்நிற வடிவம் உளது ; குறை மதி உண்டு-இளம் பிறை உளது ; இவர் ஆலம் உண்டவர் ஆகும்—ஆதலினலே இவர் நஞ்சையுண்ட சிவபெருமானேயாவர் ; என்பார் சிலர்—என்று கூறுவார் சில பெண்கள். (61)

எந்தை யார்தம் மிருங்குறி யின்கணே
சிந்து கின்ற திவலையொன் றல்லவோ
வுந்தி மேல்வந் துலகனைத் துந்தரு
மந்த நான்முக னைதென் பார்சிலர்.

எந்தையார் தம்—எம்பெருமானுடைய, இரும் குறியின்கண் சிந்துகின்ற திவலை ஒன்று அல்லவோ—பெருமை பொருந்திய குறியினிடத்து நின்று சிந்துகின்றதொரு அருட்டுளியன்றோ, உந்தி மேல் வந்து—திருமாலின் உந்திக் கமலத்திற் பொருந்தி, உலகனைத்தும் தரும் அந்த நான்முகன் ஆனது—உலகம் அனைத்தையும் படைக்கின்ற அந்த நான்முகக் கடவுள் ஆகியது; என்பார் சிலர்—என்று கூறுவார்கள் சில பெண்கள். (62)

சங்கு மாழியுந் தாங்குத லின்றியே
பொங்கு காமரம் பொன்னந் துகிலொரீஇத்
துங்க மாதவர் துண்ணென மால்கொள
வங்கண் மேவு மரியையொத் தார்சிலர்.

சங்கும் ஆழியும் தாங்குதல் இன்றி—சங்கையும் ஆழியையுந் தரித்தல் செய்யாமல், பொங்கு காமரம் பொன் அம் துகில் ஒரீஇ—பொலிகின்ற காமரத்தையும் பொன்னுடையையும் விடுத்து, துங்க மாதவர் துண்ணென மால் கொள—உயர்ச்சி பொருந்திய பெரிய தவத்தர்கள் துண்ணென்று மயக்கங் கொள்ள, அங்கண் மேவும்—அவ்விடத்துக்குச் செல்லும், அரியை ஒத்தார் சிலர்—மோகினியாகிய திருமாலை ஒத்த மோகினிகளாயினர் சில பெண்கள்.

காமரம்—கான்மரம்; அஃது ஆலமரம். அது திருமாலின் உறைவிடங்களுள் ஒன்று.

சங்கு வளையலையும், ஆழியாகிய மோதிரத்தையும், காமரமாகிய தருக்கள் நிறைந்த சோலையி னிருப்பிடத்தையும், உயர்ந்த அழகிய ஆடையையும் விடுத்து, தங் கணவராகிய துங்க மாதவர் காண்பரேல் நாணித் துண்ணென்று மயங்குமாறு, மோகினியை ஒத்த மோகினிக ளாயின ரென்க. அந்த மோகினியால் வருந்தும் மாதவர்களின் நிலை இந்த மோகினிகளைக் கண்டவழி இனி என்னும் என்க. (63)

கட்டு செஞ்சடைக் கண்ணியி னுள்ளகப்
பட்ட மானெனப் பார்த்தகண் வாங்கலர்
சட்டு வந்தனிற் றாங்கிய வோதன
மிட்டு வெள்ளிடை யேமரு வார்சிலர்.

கட்டு செம் சடைக் கண்ணியின் உள் அகப்பட்ட மான் என—கட்டப்பட்ட செஞ்சடையாகிய கண்ணியினுள்ளே அகப்பட்ட மானைப்போல, பார்த்த கண் வாங்கலர்—பார்த்த கண்ணை வாங்காதவராய், சட்டுவந்தனில் தாங்கிய ஓதனம்—அகப்பையிலே ஏந்திக் கொணர்ந்த அன்னத்தை, வெள்ளிடை இட்டு—வெற்றிடத்தி லிட்டு, ஏமருவார் சிலர்—கலங்குவார்கள் சில பெண்கள்.

கண்ணி—வலை; புள் முதலியன படுக்குங் கயிறுமாம். பிக்ஷா பாத்திரத்தி லிடுதுமென்று வெற்றிடத்தி லிட்டார்க ளென்க. (64)

கிளியின் மேற்செலுங் கேழ்கிள ரோதிமங்
களிம யக்குறு காளகண் டத்திறை
வெளியின் மேனியு மெய்ப்படு கோலமுந்
தெளிகி லாது தெருமரு வார்சிலர்.

கிளியின் மேற் செலும்—திலோத்தமையாகிய கிளியின்மீது ஆசை மிகுதியினாலே தொடர்ந்து செல்லும், கேழ்கிளர் ஓதிமம்—நிறம் விளங்குகின்ற பிரமாவாகிய அன்னமும், களி மயக்கு உறு காள கண்டத்து இறை—மோகவெறி உறுதற் கேதுவான பேரழகைக் கொண்ட காளகண்டரான பிக்ஷாடனரது, வெளியின் மேனியும்—உருவெளித்தோற்றத்தையும், மெய்படு கோலமும்—மெய்ம்மையான தோற்றத்தையும், தெளிகிலாது—வேற்றுமை தெரியமாட்டாது, தெருமருவார் சிலர்—புத்தி தடுமாறுவார்கள் சில பெண்கள்.

இறைவனின் பேரழகு ஆடவர் பெண்மையை அவாவும் இயல்பினதாதலின், அழகைப் படைக்கும் அயனும் அவ்வழகு கண்டு களிமயக்குறும் என்க.

அழகுகளின் கூட்டரவாகத் திலோத்தமையைச் சிருட்டி செய்து, சிருட்டி செய்த தானே மயங்கித் திசைமுகனுயது கதை.

இனிக் கிளிப்பரிமேற் செல்லும் ஓதிமம் போல்வாளான இரதியும் களிமயக்குறும் இறை என உரைப்பாருமுளர். (65)

அளியி னட்ட வடிசில்கொண் டாயிடைக்
களிம யக்கங் கருத்துற வேகியே
யொளியி னுக்கொளி யாகியுள் ளாருரு
வெளியி னுக்கு விரைந்தளிப் பார்சிலர்.

அளியின் அட்ட அடிசில் கொண்டு—அன்போடு சமைத்த அன்னம் முதலிய உணவுவகையை எடுத்துக்கொண்டு, ஆயிடை—அவ்விடத்துக்கு, களி மயக்கம் கருத்துற ஏகி—மோக வெறி கருத்தைக் கொள்ளைகொள்ளச் சென்று, ஒளியினுக்கு ஒளியாகி உள்ளார்—ஒளிக்கும் ஒளியாயிருப்பவராகிய சிவ பெருமானது, உரு வெளியினுக்கு—உருவெளித்தோற்றத்துக்கு, விரைந்து அளிப்பார் சிலர்—விரைந்து கொடுப்பார்கள் சில பெண்கள். (66)

அண்ணன் மேனிகண் டார்வமுற் றுடைபோய்ப்
பெண்ணி னீர்மைப் பெருங்குறி மூடியும்
கண்ணை மூடியுங் கைக்கடங் காமையால்
விண்ணை மூடினர் போல்வெள்கி னார்சிலர்.

அண்ணல் மேனி கண்டு—சிவபெருமானுடைய திருமேனியைத் தரிசித்து, ஆர்வம் உற்று—ஆசை கொண்டு, ஆடை போய்—ஆடை நழுவி, பெண்ணின் நீர்மைப் பெருங்குறி மூடியும்—பெண்மையின் இயல்பாகிய பெரிய குறியைக் கையால் மூடியும், கைக்கு அடங்காமையால் கண்ணை மூடியும்—கையால் மூடுதற்கு அடங்காமையினுலே கண்களை மூடியும், விண்ணை மூடினர் போல்—ஆகாயத்தை மறைக்க எண்ணி மறைத்தவர்களைப்போல, வெள்கினுர் சிலர்—வெட்கமுற்றுர்கள் சில பெண்கள். (67)

விருந்த ராயிவண் மேவினிர் விண்ணவர்
மருந்து போல்வதொர் வண்பத முண்டவை
யருந்தி யேநல் லருள்புரிந் தோரிறை
யிருந்து போமென் றிசைத்திடு வார்சிலர்.

விருந்தராய் இவண் மேவினிர்—விருந்தினராய் இவ்விடத்து எழுந்தருளினீர்; விண்ணவர் மருந்து போல்வது ஓர் வண் பதம் உண்டு—தேவாமிர்தம் போலும் ஒப்பற்ற வளவிய உணவு வகை இங்கே உண்டு; அவை அருந்தி—அவற்றை உண்டு, நல்லருள் புரிந்து—எமக்கு நன்மையாகிய அருளைச் செய்து, ஓர் இறை இருந்து போம்—ஓரிறைப்பொழுது காலந் தாழ்த்துச் சென்றருளும்; என்று இசைத்திடுவார் சிலர்—என்று கூறுவார்கள் சில பெண்கள். (68)

கையி லேந்து கலனொடு சூலமும்
வையு நம்மனை வந்திடும் பாலொடு
நெய்யு முண்டியு நிற்றலு முண்டியா
முய்ய நீரிங் குறையுமென் பார்சிலர்.

கையில் ஏந்து கலனொடு—கையி லேந்திய கபாலமாகிய பிக்ஷாபாத்திரத்தையும், சூலமும்—சூலத்தையும், வையும்—ஓரிடத்தில் வையும்; நம் மனை வந்திடும்—நமது மனைக்கு வருதலைச் செய்யும்; பாலொடு நெய்யும் உண்டியும் நிற்றலும் உண்டு—பாலும் நெய்யுங் கலந்த உணவினைத் தினந்தோறும் உண்டு, யாம் உய்ய—யாம் உய்யும்படி, நீர் இங்கு உறையும்—நீவிர் இங்கே உறைந்தருளும்; என்பார் சிலர்—என்றுரைப்பார்கள் சில பெண்கள். (69)

பார்க்கு மாதர்க்கும் பல்குழு வாடவ
ரார்க்கு மைய லளிக்கும் வடிவுளீர்
சீர்க்கு மோடொன்று செங்கைகொண் டெங்கணு
மேற்கு மோவிதென் னென்றுரைப் பார்சிலர்.

பார்க்கும் மாதர்க்கும் பல்குழு ஆடவர் ஆர்க்கும்—நும்மைப் பார்க்கும் பெண்கள் எவருக்கும் பல திறத்தினரான ஆடவர் எவருக்கும், மையல் அளிக்கும் வடிவு உளீர்—மோகத்தைக் கொடுக்கும் வடிவத்தையுடையீர்; சீர்க்கும் ஓடு ஒன்று செங்கை கொண்டு—சீர்த்தலால் வந்த கபால ஓடு ஒன்றைச் சிவந்த கையில் ஏந்திக்கொண்டு, எங்கணும் ஏற்கும் இது ஓ என்—எவ்விடத்தும் பிக்ஷை ஏற்கின்ற இது ஓகோ என்னே; என்று உரைப்பார் சிலர்—என்று ஏற்ப திகழ்ச்சி என்ற குறிப்பிற் கூறுவார்கள் சில பெண்கள்.

சீர்த்தல்—கோபித்தல். சீர்த்தலால் வந்ததனைச் சீர்க்கும் ஓடு என்றார். சிறப்புச் செய்யும் என உரைப்பாரு முளர்.

நுமது வடிவத்துக்குஞ் செயலுக்கும் பொருத்தம் இன்றே என்றவாறு. (70)

இன்று மைக்கண்டு யாங்களு மாடைபோ
யொன்று காதலுற் றோய்ந்தன மிங்கிது
நன்று கூடுதிர் நங்களை நீரென
நின்று கூறி நெடிதுயிர்த் தார்சிலர்.

இன்று உமைக் கண்டு—இன்று நக்கராகிய நும்மைக் கண்டு, யாங்களும் ஆடை போய்—நாங்களும் ஆடை நழுவி, ஒன்று காதல் உற்று ஓய்ந்தனம்—ஒருமை செய்யுங் காதல் வயப்பட்டு ஓய்ந்துபோனோம்; இங்கு இது நன்று—இவ்விடத்தில் இது நல்ல சமயம்; நங்களை நீர் கூடுதிர் என நின்று கூறி—ஏழையேங்களை நீர் சேருவீராக என்று எதிர்நின்று கூறி, நெடிது உயிர்த்தார் சிலர்—நெடிதாகிய பெருமூச்சு விட்டார்கள் சில பெண்கள். (71)

நந்து மிவ்வன நண்ணிய மாதவ
ரிந்த வேலையி லேகலர் யாவதுஞ்
சிந்தை கொள்ளலிர் சேக்கையுண் டோரிறை
வந்து போமென வாய்மலர்ந் தார்சிலர்.

நந்தும் இ வனம் நண்ணிய மாதவர்—தவம் வளருகின்ற இந்த வனத்திற் பொருந்திய பெரிய தவத்தர்களான முனிவர்கள், இந்த வேலையில் ஏகலர்—இச்சமயத்தில் இங்கே வாரார்; யாவதும் சிந்தை கொள்ளலிர்—யாதொன்றனையும் உள்ளத்திற் கொள்ளற்க; சேக்கை உண்டு—சயனம் உளது; ஓரிறை வந்து போம்—ஓரிறைப்பொழுது வந்து தங்கிச் சென்மின்; என வாய் மலர்ந்தார் சிலர்—என்று கூறினார்கள் சில பெண்கள். (72)

எம்மை யாரிட மாதரென் றெண்ணியோ
வெம்மை பேசினு மேவுகி லீர்பவ
மும்மை மேவுங் கொலோவொழிந் தார்கள்போ
லம்ம வந்தெமை யாளுமென் பார்சிலர்.

எம்மை ஆரிட மாதர் என்று எண்ணியோ—எங்களை இருடிபத்தினிகள் என்று கருதியோ, வெம்மை பேசினும் மேவுகிலீர்—விரக தாபத்தை எடுத்துரைப்பினும் அணைகின்றிலீர்; பவம்—பாவமானது, ஒழிந்தார்கள் போல்—ஏனையோரிடத்துப்போல, உம்மை மேவுங்கொலோ—கடவுளாகிய உம்மையும் அணுகுமோ அணுகாதே; எமை ஆளும்—ஆகையினாலே எம்மை அணைத்தருளும்; என்பார் சிலர்—என்று கூறுவார்கள் சில பெண்கள். (73)

ஆடை தாரும தன்றெனிற் கொண்டதோர்
வேடை தீரும் விளம்புகி லீரெனிற்
கூட வாருங் குறிப்புமக் கென்னெனப்
பாடு சேர்ந்து பகர்ந்திடு வார்சிலர்.

ஆடை தாரும்—நழுவிய நமதாடையைத் தந்தருளும்; அது அன்று எனில்—அதனைத் தாரா தொழியின், கொண்டது ஓர் வேடை தீரும்—எம்மை விழுங்கியதாகிய ஒப்பற்ற எமது விரகதாபத்தைத் தீர்த்தருளும்; விளம்புகிலீர் எனின்—ஒன்றும் உரையீராயின், கூட வாரும்—கூடுதற்கு வந்தருளும்; உமக்குக் குறிப்பு என் என—உமது எண்ணந்தான் யாதோ என்று, பாடு சேர்ந்து—பக்கத்தே சென்று, பகர்ந்திடுவார் சிலர்—இரகசியம் பேசுவார்கள் சில பெண்கள். (74)

ஒல்லு கின்ற துமக்கிவ் வடிவினாற்
செல்லு கின்ற தெரிவையர் யாரையுங்
கொல்லு கின்றது வோபலி கொள்வதோ
சொல்லு மென்று தொடர்ந்திடு வார்சிலர்.

உமக்கு இ வடிவினால் ஒல்லுகின்றது—உமக்கு இவ் வழகிய வடிவத்தினாற் செய்ய இயலுகின்றதாவது, செல்லுகின்ற தெரிவையர் யாரையும் கொல்லுகின்றதுவோ—இவ்வீதியிற் செல்லுகின்ற பெண்கள் யாவரையும் வதைக்கின்றதோ; பலி கொள்வதோ—பிக்ஷை ஏற்பதோ; சொல்லும் என்று—இரண்டில் எது சொல்லியருளும் என்று, தொடர்ந்திடுவார் சிலர்—பின் தொடர்ந்தார்கள் சில பெண்கள். (75)

போற்றி யிங்கெமைப் புல்லுமென் றாலுமா
லாற்றி யின்பத் தணைகிலிர் யாவருஞ்
சாற்று கின்றனர் சங்கர ரென்றுமை
யேற்ற தோவதற் கென்றுரைப் பார்சிலர்.

எமைப் போற்றி இங்கு புல்லும் என்றாலும்—எம்மைப் பாதுகாத்து இங்கே தழுவுதிர் என்று பிரார்த்தித்தாலும், மால் ஆற்றி—எமது மோகத்தைத்

தணித்து, இன்பத்து அணேகிலிர்—இன்பத்தோடு அணேகின்றிலீர்; உமை சங்கரன் என்று யாவரும் சாற்றுகின்றனர்—இவ்வியல்பினராகிய நும்மைச் சங்கரர் என்று யாவருங் கூறுகின்றனர்; அதற்கு ஏற்றதோ—அவ்வாறு கூறுதற்கு நுஞ் செயல் ஏற்றதாகுமோ; என்று உரைப்பார் சிலர்—என்று கூறுவார்கள் சில பெண்கள்.

சங்கரன்—சுகஞ்செய்பவன். (76)

அணங்கி னல்லவ ரண்ணறன் கோசமே
னுணங்கு மாலொடு நோக்கி யதற்குமுன்
வணங்கு மாறென மற்றவர் நாணுபு
கணங்க ளோடு கவிழ்ந்துசென் றூர்சிலர்.

அணங்கின் நல்லவர் சிலர்—அழகிற் சிறந்த பெண்கள் சிலர், அண்ணல் தன் கோசம் மேல் நுணங்கு மாலொடு நோக்கி—சிவபெருமானது திருக் குறியின்மீது தளர்கின்ற மயக்கத்தோடு நோக்கி, அதற்கு முன் வணங்குமாறு என—அதற்கு முன்னே வணங்குந் தன்மைபோல, அவர் நாணுபு கவிழ்ந்து—அவர்கள் நாணித் தலேகுனிந்து, கணங்களோடு சென்றூர்—மகளிர் கூட்டத் தோடு சென்றூர்கள். (77)

### வேறு

இன்னவர் பலருஞ் சூழா வீண்டுபு கலேயுஞ் சங்குந்
துன்னிய கலனு நாணுந் துறப்பருங் கற்புஞ் சிந்தி
மன்னுயி ரொன்றுந் தாங்கி மால்கொடு தொடர வெங்கோன்
பொன்னடிக் கமலஞ் சேப்பப் புனிதமா மறுகிற் போனுன்.

இன்னவர் பலரும் சூழா ஈண்டுபு—இவ்வியல்பினராகிய முனிவர் பன் னியர்கள் பலருஞ் சூழ்ந்து நெருங்கி, கலேயும்—வஸ்திரத்தையும், சங்கும்—சங்கு வளேயல்களேயும், துன்னிய கலனும்—செறிந்த ஆபரணங்களேயும், நாணும்—நாணத்தையும், துறப்பரும் கற்பும்—துறத்தற்கரிய கற்பினேயும், சிந்தி—சிந்துதல் செய்து, மன் உயிர் ஒன்றும் தாங்கி—நிலேபெற்ற உயிர் ஒன்றனேயுமே தாங்கி, மால் கொடு தொடர—விரக மயக்கத்தோடு பின் ருெடர, எம் கோன்—எமது இறைவராகிய பிக்ஷாடனர், பொன் அடிக் கமலம் சேப்ப—தமது அழகிய திருவடிக் கமலங்கள் நோவ, புனித மா மறுகில் போனுன்—புனிதமாகிய பெரிய வீதியிற் சென்றருளினுர். (78)

சில்லிடை வீணே நாதஞ் செய்திடு மஃதே யன்றிச்
சில்லிடை மறைகள் பாடுஞ் சில்லிடைச் சிவநூ லோதுஞ்
சில்லிடைத் தன்மெய் காட்டுஞ் சில்லிடை யையங் கேட்குஞ்
சில்லிடை யன்பர் போற்றன் சீர்த்தியைப் புகழ்ந்து செல்லும்.

சில்லிடை வீணை நாதம் செய்திடும்—சிலவிடங்களில் வீணுகானஞ் செய்வார்; அஃது அன்றி—அவ்வாறன்றி, சில்லிடை மறைகள் பாடும்—சில விடங்களில் வேதகானஞ் செய்வார் ; சில்லிடை சிவ நூல் ஓதும்—சில இடங் களிற் சைவ நூலாகிய ஆகமங்களை உபதேசிப்பார் ; சில்லிடை தன் மெய் காட்டும்—சிலவிடங்களிலே தமது சுவரூபத்தைக் காட்டுவார்; சில்லிடை ஐயம் கேட்கும்—சில இடங்களிற் பிக்ஷை கேட்பார்; சில்லிடை அன்பர் போல்—சில இடங்களில் அன்பர்களாகிய அடியார்களைப்போல, தன் சீர்த்தியைப் புகழ்ந்து செல்லும்—தமது கீர்த்தியைப் புகழ்ந்துரைத்துக்கொண்டு செல்லுவார். (79)

தேமலர்க் கமலை யன்ன தெரிவையர் தொழுங்கா லீசன்
மாமலர்த் தாண்மே லிட்ட மலர்களு மன்னூர் சிந்துந்
தூமலர்த் தொடையுஞ் சங்குந் துலங்குபொற் கலனுங் காமன்
பூமலர்த் தொடையு மீண்டப் பொலிந்ததப் புனித வீதி.

தேமலர் கமலை அன்ன தெரிவையர்—தேன் பொருந்திய தாமரைமலரி லிருக்குந் திருமகளை ஒத்த பெண்கள், தொழுங்கால்—பிக்ஷாடன மூர்த்தியை வணங்கும்போது, ஈசன் மா மலர் தாள் மேல் இட்ட மலர்களும்—அம்மூர்த்தி யின் பெருமை பொருந்திய மலரடிகளிலிட்ட புஷ்பங்களும், அன்னூர் சிந்தும் தூ மலர் தொடையும்—அவர்கள் சிந்துகின்ற பரிசுத்தமாகிய மலர்மாலை களும், சங்கும்—சங்கு வளையல்களும், துலங்கு பொன் கலனும்—விளங்குகின்ற பொன்னுபரணங்களும், காமன் பூ மலர் தொடையும்—மன்மதன் செலுத்து கின்ற பொலிவாகிய புஷ்பபாணங்களும், ஈண்ட—ஆகிய இவைகள் செறித லால், அ புனித வீதி பொலிந்தது—அந்தப் புனிதமாகிய வீதி பொலி வுற்றது. (80)

ஊனுலா முயிர்கட் கெல்லா முணர்வுட னுயிராய் நின்றோன்
வானுலாம் பலிக்கு வந்த வடிவினை நினைக்கின் மாயோன்
றானுமா லாகி யின்னுந் தளர்வுறு மென்று லம்மா
வேனையோர் செய்கை தன்னை யினைத்தென வியம்ப லாமோ.

ஊன் உலாம் உயிர்கட்கு எல்லாம்—உடம்பினுள்ளே சஞ்சரிக்கின்ற உயிர் களுக்கெல்லாம், உணர்வுடன் உயிராய் நின்றோன்—உணர்வாயும் உயிர்க் குயிராயும் நின்ற இறைவரது, வான் உலாம் பலிக்கு வந்த வடிவினை நினைக் கின்—பெருமை பொருந்திய பிக்ஷாடன வடிவத்தை நினைத்தாலும், மாயோன் தானும்—(மாயத்துக்குறைவிடமான) திருமால்தானும், மாலாகி—மயக்கத்தை யுடையவராய், இன்னும் தளர்வுறும் என்றால்—இன்னுந் தளர்ச்சியடைவார் என்றால், ஏனையோர் செய்கை தன்னை இனைத்தென இயம்பலாமோ—பிறர் செயலை இவ்வியல்பிற்று என்று கூறல் கூடுமோ.

'இன்னும்' என்பது, மோகினி வடிவம் நீங்கியதன்மேலும் என்னும் பொருட்டு. (81)

செந்திரு வனைய மேனிச் சீறடிக் கருங்கட் செவ்வாய்ப்
பைந்தொடி மகளிர் கற்பாம் பரவைகண் மதிக்கு மெண்ணின்
மந்தரம் போன்ரு னெங்கோன் மற்றவர்க் கெல்லாம் வெவ்வே
றிந்திர ஞால மென்ன வெல்லையி லுருக்கொண் டெய்தி.

செந்திரு அனைய மேனி--செம்மையாகிய திருமகளை யொத்த மேனியையும், சீறடி கருங்கண் செவ்வாய்—சிற்றடியையுங் கரிய கண்களையுஞ் சிவந்த வாயையும் உடைய, பைந்தொடி மகளிர் அவர்க்கெலாம்—பசிய வளையலை யணிந்த மகளிர்களாகிய அவர்களுக்கெல்லாம், இந்திர ஞாலம் என்ன—இந்திர சாலம் என்று சொல்லும்படி, வெவ்வேறு எல்லையில் உருக்கொண்டு எய்தி—வேறு வேறு அளவற்ற உருவத்தைக் கொண்டு நடந்து, கற்பாம் பரவைகள் மதிக்கும் எண்ணில் மந்தரம் போன்ருன் எங்கோன்—கற்பென்று சொல்லுங் கடல்களைக் கடைகின்ற அளவிறந்த மந்தர மலைகளை ஒத்தார் எமதிறைவராகிய பிக்ஷாடன மூர்த்தி. (82)

நீண்டவந் நிகமம் புக்க நிமலன்மே லார்வம் வைத்துக்
காண்டகு மாதர் யாருங் கருவுறு நிலைய ராகி
மாண்டகு வயாவு மற்ருேர் வருத்தமு மின்றி யாங்கே
யாண்டகை மகார்க ளாக வாறெண்ணு யிரரைப் பெற்ருர்.

நீண்ட அ நிகமம் புக்க நிமலன்மேல்—நீண்ட அந்த வீதியிற் சென்ற சிவபெருமான்மீது, ஆர்வம் வைத்து—மோகங்கொண்டு, காண் தகு மாதர் யாரும்—அழகு பொருந்திய அப்பெண்கள் அனைவரும், கரு உறு நிலையராகி—கருப்பவதிகளாகி, மாண் தகு வயாவும் மற்ருேர் வருத்தமும் இன்றி—மாட்சிமை பொருந்திய வயாவும் வேறு யாதொரு வருத்தமும் இல்லாமல், ஆங்கே—அவ்விடத்தே, ஆண் தகை மகார்களாக—ஆண் தகைமையினையுடைய புத்திரர்களாக, ஆறெண்ணுயிரரைப் பெற்ருர்—நாற்பத்தெண்ணுயிரவர்களைப் பெற்ருர்கள்.

வயா–கருப்பவேதனை; கருப்ப காலத்து நுகர்பொருளில் உண்டாம் வேட்கை. (83)

எந்தைபால் விழைவு செய்தாங் கிமைப்பினின் மடவா ரீன்ற
மைந்தர்கள் யாரு மையன் மலரடி முன்னர்த் தாழ்ந்து
புந்திகொ ளன்பி னின்று போற்றிட வனைய னீவிர்
நந்தமை யுன்னி யீண்டு நற்றவத் திருத்தி ரென்ருன்.

எந்தைபால் விழைவு செய்து—எம்பெருமானிடத்து ஆசை வைத்து, ஆங்கு இமைப்பினில்—அவ்விடத்தே கணப்பொழுதினில், மடவார் ஈன்ற மைந்தர்கள் யாரும்—அப்பெண்கள் பெற்ற புதல்வர்கள் அனைவரும், ஐயன்

மலர் அடி முன்னர் தாழ்ந்து—பரம பிதாவின் மலரடிகளின் எதிரில் வணங்கி, புந்தி கொள் அன்பின் நின்று போற்றிட—மனத்துக் கொண்ட அன்போடு நின்று துதிக்க, அனையன்—பரமபிதா, நீவிர் நம் தமை உன்னி ஈண்டு நல் தவத்து இருத்திர் என்றான்—நீவிர்கள் எம்மை நினைந்து இவ்விடத்தில் நல்ல தவத்தைச் செய்துகொண்டு இருங்கள் என்று பணித்தருளினார். (84)

நெட்டிருஞ் சடில மீது நிலவினை முடித்த வண்ணல்
கட்டுரை செய்தல் கேளாக் கைதொழூஉ விடைபெற் றேகி
யுட்டெளி வெய்தி நோற்றாங் கொருசிறை யிருந்தார் நாற்பா
னெட்டுள பத்து நூற்றி னெண்டொகை முனிவர் யாரும்.

நாற்பால் எட்டுள பத்து நூற்றின் எண் தொகை முனிவர் யாரும்—நாற்பத்தெண்ணாயிரவர் என்று எண்ணப்படுகின்ற குழுவினரான அம் முனிவர்கள் அனைவரும், நெடு இரும் சடிலம் மீது—பெரிய சடையின்மீது, நிலவினை முடித்த—சந்திரனை அணிந்த, அண்ணல் கட்டுரை செய்தல் கேளா—சிவ பெருமான் திருவாய்மலர்ந்தருளியதைக் கேட்டு, கை தொழூஉ விடைபெற்று ஏகி—கைகூப்பி வணங்கி விடை பெற்றுக்கொண்டு சென்று, உள் தெளிவு எய்தி—மனத் தெளிவு அடைந்து, ஆங்கு ஒரு சிறை நோற்று இருந்தார்—அவ் வனத்தின்கண்ணே ஒரு சாரிலே தவஞ்செய்துகொண்டிருந்தார்கள். (85)

சேயென வந்தோர் நோற்பச் சென்றுழித் தெரிவை மாரா
மாயிரும் பரவை நீத்த மால்கொடு தொடர்ந்து செல்லப்
போயின னென்ப மன்னோ புரியிகந் தரிமுன் னீந்த
வாயிரங் கமலங் கொண்டோ ராழியை யளிக்க வல்லோன்.

புரி இகந்து—வைகுந்த உலகை விட்டுப் பூமிக்கு வந்து, அரி முன் ஈந்த ஆயிரம் கமலம் கொண்டு—விஷ்ணுமூர்த்தி முன்னொரு காலத்து அருச்சித்த ஆயிரந் தாமரை மலர்களை ஏற்றுக்கொண்டு, ஓர் ஆழியை அளிக்க வல்லோன்—ஒரு சக்கரப்படையைக் கொடுக்க வல்லவராகிய சிவபெருமான், சேய் என வந்தோர் நோற்பச் சென்றுழி—பிள்ளைகள் என்று சொல்லும்படி உதித்தவர்களாகிய முனிவர்கள் தவஞ்செய்யச் சென்றபோது, தெரிவை மாராம் மா இரும் பரவை நீத்தம் மால்கொடு தொடர்ந்து செல்ல—பெண்களாகிய மிகப் பெரிய சமுத்திர வெள்ளம் மயலை மேற்கொண்டு பின் தொடர்ந்து செல்ல, போயினன்—வீதியிற் சென்றருளினார்.

புரியிகந்து போயினன் எனினுமாம். என்ப மன்னோ அசைநிலை. பூமி என்றது திருவீழிமிழலை என்னுந் தலத்தை. ஒன்று கொடுத்து ஆயிரம் வாங்க வல்ல இம் மூர்த்தி சக்கரப் பிரதர் என்க. (86)

போதலு மதனை நோக்கிப் பொற்றொடி யாகி நின்ற
சீதர னமலன் றன்பாற் சேறலுந் தொடர்ந்து பின்னர்
மாதவர் யாரும் போந்தார் மற்றத னியல்பு நோக்கி
னேதமில் கங்கை பாலாம் யமுனையைக் கடுத்த தன்றே.

போதலும்—இருடி பத்தினிகள் பின்றொடரப் பிக்ஷாடனர் செல்லாநிற்க, அதனை நோக்கி—அத்தருணத்தைக் குறிக்கொண்டு, பொன்தொடியாகி நின்ற சீதரன் அமலன் தன்பால் சேறலும்—மோகினியாகிய பெண்வடிவங் கொண்டு நின்ற திருமால் சிவபெருமானிடத்து வாராநிற்க, பின்னர் மாதவர் யாரும் தொடர்ந்து போந்தார்—மோகினியாகிய மாலுக்குப் பின்னே பெரிய தவத்தர்களாகிய முனிவர்க ளனைவருந் தொடர்ந்து சென்றார்கள்; அதன் இயல்பு—அந்தச் சந்திப்பின் இயல்பு, நோக்கின்—உற்றுநோக்குமிடத்து, ஏதம் இல் கங்கைபால் ஆம் யமுனையைக் கடுத்தது—குற்றமில்லாத கங்கைக்கட் கலக்கும் யமுனை நதியின் சந்திப்பினியல்பை ஒத்தது. (87)

மெல்லியல் வடிவ மாகி மேயினோன் றன்பால் வீழ்ந்து
செல்லுறு முனிவ ராற்றத் தீவினை புரிந்த நீரா
லல்லுறழ் மிடற்றுப் புத்தே ளவர்க்கெலாந் தனதா யுள்ள
தொல்லுரு மறைத்து வேறோர் வடிவொடு தோன்றி நின்றான்.

மெல்லியல் வடிவம் ஆகி மேயினோன் தன்பால் வீழ்ந்து—மோகினியாகிய பெண்வடிவங் கொண்டு வந்தோரான திருமால்மீது விருப்பங்கொண்டு, செல்லுறு முனிவர்—பின் தொடர்ந்து செல்லுகின்ற முனிவர்கள், ஆற்றத் தீவினை புரிந்த நீரால்—பெரிதுந் தீவினையைச் செய்த தன்மையினால், அல் உறழ் மிடற்றுப் புத்தேள்—இருளை ஒத்த கண்டத்தையுடைய சிவபெருமான், அவர்க்கு எலாம் தனதாய் உள்ள தொல் உரு மறைத்து—அம் முனிவரனைவர்க்கும் தமது தொன்மையாகிய திருவுருவை மறைத்து, வேறு ஓர் வடிவொடு தோன்றி நின்றான்—வேறோர் வடிவொடு தோன்றி நின்றார்.

கடவுளின் தோற்றம் அவரவர் மலபரிபாகத்துக்குத்தக்கவாறு தோன்றும் என்க. (88)

மடந்தையாய் வந்த மாலோன் மணிமிடற் றிறைவன் றன்பா
லடைந்திட முனிவர் தத்த மரிவையர் தம்மை நோக்கித்
தொடர்ந்தன ரிவரு நம்போற் றோற்றனர் கலையு நாணுங்
கடந்தன ரிவனைக் கண்டு காதலித் தார்கொ லென்றார்.

மடந்தையாய் வந்த மாலோன்—பெண்ணாகி வந்த திருமால், மணி மிடற்று இறைவன் தன்பால் அடைந்திட—நீலகண்டரான சிவபெருமானது

பக்கத்தை அடைய, முனிவர்—முனிவர்கள், தத்தம் அரிவையர் தம்மை நோக்கி—தங்கள் தங்கள் மனைவியரை அங்கே கண்டு, இவரும் நம்போல் தொடர்ந்தனர்—இவர்களும் எங்களைப்போலப் பின் தொடர்ந்து வந்தார்கள், கலையும் நாணும் தோற்றனர்—உடுத்த வஸ்திரத்தையும் நாணத்தையுந் தோற்றார்கள்; கடந்தனர்—நெறி கடந்தார்கள்; இவனைக் கண்டு காதலித்தார் கொல் என்றார்—இந்த ஆடவனைக் கண்டு காமுற்றார்கள் போலும் என்றார்கள்.

தாம் மோகினியைத் தொடர்ந்தவாறு போல, அவர்களும் இறைவரைத் தொடர்ந்தா ராதலின், 'நம்போல் தொடர்ந்தனர்' என்றார். (89)

மோனமா நெறியி னோற்கு முனிவரர் முகுந்தன் றன்பா
லானமால் சிறிது நீங்கி யருங்குலப் பன்னி மார்க
ளீனமா நிலையை நோக்கி யின்னலுற் றிரங்கி யேங்கி
மானமேல் கொண்டு வீடா மன்னுயி ரோடு நின்றார்.

மோனம் ஆம் நெறியில் நோற்கும் முனிவரர்—மௌனமாகிய நெறியிலே தவஞ்செய்கின்ற முனிவரர்கள், முகுந்தன் தன்பால் ஆன மால் சிறிது நீங்கி—திருமாலினிடத் துண்டான மயக்கம் சிறிது நீங்கி, அரும் குலப் பன்னிமார்கள் ஈனம் ஆம் நிலையை நோக்கி—அரிய குல பத்தினிகளின் இழிவாகிய நிலையைப் பார்த்து, இன்னலுற்று—வருந்தி, இரங்கி ஏங்கி—இரக்கங்கொண்டு ஏங்கி, மானம் மேல் கொண்டு—அபிமானம் அதிகரிக்கப்பெற்று, வீடா மன்னுயிரோடு நின்றார்—நீங்காத நிலைபெற்ற உயிரைப் பற்றிக்கொண்டு ஒருவாறு நின்றார்கள்.

ஈனமாம் நிலை, உயிர் வீடற்குரியதா மென்க. (90)

பொன்னுலா மல்கு லாளிப் பொற்றொடி யொருத்தி யெம்பான்
மன்னியே தவத்தைச் சிந்தி மால்செய்தா ளொருவன் வந்து
பன்னிமார் கற்பை வீட்டிப் படுத்தினன் மோக மந்தோ
வென்னமா யங்கொ லீதென் றெண்ணினர் யாரு மீண்டி.

பொன் உலாம் அல்குலாள் இ பொற்றொடி ஒருத்தி—பொன்னணி பொருந்திய அல்குலாளான இந்தப் பெண்ணொருத்தி, எம்பால் மன்னி—எம்மிடம் வந்து, தவத்தைச் சிந்தி மால் செய்தாள்—தவத்தைக் குலைத்து மயக்கஞ் செய்தாள்; ஒருவன் வந்து—இவன் ஒருவன் வந்து, பன்னிமார் கற்பை வீட்டி—நமது பத்தினிகளின் கற்பைச் சிதைத்து, மோகம் படுத்தினன்—அவர்களை மோகவலையுள் அகப்படுத்தினான்; அந்தோ—ஐயகோ!, ஈது என்ன மாயம் கொல் என்று—இஃதென்ன மாயமோ என்று, யாரும் ஈண்டி எண்ணினர்—முனிவர்கள் யாவரும் ஒருங்கு கூடி ஆலோசித்தார்கள். (91)

எண்ணிய முனிவர் தேறி யியம்புவார் கயிலை வைகுங்
கண்ணுத லாகு மின்னோர் கற்பினை யுடைத்தான் யாமுன்
பண்ணிய தவத்தை வீட்டப் பைந்தொடி யாகி வந்தோன்
மண்ணுல கனைத்து முண்ட மாயவன் போலு மன்றே.

எண்ணிய முனிவர் தேறி இயம்புவார்—ஆலோசனை செய்த முனிவர் தெளிவுற்றுச் சொல்லுவார்; இன்னோர் கற்பினை உடைத்தான்—இந்தப் பெண்களின் திண்ணிய கற்பாகிய பாறையை உடைத்தவன், கயிலை வைகும் கண்ணுத லாகும்—திருக்கைலையிலிருக்குஞ் சிவபெருமானேயாம்; யாம் முன் பண்ணிய தவத்தை வீட்ட—யாம் முன்னர்ச் செய்த தவத்தை அழிக்கும் பொருட்டு, பைந்தொடியாகி வந்தோன்—பசிய தொடியினை யணிந்த மோகினி யாகி வந்தவன், மண்ணுலகு அனைத்தும் உண்ட மாயவன் போலும்—மண் ணுலகம் முழுவதையும் உண்ட திருமாலே போலும். (92)

நந்தவந் தன்னை வீட்ட நாரணன் றானே நம்பால்
வந்தன னன்று லீசன் பணியினுன் மாயை செய்தா
னிந்திரை கேள்வன் செய்த தென்கொலோ வெமது நோன்பு
சிந்தினு நன்று லின்னுந் தீர்வுநேர்ந் தியற்று கின்றேம்.

நம் தவம் தன்னை வீட்ட—நமது தவத்தை அழிக்கும்பொருட்டு, நாரணன் தானே நம்பால் வந்தனன் அன்று—திருமால் தாமே முனைந்து நம்மிடம் வந்தாரென்று கொள்வது பொருத்தமன்று; ஈசன் பணியினுல் மாயை செய்தான்—சிவபெருமானுடைய கட்டளையினுல் மாயஞ் செய்தாராவர்; இந்திரை கேள்வன் செய்தது என்—இலக்குமி நாயகராகிய திருமால் தாம் செய்ததுதா னென்னை; எமது நோன்பு சிந்தினும் நன்று—எமது தவம் திருமாலால் நிலைகுலைக்கப்பட்டாலும் நன்றேயாம்; தீர்வு நேர்ந்து—நேர்ந்த குற்றத்துக்குக் கழுவாய் செய்து, இன்னும் இயற்றுகின்றேம் ஆல்—மேலும் தவம் செய்வோம் ஆகையினுலே.

எவன் என்பது என் என்றாய் இன்மை குறித்து நின்றது. செய்ததொன்று மில்லை என்றவாறு. இயற்றுவோம் என்பது, துணிவு பற்றி நிகழ்காலத்தாற் கூறப்பட்டது. (93)

அங்கையிற் கபாலொன் றேந்தி யையமேற் றிடுவான் போலச்
சங்கரன் வந்து மற்றித் தாருகா வனத்தின் மேவு
மங்கையர் கற்புச் சிந்தும் வசையுரைக் கொழிவு முண்டோ
செங்கதிர் மதியஞ் செல்லுந் திசையெலாம் பரவு மன்றே.

அங்கையில் கபாலொன்று ஏந்தி—அழகிய கையிற் கபாலமொன்றனை ஏந்தி, ஐயம் ஏற்றிடுவான் போலச் சங்கரன் வந்து—பிக்ஷை ஏற்பவன்போலச் சங்கர

ளுகிய சிவன் வந்து, இ தாருகா வனத்தில் மேவும்—இத் தாருகா வனத்தில் வாழுகின்ற, மங்கையர் கற்புச் சிந்தும் வசையுரைக்கு—பெண்களின் கற்பை அழிக்கும் வசைமொழிக்கு, ஒழிவும் உண்டோ—தீர்வும் உளதாகுமோ ; செம் கதிர் மதியம் செல்லும் திசை எலாம்—செஞ்ஞாயிறும்வெண்டிங்களுஞ் சஞ்சரிக் குந் திக்குக்களெங்கும், பரவும் அன்றே—இவ் வசைமொழி பரவுமன்றே. (94)

தானொரு வேடங் கொண்டுந் தண்டுள வலங்கற் சென்னி
வானவன் றன்னை விட்டு மற்றிவை யனைத்துஞ் செய்தோன்
கானுறு கடுக்கை வேய்ந்த கண்ணுத லேகொ லென்றே
மானவெங் கனலுஞ் சீற்ற வன்னியுங் கிளர நின்றார்.

தான் ஒரு வேடம் கொண்டும்—தான் ஒரு பிக்ஷாடன வடிவத்தை எடுத் தும், தண் துளவு அலங்கல் சென்னி வானவன் தன்னை விட்டும்—தண்ணிய துளவ மாலையை அணிந்த சிரசினையுடைய திருமாலை வேற்று வடிவத்தோடு இங்கே விடுத்தும், இவை அனைத்தும் செய்தோன்—இக்காரியங்கள் அனைத்தை யுஞ் செய்தவன், கான் உறு கடுக்கை வேய்ந்த கண்ணுதலே என்று—வாசனை பொருந்திய கொன்றை மாலையை அணிந்த சிவனேயாவன் என்று துணிந்து, மான வெம் கனலும்—மானமாகிய கொடிய அக்கினியும், சீற்ற வன்னியும்—கோபமாகிய அக்கினியும், கிளர நின்றார்—ஒருங்கு சேர்ந்து சுவாலிக்க நின் றார்கள். (95)

நின்றிடு முனிவர் யாரு நெருப்பெழ விழித்துச் செம்பொற்
குன்றுறழ் முலையி னார்தங் குழுவினைக் கூவி யார்பின்
சென்றிடு கின்றீர் கற்பின் செய்கைய திகந்தீ ரிங்ஙன்
பொன்றுத லழகி தன்றேற் போமினும் புரியி னென்றார்.

நின்றிடு முனிவர் யாரும்—அவ்வாறு நின்ற முனிவர்களெல்லாம், நெருப்பு எழ விழித்து—அழல் எழ நோக்கி, செம் பொன் குன்று உறழ் முலையினார் தம் குழுவினைக் கூவி—செம்மையாகிய பொன் மலைபோன்ற தனங்களையுடைய பெண்கள் கூட்டத்தை அழைத்து, யார்பின் சென்றிடுகின்றீர்—நீவிர் யாருக் குப் பின்னே போகின்றீர்கள் ; கற்பின் செய்கையது இகந்தீர்—கற்பினாற் செய் யக்கடவதனைச் செய்யாதொழிந்தீர் ; இங்ஙன் பொன்றுதல் அழகிது—நீவிர் இவ்விடத்தில் இக்கணமே இறந்துபடுதல் நன்றாம் ; அன்றேல்—அது கூடா தானால், நும் புரியின் போமின் என்றார்—நும் மிருப்பிடத்துக்குப் போங்கள் என்று கடிந்து கூறினார்கள். (96)

இத்திற மாதர் கேளா வீங்கிவர் தம்மைக் கண்டோர்
முத்தரா யுறுவ தன்றி முடிவரோ முனிவர் தாமும்
பித்தர்கொ லென்றே யன்னான் பிறங்குரு வினையுட் கொண்டு
நித்தன தருளான் மீண்டு நீணக ரிருக்கை புக்கார்.

இத்திறம் மாதர் கேளா—இம் முனிவர்களின் போக்கை அவர்கள் மொழியால் அப்பெண்கள் கேட்டறிந்து, ஈங்கு இவர் தம்மைக் கண்டோர்—இவ்விடத்தில் இப் பிக்ஷாடனரைத் தரிசித்தவர்கள், முத்தராய் உறுவது அன்றி—சீவன்முத்தர்களா யிருப்பதன்றி, முடிவரோ—வீணே இறந்துபடுவார்களா; முனிவர் தாமும் பித்தர் கொல் என்று—இந்த முனிவர்கூடப் பித்தராயினரோ என்றிரங்கி, அன்னோன் பிறங்கு உருவினை உட்கொண்டு—அந்தப் பிக்ஷாடனரின் பிரகாசிக்கின்ற திருவுருவத்தை உள்ளே தியானித்துக் கொண்டு, நித்தனது அருளால் மீண்டு—நித்தியராகிய அப்பெருமானின் திருவருளினாலே அவ்விடத்தினின்றுந் திரும்பி, நீள் நகர் இருக்கை புக்கார்—நீண்ட தமது நகரிலுள்ள இருப்பிடங்களை அடைந்தார்கள். (97)

நீணகர் புகுந்த பின்னர் நேரிழை மகடூஉ வாகித்
தாணுவி னயலி னின்ற தண்டுள வலங்கற் புத்தே
ளாணுவி னுருவு கொண்டா னருளினா லனைய தன்மை
காணிய விரிஞ்ச னாதிக் கடவுளர் யாரும் வந்தார்.

நீள் நகர் புகுந்த பின்னர்—பெண்கள் நீண்ட தமது நகரத்தை அடைந்த பின்பு, நேரிழை மகடூஉ ஆகி—நுண்ணிய ஆபரணங்களை யணிந்த பெண்வடிவமாகி, தாணுவின் அயலில் நின்ற—அசைவற்றவராகிய சிவபெருமானுக்குப் பக்கத்தில் நின்ற, தண் துளவு அலங்கல் புத்தேள்—தண்ணிய துளவமாலையை அணிந்த திருமால், அருளினால் ஆண் உருவு கொண்டான்—சிவபெருமானது திருவருளினாலே தமது ஆண்வடிவத்தைக் கொண்டார்; அனைய தன்மை காணிய—அங்கு நிகழ்ந்த அவ்வாறாய தன்மையைக் காணும்பொருட்டு, விரிஞ்சன் ஆதிக் கடவுளர் யாரும் வந்தார்—பிரமதேவர் முதலிய தேவர்கள் அனைவரும் வந்தார்கள்.

உ, இன் சாரியை. (98)

கடவுளர் யாரும் வந்த காலையி லங்க ணின்ற
முடிவறு முதல்வன் றன்னை முனிவொடு நோக்கி யீண்டுக்
கொடியதோர் வேள்வி யாற்றிக் கொல்லுது மிவனை யென்னா
மடமைகொண் முனிவர் சூழ்ந்து மற்றொர்தீ மகத்தைச் செய்தார்.

கடவுளர் யாரும் வந்த காலையில்—தேவர்கள் யாவரும் வந்த சமயத்தில், அங்கண் நின்ற—அவ்விடத்தில் அவர்கள் தரிசிக்கும்படி நின்றருளிய, முடிவறு முதல்வன் தன்னை முனிவொடு நோக்கி—அந்தமில்லாத அநாதியாகிய சிவபெருமானைக் கோபத்தோடு பார்த்து, ஈண்டு கொடியது ஓர் வேள்வி ஆற்றி—இவ்விடத்திற் கொடியதொரு அபிசாரக யாகத்தைச் செய்து, இவனைக் கொல்லுதும் என்னா—இந்தச் சிவனைக் கொல்லுவோம் என்று, மடமைகொள் முனிவர் சூழ்ந்து—அறியாமையை மேற்கொண்ட முனிவர்கள் ஆலோசித்து, ஓர் தீ மகத்தைச் செய்தார்—கொடியதொரு யாகத்தைச் செய்தார்கள்.

அபிசாரகம்—கொல்லச் செய்வது; அபிசாரம் எனவும் வழங்கும். (99)

எள்ளுதற் குரிய வேள்வி யெரியத னிடையே யாரு
முள்ளுதற் கரிய தோற்றத் துருமிடிக் குரல பேழ்வாய்த்
தள்ளுதற் கரிய சீற்றத் தழல்விழித் தறுகட் செங்கால்
வள்ளுகிர்ப் புலியொன் றம்மா வல்லையி னெழுந்த தன்றே.

எள்ளுதற் குரிய வேள்வி எரி அதனிடை—இகழுதற்குரிய அந்த யாகாக்கினி யிடத்து, யாரும் உள்ளுதற்கரிய தோற்றம்—எவரும் நினைத்தற்கரிய உருவத்தையும், உரும் இடிக் குரல பேழ்வாய்—இடியின் இடிக்கின்ற குரலினையுடைய பிளந்த வாயினையும், தள்ளுதற் கரிய சீற்றம்—விலக்குதற்கரிய கோபத்தையும், தழல் விழி—அக்கினி காலுங் கண்ணையும், தறுகண்—தறுகண்மையையும், செங் கால்—சிவந்த காலையும், வள் உகிர்—கூரிய நகத்தையுமுடைய, புலி ஒன்று வல்லையின் எழுந்தது—ஒரு புலி விரைந்தெழுந்தது.

தோற்றம்+அத்து=தோற்றத்து. அத்து, சாரியை. வேள்வி எள்ளுதற்கரிய தாயினும் ஈண்டுச் சிவாபராதத்ததாதலின் எள்ளுதற் குரியதாயிற்று. (100)

எழுதரு புலியை நோக்கி யீசனை முடித்தி யென்றே
தொழுதனர் விடுப்ப வாங்கே துண்ணென வருத லோடு
மழல்விழிப் பரம னேர்போ யங்கையா லுரித்து மற்றவ்
வுழுவையந் தோலை முன்ன முடுத்தனன் றானை யொப்ப.

எழு தரு புலியை நோக்கி—யாகாக்கினியி லெழுந்த புலியைப் பார்த்து, ஈசனை முடித்தி என்று தொழுதனர் விடுப்ப—நீ சிவனைக் கொல்வாயாக என்று வணங்கி விடுப்ப, ஆங்கு துண்ணென வருதலோடும்—சிவபெருமான் நிற்கின்ற அவ்விடத்துக்கு அப்புலி விரைந்து வர, அழல் விழிப் பரமன் நேர் போய்—அக்கினிக் கண்ணரான சிவபெருமான் எதிரே சென்று, அம் கையால் உரித்து—அப் புலியை அழகிய திருக்கையால் உரித்து, அ உழுவை அம் தோலை—அப் புலியின் அழகிய தோலை, தானை ஒப்ப முன்னம் உடுத்தனன்—வஸ்திரமாக முதற்கண் உடுத்தருளினார்.

முனிவர்களின் முனைப்பு முதற்கண் இங்ஙனமாயிற்று. (101)

இங்கிது போய பின்றை யிறுதிசெய் கணிச்சி யொன்று
செங்கன லிடையிற் றோன்றித் தீயவர் விடுப்ப வேகிச்
சங்கரன் றனது முன்னஞ் சார்தலு மதனைப் பற்றி
யங்கையி லேந்தி நீநம் மடுபடை யாதி யென்றான்.

இங்கு இது போய பின்றை—இங்கு இப்புலி இவ்வாறு ஒழிந்தபிறகு, இறுதி செய் கணிச்சி ஒன்று—இறுதியைச் செய்யும் மழு ஒன்று, செம் கனலிடையில் தோன்றி—சிவந்த யாகாக்கினியின்கண்ணே தோன்றி, தீயவர்

விடுப்ப ஏகி—தீயோராகிய முனிவர்கள் விடுப்பச் சென்று, சங்கரன் தனது முன்னம் சார்தலும்—சங்கரராகிய சிவபெருமா னெதிரே வருதலும், அதனைப் பற்றி அங்கையில் ஏந்தி—அந்த மழுவைப் பிடித்துத் திருக்கையிலேந்தி, நீ நம் அடு படை ஆதி என்றான்—நீ நம்முடைய அடுந்தொழிற்குரிய படை யாவாய் என்று பணித்தருளினர். (102)

பின்னுற வொருமா னங்கட் பிறந்தது முனிவ ரெல்லா
மன்னதை யரன்பா லுய்ப்ப வந்தரத் தெழுந்து பாய்ந்து
தன்னெடுங் குரலால் வல்லே சராசரம் வீட்டிச் செல்ல
முன்னவ னுயிர்க ளற்றான் முடிவுறு தருட்கண் வைத்தான்.

பின்னுற ஒரு மான் அங்கண் பிறந்தது—பின்னர் ஒரு மான் அந்த யாக குண்டத்திலே தோன்றியது; முனிவர் எல்லாம்—முனிவர் யாவரும், அன்னதை அரன்பால் உய்ப்ப—அந்த மானைச் சிவபெருமானிடம் விடுப்ப, அந்தரத்து எழுந்து பாய்ந்து—அது ஆகாயத்தில் எழுந்து பாய்ந்து, தன் நெடும் குரலால் வல்லே சராசரம் வீட்டிச் செல்ல—தனது நெடிய குரலினால் விரைந்து சரா சரங்களை அழித்துச் செல்ல, முன்னவன்—சிவபெருமான், அற்றால்—அத் தன்மைத்தாகிய மானால், உயிர்கள் முடிவுறுது—உயிர்கள் இறந்துபடாமல், அருட்கண் வைத்தான்—கிருபாநோக்கஞ் செய்தருளினர். (103)

மற்றதன் பின்றை யெந்தை மான்பிணை யதனை நோக்கித்
தெற்றென விளித்து நந்தஞ் செவியினுக் கணித்தாய் மேவி
நிற்றலுங் கூவு கென்றே நீடருள் செய்து வாமப்
பொற்றடங் கையிற் பற்றிப் பொருக்கென வேந்தி நின்றான்.

அதன் பின்றை—கிருபாநோக்கஞ் செய்தருளிய பிறகு, எந்தை—எம் பெருமான், மான் பிணை அதனை நோக்கி—அந்த மான்மறியைப் பார்த்து, தெற் றென விளித்து—விரைந்தழைத்து, நம் தம் செவியினுக்கு அணித்தாய் மேவி— நமது செவிக்கு அணிமைக்கண்ணதாய் நின்று, நிற்றலும் கூவுக என்று நீடு அருள் செய்து—நித்தலுங் கூவுக என்று நீண்ட அருள் புரிந்து, வாமம் பொன் தடம் கையிற் பற்றி—அழகிய இடத்திருக்கரத்தாற் பிடித்து, பொருக் கென ஏந்தி நின்றான்—விரைவாக ஏந்திநின்றருளினர். (104)

ஏந்திய பின்னர் வேள்வி யெரியழற் கிடையே யெண்ணில்
பாந்தளங் கெழுந்து தீயோர் பணியினுற் சீற்றத் தோடும்
போந்தன வவற்றை மாயோன் புள்ளினுக் கஞ்சித் தன்பாற்
சேர்ந்திடு பணிக ளோடுஞ் செவ்விதிற் புனைந்தா னெங்கோன்.

ஏந்திய பின்னர்—மான்மறியை ஏந்திய பிறகு, வேள்வி எரி அழற்கு இடை—எரிகின்ற வேள்வித்தீயினிடத்து, எண்ணில் பாந்தள் அங்கு எழுந்து—அளவற்ற பாம்புகள் அங்கே தோன்றி, தீயோர் பணியினல்—கொடிய அம் முனிவர்களின் கட்டளையால், சீற்றத்தோடும் போந்தன—கோபத்தோடுஞ் சென்றன; அவற்றை—அந்தப் பாம்புகளை, மாயோன் புள்ளினுக்கு அஞ்சி—திருமாலின் கருடப் பறவைக்குப் பயந்து, தன்பால் சேர்ந்திடும் பணிகளோடும்—முன்னமே தம்மிடஞ் சரண்புகுந்த பாம்புகளோடும் ஒன்றுசேர, எங்கோன் செவ்விதின் புனைந்தான்—எம்பெருமான் செப்பமாக அணிந்தருளினர். (105)

பணியெலாம் பணிய தாகிப் பரனிடைத் திகழப் பின்ன
ரணிகெழு கனலி னுப்ப ணசனிக ளெழுந்தா லென்னக்
கணிதமில் பூத வெள்ளங் கதுமென வெழலு நீவிர்
மணிகிளர் மிடற்றோன் வன்மை மாற்றுதி ரென்றே யுய்த்தார்.

பணி எலாம் பணியது ஆகிப் பரனிடைத் திகழ—பாம்புகளனைத்தும் ஆபரணமாய்ச் சிவபெருமானிடத்து விளங்க, பின்னர்—அதன் பின்பு, அணி கெழு கனலின் நாப்பண்—மந்திராதிகளால் அழகு கெழுமிய அக்கினியின் நடுவே, அசனிகள் எழுந்தால் என்ன—இடிகள் தோன்றினற் போல, கணிதமில் பூத வெள்ளம் கதுமென எழலும்—அளவற்ற பூதவெள்ளம் விரைந்து தோன்ற, நீவிர்—நீங்கள், மணிகிளர் மிடற்றோன் வன்மை—நீலமணிபோல விளங்குகின்ற கண்டத்தையுடைய சிவபெருமானுடைய வன்மையை, மாற்றுதிர் என்று உய்த்தார்—நீக்குங்கள் என்று விடுத்தார்கள். (106)

ஆரிட ரேவல் போற்றி யண்டமுந் துளங்க வார்த்துச்
சாரதர் வருத லோடுஞ் சங்கர னவரை நோக்கி
நீரெமை யகன்றி டாது நிற்றலுந் தானை யாகிச்
சேருதி ரென்று னுற்றோர் தீவினை தீர்க்க வல்லான்.

ஆரிடர் ஏவல் போற்றி—முனிவர்களின் கட்டளையைப் பேணி, அண்டமும் துளங்க ஆர்த்து—அண்டமும் நடுங்க ஆரவாரஞ் செய்து, சாரதர் வருதலோடும்—பூதர்கள் தம்மேல் வர, உற்றோர் தீவினை தீர்க்க வல்லான் சங்கரன் அவரை நோக்கி—தம்மை யடைந்தாரது தீவினையை நீக்க வல்லாராகிய சங்கரர் அப் பூதர்களைப் பார்த்து, நீர் எமை அகன்றிடாது—நீவிர் எம்மை விட்டு விலகாமல், நிற்றலும் தானையாகிச் சேருதிர் என்றான்—எப்பொழுதும் எமது சேனையாகி இருத்திர் என்று பணித்தருளினர். (107)

ஆற்றல் சேர் பூதர் யாரு மாதியீ துரைப்ப வன்னுற்
போற்றியே தானை யாகிப் புடையுற நிற்ற லோடுஞ்
சீற்றமா முனிவர் வேள்வித் தீயில்வெண் டலைதா னென்று
தோற்றியே யுலகம் யாவுந் தொலையநக் கெழுந்த தன்றே.

ஆற்றல் சேர் பூதர் யாரும்—வலியமைந்த பூதர்கள் யாவரும், ஆதி ஈது உரைப்ப—ஆதியாகிய சிவபெருமான் இவ்வாறு பணிப்ப, அன்னுற் போற்றி—அப் பெருமானைத் துதித்து, தானையாகிப் புடையுற நிற்றலோடும்—சேனையாகி அவருக்குப் பக்கத்தே பொருந்தி நிற்க, சீற்ற மா முனிவர் வேள்வித் தீயில் வெண்தலை தான் ஒன்று தோற்றி—சீற்றத்தாற் பெரிய முனிவர்களின் யாகத் தீயில் வெண்டலை ஒன்று தோன்றி, உலகம் யாவும் தொலைய நக்கு எழுந்தது—உலகம் முழுவதும் அழியுமாறு சிரித்துக்கொண் டெழுந்தது. (108)

நக்கெழு சிரத்தை யன்னோர் நாதன்மேல் விடுத்த லோடு
மக்கண மணுக வற்று லகிலம திறவா வண்ண
முக்கண னருள்செய் தந்த முண்டமுண் டகக்கை பற்றிச்
செக்கரஞ் சடைமேற் கொண்டுன் செயலினைப் புரிதி யென்றான்.

நக்கு எழு சிரத்தை—சிரித்தெழுந்த வெண்டலையை, அன்னோர் நாதன் மேல் விடுத்தலோடும்—அம்முனிவர்கள் சிவபெருமான்மேலே விடுக்க, அ கணம் அணுக—அந்தக் கணமே அவ்வெண்டலை சிவபெருமானை அணுக, அற்றால் அகிலமது இறவாவண்ணம்—அவ் வெண்டலையால் உலகம் அழியாத பிரகாரம், முக்கணன் அருள் செய்து—சிவபெருமான் அருள்புரிந்து, அந்த முண்டம் முண்டகக் கை பற்றி—அந்த வெண்டலையைத் தாமரை மலர்போன்ற திருக்கரத்தாற் பற்றி, செக்கர் அம் சடை மேல் கொண்டு—செவ்வானம் போன்ற அழகிய சடையிலே தரித்து, உன் செயலினைப் புரிதி என்றான்—உன் செயலைச் செய்குதி என்று அருளிச்செய்தார். (109)

அறுகுறை முடிமேற் கொண்ட வமலனை நோக்கி நோக்கி
மறுகிய முனிவர் தத்தம் வாய்மைமந் திரங்க ளேவி
யிறுதிசெய் திடுதி ரென்ன வினையவை துடியொன் றாகிச்
செறிதரு புவனம் யாவுஞ் செவிடுற வொலித்த தன்றே.

அறு குறை முடிமேல் கொண்ட அமலனை நோக்கி நோக்கி—அற்ற உடற் குறையாகிய வெண்டலையை முடிமீது கொண்ட சிவபெருமானைப் பார்த்துப் பார்த்து, மறுகிய முனிவர்—கலங்கிய முனிவர்கள், தத்தம் வாய்மை மந்திரங்கள் ஏவி—தங்கள் தங்களுக்குப் பலிதமாகிய மந்திரங்களை ஏவி, இறுதி செய்திடுதிர் என்ன—அழியுங்கள் என்று அபிமந்திரிக்க, இனையவை துடி ஒன்று ஆகி—இம்மந்திரங்கள் ஓர் உடுக்கையாகி, செறிதரு புவனம் யாவும் செவிடு உற ஒலித்தது—செறிந்த புவனங்கள் முழுவதுஞ் செவிடுபடும்படி ஒலித்தது. (110)

பொருவருந் துடியி னோதை பொம்மெனக் கேட்ட லோடுந்
தரணியின் வானி னுள்ள சராசரம் யாவு மீச
னருளினல் வீடிற் றில்லை யசனியி னார்ப்புக் கேட்ட
வுரகர்தங் குலங்க ளென்ன வொய்யென மயங்கிற் றன்றே.

பொரு அரும் துடியின் ஓதை பொம்மெனக் கேட்டலோடும்—ஒப்பற்ற உடுக்கையின் ஒலி விரைந்து கேட்டவுடன், தரணியின் வானின் உள்ள சரா சரம் யாவும்—மண்ணுலகிலும் விண்ணுலகிலும் உள்ள சராசரங்கள் அனைத்தும், ஈசன் அருளினால் வீடிற்றில்லை—சிவபெருமானுடைய திருவருளினாலே இறந்ததில்லை யாயினும், அசனியின் ஆர்ப்புக் கேட்ட உரகர் தம் குலங்கள் என்ன—இடியேற்றி னோசை கேட்ட சர்ப்பங்களின் கூட்டம்போல, ஒய்யென மயங்கிற்று—விரைந்து மயக்கங்கொண்டன.

தொகுதியொருமைபற்றி மயங்கிற்று என்றார். (111)

அத்துடி யார்த்துச் செவ்வே யமலன்முன் னணுக மற்றைக்
கைத்தல மதனிற் பற்றிக் கறங்குதி கன்னத் தென்று
வித்தக மரபில் யாரும் வியப்புற வேந்தி நின்றா
னித்திறம் யாரே செய்வா ரென்றனர் முனிவ ரெல்லாம்.

அ துடி யார்த்துச் செவ்வே அமலன் முன் அணுக—அவ்வுடுக்கை ஆரவாரஞ் செய்துகொண்டு நேரே சிவபெருமானுக்கு எதிரே வர, மற்றைக் கைத்தலம் அதனில் பற்றி—மற்றையதொரு திருக்கரத்தினா லதனைப் பற்றி, கன்னத்துக் கறங்குதி என்று—நமது காதில் ஒலித்துக்கொண் டிருக்குதி என்று, வித்தக மரபில்—சாதுரியமாயதொரு முறையில், யாரும் வியப்பு உற—யாவரும் வியக்க, ஏந்தி நின்றான்—அவ்வுடுக்கையை ஏந்தியருளினார்; முனிவர் எல்லாம்—முனிவர்களெல்லாம், இத்திறம் யாரே செய்வார் என்றனர்—இவ்வாறு யாவர் தாம் செய்யவல்லா ரென்று வியப்புற்றனர்.

சாதுரியம்—சாமர்த்தியம். (112)

இனையது கண்டு பின்னு மிறுதிசெய் யிறைவற் கின்றா
லனையதென் றறித றேற்றா ரடுசினங் கடவத் தொல்லூழ்
வினையது விளைவாற் பின்னும் வேள்வியை யியற்ற லுற்றார்
முனிவரர் கனற்க ணேயோர் முயலக னெழுந்த தன்றே.

இனையது கண்டு பின்னும்—இச் செயலினைக் கண்டதன் மேலும், இறுதி செய் இறைவற்கு—சர்வ சங்கார கருத்தாவாகிய சிவபெருமானுக்கு, அனையது இன்று என்று அறிதல் தேற்றார்—அவ்விறுதி இல்லையா மென்று அறியாராய், அடு சினம் கடவ—அடுகின்ற கோபம் பிடர்பிடித்துந்த, தொல் ஊழ் வினையது விளைவால்—பழைய ஊழ்வினையின் விளைவினால், பின்னும் வேள்வியை முனிவரர் இயற்றலுற்றார்—மேலும் யாகத்தை அந்த முனிவரர்கள் செய்தார்கள், கனற்கண் ஓர் முயலகன் எழுந்தது—யாகாக்கினியின்கண் முயலகன் என்பதொரு பூதந் தோன்றியது. (113)

முயலகன் றன்னை நோக்கி முகமனுஞ் சொற்றுத் தங்கள்
செயலகன் றிருந்த வேள்வித் தீயையும் விளித்து நந்த
மியலகன் றிடவே செய்த வீசனை முடித்தி ரென்றே
மயலகன் றிலாதா ருய்ப்ப வல்விரைந் தணைந்த வம்மா.

முயலகன் தன்னை நோக்கி—முயலகனைப் பார்த்து, முகமனும் சொற்று—உபசாரவார்த்தையுங் கூறி, தங்கள் செயல் அகன்று—தமது யாகஞ் செய்யுஞ் செயலையும் விடுத்து, இருந்த வேள்வித் தீயையும் விளித்து—ஆண்டிருந்த யாகாக்கினியையும் அழைத்து, நம் தம் இயல் அகன்றிட செய்த ஈசனை முடித்திர் என்று—நமது நிலையை நீங்கச் செய்த சிவனைக் கொல்லுதிர் என்று கூறி, மயல் அகன்றிலாதார் உய்ப்ப—மயக்கம் நீங்காதவர்களாகிய முனிவர்கள் செலுத்த, வல் விரைந்து அணைந்த—அவைகள் மிக விரைந்து சிவபெருமானை அணுகின. *(114)*

வன்னியந் தேவு முட்க வந்திடு கனலை யார்க்கு
முன்னவ னொருகை யேந்தி முயலகன் றன்னை மெல்லத்
தன்னடி யதனுல் வீழத் தள்ளியக் கமலத் தாளை
வென்னிடை யருளா லூன்றி விண்ணவர் போற்ற நின்றான்.

வன்னி அம் தேவும் உட்க வந்திடு கனலை—அக்கினிதேவனும் அஞ்சுமாறு வந்த யாகாக்கினியை, யார்க்கும் முன்னவன் ஒரு கை ஏந்தி—எவர்க்கும் முதல்வராகிய சிவபெருமான் ஒரு திருக்கரத்தில் ஏந்தி, முயலகன் தன்னை தன் அடி அதனுல் வீழ மெல்லத் தள்ளி—முயலகனைத் தமது பாதத்தால் வீழும்படி மெல்லெனத் தள்ளி, அ கமலத் தாளை—தள்ளிய அந்தத் தாமரை மலர் போன்ற பாதத்தை, அருளால் வென்னிடை ஊன்றி—திருவருளினுல் அதன் முதுகில் ஊன்றி, விண்ணவர் போற்ற நின்றான்—தேவர்கள் துதிக்க நின்றருளினர். *(115)*

நிற்றலு மதனைத் தீயோர் நெருப்பெழ விழியா வின்னு
முற்றனன் பரம னந்தோ வுஞற்றியா முய்த்த வெல்லா
மிற்றன கொல்லோ வென்றே யிரங்கியே யெண்ணில் சாபஞ்
சொற்றன ருலக மெல்லாந் தொலைப்பவன் றெலைய வென்றே.

நிற்றலும்—முயலகன்மீது பாதத்தை ஊன்றி நின்றருளுதலும், அதனை தீயோர் நெருப்பு எழ விழியா—அச் செயலைத் தீயோராகிய முனிவர்கள் நெருப்பெழப் பார்த்து, அந்தோ—ஐயகோ!, இன்னும் பரமன் உற்றனன்—இன்னமுஞ் சிவன் இறவாதிருந்தனன்; யாம் உஞற்றி உய்த்த எல்லாம் இற்றன கொல்—யாம் உண்டாக்கி விடுத்தன யாவும் அழிந்துபட்டன

போலும்; என்று இரங்கி—என்று கூறி இரங்கி, உலகமெல்லாம் தொலைப்பவன் தொலைய என்று—உலகமனைத்தையும் அழிப்பவன் அழிக என்று, எண்ணில் சாபம் சொற்றனர்—அளவற்ற சாபங்களைச் சொன்னார்கள். (116)

சங்கையின் முனிவர் யாருஞ் சாற்றிய சாபம் யாவு
மெங்கடம் பெருமான் முன்னு மெய்திய தில்லை யன்னோ
ரங்கவன் றன்பா லுய்க்கு மளவையி லிறுதி நாளிற்
பொங்கெரி யதன்மேற் செல்லும் பூளைபோன் மாய்ந்த வன்றே.

சங்கை இல் முனிவர் யாரும்—அளவற்ற முனிவ ரனைவரும், சாற்றிய சாபம் யாவும்—சொன்ன சாபம் அனைத்தும், எங்கள் தம் பெருமான் முன்னும் எய்தியது இல்லை—எங்கள் பெருமா னெதிரிலுஞ் சென்றதில்லை; அன்னோர் அங்கு அவன் தன் பால் உய்க்கும் அளவையில்—அம்முனிவர்கள் அவ்விடத்திற் சிவபெருமான்மீது சாபஞ் சொல்லும்போதே, இறுதி நாளில் பொங்கு எரி அதன்மேல் செல்லும் பூளைபோல்—சங்கார காலத்திற் சுவாலிக்கின்ற அக்கினிமீது இடும் பஞ்சு போல, மாய்ந்த—அச்சாபங்கள் அழிந்தன. (117)

சாபமும் பயனின் றாகத் தவத்தர்கள் யாருங் கொண்ட
கோபமு நீங்கி யாற்றல் குறைந்தொரு செயலு மின்றிச்
சோபமு நாணுங் கொண்டு துளங்கியே தொலைவி லாத
பாபமும் பழியும் பூண்டு படிக்கொரு பொறையாய் நின்றார்.

சாபமும் பயன் இன்று ஆக—தாமிட்ட சாபமும் பயனற்றதாக, தவத்தர்கள் யாரும் கொண்ட கோபமும் நீங்கி—முனிவர்கள் அனைவருந் தாம் கொண்ட கோபமுந் தணிந்து, ஆற்றல் குறைந்து—வலியிழந்து, ஒரு செயலும் இன்றி—யாதொரு செயலுமில்லாமல், சோபமும் நாணும் கொண்டு—வாட்டமும் நாணமுங் கொண்டு, துளங்கி—நடுங்கி, தொலைவிலாத பாவமும் பழியும் பூண்டு—தொலையாத பாவமும் பழியுஞ் சுமந்து, படிக்கு ஒரு பொறையாய் நின்றார்—பூமிக்கு ஒரு சுமையாய் வாளா நின்றார்கள். (118)

ஏற்றமின் முனிவர் தங்க ளேழைமை தனையென் னென்று
சாற்றுது மிறுதி யில்லாத் தாணுவை முடிப்பான் வேள்வி
யாற்றினர் பலவு முய்த்தா ரறைந்தனர் சாப மற்றான்
மாற்றிட வற்றோ தங்கள் வன்மையு மிழந்தார் மாதோ.

ஏற்றமில் முனிவர் தங்கள் ஏழைமை தனை—உய்வில்லாத முனிவர்களின் ஏழைமைத்தன்மையை, என் என்று சாற்றுதும்—என்ன என்று உரைப்போம்; இறுதி இல்லாத் தாணுவை—என்றும் அழிவில்லாத அசைவற்ற பரம்பொருளை, முடிப்பான் வேள்வி ஆற்றினர்—அழிக்கும்பொருட்டு வேள்வி

செய்தார்கள்; பலவும் உய்த்தார்—பலவற்றையும் ஏவினார்கள்; சாபம் அறைந்தனர்—சாபமிட்டார்கள்; அற்றால் மாற்றிட வற்றோ—அவ்வாற்றால் அழித்தல் கூடுவதாமோ; தங்கள் வன்மையும் இழந்தார்—தங்கள் செயலாலே தங்கள் வன்மையையும் இழந்தார்கள். (119)

கடுக்கையு நதியும் பாம்புங் கலைமதிக் கொழுந்துஞ் சென்னி
முடித்தவன் பதத்தி லூன்று முயலகன் மெல்ல மெல்ல
வெடுத்தெடுத் தசைத்த லோடு மேதுவங் கதனை நோக்கி
நடித்தன னென்று நீங்கா நடம்புரி கின்ற தேபோல்.

கடுக்கையும் நதியும் பாம்பும் கலைமதிக் கொழுந்தும் சென்னி முடித்தவன்—கொன்றையையுங் கங்கையையும் பாம்பையுங் கலையாகிய பாலசந்திரனையுஞ் சிரசில் அணிந்தவராகிய சிவபெருமான், பதத்தில் ஊன்று முயலகன்—திருவடியால் ஊன்றிய முயலகன், மெல்ல மெல்ல எடுத்து எடுத்து அசைத்தலோடும்—மெல்ல மெல்லத் தலையை எடுத்து எடுத்து அசைப்ப, அங்கு அதனை ஏது நோக்கி—அங்கு அவ்வசைப்பை ஓர் ஏதுவாகக் கொண்டு, என்றும் நீங்கா நடம் புரிகின்றது போல் நடித்தனன்—அநவரத தாண்டவம் புரிவது போல நடித்தருளினார்.

அசைப்பு வியாசமாக நடித்தனன் என்க. (120)

ஆண்டவ ணிமையா முக்க ணாதிநா யகனஞ் ஞான்று
தாண்டவம் புரித லோடுஞ் சகமெலாந் துளங்கிற் றங்க
ணீண்டிய வுயிர்க ளச்சுற் றிரங்கிய நடுக்க மெய்தி
வீண்டனர் வேள்வி செய்து வினையினை யீட்டும் வெய்யோர்.

ஆண்டு அவண் அஞ்ஞான்று—அவ்விடத்தில் அப்பொழுது, இமையா முக்கண் ஆதி நாயகன்—இமையாத மூன்று கண்களையுடைய முதல்வராகிய சிவபெருமான், தாண்டவம் புரிதலோடும்—திருநடனஞ் செய்ய, சகம் எலாம் துளங்கிற்று—உலகம் அனைத்தும் நடுங்கியது; அங்கண் ஈண்டிய உயிர்கள் அச்சுற்று இரங்கிய—அவ்விடத்துச் செறிந்த உயிர்கள் அஞ்சி இரங்கின; வேள்வி செய்து வினையினை ஈட்டும் வெய்யோர் நடுக்கம் எய்தி வீண்டனர்—யாகத்தைச் செய்து தீவினையை ஈட்டுகின்ற கொடியோரான முனிவர்கள் நடுக்கமுற்று வீழ்ந்தார்கள்.

வீழ்ந்தனர் வீண்டனர் என்றாயிற்று. (121)

நஞ்சணி கண்டத் தெந்தை நடநவில் செய்கை தன்னைக்
கஞ்சனு மாழி யானுங் கண்டுகண் களித்துப் போற்றி
நெஞ்சக மகிழ்ந்து பாங்கர் நின்றனர் மகவான் றன்னோ
டெஞ்சிய வமரர் யாரு மிறைஞ்சுவார் போல வீழ்ந்தார்.

நஞ்சு அணி கண்டத்து எந்தை நடம் நவில் செய்கைதன்னை—நஞ்சை யணிந்த கண்டத்தையுடைய எம்பெருமான் நடனஞ் செய்யுஞ் செயலினை, கஞ்சனும் ஆழியானும் கண்டு—பிரமாவுந் திருமாலுந் தரிசித்து, கண் களித்துப் போற்றி—கண்களித்துத் துதித்து, நெஞ்சகம் மகிழ்ந்து பாங்கர் நின்றனர்—மனமகிழ்ந்து பக்கத்திற் சென்று நின்றார்கள்; மகவான் தன்னோடு எஞ்சிய அமரர் யாரும்—இந்திரனும் மற்றைத் தேவர்கள் யாவரும், இறைஞ் சுவார் போல வீழ்ந்தார்—வணங்குபவரைப்போல வீழ்ந்தார்கள்.

நிற்ற லாற்றுமையான் வீழ்ந்தார் என்க. எஞ்சுதல் அஞ்சுதலுமாம்.

(122)

அருளொடு நிருத்தஞ் செய்யு மண்ணலிப் புவனம் யாவும்
வெருவுறு செயலும் வீழும் விண்ணவ ரயர்வு நோக்கித்
திருநட மொழிந்து நிற்பத் தேவருந் தேவர் கோனும்
பரிவுட னெழுந்து நின்று கைதொழூஉப் பாங்க ருற்றார்.

அருளொடு நிருத்தம் செய்யும் அண்ணல்—திருவருளாலே திருநிருத்தஞ் செய்யும் இறைவர், இ புவனம் யாவும்—இப் புவனம் அனைத்தும், வெரு உறும் செயலும்—அஞ்சுந் தன்மையையும், வீழும் விண்ணவர் அயர்வும் நோக்கி—வீழுகின்ற தேவர்களின் அயர்ச்சியையும் நோக்கி, திரு நடம் ஒழிந்து நிற்ப—திருநடனத்தை ஒழிந்து நிற்ப, தேவரும் தேவர்கோனும் பரிவுடன் எழுந்து நின்று—தேவர்களும் இந்திரனும் அன்போடு எழுந்து நின்று, கை தொழூஉ பாங்கர் உற்றார்—கைகூப்பி வணங்கிப் பக்கத்தே சென்று நின்றார்கள்.

(123)

மாதொர்பா கத்தோன் றன்னை மதித்திடா முனிவர்க் கெல்லாம்
போதமே யருள லோடும் பொருக்கென வெழுந்து பொல்லா
வேதமே யியற்று கின்ற வெம்பெரும் பிழைகள் யாவு
நாதநீ பொறுத்தி யென்று நடநவில் கழன்முன் வீழ்ந்தார்.

மாது ஓர் பாகத்தோன்—உமாதேவி பாகரான சிவபெருமான், தன்னை மதித்திடா முனிவர்க்கு எல்லாம்—தம்மை மதியாத முனிவர் அனைவருக்கும், போதமே அருளலோடும்—ஞானத்தைக் கொடுத்தருளுதலும், பொருக்கென எழுந்து—வீழ்ந்த அம் முனிவர்கள் விரைந்தெழுந்து, பொல்லா ஏதமே இயற்றுகின்ற—பொல்லாத குற்றத்தையே செய்கின்ற, எம் பெரும் பிழைகள் யாவும்—எமது பெரிய பிழைகள் அனைத்தையும், நாத நீ பொறுத்தி என்று—பரமபதியே தேவரீர் பொறுத்தருள்க என்று, நடம் நவில் கழல் முன் வீழ்ந்தார்—நடனஞ் செய்யுந் திருவடிகளின் எதிரில் விழுந்து வணங்கினர்கள்.

(124)

பொறுத்தியெம் பிழையை யென்றே போற்றிசெய் முனிவர் தங்க
டிறத்தினை நோக்கி நந்தஞ் செந்நெறி யொழுகித் தீய
மறத்தினை யகற்றி மேலை மாதவம் புரிதி ரென்று
நிறுத்தின னடையா தார்க்கு நீடருள் புரியு நித்தன்.

எம் பிழையைப் பொறுத்தி என்று—எங்கள் குற்றங்களைப் பொறுத் தருள்க என்று, போற்றி செய் முனிவர் தங்கள் திறத்தினை—துதிசெய்கின்ற முனிவர்களின் செய்கையை, அடையாதார்க்கும் நீடு அருள் புரியும் நித்தன்—பகைவர்க்கும் மிக்க திருவருள் புரியும் பரம கருணாநிதியாகிய சிவபெருமான், நோக்கி—திருநோக்கஞ் செய்து, நம் தம் செம் நெறி ஒழுகி—நமது செம்மை யாகிய வைதிக சைவ நெறியில் ஒழுகி, தீய மறத்தினை அகற்றி—கொடிய மறச் செயல்களை விடுத்து, மேலை மா தவம் புரிதிர் என்று—மேலாகிய பெரிய தவத்தைச் செய்யுங்கள் என்று ஆஞ்ஞை செய்து, நிறுத்தினன்—அம்முனிவர் களை அவ்விடத்தி லிருக்கும்படி நிறுத்தியருளினர். (125)

முனிவரை நிறுவி யங்கண் முக்கணன் மீண்டு வெள்ளிப்
பனிவரை யேகி மாலும் பங்கயத் தவனும் வானோ
ரனைவருந் தத்தம் பாலி லடைந்திட வருளி யம்பொற்
புனையிழை யுமையி னோடும் பொருந்திவீற் றிருந்தா னன்றே.

முனிவரை அங்கண் நிறுவி—முனிவர்களை அங்கே நிறுத்தி, முக்கணன் மீண்டு—மூன்று கண்களையுடைய சிவபெருமான் அவ்விடத்தினின்றும் மீண்டு, வெள்ளிப் பனிவரை ஏகி—குளிர்ச்சி பொருந்திய வெள்ளிமலையாகிய திருக் கைலையை அடைந்து, மாலும் பங்கயத்தவனும் வானோர் அனைவரும்—திருமாலும் பிரமாவுந் தேவர்க ளனைவரும், தத்தம் பாலில் அடைந்திட அருளி—தத்தம் இடங்களுக்குச் செல்லும்படி அநுக்கிரகஞ் செய்து, அம் பொன் புனை இழை உமையினோடும் பொருந்தி வீற்றிருந்தான்—அழகிய பொன் னாபரணம் புனைந்த உமாதேவியாரோடுங் கலந்து வீற்றிருந்தருளினர். (126)

உரித்திடு முழுவை வன்றோ லுரிமுத லுள்ள வெல்லாந்
தரித்தது மெங்க ணாதன் றாருகா வனத்தி லன்று
நிருத்தம தியற்றி நின்ற நீர்மையும் பிறவு மெல்லாம்
விரித்திவ ணுரைத்தாங் கேட்டி மேலது மியம்பு கின்றாம்.

உரித்திடும் உழுவை வன் தோல் உரி முதல் உள்ள எல்லாம்—உரிக்கப் படுகின்ற புலியின் வலிய தோல் முதலாக உள்ளவைகளையெல்லாம், எங்கள் நாதன் தரித்ததும்—எமதிறைவராகிய சிவபெருமான் தரித்ததனையும், தாருகா வனத்தில் அன்று நிருத்தமது இயற்றி நின்ற நீர்மையும்—தாருகா வனத்திலே அந்நாள் திருநிருத்தஞ் செய்து நின்ற தன்மையையும், பிறவும்—பிறவற்றை யும், இவண் விரித்து எல்லாம் உரைத்தாம்—இவ்விடத்தில் விரித்து எல்லாம்

சொன்னேம்; மேலதும்—இனிமேல் உரைக்க நின்றதனையும், இயம்புகின்றும் கேட்டி—உரைப்போம் கேட்பாயாக.

தோல் உரி—தோலாகிய உரி; ஒருபொருட் பன்மொழி. மேலது, 'தந்தியின் புன்றேல் வலியதன்புயம் போர்க்குமோ' என முன் வினவியதால், உரைக்க நின்ற கதை யென்க. (127)

## வேறு

துங்க மால்கரி யாக்கையி னுலகெலாந் தொலைக்கும்
வெங்க யாசுர னென்பவன் மேருவின் மிசைபோய்ப்
பங்க யாசனற் போற்றிசெய் தருந்தவம் பயில
வங்க ணுடியே தோன்றின னுலகெலா மளித்தோன்.

துங்க மால் கரி யாக்கையின்—பெரிய மயக்கம் பொருந்திய யானையின் உருவத்தினையுடைய, உலகெலாம் தொலைக்கும்—உலகம் முழுவதையும் அழிக்கின்ற, வெம் கயாசுரன் என்பவன்—கொடிய கயாசுரன் என்பவன், மேருவின் மிசை போய்—மேருமலைக்கட் சென்று, பங்க யாசனற் போற்றிசெய்து அருந் தவம் பயில—பிரமதேவரைத் துதித்து அரிய தவத்தைச் செய்ய, அங்கண் நாடி—அவ்விடத்தின்கண் அதனை யறிந்து, உலகெலாம் அளித்தோன் தோன்றினன்—உலகம் அனைத்தையும் படைத்த பிரமதேவர் தோன்றினுர். (128)

வேண்டு கின்றதென் மொழிகென நான்முகன் விளம்ப
வாண்டு நோற்றிடுங் கயாசுர னென்றனுக் கடிகேண்
மாண்டி டாதபே ராயுளு மாற்றலும் வயமு
மீண்டு நல்குதி யென்றலு நகைத்திவை யிசைப்பான்.

வேண்டுகின்றது என்—நீ விரும்புவது யாது; மொழிக என நான்முகன் விளம்ப—உரைப்பாயாக என்று பிரமதேவர் கூற, ஆண்டு நோற்றிடும் கயாசுரன்—அங்கே தவஞ்செய்யுங் கயாசுரன், அடிகேள்—தேவரீர், என் தனக்கு மாண்டிடாத பேர் ஆயுளும்—எனக்கு அழிவில்லாத நீண்ட ஆயுளும், ஆற்றலும் வயமும்—வலியும் வென்றியும், ஈண்டு நல்குதி என்றலும்—இப்பொழுது தந்தருளும் என்று வேண்டுதலும், நகைத்து இவை இசைப்பான்—பிரமதேவர் சிரித்து இவற்றைக் கூறுவார். (129)

இந்த வண்ணநீ வேண்டிய தளித்தன மிகலி
லந்தி வண்ணனேர் சென்றிடல் சேறியே லந்நாட்
சிந்து மிவ்வரங் கடைப்பிடி யீதெனச் செப்பி
யுந்தி வந்தவன் போயினன் றனதுபே ருலகில்.

நீ வேண்டியது இந்த வண்ணம் அளித்தனம்—நீ விரும்பியதை விரும்பிய வாறே தந்தோம்; இகல் இல் அந்தி வண்ணன் நேர் சென்றிடல்—ஒப்பில்லாத

அந்திவண்ணரான சிவபெருமான் எதிரிற் செல்லற்க; சேறியேல்—செல்வா யாயின், அ நாள் இ வரம் சிந்தும்—அந்நாளில் இவ்வரம் அழியும்; ஈது கடைப்பிடி எனச் செப்பி- இதனைக் கடைப்பிடிக்கக் கடவை என்று கூறி, உந்தி வந்தவன் தனது பேருலகில் போயினன்—உந்திக் கமலத்திற் பிறந்த பிரமதேவர் தமது பெரிய உலகத்துக்குச் சென்றார். (130)

அன்ன காலையிற் கயாசுர னென்பவ னயன்சொ
லுன்னி யீசன்மேற் போகல மொழிந்தவர் தம்பாற்
றுன்னி வெஞ்சம ராற்றியெவ் வுலகமுந் தொலைத்தே
யின்ன லேபுரிந் திருத்துமென் றுன்னியே யெழுந்தான்.

அன்ன காலையில்—அப்பொழுது, கயாசுரன் என்பவன் அயன் சொல் உன்னி-கயாசுரனுனவன் பிரமதேவரின் கூற்றைச் சிந்தித்து, ஈசன்மேல் போகலம்—சிவபெருமான்மீது போர் மேற்கொண்டு செல்லோம்; ஒழிந்தவர் தம்பால் துன்னி—ஏனையோரிடத்துச் சென்று, வெம் சமர் ஆற்றி—கொடும் போர் புரிந்து, எ உலகமும் தொலைத்து—எல்லா உலகங்களையும் அழித்து, இன்னலே புரிந்து இருத்தும்—துன்பமே செய்துகொண்டிருப்போம்; என்று உன்னி எழுந்தான்—என்று கருதி எழுந்தான். (131)

எழுதல் கொண்டிடு மவுணர்கோ னமரர்கள் யாருங்
குழுமி யேயமர் வான்பதந் தொறுந்தொறுங் குறுகி
வழுவி யேயவர் முரிந்திடப் பொருதுமற் றவரூர்
முழுது மட்டுமா சுவர்க்கமே லேகினன் முனிவால்.

எழுதல் கொண்டிடும் அவுணர்கோன்-போர்மேற்கொண்டு எழுகின்ற அசுரர்க் கரசனாகிய கயாசுரன், அமரர்கள் யாரும் குழுமி அமர் வான் பதம் தொறும் தொறும் குறுகி—தேவர்களெல்லாங் குழுமி வாழும் வானத்திலுள்ள பதங்கள்தோறும் பதங்கள்தோறுஞ் சென்று, வழுவி அவர் முரிந்திடப் பொருது—நிலைகெட்டு அவர்கள் தோற்றோடுமாறு போர்செய்து, அவர் ஊர் முழுதும் அட்டு—அவர்களுடைய பதங்கள் அனைத்தையும் அழித்து, மா சுவர்க்கமேல் முனிவால் ஏகினன்—பெரிய சுவர்க்கத்தின் மீது கோபத்தோடு சென்றான். (132)

போகி யோடம ராற்றியே யன்னவன் புறந்தந்
தேக வேதுரந் துயர்த்திடு நான்மருப் பியானைத்
தோகை வானுதி பற்றியே பன்முறை சுலவி
மாக யாசுர னேச்சினன் மகபதி மயங்க.

போகியோடு அமர் ஆற்றி—போகத்துக் குரியோனான இந்திரனோடு போர் செய்து, அன்னவன் புறம் தந்து ஏக துரந்து—அவ்விந்திரன் புறங்காட்டி ஓடும்படி துரத்தி, உயர்த்திடு—வாகனமாக உயர்த்திய, நால் மருப்பு யானை தோகை வால் நுதி பற்றி—நான்கு கொம்புகளையுடைய ஐராவத யானையின் தோகையாகிய வாலின் நுதியிற் பிடித்து, பன்முறை சுலவி—அதனைப் பல முறை சுற்றி, மகபதி மயங்க—இந்திரன் மயக்கங் கொள்ள, மா கயாசுரன் ஓச்சினன்—பெரிய கயாசுரன் வீசி யெறிந்தான். (133)

பின்ன ரன்னதோர் பொன்னக ரழித்தனன் பெயர்ந்து
துன்னு மெண்டிசைக் காவலர் தமையெலா ந் துரந்து
தன்னி னங்களா மவுணர்க் டம்மையுஞ் சாடி
வன்னி யஞ்சிகை யரக்கர்தங் குழுவையு மாய்த்தான்.

பின்னர்—அதன்மேல், ஓர் அன்னது பொன் நகர் அழித்தனன் பெயர்ந்து—ஒப்பில்லாததாகிய அந்தச் சுவர்க்க உலகத்தை அழித்து அவ்விடத்தினின்றும் நீங்கி, துன்னும் எண் திசைக் காவலர் தமையெலாம் துரந்து—நெருங்கிய அட்டதிக்குப் பாலகர்களைத் துரத்தி, தன் இனங்களாம் அவுணர்கள் தம்மையும் சாடி—தனது இனமாகவுள்ள அசுரர்களையுங் கொன்று, வன்னி சிகை அரக்கர்தம் குழுவையும் மாய்த்தான்—அக்கினிபோன்ற சிகையினை யுடைய இராக்கதர் கூட்டத்தையும் அழித்தான்.
அம், சாரியை. (134)

மஞ்சு நேர்தரு கயாசுரன் புவிமிசை வைகி
வெஞ்சி னங்கொடே மக்கடந் தொகையெலாம் வீட்டி
நஞ்ச மாமெனத் திரிதலு நாடிநற் றவர்க
ளஞ்சி யோடியே யரனமர் காசியை யடைந்தார்.

மஞ்சு நேர்தரு கயாசுரன்—மேகம் போன்ற கரிய கயாசுரன், புவிமிசை வைகி—பூமிக்கு வந்து அங்கே தங்கி, வெம் சினம் கொடு—கொடிய கோபங் கொண்டு, மக்கள் தம் தொகையெலாம் வீட்டி—மக்கட் கூட்டத்தை அழித்து, நஞ்சம் ஆம் எனத் திரிதலும்—ஆலகால விடம் போல எங்குஞ் சஞ்சரித் தலும், நல் தவர்கள் நாடி—நல்ல தவத்தையுடைய முனிவர்கள் அவன் செயலை உணர்ந்து, அஞ்சி ஓடி—அவனுக்குப் பயந்து ஓடி, அரன் அமர் காசியை அடைந்தார்—சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற காசி என்கின்ற புண்ணிய க்ஷேத்திரத்தை யடைந்தார்கள். (135)

அருந்த வத்தர்க ளடைதலுங் கயாசுர னவரைத்
துரந்து காசியிற் சென்றிட வனையவர் துளங்கித்
திருந்து மந்நகர் வாணர்தங் கிளையொடுஞ் செறிந்து
விரைந்து போய்மணி கன்னிகை புகுந்தனர் வெருவி.

அரும் தவத்தர்கள் அடைதலும்—அரிய தவத்தையுடைய முனிவர்கள் காசியை அடைதலும், கயாசுரன் அவரைத் துரந்து காசியில் சென்றிட—கயாசுரன் அவர்களைத் துரத்திக்கொண்டு காசிக்கட் செல்ல, அனையவர் துளங்கி—அம்முனிவர்கள் நடுங்கி, திருந்தும் அ நகர் வாணர்தம் கிளையொடும் செறிந்து—திருத்தம் பொருந்திய அந்த நகரவாசிகளாகிய கூட்டத்தோடு கலந்து, விரைந்து போய்—விரைந்து சென்று, வெருவி—அஞ்சி, மணி கன்னிகை புகுந்தனர்—மணிகர்ணிகை என்னும் ஆலயத்துட் புகுந்தார்கள். (136)

இனிது வித்திய தம்பய னீவதே யென்னத்
தனது மந்திர முடிபவர் செவியிடைச் சாற்றிப்
புனித மாயதன் னுருத்திர வடிவருள் புரியு
மனக நாயகற் பணிந்துநின் றின்னவா றறைவார்.

இனிது வித்திய—இனிதாக வித்திய வித்துக்கள், தம்பயன் ஈவது என்ன—தம்பயனை நல்குவது போல, தனது மந்திரம்—தமது மந்திரமானது, முடிபவர் செவியிடைச் சாற்றி—அங்கே இறப்பவர்களின் காதில் தம்மால் உபதேசிக்கப்பட்டு, புனிதமாய தன் உருத்திர வடிவு—புனிதமாகிய தமது உருத்திர வடிவமாகிய சாரூபத்தை, அருள் புரியும்—அவர்களுக்கு அருள்புரிதலைச் செய்கின்ற, அனக நாயகற் பணிந்து நின்று—பாவமில்லாதவராகிய விசுவநாதரை வணங்கி நின்று, இன்னவாறு அறைவார்—இவ்வாறு கூறுவார்கள்.

வித்து மரத்தை உதவுவது போல மந்திரம் உருத்திர வடிவத்தை அருளுகின்றதென்க. மந்திரம்—பஞ்சாக்கர மந்திரம்; தாரகமாகிய பிரணவம் எனினுமாம். மந்திரம் அருள்புரியும் நாயகன் என்க. மந்திரத்தின் வினையாய அருள்புரியுமென்பது நாயகன் என்பதனோடு முடிந்தது. (137)

வெய்ய தந்தியாய் வந்தொரு தானவன் விரைவில்
வைய கத்தையட் டெம்மையுங் கொல்லிய வருவா
னைய நின்னதா ளரணமென் றடைந்தன மடியே
முய்ய வேயருள் புரியெனப் போற்றியே யுறலும்.

வெய்ய தந்தியாய்—கொடிய யானையாய், ஒரு தானவன் வந்து—அசுரன் ஒருவன் தோன்றி, வையகத்தை விரைவில் அட்டு—உலகினை விரைவில் அழித்து, எம்மையும் கொல்லிய வருவான்—எம்மையுங் கொல்லும்படி வருவானாயினன்; ஐய—சுவாமீ, நின்ன தாள் அரணம் என்று அடைந்தனம்—தேவரீருடைய திருவடிகளே புகலிடம் என்று அடைந்தேம்; அடியேம் உய்ய அருள் புரி—அடியேங்கள் உய்யும்படி திருவருள் புரியும்; எனப் போற்றி உறலும்—என்று துதித்துச் சரணடைதலும். (138)

அகில நாயகன் மந்திரத் தப்பரி சனர்க
டொகையி னேடுபோ யரணமென் றடைதரு தொடர்பை
முகிலே நேருருக் கயாசுரன் காணுரு முனியா
விகலி யேமணி கன்னிகை வாயில்வந் திறுத்தான்.

அகில நாயகன் மந்திரத்து—விசுவநாதருடைய ஆலயத்தின்கண், அ பரிச னர்கள் தொகையினேடு போய்—அத் தொண்டர்கள் கூட்டத்தோடு கலந்து சென்று, அரணம் என்று அடை தரு தொடர்பை—சரணம் என்று அம் முனிவர்கள் அடைகின்ற இயல்பை, முகிலே நேர் உரு கயாசுரன் காணுரு முனியா—முகிலையொத்த உருவத்தினையுடைய கயாசுரன் கண்டு கோபித்து, இகலி—பகைத்து, மணிகன்னிகை வாயில் வந்து இறுத்தான்—மணிகர்ணிகை என்னும் ஆலயத்தின் வாயிலே வந்து அடைந்தான்.

அகப்பரிசனர் அப்பரிசனர் ஆயிற்றெனினுமாம். *(139)*

வாயில் வந்திறுத் துருமெனத் தெழித்தலு மதித்துக்
கோயி லெய்திய சனமெலா முளங்குலே குலேயா
வாய கண்ணுத னிமலனேத் தழீஇமயக் கடையத்
தீய னன்னது நாடியு மடும்வகை செறுத்தான்.

வாயில் வந்து இறுத்து—வாயிலே வந்தடைந்து, உரும் எனத் தெழித் தலும்—இடிபோல உரப்புதலும், மதித்து—அதனையுணர்ந்து, கோயில் எய்திய சனம் எலாம் உளம் குலேகுலேயா—கோயிலுட் புகுந்த சனங்க ளெல்லாம் மனம் நடுநடுங்கி, ஆய கண்ணுதல் நிமலனே தழீஇ—அங்கெழுந்தருளிய நெற்றிக் கண்ணராகிய விசுவநாதப் பெருமானைத் தழுவி, மயக்கு அடைய—மயக்கத்தைப் பொருந்த, தீயன் அன்னது நாடியும்—தீயன் அதனை உணர்ந் தும், அடும் வகை—கொல்லும்படி, செறுத்தான்—விசுவநாதப் பெருமானைச் சமீபித்தான்.

நாடியும், ஊழிருந்தவாற்ருன் வரத்தை மறந்து செறுத்தா னென்க. *(140)*

செறுத்து மற்றவன் செல்லுழித் தேவர்க ளுய்யக்
கறுத்த கந்தரத் தண்ணலாங் கத்திறங் கண்டு
குறித்தெ லாமடு முக்கிர வடிவினைக் கொண்டு
நிறுத்து மண்டமே லுச்சியின் முடிதொட நிமிர்ந்தான்.

அவன் செறுத்துச் செல்லுழி—அக் கயாசுரன் சமீபித்துச் செல்லுஞ் சமயத்தில், தேவர்கள் உய்யக் கறுத்த கந்தரத்து அண்ணல்—தேவர்க ளுய்யும் பொருட்டு நஞ்சுண்டு கறுத்த கண்டத்தினராகிய சிவபெருமான், ஆங்கு அ திறம் கண்டு—அங்கே கயாசுரனது அவ்வியல்பைக் கண்டு, குறித்து எலாம் அடும் உக்கிர வடிவினைக் கொண்டு—குறிக்கொண்டு உலகம் முழுவதையும்

அழிக்கின்ற உக்கிர வடிவத்தை எடுத்து, நிறுத்தும் அண்ட உச்சிமேல்—தாம் நிறுவும் அண்ட முகட்டின்மீது, முடி தொட நிமிர்ந்தான்—முடி பொருந்த நிமிர்ந்தருளினர். (141)

விண்ணு லாவிய வமரரு முனிவரும் விழித்துக்
கண்ணி னுடரி தெனவிழி பொத்தினர் கவல
வண்ண லாயிர கோடியா தவர்திரண் டதுபோ
லெண்ணி லாதபே ரொளியொடு தோன்றின னெங்கோன்.

விண் உலாவிய அமரரும் முனிவரும்—ஆகாயத்திற் சஞ்சரித்த தேவர்களும் முனிவர்களும், கண்ணின் விழித்து நாடரிது என—கண்களினுல் விழித்துக் காண்டற்கரியது என்று, விழி பொத்தினர் கவல—கண்களை மூடினராய்க் கவலைகொள்ள, அண்ணல் ஆயிரகோடி ஆதவர் திரண்டது போல்—பெருமையிற் சிறந்த ஆயிரகோடி சூரியர்கள் ஒருங்கு திரண்டாற்போல, எண்ணிலாத பேர் ஒளி ஒடு—அளவிட முடியாத மிக்க பிரகாசத்தோடு, எம்கோன் தோன்றினன்—எம்பெருமான் தோன்றியருளினர். (142)

உக்கி ரப்பெரு வடிவுகொண் டெம்பிரா னொருகா
னக்கு மெல்லென வுரப்பலு நடுங்கின வகில
மக்கொ டுந்தொனி யொழிந்தில துகம்பல வயனு
மிக்க தேவரு மவ்வொலி கேட்டலும் வெருண்டார்.

எம்பிரான் உக்கிரப் பெரு வடிவு கொண்டு—எம்பெருமான் உக்கிரப் பெரு வடிவத்தைக் கொண்டு, ஒருகால் நக்கு—ஒருமுறை சிரித்து, மெல்லென உரப்பலும்—மெல்லென்று உரப்புதலும், அகிலம் நடுங்கின—உலகங்கள் நடுங்கின; அ கொடும் தொனி உகம் பல ஒழிந்திலது—அக்கடிய ஓசை பல உக காலம் நீங்கா தொலித்தது; அ ஒலி கேட்டலும்—அவ்வொலியைக் கேட்டவுடன், அயனும் மிக்க தேவரும் வெருண்டார்—பிரமாவும் எண்ணில்லாத தேவர்களும் அஞ்சினர்கள். (143)

சொற்ற வித்திற முக்கிர வடிவொடுந் தோன்றிக்
கொற்ற மால்கரி யவுணன்முன் னெம்பிரான் குறுக
மற்றி வன்சிவ னுமெனத் தேறியு மலைவா
னுற்று நின்றன னயர்த்தனன் மலரய னுரையே.

சொற்ற இ திறம்—உரைத்த இந்தப் பிரகாரம், உக்கிர வடிவொடும் தோன்றி— உக்கிர வடிவத்தோடுந் தோன்றி, எம்பிரான்—எம்பெருமான், கொற்ற மால் கரி அவுணன் முன் குறுக—வெற்றியுடைய பெரிய கயாசுரனுக்கு எதிரிற் செல்லாநிற்ப, இவன் சிவனும் எனத் தேறியும்—இவ்வுக்கிர வடிவத்

தினர் சிவபெருமானுகும் என்று அறிந்தும், மலைவான் உற்று நின்றனன்—போர் புரியும்பொருட்டு எதிர்த்து நின்ருன்; மலர் அயன் உரை அயர்த்தனன்—பிரமாவின் வார்த்தையை அப்பொழுது மறந்தான்.

அயன் உரையாவது, 'அந்திவண்ணனேர் சென்றிடேல்; சேறியேல் சிந்து மிவ்வரம்; கடைப்பிடி' என்பது. (144)

மதித்து வேழமாந் தானவ னெதிர்தலும் வடவை
யுதித்த வன்னியு மச்சுற வெரிவிழித் தொருதன்
கதித்த தாள்கொடு தள்ளவே கயாசுரன் கவிழ்ந்து
பதைத்து வீழ்தலு மிதித்தனன் சிரத்தையோர் பதத்தால்.

வேழமாம் தானவன்—கயாசுரன், மதித்து—தன்னைப் பொருள் செய்து, எதிர்தலும்—விசுவநாதப் பெருமானை எதிர்த்து வருதலும், வடவை உதித்த வன்னியும் அச்சுற—பெட்டைக் குதிரையின் முகத்தி லுதித்த அக்கினியும் அச்சங்கொள்ள, எரி விழித்து—அக்கினி காலப் பார்த்து, தன் கதித்த ஒரு தாள்கொடு தள்ள—தமது மேலெழுந்த ஒரு திருவடியால் உதைத்துத் தள்ள, கயாசுரன் பதைத்துக் கவிழ்ந்து வீழ்தலும்—கயாசுரன் பதைத்துக் குப்புற விழுதலும், சிரத்தை ஓர் பதத்தால் மிதித்தனன்—அவனுடைய தலையை மற்றைத் திருவடியால் மிதித்தருளினர். (145)

ஒருப தத்தினைக் கவானுறுத் திருகரத் துகிரால்
வெரிநி டைப்பிளந் தீரிரு தாள்புடை மேவக்
குருதி கக்கியே யோலிட வவுணர்தங் குலத்துக்
கரியு ரித்தனன் கண்டுநின் றம்மையுங் கலங்க.

ஒரு பதத்தினைக் கவான் உறுத்து—எடுத்ததொரு திருவடியைத் தமது தொடையில் உறுத்திக்கொண்டு, இரு கரத்து உகிரால்—இரண்டு திருக்கரங்களின் நகங்களால், அவுணர் தம் குலத்துக் கரி—அசுரர் குலத்தில் உதித்த கயாசுரன் ஆகிய யானையை, வெரிந் இடை பிளந்து—முதுகின்கட் பிளந்து, ஈர் இரு தாள் புடை மேவ—நான்கு கால்களும் அவ்வப் பக்கத்திற் பொருந்த, குருதி கக்கி ஒலிட—இரத்தம் பிரவாகித்து இரைச்சலிட, அம்மையும் கண்டு நின்று கலங்க—உமாதேவியாருங் கண்டு நின்று இரக்கங்கொள்ள, உரித்தனன்—கயாசுர யானையின் தோலை உரித்தருளினர்.

இக்கவி கஜசம்மார மூர்த்தியின் திருக்கோலத்தைக் காட்டுவது. (146)

கார்த்த சிந்துரத் தவுணர்கோன் விளிந்திடக் கர்த்தா
வீர்த்த தோலினை யீர்த்தலு முலகுயிர் யாவுந்
தீர்த்தன் மேனிகொள் பேரொளி நோக்கியே தியங்கிப்
பார்த்த கண்ணெலாங் கதிரிழந் தலமரப் பதைத்த.

கார்த்த சிந்துரத்து அவுணர்கோன் விளிந்திட—கருநிறம்படைத்த யானை உருவினனான அசுரத் தலைவன் இறந்துபட, கரத்தால் ஈர்த்த தோலினை ஈர்த்தலும்—திருக்கரங்களினால் நெய்ப்புப் பொருந்திய தோலை உரித்தருளும் போது, உலகு உயிர் யாவும்—உலகத்தின்கண்ணுள்ள உயிர்களனைத்தும், தீர்த்தன் மேனிகொள் பேரொளி நோக்கி—பரிசுத்தராகிய சிவபெருமானுடைய திருமேனியில் மேன்மேற் கிளர்கின்ற பேரொளியை நோக்கி, தியங்கிப் பார்த்த கண்ணெலாம்—கூசிப்பார்த்தலையுடைய கண்களெல்லாம், கதிர் இழந்து—ஒளி இழந்து, அலமர—அலமருதல் செய்ய, பதைத்த—பதை பதைத்தன.

அலமருதல்—சுழலுதல். ஈர்த்தலும் உலகுயிர் பதைத்த என்க.

ஈர்க்கும்போது உக்கிர மிகுதிப்பாட்டால், திருமேனியினொளி மேன்மேற் கிளருமென்க. (147)

ஆளு நாயக னஃதறிந் துயிர்த்தொகை யனைத்தும்
வாளி லாதுகண் ணயர்வது மாற்றுதன் மதித்து
நீளி ருங்கரி யுரித்திடு மதளினை நிமலன்
றோளின் மேற்கொடு போர்த்தன னருள்புரி தொடர்பால்.

ஆளும் நாயகன் நிமலன் அஃதறிந்து—ஆளுகின்ற நாயகராகிய சிவபெருமான் உயிர்களின் நிலையை அறிந்து, உயிர்த்தொகை அனைத்தும் வாள் இலாது கண் அயர்வது மாற்றுதல் மதித்து—உயிர்க்கூட்ட மனைத்துங் கண்ணொளி மழுங்கி அயர்ச்சியுறுவதை நீக்கக் கருதி, நீள் இரும் கரி உரித்திடும் அதளினை—உயர்ந்த பெரிய யானையை உரித்த தோலை, அருள் புரி தொடர்பால்—ஆன்மாக்களுக்கு அநுக்கிரகம் புரியும் முகமாக, தோளின் மேல் கொடு போர்த்தனன்—தமது திருப்புயத்தின்மேற் கொண்டு போர்த்தருளினர். (148)

ஐயன் மிக்கதன் கதிரினைக் குருதிநீ ரருத
மையல் யானைவன் றோலைமேற் கொண்டனன் மறைத்தான்
செய்ய கோளொடு கரியகோ ளிருவருஞ் செறிந்து
வெய்ய பானுவி னடுவுறக் கவர்ந்துமே வியபோல்.

செய்ய கோளொடு கரிய கோள் இருவரும் செறிந்து—செம்பாம்பாகிய கேதுவும் கரும் பாம்பாகிய இராகுவுமாகிய இருவரும் ஒன்றுசேர்ந்து, வெய்ய பானுவின் நடுவு உறக் கவர்ந்து மேவிய போல்—வெம்மையுடைய சூரியனின் நடுவிடத்தைப் பெரிதுங் கவர்ந்து மறைத்த தன்மைபோல, ஐயன் மிக்க தன் கதிரினை—சிவபெருமான் தமது திருமேனியின் மிகுந்த பேரொளியை, குருதி நீர் அருத மையல் யானை வன் தோலை மேற்கொண்டனன் மறைத்தான்—இரத்த வெள்ளம் நீங்காத மயக்கத்தினையுடைய யானையின் வலிய கரிய தோலைப் புயத்தின்மேற் கொண்டு மறைத்தருளினர். (149)

மிகவு மெம்பிரான் றன்சுடர் மாற்றிமெய் தளரு
மகில மேலவர் விழிக்கெலாந் தொல்கதி ரருளித்
தகவி லச்சமு மகற்றியே காத்தனன் றனக்கு
நிகரு மேலுமின் றாகியே யமர்தரு நிமலன்.

தனக்கு நிகரும் மேலும் இன்றாகி அமர்தரு நிமலன் எம்பிரான்—தமக்கு ஒப்பும் உயர்வும் இல்லையாய் அமர்கின்ற நிருமலராகிய எம்பெருமான், தன் சுடர் மிகவும் மாற்றி—தமது திருமேனி ஒளியைப் பெரிதும் மாற்றி, மெய் தளரும்-உடல் தளருகின்ற, அகிலம் மேலவர் விழிக்கெலாம் தொல் கதிர் அருளி—உலகத்திலுள்ளவர்களின் கண்களுக்கெல்லாம் பழைய ஒளியைக் கொடுத்து, தகவு இல் அச்சமும் அகற்றிக் காத்தனன்—தகுதியற்ற அச்சத்தையும் போக்கிக் காத்தருளினர். (150)

அந்த வேலையி லமரர்போற் றிசைத்தன ரதுகேட்
டெந்தை மாமணி கன்னிகை யாலயத் தேக
முந்து தந்திமா லவுணற்கு வெருவிமொய்ம் பிழந்து
சிந்தை மான்றுவீழ் பரிசனர் யாவருந் தெளிந்தார்.

அந்த வேலையில் அமரர் போற்றிசைத்தனர்—அப்பொழுது தேவர்கள் துதித்தார்கள்; அது கேட்டு—அதனைக் கேட்டு, எந்தை மாமணி கன்னிகை ஆலயத்து ஏக—எம் பிதாவாகிய சிவபெருமான் பெருமை பொருந்திய மணி கர்ணிகை என்னும் ஆலயத்துட் சென்றருள, முந்து—முன்னம், தந்தி மால் அவுணற்கு வெருவி—பெரிய கயாசுரனுக்கு அஞ்சி, மொய்ம்பு இழந்து—வலியிழந்து, சிந்தை மான்று—மனம் மயங்கி, வீழ் பரிசனர் யாவரும்—விழுந்த பரிசனர்களும் முனிவர் உட்பட யாவரும், தெளிந்தார்—அறிவு தெளிந்தார்கள்.

அதுகேட்டுத் தெளிந்தார் என்க. (151)

செறிவு போகிய சனத்திரளே ரெழுந்தருட் டிறத்தாற்
கறைகொள் காலினன் குருதியென் பொடுதசை காணு
விறைவ னேயவன் றன்னையட் டானென வெண்ணி
யறையு நேமிபோ லாடினர் பாடின ரார்த்தார்.

செறிவு போகிய சனத்திரளினர் எழுந்து—நெருக்கம் முதிர்ந்த சனத்திரளினர் எழுந்து, அருள் திறத்தால்—சிவபெருமானது திருவருட் டிறத்தினால், கறைகொள் காலினன்—உரலையொத்த காலினையுடைய கயாசுரனது, குருதி என்பொடு தசை காணு—இரத்தத்தையும் எலும்பையுந் தசையையுங் கண்டு, இறைவனே—எம்பெருமானே, அவன் தன்னை அட்டான் என எண்ணி—

அவனைக் கொன்றருளினர் என்று நினைத்து, அறையும் நேமிபோல்—ஆர வாரிக்கின்ற சமுத்திரம்போல, ஆடினர் பாடினர் ஆர்த்தார்—ஆடிப் பாடி ஆரவாரஞ் செய்தார்கள். (152)

காசி வாணரு முனிவரும் பணிந்தனர் கழல்கள்
பூசை யாற்றவும் புரிவித்து வழுத்தியே போனா
ரீசன் வேழவன் றோல்புனை பேரரு ளிதுகாண்
பேசு வாமினி யயன்சிர மேந்திய பெற்றி.

காசி வாணரும் முனிவரும்—காசிப்பதியில் வாழ்வோரும் முனிவர்களும், கழல்கள் பணிந்தனர்—விசுவநாதருடைய பாதங்களை வணங்கி, பூசை ஆற்றவும் புரிவித்து—பூசனையைச் சிறப்பாகவுஞ் செய்வித்து, வழுத்திப் போனார்—துதிசெய்து சென்றார்கள்; ஈசன் வேழவன் தோல் புனை பேரருள் இது—சிவபெருமான் யானையின் வலிய தோலைத் தரித்த பேரருட் சரிதம் இது; இனி அயன் சிரம் ஏந்திய பெற்றி பேசுவாம்—இனிப் பிரம கபாலத்தை ஏந்திய பெற்றியைச் சொல்லுவாம்.

வேழவன் எனக்கொண்டு கயாசுரன் எனினுமாம். காண் அசை. (153)

### வேறு

முன்னமோர் வைகன் மாலு முண்டகத் தயனு மாகப்
பொன்னின்மால் வரையி னுச்சிப் பொலங்குவ டொன்றி னும்பர்
மன்னுழி முனிவர் தேவர் வரம்பிலோர் வந்தன் னாரைச்
சென்னியால் வணக்கஞ் செய்து செங்கரங் குவித்துச் சொல்வார்.

முன்னம் ஓர் வைகல்—முன்னொரு நாளிலே, பொன்னின் மால் வரையின் உச்சிப் பொலம் குவடு ஒன்றின் உம்பர்—பெரிய பொன்மலையாகிய மேருவின் உச்சியிலுள்ள சுவர்ண சிகர மொன்றின் மீது, மாலும் முண்டகத்து அயனும் ஆக மன்னுழி—திருமாலும் கமலாசனரான பிரமாவும் ஒருங்கு இருந்த சமயத்தில், வரம்பிலோர் முனிவர் தேவர் வந்து—அளவில்லாத முனிவர்களுந் தேவர்களும் அங்கே வந்து, அன்னாரைச் சென்னியால் வணக்கம் செய்து—அவ்விருவரையுந் தலையால் வணங்கி, செம் கரம் குவித்துச் சொல்வார்—செம்மையாகிய கரங்களைக் கூப்பிச் சொல்லுவார்கள். (154)

மூவரின் முதலா னோரு முதலிடை முடிவு மில்லாத்
தேவரு மெவையு நல்குஞ் செல்வரும் பரமே லாகி
யோவரும் புவனத் துள்ள வுயிர்க்குயி ராய்நின் றோரு
மேவரெங் களுக்கு வல்லே யிருவரு மிசைத்தி ரென்றார்.

மூவரின் முதலானோரும்—மும்மூர்த்திகளில் முதல்வராயிருப்பவரும், முதல் இடை முடிவும் இல்லாத் தேவரும்—ஆதியும் நடுவும் அந்தமும் இல்லாத

மகாதேவரும், எவையும் நல்கும் செல்வரும்—எல்லாவற்றையும் படைக்கும் பிரபுவும், பரம் மேலாகி—மிக மேலாய், ஓவரும் புவனத்து உள்ள உயிர்க்கு உயிராய் நின்றோரும்—ஒழிவில்லாத புவனங்களில் உள்ள ஆன்மாக்களுக்குப் பரமான்மாவா யிருப்பவரும், ஏவர்—யாவர்; எங்களுக்கு வல்லே இருவரும் இசைத்திர் என்றார்—அவரை இவர் என்று எங்களுக்கு விரைந்து நீவிர் இருவீரும் உரைப்பீராக என்றார்கள். (155)

என்றுரைத் திடலும் வேதா வெம்பிரான் பிணித்த மாயை
தன்றலைப் படலால் யானத் தலைமையாம் பிரம மாகு
நன்றிதைத் தெளிதி ரென்ன நாரணன் றானு மற்றா
யுன்றனைத் தந்த யானே யுயர்தரும் பிரம மென்றான்.

என்று உரைத்திடலும்—என்று அவர்கள் கேட்டலும், வேதா—பிரமா, எம் பிரான் பிணித்த—எம்பெருமான் கட்டிய, மாயை தன் தலைப்படலால்—மாயையாகிய வலைக்குள் அகப்பட்டிருத்தலால், யான் அ தலைமையாம் பிரமம் ஆகும்—யானே அந்தத் தலைமை வாய்ந்த பிரமம் ஆகும்; நன்று இதைத் தெளிதிர் என்ன—இதனை நன்கு தெளிவீராக என்று கூற, நாரணன் தானும் அற்றாய்—விஷ்ணுமூர்த்தி தாமும் அத்தன்மையராய், உன் தனைத் தந்த யானே—உன்னைப் பெற்ற யானே, உயர்தரும் பிரமம் என்றார்—உன்னிலும் உயர்வாகிய பிரமம் என்றார்.

அற்றாதல், மாயைதன் தலைப்படல். (156)

இருவரு மினைய பேசி யெண்ணிலா வைகல் யாரும்
வெருவரு நிலைய தாக வெய்துயிர்த் தழன்று மாறாய்ப்
பொருவரு தருக்கஞ் செய்யப் போயினர் முனிவர் தேவ
ரொருவரு மின்றி நம்மா லுற்றதிப் பெற்றி யென்றே.

இருவரும் இனைய பேசி—பிரம விஷ்ணுக்கள் இருவரும் இவ்வாறு கூறி, எண்ணிலா வைகல்—அளவில்லாத காலம், யாரும் வெருவரு நிலையது ஆக—யாவரும் அஞ்சத்தக்க நிலைமை உண்டாக, மாறாய்—மாறுபட்டு, வெய்து உயிர்த்து அழன்று—வெம்மைத்தாய மூச்சுவிட்டுக் கோபித்து, பொருவரு தருக்கஞ் செய்ய—பொருதலை வருவிக்கின்ற தருக்கத்தைச் செய்ய, முனிவர் தேவர்—முனிவர்களும் தேவர்களும், நம்மால் இ பெற்றி உற்றது என்று—எம்மால் இவ்வியல்பு உளதாயிற்று என்றெண்ணி, ஒருவரும் இன்றிப் போயினர்—ஒருவரும் அவ்விடத்தி லில்லாமல் நீங்கினார்கள். (157)

போதலு மனையர் பின்னும் பூசல்செய் திட்ட காலை
வேதமுங் குடிலை தானும் வேறுவே றுருக்கொண் டெய்தி
வாதம தியற்ற லென்று மன்னுயிர்க் குயிரா யார்க்குந்
தாதையாஞ் சிவனே வாய்மைத் தற்பர னென்ற வன்றே.

போதலும்—முனிவர்களும் தேவர்களும் விட்டு நீங்க, பின்னும்—அதன் மேலும், அனையர் பூசல் செய்திட்ட காலை—அவ்விருவருஞ் சண்டை செய்த போது, வேதமும் குடிலைதானும் வேறு வேறு உரு கொண்டு எய்தி—வேதமும் பிரணவமும் வேறு வேறு உருவங்கொண்டு வந்து, வாதமது இயற்றல்—வாதஞ் செய்யாதொழிக; என்றும் மன் உயிர்க்கு உயிராய்—எப்பொழுதும் நிலைபெறுகின்ற ஆன்மாக்களுக்குப் பரமான்மாவாய், யார்க்கும் தாதையாம் சிவனே—யாவருக்கும் பரமபிதாவாகுஞ் சிவபெருமானே, வாய்மைத் தற்பரன் என்ற—உண்மையான பரம்பொருள் என்று கூறின. (158)

பண்டவ ருணர்ந்த வேதப் பனுவலுங் குடிலை வாக்குங்
கொண்டிலர் விலக்கிப் பின்னுங் கொடியவெம் பூசல் செய்யக்
கண்டுமற் றதனை யன்னோர் கடுமுரண் டொலைக்கு மாறு
கொண்டனன் கருணை யார்க்குங் குறித்தருள் கூரும் பெம்மான்.

பண்டு அவர் உணர்ந்த—முன்னமே அவர்கள் ஓதி உணர்ந்த, வேதப் பனுவலும்—வேத வாக்கையும், குடிலை வாக்கும்—பிரணவ வாக்கையும், கொண்டிலர் விலக்கி-கொள்ளாதவர்களாய் அவற்றை விலக்கி, பின்னும் கொடிய வெம் பூசல் செய்ய—மேலுங் கொடிய வெவ்விய பூசலைச் செய்ய, யார்க்கும் குறித்து அருள் கூரும் பெம்மான் அதனைக் கண்டு—யாவர்க்குங் குறிக்கொண்டு கிருபை பாலிக்கின்ற எம்பெருமான் அதனைக் கண்ணுற்று, அன்னோர் கடுமுரண் தொலைக்குமாறு கருணை கொண்டனன்—அவர்களுடைய கடிய மாறுபாட்டை நீக்குமாறு கருணைகொண்டருளினர்.

பனுவல்—நூல்; இங்கே வாக்கு என்னும்பொருட்டு. (159)

அடிமுடி யிலாத வள்ள லமலமா மொளியாய் விண்ணி
னடுவுற வந்து தோன்ற நாரணன் றானும் வேதக்
கடவுளுஞ் சிவனு மென்று கருதிலர் யாதோ விந்தச்
சுடரென மருண்டார் மாயச் சூழ்ச்சியி னீங்க லாதார்.

அடி முடி இலாத வள்ளல்—ஆதியு மந்தமு மில்லாத சிவபெருமான், அமலமாம் ஒளியாய்—நின்மல ஒளியாய், விண்ணின் நடுவுற வந்து தோன்ற—ஆகாய மத்தியில் வந்து தோன்ற, நாரணன் தானும் வேதக் கடவுளும்—விஷ்ணுவும் பிரமாவும், மாயச் சூழ்ச்சியின் நீங்கலாதார்—மாயப் பிணிப்பினின்றும் நீங்காதவர்களாய், சிவனும் என்று கருதிலர்—அவ்வொளி சிவபெருமானுகுமென்று கருதாமல், இந்தச் சுடர் யாதோ என மருண்டார்—இந்த ஒளி யாதோ என்று மயங்கினுர்கள். (160)

இயலது தெரிந்து சோதி யிடையதா யெம்மை யாளக்
கயிலையி லுமையா ளோடு கலந்துவீற் றிருக்குங் கோலச்
செயல்கொடு பரம னண்ணச் சிவனெனச் சிந்தை தேற்றிப்
புயலுறழ் மேனிப் புத்தேள் பொருக்கென வெழுந்து தாழ்ந்தான்.

இயலது தெரிந்து—இருவருடைய இயல்பையும் அறிந்து, சோதி இடையதாய்—சோதியின் நடுவாகி, எம்மை ஆள—எம்மை ஆளும்பொருட்டு, கயிலையில் உமையாளோடு கலந்து வீற்றிருக்கும்—திருக்கைலாசத்திலே உமாதேவியாரோடு கலந்து வீற்றிருக்கின்ற, கோலச் செயல்கொடு பரமன் நண்ண—திருக்கோலச் செய்கையோடு சிவபெருமான் தோன்றியருள, சிவன் எனச் சிந்தை தேற்றி—அத் திருக்கோலஞ் சிவபெருமானே என்று மனந் தெளிந்து, புயல் உறழ்மேனிப் புத்தேள்—மேகம்போன்ற மெய்யினையுடைய திருமால், பொருக்கென எழுந்து தாழ்ந்தான்—விரைந்து எழுந்து வணங்கினர். (161)

மாயையோர் சிறிதுந் தீரா மலரய னமது தந்தை
யாயவன் போந்தா னென்னு வச்சுத மூர்த்தி யேபோ
னேயமோ டெழுந்து தாழா னெடியதன் னுச்சிச் சென்னித்
தீயதோர் வாயான் மேலாஞ் சிவனையு மிகழ்த லுற்றான்.

மாயை ஓர் சிறிதும் தீரா மலரயன்—மாயையின் பிணிப்பு ஒரு சிறிதும் விலகாத பிரமா, நமது தந்தை ஆயவன் போந்தான் என்னு—நம் பிதாவானவர் எழுந்தருளி வந்தார் என்று, அச்சுத மூர்த்தி போல் நேயமோடு எழுந்து தாழான்—திருமாலைப்போல அன்போடு எழுந்து வணங்காராய், தன் நெடிய உச்சிச் சென்னித் தீயது ஓர் வாயால்—தமது நீண்ட உச்சிச் சிரத்தின் கண்ணதாய தீயதொரு வாயினல், மேலாம் சிவனை இகழ்தல் உற்றான்—மேலாகிய சிவபெருமானை இகழ்வாராயினர்.

உம், உயர்வு சிறப்பு. (162)

முண்டக மிருந்த வைந்து முகத்தவன் முதல்வன் றோற்றங்
கண்டன னிகழ வந்தக் கருணையங் கடலுஞ் சீற்றங்
கொண்டிலன் சிறிது மற்றே கொண்டன னென்னி னெல்லா
வண்டமு முயிரும் பின்னு மழிவுறு திருக்கு மோதான்.

முண்டகம் இருந்த ஐந்து முகத்தவன் முதல்வன் தோற்றம் கண்டனன்—தாமரை மலரிலிருந்த ஐந்து முகங்களையுடைய பிரமா முதல்வரான சிவபெருமானுடைய திருக்கோலத்தைக் கண்டும், இகழ—இகழ்தலைச் செய்ய, அந்தக் கருணையங்கடல் சீற்றம் சிறிதும் கொண்டிலன்—அக் கருணைக்கடலான சிவபெருமான் சிறிதுங் கோபங்கொண்டிலர்; அற்றே கொண்டனன் என்னின்—சிறிதே சீற்றங் கொள்வாராயின், எல்லா அண்டமும் உயிரும் அழிவுறுது பின்னும் இருக்குமோ—எல்லா அண்டங்களும் அவற்றிலுள்ள உயிர்களும் பின்னரும் அழியாமலிருக்குமோ.

கடலும் என்புழி உம்மை, கண்டனன் என்ற எச்சமுற்றுடன் கூட்டப்பட்டது. அற்றே என்பது, சிறிதே என்ற பொருள் தந்து நின்றது. (163)

எகினம துயர்த்த வண்ண லிரும்பவந் தொலேப்ப வேனேப்
பகவர்த மகந்தை மாற்றப் பண்ணவர் மதர்ப்புச் சிந்த
மிகுபெருங் கருணே தன்ஞல் வேதநா யகனுள் ளத்து
மகிழ்வொடு புரிந்தா னென்ப வயிரவக் கடவு டன்னே.

எகினமது உயர்த்த அண்ணல் இரும் பவம் தொலேப்ப—அன்னத்தை உயர்த்த கொடியினேயுடைய பிரமதேவரின் பெரிய பாவத்தைத் தொலேக்கவும், ஏனேப் பகவர் தம் அகந்தை மாற்ற—ஏனேய தேவர்களின் செருக்கை ஒழிக்கவும், பண்ணவர் மதர்ப்புச் சிந்த—முனிவர்களின் இறுமாப்பைப் போக்கவும், மிகு பெரும் கருணே தன்ஞல்—மிகுந்த பெருங் கருணேயினுலே, வேத நாயகன் உள்ளத்து—வேத நாயகரான சிவபெருமான் தமது திருவுள்ளத்தின்கண்ணே, வயிரவக் கடவுள் தன்னே மகிழ்வொடு புரிந்தான்—வைரவக் கடவுளே மகிழ்ச்சியோடு உண்டாக்கியருளினர்; என்ப—என்று ஆன்ருேர் கூறுவர். *(164)*

நீலுறு சுடரின் மெய்யு ஞெகிழிக ளரற்றுந் தாளு
மாலம துயிர்க்குஞ் செங்கே ழரவவெற் றரையுஞ் சென்னி
மாலேக ளநந்த கோடி வயின்வயின் பெயரு மார்புஞ்
சூலமும் பரசு நாணுந் துடியுமேந் தியபொற் ருேளும்.

நீல் உறு சுடரின் மெய்யும்—நீல நிறம் பொருந்திய ஒளி திகழ்கின்ற திருமேனியும், ஞெகிழிகள் அரற்றும் தாளும்—சிலம்புகள் ஒலிக்குந் திருவடியும், ஆலமது உயிர்க்கும் செங்கேழ் அரவ வெற்றரையும்—விடத்தினேக் காலுகின்ற செந்நிறம் பொருந்திய பாம்பை அரைஞாணுகக் கட்டிய வெற்றரையும், அநந்த கோடி சென்னி மாலேகள் வயின் வயின் பெயரும் மார்பும்—அநந்த கோடி சிரமாலேகள் ஆங்காங்கே அசையும் அகன்ற திருமார்பும், சூலமும் பரசும் நாணும் துடியும் ஏந்திய பொன் தோளும்—சூலமும் மழுவும் பாசமும் உடுக்கையும் ஏந்திய அழகிய திருக்கரங்களும். *(165)*

முக்கணுந் திங்க ளேபோன் முளேத்தவா ளெயிறும் வன்னிச்
செக்கரஞ் சடையின் சீருஞ் செயிர்கெழு நகையு மாக
வுக்கிர வடிவு கொண்டாங் குதித்திடு வடுகன் றன்னே
மைக்கிளர் கண்டத் தெந்தை நோக்கியே வகுத்துச் சொல்வான்.

முக்கணும்—மூன்று கண்களும், திங்களே போல் முளேத்த வாள் எயிறும்—இளம்பிறைபோலத் தோன்றிய ஒளி பொருந்திய வக்கிர தந்தங்களும், வன்னி செக்கர் அம் சடையின் சீரும்—அக்கினி மயமான செவ்வானம் போன்ற அழகிய சடையின் சிறப்பும், செயிர் கெழு நகையும் ஆக—கோபங் கிளருகின்ற சிரிப்பும் ஆக, உக்கிர வடிவு கொண்டு—உக்கிர வடிவத்தை மேற்கொண்டு, ஆங்கு உதித்திடு வடுகன் தன்னே—ஆங்கே தோன்றிய

வைரவ மூர்த்தியை, மைக் கிளர் கண்டத்து எந்தை நோக்கி—கருமை விளங்கு கின்ற கண்டத்தையுடைய எம்பெருமான் நோக்கி, வகுத்துச் சொல்வான்—வகுத்துரைப்பார். (166)

திகழ்ந்தநஞ் சிறுவ னுகுஞ் செங்கம லத்தோன் சென்னி
யிகழ்ந்தது நம்மை யுச்சி யிருந்ததே யதனை வல்லே
யகழ்ந்தனை கரத்தி லேந்தி யவனுயிர் நல்கித் தம்மைப்
புகழ்ந்திடு முனிவர் தேவர் புரந்தொறும் போதி யன்றே.

நம் சிறுவனுகும் திகழ்ந்த செங்கமலத்தோன்—நம் புதல்வனுன விளங்கிய செந்தாமரை மலரிலிருக்கும் பிரமனது, உச்சி இருந்தது சென்னி நம்மை இகழ்ந்தது—உச்சிக்கட் சிரசு எம்மை இகழ்ச்சிசெய்தது; அதனை வல்லே அகழ்ந்தனை கரத்தில் ஏந்தி—அந்தச் சிரத்தை விரைந்து கிள்ளிக் கையில் ஏந்தி, அவன் உயிர் நல்கி—அப்பிரமனது உயிரை மீட்டுக்கொடுத்து, தம்மைப் புகழ்ந்திடு முனிவர் தேவர் புரந்தொறும் போதி—தம்மைப் புகழுகின்ற முனிவர்கள் தேவர்கள் இருக்கும் நகரங்கள்தோறும் போகக்கடவாய். (167)

போந்தனை யனையர் தங்கள் புலவுடற் சோரி தானே
வாய்ந்ததோ ரைய மாக வாங்குதி வாங்கும் வேலை
வீந்தவர் தமக்கு மீட்டும் வியனுயி ருதவி யன்னோ
ராய்ந்திடு மகந்தை மாற்றி யண்டமே லடைதி யம்மா.

போந்தனை—ஆங்காங்குச் சென்று, அனையர் தங்கள் புல உடல் சோரி தானே—அவர்களுடைய புலாலுடலின் இரத்தத்தைத் தானே, வாய்ந்தது ஓர் ஐயமாக வாங்குதி—சிறந்ததொரு பிக்ஷையாக ஏற்கக்கடவாய்; வாங்கும் வேலை—ஏற்கும்பொழுது, வீந்தவர் தமக்கு மீட்டும் வியன் உயிர் உதவி—இறந்தவர்களுக்கு மீட்டும் உயர்வாகிய உயிரை நல்கி, அன்னோர் ஆய்ந்திடும் அகந்தை மாற்றி—அவர்கள் தேடிக்கொண்ட செருக்கைப் போக்கி, அண்டம் மேல் அடைதி—அண்ட முகட்டை அடையக்கடவாய். (168)

முன்புடைத் தாகு மண்ட முகடுதோய் பதத்தின் மன்னி
மன்பதைக் குலங்கள் யாவும் வானவர் தொகையும் யாண்டுந்
துன்பறக் காத்தி யென்று தூயநல் லருளை நல்கி
யன்புடைக் கடலா மெங்கோ னமலமாஞ் சோதி புக்கான்.

முன்பு உடைத்தாகும்—முன்னே உனக்காக உள்ள, அண்ட முகடு தோய் பதத்தின் மன்னி—அண்ட முகட்டிற் பொருந்திய பைரவ புவனத்திலிருந்து, மன்பதைக் குலங்கள் யாவும்—மக்கட் பரப்பாகிய கூட்டங்கள் முழுவதையும்,

வானவர் தொகையும்—தேவர்கள் கூட்டத்தையும், யாண்டும் துன்பு அறக் காத்தி என்று—யாண்டுந் துன்புறுத வண்ணங் காக்கக்கடவாய் என்று, தூய நல் அருளை நல்கி—தூய நல்ல அருளைச் செய்து, அன்புடைக் கடலாம் எங்கோன் அமலமாம் சோதி புக்கான்—கருணைக்கடலான எம்பெருமான் நின்மலமாகிய சோதியுள் மறைந்தருளினர். (169)

ஆதியங் கடவு ளங்க ணடைதலு மமல மாகுஞ்
சோதியு மனையர் காணுத் தோற்றம தாக மாயோ
னீதெலாந் தெரிந்து நிற்ற லியற்கையன் றென்னு முக்க
ணுதனை யிறைஞ்சி வல்லே நடந்துதன் பதியிற் புக்கான்.

ஆதியங் கடவுள் அங்கண் அடைதலும்—ஆதியாகிய சிவபெருமான் அழகிய அந்தச் சோதியுள் மறைந்தருள, அமலமாகும் சோதியும் அனையர் காணுத் தோற்றமதாக—நின்மலமான அந்தச் சோதியும் அவர்கள் காணுத பிரகாரம் மறைய, மாயோன் ஈது எலாம் தெரிந்து—விஷ்ணு இந் நிகழ்ச்சிகளனைத்தையும் உணர்ந்து, நிற்றல் இயற்கை அன்று என்னு—இங்கே நிற்றல் முறையன்று என்று, முக்கண் நாதனை இறைஞ்சி—சிவபெருமானை வணங்கி, வல்லே நடந்து தன் பதியில் புக்கான்—விரைந்து சென்று தமது பதியாகிய வைகுந்தத்தை அடைந்தார். (170)

அளந்துமண் கொண்ட மாய னகனக ரடைத லோடுங்
கிளர்ந்தெழு காரி வேதாக் கேழ்கிள ருச்சிச் சென்னி
களைந்துதன் னகத்தா லேந்தக் காலுறு குருதி நீத்தம்
வளைந்தது புவியைத் துஞ்சி மலரவன் றானும் வீழ்ந்தான்.

அளந்து மண் கொண்ட மாயன் அகல் நகர் அடைதலோடும்—பூமியை ஓரடியா லளந்து மாவலிபாற் பெற்ற திருமால் தமது அகன்ற நகரத்தை அடைய, கிளர்ந்து எழு காரி—உக்கிரங் கிளர்ந்தெழுகின்ற வைரவக்கடவுள், வேதா கேழ் கிளர் உச்சி சென்னி தன் நகத்தால் களைந்து ஏந்த—பிரமாவினுடைய நிறம் கிளருகின்ற உச்சித் தலையைத் தமது நகத்தாற் கிள்ளி ஏந்த, காலுறு குருதி நீத்தம் புவியை வளைந்தது—கால் கொள்ளுகின்ற இரத்த வெள்ளம் பூமியைச் சூழ்ந்தது; மலரவன் தானும் துஞ்சி வீழ்ந்தான்—பிரமாவும் இறந்து விழுந்தார். (171)

சோரிநீர் நீத்த மாகித் துண்ணென வுலகங் கொண்டு
மேருமால் வரையைச் சூழ வெய்யதன் னுதற்கட் டீயாற்
சேரவே வறப்பித் தந்தச் செங்கம லத்தி னுனுக்
காருயிர் நல்க லோடு மவனுணர்ந் தெழுந்தா னன்றே.

சோரி நீர் நீத்தம் ஆகி—இரத்தவெள்ளம் பிரவாகமாகி, துண்ணென உலகம் கொண்டு—விரைவாக உலகத்தை மூடி, மேரு மால்வரையைச் சூழ—பெரிய மேருமலையைச் சூழ, வெய்ய தன் நுதல் கண் தீயால் சேர வறப்பித்து—வெம்மையையுடைய தமது நெற்றிக்கண்ணக்கினியினால் ஒருசேர வற்றச் செய்து, அந்தச் செங்கமலத்தினனுக்கு ஆருயிர் நல்கலோடும்—அந்தச் செந்தாமரை ஆசனரான பிரமதேவருக்கு அரிய உயிரை வழங்குதலும், அவன் உணர்ந்து எழுந்தான்—அப் பிரமதேவர் உணர்ச்சிபெற் றெழுந்தார். *(172)*

**வேறு**

துயிலு ணர்ந்தவ ராமெனத் தொல்லையிற்
பயிலு நல்லுணர் வெய்தலும் பங்கயன்
வயிர வன்றன் மலரடி மீமிசை
யியலு மன்பொ டிறைஞ்சியு ரைசெய்வான்.

துயில் உணர்ந்தவராம் என—நித்திரைவிட் டெழுந்தவரைப் போல, தொல்லையின் பயிலும் நல் உணர்வு எய்தலும்—முன்போலப் பயிலுகின்ற நல்லறிவு கைகூடுதலும், பங்கயன்—பிரமதேவர், வயிரவன் தன் மலரடி மீமிசை—வைரவக் கடவுளுடைய திருவடி மலர்மீது, இயலும் அன்பொடு இறைஞ்சி—பொருந்துகின்ற அன்போடு வணங்கி, உரை செய்வான்—கூறுவார். *(173)*

நெற்றி யங்க ணிமலற்கி யான்செயுங்
குற்ற முண்டு குணிப்பில வன்னதாற்
பெற்று ளேனிப் பெரும்பழி யீங்கினிச்
செற்ற மேதுந் திருவுளங் கொள்ளலே.

நெற்றி அம் கண் நிமலற்கு—அழகிய நெற்றிக்கண்ணரான சிவபெருமானுக்கு, யான் செயும் குற்றம் குணிப்பில உண்டு—யான் செய்யுங் குற்றங்கள் அளவில்லாதன உண்டு; அன்னதால் இப் பெரும் பழி ஈங்குப் பெற்றுளேன்—அக் காரணத்தால் இந்தப் பெரிய பழியை இங்கே பெற்றேன்; இனி செற்றம் ஏதும் திருவுளம் கொள்ளலே—இனிக் கோபஞ் சிறிதுந் திருவுள்ளத்திற் கொள்ளா தொழிக. *(174)*

இன்மை யாக விமைப்பி னுலகடும்
வன்மை கொண்ட வடுகநின் னுரரு
ணன்மை யாற்றெல்லை நல்லுணர் வெய்தினன்
புன்மை யாவும் பொறுத்திடல் வேண்டுமால்.

இமைப்பில் உலகம் இன்மையாக அடும் வன்மை கொண்ட வடுக—இமைப்பொழுதில் உலகத்தை இல்லையாக அடுகின்ற வன்மை வாய்ந்த

வைரவக் கடவுளே, நின் ஆர் அருள் நன்மையால்—தேவரீருடைய நிறைந்த அருணலத்தால், தொல்லை நல்லுணர்வு எய்தினன்—பழைய நல்லுணர்வைப் பெற்றேன்; புன்மை யாவும் பொறுத்திடல் வேண்டும்—குற்றங்களனைத்தையும் பொறுத்தருளல் வேண்டும். (175)

தீய தான சிறியவிச் சென்னியுந்
தூய தாகத் தொழும்பினன் கண்டுழி
மாயை தீர மலர்க்கையிற் கோடிநீ
மேய சூல வியன்படை யென்னவே.

தீயது ஆன சிறிய இ சென்னியும்—சிவ தூடணத்தாலே தீயதாகிய இந்தக் கீழ்மையுடைய தலையும், தூயது ஆக—இது தூய்மையுடையதாகும் படி, தொழும்பினன் கண்டுழி மாயை தீர—அடியேன் தரிசிக்கும்போது மயக்கம் நீங்குமாறு, வியன் சூல படை என்ன—உயர்ந்த சூலப்படையைக் கையிற் கொண்டதுபோல, மலர் கையில் நீ கோடி—மலர் போன்ற திருக்கரத்திலே தேவரீர் தரித்தருள்வீராக. (176)

என்ன வித்தகை பன்னி யிறைஞ்சலுஞ்
சென்னி நான்குடைத் தேவனை நோக்கியே
யன்ன தாகவென் றைய னருளியே
பொன்னின் மால்வரை நீங்கினன் போயினன்.

என்ன இத்தகை பன்னி இறைஞ்சலும்—என்று இவை போல்வன பல வற்றைக் கூறித் துதித்தலும், சென்னி நான்கு உடை தேவனை நோக்கி—நான்கு தலைகளையுடைய பிரமதேவரை நோக்கி, அன்னது ஆக என்று ஐயன் அருளி—அவ்வாறுகுக என்று வைரவக்கடவுள் அருள்செய்து, பொன்னின் மால்வரை நீங்கினன் போயினன்—பெரிய பொன்மலையாகிய மேருவை விடுத்துச் சென்றருளினர். (177)

கால வேகன் கனன்முகன் சோமக
னால கால னதிபல னாதியாச்
சால நீடிய சாரதர் தானையை
நீல மேனி நிமல னுதவினன்.

நீல மேனி நிமலன்—நீல மேனியையுடைய வைரவக்கடவுள், காலவேகன் கனல் முகன் சோமகன் ஆலகாலன் அதிபலன் ஆதியா—காலவேகன் அக்கினி முகன் சோமகன் ஆலகாலன் அதிபலன் முதலாக, சால நீடிய சாரதர் தானையை உதவினன்—மிகக்கூடிய பூத சேனையை உண்டாக்கினர். (178)

எண்ணி லாவக் கணங்களொ டெம்பிரா
னண்ணி யொல்லை நவையுறு மாதவர்
மண்ணின் மேய வனந்தொறும் வானவர்
விண்ணி னெல்லை தொறும்விரைந் தேகினன்.

எண்ணிலா அ கணங்களொடு எம்பிரான்—அளவற்ற அந்தப் பூத கணங்களுடனே எம்பெருமானாகிய வைரவக்கடவுள், ஒல்லை நண்ணி—விரைந்து கூடி, நவையுறு மாதவர் மேய மண்ணின் வனந்தொறும்—குற்றத்தோடு கூடிய முனிவர்கள் இருக்கின்ற பூமியில் உள்ள வனங்கள் தோறும், வானவர் விண்ணின் எல்லை தொறும்—அவ்வாறாய தேவர்களிருக்கும் வானுலக எல்லைகள் தோறும், விரைந்து ஏகினன்—விரைந்து சென்றருளினர். (179)

மெய்யி னூறும் வியன்குரு திப்புன
லைய மாக்கொண் டனையர்த மாவிக
ளுய்ய வேபின் னுதவி யுளமெலாந்
துய்ய வாக்கினன் றொல்லரு ளாழியான்.

மெய்யின் ஊறும் வியன் குருதி புனல்—உடம்பினின்று மூறுகின்ற மிக்க இரத்த வெள்ளத்தை, ஐயமாக் கொண்டு—பிக்ஷையாக ஏற்று, அனையர் தம் ஆவிகள் உய்ய பின் உதவி—அவர்களுடைய உயிர்களை உய்யும்வண்ணம் மீட்டுக் கொடுத்து, உளம் எலாம் துய்ய ஆக்கினன்—உள்ளங்களனைத்தையுந் தூய்மையுடையன ஆக்கியருளினர்; தொல் அருள் ஆழியான்—பழைமையாகிய கிருபா சமுத்திரமான வைரவக்கடவுள். (180)

வடுக வண்ணலவ் வானவ ரூரெலாங்
கடிதி னீங்கிக் கருவத்தை நீங்குறு
நெடிய மாலுறை நீள்புரம் போயினன்
முடுகி யேகினர் முன்கண நாதரே.

வடுக அண்ணல்—வைரவக் கடவுள், அ வானவர் ஊர் எலாம் கடிதின் நீங்கி—அந்தத் தேவருலக மனைத்தையும் விரைந்து கடந்து, கருவத்தை நீங்குறு—இருள்மயமான மயக்கத்தை நீங்காத, நெடிய மால் உறை நீள் புரம் போயினன்—திருநெடுமாலுறைகின்ற நீண்ட வைகுந்த நகரத்துக்குச் சென்றருளினர்; கண நாதர் முடுகி முன் ஏகினர்—பூத கண நாதர்கள் விரைந்து முன்னே சென்றனர். (181)

அந்த மில்கண மானவர் யாவரு
முந்தி யேக முதற்பெரு வாயிலோன்
றந்தி ரத்தலை வன்றடுத் தானரோ
நந்து மாழியு நாரணன் போலுளான்.

அந்தம் இல் கணமானவர் யாவரும் முந்தி ஏக—அழிவில்லாத பூத கணத்தின ரனைவரும் முன்னே செல்லாநிற்ப, முதல் பெரு வாயிலோன்—முதற்கண்ணுள்ள பெரிய வாயிற்காவலனும், தந்திரத் தலைவன்—சேனாதிபதியும், நந்தும் ஆழியும் நாரணன் போலுளான்—சங்கையுஞ் சக்கரத்தையுந் தரித்துத் திருமாலின் சாரூபத்தைப் பெற்றுளோனும் ஆகிய விடுவசேனன் என்பான், தடுத்தான்—பூதகணங்களை உள்ளே செல்லாமற் றடை செய்தான். (182)

காலவேகனை யாதிக் கணத்தவ
ராலமென்ன வவனொடு போர்செய
மேலையோனங்கு மேவி யவனுடல்
சூலமேற்கொந்தித் துண்ணென வேகினான்.

காலவேகன் ஆதி கணத்தவர்—காலவேகன் முதலிய பூதகணத்தவர்கள், ஆலம் என்ன அவனொடு போர் செய—ஆலகால விடம்போல அவ் விடுவசேனனோடு போர் செய்யாநிற்ப, மேலையோன் அங்கு மேவி—மேலோரான வைரவக்கடவுள் அங்குச் சென்று, அவன் உடல் சூலமேற் கொந்தி—அவனுடம்பைச் சூலத்தாற் குத்தி ஏந்தி, துண்ணென ஏகினான்—விரைவாக உள்ளே சென்றருளினார். (183)

### வேறு

நிலமகளொருபுடை நிறங்கொள் பங்கய
மலர்மகளொருபுடை மருவப் பஃறலை
குலவிய பணியின்மேற் கொண்டன் மேனியான்
றலைமையொ டுறைதரு தான நண்ணினான்.

நில மகள் ஒரு புடை—பூமிதேவி ஒரு பக்கத்திலும், நிறங்கொள் பங்கய மலர்மகள் ஒரு புடை—செந்நிறத்தைக் கொண்ட தாமரை மலரிலிருக்கும் இலக்குமிதேவி ஒரு பக்கத்திலும், மருவ—இருக்க, பல் தலை குலவிய பணியின் மேல்—பலதலைகள் விளங்கிய சேஷ சயனத்தின்மீது, கொண்டல் மேனியான்—மேகவண்ணரான திருமால், தலைமையொடு உறைதரு தானம் நண்ணினான்—முதன்மையோடு வீற்றிருக்குந் தானத்தை அடைந்தருளினார். (184)

நிணங்கிளர் முத்தலை நெடிய வேலிறை
கணங்களி னிரையொடு கடிது செல்லமா
லணங்கினரோடெழா வையன் றாண்மிசை
வணங்கிநின் றெந்தைநீ வந்த தென்னென்றான்.

நிணம் கிளர் முத்தலை நெடிய வேல் இறை—நிணம் விளங்குகின்ற மூன்று தலைகளையுடைய நீண்ட சூலப்படையைத் தரித்த வைரவக்கடவுள், கணங் களின் நிரையொடு கடிது செல்ல—பூத கணங்களாகிய படைவகுப்போடு விரைந்து செல்ல, மால் அணங்கினரோடு எழா—திருமால் மனைவியரோ டெழுந்து, ஐயன் தாள் மிசை வணங்கி—வைரவக்கடவுளின் திருவடியின்மீது விழுந்து வணங்கி, நின்று—எழுந்து நின்று, எந்தை நீ வந்தது என் என்றான்—எமது பிதாவே தேவரீர் ஈண்டுப் போந்தது என்னை என்று கேட்டார். (185)

என்றலுங் கண்ணுத லிறைவன் யாமிவட்
சென்றது பலிக்குநின் றிருந்து சென்னியி
லொன்றிய குருதியே யுதவு வாயென
நன்றென நாரண னவின்று போற்றியே.

என்றலும்—என்று கேட்டவுடன், கண்ணுதல் இறைவன்—நெற்றிக் கண்ணினையுடைய வைரவக்கடவுள், யாம் இவண் சென்றது பலிக்கு—நாம் இங்கே வந்தது பிக்ஷைக்கு, நின் திருந்து சென்னியில் ஒன்றிய குருதியே உதவுவாய் என—உன்னுடைய திருந்திய சிரசிற் பொருந்திய இரத்தத்தையே உதவுவாயாக என்று கூற, நாரணன் நன்று என நவின்று போற்றி—திருமால் நல்லது என்று கூறித் துதித்து. (186)

தன்னுத லதனிடைத் தனது செங்கையி
னன்னகத் தாலொரு நாடி வாங்கியே
யன்னதொர் பொழுதினி லரியுய்த் தானரோ
துன்னிய குருதிநீர் சூலி யேற்பவே.

அன்னதொர் பொழுதினில் அரி—அப்பொழுதே திருமாலானவர், தன் நுதல் அதனிடை—தமது நெற்றியின்கண்ணே, தனது செங்கையின் நல் நகத்தால் ஒரு நாடி வாங்கி—தமது சிவந்த நல்ல கைந்நகத்தால் ஒரு நரம்பை வாங்கி, துன்னிய குருதி நீர்—செறிந்த இரத்த நீரை, சூலி ஏற்ப—சூலப்படையையுடைய வைரவக்கடவுள் ஏற்கும்படி, உய்த்தான்—பிக்ஷா பாத்திரத்தில் உகுத்தார். (187)

வீண்டிடு சோரியின் வெள்ளம் வெம்பணி
பூண்டதொர் கண்ணுதல் பொலங்கைச் சென்னிமே
லாண்டொரு நூறுநூ றவதி யுய்த்தலு
மாண்டது வேறொரு மயக்கம் வந்ததே.

வீண்டிடு சோரியின் வெள்ளம்—திருமாலின் நெற்றியினின்றும் வீழ்ந் தொழுகாநின்ற இரத்தப் பெருக்கு, ஆண்டு ஒரு நூறு நூறு அவதி—பதினாயிர

வருடகாலம், வெம்பணி பூண்டது ஓர் கண்ணுதல் பொலங்கைச் சென்னி மேல் உய்த்தலும்—வெவ்விய சர்ப்பத்தை யணிந்த ஒப்பில்லாத நெற்றிக் கண்ணினையுடைய வைரவக்கடவுள் அழகிய திருக்கரத்தி லேந்திய பிரம கபாலத்தின்மீது உகுத்தலும், மாண்டது—வறந்துபோனது; வேறு ஒரு மயக்கம் வந்தது—அகந்தையாகிய மயக்கத்துக்கு வேருகியதொரு மயக்கந் திருமாலுக்கு உண்டானது. (188)

பாதியு நிறைந்தது மில்லை பாணியின்
மீதுறு பலிக்கலன் மிக்க வன்மைபோய்ச்
சீதரன் சோர்தலுந் திருவு ஞாலமுங்
காதல னிலைமையைக் கண்டி ரங்கினர்.

பாணியின் மீது உறு பலிக்கலனும் பாதியும் நிறைந்தது இல்லை—திருக்கரத்தின்மீது பொருந்திய பிக்ஷாபாத்திரந்தானும் பாதியளவும் நிறைந்திலது; சீதரன் மிக்க வன்மை போய்ச் சோர்தலும்—திருமால் தமது மிக்க வலிமை நீங்கிச் சோர்வடைதலும், திருவும் ஞாலமும்—இலக்குமியும் பூமிதேவியும், காதலன் நிலைமையைக் கண்டு இரங்கினர்—தங்கள் நாயகரின் நிலைமையைக் கண்டு இரக்கங் கொண்டார்கள்.

நிறைந்ததும் என்புழி உம்மை, கலன் என்பதனோடு கூட்டப்பட்டது. (189)

செஞ்சர ணடைந்தயர் தெரிவை மார்தமை
யஞ்சலென் றருளியெம் மண்ண லச்சுத
னெஞ்சுறு மயலினை நீக்கி யாங்கவ
னுஞ்செழு மாறுசெய் துறையு ணீங்கினன்.

எம் அண்ணல்—எம் இறைவராகிய வைரவக்கடவுள், செம் சரண் அடைந்து அயர் தெரிவைமார் தமை—தமது செம்மையாகிய திருவடிகளை யடைந்து சோகமுறுகின்ற திருமாலின் தேவிமாரை, அஞ்சல் என்று அருளி—அஞ்சன்மின் என்று அருள்புரிந்து, அச்சுதன் நெஞ்சு உறு மயலினை நீக்கி—திருமாலினது நெஞ்சிற் பொருந்திய மயக்கத்தை நீக்கி, ஆங்கு அவன் உஞ்சு எழுமாறு செய்து—அங்கே அத் திருமால் உய்ந்தெழும்வண்ணஞ் செய்து, உறையுள் நீங்கினன்—அத் திருமாலின் இருப்பிடத்தை விடுத்துச் சென்றருளினர். (190)

நீங்கினன் பின்வரு நெடிய மாயனை
யீங்கினி திருத்தியென் றியம்ப வன்னவ
னேங்குநின் சூலமே லுற்று ளான்றனைப்
பாங்குற வருள்கெனப் பகர்ந்து வேண்டவே.

நீங்கினன்—அவ்விடத்தைவிட்டு நீங்கியருளியவரான வைரவக்கடவுள், பின் வரும் நெடிய மாயனை—தமக்குப் பின்னே தம்மைத் தொடர்ந்துவருகின்ற திருநெடுமாலை, ஈங்கு இனிது இருத்தி என்று இயம்ப—இங்கே இனிதாக இருக்குக என்று அநுக்கிரகிக்க, அன்னவன்—அந்தத் திருமால், ஓங்கு நின் சூலமேல் உற்றுளான் தனை—உயர்ந்து விளங்குகின்ற தேவரீரது சூலத்தின்மீது கோப்புண்டு கிடப்பவனாகிய விடுவசேனனை, பாங்குற—அடியேன் தேவரீருக்குத் தொண்டனும் உரிமையைப் பொருந்த, அருள்க என பகர்ந்து வேண்ட—தந்தருள்க என்று உரைத்து வேண்டுதல் செய்ய. (191)

கைத்தலை யயன்றலைக் கபால்கொண் டுற்றவன்
முத்தலை வேலினு முடிந்த சேனையின்
மெய்த்தலை வன்றனை விடுத்துத் தொல்லுயி
ரத்தலை நல்கியே யருள்செய் தானரோ.

கைத்தலை அயன் தலை கபால் கொண்டு உற்றவன்—திருக்கரத்திலே பிரமாவின் கபாலந் தரித்து எழுந்தருளியவராகிய வைரவக்கடவுள், முடிந்த சேனையின் மெய்த் தலைவன் தனை—இறந்த மெய்ம்மையான சேனாதிபதியாகிய விடுவசேனனை, முத்தலை வேலினும் விடுத்து—முத்தலைச் சூலத்தினின்றும் விடுத்து, அத்தலை—அப்பொழுது, தொல் உயிர் நல்கி—பழைய உயிரைக் கொடுத்து, அருள் செய்தான்—கருணை புரிந்தார். (192)

மாலுல கொருவியே வடுக னன்னதோர்
கோலமொ டேகணங் குழுமிச் சூழ்தர
மேலுள புவனமேன் மேவி வைகலும்
பாலனஞ் செய்தனன் பலவண் டங்களும்.

மால் உலகு ஒருவி—திருமாலின் உலகமாகிய வைகுந்தத்தை நீங்கி, வடுகன்—வைரவக் கடவுள், அன்னதோர் கோலமொடு—அந்த ஒப்பற்ற உக்கிர மூர்த்தத்தோடு, கணம் குழுமிச் சூழ்தர—பூதகணங்கள் குழுமித் தம்மைச் சூழ, மேல் உள புவனமேல் மேவி—அண்ட முகட்டிலுள்ள தமது புவனத்தின் கண் இருந்து, பல அண்டங்களும் வைகலும் பாலனஞ் செய்தனன்—பல அண்டங்களையுந் தினந்தோறும் பாதுகாத்தருளினர். (193)

அடுவதொ ரிறுதியி லமல னாணையாற்
கடவுளர் சென்னியுங் கமல னாதியோர்
முடிகளு மட்டுயிர் முற்று மாற்றிநுண்
பொடிபட வியற்றுமாற் புவனம் யாவையும்.

அடுவது ஓர் இறுதியில்—உலகினைச் சங்கரிப்பதாகிய ஒப்பற்ற சங்கார காலத்தில், அமலன் ஆணையால்—சிவபெருமானுடைய கட்டளையினாலே, கடவுளர் சென்னியும்—தேவர்களின் தலைகளையும், கமலன் ஆதியோர் முடிகளும்—பிரமா முதலியவர்களின் தலைகளையும், அட்டு—இவ் வைரவக்கடவுள் துணித்து, உயிர் முற்றும் மாற்றி—உயிர்கள் யாவற்றையுஞ் சங்கரித்து, புவனம் யாவையும் நுண் பொடி பட இயற்றும்—புவனம் அனைத்தையும் நுண்ணிய பொடியாகச் செய்தருளுவர். (194)

பொறியுறு முயிர்களும் புவனம் யாவையு
மிறுதியா யழிவுறு மீமத் தெல்லையின்
மறையெனு ஞாளியை யுயர்த்து மற்றவ
னுறுவதோர் மகிழ்ச்சியா னுலவு மென்பவே.

பொறி உறும் உயிர்களும்—ஐம்பொறிகளோடு பொருந்திய உயிர்களும், புவனம் யாவையும்—எல்லாப் புவனங்களும், இறுதியாய் அழிவுறும் ஈமத்து எல்லையில்—முடிவாகி அழியும் மகா மயானத்தினிடத்தில், மறை எனும் ஞாளியை உயர்த்து—வேதம் ஆகிய ஞாளிக்கொடியை உயர்த்தி, உறுவது ஓர் மகிழ்ச்சியால்—உண்டானதொரு பேரானந்தத்தால், அவன் உலவும்—அவ் வைரவக்கடவுள் உலாவியருள்வார்; என்ப—என்று சங்கார இரகசியத்தை அறிந்தோர் கூறுவர்.

ஞாளியை ஊர்ந்து அதனால் அதனை உயரச்செய்து என்றுமாம். (195)

**வேறு**

கண்ட கங்கொள் கபால்கொடு காசினி
விண்ட கந்தொறும் வெம்பலிக் குற்றது
முண்ட கன்முத லோர்தமை யெம்பிரான்
றண்ட கஞ்செய் தலையளி யாகுமால்.

கண்டகம் கொள் கபால் கொடு—வைரம் பொருந்திய கபாலத்தை ஏந்திக்கொண்டு, காசினி விண்டு அகம் தொறும்—பூமியிலும் ஆகாயத்திலும் உள்ள இடந்தோறும், வெம் பலிக்கு உற்றது—விரும்பப்படும் பிக்ஷைக்குச் சென்றது, முண்டகன் முதலோர் தமை—தாமரையாசனரான பிரமா முதலியவர்களை, எம்பிரான் தண்டகம் செய் தலையளியாகும்—எம்பெருமான் தண்டித்து நல்வழிப்படுத்துகின்ற பேரருளேயாம். (196)

ஆற்றின் மல்கு மவிர்சடை யண்ணல்பாற்
றோற்று கின்றதொர் தூயவன் சோரிநீ
ரேற்ற தன்மை யியம்பின மீங்கினி
வேற்று ருக்கொண்ட தன்மை விளம்புவாம்.

ஆற்றின் மல்கும் அவிர்சடை அண்ணல்பால்—கங்கையினாற் பொலிந்து விளங்குகின்ற சடையினையுடைய சிவபெருமானிடத்து, தோற்றுகின்றது ஓர் தூயவன்—உதிக்கின்ற ஒப்பில்லாத தூயோராகிய வைரவக்கடவுள், சோரி நீர் ஏற்ற தன்மை ஈங்கு இயம்பினம்—இரத்தப் பலியை ஏற்ற இயல்பை இங்கே சொன்னோம்; இனி வேற்றுருக் கொண்ட தன்மை விளம்புவாம்—இனிச் சிவபெருமான் வேற்றுருக்கொண்ட தன்மையைச் சொல்லுவோம்.

அண்ணல்பால் தோற்றுகின்றதோர் தூயவன் செய்கையும் அண்ணல் செய்கையேயாம்; வைரவக்கடவுள் இறைவனின் வேறன்மையினென்க. *(197)*

**வேறு**

முந்தொரு ஞான்றுமூ வுலகும் போற்றிடு
மிந்திர னிமையவ ரினத்தொ டேகியே
யந்தமில் கயிலையி லரனைப் போற்றுவான்
வந்தன னகந்தையு மனத்திற் றாங்கியே.

முந்து ஒரு ஞான்று—முன்னொரு காலத்திலே, மூவுலகும் போற்றிடும் இந்திரன்—மூன்றுலகத்தாருந் துதிக்கின்ற இந்திரன், இமையவர் இனத்தொடு ஏகி—தேவர் கூட்டத்துடன் சென்று, அந்தம் இல் கயிலையில் அரனைப் போற்றுவான்—அழிவில்லாத திருக்கைலாயத்தின்கண் சிவபெருமானை வழி படுதற்கு, அகந்தையும் மனத்தில் தாங்கி வந்தனன்—அகங்காரத்தையும் மனத் திற் சுமந்துகொண்டு வந்தான். *(198)*

பொன்கெழு கடிமதிற் பொன்னங் கோயின்முன்
மின்கெழு வச்சிர வேந்தன் சேர்தலுங்
கொன்கெழு பாரிடக் கோலந் தாங்கியே
முன்கடை நின்றனன் முடிவின் முன்னையோன்.

பொன் கெழு—அழகு கெழுமிய, கடி மதில்—காவலாகிய மதிலினையுடைய, பொன்னங் கோயின் முன்—செம்பொற்றிருக்கோயிலி னெதிரே, மின் கெழு வச்சிர வேந்தன் சேர்தலும்—ஒளி வீசுகின்ற வச்சிராயுதந் தரித்த இந்திரன் செல்லுதலும், முடிவில் முன்னையோன்—அழிவில்லாத பழையோராகிய சிவ பெருமான், கொன் கெழு—அச்சத்தை விளைக்கின்ற, பாரிடக் கோலம் தாங்கி—பூத வேடங் கொண்டு, முன் கடை நின்றனன்—முதற்கடைவாய்தலில் நின் றருளினார். *(199)*

நின்றிடு மொருவனை நெடிது நோக்கியே
யின்றுனைக் கண்டனன் யாரை யையநீ
மன்றவும் விருந்தினை வள்ள லைத்தொழச்
சென்றனன் வேலையென் செப்பு கென்னவே.

நின்றிடும் ஒருவனை—பூத வேடத்தோடு நிற்கின்ற சிவபெருமானை, நெடிது நோக்கி—நீண்ட நேரம் உற்றுப் பார்த்து, மன்றவும் விருந்தினை—மிகவும் புதியை; இன்று உனைக் கண்டனன்—இன்றுதான் உன்னை இங்கே கண்டேன்; ஐய நீ யார்—ஐயனே நீ யாவன்; வள்ளலைத் தொழச் சென்றனன்—யான் அருள்வள்ளலாகிய சிவபெருமானை வணங்குவதற்கு வந்தேன்; வேலை என்—அதற்கேற்ற செவ்விதான் யாது; செப்புக என்ன—செப்புவாயாக என்று இந்திரன் வினவ. (200)

மற்றது காலையின் மகேசன் யாவதுஞ்
சொற்றில ளுகியே சூர்த்த நோக்குட
னுற்றிட மேல்வரு மூற்ற முன்னலன்
செற்றம தாயினன் றேவர் செம்மலே.

அது காலையின்—அப்பொழுது, மகேசன் யாவதும் சொற்றிலனாகி—மகாதேவரான சிவபெருமான் ஒன்றுஞ் சொல்லாதவராய், சூர்த்த நோக்குடன் உற்றிட—அச்சந்தரும் பார்வையுடன் வாளாநிற்க, மேல் வரும் ஊற்றம் உன்னலன்—பின்ன ருண்டாகும் ஊறுபா டொன்றையுஞ் சிந்தியாதவனாய், தேவர் செம்மல் செற்றமது ஆயினன்—தேவேந்திரன் கோபங் கொண்டான். (201)

அண்டரு மகந்தைய னாற்ற வுந்திறல்
கொண்டன னென்றுதன் குலிச மாப்படை
கண்டக னெறிதலுங் கடவுண் மேற்படா
நுண்டுக ளாகியே நொய்தின் மாய்ந்ததே.

அண்டரும் அகந்தையன்—கிட்டுதற்கரிய அகங்காரம் படைத்தவன்; ஆற்றவும் திறல் கொண்டனன்—மிக்க வலிமையுடையவன்; என்று—என்று கருதி, தன் குலிச மாப்படை கண்டகன் எறிதலும்—தனது பெரிய குலிசாயுதத்தைக் கீழோனான இந்திரன் எறிதலும், கடவுள்மேற் படா—அக் குலிசாயுதம் பூதவேடமாகிய கடவுள்மேற் பட்டு, நுண் துகள் ஆகி நொய்தின் மாய்ந்தது—நுண்ணிய துகளாய் விரைவி லழிந்தது. (202)

மருத்துவன் வச்சிர மாய்ந்து போதலும்
புரத்தினை யட்டருள் புனித னவ்வழிக்
கிருத்திம வுருவினை நீங்கிக் கேழ்கிள
ருருத்திர வடிவினை யொல்லை தாங்கினான்.

மருத்துவன் வச்சிரம் மாய்ந்து போதலும்—இந்திரனுடைய குலிசாயுதம் அழிந்துபோக, புரத்தினை அட்டு அருள் புனிதன்—திரிபுரத்தினை அழித்து

அருள்புரிந்த சிவபெருமான், அவ்வழி—அப்பொழுது, கிருத்திம உருவினை நீங்கி—பூத உருவத்தை விடுத்து, கேழ் கிளர் உருத்திர வடிவினை ஒல்லை தாங்கினன்—ஒளி கிளருகின்ற உருத்திரவடிவத்தை விரைந்தெடுத்தார். (203)

உயர்ப்புறு சடிலநின் றூறு தண்புன
லயர்ப்புறு மகபதி யகந்தை கண்டட
மயிர்ப்புற மெங்கணும் வந்து தோன்றலின்
வியர்ப்புவந் தடைந்தன மேனி முற்றுமே.

உயர்ப்பு உறு சடிலம் நின்று—உயர்வாகிய சடையினின்றும், ஊறு தண் புனல்—ஊற்றெடுக்கின்ற தண்ணிய கங்கையானது, அயர்ப்பு உறு மகபதி அகந்தை கண்டு—தன்னை மறந்த இந்திரனுடைய அகங்காரத்தைக் கண்டு, அட—அவனைத் தண்டிக்கும் பொருட்டு, மயிர்ப்புறம் எங்கணும் வந்து தோன்றலின்—மயிர்க்கால்கள் எவ்விடத்தும் வந்து தோன்றினாற்போல, மேனி முற்றும்—திருமேனி முழுவதும், வியர்ப்பு வந்து அடைந்தன—வியர்வை ஒழுக்குக்கள் வெளிப்பட்டுத் தோன்றின. (204)

எள்ளுதல் செய்திடு மிவன்ற னாருயிர்
கொள்ளுது மெனச்சினங் கொண்ட தீயொடு
முள்ளுறு காலெழீஇ யொருங்கு சென்றெனப்
பொள்ளென வுயிர்ப்பழல் புகையொ டுற்றதே.

எள்ளுதல் செய்திடும்—சிவபெருமானை இகழுகின்ற, இவன் தன் ஆருயிர் கொள்ளுதும் எனச் சினம் கொண்ட—இவனுடைய அரிய உயிரை வாங்குவோம் என்று கோபங்கொண்ட, தீயொடும்—அக்கினியோடு, உள்ளுறு கால்—உள்ளே பொருந்திய காற்று, ஒருங்கு எழீஇச் சென்றென—ஒன்றுபட்டு எழுந்து சென்றாற்போல, உயிர்ப்பு அழல்—நெட்டுயிர்ப்பாகிய அக்கினி, பொள்ளெனப் புகையொ டுற்றது—விரைந்து புகையோ டெழுந்தது. (205)

குறுகிநின் றாற்றலாற் குலிச மாப்படை
யெறிதரு கொடியனை யெய்த வேளெனச்
செறுகனல் விழியெனச் செப்பச் சேறல்போ
னெறிதரு புருவமு நெற்றி சேர்ந்தவே.

குறுகி நின்று—அணுகி நின்று, ஆற்றலால் குலிச மா படை எறிதரு கொடியனை—வன்மையினாற் குலிசமாகிய பெரிய படையை யெறிந்த இந்தக் கொடியவனை, கனல் விழி—அக்கினிக் கண்ணே நீ, எய்த வேளென செறு—மலரம்பெய்த மன்மதனைச் செற்றது போலச் செறக்கடவாய்; என செப்பச்

சேறல்போல்—என்று செப்புதற்குச் செல்லுவதுபோல, நெறிதரு புருவமும் நெற்றி சேர்ந்த—நெறித்த இரு புருவங்களும் நெற்றிமேற் சென்றன. (206)

பற்றலர் புரங்களோ வுலகின் பன்மையோ
முற்றுயி ரீட்டமோ முடிக்கப் பேதையைச்
செற்றிடல் வசையவன் செயலைக் காண்டுமென்
றுற்றனன் முறுவலு முதித்த தொல்லையில்.

பேதையை முடிக்க—இந்த அறிவிலியைச் சங்கரித்தற்கு, பற்றலர் புரங்களோ—இவன் பகைவர்களின் முப்புரங்களும் அல்லன்; உலகின் பன்மையோ—பலவாகிய உலகக் கூட்டங்களு மல்லன்; முற்று உயிரீட்டமோ—முடிதற்குரிய உயிர்க்கூட்டங்களு மல்லன்; செற்றிடல் வசை—இவ்வற்பனைப் பொருள் செய்து சங்கரித்தல் வசையாம்; அவன் செயலைக் காண்டும் என்று உற்றனன்—அவனுடைய செய்கையைப் பார்ப்போம் என்று வாளாநின்றருளினர்; ஒல்லையில் முறுவலும் உதித்தது—உடனே புன்முறுவலும் உண்டானது. (207)

துடித்தன துவரித ழுரப்பித் தூயவா
யிடித்தன சேந்தன விரண்டு கண்களும்
விடத்தினை நுகர்ந்தவன் வெகுளித் தீயினுக்
கடுத்திடு துணைவர்த மமைதி போலவே.

விடத்தினை நுகர்ந்தவன் வெகுளித் தீயினுக்கு—ஆலகால விடத்தை உண்ட சிவபெருமானது கோபாக்கினிக்கு, அடுத்திடும் துணைவர்தம் அமைதி போல—அடுத்து வந்து உதவுகின்ற உடன்பிறப்பாளரின் அமைவுபோல, துவர் இதழ் துடித்தன—செவ்விதழ்கள் துடித்தன; தூய வாய் உரப்பி இடித்தன—தூய்மையாகிய திருவாய் உரப்பி இடிகள் இடித்தன ; இரண்டு கண்களும் சேந்தன—இரு கண்களுஞ் சிவந்தன.

உரப்ப, உரப்பி என நின்றது. (208)

அக்கண மிவ்வகை யார்க்கு மாதியா
முக்கண ஞன்முகன் முதல தேவரு
மிக்குள வுயிர்களும் வெருவ வெய்யதோ
ருக்கிர வடிவுகொண் டுருத்து நின்றனன்.

அக்கணம்—அப்பொழுது, இவ்வகை—இவ்வாறு, யார்க்கும் ஆதி ஆம் முக்கணன்—யாவர்க்கும் முதலாகிய சிவபெருமான், நான்முகன் முதல தேவரும்—பிரமா முதலிய தேவர்களும், மிக்கு உள உயிர்களும் வெருவ—எஞ்சியுள்ள உயிர்களும் அஞ்சும்வண்ணம், வெய்யது ஓர் உக்கிர வடிவு கொண்டு—வெம்மைத்தாயதோர் உக்கிர வடிவங் கொண்டு, உருத்து நின்றனன்—உருத்து நின்றருளினர். (209)

வேறு

நிற்கின்ற வெம்பெருமான் பெருஞ்சீற்றந்
தனைநோக்கி நெஞ்ச மாகுங்
கற்குன்ற நடுநடுங்கப் பதைபதையா
வஞ்சியவன் கழலின் வீழ்ந்தே
யெற்குன்றன் மாயமெலாந் தெரிந்திடுமோ
மாலயனு மின்னுந் தேறார்
பொற்குன்றச் சிலையானே வினையேன்செய்
பிழையதனைப் பொறுத்தி யென்றான்.

நிற்கின்ற எம்பெருமான் பெரும் சீற்றம் தனை நோக்கி—உருத்துநிற்கின்ற எம்பெருமானுடைய பெரிய கோபத்தைக் கண்டு, நெஞ்சமாகும் கல் குன்றம் நடுநடுங்க—மனமாகிய கன்மலை நடுநடுங்க, பதைபதையா அஞ்சி—பதை பதைத்து அஞ்சி, அவன் கழலில் வீழ்ந்து—அப்பெருமானுடைய பாதங் களில் விழுந்து வணங்கி, எற்கு உன் தன் மாயம் எலாம் தெரிந்திடுமோ—எளியேனுக்குத் தேவரீருடைய மாயங்களெல்லாந் தெரியுமோ; மால் அயனும் இன்னும் தேறார்—திருமாலும் பிரமதேவரும் இன்னமும் அறியார்; பொன் குன்றச் சிலையானே—பொன்மலையாகிய மேருவை வில்லாக உடையவரே, வினையேன் செய் பிழையதனை பொறுத்தி என்றான்—தீவினையேன் செய்த குற்றத்தைப் பொறுத்தருள்வீராக என்று பிரார்த்தித்தான். (210)

போற்றிப்பன் முறைதாழும் புரந்தரனை
யஞ்சலென்று புரிந்து நோக்கி
மேற்றிக்கில் வீழ்கின்ற செங்கதிரோ
விதுவென்ன வேலை மேற்றன்
சீற்றத்தீ யினைவீசி யாங்கவற்கு
விடைகொடுத்துச் செல்கென் றேவி
யேற்றிற்செ யரியணைமே லுறையுள்புகுந்
துமையொடும்வீற் றிருந்தா னெங்கோன்.

போற்றி பன்முறை தாழும் புரந்தரனை—துதித்துப் பலமுறை வணங்கு கின்ற இந்திரனை, அஞ்சல் என்று புரிந்து நோக்கி—அஞ்சற்க என்று அபயம் அளித்து நோக்கி, மேல் திக்கில் வீழ்கின்ற செங்கதிரோ இது என்ன—மேற் றிசையில் அத்தமனஞ் செய்கின்ற செஞ்ஞாயிறோ இது என்று கருதும்படி, தன் சீற்றத் தீயினை வேலைமேல் வீசி—தமது கோபாக்கினியைச் சமுத்திரத்தின் மீது எறிந்து, ஆங்கு அவற்கு செல்க என்று விடைகொடுத்து ஏவி—அங்கே அவ்விந்திரனுக்குச் செல்லுக என்று விடைகொடுத்து அனுப்பி, உறையுள் புகுந்து—கோயிலுட் சென்று, அரி ஏற்றில் செய் அணைமேல்—சிங்கேற்றின் மீது செய்யப்பட்ட ஆசனத்தின்மீது, உமையொடும் எம் கோன் வீற்றிருந் தான்—உமாதேவியாரோடும் எம்பெருமான் வீற்றிருந்தருளினார். (211)

### வேறு

கூற்று வன்றனிக் கூற்றன் மந்திரம்
வீற்றி ருந்திடும் வேலே வாய்தனி
லாற்றல் சேர்புனற் கரசன் பால்விடு
சீற்ற மானதோர் சிறுவ ஞனதே.

தனிக் கூற்றுவன் கூற்றன்—ஒப்பில்லாத காலகாலரான சிவபெருமான், மந்திரம் வீற்றிருந்திடும் வேலேவாய்தனில்—ஆலயத்தில் எழுந்தருளியிருந்த போது, ஆற்றல் சேர் புனற்கு அரசன்பால் விடு சீற்றமானது—வலி பொருந்திய சமுத்திரராசனுகிய வருணனிடத்து விடுத்த சீற்றமானது, ஓர் சிறுவன் ஆனது—ஒரு சிறுவன் ஆயினது. (212)

ஆன பாலனே யம்பு ராசிதன்
கானு லாந்திரைக் கரங்க ளாற்றழீஇத்
தான வேசனென் றனய ஞயினு
ஞன லாதியார் நற்ற வஞ்செய்தார்.

ஆன பாலனே—அவ்வாறுண்டான சிறுவனே, அம்புராசி தன் கான் உலாம் திரைக் கரங்களால் தழீஇ—கடலானது தனது மிக்குப் பரந்த திரைகளாகிய கைகளாலே தழுவி, தானவேசன் என் தனயன் ஆயினுன்—அசுரேசன் எனது புதல்வனுயினுன்; நான் அலாது நல் தவம் செய்தார் யார்—யானே யல்லாமல் நல்ல தவஞ் செய்தவர் யாவர்.

அம்புராசி ஆகுபெயராய்க் கடற்கரசனே உணர்த்திற்று. கான் மிகுதி குறித்தது. (213)

ஊழி பேரினு முலகம் பேரினும்
வாழி வாழியென் மைந்த நீயெனுக்
கேழி லாசிகள் கிளத்திப் போற்றினு
ஞழி மால்கடற் கரச னென்பவே.

ஊழி பேரினும்—ஊழிக்காலம் வந்தாலும், உலகம் பேரினும்—ஊழியினுலே உலகம் நிலேகுலேந்தாலும், என் மைந்த நீ வாழி வாழி எனு—எனது மகனே நீ வாழ்க வாழ்க என்று, கேழ்இல் ஆசிகள் கிளத்தி-ஒப்பில்லாத ஆசிகள் கூறி, ஆழி மால் கடற்கு அரசன் போற்றினுன்—ஆழியாகிய பெரிய கடற் கரசன் வளர்த்தான். (214)

நசைகு லாவிய நரலே காத்திட
வசைவி லான்சிறி தழுத வேலேயில்
வசையி லாதுயர் வானு மண்ணுமெண்
டிசையும் யாவையுஞ் செவிடு பட்டவே.

நசை குலாவிய நரலை காத்திட—புத்திர வாஞ்சை மிக்க சமுத்திரம் பாதுகாக்க, அசைவிலான் சிறிது அழுத வேலையில்—அசைவற்ற அச்சிறுவன் சிறிது அழுதபோது, வசை இலாது உயர் வானும்—வசையின்றி உயர்ந்த வானுலகமும், மண்ணும்—மண்ணுலகமும், எண் திசையும்—எட்டுத் திக்குக் களும், யாவையும் செவிடு பட்ட—அனைத்துஞ் செவிடுபட்டன. (215)

நூன்மு கத்தினோர் நுனித்துக் காணுறு
நான்மு கத்தினே னுடி யிவ்வொலி
வான்மு கத்திடை வருமி தேதெனு
மீன்மு கத்துலாம் வேலை மேவினுன்.

நூல் முகத்தினோர்—நூலறிஞர்கள், நுனித்துக் காணுறும்—நுணுகி அறி கின்ற, நான்முகத்தினேன்—பிரமா, இவ்வொலி நாடி—இவ்வழுகையொலி யைக் கேட்டு, வான் முகத்திடை வரும் இது ஏது எனு—வானத்தின்கண் வருகின்ற இவ்வொலிதான் யாதோ என்று, மீன் முகத்து உலாம் வேலை மேவினுன்—மீன்கள் தன்பால் உலாவுகின்ற சமுத்திரத்தை அடைந்தார். (216)

வேலை சேரவவ் வேலை வேலையுஞ்
சால வன்பினுற் றவிசொன் றிட்டுநீ
யேல மேவுகென் றிருத்தி யான்பெறும்
பால னீங்கிவன் பார்த்தி யாலெனு.

வேலை சேர—பிரமதேவர் சமுத்திரத்தை அடைய, அ வேலை—அப்பொழுது, வேலையும்—சமுத்திர ராசனுன வருணனும், சால அன்பினுல் தவிசு ஒன்று இட்டு—மிக்க அன்போடு ஓராசனத்தை இட்டு, ஏல மேவுக என்று இருத்தி—பொருத்தமுற இருத்திர் என்று இருத்தி, ஈங்கு இவன் யான் பெறும் பாலன்—இங்கே அழுகின்ற இவன் யான் பெற்ற புதல்வன், நீ பார்த்தி எனு—நீர் பார்ப்பீராக என்று. (217)

கையி னீட்டலுங் கடிது வாங்கியே
யையன் றன்மடி யதனிற் சேர்த்திடத்
துய்ய புல்லணந் தொடர்ந்து பற்றினுன்
மையன் மைந்தனுந் தனது வன்மையால்.

கையில் நீட்டலும்—கரத்தில் நீட்ட, கடிது வாங்கி—விரைந்து பெற்று, ஐயன்—தந்தையாகிய பிரமா, தன் மடி அதனில் சேர்த்திட—தமது மடித்தலத் தில் வளர்த்துதலும், மையல் மைந்தனும்—மயக்கத்தினையுடைய அப் புதல்வ னும், தனது வன்மையால்—தனது வலிமையினுல், துய்ய புல்லணம் தொடர்ந்து பற்றினுன்—பிரமாவினுடைய தூய்மையான தாடியை எட்டிப் பிடித்தான்.

மண் பொதுத்தந்தை யாதலின் ஐயன் என்ருர். மையல் மைந்தன், சிவ கோபத்தா லுதித்த மைந்தன் எனினுமாம். (218)

நார்த்தொ டுத்தெனு நான்கு தாடியு
மீர்த்துத் தூங்கலு மிணையில் வேதனு
மார்த்தி யெய்தினு னவன்க ணேயவன்
சீர்த்தி கான்றெனச் சிந்திற் றெண்புனல்.

நார்த் தொடுத்து எனும் நான்கு தாடியும்—நாரைத் தொடுத்தாற் போலும் நான்முகரின் நான்கு தாடிகளையும், ஈர்த்துத் தூங்கலும்—இழுத்துக் கொண்டு அப்புதல்வன் தூங்குதலும், இணையில் வேதனும் ஆர்த்தி எய்தினுன்—ஒப்பில்லாத பிரமதேவரும் வருத்தம் உற்ருர்; அவன் கணே—அப்பிரம தேவரின் கண்களே, அவன் சீர்த்தி கான்றென—அப் புதல்வனுடைய கீர்த்தியைக் கான்ருற் போல, ஒண் புனல் சிந்திற்று—ஒள்ளிய நீரைச் சிந்தின.

கண் என்பதற் கியையச் சிந்திற்று என ஒருமையாற் கூறினர். எட்டுக் கண்களும் நீர் பொழிந்தன என்க. (219)

காலெரு டர்ந்திழி கலங்கு கட்புன
லாறு போலிய வகலந் தன்வழிச்
சேறன் மேயது செறிவுற் றீண்டியே
வேறெர் வேலைபோல் வேலை புக்கதே.

கால் தொடர்ந்து இழி கலங்கு கண் புனல்—கால் கொண்டிறங்குகின்ற கலங்கிய கண்ணீரானது, ஆறு போலிய—ஆற்றை ஒப்ப, அகலம் தன்வழிச் சேறன் மேயது—மார்பின் வழியே செல்லுதலைத் தொடங்கி, செறிவுற்று ஈண்டி—நெருங்கிப் பொருந்தி, வேறெர் வேலைபோல் வேலை புக்கது—மற்றொரு சமுத்திரத்தைப் போலச் சமுத்திரத்திற் புகுந்தது.

போலிய, செய்யியஎன் வினையெச்சம். மேயது எச்சமுற்று. (220)

முக்க ணுயகன் முனிவு தன்னிடைப்
புக்க காலையிற் புனல்வ றந்திடு
மைக்க ருங்கடல் வறுமை நீங்கிற்ருன்
மிக்க நான்முகன் விழியி னீரினுல்.

முக்கண் நாயகன் முனிவு—மூன்று கண்களையுடைய சிவபெருமானுடைய கோபத் தீ, தன்னிடைப் புக்க காலையில்—தன்னிடத்துப் புகுந்தபொழுது, புனல் வறந்திடு மை கருங்கடல்—நீர் வற்றிப்போன மைபோலுங் கரிய கடலானது, மிக்க நான்முகன் விழியின் நீரினுல் வறுமை நீங்கிற்று—உயர்ந்த

பிரமதேவரின் விழிகளினின்றும் பெருகிய கண்ணீர் வெள்ளத்தால் நீரின்மை யாகிய வறுமை நீங்கியது. (221)

பதும னவ்வழிப் படர்ம யிர்த்தொகை
மதலை கையினு மரபி னீக்கியே
கதுமெ னப்பல கரங்க ளாலெடுத்
துததி தன்கையி லுயிர்த்து நீட்டினன்.

பதுமன் அவ்வழி—பிரமதேவர் அப்பொழுது, படர் மயிர்த்தொகை—பரந்த தாடியின் மயிர்த்தொகையை, மதலை கையினும் மரபின் நீக்கி—அச்சிறுவனது கையினின்றும் விடுவிக்கு முறையில் விடுவித்துக்கொண்டு, கதுமெனப் பல கரங்களால் எடுத்து—விரைவாக அவனைப் பல கரங்களால் எடுத்து, உததி தன் கையில் உயிர்த்து நீட்டினன்—சமுத்திரராசன் கையில் நெட்டுயிர்த்துக் கொடுத்தார்.

இது நேர்ந்ததே என்று உயிர்த்தாரென்க. (222)

நீட்டி யோரிறை நினைந்து நீயிது
கேட்டி யொன்றியாங் கிளத்து வோமிவ
னேட்டு லாயதே னிதழி சென்னியிற்
சூட்டு மெம்பிரான் முனிவிற் றோன்றினன்.

நீட்டி—வருணன் கையிற் கொடுத்து, ஓர் இறை நினைந்து—ஒரு கணப் பொழுது சிந்தித்து, நீ இது கேட்டி—வருணனே நீ இதனைக் கேட்பாயாக; யாம் ஒன்று கிளத்துவோம்—யாம் ஒன்று கூறுவோம்; இவன்—இப்புதல்வன், ஏடு உலாய தேன் இதழி—இதழ்களிலே தேன்பொருந்திய கொன்றை மலரை, சென்னியில் சூட்டும் எம்பிரான்—சிரசிற் சூட்டுகின்ற எம்பெருமானுடைய, முனிவில் தோன்றினன்—கோபத்தில் உதித்தான். (223)

கருதி டானொரு கடவு டன்னையும்
வரமும் வேண்டல னேது மற்றிவ
னொருவ ராலுமீ றுற்றி டானரோ
பரமன் சீற்றமே யான பான்மையால்.

பரமன் சீற்றமே ஆன பான்மையால்—சிவபெருமானது கோபமே இச் சிறுவன் ஆகிய தன்மையால், இவன் ஒரு கடவுள் தன்னையும் கருதிடான்—இவன் யாதொரு தெய்வத்தையும் நினையான்; ஏதும் வரமும் வேண்டலன்—யாதுமொரு வரத்தையும் பெற விரும்பான்; ஒருவராலும் ஈறு உற்றிடான்—எவர் ஒருவராலும் இறக்கமாட்டான். (224)

தேவர் தேவர்கோன் றிசையி னோர்வெரீஇப்
போவ ரேயெனிற் பொருகிற் பாரெவர்
நீவி ரேனுமுன் னிற்ற லஞ்சுவீ
ரேவ ரேயிவ னெதிர்நிற் பார்களே.

தேவர் தேவர்கோன் திசையினோர்—தேவர்கள் தேவேந்திரன் திக்குப் பாலகர், வெரீஇப் போவரே எனின்—அஞ்சிப் புறங்கொடுப்பா ராளுல், எவர் பொருகிற்பார்—எவர்தாம் இவனை எதிர்த்துப் பொரவல்லவர்; நீவிரேனும்—பெற்று வளர்க்கும் நீவிரே எனினும், முன் நிற்றல் அஞ்சுவீர்—எதிரில் வாளா நிற்றற்கும் அஞ்சுவீர்கள்; இவன் எதிர் நிற்பார்கள் ஏவர்—இங்ஙனமாயின் இனி இவன்முன் நிற்பவர்கள் யாவருளர்.

சமுத்திரராசனோடு சமுத்திரத்தையும் முன்னிலைப்படுத்தி நீவிர் என்றார். நீயும் உன்போல்வாரும் எனினு மமையும். (225)

ஆயுந் தொன்னெறி யமரர் யாவரு
மீயுஞ் சாபம்வந் திவனை நேருமோ
காயுந் திண்டிறற் கடவுட்டன்மைசேர்
தீயுந் தீயுநின் சிறுவன் வெம்மையால்.

ஆயும் தொல் நெறி அமரர் யாவரும்—ஆராயப்படும் பழைய வேத நெறி கைவந்த தேவர்களெல்லாம், ஈயும் சாபம் வந்து இவனை நேருமோ—இடுகின்ற சாபங்கள் இவனை வந்து அணுகமாட்டா; காயும் திண் திறல் கடவுள் தன்மை சேர் தீயும்—காய்கின்ற திண்ணிய திறலினையுந் தெய்வத் தன்மையையு முடைய அக்கினிதேவனும், நின் சிறுவன் வெம்மையால் தீயும்—உனது சிறுவனது வெய்ய கோபாக்கினியினால் அழியும். (226)

நானு மஞ்சுவ னளினை காவலன்
றானு மஞ்சுவன் றவறில் வேள்விசெய்
கோனு மஞ்சும்வெங் கூற்று மஞ்சுமவ்
வானு மஞ்சுமிம் மண்ணு மஞ்சுமே.

நானும் அஞ்சுவன்—இவனுக்குச் சிருட்டிகர்த்தாவாகிய நானும் அஞ்சுவேன்; நளினை காவலன் தானும் அஞ்சுவன்—இலக்குமி நாயகரான விஷ்ணு மூர்த்தியும் அஞ்சுவார்; தவறில் வேள்வி செய் கோனும் அஞ்சும்—குற்ற மற்ற யாகங்களைச் செய்கின்ற இந்திரனும் அஞ்சுவான்; வெம் கூற்றும் அஞ்சும்—கொடிய யமனும் அஞ்சுவான்; அ வானும் அஞ்சும்—அந்த விண்ணுலகமும் அஞ்சும்; இ மண்ணும் அஞ்சும்—இந்த மண்ணுலகமும் அஞ்சும். (227)

பாச னங்களே பரவ ஞாலமேற்
றேசில் வெய்யகோல் செலுத்தி யாங்கவ
ராசி செய்யநீ டரசு செய்வனு
லீச னன்றியா ரிவனை வீட்டுவார்.

பாசனங்கள் பரவ—அசுரர்களாகிய உறவினர்கள் துதிக்க, ஆங்கு அவர் ஆசி செய்ய—அவ்வாறே அவர்கள்தாமே ஆசி வழங்க, தேசில் வெய்ய கோல் செலுத்தி—ஒளியில்லாத கொடுங்கோலைச் செலுத்தி, ஞாலம் மேல் நீடு அரசு செய்வன்—பூமியின்கண் நீண்ட காலம் அரசு செய்வான்; ஈசன் அன்றி இவனை வீட்டுவார் யார்—சிவபெருமானன்றி இவனை அழிக்கவல்லார் யாவர்? (228)

என்னு மாத்திரத் திவன்ற னக்குநீ
நன்ன லந்திகழ் நாம மொன்றினைப்
பன்னு கென்னநீ பரித்த லாலிவன்
றன்ன தொண்பெயர் சலந்த ரன்னெனு.

என்னும் மாத்திரத்து—என்று பிரமதேவர் கூறும்பொழுது, இவன் தனக்கு—இச் சிறுவனுக்கு, நீ—பிரமாவாகிய நீர், நல் நலம் திகழ் நாமம் ஒன்றினை—நன்மையும் அழகும் விளங்குகின்ற தொருபெயரை, பன்னுக என்ன—இடுக என்று வருணன் வேண்ட, நீ பரித்தலால்—சலமாகிய நீ தரித்தலினுலே, இவன் தன்னது ஒண் பெயர் சலந்தரன்—இவனது ஒள்ளிய பெயர் சலந்தரன் ஆகும்; எனு—என்று கூறி.

தரித்தல்—தாங்குதல். (229)

பேரிட் டொல்லையிற் பிரமன் றானுறை
யூரிற் போயினு னுததி பற்பகல்
சீரிற் போற்றலுஞ் சிறுவன் காளையாய்ப்
பாரிற் சேர்ந்தன னவுணர் பாற்பட.

பேர் இட்டு—சலந்தரன் என்று பெயரிட்டு, பிரமன் ஒல்லையில் தானுறை ஊரில் போயினன்—பிரமதேவர் விரைவில் தாமுறையும் உலகத்துச் சென்றார்; உததி பற்பகல் சீரிற் போற்றலும்—வருணன் பலநாளாகச் சிறப்புடன் வளர்த்துவர, சிறுவன் காளையாய்—அச் சிறுவன் காளைப்பருவத்தினனாய், பாரில் அவுணர் பாற்படச் சேர்ந்தனன்—பூமியில் அவுணர்கள் பக்ஷமாகச் சேர்ந்தான். (230)

சென்று பாரிடைத் திசைகள் யாவையும்
வென்று வாசவன் விண்ணு ளோர்நிதிக்
குன்று சேர்தரக் கொடுமை செய்தனன்
றுன்று கின்றதொல் லவுணர் சூழவே.

துன்றுகின்ற தொல் அவுணர் சூழ—நெருங்குகின்ற பழைய அவுணர்கள் சூழ்ந்துவர, பாரிடை சென்று—பூமியிற் சென்று, திசைகள் யாவையும் வென்று—திக்குக்கள் அனைத்தையும் வெற்றிகொண்டு, வாசவன் விண்ணுளோர்—இந்திரனுந் தேவர்களும், நிதிக் குன்று சேர்தர—பொன்மலையாகிய மேருமலைக்குச் செல்லும்படி, கொடுமை செய்தனன்—கொடுமை செய்தான். (231)

பொன்னெ டுங்கிரி தனிற்புத் தேளிரு
மன்னும் வைகலும் வான நாடெலாந்
தன்னை நேரிலான் றான வர்க்கெலா
நன்ன யப்பொடு நல்கி னனரோ.

புத்தேளிரும் மன்னும்—தேவர்களுந் தேவேந்திரனும், பொன் நெடுங் கிரிதனில் வைகலும்—நீண்ட பொன்மலையான மேருகிரியில் வசிக்க, வான நாடு எலாம்—வானுலக மனைத்தையும், தன்னை நேரிலான்—தனக்கொப்பில்லாத சலந்தரன், தானவர்க்கு எலாம் நல் நயப்பொடு நல்கினன்—அசுரர்களுக் கெல்லாம் நல்ல விருப்பத்துடன் கொடுத்தான். (232)

வச்சி ரப்படை மன்னன் பொன்னகர்
நச்சும் வண்ணமோர் நகரஞ் செய்கென
வச்ச லந்தர னருளத் தானவர்
தச்ச னவ்வழி சமைத்து நல்கினன்.

வச்சிரப்படை மன்னன் பொன்னகர் நச்சும் வண்ணம்—வச்சிரப்படையையுடைய இந்திரனது பொன்னுலகம் விரும்பும்படி, ஓர் நகரம் செய்க என அ சலந்தரன் அருள—ஒரு நகரத்தை உண்டாக்குவாயாக என்று அந்தச் சலந்தரன் கட்டளை செய்ய, தானவர் தச்சன் அ வழி சமைத்து நல்கினன்—அசுரத் தச்சன் அவ்வண்ணமே செய்து கொடுத்தான். (233)

பாந்தண் மீமிசை பரிக்கு நேமிசா
லாந்த ரம்மென வறைய நின்றதோ
ரேந்தன் மாநக ரிடையிற் றானவர்
வேந்தர் போற்றிட வரசின் மேயினன்.

பாந்தள் மீமிசைப் பரிக்கும் நேமி—ஆதிசேஷன் தலைமீது சுமக்கும் பூமியிலே, சாலாந்தரம் என அறைய நின்றது ஓர் ஏந்தல் மா நகரிடையில்—சாலாந்தரம் எனக் கூற நின்றதொரு பெருமையிற் சிறந்த பெரிய நகரத்தில், தானவர் வேந்தர் போற்றிட அரசின் மேயினன்—அசுர அரசர்கள் துதிக்க அரசுவீற்றிருந்தான். (234)

கால நேமியா மவுணன் கன்னிகை
வேலே நேர்விழி விருந்தை யென்பவள்
கோல நாடியே குரவன் கூறிட
வேல வேமணந் தின்ப மெய்தினன்.

கால நேமியாம் அவுணன் கன்னிகை—காலநேமி என்னும் அசுரன் புத்திரியாகிய, வேலே நேர் விழி விருந்தை என்பவள் கோலம் நாடி—வேற்படையையொத்த விழியினையுடைய விருந்தை என்பவளது அழகை ஆராய்ந்து, குரவன் கூறிட—குலகுருவாகிய சுக்கிராச்சாரியார் கூற, ஏல மணந்து—தன் மரபுக்கியைய மணந்து, இன்பம் எய்தினன்—இன்பத்தை அநுபவித்தான். (235)

பாரி லவ்வழிப் பன்னெ டும்பகல்
சீரின் வைகினன் றேவர் யாவரு
மேரு வுற்றன ரவரை மேவியாம்
போர்செய் வோமெனப் புகன்று போயினன்.

பாரில் அ வழிப் பல்நெடும் பகல் சீரின் வைகினன்—பூமியின்கண்ணே அவ்வண்ணம் பலநெடுங்காலஞ் சிறப்புடனிருந்த சலந்தரன், தேவர் யாவரும் மேரு உற்றனர்—தேவர்கள் யாவரும் எனக்கஞ்சி மேருமலையை அடைந்தனர்; அவரை மேவி—அத்தேவர்களை அடைந்து, யாம் போர் செய்வோம் எனப் புகன்று போயினன்—நாம் போர் புரிவோம் என்று கூறிச் சென்றான். (236)

துங்க வீரர்க டொழுச லந்தர
னங்கண் மேவலு மமரர் வெய்யவ
னிங்கும் வந்தன னென்செய் வோமெனச்
சிங்கங் கண்டதோர் கரியிற் றேம்பினர்.

துங்க வீரர்கள் தொழு சலந்தரன்—வெற்றி பொருந்திய வீரர்கள் வணங்குகின்ற சலந்தரன், அங்கண் மேவலும்—அந்த மேருமலையை அடைதலும், அமரர்—தேவர்கள், வெய்யவன் இங்கும் வந்தனன்—கொடியோன் இவ்விடத்துக்கும் வந்துவிட்டான்; என் செய்வோம் என—இனி என்ன செய்வோம் என்று, சிங்கம் கண்டதோர் கரியின் தேம்பினர்—சிங்கத்தைக் கண்டதொரு யானையைப்போலக் கலங்கினர்கள். (237)

தேம்பு கின்றவர் செய்வ தோர்கிலார்
பாம்ப ணைத்துயில் பவனை யுன்னியே
யோம்பு கென்றலு முவண மீமிசை
யேம்ப லோடும்வந் திமைப்பி லெய்தினன்.

செய்வது ஓர்கிலார் தேம்புகின்றவர்—செய்வதின்னதென்று தெரியாமற் கலங்குகின்ற தேவர்கள், பாம்பு அணை துயில்பவனை உன்னி—பாம்பணையில் அறிதுயில் செய்யும் விஷ்ணுமூர்த்தியைத் தியானித்து, ஓம்புக என்றலும்—பாதுகாக்குக என்று பிரார்த்தித்தலும், உவண மீமிசை ஏம்பலோடு இமைப்பில் வந்து எய்தினன்—கருடன்மீது விருப்பத்தோடு கணப்பொழுதில் வந்தெய்தினர். (238)

வருச லந்தரன் மாறு கொண்டெழ
விருப தாயிரம் யாண்டு பல்படை
யுரிய மாயைகொண் டுருத்தெ ழுந்துமால்
பொருதும் வென்றிலன் புகழ்ந்து போயினன்.

வரு சலந்தரன் மாறுகொண்டு எழ—பொரும்பொருட்டு வந்த சலந்தரன் மாறாக எழுந்து போர் செய்ய, இருபதாயிரம் யாண்டு—இருபதினாயிரம் வருடம், உருத்தெழுந்து—கோபித்தெழுந்து, பல் படை உரிய மாயை கொண்டு—பல படைக்கலங்களினாலுந் தமக்குரிய மாயையினாலும், பொருதும் மால் வென்றிலன்—போர்புரிந்தும் விஷ்ணுமூர்த்தி வென்றிலர்; புகழ்ந்து போயினன்—சலந்தரனைப் புகழ்ந்து சென்றார். (239)

கொண்டன் மேனியன் கொடியன் றன்னொடு
மண்டு போரிடை மலையும் வேலையி
லண்டர் வாசவ னஞ்சி யாலமார்
கண்டன் மேவிய கயிலை யெய்தினர்.

கொண்டல் மேனியன்—முகில்வண்ணரான விஷ்ணுமூர்த்தி, கொடியன் தன்னொடு—கொடியோனாகிய சலந்தரனோடு, மண்டு போரிடை மலையும் வேலையில்—நெருங்கிய போரைப் போர்க்களத்திற் செய்யும்போது, அண்டர் வாசவன் அஞ்சி—தேவர்களும் இந்திரனும் பயந்து, ஆலம் ஆர் கண்டன் மேவிய கயிலை எய்தினர்—ஆலத்தை அருந்திய நீலகண்டரான சிவபெருமான் எழுந்தருளிய திருக்கைலாச மலையை அடைந்தார்கள். (240)

## வேறு

அற்று கின்ற வேலையின் வேலை யருண்மைந்தன்
பற்றார் தம்மை நாடினன் யாண்டும் பார்க்கின்றான்
கற்றா ரேத்துங் கண்ணுதன் மேய கயிலாயத்
துற்றார் கொல்லென் றுன்னி வெகுண்டா னூர்போந்தான்.

அற்று ஆகின்ற வேலையில்—அத்தன்மைத்தாகிய நிகழ்ச்சி நிகழுகின்ற சமயத்தில், வேலை அருள் மைந்தன்—சமுத்திர குமாரனான சலந்தரன், பற்றார்

தம்மை—தன் பகைவர்களாகிய தேவர்களை, யாண்டும் நாடினன் பார்க் கின்றான்—யாண்டுந் தேடிப் பார்க்கின்றவன், கற்றார் ஏத்தும் கண்ணுதல் மேய கயிலாயத்து உற்றார்கொல் என்று உன்னி—கற்றோர் துதிக்கின்ற சிவ பெருமான் எழுந்தருளிய கைலாசமலையை அடைந்தார்கள்போலும் என்று எண்ணி, வெகுண்டான்—கோபித்து, ஊர் போந்தான்—தனது சாலாந்தர புரிக்குச் சென்றான். (241)

தூண்டா வொற்றாற் பெற்றிடு சேனைத் தொகையோடு
மீண்டா நிற்பான் றென்கயி லைக்கென் றெழும்வேலை
வேண்டா வேண்டா நித்த னுடன்வெஞ் சமர்செய்யின்
மாண்டா யென்றா ளில்லென வாழு மதிவல்லி.

தூண்டா—தூண்டுதல்செய்து, ஒற்றால் பெற்றிடு சேனைத் தொகை யோடும்—ஒற்றர்களால் அழைக்கப்பட்ட சேனைக் கூட்டத்தோடும், ஈண்டா நிற்பான்—நெருக்கமுற்று நிற்பவனாகிய சலந்தரன், தென் கயிலைக்கு என்று எழும் வேலை—தென்கயிலைமீது போருக்கென் றெழுகின்ற சமயத்தில், நித்த னுடன் வெம் சமர் வேண்டா வேண்டா—நித்தராகிய சிவபெருமானுடன் கொடிய யுத்தம் வேண்டா வேண்டா; செய்யின் மாண்டாய்—செய்வாயாயின் இறந்தேபோவாய்; என்றாள் இல்லென வாழும் மதிவல்லி—என்று தடுத் தாள் இல்லாளாய் வாழுகின்ற மதியினையுடைய கொடி போன்றவளாகிய விருந்தை. (242)

குலந்தனில் வந்தாள் கூறிய மாற்றங் குறிக்கொள்ளா
னலந்தரு கின்ற செய்வினை யோரா னவைபாரான்
புலந்தரு செற்ற மீக்கொள யாதும் பொறையின்றிச்
சலந்தர னும்பே ருண்மைய தென்னச் சாதித்தான்.

குலந்தனில் வந்தாள் கூறிய மாற்றம் குறிக்கொள்ளான்—குடிப்பிறந்தா ளாகிய விருந்தை கூறிய கூற்றைப் பொருள் செய்யானாய், நலம் தருகின்ற செய்வினை ஓரான்—தனக்கு நன்மை தருகின்ற செயலினையுஞ் சிந்தியானாய், நவை பாரான்—வரக்கடவ குற்றங்களையும் பாராதவனாய், புலம் தரு செற்றம் மீக்கொள—தன்னிடத்து விரிகின்ற கோபந்தன்னைக் கீழ்ப்படுத்த, யாதும் பொறை இன்றி—சிறிதும் பொறுமை இல்லாமல், சலந்தரன் ஆம் பேர் உண்மையது என்னச் சாதித்தான்—தனக்குச் சலந்தரன் என்னும் பெயர் உபசாரமன்று உண்மையாயது என்பதைச் சாதித்தானுயினன்.

சலம்—கோபம்; தரன்—தரித்தவன் என்றவாறு. (243)

சோனா மேகம் போற்படை மாரி சொரிகின்ற
சேனா யூகஞ் சூழ்தர வாழித் திருமைந்தன்
போனா னெங்கோன் றென்கயி லைக்கோர் புடையாக
வானா டுள்ளோ ரிங்கது காணா மறுகுற்றார்.

சோஞ மேகம் போல்—விடாமமழை பொழியும் மேகம்போல, படை மாரி சொரிகின்ற சேஞ யூகம் சூழ்தர—ஆயுத மழை பொழிகின்ற சேனை யாகிய படைவகுப்புச் சூழ்ந்து வர, ஆழி திரு மைந்தன்—சமுத்திரம் பெற்ற வனப்புள்ள புதல்வஞன சலந்தரன், எம் கோன் தென் கயிலைக்கு ஓர் புடை யாகப் போஞன்—எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் அழகிய கைலாசமலைக்கு ஒரு புறமாகச் சென்ருன்; வான் நாடு உள்ளோன் ஆங்கு அது காணு மறு குற்ருன்—இந்திரன் ஆங்கே அவன் வருகையைக் கண்டு கலங்கினன். (244)

தாண்டும் பாய்மாத் தேர்கரி வீரர் தற்சூழ
வீண்டும் வந்தான் றீயவ ஞவி யிறும்வண்ணம்
காண்டும் மென்ஞ வாசவன் வானேர் கணமோடும்
வேண்டும் வெள்ளிக் குன்றுறு கோயின் மேவுற்ருன்.

தாண்டும் பாய்மா—தாவுகின்ற குதிரைகளும், தேர் கரி வீரர் தன் சூழ—தேர்களும் யானைகளும் வீரர்களும் தன்னைச் சூழ்ந்துவர, தீயவன் ஆவி இறும் வண்ணம் ஈண்டும் வந்தான்—தீயோன் தனது உயிர் அழியும்வண்ணம் இவ்விடத்துக்கும் வந்தான்; காண்டும் என்ஞ—நாம் அதனைக் காண்போம் என்று, வாசவன் வானேர் கணமோடும்—இந்திரன் தேவர் கூட்டத்தோடும், வேண்டும் வெள்ளிக் குன்று உறு கோயில் மேவுற்ருன்—விரும்பப்படும் வெள்ளி மலையாகிய திருக்கைலாயத்திற் பொருந்திய செம்பொற்றிருக்கோயிலை அடைந்தான். (245)

### வேறு

முந்திய வாயிலின் முறைபு ரிந்திடு
நந்தியை வணங்கியுண் ணடுக்கஞ் செப்பலு
மந்தமில் பண்ணவ னருளை நாடியே
யுந்திட விந்திர னுறையுள் போயினன்.

முந்திய வாயிலின் முறை புரிந்திடு நந்தியை வணங்கி—முதலிலுள்ள வாய்தலிற் காவல் புரிகின்ற திருநந்திதேவரை வணங்கி, உள் நடுக்கம் செப்பலும்—தம்முடைய மனக்கலக்கத்தைக் கூறுதலும், அந்தமில் பண்ணவன் அருளை நாடி—அழிவில்லாத சிவபெருமானுடைய அநுக்கிரகமாகிய அநுமதியை அறிந்து, உந்திட—உள்ளே அனுப்ப, இந்திரன் உறையுள் போயினன்—இந்திரன் ஆலயத்துட் சென்ருன். (246)

குணங்களின் மேற்படு குழகன் மால்வரை
யணங்கொடு வீற்றிருந் தருளு மெல்லைபோய்
வணங்கினன் றெழுதனன் வலிய துன்பினு
லுணங்குதன் மனக்குறை யுரைத்தன் மேயினன்.

குணங்களின் மேற்படு குழகன்—முக்குணங்களுக்கு அப்பாற்பட்ட பேரழக ரான சிவபெருமான், மால்வரை அணங்கொடு—பெருமைபொருந்திய மலை மகளாகிய உமாதேவியாரோடு, வீற்றிருந்தருளும் எல்லை போய்—வீற்றிருந் தருளும் இடத்துக்குச் சென்று, வணங்கினன் தொழுதனன்—வணங்கித் தொழுது, வலிய துன்பினால் உணங்கு தன் மனக்குறை—மிக்க துன்பத்தி னால் வறந்துபோன தன் மனத்திலுள்ள குறையை, உரைத்தன் மேயினான்— முறையீடு செய்வானாயினான்.

எண்குணங்களால் மேம்பட்ட எனினுமாம். (247)

நிலந்தனை வளைந்தமுந் நீரில் வந்தவன்
சலந்தர னெனும்பெயர்த் தறுகட் டானவன்
மலைந்தெமை வென்றிட மாசுற் றோடினே
னலந்தரு கின்றபொன் னாடு நீத்தனன்.

நிலந்தனை வளைந்த முந்நீரில் வந்தவன்—பூமியைச் சூழ்ந்த கடலிற் பிறந்தவனாய, சலந்தரன் எனும் பெயர்த் தறுகண் தானவன்—சலந்தரன் என்னும் பெயரினையுந் தறுகண்மையையும் உடைய அசுரன், மலைந்து எமை வென்றிட—போர் செய்து எங்களை வெற்றிகொள்ள, மாசுற்று ஓடினேன்— அதனால் மாசடைந்து ஓடி, நலம் தருகின்ற பொன்னாடு நீத்தனன்—நன்மை யைத் தருகின்ற சுவர்க்க உலகத்தை விட்டு நீங்கினேன். (248)

வெந்துய ரெய்தியே மேரு வின்புடை
யுய்ந்தனன் யானென வொளித்து மேவின
னந்தவண் ணத்தையு மறிகுற் றாங்கவன்
வந்தன னவ்வழி மாலை யுன்னினேன்.

வெம் துயர் எய்தி—கொடிய துன்பத்தை அடைந்து, மேருவின் புடை— மேருமலையில் ஓரிடத்தில், யான் உய்ந்தனன் என ஒளித்து மேவினன்—நான் பிழைத்தேன் என்று ஒளித்திருந்தேன்; அந்த வண்ணத்தையும் அறிகுற்று— யான் அவ்வாறிருந்ததனையும் அறிந்து, ஆங்கு அவன் வந்தனன்—அங்கும் அவன் வந்தான்; அவ்வழி மாலை உன்னினேன்—அப்பொழுது திருமாலை நினைந்தேன். (249)

மாலும்வந் தணுகியே மலைந்து தோற்றிடா
மேலுமங் கவன்றனை வியந்து போயினா
னீலகண் டத்தனே நினது மால்வரை
யேலவந் துற்றன னிதுவுங் கேட்டனன்.

மாலும் வந்து அணுகி மலைந்து தோற்றிடா—திருமாலும் வந்து சமீபித்துப் போர்செய்து தோல்வியடைந்து, மேலும் அங்கு அவன் தனை வியந்து போயினன்—அவ்வாறாய பின்பும் அங்கு அவனைப் புகழ்ந்து சென்றார்; நீல கண்டத்தனே—நீலகண்டத்தையுடைய கடவுளே, நினது மால்வரை வந்து ஏல உற்றனன்—தேவரீரது பெருமைபொருந்திய கைலைமலைக்கு வந்து இயைபுறச் சரணடைந்தேன்; இதுவும் கேட்டனன்—இதனையும் அவன் கேள்வியுற்றான். (250)

ஈங்கும்வந் துற்றன னியாவ துன்னியோ
வாங்கது தெரிகிலே னளியன் றுன்பமுந்
தீங்குறு சலந்தரன் றிறலும் வாழ்க்கையு
நீங்குத லுன்னுதி நிமலநீ யென்றான்.

யாவது உன்னியோ ஈங்கும் வந்துற்றனன்—எதனைக் கருதியோ இவ்விடத்துக்கும் வந்துவிட்டான்; ஆங்கது தெரிகிலேன்—அவனிடத்ததாகிய கருத்தை யானறியேன்; அளியன் துன்பமும்—ஏழையேனது துன்பமும், தீங்குறு சலந்தரன் திறலும்—தீமையையுடைய சலந்தரனது வலியும், வாழ்க்கையும்—அவனது வாழ்வும், நீங்குதல்—நீங்குதலை, நிமல நீ உன்னுதி என்றான்—நிருமலரே தேவரீர் திருவுளங் கொண்டருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தான். (251)

வரையெறி படையினன் மாற்றங் கேட்டுநின்
பருவர லொழிகெனப் பகர்ந்து போக்கியே
கருணையி னீர்மையாற் கணிச்சி வானவ
னொருதனி யாடலை யுள்ளத் துன்னினான்.

வரை எறி படையினன் மாற்றம் கேட்டு—மலைகளின் இறகை வெட்டிய வச்சிரப்படையை யுடையவனாகிய இந்திரன் சொன்னவைகளைக் கேட்டு, நின் பருவரல் ஒழிக எனப் பகர்ந்து போக்கி—இந்திரனே உன் துன்பத்தை ஒழிவாய் என்று கூறியருளி அவனை அனுப்பிவிட்டு, கணிச்சி வானவன்—மழுவை ஏந்திய சிவபெருமான், கருணையின் நீர்மையால்—கருணைத் தன்மையால், ஒரு தனி ஆடலை—ஒப்பற்றதொரு திருவிளையாடலை, உள்ளத்து உன்னினான்—திருவுள்ளத்திற் கொண்டருளினார். (252)

நான்றகுண் டிகையின னரைகொள் யாக்கைய
னூன்றிய கோலின னேலைக் கையினன்
மூன்றனல் வளர்ப்புறு முனிவ ரேயெனத்
தோன்றினன் றனக்கொரு தோற்றம் வேறிலான்.

நான்ற குண்டிகையினன்—தூங்குகின்ற கமண்டலத்தை உடையவராய், நரைகொள் யாக்கையன்—நரைத்த திருமேனியையுடையவராய், ஊன்றிய கோலினன்—ஊன்றப்பெற்ற கோலினையுடையவராய், ஓலைக் கையினன்—ஓலைக் குடையை ஏந்திய திருக்கரத்தினை யுடையவராய், மூன்று அனல் வளர்ப்புறும் முனிவர் என—மூவகை அக்கினியை வளர்க்கின்ற ஒரு முனிவரைப் போல, தனக்கு வேறு ஒரு தோற்றம் இலான் தோன்றினன்—தமக்குச் சுட்டியுணர்தற்குரியதொரு தோற்றமில்லாத பெருமான் தோன்றியருளினர்.

உறிக்கட் கோடலின் நான்ற என்றார். ஓலை, விசிறியுமாம். மூன்றனல்: காருகபத்தியம், தக்கிணாக்கினி, ஆகவனீயம் என்பன. (253)

விம்மலை யுற்றிடு விரதர்க் காகமுன்
கைம்மலை யுரித்தவன் கயிலை யென்றிடு
மம்மலை யொருபுடை யணுகுந் தானவர்
செம்மலை யெதிர்கொடு செல்லன் மேயினான்.

விம்மலை யுற்றிடு விரதர்க்காக—துன்பமுற்ற முனிவர்கள் பொருட்டு, முன் கைம்மலை உரித்தவன்—முன்னாளில் யானையை உரித்த சிவபெருமான், கயிலை என்றிடும் அம்மலை ஒருபுடை அணுகும்—திருக்கைலாசம் என்கின்ற அம் மலையின் ஒருபுறத்தே வருகின்ற, தானவர் செம்மலை எதிர்கொடு—அசுரத் தலைவனாகிய சலந்தரனை எதிர்கொண்டு, செல்லன் மேயினான்—சென்றருள்வாராயினர். (254)

இந்திர னிமையவ ரினத்தொ டீண்டியே
வந்தனை செய்தனன் மறைந்து பின்வர
வந்தணர் வடிவுகொண் டவுணர் காவலன்
முந்துற வெய்தியே முதல்வன் கூறுவான்.

இந்திரன் இமையவர் இனத்தொடு ஈண்டி—இந்திரனானவன் தேவர் கூட்டத்தோடு நெருங்கி, வந்தனை செய்தனன் மறைந்து பின் வர—வழி பட்டுக்கொண்டு மறைந்து பின்னே வர, அந்தணர் வடிவு கொண்டு—பிராமண வேடங் கொண்டு, அவுணர் காவலன் முந்து உற எய்தி—அசுரத் தலைவனுக்கு எதிரே அணுகச் சென்று, முதல்வன் கூறுவான்—முதல்வராகிய சிவபெருமான் கூறுவார். (255)

எங்குளை யாரைநீ யெவரை நாடியே
யிங்குறு கின்றனை யியம்பு வாயென
வங்கணன் மொழிதலு மந்தண் வேதிய
சங்கைய தில்வகை சாற்றக் கேளென்றான்.

நீ யார் எங்கு உளை—நீ யார் எங்கே உள்ளாய்; எவரை நாடி இங்கு உறுகின்றனை—யாரைத்தேடி இங்கேவருகின்றாய்; இயம்புவாய் என—உரைப்பாயாக என்று, அங்கணன் மொழிதலும்—அருட்கண்ணரான சிவபெருமான் வினவ, அந்தண் வேதிய—அழகிய தண்ணளியையுடைய பிராமணரே, சங்கையது இல் வகை சாற்றக் கேள் என்றான்—சந்தேகம் இல்லாதவாறு கூறக் கேட்பீராக என்றான். (256)

நிலந்தனி லுற்றுளே னேமி காதலன்
சலந்தர னென்பவன் றமியன் வானவ
ருலைந்திட நுதல்விழி யொருவன் றன்னுடன்
மலைந்திட வந்தனன் வல்லையீண் டென்றான்.

தமியன்—ஒப்பாரின்றித் தனித்தேனாகிய யான், நிலந்தனில் உற்றுளேன்—பூவுலகி லிருப்பவன்; நேமி காதலன்—சமுத்திரத்தின் குமாரன்; சலந்தரன் என்பவன்—சலந்தரன் என்று பெயர் கூறப்படுபவன்; வானவர் உலைந்திட—தேவர்கள் வருந்தும்படி, நுதல்விழி ஒருவன் தன்னுடன்—நெற்றிக் கண்ணினையுடைய ஒருவராகிய சிவபெருமானோடு, வல்லை மலைந்திட ஈண்டு வந்தனன் என்றான்—விரைந்து பொருமாறு இங்கே வந்தேன் என்றான். (257)

அவ்வுரை வினவியே யண்ண லெண்ணமுஞ்
செவ்விது செவ்விது தீதுண் டோவென
வெவ்வமில் புகழ்ச்சிபோ லிகழ்ந்து காட்டிடா
நவ்வியங் கைத்தல னகைத்துச் செப்புவான்.

அவ்வுரை வினவி—அம்மொழியைக் கேட்டு, செவ்விது செவ்விது—நன்று! நன்று!, அண்ணல் எண்ணமும் தீது உண்டோ—அண்ண லெண்ணமுந் தீது படுவ துண்டோ; என—என்று கூறியருளி, எவ்வம் இல் புகழ்ச்சி போல் இகழ்ந்து காட்டிடா—குற்றமற்ற புகழ்ச்சி போல இகழ்ந்து காட்டி, நவ்வி அம் கைத்தலன்—மானேந்திய அழகிய திருக்கரத்தினையுடைய சிவபெருமான், நகைத்துச் செப்புவான்—நகைசெய்து கூறியருளுவார்.

அண்ணல் எண்ணம்—பெருமை பொருந்திய எண்ணம்.

'அண்ணலே உனதெண்ணமும் நன்று நன்று தீதுண்டு' என இகழ்ந்து காட்டியவாறுமாம். இப்பொருளில், அண்ணல் அண்மை விளி. (258)

கயிலையங் கிரியுறை கண்ணு தற்பிரா
னயலுற விருப்பன்யா னவனொ டேயமர்
முயலுறு கிற்றியேன் முடிதி யுய்ந்திடுஞ்
செயலினை நினைத்தியேற் செல்கமீண் டென்றான்.

கயிலையங் கிரி உறை—திருக்கைலாச கிரியி லிருக்கின்ற, கண்ணுதற் பிரான் அயலுற இருப்பன் யான்—கைலாசபதிக்குப் பக்கத்தி லிருப்பவன் யான்; அவனொடு அமர் முயலுறுகிற்றியேல்—அவரோடு போர் செய்ய முயலுவாயே யானால், முடிதி—இறந்துபடுவாய்; உய்ந்திடுஞ் செயலினை நினைத்தியேல்—பிழைக்குஞ் செய்கையை நினைப்பாயானால், மீண்டு செல்க என்றான்—திரும்பிப் போவாயாக என்று கூறியருளினார். (259)

பண்ணவ னினையன பகர்தல் கேட்டலு
மெண்ணமில் சலந்தர னெரியிற் சீறியே
கண்ணழல் கதுவுறக் காயம் வேர்வெழத்
துண்ணென வுயிர்த்திவை சொற்றன் மேயினான்.

பண்ணவன் இனையன பகர்தல் கேட்டலும்—பிராமண முனிவராகிய சிவபெருமான் இவ்வாறு கூறியதனைக் கேட்ட உடனே, எண்ணம் இல் சலந்தரன் எரியிற் சீறி—சிந்தனையற்ற சலந்தரன் அக்கினிபோலக் கோபித்து, கண் அழல் கதுவுற—கண்ணில் அக்கினி சுவாலிக்க, காயம் வேர்வு எழ—உடலில் வியர்வை எழ, துண் என உயிர்த்து—விரைந்து நெட்டுயிர்த்து, இவை சொற்றல் மேயினான்—இவைகளைச் சொல்லுவானாயினான். (260)

சிறியவன் போலெனைச் சிந்தித் தீரியான்
பெறுவதோர் சயமெலாம் பேசி யாவதென்
னிறைவரை யீண்டுநின் றெனது வன்மையை
யறிகுதி ரறிகுதி ரந்தணீ ரென்றான்.

சிறியவன் போல் எனைச் சிந்தித்தீர்—என்னை வலியிற் குறைந்தவன் போலக் கருதினீர்; அந்தணீர்—பிராமணரே, யான் பெறுவது ஓர் சயம் எலாம் பேசி ஆவது என்—யான் அடையும் ஒப்பற்ற வெற்றியையெல்லாம் உமக்குச் சொல்லி ஆவதென்னை; இறை வரை—ஒரு கணப்பொழுது, ஈண்டு நின்று—இவ்விடத்தில் நின்று, எனது வன்மையை அறிகுதிர் அறிகுதிர் என்றான்—எனது வலிமையை அறிவீராக அறிவீராக என்று கூறினான். (261)

என்றிவை சலந்தர னிசைப்ப யாமுமுன்
வன்றிறல் காணிய வந்த னம்மெனாத்
தன்றிரு வடியினாற் றரணி யின்மிசை
யொன்றொரு திகிரியை யொல்லை கீறினான்.

என்று இவை சலந்தரன் இசைப்ப—என்று இவைகளைச் சலந்தரன் கூறா நிற்ப, யாமும் உன் வன் திறல் காணிய வந்தனம்—நாமும் உனது வலிய திறலினைக் காணும்பொருட்டே வந்தோம்; எனா—என்று கூறியருளி, தன்

திருவடியினுல்—தமது திருவடியினுலே, தரணியின் மிசை—பூமியின்மீது, ஒன்றொரு திகிரியை ஒல்லே கீறினுன்—ஒரு சக்கரத்தைக் கீறியருளினுர்.

ஒப்பின்மையின், 'ஒன்று ஒரு' என்றுர். (262)

ஆங்கது திகிரியொன் ருக வந்தண
னீங்கிது சென்னியி லேற்றி வன்மையாற்
ருங்குதல் வல்லேயோ வென்று சாற்றலுந்
தீங்குறு சலந்தர னினேய செப்புவான்.

ஆங்கு அது—அவ்விடத்திற் கீறப்பட்ட அவ்வடிவம், திகிரி ஒன்று ஆக—ஒரு சக்கரப்படையாக, ஈங்கு இது சென்னியில் ஏற்றி வன்மையால் தாங்குதல் வல்லேயோ—இங்கே இதனேத் தலேமேலேற்றி மிக முயன்றுயினுஞ் சுமக்க வல்லேயோ, என்று அந்தணன் சாற்றலும்—என்று அந்தப் பிராமணர் வினவுதலும், தீங்கு உறு சலந்தரன் இனேய செப்புவான்—தீங்கை எதிர்கொள்ளுகின்ற சலந்தரன் இவைகளேச் சொல்லுவான். (263)

புங்கவர் யாரையும் புறங்கண் டேன்வரு
கங்கையை யடைத்தனன் கார்கொள் வேலேயி
லங்கியை யவித்தன னரியை வென்றன
னிங்கிது தாங்குவ தரிய தோவெனு.

புங்கவர் யாரையும் புறங்கண்டேன்—தேவர்க ளெல்லாரையும் முதுகு கண்டேன்; வரு கங்கையை அடைத்தனன்—பலமுகமாகப் பிரவாகித்து வருங் கங்கையை அடைத்தேன்; கார் கொள் வேலேயின் அங்கியை அவித்தனன்—முகில்கள் முகந்துகொள்ளுகின்ற சமுத்திரத்தில் உள்ள வடவாமுகாக்கினியை அவித்தேன்; அரியை வென்றனன்—விஷ்ணுமூர்த்தியை வென்றேன்; இங்கு இது தாங்குவது அரியதோ எனு—எனக்கு இங்கே இதனே எடுத்துச் சுமப்பது அருமையோ என்று கூறி. (264)

புரத்தழல் கொளுவியோன் பொறித்த நேமியைக்
கரத்திடை யெடுத்தனன் கனங்கொண் டெய்தலி
னுரத்திடைப் புயத்திடை யுயிர்த்துத் தாங்கியே
சிரத்திடை வைத்தனன் றேவ ரார்க்கவே.

புரத்து அழல் கொளுவியோன் பொறித்த நேமியை—முப்புரங்களே அழல் கொளுவி எரித்தோராகிய சிவபெருமான் கீறியதனு லுண்டான சக்கரப் படையை, கரத்திடை எடுத்தனன்—கையில் எடுத்தான்; கனம் கொண்டு எய்தலின்—அது மிக்க பாரமாயிருந்ததனுல், உரத்திடைப் புயத்திடை—

உயிர்த்துத் தாங்கி—மார்பிலுந் தோளிலும் நெட்டுயிர்ப்புடன் வைத்து, சிரத்திடைத் தேவர் ஆர்க்க வைத்தனன்—பின் ஒருவாறு தலைமீது தேவர்கள் ஆரவாரிக்குமாறு வைத்தான். (265)

செழுஞ்சுடர்ப் பரிதியைச் சென்னி கோடலா
லொழிந்திடு சலந்தர னுச்சி யேமுதற்
கிழிந்தது முழுதுடல் கிளர்ந்து சோரிநீ
ரிழிந்தது புவிதனி லிழுமெ னோசையால்.

செழும் சுடர் பரிதியை சென்னி கோடலால்—செழுமையாகிய சுடரினை யுடைய சக்கரத்தைத் தலைமீது கொள்ளுதலினாலே, ஒழிந்திடு சலந்தரன் உச்சி முதல் முழுது உடல் கிழிந்தது—இறந்துபடுகின்ற சலந்தரனது உச்சி தொடக்கம் உடல் முழுதுங் கிழிந்தது; சோரி நீர் கிளர்ந்து புவிதனில் இழுமென் ஓசையால் இழிந்தது-இரத்தப் பிரவாகம் மேலே கிளர்ந்தெழுந்து பூமியிலே இழுமென்ற ஓசையோடு இறங்கியது. (266)

பரிதியங் கடவுளப் பதகன் றன்னுட
லிருபிள வாக்கியே யிறைவன் றன்னிடை
யுருவுகொண் டுற்றதிவ் வுலகம் யாவையுங்
குருதியம் பெருங்கடல் வளைந்து கொண்டதே.

பரிதி அம் கடவுள்—சக்கரமாகிய அழகிய தெய்வம், அ பதகன் தன்னுடல் இரு பிளவு ஆக்கி—கீழ்மகனான அச் சலந்தரனுடைய உடலை இருபிளவாகச் செய்து, உருவு கொண்டு—கீறியபின்னர் எடுத்த உருவத்தையே தாங்கிக் கொண்டு, இறைவன் தன்னிடை உற்றது—சிவபெருமானிடத்துச் சென் றிருந்தது; இவ் வுலகம் யாவையும்—இவ்வுலகம் முழுவதையும், குருதி அம் பெருங்கடல் வளைந்து கொண்டது—பெரிய இரத்தக்கடல் சூழ்ந்தது. (267)

பாதல நிரயமாம் பாழி யூடுநீ
போதென வெருவைநீர் போந்த தாயிடை
யாதியங் கடவுளவ் வவுணன் சேனையைக்
காதினன் விழிபொழி கனலின் றானையால்.

பாதல நிரயமாம் பாழியூடு—பாதாளத்திலுள்ள நரகமாகிய பாழிக்கு, நீபோது என—நீ போகக்கடவாய் என்று கட்டளையிட, எருவை நீர் ஆயிடைப் போந்தது—இரத்த வெள்ளம் அவ்விடத்துக்குச் சென்றது; ஆதியங் கடவுள்—அதன் பிறகு ஆதியாகிய சிவபெருமான், அ அவுணன் சேனையை—அச் சலந்

தரனது சேனையை, விழி பொழி கனலின் தானையால் காதினன்—தமது விழி பொழிகின்ற அக்கினியாகிய சேனையால் அழித்தருளினார்.

பாழி—இடம். (268)

பரந்திடு மவுணர்தம் பகுதி வீட்டியே
கரந்ததொல் வடிவினைக் காட்டி நிற்றலும்
புரந்தரன் முதலினோர் வணங்கிப் போற்றியெம்
மரந்தையை யகற்றினை யையநீ யென்றார்.

பரந்திடும் அவுணர்தம் பகுதி வீட்டி—பரவிய அசுரப்படைகளை அழித்து, கரந்த தொல் வடிவினை காட்டி நிற்றலும்—மறைத்த பழைய தமது வடிவத்தைக் காட்டி நின்றருளுதலும், புரந்தரன் முதலினோர் வணங்கிப் போற்றி—இந்திரன் முதலியவர்கள் வணங்கித் துதித்து, ஐய நீ எம் அரந்தையை அகற்றினை என்றார்—சுவாமீ தேவரீர் எமது துன்பத்தைத் துடைத்தருளினீர் என்று புகழ்ந்தார்கள். (269)

முன்புறு புரந்தரன் முதலி னோர்க்கெலா
மின்புறு தொல்லர சியற்ற நல்கியே
யன்புடன் விடைகொடுத் தமல நாயகன்
றென்பெருங் கயிலைமேற் சேர்ந்து வைகினான்.

முன்பு உறு புரந்தரன் முதலினோர்க்கு எலாம்—முன்னிலையில் நின்ற இந்திரன் முதலியவர்களுக்கு, இன்புறு தொல் அரசு இயற்ற நல்கி—இன்பம் பொருந்திய பழைய அரசியலை நடத்த அருள்செய்து, அன்புடன் விடை கொடுத்து—அன்போடு விடை அளித்து, அமல நாயகன்—நின்மலராகிய சிவபிரான், தென் பெருங் கயிலைமேல் சேர்ந்து வைகினான்—அழகிய பெரிய கைலாசத்தின்கண் செம்பொற்றிருக்கோயிலிலே சென்று வீற்றிருந்தருளினார். (270)

ஆவியை யிழந்திடு மவுணர் காவலன்
றேவியை விரும்பியே திருவி னாயகன்
மாவிர தியரென மற்ற வன்மனைக்
காவினு ளிருந்தனன் கைத வத்தினான்.

ஆவியை இழந்திடும் அவுணர் காவலன் தேவியை—உயிரிழந்த அசுராதிபனான சலந்தரனுடைய தேவியாகிய விருந்தையை, திருவின் நாயகன் விரும்பி—திருமால் இச்சித்து, மா விரதியர் என—மகா விரதியர் போல வேடம் பூண்டு, அவன் மனைக் காவினுள்—அச் சலந்தரனுடைய மாளிகையை அடுத்த பூஞ்சோலையுள், கைதவத்தினான் இருந்தனன்—வஞ்சனையோடு தவமிருந்தார். (271)

இருந்திடு மெல்லேயி லேமக் கற்புடை
விருந்தையென் றிடுமவள் வேந்தன் செய்கையைத்
தெரிந்தில ளாற்றவுஞ் சிந்தை நொந்துமெய்
வருந்தின ளுய்ந்திடும் வண்ணங் காண்கிலாள்.

இருந்திடும் எல்லேயில்—திருமால் வஞ்சனேயோடிருக்கும்போது, ஏமம் கற்புடை விருந்தை என்றிடும் அவள்—கற்பாகிய பாதுகாப்பினேயுடைய விருந்தை என்கின்ற அப்பெண், வேந்தன் செய்கையைத் தெரிந்திலள்—சலந்தரன் நிலேமையை அறியாதவளாய், ஆற்றவும் சிந்தை நொந்து—மிகவும் மனம் வருந்தி, உய்ந்திடும் வண்ணம் காண்கிலாள்—உய்யுந் திறத்தைக் காணுதவளாய், மெய் வருந்தினள்—உடல் இளேத்தாள். *(272)*

பரிதலுற் றிரங்கினள் பதைத்துச் சோர்ந்தன
ளொருதனித் திருக்கில ளுரையு மாடல
டிரிதலுற் றுலவினள் செய்வ தோர்கில
ளிருதலேக் கொள்ளியி னெறும்பு போன்றுளாள்.

பரிதல் உற்று—கணவன்மீது அன்பு மிக்கு, இரங்கினள் பதைத்துச் சோர்ந்தனள்—இரங்கிப் பதைத்துச் சோர்ந்து, ஒரு தனித்து இருக்கிலள்—ஒருத்தியாய்த் தனித்திருத்தல் ஆற்றுதவளாய், உரையும் ஆடலள்—யாரொருவரோடும் உரையாடலுஞ் செய்யாதவளாய், செய்வது ஓர்கிலள்—செய்வதின்னதென்றும் அறியாதவளாய், இருதலேக் கொள்ளியின் எறும்பு போன்றுளாள்—இருதலேயுங் கொள்ளியாக அதனிடைப்பட்ட எறும்பைப் போன்றவளாய், திரிதலுற்று உலவினள்—அங்கும் இங்கும் உலாவி அலேந்தாள். *(273)*

கல்வரை யேந்திய காளே யைப்புணர்
தொல்வரை யூழினுற் றுன்ப நீங்கலா
மெல்வரை யன்னதோள் விருந்தை மேவினு
ளில்வரை யிகந்திடா வேமக் காவினுள்.

கல்வரை ஏந்திய—கோவர்த்தனகிரியைப் பசுநிரையைக் காக்கும்பொருட்டு எடுத்த, காளேயைப் புணர்—காளேயாகிய திருமாலேப் புணர்தற்குரிய, தொல் வரை ஊழினுல்—பழைமையாகிய பால்வரைதெய்வ நியதியால், துன்பம் நீங்கலா மெல் வரை அன்ன தோள் விருந்தை—துன்பம் நீங்காத மிருதுவான மூங்கிலே ஒத்த தோளினேயுடைய விருந்தை, இல் வரை இகந்திடா—தனது இல்லின் எல்லேக்கு அப்பாற்படாத, ஏமக் காவினுள்—பாதுகாப்பாய் அமைந்த சோலேயினுள், மேவினுள்—சென்றுள்.

புணர் ஊழினுல் மேவினுள் என்க.

பால், ஊழ், தெய்வம் ஒருபொருட் கிளவிகள். பால்வரைதெய்வம்—இருவினையை வகுக்குந் தெய்வம். இகந்திடா—இகந்து எனக் கொள்ளினு மாம். இகந்திடாது மேவினுள் என இயைத்துக்கோடலு மொன்று. (274)

மடவரல் வருதலும் வைகுண் டந்தனிற்
கடைமுறை போற்றிடு மிருவர் காவல
ரடலரி யாகியே யார்த்து முன்னுற
விடியுறு மரவுபோ லேங்கி யோடினுள்.

மடவரல் வருதலும்—விருந்தையானவள் வருதலும், வைகுண்டந்தனில் கடை முறை போற்றிடும் இருவர் காவலர்—வைகுந்தத்திலே வாய்தலை முறையானே காக்கின்ற இருவர் துவாரபாலகர், அடல் அரியாகி ஆர்த்து முன் உற—அடுதலைச் செய்கின்ற சிங்கங்களாகிக் கர்ச்சித்துக்கொண்டு எதிரில் வர, இடி உறும் அரவு போல் ஏங்கி ஓடினுள்—இடியேறுண்ட சர்ப்பம் போல ஏக்கமுற்று ஓடினுள். (275)

மடந்தையங் கிரிதலு மடங்க லானவர்
தொடர்ந்தனர் பின்வரத் துளங்கிச் சோலையி
னிடந்தனின் முனியென விருந்த வெய்யனை
யடைந்தன ளடைதலு மஞ்ச லீயென்றுன்.

மடந்தை அங்கு இரிதலும்—விருந்தை அவ்விடத்தை விட்டு ஓடுதலும், மடங்கலானவர் தொடர்ந்தனர் பின்வர—சிங்க உருவங்கொண்ட துவார பாலகர் தன்னைத் தொடர்ந்து பின்னே வர, துளங்கி—விருந்தை நடுங்கி, சோலையின் இடந்தனில் முனியென இருந்த வெய்யனை—சோலையினிடத்தே முனிவர்போல நாடகஞ் செய்து இருந்த வெம்மையோனுகிய திருமாலை, அடைந்தனள்—சரணடைந்தாள்; அடைதலும்—அடைந்தபோது, நீ அஞ்சல் என்றுன்—பெண்ணே நீ அஞ்சற்க என்று அபயமளித்தார். (276)

என்றருள் புரிதலு மிகல்வெஞ் சீயமாய்ப்
பின்றொடர் காவலர் பெயர்வுற் றேடினுர்
நின்றவ ளிருந்தவ னிலைமை நோக்கியே
நன்றிவ னியல்பென நவில்வ தாயினுள்.

என்று அருள் புரிதலும்—அஞ்சற்க என்று அருள் செய்ய, இகல் வெம் சீயமாய் பின் தொடர் காவலர்—வலிய கொடிய சிங்கங்களாய்ப் பின் தொடர்ந்த துவாரபாலகர்கள், பெயர்வு உற்று ஓடினுர்—அவ்விடத்தை விட்டு ஓடினுர்கள்; நின்றவள் இருந்தவன் நிலைமை நோக்கி—திகைத்து

நின்றவளாகிய விருந்தை அங்கே இருந்தவரது பெருந் தவநிலையை உற்று நோக்கி, இவன் இயல்பு—இந்த இருந்தவரது இயற்கை, நன்று என—தனக்கு நன்மையேயாகும் என்று எண்ணி, நவில்வது ஆயினுள்—தன் குறையை முறையீடு செய்வாளாயினுள்.

அவனியல்பாவது சீயம் அஞ்சி ஓட்டெடுக்கும் அபய இயல்பு. (277)

எந்தையெம் பெருமகே ளெனது காதல
னந்தமி லீசன்மே லமருக் கேகினுன்
வந்தில னின்னமு மாய்வுற் ருன்கொலோ
வுய்ந்துள னேகொலோ வுரைத்தி நீயென்ருள்.

எந்தை எம்பெரும கேள்—என் தந்தையே எம்பெருமானே என் முறையீட்டைக் கேட்டருள்க; எனது காதலன்—என் பிராண நாயகர், அந்தம் இல் ஈசன்மேல் அமருக்கு ஏகினுன்—அழிவில்லாத சிவபெருமானேடு போர் செய்தற்குச் சென்ருர்; இன்னமும் வந்திலன்—இன்னும் வந்திலர்; மாய்வுற்ருன் கொலோ உய்ந்துளன் கொலோ—இறந்தாரோ பிழைத்தாரோ; நீ உரைத்தி என்ருள்—தேவரீர் கூறியருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தாள். (278)

இரங்கின ளிவ்வகை யிசைப்ப மாதவன்
வரங்கெழு தானையின் மன்னர் மாயையாற்
குரங்கென வீருருக் கொண்டு கொம்மென
வுரங்கிளர் சலந்தர னுடல்கொண் டெய்தினுர்.

இரங்கினள் இவ்வகை இசைப்ப—வருந்தினவளாய் இவ்வாறு விருந்தை கூற, மாதவன் வரம் கெழு தானையின் மன்னர்—திருமாலின் வரம் பிரகாசிக்கின்ற சேனைத் தலைவர்களாயு மிருக்கின்ற அக்காவலர், மாயையால் குரங்கு என ஈர் உருக் கொண்டு—மாயத்தினுல் இரண்டு குரங்காக வடிவங்கொண்டு, உரம் கிளர் சலந்தரன் உடல்—வலிமை விளங்குகின்ற சலந்தரனது உடலை, கொம்மெனக் கொண்டு எய்தினுர்—விரைவாக அங்கே கொண்டு வந்தார்கள்.

சிங்க உருவங் கொண்டவரே குரங்குருவம் கொண்டனர் என்பது முதனூலிற் கண்டது. (279)

இருபிள வாமவ னியாக்கை கொண்டுசென்
றரிவைமுன் னிட்டன ரதனைக் காண்டலும்
வெருவினள் பதைத்தனள் வீழ்ந்த ரற்றினு
ளொருவின ளுயிரென வுணர்வு நீங்கினுள்.

இரு பிளவு ஆம் அவன் யாக்கை கொண்டு சென்று—இரண்டு பிளவா யிருக்கும் அவனுடைய உடலை எடுத்துக்கொண்டு சென்று, அரிவை முன் இட்டனர்—விருந்தையின் எதிரே வைத்தார்கள்; அதனைக் காண்டலும்—அதனைக் கண்ட மாத்திரத்தில், வெருவினள்—அஞ்சினாள்; பதைத்தனள்—பதைபதைத்தாள்; வீழ்ந்து அரற்றினள்—விழுந்து அழுதாள்; உயிர் ஒருவினள் என உணர்வு நீங்கினாள்—உயிர் நீங்கினவள்போல உணர்வு கெட்டாள். (280)

வருந்தலை வருந்தலை மங்கை நீயெனுக்
கரந்தனை யோச்சியே காத னீர்மையா
லிருந்தவ னெழுப்பலு மெழுந்து தேறியே
விருந்தைகை தொழுதிவை விளம்பன் மேயினாள்.

இருந்தவன்—அங்கே இருந்தவராகிய இருந்தவர், மங்கை நீ வருந்தலை வருந்தலை என—சுமங்கலியாகிய பெண்ணே நீ வருந்தற்க வருந்தற்க என்று அபயஞ் செய்து, காதல் நீர்மையால்—காதல் வயப்பட்ட இயல்புடனே, கரந்தனை ஓச்சி—கையை நீட்டி, எழுப்பலும்—விருந்தையின் மெய்யைத் தீண்டி எழுப்புதலும், விருந்தை தேறி எழுந்து—விருந்தை தெளிந்து எழுந்து, கை தொழுது—கைகூப்பி வணங்கி, இவை விளம்பல் மேயினாள்—இவற்றைச் சொல்லத் தொடங்கினாள்.

'ஓச்சி' என்பதனால் 'மெய்தொட்டு' என்பது பெற்றாம். அபயமளித் தமையின் தேறினாளென்க. (281)

நின்னிகர் மாதவர் நிலத்தி னில்லையா
லென்னுயிர் காத்தியே லெனது நாயகன்
பொன்னுட லந்தனைப் பொருத்தி யவ்வுயிர்
தன்னையு மமைத்தனை தருதி நீயென்றாள்.

நின் நிகர் மாதவர் நிலத்தின் இல்லை—தேவரீரை ஒத்த மகா தவத்தர்கள் இந்தப் பூமியிற் கிடையார்; என் உயிர் காத்தியேல்—என்னுயிரை என்னுடலில் நிலைக்கச் செய்து காப்பது கருத்தானால், எனது நாயகன் பொன் உடலந்தனை பொருத்தி—எனது பிராண நாயகரது அழகிய பிளவுபட்ட உடற் பாதிகளைப் பொருத்தி, அவ்வுயிர் தன்னையும் அமைத்தனை நீ தருதி என்றாள்—அவ்வுடலுக்குரிய அந்த உயிரையும் அவ்வுடலுட் புகுத்தித் தேவரீர் தந்தருளல் வேண்டும் என்று வேண்டினாள்.

நாயகனைத் தாரா தொழியின் என்னுயிரைக் காத்தலிற் பயனின்று என்றாளாம். (282)

ஆயது காலையி லவுணன் யாக்கையை
யேயென வொன்றுமா றியற்றி மாதவன்
மாயம தாகியே மறைந்து மற்றவன்
காயம திடைதனிற் கலந்து வைகினன்.

ஆயது காலையில்—அவ்வாறாகிய சமயத்தில், அவுணன் யாக்கையை—பிளவுபட்ட சலந்தரனது உடலை, ஏயென ஒன்றுமாறு இயற்றி—விரைவிற் பொருந்தும்படி செய்து, மாதவன் மாயமதாகி மறைந்து அவன் காயமதிடை தனில் கலந்து வைகினன்—திருமால் மாயமாய் மறைந்து அச் சலந்தரனின் உடலிற் பிரவேசித்துக் கரந்திருந்தார். (283)

புல்லிய குரங்கெனப் புகுந்த கள்வரு
மொல்லையின் மறைந்தன ருயர்ச லந்தரன்
றொல்லுடல் புகுந்தரி துண்ணென் றேயெழ
மெல்லியல் கண்டனள் வியந்து துள்ளினள்.

புல்லிய குரங்கு எனப் புகுந்த கள்வரும் ஒல்லையின் மறைந்தனர்—இழிந்த குரங்குருவமாக வந்த வஞ்சகரான காவலாளர்களும் விரைவாக மறைந்தார்கள்; உயர் சலந்தரன் தொல் உடல் அரி புகுந்து துண்ணென்று எழ—வலியால் உயர்ந்த சலந்தரனது பழைய உடலிலே திருமால் பிரவேசித்து விரைந்தெழா நிற்ப, மெல்லியல் கண்டனள் வியந்து துள்ளினள்—விருந்தை கண்டு ஆச்சரியமுற்றுத் துள்ளினள். (284)

உய்ந்தனன் கணவனென் றுளத்தி லுன்னியே
வெந்துய ரகன்றனள் விருந்தை யென்பவள்
வந்தனை போலுமென் மகிண நீயென
வந்தமி லுவகையா லவனைப் புல்லினள்.

உய்ந்தனன் கணவன் என்று உளத்தில் உன்னி—தன் கணவன் உயிர் பெற்று உய்ந்தான் என்று மனத்தில் நினைத்து, விருந்தை என்பவள் வெம் துயர் அகன்றனள்—விருந்தை கொடிய துன்பம் நீங்கினள்; என் மகிண—என் பிராண நாயகரே, நீ வந்தனை போலும் என—நீவிர் என்னை நாடி வந்தீர்போலும் என்று, அந்தம் இல் உவகையால்—அளவிறந்த மகிழ்வோடு, அவனைப் புல்லினள்—திருமாலாகிய அச் சலந்தரனைத் தழுவினள். (285)

புல்லிய விருந்தையைப் புணர்ந்து மாயவ
னெல்லியும் பகலுமோ ரிறையு நீங்கலா
னல்லியந் தேனுக ரளியைப் போலவண்
மெல்லித ழமுதமே மிசைந்து மேவினன்.

புல்லிய விருந்தையை—தம்மைத் தழுவிய விருந்தையை, மாயவன் புணர்ந்து—திருமால் சேர்ந்து, எல்லியும் பகலும் ஓர் இறையும் நீங்கலான்—இரவும் பகலும் ஒரு கணப்பொழுதும் அவளை விட்டுப் பிரியாராய், அம் அல்லி தேன் நுகர் அளியைப்போல்—அழகிய அகவிதழிற் பொருந்திய தேனை நுகருகின்ற வண்டைப்போல, அவள் மெல் இதழ் அமுதம் மிசைந்து மேவினன்—அவளுடைய மெல்லிய இதழ் அமுதை அருந்தி இன்பம் நுகர்ந்திருந்தார். (286)

காய்கதிர் நுழைவுருக் கடிமென் காவினுண்
மேயினன் பலபகல் வேளி னூல்வழி
யாயதோர் வைகலி னரன தாணையான்
மாயம தயர்த்தனன் மலர்க்கண் டுஞ்சினான்.

காய் கதிர் நுழைவுரு கடி மென் காவினுள்—காய்கின்ற சூரிய கிரணம் நுழையாத செறிவு படைத்த காவலினையுடைய இள மரக்காவில், பல பகல் வேளின் நூல் வழி மேயினன்—பலநாளாக மன்மத சாத்திர முறைப்படி விருந்தையுடன் கூடியிருந்தார்; ஆயது ஓர் வைகலின்—அவ்வாறிருக்கும் நாட்களில் ஒருநாள், அரனது ஆணையால்—சிவபெருமானது திருவரு ளாணையால், மாயமது அயர்த்தனன்—தான் கொண்ட மாயத்தை மறந்து, மலர்க்கண் துஞ்சினான்—மலர்போன்ற கண்களை மூடித் துயில் கூடினார். (287)

துஞ்சிய வேலையிற் றுணைவி யாகிய
பஞ்சினின் மெல்லடிப் பாவை பார்த்திவன்
வஞ்சகன் வஞ்சகன் மாய னேயெனா
வஞ்சின ணெஞ்சக மழன்று நீங்கினாள்.

துஞ்சிய வேலையில்—திருமால் மாயத்தை மறந்து துயின்ற சமயத்தில், பஞ்சின் இன் மெல்லடி—பஞ்சூட்டிய கண்ணுக்கினிய மிருதுவான அடிகளையுடைய, துணைவியாகிய பாவை—சலந்தரன் மனைவியாகிய விருந்தை, பார்த்து—துயின்றானது கபட நிலையைப் பார்த்து, இவன் வஞ்சகன் வஞ்சகன் மாயனே—இவன் வஞ்சகன் வஞ்சகன் திருமாலேயாவன்; எனா—என்று நிச்சயித்து, அஞ்சினள்—அஞ்சி, நெஞ்சகம் அழன்று—மனங் கொதித்து, நீங்கினாள்—விலகி அகன்றாள். (288)

அருந்ததி யன்னகற் பழிந்த தன்மையால்
வருந்தின ளுயிர்த்தனண் மாயம் யாவையும்
பொருந்திய தன்னுயிர்ப் போத நீர்மையாற்
றெரிந்தனள் சீதரற் கினைய செப்புவாள்.

அருந்ததி அன்ன கற்பு அழிந்த தன்மையால்—அருந்ததியின் கற்பையொத்த தனது கற்பு அழிந்த தன்மையினால், வருந்தினள் உயிர்த்தனள்—

வருந்தி நெட்டுயிர்த்து, பொருந்திய தன் உயிர்ப் போத நீர்மையால்—தன் மாட்டுப் பொருந்திய தனது ஆன்மபோத இயல்பால், மாயம் யாவையும் தெரிந்தனள்—திருமாலின் மாயம் முழுவதையும் உணர்ந்து, சீதரற்கு இனைய செப்புவாள்—திருமாலுக்கு இதனைக் கூறுவாள். (289)

மாவலி யுடையதோர் மடங்க லாயினோர்
காவல ரிருவரக் காவ லாளருன்
மேவல ராயுற வேந்த னாகிநீ
யோவலை குரங்கொடு திரிதி யொண்புவி.

மா வலி உடையது ஓர் மடங்கல் ஆயினோர் காவலர் இருவர்—மிக்க வலி படைத்த ஒப்பற்ற சிங்கங்களாகி இங்கே வந்தவர்கள் உன் கோயில் துவார பாலகரான இருவராவர்; அக் காவலாளர் உன் மேவலராய் உற—அவர்கள் உனக்குப் பகைவர்களாய் வர, நீ வேந்தனாகி—நீ ஓர் அரசனாய், ஒண் புவி—ஒள்ளிய பூமியில், குரங்கொடு ஓவலை திரிதி—குரங்குக் கூட்டத்தோடு ஓழிவின்றி அலையக் கடவாய்.

அக்காவலர் இராவணனுங் கும்பகர்ணனுமாய்ப் பிறந்தனர் என்க. (290)

பொற்புறு கணவனைப் போல வந்தெனைப்
பற்பகல் புணர்ந்தனை பகைவர் மாயையாற்
கற்புடை மனைவியைக் கவர்ந்து போகநீ
சொற்படு பழியினைச் சுமத்தி யாலென்றாள்.

பொற்பு உறு கணவனைப்போல வந்து எனைப் பற்பகல் புணர்ந்தனை—அழகு மிக்க என் கணவரைப்போல வந்து என்னைப் பலநாட் சேர்ந்தனை; பகைவர்—உன் பகைவர், கற்புடை மனைவியை மாயையால் கவர்ந்து போக—உன்னுடைய கற்பிற் சிறந்த மனைவியை மாயத்தாற் கவர்ந்து செல்ல, நீ சொற்படு பழியினை சுமத்தி—நீ உலகத்தாற் சொல்லப்படுகின்ற பழிப்பைச் சுமக்கக் கடவாய்; என்றாள்—என்று சாபமிட்டாள்.

சொற்படுபழி, மனைவியைப் பறிகொடுத்தமையும் பறிபோயவளை அங்கீகரித்தமையுமாகிய பழி என்க. உய்த்துணரவல்லார்க்குப் பொருட்படு பழியன்மையுமுணர்க. விருந்தை, திருமால் மனைவியும், தன்போற் கேடுறுக என்று சமணப் போக்கிற் சாப மொழி பகராமை சிந்தித்துப் போற்றற் பாலதாம். பழி செய்தோரே தண்டனைக்குரியர். (291)

இக்கொடு மொழிபுகன் றெரியை மூட்டியே
புக்குயிர் துறந்தனள் புலம்பி யாங்கவ
ளாக்குறு சுடலைநீ றாடி வாடினன்
மைக்கடன் மேனியன் மாலின் மூழ்கியே.

இகொடு மொழி புகன்று—இந்தக் கொடிய சாப மொழியைக் கூறி, எரியை மூட்டி—அக்கினியை உண்டாக்கி, புக்கு—அக்கினிப் பிரவேசஞ் செய்து, உயிர் துறந்தனள்—உயிரை விடுத்தாள்; மைக்கடல் மேனியன்—கரிய கடலை யொத்த மேனியையுடைய திருமால், மாலின் மூழ்கி—அவள்மேற் கொண்ட மோகத்தில் முழுகி, புலம்பி—அவளை நினைந்து புலம்பி, ஆங்கு அவள் அக்கு உறு சுடலை நீறு ஆடி—அவ்விடத்தில் அவள் எரிந்த என்புகள் பொருந்திய சுடலைச் சாம்பரில் விழுந்து புரண்டு, வாடினன்—வாட்ட மெய்தினர். (292)

## வேறு

அத்துணை தன்னின் வானோ ரம்புயன் கயிலை யேகி
நித்தனை யிறைஞ்சி மாயோ னிலைமையை யுணர்த்தும் போழ்திற்
சத்தியங் கதனைத் தேர்ந்து தலையளி செய்து தானோர்
வித்தினை யுதவி யீது விண்டுமுன் னிடுதி ரென்றாள்.

அத்துணை தன்னில்—அப்பொழுது, வானோர் அம்புயன் கயிலை ஏகி—தேவர்களும் பிரமதேவருந் திருக்கைலாசத்துக்குச் சென்று, நித்தனை இறைஞ்சி மாயோன் நிலைமையை உணர்த்தும் போழ்தில்—சிவபெருமானை வணங்கித் திருமாலின் நிலைமையை உணர்த்தும்பொழுது, சத்தி அங்கு அதனைத் தேர்ந்து—அதனை அருட்சத்தியாகிய உமாதேவியார் உணர்ந்து, தலை அளி செய்து—பேரருள் புரிந்து, தான் ஓர் வித்தினை உதவி—தாம் ஒரு வித்தினை உண்டாக்கி, ஈது விண்டு முன் இடுதிர் என்றாள்—இவ்வித்தைத் திருமாலின் எதிரில் விதையுங்கள் என்று கொடுத்தருளினர்.

வித்து—துளசி வித்து. (293)

ஈதலு மதனை வேதா விருகையா லேந்திச் சென்னி
மீதுறக் கொண்டு போந்து விருந்தைதன் னீமந் தன்னிற்
றாதுறு பலியின் வித்தித் தடங்கட லமுதம் பெய்ய
மாதவன் முன்ன மாங்கோர் துளவமாய் மலிந்த தன்றே.

ஈதலும்—உமாதேவியார் கொடுத்தருள, அதனை—அவ்வித்தினை, வேதா இரு கையால் ஏந்தி—பிரமா இரு கரங்களாலும் ஏந்தி, சென்னி மீது உறக் கொண்டு போந்து—சிரசின்மீது வைத்துக்கொண்டு சென்று, ஈமம் தன்னில்—மயானத்தில், விருந்தை தன் தாது உறு பலியின் வித்தி—விருந்தையின் சப்த தாதுக்களும் எரிதலுற்ற சாம்பரில் விதைத்து, தடம் கடல் அமுதம் பெய்ய—விசாலித்த பாற்கடலின் அமிர்தத்தை ஊற்ற, மாதவன் முன்னம் ஆங்கு—திருமாலின் முன்னிலையாகிய அவ்விடத்தில், ஓர் துளவமாய் மலிந்தது—அவ்வித்து ஒரு துளசியாய் முளைத்து வளர்ந்தது. (294)

தண்டுள வான தாங்கோர் தையலாய் நின்ற காலைக்
கண்டனன் றிருவின் கேள்வன் கனலிடைப் புகுந்தாண் மீது
கொண்டிடு காத னீங்கி யவள்வயிற் கூட்டம் வெஃக
வண்டரு மயனு மாலுக் கருங்கடி யியற்றி யீந்தார்.

தண் துளவு ஆனது—தண்ணிய துளவமானது, ஆங்கு ஓர் தையலாய் நின்ற காலை—அவ்விடத்தி லொரு பெண் வடிவமாய் நின்றபொழுது, திருவின் கேள்வன் கண்டனன்—திருமகள் நாயகரான திருமால் கண்டு, கனலிடைப் புகுந்தாள் மீது கொண்டிடு காதல் நீங்கி—அக்கினியிற் பிரவேசித் திறந்த விருந்தையின்மீது கொண்ட மோகம் நீங்கி, அவள் வயின் கூட்டம் வெஃக—அத் துளவப் பெண்ணின் சேர்க்கையை விரும்ப, அண்டரும் அயனும்—தேவர்களும் பிரமாவும், மாலுக்கு அரும் கடி இயற்றி ஈந்தார்—திருமாலுக்கு அத் துளவப் பெண்ணை அரிய திருமணஞ் செய்து கொடுத்தார்கள். (295)

கடியுறு துளவ மென்னுங் கன்னியைக் கொண்டு கஞ்சக்
கொடியுறு தகைமைத் தான கோநகர் குறுகி வேறோர்
படியுறு பெற்றித் தல்லாப் பல்பெரும் போக மாற்றி
முடியுறு சூட்டு மாக முடித்தனன் முளரிக் கண்ணன்.

கடி உறு துளவம் என்னும் கன்னியைக் கொண்டு—திருமணம் புரிந்த துளவம் என்கின்ற பெண்ணை அழைத்துக்கொண்டு, கஞ்சக் கொடி உறு—திருமகள் வசிக்கின்ற, தகைமைத்தான—மேலான தகைமையையுடைய, கோ நகர் குறுகி—இராச நகராகிய வைகுந்தத்தை அடைந்து, வேறு ஓர் படி உறு பெற்றித்து அல்லா—வேறொரு பிரகாரங் கிடைத்தல் கூடாத, பல் பெரும் போகம் ஆற்றி—பல பெரிய போகங்களை அநுபவித்து, முடி உறு சூட்டும் ஆக—முடிக்கட் சூடும் மாலையாகவும், முளரிக் கண்ணன் முடித்தனன்—தாமரைக் கண்ணரான திருமால் அத் துளவப் பெண்ணைச் சூட்டிக்கொண்டார். (296)

அவன்சலந் தரனை வீட்டு மாழியை வாங்கப் பன்னாட்
சிவன்கழல் வழிபட் டோர்நாட் செங்கணே மலராச் சாத்த
வுவந்தனன் விடைமேற் றோன்றி யப்படை யுதவப் பெற்று
நிவந்தன னதனல் வைய நேமியா னென்ப மாதோ.

அவன்—அந்தத் திருமால், சலந்தரனை வீட்டும் ஆழியை வாங்க—சலந்தரனைக் கொல்லாநின்ற அந்தச் சக்கரப்படையைத் தாம் பெற்றுக்கொள்ளும் பொருட்டு, பல் நாள் சிவன் கழல் வழிபட்டு—பல நாள் சிவபெருமானுடைய திருவடிகளை ஆயிரம் ஆயிரம் தாமரை மலர்களால் அருச்சித்து, ஓர் நாள்—ஒருநாள் ஒரு தாமரை மலர் குறைய, செங்கணே மலராய் சாத்த—தமது சிவந்த கண்ணையே தாமரை மலராக இடந்து சாத்த, உவந்தனன் விடை

மேல் தோன்றி அப்படை உதவ—அதற்குச் சிவபெருமான் மகிழ்ந்து இடபத்தி லெழுந்தருளி அந்தச் சக்கரத்தினைக் கொடுத்தருள, பெற்று நிவந்தனன்—அதனைப் பெற்று உயர்ச்சியடைந்தார்; அதனால்—சக்கராயுதத்தைப் பெற்ற காரணத்தால், வையம் நேமியான் என்ப—உலகத்தார் திருமாலை நேமியான் என்று கூறுவர். (297)

### வேறு

போற்ற லார்தம் புரமடு புங்கவன்
வேற்று ருக்கொள் வியனருட் டன்மையைச்
சாற்றி னுமினித் தன்னிக ரில்லதோ
ரேற்றின் மேல்வருந் தன்மை யியம்புவாம்.

போற்றலார் தம் புரம் அடு புங்கவன்—பகைவரின் முப்புரங்களை அழித்த சிவபெருமான், வேற்று உரு கொள் வியன் அருள் தன்மையைச் சாற்றினும்—வேற்றுருக்கொண்ட பெரிய அருளின் தன்மையை உரைத்தோம்; இனி தன் நிகர் இல்லது ஓர் ஏற்றின்மேல் வருந் தன்மை இயம்புவாம்—இனி அப் பெருமான் தனக்கு நிகரற்றதொரு இடபத்தின்மீது இவர்ந்தருளுந் தன்மையை உரைப்பாம். (298)

இன்ன நான்குகத் தெல்லையி ராயிர
மன்னு கின்றதொர் வைகலவ் வைகலுன்
றுன்னு முப்பது தொக்கதொர் திங்களா
மன்ன தாறிரண் டால்வரு மாண்டரோ.

இன்ன—இப்பொழுது நிகழும் சதுர்யுகம் போன்று, இராயிரம் நான்கு உகத் தெல்லை மன்னுகின்றது—இரண்டாயிரம் சதுர்யுகம் கொண்டது, ஓர் வைகல்—ஒரு தினம் ஆகும்; அ வைகல் முப்பது தொக்கது—அத்தினம் முப்பது கொண்டது, துன்னும் ஓர் திங்களாம்—தினங்கள் கூட்டரவு செய்யும் ஒரு மாதமாம்; அன்னது—அம்மாதம், ஆறு இரண்டால்—பன்னிரண்டன் கூட்டரவால், ஆண்டு வரும்—ஒரு வருடம் உண்டாகும்.

இங்கே குறிப்பிட்ட தினம் பிரமாவுக்குரிய தினம். (299)

ஆண்டு நூறுசென் றாலயற் காயுவு
மாண்டு போமது மாற்கொரு வைகலா
மீண்டு நூல்களெ லாமிவை கூறுமாற்
காண்டி யாலிவை கற்றுணர் பேதைநீ.

ஆண்டு நூறு சென்றால்—மேற்கூறிய வருடம் நூறு கழிந்தால், அயற்கு ஆயுவும் மாண்டு போம்—பிரமாவுக்கு ஆயுளும் முடியும்; அது—பிரமாவின்

ஆயுட்காலமாகிய அது, மாற்கு ஒரு வைகலாம்—திருமாலுக்கு ஒரு தினமாம்; ஈண்டும் நூல்கள் எலாம்—கருத்தால் ஒருமையுறும் நூற்பரப்புக்க ளெல்லாம், இவை கூறும்—இவற்றை உரையாநிற்கும்; கற்று உணர் பேதை நீ இவை காண்டி—கற்றறி மூடனே நீ இவற்றை அறிவாயாக. (300)

ஆய தன்மையி லச்சுதற் காயுவு
மாயு மெல்லையின் மன்னுயிர் யாவையுந்
தேயு மண்டஞ் சிதைந்திடு மெங்கணும்
பாயி ருங்கன லேபரந் துண்ணுமால்.

ஆய தன்மையில்—அவ்வாறாகிய முறையில், அச்சுதற்கு ஆயுவும் மாயும்—திருமாலுக்கு ஆயுளும் முடியும்; எல்லையில்—அச்சமயத்தில், மன்னுயிர் யாவையும் தேயும்—நிலைபெற்ற உயிர்களனைத்தும் ஒடுங்கும்; அண்டம் சிதைந் திடும்—அண்டங்கள் அழியும்; எங்கணும் பாய் இருங் கனலே பரந்து உண்ணும்—எவ்விடத்திலுஞ் சுவாலிக்கின்ற பெரிய அக்கினியே பரவி அவ்விடங்களை உண்ணும்.

பிரமாவின் ஆயுளை ஒரு தினம் என வைத்து நூறு வருடங் கழியத் திருமாலின் ஆயுள் முடியும் என்க. (301)

ஆன காலை யகிலமு மீமமாய்த்
தூந லங்கொடு தோன்றுமச் சூழலிற்
றானு லாவித் தனிநடஞ் செய்திடு
ஞான நாயக னாயகி காணவே.

ஆன காலை—அப்பொழுது, அகிலமும் ஈமமாய் தூ நலம் கொடு தோன்றும்—உலகமெல்லாஞ் சுடலையாய்ப் பரிசுத்தமாகிய நன்மை உடையதாய்த் தோன்றும்; அ சூழலில்—அந்த மகா மயானத்தில், ஞான நாயகன்—ஞான நாயகரான சிவபெருமான், நாயகி காண—ஞான நாயகியாகிய தேவி மாத்திரங் காண, தான் தனி உலாவி நடம் செய்திடும்—தாமே ஏகமாய் நின்று தீயாடி நடனஞ்செய்தருளுவர்.

*'நள்ளிருளில் நட்டம் பயின்றாடும்' என்க. (302)

பெருகு தேயுப் பிரளய மன்னதிற்
றருமம் யாவினுக் குந்தனித் தெய்வதம்
வெருவி யாமிவண் வீடுது மேலினிப்
புரிவ தேதெனப் புந்தியிற் சூழ்ந்ததே.

* சிவபுராணம் — 89.

பெருகு தேயுப் பிரளயம் அன்னதில்—பெருகிய அக்கினிப் பிரளய மொன்றில், தருமம் யாவினுக்கும் தனித் தெய்வதம்—தருமமாகிய அனைத்துக்கும் மூலமாய் ஒப்பற்ற தேவதை, வெருவி—அஞ்சி, யாம் இவண் வீடுதும்—யாம் இப் பிரளயத்தில் இறந்துவிடுவோம்; இனி மேல் புரிவது ஏது என—இனிமேற் செய்வ தென்னையென்று, புந்தியில் சூழ்ந்தது—மனத்தில் எண்ணியது.

எவ்வுயிர்களின் வாழ்வைச் சீர்செய்ய நின்றதோ, அவ்வுயிர்கள் ஒடுங்கத், தான் பயன்பாடின்றித் தனித்து நிற்றலாற்றாதே அவ்வுயிர்களைத் தன்னோ டுளப்படுத்தி உயிர்களிடமாக நின்றமையின், 'யாம் வீடுதும்' என்ற தென்க. (303)

ஆறு லாஞ்சடை யண்ணலைச் சேர்வனே
லீறி லாதென்று முற்றிடு வேனெனத்
தேறி யேயறத் தெய்வதஞ் செங்கணு
னேற தாயொ ரெழிலுருக் கொண்டதே.

ஆறு உலாம் சடை அண்ணலைச் சேர்வனேல்—கங்கை பெருகுகின்ற சடையினையுடைய சிவபெருமானை அடைவேனாயின், ஈறு இலாது என்றும் உற்றிடுவேன்—அழியாமல் என்று மிருப்பேன்; எனத் தேறி—என்று துணிந்து, அறத் தெய்வதம்—தரும தேவதை, செங்கண் ஆன் ஏறதாய்—சிவந்த கண்ணை யுடைய ஆனேறாய், ஓர் எழில் உருக் கொண்டது—ஓர் அழகிய வடிவத்தை எடுத்தது.

ஆனேறு—இடபம். (304)

ஏற்றின் மேனிகொண் டீசன்முன் னேகியே
போற்றி யானின்று பொன்றிடுந் தன்மையை
மாற்றி யாற்றல் வழங்கிநிற் கூர்தியாம்
பேற்றை யெற்குப் பிரானரு ளென்னவே.

ஏற்றின் மேனி கொண்டு—இடப வடிவங் கொண்டு, ஈசன் முன் ஏகி—சிவபெருமா னெதிரே சென்று, போற்றி—துதித்து, யான் இன்று பொன்றிடும் தன்மையை மாற்றி—யான் அக்கினிப்பிரளயமாகிய இப்பொழுது இறக்குந் தன்மையை நீக்கி, ஆற்றல் வழங்கி—தேவரீரைச் சுமக்கும் ஆற்றலை அருள் செய்து, நிற்கு ஊர்தியாம் பேற்றை—தேவரீருக்கு வாகனமாயிருக்கும் பேற்றை, எற்கு பிரான் அருள் என்ன—அடியேற்கு எம்பெருமானே அருள் செய்க என்று பிரார்த்திக்க. (305)

### வேறு

இறத்தலை யின்மையும் யான மாய்த்தனைப்
பொறுத்திடுந் தன்மையும் பொருவில் வன்மையு
முறைத்திடு மன்பும்வா லுணர்வு நல்கியே
யறத்தனிக் கடவுளுக் கண்ணல் கூறுவான்.

இறத்தலை இன்மையும்—சாவா இயல்பையும், யானமாய் தனைப் பொறுத்திடும் தன்மையும்—வாகனமாய்த் தம்மைச் சுமக்கும் பேற்றையும், பொருவில் வன்மையும்—அதற்கேற்றவாறு ஒப்பில்லாத வன்மையையும், உறைத்திடும் அன்பும்—இடையீடுபடா திறுகிய அன்பையும், வாலுணர்வும்—தூய மெய்யுணர்வையும், அறத்தனிக் கடவுளுக்கு நல்கி—தனித்த தரும தேவதைக்கு அருள்செய்து, அண்ணல் கூறுவான்—சிவபெருமான் கூறி யருளுவார். (306)

முதலய லிடைகடை மொழிய நின்றிடுஞ்
சதுர்வித யுகந்தனிற் றருமத் தின்றிற
மிதுவென நான்குமூன் றிரண்டொன் றாகிய
பதமுறை யூன்றியே படியிற் சேறிமேல்.

முதல் அயல் இடை கடை மொழிய நின்றிடும்—முதலும் அதற்கயலும் இடையும் கடையும் எனச் சொல்லப்படுகின்ற, சதுர்வித யுகந்தனில்—கிரேத திரேத துவாபர கலி என்கின்ற நான்கு வகையாகிய யுகங்களிலே, தருமத்தின் திறம் இது என—தருமத்தி னியல்பு இதுவென்று யாவரும் அறியும் படி, நான்கு மூன்று இரண்டு ஒன்று படியில் ஆகிய—நான்குகால் மூன்றுகால் இருகால் ஒருகால் பூமியிற் படியும்படி, பதம் முறை ஊன்றி—உன் கால்களை யுகந்தோறும் மேற்கூறிய கிரமத்தானே ஊன்றி, மேல் சேறி—பூமியின்மீது சஞ்சரிப்பாயாக. (307)

ஈங்குன திடந்தனில் யாமெக் காலமு
நீங்கல மிருந்தன நீயும் வந்துநம்
பாங்கரி னடைந்தனை பரிவொ டூர்தியாய்த்
தாங்குதி யாரினுந் தலைமை பெற்றுளாய்.

ஈங்கு உனது இடந்தனில்—தருமத்தின் இடமாகிய இங்கே வந்து நிற்கும் உன்னிடத்தினின்றும், யாம் எக்காலமும் நீங்கலம் இருந்தனம்—யாம் எக்காலத்திலாயினும் உன்னைவிட்டு நீங்காமலிருந்தோம்; நீயும் வந்து நம் பாங்கரில் அடைந்தனை—தனித்த நீயும் வந்து நமது பக்கலைச் சார்ந்தாய்; பரிவொடு ஊர்தியாய் தாங்குதி—அன்போடு வாகனமாய் எமைச் சுமப்பாயாக; யாரினும் தலைமை பெற்றுளாய்—இவ்வாற்றால் யாவரினுந் தலையாய நிலையைப் பெற்றாயாயினை. (308)

எண்ணுநந் தொண்டர்க ளியற்று பாவமும்
புண்ணிய மாநமைப் புறக்க ணித்துளார்
பண்ணிய வறமெலாம் பாவ மாகுமாற்
றிண்ணமீ தருமறை தானுஞ் செப்புமே.

எண்ணு நம் தொண்டர்கள் இயற்று பாவமும் புண்ணியமாம்—எம்மை எண்ணுகின்ற எமது தொண்டர்கள் செய்த பாவமும் புண்ணியமாம்; நமைப் புறக்கணித்துளார்—எமை எண்ணுத எமது தொண்டர்க ளல்லாத வர்கள், பண்ணிய அறம் எலாம் பாவம் ஆகும்—செய்த அறங்களெல்லாம் பாவமாகும்; ஈது திண்ணம்—இது சத்தியம்; அருமறை தானும் செப்பும்—இதனை அரிய வேதங்களும் எடுத்துச் சொல்லும்.

எண்ணுதலாவது இறைவன் கருத்தறிதல்; தொண்டராவார் இறைபணி செய்வோர். சண்டீசர் செய்த பாவமும், இங்கே இத் தக்கன் செய்யும் அறமும் ஈண்டைக்கு உதாரணமாம்.

* 'அரன்றன் பாத மறந்துசெ யறங்க ளெல்லாம் வீண்செயல்'

† 'வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி
நரரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே'

என்பன சித்தியார். (309)

மைதவி ரடியர்செய் பவமு மற்றுளார்
செய்திடு தருமமுந் திரிப தாகியே
யெய்திடு கின்றதி யாமுன் றன்னிடை
மெய்திக ழுயிரென மேவும் பான்மையால்.

மை தவிர் அடியர் செய் பவமும்—குற்றமற்ற அடியவர்கள் செய்யும் பாவமும், மற்றுளார் செய்திடு தருமமும்—அடியர் அல்லாதார் செய்யும் அறமும், திரிபதாகி எய்திடுகின்றது—பயனுல் மாறுபட்டு நிற்பது, யாம் உன் தன் இடை—யாம் உன்னிடத்தில், மெய் திகழ் உயிரென—உடலில் விளங்கும் உயிர்போல, மேவும் பான்மையால்—என்றுங் கலந்திருக்குந் தன்மையினுலேயாம்.

அடியார் தருமத்தை விசாரித்துச் செய்வர்; அல்லாதார் விசாரியாது செய்வர். இவ்வாற்ருல் அடியார் செய்வன எல்லாம் புண்ணியமாம்; அல்லாதவர் செய்வன எல்லாம் பாவமாம்.

§ 'கல்லாதா ரைட்பங் கழியநன் ருயினுங்
கொள்ளா ரறிவுடை யார்'

என்ற தேவர் குறளும்,

‡ 'புத்தரொ டமணர்கள் அறவுரை புறவுரை'

என்ற சம்பந்தப் பிரபுவின் தேவாரமும் ஈண்டுப் பெரிதுஞ் சிந்திக்கற்பாலவாம். (310)

நின்னிடை யாமுளோ நீயு மூர்தியாய்
மன்னுதி யெமதுபான் மற்றி தல்லதை
யின்னுமோர் வடிவுகொண் டெம்மைப் போற்றுதி
யன்னது முணர்கென வருளிச் செய்தரோ.

---

* சிவஞானசித்தியார் சுபக்கம் — சூத். 2, பாடல் 27.
† சிவஞானசித்தியார் சுபக்கம் — சூத். 2, பாடல் 29.
§ திருக்குறள் — 404.
‡ சம்பந்தர் தேவாரம் — 1ஆம் திருமுறை 1357

நின்னிடை யாம் உளோம்—உன்னிடத்தில் யாம் என்றும் உறைகின்ரேம்; நீயும் ஊர்தியாய் எமதுபால் மன்னுதி—நீயும் எமக்கு வாகனமாய் எமது பக்கலில் நிலைபெற்றிருப்பாயாக; இது அல்லது—இஃதன்றி, இன்னும் ஓர் வடிவு கொண்டு—மற்ருெரு சமயத்தில் வேறுமொரு வடிவெடுத்து, எம்மைப் போற்றுதி—எம்மைப் பூசிப்பாய்; அன்னதும் உணர்க—அதனையும் இப்பொழுதே அறிவாயாக; என அருளிச் செய்து—என்று திருவாய்மலர்ந் தருளி.

மானுட வடிவெடுத்துக் காஞ்சியிற் சிவபெருமானைப் பூசித்தமை காஞ்சிப் புராணத்திற் காண்க. (311)

### வேறு

கூர்ந்த சூலக் கொடும்படை வானவன்
சார்ந்து போற்றுந் தருமக் கடவுளை
யூர்ந்தி டுந்தனி யூர்திய தாகியே
சேர்ந்தி டும்படி சீரருள் செய்தனன்.

கூர்ந்த சூலக் கொடும்படை வானவன்—கூரிய சூலமாகிய கொடிய படையை ஏந்திய சிவபெருமான், சார்ந்து போற்றும் தருமக் கடவுளை—தம்மை யடைந்து துதிக்கின்ற தரும தேவதையை, ஊர்ந்திடும் தனி ஊர்தியதாகி சேர்ந்திடும்படி—தாம் ஊர்ந்தருளுகின்ற ஊர்தியாய்த் தம்மைச் சேர்ந் திருக்கும்படி, சீர் அருள் செய்தனன்—சிறப்பாகிய திருவருளைச் செய் தருளினர். (312)

அந்த நாண்முத லாதிப் பிரான்றனைச்
சிந்தை மேல்கொண்ட சீருடை யன்பர்முன்
னந்தி யாகு நலம்பெறு மூர்திமேல்
வந்து தோன்றும் வரம்புரி பான்மையால்.

அந்த நாள் முதல்—அந்த நாள் முதலாக, ஆதிப் பிரான் தனைச் சிந்தை மேல்கொண்ட சீர் உடை அன்பர் முன்—ஆதிக் கடவுளாகிய தம்மைத் தியானிக்கின்ற அருட் செல்வத்தையுடைய அன்பர்களுக்கு முன்னே, வரம் புரி பான்மையால்—வரங்கொடுத்தலை முன்னிட்டு, நந்தி ஆகும் நலம் பெறும் ஊர்தி மேல்—இடபமாகும் நலத்தைப் பெருநின்ற தரும தேவதையாகிய ஊர்தியின்மீது, வந்து தோன்றும்—இடபாரூடராய்த் தோன்றி அருளுவர். (313)

சாற்று மவ்விடைக் கேதனைத் தாங்குபே
ராற்ற லீந்த செயலறிந் தல்லவோ
மாற்ற லார்புரஞ் செற்றுழி மாயவ
னேற்றின் மேனிகொண் டெந்தையைத் தாங்கினன்.

சாற்றும் அ விடைக்கு—முன்னர்க் கூறுநின்ற தருமதேவதையாகிய அந்த இடபத்துக்கு, தனை தாங்கு பேராற்றல் ஈந்த செயலறிந்து அல்லவோ—தம்மைச் சுமக்கும் பேராற்றலை ஈந்தருளிய அருட்செயலை அறிந்தன்றோ, மாற்றலார் புரம் செற்றுழி—பகைவர்களது திரிபுரத்தைச் சங்காரஞ் செய்த போது, மாயவன் ஏற்றின் மேனி கொண்டு—திருமால் இடபத்தின் வடிவத்தை எடுத்துக்கொண்டு, எந்தையைத் தாங்கினன்—எம்பெருமானைச் சுமந்தார். (314)

ஆத லாலர னவ்விடை யூர்ந்திட
லேத மோவன் றிதுநிற்க தெண்டிரை
மீது தோன்றும் விடத்தையுண் டானென
வோதி னுயத னுண்மையைக் கேட்டிநீ.

ஆதலால்—இங்ஙனம் இருந்தவாற்றால், அரன்—சிவபெருமான், அ விடை ஊர்ந்திடல் ஏதமோ—அந்த இடபத்தை ஊர்தல் குற்றமாமோ; அன்று—குணமேயாம்; இது நிற்க—இவ் வரலாறு நிற்க; தெண்டிரை மீது தோன்றும் விடத்தை உண்டான் என ஓதினய்—தெளிந்த திரையினையுடைய பாற்கடல்மீது தோன்றும் விடத்தை உண்டார் என்று சொன்னய்; அதன் உண்மையை நீ கேட்டி—அதன் உண்மையையும் நீ கேட்பாயாக.

'விடையும் ஏறுமோ ஆலமுங் கொள்ளுமோ' என்று தக்கன் வினவியதை உட்கொண்டு, 'விடத்தை உண்டான் என ஓதினய்' என்றார். (315)

வேறு

நிருதர் தம்முட னவுணரு மமரரு நேர்ந்து
திருகு வெஞ்சினத் தொருபகன் முந்துபோர் செய்ய
விருதி றத்தினும் பற்பலர் வல்லையி லிறப்ப
வெருவி யன்னது கண்டன ரமரினை விடுத்தார்.

முந்து ஒரு பகல்—முன்னொரு காலத்திலே ஒருதினம், நிருதர் தம்முடன்—இராக்கதர்களோடு, அவுணரும் அமரரும் நேர்ந்து—அசுரரும் தேவர்களும் எதிர்த்து, திருகு வெம் சினத்து போர் செய்ய—மாறுபட்டு வெவ்விய கோபத்தோடு போர்செய்ய, இரு திறத்தினும்—இராக்கதரோ டெதிர்த்த அசுரர்களுந் தேவர்களுமாகிய இருதிறத்தாரிலும், பல் பலர் வல்லையில் இறப்ப—மிகப் பலர் விரைந்திறந்தாராக, அன்னது கண்டனர் வெருவி—அதனைக்கண்டு பயந்து, அமரினை விடுத்தார்—இராக்கதரோடு சண்டை செய்வதை நிறுத்தினர்கள். (316)

மேலை வானவ ரவுணர்தங் கோவொடு விரவிக்
கால மெண்ணில விருந்துபோர் செய்வது கருதி
நாலு மாமுகத் திறையவன் பதத்தினை நணுகிச்
சீல மோடவன் றாண்மலர் பணிந்துரை செய்வார்.

மேலே வானவர் அவுணர்—இராக்கதர்களுடன் பொருதலை நிறுத்திய வர்களாகிய விண்ணுலகிலுள்ள தேவர்கள் அசுரர்களாகிய இருதிறத்தாரும், தம் கோவொடு விரவி—தந் தலைவர்களான தேவேந்திரனோடும் அசுரேந்திர னோடும் முறையே கலந்து ஆலோசனை செய்து, எண்ணில காலம் இருந்து போர் செய்வது கருதி—எண்ணில்லாத காலஞ் சாவாமலிருந்து போர் புரித லைக் கருத்துட் கொண்டு, நாலு மாமுகத்து இறையவன் பதத்தினை நணுகி—பெருமை பொருந்திய நான்கு முகங்களையுடைய பிரமதேவரின் உலகத்தை யடைந்து, சீலமோடு—ஆண்டைக்கு வேண்டும் ஆசாரத்தோடு, அவன் தாள் மலர் பணிந்து உரை செய்வார்—அவருடைய மலரடிகளை வணங்கிக் கூறு வார்கள்.

வானவர்தங்கோவொடும், அவுணர்தங்கோவொடும்விரவிஎன்க. *(317)*

ஒல்கு மாயுளை யுடையரேம் பற்பக லுஞற்று
மல்கு பேரம ரியற்றுவான் பாற்கடன் மதியா
வல்க லின்றிய வமிர்தினை வாங்கியே யடிகே
ணல்கு வாயெமக் கென்றலு மயனிவை நவில்வான்.

அடிகேள்—சுவாமிகாள், ஒல்கும் ஆயுளை உடையரேம்—நாம் சுருங்குகின்ற சில்வாழ்நாளை யுடையோம்; பல் பகல் உஞற்று மல்கு பேர் அமர் இயற்று வான்—பலகாலம் முயற்சி பெருகுதற்குரிய பெரிய யுத்தத்தைச் செய்யும் பொருட்டு, பாற் கடல் மதியா—பாற்கடலைக் கடைந்து, அல்கல் இன்றிய—குறைதல் இல்லாத, அமிர்தினை வாங்கி—அமிர்தத்தைப் பெற்று, எமக்கு நல்குவாய் என்றலும்—எமக்குத் தந்தருளும் என்று வேண்டுதலும், அயன் இவை நவில்வான்—பிரமதேவர் இவற்றைக் கூறுவார்.

அமிர்தம்—மிருத்தை நீக்குவது; சாவா மருந்து. மிருத்து—மரணம். சாவாமல் நிருதரோடு நெடுநாட் சமர்செய்யும்பொருட்டு அமரரும் அசுரரும் அமிர்தத்தை வேண்டினரென்க. *(318)*

ஆதி மாயவற் கிச்செயன் மொழிகுவ மவனே
யோத வேலையைக் கடைந்தமு தளித்திடு முண்டாற்
சாதல் வல்லையில் வந்திடா தென்றயன் சாற்றிப்
போது நாமென வவரொடும் பாற்கடல் புகுந்தான்.

ஆதி மாயவற்கு இ செயல் மொழிகுவம்—நமக்கெல்லாம் ஆதியாகிய திருமாலுக்கு இச் செயலினைச் சொல்லுவோம்; அவன் ஓத வேலையைக் கடைந்து அமுது அளித்திடும்—அவர் அலைகளையுடைய பாற்கடலைக் கடைந்து அமுதத்தைத் தந்தருளுவர்; உண்டால் சாதல் வல்லையில் வந்திடாது—அதனை உண்டால் மரணம் விரைவில் வந்தணுகாது; என்று அயன் சாற்றி—என்று பிரமதேவர் கூறி, நாம் போதும் என—நாம் திருமாலிடம் போவோம்

என்று, அவரொடும் பாற்கடல் புகுந்தான்—அவர்களோடும் பாற்கடலை அடைந்தார்.

அவ்ர், அமரரும் அசுரரும். (319)

நனந்த லைப்படு பயங்கெழு தெண்டிரை நடுவ
ணனந்தன் மீமிசைத் துயிலுறு மூர்த்தியை யணுகி
மனந்த வாதபே ரன்பொடு நான்முகன் வழுத்த
நினைந்து கண்விழித் தொய்யென வெழுந்தன னெடியோன்.

நனந்தலைப்படு—இலவணம் முதற் சுத்தோதகம் இறுவாயாக உள்ள ஏழு கடல்களுக்கும் நடுவட் பொருந்திய, தெண் டிரைகெழுபயம் நடுவண்—தெளிந்த திரை கெழுமிய பாற்கடலின் மத்தியில், அனந்தன் மீமிசை—சேஷ சயனத்தின்மீது, துயிலுறு மூர்த்தியை அணுகி—அறிதுயில் புரிகின்ற திருமாலை அடைந்து, மனம் தவாத பேரன்பொடு—மனத்தைவிட்டகலாத பேரன்போடு, நான்முகன் வழுத்த—பிரமதேவர் துதிக்க, நினைந்து—அதனைத் திருவுளங்கொண்டு, கண் விழித்து—அறிதுயிலுணர்ந்து, நெடியோன் ஒய் என எழுந்தனன்—திருநெடுமால் விரைந் தெழுந்தார்.

நல் நந்து அலைப்படு என்று பிரித்துரைப்பது சிறப்பன்று. நந்து—சங்கு. நனந்தலை—நடு. (320)

நீவி ரிவ்விடை வந்தவா றென்னென நெடியோன்
பூவின் மேல்வரு பண்ணவ னவுணர்கள் பொருவி
றேவர் வேந்தர்கள் வேண்டிய குறையினைச் செப்ப
வாவ தென்றதற் கியைந்தன னளித்திடு மருளால்.

நெடியோன்—திருநெடுமால், நீவிர் இ இடை வந்தவாறு என் என—நீவிர் இங்கே வந்த வரலாறு என்னை என்று வினவ, பூவின்மேல் வரு பண்ணவன்—திருமாலின் உந்திக்கமலத்திற் பிறந்த பிரமதேவர், அவுணர்கள்—அசுரர்களும், பொருவில் தேவர்—ஒப்பில்லாத தேவர்களும், வேந்தர்கள்—அசுரேந்திரன் தேவேந்திரன் ஆகிய அவர்களுடைய வேந்தர்களும், வேண்டிய குறையினைச் செப்ப—வேண்டுதல் செய்த குறையை முறையீடு செய்ய, அளித்திடும் அருளால்—யாவரையும் பாதுகாக்குங் கருணையினாலே, ஆவது என்று—ஆவதாக என்று கூறி, அதற்கு இயைந்தனன்—அமிர்த மதனத்துக்கு உடன் பட்டார். (321)

அருள்பு ரிந்தெழு மாயவன் மந்தர மதனை
யுருள்பு ரிந்திடு மத்தென நிறுவியே யுடலாம்
பொருள்பு ரிந்திடு மதியினை மதலையாப் புரியா
விருள்பு ரிந்தவா சுகிதனை நாணென யாத்தான்.

அருள் புரிந்து எழு மாயவன்—அநுக்கிரகஞ்செய்து துயிலெழுந்த திருமால், மந்தரம் அதனை உருள் புரிந்திடு மத்தென நிறுவி—மந்தர மலையை உருட்சி பொருந்திய மத்தாக நிறுத்தி, உடல்—தேய்ந்து சென்ற தன் உடலை, ஆம் பொருள் புரிந்திடு மதியினை—வளரும் பொருளாகச் செய்துகொண்ட சந்திரனை, மதலையாப் புரியா—கடைதறியாகச் செய்து, இருள் புரிந்த வாசுகிதனை—இருளாகிய நஞ்சைக் கொண்ட வாசுகி என்ற பாம்பை, நாண் என யாத்தான்—கடைகயிறாகக் கட்டினார்.

மந்தரம்—அட்டகிரிகளுள் ஒன்று. வாசுகி—அட்ட நாகங்களுள் ஒன்று. சுழலுகின்ற மத்து எனினுமாம். (322)

ஒருபுறத்தினி லமரர்க ளொருபுறத் தவுண
ரிருபு றத்தினு மீர்த்திட நல்கியிப் புவிசூழ்
தருபு றக்கிரி யனையமத் தடிமுடி தன்மெய்
வருபு றத்தினுங் கரத்தினும் பரித்தனன் மாலோன்.

ஒரு புறத்தினில் அமரர்கள்—ஒரு பக்கத்தில் தேவர்களும், ஒரு புறத்து அவுணர்—மற்றைப் பக்கத்தில் அசுரர்களுமாக, இரு புறத்தினும் ஈர்த்திட நல்கி—இருபக்கத்திலும் நின்று இழுக்கும்படி செய்து, இ புவி சூழ்தரு புறக்கிரி அனைய—இப் பூவுலகத்தைச் சூழ்ந்திருக்கின்ற சக்கரவாளகிரியை ஒத்த, மத்து அடிமுடி—மந்தரமாகிய மத்தின் அடியையும் முடியையும், தன் மெய் வரு புறத்தினும் கரத்தினும் மாலோன் பரித்தனன்—முறையே தமது மெய்க்கட் பொருந்திய முதுகினாலுங் கரத்தினாலுந் திருமால் தாங்கினார். (323)

ஆன தன்மையின் மாயவன் பரித்துழி யமரர்
கோனும் வானவர் யாவரு மவுணருங் கோமான்
றானும் வாசுகி பற்றியே வலியுறுந் தகவால்
வானி லாவுமிழ் பாற்கடன் மறுகிட மதித்தார்.

ஆன தன்மையின் மாயவன் பரித்துழி—இவ்வாறாகத் திருமால் மத்தைத் தாங்க, வானவர் யாவரும்—தேவர்க ளனைவரும், அமரர் கோனும்—தேவேந்திரனும், அவுணரும்—அசுரர்களும், கோமான் தானும்—அசுரேந்திரனும், வாசுகி பற்றி வலியுறும் தகவால்—வாசுகியாகிய நாணைப் பற்றி வலித்தலைச் செய்யும் இயல்பால், வால் நிலா உமிழ் பாற்கடல் மறுகிட—வெண்மையாகிய நிலாவை உமிழ்கின்ற பாற்சமுத்திரங் கலங்கும்படி, மதித்தார்—கடைந்தார்கள். (324)

மதித்த வேலையவ் வேலையி னுடைந்தென வாய்விட்
டதிர்த்த தேவரு முலைந்தனர் குலைந்தன வகிலங்
கதித்த மேருவுஞ் சலித்தன வொலித்தன கரிகள்
பதைத்து வெய்துயிர்த் தொடுங்கின நடுங்கின பணியே.

அ வேலையின்—அப்பொழுது, மதித்த வேலை—கடைந்த அந்தச் சமுத்திரம், உடைந்தென—கரை விண்டு கட்டுடைந்தாற்போல, வாய்விட்டு அதிர்த்தது—வாய்விட்டு ஆரவாரித்தது; ஏவரும் உலைந்தனர்—எல்லாரும் நடுநடுங்கினுர்கள்; அகிலம் குலைந்தன—உலகங்கள் நிலைகுலைந்தன; கதித்த மேருவும் சலித்தன—உயர்ந்த மேருமலையும் அடிமுடிகள் சலித்தன; கரிகள் ஒலித்தன—திக்கு யானைகள் பிளிறின; பணி—அட்ட நாகங்கள், பதைத்து வெய்து உயிர்த்து ஒடுங்கின நடுங்கின—பதைத்து வெம்மையை உயிர்த்து ஒடுங்கி நடுங்கின. (325)

உடைந்து போவது கொல்லென வமரர்க ளொருங்கே
தொடர்ந்து தம்பெரு வலிகொடே மந்தரஞ் சுழலக்
கடைந்து வேலையைக் கலக்குழி யீர்த்திடுங் கயிரு
யடைந்த வாசுகி பொறுக்கலா தயர்ந்ததை யன்றே.

உடைந்து போவது கொல் என—வலி கெட்டுக் கடையாதொழிவதா என்று, அமரர்கள்—தேவர்கள், ஒருங்கு தொடர்ந்து—அசுரர்களோடு ஒருங்கு கடைதலைத் தொடர்ந்து, தம் பெரு வலிகொடு—தமது பெரிய வலி கொண்டு, மந்தரம் சுழல கடைந்து வேலையை கலக்குழி—மந்தரமாகிய மத்துச் சுழலும் படி கடைந்து பாற்கடலைக் கலக்கும்போது, ஈர்த்திடும் கயிருய் அடைந்த வாசுகி—இழுக்குங் கயிருயிருந்த வாசுகி, பொறுக்கலாது அயர்ந்தது—பொறுக்கலாற்ருது அயர்ந்தது. (326)

ஊன்று பேதுற வெய்தியே யாற்றவெய் துயிர்த்துத்
தோன்று வெஞ்சினங் கொண்டுமெய் பதைத்துநாத் துடிப்ப
வான்ற வாயிரம் வாய்தொறு மாலகா லத்தைக்
கான்ற தத்துணை யளக்கரு முமிழ்ந்தது கடுவே.

ஊன்று பேதுறவு எய்தி—இறுகப் பற்றிய துன்பத்தை வாசுகி எய்தி, ஆற்ற வெய்து உயிர்த்து—பெரிதும் வெம்மையை நெட்டுயிர்த்து, தோன்று வெம் சினம் கொண்டு—உண்டாகாநின்ற பெரிய கோபத்தைக் கொண்டு, மெய் பதைத்து—உடல் பதைத்து, நா துடிப்ப—நாக்கள் துடிப்ப, ஆன்ற ஆயிரம் வாய்தொறும் ஆலகாலத்தை கான்றது—அகன்ற ஆயிரம் வாய் தோறுஞ் சுரக்கின்ற ஆலகாலவிடத்தைக் கக்கியது; அ துணை—அவ்வளவில், அளக்கரும் கடுவே உமிழ்ந்தது—பாற்கடலும் அமுதத்தைத் தாராமல் அந் நஞ்சையே தந்தது.

பாற்கடல், ஆயிரம் வாய்கள் வாயிலாகத் தன்பாலிட்ட நஞ்சையே வெளியிட்டதாயிற்று. தேவாசுரர்களின் முயற்சி, பூசிய பாலையே கறந்ததாயிற்று. (327)

ஈற்றுக் கோடியி னெழுமுகிற் கோடியி னிருண்டு
கூற்றுக் கோடியின் மறங்கொடு திசைதொறுங் குலவுங்
காற்றுக் கோடியின் விரைவினுல் வடவையங் கடுந்தீ
நூற்றுக் கோடியிற் பரந்ததவ் விடமெலா நொய்தின்.

ஈற்று கோடியின்—உலக முடிவின் எல்லையில், எழு முகில் கோடியின் இருண்டு—எழுகின்ற முகிற் கூட்டங்களை ஒப்பக் கருநிறம் படைத்து, கூற்று கோடியின் மறம் கொடு—கோடி கூற்றுவர்களின் மறத்தை மேற்கொண்டு, திசை தொறும் குலவும் காற்று கோடியின் விரைவினுல்—திக்குக்கள்தோறுஞ் சென்று மோதுகின்ற கோடி சண்டமாருதத்தின் வேகத்தோடு, நூற்று கோடி கடும் வடவையம் தீயின்—நூறுகோடி வெய்ய வடவாமுகாக்கினியைப் போல, அ விடம் எலாம் நொய்தின் பரந்தது—அவ்வாலகால விடமனைத்தும் விரைவில் எங்கும் பரந்தது. (328)

ஓட லுற்றெழுந் தவ்விடஞ் சூழ்தலு முலையா
வோட லுற்றனர் தானவ ரும்பரா யுள்ளோ
ரோட லுற்றனர் முனிவர ரோடலுற் றனரா
லோட லுற்றன ருலகெலாம் படைத்திடு முரவோர்.

ஓடு அல் உற்று—பரக்கின்ற இருளின் தன்மையைப் பொருந்தி, அ விடம் எழுந்து சூழ்தலும்—அந்த ஆலகால விடம் எழுந்து எங்கும் பரவுதலும், உலையா—நிலைகுலைந்து, தானவர் ஓடலுற்றனர்—அசுரர்கள் ஓடினர்கள்; உம்பராய் உள்ளோர் ஓடலுற்றனர்—தேவர்களும் ஓடினர்கள்; முனிவரர் ஓடலுற்றனர்—முனிவர்களும் ஓடினர்கள்; உலகெலாம் படைத்திடும் உரவோர் ஓடலுற்றனர்—உலகனைத்தையும் படைத்தவரான பிரமதேவரும் உலகனைத்தையும் அரசு செய்யும்படி பெற்றுக்கொண்டோரான தேவேந்திரன் அசுரேந்திரன் என்னும் இருவரும் ஆகிய உரவோர்களும் ஓடினர்கள். (329)

தண்டு ழாய்முடிப் பண்ணவ னினையதோர் தன்மை
கண்டு மந்தரங் காப்புவிட் டுள்ளமேற் கவற்சி
கொண்டு நாமின்று போற்றுது மீதெனக் குறியா
வண்ட ராதியர் மேற்செலும் விடத்தின்மு னடுத்தான்.

தண் துழாய் முடி பண்ணவன்—தண்ணிய துளவ மாலையை யணிந்த திருமுடியினையுடைய திருமால், இனையது ஓர் தன்மை கண்டு—இவ்வாருயதொரு தன்மையைக் கண்டு, மந்தரம் காப்பு விட்டு—மந்தரமாகிய மத்தைக் காத்து நிற்றலை விடுத்து, உள்ளமேல் கவற்சி கொண்டு—மனக்கவலையுற்று, நாம் இன்று ஈது போற்றுதும் என குறியா—நாம் இன்று இந்த நஞ்சைத் தீது

விளையாது காப்போம் என்று கருதி, அண்டர் ஆதியர் மேல் செலும் விடத்தின் முன் அடுத்தான்—தேவர் முதலியவர்கள்மீது செல்லும் ஆலகால விடத்தின் முன் சென்ருர். (330)

மேல்வ ருங்கொடு விடத்தின்முன் னுறுதலும் வெகுண்டு
சால வங்கது தாமரைக் கண்ணன்மேற் ருக்கி
மூல முள்ளதோர் வச்சிர மணிநிற முருக்கி
நீல வண்ணமே யாக்கிய தவனுநின் றிலனுல்.

மேல் வரும் கொடு விடத்தின் முன் உறுதலும்—ஆங்குள்ளார்மேல் வருகின்ற கொடிய ஆலகாலத்தின் முன் செல்லுதலும், அங்கு அது சால வெகுண்டு—அங்கே அவ்விடம் மிகவுங் கோபித்து, தாமரைக் கண்ணன்மேல் தாக்கி—தாமரைக் கண்ணரான திருமால்மீது தாக்குதல் செய்து, மூலம் உள்ளது ஓர் வச்சிர மணி நிறம் முருக்கி—பண்டுள்ளதாகிய ஒப்பற்ற வச்சிரத்தின் நிறத்தை மாற்றி, நீல வண்ணம் ஆக்கியது—நீல நிறத்தைத் திருமாலுக்கு உண்டாக்கியது; அவனும் நின்றிலன்—இங்ஙனமாக அத்திருமாலும் எதிர் நிற்றலாற்ருராயினுர். (331)

கோல காலமா யுலகெலா மடுந்தொழில் கொண்ட
வால காலமுன் னிற்கலா ரரிமுத லானேர்
மூல காலமு மிறுதியு மின்றியே மூவாக்
கால காலன்வாழ் கயிலேயை யடைந்தனர் கடிதில்.

கோல காலமாய்—உருவங் கொண்டதோர் ஊழி போன்றதாய், உலகு எலாம் அடும் தொழில் கொண்ட—உலகம் முழுவதையும் அழிக்குந் தொழிலேக் கொண்ட, ஆலகாலம் முன் நிற்கலார்—ஆலகாலத்தின்முன் நிற்றலாற்ருதவர்களாய், அரி முதலானேர்—திருமால் முதலியவர்கள், மூல காலமும் இறுதியும் இன்றி—ஆதியும் அந்தமும் இல்லாமல், மூவா காலகாலன் வாழ் கயிலேயை—என்றும் மூப்படையாத காலகாலராகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்குங் கைலாசகிரியை, கடிதின் அடைந்தனர்—விரைவில் அடைந்தார்கள். (332)

முந்து வெவ்விடஞ் சுடுதலா லிரிந்தவர் முக்க
ணெந்தை யெம்பெரு மாட்டிவாழ் கயிலேயி லெவரும்
வந்த தற்புத நீரதோ வெருவினுன் மைந்தர்
தந்தை தாயிடத் தன்றியே யாங்ஙனஞ் சார்வார்.

முந்து வெவ்விடம் சுடுதலால்—ஓடுகின்ற தம்மைத் தொடர்ந்து முந்துகின்ற வெவ்விய விடஞ் சுடுதலினுலே, இரிந்தவர் எவரும்—புறங்கொடுத்

தோடியவர்கள் யாவரும், முக்கண் எந்தை—மூன்று கண்களையுடைய பரம பிதாவும், எம் பெருமாட்டி—உலகமாதாவும், வாழ் கயிலையில்—எழுந்தருளி யிருக்கின்ற கைலாசகிரிக்கண், வந்தது அற்புத நீரதோ—ஓடிவந்தது ஓரற்புத மாமோ; மைந்தர் வெருவினல்—பிள்ளைகளாயினோர் தமக்கோ ரச்சம் உள தானல், தந்தை தாயிடத்து அன்றி யாங்ஙனம் சார்வார்—தந்தை தாயரிடத் தல்லாமல் வேறெவ்விடத்துக்குப் போவார்கள். (333)

### வேறு

ஆயவர் கயிலையி லமலற் காகிய
கோயிலின் முதற்பெருங் கோபு ரத்திடை
நாயக நந்தியந் தேவை நண்ணியே
போயதெந் துயரெனப் புகன்று போற்றினர்.

ஆயவர்—அங்கே சென்றவர்கள், கயிலையில் அமலற்கு ஆகிய—கைலாச கிரியிலே சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பொருட்டு நிருமிக்கப்பட்ட, கோயிலின் முதல் பெரும் கோபுரத்திடை—செம்பொற் றிருக்கோயிலின் முதற்கணுள்ள பெருமை பொருந்திய கோபுர வாய்தலின்கண், நாயக நந்தியம் தேவை நண்ணி—நாயகஞ் செய்துகொண்டிருக்கின்ற நந்தியம் பெருமானை அடைந்து, எம் துயர் போயது என புகன்று—இனி நமது துன்பம் நீங்கியது என்று கூறி, போற்றினர்—துதித்தார்கள். (334)

போற்றிய பின்னுறப் புகுந்த வாறெலாஞ்
சாற்றினர் கேட்டலுந் தகுவர் தேவர்கள்
வீற்றுற வவணிறீஇ வேதன் மாறிசைக்
கோற்றொழி லார்தமைக் கொண்டு போயினன்.

போற்றிய பின்னுற—வணங்கிய பின்பு, புகுந்தவாறு எலாம் சாற்றினர்—நடந்த வரலாறனைத்துங் கூறினர்கள்; கேட்டலும்—நந்தியம்பெருமான் கேட்ட அளவில், தகுவர் தேவர்கள் அவண் வீற்றுற நிறீஇ—அசுரர்களையுந் தேவர்களையும் அவ்வாய்தலில் வேறு வேறு நிறுத்தி, வேதன் மால்—பிரம தேவரையுந் திருமாலையும், திசைக் கோல் தொழிலார் தமை—திக்குப் பாலகரையும், கொண்டு போயினன்—அழைத்துக்கொண்டு உள்ளே சென்றார்.

கோற்றொழில்—காவல். (335)

நடைநெறி யருள்புரி நந்தி யெம்பிரான்
கடைநிலை யைந்தவாங் காப்பி லெண்டிசை
யடைதரு மன்னரை யருளி னேக்கியிவ்
விடைதனி லுறுதிரென் றியம்பி யேகியே.

நடை நெறி அருள் புரி நந்தி எம்பிரான்—வாய்தலைக் காவல்புரிகின்ற நந்தியாகிய எம்பெருமான், கடைநிலை ஐந்தவாம் காப்பில்—கடைத்தலை வாய்தலுக்கு ஐந்தாவது வாய்தலில், எண் திசை அடைதரு மன்னரை அருளின் நோக்கி—அட்டதிக்குப் பாலகர்களைக் கருணையுடன் நோக்கி, இ இடைதனில் உறுதிர் என்று இயம்பி—இவ்விடத்தில் உறுவீராக என்று கூறி நிறுத்தி, ஏகி—அப்பாற் சென்று. (336)

அருண்முறை நாடிமா லயனென் றுள்ளதோ
ரிருவரை யமலன்முன் னெய்த வுய்த்தலுங்
கருணையங் கடறனைக் கண்டு போற்றினர்
பரவச மாயினர் பணிந்து பன்முறை.

அருள் முறை நாடி—திருக்கைலாசபதி அருளும் முறையை அறிந்து, மால் அயன் என்று உள்ளது ஓர் இருவரை—திருமால் பிரமா என்று உரைக்கப் படும் இருவரையும், அமலன் முன் எய்த உய்த்தலும்—சிவபெருமான் சந்நிதி யில் எய்துமாறு விடுத்தலும், கருணையங் கடல் தனைக் கண்டு—அவர்கள் கிருபா சமுத்திரமாகிய சிவபெருமானைத் தரிசித்து, பன்முறை பணிந்து பரவசம் ஆயினர் போற்றினர்—பலமுறை வணங்கிப் பரவசம் எய்தித் துதித்தார்கள்.

அருண்முறையாவது, அநுமதி. (337)

போற்றினர் நிற்றலும் புரத்தை முன்னடு
மாற்றலி னும்பரா னரிநின் மேனிதான்
வேற்றுரு வாயிவண் மேவிற் றென்னெனச்
சாற்றினன் யாவையு முணருந் தன்மையான்.

போற்றினர் நிற்றலும்—பிரம விஷ்ணுக்கள் துதித்து முன்னிலையில் நிற்ப, முன் புரத்தை அடும் ஆற்றலின் உம்பரான்—முன்னர்த் திரிபுர சங்காரஞ் செய்த ஆற்றலாலுயர்ந்த சிவபெருமான், அரி—அவர்களுள் விஷ்ணுவை நோக்கித் திருமாலே, நின் மேனிதான் வேற்றுருவாய்—உனது உருவம் வேற்றுருவ மாகி, மேவிற்று என்—மேவியதன் காரணம் என்னை; இவண் மேவிற்று என்—அன்றி நீதான் இவ்விடம் போந்ததன் காரணந்தான் என்னை; என—என்றிங்ஙனம், யாவையும் உணரும் தன்மையான் சாற்றினன்—யாவற் றையும் உணர்த்தாதே உணருஞ் சர்வஞ்ஞராகிய அப்பெருமான் அறியாதார் போல வினவியருளினர்.

நின் மேனி வேற்றுருவாய் மேவிற்று என், (நீ) இவண் மேவிற்று என் என்க. நின் மேனிதான் வேற்றுருவாய் நீ இவண் மேவிற்று என் எனினும் அமையும். (338)

மெய்வழி பாடுசெய் மேலை யோர்க்கெலா
முய்வழி புரிபவ னினைய வோதலு
மைவழி மேனியன் மான முள்ளுற
வவ்வழி யினையன வறைதன் மேயினன்.

மெய் வழிபாடு செய் மேலையோர்க்கு—உண்மை வழிபாட்டினைச் செய்கின்ற மேலோருக்கு, உய்வழி எலாம் புரிபவன் இனைய ஓதலும்—உய்யுந்திறம் அனைத்தையும் புரிந்தருள்பவராகிய சிவபெருமான் இவ்வாறு திருவாய்மலர்ந் தருளுதலும், மை வழி மேனியன்—கருமை ஒழுகுகின்ற மேனியையுடைய திருமால், மானம் உள் உற—மானம் மனத்தைக் கொள்ளை கொள்ள, அ வழி இனையன அறைதன் மேயினன்—அவ்விடத்து இவைகளைக் கூறுவா ராயினர். (339)

வஞ்சின வவுணர்கள் வான மேலவர்
வெஞ்சின வமரினில் விளிந்த வேலையி
லெஞ்சலி லாயுவுற் றிகல்செய் வாமெனப்
புஞ்சமொ டயனொடு புகறன் மேயினர்.

வஞ்சின அவுணர்கள்—சபதஞ் செய்து பொருகின்ற அசுரர்களும், வான மேலவர்—தேவர்களும், வெம் சின அமரினில்—கொடுங் கோபத்தோடு பகைவர்களுடன் செய்யும் யுத்தத்தில், விளிந்த வேலையில்—இறப்பு நேர்ந்த போது, எஞ்சலில் ஆயு உற்று இகல் செய்வாம் என—இறத்தலில்லாத நீண்ட ஆயுளைப் பெற்றுப் போர்புரிவோமென்று, புஞ்சமொடு அயனொடு புகல்தன் மேயினர்—கூட்டமாகப் பிரமதேவரிடஞ் சென்று கூறுவாராயினர். (340)

அன்னமென் கொடியின னனைய ரோடுபோந்
தென்னொடு கூறினன் யானெ ழுந்தரோ
வுன்னருள் பெற்றில னுணர்ந்தி டாமலே
மன்னிய வமிழ்திவண் வருதல் வேண்டினேன்.

அன்ன மென் கொடியினன்—மிருதுவான அன்னக் கொடியையுடைய பிரமதேவர், அனையரோடு போந்து—அந்தத் தேவாசுரர்களுடன் வந்து, என்னொடு கூறினன்—என்னிடம் உரைத்தார்; யான் எழுந்து—நான் உடன்பட் டெழுந்து, உன் அருள் பெற்றிலன்—தேவரீருடைய அருளைப் பெறாமல், உணர்ந்திடாமல்—பெறவேண்டுமென்ற உணர்ச்சியு மில்லாமல், மன்னிய அமிழ்து இவண் வருதல் வேண்டினேன்—நிலைபெற்ற அமிர்தம் இங்குக் கிடைத்தலை விரும்பினேன். (341)

தானவ ரமரர்கள் சதுர்மு கத்தவ
னேனையர் தம்முட னியானின் றெய்தியே
பானிறை கடல்கடை பொழுதிற் பாயெரி
யானது மருளுற வாலம் போந்ததே.

தானவர்—அசுரர்களும், அமரர்கள்—தேவர்களும், சதுர்முகத்தவன்—பிரமாவும், ஏனையர் தம்முடன்—பிறருமாகிய இவர்களுடன், யான் இன்று எய்தி பால் நிறை கடல் கடை பொழுதில்—யான் இன்று சென்று நிறைந்த பாற் சமுத்திரத்தைக் கடையும்பொழுது, பாய் எரியானது மருளுற—சுவாலிக்கின்ற அக்கினியும் அஞ்சி மயக்கமுறும்படி, ஆலம் போந்தது—ஆலகாலவிடம் எழுந்தது.

எரி, இங்கே வடவாமுகாக்கினி. (342)

உன்றன தருள்பெறு வுண்மை நாடியே
யின்றுல குயிரெலா மிறக்க வவ்விடஞ்
சென்றதி யாவருந் தெருமந் தோடினர்
நின்றவென் மெய்யையிந் நிறம தாக்கிற்றே.

அ விடம் உன் தனது அருள் பெறு உண்மைநாடி—அந்த ஆலகாலம் தேவரீரின் திருவருளை யாம் பெறுத உண்மையை உணர்ந்து, இன்று உலகு உயிரெலாம் இறக்க—இன்றைக்கு உலகு உயிர் அனைத்தும் இறக்கும்படி, சென்றது—யாண்டும் பரந்தது; யாவரும் தெருமந்து ஓடினர்—அனைவரும் மயங்கி ஓடினர்கள்; நின்ற என் மெய்யை—எதிர்த்து நின்ற என் உடலை, இ நிறமது ஆக்கிற்று—இவ்வண்ணம் ஆக்கிற்று. (343)

வேற்றுரு வாக்கியென் மெய்யிற் றாக்கலு
மாற்றல னகன்றன னனையர் தம்மொடே
யேற்றம தானவெம் மிடர்கள் யாவையு
மாற்றுநர் யாருளர் மற்று நீயலால்.

வேற்றுரு ஆக்கி—வேற்றுருவத்தை ஆக்கி, என் மெய்யில் தாக்கலும்—எனது உடலில் அது தாக்குதலும், ஆற்றலன்—சகிக்கமாட்டேனாய், அனையர் தம்மொடு அகன்றனன்—அந்தத் தேவாசுரர்களுடன் அவ்விடத்தினின்றும் போந்தேன்; ஏற்றமதான எம் இடர்கள் யாவையும்—மிக்கனவாகிய எமது துன்பம் அனைத்தையும், நீ அலால் மாற்றுநர் யார் உளர்—தேவரீரையன்றி நீக்குவார் வேறு யாவர் உளர். (344)

உன்னருள் பெறுமலவ் வுததி சேர்தலா
லின்னதொ ரின்னல்வந் தெய்திற் றுதலா
னின்னடி யடைந்தன நீடு தீயெனத்
துன்னிய கொடுவிடந் தொலைக்கச் செல்லுமால்.

உன் அருள் பெருமல் அ உததி சேர்தலால்—தேவரீருடைய திருவருளைப் பெருமல் அப் பாற்கடலை அடைதலால், இன்னது ஓர் இன்னல் வந்து எய்திற்று—இத்தகையதொரு துன்பம் வந்தெய்தியது ; ஆதலால் நின் அடி அடைந்தனம்—ஆதலினுலே தேவரீருடைய திருவடியைச் சரணடைந்தோம்; நீடு தீயென—சுவாலிக்கின்ற வடவைத் தீ போல, துன்னிய கொடு விடம்—தொடர்ந்து நெருங்கிய கொடிய ஆலகாலவிஷம், தொலைக்க செல்லும்—நம்மையெல்லாம் அழிக்க வாராநிற்கும். (345)

ஆரணம் யாவையு மறிந்து நாடொணுப்
பூரண வுமையொடு பொருந்தி யின்னதா
மேரண வுருவுகொண் டிருக்கை யெம்மையாள்
காரண மன்றியே கருமம் யாவதோ.

ஆரணம் யாவையும்—வேதம் யாவும், அறிந்து நாடொணு—ஆராய்ந்து அறிய ஒண்ணுத, பூரண—பூரணப் பொருளாகிய தேவரீர், உமையொடு பொருந்தி—உமாதேவியாருடன் கூடி, இன்னது ஆம் ஏர் அணவு உருவு கொண்டிருக்கை—இத்தன்மை யாகிய அழகு பொருந்திய திருவுருவைக் கொண்டு இங்கே வீற்றிருத்தல், எம்மை ஆள் காரணம் அன்றிக் கருமம் யாவது—அடியேங்களை ஆண்டருளுங் காரணத்தானன்றி வேறு யாது கருமங் கருதி. (346)

தீயென வெழுதரு சீற்ற வெவ்விட
மாயதை மாற்றியே யளியர் தங்களை
நீயருள் புரிகென நீனி றந்திகழ்
மாயவ னுரைத்தனன் வழுத்தி நிற்கவே.

தீ என எழுதரு சீற்ற வெவ்விடம் ஆயதை மாற்றி—அக்கினிபோல எழுகின்ற கோபத்தினையுடைய வெவ்விடமானதை நீக்கி, அளியர் தங்களை நீ அருள் புரிக என—தண்ணளிக் குரியோமாகிய எளியேங்களைத் தேவரீர் காத்தருள்க என்று, நீல் நிறம் திகழ் மாயவன் உரைத்தனன்—விடத்தினுல் நீலநிறம் பொருந்திய திருமால் கூறி, வழுத்தி நிற்க—துதித்து நிற்க. (347)

மாதிர விறைவரும் வானு ளோர்களு
நீதியி லவுணரு நின்ற வெல்லையி
ஞதனை வழுத்தலு நம்பன் கேட்டரோ
வேதிவை யரவமென் றியம்ப லோடுமே.

மாதிர இறைவரும்—திக்குப் பாலகர்களும், வானுளோர்களும்—தேவர்களும், நீதி இல் அவுணரும்—நீதியற்ற அசுரர்களும், நின்ற எல்லையில் நாதனை

வழுத்தலும்—தாம் நின்ற இடத்தில் நின்று சிவபெருமானைத் துதித்தலும், நம்பன் கேட்டு—சிவபெருமான் அவ்வொலியைக் கேட்டு, இவை அரவம் ஏது என்று இயம்பலும்—இவ்வொலி யாது என்று வினவியருளுதலும். (348)

வானவ ரவுணர்கண் மாதி ரத்தவ
ரேனையர் வல்விடத் தின்ன லுற்றுளார்
கோநகர்க் கடைதொறுங் குழுமி யேத்தினு
ரானதிவ் வொலியென வயன்வி ளம்பவே.

வானவர் அவுணர்கள் மாதிரத்தவர் ஏனையர்—தேவர்களும் அசுரர்களுந் திக்குப்பாலகர்களும் பிறரும் ஆகிய, வல் விடத்து இன்னல் உற்றுளார்—வலிய விடத்தினாலே துன்பம் உற்றவர்கள், கோ நகர் கடைதொறும் குழுமி ஏத்தினர்—கோயிலின் வாய்தல்கள்தோறுங் குழுமி நின்று தேவரீரைத் துதித்தார்கள்; இ ஒலி ஆனது என—இவ்வொலி அதனால் உண்டானது என்று, அயன் விளம்ப—பிரமதேவர் விண்ணப்பஞ் செய்ய. (349)

கறுத்திடு மிடறுடைக் கடவு ணந்தியைக்
குறிப்பொடு நோக்கியே கொணர்தி யாலெனப்
புறத்திலம் மேலவன் போந்து மற்றவர்
திறத்துட னுறையுளிற் செல்ல வுய்ப்பவே.

கறுத்திடு மிடறுடைக் கடவுள்—இனிக் கறுக்குங் கண்டத்தினையுடைய சிவபெருமான், நந்தியைக் குறிப்பொடு நோக்கி—நந்திதேவரைத் திருவருட் குறிப்போடு நோக்கி, கொணர்தி என—அழைத்து வருவாயாக என்று அநுமதி செய்ய, அ மேலவன் புறத்தில் போந்து—அம் மேலோரான திருநந்திதேவர் புறத்தே வந்து, மற்றவர் திறத்துடன்—அந்த அவுணப் பகுதியோடு யாவரையும், உறையுளில் செல்ல உய்ப்ப—கோயிலினுள்ளே புகும்படி அனுப்ப.

மற்றவர், அருணெறிக்குப் புறம் ஆனவர். (350)

வந்தவர் யாவரும் வணங்கி யீசனைப்
புந்தியி லன்பொடு போற்றி யாற்றவு
நொந்தனம் விடத்தினு னெய்தி லன்னதைச்
சிந்தினை யெமக்கருள் செய்தி யென்னவே.

வந்தவர் யாவரும் ஈசனை வணங்கி—உள்ளே புகுந்தவர்கள் யாவரும் சிவபெருமானை வணங்கி, புந்தியில் அன்பொடு போற்றி—மனத்தின்கண் அன்போடு துதித்து, விடத்தினல் ஆற்றவும் நொந்தனம்—ஆலகாலவிடத்

தாற் பெரிதும் நொந்தோம்; நோய்தில் அன்னதைச் சிந்தினை எமக்கு அருள் செய்தி என்ன—விரைவில் அவ்விடத்தை ஒழித்து எமக்கு அருள் செய்வீராக என்று பிரார்த்திக்க. (351)

## வேறு

ஈதெலாங் கேட்ட மேலோ னிறைவியை நோக்கி யின்னோ
ரோதலா மாற்ற முன்ற னுளத்தினுக் கியைவ தாமோ
மாதுநீ புகறி யென்ன வந்துநின் னடைந்தார் வானோ
ராதலா லவர்க்கு வல்லே யருள்புரிந் திடுதி யென்றாள்.

ஈது எலாம் கேட்ட மேலோன்—இஃதெல்லாங் கேட்டருளிய சிவ பெருமான், இறைவியை நோக்கி—அருட்சத்தியாகிய இறைவியைத் திரு நோக்கஞ் செய்து, இன்னோர் ஓதல் ஆம் மாற்றம் உன்தன் உளத்தினுக்கு இயைவதாமோ—இவர்கள் ஓதுவதாகிய முறையீடு உனது மனத்துக்கு உடன்பாடாமோ; மாது நீ புகல்தி என்ன—உமையே நீ உன் கருத்தை உரைப்பாயாக என்று வினவியருள, வானோர் வந்து நின் அடைந்தார் ஆதலால்—தேவர்கள் தேவரீரையே சரணென்று வந்து அடைந்தா ராகையினால், அவர்க்கு வல்லே அருள் புரிந்திடுதி என்றாள்—அத் தேவர்களுக்கு விரைந்து திருவருள் புரிந்தருளும் என்று உரைத்தார்.

'நீதியி லவுணரும்' ஆண்டு வழுத்தி நின்றாராகவும், அவர்க்கு நிக்கிரகமே அநுக்கிரகமாதலின், அவர் வரவு பற்றி இறைவி ஒன்றும் உரையாராயினர். அசுரர்க் கமிர்தம் வழங்குவது திருவருட் குறிப்பன் றென்க. (352)

வண்டமர் குழலெம் மன்னை மற்றிவை யிசைத்த லோடு
மண்டரு மகிழ்ச்சி யெய்தி யாதியங் கடவு டன்பாற்
றொண்டுசெய் தொழுகு கின்ற சுந்தரன் றன்னை நோக்கிக்
கொண்டிவண் வருதி யாலக் கொடுவிடந் தன்னை யென்றான்.

வண்டு அமர் குழல் எம் அன்னை—அஞ்சிறைத் தும்பிகள் பெரிதும் விரும்பு கின்ற கூந்தலையுடைய எமது அன்னை, இவை இசைத்தலோடும்—இவைகளைக் கூறியவுடன், ஆதியங் கடவுள் அண்டு அரும் மகிழ்ச்சி எய்தி—ஆதியாகிய சிவபெருமான் அடைதற்கரிய மகிழ்ச்சி கொண்டு, தன்பால் தொண்டு செய்து ஒழுகுகின்ற சுந்தரன்தன்னை நோக்கி—தம்மிடத்துப் பணிபுரிந் தொழுகுகின்ற சுந்தரரைத் திருநோக்கஞ் செய்து, ஆலம் கொடுவிடம் தன்னை இவண் கொண்டு வருதி என்றான்—கொடிய ஆலகால விடத்தை இவ்விடத்துக்கு அகப்படுத்திக்கொண்டு வருவாயாக என்று கட்டளையிட்டருளினர். (353)

என்றலு மினிதே யென்னா விறைஞ்சினன் னேகி யாண்டுந்
துன்றிய விடத்தைப் பற்றிச் சுந்தரன் கொடுவந் துய்ப்ப
வொன்றொரு திவலை யேபோ லொடுங்குற மலர்க்கை வாங்கி
நின்றிடு மமரர் தம்மை நோக்கியே நிமலன் சொல்வான்.

என்றலும்—என்று கட்டளையிட்டருளுதலும், சுந்தரன் இனிது என்னு இறைஞ்சினன் ஏகி—சுந்தரர் நல்லது என்று வணங்கிச் சென்று, யாண்டும் துன்றிய விடத்தை பற்றி கொடுவந்து உய்ப்ப—எங்குஞ் செறிந்து பரவிய விடத்தைப் பற்றிக்கொண்டுவந்து கொடுப்ப, ஒன்று ஒரு திவலைபோல் ஒடுங்குற மலர்க்கை வாங்கி—அஃது ஒன்ருகியதொரு துளிபோ லொடுங்கத் தமது மலர்க்கரத்தில் ஏற்று, நின்றிடும் அமரர்தம்மை நோக்கி—ஆண்டு அஞ்சிச் சரணடைந்து நிற்கின்ற தேவர்களை நோக்கி, நிமலன் சொல்வான்—நிருமலராகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுவார். (354)

காளக வுருவு கொண்ட கடுவினை யுண்கோ வன்றே
னீளிடை யதனிற் செல்ல நெறிப்பட வெறிகோ வென்னு
வாளுறு மதிதோய் சென்னி வானவ னருள வன்னுன்
ருளுற வணங்கி நின்று சதுர்முகன் முதலோர் சொல்வார்.

காளகம் உருவு கொண்ட கடுவினை உண்கோ—கருநிறம் பொருந்திய இந்த விடத்தை உண்ணுவோமா; அன்றேல்—அன்ருயின், நீள் இடை அதனில் நெறிப்படச் செல்ல எறிகோ—நெடுந் தூரத்தில் நெறிபடச் செல்லும் பொருட்டு எறிவோமோ; என்னு—என்று, வாள் உறு மதி தோய் சென்னி வானவன் அருள—ஒளி மிகுகின்ற சந்திரன் வாழுகின்ற திருமுடியையுடைய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருள, சதுர்முகன் முதலோர்—பிரமா முதலிய வர்கள், அன்னுன் தாள் உற வணங்கி நின்று சொல்வார்—அப்பெருமானது தாளிலே தலை பொருந்த வணங்கி நின்று கூறுவார்கள். (355)

ஐயநீ யன்றி யாரிவ் வனல்விட மாற்று நீரார்
செய்யகைக் கொண்ட வாற்ருற் சிறிதெனக் காட்டிற் றன்றே
வெய்யதோ ரிதனை யின்னே விட்டனை யென்னிற் பின்னை
யுய்வரோ யாரு மின்னே யொருங்குடன் முடிந்தி டாரோ.

ஐய நீ யன்றி யார் இ அனல் விடம் ஆற்று நீரார்—பிதாவே தேவரீரே யன்றி யாவர்தாம் இந்த அழலுகின்ற விடத்தைத் தாங்க வல்லவர்; செய்ய கை கொண்ட ஆற்ருல்—தேவரீர் செம்மையாய திருக்கையிலே அடக்கிக் கொண்டவாற்ருல், சிறிது எனக் காட்டிற்று—அவ் விடம் தன்னைச் சிறிதாகக் காட்டியது; வெய்யது ஓர் இதனை—வெம்மையுடைத்தாகிய ஒப்பற்ற இவ் விடத்தை, இன்னே விட்டனை என்னில்—இப்பொழுது விடுவீராயின், பின்னை யாரும் உய்வரோ—பின்னர் எவரும் உய்யமாட்டார்; இன்னே ஒருங்கு உடன் முடிந்திடாரோ—இப்பொழுதே ஒருசேர யாவரும் அழிந்துபடுவர்கள். (356)

முடிவிலா வுனக்கே யன்ருே முன்னுறு பாக மெல்லாம்
விடமதே யெனினு மாக வேண்டுது மிதனை வல்லே
யடியரே முய்யு மாற்ரு லருந்தினை யருண்மோ வென்னக்
கடிகம ழிதழி வேய்ந்தோன் கலங்கலீ ரினிநீ ரென்ருன்.

முன்னூறு பாகம் எல்லா ம்–எப்பொருளேயாயினும் முதற் பாகம் முழுவதும், முடிவிலா உனக்கே அன்றே–அழிவில்லாத தேவரீருக்கேயாம்; விடமதே எனினும் ஆக–நஞ்சேயாயினும் ஆகுக; வேண்டுதும்–இதனை ஏற்கும்வண்ணம் பிரார்த்திக்கின்றோம்; அடியரேம் உய்யும் ஆற்றால்–அடியேங்கள் உய்யுமாறு, இதனை வல்லே அருந்தினை அருண்மோ என்ன–இதனை விரைந்து அருந்தியருளுக என்று வேண்டுதல் செய்ய, கடி கமழ் இதழி வேய்ந்தோன்–வாசனை கமழுகின்ற கொன்றை மாலையை அணிந்த சிவபெருமான், இனி நீர் கலங்கலீர் என்றான்–இனி நீவிர் கலங்கன்மின் என்று அருளிச்செய்தார். (357)

என்றனன் விரைவிற் றன்கை யேந்திய விடமுட் கொள்ளச்
சென்றது மிடற்றி லன்ன திறத்தினை யாரு நோக்கி
யின்றெம துயிர்நீ காத்தற் கிங்கிது சான்றா யங்க
ணின்றிட வருடி யென்றே நிமலனைப் போற்ற லுற்றார்.

என்றனன் விரைவில் தன் கை ஏந்திய விடம் உட்கொள்ள–என்று திருவாய்மலர்ந்தருளி விரைந்து தமது திருக்கையிலேந்திய விடத்தைப் பானஞ்செய்தருள, மிடற்றில் சென்றது–அது திருமிடற்றிற் சென்றது; அன்ன திறத்தினை யாரும் நோக்கி–அவ்வியல்பை யாவரும் நோக்கி, இன்று எமது உயிர் நீ காத்தற்கு இங்கு இது சான்றாய்–இன்று எங்கள் உயிரினைத் தேவரீர் காத்ததற்கு இங்கே இவ்விடம் அடையாளமாகிய சான்றாய், அங்கண் நின்றிட–திருக்கண்டமாகிய அவ்விடத்தில் நிற்கும்படி, அருள்தி என்று–திருவருள் புரிக என்று, நிமலனைப் போற்றலுற்றார்–சிவபெருமானைத் துதித்தார்கள். (358)

போற்றலு மிடற்றி லெங்கோன் பொலன்மணி யணிய தென்ன
மாற்றருந் தகைமைத் தான வல்விட நிறுவி யன்னார்க்
கேற்றநல் லருளைச் செய்ய யாவரு மிறந்தே யின்று
தோற்றின ராகு மென்னச் சொல்லரு மகிழ்ச்சி கொண்டார்.

போற்றலும்–யாவருந் துதிக்க, எம் கோன்–எம்பெருமான், மாற்றரும் தகைமைத்தான வல் விடம்–நீக்குதற்கரிய தகைமையினை யுடையதாகிய வலிய விடத்தை, பொலன்மணி அணியது என்ன–அழகிய நீலரத்தினாபரணம் என்று சொல்லும்படி, மிடற்றில் நிறுவி–திருக்கண்டத்தில் நிறுத்தி, அன்னார்க்கு ஏற்ற நல் அருளை செய்ய–அவர்களுக்குத் தக்க நல்ல அருளைப் புரியாநிற்ப, யாவரும்–அவர்க ளனைவரும், இன்று இறந்து தோற்றினர் ஆகும் என்ன–இன்றே இறந்து பிறந்தாராம் என்று சொல்லும்படி, சொல்லரும் மகிழ்ச்சி கொண்டார்–சொல்லுதற்கரிய மகிழ்ச்சி எய்தினார்கள். (359)

மாமகிழ் சிறந்து நிற்கு மாலயன் முதலோர் தம்மைத்
தூமதி மிலைச்சுஞ் சென்னித் தொல்லையோ னருளா னேக்கிக்
காமரு கடலை யின்னுங் கடைதிரா லமுதுண் டாகும்
போமினீ ரின்னே யென்னப் போற்றினர் வணங்கிப்போனர்.

மா மகிழ் சிறந்து நிற்கும் மால் அயன் முதலோர் தம்மை—மிக்க மகிழ்ச்சி யுற்று நிற்கின்ற திருமால் பிரமா முதலியவர்களை, தூமதி மிலைச்சும் சென்னி தொல்லையோன் அருளால் நோக்கி—தூய சந்திரனையணிந்த திருமுடியை யுடைய பழையோரான சிவபெருமான் கிருபாநோக்கஞ் செய்து, காமரு கடலை இன்னும் கடைதிர்—அழகு பொருந்திய திருப்பாற்கடலை இன்னுங் கடையுங்கள்; அமுது உண்டாகும்—அமுதம் எழும்; நீர் இன்னே போமின் என்ன—நீவிர் இப்பொழுதே போங்கள் என்று திருவாய்மலர்ந்தருள, போற்றி னர் வணங்கிப் போனர்—துதித்து வணங்கிச் சென்றார்கள். (360)

போனவர் தொன்மை போலப் புணரியைக் கடைந்த காலை
மேனிக ழமிர்த மேனை வியன்பொருள் பலவும் வந்த
வானவர் தாமே பெற்றார் மற்றவை தம்மை யால
மானதை யமல னுண்ட தவருயி ரளித்த தன்றே.

போனவர்—சென்றவர்கள், தொன்மை போல புணரியை கடைந்த காலை—முன்னர்ப்போலக் கடலைக் கடைந்தபோது, மேல் நிகழ் அமிர்தம்—மேலாக விளங்குகின்ற அமிர்தமும், ஏனை வியன் பொருள் பலவும் வந்த—வேறு உயர்ந்த பொருள்கள் பலவுந் தோன்றின; அவ்வதம்மை வானவர் தாமே பெற்றார்—அவற்றையெல்லாந் தேவர்களே பெற்றார்கள்; அமலன் ஆலமானதை உண்டது—சிவபெருமான் விடத்தை உண்டது, அவர் உயிர் அளித்தது அன்றே—அவர்களுடைய உயிரைப் பாதுகாத்ததாமன்றே.

ஏனைய, கற்பகம் காமதேனு முதலியன. 'ஆலமுங் கொள்ளுமோ' என்று தக்கன் வினவியதற்கு, 'உண்டது உயிரளித்தது' என விடையிறுத்த வாறும். (361)

கடல்விட நுகர்ந்த தொல்லைக் கடவுள்பின் னழிக்குங் காலை
யுடலுயி ரகிலம் யாவு மொடுங்கிய விடம தன்றே
சுடலைய தாகு மந்தச் சுடலைகா ணனைய சோதி
நடநவில் கின்ற வெல்லை நாடருந் தகைமைத் தஃதே.

கடல் விடம் நுகர்ந்த தொல்லை கடவுள்—பாற்கடலிற் பிறந்த விடத்தை உண்ட முதல்வராகிய சிவபெருமான், பின் அழிக்குங் காலை—இறுதியிற் சங் காரஞ் செய்யும்போது, உடல் உயிர் அகிலம் யாவும் ஒடுங்கிய இடமது அன்றே சுடலையதாகும்—உடலும் உயிரும் உலகமும் முழுதும் ஒடுங்கிய இடமே

சுடலையாகும்; அனைய சோதி நடம் நவில்கின்ற எல்லை அந்த சுடலைகாண்—அந்தச் சங்காரஞ்செய்த சோதியாகிய சிவபெருமான் நடனஞ் செய்கின்ற இடம் அந்தச் சுடலையேயாம்; அஃது நாடரும் தகைமைத்து—அது மனத்தால் எண்ணி யறிதற்கெட்டாத தகைமையினை யுடைய விடயமாம்.

இது, 'வீந்தோர் சுடலை தன்னினும் ஆடுமோ' என்று வினவியதற்குக் கூறியதாகும். (362)

அங்கது மன்றி யெந்தை யகிலமு முடித்த ஞான்றி
னெங்கும்வெள் ளிடைய தாகி யீமமா மவ்வீ மத்து
மங்கையுந் தானு மேவு மற்றிது தவறோ வன்னான்
கங்கையை முடிமேற் கொண்ட காதைமே லுரைத்து மன்றே.

அங்கது மன்றி—அதுவுமன்றி, எந்தை—எம்பெருமான், அகிலமும் முடித்த ஞான்றில்—அனைத்தையுஞ் சங்கரித்த காலத்தில், எங்கும் வெள்ளிடையதாகி ஈமமாம்—எவ்விடமும் வெற்றிடமாய்ச் சுடலையாம்; அ ஈமத்து—அந்தச் சுடலையில், மங்கையும் தானும் மேவும்—தேவியுந் தாமுமேயாய் எழுந்தருளியிருப்பர்; இது தவறோ—இது குற்றமாமோ குணமேயாம் அது நிற்க; அன்னான் கங்கையை முடிமேல் கொண்ட காதை மேல் உரைத்தும்—இனி அச்சிவபெருமான் கங்கையை முடிமீது தரித்த சரித்திரத்தைச் சொல்லுவோம்.

'ஒருத்தியைச் சுமந்து ஓர் மடமகட் கிடங்கொடுக்குமோ' என்பது தக்கனின் வினாவுரை. (363)

ஈசனை யொருஞான் றம்மை யெழில்பெறு கயிலைக் காவிற்
பேசல ளாட லுன்னிப் பின்வரா விழியி ரண்டுந்
தேசுறு கரத்தாற் பொத்தச் செறிதரு புவனம் யாவு
மாசிருள் பரந்த தெல்லா வுயிர்களும் வருத்தங் கொள்ள.

ஒரு ஞான்று—ஒரு காலத்தில், எழில் பெறு கயிலை காவில்—அழகிய திருக்கைலாசமலைச் சோலையில், அம்மை—உமாதேவியார், ஆடல் உன்னி—திருவிளையாடல் ஒன்றை முன்னிட்டு, பேசலள்—ஒன்றும் பேசாதவராய், ஈசனை பின் வரா—சிவபெருமானுக்குப் பின் புறத்தில் வந்து, விழி இரண்டும் தேசு உறு கரத்தால் பொத்த—அவருடைய இரு விழிகளையும் பிரகாசம் மிக்க தமது இருகரங்களாலும் பொத்த, செறி தரு புவனம் யாவும்—செறிந்த புவனங்கள் முழுவதிலும், மாசு இருள்—கருமையாகிய இருள், எல்லா உயிர்களும் வருத்தம் கொள்ளப் பரந்தது—உயிர்களனைத்துந் துன்பமுறும்படி பரவியது. (364)

திங்களின் கதிரு மேனைத் தினகரன் வெயிலுந் தீயின்
பொங்குசெஞ் சுடரு மேனைப் புலவர்தங் கதிரு மற்று
மெங்குள வொளியு மாய்வுற் றிருணிறம் படைத்த மாதோ
சங்கரன் விழியா லெல்லாச் சோதியுந் தழைத்த நீரால்.

சங்கரன் விழியால் எல்லா சோதியும் தழைத்த நீரால்—சிவபெருமானுடைய திருக்கண்களின் ஒளியினுலேயே எல்லாச் சோதிகளும் விருத்தி எய்திய தன்மையினுல், திங்களின் கதிரும்—சந்திரனுடைய ஒளிக்கிரணங்களும், ஏனை—முச்சுடர்களுள் மற்றையவை யாகிய, தினகரன் வெயிலும்—ஞாயிற்றின் வெயிலும், தீயின் பொங்கு செம் சுடரும்—அக்கினியின் சுவாலிக்கின்ற செம்மையாய சுடரும், ஏனைப் புலவர் தம் கதிரும்—ஏனைய தேவர்களின் தேககாந்தியும், மற்றும் எங்குள ஒளியும்—எங்குமுள்ள வேறு ஒளிகளும், மாய்வுற்று—அழிந்து, இருள் நிறம் படைத்த—யாவும் இருண்மயமாயின. (365)

தன்னிகர் பிறரி லாத தற்பரன் விழியி ரண்டுங்
கன்னிகை கமலக் கையாற் புதைப்பவக் கணம தொன்றின்
மன்னுயிர்த் தொகைகட் கெல்லாம் வரம்பிலா வூழி யாக
வன்னதோர் பான்மை நோக்கி யருளுவா னினைந்தா னன்றே.

தன் நிகர் பிறர் இலாத தற்பரன்—பிறர் எவருந் தமக்கு ஒப்பாகாத ஆன்ம நாயகராகிய சிவபெருமான், விழி இரண்டும் கன்னிகை கமலம் கையால் புதைப்ப—திருக்கண்களிரண்டையும் நித்திய கன்னிகையாகிய தேவியார் கமலம்போன்ற திருக்கைகளாற் பொத்த, அ கணமது ஒன்றில்—அவ்வாறு பொத்திய அந்த ஒரு கணநேரத்துள், மன்னுயிர்த் தொகைகட்கு எல்லாம் வரம்பிலா ஊழி யாக—நிலைபெற்ற உயிர்க் கூட்டம் யாவற்றிற்கும் எல்லையில்லாத ஊழிகாலங் கழிந்ததாக; அன்னது ஓர் பான்மை நோக்கி—அவ்வாருகியதொரு தன்மையை நோக்கி, அருளுவான் நினைந்தான்—உயிர்களுக்கு அருளும்படி திருவுளங்கொண்டருளினர். (366)

ஓங்குதன் னுதலி னுப்ப ணொருதனி நாட்ட நல்கி
யாங்கது கொண்டு நாத னருள்கொடு நோக்கி யாண்டு
நீங்கரு நிலைமைத் தாகி நின்றபே ரிருளை மாற்றித்
தீங்கதிர் முதலா னோர்க்குச் சிறந்தபே ரொளியை யீந்தான்.

ஓங்கு தன் நுதலின் நாப்பண்—உயர்ந்த தமது நெற்றியின் நடுவண், ஒரு தனி நாட்டம் நல்கி—ஒப்பற்ற ஒரு திருக்கண்ணை உண்டாக்கி, ஆங்கது கொண்டு—அத் திருக்கண்ணுல், நாதன் அருள் கொடு நோக்கி—சிவபெருமான் கிருபாநோக்கஞ் செய்து, யாண்டும் நீங்கு அரும் நிலைமைத்து ஆகி நின்ற பேரிருளை மாற்றி—எவ்விடத்தும் நீங்குதற்குரிய நிலைமையினையுடைத்தாய் நிலைத்துநின்ற பேரிருளைப் போக்கி, தீம் கதிர் முதலானோர்க்கு—நன்மையைச் செய்யுங் கிரணத்தையுடைய சூரியன் சந்திரன் முதலியவர்களுக்கு, சிறந்த பேரொளியை ஈந்தான்—சிறந்த பேரொளியைக் கொடுத்தருளினர். (367)

மண்ணுறு புவனத் துள்ள மாயிருண் முழுது நீங்க
வுண்ணிக ழுவகை மேல்கொண் டுயிர்த்தொகை சிறத்த லோடுங்
கண்ணுத லிறைவன் செய்கை கவுரிகண் டச்ச மெய்தித்
துண்ணென விழிகண் மூடுந் துணைக்கரம் வாங்கி னளால்.

மண் உறு புவனத்து உள்ள—பிருதிவி தத்துவத்திற் பொருந்திய புவனங்களை மூடியுள்ள, மா இருள் முழுதும் நீங்க—பேரிருண் முழுவதும் நீங்க, உயிர் தொகை—உயிர்க் கூட்டம், உள் நிகழ் உவகை மேல்கொண்டு சிறத்தலோடும்—உள்ளே நிகழுகின்ற உவகை மீதூரச் சிறப்படைதலும், கண்ணுதல் இறைவன் செய்கை கவுரிகண்டு—நெற்றிக்கண்ணை யுடையராய் விளங்குகின்ற சிவபெருமானுடைய காருண்ணியச் செயலை உமாதேவியார் கண்டு, அச்சம் எய்தி—தமது விளையாட்டுச் செயலுக்கு அஞ்சி, விழிகள் மூடும் துணைக்கரம் துண்ணென வாங்கினள்—எம்பெருமானுடைய திருவிழிகளைப் பொத்துகின்ற தமது இரு கரங்களையும் விரைந்து எடுத்தருளினர். (368)

சங்கரன் விழிகண் மூடுந் தனுதுகை திறக்கு மெல்லை
யங்குலி யவையீ ரைந்து மச்சத்தால் வியர்ப்புத் தோன்ற
மங்கையத் தகைமை காணூஉ மற்றவை விதிர்ப்பப் போந்து
கங்கையோர் பத்தா யாண்டுங் கடல்களிற் செறிந்த வன்றே.

சங்கரன் விழிகள் மூடும் தனது கை திறக்கும் எல்லை—சிவபெருமானுடைய விழிகளைப் பொத்துகின்ற தமது கரங்களை எடுக்கும்போது, அச்சத்தால் ஈரைந்து அங்குலி அவை வியர்ப்பு தோன்ற—அச்சத்தினுற் பத்து விரல்களாகிய அவைகளில் வியர்வை உண்டாக, மங்கை அத்தகைமை காணூஉ அவை விதிர்ப்ப—உமாதேவியார் அத்தன்மையைக் கண்டு அவற்றை உதற, ஓர் பத்து கங்கை போந்து—அவ் வியர்வை பத்துக் கங்கைகளாய்ப் பெருகி, கடல்களின் யாண்டும் செறிந்த—கடல்களைப்போல எங்கும் பரவின. (369)

ஆயிர நூறு கோடி யணிமுகம் படைத்தி யாண்டும்
பாயிரு நீத்த மாகிப் பரவலு மதுகண் டஞ்சி
மாயனு மயனும் வானோர் மன்னனும் பிறரும் போற்றி
மீயுயர் கயிலை நண்ணி விமலனை யடைந்து தாழ்ந்தார்.

ஆயிரம் நூறு கோடி அணிமுகம் படைத்து—வியர்வையாகிய கங்கைகள் நூறாயிரகோடி அணிமுகங் கொண்டு, யாண்டும் பாய் இரு நீத்தமாகி பரவலும்—எங்கும் பிரவாகிக்கும் பெரிய நீர்ப்பெருக்காகிப் பரவுதலும், அது கண்டு அஞ்சி—அதனைக் கண்டு அச்சமுற்று, மாயனும் அயனும் வானோர் மன்னனும் பிறரும்—திருமாலும் பிரமதேவருந் தேவேந்திரனும் ஏனையோரும், மீ உயர் கயிலை நண்ணி—மிக உயர்ந்த கைலாயத்தை அடைந்து, விமலனை அடைந்து போற்றி தாழ்ந்தார்—திருக்கைலாசபதியின் சந்நிதியிற் சென்று துதித்து வணங்கினர்கள். (370)

அடிமலர் தொழுதே யெந்தா யறிகிலோ மிதுவோர் நீத்தங்
கடல்களு மன்றால் யாண்டுங் கல்லென விரைத்தி யாரு
முடிவுறு திறத்தா லண்ட முழுவதுங் கவர்ந்த முன்னாள்
விடமெனப் பரித்தே யீது விமலநீ காத்தி யென்றார்.

அடிமலர் தொழுது-சிவபெருமானுடைய திருவடித் தாமரைகளை வணங்கி, எந்தாய்—எமது பரம பிதாவே, இது ஓர் நீத்தம்—இது புதுவதொரு நீர்ப் பிரவாகம்; அறிகிலோம்—இதுபற்றி யாம் யாதுமறியோம்; கடல்களும் அன்று—இப்பெருக்குக் கடல்களின் கூட்டரவுமன்று; யாண்டும் கல்லென இரைத்து—எவ்விடத்திலுங் கலீரென்று ஒலித்து, யாரும் முடிவுறு திறத்தால்—அனைவரும் அழியும் வண்ணம், அண்டம் முழுவதும் கவர்ந்த—அண்டம் முழுவதையுங் கவர்ந்தது; முன்னாள் விடம் என ஈது பரித்து—பண்டு தோன்றிய விடத்தை ஒப்ப இதனையுந் தாங்கி, விமல நீ காத்தி என்றார்—நின்மலராகிய தேவரீர் எம்மைக் காத்தருளும் என்று வேண்டினார்கள்.

பலவாய்ப் பெருகுதலின், 'கவர்ந்த' என்றார். (371)

என்றலு நதிக டோற்ற மியம்பியெவ் வுலகுஞ் சூழ்போய்
நின்றவந் நீத்தந் தன்னை நினைத்தவ ணழைத்து நாத
னென்றுதன் வேணி மேலோ ருரோமத்தி னும்ப ருய்ப்ப
மன்றலங் கமலத் தோனு மாலுமிந் திரனுஞ் சொல்வார்.

என்றலும்—என்று அவர்கள் வேண்டுதல் செய்ய, நதிகள் தோற்றம் இயம்பி—பத்துக் கங்கைகளாகிய அந்நதிகளின் உற்பவத்தை அவர்களுக்குக் கூறியருளி, எ உலகும் சூழ் போய் நின்ற அ நீத்தம் தன்னை—எவ்வுலகையுஞ் சூழ்ந்து நின்ற அந்த நீர்ப்பெருக்கை, நினைத்து—நினைத்தருளி, அவண் அழைத்து—அவ்விடத்துக்கு வரும்படி செய்து, நாதன்—சிவபெருமான், தன் ஒன்று வேணிமேல்—தமது சடைகளில் ஒரு சடைமீது, ஓர் உரோமத்தின் உம்பர் உய்ப்ப—ஓர் உரோமத்தின்மேல் விடுப்ப, மன்றல் அம் கமலத்தோனும் மாலும் இந்திரனும் சொல்வார்—அதனைக் கண்ணுற்ற வாசனை பொருந்திய தாமரையாசனரான பிரமதேவரும் திருமாலும் இந்திரனும் இவ்வாறு விண்ணப்பஞ் செய்வாராயினர்.

'அறிகிலோம்' என்றமையால், தோற்றம் இயம்பியருளினா ரென்க. (372)

மேதினி யண்ட முற்றும் விழுங்கிய கங்கை யுன்றன்
பாதியாள் கரத்திற் றோன்றும் பான்மையா லுனது சென்னி
மீதினிற் செறிக்கும் பண்பால் விமலமா மதனி லெங்கண்
மூதெயி னகரம் வைகச் சிறிதருண் முதல்வ வென்றார்.

மேதினி அண்டம் முற்றும் விழுங்கிய கங்கை—பிருதிவி யண்டம் முழுவதையும் மூடிய கங்கையானது, உன்றன் பாதியாள் கரத்தில் தோன்றும் பான்மையால்—தேவரீருடைய ஒரு பாதியாகிய உமாதேவியாரின் திருக்கரத்திலுதித்த விசேடத்தாலும், உனது சென்னி மீதினில் செறிக்கும் பண்பால்—தேவரீரது திருமுடியிற் செறிக்கப்பட்டிருக்கும் நற்பண்பினுலும், விமலமாம்—மகா புனிதம் படைத்ததாம்; எங்கள் மூது எயில் நகரம் வைக—ஆகையினுலே எங்களுடைய பழைமையாகிய மதில் சூழ்ந்த நகரங்களிலும் இருக்கும் வண்ணம், அதனில் சிறிது முதல்வ அருள் என்றூர்—அப்புனித நதியிற் சிறிது முதல்வரே அருள்புரிவீராக என்று வேண்டினுர்கள். (373)

இறையவன் வேணி யுள்புக் கிருந்ததோர் கங்கை தன்னிற்
சிறுவதை வாங்கி மூவர் செங்கையுஞ் செறிய நல்க
நிறைதரு மன்பாற் ருழ்ந்து நிகழ்விடை பெற்றுத் தத்த
முறைநக ரெய்தி யங்க ணுய்த்தன ரனைய நீத்தம்.

இறையவன் வேணி உள் புக்கு இருந்தது ஓர் கங்கை தன்னில் சிறுவதை வாங்கி—சிவபெருமான் தனது சடையுட் புக்கிருந்ததாகிய ஒப்பற்ற கங்காநதியிற் சிறிதை எடுத்து, மூவர் செங்கையும் செறிய நல்க—திருமால் முதலிய மூவருடைய செம்மையாகிய கைகளிலும் நிறையக் கொடுத்தருள, நிறைதரும் அன்பால் தாழ்ந்து நிகழ் விடை பெற்று—அவர்கள் நிறைகின்ற பூரண அன்போடு வணங்கி நீங்குதற்குரிய விடையைப் பெற்று, தத்தம் உறை நகர் எய்தி—தங்கள் தங்கள் உறைவிடத்தை அடைந்து, அனைய நீத்தம் அங்கண் உய்த்தனர்—பெற்றுச் சென்ற அந்தக் கங்கையைத் தத்தம் நகரத்தில் விடுத்தார்கள். (374)

அந்நதி மூன்று தன்னி லயனகர் புகுந்த கங்கை
பன்னருந் திறலின் மிக்க பகீரதன் றவத்தான் மீளப்
பின்னரு மிமையா முக்கட் பெருந்தகை முடிமேற் ருங்கி
யிந்நில வரைப்பிற் செல்ல விறையதில் விடுத்தல் செய்தான்.

அ நதி மூன்று தன்னில்—அந்த மூவகைக் கங்கையுள், அயன் நகர் புகுந்த கங்கை—பிரமதேவரின் உலகத்தையடைந்த கங்கை, பன் அருந் திறலின் மிக்க பகீரதன் தவத்தால்—சொல்லுதற்கரிய தவவலியான் மிக்க பகீரதனுடைய தவ விசேடத்தால், மீள—பூமிக்கு மீண்டு வர, இமையா முக்கண் பெருந்தகை பின்னரும் முடிமேல் தாங்கி—இமையாத மூன்று கண்களையுடைய சிவபெருமான் பின்னரும் முடிமீதேற்று, அதில் இறை—அதிற் சிறிதை, இந் நில வரைப்பில் செல்ல விடுத்தல் செய்தான்—இந் நிலவுலகிற் செல்லுமாறு விடுத்தருளினுர். (375)

நானில மிசையே யுய்த்த நன்னதி சகர ரெல்லாம்
வானுயர் கதிபெற் றுய்ய மற்றவ ரென்பிற் பாய்ந்து
மீனெறி தரங்க வேலை மேவிய திஃதொன் றல்லா
லேனைய நதிக டொல்லை யிடந்தனி லிருந்த வன்றே.

நால் நில மிசையே உய்த்த நல் நதி—நால்வகை நிலங்களைக்கொண்ட பூமியில் விடுத்த நல்ல நதியானது, சகரர் எல்லாம்—பகீரதன் முன்னோராய்ச் சாபமொன்று லிறந்துகிடந்த அறுபதினாயிரஞ் சகரர்களும், வான் உயர் கதி பெற்று உய்ய—உயர்வாகிய மேற்கதியைப் பெற்று உய்யும் பொருட்டு, அவர் என்பில் பாய்ந்து—சாம்பராய்க் கிடந்த அச் சகரர்களின் எலும்புக் குவியலிற் பாய்ந்து, மீன் எறி தரங்க வேலை மேவியது—திரையினால் மீனை யெறிகின்ற கடலை அடைந்தது; இஃதொன்று அல்லால்—இஃதொரு நதி தவிர, ஏனைய நதிகள்—ஏனைய இரு நதிகளும், தொல்லை இடந்தனில் இருந்த—தாம் புகுந்த பழைய இடங்களில் இருந்தன.

தொல்லை யிடங்கள் வைகுந்தமும் சுவர்க்கமுமாம். (376)

தொல்லையி லிறைவி யங்கைத் தோன்றிய கங்கை நீத்த
மொல்லையி லுகலங் கொள்ளா தடக்கிய வுண்மை யன்றோ
வல்லிரு ளனைய கண்டத் தாதியங் கடவுண் முன்னோர்
மெல்லிய றன்னை வேணி மிசைக்கொண்டா னென்னு மாறே.

தொல்லையில் இறைவி அங்கை தோன்றிய கங்கை நீத்தம்—முன்னர்க் காலத்திலே தேவியாரின் அழகிய திருக்கரத்திற் பிறந்த கங்கைவெள்ளம், ஒல்லையில் உலகம் கொள்ளாது அடக்கிய உண்மை அன்றோ—விரைவாக உலகத்தை அழியாதவாறு அடக்கிய உண்மையை யன்றோ, வல் இருள் அனைய கண்டத்து ஆதியம் கடவுள்—வலிய இருளை யொத்த கண்டத்தினை யுடைய முழுமுதற் கடவுளான சிவபெருமான், முன் ஓர் மெல்லியல் தன்னை வேணி மிசை கொண்டான் என்னும் ஆறு—முன்னாளில் ஒரு பெண்ணைச் சடையின்மீது தரித்துக்கொண்டார் என்று கூறுமாறு. (377)

மாதுமை வசத்த னாகி மருவுவா னென்றி யன்னா
ணாதன தருளே யெல்லா நண்ணுவித் தருளும் வண்ணம்
பேதக மாகித் தானோர் பெண்ணுருக் கொண்டு மேவு
மாதலி னவள்வந் துற்ற தன்மையை யறைவன் கேட்டி.

மாதுமை வசத்தன் ஆகி மருவுவான் என்றி—சிவபெருமான் உமாதேவியா ராகிய பெண்ணின் வசத்தரா யிருப்பார் என்று கூறினாய்; அன்னாள் நாதனது அருளே—அந்த உமாதேவியார் சிவபெருமானது திருவருளேயாம்; எல்லாம் நண்ணுவித்து அருளும் வண்ணம்—பிரபஞ்சமனைத்தையும் படைத்தருளும்

வண்ணம், தான்—சிவபெருமான் தாமே, ஓர் பெண் உரு கொண்டு பேதகம் ஆகி மேவும்—ஒரு பெண்வடிவங்கொண்டு பின்னமா யிருப்பர்; ஆதலின்—உண்மை இங்ஙனம் இருந்தவாற்றால், அவள் வந்து உற்ற தன்மையை அறைவன் கேட்டி—கருணையாகிய உமாதேவியார் தோன்றி இடப்பாகத்திற் பொருந்திய தன்மையை உரைப்போங் கேட்பாயாக.

'ஓர் மடமகட் கிடங் கொடுக்குமோ' என்பது, மேலே தக்கனால் வினவப் பட்டது. (378)

தொல்லையோர் கமலத் தண்ண றோன்றியே யிருந்த காலைப்
பல்லுயிர்த் தொகுதி தன்னைப் படைப்பது கருதி முன்னர்
வல்லையிற் சனக னாதி மைந்தர்நால் வரையு நல்க
நல்லுணர் வெய்தி யன்னோர் நற்றவ ராகி யுற்றார்.

தொல்லை—முன்னொரு கற்பத்திலே, ஓர் கமலத்து அண்ணல் தோன்றி இருந்தகாலை—ஒரு பிரமா பிறந்திருந்தபோது, பல் உயிர்த் தொகுதி தன்னைப் படைப்பது கருதி—பலவகை உயிர்வருக்கங்களைப் படைக்க எண்ணி, முன்னர்—முதலில், வல்லையில்—விரைவாக, சனகன் ஆதி மைந்தர் நால்வரையும் நல்க—சனகர் முதலிய புதல்வர்கள் நால்வரையும் படைக்க, அன்னோர்—அப் புதல்வர்கள் நால்வரும், நல் உணர்வு எய்தி—மெய்யுணர்வு தலைக்கூடி, நல் தவராகி உற்றார்—நல்ல தவசிரேட்டர்களாயினார்கள். (379)

அன்னதற் பின்னர் வேத னளிப்பது மல்கா தாக
வின்னலுற் றிரக்க மெய்தி யாதினிச் செய்வ தென்னா
முன்னுறு குமர ரோடு முகுந்தன திடத்தி லெய்திப்
பொன்னடி வணக்கஞ் செய்து தன்குறை புகன்று நின்றான்.

அன்னதன் பின்னர்—அதன் பின்பு, வேதன்—பிரமதேவர், அளிப்பது மல்காதாக—தமது சிருட்டித்தொழில் விருத்தியடையாதாக, இனி செய்வது யாது என்னா—இனிச் செய்வது என்னை என்று, இன்னல் உற்று இரக்கம் எய்தி—வருந்தி இரங்கி, முன் உறு குமரரோடும்—முதலிலே தம்மிடந் தோன்றிய சனகர் முதலிய நால்வர் புதல்வர்களோடும், முகுந்தனது இடத்தில் எய்தி—திருமாலிடஞ் சென்று, பொன் அடி வணக்கம் செய்து—திருமாலின் பொன்னடிகளை வணங்கி, தன் குறை புகன்று நின்றான்—தமது குறையைக் கூறி நின்றார். (380)

நின்றிடு கின்ற காலை நேமியங் கரத்து வள்ள
லின்றிது நம்மான் முற்றா தீசனா லன்றி யென்னா
நன்றுணர் முனிவ ரோடு நான்முக னோடும் வெள்ளிக்
குன்றினி லேகி நாதன் குரைகழல் பணிந்து சொல்வான்.

நின்றிடு காலை—அவ்வாறு வணங்கி நின்றபொழுது, நேமி அம் கரத்து வள்ளல்—சக்கரத்தைத் தரித்த அழகிய கரத்தையுடைய திருமால், இன்று இது ஈசனல் அன்றி நம்மால் முற்ருது—இக்குறை சிவபெருமானலன்றி நம்மால் முற்றுப் பெருது; என்ன—என்று கூறி, நன்று உணர் முனிவரோடும்—மெய் யுணர்வு படைத்த நால்வர் முனிவர்களோடும், நான்முகனேடும்—பிரமதேவ ரோடும், வெள்ளி குன்றினில் ஏகி—வெள்ளி மலையாகிய கைலாயத்தின்கட் சென்று, நாதன் குரைகழல் பணிந்து சொல்வான்—சிவபெருமானுடைய ஒலிக் கின்ற கழல்களையணிந்த திருவடிகளை வணங்கிச் சொல்லுவார். (381)

அண்டர்கண் முதல்வ கேண்மோ வம்புயன் படைப்பி னுள்ளங்
கொண்டன னதுமல் காதாற் குறையிது நீக்கு கென்ன
வண்டுள வத்தி ஞனை மைந்தரை யயனை நோக்கி
நுண்டுகள் படவே யீச னெய்தென வீறு செய்தான்.

அண்டர்கள் முதல்வ கேண்மோ—தேவர்கள் நாயகரே கேட்டருள்க; அம் புயன் படைப்பில் உள்ளம் கொண்டனன்—பிரமன் சிருட்டித்தொழிலில் மனம் வைத்தான்; அது மல்காதால்—அது கைகூடிற்றில்லை யாதலினலே, இது குறை—இது இங்கே முறையிடுதற் குரியதொரு பெருங் குறையாயிருக்கிறது; இது நீக்குக என்ன—இக் குறையை நீக்கியருளுக என்று விண்ணப்பிக்க, ஈசன்—அதனைக்கேட்டருளிய சிவபெருமான், வண் துளவத்தினனை அயனை மைந்தரை நுண் துகள் பட நோக்கி—வளவிய துளவத்தை யணிந்த திருமாலையும் பிரம தேவரையும் பிரமதேவரின் புதல்வர்களாகிய நால்வர் முனிவர்களையும் நுண்ணிய பொடிபடும்படி திருநோக்கஞ் செய்து, நொய்தென ஈறுசெய்தான்—விரைவாக அழித்தருளினர்.

இது, முன்னும் பின்னுங் கூட்டப்பட்டது. (382)

ஏகனை யாகி வைகு மெந்தைதன் னிடப்பா லான
வாகுவை நோக்கு மெல்லை மற்றவ ணுமையா டோன்றப்
பாகம திருத்தி யன்னுட் பரிவொடு கலந்து மேவிக்
கோகன தக்கண் ணனைக் குமரரை யயனைத் தந்தான்.

ஏகன் ஆகி வைகும் எந்தை—அவர்களை அழித்து ஏகராகி யிருக்கின்ற எம் பெருமான், தன் இடப்பால் ஆன வாகுவை நோக்கும் எல்லை—தமது இடப் பக்கத்திற் பொருந்திய திருப்புயத்தை நோக்கியருளும்போது, அவண் உமையாள் தோன்ற—அப்புயத்தினின்றும் உமாதேவியார் தோன்ற, பாகமது இருத்தி—அவ்வுமாதேவியாரை அவ்விடப்பாகத்தி லிருக்கச்செய்து, அன்னுள் பரிவொடு கலந்து மேவி—அன்போடு அத் தேவியைக் கலந்து வீற்றிருந்து, கோகனதம் கண்ணனை குமரரை அயனைத் தந்தான்—தாமரைக் கண்ணரான திருமாலையுஞ் சனகராதி நால்வர் புதல்வர்களையும் பிரமதேவரையுஞ் சிருட்டித் தருளினர்.

ஐ சாரியை. (383)

தந்துழி யீசன் றன்னைத் தனயரு மயனு மாலும்
வந்தனை செய்து போற்ற மாயவன் வதன நோக்கி
நந்தம தருள தாகு நங்கையோ டினிது சேர்ந்தா
முந்தையின் வேதாச் செய்கை முற்றிடும் போதி யென்றான்.

தந்துழி—அவ்வாறு சிருட்டி செய்தபோது, ஈசன் தன்னை—சிவபெருமானை, தனயரும் அயனும் மாலும் வந்தனை செய்து போற்ற—நால்வர் புதல்வர்களும் பிரமதேவருந் திருமாலும் வணங்கித் துதிக்க, மாயவன் வதனம் நோக்கி—சிவபெருமான் திருமாலின் முகத்தைத் திருநோக்கஞ் செய்து, நம் தமது அருளது ஆகும் நங்கையோடு இனிது சேர்ந்தாம்—நாம் நமது அருட்சத்தியாகிய உமையோடு இனிது சேர்ந்தோம்; வேதா செய்கை முந்தையின் முற்றிடும்—பிரமனின் சிருட்டித்தொழில் இனி முன்போலக் கைகூடும்; போதி என்றான்—போகக்கடவாய் என்று திருவாய் மலர்ந்தருளினார். (384)

என்னலு முவகை யெய்தி யாமினி யுய்ந்தோ மென்னா
வன்னையொ டத்தன் றன்னை யளியொடு வலஞ்செய் தேத்திப்
பின்னரும் வணக்கஞ் செய்து பெயர்ந்தனர் பின்பு வேதா
மன்னுயிர்த் தொகுதி யெல்லாம் வரன்முறை படைக்க லுற்றான்.

என்னலும்—என்று திருவாய்மலர்ந்தருள, உவகை எய்தி—மகிழ்ச்சி யடைந்து, யாம் இனி உய்ந்தோம் என்னா—யாம் இனி உய்ந்தோம் என்று, அன்னையொடு அத்தன் தன்னை—உலக மாதாவையும் பரம பிதாவையும், அளியொடு வலம் செய்து ஏத்தி—அன்போடு வலஞ்செய்து துதித்து, பின்னரும் வணக்கம் செய்து—மீட்டும் வணங்கி, பெயர்ந்தனர்—சென்றார்கள்; பின்பு வேதா மன் உயிர்த்தொகுதி எல்லாம் வரல்முறை படைக்கல் உற்றான்—பின்பு பிரமதேவர் நிலைபெற்ற உயிர்க்கூட்டங்களனைத்தையுங் கிரமப்படி படைப்பாராயினார்.

வரல் முறையாவது, சிவபெருமானிடத்திினின்றும் வந்த வரன்முறை. (385)

மாற்றலர் புரமூன் றட்ட வானவ னுமையா ளோடும்
வீற்றிருந் தருள லாலே விழைவுட னாண்பெண் மேவி
யாற்றவு மின்ப மெய்தி யாவிகள் பெரிது மல்க
நாற்றிசை முகத்தன் செய்கை நன்றுற நடந்த தன்றே.

மாற்றலர் புரம் மூன்று அட்ட வானவன்—பகைவர்களின் முப்புரங்களை அழித்த சிவபெருமான், உமையாளோடு வீற்றிருந்து அருளலாலே—உமாதேவியாரோடு வீற்றிருந்தருளுதலினாலே, ஆண் பெண் விழைவுடன் மேவி—ஆண் பெண் ஆகிய இருபால்களும் ஆசையோடு சேர்ந்து, ஆற்றவும் இன்பம் எய்தி—பெரிதும் இன்பத்தை அநுபவித்து, ஆவிகள் பெரிதும் மல்க—அவ்

வாற்ருல் ஆன்மாக்கள் மிக்குப் பெருகப் பெறுதலால், நாற்றிசை முகத்தன் செய்கை—பிரமதேவருடைய சிருட்டித்தொழில், நன்றுற நடந்தது—நன்ருக நடந்தது. (386)

தேனமர் கமலத் தண்ணல் செய்தொழின் முற்று மாற்ரு
லானதன் னருளே யாங்கோ ராயிழை யாக நல்கி
மேனிகழ் கருணை தன்ஞன் மேவுவ துணரா யேனை
வானவர் போலெங் கோனை மதித்தனை மதியி லாதாய்.

தேன் அமர் கமலத்து அண்ணல் செய் தொழில் முற்றும் ஆற்ருல்—தேன் பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவருடைய சிருட்டித் தொழில் முற்றும்பொருட்டாக, ஆன தன் அருளை—தம்மோ டபின்னமான தமது அருளை, ஆங்கு ஓர் ஆயிழையாக நல்கி—தம்மிடத்துத்தானே ஒரு பெண்ணுகச் செய்துகொண்டு, மேல் நிகழ் கருணை தன்னுல் மேவுவது—நம்மேல் வைத்த கருணையினுலே அச்சத்தியோடு எம்பெருமான் வீற்றிருப்பதை, மதியிலாதாய் உணராய்—மதியற்றவனே நீ அறியாய்; ஏனை வானவர் போல எம் கோனை மதித்தனை—ஏனைத் தேவரை ஒப்ப எம்பெருமானையுங் கருதினுய். (387)

காமரு வடிவா யெங்குங் காண்பது சத்தி யங்கண்
மாமய மாகி நின்ருன் மன்னிய சிவனு மீது
தூமறை முதலா வுள்ள தொல்லைநூல் புகலு மன்னுர்
தாமொரு புதல்வன் றன்னைத் தந்தவா சாற்று கின்ரும்.

காமரு வடிவாய்—அழகிய உருவப்பொருளாய், எங்கும் காண்பது—எவ் விடத்துங் காணப்படுவது, சத்தி—திருவருட்சத்தியேயாம்; அங்கண்—காணப் படும் உருவப்பொருளில், மா மயமாகி நின்ருன்—சத்தி மயமாய் நின்றவன், மன்னிய சிவனும்—என்றுமுள்ள சிவபரம்பொருளாம்; ஈது—இவ்வுண்மையை, தூ மறை முதலா உள்ள தொல்லை நூல் புகலும்—தூய்மையான வேதம் முதலாகவுள்ள பழைய நூல்களெல்லாம் எடுத்துப் பேசும் இது நிற்க; அன்னுர் தாம் ஒரு புதல்வன் தன்னை தந்தவா சாற்றுகின்ரும்—அந்தச் சத்தியுஞ் சிவமுமாகிய ஒருவரான இருவரும் ஒரு புதல்வரை அருளிய வரலாற்றை இனி உரைக்கின்ரும்.

காணப்படும் வடிவம் சத்தியாற் காரியப்பட்டது; அதனுல் அது சத்தி எனப்பட்டது. வடிவம் மாமயம் என்க. மா—சத்தி; அறிவுமாம். சத்தி அபின்ன மாதலின் மாமய மாகி நின்ருன் சிவனும் என்க. (388)

ததீசி யுத்தரப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 907.

# கயமுக னுற்பத்திப் படலம்

பாக சாதனன் றொல்லைநாள் வானவப் படையோ
டேகி யேயசு ரர்க்கிறை தன்னைவென் றிகலில்
வாகை சூடியே விஞ்சையர் முதலினோர் வாழ்த்தப்
போக மார்தரு முலகிடை மீண்டுபோய்ப் புகுந்தான்.

பாகசாதனன்—இந்திரன், தொல்லைநாள்—முன்னொருகாலத்தில், வானவப் படையோடு ஏகி—தேவ சேனைகளோடு சென்று, அசுரர்க்கு இறைதன்னை இகலில் வென்று—அசுரர்க்கிறையாகிய அசுரேந்திரனைப் போரில் வென்று, வாகை சூடி—வெற்றிமாலை சூடி, விஞ்சையர் முதலினோர் வாழ்த்த—வித்தியாதரர் முதலாயினோர் வாழ்த்த, மீண்டு போய்—போரை முடித்துக்கொண்டு மீண்டு சென்று, போகம் ஆர்தரும் உலகிடை புகுந்தான்—போகங்களை நுகர்தற்குரிய சுவர்க்க உலகத்தின்கண்ணே புகுந்து அரசுவீற்றிருந்தான்.

பாகசாதனன்—பாகன் என்னும் அசுரனைக் கொன்றவன். பாகன், விருத்திராசுரனுடைய தம்பி. (1)

பொன்ன கர்க்கிறை போதலும் பொருமையிற் புழுங்கி
வன்னி யுற்றிடு மலங்கல்போ லுளநனி வாடி
வென்ன ளித்திடு மவுணர்தங் கோமகன் வினையேற்
கென்னி னிச்செய லெனப்பெரி துன்னியே யினைந்தான்.

பொன் நகர்க்கு இறை போதலும்—சுவர்க்கத்துக்கு அரசனை இந்திரன் தன்னை வெற்றிகொண்டு செல்ல, வெந் அளித்திடும் அவுணர்தம் கோமகன்—புறங்கொடுத்த அசுரர்க்கரசனை அசுரேந்திரன், பொருமையில் புழுங்கி—பொருமையினலே புழுங்கி, வன்னி உற்றிடும் அலங்கல்போல் உளம் நனி வாடி—அக்கினியிற் பட்ட மாலைபோல மனம் மிக வாடி, வினையேற்கு இனிச் செயல் என் என பெரிது உன்னி—பாவியேனுக்கு இனிச் செய்யத்தகுவது யாது என்று பெரிதுஞ் சிந்தித்து, இனைந்தான்—வருந்தினன். (2)

வெருவ ரும்படி மலைந்திடு மமரர்பான் மேவிப்
பொருது வென்றிகொண் டெனக்குமப் பெரும்புகழ் புனைய
வொருவ ரெங்குலத் தில்லைகொ லோவென வுரையாக்
குருவி ருந்துழி யணுகியே வணங்கினன் கொடியோன்.

வெரு வரும்படி மலைந்திடும் அமரர்பால் மேவி—நாமெல்லாம் அஞ்சும் படி போர்புரிகின்ற தேவர்களிடஞ் சென்று, பொருது வென்றி கொண்டு—போர்செய்து வெற்றியடைந்து, அ பெரும் புகழ் எனக்கும் புனைய—தேவர்கள் அடைந்த அந்தப் பெரிய புகழை எனக்குஞ் சூட்டுதற்கு, எம் குலத்து ஒருவர் இல்லை கொல் என உரையா—எமது குலத்தில் ஒருவரும் இல்லையோ என்று கூறி, குரு இருந்துழி அணுகி—தங் குலகுருவாகிய சுக்கிராசாரியரை அடைந்து, கொடியோன் வணங்கினன்—கொடுமை விளைக்க விழைந்தோனை அவ்வசுரேந்திரன் வணங்கினன்.

அப்புகழ், எம்மை வென்றாற்போல அவர்களை வெல்லும் புகழ். (3)

பொற்றை யின்சிறை தடிந்தவன் சுரரொடும் போர்மே
லுற்ற காலையிற் படையுடன் யான்பொரு துடைந்து
மற்ற வற்குவென் னளித்தன னம்பெரு மரபிற்
கொற்ற வீரர்க ளியாவரு முடிந்தனர் கூற்றால்.

பொற்றையின் சிறை தடிந்தவன்—மலைகளின் இறகுகளை வெட்டியவனை இந்திரன், சுரரொடும் போர்மேல் உற்ற காலையில்—தேவர்களோடும் போர் மேற்கொண்டுவந்தபோது, யான் பொருது படையுடன் உடைந்து—யான் போர்செய்து என் சேனைகளுடன் தோல்வியடைந்து, அவற்கு வெந் அளித்தனன்—அவ்விந்திரனுக்கு முதுகிட்டேன்; நம் பெரு மரபில் கொற்ற வீரர்கள் யாவரும் கூற்றால் முடிந்தனர்—நமது பெரிய மரபிலுள்ள வெற்றி வீரர்கள் யாவரும் இந்திரனாகிய கூற்றுவனால் இறந்தார்கள். (4)

கழிய மாசினை யடைந்தன மின்னலே கரையாம்
பழிகொள் வேலையி லழுந்தின முடைந்திடு பகைவர்க்
கழிவு முற்றனம் பெருந்திற லற்றன மவுண
ரொழியு மெல்லைவந் தெய்திய தோவிவ ணுரைத்தி.

கழிய மாசினை அடைந்தனம்—பெரிதும் இழுக்குற்றேம்; இன்னலே கரையாம் பழிகொள் வேலையில் அழுந்தினம்—துன்பமே கரையாகின்ற வசையாகும் நீர் நிரம்பிய சமுத்திரத்தில் முழுகினேம்; உடைந்திடு பகைவர்க்கு அழிவும் உற்றனம்—நமக்குத் தோல்வியடைகின்ற பகைவர்க்கு நாம் தோல்வியடைந்தோம்; பெரும் திறல் அற்றனம்—பெருவலி இழந்தோம்; அவுணர் ஒழியும் எல்லை வந்து எய்தியதோ—அசுர குலம் அழியுங் காலம் வந்தணுகியதோ; இவண் உரைத்தி—இவ்விடத்து உரைத்தருள்வீராக. (5)

சிறுவ ராயினோர் பெருமையிற் பிழைப்பரேற் றெருட்டி
யுறுதி பற்பல கொளுத்திமற் றவர்தமை யுயர்ந்த
நெறியி னுக்குதல் குரவர்தங் கடனது நீயே
யறிதி யாதலி னுய்யுமா றுரைத்தியென் றறைந்தான்.

சிறுவர் ஆயினோர் பெருமையின் பிழைப்பரேல்—சிறுவர்கள் பெருமையினின்றுந் தவறுவாராயின், தெருட்டி—அவர்களைத் தெளிவித்து, பற்பல உறுதி கொளுத்தி—பற்பல உறுதி நெறிகளை அறிவுறுத்தி, அவர் தமை உயர்ந்த நெறியின் ஆக்குதல்—அச் சிறியராயினுரை உயர்ந்த நெறிக்கட் செலுத்துதல், குரவர் தம் கடன்—குரவர்களின் கடனும்; அது அறிதி—அதனைத் தேவரீர் அறிவீர்; ஆதலின் உய்யும் ஆறு நீயே உரைத்தி என்று அறைந்தான்—ஆதலினலே உய்யும் நெறியைத் தேவரீரே உரைத்தருள்க என்று கூறினுன். (6)

உரைத்த வாசகங் கேட்டலு மன்னநீ யுளத்தில்
வருத்த முற்றிட லென்னவே தேற்றிமேல் வருவ
கருத்தி லுன்னினன் றெரிதலும் வெதும்பிய காயத்
தரைத்த சாந்தினை யப்பினன் போலவொன் றறைந்தான்.

உரைத்த வாசகம் கேட்டலும்—அசுரேந்திரன் கூறிய வார்த்தையைக் கேட்டவுடனே, மன்ன நீ உளத்தில் வருத்தம் உற்றிடல் என்ன தேற்றி—அரசனே நீ மனத்தில் வருத்தங் கொள்ளாதே என்று அவனைத் தேற்றி, மேல் வருவ கருத்தில் உன்னினன்—எதிர்கால விளைவு என்னையோ என்று தமது மனத்திற் சிந்தித்தார்; தெரிதலும்—சிந்தனையில் அவ்விளைவு இன்னது என்று தோன்றுதலும், வெதும்பிய காயத்து அரைத்த சாந்தினை அப்பினன் போல—வெப்பமுற்ற தேகத்தில் அரைத்த தண்ணிய சந்தனத்தை அப்பியவர் போல, ஒன்று அறைந்தான்—அவன் உள்ளங் குளிரும்படி ஒன்று கூறினுர். (7)

### வேறு

ஆதியம் பரமன் றாளே யடைதரு புனிதன் றொல்லை
வேதியர் தலைவ னுன விரிஞ்சன்மெய் யுணர்விற் பூத்த
காதலன் புலன்க ளாய பகைஞரைக் கடந்த காட்சி
மாதவ முனிவர்க் கீசன் வசிட்டனென் றுரைக்கும் வள்ளல்.

ஆதியம் பரமன் தாளே அடைதரு புனிதன்—ஆதியாகிய பரமபதியினுடைய தாள்களையே தலைப்பட்ட மகாபுனிதர்; தொல்லைவேதியர் தலைவனுன விரிஞ்சன் மெய் உணர்வில் பூத்த காதலன்—பழைய வேதியர்களின் முதல்வரான பிரமதேவரின் சாத்துவிகமாகிய மெய்யறிவில் உதித்த பிரமபுத்திரர்; புலன்களாய பகைஞரை கடந்த—ஐம்புலங்களாய சத்துருக்களை வென்ற, காட்சி—துனியில் காட்சியாகிய நவையறு காட்சியினையுடைய, மாதவ முனிவர்க்கு ஈசன்—பெரிய தவத்தினையுடைய முனிவர்களுக்குச் சிரேட்டர்; வசிட்டன் என்று உரைக்கும் வள்ளல்—வசிட்டர் என்று பெயர்கூறிப் புகழப்படும் அருள் வள்ளல் ஆவர். (8)

அன்னவன் மரபின் வந்தோ னறிஞர்க்கு மறிஞன் மேலாய்
மன்னிய நெறிக்க ணின்றோன் மாகத னென்னும் பேரோ
னுன்னரு மறைகள் யாவு முணர்ந்தவ னுயர்ந்த வீடு
தன்னையிங் கடைவ னென்னாத் தவந்தனை யியற்ற லுற்றான்.

அன்னவன் மரபின் வந்தோன்—அந்த வசிட்ட முனிவருடைய மரபில் உதித்தவர்; அறிஞர்க்கும் அறிஞன்—அறிஞரில் அறிஞர்; மேலாய் மன்னிய நெறிக்கண் நின்றோன்—உயர்ந்ததாய் நிலைபெற்ற சன்மார்க்க நெறிக்கண் நின்றவர்; மாகதன் என்னும் பேரோன்—மாகதர் என்னும் பெயரை யுடையவர்; உன்னரும் மறைகள் யாவும் உணர்ந்தவன்—நினைத்தற்கரிய வேதங்களனைத்தையும் ஓதியுணர்ந்தவர்; உயர்ந்த வீடு தன்னை அடைவன் என்னா—உயர்ந்த வீடுபேற்றை அடைவேன் என்றுறுதிகொண்டு, இங்கு தவந்தனை இயற்றல் உற்றான்—இவ்வுலகிலே தவத்தைச் செய்தலை மேற் கொண்டவர். (9)

ஆயவன் றன்பா லின்றோ ரசுரகன் னிகையைத் தேற்றி
யேயினை யென்னி னன்னா ளெய்தியே யவன்ற னோடு
மேயின காலை யாங்கோர் வேழமா முகத்த னுங்க
ணயக னாகத் தோன்றி நற்றவம் புரிவ னன்றே.

ஆயவன் தன்பால்—அந்த மாகத முனிவரிடத்து, இன்று ஓர் அசுர கன்னிகையை தேற்றி ஏயினை என்னின்—இப்பொழுதே ஓர் அசுர கன்னிகை யைத் தெளிவித்து ஏவினையாயின், அன்னாள் எய்தி—அவள் சென்று, அவன்தனோடு மேயினகாலை—அம் மாகத முனிவருடன் சேர்ந்தபோது, ஆங்கு ஓர் வேழ மா முகத்தன்—ஆங்கு ஒரு யானைமுகத்தினையுடையவன், உங்கள் நாயகனாகத் தோன்றி—உங்கள் தலைவனாகப் பிறந்து, நல் தவம் புரிவன்—நல்ல தவத்தைச் செய்வான். (10)

நற்றவம் புரிதல் காணா நண்ணலர் புரங்கள் மூன்றுஞ்
செற்றவன் மேவி மேலாஞ் செல்வமுந் திறலு நல்க
மற்றவன் வானோர் தொல்சீர் மாற்றியெவ் வுலகு மாளுங்
கொற்றவ னாவ னென்று கூறினன் குரவ னானோன்.

நல் தவம் புரிதல் காணா—நல்ல தவம்புரிதலைக் கண்டு, நண்ணலர் புரங்கள் மூன்றும் செற்றவன் மேவி—பகைவரின் முப்புரங்களையும் அழித்த சிவ பெருமான் தோன்றி, மேலாம் செல்வமும் திறலும் நல்க—மேலாகிய செல் வத்தையும் வல்லமையையுங் கொடுக்க, அவன் வானோர் தொல் சீர் மாற்றி— அவன் தேவர்களின் பழஞ் சிறப்புக்களை ஒழித்து, எவ்வுலகும் ஆளும் கொற் றவன் ஆவன்—எல்லா உலகங்களையும் ஆளுகின்ற அரசனாவன்; என்று குரவன் ஆனோன் கூறினன்—என்று குருவாகிய சுக்கிராசாரியர் கூறினார். (11)

அவ்வுரை கேட்ட லோடு மடித்துணை யிறைஞ்சி யீது
செவ்விது செவ்வி தெந்தாய் செய்வனீ பணித்த தென்ன
வெவ்வமில் புகரு மற்றே யியற்றிய சென்மோ வென்ன
மைவரை யனைய மேனி மன்னவன் கடிது மீண்டான்.

அ உரை கேட்டலோடும்—அம்மொழியைக் கேட்டவுடனே, துணை அடி இறைஞ்சி—அவருடைய இரு பாதங்களையும் வணங்கி, எந்தாய் ஈது செவ்விது செவ்விது—எங்குருவே இது நன்று நன்று; நீ பணித்தது செய்வன் என்ன—தேவரீர் கட்டளையிட்டதனைச் செய்வேன் என்று கூற, எவ்வம் இல் புகரும் அற்றே இயற்றிய சென்மோ என்ன—குற்றமற்ற சுக்கிரபகவானும் அவ்வாறே செய்யும்பொருட்டுச் செல்க என்று விடைகொடுப்ப, மை வரை அனைய மேனி மன்னவன் கடிது மீண்டான்—கரிய மலைபோன்ற மேனியையுடைய அசுரேந்திரன் விரைந்து மீண்டு சென்றான். *(12)*

மீண்டுதன் னிருக்கை யெய்தி விபுதையென் றொருத்தி யன்னாள்
காண்டகு மெழிலின் மிக்க கன்னிதன் குலத்தில் வந்தாள்
பூண்டகு நாணி னோடும் பொருந்தின ளவளை யெய்தி
யீண்டொரு மொழிகேட் டன்னா யென்னிடர் தீர்த்தி யென்றான்.

மீண்டு தன் இருக்கை எய்தி—அசுரேந்திரன் குருவிடமிருந்து மீண்டு தனது இருப்பிடத்தை யடைந்து, விபுதை என்று ஒருத்தி—விபுதை என்று பெயர் கூறப்படும் ஒருபெண்; அன்னாள் காண் தகும் எழிலின் மிக்க கன்னி—அவள் காணத்தகும் அழகின் மிக்க கன்னிகை; தன் குலத்தில் வந்தாள்—தன் குலத்தில் உதித்தவள்; பூண் தகும் நாணினோடும் பொருந்தினள்—ஆபரணமாகப் பூணத் தகும் நாண் என்கின்ற குணத்தோடு கூடியவள்; அவளை எய்தி—அப்பெண்ணை அடைந்து, அன்னாய் ஈண்டு ஒரு மொழி கேட்டு—அன்னையே இங்கே நான் கூறுவதொரு வார்த்தையைக் கேட்டு, என் இடர் தீர்த்தி என்றான்—எனது துன்பத்தை நீக்குவாயாக என்று வேண்டினான். *(13)*

மன்னவர் மன்னன் கூறு மாற்றமங் கதனைக் கேளாக்
கன்னிகை யாகி நின்ற காமரு வல்லி யன்னா
ணின்னடித் தொண்டு செய்யு நிருதர்தங் குலத்து வந்தே
னென்னுனக் கியற்றுஞ் செய்கை யிசைந்தன விசைத்தி யென்றாள்.

மன்னவர் மன்னன் கூறும் மாற்றம் அதனை அங்கு கேளா—அரசர்க்கரசனாகிய அசுரேந்திரன் கூறுகின்ற வார்த்தையை அங்கே கேட்டு, கன்னிகை ஆகி நின்ற காமரு வல்லி அன்னாள்—கன்னிகையான எவரும் விரும்புங் கொடி போன்றவளாகிய விபுதை, நின் அடித்தொண்டு செய்யும் நிருதர் தம் குலத்து வந்தேன்—நின் குற்றேவல் செய்யும் அசுர குலத்துப் பிறந்தேனாகிய

யான், உனக்கு இயற்றும் செய்கை என்–உனக்குச் செய்யவேண்டுவ தென்னே; இசைந்தன இசைத்தி என்ருள்–நான் செய்யக்கூடியனவற்றைப் பணிப்பா யாக என்ருள். (14)

உரையென லோடு மன்ன னுன்குலத் தோரை விண்ணேர்
பொருதுவென் கண்டு மீண்டு போனதை யறிதி யன்றே
மருவருங் குழலாய் போரில் வானவர் தம்மை வெல்ல
வொருவரு மில்லை நின்ன லுற்றிட வேண்டுங் கண்டாய்.

உரை எனலோடும்–பணிப்பாயாக என்று கூறியவுடனே, மன்னன்–அசுரேந்திரன் விபுதையை நோக்கி, உன் குலத்தோரை–உன் குலத்தவர்களாகிய அசுரரை, விண்ணேர் பொருது–தேவர்கள் போர்செய்து, வெந் கண்டு–முதுகு கண்டு, மீண்டு போனதை அறிதி அன்றே–வெற்றியோடு அத்தேவர்கள் மீண்டு சென்றதனை நீ அறிவாயன்றே; மரு வரும் குழலாய்–வாசனை வீசுங் கூந்தலையுடைய பெண்ணே, வானவர் தம்மை போரில் வெல்ல–அத் தேவர்களைப் போரில் வெல்லுதற்கு, ஒருவரும் இல்லை–நமது குலத்திலே ஆற்றல் படைத்ததொரு பிள்ளையும் பிறக்கவில்லை; நின்னல் உற்றிட வேண்டும்–அத்தகைய பிள்ளை உன்னுற் கிடைக்கவேண்டும். (15)

ஆங்கதற் கேதுக் கேட்டி யம்பொன்மால் வரைத்தெ னுது
பாங்கரி லரிய நோன்பு பயிலுமா கதன்பாற் சென்று
நீங்கல்செல் லாது பன்ன ணினைவறிந் தொழுகிக் காலந்
தீங்கற நாடி யன்னன் செய்தவஞ் சிதைத்துச் சேர்தி.

ஆங்கு அதற்கு ஏதுக் கேட்டி–மேற்கூறியதனை அடைதற்கு உரிய மார்க்கத்தை உரைப்பேன் கேட்பாயாக; அம் பொன் மால்வரை தெனுது பாங்கரில்–அழகிய பெரிய பொன் மலையாகிய மேருமலையின் தென்சாரில், அரிய நோன்பு பயிலும் மாகதன்பால் சென்று–அரிய தவத்தைச் செய்துகொண் டிருக்கும் மாகத முனிவரிடஞ் சென்று, நீங்கல் செல்லாது–அவரை விட்டு நீங்காமல், பன்னள் நினைவு அறிந்து ஒழுகி–பலகாலம் அவர் குறிப்பறிந் தொழுகி, அன்னன் செய் தவம் சிதைத்து–செய்யப்படுவதாகிய அவருடைய தவத்தைக் குலைத்து, காலம் தீங்கு அற நாடி–திறல்படைத்த புதல்வனைப் பெறுதற்குக் கூடுதற்கேற்ற காலத்தைக் குற்றமற ஆராய்ந்து, சேர்தி–ஏற்ற காலத்தில் அம் முனிவரைச் சேரக்கடவாய். (16)

சேருதி யென்னி னங்கோர் சிறுவனின் னிடத்திற் ருேன்றிப்
பாருல கனைத்து மேலாம் பதங்களும் வலிதிற் கொண்டு
வீரரில் வீர னுகி வெம்பகை வீட்டி யெங்க
ளாரஞர் துடைக்கு மன்ன யன்னவா றமைதி யென்ருன்.

சேருதி என்னில்—ஏற்ற காலத்தில் அம் முனிவரைச் சேருவாயானல், அங்கு ஓர் சிறுவன் நின்னிடத்தில் தோன்றி—அவ்விடத்தில் ஒரு புதல்வன் நின் பால் உதித்து, பாருலகு அனைத்தும் மேலாம் பதங்களும் வலிதில் கொண்டு—மண்ணுலகம் முழுவதையும் மேன்மைபொருந்திய வானுலக பதங்களையும் வலிதிற் கவர்ந்து, வீரரில் வீரன் ஆகி—வீரர்களுக்குள் வீரனய், வெம் பகை வீட்டி—வெவ்விய பகையை அழித்து, எங்கள் ஆர் அஞர் துடைக்கும்—எங்கள் மிக்க துன்பத்தைப் பற்றறத் துடைப்பான்; அன்னய் அன்னவாறு அமைதி என்ருன்—தாயே குறிப்பிட்டவாறே அமையக்கடவாய் என்ருன்.

'உரை எனலோடும் மன்னன் என்ருன்' என்க. (17)

வேந்தன துரையைக் கேட்ட விபுதையம் முனிவன் றன்பாற்
போந்துன தெண்ண முற்றப் புதல்வனை யளித்து மீள்வ
லேந்தனீ யிரங்க லென்றே யேகின ளிறைவன் வானேர்
மாய்ந்தன ரினியென் றுன்னி மகிழ்ச்சியோ டிருந்தா னங்கண்.

வேந்தனது உரையைக் கேட்ட விபுதை—அசுரேந்திரனது வார்த்தையைக் கேட்ட விபுதை, அ முனிவன் தன் பால் போந்து—அந்த மாகத முனிவரிடஞ் சென்று, உனது எண்ணம் முற்ற—உமது எண்ணம் நிறைவேறும்படி, புதல்வனை அளித்து மீள்வல்—புதல்வனைப் பெற்று வருவேன்; ஏந்தல் நீ இரங்கல் என்று ஏகினள்—அரசே நீ வருந்தற்க என்று கூறிச் சென்ருள்; இறைவன் இனி வானேர் மாய்ந்தனர் என்று உன்னி—அசுரேந்திரன் இனித் தேவர்கள் இறந்தார்கள் என்று நினைத்து, அங்கண் மகிழ்ச்சியோடு இருந்தான்—அவ்விடத்தில் மகிழ்ச்சியோடிருந்தான். (18)

ஏகிய வசுர கன்னி யேமமால் வரையின் சார்போய்
மாகதன் பாற்சென் றன்னன் மாதவத் திறத்தை நோக்கி
யாகொடி திவனே யல்லா தாரிது புரியு நீரார்
மோகமிங் கிவனை யாக்கி முயங்குவ தெவ்வா றென்ருள்.

ஏகிய அசுர கன்னி—சென்ற அந்த அசுரகன்னிகை, மால் ஏமம் வரையின் சார் போய்—பெரிய மேருமலையி னருகிற் சென்று, மாகதன்பால் சென்று—மாகத முனிவர் தவஞ்செய்யுமிடத்துக்குப் போய், அன்னன் மா தவத் திறத்தை நோக்கி—அவருடைய பெரிய தவத்தினியல்பைப் பார்த்து, ஆ கொடிது—ஓ இது கொடிது; இவனே அல்லாது இது புரியும் நீரார் ஆர்—இம் முனிவரேயன்றி இக்கடுங் கொடுந் தவத்தைச் செய்ய வல்லவர் வேறு யாரு ளர்; இங்கு மோகம் ஆக்கி இவனை முயங்குவது எவ்வாறு என்ருள்—இங்கே மோகத்தை விளைத்து இம்முனிவரைச் சேருவது எவ்வாறு என்று சிந்தித்தாள்.

ஏமம்—பொன். தவத்தையன்றித் தன் எண்ணத்தையும், 'ஆ கொடிது' என்ரு ளென்க. (19)

நேமிக ளனைத்து மார நிவந்தெழும் வடவை தன்னை
மாமுகின் மாற்ற வற்றோ மாற்றவே வல்ல தென்னிற்
காமவே ளெடுத்த செய்ய கணையெலா மொருங்கு சென்றித்
தோமில்சீர் முனியை வாட்டித் துறவையு மாற்று மென்றாள்.

நேமிகள் அனைத்தும் ஆர—சமுத்திரம் அனைத்தையும் உண்ணும்படி, நிவந்து எழும் வடவை தன்னை—பொங்கி எழுகின்ற வடவாமுகாக்கினியை, மாமுகில் மாற்ற வற்றோ—கரிய மேகந் தணிக்க வல்லதோ; மாற்ற வல்லது என்னில்—தணிக்க வல்லது ஆனல், காமவேள் எடுத்த செய்ய கணை எலாம் ஒருங்கு சென்று—மன்மதன் எடுத்த செப்பமாகிய அம்புகள் அனைத்தும் ஒருங்கு சென்று, இ தோம் இல் சீர் முனியை வாட்டி—இந்தக் குற்றமற்ற தவச் சிறப்பினையுடைய முனிவரைக் கலக்கஞ் செய்து, துறவையும் மாற்றும் என்றாள்—அவருடைய துறவையும் போக்கும் என்று கூறினாள். (20)

வானுயர் தவத்தி னிற்கு மாகதன் யானே யல்ல
மேனகை வரினு நோக்கான் விண்ணவர் பகைஞர் தங்கள்
கோனிஃ துணரான் போலுங் குறுகிநீ புணர்தி யென்றா
னுனதற் கிசைந்த வாறு நன்றென நகைத்து நின்றாள்.

வான் உயர் தவத்தின் நிற்கும் மாகதன்—மிகவும் உயர்ந்த தவத்தில் நிலைத்து நிற்கும் மாகத முனிவர், யானே யல்ல—அசுரப்பெண்ணாகிய யானே யல்ல, மேனகை வரினும் நோக்கான்—தேவப்பெண்ணாகிய மேனகை எதிரிலே வந்தாலுங் கண்ணெடுத்தும் பாரான்; விண்ணவர் பகைஞர் தங்கள் கோன் இஃது உணரான் போலும்—தேவர்களின் பகைவர்களாகிய அசுரர்களின் தலைவனான அசுரேந்திரன் இதனை அறியான்போலும்; குறுகி நீ புணர்தி என்றான்—அதனாலேதான் சென்று நீ அம்முனிவரைச் சேருதி என்று கூறினான்; நான் அதற்கு இசைந்தவாறு நன்று—நான் முடியாத அந்தக் காரியத்துக்கு உடன்பட்டவாறு நன்றாயிருக்கின்றது; என நகைத்து நின்றாள்—என்று தன்னையே பரிகாசஞ் செய்துகொண்டு நின்று சிரித்தாள். (21)

போந்தனென் மீண்டு மென்னிற் போற்றலர்க் குடைந்து சோரும்
வேந்தனென் னுற்றா யென்று மீளவும் விடுப்ப னம்மா
வேய்ந்தநே யத்தி லென்பா லெய்திமற் றிவனே யெற்குக்
காந்தனே யாக நோற்றுக் காலமும் பார்ப்ப னென்றாள்.

மீண்டு போந்தனென் என்னினும்—திரும்பிப் போவேன் ஆயினும், போற்றலர்க்கு உடைந்து சோரும் வேந்தன்—பகைவர்க்குத் தோல்வியடைந்து துயருறுகின்ற அசுரேந்திரன், என் உற்றாய் என்று—என் நினைந்து என் செய்தா யென்று, மீளவும் விடுப்பன்—மீண்டும் முனிவர்பால் அனுப்புவான்; ஆதலினாலே, இவனே ஏய்ந்த நேயத்தில் என்பால் எய்தி—இம்முனிவர் தாமே

என்பால் வைத்த ஆசையினலே என்பால் வந்து, எற்கு காந்தனே ஆக—எனக்கு நாயகனுகும்படி, நோற்று—தவஞ்செய்து, காலமும் பார்ப்பன் என்ருள்—நல்ல புத்திரப்பேற்றுக்கு ஏற்ற காலத்தையும் எதிர்பார்ப்பேனுக என்று துணிந்தாள். (22)

என்றிவை யுன்னி யுற்ருேர்க் கினிதருள் புரியும் வெள்ளிக்
குன்றுறை பெருமான் செய்ய குரைகழல் கருத்துட் கொண்டு
வன்றிற னேன்பின் மிக்க மாகத முனிவ னேரா
நின்றருந் தவத்தை யாற்ற நெடும்பகல் கழிந்த தன்றே.

என்று இவை உன்னி—என்றிவைகளை நினைத்து, உற்ருேர்க்கு இனிது அருள் புரியும்—தம்மை அடைந்தோருக்கு இனிதாக அருள்புரிகின்ற, வெள்ளிக் குன்று உறை பெருமான்—திருக்கைலாச பதியினது, செய்ய குரைகழல் கருத்துள் கொண்டு—செம்மையாய ஒலிக்கின்ற கழல்களணிந்த திருவடிகளை மனத்துட் கொண்டு, வன் திறல் நோன்பின் மிக்க மாகத முனிவன் நேரா நின்று—வலிய திறல் மிக்க தவத்தைச் செய்கின்ற மாகத முனிவருக்கு எதிராக நின்று, அரும் தவத்தை ஆற்ற—அரிய தவத்தினைச் செய்தாளாக; நெடும்பகல் கழிந்தது—நீண்ட காலங் கழிந்தது. (23)

மாதுசெய் தவத்தி னுலும் வரன்முறை வழாத வூழி
னேதுவி னுலு மங்க ணிருங்களிற் றெருத்த லொன்று
காதலம் பிடியி னேடு கலந்துடன் புணரக் காணூஉ
வாதரம் பெருகப் பல்கா னேக்கின னருந்த வத்தோன்.

மாது செய் தவத்தினுலும்—விபுதை செய்த தவத்தினுலும், வரன் முறை வழாத ஊழின் ஏதுவினுலும்—வரன்முறை தவருத ஊழினுலும், அங்கண் இருங் களிற்று ஒருத்தல் ஒன்று—அவ்விடத்திற் பெரிய களிற்றியானை ஒன்று, காதல் அம் பிடியினேடு கலந்து உடன் புணர காணூஉ—காதலினை யுடைய அழகிய பிடியானையோடு கலந்து ஒருங்கு சேரக் கண்டு, ஆதரம் பெருக—ஆசை பெருக, பல்கால் அருந்தவத்தோன் நோக்கினன்—பலமுறை அரிய தவத்தினையுடைய மாகத முனிவர் அதனை நோக்கினுர். (24)

மறந்தனன் மனுவின் செய்கை மனப்படு பொருளை வாளா
துறந்தனன் காம மென்னுஞ் சூழ்வலைப் பட்டுச் சோர்வுற்
றிறந்தனன் போல மாழ்கி யின்னுயிர் சுமந்தா னின்று
பிறந்தன னினைய கூட்டம் பெற்றிடு வேனே லென்ருன்.

மனுவின் செய்கை மறந்தனன்—மந்திரத்தைச் செபிக்குஞ் செயலை மறந்து, மனப்படு பொருளை வாளா துறந்தனன்—மனத்திற் கொண்ட தியானப்

பொருளை வீணே இழந்து, காமம் என்னும் சூழ்வலைப்பட்டு—காமம் என்கின்ற சூழுகின்ற வலையுள் அகப்பட்டு, சோர்வு உற்று—சோர்ந்து, இறந்தனன் போல மாழ்கி—இறந்தாரைப்போல மயங்கி, இன் உயிர் சுமந்தான்—இனிய உயிரை மாத்திரம் ஒருவாறு சுமந்துகொண்டு, இன்று இனைய கூட்டம் பெற்றிடுவேனேல்—இன்றைக்கு இத்தகையதொரு கூட்டத்தைப் பெறுவேனேயானால், பிறந்தனன் என்றான்—யான் பிறந்த பயனைப் பெற்றேன் ஆவேன் என்றார். (25)

என்றிது புகன்று முன்செய் தவக்குறைக் கிரங்கி யென்று
நின்றது பழியே யேனு நீடுமேற் காமச் சூர்நோய்
தின்றுயிர் செகுக்கு மந்தோ செய்வதிங் கெவனோ வென்னா
வென்றிகொண் முனிவன் றானு மனத்தொடு வினவ லுற்றான்.

என்று இது புகன்று—என்றிவ்வாறு கூறி, முன் செய் தவக் குறைக்கு இரங்கி—செய்யப்படுவதாகிய முன்னைத் தவத்தின் குறைவுக்கு வருந்தி, என்றும் பழி நின்றது ஏனும்—என்றும் பழி நிலைபெற்று நின்றதாயினும், காமச் சூர்நோய் நீடுமேல் தின்று உயிர் செகுக்கும்—அச்சத்தைத் தருகின்ற காமநோய் இன்னமுங் காலம் நீளுமானால் உயிரைத் தின்று அழித்துவிடும்; அந்தோ—ஐயோ, இங்கு செய்வது எவன்—நோய்க்கு வழிவகுத்தலன்றி இங்கே இனி வேறு செய்யக்கூடியது என்னை?; என்னா—என்று சிந்தித்து, வென்றிகொள் முனிவன் தானும் மனத்தொடு வினவல் உற்றான்—ஐம்புலங்களை வென்றிகொண்ட அம் மாகத முனிவர்தாமுந் தம் மனத்தொடு உசாவுவாராயினர். (26)

தீவிடந் தலைக்கொண் டாங்கே தெறுதரு காமச் செந்தீ
யோய்வது சிறிது மின்றி யுள்ளுயி ரலைக்கும் வேலை
யாவதெ னிருக்கி னின்னு மருந்தவங் கூடு மாவி
போவதிற் பயன்யா தென்னாப் புணர்ச்சிமேற் புந்தி கொண்டான்.

தீவிடம் தலைகொண்டாங்கு—கொடிய விடம் தலைக்கேறினாற்போல, தெறுதரு காமச் செந்தீ—கொல்லுகின்ற காமாக்கினி, ஓய்வது சிறிதும் இன்றி உள் உயிர் அலைக்கும் வேலை—சிறிதும் ஓய்வின்றி உள்ளே உயிரை அலைவு செய்யும்போது, ஆவது என்—உயிரைப் பாதுகாவாது வாளாவிருப்பதாற் பயன் என்னை; இருக்கின் இன்னும் அருந்தவம் கூடும்—உயிரோடிருந்தாற் பின்னும் அரிய தவங் கைகூடும்; ஆவி போவதில் பயன் யாது—உயிரை விடுவதிற் பயனொன்றுமில்லை; என்னா—என்று விதிவழிச் சென்று, புணர்ச்சிமேல் புந்தி கொண்டான்—புணர்ச்சிக்கண் மனம் வைத்தார். (27)

போவதற் கெண்ணும் போதிற் பொருவில்சீ ரசுரர்க் கெல்லாங்
காவல னேவல் போற்றுங் கன்னிகை முனிவன் காமத்
தோய்வதும் பிறவு மெல்லா மொருங்குட னோக்கி யெண்ணம்
யாவது முடிந்த தென்னா வெல்லையின் மகிழ்ச்சி பெற்றாள்.

போவதற்கு எண்ணும் போதில்—தவத்தை விடுத்துப் போவதற்கு எண்ணுகின்ற சமயத்தில்; பொரு இல் சீர் அசுரர்க்கு எல்லாம் காவலன் ஏவல் போற்றும் கன்னிகை—ஒப்பற்ற சிறப்பினையுடைய அசுரேந்திரனது கட்டளையைப் பேணிநின்ற கன்னிகையாகிய விபுதை, முனிவன் காமத்து ஒய்வதும் பிறவும் எல்லாம் ஒருங்கு உடன் நோக்கி—முனிவர் காமத்தால் தளர்வதையும் அதன் விளைவுகளையும் எல்லாம் அம் முனிவருடன் ஒன்றுபட்டு நோக்கி, எண்ணம் யாவதும் முடிந்தது என்னு—எண்ணி வந்த எண்ணம் முழுவதும் எண்ணியாங்கு முற்றியது என்று, எல்லையில் மகிழ்ச்சி பெற்றுள்—எல்லையில்லாத மகிழ்ச்சி யடைந்தாள். (28)

ஈங்கிது கால மாகு மிடனுமா மிதற்கு வேறு
தீங்கிலை யினைய கூட்டஞ் செய்தவஞ் செய்த தென்னு
வாங்கிய நுதலி னுளும் வல்விரைந் தெழுந்து தூயோன்
பாங்கரி னணுகிப் பொற்றுள் பணிந்தனள் பரிவு கூர.

ஈங்கு இது காலம் ஆகும்—இங்கு இதுவே ஏற்ற காலம்; இடனும் ஆம்—இடமும் அவ்வாறேயாம்; இதற்கு வேறு தீங்கு இலை—இனி இதற்கு வேறு இடையூறு இல்லை; இனைய கூட்டம் செய் தவம் செய்தது—யானைகளின் விளைவாய இத்தகையதொரு கூட்டத்தை நான் செய்த தவமே தந்தது; என்னு—என்று துணிந்து, வாங்கிய நுதலினுளும் வல் விரைந்து எழுந்து—வளைந்த நெற்றியினையுடைய விபுதையும் மிக விரைந்தெழுந்து, தூயோன் பாங்கரின் அணுகி—தூயோராகிய முனிவர் அருகிற் சென்று, பரிவு கூர—முனிவருக்கு ஆசைநோய் மேலும் அதிகரிக்குமாறு, பொன் தாள் பணிந்தனள்—அவருடைய பொன்னடிகளை வணங்கினுள். (29)

மின்னிடை பணிந்து நிற்ப மெய்யுறுப் பனைத்து நோக்கிப்
பின்னரு மான்மீக் கொள்ளப் பித்தரின் மயங்கா நின்று
கன்னியு மென்னை வெஃகுங் காந்தரு வத்தி னுளு
மின்னிவ ளாயி னன்ருே வென்னுயி ருய்யு மென்னு.

மின்னிடை பணிந்து நிற்ப—மின்போன்ற இடையினையுடையளாய விபுதை வணங்கி எழுந்து நிற்ப, மெய் உறுப்பு அனைத்தும் நோக்கி—அவளுடைய மெய்க்கண் உறுப்புக்கள் அனைத்தையும் முனிவர் பார்த்து, பின்னரும் மால் மீக்கொள்ள—மேலும் மோகம் அதிகரிக்க, பித்தரின் மயங்கா நின்று—பித்தரைப் போல மயக்கங் கொண்டு, இன்னிவள்—என்னை ஆட்கொண்ட இவள், கன்னியும் என்னை வெஃகும் காந்தருவத்தினுளும் ஆயின் அன்ருே—கன்னிகையாயும் என்னை விரும்புகின்ற காந்தருவ மணத்துக் குரியாளாயும் இருந்தாலன்ருே, என் உயிர் உய்யும் என்னு—எனது உயிர் உய்யும் என்று. (30)

கருத்திடை யுன்னி யார்நீ கன்னியோ வென்ன லோடு
மருத்திகொண் முனியை நோக்கி யன்னதா மென்ன நம்பால்
வரத்தகுங் கரும மென்கொல் வல்லையி லியம்பு கென்றான்
விரத்தரிற் றலைவ னாகி வீடுபெற் றுய்ய நோற்றான்.

கருத்திடை உன்னி—இவ்வாறு மனத்தின்கண் நினைத்து, விரத்தரில் தலைவன் ஆகி வீடுபெற்று உய்ய நோற்றான்—தவவிரதர்களிற் சிரேட்டராய் வீடு பெற்று உய்தி கூடும்படி தவஞ்செய்துகொண்டிருந்தோரான மாகத முனிவர், நீ யார் கன்னியோ என்னலோடும்—நீ யாவள் கன்னிப்பருவத்தளோ என்று வினவியபோது, அருத்தி கொள் முனியை நோக்கி—ஆசை மீக்கூரு கின்ற அம்முனிவரை விபுதை நோக்கி, அன்னது ஆம் என்ன—அவ்வாறேயாம் என்று கூறினளாக; நம் பால் வர தகும் கருமம் என்கொல் வல்லையில் இயம்புக என்றான்—கன்னிகையே நீ எம்மிடம் வருதற்குத் தகுந்த கருமம் யாதோ விரைவிற் கூறுவாயாக என்றார். *(31)*

முருந்தெனு முறுவ லாளு முனிவநீ கணவ னாக
விருந்தவம் புரிந்தேன் பன்னா ளின்றது முடிவ தாகப்
பொருந்தின னீண்டு நின்னைப் புல்லிய வந்தே னென்ன
வருந்துறா தமுதம் பெற்ற மாக்கள்போன் மகிழ்ச்சி யுற்றான்.

முருந்து எனும் முறுவலாளும்—இறகினடிபோலும் பற்களையுடைய விபுதையும், முனிவ நீ கணவன் ஆக பன்னாள் இரும் தவம் புரிந்தேன்—முனிவரே நீர் எனக்கு நாயகராகும்படி பலகாலம் பெரிய தவத்தைச் செய்தேன்; இன்று அது முடிவது பொருந்தினன் ஆக—இன்று அத்தவம் முற்றுவதைப் பெற்றேன் ஆக; ஈண்டு நின்னைப் புல்லிய வந்தேன் என்ன—இவ்விடத்தில் நும்மைத் தழுவும்படி வந்தேன் என்று கூற, வருந்துறாது அமுதம் பெற்ற மாக்கள்போல் மகிழ்ச்சி உற்றான்—சிறிதும் வருத்தம் அடையாமல் அமிர்தத்தைப் பெற்ற அறிவு அறைபோய மனிதரைப்போல மகிழ்ச்சி எய்தினர். *(32)*

என்பெருந் தவமும் பன்னா ளென்பொருட் டாக நோற்ற
நின்பெருந் தவமு மன்றோ நின்னுட னென்னை யீண்டே
யன்புறக் கூட்டிற் றம்மா வடுகளி றென்னப் புல்லி
யின்புற வேண்டு நீயு மிரும்பிடி யாதி யென்ன.

என் பெரும் தவமும்—யான் செய்த பெரிய தவமும், என் பொருட் டாகப் பன்னாள் நோற்ற நின் பெரும் தவமும் அன்றோ—என்னை அணையும் பொருட்டுப் பலகாலஞ் செய்த உனது பெரிய தவமும் ஒன்றுபட்டதன் விளைவன்றோ, நின்னுடன் என்னை ஈண்டு அன்புறக் கூட்டிற்று—உன்னையும்

என்னையும் இவ்விடத்தில் அன்புமிகும்படி கூட்டிவைத்தது; அடு களிறு என்ன—யான் அடுகின்ற களிற்றியானையாக, நீ இரும் பிடி ஆதி—நீ பிடியானையாகக் கடவாய்; புல்லி இன்புற வேண்டும்—யாம் இருவேமும் களிறும் பிடியுமாய்த் தழுவி இன்பத்தை நுகரவேண்டும்; என்ன—என்று முனிவர் கூற.

'உம்' இருவேமும் என்னும் பொருட்டு. (33)

மெல்லிய றானு மாங்கோர் வெம்பிடி யாகித் தோன்றி
யெல்லையில் காதல் பின்னு மீதலு முனிவன் றானு
மல்லலங் களிற தாகி வானுயர் புழைக்கை நீட்டிப்
புல்லின னூற்றந் தானே புணர்ச்சியிற் சிறந்த தன்றே.

மெல்லியல் தானும் ஆங்கு ஓர் வெம் பிடி ஆகித் தோன்றி—விபுதையும் அவ்விடத்தில் விரும்பத்தக்கதொரு பிடியின் வடிவெடுத்து, எல்லை இல் காதல் பின்னும் ஈதலும்—அளவற்ற காதலை மேலும் உண்டாக்குதலும், முனிவன் தானும் மல்லல் அம் களிறு ஆகி—முனிவரும் பொலிவு பொருந்திய அழகியதொரு களிற்று யானையாகி, வான் உயர் புழைக்கை நீட்டி—விகாரத்தால் மேல்நோக்கி உயருகின்ற உட்டுளை பொருந்திய துதிக்கையை நீட்டி, புல்லினன்—தழுவினர்; ஊற்றம் தானே புணர்ச்சியில் சிறந்தது—பரிசித்தலாகிய மெய்யுறு புணர்ச்சிதானே புணர்ச்சி வகைகளுட் சிறந்தது. (34)

நையுறு முள்ள மாதி நான்மையும் பொறியி னண்ணி
யையுறு புலனோ ரைந்து மாவியி னொருங்க வன்னுண்
மெய்யுறு புணர்ச்சித் தாய வேட்கையின் மேவ லுற்றுச்
செய்யுறு காம முற்றித் தீர்ந்திடு காலை தன்னில்.

நையுறும் உள்ளம் ஆதி நான்மையும்—நெகிழ்ச்சியுறுகின்ற மனம் முதலிய அந்தக்கரணங்கள் நான்கும், பொறியில் நண்ணி—மெய் முதலிய பஞ்சப் பொறிகளிற் கலந்து, ஐஉறு ஓரைந்து புலனும்—நுண்மை மிக்க கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலங்களும், மெய்யுறு புணர்ச்சித்து ஆய வேட்கையில்—மெய்யுறு புணர்ச்சிக்கண்ணதாய வேட்கையின்கண்ணே, ஆவியின் ஒருங்க—உயிர் ஒடுங்குவது போல ஒன்றுபட்டடங்க, அன்னுள் மேவலுற்று—அவ் விபுதையைத் தழுவி, செய்யுறு காமம் முற்றி தீர்ந்திடு காலை தன்னில்—விழைவின் விளைவு மிகுகின்ற இன்பம் முதிர்ந்து தீர்ந்துபோகுஞ் சமயத்தில். (35)

அயன்முதற் றலைவர் வானத் தமர்தரு புலவ ராற்றுஞ்
செயன்முறைக் கடன்கள் யாவுஞ் சிந்தினன் சிதைக்கும் வண்ணம்
வயமுகத் தடவு கொண்ட வயிர்த்திடு மருப்பி னுல்வாய்க்
கயமுகத் தவுண னுங்கே கதுமென வுதயஞ் செய்தான்.

அயன் முதல் தலைவர்—பிரமா முதலிய தலைவர்களும், வானத்து அமர்தரு புலவர்—சுவர்க்கத்தில் வாழுகின்ற தேவர்களும், ஆற்றும் செயல் முறைக் கடன்கள் யாவும் சிந்தினன் சிதைக்கும்வண்ணம்—செய்கின்ற நித்திய கருமானுஷ்டானங்கள் யாவற்றையும் அழித்தொழிக்கும் வண்ணம், வயமுகம்—வெற்றியைத் தன்னிடத்துக் கொண்ட, தடவு கொண்ட—வளைவு பொருந்திய, வயிர்த்திடும் மருப்பின்—வயிரித்த கோடுகளையும், நால்வாய்—தூங்குகின்ற வாயினையு முடைய, கயமுகத்து அவுணன்—கயமுகாசுரன் என்பவன், ஆங்கே கதுமென உதயம் செய்தான்—உடனே விரைவாகப் பிறந்தான். (36)

பற்றிய பலகை யொள்வாள் விதிர்த்தனன் பரவை ஞாலஞ்
சுற்றினன் வரைகள் யாவுந் துகள்படத் துணைத்தா ளுந்தி
யெற்றின னுருமே றஞ்ச விரட்டின னுலக மெல்லாஞ்
செற்றிடுங் கடுவ தென்னத் திரிந்தனன் சீற்ற மிக்கான்.

பற்றிய பலகை ஒள்வாள் விதிர்த்தனன்—கையிற் பிடித்த பரிசையையும் ஒள்ளிய வாளையும் அசைத்துக்கொண்டு, பரவை ஞாலம் சுற்றினன்—கடல் சூழ்ந்த உலகத்தைச் சூழ்ந்து, வரைகள் யாவும் துகள்படத் துணைத்தாள் உந்தி எற்றினன்—மலைகள் யாவும் பொடிபட இருகால்களாலும் உந்தித் தள்ளி, உரும் ஏறு அஞ்ச இரட்டினன்—இடியேறஞ்ச ஆரவாரித்து, உலகமெல்லாம் செற்றிடும் கடு என்ன—உலகம் முழுவதையும் அழிக்க எழுகின்றதொரு ஆலகால விடம்போல, சீற்றம் மிக்கான்—கோபம் மிக்கு, திரிந்தனன்—எங்குந் திரிந்தான். (37)

அன்னதோர் பிடியு ரோம மளப்பில வவற்றி லாங்கே
மின்னிலங் கெயிற்றுப் பேழ்வாய் விளங்கெழிற் செக்கர் வாய்ந்த
சென்னியங் குடுமி வீரர் தெழித்தெழீஇச் செங்கை தன்னிற்
றுன்னிரும் படைக ளோடுந் தோன்றினர் தொகையி லான்றோர்.

அன்னது ஓர் பிடி அளப்பில உரோமம் அவற்றில்—அவ்வாறான விபுதையாகிய ஒப்பற்ற பிடியானையின் அளவற்ற உரோமங்களாகிய அவற்றிலிருந்து, ஆங்கே—அப்பொழுதே, மின் இலங்கு எயிறு—மின்னல் போலப் பிரகாசிக்கின்ற தந்தங்களையும், பேழ் வாய்—பிளந்த வாயையும், விளங்கு எழில்—இளமை விளங்குகின்ற அழகினையும், செக்கர் வாய்ந்த சென்னி அம் குடுமி—செவ்வானம் போன்ற தலையில் அழகிய சிவந்த குடுமியையு முடைய, தொகையில் ஆன்றோர் வீரர்—தொகையான் மிக்க அசுர வீரர்கள், செம் கை தன்னில் துன் இரும் படைகளோடும்—கன்றிச் சிவந்த கைகளிற் செறிந்த பெரிய ஆயுதங்களுடன், தெழித்து எழீஇ தோன்றினர்—ஆரவாரித்துக் கொண்டு உதித்தெழுந்தார்கள். (38)

இன்னவ ரோடு கூடி யிப்முகத் தவுண ணூர்ப்பத்
தன்னையும் பயந்தோன் ருனுந் தளர்ந்தன ரிரியல் போகி
முன்னுறு முருவங் கொள்ள முனிவர னுணர்வு தோன்ற
வுன்னிநின் றிரங்கி யேங்கி யூழ்முறை நினைந்து நைந்தான்.

இபமுகத்து அவுணன்—கயமுகாசுரன், இன்னவரோடு கூடி—இவ்வாறு பிறந்த அசுர வீரர்களாடு கூடி, ஆர்ப்ப—ஆரவாரஞ் செய்ய, தன்னையும் பயந்தோன் தானும்—தாயாகிய விபுதையும் பெற்ற தந்தையாகிய மாகத முனிவரும், தளர்ந்தனர் இரியல் போகி—அச்சத்தால் தளர்ந்து அவ்விடத்தி னின்றும் நீங்கிப் போய், முன் உறும் உருவம் கொள்ள—பழைய தமது வடிவத்தைக் கொண்டபோது, உணர்வு தோன்ற—பழைய உணர்வு உதய மாக, முனிவரன்—முனி சிரேட்டரான மாகதர், உன்னி—நடந்ததை நினைந்து, நின்று—வாளா நின்று, இரங்கி—என் செய்தேன் என்றிரங்கி, ஏங்கி—என்ன சம்பவிக்குமோ என்று ஏக்கங்கொண்டு, ஊழ்முறை நினைந்து—ஊழ் உயிர்களை நடத்தும் முறையை நினைந்து, நைந்தான்—பெரிதும் வருந்தினுர். *(39)*

மாயமாங் காம மென்னும் வலையிடைப் பட்டு நீங்குந்
தூயவன் முன்ன நின்ற தோகையைச் சுளித்து நோக்கி
நீயெவர் குலத்தில் வந்தாய் நினைந்ததென் கழறு கென்னச்
சேயிழை மரபும் வந்த செய்கையு முணர்த்தி நின்ருள்.

காமம் என்னும் மாயமாம் வலையிடைப்பட்டு நீங்கும் தூயவன்—காமம் என்கின்ற மாயமாகிய வலையுள் அகப்பட்டு நீங்கா நின்ற தூயவராகிய மாகத முனிவர், முன்னம் நின்ற தோகையை சுளித்து நோக்கி—எதிரிலே நின்ற மயில் போல்வாளாகிய விபுதையைக் கோபித்துப் பார்த்து, நீ எவர் குலத்தில் வந்தாய்—நீ யாவர் குலத்திற் பிறந்தவள்; நினைந்தது என்—நீ கருதி வந்த கருமம் என்னை; கழறுக என்ன—கூறுவாயாக என்று வினவ, சேயிழை—விபுதை, மரபும் வந்த செய்கையும் உணர்த்தி நின்ருள்—தான் பிறந்த மரபையும் வந்த கருமத்தையுந் தெரிவித்து நின்ருள். *(40)*

வரன்முறை யுணர்த லோடு மாகத முனிவன் யானே
தரணியி லுயிர்க ளான சராசரந் தனக்கு மேலாஞ்
சுரகுலந் தனக்கு மின்றே துன்புறு வித்தே னென்னு
வெரியுறு தளிர்போல் வாடி யின்னலங் கடலுட் பட்டான்.

வரல் முறை உணர்தலோடும்—விபுதையின் வரலாற்றை அறிந்தவுடனே, மாகத முனிவன்—மாகத முனிவர், தரணியில் உயிர்களான சராசரம் தனக் கும்—பூமியிலுள்ள உயிர்களாகிய சராசரங்களுக்கும், மேலாம் சுர குலம் தனக்கும்—மேலோராகிய தேவர் கூட்டத்துக்கும், யானே இன்றே துன்பு

உறுவித்தேன் என்ஞ—யானே இத்தினத்திலேதானே துன்பத்தை உறுவித் தேன் என்று, எரி உறு தளிர்போல் வாடி—அக்கினியிற்பட்ட தளிர்போல வாட்டமுற்று, இன்னல் கடலுள் பட்டான்—துன்பமாகிய கடலுள் ஆழ்ந்தார்.

அம், சாரியை. (41)

சிலபொழு திரங்கித் தேறிச் சேயிழை மடந்தை நுங்கோன்
மெலிவுநின் னெண்ணந் தானும் வீடுபெற் றுய்ய யான்முன்
பலபகல் புரிந்த நோன்பும் பாருல கனைத்தும் வானோ
ருலகமு முடிந்த வேநீ யொல்லையிற் போதி யென்றான்.

சில பொழுது இரங்கி தேறி—சிறிதுநேரம் வருந்திப் பின் தெளிந்து, சேயிழை மடந்தை—செம்மையாகிய ஆபரண மணிந்த பெண்ணே, நும் கோன் மெலிவும்—உங்கள் அரசனாகிய அசுரேந்திரனின் மெலிவும், நின் எண்ணந்தானும்—நீ எண்ணி வந்த உன் எண்ணமும், வீடு பெற்று உய்ய யான் முன் பல பகல் புரிந்த நோன்பும்—மோட்சம் பெற்று உய்யும்படி யான் முன்னர்ப் பலநாட் செய்த தவமும், பாருலகு அனைத்தும்—பூவுலகம் முழுவதும், வானோர் உலகமும்—தேவ ருலகமும், முடிந்தவே—யாவும் ஒருங்கு முடிந்தனவேயாம்; நீ ஒல்லையில் போதி என்றான்—இனி நீ விரைவில் அப்பாற் போவாயாக என்றார். (42)

போதிநீ யென்ன லோடும் பொன்னடி வணங்கிச் சென்று
தாதுலாந் தெரிய லாகத் தயித்தியர்க் கிறைபா லெய்தி
யீதெலா முரைத்த லோடு மெல்லையின் மகிழ்ச்சி யாகிக்
காதல்கூர் தபனற் காணுங் காலையங் கமலம் போன்றான்.

போதி நீ என்னலோடும்—நீ போவாயாக என்று கூறியவுடனே, பொன் அடி வணங்கிச் சென்று—முனிவரின் பொன்னடிகளை வணங்கிக்கொண்டு அப்பாற் சென்று, தாது உலாம் தெரியல் ஆகம் தயித்தியர்க்கு இறைபால் எய்தி—மகரந்தம் பரவும் மலர்மாலையணிந்த மார்பினையுடைய அசுரேந்திர னிடம் அடைந்து, ஈது எலாம் உரைத்தலோடும்—நிகழ்ந்தவற்றையெல்லாங் கூற, எல்லையில் மகிழ்ச்சி ஆகி—அளவற்ற மகிழ்ச்சி உடையனாய், தபனற் காணும்—நாயகனாகிய சூரியனை நோக்குகின்ற, காதல் கூர்—அவன்பாற் காதல் மிகுகின்ற, காலை அம் கமலம் போன்றான்—அலரும் பக்குவ காலத்தையுடைய அழகிய தாமரையை ஒத்தான். (43)

தாங்கரு முவகை யோடுந் தானவர்க் கரச னண்ண
வீங்குறு முனிவன் முன்போ லினிதுநோன் பியற்றப் போனா
னுங்கவ னுதித்த மைந்த ரனைவரு முதல்வன் றன்னோ
டோங்கலின் குலங்கண் மேரு வுடனடந் தென்னச் சென்றார்.

தாங்கரும் உவகையோடு தானவர்க்கு அரசன் நண்ண—தாங்குதற்கரிய மகிழ்ச்சியுடன் அசுரேந்திரன் அரசுவீற்றிருக்க, ஈங்கு உறு முனிவன்—இங்கே கவலையுற்றிருந்த மாகத முனிவர், முன்போல் இனிது நோன்பு இயற்றப் போனன்—பழைமைபோல நன்கு தவஞ் செய்யச் சென்ருர்; ஆங்கு அவண் உதித்த மைந்தர் அனைவரும்—அப்பொழுது அவ்விடத்திற் பிறந்த புதல்வர்களெல்லாம், முதல்வன் தன்னேடு—முதல்வனுகிய கயமுகாசுரனேடு கூடி, ஓங்கலின் குலங்கள் மேருவுடன் நடந்தென்னச் சென்ருர்—மலைக் கூட்டங்கள் மேருமலையோடு கூடிச்சென்ருற்போலச் சென்ருர்கள். (44)

சீற்றம்கொ டறுக ணுகை மொருவழித் திரண்ட தென்னக்
கூற்றம்பல் லுருவு கொண்டு குலாயகொட் பென்ன வூழிக்
காற்றெங்கும் பரவிற் றென்னக் கடலிடைப் பிறந்த நஞ்ச
மூற்றங்கொண் டுலாய தென்ன வுலகெலாந் திரிதந் துற்ருர்.

சீற்றம் கொள் தறுகண் நாகம்—கோபங்கொண்ட தறுகண்மையினையுடைய யானைகள், ஒருவழி திரண்டது என்ன—ஓரிடத்தில் ஒருங்கு திரண்டாற் போலவும், கூற்றம் பல் உருவு கொண்டு குலாய கொட்பு என்ன—கூற்றுவன் பலவேறு உருவங் கொண்டு சஞ்சரித்ததொரு சுழற்சி போலவும், ஊழிக் காற்று எங்கும் பரவிற்று என்ன—ஊழிக்காற்று எங்கும் பரவியதுபோலவும், கடலிடைப் பிறந்த நஞ்சம் ஊற்றம் கொண்டு உலாயது என்ன—கடலினிடத்துத் தோன்றிய ஆலகால விடம் உடலின்கண் உறுதியாயிருந்து கொண்டு அவயவமெங்கும் உலாவியது போலவும், உலகெலாம் திரிதந்து உற்ருர்—உலகம் முழுவதுந் திரிதலைச் செய்தார்கள்.

யானை தறுகண்மைக்கும் யமன் கொலையின் கொடுமைக்கும் காற்று வேகத்தின் கடுமைக்கும் நஞ்சு பகைவரை நெடிது நின்று உடற்றுதற்கும் உவமையாக எடுத்துக்காட்டப்பட்டன. நாகம் நாகபாம்புமாம். (45)

மலையினைப் பொடிப்ப ரேனை மண்ணினை மறிப்பர் வாரி
யலையினைக் குடிப்பர் கையா லாருயிர்த் தொகையை யள்ளி
யுலையினைப் பொருவு பேழ்வா யோச்சுவர் பரிதியோடு
நிலையினைத் தடுப்பர் சேட னெளிதரப் பெயர்வர் மாதோ.

மலையினை பொடிப்பர்—மலையினைப் பொடி செய்வார்கள்; ஏனை மண்ணினை மறிப்பர்—மற்றைப் பூமியைப் புரட்டுவார்கள்; அலையினை வாரிக் குடிப்பர்—அலையினையுடைய சமுத்திர நீரை வாரிக் குடிப்பார்கள்; கையால் ஆருயிர் தொகையை அள்ளி—கைகளினலே அரிய உயிர்க்கூட்டங்களை அள்ளி, உலையினை பொருவு பேழ்வாய் ஓச்சுவர்—உலைமுகத்தைப் போன்ற பிளந்த வாயில் வீசுவார்கள்; பரிதி ஓடும் நிலையினை தடுப்பர்—சூரியனது தேரோடும் வழியைத் தடுப்பார்கள்; சேடன் நெளிதர பெயர்வர்—ஆதிசேடன் நெளியும் வண்ணம் நடப்பார்கள். (46)

தக்கதோ ரவுண ரோடுந் தந்திமா முகத்து வீரன்
றிக்கெலா முலவி யெல்லாத் தேயமு மொருங்கே சென்று
மக்களே யாதி யான மன்னுயிர் வாரி நுங்கித்
தொக்கதோர் செந்நீர் மாந்தித் துண்ணெனத் திரியு மன்றே.

தக்கது ஓர் அவுணரோடு தந்தி மாமுகத்து வீரன்—தகுதியுள்ள ஒப்பற்ற அசுரரோடு பெரிய கயமுக வீரன், திக்கு எலாம் உலவி—திக்குவிசயஞ் செய்து, எல்லாத் தேயமும் ஒருங்கே சென்று—எல்லாத் தேயங்களிலும் ஒருங்கு சென்று, மக்களே ஆதியான மன்னுயிர் வாரி நுங்கி—மனிதர் முதலிய நிலைபெற்ற உயிர்களை அள்ளி உண்டு, தொக்கது ஓர் செந்நீர் மாந்தி—திரண்டெழுவதோர் இரத்த வெள்ளத்தைப் பருகி, துண்ணெனத் திரியும்—எவரும் நடுங்கும்படி திரியாநிற்பான். *(47)*

அத்திறம் வைக றோறு மவுணரு மிறையு மேகிக்
கைத்துறு முயிர்கள் யாவுங் கவர்ந்தனர் மிசைந்தா ராகப்
பொய்த்தவர் வெறுக்கை யென்னப் போயின வுயிர்கள்சால
வெய்த்தனர் முனிவர் தேவ ரிறந்தது மறையி னீதி.

அ திறம் வைகல் தோறும்—அவ்வாறு தினந்தோறும், அவுணரும் இறையும் ஏகி—அசுரர்களும் தலைவனான கயமுகனும் சென்று, கை துறும் உயிர்கள் யாவும் கவர்ந்தனர் மிசைந்தாராக—இடங்கடோறும் நெருங்கிய உயிர்களனைத்தையுங் கவர்ந்து உண்டுவாராநிற்க, பொய்த்தவர் வெறுக்கை என்ன உயிர்கள் போயின—பொய்யுரைத்தோர் செல்வம்போல உயிர்கள் அழிந்தன; முனிவர் தேவர் சால எய்த்தனர்—முனிவர்களுந் தேவர்களும் பெரிதும் இளைத்தனர், மறையின் நீதி இறந்தது—வேத நீதி அழிந்தது.

பொய்த்தவர் மன்றோரஞ் சொன்னோர். *(48)*

முகரிமை யடைந்த வன்றோன் முகத்தவ னவுண ரோடு
மகலிட மிசையே யிவ்வா றமர்தலு மனைய தன்மை
தகுவர்கண் முதல்வ னோர்ந்து தமதுதொல் குரவ னான
புகரினை விடுப்ப வன்னோன் போந்திவை புகல லுற்றான்.

முகரிமை அடைந்த—முதன்மையடைந்த, வன்தோல் முகத்தவன் அவுணரோடும்—வலிய கயமுகன் அசுரர்களுடனே, அகலிடம் மிசை இவ்வாறு அமர்தலும்—அகன்ற பூமியில் இவ்வாறு கொடுந்தொழில் புரிந்துகொண்டிருப்ப, அனைய தன்மை தகுவர்கள் முதல்வன் ஓர்ந்து—அத்தன்மையை அசுரேந்திரன் அறிந்து, தமது தொல் குரவனான புகரினை விடுப்ப—தங்கள் பழைய குரவரான சுக்கிராசாரியரைக் கயமுகன்பால் அனுப்ப, அன்னோன் போந்து இவை புகலல் உற்றான்—அச்சுக்கிராசாரியர் அவன்பாற் சென்று இவற்றைக் கூறத் தொடங்கினர். *(49)*

வேறு

ஒள்ளி தாகிய வுங்குலத் துற்றுள
மள்ளர் யார்க்குமொர் வான்குரு வாயினேன்
றெள்ளு பன்மறைத் திட்பமுந் தேர்ந்துளேன்
வெள்ளி யென்பதொர் மேதகு பேரினேன்.

ஒள்ளிது ஆகிய உம் குலத்து உற்றுள—மிக்க ஒளிபடைத்ததான உங்கள் குலத்துப் பிறந்த, மள்ளர் யார்க்கும் ஓர் வான் குரு ஆயினேன்—வீரர் யாவர்க்கும் ஒப்பற்ற உயர்ந்த குருவாயிருப்பவன் யான்; தெள்ளு பன்மறை திட்பமும் தேர்ந்துளேன்—தெளிந்த பல வேதங்களின் நுட்பத்தையும் உணர்ந்துள்ளேன்; வெள்ளி என்பது ஓர் மேதகு பேரினேன்—சுக்கிரன் என்பதொரு மேன்மை பொருந்திய பெயரினையு முடையேன். (50)

உங்கு லத்துக் கொருமுத லாகிய
சிங்க மன்ன திறலின னுய்த்திட
விங்கு நின்புடை யெய்தினன் மேனெறி
தங்கு நன்னயஞ் சாற்றுதற் கேயென்றான்.

உம் குலத்துக்கு ஒரு முதல் ஆகிய—உங்கள் குலத்துக்கு ஒப்பற்ற முதல்வன் ஆகிய, சிங்கம் அன்ன திறலினன் உய்த்திட—சிங்கம்போன்ற வலி படைத்தவனாகிய அசுரேந்திரன் என்பவன் அனுப்ப, இங்கு நின்புடை எய்தினன்—இங்கே நின்பக்கல் வந்தேன்; மேல் நெறி தங்கு நல் நயம் சாற்றுதற்கே என்றான்—யான் வந்தது மேலாய வழியில் நீ நடத்தற்குரிய நல்ல நயமொழிகளை உபதேசிக்கும்பொருட்டேயாம் என்று கூறினார். (51)

குரவ னாகிக் குறுகிய சல்லியன்
பரிவொ டீது பகர்தலு மாங்கவன்
றிருவ டித்துணை சென்று வணங்கியே
கரிமு கத்தன் கழறுதன் மேயினான்.

குரவன் ஆகி குறுகிய சல்லியன் பரிவொடு ஈது பகர்தலும்—ஆசாரியராய்ச் சென்ற சுக்கிர பகவான் அன்போடு இதனைக் கூறியவுடனே, ஆங்கு அவன் திருவடி துணை சென்று வணங்கி—அப்பொழுது அவருடைய இரு பாதங்களையுஞ் சென்று வணங்கி, கரிமுகத்தன் கழறுதன் மேயினான்—கயமுகாசுரன் உரைப்பானாயினான். (52)

இறுவ தின்றிய வெங்குலத் தோர்க்கெலா
மறிவ நீயரு ளாலடி யேற்கிவ
ணுறுதி கூறுகின் றுயித னாங்கினிப்
பெறுவ தொன்றுள தேயெனப் பேசினான்.

இறுவது இன்றிய எம் குலத்தோர்க்கு எலாம் அறிவ—இறந்துபோகாத எமது குலத்தினருக்கெல்லாம் ஆசாரியரே, நீ அருளால் அடியேற்கு இவண் உறுதி கூறுகின்ருய்—தேவரீர் கருணையினுல் அடியேனுக்கு இவ்விடத்தில் உறுதிமொழியை உபதேசிக்கின்றீர்; இதன் ஊங்கு ஒன்று இனி பெறுவது உளதே—இதனினும் பார்க்கச் சிறந்ததொன்றை இனி யான் பெறுவதும் உண்டோ; எனப் பேசினன்—என்று உபசாரவார்த்தை பேசினன். (53)

அந்த வேலை யவுணர்கள் யாவருஞ்
சிந்தை மேல்கொண்ட தீதினை நீத்திடா
வெந்தை யார்தங் குரவரி வரென
வந்து பார்க்கவன் றாளில்வ ணங்கினர்.

அந்த வேலை அவுணர்கள் யாவரும்—அப்பொழுது அசுரர்களெல்லாம், சிந்தை மேல்கொண்ட தீதினை நீத்திடா—தம் மனத்தின்கட் கொண்ட கொடுமையை விடுத்து, இவர் எந்தையார் தம் குரவர் என—இவர் எம் தலைவராகிய அரசரின் குருவாகும் என்று, வந்து பார்க்கவன் தாளில் வணங்கினர்—சுக்கிராசாரியரை அணுகி அவருடைய பாதங்களில் வணக்கஞ் செய்தார்கள். (54)

சீத வான்முகிற் கோளெனுஞ் செவ்வியோ
னாதி தன்னரு ளாலவு ணர்க்கிறை
போத கன்முக னோக்கிப் பொருவிலா
வோதி மாண்பி னிவையுரைக் கின்றனன்.

சீத வான் முகில் கோள் எனும் செவ்வியோன்—குளிர்ச்சி பொருந்திய உயர்ந்த மழைக்கோள் என்று சொல்லப்படுஞ் செம்மையுடையரான சுக்கிர பகவான், ஆதி தன் அருளால்—இறைவன் திருவருளினுல், அவுணர்க்கு இறை போதகன் முகம் நோக்கி—அசுரர்க்கிறைவனுகிய கயமுகனது முகத்தை நோக்கி, பொருவிலா ஓதி மாண்பின்—ஒப்பில்லாத ஞான மாட்சிமையால், இவை உரைக்கின்றனன்—இவற்றை உபதேசிக்கின்ருர். (55)

## வேறு

மீயுயர் தவத்தை யாற்ருய் விமலனை யுணரா யொல்லார்
மாயமுந் திறலுஞ் சீரும் வன்மையுஞ் சிறிதுந் தேரா
யேயவிவ் வுடல நில்லா தென்பதுங் கருதாய் வாளா
போயின பன்ன ளென்னீ புரிந்தனை புந்தி யில்லாய்.

மீ உயர் தவத்தை ஆற்ருய்—மிகவும் உயர்ந்த தவத்தினைச் செய்தாயல்லை; விமலனை உணராய்—நின்மலராகிய கடவுளை அறிகின்றிலை; ஒல்லார் மாயமும் திறலும் சீரும் வன்மையும் சிறிதும் தேராய்—பகைவருடைய

மாயங்களையும் வெற்றியையுஞ் சீரையும் வலியையுஞ் சிறிதுந் தேர்கின்றிலை; ஏய இ உடலம் நில்லாது என்பதும் கருதாய்–பொருந்திய இந்த உடம்பு நிலையற்றதென்பதையுங் கருத்துட் கொள்ளாய்; பன்னாள் வாளா போயின–பலவாகிய வாழ்நாள்கள் வீணே கழிந்தன; புந்தியில்லாய் நீ என் புரிந்தனை–புத்தியில்லாதவனே நீ என்ன செய்தாய். (56)

முப்பகை கடந்து மற்றை முரட்பகை முடித்திட் டைம்பான்
மெய்ப்பகை கடந்து நோற்று விழுத்தகு மாற்றல் பெற்றுத்
துப்பகை தொண்டைச் செவ்வாய்ச் சூரொடு புணரும் வானாட்
டப்பகை கடந்து தொல்சீ ரடைந்திலை போலு மன்றே.

முப்பகை கடந்து–காமம் வெகுளி மயக்கமாகிய மூன்று பகைகளையுங் கடந்து, மற்றை முரண் பகை முடித்திட்டு–இவையல்லாத முரணுதல் எனப்படும் அகந்தையாகிய பகையை அழித்து, ஐம்பால் மெய்ப்பகை கடந்து–ஐம்புலங்களாகிய மெய்ம்மையான பகையை வென்று, நோற்று விழுத்தகும் ஆற்றல் பெற்று–தவஞ்செய்து விழுப்பம் மிக்க வன்மையைப் பெற்று, துப்பு அகை தொண்டை செவ்வாய் சூரொடு புணரும்–பவளந் தோல்வியுறுகின்ற கொவ்வைச் செவ்வாயினையுடைய தேவ மகளிரோடு சேருகின்ற, வான்நாட்டு அப்பகை கடந்து -வானாட்டிலுள்ள அந்தத் தேவர்களாகிய பகையைத் தொலைத்து, தொல் சீர் அடைந்திலை–பழைய சிறப்புக்களைப் பெற்றாயில்லை. (57)

இம்மையி லின்பந் தன்னைப் புகழொடு மிழத்தி மேலை
யம்மையி லின்பந் தானு மகன்றனை போலு மன்றே
யும்மையு மின்ப மென்ப துற்றிலை யென்னிற் பின்னை
யெம்மையி லின்பந் துய்க்க விசைந்துநீ யிருக்கின் றாயால்.

இம்மையில் இன்பம் தன்னை புகழொடும் இழத்தி–இப்பிறப்பில் இன்பத்தைப் புகழோடும் இழக்கின்றாய்; மேலை அம்மையில் இன்பந் தானும் அகன்றனை போலும்-முந்தியதாகிய முற்பிறப்பிலும் இன்பத்தை அநுபவித்தாயல்லைப்போலும்; உம்மையும் இன்பம் என்பது உற்றிலை-இனி வரும் பிறப்பிலும் இன்பத்தை அடையாய்; என்னில் பின்னை–இங்ஙனமாயபின்னை, எம்மையில் இன்பம் துய்க்க இசைந்து நீ இருக்கின்றாய்–எப்பிறப்பில் இன்பம் அநுபவிக்கத் துணிந்து நீ இருக்கின்றாய்.

நிச்சயம்பற்றி உற்றிலை என்றார். (58)

ஆக்கமுந் திறலுஞ் சீரு மாயுவு நலனு மேலா
மூக்கமும் வீடு மெல்லாந் தவத்தின தூற்ற மன்றோ
நோக்குறு மிந்நாள் காறு நோற்கலா தினைய வெல்லாம்
போக்குவ தென்னை கொல்லோ புகலுதி யிகலும் வேலோய்.

ஆக்கமும் திறலும் சீரும் ஆயுவும் நலனும் மேலாம் ஊக்கமும் வீடும் எல்லாம்—செல்வமும் வலியும் சிறப்பும் ஆயுளும் அழகும் மேலாகிய ஊக்கமும் வீடுபேறும் ஆகிய அனைத்தும், தவத்தினது ஊற்றம் அன்றோ—தவத்தால் வரும் வற்றாத மிகுதிப்பாடேயாகும்; நோக்குறும் இ நாள் காறும்—காணப் படும் இத்தினம் வரையும், நோற்கலாது இனைய எல்லாம் போக்குவது என்னை—தவஞ்செய்யாது இத்தன்மையவாய பேறுகளனைத்தையும் இழப்ப தென்னையோ; இகலும் வேலோய் புகலுதி—பகைவரோடு மாறுபடுகின்ற வேற்படையையுடைய கயமுகனே கூறுவாயாக. (59)

ஆற்றிடு தருமம் விஞ்சை யரும்பெறன் மகவு சீர்த்தி
யேற்றிடு கொற்ற மாற்ற லிருநிதி பெருமை யின்ப
நோற்றிடு விரதஞ் சீல நுவலரும் போதம் யாவுங்
கூற்றுவன் கூவு ஞான்று குறித்திடிற் கூடு மோதான்.

ஆற்றிடு தருமம்—செய்யப்படுவதாகிய தருமம், விஞ்சை—வித்தை, அரும் பெறல் மகவு—பெறுதற்கரிய புத்திரப் பேறு, சீர்த்தி—கீர்த்தி, ஏற்றிடும் கொற்றம்—உயர்த்துவதாகிய வெற்றி, ஆற்றல்—வலி, இருநிதி—மிக்க செல்வம், பெருமை—மதிப்பு, இன்பம்—இன்பநுகர்வு, நோற்றிடு விரதம்—தவவிரதம், சீலம்—ஒழுக்கம், நுவலரும் போதம்—உரைத்தற்கரிய ஞானம், யாவும்—இவை யனைத்தும், கூற்றுவன் கூவு ஞான்று—யமன் அழைக்குங் காலத்தில், குறித்திடில் கூடுமோ—அவற்றைப் பெறக் கருதினல் வந்து கைகூடுமோ? (60)

காலனு கியதோர் சேர்ப்பன் காலமாம் வலையை வீசி
ஞாலமாந் தடத்தில் வைகு நல்லுயிர் மீன்கள் வாரி
யேலவே யீர்த்து நின்றா னிறுதியாங் கரைசேர் காலை
மேலவன் கையுட் பட்டு மெலிவொடு வீடு மன்றே.

காலனுகியது ஓர் சேர்ப்பன்—காலன் என்கின்ற நெய்தல் நிலத் தலைவ னுகிய செம்படவன், காலமாம் வலையை வீசி—காலமாகிய வலையை வீசி, ஞாலமாம் தடத்தில் வைகும் நல்லுயிர் மீன்கள்—உலகமென்னுந் தடாகத்தில் வாழுகின்ற நல்ல உயிர்களாகிய மீன்களை, ஏலவே வாரி ஈர்த்து நின்றான்—முன்னமே வாரி இழுத்துக்கொண்டு நின்றான்; இறுதி ஆம் கரை சேர் காலை—அவ்வுயிர் வாழ்நாள் முடிவாகிய மரணக் கரையைச் சேரும்போது, மேலவன் கையுள் பட்டு மெலிவொடு வீடும்—முன்னமே இழுத்தோனுகிய காலன் கையு ளகப்பட்டு மெலிவைப் பொருந்தி இறந்துபடும். (61)

சீரிய துடல மென்கை தெரிந்திலை நிலைத்தல் செல்லா
தாருயிர் வகையு மென்ப தறிந்திலை யாயுட் பன்னாட்
சாருதல் வேண்டு மென்னுந் தகைமையு நினைத்தி யல்லை
பாருயி ரிறப்ப நுங்கி யிருப்பதோ பரிசு மாதோ.

சீரியது உடலம் என்கை தெரிந்திலை—தவஞ்செய்து பயன்பெறுஞ் சிறப்பை யுடையது உடம்பு என்பதை அறிந்திலை; ஆருயிர் வகையும் நிலைத்தல் செல்லாது என்பது அறிந்திலை—அரிய உயிர்வர்க்கமும் உடம்பில் நிலைத்து நிற்கமாட்டாது என்பதையும் அறியாய்; ஆயுள் பன்னாள் சாருதல் வேண்டும் என்னும் தகைமையும் நினைத்தி அல்லை—ஆயுள் பலகாலம் நீடித்திருத்தல் வேண்டும் என்னுந் தன்மையையும் நினைத்தாயல்லை; பார் உயிர் இறப்ப நுங்கி இருப்பதோ பரிசு—உலகுயிர்களை மிகவுந் தின்று வாழுவதுதானா நீ பிறந்து பெறும் பயன். (62)

மந்திர மில்லை மாய மில்லையோர் வரமு மில்லை
தந்திர மில்லை மேலோர் தருகின்ற படையொன் றில்லை
யந்தர வமர ரெல்லா மனிகமாய்ச் சூழ நின்மே
லிந்திரன் பொருவான் செல்லின் யாதுநீ செய்தி மாதோ.

மந்திரம் இல்லை—உன்னிடம் மந்திரமு மில்லை; மாயம் இல்லை—மாயமு மில்லை; ஓர் வரமும் இல்லை—ஒரு வரமு மில்லை; தந்திரம் இல்லை—உபாயமு மில்லை; மேலோர் தருகின்ற படை ஒன்று இல்லை—மேலோர்களிடம் பெறு கின்ற படைகளில் ஒன்றுதானும் உன்னிடம் இல்லை; அந்தர அமரர் எல்லாம் அனிகமாய் சூழ—வானத்திலுள்ள தேவர்கள் அனைவருஞ் சேனையாய்ச் சூழ்ந்துவர, இந்திரன் நின்மேல் பொருவான் செல்லின்—இந்திரன் நின்மீது போர் புரிய வந்தால், நீ யாது செய்தி—நீ என்ன செய்வாய். (63)

சிறியதோர் பயனைத் தூக்கித் தீயவர் செய்யுஞ் சூழ்ச்சி
யறிகில வாகி வீழ்வுற் றகப்படு மாவு மீனும்
பறவையு மென்ன வொல்லார் புணர்ப்பினிற் படுதி யின்னே
விறலொடு வலியுஞ் சீரு மேன்மையு மின்றி யுற்றாய்.

சிறியது ஓர் பயனைத் தூக்கி—அற்பமாயதொரு பயனைக் கருதி, தீயவர் செய்யும் சூழ்ச்சி அறிகில வாகி—தமக்குத் தீமை விளைப்பவர்களின் உபா யத்தை அறியும் ஆற்றலில்லாதனவாய், வீழ்வு உற்று—விரும்பிச் சென்று, அகப்படும்—வலை தூண்டில் கண்ணி என்னும் இவற்றில் அகப்படுகின்ற, மாவும் மீனும் பறவையும் என்ன—விலங்கும் மீனும் பறவையும் போல, ஒல்லார் புணர்ப்பினில் இன்னே படுதி—பகைவருடைய சூழ்ச்சியில் இப் பொழுதே நீ அகப்படுகின்றாய்; விறலொடு வலியும் சீரும் மேன்மையும் இன்றி உற்றாய்—வெற்றியும் வலியுஞ் சிறப்பும் மேன்மையும் இன்றி இருந்தாய். (64)

ஆதலி னெவர்க்கு மேலா மரன்றனை யுன்னி யாற்ற
மாதவம் புரிதி யன்னான் வரம்பல கேட்ட வெல்லாந்
தீதற வுதவும் பின்னர்த் தேவருன் னேவல் செய்வார்
மேதகு முலகுக் கெல்லாம் வேந்தனு யிருத்தி யென்றான்.

ஆதலின்—ஆதலினாலே, எவர்க்கும் மேலாம் அரன் தனை உன்னி—எவர்க்கும் மேலோராகிய சிவபெருமானை நினைத்து, ஆற்ற மாதவம் புரிதி—பெரிதுந் தவத்தைச் செய்குதி; அன்னான் கேட்ட பல வரம் எல்லாம் தீது அற உதவும்—அவர் நீ கேட்ட பலவாகிய வரமனைத்தையுங் குற்றமற அருள்வார்; பின்னர் தேவர் உன் ஏவல் செய்வார்—அதன்பின் தேவர்கள் உன் குற்றேவலைச் செய்வார்கள்; மேதகும் உலகுக்கு எல்லாம் வேந்தன் ஆய் இருத்தி என்றான்—மேன்மை பொருந்திய உலகம் முழுவதற்கும் நீ அரசனாய் இருப்பாய் என்று கூறினார். (65)

சொன்னவை கேட்ட லோடுந் தொழுதகை யவுணர் தோன்றன்
முன்னிவை யாவ ரேனு மொழிந்தன ரில்லை யானு
மின்னவை புரித றேற்றே னினித்தவ மியற்று கின்றே
னன்னவை புரியுந் தன்மை யருள்செயல் வேண்டு மென்றான்.

சொன்னவை கேட்டலோடும்—சுக்கிராசாரியர் சொன்னவைகளைக் கேட்ட உடனே, தொழுத கை அவுணர் தோன்றல்—தொழாநின்ற கையினையுடைய அசுர சிரேட்டனான கயமுகன், முன் இவை யாவரேனும் மொழிந்தனர் இல்லை—முன்னர் இவைகளை எவரேனும் எனக்குக் கூறினாரில்லை; யானும் இன்னவை புரிதல் தேற்றேன்—யானும் இவைகளைச் செய்தலை அறியேன்; இனி தவம் இயற்றுகின்றேன்—இனிக் கூறியபடி தவஞ் செய்கின்றேன்; அன்னவை புரியும் தன்மை—அத்தவத்துக்குரியவைகளைச் செய்யும் முறையை, அருள் செயல் வேண்டும் என்றான்—அநுக்கிரகிக்கவேண்டுமென்று வேண்டினான். (66)

### வேறு

ஐவினைசெய் பொறிகளொலா மரங்கமெனக்
கறங்குமறி வடங்கு கின்ற
மெய்வினைய மந்திரமுந் தந்திரமு
மங்கமுறு விதியி னோடு
கைவினையு முட்கோளும் புறங்காப்பும்
விரதஞ்செய் கடனு மேனைச்
செய்வினையு முணர்வித்து மேருவின்பாற்
றவம்புரியச் செல்லு கென்றான்.

ஐவினை செய்—ஐந்தொழில் செய்கின்ற, பொறிகள் எலாம்—ஐம்பொறிகளும், அரங்கம் என—பஞ்ச சபைகளாக, கறங்கும் அறிவு—பொறிகளாகிய பஞ்ச சபையிலும் பஞ்ச கிருத்தியமாகிய நடத்தைப் புரிகின்ற ஆன்ம அறிவானது, அடங்குகின்ற—கிருத்தியம் ஒழிந்து அடங்குதற்குக்காரமாகின்ற, மெய்வினைய மந்திரமும்—மெய்ம்மையாகிய பயனைச் செய்தலையுடைய மந்திரமும், தந்திரமும்—மந்திரத்துக்குரிய கிரியையும், அங்கம் உறு விதியினோடு கை வினையும்—அங்க நியாச கர நியாசங்களும், உட் கோளும்—அந்தர்யாகமும்,

புறம் காப்பும்—பகிர் யாகமும், விரதம் செய் கடனும்—தவ விரதத்துக்குரிய அநுட்டானுதி கடன்களும், ஏனை செய் வினையும்—செய்யவேண்டுவனவாகிய ஏனைய கருமமும், உணர்வித்து—ஆகிய அனைத்தையும் உணர்விற் பதிய உப தேசித்து, மேருவின்பால் தவம் புரிய செல்லுக என்றான்—மேருமலைச் சாரலிலே தவஞ் செய்யும்படி செல்வாயாக என்று ஏவினர்.

ஆன்மநாதன் பஞ்சஸ்தலங்களாகிய பஞ்ச சபைகளிற் பஞ்ச கிருத்தியம் புரிவது போல, ஆன்ம அறிவும் பஞ்ச பூத சம்பந்தமான பஞ்சப் பொறிக ளாகிய சபைகளிற் பஞ்ச கிருத்தியம் புரிகின்றதென்க. ஆன்ம பஞ்ச கிருத்திய மாவன கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறிதலா மென்க. மாறி மாறி அலமருதலின், 'கறங்கும்' என்றார்.

நியாசம்—வைத்தல். தேவர்களை அங்கங்களிலும் கைவிரல்களிலும் மந்திர பூர்வமாக இருத்துதலாம். அந்தர்யாகம்—உள் வழிபாடு. பகிர்யாகம் புற வழிபாடு. இங்கே தியானமும் இருக்கையாகிய ஆசனமுமாம். (67)

ஏவுதலுங் கயமுகத்தோ னவுணரொடும்
புகரடியி னிறைஞ்சி யங்கண்
மேவுவன்யா னெனவுரையா விடைகொண்டு
நோற்றிடுவான் விரைவி னேகக்
காவதமங் கோரிரண்டு கடப்பளவுந்
தானின்று கண்ணி னேக்கிப்
போவனினி யெனமகிழ்ந்து மீண்டுபோ
யவுணர்பதி புகுந்தா னன்றே.

ஏவுதலும்—தவஞ்செய்யும்படி ஏவ, கயமுகத்தோன் அவுணரொடும் புகர் அடியின் இறைஞ்சி—கயமுகன் அசுரர்களோடும் சுக்கிரபகவானின் பாதத்தில் வணங்கி, அங்கண் மேவுவன் யான் என உரையா விடை கொண்டு—அவ் விடத்துக்குத் தவஞ்செய்யும்படி செல்வேன் யான் என்று கூறி விடைபெற்றுக் கொண்டு, நோற்றிடுவான் விரைவின் ஏக—தவஞ்செய்யும்பொருட்டு விரை வாகச் செல்ல, அங்கு ஓர் இரண்டு காவதம் கடப்பு அளவும்—அவன் அவ்விடத்தி னின்றும் இரண்டு காவத தூரங் கடந்து செல்லும் வரையும், தான் நின்று கண்ணின் நோக்கி—தாமே நின்று தமது கண்களாற் பார்த்து, இனிப் போவன் என மகிழ்ந்து—இனி இவன் தவஞ்செய்யப் போவான் என்று மனமகிழ்ந்து, மீண்டு போய் அவுணர் பதி புகுந்தான்—திரும்பிப்போய் அவுணர்களின் நகரமாகிய சோணிதபுரத்தை அடைந்தார்.

அவன் வாழ்க்கைக்குந் தவத்துக்குந் தூரமாதலின், சந்தேகமுற்றுத் தாமே நின்று நோக்கினர் என்க. (68)

அக்காலத் தெதிர்வந்த விறைவனுடன்
புகுந்தவெலா மறைய வன்னு
னிக்காலந் தானன்றே வருள்செய்தீ
ரெனவியம்பி யேத்தி யன்பான்

முக்கால்வந் தனைசெய்து விடுத்திடப்போய்த்
தன்பதத்தின் முன்ன மேபோன்
மிக்கானும் வீற்றிருந்தான் கடவுளரும்
புரந்தரனும் விழுமங் கொள்ள.

அக்காலத்து எதிர்வந்த இறைவனுடன்—அப்பொழுது எதிரே வந்த அசுரேந்திரனிடத்தில், புகுந்த எலாம் அறைய—நடந்தவற்றையெல்லாங் கூற, அன்னான் இக்காலம்தான் அருள் செய்தீர் என இயம்பி—அவ்வசுரேந்திரன் இப்பொழுதுதான் கருணைசெய்தருளினீர் என்று கூறி, ஏத்தி—துதித்து, அன்பால் முக்கால் வந்தனை செய்து விடுத்திடப் போய்—அன்பினாலே மூன்று முறை வணங்கி வழியனுப்பச் சென்று, தன் பதத்தில்—தமது பதவியில், முன்னமே போல்—முன்போல, புரந்தரனும் கடவுளரும் விழுமம் கொள்ள—இந்திரனுந் தேவர்களுந் துன்பம் எய்த, மிக்கானும் வீற்றிருந்தான்-மேலோரான சுக்கிரபகவானும் வீற்றிருப்பாராயினர்.

பதவி—இடம். முன்னமேபோல் வீற்றிருந்தா ரென்க. (69)

மாண்டகுமவ் வலியகலன் மருப்பதனை
யெதிர்ந்துதொல்லை வைப்பி னீங்கு
மீண்டியதிண் காழிரும்பி னெஃகமுதல்
வியன்படைக ளியற்கை யென்னக்
காண்டகைய தங்குரவ னுனபுக
ருரையதனைக் கருத்துட் சேர்த்தி
யாண்டகைசே ரிபமுகத்தோ னவுணருடன்
றவம்புரிவா னகல லுற்றான்.

மாண் தகும் அ வலி அகலன்—மாட்சிமை தகுதியுறுகின்ற அந்த வலியான் மிக்கோனாகிய கயமுகன், மருப்பு அதனை எதிர்ந்து—கொம்பாலான பிடியைத் தலைப்பட்டு, தொல்லை வைப்பின் நீங்கும்—பிடி வேறு ஆயுதமாகிய தாம் வேறு ஆகிய பழைய நிலையினின்றும் நீங்குகின்ற, ஈண்டிய—பிடியின்கண் இறுகிச் செறிவுற்று ஒன்றுபட்ட, திண் காழ் இரும்பின்—திண்ணிய வைரித்த இரும்பினாலாய, எஃகம் முதல் வியன்படைகள் இயற்கை என்ன—ஈட்டி முதலிய சிறந்த ஆயுதங்கள் பிடியோ டொருமையுற்றிருக்கும் இயல்பு என்று சொல்லும்படி, காண் தகைய தம் குரவன் ஆன புகர் உரையை—அழகும் பெருமையும் பொருந்திய அசுர குலத்தாரின் குருவாகிய சுக்கிரபகவானின் உபதேசத்தை, கருத்துள் சேர்த்தி—அவ்வுபதேசம் தன் மனத்துள் அதனோ டொருமையுறும்படி இறுகப் பதித்து, ஆண் தகை சேர் இப முகத்தோன்—ஆண் தகைமையினையுடைய அவன், அவுணருடன் தவம் புரிவான் அகலல் உற்றான்—அசுரர்களோடு தவம்புரியும்படி அவ்விடத்தைவிட்டகன்று செல்வானாயினன்.

வலி—ஈண்டுத் தவத்துக்குரிய வலி; அதனால் மாண் தகும் வலியாயிற்று. அகலன் என்புழி அகலுதல், மிகுதல் என்னும் பொருட்டு. இனி வலிய எனப்

பிரித்து, கலன்–கீழ்மகன் எனப் பொருள் கோடல் இச் சந்தர்ப்பத்திற் சிறப்பின்றும். மருப்பது என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி; மருப்பு, ஆயுதங்களின் பிடியாதற் கமைந்த விலங்குகளின் மருப்பென்க. பிடியாகிய மருப்பை ஆயுதம் எதிர்தல் தாடலைப்படுவதோ ரியல்பிற்று மென்க. வட கடலிட்ட நுகத்துளையில் தென்கடலிட்ட கழி சென்று கோப்புண்டாற்போ லெதிர்ப்பட் டொருமையுறுங் காந்தருவத்துக் காதலர்களின் எதிர்ப்பாட் டியல்பும் ஈண்டைக்கியையுமாறு, 'எதிர்ந்து' என்ற சொல்வழக்காற் பெறுது மென்க. 'தொல்லை வைப்பு' பிடி வேறு ஆயுதம் வேறு ஆகியிருந்த இருமை யாகிய துவைத நிலை. 'எதிர்ந்து ஈண்டுதல்' பிடியாகிய மருப்பும் ஆயுதமும் ஒன்றுபட் டொருமையுறும் அத்வைத நிலை. அஃதாவது இரண்டற்ற நிலை. படைகள், பிடியோடியையதற்குரிய படைகள். இயற்கை என்னச்சேர்த்தி என்க. என்ன உவமவுருபு. பொதுத்தன்மை இருமையின் ஒருமை. உபதேசமாகிய ஆயுதத்தைக் கருத்தாகிய பிடியுட் சேர்த்தின னென்க. ஆயுதஞ் சென்ற வழிப் பிடி செல்லுதலும் ஆயுதத்துக்கு அது உபகாரமாதலும் இருந்த வாற்றல், இனிக் கயமுகன் உபதேசத்தின் வழிப்பட்டு அதற்குபகாரியா யமைவன் என்பது போந்தவாறு. இபமுகத்தோன் சுட்டுப்பொருட்டு. இபமுகத்தோனுகிய வலியகலன் எனக் கூட்டியுரைப்பினும் அமையும்.

இவன் செல்கை, இவன் கோட்டிற் பட்டுத் திரும்பும் எஃக முதலிய வற்றின் மீட்சியை ஒத்தது என்றுரைக்குமுரை பொருத்தமற்றது. (70)

அங்கண்முகில் படிந்தறியா மேருவினுக்
கொருசார்போ யவுணர் வேந்தன்
றுங்கமிகு கருவிகளாய் வேண்டுவன
கொணர்வித்துத் தூநீ ராடிச்
செங்கதிரோன் றனைநோக்கி யாற்றுகடன்
முடித்துமுன்னைத் தீர்வு நேர்ந்து
தங்கள்குர வன்பணித்த பெற்றியினுன்
மிக்கதவந் தன்னைச் செய்வான்.

அவுணர் வேந்தன்–அசுரர் தலைவனுன கயமுகன், முகில் படிந்து அறியா மேருவின் ஒரு சார் போய்–மேகம் படிந்தறியாத மேருவின் ஒரு புறத்திற் சென்று, அங்கண்–அவ்விடத்தில், துங்க மிகு கருவிகளாய் வேண்டுவன கொணர்வித்து–தூய்மை மிக்க உபகரணங்களாய்த் தவத்துக்கு வேண்டுவன வற்றைக் கொண்டுவரச் செய்து, தூ நீர் ஆடி–சுத்தமான நீரில் ஸ்நானஞ் செய்து, செங்கதிரோன் தனை நோக்கி ஆற்று கடன் முடித்து–செம்மையாகிய கிரணங்களையுடைய சூரியனை நோக்கிச் செய்யக்கடவ நித்திய கடன்களைச் செய்து முடித்து, முன்னை தீர்வு நேர்ந்து–முன்னமே செய்து வைக்குங் கழுவாயையுஞ் செய்து, தங்கள் குரவன் பணித்த பெற்றியினுல்–அசுரர்க ளாகிய தங்கள் குரு இட்ட கட்டளைப்பிரகாரம், மிக்க தவம் தன்னைச் செய்வான்–மேலான தவத்தைச் செய்வானுயினுன்.

தவஞ் செய்வார் இடையில் நிகழுங் குற்றங்களுக்கு முன்னமே கழுவாய் செய்துகொள்வர் என்க. (71)

பொறியிலுறு புலனவித்து நவைநீக்கிக்
கரணவியல் போக்கி யாசான்
குறிவழியே தலைநின்று மூலவெழுத்
துடனைந்துங் கொளுவி யெண்ணி
யறிவுதனி லறிவாகி யுயிர்க்குயிராய்ப்
பரம்பொருளா யமல மாகிச்
செறிதருகண் ணுதற்கடவு ளடிபோற்றி
யவனுருவைச் சிந்தை செய்தான்.

பொறியிலுறு புலன் அவித்து—பஞ்சப் பொறிகளிற் பொருந்திய பஞ்சப் புலன்களையும் விடயத்திற் செல்லவொட்டாது தடுத்து, நவை நீக்கி— காமம் வெகுளி மயக்கம் ஆகிய குற்றங்களை ஒழித்து, கரண இயல் போக்கி—அந்தக் கரண இயல்புகளை வழிப்படுத்தி, ஆசான் குறி வழியே தலை நின்று—குரு உபதேசித்த குறிப்பின் வழியே தவருதொழுகி, மூல எழுத்துடன் ஐந்தும் கொளுவி எண்ணி—பிரணவத்துடன் திருவைந்தெழுத்தையுஞ் சேர்த்துக் கணித்து, அறிவுதனில் அறிவாகி உயிர்க்கு உயிராய் பரம்பொருளாய் அமலமாகி செறிதரு கண்ணுதற் கடவுள் அடி போற்றி—அறிவுக்கறிவாய் உயிர்க்குயிராய்ப் பரம்பொருளாய் நின்மலமாகி எங்கும் நிறைந்துள்ள கண்ணுதற் பெருமானுடைய திருவடிகளைத் துதித்து, அவன் உருவை சிந்தை செய்தான்—அப் பெருமானுடைய உருவத் திருமேனியைத் தியானித் தான்.

கணித்தல்—செபித்தல். புலன்கள் என்றது, விடய நுகர்ச்சிக்குபகார மாய்ப் பொறிகளிலமைந்த சுவை ஒளி ஊறு ஆதியவைகளை. (72)

வேறு

ஆயிர மாண்டுபுல் லடகு மேயினு
னாயிர மாண்டுசில் புனல ருந்தினு
னாயிர மாண்டள வனில நுங்கினன்
மாயிரும் புவியுயிர் மடுக்கும் வாயினன்.

மா இரும் புவி உயிர் மடுக்கும் வாயினன்—மிகப் பெரிய உலகிலுள்ள உயிர்களை விழுங்கும் வாயினையுடையவனாகிய கயமுகன், ஆயிரம் ஆண்டு புல் அடகு மேயினன்—ஆயிரம் வருடம் புல்லையும் இலையையுந் தின்றான்; ஆயிரம் ஆண்டு சில் புனல் அருந்தினன்—ஆயிரம் வருடம் அற்பமாகிய சலத்தைப் பருகினன்; ஆயிரம் ஆண்டு அளவு அனிலம் நுங்கினன்—ஆயிர வருட காலங் காற்றைப் புசித்தான். (73)

காலமூ வாயிரங் கழிந்த பின்முறை
மாலுறு மருத்தெனு மாவைத் தூண்டியே
மூலவெங் கனலினை முடுக்கி மூட்டுரு
மேலுறு மமிர்தினை மிசைதன் மேயினன்.

காலம் மூவாயிரம் கழிந்த பின்—இவ்வாறு மூவாயிரம் வருடங்கழிந்த பின்பு, முறை—யோக நூன் முறைப்படி, மால் உறு மருத்து எனும் மாவை தூண்டி—பெருமைமிக்க பிராண வாயு என்கின்ற வாசியை எழுப்பி, மூல வெம் கனலினை முடுக்கி மூட்டுரு—வெம்மையாகிய மூலாக்கினியை விரைந்து சுவாலிப்பித்து, மேலுறும் அமிர்தினை மிசைதல் மேயினன்—புருவமத்தியின் மீது பொருந்திய அமிர்தத்தை உண்ணுதல் செய்வானாயினன். (74)

கண்டன ரதுசுரர் கவலுஞ் சிந்தையர்
திண்டிற லவுணனிச் செய்கை முற்றுமே
லண்டமும் புவனமு மலைக்கு மேயெனக்
கொண்டனர் தம்பதி யறியக் கூறினர்.

அது சுரர் கண்டனர்—அவன் அவ்வாறு தவஞ்செய்வதைத் தேவர்கள் கண்டு, கவலுஞ் சிந்தையர்—கவல்கின்ற மனத்தினையுடையராய், திண் திறல் அவுணன் இ செய்கை முற்றுமேல்—திண்ணிய திறல் படைத்த இவ்வசுரன் இத்தவத்தைச்செய்து முடிப்பானேயானல், அண்டமும் புவனமும் அலைக்குமே என கொண்டனர்—அண்டத்தையும் புவனங்களையும் வருத்துவானே என்று கருதி, தம் பதி அறிய கூறினர்—அவன் செயலைத் தமதரசனை இந்திரன் அறியும்படி கூறினர்கள். (75)

கூறிய செயலினைத் தேர்ந்து கொற்றவ
னாறிய வெகுட்சிய னயர்ந்து சோர்வுறு
வீறியல் வாய்மையும் விறலு மாண்மையு
மாறிய வோவென மறுக்க மெய்தினன்.

கூறிய செயலினை தேர்ந்து—தேவர்கள் கூறிய அந்த அசுரனின் தவச் செயலை அறிந்து, கொற்றவன்—இந்திரன், ஆறிய வெகுட்சியன்—கோபம் அற்றவனாய், அயர்ந்து சோர்வுறு—அயர்ந்து சோர்ந்து, வீறு இயல் வாய்மையும்—வீரவார்த்தையும், விறலும்—வெற்றியும், ஆண்மையும்—ஆண்டகைமையும், மாறியவோ என—மாறினவோ என்று, மறுக்கம் எய்தினன்—கலக்கம் அடைந்தான்.

* 'செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கினென் காவாக்கா லென்'

என்ப ஆதலின், ஆறிய வெகுட்சியன் ஆயினனென்க. (76)

* திருக்குறள் — 301

புலர்ந்தன னிரங்கினன் பொருமலெய்தினு
னலந்தன னுயிர்த்தன னச்சங் கொண்டன
னுலந்தனன் போன்றன னொடுங்கித் தன்னுளங்
குலைந்தன னவன்செயல் கூறற் பாலதோ.

புலர்ந்தனன் இரங்கினன் பொருமல் எய்தினன் அலந்தனன் உயிர்த்தனன் அச்சம் கொண்டனன்—நெஞ்சு உலர்ந்து இரங்கிப் பொருமி வருந்தி நெட்டுயிர்த்து அச்சம்கொண்டு, உலந்தனன் போன்றனன்—இறந்தவன் போன்றவனாய், ஒடுங்கி தன் உளம் குலைந்தனன்—ஒடுங்கித் தனது மனம் நிலைகுலைந்தான்; அவன் செயல் கூறற்பாலதோ—அவ்விந்திரனடைந்த துன்பச் செயலைக் கூற முடியுமோ. (77)

ஈசனை யன்றுகா றெதிரக் கண்டிலன்
காய்சின மகன்றிடு கயமு கத்தினன்
றேசிக னருளினாற் றீயின் கண்ணுறீஇ
மாசறு தவஞ்செய மனத்து முன்னினன்.

காய் சினம் அகன்றிடு கய முகத்தினன்—காய்கின்ற கோபத்தை விடுத்த கயமுகாசுரன், அன்றுகாறு ஈசனை எதிர கண்டிலன்—அந்நாள்வரை சிவ பெருமானை எதிர்ப்படக் காணாதவனாய், தேசிகன் அருளினால்—குருவின் கட்டளைப்படி, தீயின்கண் உறீஇ—பஞ்சாக்கினி மத்தியில் நின்று, மாசறு தவம் செய மனத்து முன்னினன்—மாசற்ற தவஞ்செய்தற்கு மனத்தில் நினைத்தான்.

ஈசனைக் காணாதவழி இங்ஙனஞ் செய்க என முன் உபதேசித்தனர் என்பது பெறுதும். (78)

சுற்றுற நாற்கனல் சூழ நள்ளிடை
மற்றொரு பேரழல் வதிய வன்னதிற்
கொற்றவெங் கயமுகக் குரிசி றாணிறீஇ
நற்றவ மியற்றினா னாதற் போற்றியே.

சுற்று நாற்கனல் உறச் சூழ—நான்கு சுற்றுப்புறத்திலும் நான்கு அக்கினி சுவாலித்துச் சூழ, நள்ளிடை மற்றொரு பேர் அழல் வதிய—நடுவண் மற்றொரு பெரிய அக்கினி பொருந்த, அன்னதில்—பஞ்சாக்கினி மத்தியாகிய அவ் வக்கினியில், கொற்ற வெம் கயமுக குரிசில் தாள் நிறீஇ—வெற்றியினை யுடைய வெவ்விய கயமுகனாகிய குரிசில் கால்களை ஊன்றி நின்று, நாதன் போற்றி நல் தவம் இயற்றினன்—சிவபெருமானைத் துதித்து நல்ல தவத்தைச் செய்தான். (79)

மேயின கொழும்புகை மிசைக்கொண் டாலெனத்
தீயழ னடுவுறச் செந்நின் றையிரண்
டாயிர மாண்டையி னவதி யாருயிர்
நோயுற விபமுக னோற்ற லோம்பினன்.

மேயின கொழும் புகை மிசைகொண்டாலென—அக்கினியிற் பொருந்திய கொழுமையாகிய புகை மேலெழுந்து சென்றாற்போல, தீ அழல் நடுவு உற செந்நின்று—கொடிய அக்கினியின் மத்தியிற் செப்பமுற நிமிர்ந்து நின்று, ஐயிரண்டு ஆயிரம் ஆண்டு அவதி—பதினாயிர வருட காலம், ஆருயிர் நோயுற—அரிய உயிர் வருந்த, இபமுகன் நோற்றல் ஓம்பினன்—கயமுகன் தவஞ் செய்தலை ஓம்புவானாயினன்.

ஐ, இன் சாரியை. ஓம்புதல்—பேணி வளர்த்தல். (80)

புழைக்கையின் முகத்தினன் புனித மார்தரு
தழற்சிகை மீக்கொளத் தனது தாணிறீஇ
விழுத்தக நோற்றலை வியந்து நோக்குறீஇ
யழற்பெருங் கடவுளு மருள்செய் தானரோ.

புழைக்கையின் முகத்தினன்—துவாரம் பொருந்திய துதிக்கையினையுடைய கயமுகன், புனிதம் ஆர்தரு தழல் சிகை மீக்கொள—புனிதம் நிறைந்த அக்கினிச்சுவாலை தன்மீது பரவ, தனது தாள் நிறீஇ—தன் கால்களை அக்கினியில் நிறுத்தி, விழுத்தக நோற்றலை நோக்குறீஇ—விழுப்பம் பொருந்தத் தவஞ் செய்தலைப் பார்த்து, அழல் பெரும் கடவுளும் வியந்து அருள் செய்தான்—பெருமை பொருந்திய அக்கினிதேவனும் வியப்புற்று அவனுக்குக் கருணைசெய்தான். (81)

அன்னதோ ரமைதியி லவுணன் மாசுடல்
வன்னியி லுறுத்துகா ரிரும்பின் மாண்டது
பொன்னினு மணியினும் பொலிந்து பூத்தது
மின்னிவர் வச்சிர மிடலுஞ் சான்றதால்.

அன்னது ஓர் அமைதியில்—அவ்வாறாய சமயத்தில், அவுணன் மாசு உடல்—கயமுகனது கரிய உடல், வன்னியில் உறுத்து கார் இரும்பின் மாண்டது—அக்கினியிற் பழுக்கக் காய்ச்சிய கரிய இரும்புபோலப் பிரகாசித்தது; பொன்னினும் மணியினும் பொலிந்து பூத்தது—அம்மட்டோ பொன்னினும் மணியினும் மிக்கு ஒளிகான்றது; மின் இவர் வச்சிர மிடலும் சான்றது—ஒளிவிடுகின்ற வச்சிரத்தின் வலியையுஞ் சாலப்பெற்றது. (82)

ஏற்றநந் தொன்மர பியல்வ ழாமலே
போற்றிய வருமிவன் பொறையும் பூண்டகை
நோற்றிடு திட்பமு நுவலற் பாலவோ
தூற்றுது மலரெனா வவுணர் தோன்றினர்.

ஏற்ற நம் தொன் மரபு இயல் வழாமல்—தகுந்த நமது பழைய குலாசாரம் வழுவாமல், போற்றிய வரும் இவன்—அதனைப் பாதுகாக்கும்படி உதித்த இக் கயமுகனுடைய, பொறையும்—பொறுமையும், பூண் தகை—கவசத்தை ஒத்த, நோற்றிடு திட்பமும்—தவஞ்செய் திண்மையும், நுவலற்பாலவோ—எடுத்துச் சொல்லுந் தரத்தனவாமோ; மலர் தூற்றுதும் எனு அவுணர் தோன்றினர்—நாம் அவன்மீது மலர்மாரி பொழிவோம் என்று அசுரர்கள் முன்வந்தார்கள்.

பொறையும் மேன்மையும் என்றும் பாடம். பூண்—கவசம். (83)

வீசினர் நறுமலர் வியப்பி னன்மொழி
பேசினர் புகழ்ந்தனர் பிறங்கு மார்வத்தா
லாசிகள் புகன்றன ரமரர் தானையை
யேசின ரவர்தம தின்ன னோக்குவார்.

நறுமலர் வீசினர்—மணம்பொருந்திய மலர்களைச் சொரிந்து, வியப்பின் நன்மொழி பேசினர்—அதிசயத்தோடு நல்ல வார்த்தைகளைப் பேசி, புகழ்ந்தனர்—புகழ்ந்து, பிறங்கும் ஆர்வத்தால் ஆசிகள் புகன்றனர்—விளங்குகின்ற விருப்பத்தினாலே ஆசி மொழிகள் புகன்று, அமரர் தானையை அவர் தமது இன்னல் நோக்குவார் ஏசினர்—தேவ சேனையை அத்தேவருடைய துன்பத்தை எதிர்பார்ப்பவராய் வைதனர். (84)

தளப்பெரும் பங்கயத் தவிசின் மீமிசை
யளப்பருங் குணத்துட னமர்ந்த நாயக
னுளப்பட நோக்கின னுவந்து பூமுடி
துளக்கின னமரர்க டுனுக்க மெய்தினர்.

தளம் பெரும் பங்கயம் தவிசின் மீமிசை—சகஸ்ர தளங்களையுடைய பெரிய தாமரை மலராகிய பீடத்தின் மீது, அளப்பு அரும் குணத்துடன் அமர்ந்த நாயகன்—அளவிடுதற்கரிய குணங்களோடு எழுந்தருளிய சர்வ லோகைக நாயகராகிய சிவபெருமான், உளப்பட உவந்து நோக்கினன்—திருவுள்ளத்தின் கண்ணே மகிழ்ந்து நோக்கி, பூமுடி துளக்கினன்—பூக்க ளணிந்த தமது திருமுடியை அசைத்தருளினர்; அமரர்கள் துனுக்கம் எய்தினர்—அப்பொழுது தேவர்கள் நடுக்கமுற்றார்கள்.

அசுரர்கள் கயமுகன்மீது மலர்மழை பொழியும்போது, அவனுள்ளே யோகத்தான் மலர்ந்த யோகபங்கயத் தெழுந்தருளியிருந்த சிவபெருமான், அவன் தவத்தை வியந்து, சிரக்கம்பஞ் செய்தருளினர் என்க. இனிக் கயமுகனுனே, தன்னுள்ளே மலர்ந்த பங்கயத்தில் நாயகனை நோக்கி உவந்து முடி துளக்கினன் என்றுமாம். தாமரையாசனரான பிரமா அவன் தவத்தை வியந்து முடி துளக்கினர் என்றுரைப்பாரும் உளர். சகஸ்ரம்—ஆயிரம். தளம்—இதழ். (85)

இன்னண மருந்தவ மியற்று மெல்லையிற்
பொன்னவிர் சடைமுடிப் புனித நாயக
னன்னது நாடியே யவுண ருக்கிறை
முன்னுற வந்தனன் மூரி யேற்றின்மேல்.

இன்னணம் அருந்தவம் இயற்றும் எல்லையில்—இவ்வாறு அரிய தவத்தை இயற்றும்போது, பொன் அவிர் சடை முடி புனித நாயகன்—பொன்போல விளங்குகின்ற சடைமுடியினையுடைய புனிதராகிய சிவபெருமான், அன்னது நாடி—அத் தவத்தினியல்பைத் திருவுளங் கொண்டு, அவுணருக்கு இறை முன் உற—அசுரர்க்கிறைவனுகிய கயமுகனெதிரே, மூரி ஏற்றின் மேல் வந்தனன்—முரிப்பினையுடைய இடபத்தின்மீது எழுந்தருளினர்.

மூரி வலிமையுமாம். (86)

வேறு

வந்து தோன்றலு மற்றது நோக்கியத்
தந்தி மாமுகத் தானவ னேன்பொரீஇச்
சிந்தை யன்பொடு சென்னியிற் கைதொழு
தெந்தை தன்னை யிறைஞ்சிநின் றேத்தினன்.

வந்து தோன்றலும்—சிவபெருமான் எதிரில் வந்து தோன்றுதலும், அது நோக்கி—அதனைக் கண்டு, அ தந்தி மாமுக தானவன் நோன்பு ஒரீஇ—அக் கயமுகாசுரன் தவத்தை விடுத்து, சிந்தை அன்பொடு—மன அன்புடன், சென்னியில் கை தொழுது—சிரமீது கைகுவித்து வணங்கி, எந்தை தன்னை இறைஞ்சி நின்று ஏத்தினன்—எம்பெருமானை விழுந்து வணங்கி எழுந்து நின்று துதித்தான். (87)

போற்று கின்றுழிப் புங்கவ னின்றுகா
ஞற்று நோன்பி லயர்ந்தனை நீயினிப்
பேற்றை வேண்டுவ பேசினை கொள்கெனத்
தேற்ற மிக்கவன் செப்புதன் மேயினன்.

போற்றுகின்றுழி—கயமுகன் துதி செய்யும்போது, புங்கவன்—சிவபெருமான், இன்று காறு ஆற்று நோன்பில் அயர்ந்தனை—இந்நாள்வரை செய்த தவத்தால் இளைப்புற்றனை; இனி நீ வேண்டுவ பேற்றை பேசினை கொள்க என—இனி நீ விரும்புவனவாகிய பேறுகளைக் கேட்டுப் பெற்றுக்கொள்வாயாக என்று கூறியருள, தேற்றம் மிக்கவன் செப்புதல் மேயினன்—அறிவுத் தெளிவு மிக்கோனுன கயமுகன் சொல்லுவானுயினன்.

தேற்றம் குருவி னுபதேசத்தா னெய்திய தேற்றம் என்க. (88)

### வேறு

மாலய னிந்திரன் முதல்வ ரம்பிலோர்
மேலுறு தகையினர் வெய்ய போரிடை
யேலுவ ரென்னினு மெனக்கு வென்னிட
வாலமர் கடவுணீ யருளல் வேண்டுமால்.

மால் அயன் இந்திரன் முதல் வரம்பிலோர் மேல் உறு தகையினர்—திருமால் பிரமா இந்திரன் முதலிய வரம்பில்லாத மேன்மை மிக்க தகுதியினை யுடையவர்கள், வெய்ய போரிடை ஏலுவர் என்னினும்—கொடிய போரில் எதிர்ப்பாராயினும், எனக்கு வென்னிட—அவரெல்லாம் எனக்கு முதுகிடும் வண்ணம், ஆல் அமர் கடவுள் நீ அருளல்வேண்டும்—கல்லாலின்கீழ் அமர்ந்த கடவுளே தேவரீர் அருள்புரிதல் வேண்டும். (89)

எற்றுவ வெறிகுவ வீர்வ வெய்குவ
குற்றுவ முதலிய குழுக்கொள் வான்படை
முற்றுற வரினும்யான் முடிவு ருவகை
யற்றமில் பெருமிட லளித்தல் வேண்டுமால்.

எற்றுவ எறிகுவ ஈர்வ எய்குவ குற்றுவ முதலிய குழு கொள் வான் படை—எற்றுவன எறிவன ஈர்வன எய்வன குற்றுவன முதலிய கூட்டமான உயர்ந்த படைகள், முற்றுற வரினும்—முழுவதும் ஒருங்கு திரண்டு வந்தாலும், யான் முடிவு உறு வகை—அவற்றால் நான் இறவாத வண்ணம், அற்றம் இல் பெரு மிடல் அளித்தல் வேண்டும்—அழிவில்லாத பெருவலியைத் தந்தருளல் வேண்டும். (90)

மிக்கதோ ரமரரால் வியப்பின் மானுட
மக்களா லவுணரான் மற்றை யோர்களாற்
றொக்குறு விலங்கினாற் றுஞ்சி டாவகை
யிக்கணந் தமியனேற் கீதல் வேண்டுமால்.

மிக்கது ஓர் அமரரால்—ஒப்பின்றி மிக்க தேவர்களாலும், வியப்பு இல் மானுட மக்களால்—வியப்பிற்குரிய மகிமையில்லாத மனிதர்களாலும், அவுணரால்—அசுரர்களாலும், மற்றையோர்களால்—ஏனையோர்களாலும், தொக்கு உறு விலங்கினால்—குழுமியிருக்கின்ற விலங்குகளினாலும், துஞ்சிடாவகை—இறவா வரம், இ கணம் தமியனேற்கு ஈதல் வேண்டும்—இப்பொழுதே அடியேனுக்கு அருளுதல் வேண்டும். (91)

என்னிக ராகிவந் தொருவ னென்னொடு
முன்னுற வெஞ்சமர் முயலு மென்னினு
மன்னவன் படையினு மழிவு றுவகை
பொன்னவிர் வேணியாய் புரிதல் வேண்டுமால்.

என் நிகராகி ஒருவன் வந்து—எனக்கு ஒத்தானுய் ஒருவன் வந்து, என்ஞெடு முன்னுற வெம் சமர் முயலும் என்னினும்—என்னேடு எதிராகக் கொடிய போரைச் செய்வானுயினும், அன்னவன் படையினும் அழிவுரு வகை—அவனுடைய படைகளாலும் இறவாவண்ணம், பொன் அவிர் வேணியாய் புரிதல் வேண்டும்—பொன்மயமாய் விளங்குஞ் சடையினையுடைய பெருமானே அருளுதல் வேண்டும். (92)

வரந்தரு கடவுளர் முனிவர் மற்றையோ
ரிருந்திடு முலகெலா மென்ன தாணையிற்
றிரிந்திடு மாழியுங் கோலுஞ் சென்றிடப்
புரிந்திடு மரசியல் புரிதல் வேண்டுமால்.

வரம் தரு கடவுளர்—வரங்கொடுக்குங் கடவுளரான பிரம விஷ்ணுக்களும், முனிவர்—முனிவர்களும், மற்றையோர்—பிறரும், இருந்திடும் உலகு எலாம்—இருக்கின்ற உலகங்களிலெல்லாம், என்னது ஆணையில் திரிந்திடும் ஆழியும் கோலும் சென்றிடப் புரிந்திடும் அரசியல்—எனது ஆஞ்ஞையினுலுலாவுகின்ற சக்கரமுஞ் செங்கோலும் நடக்கும்படி செய்யும் அரசியலை, புரிதல் வேண்டும்—அருளுதல் வேண்டும். (93)

அன்றியு மொன்றுள தடியன் சூழ்ச்சியாற்
பொன்றினும் பிறவியுட் புகாமை வேண்டுமா
லென்றலு நோற்றவர்க் கேது மீபவ
னன்றவை பெறுகென நல்கி யேகினுன்.

அன்றியும்—இவையன்றியும், ஒன்று உளது—வேண்டுவதொன்று உள்ளது; அடியன் சூழ்ச்சியால் பொன்றினும்—அடியேன் சூழ்ச்சியினுலே இறந்தாலும், பிறவியுள் புகாமை வேண்டும்—இனி ஒரு பிறவியுட் புகாமையை அருளுதல் வேண்டும்; என்றலும்—என்றிவ்வாறு வேண்டுதல் செய்ய, நோற்றவர்க்கு ஏதும் ஈபவன்—தவஞ் செய்தார்க்கு அவர் வேண்டுகின்றதெதுவாயினும் ஈந்தருளுபவராகிய சிவபெருமான், அவை நன்று பெறுக என நல்கி ஏகினுன்—நீ கேட்டவற்றையெல்லாம் நன்கு பெறுவாயாக என்று அவனுக்கு அவ்வரங்களைக் கொடுத்துச் சென்றருளினர்.

இறுதிக்கண் இவன் பெற்ற வரவிசேடத்தை நோக்கிப்போலும், 'தேற்ற மிக்கவன் செப்புதன் மேயினுன்' என முன்னம் அவனைச் சிறப்பித்தருளியதென்க. (94)

பெற்றனன் படைகளும் பிறவுந் தன்புறஞ்
சுற்றிடு கிளையெலாந் தொடர்ந்து சூழ்தர
வுற்றனன் காண்டகு மும்ப ருங்குவன்
மற்றெரு கயமுக னென்று மாழ்கினர்.

படைகளும் பிறவும் பெற்றனன்—வரங்களேயன்றி ஆயுதங்களையும் பிற வற்றையும் பெற்று, தன் புறம் சுற்றிடு கிளை எலாம்—தனக்குப் புறத்தே தன்னைச் சுற்றி நிற்றற்குரிய சுற்றத்தினராய அசுரர்களெல்லாம், தொடர்ந்து சூழ்தர உற்றனன்—தொடர்ந்து சூழ்தர நின்முன்; காண் தகும் உம்பர்—இதனைக் காணுந் தேவர்கள், உங்கு உவன்—எதிரில் நிற்கும் உக் கயமுகன், மற்றொரு கயமுகன்—தவஞ்செய்தற்கு முந்திய கயமுகனல்லன், புதிய ஒரு கயமுகன் ஆவன்; என்று மாழ்கினர்—என்று மயக்கங் கொண்டார்கள்.

முன்னையினும் மேம்பாடுற்றன னென்று மாழ்கினர் என்க. (95)

காழுறு பெருந்தரு நாறு காசினி
வீழுறு தூரொடு மெலிந்து நின்றன
வூழுறு பருவம்வந் துற்ற காலையிற்
சூழுறு தொன்னிலை யென்னத் தோன்றினன்.

காழ் உறு பெரும் தரு—வைரம் பொருந்திய பெரிய தருக்கள், நாறு காசினி வீழுறு தூரொடு—மணம்பொருந்திய பூமிக்குட் செல்லுகின்ற வேர்க ளோடு, மெலிந்து நின்றன—வாட்டமுற்று நிற்கின்றவைகள், ஊழ் உறு பருவம் வந்து உற்ற காலையில்—தழைத்தற்குரிய மழைப்பருவம் வந்தெய்திய காலத்தில், சூழ் உறு தொல் நிலை என்ன—தழைத்துக் கிளைத்துச் சூழுகின்ற பழைய நிலையை எய்துவதுபோல, தோன்றினன்—கயமுகன் 'சுற்றிடு கிளை யெலாந் தொடர்ந்து சூழ்தர'ச் செழித்து விளங்கினன்.

தவத்தால் வாடியவன், வரமாகிய அருண்மழை பெற்றுச் செழித் தோங்கின னென்க. பிருதிவிக்குக் குணம் நாற்றமாதலின் நாறு காசினி என்றார். பெருந்தரு, ஆலமரம் என்பாருமுளர். (96)

அற்புத மெய்தின னலைகொள் வாரியிற்
புற்புத மாமெனப் புளகம் பூத்துளான்
சொற்பகர் வரியதோர் மதர்ப்பின் சும்மையான்
சிற்பரன் கருணையிற் றிளைத்தன் மேயினன்.

அற்புதம் எய்தினன்—அற்புதம் அடைந்து, அலை கொள் வாரியில் புற்புதம் ஆம் என புளகம் பூத்துளான்—அலைபொருந்திய சமுத்திரத்தில் எழுங் குமிழிகளைப் போல உடல் புளகங்கொண்டு, சொல் பகர்வு அரியது ஓர் மதர்ப்பின் சும்மையான்—சொற்களாற் சொல்லுதற்கரியதொரு இறுமாப்பில் மிக்கோனாய், சிற்பரன் கருணையில் திளைத்தன் மேயினன்—சிவபெருமானது கருணை வெள்ளத்தில் முழுகித் திளைத்தலைப் பொருந்தினன். (97)

அன்னது தேர்வுறீஇ யவுணர் தொல்குல
மன்னனும் வெள்ளியு மதங்க மாமுகன்
றன்னைவந் தெய்தியே சயமுண் டாகெனப்
பன்னரு மாசிகள் பகர்ந்து மேயினர்.

அன்னது தேர்வுறீஇ—அதனை அறிந்து, அவுணர் தொல்குல மன்னனும்—பழைய அசுரர்குலத்தரசனாகிய அசுரேந்திரனும், வெள்ளியும்—சுக்கிராசாரியரும், மதங்க மாமுகன் தன்னை வந்து எய்தி—பெருமை பொருந்திய கயமுகாசுரனை வந்தடைந்து, சயம் உண்டாக என—வெற்றி உண்டாகுக என்று, பன்னரும் ஆசிகள் பகர்ந்து மேயினார்—சொல்லுதற்கரிய ஆசிகள் பலவற்றைக் கூறி ஆங்கிருந்தார்கள். (98)

தண்ணளி யில்லதோர் தந்தி மாமுக
னண்ணலங் கடகளிற் றமரர் கோனையும்
விண்ணவர் பிறரையும் வென்று மீண்டுபின்
மண்ணுல கதனிடை வல்லை யெய்தினான்.

தண்ணளி இல்லது ஓர் தந்தி மாமுகன்—தண்ணளியற்ற ஒப்பில்லாத கயமுகாசுரன், அண்ணல் அம் கடகளிற்று அமரர் கோனையும்—பெருமையிற் சிறந்த அழகிய மதம்பொருந்திய ஐராவத யானையையுடைய தெய்வேந்திரனையும், விண்ணவர் பிறரையும்—மற்றைத் தேவர்களையும், வென்று மீண்டு பின்—வெற்றிகொண்டு மீண்டு பின்பு, மண் உலகு அதனிடை வல்லை எய்தினான்—பூவுலகத்தின்கண் விரைந்து வந்தான். (99)

வேறு

புவனி தன்னிடைப் போந்துபின்
னவுணர் கம்மிய வறிஞனை
நுவலு மன்பொடு நோக்குறு
வுவகை யாலிவை யுரைசெய்வான்.

புவனி தன்னிடை போந்து—பூவுலகத்துக்கு வந்து, பின்—பின்பு, அவுணர் கம்மிய அறிஞனை—அசுரத் தச்சனாகிய சிற்பநூல் வல்லோனை, நுவலும் அன்பொடு நோக்குறு—சொல்லத்தகும் அன்போடு பார்த்து, உவகையால் இவை உரைசெய்வான்—மகிழ்ச்சியுடன் இவற்றைச் சொல்லுவான். (100)

நாவ லந்தரு நண்ணுமித்
தீவின் மேதகு தென்றிசைப்
பூவி லோர்நகர் புரிதியான்
மேவ வென்று விளம்பவே.

நாவல் அம் தரு நண்ணும் இ தீவில்—அழகிய நாவல்மரம் பொருந்திய இந்த நாவலந்தீவிலே, மேதகு தென்திசை பூவில்—மேன்மை பொருந்திய தென்பாகத்திலே உள்ள பூமியில், யான் மேவ ஓர் நகர் புரிதி என்று விளம்ப—யான் இருந்து அரசு புரிதற்கு ஒரு நகரத்தை உண்டாக்குவாயாக என்று கூற.

பதினான்கு உலகங்களிற் பூலோகம் ஒன்று. அது ஏழு தீவுகளைக் கொண்டது. ஏழு தீவுகளுள் ஒன்று நாவலந்தீவு. இத்தீவு ஒன்பது வருஷங்கள் கொண்டது. ஒன்பதில் ஒரு வருஷம் பாரத வருஷம். இது பூமி எனப்படும். (101)

பூவின் மேல்வரு புங்கவத்
தேவு நாணுறு செய்கையிற்
காவன் மாநகர் கண்டதிற்
கோவி லொன்று குயிற்றினான்.

பூவின் மேல் வரு புங்கவத் தேவும் நாணுறு செய்கையின்—தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவரும் நாணங் கொள்ளுந் தொழிற்பாட்டினையுடைய, காவல் மா நகர் கண்டு—காவலினையுடைய பெருமைபொருந்தியதொரு நகரத்தை உண்டாக்கி, அதில் கோவில் ஒன்று குயிற்றினான்—அந்நகரத்தில் ஒரு இராசமாளிகையை அமைத்தான். (102)

வேறு

வெங்கண் மேதகு வேழ முகத்தனைத்
தங்க டொல்பகை தாங்குவ தாமெனச்
சிங்க மாற்றுந் திருமணிப் பீடமொன்
றங்க வன்வைக வாற்றின னவ்விடை.

வெம் கண் மேதகு வேழ முகத்தனை—தறுகண்மையில் மிக்க கயமுகாசுரனை, தங்கள் தொல் பகை தாங்குவது ஆம் என—யானைகளாகிய தங்களுக்குப் பழைய பகையாயுள்ளவைகள் வந்து சுமப்பதை ஒக்கும் என்று சொல்லும்படி, சிங்கம் ஆற்றும் திரு மணிபீடம் ஒன்று—சிங்கங்கள் சுமக்கின்ற அழகிய இரத்தினாசன மொன்றை, அங்கு அவன் வைக அவ்விடை ஆற்றினன்—அக் கயமுகன் அரசுவீற்றிருக்கும் பொருட்டு அம்மாளிகையில் அமைத்தான்,

தங்கள் என்பது முக ஒற்றுமையாற் கயமுகனையும் அகப்படுத்து நின்றது. (103)

இனைத்தி யாவு மிமைப்பினிற் கம்மிய
னினைப்பி னிற்செய் நிலைமையை நோக்கியே
சினத்தி னீங்கிய செய்தவத் தேசிகன்
மனத்தி னூடு மகிழ்ச்சியின் மேயினான்.

இனைத்து யாவும்—இவ்வனைத்தையும், இமைப்பினில் கம்மியன் நினைப்பினில் செய் நிலைமையை நோக்கி—இமைப்பொழுதில் அசுரத் தச்சன் தனது

நினைவினால் உண்டாக்கிய நிலைமையைக் கண்டு, சினத்தின் நீங்கிய செய் தவத் தேசிகன்—சினம் ஆறிய செய்தவத்தினையுடைய சுக்கிராசாரியர், மனத்தின் ஊடு மகிழ்ச்சியின் மேயினான்—மனத்தின்கண் மகிழ்ச்சியடைந்தார். (104)

காமர் தங்கிய காப்பிய னந்நகர்
தூம தங்கெழு தோன்முகற் காதலான்
மாம தங்க புரமென மற்றொரு
நாம மங்கதற் கெய்திட நாட்டினான்.

காமர் தங்கிய காப்பியன்—அழகு பொருந்திய சுக்கிரபகவான், அ நகர்—அந்த நகரம், தூம் மதம் கெழு தோல் முகற்கு ஆதலால்—ஒழுகுகின்ற மதத்தினையுடைய யானையின் முகத்தினனான கயமுகன்பொருட்டு உண்டாக்கப் பட்டதனால், அங்கு அதற்கு மதங்க மா புரம் என ஒரு நாமம் எய்திட நாட்டினான்—அந் நகரத்துக்கு மதங்கமாபுரம் என்று ஒரு பெயரைப் பொருத்தமுற இட்டார். (105)

அந்த மாநக ரைதெனக் கம்மியன்
சிந்தை நாடினன் செய்திடு காலையிற்
றந்தி மாமுகத் தானவன் கண்ணுறீஇ
யந்த மில்லதொ ரார்வமொ டேகினான்.

அந்த மா நகர் ஐதெனக் கம்மியன் சிந்தை நாடினன் செய்திடு காலையில்—அந்த மதங்கமாபுரத்தை விரைவாக அசுரத் தச்சன் மனத்தினால் நினைத்து உண்டாக்கியபோது, தந்தி மாமுகத் தானவன் கண்ணுறீஇ—கயமுகாசுரன் அதனைக் கண்ணுற்று, அந்தம் இல்லது ஓர் ஆர்வமொடு ஏகினான்—அளவற்ற பேரார்வத்தோடு அதன்கட் பிரவேசித்தான். (106)

ஐதென, அழகிதாக எனினுமாம்.

காத மங்கொரு பத்தெனக் கற்றவ
ரோது கின்ற வொழுக்கமு மொன்றெனும்
பாதி யெல்லைப் பரப்பும் பெறுநகர்
வீதி நோக்கினன் விம்மித மெய்தினான்.

கற்றவர்—நூல்வல்லார், காதம் அங்கு ஒரு பத்து ஒன்று என ஓதுகின்ற ஒழுக்கமும்—பத்துக் காதம் ஒரு பக்கம் என்று சொல்லுகின்ற நீளமும், பாதி எல்லை எனும் பரப்பும்—பாதியளவாகிய ஐந்து காதம் என்று சொல்லுகின்ற அகலமும், பெறு நகர் வீதி நோக்கினன்—பெற்ற அந்நகர வீதிகளை நோக்கி, விம்மிதம் எய்தினான்—ஆச்சரியம் அடைந்தான்.

பெறு வீதி என்க. பெறும் வீதியுமாம். (107)

அரக்கர் தொல்லை யவுணர்க் கரசொடு
தருக்கு தானவர் தம்முட னெய்தியே
பெருக்க முற்றதன் பின்னவ ரின்னவ
ரிருக்க நல்கின னிந்நகர் யாவையும்.

அரக்கர் தொல்லை அவுணர்க்கு அரசொடு—அரக்கர்களுக்கும் பழைய அசுரர்களுக்கும் அரசனுன அசுரேந்திரனேடும், தருக்கு தானவர் தம்முடன்—தருக்குகின்ற அசுரர்களோடும், எய்தி—அந்நகரத்துட் சென்று, பெருக்கம் உற்ற தன் பின்னவர் இன்னவர்—மயிர்த்துவாரந்தோறுந் தோன்றிப் பெருக்கங் கொண்ட தன் தம்பிமார்களாகிய இவர்கள், இருக்க இ நகர் யாவையும் நல்கினன்—இருக்குமாறு இந்த மதங்கமாபுரம் அனைத்தையுங் கொடுத்தான். (108)

அங்கண் மேவு மணிமணிக் கோயிலின்
மங்க லத்தொடு வல்லையி னேகியே
சிங்க வேற்றின் சிரங்கெழு பீடமேல்
வெங்கை மாமுகன் வீற்றிருந் தானரோ.

அங்கண் மேவும் அணி மணி கோயிலில்—அந்நகரத்தின்கண் விளங்கும் அழகிய மணிகளாலாய அரமனையில், மங்கலத்தொடு வல்லையின் ஏகி—மங்கலங்களுடன் விரைவிற் பிரவேசித்து, சிங்க ஏற்றின் சிரம் கெழு பீடமேல்—ஆண் சிங்கங்களின் சிரத்தின்மீது விளங்குகின்ற ஆசனத்தின்மீது, வெம் கை மா முகன் வீற்றிருந்தான்—கயமுகாசுரன் அரசுவீற்றிருந்தான்.

வெங்கைம்மா—யானை. வெம்மை—கொடுமை. (109)

போந்து பின்னர்ப் பொருவருந் தானவர்
வேந்தன் மாமக ளான விசித்திர
காந்தி தன்னைக் கருதுநன் னாளினி
லேந்தன் முன்வரைந் தின்புற மேவினான்.

பின்னர்—பின்பு, பொருவரும் தானவர் வேந்தன் மாமகளான விசித்திர காந்தி தன்னை—ஒப்பற்ற அசுரேந்திரனின் பெருமை பொருந்திய மகளாகிய விசித்திரகாந்தி என்பவளை, கருது நல் நாளினில்—எண்ணப்படுகின்ற நல்ல நாளில், ஏந்தல் போந்து முன் வரைந்து—கயமுகன் சென்று முதற்கண் மணம் புரிந்து, இன்புற மேவினன்—இன்பம் மிக அவளுடன் மேவி வாழ்ந்தான். (110)

விண்ணின் மாதர்கண் மேதகு தன்குல
நண்ணு மாதர்க ளுகர்தம் மாதர்கள்
வண்ண விஞ்சையர் மாதர்க ளாதியா
மெண்ணின் மாதரைப் பின்வரைந் தெய்தினான்.

விண்ணின் மாதர்கள்—தேவப் பெண்கள், மேதகு தன் குலம் நண்ணு மாதர்கள்—மேன்மை பொருந்திய தனது அசுரகுலப் பெண்கள், நாகர்தம் மாதர்கள்—நாக கன்னியர்கள், வண்ண விஞ்சையர் மாதர்கள்—அழகிய வித்தியாதர மகளிர்கள், ஆதியாம் எண்ணில் மாதரைப் பின் வரைந்து எய்தினன்—முதலிய எண்ணற்ற பெண்களைப் பின்னர் மணஞ்செய்துகொண்டான். (111)

பொன்ன கர்க்கும் பொலங்கெழு புட்பக
மன்ன கர்க்குமவ் வானவ ரீண்டிய
வெந்ந கர்க்குமி லாவள மெய்திய
வந்ந கர்க்க ணமர்ந்திடன் மேயினன்.

பொன் நகர்க்கும்—சுவர்க்க நகரத்துக்கும், பொலம் கெழு புட்பக மன் நகர்க்கும்—அழகு விளங்குகின்ற புட்பக விமானத்தையுடைய குபேரனது நகரத்துக்கும், அ வானவர் ஈண்டிய எ நகர்க்கும்—அந்தத் தேவர்கள் இருக்கின்ற மற்றெந்த நகரத்துக்கும், இலா வளம் எய்திய—இல்லாத வளங்களைத் தன்னிடத்துக் கொண்ட, அ நகர்க்கண் அமர்ந்திடல் மேயினன்—அந்த மதங்க மாபுரத்தின்கண் இருப்பானாயினன்.

அவ் வானவர் என்பதில், 'அ' உலகறிசுட்டு. (112)

சூழும் வானவர் தானவர் துன்னியே
தாழ வேழுல குந்தன தாணையால்
வாழி சேர்கொடுங் கோலொடு மன்னுபே
ராழி செல்ல வரசுசெய் தானவன்.

சூழும் வானவர் தானவர் துன்னி தாழ—தன்னைச் சூழுகின்ற தேவர்களும் அசுரர்களும் நெருங்கி வணங்க, ஏழுலகும்—ஏழுலகத்திலும், தனது ஆணையால் சேர் கொடுங் கோலொடு—தனது கட்டளையால் நடக்கின்ற கொடுங்கோலோடு, மன்னு பேர் ஆழி செல்ல—நிலைபெற்ற பெரிய ஆஞ்ஞா சக்கரமும் நடக்கும்படி, அவன் அரசு செய்தான்—அக் கயமுகன் அரசு புரிந்தான்.

வாழி அசை; நிலைபேறுமாம். கொடுமையை ஆழிக்குங் கொள்க. (113)

ஆவுஞ் சங்கமு மம்புய மும்மலர்க்
காவு மாமணி யுங்கம லாலயத்
தேவும் பின்வருந் தேவரு மாதரு
மேவல் செய்ய வினிதிருந் தானரோ.

ஆவும்—காமதேனுவும், சங்கமும் அம்புயமும்—சங்க நிதியும் பதும நிதியும், மலர் காவும்—மலர்களையுடைய கற்பகச் சோலையும், மாமணியும்—பெருமை

பொருந்திய சிந்தாமணியும், கமலாலய தேவும்—தாமரைக் கோயிலி லிருக்கும் பிரமதேவரும், பின்வரும் தேவரும்—அவரைத் தொடருந் தேவர் களும், மாதரும்—தேவப் பெண்களும், ஏவல் செய்ய இனிது இருந்தான்— ஏவல் செய்ய மகிழ்ந்திருந்தான். (114)

புந்தி மிக்க புகரும் புகருட
னந்த மற்ற வவுணர்கண் மன்னனுந்
தந்தி யின்முகத் தானவ னுக்குநன்
மந்தி ரத்துணை யாயவண் வைகினர்.

புந்தி மிக்க புகரும்—புந்தியிற் சிறந்த சுக்கிராசாரியரும், புகருடன் அந்தம் அற்ற அவுணர்கள் மன்னனும்—சுக்கிராசாரியருடனே முடிவில்லாத அவுணர் களின் மன்னனான அசுரேந்திரனும், தந்தி முக தானவனுக்கு—கயமுகா சுரனுக்கு, நல் மந்திர துணையாய் அவண் வைகினர்—நல்ல மந்திரிமாராய் அங்கேயிருந்தார்கள். (115)

அன்ன காலை யடுகரி மாமுக
மன்னன் முன்வரும் வாசவ னாதியாந்
துன்னு வானவர் சூழலை நோக்கியே
யின்ன தொன்றை யியம்புதன் மேயினன்.

அன்ன காலை—அவ்வாறு அரசு புரியுங் காலத்திலே, அடு கரி மாமுக மன்னன்—அடுகின்ற யானை முகத்தினையுடைய கயமுகனாகிய அரசன், முன் வரும்—தன்னெதிரே வருகின்ற, வாசவன் ஆதியாம் துன்னு வானவர் சூழலை நோக்கி—இந்திரன் முதலிய செறிந்த தேவர்கூட்டத்தைப் பார்த்து, இன்னது ஒன்றை இயம்புதல் மேயினன்—இஃதொன்றைச் சொல்லுவானாயினன். (116)

வைக லும்மிவண் வந்துழி நுங்கடம்
மொய்கொள் சென்னியின் மும்முறை தாக்கியே
கைகள் காதுறக் கால்கொடு தாழ்ந்தெழீஇச்
செய்க நம்பணி தேவர்க ணீரென்றான்.

தேவர்கள் நீர் வைகலும் இவண் வந்துழி—தேவர்களே நீவிர் நாடோ றும் இவ்விடமாகிய என் முன்னிலையில் வந்தவுடன், நுங்கள் தம் மொய் கொள் சென்னியில் மும்முறை தாக்கி—உங்களுடைய வன்மை பொருந்திய தலையில் மூன்று முறை குட்டி, கைகள் காது உற—கைகள் காதுகளை மாறிப் பற்றிக்கொள்ள, கால்கொடு தாழ்ந்து—கால்களை மடக்கித் தாழ்ந்து, எழீஇ—

பின் அவ்வாறே மேலெழுந்து, நம் பணி செய்க என்ருன்—அதன்மேல் நம தேவல்களைச் செய்யக்கடவீர்கள் என்று கட்டளையிட்டான். (117)

அன்ன தோதலு மண்டர்கள் யாவரு
மன்னன் ருனு மறுப்பதை யஞ்சியே
முன்ன ரேநின்று மொய்ம்புடைத் தோன்முகன்
சொன்ன தோர்புன் ருெழின்முறை யாற்றினுர்.

அன்னது ஓதலும்—அதனை அவன் சொல்லுதலும், அண்டர்கள் யாவரும் மன்னன் தானும் மறுப்பது அஞ்சி—தேவர்கள் யாவரும் தேவேந்திரனும் அக்கட்டளையை மறுப்பதற்குப் பயந்து, முன்னரே நின்று—அவனெதிரே நின்று, மொய்ம்பு உடை தோல் முகன் சொன்னது ஓர் புன் தொழில் முறை ஆற்றினுர்—வலி படைத்த கயமுகன் இட்ட அவ்விழிதொழிலைச் சொன்ன முறைப்படி செய்துவந்தார்கள். (118)

எழிலி யூர்தியு மேனைய வானவர்
குழுவி னேர்களுங் குஞ்சர மாமுகத்
தழித கன்பணி யல்கலு மாற்றியே
பழியெ னும்பர வைப்படிந் தாரரோ.

எழிலி ஊர்தியும்—மேகவாகனனுன இந்திரனும், ஏனைய வானவர் குழுவினேர்களும்—மற்றைத் தேவ கூட்டத்தாரும், குஞ்சர மாமுகத்து அழிதகன் பணி அல்கலும் ஆற்றி—யானை முகத்தினையுடைய அழிக்கத் தக்கவனுகிய கயமுகனின் ஏவல்களை நாடோறுஞ் செய்து, பழி எனும் பரவை படிந்தார்—பழியென்ற சமுத்திரத்தில் முழுகினுர்கள். (119)

கரிமு கத்துக் கயவன தேவலாற்
பருவ ரற்பழி மூழ்குறு பான்மையைச்
சுரர்க ளுக்கிறை தொல்லை விரிஞ்சன்மா
லிருவ ருக்கு மியம்பி யிரங்கினுன்.

கரி முகத்து கயவனது ஏவலால்—யானை முகத்தினையுடைய கீழ்மகனது கட்டளையால், பருவரல் பழி மூழ்குறு பான்மையை—துன்பத்தைத் தருகின்ற பழியில் முழுகுகிற தன்மையை, சுரர்களுக்கு இறை—தேவேந்திரன், தொல்லை விரிஞ்சன் மால் இருவருக்கும் இயம்பி இரங்கினுன்—பழைய பிரமதேவர் திருமால் ஆகிய இருவரிடத்தும் முறையிட்டுப் புலம்பினுன். (120)

இரங்கு மெல்லையி லிந்திர முற்றுளந்
தரங்க மெய்தித் தளர்ந்திட னீயெனு
வுரங்கொள் பான்மை யுணர்த்தி யவனெடும்
புரங்க ளட்டவன் பொற்றையிற் போயினுர்.

இரங்கும் எல்லேயில்—புலம்பும்போது, இந்திர—இந்திரனே, முற்று உளம் தரங்கம் எய்தி நீ தளர்ந்திடல்—உள்ளமாகிய சமுத்திரம் முழுவதுந் துன்பத் திரைகள் எழுந்து நீ வருந்தற்க; என உரங்கொள் பான்மை உணர்த்தி—என்று அவன் திண்மையுறும் வகையிலே தேற்றி, அவனெடும்—அவ்விந்திர னேடும், புரங்கள் அட்டவன் பொற்றையில் போயினுர்—முப்புரங்களே அட்டவ ராகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்குங் கைலாசமலேக்கட் சென்றுர்கள். (121)

மாகர் யாவரும் வாசவ னும்புடை
யாக வந்திட வம்புயன் மாலுமை
பாகன் மேய பனிவரைக் கோயிலு
ளேகி னுர்நந்தி யெந்தை விடுப்பவே.

அம்புயன் மால்—பிரமதேவருந் திருமாலும், மாகர் யாவரும் வாசவனும் புடையாக வந்திட—தேவர்களனேவரும் இந்திரனும் புடைக்கண் வாராநிற்ப, உமை பாகன் மேய பனிவரை கோயிலுள்—உமைபாகரான சிவபெருமான் எழுந்தருளிய குளிர்ச்சிபொருந்திய திருக்கைலாசத்திலேயுள்ள செம்பொற் றிருக்கோயிலினுள்ளே, எந்தை நந்தி விடுப்ப ஏகினுர்—எம்முடைய தந்தை யாகிய திருநந்திதேவர் அநுமதிகொடுப்பச் சென்றுர்கள். (122)

கண்டு நாதன் கழலிணே தாழ்ந்துநற்
ருெண்டு காணத் துதித்தலு மாங்கவ
னண்ட ரோடு மலமர லெய்தியே
வண்டு ழாய்முடி வந்ததென் னென்னவே.

கண்டு—சிவபெருமானேத் தரிசித்து, நாதன் கழலிணே தாழ்ந்து—சிவ பெருமானுடைய இரண்டு திருவடிகளேயும் வணங்கி, நல் தொண்டு காணத் துதித்தலும்—தமது நல்ல அடித்தொண்டு புலப்படுமாறு துதித்தபோது, ஆங்கு அவன்—ஆங்கெழுந்தருளிய சிவபெருமான், வண் துழாய் முடி—வளவிய துளவமணிந்த முடியையுடைய திருமாலே, அண்டரோடும் அலமரல் எய்தி வந்தது என் என்ன—தேவர்களோடுந் துயருற்று வந்தது என்னே என்று வினுவியருள. (123)

## வேறு

ஆனதோர் பொழுதின்மா லரனே நோக்கியோர்
தானவன் கயமுக னென்னுந் தன்மையான்
வானவர் தமையெலாம் வருத்தி னுனவ
னூனமி றவம்புரிந் துடைய வன்மையால்.

ஆனதோர் பொழுதில்—அப்பொழுது, மால் அரனே நோக்கி—திருமால் சிவபெருமானே நோக்கி, ஓர் தானவன்—ஓர் அசுரன், கயமுகன் என்னும்

தன்மையான்—கயமுகன் என்னுந் தன் இயல்பைக் குறிக்கும் பெயரையுடையவன், அவன்—அவ்வசுரன், ஊனம் இல் தவம் புரிந்து உடைய வன்மையால்—குற்றமில்லாத தவத்தைச் செய்து பெற்றுக்கொண்ட வலிமையினுல், வானவர் தமை எலாம் வருத்தினுன்—தேவர்களையெல்லாந் துன்புறுத்தினுன். (124)

வெங்கய முகத்தினன் விறலை நீக்குத
லெங்களுக் கரியதா லெவர்க்கு மாதியாம்
புங்கவ நினக்கது பொருளன் ருகையா
லங்கவ னுயிர்தொலைத் தருள வேண்டுநீ.

வெம் கயமுகத்தினன் விறலை நீக்குதல் எங்களுக்கு அரியது—கொடிய கயமுகாசுரனது வலியை ஒழித்தல் எங்களுக்கு அரிது; எவர்க்கும் ஆதி ஆம் புங்கவ—யாவருக்கும் ஆதியாகும் மேலோரே, நினக்கு அது பொருளன்று—வரம்பிலாற்றலுடைய தேவரீருக்கு அவ்வாறு செய்தல் ஒரு பொருளன்று; ஆகையால் அங்கவன் உயிர் தொலைத்து நீ அருளவேண்டும்—ஆகையினுலே அவனுடைய உயிரை ஒழித்துத் தேவரீர் அருள் புரிதல்வேண்டும். (125)

என்றுரை செய்தலு மீசன் யாமிவ
ணென்ருெரு புதல்வனை யுதவித் தோன்முக
வன்றிற லவுணனை மாய்த்து மற்றவன்
வென்றிகொண் டேகுவான் விடுத்து மேலென்ருன்.

என்று உரை செய்தலும்—என்று திருமால் விண்ணப்பஞ் செய்தலும், ஈசன்—சிவபெருமான், யாம் இவண் ஒன்று ஒரு புதல்வனை உதவி—யாம் இவ்விடத்தில் எம்மோடொன்றி எமக்கபின்னமாய ஒரு புதல்வனைப் பெற்று, அவன்—அப்புதல்வன், தோல்முக வல் திறல் அவுணனை மாய்த்து—கயமுகன் என்னும் வலிய திறலினையுடைய அசுரனை அழித்து, வென்றி கொண்டு ஏகுவான்—வெற்றி கொண்டு வரும்படி, மேல் விடுத்தும் என்ருன்—இனி அனுப்புவோம் என்று அருளிச்செய்தார்.

யாம் என்றருளியது சத்தியையும் உளப்படுத்தென்று கூறினும் அமையும். (126)

வீடிய பற்றுடை விரதர்க் கென்னினு
நாடிய வரியவ னவின்ற வாய்மையைச்
சூடினர் சென்னிமேற் ருெழுத கையரா
யாடினர் பாடின ரமரர் யாருமே.

வீடிய பற்றுடை விரதர்க்கு என்னினும்—பற்றற்ற தவ விரதர்களுக் காயினும், நாடிய அரியவன்—நாடுதற்கரியவரான சிவபெருமான், நவின்ற வாய்மையை—அருளிச்செய்த சத்திய வசனத்தை, சென்னிமேல் சூடினர்—சிரமேற் கொண்டவராய், தொழுத கையராய்—கூப்பி வணங்கிய கையின ராய், அமரர் யாரும் பாடினர் ஆடினர்—தேவர்களெல்லாம் பாடி ஆடி னார்கள். (127)

பாங்கரி லனையரைப் பரிந்து நோக்கியே
யீங்கினி நும்பதிக் கேகு வீரென
வாங்கவ ரெம்பிரா னடியில் வீழ்ந்தனர்
வீங்குறு காதலால் விடைகொண் டேகினர்.

பாங்கரில் அனையரை பரிந்து நோக்கி—பக்கத்தே நின்ற அவர்களை அன்போடு நோக்கி, இனி ஈங்கு நும்பதிக்கு ஏகுவீர் என—இனி இவ்விடத்தி னின்றும் உங்கள் நகரங்களுக்குச் செல்லுவீர்களாக என்று அருளிச்செய்ய, ஆங்கு அவர் எம்பிரான் அடியில் வீங்குறு காதலால் வீழ்ந்தனர்—அப்பொழுது அவர்கள் எம்பெருமானுடைய திருவடியில் மிகுந்த விருப்பத்தோடு விழுந்து வணங்கி, விடைகொண்டு ஏகினர்—விடைபெற்றுக்கொண்டு சென்றார்கள். (128)

ஏகிய வெல்லையி லெண்ணி லாவிதி
சேகர மிலைச்சிய சென்னி வானவன்
பாகமுற் றுலகெலாம் பயந்த சுந்தரத்
தோகையை நோக்கியே யிதனைச் சொல்லுவான்.

ஏகிய எல்லையில்—திருமால் முதலிய தேவர்கள் சென்றபின்பு, எண்ணிலா விதி சேகரம் மிலைச்சிய சென்னி வானவன்—அளவில்லாத பிரமாக்களின் சிரமாலைகளை முடியிற் சூடிய சிவபெருமான், பாகம் உற்று உலகெலாம் பயந்த சுந்தரத் தோகையை நோக்கி—தமது இடப்பாகத்திற் பொருந்தி உலகம் முழுவதையும் பெற்ற உலகமாதாவாகிய அழகிய உமாதேவியாரை நோக்கி, இதனைச் சொல்லுவான்—இதனை அருளிச் செய்வார். (129)

யாம்பெரு விருப்புட னியற்று வித்திடுந்
தேம்படு தருவனந் தெரித்துஞ் செல்கென
வாம்பரி சருளினை வருவ னுங்கெனக்
காம்படு தோளுடைக் கவுரி கூறினள்.

யாம் பெரு விருப்புடன் இயற்றுவித்திடும்—யாம் மிக்க விருப்பத்துடன் செய்வித்த, தேம் படு தருவனம் தெரித்தும் செல்க என—தேன் பொருந்திய

தருக்களையுடைய நந்தனவனத்தைப் பார்ப்போம் வருவாயாக என்று கூறியருள, ஆங்கு வருவன்—அந்த நந்தனவனத்துக்கு வருவேன்; ஆம் பரிசு அருளினை எனு—தகுதியாகும் பரிசினையே அருளிச்செய்தீர் என்று, காம்பு அடு தோள் உடை கவுரி கூறினுள்—மூங்கிலைப் பழிக்குந் தோளினையுடைய உமாதேவியார் கூறினர். (130)

ஆயது கேட்டன னகிலம் யாவையுந்
தாயென வருளுமத் தைய றன்னெடுஞ்
சேயுயர் விசும்பினைச் செறிதண் சோலையிற்
போயினன் மறைக்கெலாம் பொருள தாயினன்.

மறைக்கு எலாம் பொருளது ஆயினன்—வேதப் பொருளாய சிவபெருமான், ஆயது கேட்டனன்—அதனைக் கேட்டருளி, அகிலம் யாவையும் தாய் என அருளும் அ தையல் தன்னெடும்—உலகம் யாவையுந் தாயாய் அருளுகின்ற அந்த உலக மாதாவோடும், சேய் உயர் விசும்பின செறி தண் சோலையில் போயினன்—மிக உயர்ந்த வானத்தை அளாவிய தண்ணிய திருநந்தனவனத்தின்கட் சென்றருளினர். (131)

நீணுதற் கனல்விழி நிமலத் தேவெனுந்
தாணுவைப் போலவே தனது பாதமுஞ்
சேணுடைச் சென்னியுந் தேவர் யாரினுங்
காணுதற் கரியதக் கடிகொள் சோலையே.

அ கடிகொள் சோலை—வாசனை பொருந்திய அந்தச் சோலையானது, நுதல் நீள் கனல் விழி நிமலத் தேவு எனும் தாணுவைப் போல—நெற்றிக்கண் நீண்டு விளங்கும் அக்கினிக் கண்ணையுடைய நிருமலக் கடவுள் என்று சொல்லப்படுந் தாணுவாகிய சிவபெருமானைப்போல, தனது பாதமும்—தனது அடியும், சேண் உடைச் சென்னியும்—ஆகாயத்தை அளாவிய முடியும், தேவர் யாரினும் காணுதற்கு அரியது—தேவர்கள் யாவரானுங் காணுதற்கு அருமையானது.

சோலை பாதமுஞ் சென்னியுங் காணுதற் கரியது; அதனுலே தாணுவைப் போன்றது. அடிமுடி காண்டற்கரிய ஸ்தம்ப வடிவம் தாணு என்பதனுற் குறிக்கப்பட்டது. (132)

தேசுடைத் தருநிரை திருமென் போதொடு
பாசடைத் தொகுதியும் பரித்து நிற்பன
வீசனுக் கருச்சனை யியல்பி னுற்றிட
நேசமுற் றுடையவர் நிலைய தொக்குமால்.

தேசு உடை தரு நிரை—ஒளி பொருந்திய மர வரிசைகள், திரு மென் போதொடு—அழகிய மிருதுவான புஷ்பங்களோடு, பாசு அடை தொகுதியும்—பசிய இலைத் தொகுதிகளையும், பரித்து நிற்பன—சுமந்து நிற்பவைகள் அவ்வாறு நிற்றல், ஈசனுக்கு இயல்பின் அருச்சனை ஆற்றிட—சிவபெருமானுக்கு ஏற்ற முறையில் அருச்சனை செய்யும்படி, நேசம் முற்றுடையவர் நிலையது ஒக்கும்—அன்புமிக்கு நிற்பாரின் நிலையை நிகர்க்கும். (133)

பாலுற வருவதோர் பரைதன் மெய்யொளி
மேலுறு பைங்கொடி வேத நாயக
னேலுறு தாருக வனத்தி லெய்தமுன்
மாலுறு மங்கையர் வடிவம் போலுமால்.

பால் உற வருவது ஓர் பரைதன் மெய் ஒளி—பக்கத்தே ஒருமையுற வருகின்ற உமாதேவியாரின் திருமேனியினொளி, மேல் உறு பைங்கொடி—தம்மீது படியப்பெற்ற பசிய கொடிகள், வேதநாயகன் ஏல் உறு தாருக வனத்தில் எய்த—வேதநாயகரான சிவபெருமான் பிக்ஷாடனராய் மன எழுச்சி மிக்க தாருக வனத்தின்கட் செல்ல, முன்—அவர் முன்னிலையில், மால் உறு மங்கையர் வடிவம் போலும்—அவர்பால் மோகம் மிக்க முனிவர் பத்தினிகளின் பொன்வண்ணமாய பசலை பூத்த வடிவங்களை ஒக்கும்.

பரை பாலுற வருதலின், மெய்யொளி செம்மைகலந்ததாயிருக்குமென்க. எழுச்சி, தாருக வனத்து முனிவர்களின் ஆத்மவேக முனைப்பு. (134)

கொடிகளுந் தருக்களின் குழுவு மாதுட
னடிகளங் கேகலு மனையர் செம்மையுஞ்
சுடர்கெழு பசுமையுந் துவன்றி யன்னதோர்
வடிவுகொண் டிருந்திடும் வண்ணம் போலுமால்

கொடிகளும் தருக்களின் குழுவும்—கொடிகளும் கொடிகள் படர்ந்த தருக்களின் கூட்டமும், மாதுடன் அடிகள் அங்கு ஏகலும்—உமாதேவியாருடன் சிவபெருமான் அவ்வனத்துக்கு எழுந்தருளுதலும், அனையர் செம்மையும் சுடர் கெழு பசுமையும் துவன்றி—அவ்விருவரின் செம்மை நிறமும் ஒளி விடுகின்ற பசுமை நிறமுந் தம்மேற் செறியப்பெற்று, அன்னது ஓர் வடிவு கொண்டு—அத்தகையதாகிய இருநிறமுங் கலந்ததொரு வடிவத்தை எடுத்து, இருந்திடும் வண்ணம் போலும்—அவ்வனத்தில் இருக்குந் தன்மையை ஒக்கும்.

கொடிகளுந் தருக்களும் இருநிறமுந் துவன்றப் பெற்றிருக்கும் வண்ணம், இருந்திடும் வண்ணம் போலும் என்க. (135)

பூந்தரு நிரைகளிற் பொருவில் கோட்டிடைச்
சேந்திடு நனைபல திகழ்வ பார்ப்பதி
காந்தனை யன்பொடு கண்டு பாங்குளா
ரேந்திய தீபிகை யென்ன லானவே.

பூ தரு நிரைகளில் பொருவில் கோட்டிடை—பூக்கள் பொருந்திய தருக்களின் நிரைகளில் ஒப்பில்லாத கொம்பர்களில், சேந்திடு நனை பல திகழ்வ—செந்நிறம் பொருந்திய பலவாகிய அரும்புகள் பிரகாசிப்பன, பார்ப்பதி காந்தனை அன்பொடு கண்டு—உமாதேவியாருடைய நாயகரான சிவபெருமானை அன்பொடு தரிசித்து, பாங்குளார் ஏந்திய தீபிகை என்னல் ஆன—உரிமைத் தொண்டர்கள் தமது கரங்களில் ஏந்திய தீபச் சுடர்கள் பிரகாசிப்பன என்று சொல்லுதற் கொத்தவாயின.

பாங்குளார் கரங்களை ஒத்தலின் பொருவில் கோடு என்றார். நனை திகழ்தல் தீபிகை திகழ்தலை ஒக்குமென்க. தீபிகை ஆகுபெயர்; தீபச்சுடர். (136)

வான்றரு வோர்சில மலரின் கண்டொறுந்
தேன்றுளி விடுவன சிவனைக் கண்டுழி
யான்றதோ ரன்பின ரகநெ கிழ்ந்துகட்
கான்றதோர் புனலெனக் கவின்று காட்டிய.

இன் மலர் கண் தொறும்—இனிய இதழ்விண்டலரும் மலர்களாகிய கண்கள்தோறும், தேன் துளி விடுவன ஓர் சில வான் தரு—தேன் துளியைச் சொரிவனவாகிய ஒரு சில உயர்ந்த தருக்கள், சிவனைக் கண்டுழி—சிவபெருமானைத் தரிசித்தவுடன், அகம் நெகிழ்ந்து—மனமலர் இதழவிழ்ந்து, ஓர் புனல் கான்றது கண்—ஒப்பில்லாத ஆனந்தக் கண்ணீரைக் கான்றதாகிய கண்ணினையுடைய, ஆன்றது ஓர் அன்பினர் என—ஒப்பின்றி அகன்றதாகிய அன்பினையுடையார்போல, கவின்று காட்டிய—கசிவாகிய அழகு ஒழுகித் தம்மைக் காட்டின. (137)

வண்டரு வோர்சில மருப்பில் வானிறங்
கொண்டிடு மதுமலர் குழுமி யுற்றன
வெண்டிரு மலையிடை வீழுங் கங்கையிற்
றண்டுளி சிதறிய தன்மை போன்றவே.

ஓர் சில வண் தரு மருப்பில்—ஒருசில வளவிய தருக்களின் கொம்பர்களில், வால் நிறம் கொண்டிடு மதுமலர் குழுமி உற்றன—வெண்ணிறம் பொருந்திய தேன்நிறைந்த மலர்கள் குழுமியிருக்குந் தன்மை, வெண் திரு மலையிடை வீழும் கங்கையில்—வெள்ளிய கைலை மலையிலே விழுகின்ற கங்கையிலே, தண் துளி சிதறிய தன்மை போன்ற—தண்ணிய நீர்த் துளிகள் சிதறியிருக்குந் தன்மையை ஒக்கும்.

உற்றன, சிதறிய காலங்காட்டுந் தொழிற்பெயர்கள். (138)

கற்றையஞ் சுடர்மணி கனக மேனைய
பிற்றையென் றுதருள் பெரியர் வண்மைபோன்
மற்றவ னுள்ளபன் மரமுந் தம்பய
னெற்றையு முலப்புறு தீகை சான்றவே.

அம் சுடர் கற்றை மணி கனகம் ஏனைய—அழகிய ஒளிக்கற்றையினை யுடைய இரத்தினங்களையும் பொன்னையும் ஏனையவைகளையும், பிற்றை என்னாது—அன்றறிவா மென்னாது, அருள் பெரியர் வண்மைபோல்—வழங்கு கின்ற வள்ளல்களின் ஈகைபோல, அவண் உள்ள பல் மரமும்—அந்தச் சோலையி லுள்ள பலவாகிய மரங்களும், தம் பயன் எற்றையும்—தம்முடைய பயன்கள் யாவற்றையும், உலப்பு உறுது ஈகை சான்ற—குறைவின்றி ஈதலைச் செய்தன. (139)

காவத னியல்பினைக் கண்டு தன்னொரு
தேவியொ டேயருள் செய்து சிற்பர
ஞவியுள் ளுணர்வென வதனுள் வைகுமோ
ரோவிய மன்றிடை யொல்லை யேகினன்.

கா அதன் இயல்பினை கண்டு—அச் சோலையின் தன்மையை நோக்கி, தன் ஒரு தேவியொடு அருள் செய்து—தமது ஒப்பற்ற தேவியாரோடு கிருபை கூர்ந்து, சிற்பரன்—சிவபெருமான், ஆவியுள் உணர்வு என—உயிருள்ளிருக்கும் உணர்வைப்போல, அதனுள் வைகும் ஓர் ஓவிய மன்றிடை—அச்சோலை யுள்ளிருக்கும் ஒரு சித்திர மண்டபத்துள், ஒல்லை ஏகினன்—விரைந்து சென் றருளினர். (140)

எண்டகு பெருநசை யெய்தி யைம்புலன்
விண்டிட லின்றியே விழியின் பாற்படக்
கண்டனள் கவுரியக் கடிகொண் மண்டபங்
கொண்டிடு மோவியக் கோலம் யாவுமே.

கவுரி—உமாதேவியார், எண் தகும் பெரு நசை எய்தி—சிந்திக்கத் தகும் பெருவிருப்பைப் பொருந்தி, ஐம்புலன் விண்டிடல் இன்றி விழியின் பாற்பட— ஐம்புல அறிவும் வேறுபடா தொன்றுபட்டுக் கட்புலத்தோடு பொருந்த, அ கடிகொள் மண்டபம் கொண்டிடு ஓவியக் கோலம் யாவும் கண்டனள்— புதுமையைக் கொண்ட அம் மண்டபத்திலுள்ள சித்திர உருவம் அனைத்தையுந் திருக்கண் சாத்தினர்.

தேவியின் இச்சையாதியன பிரபஞ்ச சிருட்டியின் தொடக்கத்தைக் குறிப் பிடுவன ஆதலின் சிறப்பிக்கப்பட்டன. (141)

பாங்கரில் வருவதோர் பரம ஞணையா
லாங்கத னடுவணி லாதி யாகியே
யோங்கிய தனியெழுத் தொன்றி ரண்டதாய்த்
தூங்குகைம் மலைகளிற் ரேன்றிற் றென்பவே.

பாங்கரில் வருவதோர் பரமன் ஆணையால்—கௌரிக்குப் பக்கத்தே வருகின்ற ஒப்பற்ற சிவபெருமானது ஆணையினால், ஆங்கு அதன் நடுவணில்—அச் சித்திர மண்டபத்துக்கு மத்தியில், ஆதி ஆகி ஓங்கிய தனி எழுத்து—மூலமாகி விளங்கிய ஏகாட்சரமான பிரணவம், ஒன்று இரண்டதாய்—ஓரெழுத்தே களிறும் பிடியுமாகிய இரண்டு வடிவமாய், தூங்கு கை மலைகளின் தோன்றிற்று—தூங்குகின்ற கையினையுடைய இரு மலைகள்போலத் தோன்றியது; என்ப—என்று சிருட்டியின் இரகசியமறிந்தோர் கூறுவர். (142)

அன்னவை யுமையவள் காண வாங்கவை
முன்னுறு புணர்ச்சியின் முயற்சி செய்தலு
மென்னைகொ லிதுவென எண்ணித் தன்னொடு
மன்னிய முதல்வனை வணங்கிக் கூறுவாள்.

அன்னவை—பரமனாணையாற் பிடியுங் களிறுமாய்த் தோன்றிய அவைகளை, உமையவள் காண—உமாதேவியார் நோக்க, ஆங்கு அவை—அப்பொழுது அவைகள், முன்னுறு புணர்ச்சியின் முயற்சி செய்தலும்—சிருட்டிதோறும் முன்னர் உறுவதாகிய புணர்ச்சிக்கண் முயலுதலும், இது என்னைகொல் என எண்ணி—இந்நிகழ்ச்சி இருந்தபடி என்னை என்று நினைத்து, தன்னொடு மன்னிய முதல்வனை வணங்கிக் கூறுவாள்—தம்மோடு அபின்னமாய் நிலை பெற்ற முதல்வராகிய சிவபெருமானை வணங்கிக் கூறுவார்.

முன்னுறு புணர்ச்சி அகப்பொருட்டுறைகளுள் ஒன்று. அது முன்னிகழ்ந்த புணர்ச்சியை ஞாபகஞ் செய்வது. (143)

மூலமா மெழுத்திவை முயங்கி மால்கரிக்
கோலமாய்ப் புணர்வதென் கூறு கென்றலு
மேலவார் கருங்குழ லிறைவி கேளென
வாலமார் களத்தின னருள்செய் கின்றனன்.

மூலமாம் எழுத்து—மூலமாகிய பிரணவ எழுத்து, மால் கரி கோலம் இவையாய்—பெரிய யானைகளின் வடிவங்களாகிய இவைகளாய், முயங்கி புணர்வது என் கூறுக என்றலும்—ஒன்றோடொன்று தழுவிப் புணர்வதென்னை அருளிச் செய்க என்று வினவுதலும், ஏல வார் கருங்குழல் இறைவி கேள் என—மயிர்ச்சாந்து பொருந்திய நீண்ட கரிய கூந்தலினையுடைய தலைவியே கேட்பாயாக என்று, ஆலம் ஆர் களத்தினன் அருள் செய்கின்றனன்—நஞ்சு பொருந்திய கண்டத்தினையுடையவராகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுகின்றார். (144)

## வேறு

முன்புநீ காண்டலின் மூலமா யுடையதோர்
மன்பெருந் தொல்பொறி மருவியீ ருருவுறீஇ
யன்பினு லானைபோற் புணருமா லாதையா
னின்பெருந் தகவினை நினைகிலாய் நீயுமே.

முன்பு நீ காண்டலின்—முன்னர் நீ பார்த்தமையால், மூலமாய் உடையது ஓர் மன் பெரும் தொல் பொறி—தோன்றுவ அனைத்துக்கும் வித்தாய் ஒப்பில்லாத என்றுமுள்ள பெருமை பொருந்திய அநாதியான பிரணவம், ஆனை போல் ஈருரு உறீஇ மருவி அன்பினுல் புணரும்—களிறும் பிடியுமாகிய யானைகள் போல இரண்டு வடிவம் எடுத்து ஒன்ருேடொன்று மருவி அன்பினுற் புணராநிற்கும்; ஆகையால்—உன் காண்டல் விசேடம் இருந்தவாற்ருல், நின் பெரும் தகவினை நீயும் நினைகிலாய்—உனது பெருந்தகைமையை நீயும் அறியாய்.

பரமன் ஆணையால் ஒன்று இரண்டாய்த் தோன்றியதாயினும், ஆணையும் அவளே யாதலின், காண்டல் விசேடந்தானே, இருஉரு ஆதற்கும் புணர் தற்குங் காரணமாக ஓதப்பட்டது. (145)

காட்சியா லிதுசெயுங் காரணம் பெற்றநின்
மாட்சிதான் யாமலான் மற்றியா ருணர்குவா
ராட்சியா யுற்றதொல் லருமறைக் காயினுஞ்
சேட்செலா நிற்குநின் றிருவருட் செய்கையே.

காட்சியால்—காட்சி மாத்திரையால், இது செயும் காரணம் பெற்ற—இந் நிகழ்ச்சி நிகழுங் காரணம் இயல்பானே அமைந்த, நின் மாட்சி தான் யாம் அலால் யார் உணர்குவார்—உனது மாட்சிமையை யாமன்றி வேறு யாவர் அறிவார்; ஆட்சியாய் உற்ற—இருடிகளின் வழி வழி ஆட்சிப் பட்டு வந்த, தொல் அருமறைக்கு ஆயினும்—பழைய வேதங்களுக்குத் தானும், நின் திருவருள் செய்கை சேண் செலா நிற்கும்—உன்னுடைய திருவருட் செய்கை எட்டாது வெகுதூரத்ததாம். (146)

என்னவே முகமனு லெம்பிரா னம்பிகை
தன்னெடே மொழியவத் தந்தியும் பிடியுமாய்த்
துன்னியே புணர்வுறுந் தூயசெய் தொழில்விடா
முன்னமே போன்றதான் முடிவிலாக் குடிலையே.

என்ன முகமனுல் எம்பிரான் அம்பிகை தன்னெடு மொழிய—என்றிவ் வாறு முகஸ்துதியாக எம்பெருமான் எம்பெருமாட்டிக்குக் கூறியருள, முடி விலாக் குடிலை—மூலம்போலவே முடிவுங் காண்டற்கரிய பிரணவம், தந்தியும் பிடியுமாய் துன்னி புணர்வுறும் தூய செய்தொழில் விடா—களிறும் பிடியு மாகி ஒன்ருேடொன்று மருவிப் புணர்தலைச் செய்யும் நிருமலமாகிய தொழிலை விடுத்து, முன்னம் போன்றது—தொன்மைபோல ஏகமாகியது.

எம்பெருமாட்டியின் செயலனைத்தும் எம்பெருமானை இன்றி அமை யாமையின், 'முகமன்' என்றுரைக்கப்பட்டது. சிருட்டி விருத்திப்பொருட் டாயதாதலின், தூய செய் தொழில் என்ருர். (147)

அக்கணத் தாயிடை யைங்கரத் தவனருண்
முக்கணல் வாயினன் மும்மதத் தாறுபாய்
மைக்கருங் களிறெனு மாமுகத் தவன்மதிச்
செக்கர்வார் சடையனோர் சிறுவன்வந் தருளினன்.

அக்கணத்து ஆயிடை—அப்பொழுது அவ்விடத்தில், ஓர் சிறுவன்—ஒரு பாலகர், அருள் முக்கண் நால்வாயினன்—அருள்பொழியும் மூன்று கண்களையும் நான்ற வாயினையு முடையவர்; மும்மதத்து ஆறு பாய்—அறிவு இச்சை செயல் என்கின்ற மூன்று மதங்களாகிய ஆறு பெருகுகின்ற, மை கரும் களிறு எனும் மாமுகத்தவன்—மிகக் கரிய களிற்று யானையின் முகம்போன்ற திருமுகத்தை யுடையவர்; மதிச் செக்கர் வார் சடையன்—பாலசந்திரனை அணிந்த செவ்வானம் போன்ற நீண்ட சடையையுடையவர்; ஐங்கரத்தவன்—ஐந்து திருக்கரங்களையுடையவர்; வந்தருளினன்—திருவவதாரஞ் செய்தருளினர்.

(148)

ஒருமையா லுணருவோ ருணர்வினுக் குணர்வதாம்
பெருமையா னெங்கணும் பிரிவரும் பெற்றியா
னருமையா னேவரு மடிதொழுந் தன்மையா
னிருமையா மீசனே யென்னநின் றருளுவான்.

ஒருமையால்—மன ஒருமைப்பாட்டோடு, உணருவோர் உணர்வினுக்கு—தம்மை அறிகின்றவர்களுடைய அறிவுக்கு, உணர்வது ஆம் பெருமையான்—அறிவாய் விளங்கும் பெருமையை யுடையவர்; எங்கணும் பிரிவு அரும் பெற்றியான்—எங்கும் பிரிதலின்றி வியாபித்திருப்பவர்; அருமையான்—பெறுதற் கரியவர்; ஏவரும் அடி தொழும் தன்மையான்—பெறுதற்கரிய ராயினும் எவருந் திருவடிகளை வணங்கும் எளிமையினையுடையவர்; இருமை யாம் ஈசனே என்ன—ஒருமையின் இருமையாகுஞ் சிவபரம் பொருளே போல, நின்று—இருமையின் ஒருமையாய் எழுந்தருளி, அருளுவான்—திருவருள் பாலிப் பவர்.

அருமை வேதக் காட்சிக்கும் உபநிடத்துச்சியில் விரித்த போதக் காட்சிக்கும் எட்டாமை. இருமை—சிவம் சத்தியாகிய இருமை. ஒருமை பிரிப் பரிய இரண்டன் கூட்டரவு. கூட்டரவு விசேடத்தான் உதித்தமையின் மூத்த பிள்ளையார் இருமையின் ஒருமையாம்.

(149)

மருளறப் புகலுநான் மறைகளிற் றிகழுமெய்ப்
பொருளெனப் படுமவன் புவனமுற் றவர்கடம்
மிருளறுத் தவர்மனத் திடர்தவிர்த் தருளவோ
ரருளுருத் தனையெடுத் தவதரித் துளனவன்.

மருள் அற புகலும்—மயக்கம் நீங்கும்பொருட்டு உபதேசிக்கப்படும், நான் மறைகளில் திகழும் மெய்ப் பொருள் எனப்படும் அவன்—நான்கு வேதங்களிலுந் திகழுகின்ற மெய்ப்பொருள் என்று நிச்சயிக்கப்படும் அந்த இறைவர் தாமே, அவன்—இந்த விநாயகப் பெருமான் ஆவர்; புவனம் உற்றவர்கள் தம் இருள் அறுத்து—புவனங்களில் உள்ளவர்களின் அஞ்ஞான இருளை நீக்கி, அவர் மனத்து இடர் தவிர்த்து—அவர்களின் மனத் துன்பங்களை ஒழித்து, அருள—திருவருள் புரியும்படி, ஓர் அருள் உரு தனை எடுத்து—ஒரு திருவருள் வடிவத்தை எடுத்து, அவதரித்துளன்—அவதரித் தருளினர். *(150)*

வந்துமுன் னிருவர்தம் மலரடித் தலமிசைச்
சிந்தையார் வத்தொடுஞ் சென்னிதாழ்ந் திடுதலுந்
தந்தையுந் தாயுமுன் றழுவிமார் புறவணைத்
தந்தமில் கருணைசெய் தருளினு ரவ்வழி.

அவன்—விநாயகப்பெருமான், முன் வந்து இருவர் தம் மலரடி தலம் மிசை—அம்மையப்பர்களின் முன்வந்து அவர்களுடைய மலரடிகளின்மீது, சிந்தை ஆர்வத்தொடும் சென்னி தாழ்ந்திடுதலும்—மன விருப்பத்தோடு தலை தாழ்ந்து வணங்குதலும், அவ்வழி—அப்பொழுது, தந்தையும் தாயும் முன் தழுவி மார்பு உற அணைத்து—சிவபெருமானும் உமாதேவியாரும் முந்தி எடுத்துத் தழுவித் திருமார்போடு பொருந்த அணைத்து, அந்தம் இல் கருணை செய்தருளினர்—முடிவற்ற திருவருள் பாலித்தார்கள்.

அவன், முதற் செய்யுளின் இறுதிக்கண்ணது; ஈண்டுங் கூட்டப்பட்டது. *(151)*

என்னரே யாயினும் யாவதொன் றெண்ணுதன்
முன்னரே யுனதுதாண் முடியுறப் பணிவரே
லன்னர்தஞ் சிந்தைபோ லாக்குதி யலதுனை
யுன்னலார் செய்கையை யூறுசெய் திடுதிநீ.

என்னரே ஆயினும் யாவது ஒன்று எண்ணுதல் முன்னர்—யாவரேயாயினும் யாதொரு கருமத்தைச் செய்ய எண்ணுதற்கு முன், உனது தாள் முடி உற பணிவரேல்—அக் கருமம் இடையூறின்றி இனிது முடியும்பொருட்டு உன் னுடைய தாள்களிலே தலை பொருந்த வணங்குவாரேயாயின், அன்னர் தம் சிந்தை போல் ஆக்குதி—அவருடைய மனம்போல அதனை முற்றுப்பெறச் செய்குதி; அலது—அவ்வாறு வணங்காது, உனை உன்னலார் செய்கையை நீ ஊறு செய்திடுதி—உன்னை முதற்கண் நினைந்து வழிபடாதவர்களின் கருமங்களுக்கு நீ இடையூறு செய்குதி. *(152)*

சேயநன் மலர்மிசைத் திசைமுகன் மான்முத
லாயபண் ணவர்தமக் காருயிர்த் தொகையினுக்
கேயபல் கணவருக் கெத்திறத் தோர்க்குநீ
நாயகம் புரிதியா னல்லருட் டன்மையால்.

சேய நல் மலர்மிசை திசைமுகன் மால் முதலாய பண்ணவர் தமக்கு—நல்ல செந்தாமரை மலரிலிருக்கும் பிரமா திருமால் முதலிய தேவர்களுக்கும், ஆருயிர்த் தொகையினுக்கு—அரிய உயிர்த்தொகைக்கும், ஏய பல் கணவருக்கு—பொருந்திய பலவகைக் கணங்களுக்கும், எத்திறத்தோர்க்கும்—மற்றை எத் தகையவர்களுக்கும், நல் அருள் தன்மையால் நாயகம் நீ புரிதி—நல்ல திருவருளைப் பாலிக்குந் தன்மையோடு நாயகத் தன்மையை நீ புரிவாயாக.

நாயகத் தன்மை—தலைமை. (153)

கானுறுங் கரடவெங் கயமுகத் தவனெனுந்
தானவன் வன்மையைச் சாடியே தண்டுழாய்
வானவன் சிறுமையு மாற்றியே வருகென
வானையின் முகவனுக் கைம்முக னருள்செய்தான்.

கான் உறும்—நாற்றம் பொருந்திய, கரட வெம் கய முகத்தவன் எனும்—மதம்பாய் சுவட்டினையுடைய கொடிய கயமுகனென்று சொல்லப்படுகின்ற, தானவன் வன்மையை சாடி—அசுரனது வலியை அழித்து, தண் துழாய் வானவன் சிறுமையும் மாற்றி—தண்ணிய துழாயை யணிந்த திருமாலின் சாபமாகிய சிறுமையையும் நீக்கி, வருக என—வருவாயாக என்று, ஐம் முகன் ஆனையின் முகவனுக்கு அருள் செய்தான்—ஐந்து திருமுகங்களையுடைய சிவபெருமான் ஆனைமுகக் கடவுளுக்குத் திருவருள்செய்தார். (154)

மோனமே குறியதா முதலெழுத் தருளிய
ஞானமா மதலைபா னண்ணவே பூதவெஞ்
சேனையா யினவருள் செய்துசிற் பரையொடு
மானைமா முகனொடு மமலன்மீண் டருளினன்.

மோனமே குறியதாம் முதலெழுத்து அருளிய—மௌனமே தியானக் குறியாயமையும் முதலெழுத்தாகிய பிரணவத்தினின்றுந் தந்தருளிய, ஞான மா மதலைபால் நண்ண—பெருமை பொருந்திய ஞானப் பிள்ளையார்பாற் சேனையாய்ப் பொருந்த, பூத வெம் சேனையாயின அருள் செய்து—வெவ்விய பூத சேனைகளாயுள்ளவற்றைக் கொடுத்தருளி, சிற்பரையொடும் ஆனைமா முகனொடும் அமலன் மீண்டருளினன்—சிற்பரையாகிய உமாதேவியாரோடும் ஆனைமுகப் பிள்ளையோடும் சிவபெருமான் அச்சோலையினின்றும் மீண்டு சென்றருளினர். (155)

புங்கவர்க் கிறைவனும் புதல்வனை நோக்கிடா
நங்கடைத் தலையினி னாயகம் புரிகென
வங்கருத் தியொடிருத் தினனணிக் கோயிலுட்
சங்கரக் கடவுள்சுந் தரியொடு மருவினான்.

புங்கவர்க்கு இறைவனும் புதல்வனை நோக்கிடா—தேவ நாயகராகிய பிள்ளையாரை நோக்கி, நம் கடைத்தலையினில் நாயகம் புரிக என அங்கு அருத்தியொடு இருத்தினன்—நமது கடைத்தலை வாய்தலில் நாயகத் தன்மையைப் புரிவாயாக என்று அவ்விடத்தில் விருப்பத்தோடு இருத்தியருளி, சங்கரக் கடவுள் சுந்தரியொடு அணி கோயிலுள் மருவினான்—உயிர்களுக்குச் சுகஞ் செய்யுங் கடவுளாகிய சிவபெருமான் உமாதேவியாரோடும் அழகிய திருக்கோயிலுள் வீற்றிருந்தருளினார். *(156)*

தந்திமா முகமுடைத் தனயனங் கணுகியே
முந்துபா ரிடமெலா மொய்த்துமுன் சூழ்தர
நந்திவந் தனைசெய நான்முகன் முதலினோர்
வந்துவந் தடிதொழ மகிழ்வொடே வைகினான்.

தந்தி மா முகமுடை தனயன்—பெருமை பொருந்திய ஆனைமுகப் பிள்ளையார், அங்கு அணுகி—அவ்விடத்தில் எழுந்தருளி, முந்து பாரிடம் எலாம் முன் மொய்த்து சூழ்தர—முந்துகின்ற பூத சேனைகள் எல்லாம் எதிரில் நெருங்கிச் சூழ, நந்தி வந்தனை செய—திருநந்திதேவர் வழிபாடு செய்ய, நான்முகன் முதலினோர் வந்து வந்து அடிதொழ—பிரமதேவர் முதலியவர்கள் வந்து வந்து திருவடிகளை வணங்க, மகிழ்வொடு வைகினான்—மகிழ்வோடு வீற்றிருந்தருளினார். *(157)*

அன்னதற் பின்னரே யாயிரம் பெயருடைப்
பொன்னுலா நேமியான் புனிதனைக் காணிய
மின்னுதண் சுடர்விடும் வெள்ளிமால் வரைமிசைத்
துன்னினா னாலயச் சூழன்முன் னணுகினான்.

அன்னதன் பின்னர்—அதற்குப் பின்பு, ஆயிரம் பெயர் உடை—ஆயிரந் திருநாமங்களையுடைய, பொன் உலாம் நேமியான்—அழகு பொருந்திய சக்கரப் படையை யுடையவராகிய திருமால், புனிதனை காணிய—புனிதரான சிவபெருமானைத் தரிசிக்கும்பொருட்டு, மின்னு தண் சுடர் விடு வெள்ளி மால்வரை மிசை துன்னினான்—பிரகாசிக்கின்ற தண்ணிய ஒளிக்கிரணங்களை விடுகின்ற திருக்கைலாச கிரியின்கண்ணே சென்று, ஆலயச் சூழல் முன் அணுகினான்—திருக்கோயிலின் முன்னிடத்தை அடைந்தார். *(158)*

அந்தியார் சடைமுடி யண்ணறன் னருளினு
னந்திதே வுய்த்திட நங்கையோர் பங்கனு
மெந்தைபா லெய்தியே யிணைமலர்த் தாடொழாப்
புந்தியார் வத்தொடும் போற்றிசெய் தருளவே.

அந்தி ஆர் சடை முடி அண்ணல் தன் அருளினல்—அந்திவானத்தை ஒத்த சடைமுடியினையுடைய சிவபெருமானது திருவருளினுல், நந்தி தேவு உய்த்திட—திருநந்திதேவர் உள்ளே விடுக்க, நங்கை ஓர் பங்கன் ஆம் எந்தைபால் எய்தி—உமாதேவியாரை ஒரு பாகத்திற் கொண்டருளியவராகிய சிவபெருமானை அடைந்து, இணை மலர் தாள் தொழா—இரண்டாகிய மலரடிகளை வணங்கி, புந்தி ஆர்வத்தொடும் போற்றி செய்தருள—மன விருப்பத்தோடுந் துதி செய்து நிற்ப. (159)

## வேறு

நிருத்தனவ் விடைதனி னேமி யான்றனை
யிருத்தியென் றருள்புரிந் திடத்தின் மேவிய
வொருத்தியை நோக்கியொன் றுரைப்பங் கேளெனு
வருத்திசெய் யாடலொன் றருளிற் கூறுவான்.

நிருத்தன்—பஞ்சகிருத்திய கர்த்தாவாகிய சிவபெருமான், நேமியான் தனை அ இடைதனில் இருத்தி என்று அருள் புரிந்து—திருமாலை அவ்விடத்தில் இருப்பாயாக என்று அருள் செய்து, இடத்தின் மேவிய ஒருத்தியை நோக்கி—இடப்பாகத்திற் பொருந்திய ஒப்பற்ற தேவியை நோக்கி, ஒன்று உரைப்பம் கேள் எனு—ஒன்று உரைப்போம் கேட்பாயாக என்று, அருத்தி செய் ஆடல் ஒன்று—தாம் விருப்பஞ் செய்ததொரு விளையாட்டை, அருளின் கூறுவான்—ஆன்மாக்கள் மீது கொண்ட திருவருளினுலே கூறியருளுவார்.

அருத்தி செய்ததும் ஆன்மாக்கள் பொருட்டேயாம். (160)

சூதினை யெம்மொடே பொருதி தோற்றனை
யாதியே னீபுனை யணிகள் யாவையு
மீதியால் வென்றனை யென்னி னெம்மொரு
பாதியாஞ் சசிமுதற் பலவுங் கோடியால்.

எம்மொடு சூதினை பொருதி—நீ எம்மோடு சூதாடக் கடவாய்; தோற்றனை ஆதியேல்—தோற்ருயானல், நீ புனை அணிகள் யாவையும் ஈதி—நீ தரித்த ஆபரணங்கள் அனைத்தையும் எமக்குக் கொடு; வென்றனை என்னின்—வென்ருயானல், எம் ஒரு பாதியாம் சசி முதல் பலவுங் கோடி—எம்மிடத்தி லுள்ள ஒரு பாதியாகிய சந்திரன் முதலிய பல அணிகலங்களையும் பெற்றுக் கொள். (161)

என்னலு முமையவ ளிசைவு கோடலு
மன்னதொ ரெல்லையி னரியை நோக்கியே
தன்னிக ரில்லவ னிதற்குச் சான்றென
மன்னினை யிருத்தியான் மாயநீ யென்முன்.

என்னலும்—என்றருளிச்செய்ய, உமையவள் இசைவு கோடலும்—உமா தேவியார் இசைவுகொண்டாராக, அன்னது ஓர் எல்லையில்—அவ்வாருய தொரு சமயத்தில், தன் நிகர் இல்லவன் அரியை நோக்கி—தமக்கொப்பா ரில்லாத சிவபெருமான் திருமாலை நோக்கி, மாய நீ இதற்குச் சான்று என மன்னினை இருத்தி என்முன்—மாயவனே நீ இந்தச் சூதாட்டத்துக்குச் சான் ருகப் பொருந்தி இருப்பாயாக என்று அருளிச்செய்தார்.

தன்னிகரில்லவன் என்றதனுல் இது நிகரற்றதொரு சூது என்பதும், மாய என்று விளித்தமையால் அரியின் மயக்கத்தைப் போக்குவதொன் றென்பதுங் கொள்க. (162)

பற்றிக லின்றியே பழவி னைப்பயன்
முற்றுணர்ந் துயிர்களை முறையின் வைப்பவன்
மற்றிது புகறலும் வனசக் கண்ணினு
னற்றிற மிஃதென நவின்று வைகினுன்.

பற்று இகல் இன்றி—விருப்பு வெறுப்பின்றி, பழ வினை பயன் முற்று உணர்ந்து—பழைய வினையின் பயன்களை முழுவதுமுணர்ந்து, உயிர்களை முறையின் வைப்பவன்—உயிர்களை ஏற்ற முறையானே இன்பத் துன்பங் களைப் புசிக்கும்படி வைப்பவராகிய சிவபெருமான், இது புகறலும்—இதனை அருளிச்செய்தலும், வனசக் கண்ணினுன்—தாமரைக் கண்ணரான திருமால், இஃது நல்திறம் என நவின்று—தமக்குப் பணித்த இது நல்லதேயாம் என்று கூறி, வைகினுன்—ஆட்டத்துக்குச் சான்று யிருந்தார். (163)

இந்தவா றுயிடை நிகழு மெல்லையிற்
சுந்தரன் முதலிய வுழையர் சுற்றினே
ரந்தமில் பெருங்குணத் தாதி யேவலிற்
றந்தனர் காசொடு பலகை தன்னையே.

இந்த ஆறு ஆயிடை நிகழும் எல்லையில்—இவ்வாறு அவ்விடத்தில் நிகழும் போது, சுந்தரன் முதலிய உழையர் சுற்றினேர்—சுந்தரர் முதலிய அணுக்கத் தொண்டர்களாய்ச் சூழநின்றவர்கள், அந்தம் இல் பெரும் குணத்து ஆதி ஏவலின்—அழிவற்ற பெருங்குணத்தினையுடைய சிவபெருமானது கட்டளைப் படி, காசொடு பலகை தன்னை தந்தனர்—சூதாடு கருவிகளோடு உரிய பலகையைக் கொண்டுவந்து வைத்தார்கள். (164)

அதுபொழு தண்ணலு மரியை நோக்கியிம்
முதிர்தரு கருவியை முறையின் வைக்கெனக்
கதுமென வைத்தலுங் கவுரி நீநமக்
கெதிருறு கென்றுமுன் னிருத்தி னனரோ.

அது பொழுது அண்ணலும் அரியை நோக்கி—அப்பொழுது சிவபெருமானுந் திருமாலைப் பார்த்து, இ முதிர்தரு கருவியை—இந்த முதிர்ச்சி பொருந்திய கருவிகளை, முறையின் வைக்க என—வைக்கும் முறைப்படி வைக்குக என்று பணிக்க, கதும் என வைத்தலும்—திருமால் அவ்வாறே விரைந்து வைக்க, கவுரி நீ நமக்கு எதிர் உறுக என்று—கவுரியே நீ எமக்கு எதிரிலே இருப்பாயாக என்று, முன் இருத்தினன்—தமக்கு எதிரே இருத்தியருளினர்.

சிருட்டிதோறும் வைத்து முதிர்ச்சியெய்திய கருவிகளென்க.　　(165)

கவற்றினை முன்னரே யுய்ப்பக் கண்ணுத
லவற்றினைப் பின்னுற வவளு முய்த்தன
டவற்றியல் பல்லதோர் வல்ல சாரியா
லெவற்றினு மேலையோ ரினிதி னடினர்.

கவற்றினை முன்னரே கண்ணுதல் உய்ப்ப—கவறு என்று சொல்லப்படும் உருட்டப்படுபவைகளை முதற்கண் சிவபெருமான் உருட்ட, அவற்றினை—அக்கவறுகளை, பின்னுற அவளும் உய்த்தனள்—பின்பு உமாதேவியாரும் உருட்டி, தவறு அல்லது ஓர் இயல்பு—குற்றம் அல்லாததான நல்லிலக்கணமாகிய தனிச் சிறப்பினையுடைய, வல்ல சாரியால்—சூதாடுகருவிகளுள் சாரியென்னுங் கருவி விசேடத்தால், எவற்றினும் மேலையோர்—எவற்றினும் உயர்ந்தோராய இருவரும், இனிதின் ஆடினர்—இனிமை உண்டாகச் சூதாடினர்கள்.

உய்த்தனள் எச்சமுற்று. வல்—சூதாடுகருவி. சாரி சூதாடு கருவி வகைகளுள் ஒன்று. வல்ல சாரி என்பதை வல்ல நாய் என்பதுபோலக் கொள்க. அ சாரியை. 'வல்லே தொழிற்பெயரற்று' என்ற நன்னூற் சூத்திரம் நோக்குக. சாரியைப் பெயர்த்தலால் இனிமை உண்டாக ஆடினர் என்க. கவறுகள் உருண்டுபட்டது, பஞ்சு பாலை முதலியவற்றுள் ஆண்டைக்கு வேண்டுவ தொன்றாயின், சாரியை உரிய இடத்துக்குப் பெயர்க்கலாமாதலின் இனிமை மீதூரும் என்க.　　(166)

பஞ்சென வுரைசெய்வர் பாலை யென்பரீ
ரஞ்சென மொழிவரஞ் சென்ப ரன்றியுந்
துஞ்சலி னடமென்பர் துருத்தி யீதென்பர்
விஞ்சிய மகிழ்வொடு வெடியென் றோதுவார்.

பஞ்சு என உரைசெய்வர் பாலை என்பர்—பஞ்சு என்று கூறுவர் பாலை என்பர்; ஈரஞ்சு என மொழிவர் அஞ்சு என்பர்—ஈரைஞ்சு என்று

கூறுவர் ஓரைஞ்சு என்பர்; அன்றியும்—அல்லாமலும், துஞ்சலில் நடம் என்பர்—சோர்வின்மையை வருவிக்கும் நடம் என்பர்; ஈது துருத்தி என்பர்—கவற்றிற் பட்ட இது துருத்தி என்பர்; விஞ்சிய மகிழ்வொடு—மிக்க மகிழ்ச்சியோடு, வெடி என்று ஓதுவார்—வெடி என்று கூறுவார்.

பஞ்சு முதலிய குறியீடுகள் சூதில் வழங்கும் பரிபாஷைச் சொற்கள். பெரும்பாலன கவறுகளிற் குறிப்பிட்ட இலக்கங்களுக்கு வழங்குபவைகள். (167)

அடியிது பொட்டையீ தென்ப ரஃதென
முடிவில குழூஉக்குறி முறையின் முந்துறக்
கடிதினிற் கழறினர் கவறு சிந்தினர்
நொடிதரு கருவிக ளெதிரி னூக்கினர்.

அடி இது பொட்டை ஈது என்பர்—இது அடி இது பொட்டை என்பர்; அஃது என—இங்கு வழங்கிய அக் குழூஉக்குறி போல, முடிவில குழூஉக்குறி—அளவற்ற சங்கேத மொழிகளை, முறையில்—தாம் தாம் கவறு உருட்டும் முறைக்கண், முந்துற—கவறுகளை உருட்ட முன்னமே, கடிதினில் கழறினர்—விரைந்து கூறி, கவறு சிந்தினர்—கவறுகளை எறிந்து உருட்டி, நொடி தரு கருவிகள்—நொடித்தலைத் தருகின்ற கருவிகளை, எதிரின் நூக்கினர்—எதிரே எதிரே தள்ளிவைத்தார்கள்.

சிந்தினர் எச்சமுற்று. நொடித்தல்—சொல்லுதல்; பஞ்சு பாலை என்றிங்ஙனம் சொல்லுதல். சொல்வோர் வினை, கருவிகளில் ஏற்றப்பட்டது. தள்ளுதல்—உந்துதல். (168)

வேறு

ஏற்றா னவனெய்திய வின்னருள் யாவ தேயோ
தேற்றா மஃதியார்க்கு மளப்பருஞ் செய்கை யாலே
மேற்றா னெதிராவுட னாடிய மெல்லி யற்குத்
தோற்றா னெடுமாலய னாடவுந் தோற்றி லாதான்.

ஏற்றான் அவன் எய்திய இன்னருள் யாவதேயோ—இடபமாகிய ஏற்றினையுடைய அப்பெருமானார் கொண்ட இனிய அருளின் திறந்தானென்னையோ; அஃது யார்க்கும் அளப்பு அரும் செய்கையால் தேற்றாம்—பெருமானாரின் அருளின் திறம் எவருக்கும் அளந்தறிதற்கருந் தன்மைத்தாதலின் அதுபற்றி யாமொன்று மறியோம்; மேல் தான் எதிரா உடன் ஆடிய மெல்லியற்கு—முன்னம் தாம் எதிர்ந்து தம்முடன் ஆடிய மெல்லிய இயல்பினையுடைய தேவிக்கு, நெடு மால் அயன் நாடவும் தோற்று இலாதான் தோற்றான்—திருநெடுமாலும் பிரமதேவருந் தேடவுந் தோற்றல் செய்யாதவர் தோற்றல் செய்தார்.

தோற்றான்—தோல்வியடைந்தார். தோற்று—தோன்றுதல்; விகுதி கெட்டு நின்றது.

பிரபஞ்சச்சூதிற் சிவத்தைச் சத்தி வென்றது.

*'அவளால் வந்த வாக்கமிவ் வாழ்க்கை'

என்பது சித்தியார். (169)

ஒன்று யபரஞ்சுட ரோனுமை தன்னை நோக்கி
நன்ற யதுநின்வலி யென்று நகைத்து நம்மை
வென்று யலைதோற்றனை முன்னர் விளம்பு மாற்ற
னின்று ரொடுபூணு மெமக்கினி நேர்தி யென்றன்.

ஒன்று ஆய பரஞ்சுடரோன் உமை தன்னை நோக்கி—ஏகமான பரஞ்சுடராகிய சிவபெருமான் உமாதேவியாரை நோக்கி, நின் வலி நன்றுயது—உன் வன்மை நன்றுயிருக்கிறது; என்று நகைத்து—என்று கூறிச் சிரித்து, நம்மை வென்றுயலை தோற்றனை—நம்மை வென்றுயல்லை தோல்வியடைந்தாய்; முன்னர் விளம்பும் ஆற்றல்—முன்பு ஒட்டியபடி, நின் தாரொடு பூணும் எமக்கு இனி நேர்தி என்றன்—உன்னுடைய மாலையுடன் அணிகளையும் எமக்கு இப்பொழுது அளிப்பாயாக என்று கூறியருளினர்.

உமை வேறன்மையின், 'ஒன்றுய பரஞ்சுடர்' என்றார். அவ்வாற்றல் வென்றுயலை என்பதூஉமாம். (170)

மூன்று முலகங்களு மாருயிர் முற்று முன்ன
மீன்று ளதுகேட்டலுந் தானிக லாட லஞ்சி
வான்று வியபேரடி மாயனை வல்லை நோக்கிச்
சான்று மெனவைகினை நீயிது சாற்று கென்றள்.

மூன்றும் உலகங்களும் ஆருயிர் முற்றும் முன்னம் ஈன்றள் அதுகேட்டலும்—மூன்றுயிருக்கும் உலகங்களையும் அரிய உயிர்வர்க்கங்கள் முழுவதையும் முன்னர் ஈன்றருளிய தேவி அதனைக் கேட்ட அளவில், தான் இகல் ஆடல் அஞ்சி—தாம் சிவத்தோடு வாதாடுதற்கு அஞ்சி, வான் தாவிய பேர் அடி மாயனை வல்லை நோக்கி—வானத்தை அளந்த பெரிய அடியினையுடைய திருமாலை விரைந்து நோக்கி, நீ சான்றும் என வைகினை—நீ சாட்சியாகும் என்று சொல்லும்படி மத்தியட்சம் வதித்திருந்தாய் ஆதலினலே, இது சாற்றுக என்றள்—இதனைச் சொல்லுவாயாக என்று கூறினர்.

§ 'காமஞ் செப்பாது கண்டது மொழிமோ'

என்றார் என்க. (171)

சொல்லு மளவிற்சுடர் நேமியன் சூதுடைப் போர்
வெல்லுந் தகையோன்பர னென்று விளம்ப லோடு
நல்லுண் மைசொற்று ய் திறநன் றிதுநன்றி தென்னுச்
செல்லுண் டவைம்பாலுமை யாற்றச் சினம் புரிந்தாள்.

---

* சிவஞானசித்தியார் சுபக்கம்—சூத். 1, பாடல் 69.

§ குறுந்தொகை—பாடல் 2.

சொல்லும் அளவில் சுடர் நேமியன்—உமாதேவியார் இவ்வாறு உரைத்த போது ஒளிபொருந்திய சக்கரப்படையையுடைய திருமால், சூதுடைப் போர் வெல்லும் தகையோன்—சூது போரில் வெற்றி கொள்ளுந் தகைமைப்பாடு உடையோர், பரன் என்று விளம்பலோடும்—பரம்பொருளேயாவர் என்று கூறுதலும், நல் உண்மை சொற்ருய்—நல்லதொரு வாய்மையைக் கூறினுய்; திறம் இது நன்று இது நன்று என்னு—உன் தன்மையாகிய இது நன்று இது நன்று என்று கூறி, செல் உண்ட ஐம்பால் உமை—மேகந் தோல்வி யுண்ட ஐந்து பகுதியினது ஆகிய கூந்தலையுடைய உமாதேவியார், ஆற்றச் சினம் புரிந்தாள்—பெரிதுங் கோபஞ் செய்தார்.

சூது உடைப்போர்—சூதையுடைய போராட்டம். அச்சத்தால் நேர் விடையாகாது விளம்பினுராயினுந் தேவி சினம்புரிந்தார். (172)

பாரா யலேகண்ணனு மாயினே பாலி னுற்ருய்
தேரா ததுவொன்றிலே யாவருந் தேர வொண்ணுப்
பேரா தியோனவை கூறினு நீயிது பேசலாமோ
காரா மெய்யென்பர் மனமுங் கரியாய்கொன் மன்னே.

பாராயலே—சான்ருயிருக்கும் நீ இங்கு நிகழ்ந்த நிகழ்ச்சியைப் பாராதோ யல்லே; கண்ணனும் ஆயினே—அம்மட்டோ! கண்ணனுமாயிருந்தாய்; பாலின் உற்ருய்—மற்ருெரு பாதி போலவும் இருந்தாய்; தேராதது ஒன்று இலே—இங்கே நீ அறியாதது ஒன்றும் நடந்ததில்லே; யாவரும் தேர ஒண்ணுப் பேர் ஆதியோன்—யாவரும் இவ்வியல்பினர் என்று அறிய ஒண்ணுத பெருமை பொருந்திய மூலப்பொருளாகிய இறைவர், நவை கூறினும்—குற்றமாகிய பொய்ம்மையைக் கூறினுலும், நீ—ஆதி மூலமல்லாத மத்தியக்ஷம் வகித்த நீ, இது—வாய்மையிடத்ததென்று உனக்கு நிச்சயந் தோன்ருத இப்பொய்ம் மையை, பேசல்—பேசுந் தகுதியில்லாத நீ பேசுதல், ஆமோ—வாய்மை யிடத்ததாகுமோ; மெய் காராம் என்பர்—உனக்கு உடல் மாத்திரமே கருமையாம் என்பர் உன்னே அறியார்; மனமும் கரியாய்—நீயோ மனத் தாலுங் கரியை.

கண்ணன்—கரியவன், எல்லாஞ் செய்பவன்; ஈண்டுக் கண்ணுடையன் என்ற பொருளேயுந் தந்து, அதனுற் பயனின்மையையும் புலப்படுத்திற்று. பால்—பக்கம். ஆதியோன் கூறும் நவை, நவையாகாமை எம்மனேரால் தேரவொண்ணுததாம். புரைதீர்ந்த நன்மை பயக்குமாயின் பொய்ம்மையும் வாய்மையிடத்ததாம். அவ்வாருய வாய்மையுரைத்தற்கு நீயார் என்றவாறு.

கொல், மன், ஓ அசைநிலே. (173)

ஏம்பா லிதுசொற்றனே யாதலி னென்று மாயை
ஓம்பா வருவா யுறுகைதவத் தூற்ற மிக்காய்
பாம்பாதி யென்னப் பகர்ந்தாள் பகர்கின்ற வெல்லே
யாம்பா லுருவமஃ தங்க ணடைந்த தன்றே.

ஏம்பால்—யானும் ஒரு சத்தியே யென்னும் இருமாப்பினுல், இது சொற்றனை—கண்ணனுயிருந்துங் கண்டது மொழியாது காமஞ் செப்பினை; ஆதலின்—பட்சபாதம் சொன்ன அதனுலே, என்றும் மாயை ஓம்பா வருவாய்—எப்பொழுதும் மாயையை ஓம்பி வருபவனே, உறு கைதவத்து ஊற்றம் மிக்காய்—மிக்க வஞ்சத்தில் ஊற்றம் மிக்கோனே, பாம்பாதி—பாம்பாகக் கடவாய்; என்ன பகர்ந்தாள்—என்று சாபம் இட்டருளினுர்; பகர்கின்ற எல்லை—சாபம் இடுகின்றபொழுதே, அங்கண்—அவ்விடத்தில், பால்—திருமால்பால், ஆம் உருவம் அஃது—பாம்பாகும் உருவமாகிய அது, அடைந்தது—வந்து பொருந்தியது.

ஓம்புதல்—பாதுகாத்தல். மாயையாகிய பிரவஞ்சத்தை ஓம்புதல் மால் தொழில். அதனுலே போலும் வஞ்சம் மால்பால் ஊற்றங்கொண்டது. ஊற்றம்—உறுதியாயிருத்தல்; சுரத்தலுமாம். பால்—பாலிலிருந்த திருமால். பாம்பாகும் பகுதியினையுடைய உருவமுமாம்.

ஈண்டுக் கூறியவாற்ருல், பொய்ச்சான்று பகர்வோர் பாம்பாய்ப் பிறப்பர் என்க. (174)

அவ்வா றவன்பா லணைகின்றதொர் போழ்தி லாழிக்
கைவா னவனு மதுகண்டு கவற்சி யெய்திச்
செவ்வா னுறழு முடியோனடி சென்று தாழா
வெவ்வா றெனக்கிவ் வுருநீங்கு மிசைத்தி யென்ருன்.

அவ்வாறு அவன்பால் அடைகின்றது ஓர் போழ்தில்—அவ்வண்ணம் திருமாலினிடத்தில் அப் பாம்புருவம் அணைகின்றதொரு சமயத்தில், ஆழி கைவானவனும் அது கண்டு கவற்சி எய்தி—சக்கரம் ஏந்திய கையினையுடைய திருமாலும் அதனைக் கண்டு கவலையடைந்து, செவ்வான் உறழும் முடியோன் அடி சென்று தாழா—செவ்வானம்போன்ற சடையையுடைய சிவபெருமானது திருவடியைச் சென்று வணங்கி, எவ்வாறு எனக்கு இவ்வுரு நீங்கும்—எவ்வழியாக எனக்கு இந்த உருவம் நீங்கும்; இசைத்தி என்ருன்— கூறியருள்க என்று பிரார்த்தித்தார். (175)

காலாய் வெளியாய்ப் புனலாய்க்கன லோடு பாராய்
மேலாகி யுள்ள பொருளாயெவற் றிற்கும் வித்தாய்
நாலாய வேதப் பொருளாகிநண் ணுற்ற நாதன்
மாலா யவனுக் கிஃதொன்று வகுத்து ரைப்பான்.

காலாய் வெளியாய் புனலாய் கனலோடு பாராய்—பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்கின்ற பஞ்சபூதங்களாய், மேலாகி உள்ள பொருளாய்—அவற்றுக்கு மேலாகி உள்ள தத்துவங்களாய், எவற்றிற்கும் வித்தாய்—எவற்றுக்கும் மூல காரணமாய், நாலாய வேதப் பொருளாகி—நான்காகிய வேதங்

களின் பொருளாய், நண்ணுற்ற நாதன்—இருக்கின்ற சிவபெருமான், மாலாய வனுக்கு இஃது ஒன்று வகுத்து உரைப்பான்—திருமாலுக்கு இஃதொன்றை வகுத்துக் கூறியருளுவார்.

மேலாகிய பொருள், அட்ட மூர்த்தத்தில் எஞ்சிய சந்திரன் சூரியன் ஆன்மா எனினுமாம். மால்—மயக்கமுமாம். (176)

என்பால் வருமன்பி னிசைத்தனை யீது பெற்றாய்
நின்பால் வருமின் னலைநீக்குவ னீங்கு கின்றாய்
தென்பா லுலகந்தனி லன்னதொர் தேய மீதின்
முன்பா லவனம் மெனவொன்றுள மொய்ம்பின் மிக்காய்.

மொய்ம்பின் மிக்காய்—கண்டது மொழியாது காமஞ் செப்புதலில் வலிமை மிக்கோனே, என்பால் வரும் அன்பின் இசைத்தனை ஈது பெற்றாய்—நம்பாலுதிக்கும் அன்பினாலே அவ்வாறிசைத்து இவ்வுருவத்தைப் பெற்றாய்; நின்பால் வரும் இன்னலை நீக்குவன்—உன்பாலுண்டான துன்பத்தை நீக்கி யருளுவோம்; நீங்குகின்றாய்—இப்பொழுதே நீ துன்பத்தை நீங்குகின்றாய் ஆயினாய்; தென்பால் உலகம் தனில் அன்னதொர் தேயம் மீதில்—தக்ஷிண பூமியிலே தென் தேயத்திலே, ஆலவனம் என ஒன்று முன்பு உள—ஆல வனம் என்பதொரு வனம் முன்னமே உண்டு. (177)

ஆங்கே யினிநீ கடிதேகினை யன்ன கானிற்
பாங்கே யொருதொன் மரநின்றது பார்த்த துண்டே
யூங்கே பராரையின் மேயபொந் தொன்றி னூடு
தீங்கே குறப்போய்ப் பெருமாதவஞ் செய்து சேர்தி.

ஆங்கே இனி நீ கடிது ஏகினை—அவ்விடத்துக்கு இனி நீ விரைந்து சென்று, அன்ன கானில் பாங்கே ஒரு தொன்மரம் நின்றது—அந்த வனத்தின் பாங்கர் ஓர் ஆலமரம் உளது; பார்த்தது உண்டே—அதனை நீ கண்டதுண்டே; பராரையின் ஊங்கே மேய பொந்து ஒன்றினூடு போய்—அவ்வாலமரத்தின் பருத்த அரையினையுடைய அடிப்பாகத்தில் உயர்ச்சி பொருந்திய இடத்திலே பொருந்தியதொரு பொந்தினுள்ளே சென்று, தீங்கு ஏகுறப் பெரு மாதவம் செய்து சேர்தி—குற்றம் நீங்குமாறு பெரிய தவத்தைச் செய்திருப்பாயாக. (178)

அஞ்சே லவணீ யுறைகின்றதொர் காலை யானே
யெஞ்சே யவனுங் கயமாமுக னெய்து வானச்
செஞ்சே வகனுக் கெதிர்கொண்டனை சென்று காண்டி
மஞ்சே யனையா யுனக்கிவ்வுரு மாறு மன்றே.

அஞ்சேல்—அஞ்சற்க; நீ அவண் உறைகின்றதொர் காலை—நீ அவ்விடத்தில் தவஞ்செய்துகொண்டிருக்கின்றதொரு காலத்திலே, யானே ஆம்—யாமே தாஞகும், எம் சேயவன்—எமக்கு அபின்னமான எம்முடைய குமாரன், கய மா முகன்—பெருமை பொருந்திய ஆனைமுகன், எய்துவான்—அவ்விடத்துக்கு வருவான்; அ செம் சேவகனுக்கு எதிர்சென்று கொண்டனை காண்டி—அந்தச் செம்மையாகிய வீரத்தையுடைய குமாரனுக்கு எதிர் சென்று வணக்கம் முதலிய உபசாரஞ் செய்து அவனைத் தரிசிப்பாயாக; அன்றே—அக்கணமே, இவ்வுரு—இந்தப் பாம்புருவம், மஞ்சே யனையாய் உனக்கு மாறும்—மேகம் போன்றுய் உனக்கு நீங்கும்.

செஞ்சேவகனை எதிர்கொண்டு சென்று காண்டி எனினுமாம். (179)

## வேறு

என்னுமள விற்றெழு திறைஞ்சியினி தேத்தி
யன்னதொர் வனத்திடை யமர்ந்ததொன் மரத்திற்
றுன்னுவ னெனக்கடிது சொல்லுதலும் யார்க்கு
முன்னவனு மேகென முராரியை விடுத்தான்.

என்னும் அளவில்—என்று கூறியருளியவுடனே, தொழுது இறைஞ்சி இனிது ஏத்தி—தொழுது வணங்கி இனிதாகத் துதித்து, அன்னது ஓர் வனத்திடை அமர்ந்த—அந்த ஆலவன மென்பதொரு வனத்தின்கட் பொருந்திய, தொன்மரத்தில் துன்னுவன் என கடிது சொல்லுதலும்—ஆலமரத்தின்கட் சென்று தவஞ்செய்வேன் என்று விரைந்து கூறுதலும், யார்க்கும் முன்னவனும்—எவர்க்கும் முதல்வரான சிவபெருமானும், ஏகு என முராரியை விடுத்தான்—செல்வாயாக என்று திருமாலை விடுத்தருளினர். (180)

விட்டிடுத லுங்கயிலை நீங்கினன் விரைந்தே
கட்டழகின் மேதகைய காமனது தாதை
சிட்டர்கள் பயின்றுறை தெனுதுபுல நண்ணி
மட்டொழுகு தொன்மர வனத்தினிடை யுற்றான்.

கட்டழகின் மேதகைய காமனது தாதை—கட்டழகால் மேம்பட்ட மன் மதனுடைய தந்தையாகிய திருமால், விட்டிடுதலும்—சிவபெருமான் அனுப்பி யருளுதலும், கயிலை விரைந்து நீங்கினன்—கைலாசமலையை விரைந்து விட்டு நீங்கி, சிட்டர்கள் பயின்று உறை தெனுது புலம் நண்ணி—சன்மார்க்கர்கள் பயின்று வசிக்கின்ற தென் தேசத்தை அடைந்து, மட்டு ஒழுகு தொன்மர வனத்தினிடை உற்றான்—தேனொழுகுகின்ற ஆலமர வனத்தை அடைந்தார். (181)

நன்மதி யுடைப்புலவர் நால்வர்களு முய்யச்
சின்மய முணர்த்தியரு டேவனமர் தாருத்
தன்மையது பெற்றுநனி தண்ணிழல் பரப்புந்
தொன்மர வியற்கையத னிற்சிறிது சொல்வாம்.

நல் மதி உடை புலவர் நால்வர்களும் உய்ய—தெளிந்த புத்தியினையுடைய அறிவர்களாகிய சனகாதி முனிவர்கள் நால்வரும் உய்யும்பொருட்டு, சின்மயம் உணர்த்தி அருள் தேவன் அமர்—ஞானமாகிய மோனக் குறியை உணர்த்தியருளிய சிவபெருமான் தக்ஷிணாமூர்த்தியாயமைந்த, தாருத் தன்மையது பெற்று—கல்லாலின் தன்மையைப் பெற்று, நனி தண் நிழல் பரப்பும்—மிகவுந் தண்ணிய நிழலைப் பரப்புகின்ற, தொன்மர இயற்கை அதனில் சிறிது சொல்வாம்—அந்த ஆலமரத்தின் இயற்கைத் தன்மையிற் சிறிது சொல்லுவோம். (182)

பசுந்தழை மிடைந்தவுல வைத்திரள் பரப்பி
விசும்பளவு நீடியுயர் வீழினிரை தூங்கத்
தசும்பனைய தீங்கனிக டாங்கியது தாளால்
வசுந்தரை யளந்தநெடு மாயவனை மானும்.

பசுந்தழை மிடைந்த—பசிய இலைகள் செறிந்த, உலவைத் திரள் பரப்பி—கொம்பர்களின் கூட்டத்தைப் பரப்பி, விசும்பு அளவும் நீடி—ஆகாயமளவும் உயர்ந்து, உயர் வீழின் நிரை தூங்க—நீளமான விழுதின் வரிசைகள் தூங்க, தசும்பு அனைய தீம் கனிகள் தாங்கியது—குடத்தை ஒத்த வடிவத்தையுடைய கண்ணுக்கினிய கனிகளைத் தாங்கியதாகிய அவ்வாலமரம், தாளால் வசுந்தரை அளந்த நெடு மாயவனை மானும்—பாதத்தினாலே பூமியை அளந்த நெடியோனாகிய திருமாலை ஒக்கும். (183)

அண்டநடு வாயவுல கேழினையு மந்நா
ளுண்டருளி யொல்லைதனி லோர்சிறுவ னாகிப்
பண்டுகரி யோன்றுயில்கொள் பாசடைக டன்பாற்
கொண்டவட மன்னதொரு கொள்கையது டைத்தால்.

அண்டம் நடுவாய உலகு ஏழினையும்—அண்டத்தின் நடுவணதாய பூவுலகம் முதலிய ஏழுலகங்களையும், அ நாள் உண்டருளி—அந்த ஊழிக்காலத்தில் உண்டு, ஒல்லை தனில் ஓர் சிறுவன் ஆகி—விரைவில் ஒரு சிறு குழந்தையாய், பண்டு கரியோன் துயில்கொள்—முன்னர்த் திருமால் அறிதுயில் புரியும், பாசடைகள் தன்பால் கொண்ட—பசிய இலைகளைத் தன்பாற் கொண்ட, வடம் அன்னது ஒரு கொள்கையது உடைத்து—அந்த ஆலமரத்தை ஒத்ததொரு தன்மையையும் உடைத்து.

ஆல்—அசை. எழுவாய் தாங்கியது; மேற்செய்யுளில் உள்ளது. அவ்வாலுந் திருமாலையுடைத்து; இவ்வாலுந் திருமாலையுடைத்து. (184)

மழைத்தபசு மேனியது மாதிர வரைப்பில்
விழுத்தகைய வீழினிரை வீசுவட தாருத்
தழைக்குல மருப்புமிசை தாங்கியிடை தூங்கும்
புழைக்கைகொடு மால்களிறு நாடுகரி போலும்.

மழைத்த—செழித்துக் குளிர்ந்த, பசு மேனியது—பசுமையாகிய மேற்புறத்தை உடையதாய், மாதிர வரைப்பில்—திக்கினெல்லேயில், விழுத்தகைய—சிறந்த, வீழின் நிரை வீசு வடதாரு—விழுதின் நிரைகளேப் பரப்புகின்ற அவ்வாலமரம், தழைக் குலம் மருப்பு மிசை தாங்கி—தழைக்கூட்டத்தைக் கொம்பின்மீது தாங்கி, இடை தூங்கும்—கொம்பினிடையே தூங்குகின்ற, புழைக்கை கொடு—துதிக்கையினுல், கரி நாடும்—பிடியானேயைத் தேடும், மால் களிறு போலும்—மதமயக்கம் பொருந்தியதொரு களிற்றுயானேயையும் ஒக்கும்.

மருப்பு மரக் கொம்புமாம்; யானைக் கொம்புமாம். மருப்பினிடை தூங்கும் புழைக்கை போன்றது விழுது. களிறு, தழைக்குலம் மருப்பு மிசை தாங்குவது காதற் பிடியை உண்பித்தற்குமாம். மோப்பம் கைக்கண்ண தாதலின் புழைக்கைகொடு நாடும் என்க. (185)

பாசடை தொடுத்தபட லைப்பழு மரத்தின்
வீசிநிமிர் கின்றபல வீழின்விரி கற்றை
பூசலிடு கூளியொடு பூதநிரை பற்றி
யூசல்பல வாடியென வூக்கியன வன்றே.

பாசடை—பசிய இலேகள், தொடுத்த படலே—ஒன்ருேடொன்றிணேக்கப்பட்ட பச்சிலே மாலேத் தன்மை அமைந்த, பழு மரத்தின்—அந்த ஆலமரத்தில், வீசி நிமிர்கின்ற பல வீழின் விரி கற்றை—அசைந்து நிமிருகின்ற பலவாகிய விழுதுகளின் நுதிதோறும் விரிந்திருக்கின்ற குச்சத் தொகுதிகள், பூசலிடு கூளியொடு பூத நிரை—போரிடுகின்ற கூளிகளும் பூத நிரைகளும், பல ஊசல் பற்றி ஆடி என—பலவாகிய ஊசல்களேப் பற்றிக்கொண்டு ஆடுதல் போல, ஊக்கியன—அக்கற்றைகள் அங்குமிங்குந் தள்ளுண்டசைவன.

குச்சம்—குஞ்சம். கூளி—பேய். விழுதின் நுதிக்கற்றை பேயும் பூதமுந் தூங்குதல் போலும். (186)

ஆல்வரையின் வீழ்நிரைக ளாசுக முடற்றப்
பால்வரையி னெற்றிவரு மாறிரவி பாகன்
கால்வரையி னேகவெழு கந்துகம தென்னு
மால்வரையின் வீசுபல மத்திகைய தொத்த.

ஆல் வரையின் வீழ் நிரைகள்—அந்த ஆலமரமாகிய மலேயின்கணுள்ள விழுதின் நிரைகள், ஆசுகம் உடற்ற—காற்றடிக்க, பால்வரையின் எற்றி வருமாறு—பக்கத்திலுள்ள மலேகளிற் சென்று எற்றி மீண்டுவருமாறு, இரவி பாகன்—சூரியனது தேர்ப்பாகனுகிய அருணன், கால்வரையின் ஏக—குறிப்பிட்ட காலவரையறை தப்பாது ஏகும்பொருட்டு, எழு கந்துகம் என்னும் மால்வரையின்—தேரிற் பூட்டப்பட்ட ஏழு குதிரைகள் என்னும் பெரிய மலேகளின்மீது, வீசு பல மத்திகை ஒத்த—எற்றுகின்ற பலவாகிய மத்திகைகள் பட்டு மீளுமாறு போலும்.

இரவி ஏகும்பொருட்டென்க. மத்திகை—குதிரைச் சம்மட்டி. அது பகுதிப் பொருள் விகுதி. எற்றுதல் பலமுறை நிகழ்தலின், ஒத்த எனப் பன்மை யாற் கூறினார். (187)

ஆசறு தெனுதுதிசை யாளுமிறை யெண்ணில்
பாசமொடு நின்றதொரு பான்மையஃ தன்றேல்
வாசவனு மாகமிசை மாலிகையு மாமால்
வீசுபழு மாமர விலங்கலுமவ் வீழும்.

பழு மாமர விலங்கலும் வீசு அ வீழும்—பெரிய ஆலமரமாகிய மலையும் அசைகின்ற அந்த விழுதுகளும், ஆசு அறு தெனுது திசை ஆளும் இறை—குற்றம் அற்ற தென் திசையை ஆளுகின்ற தலைவனாகிய யமன், பாசமொடு நின்றதொரு பான்மையஃது ஆம்—பாசக் கயிறுகளோடு நின்ற தொரு தன்மையை ஒக்கும்; அன்றேல்—அங்ஙனமன்றாயின், வாசவனும் ஆகமிசை மாலிகையும் ஆம்—இந்திரனையும் அவன் மார்பின்மீது அசைந்து விளங்குகின்ற மாலைகளையும் ஒக்கும்.

ஆம், உவம உருபுப்பொருளில் வந்தது; முன்னுங் கூட்டப்பட்டது. அஃது பகுதிப்பொருள் விகுதி. வீசுதல் பரவுதலுமாம். கிளைகள் பரவிய மரம் என்க. (188)

மாநிலமெ லாந்தனை வழுத்தவரு மன்னற்
கூனமுறு காலைதனி லொண்குருதி வாரி
வானமுகில் கான்றனைய மாண்டதொன் மரத்தின்
மேனிதரு செய்யபல வீழின்விரி மாலை.

மாண்ட தொன்மரத்தின் மேனி தரு—மாட்சிமை பொருந்திய அவ்வால மரத்தினின்றும் வருகின்ற, செய்ய பல வீழின் விரிமாலை—சிவந்த பல விழுதுக ளாகிய பரந்த வரிசைகள், மா நிலம் எலாம் தனை வழுத்த வரு மன்னற்கு— பெரிய உலகம் முழுவதுந் தன்னைத் துதிக்கும்படி இருக்கின்ற சக்கரவர்த்திக்கு, ஊனம் உறு காலை தனில்—கேடு வருகின்ற காலத்திலே, ஒண் குருதி வாரி— ஒள்ளிய இரத்த மழையை, வான முகில் கான்றனைய—வானத்து முகில்கள் பொழிந்தால் அதனை ஒத்தன.

கான்றாலனைய, கான்றனைய என நின்றது. (189)

இம்பருறை யாலமிசை யெம்முருவு கொள்ளா
வம்புலவு தண்டுளவ மாயன்வரு மென்னு
வெம்பணிக டம்பதியின் மேவுவன போலாந்
தம்பமென வேதரை புகுந்ததனி வீழ்கள்.

இம்பர் உறை ஆலம் மிசை—இவ்வுலகிலுள்ள இந்த ஆலமரத்தின்கண், எம் உருவு கொள்ளா—எமது பாம்பு வடிவத்தை எடுத்துக்கொண்டு, வம்பு உலவு தண் துளவ மாயன் வரும்—வாசனை வீசுகின்ற துளவத்தை அணிந்த திருமால் ஒருகாலத்தில் வருவார்; என்னு—என்று கருதி அவருக்கு இடங் கொடுக்கும் முறையில், வெம் பணிகள் தம் பதியின் மேவுவன போலாம்—கொடிய பாம்புகள் தம்மிருப்பிடமாகிய பாதலத்திற்குச் செல் லுவனவற்றை ஒக்கும்; தம்பம் என தரை புகுந்த தனி வீழ்கள்—நாட்டப்பட்ட தம்பங்கள் போல நிலத்தின்கட் புகுந்த ஒப்பற்ற விழுதுகள். (190)

கடித்தன வெயிற்றினழல் காலவர வின்மே
னடிக்குமொரு கட்செவி நமைக்குறுகு மென்னுத்
துடித்தன வெனத்தலை துளக்கின வுரோமம்
பொடித்தன நிகர்த்துள புனிற்றினுறு புன்காய்.

கடித்தன எயிற்றின் அழல் கால—கடித்தனவாகிய பற்களினின்றும் விடமாகிய அக்கினி வெளிப்பட, அரவின்மேல்—காளிங்கன் என்னும் சர்ப்பத்தின் மீது, நடிக்கும் ஒரு கட்செவி—நடித்தலைச் செய்யுங் கிருஷ்ண சர்ப்பமொன்று, நமை குறுகும் என்னு—விழுதுகளாகிய நம்மையுங் காளிங்க சர்ப்பங்களென்றெண்ணி இவ்விடம் அடையுமென்று அஞ்சி, துடித்தன என தலை துளக்கின—துடிதுடித்தன போல விழுதுகளாகிய பாம்புகள் தலைநடுங்கின; புனிற்றின் உறு புன்காய்—மிக்க பசிய இளங்காய்கள், உரோமம் பொடித்தன நிகர்த்துள—உரோமம் புளகித்தன ஒத்தன.

பாம்புகளை ஒத்த விழுதுகளுண்மையால் ஆலமரம் இங்ஙனம் ஆயிற்றென்க. இனி, வரவேற்கு முறையில் மகிழ்ச்சி மிக்கு ஆலமரந் தலைதுளக்கிப் புளகங்கொண்டதென உரைத்தலும் ஒன்று. இவ்வுரைக்கு 'நமை' என்னும் பன்மை பொருத்தமன்மை யறிக. கடித்தன சாதியடை. (191)

கிளர்ப்புறு கவட்டிலை கிடைத்தகிளை யாவு
மளப்பில்புகை சுற்றிட வனற்கெழுவு கற்றை
துளக்குறு தரக்குழுவு தோன்றியது போன்ற
விளக்கழ னிகர்த்துள விரிந்தமுகை யெல்லாம்.

கிளர்ப்பு உறு கவட்டு—மேலே கிளர்ந்து வளருகின்ற கவடுகளில், இலை கிடைத்த கிளை யாவும்—பசுமையுஞ் செம்மையுமாகிய இலைகள் பொருந்திய சிறு கிளைகள் யாவும், அளப்பு இல் புகை சுற்றிட—அளவற்ற புகை சூழ, கெழுவு அனற் கற்றை—அப்புகையோடு செறிந்த அக்கினிக் கற்றையானது, துளக்கு உறுதர—அசைந்து பிரகாசிக்க, குழுவு தோன்றியது போன்ற—அவ் விரண்டுந் தம்பாற் கூடித் தோன்றினாற் போன்றன; விரிந்த முகை எல்லாம்—அக்கிளைகளில் விரிந்த முகைகள் அனைத்தும், விளக்கு அழல் நிகர்த்துள—விளக்கின் சுடர்களை ஒத்தன.

(192)

கவடு மரக்கொம்பு.

செருப்புகு சினத்தெதிர் செறுத்தமத வெற்பின்
மருப்பினை யொசிப்பவன் வரத்தினியல் காணு
விருப்பமலி வுற்றதன் விழித்தொகைக ளெங்கும்
பரப்பிய நிகர்த்துள பயங்கெழுவு பைங்காய்.

செரு புகு சினத்து எதிர் செறுத்த—போரிடுதற்குரிய சினத்தோடு எதிரே நெருங்கிய, மத வெற்பின் மருப்பினை ஒசிப்பவன்—மதமலையாகிய குவலயா பீடமென்னும் யானையின் கொம்பை முரிப்பவராகிய திருமாலின், வரத்தின் இயல் காணு—வருகையின் இயல்பைக் கண்ணுற்று, விருப்பம் மலிவுற்ற—வரவேற்பில் விருப்பம் மிக்க, தன்—அவ்வாலமரமானது தன்னுடைய, எங்கும் பரப்பிய—எங்கும் பரப்பியனவாகிய, விழித்தொகைகள்—விழிகளின் கூட்டங்களை, பயங் கெழுவு பைங்காய் நிகர்த்துள—பழுக்கும் பக்குவத்தையுடைய பசிய செங்காய்கள் ஒத்தன.

விநாயகக்கடவுள் தன்பாலணைந்து அருளும் வரத்தின் இயல்பைக் கருதி எனினுமாம். (193)

வெள்ளிபடு கின்றமதி விண்படர் விமானங்
கள்ளிபடு பால்கெழு கவட்டினிடை தேய்ப்பத்
துள்ளிபடு கின்றளவி லோர்திவலை தொத்தப்
புள்ளிபடு மாறுமுய லென்பர்புவி மேலோர்.

வெள்ளி படுகின்ற மதி விண்படர் விமானம்—வெண்ணிறம் பொருந்திய சந்திரனுனவன் வானிற் செல்லும் விமானமானது, கள்ளிபடு பால்கெழு கவட்டினிடை தேய்ப்ப—கள்ளியிலுண்டாகின்ற பால்போன்ற பால் கெழுமுகின்ற அவ்வாலின் கொம்பரினிடத்தே தேய்ப்புண்ண, துள்ளி படுகின்ற அளவில்—ஆலம் பாலின் துளிகள் துளிக்கின்ற சமயத்தில், ஓர் திவலை தொத்த—அதிலொரு துளி சந்திரனுடம்பிற் பற்றிக்கொள்ள, புள்ளி படுமாறு—அதனுலே சந்திரனிடத்தே புள்ளி உண்டாயிருக்குந் தன்மையை, புவி மேலோர் முயல் என்பர்—பூமியின்கண்ணே மேலோராகிய புனைந்துரைவல்ல புலவர்கள் முயற்களங்கமென்று கற்பனை செய்வர்.

சந்திரனது களங்கம் இயற்கையன்றென்றவாறு. (194)

காவதமொ ரேழுள பராரைகணிப் பின்றுற்
றுவறு முயர்ச்சியத னுக்குமதி சான்றே
பூவுலக மெங்குநிழல் போக்கிநெடி தோம்புங்
கோவதென நின்றதுயர் கோளியெனுங் குன்றம்.

பராரை ஓர் ஏழு உள காவதம்—பருத்த அரையின் சுற்றளவு ஏழாகப் பொருந்திய காவதமாம்; தாவறும் உயர்ச்சி கணிப்பின்று—குற்றமற்ற அதன் உயர்ச்சிக்கு அளவில்லை; அதனுக்கு மதி சான்று—அவ்வாறுதற்கு அதன்

கொம்பரால் தேய்ப்புண்டு மறு அடைந்த சந்திரனே தக்க சான்றும்; பூவுலகம் எங்கும் நிழல் போக்கி—பூவுலகமெங்கும் நிழல் பரப்பி, நெடிது ஓம்பும் கோ என—நெடிது பாதுகாக்கும் அரசன்போல, கோளி எனும் உயர் குன்றம் நின்றது—அவ்வாலமரம் என்னும் உயர்ந்த மலை நிலைத்து நின்றது.

கோளி, பூவாதே காய்க்கும் மரம். (195)

அவ்வகைய தாருவினை நோக்கின னணைந்தான்
பவ்வநிற வண்ணறுயில் பாசடைக டம்மோ
டெவ்வகை சுமத்திரென வேவினவ வென்றே
வெவ்வரவி னுக்கிறைவன் மேவியது மான.

வெவ்வரவினுக்கு இறைவன்—கொடிய சர்ப்பங்களுக் கிறைவனாகிய ஆதி சேடன், அவ்வகைய தாருவினை நோக்கினன்—அத்தன்மைகளையுடைய ஆல விருட்சத்தை நோக்கி, பவ்வ நிற அண்ணல் துயில் பாசடைகள் தம்மோடு—கடல்வண்ணரான திருமால் துயில்கின்ற பசிய இலைகளோடு, எவ்வகை சுமத்திர்—தாருவே நீர் மற்றொரு சுமையையும் எவ்வாறு சுமப்பீர்; என வினவ என்றே மேவியது மான—என வினவியறிதற்கென்றே அடைந்தது போல, அணைந்தான்—பாம்பாகிய திருமால் அத்தருவை அடைந்தார்.

பூமியை விழுங்கிய மாலின் திண்மையை அறிந்தோ னாதலின், ஆதிசேடன் அங்ஙனம் வினவ எழுதலைக் கற்பனைசெய்தல் சாலும் என்க. (196)

அந்தமில் பெருங்கடல் வளாகமனைத் துந்தன்
னுந்தியி லடைந்ததென வோங்கல்கெழு மொள்வாள்
வந்துறையி னிற்புகுவ தென்னவட தாருப்
பொந்தினிடை யேயணுகி னுலகு பூத்தோன்.

அந்தம் இல் பெரும் கடல் வளாகம் அனைத்தும்—அளவில்லாத பெரிய கடலாற் சூழப்பட்ட நிலப்பரப்பு முழுவதும், தன் உந்தியில் அடைந்தது என—தமது வயிற்றில் அடைந்ததுபோலவும், ஓங்கல் கெழும் ஒள் வாள்—பொரு தற்கண் ஓங்குதல் கெழுமுகின்ற ஒள்ளிய வாள், வந்து உறையினில் புகுவது என்ன—வந்து உறையுட் புகுவதுபோலவும், உலகு பூத்தோன்—உலகத்தை உந்தியிற் பூத்தோரான திருமால், வடதாரு பொந்தினிடை அணுகினன்—அவ்வாலமரப் பொந்துட் புகுந்தார்.

உலகு ஆகுபெயர்; பிரமா. அத்தமனகிரியிற் சூரியன் கடல்நீருட் புகுவது போல என உரைப்பினும் அமையும். (197)

சத்தியுரை யாலரி தனிப்பணிய தான
வித்திற மிசைத்தன மினிச்சுரரை வாட்டு
மத்திமுக வெய்யுவனை யாதியருள் செய்யும்
வித்தக முதற்புதல்வன் வென்றமை யுரைப்பாம்.

சத்தி உரையால் அரி தனி பணியது ஆன இ திறம் இசைத்தனம்—உமாதேவியாரின் சாபத்தாலே திருமால் ஒப்பற்ற பாம்பு வடிவமான இந்தச் சரித்திரத்தைச் சொன்னோம்; இனி சுரரை வாட்டும் அத்தி முக வெய்ய வனை—இனித் தேவர்களை வருத்துகின்ற கயமுகனை கொடியவனை, ஆதி அருள் செய்யும் வித்தக முதல் புதல்வன் வென்றமை உரைப்பாம்—ஆதியாகிய சிவபெருமான் பெற்றருளிய ஞான சாமர்த்தியரான மூத்த பிள்ளையார் வென்ற கதையைச் சொல்லுவோம். (198)

வேறு

முந்து வேழ முகத்தவ னேவலா
னொந்து சிந்தை நுணங்கிய தேவரு
மிந்தி ராதிபர் யாவரு மைங்கரன்
வந்த தோர்ந்து மகிழ்ச்சியின் மேயினர்.

முந்து வேழம் முகத்தவன் ஏவலால்—முன்னர்க் கயமுகாசுரனுடைய கட்டளையால், நொந்து சிந்தை நுணங்கிய தேவரும்—நொந்து மனந் தளர்ந்த தேவர்களும், இந்திராதிபர் யாவரும்—இந்திரன் முதலிய திக்குப்பாலகர்களாகிய தலைவர்கள் அனைவரும், ஐங்கரன் வந்தது ஓர்ந்து—ஐந்து கரங்களையுடையவராகிய விநாயகப்பெருமான் திருவவதாரஞ் செய்தருளியதை அறிந்து, மகிழ்ச்சியின் மேயினர்—மகிழ்ச்சியோடிருந்தார்கள். (199)

ஏத மின்மகிழ் வெய்திய விந்திர
னாதி யோர்கயி லாயத் தணுகியே
போத கத்துப் புகர்முகப் புங்கவன்
பாத முற்றுப் பணிந்து பரவினர்.

ஏதம் இல் மகிழ்வு எய்திய—குற்றமற்ற மகிழ்ச்சியை அடைந்த, இந்திரன் ஆதியோர் கயிலாயத்து அணுகி—இந்திரன் முதலியவர்கள் கைலாயத்துக்குச் சென்று, புகர்—புள்ளி பொருந்திய, போதகத்து முகப் புங்கவன் பாதம் உற்று—ஆனைமுகக் கடவுளின் திருவடிகளை யடைந்து, பணிந்து பரவினர்—வணங்கித் துதித்தார்கள். (200)

பரவல் செய்திடு பான்மையை நோக்கியே
கருணை செய்து கயமுகத் தெம்பிரா
னுரையு நுங்கட் குறுகுறை யென்றலும்
வரன்மு றைப்பட வாசவன் கூறுவான்.

பரவல் செய்திடு பான்மையை நோக்கி—துதிக்குந் தன்மையைப் பார்த்து, கயமுகத்து எம்பிரான் கருணை செய்து—ஆனைமுகத்தையுடைய எம்பெருமான்

கிருபை செய்து, நுங்கட்கு உறு குறை உரையும் என்றலும்—உங்களுக்குள்ள குறையைச் சொல்லுங்கள் என்று கூறியருளுதலும், வாசவன் வரன்முறைப் பட கூறுவான்—இந்திரன் வரன்முறைப்படி தமது குறையை விண்ணப்பிப்பா னுயினன். (201)

தொல்லை நாண்மதி சூடிய சோதிபா
லெல்லை நீங்கும் வரந்தனை யெய்தினன்
கல்லென் வெஞ்சொற் கயாசுர னென்பவ
னல்லல் செய்தன னுற்றவு மெங்களை.

தொல்லை நாள்—முன் னுளிலே, மதி சூடிய சோதிபால்—சந்திரனைத் தரித்த அருட்சோதியாகிய சிவபெருமானிடத்தில், எல்லை நீங்கும் வரந்தனை—அள வற்ற வரங்களை, கல் என் வெம் சொல் கயாசுரன் என்பவன் எய்தினன்—கல்லுப்போலுங் கொடிய சொற்களையுடைய கயமுகாசுரன் என்பவன் பெற்றுன்; எங்களை—வழியடியோங்களை, ஆற்றவும் அல்லல் செய்தனன்—அவன் பெரிதுந் துன்பஞ் செய்தான். (202)

பின்னு நங்களைப் பீடற வைகலுந்
தன்னை வந்தனை செய்யவுஞ் சாற்றினு
னன்ன செய்தன மன்றியு மெங்கள்பான்
மன்ன வேபுதி தொன்று வகுத்தனன்.

பின்னும்—மேலும், பீடு அற—எங்கள் பெருமை நீங்கும்படி, நங்களை வைகலும் தன்னை வந்தனை செய்யவும் சாற்றினன்—எங்களை நாடோறுந் தன்னை வழிபாடு செய்யும்படியுங் கட்டளையிட்டான்; அன்ன செய்தனம்—அவன் விதித்தவைகளைச் செய்தோம்; அன்றியும்—அஃதல்லாமலும், புதிது ஒன்று—புதியதொரு பணியையும், எங்கள்பால் மன்ன வகுத்தனன்—எங்க ளிடத்தில் நிலைக்கும்படி கற்பித்தான். (203)

கிட்டித் தன்முன் கிடைத்துழி நெற்றியிற்
குட்டிக் கொண்டு குழையிணை யிற்கரந்
தொட்டுத் தாழ்ந்தெழச் சொற்றன னுங்கதும்
பட்டுப் பட்டுப் பழியிடை மூழ்கினேம்.

கிட்டி தன்முன் கிடைத்துழி—நெருங்கித் தன் முன்னிலையை அடைந்த பொழுது, நெற்றியில் குட்டிக்கொண்டு—நெற்றியின்கண்ணே குட்டுதலைச் செய்து, குழை இணையில் கரம் தொட்டு—இரு காதுகளையுங் கைகளால் மாறிப்

பற்றி, தாழ்ந்து எழச் சொற்றனன்—தாழ்ந்தெழும்படி கட்டளை செய்தான்; ஆங்கதும் பட்டு பட்டு—அதனையுஞ் செய்து செய்து, பழியிடை மூழ்கினேம்—பழியில் அழுந்தினேம். (204)

கறுத்து மற்றவன் கட்டுரைக் கின்றசொன்
மறுத்த லஞ்சி வரும்பழி தன்னையும்
பொறுத்து நாணமும் போகவின் றந்தமுஞ்
சிறப்பி லாவச் சிறுதொழில் செய்தனம்.

கறுத்து அவன் கட்டுரைக்கின்ற சொல் மறுத்தல் அஞ்சி—கோபித்து அவன் கூறும் மொழிகளை மறுத்தற்குப் பயந்து, வரும்பழி தன்னையும் பொறுத்து—அதனால் வருகின்ற பழியையுஞ் சுமந்து, நாணமும் போக—நாணமுங் கெட, இன்று அந்தமும்—இதுகாறும், சிறப்பிலா அ சிறுதொழில் செய்தனம்—சிறப்பில்லாத அவன் பணித்த அக் குற்றேவல்களையெல்லாஞ் செய்தோம். (205)

ஆங்க வன்றன தாவியொ டெங்குறை
நீங்கு வித்திட நீவரு வாயென
வோங்க னல்கு முமையவ டன்னொரு
பாங்கர் வைகும் பராபரன் கூறினன்.

ஆங்கு அவன் தனது ஆவியொடு எம் குறை நீங்குவித்திட—அக் கயமுகாசுரனது ஆவியையும் எங்கள் குறைகளையும் நீங்கச் செய்யும்பொருட்டு, நீ வருவாய் என—தேவரீர் வந்தருளுவீர் என்று, ஓங்கல் நல்கும் உமையவள் தன் ஒரு பாங்கர் வைகும் பராபரன்—ஒரு காலத்தில் இமயமலை நல்கும் உமா தேவியார்தமது வாம பாகத்தில் இருக்கின்ற சிவபெருமான், கூறினன்—முன்னமே கூறியருளினர். (206)

ஆத லானின் னடைந்தன மெம்முடை
யேத மாற்றுதி யென்று வழிபடீஇ
மோத காதிகண் முன்னுற வார்த்திடப்
பூத நாத னருளிற் புகலுவான்.

ஆதலால் நின் அடைந்தனம்—ஆதலினாலே தேவரீரைச் சரணடைந்தோம்; எம்முடை ஏதம் மாற்றுதி என்று வழிபடீஇ—எங்கள் துன்பங்களை நீக்குவீராக என்று வழிபட்டு, மோதகாதிகள் முன் உற ஆர்த்திட—மோதகம் முதலிய பணிகாரங்களைத் திருமுன்னிலையில் நிவேதிக்க, பூத நாதன் அருளின் புகலுவான்—கணபதியாகிய பெருமான் கருணையால் உரைத்தருளுகின்றார். (207)

அஞ்ச லஞ்ச லவுணர்க் கரசனும்
விஞ்சு வேழ முகமுடை வீரனைத்
துஞ்சு வித்துந் துயர்தவிர்ப் போமெனுக்
குஞ்ச ரத்திரு மாமுகன் கூறவே.

அஞ்சல் அஞ்சல்—அஞ்சற்க அஞ்சற்க; அவுணர்க்கு அரசனும் விஞ்சு வேழ முகம் உடை வீரனை துஞ்சுவித்து—அசுரர்க் கரசனுகிய வலி மிக்க கயமுகனை இறக்கச்செய்து, உம் துயர் தவிர்ப்போம் எனு—உங்கள் துயரத்தைப் போக்குவோம் என்று, குஞ்சரம் திரு மா முகன் கூற—அருட்செல்வம் பொருந்திய ஆனைமுகக் கடவுள் கூறியருள. (208)

இறைவ னேடு மிமையவ ரெம்முடைச்
சிறுமை நீங்கின செல்லலு நீங்கின
மறுமை யின்பமும் வந்தன வாலினிப்
பெறுவ தொன்றுள தோவெனப் பேசினர்.

இறைவனேடும் இமையவர்—இந்திரனேடு தேவர்கள், எம்முடைச் சிறுமை நீங்கின செல்லலும் நீங்கின—எம்முடைய சிறுமைகளும் நீங்கின துன்பங்களும் நீங்கின; மறுமை இன்பமும் வந்தன—மறுமைக்கட் பெறும் இன்பங்களும் இப்பொழுதே கிடைத்தன; இனி பெறுவது ஒன்று உளதோ எனப் பேசினர்—இனி நாம் பெறுவதொரு பேறும் உண்டோ என்று புகழ்ந்து பேசினர்கள். (209)

### வேறு

துன்பினை யுழந்திடு சுரர்க ளிவ்வகை
யின்புறு காலையி லீசன் றந்திடு
மன்புடை முன்னவ ஞனை மாமுக
முன்பனை யடுவது முன்னி னனரோ.

துன்பினை உழந்திடு சுரர்கள் இவ்வகை இன்புறு காலையில்—துன்பத்தை அநுபவிக்கின்ற தேவர்கள் இவ்வாறு இன்பத்தை அநுபவிக்கின்ற சமயத்தில், ஈசன் தந்திடும் அன்புடை முன்னவன்—சிவபெருமான் தந்தருளிய ஆன்மாக்கள் மீது அன்புடைய மூத்த பிள்ளையார், ஆனை மாமுக முன்பனை அடுவது முன்னினன்—கயமுகனுகிய வலியோனைச் சங்கரித்தலைத் திருவுளங் கொண்டருளினர். (210)

பொருக்கெனத் தவிசினின் றெழுந்து பூதர்க
ணெருக்குறு வாய்தலி னெய்தி நீள்கதி
ரருக்கனி னிலகிய வசல னென்பவன்
றருக்கிய புயத்தின்மேற் சரண்வைத் தேறினன்.

தவிசினின்று பொருக்கென எழுந்து—ஆசனத்தினின்றும் விரைந்தெழுந்து, பூதர்கள் நெருக்குறு வாய்தலின் எய்தி—பூதர்கள் நெருங்கி நிற்கின்ற வாய்தலை அடைந்து, நீள் கதிர் அருக்கனின் இலகிய—நீண்ட கதிர்களையுடைய சூரியனைப் போலப் பிரகாசிக்கின்ற, அசலன் என்பவன் தருக்கிய புயத்தின்மேல் சரண் வைத்து ஏறினன்—அசலர் என்னும் பூதரின் தருக்குதலைக்கொண்ட புயத்தின் மீது திருவடியை வைத்து இவர்ந்தருளினர்.

சலனமற்ற தவவிசேடம் படைத்தவர் அசலர் போலும். (211)

ஏறியங் கசலன்மே லிருந்து செல்லுழிக்
காறொடர் முகிலினங் கவைஇய காட்சிபோன்
மாறில்வெம் பூதர்கள் வந்து சுற்றியே
கூறின ரவன்புகழ் குலாய கொள்கையார்.

அங்கு அசலன்மேல் ஏறி இருந்து செல்லுழி—அவ்விடத்தில் அசலர் மீது இவர்ந்தெழுந்தருளி யிருந்து செல்லுஞ் சமயத்தில், கால் தொடர் முகிலினம் கவைஇய காட்சிபோல்—காற்றால் தொடரப்பட்ட முகிற்கூட்டஞ் செறிந்த தன்மைபோல, மாறில் வெம் பூதர்கள் வந்து சுற்றி—ஒப்பில்லாத வெவ்விய பூதர்கள் வந்து சூழ்ந்து, குலாய கொள்கையார்—கொண்டாட்டம் மிக்க கொள்கையினை யுடையவராய், அவன் புகழ் கூறினர்—விநாயகப் பெருமானுடைய திருப்புகழைப் பாடினர்கள். (212)

சாமரை வீசினர் தணப்பில் பன்மணிக்
காமரு தண்ணிழற் கவிகை யேந்தினர்
பூமரு மதுமலர் பொழிதன் மேயின
ரேமரு பூதரி லெண்ணி லோர்களே.

ஏமரு பூதரில் எண்ணிலோர்கள்—களிப்பு மிக்க பூதர்களில் அளவில்லாதவர்கள், சாமரை வீசினர்—சாமரைகளை வீசினர்கள்; தணப்பு இல் பன்மணி—நீங்குதலில்லாத பல மணிகள் பொருந்திய, காமரு தண்ணிழல் கவிகை ஏந்தினர்—அழகிய தண்ணிய நிழலைச் செய்கின்ற குடைகளைத் தாங்கினர்கள்; பூமரு மதுமலர் பொழிதல் மேயினர்—பொலிவும் மணமுந் தேனும் பொருந்திய மலர்களைப் பொழிந்தார்கள். (213)

துடியொடு சல்லரி தோமி றண்ணுமை
கடிபடு கரடிகை கணையஞ் சல்லிகை
யிடியுறழ் பேரிகை யிரலை காகளங்
குடமுழ வியம்பினர் கோடி சாரதர்.

கோடி சாரதர்—கோடிக்கணக்கான பூதர்கள், துடியொடு சல்லரி—உடுக்கை சல்லரி, தோம் இல் தண்ணுமை—குற்றமற்ற மிருதங்கம், கடிபடு கரடிகை—குறுந்தடியாலடிக்கப்படுங் கரடிப்பறை, கண் அம் சல்லிகை—அழகிய கண்ணையுடைய முழவு, இடி உறழ் பேரிகை—இடிபோல முழங்கும் பேரிகை, இரலை—ஊது கொம்பு, காகளம்—எக்காளம், குட முழவு இயம்பினர்—குடமுழவு ஆகிய வாத்தியங்களை ஒலித்தார்கள்.

கணையம் என்பதில் ஐ சாரியை. கணையம் ஒருவகை வாத்தியம் என்பாரும் உளர். சல்லியம்—தோற்கருவி. (214)

சிந்தையி லுன்னினர் தீமை தீர்ப்பவன்
வந்திடு காலையின் மகத்தின் வேந்தனு
மந்தர வமரரு மடைந்து போற்றியே
புந்திகொ ளுவகையாற் போதன் மேயினர்.

சிந்தையில் உன்னினர் தீமை தீர்ப்பவன் வந்திடு காலையில்—தம்மை மனத்திலே தியானிப்போரது விக்கினத்தைத் தீர்த்தருள்பவராகிய விநாயகப் பெருமான் எழுந்தருளிய சமயத்தில், மகத்தின் வேந்தனும்—யாகாதிபதியாகிய இந்திரனும், அந்தர அமரரும்—வானத்துத் தேவர்களும், அடைந்து போற்றி—அவரை அடைந்து துதித்து, புந்தி கொள் உவகையால் போதல் மேயினர்—மனத்தில் நிறைந்த உவகையோடு உடன் செல்வாராயினர். (215)

தாருவி னறுமலர் தத்தங் கைகொடு
பேரரு ணுதல்விழிப் பிள்ளை மீமிசை
சேருற வீசியே புடையிற் சென்றனர்
காரினை யடைதரு கடவுள் வில்லென.

தாருவின் நறு மலர் தம்தம் கை கொடு—மணம் பொருந்திய பஞ்ச தருக்களின் மலர்களைத் தத்தங் கைகளில் ஏந்திக்கொண்டு, பேர் அருள் நுதல் விழி பிள்ளை மீமிசை—பேரருள் பொழிகின்ற நெற்றிக் கண்ணினையுடைய பிள்ளையாருடைய திருமேனிமீது, காரினை அடை தரு கடவுள் வில்லெனச் சேருற—மேகத்தை அடைந்து சூழுகின்ற இந்திரவில்லுப்போலப் பொருந்தும்படி, வீசி—சொரிந்துகொண்டு, புடையில் சென்றனர்—பக்கங்களிற் சென்றார்கள்.

பஞ்சவர்ண மமைந்த இந்திரதனுப்போலப் பஞ்சதருக்களின் மலர்கள் சூழ்ந்து விளங்கின என்க. வில்லெனச் சென்றனர் எனினுமாம். (216)

விரைந்தெழு சாரத வெள்ள மெண்ணில
நிரந்தன சூழ்தர நிமலன் மாமகன்
பெருந்தரை யேகியே பிறங்கு தோன்முகன்
புரந்திடு மதங்கமா புரமுன் போயினன்.

விரைந்து எழு சாரத வெள்ளம்—விரைந்தெழுகின்ற பூதவெள்ளம், எண்ணில நிரந்தன சூழ்தர—அளவின்றி நிறைந்து சூழ, நிமலன் மா மகன் பெருந்தரை ஏகி—சிவகுமாரரான மூத்தபிள்ளையார் பெரிய பூமியிற் சென்று, பிறங்கு தோல் முகன் புரந்திடும் மதங்க மா புர முன் போயினன்—விளங்குகின்ற கயமுகாசுரன் அரசு புரிகின்ற மதங்கமாபுரத்தின்கட் சென்றருளினர். (217)

ஆயது கயமுகத் தவுணற் கோடியே
வேயினர் புகறலும் வெகுட்சி கொண்டெழீஇ
யேயதன் படையெலா மெடுத்து மற்றவன்
சேயுயர் தனதுபொற் றேரி லேறினன்.

ஆயது—அவ்வாறு விநாயகப்பெருமான் எழுந்தருளியதை, கயமுகத்து அவுணற்கு வேயினர் ஓடிப் புகல்தலும்—கயமுகாசுரனுக்கு ஒற்றர்கள் ஓடிச் சென்று கூறுதலும், வெகுட்சி கொண்டு எழீஇ—வெகுண்டெழுந்து, ஏய தன் படை எலாம் எடுத்து—பொருந்திய தன் படைகளையெல்லாம் எடுத்துக் கொண்டு, அவன் தனது சேயுயர் பொன் தேரில் ஏறினன்—அக் கயமுகன் தனது மிக உயர்ந்த அழகிய தேரில் ஏறினன்.

தன் படைகளை அழைத்து எனினுமாம். (218)

பல்லிய மியம்பின பரிகள் சுற்றின
சில்லிகொ ளாழியந் தேர்கள் சூழ்ந்தன
வெல்லையி லிபநிரை யாவு மொய்த்தன
வல்லிய லவுணர்கள் வரம்பின் றீண்டினர்.

பல்லியம் இயம்பின—பல வாத்தியங்கள் ஒலித்தன; பரிகள் சுற்றின—குதிரைகள் சூழ்ந்தன; சில்லி கொள் ஆழி அம் தேர்கள் சூழ்ந்தன—வட்ட வடிவங் கொண்ட சக்கரத்தையுடைய அழகிய தேர்கள் சூழ்ந்தன; எல்லை இல் இப நிரை யாவும் மொய்த்தன—அளவில்லாத யானை நிரைகள் அனைத்தும் மொய்த்தன; வல்லியல் அவுணர்கள் வரம்பின்று ஈண்டினர்—வலிய இயல்பினை யுடைய அசுரர்கள் எல்லையின்றி நெருங்கினர்கள். (219)

ஆயிர வெள்ளமா மனிகஞ் சுற்றிடக்
காய்கனல் விழியுடைக் கயமு காசுர
னேயெனு மளவையி லேகிக் கண்ணுத
ஞயகன் மதலைதன் படைமு னண்ணினன்.

ஆயிர வெள்ளமாம் அனிகம் சுற்றிட—ஆயிரவெள்ளஞ் சேனைகள் சூழ்ந்து வர, காய் கனல் விழியுடைக் கயமுகாசுரன்—காய்கின்ற கனல் சொரிகின்ற

கண்களையுடைய கயமுகாசுரன், ஏ எனும் அளவையில் ஏகி—ஏ என்று சொல்லுங் கால எல்லையிற் சென்று, கண்ணுதல் நாயகன் மதலைதன் படை முன் நண்ணினன்—நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானின் திருக்குமாரரான விநாயகப்பெருமானுடைய சேனையினெதிரே அணுகினன். (220)

நண்ணிய காலையி னவையில் பூதரு
மண்ணலங் கழலடி யவுண ருங்கெழீஇப்
பண்ணினர் பெருஞ்சமர் படையின் வன்மையால்
விண்ணவர் யாவரும் வியந்து நோக்கவே.

நண்ணிய காலையில்—கயமுகன் அணுகிய சமயத்தில், நவை இல் பூதரும் அண்ணல் அம் கழலடி அவுணரும் கெழீஇ—குற்றமற்ற பூதர்களும் பெருமை பொருந்திய அழகிய வீரக்கழலணிந்த கால்களையுடைய அசுரருங் கலந்து, படையின் வன்மையால் விண்ணவர் யாவரும் வியந்து நோக்க—இருபக்கத்துச் சேனைகளினதும் வன்மை காரணமாக தேவர்கள் யாவரும் வியந்து நோக்க, பெருஞ்சமர் பண்ணினர்—பெரும்போர் புரிந்தார்கள். (221)

புதிதெழு வெயிலுடன் பொங்கு பேரிரு
ளெதிர்பொரு மாறுபோ லினங்கொ டானவ
ரதிர்கழற் பூதரோ டமர்செய் தாற்றலர்
கதுமென வழிந்தனர் கலங்கி யோடினர்.

புதிது எழு வெயிலுடன்—புதிதெழுந்த உதய சூரியனுடனே, பொங்கு பேரிருள் எதிர் பொருமாறு போல்—பொலிந்த பெரிய இருள் எதிர்பொருந் தன்மை போல, இனங்கொள் தானவர்—கூட்டமாகக் குழுமிய அசுரர்கள், அதிர் கழல் பூதரோடு அமர் செய்து—அதிருகின்ற கழலையுடைய பூதர்களோடு எதிர்பொருது, ஆற்றலர்—எதிர்நிற்றல் ஆற்றுதவராய், கதுமென அழிந்தனர் கலங்கி ஓடினர்—விரைவாக அணிகுலைந்து கலங்கிப் புறங்கொடுத் தோடினர்கள். (222)

ஓடின ரளப்பில ருயிரைச் சிந்தியே
வீடின ரளப்பிலர் மெய்கு றைந்துபி
னுடின ரளப்பில ரகலு தற்கிடந்
தேடின ரளப்பிலர் தியக்க மெய்தினர்.

அளப்பிலர் ஓடினர்—அசுரரில் அளவில்லாதவர்கள் புறங்கொடுத்தோடினர்கள்; அளப்பிலர் உயிரைச் சிந்தி வீடினர்—அளவில்லாதவர்கள் உயிரிழந்து இறந்தார்கள்; அளப்பிலர் மெய் குறைந்து பின் ஆடினர்—அளவில்லாத

வர்கள் உடல் தலை குறைந்து பின் கவந்தமாய் ஆடினர்; அளப்பிலர் அகலு தற்கு இடம் தேடினர்—அளவில்லாதவர்கள் தப்பியோடுதற்கு இடந்தேடி னூர்கள்; தியக்கம் எய்தினர்—இவ்வாற்றாற் கலக்கம் அடைந்தார்கள்.

கவந்தம்—தலையற்ற உடல். (223)

ஒழிந்தன கரிபரி யுலப்பி றேர்நிரை
யழிந்தன வித்திற மவுணர் தம்படை
குழிந்திடு கண்ணுடைக் குறள்வெம் பூதர்கண்
மொழிந்திட வரியதோர் விசய முற்றினர்.

உலப்பில் கரி பரி தேர் நிரை ஒழிந்தன—எண்ணில்லாத யானை குதிரை தேர்நிரை அழிந்துபட்டன; இ திறம் அவுணர் தம் படை அழிந்தன—இவ்வாறு அவுணப் படைகள் யாவும் அழிந்தன; குழிந்திடு கண்ணுடை குறள் வெம் பூதர்கள்—குழிந்தாழ்ந்த கண்ணுடைய குறுகிய பகைவர்க்கு வெம்மை செய்கின்ற பூதர்கள், மொழிந்திட அரியதோர் விசயம் முற்றினர்—சொல்லுதற்கரியதொரு வெற்றியில் முதிர்ந்தார்கள். (224)

உயர்தரு தானவ ருடைந்த தன்மையும்
புயவலி கொண்டுள பூதர் யாவருஞ்
சயமுடன் மேல்வரு தகவு நோக்கியே
கயமுக வவுணர்கோன் கனலிற் சீறினன்.

உயர்தரு தானவர் உடைந்த தன்மையும்—வடிவத்தால் நீண்ட அசுரர்கள் தோல்வியடைந்த தன்மையையும், புய வலி கொண்டுள—ஆயுதமின்றிப் புய வலிமை மாத்திரங் கொண்டுள்ள, பூதர் யாவரும்—குறுகிய பூதர்க ளெல்லாம், சயமுடன் மேல் வரு தகவும் நோக்கி—சயமுடன் முன்னேறி வருகின்ற தன்மையையும் நோக்கி, கயமுக அவுணர்கோன் கனலின் சீறினன்—அசுரர்க் கரசனான கயமுகன் அக்கினி போலச் சீற்றமுற்றான். (225)

உளத்தினில் வெகுண்டுசென் றொருதன் கைச்சிலை
வளைத்தன னத்துணை வளைத்துப் பேரமர்
விளைத்தனர் பூதர்க ளனையர் மெய்யெலாந்
துளைத்தனன் கணைமழை சொரிந்து துண்ணென.

உளத்தினில் வெகுண்டு சென்று ஒரு தன் கைச்சிலை வளைத்தனன்—உளத்தின்கட் கோபமுற்றுச் சென்று ஒப்பற்ற தனது கைக்கணுள்ள வில்லை வளைத்தான்; அ துணை பூதர்கள் வளைத்து பேரமர் விளைத்தனர்—அப்பொழுது பூதர்கள் அவனைச் சூழ்ந்து பெரும்போர் செய்தார்கள்; அனையர்

மெய்யெலாம் கணைமழை சொரிந்து துண்ணெனத் துளைத்தனன்—அப் பூதர்களின் மெய்ம் முழுதும் அம்புமழை சொரிந்து விரைந்து துளை செய்தான். (226)

அரந்தெறு பகழிக ளாகம் போழ்தலும்
வருந்தினர் திறலொடு வன்மை நீங்கின
ரிரிந்தனர் பூதர்கள் யாரு மோடினர்
புரந்தர னிமையவர் பொரும லெய்தவே.

அரம் தெறு பகழிகள் ஆகம் போழ்தலும்—அரத்தாலராவப்பட்ட பாணங்கள் உடலைப் பிளத்தலும், பூதர் யாரும்—பூதர்களெல்லாம், வருந்தினர்—வருத்தமுற்று, திறலொடு வன்மை நீங்கினர்—வீரமும் வன்மையும் நீங்கி, இரிந்தனர்—புறங்கொடுத்து, புரந்தரன் இமையவர் பொருமல் எய்த ஓடினர்—இந்திரனுந் தேவரும் வருந்தும்வண்ணம் ஓடினர்கள். (227)

கணநிரை சாய்தலுங் கண்டு மற்றது
மணிகிளர் கிம்புரி மருப்பு மாமுக
னிணையறு மசலன்மே லேகி வல்லையி
லணுகின னிபமுகத் தவுணர் கோனையே.

கண நிரை சாய்தலும் அது கண்டு—பூதகண அணி புறங்கொடுத்தலும் அதனைக் கண்டு, மணிகிளர் கிம்புரி மருப்பு மாமுகன்—மணி ஒளி கிளருகின்ற கிம்புரிப் பூண் பொருந்திய மருப்பினையுடைய ஆனைமுகக் கடவுள், இணையறும் அசலன் மேல் ஏகி—இணையற்ற அசலர் என்னும் பூதர்மீது சென்று, இபமுகத்து அவுணர் கோனை வல்லையில் அணுகினன்—அவுணர்க்கரசனாகிய கயமுகனை விரைவில் அணுகியருளினர். (228)

காருடை யிபமுகக் கடவுண் மேலையோ
னேருற வருதலு நின்ற தூதரைச்
சீருறு கயமுகத் தீய னோக்கியே
யாரிவண் பொருவதற் கணுகுற் றானென.

காருடை இபமுகக் கடவுள் மேலையோன்—கருநிறமுடைய யானையின் முகத்தினையுடைய விநாயகப்பெருமான், நேர் உற வருதலும்—தனக்கு எதிரே வருதலும், நின்ற தூதரை சீர் உறு கயமுகத் தீயன் நோக்கி—அங்கு நின்ற தூதுவர்களை வரத்தின் மிக்க கயமுகனாகிய கொடியோன் நோக்கி, இவண் பொருவதற்கு அணுகுற்றான் யார் என—இங்குப் போர் புரிவதற்கு அணுகியவன் யாவன் என்று வினவ. (229)

பரவிய வொற்றர்கள் பணைம ருப்புடைக்
கரிமுக முடையன்முக் கண்ண னைங்கர
னுருகெழு பூதன்மே லுறுகின் றான்சிவன்
பெருமக னாகுமிப் பிள்ளை தானென்றார்.

அ ஒற்றர்கள் பரவி—அந்தத் தூதுவர்கள் கயமுகனை வணங்கி, பணைமருப்புடை கரிமுகமுடையன்—பருத்த மருப்புப் பொருந்திய ஆனைமுகத்தனாய், முக்கண்ணன்—மூன்று கண்ணனாய், ஐங்கரன்—ஐந்து கரத்தனாய், உரு கெழு பூதன்மேல் உறுகின்றான் இப்பிள்ளை தான்—தோற்றம் மிக்க பூதன்மீது வருகின்றானாகிய இப்பிள்ளையாவான், சிவன் பெரு மகன் ஆகும் என்றார்—பெருமை பொருந்திய சிவகுமாரன் ஆவான் என்றார்கள். (230)

அன்னது கேட்டலு மவுணன் சீறியே
பன்னருங் கலைதெரி பாகை நோக்கிநம்
பொன்னிர தத்தினைப் புழைக்கை மாமுகன்
முன்னுறக் கடவுதி மொய்ம்ப வென்னவே.

அன்னது கேட்டலும்—அதனைக் கேட்டவுடன், அவுணன் சீறி—கயமுகன் கோபித்து, பன் அரும் கலை தெரி பாகை நோக்கி—சொல்லுதற்கரிய அசுவ நூல் தெரிந்த பாகனை நோக்கி, மொய்ம்ப—வலவ, நம் பொன் இரதத்தினை—நமது அழகிய தேரை, புழைக்கை மாமுகன் முன்னுறக் கடவுதி என்ன—துதிக்கையையுடைய ஆனைமுகனுக்கு எதிரே செல்லச் செலுத்தக்கடவை என்று கட்டளை செய்ய. (231)

கேட்டிடு வலவையோன் கிஞ்சு கக்குரத்
தாட்டிறற் பரியினந் தன்னின் மத்திகை
காட்டினன் றவறிலாக் கனகத் தேரினை
யோட்டின னைங்கரத் தொருவன் முன்னுற.

கேட்டிடு வலவையோன்—அதனைக் கேட்ட அதிசாமர்த்தியவானான பாகன், கிஞ்சுகக் குரம் தாள் திறல் பரியினம் தன்னில்—முருக்கம் பூப்போன்ற சிவந்த குளம்பினையுடைய கால் வலி படைத்த குதிரைகளின்மீது, மத்திகை காட்டினன்—சவுக்கைக் காட்டி எச்சரித்து, தவறிலா கனகம் தேரினை ஐங்கரத்து ஒருவன் முன்னுற ஓட்டினன்—குற்றமற்ற பொற்றேரை ஐந்து திருக்கரங்களையுடைய தனி முதல்வரான விநாயகப் பெருமானுக்கு எதிரே செலுத்தினன். (232)

ஆயிடைக் கரிமுகத் தவுண னைங்கரத்
தூயனை யழல்விழி சுழல நோக்கியே
காயெரி யெயிறுகக் கறைகொள் பற்களாற்
சேயித ழதுக்கியே யினைய செப்புவான்.

ஆயிடை கரிமுகத்து அவுணன்—அப்பொழுது கயமுகாசுரன், ஐங்கரத் தூயனை அழல் விழி சுழல நோக்கி—ஐந்துகரங்களையுடைய தூயோராகிய விநாயகப்பெருமானைக் கண்களில் அக்கினி சுழலப் பார்த்து, காய் எரி எயிறு உக—சுவாலிக்கின்ற அக்கினியைப் பற்கள் சொரியும்படி, கறைகொள் பற்களால் சேயிதழ் அதுக்கி—இரத்தக்கறை பொருந்திய பற்களாற் சிவந்த அதரங்களை அதுக்கி, இனைய செப்புவான்—இவைகளைச் சொல்லுவான்.

அதுக்கல்—கடித்தல்.　(233)

நுந்தையென் மாதவ நோக்கி முன்னரே
தந்திடு பெருவரந் தன்னைத் தேர்கிலை
யுய்ந்தனை போதிநின் னுயிர்கொண் டென்னெதிர்
வந்தனை யிறையது மதியி லாய்கொலோ.

நுந்தை என் மாதவம் நோக்கி—உன்னுடைய தந்தை எனது பெரிய தவத்தைப் பார்த்து, முன்னரே தந்திடும் பெருவரம் தன்னை தேர்கிலை—முன்னமே தந்த பெரிய வரத்தை நீ அறியாய்; நின் உயிர் கொண்டு உய்ந்தனை போதி—உனது உயிரை என்னிடம் பெற்றுக்கொண்டு உய்ந்து போகக்கடவை; இறையதும் மதி இலாய்கொல்—நீ சிறிதும் புத்தி இல்லாய்போலும்; என் எதிர் வந்தனை—அதனாலேதான் என் எதிரே அஞ்சாது வந்தாய்.　(234)

அன்றிநீ யமர்செய வமைதி யென்னினும்
வன்றிற லுனக்கிலை மைந்த வென்னெதிர்
பொன்றின ரல்லது போர்செய் தென்னைமுன்
வென்றவ ரிவரென விளம்ப வல்லையோ.

அன்றி—உயிர்கொண்டு உய்ந்து போதலன்றி, நீ அமர் செய அமைதி என்னின்-நீ என்னுடன் போர் செய்ய அமைவாயாயின், மைந்த—ஏ பிள்ளாய், உனக்கு வன் திறல் இலை—உனக்கு வலிய திறமை இல்லை; போர்செய்து என் எதிர் பொன்றினர் அல்லது—என்னுடன் போர்செய்து என் எதிரில் இறந்தாரையன்றி, முன்—இதற்கு முன், என்னை வென்றவர் இவர் என—என்னை வென்றவரிருந்தால் அவரை இவர் என்று, விளம்ப வல்லையோ—சுட்டிச் சொல்ல வல்லையோ.　(235)

உம், இரக்கக்குறிப்பு.

தேன்பெறு தருநிழற் றிருவின் வைகிய
வான்பெறு தேவரான் மக்க ளாலவ
ரூன்பெறு படைகளா லொழிந்தி டேனிது
நான்பெறு வரத்திய னவிலக் கேட்டியேல்.

தேன் பெறு தரு நிழல் திருவின் வைகிய—தேன் பொருந்திய கற்பக நிழலிலே செல்வத்தோடு வாழ்ந்த, வான் பெறு தேவரால்—வானத்திலுள்ள தேவர்களாலும், மக்களால்—மண்ணுலக மக்களாலும், அவர் ஊன் பெறு படைகளால்—அவர்களுடைய ஊனளாவுகின்ற படைகளாலும், ஒழிந்திடேன்—நான் அழியேன்; இது நான் பெறு வரத்து இயல்—இங்ஙனமாதல் நான் பெற்ற வரத்தின் மகிமை; நவிலக் கேட்டியேல்—மேலுங் கூறக் கேட்பாயானால்.

பின்னரும் பல உள என அடுத்த செய்யுளில் முடிபு காண்க. (236)

பின்னரும் பலவுள பெற்ற தொல்வர
மென்னைவெல் பவரெவ ரிந்தி ராதிபர்
தன்னிடர் தணிப்பவர் போலச் சார்ந்தனை
யுன்னைவென் றன்னவ ருயிரு முண்பனால்.

பெற்ற தொல் வரம் பின்னரும் பல உள—யான் பெற்ற தொன்மையாகிய வரங்கள் இன்னும் பல உள்ளன; என்னை வெல்பவர் எவர்—என்னை வெல்பவர் யாவருளர்; இந்திராதிபர் தன் இடர் தணிப்பவர் போலச் சார்ந்தனை—இந்திரன் முதலிய தலைவர்களின் துன்பங்களைத் தணிக்கும் ஒருவர் போல வந்தாய்; உன்னை வென்று அன்னவர் உயிரும் உண்பன்—உன்னை வெற்றிகொண்டு அவர்களுடைய உயிரையும் உண்பேன்.

எதுகை நோக்கித் தம் தன் என்றாயிற்று. (237)

பொருதெனை வென்றனை போக வல்லையேல்
வருதியென் றுரைத்தலும் வானு லாவிய
புரமெரி படுத்தவன் புதல்வ னவ்விடை
யருளுட னொருமொழி யறைவ தாயினன்.

எனை பொருது வென்றனை போக வல்லையேல்—என்னைப் பொருது வென்று செல்ல வல்லையானால், வருதி என்று உரைத்தலும்—போரிட வருவாயாக என்று கயமுகன் கூறுதலும், வான் உலாவிய புரம் எரிபடுத்தவன் புதல்வன்—வானத்தின்கட் பறந்து திரிந்த புரங்களை எரித்தருளிய சிவபெருமானுடைய புதல்வராகிய விநாயகப்பெருமான், அ இடை—அப்பொழுது, அருளுடன் ஒரு மொழி அறைவதாயினன்—கருணையோடு ஒரு வார்த்தை உரைத்தருளுதலைச் செய்தார். (238)

### வேறு

நிரந்தபல் படையு நாளு நிலைபெற நினக்குத் தொன்னுள்
வரந்தரு கின்ற வெந்தை வல்லைநின் னுயிரை வவ்விப்
புரந்தரன் முதலி னேர்க்குப் பொன்னினு டுதவி யன்னு
ரரந்தையு மகற்றிச் செல்கென் றருளின னெனக்கு மன்றே.

நிரந்த பல் படையும்—வலி நிறைந்த படைகளையும், நாளும்—வாழ் நாளையும், நிலைபெற நினக்கு தொன்னுள் வரம் தருகின்ற எந்தை—நிலை பெறும்பொருட்டு உனக்கு முன்னுளில் வரந்தரும் எம் பிதாத்தாமே, நின் உயிரை வல்லை வவ்வி—உன் உயிரை விரைவாகக் கவர்ந்து, புரந்தரன் முதலி னேர்க்குப் பொன்னின் நாடு உதவி—இந்திரன் முதலிய தேவர்களுக்கு அவர்களுடைய பொன்னுட்டைக் கொடுத்து, அன்னுர் அரந்தையும் அகற்றி—அவர்களுடைய துன்பத்தையும் நீக்கி, செல்க என்று—வருக என்று, எனக்கும் அருளினன்—எமக்கும் அருளிச்செய்தார். (239)

உன்னுயிர் காத்தி யென்னி னுறுதியொன் றுரைப்பன் கேண்மோ
பொன்னக ரதனை யிந்தப் புரந்தரன் புரக்க நல்கி
யிந்நிலத் தரசு செய்தே யிருத்தியஃ திசையா தென்னி
னின்னுயிர் முடிப்பா னேர்ந்து நின்றன னினைவென் னென்ருன்.

உன் உயிர் காத்தி என்னில்—உன் உயிரைப் பாதுகாத்துக்கொள்வா யாயின், உறுதி ஒன்று உரைப்பன் கேள்—நாம் ஓர் உறுதியைச் சொல்லு வோம் கேள்; பொன் நகர் அதனை இந்த புரந்தரன் புரக்க நல்கி—பொன் னுலகத்தை இந்த இந்திரன் அரசு செய்யும்படி கொடுத்து, இ நிலத்து அரசு செய்து இருத்தி—இம்மண்ணுலகில் அரசு செய்துகொண்டிரு; அஃது இசை யாது என்னின்—அது உனக்கு இசையாது ஆயின், நின் உயிர் முடிப்பான் நேர்ந்து நின்றனன்—நாம் உனது உயிரை முடித்தற்கு அமைந்து நின்றேம்; நினைவு என் என்ருன்—உன் எண்ணம் யாது என்று வினவியருளினுர். (240)

என்னலு மவுணன் பொங்கி யெரியுக விழித்துச் சென்ருேர்
பொன்னெடுஞ் சிலையை வாங்கிப் பொருக்கெனப் புரிநா ணேற்றி
மின்னுடை வடிம்பின் வாளி வீசலும் விமல னல்கு
முன்னவ னெழுவொன் றேந்தி முரணெடு சிந்தி நின்ருன்.

என்னலும்—என்று கூறியருளுதலும், அவுணன் பொங்கி—கயமுகன் கோபித்து, எரி உக விழித்து—அக்கினி சொரியப் பார்த்து, சென்று—அவ் விடத்தினின்றுஞ் சென்று, ஓர் பொன் நெடுஞ்சிலையை வாங்கி —ஒரு பொன் மயமான நீண்ட வில்லை வளைத்து, புரிநாண் பொருக்கென ஏற்றி—முறுக் கேறிய நாணை விரைந்து ஏற்றி, மின்னுடை வடிம்பின் வாளி வீசலும்—

ஒளிவீசுகின்ற கூரிய அம்புகளைச் செலுத்தலும், விமலன் நல்கு முன்னவன்—சிவகுமாரரான விநாயகப்பெருமான், எழு ஒன்று ஏந்தி முரணொடு சிந்தி நின்றான்—எழுவாயுதம் ஒன்றைத் தாங்கி வன்மையோடு அவற்றை அழித்து நின்றருளினார்.

எழு—வளைதடி. (241)

பொற்றனு முரிந்து வீழப் புழைக்கையிற் பிடித்த தண்டா
லெற்றின னனைய காலை யிபமுகத் தசுர னென்போன்
மற்றொரு சிலையைக் கையால் வாங்கினன் வாங்கு முன்னர்ச்
செற்றன னதனை மைந்தன் றிசைமுகன் முதலோ ரார்ப்ப.

பொன் தனு முரிந்து வீழப் புழைக்கையில் பிடித்த தண்டால் எற்றினன்—அழகிய வில்லும் முரிந்து விழும்வண்ணம் துதிக்கையிலே தாங்கிய தண்டினால் அடித்தருளினார்; அனைய காலை இபமுகத்தசுரன் என்போன் மற்றொரு சிலையைக் கையால் வாங்கினன்—அப்பொழுது கயமுகாசுரன் மற்றொரு வில்லைக் கையாலெடுத்தான்; வாங்கு முன்னர்—எடுக்கமுன்னரே, அதனை—அதனையும், திசைமுகன் முதலோர் ஆர்ப்ப மைந்தன் செற்றனன்—பிரமா முதலிய தேவர்கள் ஆரவாரஞ் செய்யச் சிவகுமாரர் அழித்தருளினார்.

உம்மை வருவிக்கப்பட்டது. வாங்கல் வளைத்தலுமாம். (242)

திண்டிறல் பெற்ற வீரச் சிலைமுரிந் திட்ட பின்னர்த்
தண்டமொன் றேந்தி யீசன் றனயனோ டெதிர்த லோடும்
விண்டது சோரும் வண்ணம் வெய்தெனப் புடைத்து மாயாக்
கண்டக னுரத்திற் றாக்கக் கையற வெய்தி நின்றான்.

திண் திறல் பெற்ற வீரச் சிலை முரிந்திட்ட பின்னர்—திண்ணிய திறலமைந்த வீரம்மிக்க வில்லு முரிந்த பிறகு, தண்டம் ஒன்று ஏந்தி—ஒரு தண்டத்தைத் தாங்கி, ஈசன் தனயனோடு எதிர்தலோடும்—சிவகுமாரரான விநாயகப்பெருமானோடு எதிர்த்தலும், அது விண்டு சோரும் வண்ணம்—அத்தண்டு கையைவிட்டுச் சோர்ந்து வீழும்வண்ணம், வெய்தெனப் புடைத்து—விரைந்து அடித்து, மாயாக் கண்டகன் உரத்தில் தாக்க—அழியாத கீழோனான கயமுகனது மார்பிலும் அடிக்க, கையறவு எய்தி நின்றான்—அவன் செயலற்று நின்றான்.

வெய்தென் என்பதற்கு வெப்பம் உள்ளதாக எனினுமாம். அத்தண்டத்தைப் புடைத்து மாய்த்து எனினுமாம். (243)

நடுங்கினன் சிந்தை யொன்று நவில்கில னுணத் தாலே
யொடுங்கினன் கயவெஞ் சூர னுலந்தனன் போல நின்றா
னடும்பரி களிறு திண்டே ரணிகெழு தானை யாரிற்
படும்படி நினைந்து முன்னோன் பாசமொன் றுய்த்தா னன்றே.

கய வெம் சூரன்—கொடிய கயமுகாசுரன், சிந்தை நடுங்கினன்—மனம் நடுங்கி, ஒன்றும் நவில்கிலன்—ஒன்றும் பேசாதவனாய், நாணத்தால் ஒடுங்கினன்—நாணத்தாலொடுங்கி, உலந்தனன்போல நின்றான்—இறந்தவனை ஒப்ப நின்றான்; அடும் பரி களிறு திண் தேர் அணிகெழு தானை—அடுகின்ற குதிரை யானை திண்ணிய தேர் அணிவகுத்து நின்ற காலாட்படை இவையெல்லாம், பாரில் படும்படி நினைந்து—பூமியில் வீழ்ந்திறந்துபடும்படி நினைந்து, முன்னோன் பாசம் ஒன்று உய்த்தான்—மூத்தபிள்ளையார் தமது ஒன்றாகிய பாசத்தை விடுத்தருளினார், (244)

விட்டவெம் பாச மங்கண் வெய்யதோர் சேனை முற்றுங்
கட்டிய தாக மைந்தன் கணிச்சியு மதற்பி னேவ
வட்டதா லதனை நோக்கி யாடின ரமரர் தானை
பட்டன வுணர்ந்து தீயோன் பதைபதைத் துயிர்த்து நொந்தான்.

விட்ட வெம் பாசம்—விடுத்த வெவ்விய பாசமானது, அங்கண் வெய்யது ஓர் சேனை முற்றும் கட்டியதாக—அவ்விடத்திற் கொடியதாகிய ஒப்பற்ற சேனை முழுவதையுங் கட்டிற்றாக; அதன்பின் மைந்தன் கணிச்சியும் ஏவ அட்டது—அதன்பின்பு பிள்ளையார் மழுப்படையையுந் தூண்ட அது அச் சேனைகளை அழித்தது; அதனை நோக்கி அமரர் ஆடினர்—அதனை நோக்கித் தேவர்கள் கூத்தாடினார்கள்; தீயோன் தானை பட்டன உணர்ந்து-கொடியோனான கயமுகன் சேனைகள் அழிந்ததை அறிந்து, பதைபதைத்து உயிர்த்து நொந்தான்—துடிதுடித்து நெட்டுயிர்த்து வருந்தினான்.

பட்டன, தொழிற்பெயர். (245)

முந்துதன் கரத்தி லுள்ள முரண்கெழு படைகள் யாவுஞ்
சிந்தின னவைக ளெல்லாஞ் சேர்ந்தன திங்கள் சூடு
மெந்தையை வலஞ்செய் தேத்தி யேவலி னியன்ற மாதோ
வெந்திற லவுணன் மேன்மேல் வெகுளித்தீக் கனல நின்றான்.

தன் கரத்தில் உள்ள—தன் கையில் உள்ள, முந்து—முந்திச்செல்லுகின்ற, முரண் கெழு—வன்மை வாய்ந்த, படைகள் யாவும் சிந்தினன்—தெய்வப் படைகள் அனைத்தையுஞ் செலுத்தினான்; அவைகள் எல்லாம் திங்கள் சூடும் எந்தையைச் சேர்ந்தன—அப்படைகளெல்லாஞ் சந்திரனைத் தரித்த எமது பிதாவாகிய விநாயகப்பெருமானைச் சரணடைந்தனவாய், வலம் செய்து—அப்பெருமானை வலம் வந்து, ஏத்தி ஏவலின் இயன்ற—துதித்து அவருடைய ஏவலின்வழி ஒழுகின; வெம் திறல் அவுணன் மேல் மேல் வெகுளித் தீ கனல நின்றான்—கொடுந் திறலினனான கயமுகன் மேலும் மேலுங் கோபாக்கினி மூள நின்றான். (246)

நின்றவன் றன்னை நோக்கி நெடியபல் படைக ளேவிற்
சென்றிவன் றன்னைக் கொல்லா சிவனருள் வரத்தின் சீரா
லின்றினிச் செய்வ தென்னென் றிறைவரை யுன்னி யெந்தை
தன்றிருக் கோட்டி லொன்று தடக்கையின் முரித்துக் கொண்டான்.

நின்றவன் தன்னை நோக்கி—எதிரில் நின்றோனாகிய கயமுகனைப் பார்த்து, நெடிய பல் படைகள் ஏவின்—நெடிய பலவாகிய படைகளை இவன்மேற் செலுத்தினால், சிவன் அருள் வரத்தின் சீரால்—சிவபெருமான் கொடுத் தருளிய வரத்தின் சிறப்பினால், சென்று இவன் தன்னை கொல்லா—அப் படைகள் சென்று இவனைக் கொல்லமாட்டா; இன்று இனி செய்வது என் என்று—இப்பொழுது இனி இவனைக் கொல்வதற்குச் செய்வது யாது என்று, இறைவரை உன்னி—இறைப்பொழுது சிந்தித்து, எந்தை—எம்பெருமான், தன் திருக்கோட்டில் ஒன்று தடக்கையின் முரித்துக்கொண்டான்—தமது திருக்கோடுகளில் ஒன்றை விசாலித்த திருக்கரத்தினால் முரித்து அதனைத் தாங்கியருளினர்.

முரித்துத் தடக்கையில் கொண்டானுமாம். (247)

தடக்கையி லேந்து கோட்டைத் தந்தியா மவுணன் மீது
விடுத்தலு மனையன் மார்பை வெய்தெனக் கீண்டு போகி
யுடற்படி மிசையே வீழ்த்தி யொல்லையி லோடித் தெண்ணீர்க்
கடற்படிந் தமலன் மைந்தன் கரத்தில்வந் திருந்த தன்றே.

தடக்கையில் ஏந்து கோட்டை—விசாலமான திருக்கரத்திலே தாங்கிய கொம்பை, தந்தியாம் அவுணன்மீது—கயமுகாசுரன் மீது, விடுத்தலும்—விடுத் தருளுதலும், அனையன் மார்பை வெய்தென கீண்டு போகி—அக் கயமுகனது மார்பை விரைந்து பிளந்து, உடல் படிமிசையே வீழ்த்தி—அவனுடலைப் பூமியிலே வீழ்த்தி, ஒல்லையில் ஓடி—விரைவில் அப்பாற் சென்று, தெண்ணீர் கடல் படிந்து—தெளிந்த சுத்தோதக சமுத்திரத்தில் முழுகி, அமலன் மைந்தன் கரத்தில் வந்திருந்தது—நின்மலரான சிவகுமாரர் திருக்கரத்தில் வந்து வீற்றிருந்தது. (248)

புயலினத் தொகுதி யொன்றிப் புவிமிசை வழுக்கிற் றென்னக்
கயமுகத் தவுணன் முந்நீர்க் கடலுடைந் தென்ன வார்த்திட்
டியலுடைத் தேர்மேல் வீழா வெய்த்தன னவன்றன் மார்பில்
வியனதித் தாரை யென்ன விரிந்தன குருதி வெள்ளம்.

புயல் இனத் தொகுதி ஒன்றி புவிமிசை வழுக்கிற்று என்ன—மேகக் கூட்டம் ஒன்றுபட்டுப் பூமியின்மீது வழுக்கி விழுந்தது போலவும், முந்நீர் கடல் உடைந்தென்ன—மூவகை நீரையுடைய கடல் கரையுடைந்தாற்போலவும், கயமுகத்து அவுணன் ஆர்த்திட்டு இயலுடை தேர்மேல் வீழா எய்த்தனன்—

கயமுகாசுரன் ஆரவாரஞ்செய்து இலக்கணமமைந்த தேர்த்தட்டின்மீது விழுந்து சோர்ந்தான்; அவன்தன் மார்பில்—அவனது மார்பினின்றும், குருதி வெள்ளம்—இரத்தப் பெருக்குக்கள், வியன் நதித் தாரை என்ன—பெரிய தொரு ஆற்றுப் பெருக்குப் போல, விரிந்தன—பெருகி ஓடின. (249)

ஏடவி ழலங்கற் றிண்டோ ளிபமுகத் தவுணன் மார்பி
னீடிய குருதிச் செந்நீர் நீத்தமா யொழுகும் வேலைப்
பாடுற வருங்கா னொன்றிற் பரத்தலி னதுவே செய்ய
காடெனப் பெயர்பெற் றின்னுங் காண்டக விருந்த தம்மா.

ஏடு அவிழ் அலங்கல் திண் தோள் இபமுகத்து அவுணன்—இதழ்விண் டலருகின்ற மலர்மாலையை அணிந்த திண்ணிய தோள்களையுடைய கயமுகா சுரனது, மார்பில் நீடிய குருதி செந்நீர்—மார்பினின்றும் பெருகிய சிவந்த இரத்த வெள்ளம், நீத்தமாய் ஒழுகும் வேலை—பிரவாகமாய் நடக்குஞ் சமயத்து, பாடு உற வரும் கான் ஒன்றில் பரத்தலின்—பக்கத்திற் பொருந்திய காடொன்றில் அவ்விரத்த யாறு பரவியதால், அது—அக்காடு, செய்ய காடு எனப் பெயர் பெற்று—திருச்செங்காடு என்னுங் காரணப் பெயரைப் பெற்று, இன்னும் காண் தக இருந்தது—இன்னும் நம்மனோர் தரிசிக்கும்படி இருந்தது.

இதுவே பிள்ளை அறுத்துப் பெருவிருந்திட்ட தலம். (250)

ஆய்ந்தநல் லுணர்வின் மேலோ ரறிவினு மணுகா வண்ண
லீந்ததொல் வரத்தான் மாயா விபமுகத் தவுணன் வீழ்ந்து
வீந்தனன் போன்று தொல்லை மெய்யொரீஇ விண்ணு மண்ணுந்
தீந்திட வெரிகண் சிந்தச் சீற்றத்தோ ராகு வானான்.

ஆய்ந்த நல் உணர்வின் மேலோர் அறிவினும் அணுகா அண்ணல்—ஆராய்ந்த நல்ல அறிவான் மேம்பட்டாரது அறிவுக்கும் எட்டாத சிவ பெருமான், ஈந்த தொல் வரத்தால் மாயா இபமுகத்து அவுணன்— கொடுத் தருளிய பழைய வரத்தினால் இறவாத கயமுகாசுரன், வீழ்ந்து வீந்தனன் போன்று தொல்லை மெய் ஒரீஇ—வீழ்ந்து இறந்தவன்போன்று பழைய யானைமுக உடலை விடுத்து, விண்ணும் மண்ணும் தீந்திட—விண்ணுலகும் மண்ணுலகுந் தீந்துபோகுமாறு, எரி கண் சிந்த—அக்கினியைக் கண்கள் சிந்த, சீற்றத்து ஓர் ஆகு ஆனான்—சீற்றத்தினையுடையதொரு பெருச்சாளி வடிவங் கொண்டான். (251)

தேக்கிய நதிசேர் கின்ற சென்னியன் செம்ம றன்னைத்
தாக்கிய வருத லோடுஞ் சாரதன் றோளி னீங்கி
நீக்கருந் துப்பின் றாக்கி நீநமைச் சுமத்தி யென்று
மேக்குயர் பிடரிற் றாவி வீற்றிருந் தூர்த லுற்றான்.

தேக்கிய நதி சேர்கின்ற சென்னியன் செம்மல் தன்னை தாக்கிய வருதலோடும்—நிறைந்த கங்கை பொருந்தியிருக்கின்ற சடையையுடைய சிவபெருமானின் குமாரரான விநாயகப்பெருமானைத் தாக்கும்பொருட்டு வருதலும், சாரதன் தோளின் நீங்கி-அசலராகிய பூதரின் புயத்தினின்றும் நீங்கி, நீக்கு அரும் துப்பு இன்றாக்கி—நீக்குதற்கரிய வலியைக் குறைத்து, நீ நமைச் சுமத்தி என்று—ஆகுவே நீ நம்மைச் சுமப்பாயாக என்று, மேக்கு உயர் பிடரில் தாவி—மேலுயர்ந்த அதன் பிடரில் இவர்ந்து, வீற்றிருந்து ஊர்தலுற்றான்—வீற்றிருந்தருளி அதனை ஊர்தியாக ஊர்வாராயினர்.

செம்மல் என்பதனை எழுவாயாகக் கோடலுமாம். (252)

மற்றது கண்ட தேவர் வாசவன் முதலோர் யாரு
மிற்றனன் கயவெஞ் சூர னெம்மிடர் போயிற் றன்றே
யற்றதெம் பகையு மென்னு வாடினர் பாடா நின்றார்
சுற்றிய கலிங்கம் வீசித் துண்ணென விசும்பு தூர்த்தார்.

அதுகண்ட வாசவன் முதலோர் தேவர் யாரும்—அதனைக் கண்ட இந்திரன் முதலிய தேவர்கள் அனைவரும், கயவெஞ் சூரன் இற்றனன்—கொடிய கயமுகாசுரன் இறந்தான்; எம் இடர் போயிற்று—எமது துன்பந் தொலைந்தது; எம் பகையும் அற்றது என்னு—எமது பகையும் முடிந்தது என்று, ஆடினர் பாடா நின்றார்—ஆடிப் பாடி, சுற்றிய கலிங்கம் வீசி—அரையில் உடுத்த வஸ்திரத்தை வானத்தில் வீசி, துண்ணென விசும்பு தூர்த்தார்—விரைவில் வானத்தை நிறைத்து மறைத்தார்கள்.

ஆனந்த மிகுதியாற் செய்வதின்னதென்று தெரியாது உத்தரீயத்தை வீசவேண்டியவர்கள் சுற்றிய கலிங்கம் வீசினர் என்க. (253)

காமரு புயலின் றோற்றங் காண்டலுங் களிப்பின் மூழ்கி
யேமரு கலாப மஞ்ஞை யினமெனக் குலவு கின்றார்
தேமரு மிதழி யண்ணல் சிறுவனைத் தெரியா வண்ணம்
பூமலர் பொழிந்து நின்று புகழினைப் போற்ற லுற்றார்.

காமரு புயலின் தோற்றம் காண்டலும் களிப்பின் மூழ்கி—விருப்பத்தை விளைக்கின்ற மேகத்தின் தோற்றத்தைக் கண்டவுடன் ஆனந்தத்தில் மூழ்கி, ஏமரு கலாப மஞ்ஞை இனமெனக் குலவுகின்றார்—இறுமாப்பெய்துகின்ற தோகையையுடைய மயிற் கூட்டம் போலக் கொண்டாடுகின்ற தேவர்கள், தேமரும் இதழி அண்ணல் சிறுவனை தெரியாவண்ணம்—தேன் பொருந்திய கொன்றை மாலையை அணிந்த சிவபெருமானுடைய குமாரராகிய பிள்ளையாருடைய திருமேனி மறையும் வண்ணம், பூமலர் பொழிந்து நின்று—பூத்த மலர்மழையைப் பொழிந்து நின்று, புகழினை போற்றலுற்றார்—அவருடைய புகழைத் துதிப்பாராயினர். (254)

காப்பவ னருளு மேலோன் கண்ணகன் ஞாலம் யாவுந்
தீப்பவ னேனைச் செய்கை செய்திடு மவனு நீயே
யேப்படுஞ் செய்கை யென்ன வெமதுளம் வெதும்பு மின்ன
னீப்பது கருதி யன்றோ நீயருள் வடிவங் கொண்டாய்.

காப்பவன்—காத்தற் றொழில் செய்யுந் திருமாலும், அருளும் மேலோன்—படைத்தற்றொழிலைச் செய்யும் மேலோரான பிரமதேவரும், கண்ணகல் ஞாலம் யாவும் தீப்பவன்—இடமகன்ற உலகமனைத்தையும் அழிப்பவரான உருத்திரரும், ஏனை செய்கை செய்திடும் அவனும்—ஏனைய செய்கைகளாகிய திரோபவ அநுக்கிரகங்களைச் செய்யும் மகேசுவரரும் சதாசிவருமாகிய பஞ்ச கிருத்திய கருத்தாக்களும், நீயே—தேவரீரேயாம்; ஏ படும் செய்கை என்ன எமது உளம் வெதும்பும் இன்னல் நீப்பது கருதி யன்றோ—அம்பால் துளைபடுந் தன்மை போல எமது மனம் வெதும்புகின்ற துன்பத்தை நீக்குவதைத் திருவுளத்துக் கொண்டன்றோ, நீ அருள் வடிவம் கொண்டாய்—தேவரீர் இந்த அருள் வடிவத்தைக் கொண்டருளினீர்.

'ஏனைச் செய்கை செய்திடு மவன்' என்பதை இரட்டுற மொழிந்து கொள்க. (255)

உன்னிடைப் பிறந்த வேத முன்பெரு நிலைமை தன்னை
யின்னதென் றுணர்ந்த தில்லை யாமுனை யறிவ தெங்ங
னன்னையும் பயந்தோன் றானு மாயினை யதனுன் மைந்தர்
பன்னிய புகழ்ச்சி யாவும் பரிவுடன் கேட்டி போலாம்.

உன்னிடை பிறந்த வேதம்—தேவரீரிடத்துப் பிறந்த வேதமானது, உன் பெரு நிலைமை தன்னை இன்னது என்று உணர்ந்தது இல்லை—தேவரீருடைய உயர்பெரு நிலையை இவ்வியல்பிற்று என்று அறிந்ததில்லை; யாம் உனை அறிவது எங்ஙன்—அங்ஙனமாகத் தேவரீரைச் சிறியேம் அறிவதெப்படி; அன்னையும் பயந்தோன் தானும் ஆயினை—தேவரீர் அன்னையும் பிதாவுமாயினீர்; அதனுல்—அக்காரணத்தால், மைந்தர் பன்னிய புகழ்ச்சி யாவும்—புதல்வர்களாகிய நாங்கள் கூறிய புகழ்ச்சி அனைத்தையும், பரிவுடன் கேட்டி போலாம்—அன்போடு கேட்டருளுவீர் போலும். (256)

என்றிவ ரெகின மூரு மிறையொடு மிறைஞ்சி யேத்தி
நன்றிகொள் சிந்தை யோடு நகையொளி முகத்த ராகி
மன்றவர் குமரன் றன்பால் வந்தனர் சூழ்த லோடு
மொன்றிய கருணை நோக்கா லுலப்பிலா வருள்பு ரிந்தான்.

என்று இவர் எகினம் ஊரும் இறையொடும் இறைஞ்சி ஏத்தி—என்றிங்ஙனம் தேவர்கள் அன்னத்தை ஊரும் பிரமதேவரோடும் வணங்கித் துதித்து, நன்றிகொள் சிந்தையோடு நகை ஒளி முகத்தர் ஆகி—நன்றி பொருந்திய உள்ளத்தோடு உவகைச் சிரிப்பாலாய ஒளிபொருந்திய முகத்தை உடையவ

ராய், மன்றவர் குமரன் தன்பால் வந்தனர் சூழ்தலோடும்—பொன்னம் பலவர் குமாரரான விநாயகப்பெருமானிடம் வந்து சூழ்தலும், ஒன்றிய கருணை நோக்கால் உலப்பிலா அருள் புரிந்தான்—அவர்கள்பா லொன்றிய கிருபாநோக்கத்தோடு அளவில்லாத திருவருளைப் புரிந்தார். (257)

உய்ந்தன மினி நா மென்னு வோதிம முயர்த்தோன் வெள்ளைத்
தந்தியன் யாரும் போற்றிச் சார்தலுஞ் சமரின் முன்னம்
வெந்தொழி லவுணன் காய வீந்திடு பூதர் தம்மை
யெந்தையங் கினிது நோக்கி யெழுதிரென் றருளிச் செய்தான்.

இனி நாம் உய்ந்தனம் என்னு—இனி நாம் உய்ந்தோமென்று, ஓதிமம் உயர்த்தோன் வெள்ளை தந்தியன் யாரும் போற்றி சார்தலும்—அன்னக் கொடியினரான பிரமதேவரும் வெள்ளையானையினையுடைய இந்திரனும் ஏனை யோரும் துதித்துத் தம்பக்கல் வருதலும், சமரில் முன்னம் வெம்தொழில் அவுணன் காய வீந்திடும் பூதர் தம்மை—யுத்தத்தில் முன்னர்க் கொடுந் தொழிலையுடைய கயமுகாசுரன் கொல்ல இறந்த பூதர்களை, எந்தை அங்கு இனிது நோக்கி—எம்பெருமான் அவ்விடத்திற் கருணையுடன் நோக்கி, எழுதிர் என்று அருளிச் செய்தான்—எழுவீராக என்றருளிச் செய்தார். (258)

அவ்வகை யருள லோடு மரவென வெழுந்து போற்றி
மைவரை மிடற்றுப் புத்தேண் மைந்தனை வணங்கி யேத்தி
யெவ்வமில் பூதர் யாரு மீண்டின ரினைய வெல்லாஞ்
செவ்விதி னுணர்ந்து கொண்டான் றேசிலா நிருதர்க் கீசன்.

அவ்வகை அருளலோடும்—அவ்வாறருளிச்செய்தவுடன், அர என எழுந்து போற்றி—ஹர ஹர என்று சொல்லிக்கொண்டெழுந்து துதித்து, மைவரை மிடற்று புத்தேள் மைந்தனை வணங்கி ஏத்தி—கருநிறங்கொண்ட மிடற்றின ரான சிவபெருமானின் புதல்வராகிய விநாயகப்பெருமானை வணங்கிப் புகழ்ந்து, எவ்வம் இல் பூதர் யாரும் ஈண்டினர்—துன்பமில்லாத பூதர்க ளெல்லாம் நெருங்கிச் சேவித்தார்கள்; இனைய வெல்லாம்—இவையனைத் தையும், தேசிலா நிருதர்க்கு ஈசன் செவ்விதின் உணர்ந்துகொண்டான்—தேசிழந்த அசுரர் தலைவனுன அசுரேந்திரன் செவ்வனே அறிந்தான். (259)

மந்திரி யோடுஞ் சூழ்ந்து வருந்தினன் புலம்பி மாழ்கி
யுய்ந்தனன் போவல் யானென் றுன்னியோர் பறவை யாகி
யந்தரத் திறந்த புள்ளோ டணுகியப் பதியை நீங்கிச்
சிந்தையிற் செல்லல் கூரச் செம்பொன்மால் வரையிற் சென்றான்.

மந்திரியோடும் சூழ்ந்து—முதன் மந்திரியாகிய சுக்கிராசாரியருடன் ஆலோ சித்து, வருந்தினன் புலம்பி மாழ்கி—வருந்திப் புலம்பி மயங்கி, யான் உய்ந்த னன் போவல் என்று உன்னி—இனி யான் உயிர் உய்ந்து பிழைப்பேன் என்று நினைந்து, ஓர் பறவையாகி—ஒரு பறவை வடிவெடுத்து, அந்தரத்து

இறந்த புள்ளோடு அணுகி—ஆகாயத்திற் பறந்த பறவைகளோடு கலந்து. அ பதியை நீங்கி—அந்த மதங்கமாபுரத்தை விட்டு நீங்கி, சிந்தையில் செல்லல் கூர—மனத்தின்கண் துன்பம் அதிகரிக்க, செம் பொன் மால் வரையில் சென்றான்—பெரிய செம்பொன் மலையாகிய மேருமலையை அடைந்தான். (260)

தாழுறு சார லூடு தபனனு முணராத் தாருச்
சூழலொன் றுண்டா லங்கட் சுருங்கையோ டிருந்த சேமப்
பூழையுட் புலம்பி யுற்றான் பொன்னக ரிறைக்கு மங்க
ணூழிவெங் காலிற் சூழு முலப்பில்பூ தர்க்கு மஞ்சி.

பொன்னகர் இறைக்கும்—சுவர்க்காதிபதியாகிய இந்திரனுக்கும், அங்கண் ஊழிவெம் காலில் சூழும் உலப்பில் பூதர்க்கும்—அவ்விடத்திலுள்ள வெவ்விய ஊழிக்காற்றினைப்போலச் சூழுகின்ற அளவில்லாத பூதர்களுக்கும், அஞ்சி—பயந்து, தாழுறு சாரலூடு—தாழ்ந்த மலைச்சாரலில், தபனனும் உணரா தாரு சூழல் ஒன்று உண்டு—சூரியனுடைய கிரணங்களும் நுழைந்தறியாத தருக்கள் நிறைந்ததொரு சோலை உளது; அங்கண் சுருங்கையோடு இருந்த—அவ்விடத்திலே நுழைவாயிலோடு கூடிய, சேமப் பூழையுள் புலம்பி உற்றான்—பாதுகாப்புள்ளதொரு முழைஞ்சிலே தனித்திருந்தான். (261)

வானவர் பகைஞ னந்த மதங்கமா புரியை நீங்கிப்
போனதோர் காலை மற்றைப் புகருமோர் புள்ள தாகித்
தானுறை யுலகு நண்ணித் தவமறைந் தல்ல தாற்றி
யூனுட லோம்பு வார்போ லொருப்படா யோகி லுற்றான்.

வானவர் பகைஞன் அந்த மதங்கமாபுரியை நீங்கி போனது ஓர் காலை—தேவரின் பகைவனான அசுரேந்திரன் அந்த மதங்கமாபுரியை விட்டு நீங்கிப் போன அதே சமயத்தில், புகரும் ஓர் புள்ளது ஆகி—சுக்கிரபகவானும் ஒரு பறவைவடிவெடுத்து, தான் உறை உலகு நண்ணி—தாமிருக்கும் உலகத்தை அடைந்து, தவம் மறைந்து அல்லது ஆற்றி—தவக்கோலத்துள் மறைந்து அவத்தைச் செய்துகொண்டு, ஊன் உடல் ஓம்புவார்போல்—ஊனுடலை ஓம்பு பவரைப் போல, ஒருப்படா யோகில் உற்றான்—மனம் ஒருப்படாத யோகத்தி லமர்ந்தார்.

அசுரேந்திரன் போகத் தனித்தமையின் 'மற்றைப் புகர்' என்றார். அசுரர்க்கு நேர்ந்த இழுக்கமும் தேவர்கள் கொள்ளும் வெறுப்பும் மனம் ஒருப்படாமைக் காரணமாம் என்க. (262)

பூதரு மன்ன வேலைப் புரிசைசூழ் நகரம் போகி
நீதியி லவுண ராகி நிறங்கிளர் படைகொண் டோரைக்
காதிவெஞ் சினப்போர் முற்றிக் களத்திடை வருத லோடு
மாதிதந் தருளு மைந்த னவ்விடை யகன்று மீண்டான்.

பூதரும் அன்ன வேலை புரிசை சூழ் நகரம் போகி—பூதர்களும் அப்பொழுது மதில்சூழ்ந்த மதங்கமாபுரத்தை அடைந்து, நீதி இல் அவுணராகி—நீதியற்ற அசுரர்களாய், நிறம் கிளர் படை கொண்டோரை—இரத்த நிறங் கிளருகின்ற படைகளைத் தாங்கிய ஆயுதபாணிகளை, காதி—கொன்று, வெம் சினப் போர் முற்றி—கொடுஞ் சினத்தோடு கூடிய போரை முடித்து, களத்திடை வருதலோடும்—போர்க்களத்தினிடத்தில் வருதலும், ஆதி தந்தருளும் மைந்தன்—சிவகுமாரரான பிள்ளையார், அவ்விடை அகன்று மீண்டான்—அப் போர்க்களத்தினின்றும் மீண்டுசென்றருளினர். (263)

மீண்டுசெங் காட்டி லோர்சார் மேவிமெய்ஞ் ஞானத் தும்பர்த்
தாண்டவம் புரியுந் தாதை தன்னுருத் தாபித் தேத்திப்
பூண்டபே ரன்பிற் பூசை புரிந்தனன் புவியு ளோர்க்குக்
காண்டகு மனைய தானங் கணபதீச் சரம தென்பார்.

மீண்டு—போர்க்களத்தினின்றும் மீண்டு, செங்காட்டில் ஓர் சார் மேவி—திருச்செங்காட்டில் ஒப்பற்றதோரிடத்தை அடைந்து, மெய் ஞானத்து உம்பர் தாண்டவம் புரியும் தாதை தன்னுரு தாபித்து—உண்மைஞானத்தின் உச்சியிலே தாண்டவம் புரிகின்ற பரம பிதாவின் சிவலிங்க வடிவமொன்றைப் பிரதிட்டை செய்து, ஏத்தி—துதித்து, பூண்ட பேரன்பில் பூசை புரிந்தனன்—ஒன்றுபட்ட பேரன்போடு சிவபூசை செய்தருளினர்; புவியுளோர்க்கு காண் தகும் அனைய தானம்—பூமியிலுள்ளவர்க்கு எளிதில் தரிசிக்கத்தகும் அந்தத் தலத்தை, கணபதீச்சரமது என்பார்—கணபதீச்சரம் என்று வழங்குவர் மேலோர். (264)

புரமெரி படுத்தோன் றன்னைப் பூசனை புரிந்த பின்ன
ரெரிவிழி சிதறு மாகு வெருத்தமே லினிதி னேறிச்
சுரபதி யயன்விண் ணோர்க டொழுதுடன் சூழ்ந்து போற்ற
வரவென மாலோன் வைகு மாலமா வனத்திற் புக்கான்.

புரம் எரி படுத்தோன் தன்னை பூசனை புரிந்த பின்னர்—திரிபுரத்தைத் தீயிட்டழித்தருளிய சிவ பரம்பொருளைப் பூசனை செய்தபின்பு, எரிவிழி சிதறும் ஆகு எருத்தமேல் இனிதின் ஏறி—அக்கினியை விழியாற் சிந்துகின்ற ஆகு வாகனத்தின் எருத்தமீது இனிது இவர்ந்தருளி, சுரபதி அயன் விண்ணோர்கள் தொழுது சூழ்ந்து போற்ற—இந்திரனும் பிரமாவுந் தேவர்களும் வணங்கிச் சூழ்ந்து துதிக்க, உடன்—அவர்களோடு, மாலோன் அரவு என வைகும் ஆல மாவனத்தில் புக்கான்—திருமால் பாம்புருவமாகத் தவஞ் செய்துகொண்டிருக்கின்ற பெரிய ஆலவனத்தின்கண் எழுந்தருளினர். (265)

கயமுக னுற்பத்திப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—1172.

# அனந்தன் சாப நீங்கு படலம்

புக்கதொரு பொழுதிலங்கண் முந்தோ ராலம்
பொந்தினிடை யிருந்தமலன் பொற்ருளுன்னி
மிக்கதவம் புரிமாலைங் கரத்து முன்னேன்
மேவியது மனங்கொண்டு விரைவி னுங்கே
யக்கணமே யெதிர்சென்று வழுத்திக் காண
வம்மையளித் தருள்சாப மகற லோடுஞ்
சக்கரமே முதலியவைம் படைகளேந்தித்
தனுதுதொல்லைப் பேருருவந் தன்னைப் பெற்ருன்.

புக்கது ஒரு பொழுதில்—விநாயகப்பெருமான் ஆலவனத்துக்கு எழுந் தருளிய சமயத்தில், அங்கண் முந்து ஓர் ஆலம் பொந்தினிடை இருந்து— அவ் வனத்தின்கண்ணே முன்னம் ஓர் ஆலமரத்தின் பொந்தினுள்ளே இருந்து, அமலன் பொன் தாள் உன்னி—நின்மலராகிய பரம்பொருளின் அழகிய திருவடிகளைத் தியானஞ்செய்து, மிக்க தவம் புரி மால்—மேலான தவத்தைச் செய்கின்ற திருமால், ஐங்கரத்து முன்னேன் மேவியது மனங்கொண்டு— ஐந்து திருக்கரங்களையுடைய மூத்த பிள்ளையார் ஆண்டெழுந்தருளியதை மன உணர்வானறிந்து, ஆங்கே அக்கணமே விரைவின் எதிர் சென்று—அவ்விடத்தி னின்றும் அந்தக்கணமே விரைந்து எதிர்சென்று, வழுத்திக் காண—துதித்துப் பிள்ளையாரைத் தரிசித்த மாத்திரத்தே, அம்மை அளித்தருள் சாபம் அகல்த லோடும்—உமாதேவியார் இட்டருளிய சாபம் அகன்றதாக; சக்கரமே முதலிய ஐம்படைகள் ஏந்தி—சக்கரம் சங்கு தண்டு வில் வாள் ஆகிய பஞ்சாயுதங்களைத் தரித்து, தனுது தொல்லைப் பேருருவம் தன்னைப் பெற்ருன்—தமது பழைமை யான பெருமை பொருந்திய திருவுருவத்தைப் பெற்ருர். (1)

மாலோன்றெல் லுருவுதன்பான் மேவக் கண்டு
மகிழ்சிறந்து சிவனருளை மனங்கொண் டேத்தி
மேலோன்றன் முன்னரெய்தி வணக்கஞ் செய்து
மீண்டுமவன் றனைத்துதித்து விமல நீயென்
பாலோங்கு பூசனைகொண் டருளல் வேண்டும்
பணித்தருள்க வாதிபரா பரத்தின் பாலாய்
மூலோங்கா ரப்பொருளா யிருந்தாண் முன்ன
மொழிந்தருள்சா பந்தொலைத்த முதல்வ வென்ருன்.

மாலோன் தொல் உருவு தன்பால் மேவ கண்டு மகிழ் சிறந்து—திருமால் தமது பழைய வடிவம் தம்பால் வந்து பொருந்த அதனைக்கண்டு மகிழ்ச்சி மிக்கு, சிவனருளை மனங்கொண்டு ஏத்தி—சிவபெருமான் முன்னமே செய்த அநுக்கிரகத்தை மனத்திற் சிந்தித்துத் துதித்து, மேலோன் தன் முன்னர் எய்தி—மூத்த பிள்ளையாரின் திருமுன்னிலையை அடைந்து, வணக்கஞ் செய்து—வணங்கி, மீண்டும் அவன் தனைத் துதித்து—மீண்டும் அப்பிள்ளையாரைத் துதித்து, விமல நீ—மகாபுனிதரே தேவரீர், என்பால் ஓங்கு பூசனை கொண்டருளல் வேண்டும்— என் அகத்தே நிரம்பி ஓங்குகின்ற பூசனையைப் புறத்தேயும் ஏற்றருளல் வேண்டும்; ஆதி பராபரத்தின் பாலாய்-ஆதியாகிய பராபரப் பொருளின் ஒரு பாதியாய், மூல ஓங்காரப் பொருளாய்—யாவைக்கும் மூலமாகிய பிரணவத்தின் பொருளாய், இருந்தாள்—இருந்தவராகிய உமாதேவியார், முன்னம் மொழிந்து அருள் சாபந் தொலைத்த முதல்வ—முன்னம் கூறியருளிய சாபத்தைத் தரிசன விசேடத்தானே தீர்த்தருளிய முதல்வரே, பணித்தருள்க என்றான்—அநுக்கிரகித்தருள்க என்று பிரார்த்தித்தார். (2)

ஐங்கரன்றான் மாலுரைத்த மாற்றங் கேளா
வன்னதுசெய் கெனவருளி யங்கண் மேவக்
கொங்குலவு மஞ்சனநீர் சாந்த மாலை
கொழும்புகையே முதலியன கொண்டு போந்து
சங்கரனார் மதலைதனை யருச்சித் தன்பாற்
றூவறுபண் ணியம்பலவுஞ் சால்பிற் றந்து
பொங்கியபா லவியினொடு முன்ன மார்த்திப்
போற்றியே யிஃதொன்று புகல லுற்றான்.

ஐங்கரன்—விநாயகப்பெருமான், மால் உரைத்த மாற்றம் கேளா—திருமால் பிரார்த்தித்த பிரார்த்தனையைக் கேட்டருளி, அன்னது செய்க என அருளி—நீ விரும்பியதனை விரும்பியவாறே செய்க என்று அருள்செய்து, அங்கண் மேவ—அவ்விடத்தில் எழுந்தருளியிருக்க, கொங்கு உலவு மஞ்சன நீர்—வாசனை பொருந்திய திருமஞ்சன தீர்த்தம், சாந்தம்—சந்தனம், மாலை—புஷ்பங்களாலாய மாலை, கொழும் புகை—கொழுமையாகிய தூபம், முதலியன கொண்டு போந்து—முதலிய பூசோபகரணங்களைக் கொணர்ந்து, சங்கரனார் மதலை தனை அன்பால் அருச்சித்து—சிவ குமாரரான பிள்ளையாரை அன்போடு அருச்சனை செய்து, தாவறு பண்ணியம் பலவும்—குற்றமற்ற மோதகம் முதலிய பலவகைப் பணிகாரங்களையும், பொங்கிய பாலவியினொடு—உயர்ந்த பாலன்னமாகிய பாயசத்துடன், சால்பின் தந்து முன்னம் ஆர்த்தி—ஆகமங்களிற் கூறிய ஆசாரத்தானே சந்நிதியில் நிவேதனஞ் செய்து, போற்றி—துதித்து, இஃதொன்று புகலல் உற்றான்—இஃதொன்று வேண்டு வாராயினர். (3)

விண்ணுமம் புகல்கின்ற திங்க டன்னின்
மிக்கமதி தனிலாரும் பக்க மாகு
மிந்நாளில் யானுன்னை யருச்சித் திட்ட
வியற்கைபோல் யாருமினி யீறி லாவுன்

பொன்னுரு மலரடியே புகலென் றுன்னிப்
பூசைபுரிந் திடவுமவர் புன்க ணெல்லா
மந்நாளே யகற்றிநீ யுலவாச் செல்வ
மளித்திடவும் வேண்டுமிஃ தருள்க வென்றான்.

வில் நாமம் புகல்கின்ற திங்கள் தன்னில்–தநு என்று பெயர் கூறப் படுகின்ற மாசமாகிய மார்கழியில், மிக்க பக்கமாகும் மதிதனில்–மதி வளரும் பக்கமாகிய பூர்வ பக்கத்தில், ஆறும் இ நாளில்–இந்த ஆறும் நாளாகிய சட்டித் திதியில், யான் உன்னை அருச்சித்திட்ட இயற்கைபோல்–யான் தேவரீரை அருச்சனை செய்த தன்மைபோல, இனி யாரும் ஈறு இலா உன் பொன்னுரும் மலரடியே புகல் என்று உன்னிப் பூசை புரிந் திடவும்–இனி யாவரும் ஈறு காண்டல் இயலாத உமது அழகு நிறைந்த மலரடிகளையே சரண் என்று உன்னிப் பூசனை செய்திடவும், அவர் புன்கண் எல்லாம் அ நாளே அகற்றி உலவாச் செல்வம் நீ அளித்திடவும் வேண்டும்–அவ்வாறு பூசித்தவர்களின் துன்பங்கள் முழுவதையும் அன்றைக்கே நீக்கி அழியாத செல்வமாகிய பேரின்பத்தைத் தேவரீர் அவர்களுக்குக் கொடுத் தருளவும் வேண்டும்; இஃது அருள்க என்றான்–இவ்வாறாய வரத்தை அடி யேனுக்குத் தந்தருளுக என்று பிரார்த்தித்தார். (4)

மாயனுரை கேட்டலுநீ மொழிந்தற் றாக
மகிழ்ந்தனநின் பூசையென மதித்துக் கூறி
யாயவனு மயன்முதலா வுள்ளோர் யாரு
மன்பினொடு வாழ்த்திசைப்ப வாகு வென்னுந்
தூயதொரூர் தியிலெய்திக் கணங்க ளானோர்
சூழ்ந்துவரக் கயிலையெனுந் துகடீர் வெற்பி
னேயமுடன் போந்தரனை வணக்கஞ் செய்து
நீடருள்பெற் றேதொல்லை நிலயத் துற்றான்.

மாயன் உரை கேட்டலும்–திருமாலின் வேண்டுகோளைக் கேட்டருளிய வுடனே, நீ மொழிந்தற்று ஆக–திருமாலே நீ கேட்டவண்ணமேயாகுக; நின் பூசை மகிழ்ந்தனம் என மதித்துக் கூறி–உன்னுடைய பூசனையை மகிழ்ந் தோம் என்று அருள் சிறப்பக் கூறியருளி, ஆயவனும் அயன் முதலா உள்ளோர் யாரும் அன்பினொடு வாழ்த்திசைப்ப–அந்தத் திருமாலும் பிரம தேவர் முதலிய தேவர்கள் யாவரும் அன்போடு வாழ்த்துக் கூற, ஆகு என்னும் தூயது ஓர் ஊர்தியில் எய்தி–ஆகு என்கின்ற தூய்மையுடையதாகிய ஒப்பற்ற ஊர்தியில் இவர்ந்து, கணங்களானோர் சூழ்ந்து வர–பூதகணங்கள் புடையிற் சூழ்ந்து வர, கயிலை எனும் துகள் தீர் வெற்பில் நேயமுடன் போந்து–திருக்கைலாசம் என்னுங் குற்றம் நீங்கிய மலையில் அன்போடு சென்று, அரனை வணக்கம் செய்து–திருக்கைலாசபதியை வணங்கி, நீடு அருள் பெற்று–பெருகுகின்ற திருவருளைப் பெற்று, தொல்லை நிலயத்து உற்றான்–பழைமை யான தமது இருப்பிடத்தில் வீற்றிருந்தருளினர். (5)

### வேறு

அற்றை நாளி லரியய னாதியோர்
நெற்றி யங்க ணிமலன் பதங்களின்
முற்று மன்பொடு மும்முறை தாழ்ந்தருள்
பெற்று நீங்கினர் பேதுற னீங்கினர்.

அற்றை நாளில்—அன்றொருநாள், அரி அயன் ஆதியோர்—திருமால் பிரமதேவர் முதலிய தேவர்கள், நெற்றி அம் கண் நிமலன் பதங்களில் முற்றும் அன்பொடு மும்முறை தாழ்ந்து—நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது பாதங்களில் முதிருகின்ற அன்போடு மூன்றுமுறை வணங்கி, பேதுறல் நீங்கினர்—துன்புறுதலை நீங்கியவராய், அருள்பெற்று—சிவபெருமானுடைய திருவருளைப் பெற்றுக்கொண்டு, நீங்கினர்—அவ்விடத்தைவிட்டு நீங்கியவர்கள்.

நீங்கினர் பெயர். ஆதியோர் நீங்கினர் நிற்புழி என அடுத்த செய்யுளில் முடிபு காண்க. (6)

கரிமு கம்பெறு கண்ணு தற் பிள்ளைதாள்
பரவி முன்னம் பணிந்தனர் நிற்புழி
யருள்பு ரிந்திட வன்னதொர் வேலையிற்
பரிவி னாலொர் பரிசினைக் கூறுவார்.

கரி முகம் பெறு கண்ணுதல் பிள்ளைதாள் பரவிப் பணிந்தனர் முன்னம் நிற்புழி—யானை முகத்தைப் பெற்ற நெற்றிக்கண்ணினையுடைய பிள்ளையாரின் பாதங்களைத் துதித்து வணங்கி எதிரே நின்ற சமயத்தில், அருள் புரிந்திட—பிள்ளையார் அவர்க்குத் திருவருள் பாலிக்க, அன்னதொர் வேலையில்—அப்பொழுது, பரிவினால்—பிள்ளையார்மீது கொண்ட அன்பினால், ஓர் பரிசினைக் கூறுவார்—அவர்கள் ஒரு பண்பினை விண்ணப்பஞ் செய்வாராயினர். (7)

எந்தை கேண்மதி யெம்மை யலைத்திடுந்
தந்தி மாமுகத் தானவற் செற்றியா
லுய்ந்து நாங்க ளுனதடி யோமிவண்
வந்து நல்குகைம் மாறுமற் றில்லையே.

எந்தை கேண்மதி—எம்பிதாவே கேட்டருள்க; எம்மை அலைத்திடும் தந்தி மாமுகத் தானவன் செற்றி—எம்மை அலைவு செய்யாநின்ற கயமுகாசுரனைக் கொன்றருளினீர்; நாங்கள் உய்ந்து உனது அடியோம்—அதனால் நாம் உய்ந்து தேவரீருக்கு அடியோமாயினோம்; இவண் வந்து நல்கு கைம்மாறு மற்று இல்லை—அதற்கு இங்கே வந்து தேவரீருக்கு நாங்கள் செய்யுங் கைம்மாறு ஒன்றுமில்லை.

(5) உய்ந்தும், எனப் பிரித்து உய்ந்தோம் என்றுரைப்பினும் அமையும். (8)

நென்னல் காறு நிகரில் கயாசுரன்
முன்ன ராற்று முறைப்பணி யெந்தைமுன்
னின்ன நாட்டொட் டியற்றுதும் யாமென
வன்ன செய்திரென் றுனரு ணீர்மையான்.

நென்னல் காறும் நிகரில் கயாசுரன் முன்னர் ஆற்றும் முறை பணி—நேற்றை வரையும் ஒப்பற்ற கயாசுரன் எதிரிற் செய்துவாராநின்ற வழக்கமானதொரு பணியை, எந்தை முன் இன்ன நாள் தொட்டு யாம் இயற்றுதும் என—எம்பிதாவே உமது முன்னிலையில் இன்றுதொட்டு யாம் செய்து வருவோம் என்று பிரார்த்திக்க, அருள் நீர்மையான் அன்ன செய்திர் என்றுன்—இயல்பான கருணையினையுடையராகிய பிள்ளையார் அவ்வாறு செய்ம்மின் என்று அநுக்கிரகித்தார் (9)

இத்தி றம்படு மெல்லையி னின்றிடு
மத்த லைச்சுரர் யாவரு மன்புறீஇக்
கைத்த லத்தைக் கபித்தம தாக்கியே
தத்த மத்தகந் தாக்கினர் மும்முறை.

இ திறம் படும் எல்லையில்—தாம் வேண்டிய இப்பணியின் திறம் சித்தித்த சமயத்தில், அ தலை நின்றிடும் சுரர் யாவரும்—அவ்விடத்தில் நிற்கின்ற தேவர்கள் அனைவரும், அன்பு உறீஇ—அன்பு மிக்கு, கைத்தலத்தை கபித்தம் ஆக்கி—தமது கைத்தலங்களைக் கபித்தமாகப் பிடித்துக்கொண்டு, தத்தம் மத்தகம் மும்முறை தாக்கினர்—தங்கள் தங்கள் நெற்றியில் மூன்று முறை குட்டி.

கபித்தம் முஷ்டி. 'கபித்த மென்பது காணுங்காலைச்—சுட்டுப் பெருவிரலொட்டி நுனிகௌவி—யல்ல மூன்றும் மெல்லப் பிடிப்பதுவே'' என்பது சிலப்பதிகார உரை. தாக்கினர், எச்ச முற்று. (10)

இணைகொள் கையை யெதிரெதிர் மாற்றியே
துணைகொள் வார்குழை தொட்டனர் மும்முறை
கணைகொள் காலுங் கவானுஞ் செறிந்திடத்
தணிவி லன்பொடு தாழ்ந்தெழுந் தேத்தினுர்.

இணைகொள் கையை எதிர் எதிர் மாற்றி—இரண்டு கைகளையும் எதிரெதிராக மாற்றி, வார் துணைகொள் குழை தொட்டனர்—வார்ந்த இரண்டு காதுகளையும் அக்கைகளாற் பிடித்துக்கொண்டு, கணைகொள் காலும் கவானும் செறிந்திட—கணைக் காலுந் தொடையும் ஒன்றையொன்று தொடும்படி, மும்முறை தாழ்ந்து எழுந்து—மூன்றுதரந் தாழ்ந்தெழுந்து, தணிவில் அன்பொடு ஏத்தினுர்—குறையாத அன்போடு வணங்கித் துதித்தார்கள். (11)

இணங்கு மன்புடன் யாருமி தாற்றியே
வணங்கி நிற்ப மகிழ்சிறந் தான்வரை
யணங்கின் மாமக னவ்விய னேக்கியே
கணங்க ளார்த்தன கார்க்கட லாமென.

இணங்கும் அன்புடன் யாரும் இது ஆற்றி வணங்கி நிற்ப—ஒன்றுசெய்யும் அன்போடு யாவரும் இப்பணியைச் செய்து வணங்கி நிற்க, வரை அணங்கின் மாமகன் மகிழ்சிறந்தான்—மலைமகளாகிய உமாதேவியாரின் மூத்த பிள்ளையார் மகிழ்சிறந்தருளினர்; அவ்வியல் நோக்கி கார் கடலாம் என கணங்கள் ஆர்த்தன—அந்தக் கருணையினியல்பைக் கண்டு கரியகடல் ஒலித்தாற்போலப் பூதகணங்கள் ஆரவாரஞ் செய்தன. (12)

நின்ற தேவர் நிமலனை நோக்கியே
யுன்றன் முன்ன முலகுளர் யாவரு
மின்று தொட்டெமைப் போலிப் பணிமுறை
நன்று செய்திட நல்லருள் செய்கென.

நின்ற தேவர் நிமலனை நோக்கி—முன்னிலையில் நின்ற தேவர்கள் விநாயகப் பெருமானை நோக்கி, உன் தன் முன்னம்—தேவரீரின் சந்நிதியில், உலகுளர் யாவரும்—உலகத்திலுள்ளார் அனைவரும், இன்று தொட்டு எமைப்போல் இ பணி முறை நன்று செய்திட—இன்று தொடக்கம் எங்களைப்போல இப் பணிமுறையை நன்கு செய்து வழிபட, நல் அருள் செய்க என—நல்லருளை அவர்களுக்குச் செய்வீராக என்று பிரார்த்திக்க. (13)

கடனி றத்துக் கயமுக னத்திற
நடைபெ றும்படி நல்கிய மரர்கோ
னெடிய மாலய னின்றுள ருக்கெலாம்
விடைபு ரிந்து விடுத்தன னென்பவே.

கடல் நிறத்து கயமுகன்—கடல்போலுங் கரிய நிறத்தினையுடைய யானையின் முகத்தையுடையவராகிய விநாயகப்பெருமான், அ திறம் நடை பெறும்படி நல்கி—அவ்வாறே நடைபெறும் வண்ணம் அருள்செய்து, அமரர் கோன் நெடியமால் அயன் நின்றுளருக்கு எல்லாம்—தேவேந்திரன் திருநெடு மால் பிரமதேவர் முதலாக அங்கு நின்றவர்க ளனைவருக்கும், விடை புரிந்து விடுத்தனன்—விடைகொடுத்து அனுப்பியருளினர்.

என்ப, அசைநிலைபோல்வது. (14)

அம்பு யக்க ணரியயன் வாசவ
னும்ப ரவ்வரை யொல்லையி னீங்குறுத்
தம்ப தந்தொறுஞ் சார்ந்தனர் வைகினர்
தும்பி யின்முகத் தோன்ற லருளினல்.

தும்பியின் முகத்தோன்றல் அருளினல்—யானை வதனத்துப் பிள்ளையாருடைய திருவருளினலே, அம்புயம் கண் அரி அயன் வாசவன் உம்பர்—தாமரைக் கண்ணரான திருமால் பிரமா இந்திரன் தேவர்கள், அ வரை ஒல்லையின் நீங்குறு—அந்தக் கைலாசமலையை விரைவில் நீங்கி, தம் பதம் தொறும் சார்ந்தனர் வைகினர்—தத்தம் பதங்கள்தோறுஞ் சென்று கவலையற்றிருந்தார்கள். (15)

முந்தை வேத முதலெழுத் தாகிய
வெந்தை தோற்ற மியம்பின மிங்கினி
யந்த மில்குணத் தாண்டகைக் கோர்குணம்
வந்த தென்னென்றி மற்றதுங் கேட்டிநீ.

முந்தை வேதம் முதலெழுத்து ஆகிய—பழைய வேதத்தின் முதலெழுத்தான பிரணவ சொரூபமாகிய, எந்தை தோற்றம் இங்கு இயம்பினம்—எம் பரமபிதாவாகிய விநாயகப்பெருமானுடைய திருவவதார மகிமையை இங்குக் கூறினேம்; இனி அந்தம் இல் குணத்து ஆண்தகைக்கு ஓர் குணம் வந்தது என் என்றி—இனி அந்தம் இல்லாத இயல்பாய குணங்களையுடைய ஆண்தகையாகிய பரம்பொருளுக்கு முக்குணங்களுள் ஒன்ருய தாமத குணம் வந்தவாறு என்னை என்று வினவினய்; அதும் கேட்டி நீ—அதனையுஞ் சொல்லுவோம் நீ கேட்பாயாக.

அந்தமில்குணம் எனவே, ஆதியில் குணமுமாம்; ஆகவே அநாதி குணம் என்றவாறும். அக்குணம், எண்குணம். எண்குணம் ஆறுக அடக்கப்பட்டு அறுகுணம் எனவும்படும்.

தக்கன் வினக்களுள் இறுதி வின, 'கடியதோர் குணம் படைக்குமோ பரமெனுங் கடவுள்' என்பது.

'அதுகேட்டி' என்பது பாடமாயின், உம்மை வருவிக்க. (16)

### வேறு

நற்குண முடையநல் லோரு நாடொணுச்
சிற்குண னுகுமச் சிவன்ப ராபரன்
சொற்குண மூவகைத் தொடர்பு மில்லதோர்
நிர்க்குண னவன்செய னிகழ்த்தற் பாலதோ.

நல் குணமுடைய நல்லோரும் நாடொணு—சற்குணமுள்ள சன்மார்க்கர்களாலும் அறியவொண்ணுத, சித் குணன் ஆகும் அ சிவன்—ஞான குணத்தை

உடையவராகுஞ் சிவபெருமானே, பராபரன்—பராபர வஸ்துவாகிய முழு முதற் கடவுளாம்; சொல் மூவகை குணத் தொடர்பும் இல்லது ஓர் நிர் குணன்—சுட்டிச் சொல்லப்படுகின்ற சாத்துவிகம் இராசதம் தாமதம் ஆகிய மூவகைக் குணசம்பந்தமும் இல்லாததொரு நிர்க்குணராவர்; அவன் செயல் நிகழ்த்தற் பாலதோ—அப்பரம்பொருளின் நிர்க்குணச் செயல் இவ்வியல்பிற்று என்று முக்குண வயத்தோரான எம்மனோரால் உரைக்கற்பாலதாமோ.

மூவகைத் தொடர்புமில்லதொரு நிர்க்குணமாவது சிற்குணமாம். கடவுள் சுத்த சாட்குண்ணியர். (17)

பரவிய வுயிர்க்கெலாம் பாச நீக்குவா
னருளின ளுகியே யமலன் மாலயற்
கிருதொழின் முறையினை யீந்து மற்றவைக்
குரியன குணங்களு முள்ள வாக்கினுன்.

அமலன்—முக்குண சம்பந்த முள்ள மும்மலங்களையும் இயல்பாகவே இல்லாதவராகிய சிவபெருமான், பரவிய உயிர்க்கு எலாம் பாசம் நீக்குவான் அருளினன் ஆகி—எங்கும் பரவியிருக்கின்ற உயிர்களனைத்துக்கும் பாசங்களாகிய மலத்தை நீக்கும் பொருட்டுத் திருவருளுக்குடையவராய், அயன் மாற்கு இரு தொழிலினை முறை ஈந்து—பிரமதேவருக்கும் திருமாலுக்கும் படைத்தல் காத்தலாகிய இரு தொழில்களையும் முறையே கொடுத்து, அவைக்கு உரியன குணங்களும்—அத்தொழில்களுக்கு உரியனவாகிய சாத்துவிக இராசத குணங்களையும், உள்ள ஆக்கினுன்—முறையே அத்தொழில்களுக்கு உள்ளனவாகச் செய்தருளினுர். (18)

முடித்திட லியற்றுமெம் முதல்வ னத்தொழி
றடுப்பரும் வெஞ்சினந் தன்னின் முற்றுமா
லடுத்தவப் பான்மையா லதன்கட் டாமதம்
படுத்தின னத்திறம் பலருந் தேர்வரால்.

எம் முதல்வன் முடித்திடல் இயற்றும்—எம்முடைய முழுமுதற்கடவுள் இறுதிக்கண்ணதாய சங்கார கிருத்தியத்தைத் தாமே இயற்றியருளுவார்; அ தொழில் தடுப்பு அரும் வெம் சினம் தன்னில் முற்றும்—அந்தச் சங்காரத் தொழில் தடுத்தற்கரிய கடுங் கோபத்தினுலேயே முற்றுவதாம்; அடுத்த அ பான்மையால்—கோபத்தோடு அடுத்த அந்தத் தன்மையினுல், அதன்கண் தாமதம் படுத்தினன்—அத்தொழிலினிடத்தில் தாமத குணத்தை வைத்தருளினுர்; அ திறம் பலரும் தேர்வர்—அத்தன்மையைப் பலருமறிவர்.

தாமதம், உத்தியோக குணமாவதன்றி இயற்குணம் அன்றென்பதாம். (19)

மாமறை யளப்பில வரம்பி லாகமந்
தோமற வுதவியோர் தொன்ம ரத்திடைக்
காமரு முனிவரர் கணங்கட் கன்னவை
தாமத குணத்தனேற் சாற்ற வல்லரோ.

அளப்பில மாமறை—அளவற்ற சிறந்த வேதங்களையும், வரம்பில் ஆகமம்—வரம்பில்லாத ஆகமங்களையும், தோம் அற உதவி—ஆன்மாக்கள் பந்தமாகிய குற்றம் நீங்கும்படி அருளிச்செய்து, ஓர் தொன்மரத்திடை—ஒப்பற்ற கல்லால விருட்ச நீழலில், காமரு முனிவரர் கணங்கட்கு—தம்மீது பேரன்புடைய சிரேட்டர்களான சனகாதி முனிவரர் கூட்டத்துக்கு, அன்னவை—அவ் வேதாகமங்களை, தாமத குணத்தனேல்—தாமத குணத்தை இயற்குணமாக உடையரேல், சாற்ற வல்லரோ—உபதேசிக்க வல்லராவரோ?

சாகைக ளெண்ணில வாதலின், 'மாமறை அளப்பில' என்றார். ஆகமம், 'ஆட்பாலவர்க் கருளும் வண்ண'மாய் 'எண்ணிலி கோடி' யாதலின், 'வரம்பி லாகமம்' என்றார். வேதப்பொருள் தானே, கிடைக்கும் வகையால் ஆகமமாம். ஒருண்மை சித்திக்கும் நெறியால் வைதிகமுமாம்; சைவமுமாம். சைவம் வைதிகத்தின் வழித்து. முனிவரருங் கணமுமெனக் கொண்டு முன்னை யோர்க்கு வேதமும் பின்னையோர்க்கு ஆகமமும் உபதேசித்தார் எனக் கோடலுமாம். கடவுள் எண் குணத்தார் என்றவாறு. (20)

வாலிய நிமலமாம் வடிவங் கண்ணுதன்
மேலவ னெய்துமோ வேதம் விஞ்சையின்
மூலமென் றவனையே மொழியு மோவிது
சீலமில் லார்க் கெவன் றேற்றும் வண்ணமே.

கண்ணுதல் மேலவன்—நெற்றிக் கண்ணையுடைய பரம்பொருள் தாமத குணத்தராயின், வாலிய—தூய்மையும் வெண்மையுமான, நிமலமாம் வடிவம் எய்துமோ—நிர்மலமாகும் வடிவத்தைப் பொருந்துவாரா; வேதம் விஞ்சையின் மூலம் என்று அவனையே மொழியுமோ—வேதம் வித்தையின் மூலம் சிவமே என்று அப்பரம்பொருளை எடுத்துப்பேசுமா; இது சீலம் இல்லார்க்கு தேற்றும் வண்ணம் எவன்—இவ்வுண்மையை ஞானசார மில்லாதாருக்குத் தெளிவிக்குமாறு எவ்வாறு. (21)

இமையவர் யாவரு மிறைஞ்சுங் கண்ணுதல்
விமலனன் றிறுதியை விளைக்கும் பண்பினாற்
றமகுண னென்றியத் தன்மை செய்கையா
லமைகுண மியற்குண மறியற் பாலதோ.

இமையவர் யாவரும் இறைஞ்சும் கண்ணுதல் விமலன்—தேவர்க ளனைவரும் வணங்கும் நெற்றிக்கண்ணையுடைய நின்மலராகிய சிவபெருமான்,

அன்று—சங்கார காலத்தில், இறுதியை விளைக்கும் பண்பினால்—சங்காரத்தைச் செய்யுந் தன்மையினால், தமகுணன் என்றி—தாமத குணத்தர் என்று இகழ்ந்தாய்; அ தன்மை செய்கையால் அமை குணம்—அத்தாமதகுணம் அச்சங்காரத் தொழின்மாத்திரையால் அத்தொழிலின்கண் அமைந்த குணமாம்; இயற் குணம் அறியற்பாலதோ—பரம்பொருளின் இயல்பாய குணம் முக்குணவயத்தரால் அறியும்பான்மையதாமோ.

இயற்குணம் எண்குணம்; நம்மனோர்க்கு எட்டாதது. (22)

ஈத்தலு மளித்தலு மியற்று வோர்க்குள
சாத்திக ராசதந் தத்தஞ் செய்கையின்
மாத்திரை யல்லது மற்ற வர்க்கவை
பார்த்திடி னியற்கையாப் பகர லாகுமோ.

ஈத்தலும் அளித்தலும் இயற்றுவோர்க்கு உள சாத்திக ராசதம்—படைத்தலுங் காத்தலும் இயற்றுவோர்களாகிய பிரமாவுக்குந் திருமாலுக்கும் முறையே யுள்ளவாய சாத்துவிக இராசத குணங்கள்; தத்தம் செய்கையின் மாத்திரையல்லது—அவரவர் செய்தொழிலின் மாத்திரையாய் அவ்வத் தொழிலில் அமைவதன்றி, பார்த்திடின்—உற்று நோக்குமிடத்தில், அவர்க்கு அவை—அவ்விருவருக்கும் அவ்விரு குணமும், இயற்கையா பகரல் ஆகுமோ—இயற்கைக் குணமாகக் கூறுதல் கூடுமோ.

அக்குணங்கள் உத்தியோகத்துக்கு உபயோகப்படும் நிலையிற் செயற்கை யாதல் உற்றுநோக்கத்தக்கதாம். (23)

அக்குண மானவை யளிக்குஞ் செய்கையாற்
றொக்குறு மியற்கையத் தொல்லையோர் கள்பா
லிக்குண மல்லதோ ரிரண்டுஞ் சேருமான்
முக்குண நெறிசெலு முனிவர் தேவர்போல்.

தொல்லையோர்கள்பால்—பழையோராகிய பிரம விஷ்ணுக்களிடத்தில், அளிக்கும் செய்கையால்—படைத்தல் காத்தல் செய்யும் உத்தியோக முறைக்கண், அ குணமானவை—அந்தச் சாத்துவிக இராசத குணங்கள், தொக்கு உறும்—அவ்வச் சமயத்திற் செயற்கையாய்ப் பொருந்தியுறும்; இ குணம் அல்லது—ஒவ்வொருவருக்குமுரிய இக்குணமே யல்லாமல், ஓர் இரண்டும்—ஏனை இரு குணமுஞ் சேர்ந்து மூன்று குணமும், இயற்கை—உத்தியோகமொழிந்த ஏனைச் சமயத்தில் இயற்கைக் குணமாம்; ஆல்—பிரமாவுக்குச் சாத்துவிகமும் விஷ்ணுவுக்கு இராசதமுஞ் செயற்கையாயும் இயற்கையாயும் ஏனைக்குணங்கள் இயற்கையாயும் இருந்தவாற்றால், முக்குணம்—முக்குணங்கள், நெறி செலும் முனிவர் தேவர் போல்—முக்குண நெறியில் முக்குண வயப்பட்டுச் செல்லும் முனிவர்களிடத்துந் தேவர்களிடத்தும் போல, சேரும்—பிரம விஷ்ணுக்களிடத்தும் பொருந்தியிருக்கும்.

இக்குணம் என்றது சாத்துவிக இராசத குணங்களை. முக்குணத்தை அடுத்து நிற்றலின், நெறி முக்குண நெறியாம். சிவன் நிர்க்குண ராதலின், தாமசம் உத்தியோக சமயத்துச் செயற்கையன்றிப் பிறவாற்ருற் செல்லா தென்க. (24)

நேமியாற் குருவெலா நீல மாயதுந்
தோமறு கடலிடைத் துயில்கொள் பான்மையு
மேமுறு மகந்தையும் பிறவு மெய்துமேற்
ருமத ராசதந் தானு முற்றவே.

நேமியாற்கு உருவெலாம் நீலமாயதும்—திருமாலுக்கு உருவம் முழுவதும் நீலநிறமாகியதும், தோம் அறு கடலிடை துயில்கொள் பான்மையும்—குற்றமற்ற பாற்கடலில் நித்திரை செய்யுமியல்பும், ஏம் உறும் அகந்தையும்—இறுமாப்பு மிக்க அகங்காரமும், பிறவும்—அசுரப் பெண்ணைச் சேர்தல் முதலிய பிறவும், எய்துமேல்—உளவாம் இவ்வாற்ருல், தாமதம் இராசதந் தானும் உற்ற—தாமத இராசத குணங்கள் உத்தியோக முறைக்கணுகாது இயற்கை யாய்ப் பொருந்தின.

மேற் காட்டியவற்றுள் இராசதத்துக் குரியனவற்றையுந் தாமதத்துக் குயரியனவற்றையும் ஓர்ந்துணர்க. (25)

அறிவொருங் குற்றுழி யனையன் கண்ணுத
லிறைவனை வழிபடீஇ யேத்தி யின்னரு
ணெறிவரு தன்மையு நீடு போதமும்
பெறுதலிற் சாத்திக முறையும் பெற்றுளான்.

அனையன்—மேலே இராசத தாமத குணத்தராய்க் கூறப்பட்ட விஷ்ணு, அறிவு ஒருங்கு உற்றுழி—அறிவு ஒரு நெறிப்பட்டவிடத்து, கண்ணுதல் இறைவனை வழிபடீஇ—கண்ணுதலாகிய சிவபெருமானை வழிபட்டு, ஏத்தி—துதித்து, இன்னருள் நெறி வரு தன்மையும்—இனிய அருள்வழி ஒழுகுந் தன்மையையும், நீடு போதமும் பெறுதலின்—நிலையாய ஞான போதத்தையும் பெறுதலினுலே, சாத்திக முறையும் பெற்றுளான்—சாத்துவிக குணத்தையும் இயற்கையாகப் பெற்றவராவர். (26)

மேனிபொற் கென்றலின் விமல வான்பொரு
ளுனெனு மருட்கையி னவையி லீசனைத்
தானுணர் தெளிவினிற் றவத்திற் பூசையி
லானது குணனெலா மயன்ற னக்குமே.

மேனி பொற்கென்றலின்—மேனி பொன்மயமாயிருத்தலானும், விமல வான்பொருள் நான் எனும் மருட்கையின்—விமலமாகிய உயர்தனிச் செம்பொருள் நானே என்று மயங்குதலானும், நவையில் ஈசனை தான் உணர் தெளிவினில்—குற்றமில்லாத பரமபதியைத் தாம் உணருகின்ற தெளிவினை யுடைமையாலும், தவத்தில் பூசையில்—தவத்திளுலுஞ் சிவபூசை செய்தலி ளுலும், குணன் எலாம் அயன் தனக்கும் ஆனது—முக்குணம் முழுவதும் பிரமதேவருக்கும் இயற்கையாய்ப் பொருந்துவதாயிற்று. (27)

ஆதலின் விருப்புட னல்ல தெய்தினே
ரோதிய குணவிதத் துறுவர் கண்ணுத
ளுதனுக் கனையது நணுகு ருமையாற்
பேதைமை யொருகுண மவன்கட் பேசுதல்.

ஆதலின்—இங்ஙனங் கூறியவாற்ருல், விருப்புடன் அல்லது எய்தினேர்—விருப்பு வெறுப்பு உடையோர், ஓதிய குண விதத்து உறுவர்—மேற்கூறப்பட்ட முக்குண வயப்படுவர்; கண் நுதல் நாதனுக்கு அனையது நணுகுருமையால்—நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானுக்கு அவ்விருப்பு வெறுப்புத் தன்மை இல்லாமையால், ஒரு குணம் அவன்கண் பேசுதல் பேதைமை—முக்குணங்களுள் ஒன்ருகிய தாமதத்தை அப்பெருமானிடத்து இயற்கை யென்று பேசுதல் அறியாமையேயாம். (28)

மூன்றென வுளபொருள் யாவு முன்னமே
யீன்றவன் கண்ணுத லென்னு நான்மறை
சான்றது வாகுமாற் றவத்தர்க் கென்னினு
மான்றதோ ரவன்செய லறியற் பாலதோ.

மூன்று என உள பொருள் யாவும்—முக்குணத்தான் மூன்ருகி யுள்ள பொருள்களனைத்தையும், முன்னமே ஈன்றவன் கண்ணுதல் என்னும் நான் மறை—முதற்கட் படைத்தருளியவர் சிவபெருமானே யென்று வேதங்கள் கூறும்; அது சான்று ஆகும்—அங்ஙனமாதற்கு அது பெருஞ் சான்ரும்; தவத்தர்க்கு என்னினும் ஆன்றதோர் அவன் செயல் அறியற் பாலதோ—தவத்தினையுடைய முனிவர்களுக்காயினும் மாட்சிமைப்பட்ட ஒப்பற்ற அப்பெருமானுடைய செயல் அறியற்பாலதாமோ?

நிர்க்குணரான சிவனே முக்குணப் பொருளுக்குக் கர்த்தா என்க. (29)

செங்கண்மான் முதலிய தேவ ரேனையோ
ரங்கவ ரல்லவை யகத்துள் வைகியே
யெங்குமா யாவையு மியற்று கின்றதோர்
சங்கர னொருகுணச் சார்பின் மேவுமோ.

செங்கண் மால் முதலிய தேவர்—சிவந்த கண்ணையுடைய திருமால் முதலிய தேவர்கள், ஏனையோர்—ஏனையவர்கள், அங்கவர் அல்லவை—அவர்க ளல்லாத அஃறிணைப் பொருள்கள், அகத்துள் வைகி—ஆகிய சராசரங்களி னுள்ளே அந்தரியாமியா யிருந்து, எங்குமாய்—எங்கும் வியாபகமாகி, யாவையும் இயற்றுகின்றதோர் சங்கரன்—யாவற்றையும் இயங்குவிக்கின்ற ஒப்பற்ற சர்வான்ம சுகர், ஒரு குண சார்பின் மேவுமோ—தாமசம் என்ற ஒரு குணச் சார்பில் வைத்து எண்ணப்படுவாரோ? (30)

ஈறுசெய் முறையினை யெண்ணித் தாமதங்
கூறின ரல்லது குறிக்கொண் மேலையோர்
வேறொரு செய்கையின் விளம்பி னாரல
ராறணி செஞ்சடை யமல னுக்கரோ.

ஆறணி செஞ்சடை அமலனுக்கு—கங்கையை அணிந்த சிவந்த சடையினை யுடைய நின்மலராகிய சிவபெருமானுக்கு, ஈறு செய் முறையினை எண்ணி— சங்கார கிருத்தியத்தைச் செய்யும் முறையைச் சிந்தித்து, குறிக்கொள் மேலையோர்—அப் பெருமானரது இலக்கணங்களை அவரருளைக் கொண்டறியும் பரம ஞானிகள், தாமதம் கூறினர் அல்லது—அச்சங்கார கிருத்தியத்தில் வைத்துத் தாமத குணத்தைக் கூறினு ரன்றி, வேறு ஒரு செய்கையில் விளம்பினுர் அலர்—அப்பெருமானுடைய மற்றொரு செய்கையில் வைத்துக் கூறினுரல்லர்.

சங்காரஞ் சுகஞ் செய்வதாதலின் அதன்கண்வைத்தோதுந் தாமதமும் சாதாரணமன்ரும்; தாமதம் போல்வதென்றவாறு. சுகஞ் செய்யுந் தொழிற்கண் தாமதத்தை நடத்த வல்லார் சங்கரரேயாமென்க. (31)

வேறு

என்றிவை பலவுந் தூயோ னிசைத்தலு மினைய வெல்லாம்
வன்றிறல் வெறுக்கை யெய்தி மயங்கலாற் றக்க னென்னும்
புன்றொழில் புரியுந் தீயோன் பொறுத்திலன் புந்தி மீது
நன்றென வறித றேற்ரு னொருசில நவில லுற்ருன்.

என்றிவை பலவும் தூயோன் இசைத்தலும்—என்றிவைகள் பலவற்றையும் புனிதர் ஆகிய ததீசி மகாமுனிவர் உபதேசித்தருளுதலும், இனைய எல்லாம்— இவ்வுபதேசங்களையெல்லாம், தக்கன் என்னும் புன் தொழில் புரியும் தீயோன்—தக்கன் என்கின்ற இழிதொழில் செய்யுங் கொடியோன், வன் திறல் வெறுக்கை எய்தி மயங்கலால்—வலிய திறலினையுஞ் செல்வத்தையும் அடைந்து மயக்கம் உறுதலினுலே, புந்தி மீது நன்று என அறிதல் தேற்ருன்— புத்தியின்கண் நன்று என்று அறிந்து தெளியானுய், பொறுத்திலன்—அம் மாத்திரையி னில்லாது அவற்றைச் சகிக்காதவனுமாய், ஒரு சில நவிலல் உற்ருன்—ஒரு சில பயனில்வார்த்தைகளைச் சொல்லுவானுயினுன். (32)

முனிவகேள் பலவு மீண்டு மொழிவதிற் பயனென் வெள்ளிப்
பனிவரை யுறையு நுங்கோன் பகவனே யெனினு மாக
வனையவன் றனக்கு வேள்வி யவிதனை யுதவே னீயு
மினியிவை மொழியல் போதி யென்செயன் முடிப்ப னென்றான்.

முனிவ கேள்—முனிவரே கேளும்; ஈண்டு பலவும் மொழிவதில் பயன் என்—நீர் இங்கே பலவற்றையுஞ் சொல்வதனாற் பயன் ஒன்றுமில்லை; வெள்ளிப் பனிவரை உறையும் நும் கோன்—குளிர்ச்சி பொருந்திய வெள்ளி மலையிலிருக்கும் உங்கள் சிவன், பகவனே எனினும் ஆக—சுத்த சாட்குண்ணியர் எனப்படும் முழுமுதற் கடவுளே யாயினும் ஆகுக; அனையவன் தனக்கு வேள்வி அவிதனை உதவேன்—அந்தச் சிவனுக்கு இவ்வேள்வியில் அவிப் பாகத்தை நான் நல்கேன்; நீயும் இனி இவை மொழியல்—நீரும் இனி இவற்றைப் பேசாதொழியும்; போதி—போதும் போம்; என் செயல் முடிப்பன் என்றான்—யான் எடுத்த கருமத்தை யான் முடித்தே தீருவேன் என்றான். (33)

வேறு

வளங்குலவு தக்கனிது புகன்றிடலுந்
தேதீசிமுனி மனத்திற் சீற்றம்
விளைந்ததுமற் றவ்வளவில் வெருவியது
வடவையழல் விண்ணோர் நெஞ்சந்
தளர்ந்ததுபொன் மால்வரையுஞ் சலித்ததந்தக்
குலகிரியுந் தரிப்பின் றாகி
யுலைந்தனவே லைகளேழு மொடுங்கியன
நடுங்கியதிவ் வுலக மெல்லாம்.

வளம் குலவு தக்கன் இது புகன்றிடலும்—செல்வச் செருக்கு மிக்க தக்கன் இதனைக் கூறியபோது, ததீசி முனி மனத்தில் சீற்றம் விளைந்தது—ததீசி மகா முனிவரின் மனத்திற் கோபாக்கினி மூண்டது; அவ்வளவில் வடவை அழல் வெருவியது—அப்பொழுது வடவாமுகாக்கினி அஞ்சியது; விண்ணோர் நெஞ்சம் தளர்ந்தது—தேவர்களின் மனம் தளர்ச்சியுற்றது; பொன் மால்வரையும் சலித்தது—பெரிய மேருமலையுஞ் சலனமுற்றது; அந்த குலகிரியும் தரிப்பின்றாகி உலைந்தன—அந்தக் குலமலைகளுந் தாங்குதலாற்றாமல் வருந்தின; வேலைகள் ஏழும் ஒடுங்கின—ஏழு கடல்களும் நீர் வறந்து ஒடுங்கின; இவ்வுலகமெல்லாம் நடுங்கியது—இந்த உலகம் முழுதும் நடுங்கியது. (34)

அக்கணமே முனிவரன்றன் பெருஞ்சீற்றந்
தனைநோக்கி யந்தோ வென்னா
வெக்குவடு மெக்கிரியு மெக்கடலு
மெவ்வுலகும் யாவும் யாருந்

தக்கனொரு வன்பொருட்டாற் றளர்ந்திடுமோ
வெனமுனிவு தணிந்து தற்சூ
ழொக்கலொடு மவணெழுந்து சிறுவிதியின்
முகநோக்கி யொன்று சொல்வான்.

முனிவரன்—முனிசிரேட்டரான ததீசி மகாமுனிவர், அக்கணமே—முனிவு தோன்றிய அந்தக் கணமே, தன் பெரும் சீற்றம் தனை நோக்கி—தமது பெரிய முனிவினியல்பை நோக்கி, அந்தோ என்னு—ஐயகோ என்றிரங்கி, எ குவடும்—எந்தச் சிகரமும், எ கிரியும்—எம்மலையும், எ கடலும்—எந்தச் சமுத்திரமும், எ உலகும்—எந்த உலகமும், யாவும் யாரும்—யாவையும் யாவரும், தக்கன் ஒருவன் பொருட்டால்—தக்கன் ஒருவன் பொருட்டு, தளர்ந்திடும்—தளர்தலைப் பொருந்தும்; ஓ என—அங்ஙனம் தளருவதா என்று, முனிவு தணிந்து—எடுத்த முனிவு தணியப்பெற்று, தன் சூழ் ஒக்கலொடும் அவண் எழுந்து—தம்மைச் சூழ்ந்திருந்த முனிகணங்களாகிய சுற்றத்தோடும் அவ்விடத்தினின்றும் எழுந்து, சிறுவிதியின் முகம் நோக்கி ஒன்று சொல்வான்—தக்கன் முகத்தை நோக்கி ஒன்று சொல்லியருளுவார். (35)

சங்கரனை விலக்கியின்று புரிகின்ற
மகஞ்சிதைக தக்க நின்னோ
டிங்குறையு மமரரெலா மழியுறவின்
னேயென்னு விசைத்துப் பின்ன
ரங்கணுறு மறையோர்தம் முகநோக்கி
யந்தணரி லழிதூ வானீ
ருங்கள்குலத் தலைமைதனை யிழந்திட்டீர்
கேண்மினென வுரைக்க லுற்றான்.

தக்க—அதிபாதக சிரோமணியாகிய தக்கனே, சங்கரனை விலக்கி இன்று புரிகின்ற மகம் சிதைக—ஆன்மாக்களுக்குச் சுகஞ் செய்பவராகிய பரமசிவனை விலக்கி இன்று நீ செய்கின்ற யாகம் சிதைந்தொழிவதாக; நின்னோடு இங்கு உறையும் அமரர் எலாம் இன்னே அழியுற—உன்னோடு இங்கே இருக்கின்ற தேவர்களெல்லாம் இப்பொழுதே அழிக; என்னு இசைத்து—என்று சாபம் மொழிந்து, பின்னர்—அதன்பின்பு, அங்கண் உறு மறையோர் தம் முகம் நோக்கி—அந்த யாகசாலையிலிருக்கின்ற பிராமணர்களுடைய முகத்தை நோக்கி, அந்தணரில் அழிதூ ஆனீர்—நீவிர் பிராமணர்களுக்குள்ளே பேடிகளாயினீர்; உங்கள் குல தலைமைதனை இழந்திட்டீர்—உங்கள் உயர் குலத் தலைமையை இழந்துவிட்டீர்; கேண்மின் என—கேளுங்கள் என்று, உரைக்கல் உற்றான்—அவர்களுக்குச் சாபம் இடுவாராயினர். (36)

பேசரிய மறைகளெலாம் பராபரனீ
யெனவணங்கிப் பெரிது போற்று
மீசனையு மன்பரையு நீற்றொடுகண்
டிகையினையு மிகழ்ந்து நீவிர்

காசினியின் மறையவரா யெந்நாளும்
பிறந்திறந்து கதியு ருது
பாசமத னிடைப்பட்டு மறையுரையா
நெறியதனிற் படுதி ரென்ருன்.

பேசரிய மறைகள் எலாம்—பேசுதற்கரிய வேதங்களெல்லாம், பராபரன் நீ என வணங்கி பெரிது போற்றும்—பராபரவஸ்து தேவரீரே யென்று வணங்கிப் பெரிதுந் துதிக்கின்ற, ஈசனையும்—சிவனையும், அன்பரையும்—சிவனடியார்களையும், நீறு ஒடு கண்டிகையினையும் இகழ்ந்து—சிவசின்னங்களாகிய விபூதி உருத்திராக்கங்களையும் இகழ்ந்து, நீவிர்—நீங்கள், காசினியில் மறையவராய் பிறந்து இறந்து எ நாளும் கதியுருது—பூமியின் கண்ணே பெயர் மாத்திரையால் மறையவராய்ப் பிறந்து இறந்து எப்பொழுதாயினும் ஒரு நற்கதியை அடையாமல், பாசமதன் இடைப்பட்டு—பாசபந்தத்தின் வயப்பட்டு, மறையுரையா நெறியதனில் படுதிர் என்ருன்—வேதம் பேசாத வேதத்துக்குப் புறமான பாசண்டமாகிய அவைதிக மார்க்கத்திற் புகுந்து அம்மார்க்கத்தை அநுசரிக்கக்கடவீர் என்று சபித்தருளினர். (37)

இனையநெறி யாற்சாபம் பலவுரைத்துத்
ததீசிமுனி யிரண்டு பாலு
முனிவர்தொகை தற்சூழத் தானுறையு
மாச்சிரம முன்னிச் சென்ரு
னனையவன்றன் பின்ஞகத் தக்கனென்போன்
பெருந்தகவு மாற்று நோன்பும்
புனைபுகழுஞ் செழுந்திருவு மாற்றலுமா
மனச்செருக்கும் போயிற் றன்றே.

இனைய நெறியால்—இவ்வாற்ருல், பல சாபம் உரைத்து—பலவாகிய சாபங்களை உரைத்தருளி, ததீசி முனி இரண்டுபாலும் முனிவர் தொகை தன் சூழ—ததீசி மகாமுனிவர் தமதிருமருங்கும் முனிகணங்கள் தம்மைச் சூழ்ந்து சேவித்துவர, தான் உறையும் ஆச்சிரமம் முன்னிச் சென்ருன்—தாமிருக்கின்ற ஆச்சிரமத்தை நோக்கிச் சென்றருளினர்; அனையவன் தன் பின்ஞக—அம் மகாமுனிவர் அவ்வாறு செல்ல அவருக்குப் பின்னே அவரைத் தொடர்ந்து, தக்கன் என்போன் பெரும் தகவும்—தக்கனுடைய பெருந் தகைமையும், ஆற்று நோன்பும்—செய்த தவமும், புனை புகழும்—இதுகாறும் புனைந்துரைக்கப்பட்ட கீர்த்தியும், செழும் திருவும்—செழுமையாகிய செல்வமும், ஆற்றலும்—வலியும், மாமனச் செருக்கும்—கரிய மனச்செருக்கும் ஆகிய எல்லாம் ஒருங்கு, போயிற்று—இருந்த இடமுந் தெரியாமற் போய்த் தொலைந்தது.

எல்லாம் ஒருமையுற்றேகினமையின், போயிற்று என்ருர். (38)

அனந்தன் சாப நீங்கு படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—1210.

---

# தானப் படலம்

போனதோர் பொழுதிலவன் றுவசமிற்ற
மகத்தூணிற் பொருக்கென் றெய்திக்
கானுலா வியகொடியுங் கழுகுமிடைந்
தனயாருங் கலங்கத் தானே
மானமார் வேதவல்லி மங்கலநா
ணுங்கழன்ற மற்றித் தன்மை
யானதோர் துன்னிமித்தம் பலவுண்டான்
முடிவோன்க ணவையு ருவோ.

போனது ஓர் பொழுதில்—ததீசி மகாமுனிவர் அவ்விடத்தினின்றகன்ற தாகிய அச்சமயத்தில், அவன் துவசம் இற்ற—அத்தக்கனது யாகசாலையிற் கட்டிய கொடிகள் அறுந்து விழுந்தன; கான் உலாவிய கொடியும் கழுகும் மகத் தூணில் பொருக்கென்று எய்தி மிடைந்தன—காடுபோலப் பரந்த காகங்களுங் கழுகுகளும் யாகத் தம்பத்தின்மீது விரைந்து சென்று நெருங்கின; யாரும் கலங்க மானம் ஆர் வேதவல்லி மங்கல நாணும் தானே கழன்ற—அனைவருங் கண்டு கலங்கும்படி மானம் பொருந்திய வேதவல்லியின் திருமங்கல நாண் தானே கழன்று வீழ்ந்தது; இ தன்மையானது ஓர் துன்னிமித்தம் பல உண்டு—இவ்வாறாய கெட்ட சகுனங்கள் பல நிகழ்ந்தன; முடிவோன்கண் அவை உறுவோ—இறந்து படுவானிடத்து அவை உளவாகாதிருக்குமோ?

நாணும் என்னும் உம்மையாலும் கழன்ற என்னும் பன்மையாலும் ஏனைய ஆபரணங்களுங் கொள்க. (1)

### வேறு

இந்த வாறுதுன் னிமித்தங்கள் பலநிகழ்ந் திடவுஞ்
சிந்தை செய்திலன் சிறுவது மஞ்சிலன் றீயோன்
றந்தை தன்னையு நாரணன் றன்னையுந் தகவான்
முந்து பூசனை புரிந்தனன் முகமன்கண் மொழியா.

தீயோன்—தீயோனாகிய தக்கன், இந்தவாறு பல துன்னிமித்தங்கள் நிகழ்ந்திடவும்—இவ்வாறு பலவாகிய கெட்ட சகுனங்கள் நிகழவும், சிந்தை செய்திலன்—அவற்றை மனத்திற் பொருள் செய்திலன்; சிறுவதும் அஞ்சிலன்—சற்றாயினும் அஞ்சினனுமல்லன்; தந்தை தன்னையும் நாரணன் தன்னையும்—தந்தையாகிய பிரமாவையும் விஷ்ணுவையும், முகமன்கள் மொழியா—முகஸ்துதி செய்து, தகவால் முந்து பூசனை புரிந்தனன்—ஏற்ற பிரகாரம் முதற்கட் பூசித்தான். (2)

மற்றை வானவர் யாவர்க்கு முனிவர்க்கு மரபா
லெற்று வேண்டிய வவையெலா நல்கியே யிதற்பின்
பெற்ற மங்கையர் தமக்குமா மருகர்க்கும் பெரிது
மற்ற மில்லதோர் மங்கலத் தொல்சிறப் பளித்தான்.

மற்றை வானவர் யாவர்க்கும் முனிவர்க்கும்—மற்றைத் தேவரனைவருக்கும் முனிவர்களுக்கும், எற்று வேண்டிய அவையெலாம் மரபால் நல்கி—எவை வேண்டுமோ அவைகளையெல்லாம் முறையே கொடுத்து, இதன் பின்—அதன்பின்பு, பெற்ற மங்கையர் தமக்கும் மா மருகர்க்கும்—தான் பெற்ற புதல்வியருக்கும் பெருமை பொருந்திய மருகர்களுக்கும், அற்றம் இல்லது ஓர் மங்கல தொல் சிறப்பு பெரிதும் அளித்தான்—அழிவில்லாத சிறந்த மங்களகரமான பழைய சிறப்புக்களைப் பெரிதுஞ் செய்தான்.

எவற்று எற்று என நின்றது; அற்று, சாரியை. (3)

நாலு மாமுகக் கடவுள்சே யித்திற நல்கி
மாலும் யாவருங் காத்திடத் தீத்தொழின் மகஞ்செய்
வேலை நோக்கியே தொடங்கின னவ்விடை வேள்விச்
சாலை தன்னிடை நிகழ்ந்தன சாற்றுவன் றமியேன்.

நாலு மாமுக கடவுள் சேய் இ திறம் நல்கி—சிறந்த நான்முகக் கடவுளின் புதல்வனை தக்கன் இவ்வாறு கொடுத்து, மாலும் யாவரும் காத்திட—திருமாலும் ஏனைய யாவரும் யாகத்தைக் காவல்செய்ய, தீ தொழில் மகம் செய் வேலை நோக்கி—தீ வேள்வி வேட்குஞ் சமயத்தை நோக்கியிருந்து, தொடங்கினன்—கேடாகியதொருசமயத்தில் அதனை ஆரம்பித்தான்; அ இடை வேள்வி சாலை தன்னிடை நிகழ்ந்தன தமியேன் சாற்றுவன்—அவ்விடத்தில் யாகசாலையில் நடந்தவைகளைத் தமியேன் இனிச் சொல்லுவேன். (4)

முன்ன ரேதக்க னேவலும் வினைசெயன் முறையான்
மன்னு தேனுவோ ராடகச் சாலையின் மாடே
பொன்னின் மால்வரை நடுவுசேர் வெள்ளியம் பொருப்பை
யன்ன தாமென வன்னமாம் பிறங்கலை யளித்த.

முன்னரே தக்கன் ஏவலும்—முன்னமே தக்கன் ஏவுதலும், வினை செயல் முறையால்—அவனேவிய தொழிலைச் செய்யவேண்டுமென்னும் முறையால், மன்னு தேனு—அங்கே வந்து நின்ற காமதேனு, ஓர் ஆடகச் சாலையின் மாடு—ஒரு பொன்மயமாகிய சாலையின்கண், பொன்னின் மால்வரை நடுவு சேர் வெள்ளியம் பொருப்பை அன்னது ஆம் என—பெரிய பொன்மலையின்

நடுவே சேர்ந்த வெள்ளிமலையை ஒப்பது என்று சொல்லும்படி, அன்னமாம் பிறங்கலே அளித்த—அன்னமாகும் மலையை உண்டாக்கியது.

அளித்தது, 'து' கெட்டு நின்றது. (5)

ஏத நீங்கிய தீயபா லடிசிலு மெண்ணில்
பேத மாகிய முதிரையி னுண்டியும் பிறவா
மோத னங்களும் வீற்றுவீற் றுகவே யுலகின்
மாதி ரங்களிற் குலகிரி யாமென வகுத்த.

ஏதம் நீங்கிய தீய பால் அடிசிலும்—குற்றமில்லாத இனிய பாலன்னமும், எண்ணில் பேதம் ஆகிய முதிரையின் உண்டியும்—எண்ணற்ற பேதங்களாகிய முற்கான்னம் முதலிய முதிரை வர்க்கங்களும், பிறவாம் ஓதனங்களும்—பிற அன்ன வகைகளும், வீற்று வீற்று ஆக—வேறு வேறு ஆக, உலகின் மாதிரங்களின் குலகிரியாமென வகுத்த—உலகின் எல்லையாகிய திக்குக்களிலுள்ள குலமலைகளேயாம் என்று சொல்லும்படி வகுக்கப்பட்டன. (6)

நெய்யி னோடளாய் விரைகெழு நுண்டுக ணீவிக்
குய்யி னாவியெவ் வுலகமு நயப்புறக் குழுமி
வெய்ய தாகிய கருனைக டிசைதொறு மேவு
மையல் யானைக ளாமென வழங்கிற்று மாதோ.

நெய்யினோடு அளாய்—நெய்யோடளாவி, விரைகெழு நுண் துகள் நீவி—வாசனை பொருந்திய நுண்பொடி தூவப்பட்டு, எ உலகமும் நயப்புற—எவ்வுலகத்தாரும் விரும்பி முகருமாறு, குய்யின் ஆவி குழுமி—குய்ப்புகை சூழ்ந்து, வெய்யது ஆகிய கருனைகள்—வெம்மைத்தாகிய பொரிக்கறிக் குவையை, திசைதொறும் மேவும் மையல் யானைகளாம் என—திக்குக்கள் தோறும் நிற்கும் மதமயக்கமுள்ள யானைகள் போலும் என்று சொல்லும்படி, வழங்கிற்று—பலவாகக் குவித்தது.

குய்—தாளிதம். (7)

அண்ணல் சேர்வெந்தை தோயவை நொலையலே யாதிப்
பண்ணி யங்களுந் தாரமுங் கனிவகை பலவு
மண்ணின் மேலுறு கிரியெலாங் குலகிரி மருங்கு
நண்ணி னாலெனத் தொகுத்தன யாவரு நயப்ப.

அண்ணல் சேர் வெந்தை—மதுரத்தாற் பெருமை பொருந்திய பிட்டு, தோயவை—தோயவை, நொலையல்—அப்ப வகை, ஆதி பண்ணியங்களும்—

முதலிய பணிகாரங்களும், தாரமும்—அரும் பண்டமும், கனிவகை பலவும்—பலவாகிய கனிவகைகளும், மண்ணின் மேலுறு கிரியெலாம்—பூமியிலுள்ள மலைகளெல்லாம், குல கிரி மருங்கு—குலமலைகளுக்குப் பக்கத்தில், நண்ணிஞ லென—நண்ணினாற்போல, யாவரும் நயப்ப தொகுத்தன—யாவரும் விரும்பத் தொகுக்கப்பட்டன.

தோயவை தோசை என்பர். நொலையல் எள்ளுருண்டையுமாம். அரும் பண்டம், கிடைத்தற்கரிய பண்டம். (8)

விருந்தி னோர்கொள விழுதுடன் பாறயிர் வெள்ளந்
திருந்து கங்கையும் யமுனையு மாமெனச் செய்த
வருந்து முண்டிகள் யாவையும் வழங்குகோ வதனிற்
பொருந்து கின்றது தந்ததென் றாலது புகழோ.

விருந்தினோர் கொள—விருந்தினர்கள் கொள்ளும்வண்ணம், இழுதுடன் பால் தயிர் வெள்ளம்—நெய்யோடு பால் தயிர் வெள்ளங்கள், யமுனையும் திருந்து கங்கையும் ஆம் என செய்த—யமுனையுந் திருந்திய கங்கையும் போலும் என்று சொல்லும்படி உதவப்பட்டன; அருந்தும் உண்டிகள் யாவையும் வழங்கு கோ—உண்ணும் உணவுவகைகள் யாவையும் உதவுகின்ற காமதேனு, அதனின் பொருந்துகின்றது தந்தது என்றால்—தன்பாற் பொருந்துகின்ற தாகிய நெய்யாதியவற்றை உதவியது என்றால், அது புகழோ—அது அதற்குப் புகழாமோ. (9)

தாவில் பாளித மான்மதஞ் சாந்துதண் பனிநீர்
நாவி வெள்ளடை செழும்பழுக் காயொடு நறைமென்
பூவு மேனைய பொருள்களு நல்கின புகழ்சேர்
தேவர் கோமகன் பணிபுரி கின்றதோர் தேனு.

புகழ் சேர் தேவர் கோமகன் பணிபுரிகின்றது ஓர் தேனு—புகழ் பொருந்திய தெய்வேந்திரனுக்குப் பணிசெய்கின்றதாகிய ஒப்பற்ற காமதேனுவினால், தாவில் பாளிதம்—குற்றமற்ற பச்சைக் கர்ப்பூரம், மான் மதம்—கஸ்தூரி, சாந்து—சந்தனம், தண் பனி நீர்—குளிர்ச்சி பொருந்திய பனி நீர், நாவி—புழுகு, வெள்ளடை—வெற்றிலை, செழும்பழுக்காய்—செழுமையாகிய பாக்கு, நறை மென் பூ—வாசனை பொருந்திய மிருதுவான புஷ்பம், ஏனைய பொருள்களும்—ஏனைய பொருள்கள் ஆகிய யாவும், நல்கின—உதவப்பட்டன. (10)

ஆவ திவ்வகை யாவது நல்கியே யங்கண்
மேவு கின்றது மணியுமச் சங்கமும் வியன்சேர்
காவு மம்புய நிதியமுந் தக்கனுங் கடியோ
னேவ லாலருட் சாலையி லடைந்தன விமைப்பில்.

ஆ அது இவகை யாவதும் நல்கி—காமதேனு இவ்வாறு யாவற்றையும் உதவி, அங்கண் மேவுகின்றது—அவ்வன்னசாலையில் மேவாநிற்ப; மணியும்—சிந்தாமணியும், அ சங்கமும்—அந்தச் சங்க நிதியும், வியன்சேர் காவும்—உயர்ச்சி பொருந்திய கற்பகச் சோலையும், அம்புய நிதியமும்—பதும நிதியும், தக்கனுங் கடியோன் ஏவலால்—தக்கனுகிய கொடியோனின் கட்டளையால், அருள் சாலையில் இமைப்பில் அடைந்தன—தான சாலைக்கண் இமைப்பொழுதில் வந்து சேர்ந்தன. (11)

கணித மில்லதோர் பரிதிகண் மேனியிற் கனலு
மணிக ளோர்புடை தொகுத்தன வாடக வரைபோ
லணிகொள் காஞ்சன மோர்புடை தொகுத்தன வம்பொற்
பணிக ளாடைக ளோர்புடை தொகுத்தன படைத்தே.

படைத்து—பின்வருபவைகளை உண்டாக்கி, கணிதமில்லது ஓர் பரிதிகள் மேனியில் கனலும் மணிகள் ஓர் புடை தொகுத்தன—ஒப்பில்லாத அளவற்ற சூரியர்களின் திருமேனிப் பிரகாசம் போலப் பிரகாசிக்கின்ற இரத்தினங்களை ஒருசார் தொகுத்தன; ஆடக வரைபோல் அணிகொள் காஞ்சனம் ஓர் புடை தொகுத்தன—பொன்மலையாகிய மேருவைப்போல அழகிய பொன்வகைகளை ஒருசார் தொகுத்தன; அம் பொன் பணிகள் ஆடைகள் ஓர்புடை தொகுத்தன—அழகிய பொன்னுபரணங்களையும் வஸ்திரங்களையும் ஒருசார் தொகுத்தன. (12)

மற்றும் வேண்டிய பொருளெலா முதவியம் மருங்கி
லுற்ற வேலையத் தக்கன தேவலி னொழுகா
நிற்றல் போற்றிய முனிவரர் யாவரு நிலத்தோர்க்
கிற்றெ லாமிவண் வழங்குதும் யாமென விசைத்தார்.

மற்றும் வேண்டிய பொருள் எலாம் உதவி—மற்றும் வேண்டிய பொருள்கள் எல்லாவற்றையும் உண்டாக்கி, அ மருங்கில் உற்ற வேலை—அத் தானசாலையிற் சிந்தாமணி முதலியவைகள் நின்றபோது, அ தக்கனது ஏவலின் ஒழுகா நிற்றல் போற்றிய முனிவரர் யாவரும்—அத்தக்கனது ஏவலின்வழி ஒழுகி நடவாநின்ற முனிவரர் யாவரும், நிலத்தோர்க்கு இற்று எலாம் இவண் யாம் வழங்குதும் என இசைத்தார்—பூமியினுள்ளாருக்கு இவற்றையெல்லாம் இவ்விடத்தில் யாம் கொடுப்போம் என்று கூறினுர்கள். (13)

வேறு

இன்ன வேலையி லிச்செயல் யாவையு
முன்ன மேயுணர் முப்புரி நூலினர்
துன்னி யேமனந் தூண்டவந் தொல்லையி
லன்ன சாலை தனையணந் தாரரோ.

இன்ன வேலையில்—இத்தகைய சமயத்தில், இ செயல் யாவையும் முன்னமே உணர் முப்புரி நூலினர்—அன்னசாலையிலுந் தானசாலையிலும் நிகழ்ந்த இச் செயலனைத்தையும் முன்னமே விசாரித்தறிந்த முப்புரி நூலினரான பிராமணர், துன்னி—நெருங்கி, மனம் தூண்ட வந்து—மனம் பிடர்பிடித்துந்த வந்து, ஒல்லையில் அன்னசாலை தனை அணைந்தார்—விரைவில் முதற்கண் அன்ன சாலையை அடைந்தார்கள். (14)

சாலை காண்டலுந் தக்கனை யேத்தியே
பாலர் தன்மையிற் பாடின ராடினர்
கோல மார்பிற் குலாவிய வெண்டுகில்
வேலை யாமென வீசிநின் றூர்த்துளார்.

சாலை காண்டலும்—அன்னசாலையைக் கண்டவளவில், தக்கனை ஏத்தி—தாதாவாகிய தக்கனை வாழ்த்தித் துதித்து, பாலர் தன்மையில் பாடினர் ஆடினர்—பாலர்களைப்போலப் பாடி ஆடி, கோல மார்பில் குலாவிய வெண் துகில்—அழகிய மார்பில் விளங்கிய வெண்ணிற உத்தரீயங்களை, வேலை ஆம் என வீசி நின்று—சமுத்திரத்தின் திரையாம் என்று சொல்லும்படி மேலே வீசி நின்று, ஆர்த்துளார்—ஆரவாரஞ் செய்தார்கள். (15)

மிண்டு கின்றவவ் வேதியர் தங்களைக்
கண்டு வம்மின் கதுமென நீரெனக்
கொண்டு சென்று குழுவொ டிருத்தியே
யுண்டி தன்னை யுதவுதன் மேயினர்.

மிண்டுகின்ற அ வேதியர் தங்களை—அழையாமலே நெருங்கி வருகின்ற அந்தப் பிராமணர்களை, கண்டு—முனிவர்கள் கண்டு, நீர் கதுமென வம்மின் என கொண்டு சென்று—நீங்கள் விரைந்து வாருங்கள் என்று கூறி அழைத்துக் கொண்டு சென்று, குழுவொடு இருத்தி—கூட்டங் கூட்டமாக இருத்தி, உண்டி தன்னை உதவுதல் மேயினர்—உணவுவகைகளை உதவுவாராயினர். (16)

மறுவில் செம்பொன் மணிகெழு தட்டைக
ளிறுதி யில்லன யாவர்க்கு மிட்டுமே
னறிய வுண்டிக ணல்கியின் னோர்தமக்
குறவி னூரென லூட்டுவித் தாரவண்.

மறுவில் செம்பொன் மணிகெழு தட்டைகள் இறுதி இல்லன—குற்றமற்ற செம்பொன்னாலான அழகு விளங்குகின்ற அளவில்லாதனவாகிய பொற் றட்டைகளை, யாவர்க்கும் இட்டு—யாவருக்கும் எதிரில் இட்டு, மேல்—அத்

தட்டையின் மீது, நறிய உண்டிகள் நல்கி—நறிய உணவுகளைப் படைத்து, இன்னோர் தமக்கு உறவினர் என—இப் பிராமணர்களுக்கு உறவுமுறையினரை ஒப்ப, அவண் ஊட்டுவித்தார்—அவ்வன்னசாலையில் உண்பித்தார்கள். (17)

அன்ன காலை யரும்பசி தீர்தரத்
துன்ன வுண்டுஞ் சுவையுடைத் தாதலா
லுன்னி யுன்னியிவ் வுண்டிகள் சாலவு
மின்னம் வேண்டு மெனவுரைப் பார்சிலர்.

அன்ன காலை—அச்சமயத்தில், அரும் பசி தீர்தர துன்ன உண்டும்—அரிய பசி நீங்க நிறையப் புசித்தும், சுவை உடைத்து ஆதலால்—அவ்வுணவு சுவையுடைத்தாதலினாலே, உன்னி உன்னி—அவ்வுணவையே நினைந்து நினைந்து, இ உண்டிகள் இன்னம் சாலவும் வேண்டும் என சிலர் உரைப்பார்—இந்த உணவு வகைகள் இன்னும் அதிகம் வேண்டும் என்று சிலர் கூறுவார்கள். (18)

குற்ற மொன்றுள கூறுவ தென்னினி
நற்ற வஞ்செய்து நான்முக னாலிவ
ணுற்ற வுண்டி யெலாமுண வோர்பசி
பெற்றி லோமெனப் பேதுறு வார்சிலர்.

குற்றம் ஒன்று உள—நாம் போசனஞ் செய்யும் விஷயத்தில் நம்மிடம் ஒரு பெருங் குறை உண்டு; இனி கூறுவது என்—இனி அதனைப் பேசி ஆவது என்னை; நல் தவம் செய்து இவண் உற்ற உண்டி எலாம் உண ஓர் பசி நான்முகனால் பெற்றிலோம்—முன்னமே நல்ல தவத்தைச் செய்து இவ்விடத்து வந்து குவிந்த உணவுகள் முழுவதையும் உண்ணும்பொருட்டு ஒப்பற்றதொரு தீராப் பசியைப் பிரமதேவரிடத்துப் பெற்றோமில்லை அதுவே நம்பாலுள்ள குறை; என பேதுறுவார் சிலர்—என்று கூறிச் சிலர் வருந்துவார்கள். (19)

வீறு முண்டி மிசைந்திட வேண்டும்வாய்
நூறு நூற தெனநுவல் வார்தமை
யேற வேண்டு மிதிலமை யாதெனச்
சீறி யேயிகல் செய்திடு வார்சிலர்.

வீறும் உண்டி மிசைந்திட—சுவையான் மிகுகின்ற உண்டிகளை உண்ணுவதற்கு, வாய் நூறுநூறு வேண்டும் என நுவல்வார்—வாய்கள் நூறூற் பெருக்கப்பட்ட நூறாகிய பதினாயிரம் வேண்டுமென்று சிலர் கூறுவார்கள்; தமை—அவ்வாறு பதினாயிரம் வாய்கள் வேண்டுமென்று கூறிய போசனப்பிரியர்களை, சீறி—கோபித்து, இதில் அமையாது—நீவிர் கூறிய கணக்கில் வாய்கள்

அமைதல் ஒரு சிறிதும் போதாது; ஏற வேண்டும்—வாய்களின் தொகை இலக்கமாகக் கோடியாகச் சங்கமாக அநந்தமாகக் கூடுதல் வேண்டும்; என இகல் செய்திடுவார் சிலர்—என்றிங்ஙனம் வாய் கணக்கிடும் விஷயத்தில் வாய்வாதஞ் செய்வார்கள் சிலர். (20)

புலவர் கோனகர் போற்றிய தேனுவந்
தலகி லிவ்வுண வாக்கிய தாலெனுச்
சிலர்பு கன்றனர் தேக்கிட வுண்மினோ
வுலவ லீரென வோதுகின் றூர்சிலர்.

புலவர் கோன் நகர் போற்றிய தேனு வந்து அலகில் இ உணவு ஆக்கியது எனு சிலர் புகன்றனர்—தெய்வேந்திரனது சுவர்க்க நகரத்தை உணவினுற் பாதுகாத்த காமதேனு இங்கே வந்து இவ்வுணவு வகைகளையெல்லாம் உண்டாக்கியது என்று சிலர் கூறினுர் ஆக; சிலர்—அதனைக் கேட்ட வேறு சிலர் அவர் கூற்றை அநுவதிப்பாராய், தேக்கிட உண்மின் உலவலீர் என ஓதுகின்றூர்—ஓ நமரங்காள் தேக்கெறிய உண்மின்கள் உலோபஞ் செய்யாதீர்கள் என்று உபதேசஞ் செய்கின்றூர்கள். (21)

அறிவி லாத வயன்மகன் யாகமின்
றிறுதி யாமென் றிசைத்தன ரன்னது
பெறுதி யேனுமிப் பேருண வேநமக்
குறுதி வல்லையி லுண்மினென் பார்சிலர்.

அறிவிலாத அயன் மகன் யாகம் இன்று இறுதியாம் என்று இசைத்தனர்—ததீசி மகாமுனிவரின் உபதேசத்தைப் பயன்செய்யும் அறிவில்லாத பிரம புத்திரனுகிய இத் தக்கனது யாகம் இன்றைக்கே இறுதியாகிய அழிவை எய்தும் என்று விவேக புத்திமான்கள் சிலர் கூறினர்; சிலர்—அதனைக் கேட்ட வேறு சிலர், அன்னது பெறுதியேனும்—யாகம் இறுதியாவது பெறற்பாலதொன்றுயினும், நமக்கு உறுதி இ பேருணவே—ஈண்டுக் குழுமியிருக்கும் எமக்குறுதியாவது இப் பேருண்டிகளை உண்டு தொலைப்பதேயாம்; வல்லையின்—ஆகையினுலே இறுதி வாரா முன்னமே விரைவில், உண்மின் என்பார்—உண்டு தொலையுங்கள் என்று கூறுவார்கள். (22)

உண்டி லேமிவ ணுண்டதி லீதுபோற்
கண்டி லேமொரு காட்சியு மின்பமுங்
கொண்டி லேமின்று கொண்டதி லீசனுல்
விண்டி லேமெனின் மேலதென் பார்சிலர்.

உண்டதில்—நமது ஆயுளில் இதுகாறும் உணவு உட்கொண்ட விஷயத்தில், இவண் ஈது போல்—இவ்விடத்தில் இப்பொழுது உண்ணுவதுபோல,

உண்டிலேம்—முன் எக்காலத்திலாயினும் நாம் உண்டறியோம்; ஒரு காட்சியும் கண்டிலேம்—அம்மட்டோ இவ்வாறுயதொரு உணவுக் காட்சியைக் கண்டறியோம்; இன்று கொண்டதில் இன்பமும் கொண்டிலேம்—இன்று அநுபவித்த உணவுச் சுகம் போன்றதோர் ஊண் சுகத்தை முன்பு யாமநுபவித்தறியோம்; ஈசனல் விண்டிலேம் எனில்—இத்துணை உண்டிச் சிறப்பெய்திய யாம் கடவுளாலுங் கைவிடப்படாதிருப்போமானல், அது மேல் என்பார் சிலர்—அந்தப் பேறு நமக்குச் சிறப்பாகக் கிடைத்ததொரு மகா பாக்கியமேயாம் என்று கூறுவார்கள் சிலர். (23)

எல்லை யில்லுண வீயுமித் தேனுவை
நல்ல நல்லதொர் நாண்கொடி யாத்திவண்
வல்லை பற்றிநம் மாநக ரிற்கொடு
செல்லு தும்மெனச் செப்புகின் ருர்சிலர்.

எல்லை இல் உணவு ஈயும் இ தேனுவை—அளவற்ற உணவுவகைகளை வேண்டிய வேண்டியாங்கு அளிக்கின்ற இந்தக் காமதேனுவை, இவண் வல்லை பற்றி நல்ல நல்லதொர் நாண் கொடு யாத்து—இவ்விடத்தில் விரைந்து பிடித்து மிக நல்லதொரு கயிற்ருற் கட்டி, நம் மாநகரில் கொடு செல்லுதும் என—நமது பெரிய நகரத்தின்கட் கொண்டு செல்லுவோம் என்று, சிலர் செப்புகின்ருர்—குறையா மக்கள் சிலர் கூறுகின்ருர்கள்.

குறையாமக்கள்—முழுமக்கள்; மூடர். (24)

மக்கள் யாவரும் வானவர் யாவரு
மொக்கல் யாவரு முய்ந்திட வாழ்தலாற்
றக்க னேற்ற தவத்தினு முண்டுகொன்
மிக்க தென்று விளம்புகின் ருர்சிலர்.

மக்கள் யாவரும்—தன் மக்கள் அனைவரும், ஒக்கல் யாவரும்—தன் சுற்றத்தவர் அனைவரும், வானவர் யாவரும்—அம்மட்டோ தேவர்கள் அனைவரும், உய்ந்திட வாழ்தலால்—உய்யும்பொருட்டு வாழ்வாங்கு வாழ்தலினலே, தக்கன் நோற்ற தவத்தினும் மிக்கது உண்டு கொல் என்று—தக்கன் செய்த தவத்தினும் மிக்கதொரு தவம் இவ்வுலகில் உண்டுகொலோ என்று, விளம்புகின்ருர் சிலர்—நன்றிச்சொல் விளம்புகின்ருர் சொல்விளம்பிகள் சிலர். (25)

மைந்த னிட்டன மாந்திட நான்முகன்
றந்தி லன்வயின் சாலவு மாங்கவன்
சிந்தை மேலமுக் காறுசெய் தானெனு
நொந்து நொந்து நுவலுகின் ருர்சிலர்.

மைந்தன் இட்டன மாந்திட—தன் புதல்வனை தக்கன் இட்டனவாகிய உணவுவகைகளையெல்லாந் தெவிட்டத் தெவிட்ட உண்ணும்பொருட்டு, நான்முகன்—அவன் தந்தையாகிய அந்தப் பாவி, சாலவும் வயின் தந்திலன்—நமக்குத் தொகையான் மிக்க வயிறுகளைப் படைத்தானல்லன்; ஆங்கு அவன் சிந்தைமேல் அழுக்காறு செய்தான்—அந்தப் பிரமன் நமக்குப் பலகோடி வயிறுகளைப் படையாத காரணம் அவன் தன் மனத்தின்கண் அழுக்காறு என்கின்ற ஒரு பாவியை வரவேற்றுக் கொண்டதேயாம்; என நொந்து நொந்து நுவலுகின்றார் சிலர்—என்று ஒரு வயிறேயுடைருப்பதற்கு வருந்தி வருந்திப் புலம்புகின்றார்கள் சிலர்.

பிராமண சமாராதனையாலே தன் மைந்தன் தன்னினும் மேம்பட்டு விடுவான் என்ற பொறாமையினாற்றானே, அருமந்த பிராமணராகிய நமக்குப் பலகோடி வயிறுகளை அப்பாவி படைத்திலன் என்றார் என்க. (26)

குழுவு சேர்தரு குய்யுடை யுண்டிகள்
விழைவி னோடு மிசைந்தன மாற்றவும்
பழுதி லாவிப் பரிசனர் தம்மொடு
மெழுவ தெப்படி யென்றுரைப் பார்சிலர்.

குழுவு சேர்தரு—குழுமியிருக்கின்ற, குய்யுடை உண்டிகள்—தாளிதத்தோடு கூடிய உண்டிகளை, விழைவினோடு ஆற்றவும் மிசைந்தனம்—பேராசையினாற் பெரிதும் உண்டுவிட்டோம்; பழுதிலா இ பரிசனர் தம்மொடும் எழுவது எப்படி—குற்றமற்ற இந்தப் பந்தியிலுள்ள பரிசனங்களோடு சுத்திசெய்யும் பொருட்டு எழுவதெவ்வாறு; என்று உரைப்பார் சிலர்—என்று கூறுவார்கள் வயிற்றுப் பாரத்தால் எழுந்துகொள்ள முடியாத சிலர். (27)

இந்த நல்லுண வீண்டு நுகர்ந்திட
நந்த மைந்தரை நம்மனை யாங்கொடு
வந்தி லம்மினி வந்திடு மோவெனாச்
சிந்தை செய்தனர் செப்புகின் றார்சிலர்.

இந்த நல் உணவு ஈண்டு நுகர்ந்திட—இந்த நல்ல உணவுகளை இவ்விடத்தில் நுகருதற்கு, நம் தம் நம் மனை மைந்தரை யாம் கொடு வந்திலம்—நம் நம் மனைவி மக்களையும் யாம் அழைத்துக்கொண்டு வந்திலோம்; இனி வந்திடுமோ—இனி இவ்வண்ணம் ஒரு வாய்ப்புக் கிடைத்திடுமா; என—என்னினைந்தென்செய்தோம் என்று, சிந்தை செய்தனர்—மனைவி மக்களைச் சிந்தித்தலிலும் ஆழ்ந்தார்கள் சிலர்; சிலர் செப்புகின்றார்—சிலர் வாய் திறந்து அவ்விஷயத்தைச் சொல்லுகின்றவர்களாயினர். (28)

அன்ன பற்பல வார்கலி யாமெனப்
பன்னி நுங்கும் பனவர்கள் கேட்டன
ரென்ன மற்றவை யாவையு மார்தர
முன்ன ளித்து முனிவ ரருத்தினர்.

அன்ன பற்பல ஆர்கலியாம் என பன்னி நுங்கும் பனவர்கள்—அவ்வாருய பற்பல வார்த்தைகளைக் கடலொலிபோலப் பேசிக்கொண்டு உண்ணுகின்ற பிராமணர்கள், என்ன கேட்டனர் அவை யாவையும்—எவற்றைக் கேட்டார்களோ அவற்றையெல்லாம், ஆர்தர முனிவரர் முன் அளித்து அருத்தினர்—நுகரும்பொருட்டு முனிவரர்கள் எதிரில் நின்று படைத்து நுகர்வித்தார்கள். (29)

அருத்தி மிச்சி லகற்றி யருந்தவ
விருத்தி மேவிய வேதியர் தங்களை
யிருத்தி மற்றெ ரிருக்கையில் வாசநீர்
கரைத்த சந்தின் கலவை வழங்கினர்.

அருந்தவ விருத்தி மேவிய—முனிவர்கள் விருந்தோம்புதலால் தமக்கு அரிய தவவிருத்தி மேவும்பொருட்டு, வேதியர் தங்களை—அப்பிராமணர்களை, அருத்தி—மேற் சொன்ன பிரகாரம் உண்பித்து, மிச்சில் அகற்றி—உச்சிட்டத்தைத் தாமே நீக்கி, மற்று ஓர் இருக்கையில் இருத்தி—அப்பிராமணர்களை மற்றோரிடத்தில் இருக்கச்செய்து, வாச நீர் கரைத்த சந்தின் கலவை வழங்கினர்—வாசனை பொருந்திய நீரிற் கரைத்த சந்தனக் கலவையை வழங்கினர்கள். (30)

நளிகு லாவிய நாவி நரந்தம்வெண்
பளிதம் வெள்ளடை பாகுட னேனவை
யளியு லாவு மணிமலர் யாவையு
மொளிறு பீடிகை யுய்த்தனர் நல்கினர்.

நளி குலாவிய நாவி—குளிர்ச்சி பொருந்திய புழுகு, நரந்தம்—கஸ்தூரி, வெண் பளிதம்—வெள்ளிய பச்சைக் கற்பூரம், வெள்ளடை—வெற்றிலை, பாகு உடன்—பாக்குடனே, ஏனவை—முகவாசம், அளி உலாவும் அணி மலர்—வண்டு படியும் அழகிய புஷ்பங்கள், யாவையும் ஒளிறு பீடிகை உய்த்தனர் நல்கினர்—யாவற்றையும் ஒளி பொருந்திய பூந்தட்டில் வைத்து வழங்கினர்கள்.

முகவாசம்—தாம்பூலத்துடன் உபயோகப்படுத்தும் ஐவகை நறுமணப் பண்டங்கள். அவை, இலவங்கம், ஏலம், கருப்பூரம், சாதிக்காய், தக்கோலம் என்பன. (31)

அரைத்த சாந்த மணிந்துமெய் யெங்கணும்
விரைத்த பூந்துணர் வேய்ந்துபைங் காயடை
பரித்து நின்ற பனவர்புத் தேளுறுந்
தருக்க ளாமெனச் சார்ந்தன ரென்பவே.

மெய் எங்கணும்–தேகம் முழுவதும், அரைத்த சாந்தம் அணிந்து–அரைத்த சந்தனத்தைப் பூசி, விரைத்த பூ துணர் வேய்ந்து–வாசனை பொருந்திய பூங்கொத்துக்களை அணிந்து; பைங்காய் அடை பரித்து–பசிய வெற்றிலை பாக்கைத் தாங்கி, நின்ற பனவர்–ஆங்கே நின்ற பிராமணர்கள், புத்தேள் உறும் தருக்களாம் என சார்ந்தனர்–தெய்வத்தன்மை பொருந்திய பஞ்ச தருக்கள் போல விளங்கினுர்கள், என்ப–என்பர் புனைந்துரை வல்லோர்.

பஞ்ச தருக்கள் நுண்பொடியாய மகரந்தமும் பூந்துணரும் பசிய காய்களும் இலைகளும் பரித்து நிற்றலாற் பனவர் அவைபோல விளங்கினர் என்க. (32)

ஆன பான்மையி லந்தணர் யாவரு
மேன காதலின் வெய்தென வேகியே
வான மண்ணிடை வந்தென வேர்கெழு
தான சாலை தனையடைந் தார்களே.

ஆன பான்மை இல் அந்தணர் யாவரும்–தக்கவான நற்பண்பு இல்லாத அப்பிராமணர்களனைவரும், மேன காதலின்–தம்பால் மேவிய விருப்பத்தோடு, வெய்து என ஏகி–விரைந்து அந்த அன்னசாலையை விட்டுச் சென்று, வானம் மண்ணிடை வந்து என–வானுலகம் பூமியின்கண் வந்து இருந்தாற் போல, ஏர் கெழு தான சாலை தனை அடைந்தார்–அழகு விளங்கியிருக்கின்ற தானசாலையை அடைந்தார்கள். (33)

அடையும் வேலை யயனருள் காதலன்
விடையி னுலங்கண் மேவு முனிவர
ரிடைய றுதவர்க் கீந்தன ரீந்திடுங்
கொடையி னுலெண்ணில் கொண்டலைப் போன்றுளார்.

அடையும் வேலை–அப்பிராமணர்கள் அந்தத் தானசாலையை அடையுஞ் சமயத்தில், அயன் அருள் காதலன் விடையினுல்–பிரம புத்திரனுன தக்கனது உத்தரவினுல், அங்கண் மேவும் முனிவரர்–அவ்விடத்திலிருக்கும் முனிவரர்கள், ஈந்திடும் கொடையினுல் எண்ணில் கொண்டலைப் போன்றுளார்–ஓயாமற் கொடுக்குங் கொடையினுற் கைம்மாறு கருதாத மேகம் போன்றவர்களாய், அவர்க்கு இடையறுது ஈந்தனர்–அப்பிராமணர்க்கு இடையீடின்றிக் கொடுத்துக்கொண்டேயிருந்தார்கள். (34)

பொன்னை நல்கினர் பூணொடு பூந்துகி
றன்னை நல்கினர் தண்சுட ரோனென
மின்னை நல்கும் வியன்மணி நல்கினர்
கன்னி யாவுங் கறவையு நல்கினார்.

பொன்னை நல்கினர்—பொன்னைக் கொடுத்தார்கள்; பூணொடு பூந் துகில் தன்னை நல்கினர்—ஆபரணங்களோடு பொலிவாகிய வஸ்திரங்களையுங் கொடுத்தார்கள்; தண் சுடரோன் என மின்னை நல்கும் வியன்மணி நல்கினர்—தண்ணிய சுடரினையுடையதொரு நவீன சூரியன்போலப் பிரகாசிக்கின்ற உயர்ந்த இரத்தினங்களைக் கொடுத்தார்கள்; கன்னி ஆவும் கறவையும் நல்கினார்—கன்னிப் பசுக்களையுங் கறவைப் பசுக்களையுமெல்லாங் கொடுத்தார்கள். (35)

படியி லாடகப் பாதுகை நல்கினர்
குடைக ணல்கினர் குண்டிகை நல்கினர்
மிடையும் வேதியர் வேண்டிய வேண்டியாங்
கடைய நல்கின ரங்கைகள் சேப்பவே.

படியில் ஆடகம் பாதுகை நல்கினர்—ஒப்பில்லாத பொற்பாதுகைகளைக் கொடுத்தார்கள்; குடைகள் நல்கினர்—குடைகளைக் கொடுத்தார்கள்; குண்டிகை நல்கினர்—கமண்டலங்களைக் கொடுத்தார்கள்; மிடையும் வேதியர்—ஒருவரையொருவர் முந்தி மிடைகின்ற அப்பிராமணர்கள்; வேண்டிய வேண்டியாங்கு—விரும்பியனவற்றை விரும்பியவாறே, அங்கைகள் சேப்ப அடைய நல்கினர்—அகங்கைகள் சிவந்து கன்ற ஒருசேர வாரி வாரி வழங்கினார்கள். (36)

இந்த வண்ண மிறையதுந் தாழ்க்கிலர்
முந்து நின்ற முனிவர ராண்டுறு
மந்த ணாளர்க் கயினியொ டாம்பொரு
டந்து நின்று தயங்கின ரோர்புடை.

இந்த வண்ணம் இறையதும் தாழ்க்கிலர்—இவ்வாறு இறைப்பொழுதுந் தாமதஞ் செய்யாமல், முந்து நின்ற முனிவரர்—தானஞ் செய்தலில் முற்பட்டு நின்ற முனிவர்கள், ஆண்டுறும் அந்தணாளர்க்கு—ஆங்கே வருகின்ற அப் பிராமணர்களுக்கு, அயினியொடு ஆம் பொருள் தந்து நின்று—அன்னத்தோடு அவர்கள் வேண்டுவனவாம் பொருள்களையுங் கொடுத்தபடி நின்று, ஓர் புடை தயங்கினர்—ஒருசார் கொடையாற் பிரகாசித்தார்கள். (37)

அற்ற மில்சிறப் பந்தண ராயிடைப்
பெற்ற பெற்ற பெருவளன் யாவையும்
பற்றி மெல்லப் படர்ந்தனர் பற்பல
பொற்றை செய்தனர் போற்றின ரோர்புடை.

அற்றம் இல் சிறப்பு அந்தணர்—தானம் வாங்குதலிலே சோர்வில்லாத சிறப்பினையுடைய அப் பிராமணர்கள், ஆயிடை பெற்ற பெற்ற பெருவளன் யாவையும்—அவ்விடத்தில் மீண்டும் மீண்டும் பெற்ற பெருநிதியங்கள் அனைத்தையும், பற்றி—எடுத்துக்கொண்டு, மெல்ல படர்ந்தனர்—மெல்ல மெல்லச் சென்று, ஓர் புடை பற்பல பொற்றை செய்தனர் போற்றினர்—ஓர் பக்கத்தில் அந்நிதியங்களைக் குவித்துச் செய்குன்றங்கள் பல பல செய்து பாதுகாத்தனர்.

உணவு மிகுதியானெய்திய உடற்பாரத்தானும் பொருட்பாரத்தானும் மெல்லெனப் படர்ந்தனர் என்க. (38)

வரத்தி னாகும் வரம்பில் வெறுக்கைதம்
புரத்தி னுய்த்திடும் புந்தியி லன்னவை
யுரத்தி னற்றமக் கொப்பரும் வேதியர்
சிரத்தின் மேற்கொடு சென்றன ரோர்புடை.

உரத்தினால் தமக்கு ஒப்பரும் வேதியர்—தேக வலியினாலே தமக்கு ஒப்பாரில்லாத பிராமணர் சிலர், வரத்தின் ஆகும் வரம்பில் வெறுக்கை—தமது வர விசேடத்தாற் கிடைத்தனவாகும் வரம்பற்ற நிதியங்களை, தம் புரத்தின் உய்த்திடும் புந்தியில்—தமது ஊருக்குக் கொண்டு சென்று சேர்க்கவேண்டும் என்னும் புத்தியினாலே, அன்னவை சிரத்தின் மேல்கொடு—அவைகளைத் தமது சிரத்தின்மீது சுமந்துகொண்டு, ஓர் புடை சென்றனர்—ஒரு புறத்திற் சென்றார்கள். (39)

அரித னூர்தியு மன்னமும் கீழ்த்திசை
யரித னூர்தியு மாங்கவன் மாக்களு
மரித னூர்தியு மாருயிர் கொண்டிடு
மரித னூர்தியு மார்ப்பன வோர்புடை.

ஓர்புடை—யாகசாலையின் ஒருபுறத்தே, அரி தன் ஊர்தியும்—திருமாலின் வாகனமாகிய கருடனும், அன்னமும்—பிரமதேவரின் வாகனமாகிய அன்னமும், கீழ்த்திசை அரிதன் ஊர்தியும்—கிழக்குத்திக்குக்கதிபனாகிய இந்திரனின் வாகனமாகிய ஐராவதமும், ஆங்கவன் மாக்களும்—அவ்விந்திரனுடைய குதிரையாகிய உச்சைச்சிரவம் முதலியவைகளும், அரிதன் ஊர்தியும்—அக்கினியின் வாகனமாகிய ஆட்டுக்கடாவும், ஆருயிர் கொண்டிடும் அரிதன் ஊர்தியும்—அரிய உயிரைக் கவருகின்ற யமனது வாகனமாகிய எருமைக்கடாவும், ஆர்ப்பன—ஆரவாரஞ் செய்வன. (40)

தான மீது தயங்கிய தேவரு
மேனை யோர்களு மிவ்விடை யீண்டலின்
மீன மார்தரு விண்ணென வெண்ணிலா
மான கோடி மலிகின்ற வோர்புடை.

ஓர் புடை—மற்றொரு புறத்தே, தானம் மீது தயங்கிய தேவரும்—சுவர்க்கத்தில் விளங்கிய தேவர்களும், ஏனையோர்களும்—கந்தருவ சித்த வித்தியாதரர் முதலிய ஏனையோர்களும், இ இடை ஈண்டலின்—இவ்விடத்துக்கு நெருங்கி வருதலால், மீனம் ஆர் தரு விண் என—நட்சத்திரங்கள் நிறைந்து விளங்கும் வானம்போல, வெண்ணிலா மான கோடி—வெள்ளிய நிலவைச் சொரிகின்ற விமான கோடிகள், மலிகின்ற—மிக்கு விளங்குகின்றன. (41)

நரம்பின் வீணை ஞரலுறும் வேய்ங்குழல்
பரம்பு தண்ணுமை பண்ணமை பாடனூல்
வரம்பி னேய்ந்திட வானவர் நாடவே
யரம்பை மார்கணின் றாடின ரோர்புடை.

ஓர் புடை—வேறொரு புறத்தே, நரம்பின் வீணை—நரம்பினையுடைய வீணையும், ஞரலுறும் வேய்ங்குழல்—ஒலிக்கின்ற வேய்ங்குழலும், பரம்பு தண்ணுமை—இசைபரம்புகின்ற மிருதங்கமும், பண் அமை பாடல்—பண்ணமைந்த பாடல்களும், நூல் வரம்பின் ஏய்ந்திட—இசைநூல் வரம்பை இகவாது நடக்க, வானவர் நாட—தேவர்கள் விரும்ப, அரம்பைமார்கள் நின்றாடினர்—தேவமாதர்கள் நிருத்தஞ் செய்தனர். (42)

தேவர் மாதருஞ் சிற்சில தேவருந்
தாவி லாமகச் சாலையின் வைகிய
காவு தோறுங் கமல மலர்ந்திடு
மாவி தோறுமுற் றாடின ரோர்புடை.

ஓர் புடை—இன்னுமோர் புறத்தே, தேவ மாதரும் சிற்சில தேவரும்—தேவ மகளிருஞ் சிற்சில தேவர்களும், தாவிலா மக சாலையின் வைகிய காவு தோறும்—கெடாத அந்த யாகசாலையிற் பொருந்திய சோலைகள்தோறும், கமல மலர்ந்திடும் ஆவி தோறும்—தாமரைகள் மலர்ந்திருக்கின்ற வாவிகள் தோறும், உற்று ஆடினர்—சென்று விளையாட்டயர்ந்தார்கள்.

கேட்டுக்கு இல்லமாகும் மகச்சாலையுமாம். (43)

வேத வல்லி வியப்புட னல்கிய
காதன் மாதருங் காமரு விண்ணவர்
மாத ராருஞ் சசியு மகத்திரு
வோதி நாடியங் குற்றன ரோர்புடை.

ஓர்புடை—குறிப்பிட்டுரைக்கத்தக்கதோர் புறத்தே, வேதவல்லி வியப் புடன் நல்கிய காதல் மாதரும்—வேதவல்லி பெருமையோடு பெற்ற மாதவரின் காதலுக்குரிய பெண்களும், காமரு விண்ணவர் மாதராரும்—விரும்பத்தக்க அழகினையுடைய தேவ மகளிரும், சசியும்—இந்திராணியும், மகத்திரு ஓதி நாடி—யாக ஐசுவரியத்தைப் பேசியும் நோக்கியும், அங்கு உற்றனர்—அவ் விடத்திற் பொழுதுபோக்கிக்கொண்டிருந்தார்கள். (44)

இனைய பற்பல வெங்கணு மீண்டலிற்
கனைகொள் பேரொலி கல்லென வார்த்தன
வனையன் வேள்விக் ககன்கடல் யாவையுந்
துனைய வந்தவண் சூழ்ந்தன போலவே.

இனைய பற்பல எங்கணும் ஈண்டலின்—இன்னேரன்ன பலவேறு விநோத நிகழ்ச்சிகள் எவ்விடத்துஞ் செறிந்திருத்தலினாலே, அனையன் வேள்விக்கு அகன் கடல் யாவையும் துனைய வந்து—அத் தக்கனது யாகத்துக்கு அகன்ற கடலனைத்தும் விரைந்து வந்து, அவண் சூழ்ந்தன போல—அவ்விடத்திற் சூழ்ந்தனவாக அதனால் உண்டாகும் பேரொலிகள் போல, கனைகொள் பேரொலி கல்லென ஆர்த்தன—செறிவு கொண்ட பேரொலிகள் கலீரென் றொலித்தன. (45)

ஊன மேலுறு மும்பரு மிம்பரு
மேன காதலின் மிக்கவ ணீண்டுவ
வான யாறு வருநதி யும்புவித்
தான யாறுந் தழீஇயின போன்றவே.

மேல் ஊனம் உறும் உம்பரும் இம்பரும்—இனி இடையூறடையும் விண்ணவரும் மண்ணவரும், மேன காதலின் மிக்கு அவண் ஈண்டுவ—ஒருவரோ டொருவர் இயைபுற்ற காதலான் மிக்கு அவ்விடத்துச் செறிந்து இருத்தல், வான யாறு வருநதியும்—வான்வழி வருகின்ற தேவ நதியும், புவி தான யாறும்—பூமிக்கணுள்ள நதியும், தழீஇயின போன்ற—ஒன்றோடொன்று கலந்து ஒன்றுபட்டிருத்தலை ஒக்கும்.

ஈண்டுவ, தழீஇயின தொழிற்பெயர். (46)

தானப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—1256.

---

# வேள்விப்படலம்

இகந்த சீர்பெறு மிப்பெருஞ் சாலையி
லகந்தை மிக்க வயன்பெருங் காதலன்
மகம்பு ரிந்தது மற்றது சிந்திடப்
புகுந்த வாறும் பொருக்கெனக் கூறுகேன்.

இகந்த சீர் பெறும் இ பெரும் சாலையில்—வேத வரம்பை விலகிய சிறப்புக்கள் பொருந்திய இந்தப் பெரிய யாகசாலையில், அகந்தை மிக்க அயன் பெரும் காதலன்—அகங்காரம் மிக்க பிரமதேவரின் சியேட்ட புத்திரனை தக்கன், மகம் புரிந்ததும்—வேள்வி செய்ததையும், அது சிந்திடப் புகுந்த ஆறும்—அந்த வேள்வி சிதையும்படி நேர்ந்த வரலாற்றையும், பொருக்கென கூறுகேன்—விரைவாகச் சொல்லுவேன். *(1)*

**வேறு**

மருத்து ழாய்முடி மாலயன் பாங்குற மகத்தின்
கருத்த ஞகிய தீயவன் முன்னமே கருதி
வரித்த மேலவர் தங்களை நோக்கியே மரபி
னிருத்து முத்தழ லென்றலு நன்றென விசைந்தார்.

மரு துழாய் முடி மால் அயன் பாங்கு உற—மணங்கமழுகின்ற துழாய் மாலையை அணிந்த முடியினையுடைய திருமாலும் பிரமதேவரும் முக்கியஸ்தர்களாய்த் தன் பக்கத்திலிருக்க, மகத்தின் கருத்தனுகிய தீயவன்—யாகாதிபனை கொடிய தக்கன், முன்னமே கருதி—முன்னமே இன்னார் இன்னது செய்தற்குரியர் என்று சிந்தித்து, வரித்த—நியோகித்து வருவித்த, மேலவர் தங்களை நோக்கி—மேலோர்களாகிய இருத்துவிக்குக்களை நோக்கி, மரபின்—வேதநெறிப்படி, முத்தழல் இருத்தும் என்றலும்—மூவகை அக்கினிகளையும் ஸ்தாபனஞ் செய்யுங்கள் என்று பணித்தலும், நன்று என இசைந்தார்—நன்று என்று கூறி அவ்வாறு செய்தற்கு அவர்கள் உடன்பட்டார்கள்.

இருத்துவிக்குக்கள்—யாக புரோகிதர். மூவகையக்கினி—காருகபத்தியம் ஆகவனீயம் தக்கிணுக்கினி என்பன. *(2)*

முற்று நாடிய விருத்திஞே ரரணியின் முறையா
லுற்ற வங்கியை வேதிகைப் பறப்பைமே லுய்த்துச்
சொற்ற மந்திர மரபினுற் பரிதிகள் சூழ்ந்து
மற்று முள்ளதோர் விதியெலா மியற்றினர் மன்னே.

முற்றும் நாடிய இருத்திஞேர்—யாக விதிகளனைத்தையும் ஐயந் திரிபற ஓதியுணர்ந்த இருத்துவிக்குக்கள், அரணியின் முறையால் உற்ற அங்கியை—தீக்கடை கோலினுலே விதிப்படி கடைந்து உளதாகிய அக்கினியை, வேதிகை பறப்பை மேல் உய்த்து—யாகத்திண்ணைக்கண்ணதாகிய பறவைக் கோலத்தின் மீது வைத்து, சொற்ற மந்திர மரபினுல்—கற்ப சூத்திரத்துச் சொல்லப்பட்ட மந்திர மரபோடு, பரிதிகள் சூழ்ந்து—யாகாக்கினிகளைப் பரிதிகளாற் சூழ்ந்து, மற்றும் உள்ளதோர் விதியெலாம்—எஞ்சியுள்ள ஒப்பற்ற யாகச் சடங்கு விதிகளனைத்தையும், இயற்றினர்—செய்தார்கள்.

பறப்பை—பறவை வடிவம்; இது வேதிகையாகிய மேடைமீது அமைப்பது. வேதிகை—யாகத்திண்ணை. பறப்பை, நெய்பெய் பாத்திரத்துக்குப் பெயராயினும் ஈண்டைக்கியையாது. பரிதி, யாகாக்கினியைச் சுற்றியிடுந் தருப்பை வடிவம். இது விட்டரம் எனவும்படும். (3)

ஆங்கு முத்தழல் விதிமுறை செய்தலு மயன்சேய்
பாங்க ருற்றிடு மிருத்தினர் யாரையும் பாரா
நீங்க ணுங்களுக் காகிய செய்கையை நினைந்து
தூங்க லின்றியே புரிமினே கடிதெனச் சொன்ஞன்.

ஆங்கு முத்தழல் விதிமுறை செய்தலும்—அவ்விடத்தில் மூவகை அக்கினியையும் வேத விதிப்படி உண்டாக்குதலும், அயன் சேய் பாங்கர் உற்றிடும் இருத்தினர் யாரையும் பாரா—தக்கன் தன் பக்கத்திலிருக்கின்ற இருத்துவிக்குக்கள் யாவரையும் நோக்கி, நீங்கள் நுங்களுக்கு ஆகிய செய்கையை—நீங்கள் உங்களுங்களுக்கு உரியனவாகிய கிரியையை, நினைந்து—சிந்தித்து, தூங்கலின்றி—மந்திரங்கள் கிரியைகளில் லோபமின்றி மிக்க ஊக்கத்துடன், கடிது புரிமின் என சொன்ஞன்—விரைந்து கருமங்களைச் செய்யுங்கள் என்று சொன்ஞன். (4)

சொன்ன வாசகங் கேட்டலு மிருத்திஞேர் தொகையின்
முன்ன மாகிய வம்மகந் தனக்கவி முழுதும்
வன்னி யாதியாஞ் சமிதையுந் தருப்பையு மற்று
மின்ன போல்வதுங் கொடுவழங் கினர்களா றிருவர்.

சொன்ன வாசகம் கேட்டலும்—தக்கன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டவுடன், இருத்திஞேர் தொகையில் ஆறிருவர்—இருத்துவிக்குக்கள் கூட்டத்திற் பன்னிருவர், அ மகம் தனக்கு முன்னம் ஆகிய அவி முழுதும்—அந்த யாகத்துக்கென்றே முன்னமே சித்தமான அவி முழுவதையும், வன்னி ஆதியாம் சமிதையும்—வன்னி முதலிய ஓம விறகுகளையும், தருப்பையும்—தருப்பைகளையும், மற்றும் இன்ன போல்வதும்—வேறு இவைபோல்வனவற்றையும், கொடு வந்து—கொண்டுவந்து, வழங்கினர்—ஏற்றவாறு ஆங்கே வழங்கிஞர்கள்.

போல்வது தொழிற் பெயர்; ஆகுபெயராய்ப் போல்வன என்னும் பொருட்டு. (5)

அந்த வேள்விசெய் வித்தன ரொருவரா லவிக
ளெந்தை யல்லவர் கொள்ளவே யவரவர்க் கிசைத்த
மந்தி ரந்தனைப் புகன்றன ரொருவரவ் வானோர்
தந்த மைக்குறித் தழைத்தன ரொருவர்பேர் சாற்றி.

ஒருவர் அந்த வேள்வி செய்வித்தனர்—இருத்துவிக்குக்களில் ஒருவர் அந்த யாகத்தை அதிகாரியாயிருந்து நடத்தினார்; ஒருவர்—மற்றொருவர், அவிகள் எந்தை அல்லவர் கொள்ள—அவிகளை எம் பரமபிதாவாகிய சிவபெருமான் தவிர்ந்த ஏனையோர்கள் ஏற்றுக்கொள்ளும்வண்ணம், அவரவர்க்கு இசைத்த மந்திரந்தனைப் புகன்றனர்—அவ்வத் தேவர்களுக்குச் சொல்லப்பட்ட மந்திரங் களைச் செபித்தார்; ஒருவர்—வேறொருவர், வானோர் தம்தமை பேர் சாற்றி குறித்து அழைத்தனர்—அவ்வத் தேவர்களைப் பெயர் சொல்லிக் குறிப்பிட்டு வாருங்கள் என்று அழைத்தார். (6)

மற்ற வர்க்கெலா மமைந்திடு மவிகளை மலர்க்கை
பற்றி யங்கிவா யளித்தன ரொருவரப் பரிசி
னற்ற நோக்கியே யிருந்தன ரொருவரங் கதற்கு
முற்று நல்லருள் புரிந்தன ரொருவரம் முதல்போல்.

ஒருவர்—ஓர் இருத்துவிக்கு, அவர்க்கெலாம் அமைந்திடும் அவிகளை—அவ்வத் தேவருக்கென்று அமைந்திருக்கின்ற அவிகளை, மலர்க்கை பற்றி—மலர்போன்ற தமது கையிலேந்தி, அங்கிவாய் அளித்தனர்—யாகாக்கினியின் கண் ஆகுதி செய்தார்; ஒருவர்—ஓரிருத்துவிக்கு, அ பரிசின் அற்றம் நோக்கி இருந்தனர்—அவ்வத் தேவருக்கு அவரவர் அவியை வழங்கும் முறைமையின் சமயத்தை நோக்கியபடி வழங்குவோருக்குச் சமயத்தைத் தெரிவிக்கு முகமாக இருந்தார்; ஒருவர்—ஓரிருத்துவிக்கு, அ முதல்போல்—அந்த அவியை ஏற்கும் தெய்வம் திருப்தி தெரிவிப்பதுபோல, அங்கு அதற்கு முற்றும் நல்லருள் புரிந் தனர்—அங்கு அவியை வழங்கியதற்கு முழுதுந் திருப்தி தெரிவிப்பதாகிய நல்லருளைச் செய்துகொண்டிருந்தார்.

ஒருவர் சமயஞ் சொல்ல, ஒருவர் அவியை வழங்க, ஒருவர் திருப்தி தெரிவித்தாரென்க. (7)

இருத்தி னோர்களும் பிறருமீ தியற்றுழி யாக
கருத்த னாகிய தக்கனத் தேவரைக் கருதிப்
பரித்து நுங்குதி ரென்றவி புரிதொறும் பகர்ந்தே
யருத்தி யுற்றனன் கடவுளர் தமக்கெலா மமுதின்.

இருத்தினோர்களும் பிறரும் ஈது இயற்றுழி—இருத்துவிக்குக்களும் பிறரும் இவ்வாறு செய்யும்போது, யாக கருத்தனாகிய தக்கன்—யாகாதிபதியாகிய

தக்கன், அ தேவரை கருதி அவி புரிதொறும்—அவ்வத் தேவரை நினைத்து அவியை ஆகுதி செய்யுந்தோறும், பரித்து அமுதின் நுங்குதிர் என்று பகர்ந்து—தேவர்காள் நீவிர் அவியை ஏற்று அமிர்தத்தை யொப்ப விரும்பி உண்ணு மின் என்று உபசார மொழி கூறி, அருத்தி உற்றனன்—உண்பித்தவா றிருந்தான். (8)

திருந்து கின்றநற் சுவையினுற் றூய்மையாற் றிகழு
மருந்து போன்றன வென்னினு முயிர்தொறு மனத்து
மிருந்த வெம்பிரா னன்றியே மிசைதலி னிமையோர்க்
கருந்து நீரலா நஞ்சென லாகிய வவிகள்.

அவிகள்—தக்கனது யாகத்தில் வழங்கப்பட்ட அவிகள், திருந்துகின்ற நல் சுவையினுல்—திருத்தம் அமைகின்ற நல்ல சுவையினுலும், தூய்மையால்—தூய்மையினுலும், திகழும் மருந்து போன்றன என்னினும்—மேன்மை திகழு கின்ற அமிர்தம்போன்றனவாயினும், உயிர் தொறும் மனத்தும் இருந்த எம்பிரான் அன்றி—ஆன்மாக்களிலும் மனத்தும் வியாபித்து அந்தரியாமியா யிருந்த எம்பெருமானை விலகி, மிசைதலின்—அப்பெருமான் மிசையாமல் தாம் மிசைதலினுலே, இமையோர்க்கு—அவிகளை ஏற்ற தேவர்களுக்கு, அருந்து நீரலா நஞ்சு எனல் ஆகிய—மிசையத்தகாத நஞ்சுபோலாயின. (9)

வேள்விப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 1265.

---

# உமை வரு படலம்

பேசுமிவ் வேள்வி பிதாமகன் மைந்த
ஞசம் விளைந்திட நாடி யியற்ற
மாசறு நாரத மாமுனி யுற்றே
காசினி மேலிது கண்டன னன்றே.

பேசும் இவேள்வி—மேலே பேசப்பட்ட இந்த யாகத்தை, பிதாமகன் மைந்தன் நாசம் விளைந்திட நாடி இயற்ற--பிரமபுத்திரனுன தக்கன் நாசம் உண்டாமாறு தேடிச் செய்ய, மாசறு நாரத மாமுனி—மாசறு காட்சியினரான நாரத மகாமுனிவர், இது—இவ்விபரீத யாகம், காசினிமேல்—பூமியின்கண் நிகழ்வதை, உற்றுக் கண்டனன்—உற்று நோக்கினுர். (1)

கண்டன னாலமர் கண்டனை நீக்கிப்
புண்டரி கந்திகழ் புங்கவன் மைந்த
னண்ட ருடன்மக மாற்றின னன்னுன்
றிண்டிறல் கொல்லிது செய்திட லென்னு.

கண்டனன்—உற்றுநோக்கி, ஆல் அமர் கண்டனை நீக்கி—திருநீலகண்டரான சிவபெருமானை விலக்கி, புண்டரிகம் திகழ் புங்கவன் மைந்தன்—தாமரை மலரிலிருக்கும் பிரமதேவருடைய புதல்வனுன தக்கன், அண்டருடன் மகம் ஆற்றினன்—தேவர்களுடன் யாகஞ் செய்யாநின்ருன்; இது செய்திடல்—சிவாபராதமான இந்த யாகத்தை அவன் செய்தல், அன்னுன் திண் திறல் கொல்—அவனுடைய திண்ணிய செல்வச் செருக்கு இருந்தவாறுபோலும்; என்னு—என்று எண்ணி.

ஆலம், அம் கெட்டு நின்றது. (2)

எண்ணிய நாரத னெவ்வுல குஞ்செய்
புண்ணிய மன்னதொர் பூங்கயி லாய
நண்ணிமுன் னின்றிடு நந்திக ளுய்ப்பக்
கண்ணுதல் சேவடி கைதொழு துற்ருன்.

எண்ணிய நாரதன்—இவ்வாறெண்ணிய நாரத மகாமுனிவர், எ உலகும் செய் புண்ணியம் அன்னது ஓர் பூங்கயிலாயம் நண்ணி—எல்லா உலகமுஞ்

செய்த புண்ணியத்தின் சொரூபம் போன்றதொரு அழகிய கைலாச மலையை அடைந்து, முன் நின்றிடு நந்திகள் உய்ப்ப—முதல் வாய்தலிற் காவல் செய்து நிற்கும் நந்தியடிகள் உள்ளே விடுப்ப, கண்ணுதல் சேவடி கைதொழுது உற்றான்—நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது செம்மையாகிய பாதங் களைக் கைகூப்பி வணங்கியவாறு அணுகச் சென்றான். (3)

கைதொழு தேத்திய காலையன் னானை
மைதிகழ் கந்தர வள்ளல்கண் ணுற்றே
யெய்திய தென்னிவ ணிவ்வுல கத்திற்
செய்திய தென்னது செப்புதி யென்றான்.

கை தொழுது ஏத்திய காலை—கைகூப்பி வணங்கித் துதித்து நின்ற சமயத்தில், அன்னானை மைதிகழ் கந்தர வள்ளல் கண்ணுற்று—அந்த நாரத முனிவரைக் கருமைவிளங்குகின்ற கண்டத்தையுடைய அருள்வள்ளலாகிய சிவபெருமான் திருநோக்கஞ் செய்து, இவண் எய்தியது என்—நாரதனே நீ இவ்விடம் வந்ததாகிய காரணம் என்னை; இவ்வுலகத்தில் செய்தியது என்—இவ்வுலகத்தின் கண்ணே விசேடமான செய்தியாவது யாது; அது செப்புதி என்றான்—அதனைக் கூறுவாயாக என்று அருளிச் செய்தார். (4)

எங்கணு மாகி யிருந்தருள் கின்ற
சங்கர னிம்மொழி சாற்றுத லோடு
மங்கது வேலையி லம்முனி முக்கட்
புங்கவ கேட்டி யெனப்புகல் கின்றான்.

எங்கணும் ஆகி இருந்து—எவ்விடத்தும் வியாபித்திருந்து, அருள்கின்ற சங்கரன்—ஆன்மாக்களுக்குச் சுகஞ் செய்தருளுகின்ற சிவபெருமான், இமொழி சாற்றுதலோடும்—இம்மொழிகளைக் கூறியருளுதலும், அங்கது வேலையில்—அப்பொழுது, அ முனி—அந்த நாரதமுனிவர், முக்கண் புங்கவ கேட்டி எனப் புகல்கின்றான்—மூன்று கண்களையுடைய பரம்பொருளே கேட்டருள்வீராக என்று கூறுகின்றார். (5)

அதிர்தரு கங்கை யதன்புடை மாயோன்
விதிமுத லோரொடு மேதகு தக்கன்
மதியிலி யாயொர் மகம்புரி கின்றான்
புதுமையி தென்று புகன்றன னம்மா.

அதிர்தரு கங்கை அதன்புடை—ஒலிக்கின்ற கங்காநதியின் கரையில், மேதகு தக்கன்—செல்வச் செருக்கால் மேன்மையடைந்த தக்கன், மதியிலி யாய்—புத்தியை இழந்தானாய், ஒர் மகம்—ஒரு யாகத்தை, மாயோன் விதி

முதலோரொடு—திருமால் பிரமதேவர் முதலிய தேவர்களுடன், புரிகின்ருன்—செய்கின்ருன்; இது புதுமை என்று புகன்றனன்—இஃதொரு விசேடமான புதுமையென்று நாரதமுனிவர் கூறினர். (6)

ஈங்கிது கூறலு மெம்பெரு மான்றன்
பாங்கரின் மேவு பராபரை கேளா
வாங்கவன் மாமக மன்பொடு காண்பா
ளோங்கு மகிழ்ச்சி யுளத்திடை கொண்டாள்.

ஈங்கு இது கூறலும்—சிவபெருமானது சந்நிதியில் இதனை நாரத முனிவர் கூறுதலும், எம்பெருமான் தன் பாங்கரில் மேவு பராபரை கேளா—எம்பெருமானுடைய வாமபாகத்தில் வீற்றிருக்கின்ற பராபரையாகிய தேவி அதனைக் கேட்டு, ஆங்கு அவன் மாமகம் அன்பொடு காண்பான்—அக் கங்கைக் கரையில் அத் தக்கன் செய்கின்ற பெரிய யாகத்தை அவன்பால் வைத்த அன்பினுற் காணும்பொருட்டு, ஓங்கு மகிழ்ச்சி உளத்திடை கொண்டாள்—ஓங்கி வளர்வதோர் உவகையைத் திருவுளத்துக் கொண்டார். (7)

அங்கண னல்லரு ளாலனை யான்றன்
பங்குறை கின்றனள் பாங்கரி னீங்கி
யெங்கள் பிரானை யெழுந்து வணங்கிச்
செங்கை குவித்திது செப்புத லுற்ருள்.

அனையான் தன் பங்கு உறைகின்றனள்—சிவபெருமானது பாகத்தில் வீற்றிருக்கின்ற உமாதேவியார், பாங்கரின் எழுந்து நீங்கி—வாமபாகத்தி னின்றும் எழுந்து நீங்கி, எங்கள் பிரானை செங்கை குவித்து வணங்கி—எம்பெருமானைச் செம்மையாகிய கரங்களைக் குவித்து வணங்கி, அங்கணன் நல் அருளால் இது செப்புதல் உற்ருள்—அருட் கண்ணராகிய சிவபெருமானது திருவருளினுலே தம்பாலுளதாகிய இவ்விருப்பத்தை அப்பெருமானுக்குக் கூறுவாராயினர். (8)

தந்தை யெனப்படு தக்க னியற்று
மந்த மகந்தனை யன்பொடு நோக்கி
வந்திடு கின்றனன் வல்லையி லின்னே
யெந்தை பிரான்விடை யீகுதி யென்ருள்.

தந்தை எனப்படும் தக்கன் இயற்றும் அந்த மகம் தனை—தந்தையென்று சொல்லப்படுந் தக்கன் செய்கின்ற அந்த யாகத்தை, அன்பொடு நோக்கி—அவன்பாற் கொண்ட அன்பினுலே தரிசித்து, இன்னே வல்லையில் வந்திடு

கின்றனன்—இதோ விரைவில் மீண்டு வந்திடுகின்றேன்; எந்தை பிரான் விடை ஈகுதி என்ருள்—பரமபிதாவாகிய எம்பெருமானே விடைதந்தருள்க என்று பிரார்த்தித்தார். (9)

என்றலு நாயக னேந்திழை தக்க
னுன்றனை யெண்ணல னும்பர்க ளோடும்
வன்றிற லெய்தி மயங்குறு கின்ரு
னின்றவன் வேள்வியி லேகலை யென்ருன்.

என்றலும்—என்றிங்ஙனம் தேவி பிரார்த்தித்தலும், நாயகன்—சர்வ லோகைக நாயகரான சிவபெருமான், ஏந்திழை—ஏந்திய ஆபரணங்களைத் தரித்த உமையே, தக்கன் உன்தனை எண்ணலன்—தக்கன் உன்னை மதியான்; வன் திறல் எய்தி—திண்ணிய செல்வச் செருக்குற்று, உம்பர்களோடும் மயங்குறுகின்ருன்—தேவர்களுடன் மயங்குகின்ருன்; இன்று அவன் வேள்வியில் ஏகலை என்ருன்—ஆகையினுலே இப்பொழுது அவன் செய்யும் யாகத்தின்கட் செல்லற்க என்றருளிச் செய்தார். (10)

இறையிது பேசலு மேந்திழை வேதாச்
சிறுவ னெனப்படு தீயதொர் தக்க
னறிவில னுகு மவன்பிழை தன்னைப்
பொறுமதி யென்றடி பூண்டனண் மாதோ.

இறை இது பேசலும்—சிவபெருமான் இதனை அருளிச்செய்தலும், ஏந்திழை—உமாதேவியார், வேதா சிறுவன் எனப்படும் தீயது ஓர் தக்கன் அறிவிலன் ஆகும்—பிரமபுத்திரன் எனப்படுந் தீமையில் ஒப்பில்லாத தக்கன் அறிவிலியேயாவன்; அவன் பிழை தன்னை பொறுமதி என்று—அவன் செய்த பிழையைப் பொறுத்தருள்வீராக என்று பிரார்த்தித்து, அடி பூண்டனள்—திருவடிகளைத் தலைக்கணிசெய்து வணங்கினுர். (11)

பூண்டனள் வேள்வி பொருக்கென நண்ணி
மீண்டிவண் மேவுவல் வீடருள் செய்யுந்
தாண்டவ நீவிடை தந்தரு ளென்ருண்
மாண்டகு பேரருள் வாரிதி போல்வாள்.

மாண் தகு பேரருள் வாரிதி போல்வாள்—மாட்சிமை பொருந்திய பேரருட் கடல்போல்வாராகிய உமாதேவியார், பூண்டனள்—மீண்டும் வணங்கி, வேள்வி பொருக்கென நண்ணி மீண்டு இவண் மேவுவல்—யாகசாலையை விரைவில் அடைந்து திரும்பி இவ்விடத்துக்கு வந்துவிடுவேன்; வீடு அருள் செய்யும்

தாண்டவ—முத்தியைத் தருகின்ற ஆனந்த தாண்டவத்தையுடைய எம் பெருமானே, நீ விடை தந்தருள் என்றுள்—தேவரீர் அநுமதி தந்தருள்க என்று பிரார்த்தித்தார். (12)

மாதிவை கூறலும் வன்மைகொ டக்கன்
மேதகு வேள்வி வியப்பினை நோக்குங்
காதலை யேலது கண்டனை வல்லே
போதுதி யென்று புகன்றனன் மேலோன்.

மாது இவை கூறலும்—உமாதேவியார் இவற்றைக் கூறுதலும், மேலோன்—மேலோரான சிவபெருமான், வன்மை கொள் தக்கன்—வலியைப் பெற்றுக்கொண்ட தக்கனது, வியப்பு மேதகு வேள்வியினை நோக்கும் காதலையேல்—அதிசயத்தால்மிக்க நூதனயாகத்தைப் பார்க்கும் விருப்பத்தை உடையையேல், கண்டனை வல்லே போதுதி என்று புகன்றனன்—அதனைக் கண்டு விரைந்து மீள்வாயாக என்று கூறி விடைகொடுத்தருளினர். (13)

வேறு

அரன்விடை புரிதலு மம்மை யாங்கவன்
றிருவடி மலர்மிசைச் சென்னி தாழ்ந்தெழா
விரைவுட னீங்கியோர் விமானத் தேறினுண்
மரகத வல்லிபொன் வரையுற் ருலென.

அரன் விடை புரிதலும்—சிவபெருமான் விடைகொடுத்தருளுதலும், அம்மை ஆங்கு அவன் திருவடி மலர் மிசை சென்னி தாழ்ந்து எழா— உமாதேவியார் அப்பொழுது அவருடைய திருவடிமலர்களின்மீது சிரசு பொருந்தும்படி வணங்கி எழுந்து, விரைவுடன் நீங்கி—விரைவாக அவ் விடத்தை விடுத்து, மரகதவல்லி பொன்வரை உற்ருலென—மரகத ரத்தினக் கொடியொன்று பொன்மலையிலிவர்ந்தாலொப்ப, ஓர் விமானத்து ஏறினுள்— ஒரு விமானத்திலிவர்ந்தருளினர். (14)

ஐயைதன் பேரரு ளனைத்து மாங்கவள்
செய்யபொன் முடிமிசை நிழற்றிச் சென்றெனத்
துய்யதொர் கவுரிபாற் சுமாலி மாலினித்
தையலார் மதிக்குடை தாங்கி நண்ணினுர்.

ஐயைதன் பேரருள் அனைத்தும்—உலக மாதாவாகிய தேவியின் பேரருள் முழுவதும், ஆங்கு அவள் செய்ய பொன் முடிமிசை நிழற்றி சென்றென— அப்பொழுது அத் தேவியின் செம்பொன் முடிமீது நிழல் செய்து சென்ருற் போல, துய்யது ஓர் கவுரிபால்—ஒப்பற்ற தூய்மையினையுடைய தேவியின்

மருங்கில், சுமாலி மாலினி தையலார்—சுமாலி மாலினி என்னும் பெண்கள், மதிக்குடை தாங்கி நண்ணினர்—சந்திரவட்டக் குடைகளை ஏந்தி நிழல்செய்து சென்றார்கள். (15)

துவரிதழ் மங்கலை சுமனை யாதியோர்
கவரிக ளிரட்டினர் கவுரி பாங்கரி
லிவர்தரு மோதிம மெண்ணி லாதவோ
ரவிர்சுடர் மஞ்ஞைபா லடைவ தாமென.

இவர்தரும் எண்ணிலாத ஓதிமம்—மேலே பறக்கின்ற எண்ணற்ற அன்னப் பறவைகள், ஓர் அவிர் சுடர் மஞ்ஞைபால் அடைவதாம் என—பிரகாசிக்கின்ற ஒளியினையுடையதொரு மயிலின் பக்கங்களில் அடைவது போல, கவுரி பாங்கரில்—உமாதேவியாரின் இரு பக்கங்களிலும், துவர் இதழ் மங்கலை சுமனை ஆதியோர் கவரிகள் இரட்டினர்—பவளம்போன்ற இதழினையுடைய மங்கலை சுமனை முதலிய பெண்கள் சாமரங்களை இரட்டினார்கள்.

சாமரைகள் மேலெழுந்து தாழ்ந்தசைதல் ஓதிமம் இவர்ந்து அடைதல் போலும் என்க. (16)

கால்செயும் வட்டமுங் கவின்கொள் பீலியு
மால்செயு நறுவிரை மல்க வீசியே
நீல்செயும் வடிவுடை நிமலை பாற்சிலர்
வேல்செயும் விழியினர் மெல்ல வேகினர்.

கால் செயும் வட்டமும்—காற்றைத் தருகின்ற ஆலவட்டத்தையும், கவின் கொள் பீலியும்—அழகு பொருந்திய மயிற்பீலி விசிறியையும், மால்செயும் நறுவிரை மல்க வீசி—மோகத்தைச் செய்கின்ற நறுமணம் நிறைந்து கமழ அசைத்துக்கொண்டு, நீல் செயும் வடிவுடை நிமலைபால்—நீலநிறம் பொருந்திய திருமேனியையுடைய நின்மலையாகிய உமாதேவியாரின் இருமருங்கும், வேல் செயும் விழியினர் சிலர் மெல்ல ஏகினர்—வேல்போலும் விழியினையுடைய பெண்கள் சிலர் மெல்லெனச் சென்றார்கள். (17)

கோடிக மடைப்பைவாள் குலவு கண்ணடி
யேடுறு பூந்தொடை யேந்தி யம்மைதன்
மாடுற வணுகியே மானத் தேகினர்
தோடுறு வரிவிழித் தோகை மார்பலர்.

கோடிகம்—பூந்தட்டு, அடைப்பை—வெற்றிலைப்பை, வாள் குலவு கண்ணடி—ஒளி விளங்குகின்ற கண்ணாடி, ஏடுறு பூந்தொடை—இதழ் பொருந்திய பூமாலை, ஏந்தி—இவ் வரிசைப் பொருள்களை ஏந்திக்கொண்டு, தோடுறு

வரிவிழி தோகைமார் பலர்—காதணி வரையும் நீண்ட வரிபொருந்திய விழியினையுடைய பெண்கள் பலர், அம்மைதன் மாடு உற அணுகி—உமாதேவியாருக்கு அருகே பொருந்த அணுகி, மானத்து ஏகினர்—விமானத்தின் கட் சென்றார்கள்.

வாள் வாட்படையுமாம்; அது வரிசைப் பொருள்களுள் ஒன்று. *(18)*

நாதன தருள்பெறு நந்தி தேவியாஞ்
சூதுறழ் பணைமுலைச் சுகேசை யென்பவண்
மாதுமை திருவடி மலர்க டீண்டிய
பாதுகை கொண்டுபின் படர்தன் மேயினள்.

நாதனது அருள் பெறும் நந்தி தேவியாம்—சிவபெருமானது திருவருளைப் பெறுகின்ற திருநந்தி தேவரின் மனைவியாகும், சூது உறழ் பணை முலைச் சுகேசை என்பவள்—சூதாடு கருவியை ஒத்த பருத்த முலைகளையுடைய சுகேசை என்னும் பெண், மாது உமை திருவடி மலர்கள் தீண்டிய பாதுகை கொண்டு—நித்திய கன்னிகையாகிய உமாதேவியாரது திருவடிமலர்கள் தீண்டிய பாதுகைகளைத் தாங்கிக்கொண்டு, பின் படர்தல் மேயினள்—உமாதேவியாருக்குப் பின்னே செல்வாராயினர். *(19)*

கமலினி யனிந்திதை யென்னுங் கன்னிய
ரமலைதன் சுரிகுழற் கான பூந்தொடை
விமலமொ டேந்தியே விரைந்து செல்கின்றார்
திமிலிடு கின்றதொல் சேடி மாருடன்.

கமலினி அனிந்திதை என்னும் கன்னியர்—கமலினி அனிந்திதை என்கின்ற பெண்கள், அமலைதன் சுரி குழற்கு ஆன—நின்மலையாகிய தேவியின் நெறித்த கூந்தலுக்குப் புனைதற்கான, பூந்தொடை விமலமொடு ஏந்தி—பூமாலைகளைத் தூய்மையுடனேந்திக்கொண்டு, திமிலிடுகின்ற தொல் சேடி மாருடன் விரைந்து செல்கின்றார்—ஆனந்தத்தாற் பேரொலி செய்கின்ற பழைய சேடியருடன் விரைவாகச் செல்கின்றார்கள். *(20)*

அடுத்திடு முலகெலா மளித்த வம்மைசீர்
படித்தன ரேகினர் சிலவர் பாட்டிசை
யெடுத்தன ரேகினர் சிலவ ரேர்தக
நடித்தன ரேகினர் சிலவர் நாரிமார்.

நாரிமார் சிலவர்—பெண்களுட் சிலர், அடுத்திடும் உலகு எலாம் அளித்த அம்மை சீர் படித்தனர் ஏகினர்—அடுத்திருக்கின்ற உலகமனைத்தையும் பெற்ற மாதாவாகிய தேவியின் கீர்த்திகளைப் புகழ்ந்துகொண்டு சென்றார்கள்; சிலவர்

பாட்டு இசை எடுத்தனர் ஏகினர்—சிலர் அக்கீர்த்திகளை இசைபொருந்திய பாட்டாகப் பாடிக்கொண்டு சென்றனர்; சிலவர் ஏர் தக நடித்தனர் ஏகினர்—சிலர் அக்கீர்த்திகளின் அழகு விளங்க நடித்துக்கொண்டு சென்றனர்.

இயல் இசை நாடகம் நிகழ்ந்தவாறும். (21)

பாங்கியர் சிலதியர் பலரு மெண்ணிலா
வீங்கிய பேரொளி விமானத் தேறியே
யாங்கவள் புடையதா யணுகிச் சென்றன
ரோங்கிய நிலவுசூ ழுடுக்கள் போன்றுளார்.

பாங்கியர் சிலதியர் பலரும்—தோழியரும் ஏவன் மகளிருமாகிய பலரும், வீங்கிய பேரொளி—மிக்க பேரொளியினையுடைய, எண்ணிலா விமானத்து ஏறி—எண்ணற்ற விமானங்களிலிவர்ந்து, ஓங்கிய நிலவு சூழ் உடுக்கள் போன்றுளார்—விளங்குகின்ற சந்திரனைச் சூழுகின்ற நட்சத்திரங்களை ஒத்து, ஆங்கு அவள் புடையதாய் அணுகி சென்றனர்—அத்தேவியின் புடைக்கட் பொருந்தி அணுகிச் சென்றார்கள். (22)

தண்ணுறு நானமுஞ் சாந்துஞ் சந்தமுஞ்
சுண்ணமுங் களபமுஞ் சுடரும் பூண்களு
மெண்ணருந் துகில்களு மிட்ட மஞ்சிகை
யொண்ணுத லார்பரித் துமைபின் போயினர்.

தண்ணுறு நானமும்—குளிர்ச்சி மிக்க வாசனைப்பொருளும், சாந்தும்—வாசனைப் பொடியும், சந்தமும்—சந்தனமும், சுண்ணமும்—சுண்ண வகைகளும், களபமும்—களப கஸ்தூரியும், சுடரும் பூண்களும்—ஒளிவிடும் ஆபரணங்களும், எண்ணரும் துகில்களும்—விலை மதித்தற்கரிய ஆடைகளும், இட்ட மஞ்சிகை—வைத்த பேழைகளை, ஒள் நுதலார் பரித்து உமை பின் போயினர்—ஒளி பொருந்திய நெற்றியையுடைய பெண்கள் பலர் தாங்கிக்கொண்டு உமாதேவிக்குப் பின்னே சென்றார்கள். (23)

குயில்களுங் கிள்ளையுங் குறிக்கொள் பூவையு
மயில்களு மஞ்சமு மற்று முள்ளவும்
பயிலுற வேந்தியே பரைமுன் சென்றன
ரயில்விழி யணங்கின ரளப்பி லார்களே.

குயில்களும் கிள்ளையும் குறி கொள் பூவையும்—குயில்களையும் கிளிகளையும் சொற்பயிற்றுவோரின் குறியைக் கொள்ளுதலில் வல்ல நாகணவாய்களையும், மயில்களும் அஞ்சமும் மற்றும் உள்ளவும்—மயில்களையும் அன்னங்களையும் வேறு பறவையையும், பயில் உற ஏந்தி—தம்மோடு பயிற்சி மிக

ஏந்திக்கொண்டு, அயில் விழி அணங்கினர் அளப்பிலார்கள் பரைமுன் சென்றனர்—வேல்போலுங் கண்களையுடைய அளவற்ற தேவமகளிர்கள் பரையாகிய தேவிக்கு முன்னே சென்றார்கள். (24)

விடையுறு துவசமும் வியப்பின் மேதகு
குடைகளு மேந்தியுங் கோடி கோடியா
மிடியுறழ் பல்லிய மிசைத்து மம்மைதன்
புடைதனில் வந்தனர் பூத ரெண்ணிலார்.

பூதர் எண்ணிலார்—அளவற்ற பூதர்கள், விடை உறு துவசமும்—இடபம் எழுதிய கொடிகளையும், வியப்பின் மேதகு குடைகளும் ஏந்தியும்—அதிசயிக்கத்தக்க மேன்மை பொருந்திய குடைகளையும் ஏந்திக்கொண்டும், கோடி கோடியாம் இடியுறழ் பல்லியம் இசைத்தும்—கோடாகோடிக் கணக்காகும் இடியையொத்த பலவாகிய வாத்தியங்களை முழக்கிக்கொண்டும், அம்மைதன் புடைதனில் வந்தனர்—உமாதேவியாருக்குப் பக்கத்திற் சென்றார்கள். (25)

அன்னவ ளடிதொழு தருள்பெற் றெல்லையிற்
பன்னிரு கோடிபா ரிடங்கள் பாற்பட
முன்னுற வேகினன் மூரி யேற்றின்மேற்
றொன்னெறி யமைச்சியற் சோம நந்தியே.

தொல் நெறி அமைச்சு இயல் சோம நந்தி—பழைமையாகிய ஒழுக்க நெறியும் அமைச்சியலும் அமைந்த சோமநந்தி என்னுங் கணாதிபர், அன்னவள் அடி தொழுது அருள் பெற்று—தேவியின் திருவடிகளை வணங்கி அத்தேவியின் அருளைப் பெற்றுக்கொண்டு, பன்னிரு கோடி பாரிடங்கள் ஒல்லையில் பாற்பட—பன்னிரு கோடி பூதர்கள் விரைவில் தம் பக்கலிற் சூழ, மூரி ஏற்றின்மேல் முன் உற ஏகினன்—முரிப்பினையுடைய இடபத்தின்மீது தேவிக்கு முன்னாகச் சென்றார்.

அமைச்சியல், அண்மைக்கண்ணிருக்கும் யோக்கியதை. சோமநந்தி சிவ சாரூபம் உடையராதலின் ஏற்றின்மேல் ஏகினா ரென்க. (26)

இவரிவ ரித்திற மீண்ட வெல்லைதீர்
புவனமு முயிர்களும் புரிந்து நல்கிய
கவுரியம் மானமேற் கடிது சென்றரோ
தவலுறு வோன்மகச் சாலை நண்ணினாள்.

இவர் இவர் இத்திறம் ஈண்ட—இவர் அனைவரும் இவ்வாறு சேவித்து நெருங்கி வர, எல்லைதீர் புவனமும் உயிர்களும் புரிந்து நல்கிய கவுரி—

எண்ணற்ற புவனங்களையும் உயிர்களையும் அருண்மேற் கொண்டு பெற்ற உமாதேவியானவர், அ மானமேற் கடிது சென்று—அந்த விமானத்தில் விரைந்து சென்று, தவல் உறுவோன் மகச் சாலை நண்ணினாள்—தவறுதலில் மிகுவோனான தக்கனது யாகசாலையை அடைந்தார். (27)

ஏலுறு மானநின் றிழிந்து வேள்வியஞ்
சாலையு ளேகியே தக்கன் முன்னுறும்
வேலையி லுமைதனை வெகுண்டு நோக்கியே
சீலமி லாதவ னினைய செப்பினான்.

ஏல் உறு மானம் நின்று இழிந்து—எழுச்சி மிக்க விமானத்தினின்றும் இறங்கி, வேள்வியம் சாலையுள் ஏகி—யாகசாலையுட் சென்று, தக்கன் முன் உறும் வேலையில்—தக்கனெதிரே செல்லுஞ் சமயத்தில், சீலம் இல்லாதவன் உமைதனை வெகுண்டு நோக்கி இனைய செப்பினான்—ஒழுக்கமற்ற தக்கன் உமாதேவியாரைச் சினந்து நோக்கி இவைகளைச் சொன்னான். (28)

**வேறு**

தந்தை தன்னொடுந் தாயி லாதவன்
சிந்தை யன்புறுந் தேவி யானநீ
யிந்த வேள்வியா னியற்றும் வேலையில்
வந்த தென்கொலோ மகளிர் போலவே.

தந்தை தன்னொடும் தாயிலாதவன் சிந்தை அன்பு உறு தேவியான நீ—தந்தை தாயின்றித் தான் நினைத்தபடி நடக்கின்ற பித்தனொருவனின் மன அன்புக்கு இயைந்த மனைவியாகிய நீ, இந்த வேள்வி யான் இயற்றும் வேலையில்—இந்த யாகத்தை யான் செய்யும் இச்சமயத்தில், மகளிர் போல வந்தது என்—யான் பெற்ற புதல்வியர்கள் போல வந்தவாறென்னை?

நீ பித்தன் மனைவி; என் மகளல்லை; ஆதலின் உத்தரவின்றி வரற்பாலை யல்லை என்றானாம். (29)

மல்லல் சேருமிம் மாம கந்தனக்
கொல்லை வாவென வுரைத்து விட்டது
மில்லை யீண்டுநீ யேக லாகுமோ
செல்லு மீண்டுநின் சிலம்பி லென்னவே.

மல்லல் சேரும் இமா மகம் தனக்கு ஒல்லை வா என உரைத்துவிட்டதும் இல்லை—வளப்பமும் பெருமையும் பொருந்திய இந்த யாகத்துக்கு விரைந்து வா என்று உன்னை வரும்படி நான் சொல்லிவிட்டதுமில்லை; ஈண்டு நீ ஏகலாகுமோ—அங்ஙனமாக இவ்விடத்துக்கு நீ வரலாமா; நின் சிலம்பில் மீண்டு செல்லு என்ன—உனது பைத்திய மலையினிடந் திரும்பிப் போ என்று கூற. (30)

மங்கை கூறுவாண் மருகர் யார்க்குமென்
றங்கை மார்க்குநீ தக்க தக்கசீ
ருங்கு நல்கியே யுறவு செய்துளா
யெங்க டம்மையோ ரிறையு மெண்ணலாய்.

மங்கை கூறுவாள்—உமாதேவியார் கூறுவார்; மருகர் யார்க்கும்—உன் மருகர் அனைவருக்கும், என் தங்கைமார்க்கும்—என்னுடைய தங்கைமாருக்கும், தக்க தக்கசீர் நீ உங்கு நல்கி உறவு செய்துளாய்—தகுந்த தகுந்த சிறப்புக்களை நீ உந்த யாகத்திற் செய்து உறவுமுறை செய்தாய்; எங்கள் தம்மை ஓர் இறையும் எண்ணலாய்—மருகனும் மகளுமாகிய எங்களை ஒருசிறிதும் நினையாயாயினை. (31)

அன்றி யும்மிவ ணாற்றும் வேள்வியிற்
சென்ற வென்னையுஞ் செயிர்த்து நோக்குவாய்
நன்ற தோவிதோர் நவைய தாகுமா
லுன்ற னெண்ணம்யா துரைத்தி யென்னவே.

அன்றியும்—அல்லாமலும், இவண் ஆற்றும் வேள்வியில் சென்ற என்னையும்—இவ்விடத்திற் செய்கின்ற யாகத்தின்கண் வலிந்து வந்த என்னையும், செயிர்த்து நோக்குவாய்—சினந்து பார்ப்பாயாயினை; இது நன்றதோ—இது உனக்கு நல்லதாகுமோ; ஓர் நவையது ஆகும்—இஃதுனக்கொரு குற்றமேயாம்; உன் தன் எண்ணம் யாது—உன் எண்ணம் என்னை; உரைத்தி என்ன—உரைக்குதி என்று கூறியருள. (32)

ஏய முக்குணத் தியலுஞ் செய்கையுட்
டீய தொல்குணச் செய்கை யாற்றியே
பேயொ டாடல்செய் பித்தன் றேவியாய்
நீயு மங்கவ னிலைமை யெய்தினை.

ஏய முக்குணத்து இயலும் செய்கையுள்—பொருந்திய முக்குணங்களால் நடக்கின்ற முத்தொழில்களுள், தீய தொல் குணச் செய்கை ஆற்றி—கொடிய பழைய தாமதக்குணச் செயலாகிய சங்காரகிருத்தியத்தைச் செய்து, பேய் ஒடு ஆடல் செய் பித்தன் தேவியாய்—பேய்களோடு கூத்தாடுகின்ற பித்தனுக்கு மனைவியாய், நீயும் அங்கவன் நிலைமை எய்தினை—நீயும் அப் பித்தனுடைய இயல்பினைப் பொருந்திப் பித்தியானாய். (33)

அன்ன வன்றனோ டகந்தை மேவலா
லுன்னை யெள்ளின னுனது பின்னுளோர்
மன்னு கின்றவென் மருகர் யாவரு
மென்னி னும்மெனக் கினியர் சாலவும்.

அன்னவன் தன்னேடு அகந்தை மேவலால்—அந்தப் பித்தனேடு சேர்ந்து நீயும் அகந்தையைப் பொருந்துகையால், உன்னை எள்ளினன்—உன்னை இகழ்ந்தேன்; உனது பின்னுளோர்—உன்னுடைய தங்கைமார், மன்னுகின்ற என் மருகர்—அவர்களோடு பிரிவின்றி நிலைபெற்றிருக்கின்ற என் மருகர், யாவரும்—எல்லாரும், எனக்கு என்னினும் சாலவும் இனியர்—எனக்கு என்னிலும்பார்க்க மிகவும் இனியர்.

அப்பருக்கு அவரிலும் இனியான் ஒருவனே உளன்; தக்கனுக்கு அவனிலும் இனியார் பலர் உளர். (34)

ஆத லாலியா னவர்கள் பாங்கரே
காத லாகியே கருது தொல்வளன்
யாது நல்கின னிந்த வேள்வியி
லோது நல்லவி யுளது நல்கினேன்.

ஆதலால் யான் அவர்கள் பாங்கர் காதலாகி—ஆதலினுலே யான் என் மக்கள் மருமக்கள் ஆகிய அவர்களிடத்துப் பிரீதியுற்று, கருது தொல் வளன் யாதும் நல்கினன்—கருதத்தகும் பழைமையான செல்வ வரிசை அனைத்தையும் அவர்களுக்கு வழங்கினேன்; இந்த வேள்வியில் ஓதும் நல் அவி உளதும் நல்கினேன்—இந்த யாகத்திற் புகழ்ந்துரைக்கப்படுந் தூய அவிப்பாகமாயுள்ளதனையும் அவர்களுக்கு வழங்கினேன். (35)

புவனி யுண்டமால் புதல்வ னுதியா
மெவரும் வந்தெனை யேத்து கின்றனர்
சிவனு நீயுமோர் சிறிது மெண்ணலீ
ருவகை யின்றெனக் குங்கள் பாங்கரில்.

புவனி உண்ட மால் புதல்வன் ஆதியாம் எவரும் வந்து எனை ஏத்துகின்றனர்—பூமியை உண்ட திருமால் அவர் புதல்வரான பிரமா முதலிய யாவரும் வந்து என்னைத் துதிக்கின்றார்கள்; சிவனும் நீயும் ஓர் சிறிதும் எண்ணலீர்—சிவனும் நீயும் ஒரு சிறிதும் என்னை மதிக்கின்றிலீர்; எனக்கு உங்கள் பாங்கரில் உவகை இன்று—ஆகையினலே உங்களிடத்தில் எனக்கு உவப்பு இல்லை. (36)

ஏற்றின் மேவுநின் னிறைவ னுக்கியா
ளுற்றும் வேள்வியு ளவியு மீகலன்
சாற்று கின்றவே தத்தின் வாய்மையு
மாற்று கின்றனன் மற்றென் வன்மையால்.

ஏற்றில் மேவும் நின் இறைவனுக்கு—எருதிலேறும் நின் கணவனுகிய சிவனுக்கு, யான் ஆற்றும் வேள்வியுள் அவியும் ஈகலன்—யான் செய்யும் இந்த யாகத்தில் அவிப்பாகத்தையுங் கொடேன்; சாற்றுகின்ற வேதத்தின் வாய்மையும்—சிவ பரத்துவம் பேசுகின்ற வேத வாக்குக்களையும், என் வன்மையால் மாற்றுகின்றனன்—என் வன்மையினுலே இன்றுதொடக்கம் மாற்றியமைக்கின்றேன். (37)

அனைய தன்றியீண் டடுத்த நிற்கும்யான்
றினையின் காறுமோர் சிறப்புஞ் செய்கல
னெனவி யம்பலு மெம்பி ராட்டிபாற்
றுனைய வந்ததாற் றோமில் சீற்றமே.

அனையது அன்றி—அஃதன்றி, ஈண்டு அடுத்த நிற்கும் யான் தினையின் காறும் ஓர் சிறப்புஞ் செய்கலன்—இங்கு வந்தடுத்த உனக்கும் தினையள்வாயினு மொரு சிறப்பையும் யான் செய்யேன்; என இயம்பலும்—என்று தக்கன் கூறுதலும், எம்பிராட்டிபால் தோம் இல் சீற்றம் துனைய வந்தது—எம் பெருமாட்டியிடத்துக் குற்றமற்றதொரு கோபம் விரைந்து தோன்றியது.

குற்றம்போக்க எழுந்ததாதலின், தோமில் சீற்றம் என்றூர். (38)

சீற்ற மாயதீச் செறியு யிர்ப்பொடே
காற்றி ஞேடழல் கலந்த தாமெனத்
தோற்றி யண்டமுந் தொலேவி லாவியு
மாற்று வானெழீஇ மல்கி யோங்கவே.

சீற்றமாய தீ செறி உயிர்ப்பொடு—கோபமாகிய அக்கினி தன்னேடு சேர்ந்த நெட்டுயிர்ப்புடன், காற்றினேடு அழல் கலந்ததாம் என தோற்றி—ஊழிக்காற்ருேடு ஊழித்தீ கலந்ததாம் என்று சொல்லும்படி ஒன்றுபட்டுத் தோன்றி, அண்டமும் தொலேவில் ஆவியும் மாற்றுவான் எழீஇ—அண்டத்தை யும் அழிவில்லா உயிர்களேயும் அழிக்கும்படி எழுந்து, மல்கி ஓங்க—பெருகி வளராநிற்ப. (39)

பாரு முட்கின பரவு பௌவமுந்
நீரு முட்கின நெருப்பு முட்கின
காரு முட்கின கரிக ளுட்கின
வாரு முட்கின ரமர ராயுளார்.

பாரும் உட்கின—பூமியும் பூமியிலுள்ளவைகளும் அஞ்சின; பரவு பௌவம் முந்நீரும் உட்கின—பரவுகின்ற கடலும் மூவகைக் கடல் நீரும் அஞ்சின;

நெருப்பும் உட்கின—அக்கினிகளும் அஞ்சின; காரும் உட்கின—மேகங்களும் அஞ்சின; கரிகள் உட்கின—திக்கு யானைகளும் அஞ்சின; அமரராயுளார் ஆரும் உட்கினர்—தேவராயுள்ளாரனைவரும் அஞ்சினர். (40)

பங்க யாசனப் பகவன் ருனுமச்
செங்கண் மாயனுஞ் சிந்தை துண்ணென
வங்க ணுட்கிணு ரென்னி ணுங்கவள்
பொங்கு சீற்றம்யார் புகல வல்லரே.

பங்கயாசனப் பகவன் தானும்—தாமரையாசனரான பிரமதேவரும், அ செம் கண் மாயனும்—மகேசரினிடத்திலிருந்த அந்தச் சிவந்த கண்ணை யுடைய திருமாலும், சிந்தை துண் என—மனந் திடுக்கிட, அங்கண் உட்கினுர் என்னின்—அச்சமயத்தில் அஞ்சினுராயின், ஆங்கு அவள் பொங்கு சீற்றம் யார் புகலவல்லர்—அத் தேவியாரது பொங்கியெழுகின்ற கோபத்தினியல்பை யாவர்தாம் எடுத்துச் சொல்ல வல்லவர். (41)

வேலை யன்னதில் விமலை யென்பவள்
பாலி னின்றதோர் பாங்கி தாழ்ந்துமுன்
ஞாலம் யாவையு நல்கு முன்றனக்
கேலு கின்றதோ வினைய சீற்றமே.

வேலை அன்னதில்—அச்சமயத்தில், பாலின் நின்றது ஓர் பாங்கி விமலை என்பவள்—தேவியின் பக்கத்தில் நின்ற ஒரு தோழியாகிய விமலை என்னும் பெயருடையவர்; முன் தாழ்ந்து—எதிரில் வணங்கி, ஞாலம் யாவையும் நல்கும் உன் தனக்கு—மாதாவே உலகம் முழுவதையும் அருளுகின்ற உமக்கு, இனைய சீற்றம் ஏலுகின்றதோ—இவ்வாருய சினம் பொருந்துகின்றதொன் ருமோ. (42)

மைந்தர் யாரையும் வளங்க டம்மொடுந்
தந்து நல்கிய தாய்சி னங்கொளா
வந்த மாற்றுவா னமைந்து ளாயெனி
னுய்ந்தி டுந்திற முண்டு போலுமால்.

மைந்தர் யாரையும்—பிள்ளைகள் யாவரையும், வளங்கள் தம்மொடும்—தநு கரண புவன போகங்களாகிய வளங்களோடு, தந்து நல்கிய தாய்—பெற்று வளர்த்த தாயாகிய நீர், சினம் கொளா—சினங்கொண்டு, அந்தம் ஆற்றுவான் அமைந்துளாய் எனின்—அழித்தலைச் செய்யும்படி அமைந்தீ ராயின், உய்ந்திடும் திறம் உண்டு போலும்—நும்பிள்ளைகள் உய்யுந் திறமும் உளதாமோ. (43)

அறத்தை யீங்கிவ னகன்று ளானெனச்
செறுத்தி யன்னதோர் சீற்றம் யாரையு
மிறைக்கு முன்னரே யீறு செய்யுமாற்
பொறுத்தி யீதெனப் போற்றன் மேயினுள்.

ஈங்கு இவன் அறத்தை அகன்றுளான் என செறுத்தி—இப்பொழுது இத் தக்கன் தருமநெறியை விலகினுன் என்று கோபித்தருளினீர்; அன்னது ஓர் சீற்றம் இறைக்கு முன்னர் யாரையும் ஈறு செய்யும்—அவ்வாறுயதொரு கோபம் கணப்பொழுதுக்கு முன் யாவரையும் அழித்துவிடும்; ஈது பொறுத்தி எனப் போற்றன் மேயினுள்—ஆகையினுலே இக் கோபத்தைப் பொறுத்தருள்க என்று போற்றுவாராயினர்.

விமலை போற்றன் மேயினுள் என்க. (44)

போற்றி நிற்றலும் புனிதை தன்பெருஞ்
சீற்ற மாயெழுந் தீயை யுள்ளுற
மாற்றி வேள்விசெய் வானை நோக்கியே
சாற்று கின்றன ளினைய தன்மையே.

போற்றி நிற்றலும்—விமலை இவ்வாறு துதித்து நிற்க, புனிதை தன் பெரும் சீற்றமாய் எழும் தீயை உள்ளுற மாற்றி—புனிதையாகிய தேவியார் தமது பெருங் கோபமாயெழுகின்ற அக்கினியை உள்ளே பொருந்த அடக்கி, வேள்வி செய்வானை நோக்கி—யாக கர்த்தாவாகிய தக்கனைப் பார்த்து, இனைய தன்மை சாற்றுகின்றனள்—இவ்வாறுயதொரு தன்மையைச் சொல்லுகின்றுர். (45)

என்னை நீயிவ ணிகழ்ந்த தன்மையை
யுன்ன லேனெனை யுடைய நாயகன்
றன்னை யெள்ளினுய் தரிக்கி லேனதென்
கன்ன மூடுசெல் கடுவு போலுமால்.

என்னை நீ இவண் இகழ்ந்த தன்மையை உன்னலேன்—என்னை நீ இங்கே இகழ்ந்தமையைப் பொருள் செய்யேன்; எனை உடைய நாயகன் தன்னை எள்ளினுய்—என்னையுடைய என் நாயகரை இகழ்ந்தாய்; தரிக்கிலேன்—அதனைப் பொறுக்கமாட்டேன்; அது என் கன்னம் ஊடு செல் கடுவு போலும்—அது எனது காதுவழியே செல்வதொரு நஞ்சை ஒக்கும். (46)

நிர்க்கு ணத்தனே நிமல னன்னவன்
சிற்கு ணத்தனுய்த் திகழு வானெரு
சொற்கு ணத்தனே தொலைக்கு நாளடு
முற்கு ணத்தினை முன்னு மாறலால்.

நிமலன் நிர்க்குணத்தன்—நின்மலராகிய சிவபெருமான் முக்குண ரகிதர்; அன்னவன் சிற்குணத்தனுய்த் திகழுவான்—அவர் ஞானகுணசகிதராய் விளங்கு பவர்; தொலைக்கு நாள் அடு முன் குணத்தினை—சங்கார காலத்தில் அடுதற்கண் வைத்தெண்ணப்படுந் தாமத குணத்தை, முன்னுமாறு அலால்—அடு தொழிற்கண் வைத்து அது தாமதம் என்று நாம் கற்பிதஞ் செய்து நினைக்குமா றன்றி, ஒரு சொல் குணத்தனே—அக்குணத்தை அவர்மேல் வைத்து அவர் தாமத குணத்தர் என்று சொல்லுதற்குரியதொரு இயல்பினை யுடையர் ஆவரோ.

ரகிதர்—இல்லாதவர். சகிதர்—கூடியவர்.

சிற்குணம் எண்குணம் எனவும் அறுகுணம் எனவும் வகுக்கப்படும்; அவை இயல்பானமைந்து என்றுமுள்ளவை. (47)

துன்று தொல்லுயிர் தொலைவு செய்திடு
மன்று தாமதத் தடுவ தன்றியே
நன்று நன்றது ஞான நாயகற்
கென்று முள்ளதோ ரியற்கை யாகுமோ.

துன்று தொல் உயிர் தொலைவு செய்திடும் அன்று—தநுகரணுதிகளோடு செறிந்த பழைமையாகிய உயிர்களைச் சங்கரிக்கின்ற மகா சங்கார காலத்தில், தாமதத்து அடுவது அன்றி—தாமத குணத்தை மேற்கொண்டு சங்கரித்தலே யல்லாமல், ஞான நாயகற்கு—சிற்குண நாயகராகிய சிவபெருமானுக்கு, என்றும் உள்ளது ஓர் இயற்கை ஆகுமோ—தாமதகுணம் என்றும் உளதாய தொரு இயற்கைக் குணம் ஆகுமோ ஆகாதே; நன்று நன்று—தாமதத்தைப் பெருமானுக்கு இயற்கைக் குணமென நீ நினைத்தல் நன்றுயிருக்கிறது! நன்று யிருக்கிறது!

உன் அறியாமை என்னே என்றவாறு. என்றுமுள்ள இயற்கையாகிய குணம் ஞானமாகிய சிற்குணமேயாம். (48)

தீய தன்றடுஞ் செயலு நல்லரு
ளாயி லாவிக ளழிந்துந் தோன்றியு
மோய்வி லாதுழன் றுலைவு றுமலே
மாய்வு செய்திறை வருத்த மாற்றலால்.

ஆவிகள் அழிந்தும் தோன்றியும் ஓய்விலாது உழன்று உலைவுறுமல்—உயிர்கள் இறந்தும் பிறந்தும் ஓய்வின்றிக் கறங்குபோ லுழன்று அங்கு மிங்கு முலையாமல், மாய்வு செய்து—சங்காரஞ் செய்து, இறை வருத்தம் மாற்ற லால்—இறைவன் இளைப்பாற்றுகையினுலே, அடும் செயலும் தீயதன்று—சங்காரமும் நாம் கற்பிதஞ் செய்வதுபோலத் தீயதன்றும்; ஆயில்—சங்கா ரத்தினியல்பை ஆராய்ந்து நோக்கினுல், நல் அருள்—சங்காரமும் அநுக் கிரகமேயாம்.

அடுவது பந்தத்தை என்பது ஆராய்வுழித்தேற்றமாம். ''பேதித்து நம்மை வளர்த்தெடு''ப்பதே அடுவதாம். (49)

ஆன வச்செய லழிவி லாததோர்
ஞான நாயகற் கன்றி நாமெனு
மேனை யோர்களா லியற்ற லாகுமோ
மேன காவலும் விதியு மென்னவே.

ஆன அச்செயல்—மேலே உரைத்ததாகிய சங்காரத் தொழில், அழி விலாதது ஓர் ஞான நாயகற்கு அன்றி—என்றும் அழிவின்மையைப் பொருந்திய ஒப்பற்ற ஞான நாயகராகிய சிவபெருமானுலன்றி, நாம் எனும் ஏனை யோர்களால்—நானருமல் நாம் பிரமமென்று மயங்குகின்ற ஏனையோர்களாகிய பிரம விஷ்ணுக்களால், மேன காவலும் விதியும் என்ன—மேலுரைத்த காத்தல் படைத்தல்களாகிய தொழில்களைப்போல, இயற்றல் ஆகுமோ—செய்தல் கூடுமோ.

முக்குண வயத்தரல்லாத நிர்க்குணராலேயே சங்காரஞ் செய்தல் கூடு மென்க. இதனுலே, 'பசுவேட்டெரியோம்பு'தலாகிய வேள்வி செய்தல், ''மந்திர விதியின் மரபுளி வழாஅ அந்தண'' ராலேயே கூடுமென்பதுங் கடைப்பிடிக்க. (50)

முன்ன ரேயெலா முடித்த நாதனே
பின்னு மத்திற மளிக்கும் பெற்றியா
னன்ன வன்கணே யனைத்து மாகுமா
லின்ன பான்மைதா னிறைவன் வாய்மையே.

முன்னரே எலாம் முடித்த நாதனே—சங்கார காலத்தில் எல்லா வற்றையுஞ் சங்கரித்த சிவபெருமானே, பின்னும் அ திறம் அளிக்கும் பெற்றியால்—பின்னருஞ் சங்கரித்தவாறே படைத்துக் காக்கும் இயல்பினுல், அன்னவன்கணே அனைத்தும் ஆகும்—அப் பெருமானிடத்திலேதானே முத் தொழிலும் உளவாம்; இன்ன பான்மைதான் இறைவன் வாய்மை—இவ் வியல்புதான் பதியாகிய சிவபெருமானது உண்மை நிலையாம்.

பிரம விஷ்ணுக்களின் படைத்தல் காத்தல்களுக்கும் அவரே முதல்வர் என்றவாறு. (51)

தோமி லாகமஞ் சுருதி செப்பியே
யேம விஞ்சைகட் கிறைவ னுகியே
நாம றும்பொரு ளல்கு மெந்தையைத்
தாம தன்னெனச் சாற்ற லாகுமோ.

தோம் இல் ஆகமம் சுருதி செப்பி—மாசற்ற அருணூலாகிய ஆகமங்களேயும் வேதங்களேயும் அருளிச்செய்து, ஏம விஞ்சைகட்கு இறைவன் ஆகி—ஏமத்தைச் செய்யும் வித்தைகளனைத்துக்கும் முதல்வராய், நாம் அறும் பொருள் நல்கும் எந்தையை—ஆன்மாக்கள் நான் நான் என்கின்ற அகங்காரமாகிய நாமென்பதை அறுவிக்கும் பொருளாகிய தம்மைத் தருகின்ற எம் பரமபிதாவை, தாமதன் எனச் சாற்றல் ஆகுமோ—தாமத குணத்தர் என்று கூறுவதுமாமோ.

ஏமம்—சேமம். விஞ்சை தகரவித்தை முதலியன. அறுவிக்கும் பொருளே அறும் பொருள் என்றார். பொருள் என்பதை ஞானம் எனினுமாம். (52)

ஆத லாலவ னனேவ ருக்குமோர்
நாத னுமரோ வவற்கு நல்லவி
யீதல் செய்திடா திகழ்தி யஞ்சியே
வேதம் யாவையும் வியந்து போற்றவே.

ஆதலால் அவன் அனேவருக்கும் ஓர் நாதன் ஆம்—ஆதலினாலே அச் சிவபெருமானே யாவருக்கும் ஏக நாயகராகிய பரமபதியாவர்; வேதம் யாவையும் அஞ்சி வியந்து போற்ற—வேதமனைத்துஞ் சிவனே கர்த்தா என்று அச்சத்துடன் வியந்து துதிக்கவும், நல் அவி அவற்கு ஈதல் செய்திடாது இகழ்தி—நீ நல்ல அவிப்பாகத்தை அப் பெருமானுக்குக் கொடாமல் இகழுகின்றாய். (53)

சிவனெ னுந்துணைச் சீரெ ழுத்தினை
நுவலு வோர்கதி நொய்தி லெய்துவா
ரவனை யெள்ளினை யாரி தாற்றுவா
ரெவனை யுய்குதி யிழுதை நீரைநீ.

சிவன் எனும் துணை சீர் எழுத்தினை—சிவனென்னு நாமத்திலுள்ள சிவ என்கின்ற இரண்டாகிய சிறப்புப்பொருந்திய எழுத்துக்களை, நுவலுவோர் கதி நொய்தில் எய்துவார்—உச்சரிப்பவர்கள் சிவகதியை எளிதினெய்துவார்கள்; அவனை எள்ளினய்—நீயோ அப்பெருமானை இகழ்ந்தாய்; இது ஆர் ஆற்றுவார்—இதனை எவர் செய்வார், நீ இழுதை நீரை—நீ அறிவிலிகளின் நீர்மையையுடையை; எவன் உய்குதி—எவ்வாறு உய்வாய். (54)

வேறு

முண்டக மிசையினேன் முகுந்த னடியே
பண்டுணர் வரியதோர் பரனை யாதியாக்
கொண்டில ரெள்ளிய கொடுமை யோர்க்கெலாந்
தண்டம்வந் திடுமென மறைகள் சாற்றுமால்.

முண்டகம் மிசையினேன் முகுந்தன் பண்டு நாடி உணர்வு அரியது ஓர் பரனை—பிரம விஷ்ணுக்கள் பண்டு தேடிக் காணாத ஒப்பற்ற பரம்பொருளை, ஆதியாக் கொண்டிலர்—முழுமுதலாகக் கொள்ளாதவராய், எள்ளிய கொடுமையோர்க்கு எலாம் தண்டம் வந்திடும்—இகழ்ந்த சிவத்துரோகிகளுக்கெல்லாந் தப்பாது தண்டங் கிடைக்கும்; என மறைகள் சாற்றும்—என்று வேதங்கள் அறுதியிட்டுரைக்கும். (55)

ஈதுகேள் சிறுவிதி யிங்ங னோர்மகம்
வேதநா யகன்றனை விலக்கிச் செய்தனை
யாதலா லுனக்கும்வந் தடைக தண்டமென்
றோதினா ளுலகெலா முதவுந் தொன்மையாள்.

சிறுவிதி ஈது கேள்—ஓ தக்கனே இதனைக் கேட்பாயாக; இங்ஙன் ஓர் மகம் வேதநாயகன் தனை விலக்கி செய்தனை ஆதலால்—இங்கே ஒரு யாகத்தை வேதநாயகராகிய சிவபெருமானை விலக்கிச் செய்தாய் ஆதலினாலே, உனக்கும் தண்டம் வந்து அடைக—உனக்கும் ஏற்ற தண்டங் கிடைப்பதாக; என்று உலகெலாம் உதவும் தொன்மையாள் ஓதினாள்—என்று உலகனைத்தையும் ஈன்றருளும் பழையோர் ஆகிய உலக மாதா சபித்தருளினார். (56)

இன்னன கொடுமொழி யியம்பி வேள்விசெ
யந்நில மொருவியிவ் வகில மீன்றுளாண்
முன்னுள பரிசன முறையின் மொய்த்திடப்
பொன்னெழின் மானமேற் புகுந்து போந்தனள்.

இன்னன கொடு மொழி இயம்பி—இன்னோரன்ன சாப மொழிகளை உரைத்தருளி, இ அகிலம் ஈன்றுளாள் வேள்வி செய் அ நிலம் ஒருவி—இவ்வுலகத்தை ஈன்ற மாதாவாகிய தேவி வேள்வி செய்த அந்த இடத்தை விட்டு நீங்கி, முன் உள பரிசனம் முறையின் மொய்த்திட—எதிரிலுள்ள பரிசனங்கள் முன்வந்த முறையானே சூழ்ந்து வர, பொன் எழின் மானமேல் புகுந்து போந்தனள்—பொன்னாலான அழகிய விமானத்திலிவர்ந்து சென்றருளினர். (57)

அகன்றலை யுலகரு ளயன்றன் காதலன்
புகன்றன வுன்னியுட் புழுங்கி யைந்துமா
முகன்றிரு மலையிடை முடுகிச் சென்றனள்
குகன்றனை மேலருள் கொடிநு சுப்பினாள்.

குகன் தனை மேல் அருள் கொடி நுசுப்பினுள்—முருகப்பெருமானை இனிப் பெற்றருளுங் கொடிபோலும் இடையினையுடைய உமாதேவியார், அகன் தலை உலகு அருள் அயன் தன் காதலன்—அகன்ற இடத்தையுடைய உலகத்தைப் படைக்கும் பிரமாவின் புதல்வனுன தக்கன், புகன்றன உன்னி உள் புழுங்கி—கூறியவைகளை நினைத்து மனம்புழுங்கி, ஐந்து மாமுகன் திருமலையிடை முடுகி சென்றனள்—பெருமை பொருந்திய ஐந்து திருமுகங்களையுடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்குந் திருக்கைலாச மலைக்கண் விரைந்து சென்றருளினுர். (58)

ஒருவின ளூர்தியை யுமைதன் ஞயகன்
றிருவடி வணங்கினள் சிறிய தொல்விதி
பெரிதுனை யிகழ்ந்தனன் பெரும வன்னவ
னரிதுசெய் வேள்வியை யழித்தி யென்னவே.

உமை ஊர்தியை ஒருவினள்—உமாதேவியார் விமானத்தைவிட்டிறங்கி, தன் நாயகன் திருவடி வணங்கினள்—தம் நாயகராகிய சிவபெருமானின் திருவடிகளை வணங்கி, பெரும—பிரபுவே, தொல் சிறிய விதி—பழைய சிறு விதியாகிய தக்கன், உனை பெரிது இகழ்ந்தனன்—தேவரீரைப் பெரிதும் நிந்தனை செய்தான்; அன்னவன் அரிது செய் வேள்வியை—அவன் அரிதின் முயன்று செய்கின்ற யாகத்தை, அழித்தி என்ன—அழித்தருளல் வேண்டும் என்று பிரார்த்திக்க. (59)

எவ்வமில் பேரருட் கிறைவ ஞகியோ
னவ்வியங் கரமுடை நாத ஞதலி
னவ்வுரை கொண்டில ஞக வம்பிகை
கவ்வையொ டினையன கழறன் மேயினுள்.

நவ்வி அம் கரமுடை நாதன்—மானை ஏந்திய அழகிய திருக்கரத்தினையுடைய சிவபெருமான், எவ்வம் இல் பேரருட்கு இறைவன் ஆகியோன் ஆதலின்—குறைவில்லாத நிறைந்த பேரருளுக்கு உறைவிடமாகியோராதலினுலே, அ உரை கொண்டிலன் ஆக—தேவியார் கூறிய அவ்வுரைகளைக் கேளாதார்போன்றிருந்தருளினுராக; அம்பிகை கவ்வையொடு இனையன கழறல் மேயினுள்—தேவியானவர் துயரத்தோடு இவற்றைக் கூறுவாராயினுர். (60)

கழறல், சற்றே இடித்துரைத்தல்.

மேயின காதலும் வெறுப்பு நிற்கிலை
யாயினு மன்பினேற் காக வன்னவன்
றீயதோர் மகத்தினைச் சிதைத்தல் வேண்டுமென்
ஞயக னேயென நவின்று போற்றினுள்.

என் நாயகனே—என் தலைவரே, காதலும் வெறுப்பும் நிற்கு மேயின இலை—விருப்பு வெறுப்புக்கள் தேவரீர்பாலணுகா; ஆயினும்—தேவரீர் இயல்பு அங்ஙனமாயினும், அன்பினேற்கு ஆக—தேவரீர்பால் அன்பினையுடைய அடியேன் பொருட்டு, அன்னவன் தீயது ஓர் மகத்தினை சிதைத்தல் வேண்டும்—அத் தக்கனுடைய கொடுமையுடைத்தாயதொரு வேள்வியைச் சிதைத்தருளல் வேண்டும்; என நவின்று போற்றினாள்—என்று கூறித் துதித்தார். (61)

உமைவரு படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் – 1326.

502

# வீரபத்திரப் படலம்

அந்த வெல்லையெமை யாளுடைய வண்ண லகிலந்
தந்த மங்கைதன தன்பினை வியந்து தளருஞ்
சிந்தை கொண்டசெயன் முற்றியிடு மாறு சிறிதே
புந்தி யுள்ளுற நினைந்தன னினைந்த பொழுதே.

அந்த எல்லை—அப்பொழுது, எமை ஆளுடைய அண்ணல்—எம்மை ஆளாக ஆளுதலையுடைய சிவபெருமான், அகிலம் தந்த மங்கை தனது அன்பினை வியந்து—உலகத்தை ஈன்றருளிய உமாதேவியாருடைய அன்பை வியந்து, தளரும் சிந்தை கொண்ட செயல்—அவைதிக நெறியைக் கண்டு தளருகின்ற தேவியின் மனத்துக்கட் பொருந்திய செயல், முற்றியிடுமாறு—நிறைவேறும்வண்ணம், சிறிதே புந்தியுள் உற நினைந்தனன்—சற்றே திருவுள்ளத்தின்கண் பொருந்த நினைந்தருளினர்; நினைந்த பொழுது—தேவியின் சிந்தனை முற்றுக என்று நினைந்தபொழுது. (1)

பொன்னின் மேருவி னிருந்திடு பொலங்கு வடெலா
மின்னும் வெள்ளிமுளை மேற்கொடு விளங்கி யதென
மன்னு தண்சுடர் மதிக்குறை மிலைச்சு மவுலிச்
சென்னி யாயிரமும் வான்முகடு சென்றொ ளிரவே;

பொன்னின் மேருவின் இருந்திடு பொலம் குவடு எலாம்—பொன் மலையாகிய மேருமலையிலுள்ள பொற்சிகரமனைத்தும், மின்னும் வெள்ளி முளை மேல்கொடு விளங்கியது என—பிரகாசிக்கின்ற வெள்ளி முளையைமேற்கொண்டு விளங்கியது போல, மன்னு தண் சுடர் மதிக்குறை மிலைச்சு மவுலி ஆயிரம் சென்னியும்—நிலைபெற்ற தண்ணிய சுடரினையுடைய பாலசந்திரனைச் சூடிய மௌலிகளையுடைய ஆயிரந் தலைகளும், வான் முகடு சென்று ஒளிர—அண்ட முகட்டிற் சென்று பிரகாசிக்க; (2)

விண்ட லந்தனி லிலங்கு சுடரின் மிடலினைக்
கண்ட லந்தர வொதுங்குவன போற்க திருலா
மண்ட லந்திகழ் முகந்தொறும் வயங்கு பணியின்
குண்ட லங்களிணை கொண்டகுழை கொண்டு லவவே;

விண் தலம் தனில் இலங்கு சுடரின் மிடலினை கண்டு—ஆகாயத்தின் கண்ணே விளங்குகின்ற சூரியப் பிரகாசத்தின் வன்மையைக் கண்டு, அலம் தர ஒதுங்குவன போல்—சஞ்சலம் உண்டாகப் பாம்புகள் ஒதுங்குவனபோல, கதிர் உலாம் மண்டலம் திகழ் முகம் தொறும்—கிரணங்கள் வீசுகின்ற சூரிய மண்டலம் போல விளங்குகின்ற முகங்கள் தோறும், வயங்கு பணியின் குண்டலங்கள்—பிரகாசிக்கின்ற அரவ அரதன குண்டலங்கள், இணைகொண்ட குழைகொண்டு உலவ—இணைதல் பொருந்திய இரண்டாயிரங் காதுகளிலும் பொருந்தியிருந்து சுடர்விட்டசைய; (3)

ஆன்ற திண்கடல் வறந்திட விறந்த தனிடைத்
தோன்று கின்றதொர் மடங்கல்வலி யின்று தொலைய
மூன்று கண்கண்முக மாயிரமு மேவி முனிவாற்
கான்ற வங்கிகளி னண்டமுழு துங்க ரியவே;

ஆன்ற திண் கடல் வறந்திட இறந்து—அகன்ற திண்ணிய சமுத்திரம் வற்றி வறக்கும்படி சுவாலித்து, அதனிடை தோன்றுகின்றது ஓர் மடங்கல்—அச் சமுத்திரத்திலே தோன்றுகின்றதொரு வடவாமுகாக்கினி, இன்று வலி தொலைய—இன்றோடு வலி தொலைந்து போக, ஆயிரம் முகமும் மூன்று கண்கள் மேவி—ஆயிரம் முகங்கள் ஒவ்வொன்றிலும் மும்மூன்று கண்கள் பொருந்தி, முனிவால் கான்ற அங்கிகளின்—கோபத்தினால் அக்கண்கள் கான்ற அக்கினிகளால், அண்டம் முழுதும் கரிய—அண்ட முழுவதுங் கரிந்துபோக; (4)

சண்ட மாருதமு மங்கியு மொதுங்கு தகவாற்
றுண்ட மீதுறு முயிர்ப்புட னெழுந்த சுடுதீ
யண்ட கோளமுட னப்புறமு மாகி யழியாக்
கொண்ட லூடுதவழ் மின்னுவென வேகு லவவே;

சண்ட மாருதமும் அங்கியும் ஒதுங்கு தகவால்—பிரசண்ட மாருதமும் வடவாமுகாக்கினியுந் தோல்வியுற்று ஒதுங்கும் வகையில், துண்டம் மீதுறும் உயிர்ப்புடன் எழுந்த சுடு தீ—மூக்கினிடத்து மிக்கெழுகின்ற மூச்சோடு ஒன்றுபட்டெழுந்த சுடுகின்ற அக்கினி, அண்ட கோளமுடன் அப்புறமும் ஆகி—அண்டகோளத்தோடு அப்புறத்திலுஞ் சென்று, அழியா—அழிவில்லாத, கொண்டல் ஊடு தவழ் மின்னு என குலவ—முகிலினிடத்துத் தோன்றுகின்றதொரு மின்னலைப்போலப் பிரகாசிக்க; (5)

அழியா மின், அபூத உவமை.

மலரின் வந்துறையு நான்முகன் முகுந்தன் மகவான்
புலவர் தம்புக ழனைத்தையு நுகர்ந்த பொழுதிற்
சிலவொ ழுங்கொடித ழின்புடைகள் சிந்தி யெனவே
நிலவு செய்தபிறை வாளெயிறு நின்றி லகவே;

மலரின் வந்து உறையும் நான்முகன் முகுந்தன் மகவான் புலவர் தம் புகழ் அனைத்தையும்—தாமரை மலரிலிருக்கும் பிரமதேவர் விஷ்ணுமூர்த்தி இந்திரன் தேவர்கள் ஆகிய அவர்களுடைய கீர்த்திகள் முழுவதையும், நுகர்ந்த பொழுதில்—ஒருங்கு உண்டபோது, சில—அக் கீர்த்திகளில் ஒரு சில, இதழின் புடைகள்—வாய் இதழ்களின் கடைகளில், ஒழுங்கொடு சிந்தியென-ஒரு ஒழுங்கில் ஒழுகினாற்போல, நிலவு செய்த பிறை வாள் எயிறு நின்று இலக—நிலவைப் பொழிந்த பிறைபோன்ற ஒளி பொருந்திய வக்கிர தந்தங்கள் என்றும் ஒரே தன்மையவாய் நின்று ஒளி கால; (6)

துண்ட மீதினழ லோவிதழின் வீழ்ந்த சுசியோ
மண்டு தீவிழிகள் கான்றகன லோம னமிசைக்
கொண்ட தோர்வெகுளி யாகிய கொடுந்த ழலதோ
வெண்டி சாமுகமு மாகியடு கின்ற தெனவே;

துண்டம் மீதின் அழலோ—நாசிகளி னிடத்துத் தோன்றிய அக்கினியோ, இதழின் வீழ்ந்த சுசியோ—இதழினின்றும் வழுளி விழுந்த அக்கினியோ, தீ மண்டு விழிகள் கான்ற கனலோ—வெப்பம் நிறைந்த கண்கள் கான்ற அக்கினியோ, மனமிசைக் கொண்டது ஓர் வெகுளி ஆகிய கொடும் தழலோ—மனத்தின்கட் கொண்டதொரு கோபமாகிய கொடிய அக்கினியோ, எண் திசாமுகமும் ஆகி அடுகின்றது என—எட்டுத் திக்கினிடங்களுந் தானே யாகி அவற்றை அழிக்கின்றதாகிய அக்கினிதான் அவ்வக்கினிகளில் எவ் வக்கினியாமோ என்று சிந்திக்க; (7)

தண்ட லின்றுறையு மாவிகள் வெரீஇத்த ளரமே
லண்ட ரண்டநிரை விண்டிட வவற்றி டையுறுந்
தெண்டி ரைக்கடல்க லங்கவட லுற்ற சிவனிற்
கொண்ட வார்ப்புமுழு தெண்டிசை குலாய்நி மிரவே;

தண்டல் இன்று உறையும் ஆவிகள் வெரீஇ தளர—குறைவின்றி உள்ள உயிர்வர்க்கங்கள் அஞ்சி நிலை தளர, மேல் அண்டர் அண்டநிரை விண்டிட—மேலே அண்டர்கள் வசிக்கின்ற அண்டநிரைகள் பிளவுபட, அவற்றிடை உறும் தெண் திரைக்கடல் கலங்க—அவ்வண்டங்களிற் பொருந்துகின்ற தெளிந்த திரையினையுடைய கடல்கள் கலங்க, அடலுற்ற சிவனின் கொண்ட ஆர்ப்பு—சங்கரித்தலைச் செய்த சங்கார மூர்த்தியைப்போல மேற்கொண்ட ஆரவாரம், முழுது எண் திசை குலாய் நிமிர—எட்டுத் திக்குக்கள் முழுதும் பரவி மேலோங்க; (8)

தராத லங்கண்முழு துண்டுமிழு கின்ற தகைசே
ரராவி னங்கடமை யங்கடக மங்க தமொடே
விராய மென்றொடிக ளாவிடுபு விண்ணு றநிமிர்ந்
திராயி ரங்கொள்புய மெண்டிசை யெலாஞ்செ றியவே;

தராதலங்கள் முழுது உண்டு உமிழுகின்ற தகை சேர் அராவினங்கள் தமை—உலகங்கள் முழுவதையும் உண்டுமிழுகின்ற தகுதி வாய்ந்த சர்ப்பக் கூட்டங்களை, அம் கடகம் அங்கதம் ஒடு விராய மென் தொடிகளா இடுபு—அழகிய கடகாபரணங்களாகவும் வாகுவலயங்களாகவும் ஒன்றோடொன்று விரவிய மென்மையான கைவளையல்களாகவும் அணிந்து, விண் உற நிமிர்ந்து—வானம் அளாவ நிமிர்ந்து, இராயிரம் கொள் புயம் எண் திசை எலாம் செறிய—இரண்டாயிரம் என்னுந் தொகையைக் கொண்ட புயங்கள் எட்டுத் திக்குக்கள் எங்கும் நெருங்க; (9)

வரத்தின் மேதகைய வேதன்முத லான வலியோர்
சிரத்தின் மாலிகை யடுக்கலவ ரென்பு செறிபூண்
பெருத்த கேழலின் மருப்பினுட ளுமை பிறவு
முரத்தின் மேவுபுரி நூலொடு பெயர்ந் தொளிரவே;

வரத்தின் மேதகைய வேதன் முதலான வலியோர் சிரத்தின் மாலிகை அடுக்கல்—வரத்தான் மேதக்க பிரமதேவர் முதலிய வன்மையாளரின் சிர மாலையாகிய அடுக்கும், அவர் என்பு செறி பூண்—அவர்களுடைய எலும்புகள் செறிந்த ஆபரணமும், பெருத்த கேழலின் மருப்பின் உடன் ஆமை பிறவும்—பெரிய பன்றியின் கொம்பும் ஆமையோடும் பிறவும், உரத்தின் மேவு புரி நூல் ஒடு—மார்பிற் பொருந்திய முப்புரிநூலொடு, பெயர்ந்து ஒளிர—அசைந் தசைந்து ஒளி செய்ய; (10)

குந்தம் வெம்பலகை தோமர மெழுக்கு லிசம்வாள்
செந்த ழற்கழுமுள் சூலமொடு பீலி சிலைகோன்
முந்து தண்டமவி ராழிவசி யால முதலா
மந்த மில்படைக ளங்கைக டொறுங்கு லவவே;

குந்தம்—ஈட்டி, வெம் பலகை—வெவ்விய பரிசை, தோமரம்—இருப்புலக்கை, எழு—வளைதடி, குலிசம்—வச்சிராயுதம், வாள்—கத்தி, செந்தழல் கழுமுள்—அக்கினி காலுகின்ற கழுமுள், சூலம்—சூலம், பீலி—பெருஞ் சவளம், சிலை—வில், கோல்—அம்பு, முந்து தண்டம்—முதன்மை பொருந்திய தண்டாயுதம், அவிர் ஆழி—ஒளிருகின்ற சக்கரம், வசி—வாள், ஆலம்—மழு, முதலாம் அந்தமில் படைகள்—முதலாகிய அளவற்ற படைகள், அம் கைகள் தொறும் குலவ—அழகிய கைகள்தோறும் விளங்க; (11)

ஐய மாலைதனின் மாமணியி னுகி யறிவார்
செய்ய லாதுவரு பேரணிக ளோடு சிவணிப்
பையு லாவுசுடர் வெம்பணிக ளான பணியு
மெய்யெ லாமணியி டந்தொறு மிடைந்தி லகவே;

ஐய மாழைதனின் மாமணியின் ஆகி—அழகிய பொன்னாலுஞ் சிறந்த மணிகளாலும் ஆகி, அறிவார் செய்யலாது—கம்மியரால் செய்யப்பட்டன ஆகாமல், வரு பேரணிகளோடு—இயற்கையாகப் பொருந்தும் பெரிய ஆபரணங்களோடு, பை உலாவு சுடர் வெம் பணிகளான பணியும் சிவணி—படம் பொருந்திய மணிச்சுடரினையுடைய வெவ்விய சர்ப்பங்களாகிய ஆபரணங்களுங் கலந்து, மெய் எலாம் அணி இடம் தொறும் மிடைந்து இலக—திருமேனி முழுவதும் அணியவேண்டு மிடந்தோறுஞ் செறிந்து விளங்க; (12)

நெஞ்ச லஞ்சல மரும்பிறவி நீடு வினையிற்
சஞ்ச லஞ்சல மகன்றதன தன்பர் குழுவை
யஞ்ச லஞ்சலெனு மஞ்சொலென விஞ்சு சரண்மேற்
செஞ்சி லம்பொடு பொலங்கழல் சிலம்ப மிகவே;

நெஞ்சு அலஞ்சு அலமரும்—மனம் அலைந்து சுழலுகின்ற, பிறவி நீடு வினையின்—பிறவிதோறும் நீளுகின்ற வினைகளினாலுண்டாகின்ற, சஞ்சலம் சலம்—சஞ்சலம் எனப்படுந் துன்பமானது, அகன்ற தனது அன்பர் குழுவை—நீங்கப்பெற்ற தமது அடியார் கூட்டத்தை, அஞ்சல் அஞ்சல் எனும் அம் சொல் என—அஞ்சற்க அஞ்சற்க என்று கூறுஞ் செஞ்சொற்களைப்போல, விஞ்சு சரண்மேல்—அருள்மிகுகின்ற பாதங்களிற் பூண்ட, செம் சிலம்பொடு பொலம் கழல் மிக சிலம்ப—செஞ்சிலம்புகளும் பொன்னங் கழல்களும் மிக்கொலிப்ப; (13)

### வேறு

அந்தி வான்பெரு மேனியன் கறைமிட றணிந்த
வெந்தை தன்வடி வாயவ னுதல்விழி யிடையே
வந்து தோன்றியே முன்னுற நின்றனன் மாதோ
முந்து வீரபத் திரனெனுந் திறலுடை முதல்வன்.

அந்தி வான் பெரு மேனியன்—அந்திக் காலத்து வானம்போன்ற பெருமை பொருந்திய திருமேனியை உடையவராகிய, கறை மிடறு அணிந்த எந்தை தன் வடிவாய்—நஞ்சை அணிந்த கண்டத்தினையுடைய எம் பரமபிதாவின் சொரூபமாய், வீரபத்திரன் எனும் திறலுடை முதல்வன்—வீரபத்திர உருத்திரர் என்கின்ற திறல்படைத்த முதல்வர், அவன் நுதல் விழியிடை வந்து தோன்றி—அப்பெருமானது நெற்றிக்கண்ணினின்றும் அவதரித்து, முந்து—அப்பெருமானின் முன்பு, முன்னுற நின்றனன்—எதிரில் நின்றார்.

முந்து திறலுமாம். (14)

அங்க வேலையி லுமையவள் வெகுளியா லடல்செய்
நங்கை யாகிய பத்திர காளியை நல்கச்
செங்கை யோரிரண் டாயிரம் பாதிசெம் முகமாய்த்
துங்க வீரபத் திரன்றனை யடைந்தன டுணையாய்.

அங்கு அ வேலையில்—அவ்விடத்தில் அப்பொழுது, உமையவள் வெகுளியால்—உமாதேவியார் தமது கோபாக்கினியினுல், அடல் செய் நங்கையாகிய பத்திரகாளியை நல்க—போராடல் செய்கின்ற பெருமையிற் சிறந்த ஆரணங்காகிய பத்திரகாளியை அவதரிப்பிக்க, செங்கை ஓரிரண்டு ஆயிரம் பாதி செம் முகமாய்—அப் பத்திரகாளியானவர் இரண்டாயிரஞ் செங்கைகளையும் ஆயிரந் திருமுகங்களையும் உடையராய், துணையாய்—வீரபத்திரருக்குத் துணைவியாய், துங்க வீரபத்திரன் தனை அடைந்தனள்—உயர்ச்சி பொருந்திய அவ் வீரபத்திரக்கடவுளை அடைந்தார். (15)

எல்லை தீர்தரு படைக்கலத் திறையுமவ் விறைவற்
புல்லு கின்றதோர் திறலுடைத் துணைவியும் போலத்
தொல்லை வீரனுந் தேவியு மேவரு தொடர்பை
யொல்லை காணுரு மகிழ்ந்தனர் விமலனு முமையும்.

எல்லை தீர்தரு படைக்கலத்து இறையும்—அளவற்ற படைக்கலத்துக்கு அதிதெய்வமாகிய அஸ்திர தேவரையும், அ இறைவற் புல்லுகின்றது ஓர் திறல் உடை துணைவியும் போல—அந்த அஸ்திரதேவரைத் தழுவுகின்ற வலி படைத்த அவருடைய துணைவியாகிய அஸ்திர சத்தியையும் போல, வீரனும் தேவியும் மேவரு தொல்லை தொடர்பை—வீரபத்திரஉருத்திரரும் பத்திரகாளிதேவியும் ஒன்றுபட்டு வருந் தொன்மையாகிய தொடர்பை, விமலனும் உமையும் ஒல்லை காணுரு மகிழ்ந்தனர்—சிவபெருமானும் உமாதேவியாரும் விரைந்து கண்டு மகிழ்ந்தருளினுர்கள். (16)

தன்னை வந்தடை பத்திரை தன்னெடு தடந்தாண்
மன்னு வார்கழல் கலித்திட வலஞ்செய்து வள்ள
லன்னை தாதையை வணங்கியே யவர்தமை நோக்கி
முன்ன நின்றுகை தொழுதன னிவைசில மொழிவான்.

வள்ளல்—துஷ்ட நிக்கிரக வள்ளலாகிய வீரபத்திரக்கடவுள், தன்னை வந்து அடை பத்திரை தன் ஒடு—தம்மை வந்தடைந்த பத்திரகாளியோடு, தடம் தாள் மன்னு வார் கழல் கலித்திட—விசாலமான பாதங்களிற் பொருந்துகின்ற உயர்ச்சி பொருந்திய வீரக்கழல்கள் ஒலிக்க, அன்னை தாதையை வலஞ் செய்து வணங்கி—உலகமாதாவையும் பரமபிதாவையும் வலம்வந்து வணங்கி, அவர் தமை நோக்கி—அவர்களைப் பார்த்து, முன்னம் நின்று—எதிரில் நின்று, கைதொழுதனன்—மீட்டுங் கைகூப்பி வணங்கி, இவை சில மொழிவான்—வீரமொழிகள் சிலவற்றைக் கூறுவார். (17)

மால யன்றனைப் பற்றிமுன் றந்திடோ மறவெங்
கால னுவியை முடித்திடோ வசுரரைக் களைகோ
மேலை வானவர் தம்மையுந் தடிந்திடோ வேலை
ஞாலம் யாவையும் விழுங்குகோ வுலகெலா நடுக்கோ.

முன்–முதற்கண், மால் அயன் தனை பற்றி தந்திடோ–பிரம விஷ்ணுக்களை இறுகப் பற்றி இவ்விடங் கொணர்ந்து தந்திடுவேனோ, மற வெம் காலன் ஆவியை முடித்திடோ–மறமும் வெம்மையுமுடைய யமனுடைய உயிரை முடித்துவிடுவேனோ, அசுரரை களைகோ–அசுரர்களைக் கொன்று தொலைப்பேனோ, மேலை வானவர் தம்மையும் தடிந்திடோ–மேலுள்ள தேவர்களையுந் தடிவேனோ, வேலை ஞாலம் யாவையும் விழுங்குகோ–சமுத்திரஞ் சூழ்ந்த உலக முழுவதையும் விழுங்குவேனோ, உலகெலாம் நடுக்கோ–உலகம் அனைத்தையும் நடுங்கச் செய்வேனோ. (18)

மன்னு யிர்த்தொகை துடைத்திடோ வரம்பில வாகித்
துன்னு மண்டங்க டகர்த்திடோ நுமதுதூ மலர்த்தாள்
சென்னி யிற்கொடே யாவதொன் றென்னினுஞ் செய்வ
னென்னை யிங்குநீர் நல்கிய தெப்பணிக் கென்றான்.

மன் உயிர் தொகை துடைத்திடோ–நிலைபெற்ற உயிர்க் கூட்டத்தை அழித்திடுவேனோ, வரம்பில ஆகி துன்னும் அண்டங்கள் தகர்த்திடோ–அளவில்லாதனவாய்ச் செறிகின்ற அண்டங்களைத் தகர்த்திடுவேனோ, நுமது தூமலர் தாள் சென்னியில் கொடு–உங்கள் பரிசுத்தமாகிய திருவடிகளைச் சிரமேற் சூட்டிக்கொண்டு, யாவது ஒன்று என்னினும்–பணிக்கும் பணி எப்படிப்பட்டதொன்றாயினும், செய்வன்–பணிக்கும் பணியைச் செய்து முடிப்பேன்; இங்கு நீர் எ பணிக்கு என்னை நல்கியது என்றான்–இவ்விடத்தில் தேவரீர் எப்பணியின்பொருட்டு என்னைத் தந்தருளியது என்று கேட்டார். (19)

என்ற வீரனை நோக்கியே கண்ணுத லெம்மை
யன்றி வேள்விசெய் கின்றனன் றக்கனவ் விடைநீ
சென்று மற்றெம தவியினைக் கேட்டியத் தீயோ
னன்று தந்தன னேயெனி னிவ்விடை நடத்தி.

என்ற வீரனை கண்ணுதல் நோக்கி–என்றிங்ஙனம் வினவிய வீரபத்திரரைச் சிவபெருமான் நோக்கி, தக்கன் எம்மை அன்றி வேள்வி செய்கின்றனன்–தக்கன் என்பவன் எம்மை இன்றி ஒரு யாகஞ் செய்கின்றான்; அ இடை நீ சென்று–அவன் யாகஞ் செய்யுமிடத்துக்கு நீ சென்று, எமது அவியினை கேட்டி–நமக்குரிய அவிப்பாகத்தைக் கேட்பாயாக; அ தீயோன் நன்று தந்தனனே எனின்–அக்கேடன் சிரத்தையோடு அதனைத் தந்தானேயாயின், இ இடை நடத்தி–நீ உடனே இவ்விடத்துக்கு மீண்டு வருதி. (20)

தருத லின்றெனி னனையவன் றலையினைத் தடிந்து
பரிவி னுலவன் பாலுறு வோரையும் படுத்துப்
புரியு மெச்சமுங் கலக்குதி யங்கது பொழுதின்
வருது மாயிடை யேகுதி யென்றனன் வள்ளல்.

தருதல் இன்று எனின்—நமக்குரிய அவியைத் தாராதொழிந்தால், அனைய வன் தலையினை தடிந்து—அவனுடைய தலையைச் சேதித்து, பரிவினால் அவன்பால் உறுவோரையும் படுத்து—விருப்பத்தோடு அவன் பட்சத்தாரா யிருப்போரையும் வதைத்து, புரியும் எச்சமும் கலக்குதி—அவன் செய்யும் யாகத்தையுஞ் சிதைக்குதி; அங்கு அது பொழுதின் வருதும்—அங்கே அப் பொழுது யாமும் வருவோம்; ஆயிடை ஏகுதி என்றனன் வள்ளல்—நீ முன்பு ஆண்டுச் செல்லுதி என்று பணித்தருளினார் வள்ளலாகிய சிவபெருமான். (21)

அந்த வேலையிற் பத்திரை தன்னொடு மடலின்
முந்து வீரனவ் விருவர்தம் பதங்களின் முறையாற்
சிந்தை யன்புடன் வணங்கியே விடைகொண்டு சிவனை
நிந்தை செய்தவன் வேள்வியை யழித்திட நினைந்தான்.

அந்த வேலையில்—அப்பொழுது, பத்திரை தன்னொடும் அடலின் முந்து வீரன்—பத்திரகாளியுடன் வலியான் மிக்க வீரபத்திரக்கடவுள், அ இருவர்தம் பதங்களின் முறையால் சிந்தை அன்புடன் வணங்கி—அந்த இருவராகிய மாதாவையும் பிதாவையும் முறையானே மன அன்போடு வணங்கி, விடை கொண்டு—விடைபெற்றுக்கொண்டு, சிவனை நிந்தை செய்தவன் வேள்வியை அழித்திட நினைந்தான்—சிவ நிந்தகனான தக்கனுடைய யாகத்தை அழிக்கத் திருவுளங்கொண்டருளினார். (22)

உன்னி மற்றவ ணீங்கியே யாற்றவு முருத்துத்
தன்னு யிர்ப்பினு லளவையில் கணங்களைத் தந்து
துன்னு கின்றமெய் வியர்ப்பினுற் சிலவரைத் தொகுத்து
வன்னி போன்மயிர்க் காறொறுஞ் சிலவரை வகுத்தான்.

உன்னி—யாக சங்காரத்தைத் திருவுளங் கொண்டு, அவண் நீங்கி—அவ் விடத்தினின்றும் நீங்கி, ஆற்றவும் உருத்து—மிகச் சினந்து, தன் உயிர்ப்பினால் அளவை இல் கணங்களை தந்து—தமது நெட்டுயிர்ப்பினால் அளவில்லாத பூதகணங்களை உண்டாக்கி, துன்னுகின்ற மெய் வியர்ப்பினால் சிலவரை—செறிகின்ற திருமேனி வியர்ப்பினுற் சில பூதர்களையும், வன்னி போல் மயிர்க் கால் தொறும் சிலவரை—நெருப்புப்போலும் உரோமத் துவாரங்கள் தோறுஞ் சில பூதர்களையும், தொகுத்து வகுத்தான்—உண்டாக்கியருளினார். (23)

மொழியி னிற்பல பூதரை யளித்தனன் முளரி
விழியி னிற்பல பூதரை யளித்தனன் வேணி
யுழியி னிற்பல பூதரை யளித்தன னுந்திச்
சுழியி னிற்பல பூதரை யளித்தனன் றூயோன்.

பல பூதரை மொழியினில் அளித்தனன்—பல பூதர்களைத் தாம் உருத்து மொழியும் மொழிகளில் உண்டாகும்படி செய்தருளினர்; பல பூதரை முளரி விழியினில் அளித்தனன்—பல பூதர்களை அக்கினிக் கண்ணினின்றும் உண்டாக்கியருளினர்; பல பூதரை வேணி உழியினில் அளித்தனன்—பல பூதர்களைச் சடைக்கண் உண்டாக்கியருளினர்; பல பூதரை உந்தி சுழியினில் அளித்தனன்—பல பூதர்களை நாபிச் சுழியினிடத்து உண்டாக்கியருளினர்; தூயோன்—தூயோராகிய வீரபத்திர உருத்திரர். (24)

தோளி லெண்ணிலா வீரரை யளித்தனன் சுவையின்
கோளி லெண்ணிலா வீரரை யளித்தனன் குளிர்பொற்
றாளி லெண்ணிலா வீரரை யளித்தனன் றடக்கை
வாளி லெண்ணிலா வீரரை யளித்தனன் வலியோன்.

வலியோன்—வலியோராகிய வீரபத்திரக் கடவுள், எண்ணிலா வீரரை தோளில் அளித்தனன்—அளவற்ற வீரர்களைத் தமது புயங்களிலிருந்து உண்டாக்கியருளினர்; எண்ணிலா வீரரை சுவையின் கோளில் அளித்தனன்—அளவற்ற வீரர்களைச் சுவையைக் கொள்வதாகிய நாக்களிலிருந்து உண்டாக்கியருளினர்; எண்ணிலா வீரரை குளிர் பொன் தாளில் அளித்தனன்—அளவற்ற வீரர்களைத் தண்ணிய பொற்றிருவடிகளிலிருந்து உண்டாக்கி யருளினர்; எண்ணிலா வீரரை தடக்கை வாளில் அளித்தனன்—அளவற்ற வீரர்களை விசாலமான திருக்கரங்களிலுள்ள ஆயுதங்களிலிருந்து உண்டாக்கியருளினர். வாள் ஆயுதப் பொது. (25)

கையி னிற்சில பூதரை யளித்தனன் களத்தில்
வெய்ய மார்பினிற் கன்னத்திற் சிலவரை விதித்தா
னைய தோர்முழந் தாடனிற் சிலவரை யளித்தான்
குய்ய மீதினி லூருவிற் சிலவரைக் கொடுத்தான்.

சில பூதரை கையினில் அளித்தனன்—சில பூதர்களைத் திருக்கைகளில் உண்டாக்கியருளினர்; சிலவரை களத்தில் வெய்ய மார்பினில் கன்னத்தில் விதித்தான்—சில பூதர்களைக் கழுத்திலும் விரும்பப்படுகின்ற மார்பிலுங் காதுகளிலும் உண்டாக்கியருளினர்; சிலவரை ஐயது ஓர் முழந்தாள் தனில் அளித்தான்—சில பூதர்களை அழகிய ஒப்பற்ற முழந்தாள்களில் உண்டாக்கியருளினர்; சிலவரை குய்ய மீதினில் ஊருவில் கொடுத்தான்—சில பூதர்களைக் குய்யத்திலுந் தொடைகளிலும் உண்டாக்கியருளினர். (26)

இன்ன தன்மையில் வீரபத் திரனெனு மிறைவன்
றன்னை நேர்வரு மெண்ணிலா வீரரைத் தந்து
துன்னு கின்றுழிப் பத்திரை யென்பதோர் துணைவி
யன்ன பண்பினிற் காளிக டொகையினை யளித்தாள்.

இன்ன தன்மையில்—இவ்வாறு, வீரபத்திரன் எனும் இறைவன்—வீர பத்திரக்கடவுள், தன்னை நேர்வரும் எண்ணிலா வீரரை தந்து துன்னு கின்றுழி—தம்மையொக்கும் எண்ணற்ற வீரர்களை உண்டாக்கி நிற்குஞ் சமயத் தில், பத்திரை என்பது ஓர் துணைவி—பத்திரகாளி என்று சொல்லப்படுகின்ற ஒப்பற்ற தேவியும், அன்ன பண்பினில்—வீரபத்திரக்கடவுள் வீரர்களை உண் டாக்கிய முறையானே, காளிகள் தொகையினை அளித்தாள்—காளிகளின் கூட் டத்தை உண்டாக்கியருளினர். (27)

வீர பத்திர வுருத்திரன் வேறுவே றளித்த
சார தர்க்குளங் கோர்சிலர் நீனிறந் தழைப்போர்
கோர பத்திர மணிக்கலன் மின்னுவிற் குலவக்
காரெ னப்பொலிந் துருமெனக் கழறுகின் றனரால்.

வீரபத்திர உருத்திரன் வேறு வேறு அளித்த சாரதர்க்குள் அங்கு ஓர் சிலர்—வீரபத்திர உருத்திரர் வேறுவேறு உண்டாக்கியருளிய பூதர்களுக் குள் அங்கொரு சிலர், நீல் நிறம் தழைப்போர்—தழைத்த நீல நிறத்தினர்; கோர பத்திரம்—அச்சந் தருகின்ற உடைவாளும், மணிக்கலன்—இரத்தி னபரணங்களும், மின்னுவிற் குலவ—மின்னலைப்போலப் பிரகாசிக்க, கார் எனப் பொலிந்து—மேகங்கள் போலப் பொலிந்து தோன்றி, உரும் என கழறுகின்றனர்—இடிபோல இடித்துரைக்கின்றனர். (28)

அக்கு மாலையு மணிகளு முடுக்கள்போ லவிரப்
பக்க வாணிலா வெயிறுகள் பிறையெனப் பயில
மிக்கு நீடிய வடிவின ராகியே மேலாஞ்
செக்கர் வானெனச் சேந்தெழு பூதர்கள் சிலரே.

அக்கு மாலையும் மணிகளும் உடுக்கள்போல் அவிர—எலும்பு மாலைகளும் இரத்தினங்களும் நட்சத்திரங்கள் போலப் பிரகாசிக்க, பக்கவாள் நிலா எயிறுகள்—கடைவாய்ப் பக்கங்களிலுள்ள ஒளி பொருந்திய நிலவு காலும் வக்கிர தந்தங்கள், பிறையெனப் பயில—இளம்பிறைகள்போலப் பொருந்த, மிக்கு நீடிய வடிவினராகி—மிக்குயர்ந்த வடிவத்தினையுடையராய், மேலாம் செக்கர் வான் என—உயர்வாகிய செவ்வானம் போல, சேந்து எழு பூதர்கள் சிலர்—சிவந்து விளங்குகின்ற பூதர்கள் சிலர். (29)

அண்ட ரைத்தொலை வித்திடும் வீரனை யடைந்தோர்
பிண்ட முற்றும்வா னிறத்தினர் பூதரிற் பெரியோர்
பண்டி ரைத்தொரு முனிமகன் பின்றொடர் பாலின்
றெண்டி ரைக்கடற் றொகையெனக் கிளர்ந்தனர் சிலரே.

அண்டரை தொலைவித்திடும் வீரனை அடைந்தோர்—தேவர்களை அழிக்கும் வீரபத்திரரைத் தொடர்ந்தவர்களாகிய, பிண்ட முற்றும் வால் நிறத்தினர் பூதரில் பெரியோர் சிலர்—உடல்முழுதும் வெண்ணிறத்தவர்களாகிய பூதர்களுக் குள்ளே உயர்ந்தோர்களாகிய சிலர், பண்டு இரைத்து ஒரு முனிமகன் பின் தொடர் பால் கடல் தெண்டிரை தொகை என—முன்னொரு காலத்தில் ஆரவாரித்துக்கொண்டு வியாக்கிரபாத முனிவரின் புதல்வராகிய உபமந்யு முனிவரைப் பின்றொடர்ந்த பாற்சமுத்திரத்தின் திரைக்கூட்டங்கள் போல, கிளர்ந்தனர்—குதூகலித்தனர். (30)

வெம்பொன் மேனிய ரணுகுறி னவர்தமை விரைவிற்
பைம்பொன் மேனிய ராக்குமத் திருநிழல் பரப்பி
யம்பொன் மார்புடை முகுந்தனில் வடிவுடை யவராய்ச்
செம்பொன் மால்வரை நிரையெனத் தோன்றினர் சிலரே.

வெம் பொன் மேனியர் அணுகுறின்—கொடிய கரும்பொன்னாகிய இரும்பு மேனியர்கள் தம்மை அணுகினால், அவர் தமை விரைவில் பைம்பொன் மேனியர் ஆக்கும்—அந்த இரும்பு மேனியர்களை விரைவிற் பசிய பொன் மேனியர்களாக்குகின்ற, அ திரு நிழல் பரப்பி—அந்தத் திருநிழலாகிய பொற் பிரபையைப் பரப்பி அவ்வாற்றால், அம் பொன் மார்புடை முகுந்தனில் வடிவுடையவராய்—அழகிய பொன்னாகிய திருவை மார்பின்கட் பொருந்திய திருமால்போலும் வடிவத்தை உடையவராய், செம்பொன் மால்வரை நிரை என—பெரிய செம்பொன் மலைகளின் வரிசையைப் போல, சிலர் தோன் றினர்—சிலர் காட்சியளித்தனர்.

திருவுண்மையும் அடைந்தாரை மாற்றுதலும் இருவர்பாலுங் காண்க. (31)

மேய வான்பசப் பூர்தரு மேனிய ராகிக்
காய மித்துணை யெனப்படாக் கணக்கின ராகி
மாயர் கண்டுயில் சேக்கையைத் தங்கணே வகுத்துச்
சேய தொன்மரத் தொகையெனக் கெழீஇயினர் சிலரே.

வான் மேய பசப்பு ஊர்தரும் மேனியராகி—வானத்திற் பொருந்திய பசலை நிறம் பரவுகின்ற உடலினையுடையவராய், காயம் இத்துணை எனப் படா கணக்கினராகி—உடம்பு இவ்வளவினது என்று அறியப்படாத விஸ் தாரமான அளவினை யுடையவராய், மாயர் கண் துயில் சேக்கையை—எண் ணில்லாத விஷ்ணுக்கள் கண்துயிலுகின்ற சேக்கைகளாகிய எண்ணில்லாத இலைகளை, தங்கண் வகுத்து—தம்பால் தரித்துக்கொண்டு, சேய—உயர்ந்து விளங்குகின்ற, தொன்மரம் தொகை என—ஆலமரக் கூட்டம்போல, சிலர் கெழீஇயினர்—சிலர் விளங்கினார்கள். (32)

**வேறு**

அங்க வர்க்கு ளடல்விடை யானனந்
தங்கி நின்று தயங்கின ரோர்சிலர்
பொங்கு சீற்றப் பொருதிறல் வாலுளைச்
சிங்க மாமுக மாய்த்தெழித் தார்சிலர்.

அங்கு அவர்க்குள் ஓர் சிலர்—அங்கு அப் பூதவீரர்களுள் ஒரு சிலர், அடல் விடை ஆனனம் தங்கி நின்று தயங்கினர்—வலிய இடபத்தின் முகத்தைப் பொருந்தி நின்று விளங்கினார்கள்; சிலர்—சில பூத வீரர்கள், பொங்கு சீற்றம் பொரு திறல் வால் உளை—பொங்குகின்ற சீற்றத்தினையும் போராற்றலையும் மிக்க பிடர் உரோமத்தினையுமுடைய, சிங்க மாமுகமாய்—சிங்கத்தின் பெரிய முகத்தைப் பொருந்தினவராய், தெழித்தார்—ஆரவாரஞ் செய்தார்கள். (33)

புழைகொள் கையுடைப் போர்வலி யாளியின்
முழைகொண் மாமுக மாகிமொய்த் தார்சிலர்
வழுவை யானன மன்னின ரோர்சில
ருழுவை யின்முக மாகியுற் றார்சிலர்.

சிலர் புழைகொள் கையுடை போர்வலி யாளியின் முழைகொள் மா முகமாகி மொய்த்தார்—சிலர் துவாரம் பொருந்திய கையினையுடைய போர் வலி படைத்த யாளியினது குகைபோன்ற வாயமைந்த பெரிய முகத்தை யுடையவர்களாய்ச் சூழ்ந்தார்கள்; சிலர் வழுவை ஆனனம் மன்னினர்—சிலர் யானையின் முகத்தைப் பொருந்தியிருந்தார்கள்; ஓர் சிலர் உழுவையின் முகம் ஆகி உற்றார்—ஒருசிலர் புலியின் முகத்தை உடையராயிருந்தார்கள். (34)

அலைமு கப்பரி யானன மெய்தியே
கொலைமு கத்துக் குழீஇயின ரோர்சிலர்
மலைமு கத்தும ரைகளி றெண்குடன்
கலைமு கத்துக் கவினடைந் தார்சிலர்.

ஓர் சிலர்—ஒரு சிலர், அலை முகம் பரி ஆனனம் எய்தி—அலைபொருந்திய கடலின்கணுள்ள வடவையென்னுங் குதிரையின் முகத்தையுடையராய், கொலை முகத்து குழீஇயினர்—கொலை மேற்கொண்டு குழுமினார்கள்; சிலர் மலை முகத்து மரை களிறு எண்குடன் கலை முகத்து கவின் அடைந்தார்—ஒரு சிலர் மலைக்கணுள்ள மரை களிறு கரடி மான் ஆகிய இவற்றின் முகக் கவினைப் பொருந்தியிருந்தார்கள்.

களிறு, ஈண்டு ஆண்பன்றி. (35)

இனையர் தங்குழு வெண்ணில வன்னர்கைப்
புனைய நின்ற பொருபடை யெண்ணில
வினைகொள் வன்மையும் வீரமு மிற்றென
நினைவ தற்கரி தெங்ங னிகழ்த்துகேன்.

இனையர்தம் குழு எண்ணில—இத்தன்மை வாய்ந்தவர்களின் குழுக்கள் எண்ணில்லாதன; அன்னர் கை புனைய நின்ற பொருபடை எண்ணில—அவர்களுடைய கைகளில் அக் கைகளை அலங்கரிக்கப் பொருந்தி நின்ற பொருகின்ற ஆயுதங்களும் எண்ணில்லாதன; வினைகொள் வன்மையும் வீரமும் இற்று என நினைவதற்கு அரிது—அவர்களுடைய வினைவலியும் போர் வீரமும் தனித்தனி இவ்வியல்பிற்று என்று நினைதற்கும் அரியது; எங்ஙன் நிகழ்த்துகேன்—நினைதற்கரியதனை எவ்வாறு வாயாற் கூறுவேன். (36)

கையி லெண்ணில் படையினர் காய்கனற்
செய்ய பூணினர் தீக்கலுழ் கண்ணினர்
வெய்ய சொல்லர் வெருவரு மேனியர்
வையம் யாவு மடுக்குறும் வாயினர்.

கையில் எண்ணில் படையினர்—கைகளில் அளவற்ற படைகளையுடையவர்கள்; காய் கனல் செய்ய பூணினர்—இருளைக் காய்கின்ற அக்கினி போலுஞ் சிவந்த ஆபரணங்களைத் தரித்தவர்கள்; தீ கலுழ் கண்ணினர்—அக்கினி காலுங் கண்ணினையுடையவர்கள்; வெய்ய சொல்லர்—கொடுஞ் சொல்லினையுடையவர்கள்; வெரு வரு மேனியர்—அச்சந் தரும் மேனியையுடையவர்கள்; வையம் யாவும் மடுக்குறும் வாயினர்—உலகம் முழுவதையும் விழுங்கத்தக்க வாயையுடையவர்கள். (37)

கட்டு செஞ்சடைக் கற்றையர் காய்ந்தெழு
நெட்ட ழற்கு நிகர்வரு நாவினர்
வட்டி மாலைகண் மானு மெயிற்றினர்
தொட்ட மூவிலைச் சூலந் துளக்குவார்.

கட்டு செம் சடை கற்றையர்—கட்டப்பட்ட செஞ்சடைத் தொகுதியினையுடையவர்கள்; காய்ந்து எழு நெட்டு அழற்கு நிகர் வரு நாவினர்—கனன்று எழுகின்ற நீண்ட அக்கினிக்கு நிகரான நாவினையுடையவர்கள்; வட்டி மாலைகள் மானும் எயிற்றினர்—பல கறையாகிய சோகி மாலைகளை ஒத்த பல்வரிசைகளையுடையவர்கள்; தொட்ட—பகைவர் உரத்தைத் தோண்டிய, மூவிலை சூலம் துளக்குவார்—இலை வடிவாய முத்தலைச் சூலங்களை அசைப்பவர்கள். (38)

துண்ட மீது சொரிதருந் தீயின
ரண்ட கூட மலைத்திடுங் கையினர்
சண்ட மாருதந் தாழ்க்குஞ் செலவின
ருண்டு போரென் றுளந்தளிர்ப் பெய்துவார்.

துண்டம் மீது சொரிதரும் தீயினர்—நாசியின்கட் சுவாலிக்கின்ற அக்கினியை யுடையவர்கள்; அண்ட கூடம் அலைத்திடும் கையினர்—அண்ட முகட்டைத் துழாவுகின்ற கைகளையுடையவர்கள்; சண்ட மாருதம் தாழ்க்கும் செலவினர்—பிரசண்ட மாருதம் பின்னிடுகின்ற நடையையுடையவர்கள்; போர் உண்டு என்று உளம் தளிர்ப்பு எய்துவார்—போர் உளதென்று உள்ளந் தளிர்ப்பவர்கள். (39)

மடித்த வாயினர் வானவ ரென்பினுற்
றொடுத்த கண்ணி துயல்வரு மார்பினர்
தடித்த தோளர் தனித்தழ லென்னினும்
பிடித்து நுங்கும் பெரும்பசி மிக்குளார்.

மடித்த வாயினர்—அதரங்களை உள்ளே மடித்த வாயினையுடையவர்கள்; வானவர் என்பினுல் தொடுத்த கண்ணி துயல்வரு மார்பினர்—தேவர்களின் எலும்புகளாற் கட்டப்பட்ட மாலைகள் அசைகின்ற மார்பினையுடையவர்கள்; தடித்த தோளர்—புடைத்த தோள்களையுடையவர்கள்; தனி தழல் என்னினும்—ஒப்பற்ற ஊழித்தீயேயாயினும், பிடித்து நுங்கும்—அதனையும் பிடித்து உண்ணும், பெரும் பசி மிக்குளார்—பெரிய பசி மிகப்பெற்றவர்கள். (40)

நச்சிற் றீயவர் நானில மங்கையு
மச்சுற் றெஞ்ச வடிகள் பெயர்த்துளார்
கச்சைத் தோன்மிசை கட்டிய தட்டிய
ருச்சிட் டம்மென் றுலகினை யுண்கிலார்.

நஞ்சில் தீயவர்—நஞ்சினுங் கொடியவர்கள்; நானில மங்கையும் அச் சுற்று எஞ்ச அடிகள் பெயர்த்துளார்—பூமிதேவியும் அஞ்சி இளைக்கக் கால்கள் பெயர்த்து வைப்பவர்கள்; கச்சை மிசை கட்டிய தோல் தட்டியர்—அரைக் கச்சைமீது கட்டப்பட்ட தோலாலான அரைச் சல்லடத்தையுடையவர்கள்; உலகினை உச்சிட்டம் என்று உண்கிலார்—இந்த உலகத்தைத் திருமாலின் உச்சிட்டமென்று கருதி உண்ணுதவர்கள். (41)

சூழி யானை துவன்றிய மால்வரைப்
பாழி யாகப் பட்செவி வாயின
ரூழி மாருத முட்கு முயிர்ப்பின
ராழி யாக வகன்ற வகட்டினர்.

சூழி யானை துவன்றிய மால்வரை பாழி ஆக—முகபடாம் பொருந்திய யானை நெருங்கிச் செறிந்த பெரிய மலையின் முழைஞ்சுபோல, படர் செவி வாயினர்—அகன்ற செவித் துவாரத்தையுடையவர்கள்; ஊழி மாருதம் உட்கும் உயிர்ப்பினர்—ஊழிக் காற்றும் மனம் உட்கும் உயிர்ப்பினையுடையவர்கள்; ஆழியாக அகன்ற அகட்டினூர்-சமுத்திரம்போல அகன்ற வயிற்றையுடைய வர்கள். (42)

ஆழ்ந்த சூர்ப்பசுங் கண்ண ரடித்துணை
தாழ்ந்த கையர் தடக்குறுந் தாளினர்
வீழ்ந்து மிக்க வியனத ரத்தினர்
சூழ்ந்த பூதத் தொகையினர் யாவரும்.

ஆழ்ந்த சூர் பசுங்கண்ணர்—உள்ளே ஆழ்ந்த அச்சந் தருகின்ற பசிய கண் களையுடையவர்கள்; அடி துணை தாழ்ந்த கையர்—காலடிவரையுந் தாழ்ந்த கைகளையுடையவர்கள்; தடக்கு உறும் தாளினர்—ஒன்றோடொன்று தெற்று கின்ற கால்களையுடையவர்கள்; வீழ்ந்து மிக்க வியன் அதரத்தினர்—மிக வீழ்ந்து தொங்குகின்ற பெரிய அதரத்தையுடையவர்கள்; யாவரும் சூழ்ந்த பூதத் தொகையினர்—இவர்களெல்லாம் வீரபத்திர உருத்திரரைச் சூழ்ந்த பூத கணங்கள்.

விசாலித்த குறுந் தாளினருமாம். (43)

### வேறு

அத்தகை நின்றிட வண்ண லுடன்சேர்
பத்திர காளி பயந்திடு கின்ற
கத்து கடற்புரை காளிக டம்மை
யித்துணை யேயென வெண்ணரி தாமால்.

அத்தகை நின்றிட—மேற்கூறிய பூதங்களினியல்பு அவ்வாறிருக்க; அண்ண லுடன் சேர் பத்திரகாளி பயந்திடுகின்ற—வீரபத்திர உருத்திரருடன் கூடிய பத்திரகாளியம்மையார் உண்டாக்காநின்ற, கத்து கடல் புரை காளிகள் தம்மை—முழங்குகின்ற கடலை ஒத்த காளிகளின் தொகையை, இ துணையே என் எண் அரிது—இவ்வளவுதான் என்று கணக்கிடுதல் அரிதேயாம். (44)

அந்தமில் பல்படை யங்கையி லேந்தி
யுந்திய தும்பைக ளுச்சி மிலைச்சிச்
சுந்தர மெய்திய தோற்றம தாகி
விந்தை யெனச்சிலர் மேவின ரன்றே.

அந்தம் இல் பல் படை அங்கையில் ஏந்தி—அளவில்லாத பலவகையான படைக்கலங்களை அழகிய கைகளிலே தாங்கி, உந்திய தும்பைகள் உச்சி மிலைச்சி—உயர்ந்த தும்பை மாலைகளை முடியிற் சூடி, சுந்தரம் எய்திய தோற்றம தாகி—அழகு வாய்ந்த தோற்றத்தையுடையவர்களாய், விந்தை என சிலர் மேவினர்—துர்க்கையைப் போலச் சிலர் வந்தார்கள். (45)

தோளின் மிசைத்திரி சூல மிலங்கக்
கோளி லுயிர்ப்பலி கொள்கல னேந்தித்
தாளிடை நூபுர சால மிலங்கக்
காளிகள் போற்சிலர் காட்சி மலிந்தார்.

தோளின் மிசை திரிசூலம் இலங்க—தோளின்மீது திரிசூலம் விளங்க, கோள் இல்—கொள்ளுதல் முற்றுப்பெருத, உயிர்ப்பலி கொள்கலன் ஏந்தி—உயிர்ப்பலி கொள்ளுகின்ற கபாலங்களை ஏந்தி, தாளிடை நூபுர சாலம் இலங்க—கால்களிலே சிலம்பினங்கள் பிரகாசிக்க, காளிகள் போல் சிலர் காட்சி மலிந்தார்—ஒருவகைக் காளிகளைப்போலச் சிலர் தோற்றத்தான் மிக்கார்கள்.

காளிகள் என்றது காளி விசேடங்களை. இக்காளிகள் உமாதேவியாருக்கு ஏவல் செய்வோர். (46)

வாகினி யெங்குள வென்றிட மல்கு
மோகினி போற்சிலர் மொய்த்தனர் மாயச்
சாகினி போற்சிலர் சார்ந்தன ரல்லா
யோகினி போற்சில ருற்றன ரம்மா.

இனி வாகு எங்கு உள என்றிட—இனி அழகுகள் வேறெங்கே உள்ளன என்றுசொல்லும்படி, மல்கும்—அழகுகளனைத்தும்பூரணப்படுகின்ற, மோகினி போல் சிலர் மொய்த்தனர்—மோகினியைப்போலச் சிலர் சூழ்ந்தார்கள்; மாயம் சாகினி போல் சிலர் சார்ந்தனர்—மாயத்தையுடைய சாகினி போற் சிலர் வந்தார்கள்; அல்லா யோகினி போல் சிலர் உற்றனர்—அல்லாத யோகினி போலச் சிலர் தோன்றினார்கள்.

சாகினி, யோகினி என்போர் தேவியின்றோழிகள். (47)

அயிருற வண்ட மனைத்தையு மெற்று
வுயிரவி நுங்கிய வுன்னி யெழுந்தே
செயிரவி யாது தெழித்திடு தொன்னாள்
வயிரவி போற்சிலர் மன்னினர் மாதோ.

அண்டம் அனைத்தையும் அயிர் உற எற்று—அண்டம் முழுவதையும் நுண் மணல் ஆகும்படி எற்றி, உயிர் அவி நுங்கிய உன்னி எழுந்து—உயிர்களாகிய அவியை உண்ணும்பொருட்டு நினைத்தெழுந்து, செயிர் அவியாது—கோபம் அடங்காமல், தொல் நாள் தெழித்திடு—ஊழிக்காலத்தில் ஆரவாரிக்கின்ற, வயிரவி போல் சிலர் மன்னினர்—வைரவியைப் போலச் சிலர் இருந்தார்கள்.

வைரவரின் தேவி வைரவி. (48)

நீடலை மாலை நிலத்திடை தோய
வாடுறு பாந்த ளணிக்கலன் மின்ன
வீடுறு வானுரு மேறென வார்த்தே
மோடிக ளாமென மொய்த்தனர் சில்லோர்.

நீள் தலை மாலை நிலத்திடை தோய—கழுத்திலணிந்த நீண்ட சிரமாலைகள் நிலத்திற் பொருந்த, ஆடுறு பாந்தள் அணிக்கலன் மின்ன—ஆடுகின்ற பாம்புகளாகிய அழகிய ஆபரணங்கள் பிரகாசிக்க, ஈடு உறு வான் உருமேறு என ஆர்த்து—வலி மிக்க பெரிய இடியேறுபோல ஆரவாரித்துக்கொண்டு, மோடிகளாம் என சில்லோர் மொய்த்தனர்—மோடிகள்போலச் சிலர் சூழ்ந்தார்கள்.

மோடி—காடுகாள். (49)

இவ்வகை மாதர்கள் யாவரும் வெவ்வே
றைவகை மேனிய ராய்வத னங்கள்
கைவகை யெண்ணில ராய்க்கவின் மாட்சிச்
செவ்விய ராய்ச்செரு மேற்கிளர் கின்றார்.

இ வகை மாதர்கள் யாவரும்—இவ்வாறு காளிகளாகிய மாதர்கள் யாவரும், வெவ்வேறு ஐவகை மேனியராய்—பலவேறுவகைப்பட்ட பஞ்ச வர்ண மேனியை உடையவர்களாய், வதனங்கள் கைவகை எண்ணிலராய்—முகங்கள் கைகள் அளவில்லாதவர்களாய், கவின் மாட்சிச் செவ்வியராய்—அழகு மாட்சிமையுறுகின்ற பருவத்தினர்களாய், செரு மேற்கிளர்கின்றார்—போர்மேற் கிளர்ச்சியுறுகின்றார்கள். (50)

## வேறு

கணந்திக ழனைய பூதர் காரிகை மார்கள் யாரு
மணங்குறு காளி தன்னோ டாண்டகை வீரன் றாளிற்
பணிந்தனர் பரசி யன்னார் பாங்கரில் விரவிச் சூழ்ந்து
துணங்கைகொ டாடிப் பாடித் துள்ளியே போத லுற்றார்.

கணம் திகழ் அனைய பூதர்—கூட்டமாக விளங்குகின்ற அத்தன்மையுடைய பூதர்களும், காரிகைமார்கள் யாரும்—காளிகளுமாகிய அனைவரும், அணங்கு

உறு காளி தன்னேடு ஆண்டகை வீரன் தாளில் பணிந்தனர் பரசி—தெய்வத் தன்மை மிக்க பத்திரகாளியையும் ஆண்டகையாகிய வீரபத்திர உருத் திரரையும் பாதங்களில் வணங்கித் துதித்து, அன்னுர் பாங்கரில் விரவிச் சூழ்ந்து—அவர்கள் பக்கங்களில் நெருங்கிச் சூழ்ந்து, துணங்கை கொடு ஆடி பாடி துள்ளி போதலுற்றுர்—பழுப்புடை இருகை முடக்கி மடித்து ஆடிப் பாடித் துள்ளிச் சென்றுர்கள்.

துணங்கையைச் சிறப்பாகக் காரிகைமார்க்குக் கொள்க. (51)

ஈட்டமிக் கெழுந்து செல்லு மின்னதோர் பூதர் தம்மின்
மோட்டிகற் பானு கம்பன் முதலிய கணங்கள் முத்தி
வீட்டுடைத் தலைவ னுன வீரபத் திரன்முன் னுகி
யீட்டுடைப் பல்லி யங்கள் யாவையு மியம்பிச் சென்றுர்.

ஈட்டம் மிக்கு எழுந்து செல்லும் இன்னேர் தம்மில்—கூட்டம் மிகுந்து எழுந்து செல்லுகின்ற இத்தகையோர்களுக்குள், மோடு இகல் பானு கம்பன் முதலிய பூதர் கணங்கள்—பெருமை பொருந்திய வலியினையுடைய பானு கம்பர் முதலிய பூதகணத்தினர், முத்தி வீடு உடை தலைவன் ஆன வீர பத்திரன் முன் ஆகி—முத்தியாகிய வீட்டினையுடைய தலைவராகிய வீரபத்திர உருத்திரரின் முன்னணியினிடத்தராய், ஈடு உடைப் பல்லியங்கள் யாவையும் இயம்பி சென்றுர்—பெருமை பொருந்திய பலவாகிய வாத்தியங்களனைத் தையும் ஒலித்துக்கொண்டு சென்றுர்கள்.

இன்னதோர்—இன்னேர். அது பகுதிப்பொருள் விகுதி. (52)

கொண்டபே ராற்ற லோடுங் குலவிய வீரன் றன்பா
லண்டமே லுரிஞ்சப் பல்வே றணிப்பெருங் கவிகை கொண்டும்
விண்டுலாங் கவரி யீட்டம் வீசியுஞ் சேற லுற்றுர்
தண்டனே பிஞகி சிங்க னுதியாந் தறுகட் பூதர்.

கொண்ட பேராற்றல் ஓடும் குலவிய வீரன் தன்பால்—தம்பாற் பொருந் திய பேராற்றலோடுங் கூடி விளங்கிய வீரத்தையுடையவராகிய வீரபத்திர ருக்குப் பக்கத்தில், அண்டமேல் உரிஞ்ச பல்வேறு அணி பெரும் கவிகை கொண்டும்—அண்டத்தின்மீது உரோஞ்சும்வண்ணம் பலவேறு அழகிய பெரிய குடைகளைத் தாங்கியும், விண்டு உலாம் கவரி ஈட்டம் வீசியும்—விரிந்து அசையுஞ் சாமரங்களை வீசியும், தண்டன் பிஞகி சிங்கன் ஆதியாம் தறுகண் பூதர் சேறல் உற்றுர்—தண்டன் பிஞகி சிங்கன் முதலிய தறுகண்மையினை யுடைய பூதர்கள் செல்வாராயினர். (53)

பாசிழை மகளிர் சில்லோர் பத்திரை பாங்க ராகித்
தேசுடைக் கவிகை யீட்டந் திருநிழல் பரப்ப வேந்தி
மாசறு கவரி வட்டம் வரம்பில விரட்டிப் பல்வே
ருசிகள் புகன்று செம்பொ னணிமலர் சிதறிப் போந்தார்.

பாசிழை மகளிர் சில்லோர்—பசிய இழையணிந்த காளிப் பெண்கள் சிலர், பத்திரை பாங்கர் ஆகி—பத்திரகாளிக்குப் பக்கத்தினராய், தேசுடை கவிகை ஈட்டம் திருநிழல் பரப்ப ஏந்தி—ஒளிபொருந்திய குடைக்கூட்டங்களைத் திரு நிழல் பரப்புமாறு தாங்கி, மாசறு வரம்பில கவரிவட்டம் இரட்டி—களங்கமற்ற எண்ணில்லாத வட்டமாகிய சாமரங்களை இரட்டி, பல்வேறு ஆசிகள் புகன்று—பலவேறு வகையான ஆசிகளைச் செப்பி, செம் பொன் அணி மலர் சிதறி போந்தார்—செம்பொன்னுலான அழகிய பூக்களைச் சிந்திச் சென்றுர்கள்.

வட்டம் ஆலவட்டமுமாம். கவரியும் வட்டமுமென்க. (54)

படர்ந்திடு புணரி போலப் பார்முழு தீண்டித் தானை
யடங்கலு மார்க்கு மோதை யகிலமுஞ் செறிய விண்ணு
முடைந்ததவ் வண்டங் கொல்லோ வுதுகொலோ விதுவோ வென்னு
மிடைந்தபல் லண்டத் தோரும் விதிர்ப்பொடும் விளம்ப லுற்ருர்.

தானை அடங்கலும்--சேனை முழுவதும், படர்ந்திடு புணரி போல பார் முழுது ஈண்டி—இடம்பெயர்ந்து செல்வதொரு சமுத்திரம்போலப் பூமி முழுவதிலுஞ் செறிந்து, ஆர்க்கும் ஓதை—ஆரவாரிக்கும் ஆரவாரம், அகிலமும் செறிய—எங்குஞ் செறிதலால், விண்ணும் உடைந்தது—மண்ணுலகமன்றி விண்ணுலகமும் உடைந்தது; மிடைந்த பல் அண்டத்தோரும்—நெருங்கிய பலவாகிய அண்டத்தில் உள்ளவர்கள் எல்லாரும், அ அண்டம் கொல்லோ உது கொலோ இதுவோ என்னு—உடைந்தது அந்த அண்டமோ உந்த அண்டமோ இந்த அண்டமோ என்று, விதிர்ப்பொடும் விளம்பல் உற்ருர்—நடுக்கத்தோடுங் கூறுவாராயினுர். (55)

பூழிக ளெழுந்த வம்மா புவியெலாம் பரவித் தொல்பே
ராழியு மடைத்து வான்புக் கச்சுதன் பதங்கா றேகி
யூழியின் முதல்வ ஞர்க்கு மொலியினு லுடைந்த வண்டப்
பாழிக டொறுமுற் றெல்லாப் புவனமும் பரந்த வன்றே.

எழுந்த பூழிகள்—எழுந்த பூதூளிகள், புவி எலாம் பரவி—பூமி எவ்விடத்தும் பரந்து, தொல் பேர் ஆழியும் அடைத்து—பழைய பெரிய சமுத்திரத்தையும் மூடி, வான் புக்கு—வானிற் புகுந்து, அச்சுதன் பதங்காறு ஏகி—விஷ்ணுமூர்த்தியின் வைகுந்த பதம் வரையுஞ் சென்று, ஊழியின் முதல்வன் ஆர்க்கும் ஒலியினுல் உடைந்த அண்டப் பாழிகள் தொறும் உற்று—ஊழி முதல்வராகிய சங்கார முதல்வர் ஆரவாரிக்கும் ஆரவாரத்தால் உடைந்த அண்டங்களின் பிளப்புக்கள் தோறும் படிந்து, எல்லாப் புவனமும் பரந்த—எல்லாப் புவனங்களிலும் வியாபித்தன. (56)

அங்கெழு பூழி தன்னு லவர்விழி கலுழுந் தீயாற்
செங்கையிற் படைக டேய்ப்பச் சிதறிய கனலால் வைய
மெங்கணு மெரிக டுன்னி யிரும்புகைப் படல மீண்டிக்
கங்குலும் பகலுங் காணுக் கடைப்பகல் போன்ற தன்றே.

வையம் எங்கணும்—உலகம் முழுவதும், அங்கு எழு பூழி தன்னல்—அங்கே எழுந்த புழுதியினுலும், அவர் விழி கலுழும் தீயால்—அவர்களுடைய கண்கள் கக்குகின்ற அக்கினியினுலும், செம் கையில் படைகள் தேய்ப்ப சிதறிய கனலால்—சிவந்த கைகளிற் பொருந்திய படைகள் ஒன்ருேடொன்று தேய்த்தலாற் சிதறிய தீப் பொறிகளாலும், எரிகள் துன்னி—அக்கினிகள் அடர்ந்து, இரும் புகை படலம் ஈண்டி—கரிய புகைப்படலங்கள் செறியப்பெற்று, கங்குலும் பகலும் காணு—இரவும் பகலும் வேற்றுமை காண முடியாத, கடை பகல் போன்றது—ஊழிக்காலம் போன்றிருந்தது. (57)

இப்பெருந் தானே சூழ வெம்பிரா னெழுந்து சீற்றத்
துப்புட னேகித் தக்கன் ருென்மகம் புரியுஞ் சாலே
வைப்பினே யணுகித் தன்பால் வருபடைத் தலைவர்க் கொன்று
செப்பின னென்ப மன்னுே சேணுரு மேறு நாண.

இ பெரும் தானே சூழ—இத்தகைய பெரிய சேனே சூழ, எம்பிரான் எழுந்து சீற்றத் துப்புடன் ஏகி—எம்பெருமானுகிய வீரபத்திர உருத்திரர் எழுந்து கோபாவேசத்தோடு சென்று, தக்கன் தொல் மகம் புரியும் சாலே வைப்பினே அணுகி—தக்கன் யாகஞ் செய்யும் பழைய யாகசாலேயினிடத்தையடைந்து, சேண் உருமேறும் நாண—வானத்து இடியேறும் அஞ்சும்படி, தன் பால் வரு படை தலைவர்க்கு ஒன்று செப்பினன்—தம் பக்கத்தில் வருகின்ற படைத் தலைவர்களுக்கு ஒன்று கூறியருளினர். (58)

பற்றலர் புரமூன் றட்ட பரமனே யிகழ்ந்து நீக்கிச்
சிற்றினம் பொருளென் றுன்னிச் சிறுவிதி யென்னுந் தீயோ
னிற்றிடு நெறியால் வேள்வி யியற்றுமிச் சாலே வாயில்
சுற்றெடு சேமஞ் செய்து துயக்கறக் காத்தி ரென்ருன்.

பற்றலர் புரம் மூன்று அட்ட பரமனே இகழ்ந்து நீக்கி—பகைவரின் முப்புரங்களே அழித்த பரம்பொருளாகிய சிவபெருமானே இகழ்ந்து விலக்கி, சிற்றினம் பொருள் என்று உன்னி—சிற்றினங்களே உறுதிப்பொருள் என்று எண்ணி, சிறுவிதி என்னும் தீயோன்—தக்கன் என்னும் பாவி, இற்றிடும் நெறியால்—அழிந்துபோகும் முறையில், வேள்வி இயற்றும் இ சாலே வாயில்—வேள்வியைச் செய்கின்ற இந்த யாகசாலேயின் வாயில்களேயும், சுற்றெடு

சேமம் செய்து—சுற்றுப் புறங்களையும் அரண் செய்து, துயக்கு அற காத்திர் என்றான்—சோர்வின்றிக் காத்துக்கொள்ளுங்கள் என்று பணித்தருளினார். (59)

என்றலுந் தானை யோர்க ளெயிற்புற முற்றுஞ் சூழ்ந்து
நின்றனர் வானி னூடு நெருங்கினர் வாய்த ரோறுஞ்
சென்றனர் கொடிய தக்கன் சேனையா யெதிர்ந்தோர் தம்மைக்
கொன்றன ரவரூன் றுய்த்துக் கூற்றனு முட்க வார்த்தார்.

என்றலும்—என்றிவ்வாறு பணித்தருளுதலும், தானையோர்கள்—சேனைகள், எயில்புறம் முற்றும் சூழ்ந்து வானின் ஊடும் நெருங்கினர் நின்றனர்—மதிற்புறம் முழுவதுஞ் சூழ்ந்து ஆகாயத்தின்கண்ணும் நெருங்கிச் செறிந்து நின்றார்கள்; வாய்தல் தோறும் சென்றனர்—அம்மட்டோ! அந்த யாகசாலையின் வாய்தல் தோறுஞ் சென்று, கொடிய தக்கன் சேனையாய் எதிர்ந்தோர் தம்மை கொன்றனர்—கொடிய தக்கனுடைய சேனைகளாய்த் தம்மை எதிர்த்தவர்களைக் கொன்று, அவர் ஊன் துய்த்து—அவர்களுடைய ஊனைத் தின்று, கூற்றனும் உட்க ஆர்த்தார்—யமனும் மனம் உட்க ஆரவாரஞ் செய்தார்கள். (60)

வீரபத்திரப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 1386.

---

# யாக சங்காரப் படலம்

ஆர்த்தலு மிறைவி தன்னே டாண்டகை வீரன் வாசத்
தார்த்தொகை தூங்கும் யாக சாலையு ளேக லோடுந்
தீர்த்தனைத் தலைவி தன்னைத் திசைமுகன் முதலோர் யாரும்
பார்த்தன ருளந்துண் ணென்று பதைபதைத் தச்சங் கொண்டார்.

ஆர்த்தலும்—பூதர்கள் ஆரவாரஞ் செய்த சமயத்தில், இறைவி தன்னேடு ஆண் தகை வீரன்—இறைவியாகிய பத்திரகாளியோடு ஆண்டகையாகிய வீரபத்திர உருத்திரர், வாசத்தார் தொகை தூங்கும் யாகசாலையுள் ஏகலோடும்—வாசனை பொருந்திய தொகையாகிய மாலைகள் தூங்குகின்ற யாக சாலைக்குட் சென்றருளினராக; தீர்த்தனை தலைவி தன்னை திசைமுகன் முதலோர் யாரும் பார்த்தனர்—பரிசுத்தராகிய வீரபத்திரக் கடவுளையுந் தேவியையும் பிரமா முதலிய யாவரும் பார்த்து, உளம் துண்ணென்று பதை பதைத்து அச்சம் கொண்டார்—மனந் துண்ணென்று நடுநடுங்கி அச்சங் கொண்டார்கள். (1)

மடங்கலின் வரவு கண்ட மானினம் போன்றும் வானத்
தடங்கிய வுருமே றுற்ற வரவினம் போன்றும் யாக்கை
நடுங்கின ராற்றல் சிந்தி நகையொரீஇ முகனும் வாடி
யொடுங்கின ருயிரி லார்போ லிவைசில வுரைக்க லுற்றுர்.

மடங்கலின் வரவு கண்ட மானினம் போன்றும்—சிங்கேற்றின் வரவைக் கண்ட மான் கூட்டம் போலவும், வானத்து அடங்கிய உருமேறு உற்ற அரவினம் போன்றும்—வானத்திலுள்ள இடியேறுண்ட பாம்புகள் போலவும், யாக்கை நடுங்கினர்—உடல் நடுங்கி, ஆற்றல் சிந்தி—வலியிழந்து, நகை ஒரீஇ—மகிழ்ச்சி நீங்கி, முகனும் வாடி—முகமும் வாடி, உயிர் இலார் போல் ஒடுங்கினர்—உயிரில்லாதவர்போல ஒடுங்கி, இவை சில உரைக்கலுற்றுர்—தம்முள் இவ்வாறு சில பேசுவாராயினர். (2)

ஈசனு முமையு மேவந் தெய்தின ரென்பா ரன்னுர்
காய்சின முதவ வந்த காட்சியர் காணு மென்பார்
பேசரி தந்தோ வந்தோ பெரிதிவர் சீற்ற மென்பார்
நாசம்வந் திட்ட தின்றே நம்முயிர்க் கெல்லா மென்பார்.

ஈசனும் உமையுமே வந்து எய்தினர் என்பார்—சிவபெருமானும் உமா தேவியாருமே இக்கோலத்துடன் இங்கே வந்தார்கள் என்பார் சிலர்; அன்னூர் காய் சினம் உதவ வந்த காட்சியர்—அவர்களின் உக்கிர கோபம் உண்டாக்க உண்டாய தோற்றத்தினர்கள் இவர்கள்; காணும் என்பார்—இதனை உற்று நோக்கி அறியுங்கள் என்று கூறுவார்கள் வேறு சிலர்; இவர் சீற்றம் பெரிது—இவர்களின் கோபம் மிகப் பெரிது; அந்தோ அந்தோ பேசரிது என்பார்—ஐயகோ ஐயகோ அக்கோபம் பேசுதற்கரியது என்றுங் கூறுவார்கள்; நம் உயிர்க்கு எல்லாம் இன்றே நாசம் வந்திட்டது என்பார்—நம் உயிரனைத்துக்கும் இப்பொழுதே நாசம் வந்தெய்தியது என்றுங் கூறுவார்கள் (3)

தக்கனுக் கீறு மின்றே சார்ந்தது போலு மென்பார்
மிக்கதோர் விதியை யாரே விலக்கவல் லார்க ளென்பார்
முக்கணெம் பெருமான் றன்னை முனிந்திகழ் கின்ற நீரா
ரக்கண முடிவ ரென்றற் கையமு முண்டோ வென்பார்.

தக்கனுக்கு ஈறும் இன்றே சார்ந்தது போலும் என்பார்—தக்கனுக்கு இறுதியும் இன்றே வந்தது போலும் என்பார்கள்; மிக்கது ஓர் விதியை யாரே விலக்க வல்லார்கள் என்பார்—எவற்றினும் மேற்பட்டுத் தோன்றும் ஒப்பற்ற விதியை யாவர்தாம் விலக்க வல்லவர்கள் என்பார்கள்; முக்கண் எம்பெருமான் தன்னை முனிந்து இகழ்கின்ற நீரார்—முக்கண்ணரான எம்பெருமானைக் கோபித்து இகழும் நீர்மையினர், அக்கணம் முடிவர் என்றற்கு ஐயமும் உண்டோ என்பார்—முனிந்து இகழ்ந்த அக்கணமே அழிவர் என்பதற்குச் சந்தேகமும் உண்டோ என்பார்கள். (4)

விமலனை யிகழு கின்றோன் வேள்வியேன் புரிந்தா னென்பார்
நமையெலாம் பொருளென் றுன்னி நடத்தினன் காணு மென்பா
ரிமையவர் குழுவுக் கெல்லா மிறுதியின் றாமோ வென்பா
ருமையவள் பொருட்டா லன்றோ வுற்றதீங் கிதெலா மென்பார்.

விமலனை இகழுகின்றோன் வேள்வி ஏன் புரிந்தான் என்பார்—சிவபெருமானை இகழுகின்ற இவ்வதிபாதகன் யாகத்தை ஏன் செய்யத் தொடங்கினான் என்பார்கள்; நமை எலாம் பொருள் என்று உன்னி நடத்தினன் என்பார்—அற்பர்களாகிய நம்மையெல்லாம் பொருள் என்று மதித்து யாகஞ் செய்தானே என்பார்கள்; இமையவர் குழுவுக்கு எல்லாம் இறுதி இன்று ஆமோ என்பார்—தேவ கூட்டங்களுக்கெல்லாம் இன்று இறுதியாகுமோ என்பார்கள்; தீங்கு இது எலாம்—இத்தீங்கு அனைத்தும், உமையவள் பொருட்டால் அன்றோ உற்ற என்பார்—உமாதேவியரை அவமதித்ததன் காரணத்தாலன்றோ சம்பவித்தன என்பார்கள்.

காணும் அசை. உற்றது ஈங்கு, எனப் பிரித்துரைப்பதுமாம். (5)

ஈடுறு பூதர் யாரு மெங்கணும் வளைந்தா ரென்பா
ரோடவு மரிதிங் கென்பா ரொளித்திடற் கிடமே தென்பார்
வீடினங் காணு மென்பார் மேலினிச் செயலென் னென்பார்
பாடுசூ ழங்கி நாப்பட் பட்டபல் களிறு போன்றார்.

ஈடுறு பூதர் யாரும் எங்கணும் வளைந்தார் என்பார்—வன்மை மிக்க பூதர்கள் யாவரும் எவ்விடத்தும் வளைந்துகொண்டார்கள் என்பார்; ஓடவும் இங்கு அரிது என்பார்—ஓடுதற்கும் இங்கே முடியாது என்பார்; ஒளித்திடற்கு இடம் ஏது என்பார்—ஒளித்துக்கொள்ளுதற்கு இடம் யாண்டையது என்பார்; வீடினம் என்பார்—இறந்தோம் என்பார்; இனி மேல் செயல் என் என்பார்—இனிமேற் செய்யத்தக்க செயல் என்னை என்பார்; பாடு சூழ் அங்கி நாப்பண் பட்ட பல் களிறு போன்றார்—பக்கம் முழுவதுஞ் சூழ்ந்த அக்கினியின் நடுவண் அகப்பட்ட பல யானைகள் போன்றாராயினர். (6)

அஞ்சின ரினைய கூறி யமரர்க ளரந்தை கூரச்
செஞ்சர ணதனை நீங்காச் சிலபெரும் பூதர் சூழப்
பஞ்சுறழ் பதுமச் செந்தாட் பத்திரை யோடு சென்று
வெஞ்சின வீரன் வெய்யோன் வேள்விசெய் வதனைக் கண்டான்.

அஞ்சினர் இனைய கூறி அமரர்கள் அரந்தை கூர—அஞ்சி இவைகளை உரைத்துத் தேவர்கள் வருந்த, செஞ்சரண் அதனை நீங்கா சில பெரும் பூதர் சூழ—தமது சேவடியை விட்டுப் பிரியாத சில பெரிய பூதத்தலைவர்கள் சூழ, பஞ்சு உறழ் பதுமம் செந்தாள் பத்திரையோடு—பஞ்சையொத்த மிருதுவான செந்தாமரை மலர்ப் பாதங்களையுடைய பத்திரகாளியம்மையாரோடு, வெம்சின வீரன் சென்று—கொடுஞ் சினத்தினையுடைய வீரபத்திர உருத்திரர் சென்று, வெய்யோன் வேள்வி செய்வதனை கண்டான்—கொடிய தக்கன் யாகஞ் செய்வதனை நோக்கியருளினர். (7)

இடித்தென நக்குப் பொங்கி யெரிவிழித் திகலி யார்த்துப்
பிடித்தனன் வயக்கொம் போதை பிளந்தது செம்பொன் மேரு
வெடித்தது மல்லன் ஞாலம் விண்டன வண்டம் யாவுந்
துடித்தன வுயிர்கண் முற்றுந் துளங்கினர் சுரர்க ளெல்லாம்.

இடித்து என நக்கு—இடி இடித்தாற்போலச் சிரித்து, பொங்கி—சீறி, எரி விழித்து—அக்கினி தோன்ற விழித்து, இகலி—பகைத்து, ஆர்த்து—கர்ச்சித்து, வயம் கொம்பு ஓதை பிடித்தனன்—வெற்றிக்கொம்பை ஓசை எழும்படி ஊதியருளினர்; செம்பொன் மேரு பிளந்தது—அதனாலே செம்பொன் மலையாகிய மேரு பிளந்தது; மல்லல் ஞாலம் வெடித்தது—வளம்பொருந்திய பூமி வெடித்தது; அண்டம் யாவும் விண்டன—அண்டங்கள் அனைத்தும்

பிளந்தன; உயிர்கள் முற்றும் துடித்தன—உயிர்கள் முழுவதுந் துடித்தன; சுரர்கள் எல்லாம் துளங்கினர்—தேவர்களெல்லாம் நடுங்கினர். (8)

எழுகின்ற வோசை கேளா விடியுண்ட வரவிற் சோரா
விழுகின்ருர் பதைக்கின் ருர்வாய் வெருவுகின் ருர்க ளேங்கி
யழுகின்ரு ரோடு கின்ரு ரழிந்ததோ வேள்வி யென்று
மொழிகின்ருர் மீளு கின்ருர் முனிவரு மிமையோர் தாமும்.

முனிவரும் இமையோர் தாமும்—ஆண்டுள்ள முனிவர்களுந் தேவர்களும், எழுகின்ற ஓசை கேளா—வெற்றிக் கொம்பினின்றும் எழுகின்ற ஓசையைக் கேட்டு, இடி உண்ட அரவின் சோரா—இடியேறுண்ட சர்ப்பம்போலச் சோர்ந்து, விழுகின்ருர்—விழுகின்ருர்கள்; பதைக்கின்ருர்—நடுநடுங்குகின்ருர் கள்; வாய் வெருவுகின்ருர்கள்—வாய் புலம்புகின்ருர்கள்; ஏங்கி அழுகின்ருர்—ஏக்கங்கொண்டு அழுகின்ருர்கள்; ஓடுகின்ருர்—ஓடுகின்ருர்கள்; வேள்வி அழிந்ததோ என்று மொழிகின்ருர்—யாகம் அழிந்துபட்டதோ என்று பேசுகின்ருர்கள்; மீளுகின்ருர்—சென்று மீளுகின்ருர்கள். (9)

வானவர் பிறரிவ் வாறு வருந்தின ரென்னி னங்க
ணேனையர் பட்ட தன்மை யியம்பரி தெவர்க்கு மென்ரு
ஞனது புகல வற்ருே நளிர்புனல் வறந்த காலத்
தானதோ ருருமே றுற்ற வசுணமாத் தன்மை பெற்ருர்.

வானவர் பிறர் இவ்வாறு வருந்தினர் என்னின்—வானவர்களும் முனிவர்களும் இவ்வாறு வருந்தினராயின், அங்கண் ஏனையர் பட்ட தன்மை இயம்பு அரிது எவர்க்கும் என்ருல்—அவ்விடத்தில் ஏனையோர் அடைந்த தன்மை எவராலும் உரைத்தற்கரிதானுல், அது நான் புகலவற்ருே—அது நான் கூறக்கூடியதாமோ; நளிர் புனல் வறந்த காலத்து ஆனதோர் உருமேறு உற்ற அசுணமா தன்மை பெற்ருர்—தண்ணீர் வறந்த கோடை காலத்தில் உண்டானதோர் இடியேற்றைக் கேட்ட அசுணமாவின் தன்மையை அவர்கள் அடைந்தார்கள்.

அசுணமா, அபசுரங் கேட்டவழி உயிர்வாழாததொரு மிருகம்; பறவை என்பாரும் உளர். (10)

வேலையங் கதனின் மேலாம் வீரருள் வீர னேகி
மாலயன் ருனு முட்க மகத்தின்முன் னடைத லோடுஞ்
சீலம தகன்ற கொள்கைச் சிறுவிதி யவற்கண் டேங்கிச்
சாலவு நடுக்குற் றுள்ளந் தளர்ந்தனன் றலைமை நீங்கி.

அங்கு வேலை அதனில்—அங்கு அப்பொழுது, மால் அயன் தானும் உட்க—பிரம விஷ்ணுக்களும் மனம் உட்க, மேலாம் வீரருள் வீரன் ஏகி மகத்தின் முன் அடைதலோடும்—மேன்மைபொருந்திய வீரருள் வீரரான வீரபத்திரர் யாகசாலையுட் சென்று யாகத்தின் எதிரில் அடைதலும், சீலமது அகன்ற கொள்கைச் சிறுவிதி—வேத ஒழுக்கமற்ற மூடக் கொள்கையையுடைய தக்கன், அவற் கண்டு ஏங்கி—அவ்வீரபத்திரரைக் கண்டு ஏக்கமுற்று, சாலவும் நடுக்குற்று—மிக நடுங்கி, தலைமை நீங்கி—அதிகாரம் போய், உள்ளம் தளர்ந்தனன்—மனந் தளர்ந்தான். *(11)*

சாரதர் வளைந்த வாறுஞ் சாலைய துடையு மாறு
மாருமங் குற்ற வானோ ரயர்வுறு மாறு நோக்கிப்
பேரஞ ருழந்து தேறிப் பெருந்திற லாளன் போல
வீரபத் திரனை நோக்கி விளம்பின னினைய தொன்றே.

சாரதர் வளைந்த ஆறும்—பூதர்கள் யாகசாலையைச் சூழ்ந்த தன்மையையும், சாலையது உடையும் ஆறும்—யாகசாலை அழியுந் தன்மையையும், அங்கு உற்ற வானோர் ஆரும் அயர்வு உறும் ஆறும்—அங்கேயிருந்த தேவரனைவரும் அயர்ச்சியுறுந் தன்மையையும், நோக்கி—தக்கன் பார்த்து, பேரஞர் உழந்து—பெருந் துன்பத்தில் முழுகி, தேறி—பின் ஒருவாறு தெளிந்து, பெரும் திறலாளன் போல—பெரிய திறல்படைத்த வீரனைப்போல, வீரபத்திரனை நோக்கி இனையது ஒன்று விளம்பினன்—வீரபத்திரரை நோக்கி இஃதொன்று சொன்னான். *(12)*

இங்குவந் தடைந்த தென்கொல் யாரைநீ யென்ன லோடுஞ்
சங்கரன் றனது சேயான் றக்கநின் வேள்வி தன்னி
னங்கவற் குதவும் பாக மருளுதி யதற்கா வந்தப்
புங்கவ னருளி னாலே போந்தன னீண்டை யென்றான்.

நீ யார் இங்கு வந்து அடைந்தது என் கொல் என்னலோடும்—நீ யாவன் இங்கே வந்தது என்னை என்று வினவுதலும், தக்க யான் சங்கரன் தனது சேய்—தக்கனே யான் சிவகுமாரன்; நின் வேள்வி தன்னில் அங்கவற்கு உதவும் பாகம் அருளுதி—உனது யாகத்தில் அப் பெருமானுக்குக் கொடுக்கும் அவிப் பாகத்தைக் கொடுக்கக் கடவை; அதற்கா அந்தப் புங்கவன் அருளினாலே ஈண்டு போந்தனன் என்றான்—அதன் பொருட்டு அவ்வுயர்ந்தோரான சிவ பெருமானது கட்டளையினாலே ஈண்டுப் போந்தேன் என்று அருளிச்செய்தார். *(13)*

இத்திறம் வீரன் கூற விருந்தவத் தக்க னுங்க
ளத்தனுக் குலகம் வேள்வி யதனிடை யவியின் பாக
முய்த்திடா தென்ன வங்க ணுறைதரு மறைக ணுன்குஞ்
சுத்தமார் குடிலை தானுந் துண்ணென வெழுந்து சொல்லும்.

இதிறம் வீரன் கூற—இவ்வாறு வீரபத்திர உருத்திரர் திருவாய்மலர்ந் தருள, இருந்த அ தக்கன்—மதியிலியாய் ஆங்கேயிருந்த தக்கன், உங்கள் அத்தனுக்கு வேள்வி அதனிடை அவியின் பாகம் உலகம் உய்த்திடாது—உங்கள் சிவபெருமானுக்கு வேள்விக்கண் அவிப்பாகத்தை உலகம் இனிக் கொடாது; என்ன—என்று கூற, அங்கண் உறைதரும் மறைகள் நான்கும் சுத்தம் ஆர் குடிலை தானும் துண்ணென எழுந்து சொல்லும்—உடனே அவ் விடத்தில் உறைகின்ற நான்கு வேதங்களும் சுத்தம் நிரம்பிய குடிலை எனப் படும் பிரணவமும் விரைந்தெழுந்து கூறுநிற்கும். (14)

ஈறிலா வுயிர்கட் கெல்லா மிறையவ னொருதா னாகு
மாறிலா வரனே யல்லான் மகத்தினுக் கிறையா யுள்ளோன்
வேறொர்வா னவனு முண்டோ வேள்வியி லவற்கு நல்குங்
கூறுநீ பாணி யாது கொடுத்தியா லென்ற வன்றே.

ஈறு இலா உயிர்கட்கு எல்லாம் இறையவன்—அழிவில்லாத ஆன்மாக்களுக் கெல்லாம் பரமபதியாகிய, ஒருதான் ஆகும்—ஒரு தனி முதல்வராகும், மாறு இலா அரனே அல்லால்—ஒப்பில்லாத சிவபெருமானே யல்லாமல், மகத் தினுக்கு இறையாய் உள்ளோன் வேறு ஒர் வானவனும் உண்டோ—யாகத்துக் கதிபதியாயினர் வேறொரு கடவுளும் உண்டோ; அவற்கு வேள்வியில் நல்கும் கூறு—ஆகையினலே அச் சிவபெருமானுக்கு வேள்வியிற் கொடுக்கும் பாகத்தை, பாணியாது நீ கொடுத்தி என்ற—காலந் தாழாது தக்கனே நீ கொடுத்தி என்று அவைகள் செவியறிவுறுத்தின. (15)

தேற்றமில் சிதட னாகுஞ் சிறுவிதி கேட்ப வின்ன
கூற்றினன் மறைக ணான்குங் குடிலையு மொருங்கு கூடிச்
சாற்றலு மன்னா னல்காத் தலைமைகண் டிறைவன் றொல்சீர்
போற்றியங் ககன்று தத்தம் புகலிடம் போய வன்றே.

தேற்றம் இல் சிதடன் ஆகும் சிறுவிதி கேட்ப—அறிவுத் தெளிவில்லாத மூடனாகுந் தக்கன் கேட்கும்வண்ணம், இன்ன கூற்றினால்—மேற்சொன்ன வார்த்தைகளால், மறைகள் நான்கும் குடிலையும் ஒருங்கு கூடிச் சாற்றலும்—நான்கு வேதங்களும் பிரணவமும் ஒருங்கு சேர்ந்து செப்புதல் செய்தும், அன்னான் நல்கா தலைமை கண்டு—அம்மூடன் இணங்கி வாராத அகந்தையைக் கண்டு, இறைவன் தொல்சீர் போற்றி—கண்டதன் தீர்திறமாகச் சிவபுராண மாகிய கீர்த்திகளை எடுத்துத் துதித்து, அங்கு அகன்று—அவ்விடத்தினின்றும் நீங்கி, தத்தம் புகலிடம் போய—தத்தம் புகலிடங்களுக்குப் போயின. (16)

போதலுந் தக்கன் றன்னைப் பொலங்கழல் வீரன் பாரா
வேதமும் பிறவுங் கூறும் விழுப்பொருள் கேட்டி யன்றே
யீதியெம் பெருமாற் குள்ள வின்னவி யெனலுங் கானிற்
பேதையொ டாடல் செய்யும் பித்தனுக் கீயே னென்றான்.

போதலும்—வேதங்களும் பிரணவமும் அகன்று சென்றபோது, தக்கன் தன்னை பொலம் கழல் வீரன் பாரா—தக்கனைப் பொற்கழலையணிந்த வீர பத்திரக் கடவுள் பார்த்து, வேதமும் பிறவும் கூறும் விழுப்பொருள் கேட்டி அன்றே—வேதங்களும் ஏனையவும் புகழ்ந்து பேசுகின்ற விழுப்பம் மிக்க மெய்ப் பொருளைக் கேட்டாயன்றே; எம் பெருமாற்கு உள்ள இன் அவி ஈதி எனலும்—எம்பெருமானுக்கு உரியதாயுள்ள இனிய அவிப்பாகத்தைக் கொடுத்தி என்று கூறியருளுதலும், கானில் பேதையொடு ஆடல் செய்யும் பித்தனுக்கு ஈயேன் என்றான்—சுடுகாட்டிற் பேதையாகிய பித்தி ஒருத்தியுடன் கூத்தாடுகின்ற பித் தனுக்குக் கொடேன் என்றான். *(17)*

ஆங்கது கேளா வண்ண லம்புய ஞதி யாகிப்
பாங்குற விரவும் வானோர் பல்குழு வதனை நோக்கி
நீங்களு மிவன்பா லானீர் நிமலனுக் கவிநல் காம
லீங்கிவ னிகழுந் தன்மை யிசைவுகொ லுமக்கு மென்றான்.

ஆங்கு அது கேளா—அங்கே அதனைக் கேட்டு, அண்ணல்—வீரபத்திரப் பெருமான், அம்புயன் ஆதியாகி பாங்கு உற விரவும் வானோர் பல்குழு அதனை நோக்கி—பிரமா முதலியவர்களாய்த் தக்கன் பக்கத்தில் மிக்கிருக்கும் பல வாகிய தேவர் கூட்டங்களைப் பார்த்து, நீங்களும்—சிவபரத்துவம் உணர்ந்த நீங்களும், இவன்பாலானீர்—இவனுக்குச் சார்பினீர் ஆயினீர்; ஈங்கு இவன் நிமலனுக்கு அவி நல்காமல் இகழும் தன்மை உமக்கும் இசைவுகொல் என்றான்—இங்கே இவன் சிவபெருமானுக்கு அவியைக் கொடாமல் இகழுகின்ற இயல்பு உங்களுக்கும் உடன்பாடு போலும் என்று அருளிச் செய்தார். *(18)*

என்றலு மனையர் தொல்லூ ழிசைவினு லதுகே ளார்போ
லொன்றுமங் குரையா ராகி யூமரி னிருத்த லோடு
நின்றதோர் வீரன் வல்லே நெருப்பெழ விழித்துச் சீறி
நன் றிவர் வன்மை யென்னு நகையெயி றிலங்க நக்கான்.

என்றலும்—என்று வினவியருளுதலும், தொல் ஊழ் இசைவினால்—பழைய ஊழ்வினைத் தொடர்பால், அனையர்—அவர்கள், அது கேளார்போல்—அப் பெரு மான் கூறியருளியதைக் கேட்டுங் கேளாதவர்கள் போல, அங்கு ஒன்றும் உரையாராகி—அங்கே ஒரு சொல்லுஞ் சொல்லாதவராய், ஊமரின் இருத்த லோடும்—ஊமர்களைப் போல மௌனிகளாயிருத்தலும், நின்றது ஓர் வீரன்—அவர்கள் போக்கை உற்று நோக்கி நின்றருளிய ஒப்பற்ற வீரபத்திரக் கடவுள், வல்லே நெருப்பு எழ விழித்துச் சீறி—விரைந்து நெருப்பெழப் பார்த் துச்சினந்து, இவர் வன்மை நன்று என்னு—இவர்களுடைய திண்மை நன்று என்று, நகை எயிறு இலங்க நக்கான்—ஒளிபொருந்திய பற்கள் வெளிப்படச் சிரித்தருளினார்.

ஊழ் இசைவு, 'மூவுலகந் தன்னில் வந்திடும் உயிர் செய்த வல்வினை'த் தொடர்பு போலும். பாவஞ் செய்கின்றவர்களிலும் பாவஞ் செய்கின்றவர் களை மதிக்கின்றவர்கள் மாபாவிகள் ஆதல் பற்றி நக்கார் என்க. *(19)*

கடித்தன னெயிறு செந்தீக் கான்றனன் கனன்று கையிற்
பிடித்திடு மேரு வன்ன பெருந்திறற் கதைய தொன்றாற்
றடித்திடு மகல மார்பத் தடவரை யகடு சாய
வடித்தனன் றக்க னுள்ளம் வெருவர வரிமுன் வீழ்ந்தான்.

எயிறு கடித்தனன்—பற்களைக் கடித்து, செந்தீ கான்றனன்—சிவந்த அக்கினியை உமிழ்ந்து, கனன்று—அழன்று, கையில் பிடித்திடும் மேரு அன்ன பெரும் திறல் கதையது ஒன்றால்—கையின்கண்ணே பிடித்திருக்கின்ற மேரு மலையை ஒத்த வலியதொரு கதாயுதத்தினால், முன்—முதற்கண், அரி—விஷ்ணு மூர்த்தியினது, தடித்திடும் அகல மார்பத் தட வரை அகடு சாய—பூரிக்கின்ற அகன்ற மார்பாகிய விசாலித்த மலை வயிறு கிழிய, தக்கன் உள்ளம் வெருவர—தக்கன் உள்ளத்தில் அச்சம் உண்டாக, அடித்தனன்—அடித்தருளினார்; வீழ்ந்தான்—அதனால் விஷ்ணு வீழ்ந்து மயங்கினார்.

அரி, மார்பாற் சிறந்தமையின் மார்பம் அரியின் மார்பம் என்க. அதற்குப் பூரிப்பு, மகத்துக்கு அரி ஈசனாயினமை பற்றி எய்தியதென்க. தக்கனது மார்பிலடிக்க அவன் அரி எதிரில் வீழ்ந்தான் என்றுரைப்பது, 'மாய வன்... அயர்வுயிர்த்து அவண் எழுந்தனன்' எனப் பின்வரும் நிகழ்ச்சியோடும் முதனூலோடும் முரணுமாறறிக. (20)

விட்டுமுன் வீழ்த லோடும் வீரருள் வீரத் தண்ணன்
மட்டுறு கமலப் போதில் வான்பெருந் தவிசில் வைகுஞ்
சிட்டனை நோக்கி யன்னான் சிரத்திடை யுருமுற் றென்னக்
குட்டினன் ஒருதன் கையான் மேல்வருங் குமர னேபோல்.

முன் விட்டு வீழ்தலும்—முதற்கண் மகேசருக்கிருந்த விஷ்ணு அடியுண்டு வீழ்ந்தயர்தலும், வீரருள் வீரத்து அண்ணல்—வீரருள் வீரராகிய வீரபத்திரக் கடவுள், மட்டு உறு கமலப்போதில் வான் பெரும் தவிசில் வைகும் சிட்டனை நோக்கி—அதன்பின் தேன் பொருந்திய தாமரைமலராகிய உயர்பெருந் தவிசில் வீற்றிருக்கும் பிரமதேவரை நோக்கி, அன்னான் சிரத்திடை உரும் உற்று என்ன—அவருடைய தலையில் இடி விழுந்தாற்போல, மேல் வரும் குமரனே போல் ஒரு தன் கையால் குட்டினன்—இனித் திருவவதாரஞ் செய்யுங் குமரக் கடவுள் குட்டுவதுபோல ஒப்பற்ற தமது திருக்கையாற் குட்டியருளினார்.

விண்டு, விட்டு என நின்றது. இம் மகத்தில் மகேசராயிருக்க உடன்பட்டமையால், விண்டுவே முதற்கண் தண்டனையுறுதற்குரியாரென்க. சிட்டன்—நல்லோன். இங்கே விட்டுணுவிலும் பிரமா சிட்டராயிருந்தாரென்க. அந்தணராதலின் சிட்டன் என்றார் எனலுமாம். அதனாலே ஆயுதத்தினாலே தண்டித்தாரில்லைப் போலும். (21)

தாக்குத லோடு மையன் சரணிடைப் பணிவான் போல
மேக்குறு சென்னி சோர விரிஞ்சனும் வீழ வன்னான்
வாக்குறு தேவி தன்னை மற்றவர் தம்மை வாளான்
மூக்கொடு குயமுங் கொய்தா னிறுதிநாண் முதல்வன் போல்வான்.

ஐயன் தாக்குதலோடும்—வீரபத்திரக்கடவுள் குட்டியருள, சரணிடை பணிவான் போல—அக் கடவுளுடைய பாதங்களில் வணங்குபவரைப் போல, மேக்கு உறு சென்னி சோர—நிமிர்ந்த உச்சிச் சிரசானது சோர, விரிஞ்சனும் வீழ—பிரமதேவரும் வீழ்ந்தயர, அன்னுன் வாக்கு உறு தேவிதன்னை மற்றவர் தம்மை—அப் பிரமதேவருடைய வாக்கிலிருந்த சரஸ்வதிதேவியையும் மற்றைய மனைவியர்களையும், இறுதிநாள் முதல்வன் போல்வான்—ஊழிக்கால முதல்வ ராகிய சங்கார உருத்திரரையொத்த அவ் வீரபத்திரர், மூக்கொடு குயமும் வாளால் கொய்தான்—மூக்கையுந் தனத்தையுந் தமது வாட்படையாற் கொய்தருளினுர். (22)

ஏடுலாந் தொடையல் வீர னித்திற மிவரை முன்னஞ்
சாடினு னதுகண் டங்கட் சார்தரு மிமையோர் யாரு
மோடினு ருலந்தார் வீழ்ந்தா ரொளித்திடற் கிடமே தென்று
தேடினு ரொருவ ரின்றிச் சிதறினுர் கதறு கின்ருர்.

ஏடு உலாம் தொடையல் வீரன்—பூவிதழ் பொருந்திய மாலையை அணிந்தவராகிய வீரபத்திரக்கடவுள், இதிறம் இவரை முன்னம் சாடினன்—இவ்வண்ணம் விஷ்ணு பிரமா முதலிய இம் முதன்மைத் தேவர்களை முதற்கண் தண்டித்தருளினுர்; அது கண்டு அங்கண் சார்தரும் இமையோர் யாரும்—அதனைக் கண்டு அவ்விடத்திலிருக்குந் தேவர்கள் யாவரும், ஓடினுர்—ஓடி, உலந்தார்—உலந்து, வீழ்ந்தார்—விழுந்து, ஒளித்திடற்கு இடம் ஏது என்று தேடினுர்—ஒளித்தற்கு இடம் யாது என்று தேடி, ஒருவர் இன்றி சிதறினுர்—ஒருவரும் யாகசாலையிலின்றிச் சிதறி, கதறுகின்ருர்—கதறியழுகின்ருர்கள்.

உலத்தல் ஈண்டு ஒட்டங் குறைதல். (23)

வேறு

இன்னதோர் காலையி லிரிந்து போவதோர்
மெய்ந்நிறை மதியினை வீரன் காணுருத்
தன்னெரு பதங்கொடே தள்ளி மெல்லெனச்
சின்னம துறவுட றேய்த்திட் டானரோ.

இன்னதோர் காலையில்—இவ்வாருகியதொரு சமயத்தில், இரிந்து போவது ஓர் மெய்ந்நிறை மதியினை வீரன் காணுரு—விலகி ஓடுகின்றதொரு மெய் யானது கலைகள் நிறையப்பெற்ற பூரண சந்திரனை வீரபத்திரக்கடவுள் கண்டு, தன் ஒரு பதம் கொடு மெல்லென தள்ளி—தமது ஒரு திருவடியினுல் மெல் லென்று உதைத்து, உடல் சின்னம் உற தேய்த்திட்டான்—உடல் சின்னம் உறும்படி தேய்த்தருளினுர். (24)

அடித்தலங் கொடுமதி யதனைத் தேய்த்தபின்
விடுத்தனன் கதிரவன் வெருவி யோடலு
மிடித்தெனக் கவுளிடை யெற்றி னுனவ
ணுடுத்திர ளுதிர்ந்தென வுகுப்பத் தந்தமே.

அடித்தலங் கொடு மதி அதனை தேய்த்தபின்—திருவடியினலே சந்திரனைத் தேய்த்தருளியபின்பு, விடுத்தனன்—சந்திரனை அந்த அளவில் விடுத்து, கதிரவன் வெருவி ஓடலும்—சூரியன் பயந்து ஓடுதலும், தந்தம் உடுத்திரள் உதிர்ந்தென அவண் உகுப்ப—அந்தச் சூரியனுடைய பற்கள் நட்சத்திரங்கள் உதிர்ந்தாற் போல அவ்விடத்தில் உதிரும்வண்ணம், இடித்தென கவுளிடை எற்றினன்—இடி இடித்தாற் போலக் கன்னத்தில் அடித்தருளினர். (25)

எறித்தரு கதிரவ னெயிறு பார்மிசைத்
தெறித்திட வுயிரொரீஇச் சிதைந்து வீழ்தலும்
வெறித்தரு பகனெனும் வெய்ய வன்விழி
பறித்தனன் றகுவதோர் பரிசு நல்குவான்.

தகுவது ஓர் பரிசு நல்குவான்—அவ்வவர்க்குத் தக்க தண்டமாகிய பரிசை அருள்பவராகிய வீரபத்திரக் கடவுள், எறிதரு கதிரவன் பார்மிசை எயிறு தெறித்திட—எறித்தலைச் செய்கின்ற கிரணங்களையுடைய சூரியன் பூமியிற் பற்கள் உதிர, உயிர் ஒரீஇச் சிதைந்து வீழ்தலும்—உயிர் நீங்கிச் சிதைந்து விழுதலும், வெறி தரு பகன் எனும் வெய்யவன் விழி பறித்தனன்—அஞ்சுகின்ற பகன் என்னும் மற்றொரு சூரியனின் கண்களைப் பறித்தருளினர்.

வெறித்தல் வெருளுதலுமாம். (26)

தொட்டலும் பகன்விழித் துணையை யித்திறம்
பட்டது தெரிந்துயிர் பலவும் பைப்பைய
வட்டிடு கூற்றுவ னலமந் தோடலும்
வெட்டின னவன்றலை வீர வீரனே.

பகன் விழி துணையை தொட்டலும்—பகனென்னுஞ் சூரியனுடைய இரண்டு கண்களையுந் தோண்டிப் பறித்தலும், இ திறம் பட்டது தெரிந்து—இவ்வாறு நடந்ததை அறிந்து, உயிர் பலவும் பைப்பைய அட்டிடு கூற்றுவன்—பலவாகிய உயிர்களையும் மெல்ல மெல்ல அடுகின்ற யமன், அலமந்து ஓடலும்—புத்தி சுழன்று ஓடுதலும், வீரவீரன் அவன் தலை வெட்டினன்—வீரருள் வீரராகிய வீரபத்திரக்கடவுள் அந்த யமனுடைய தலையை வெட்டியருளினர். (27)

மடிந்தனன் கூற்றுவ னுக வாசவ
னுடைந்தனன் குயிலென வுருக்கொண் டும்பரி
லடைந்தன னதுபொழு தண்ணல் கண்ணுறீஇத்
தடிந்தனன் வீட்டினன் றடக்கை வாளினல்.

கூற்றுவன் மடிந்தனன் ஆக—இயமன் இறந்தானாக; வாசவன் உடைந்த னன்—இந்திரன் மனம் உடைந்து, குயில் என உருக்கொண்டு உம்பரில் அடைந் தனன்—குயில்போல் உருவங்கொண்டு ஆகாயத்திற் பறந்தான்; அது பொழுது அண்ணல் கண்ணுறீஇ—அப்பொழுது வீரபத்திரக் கடவுள் அதனைக் கண்டு, தடக்கை வாளினால் தடிந்தனன் வீட்டினன்—பெரிய கையிலிருந்த வாளினால் வெட்டிக் கொன்றருளினார். (28)

அண்டர்கோன் வீழ்தலு மலமந் தோடிய
திண்டிற லங்கியைத் திறல்கொள் சேவகன்
கண்டன னங்கவன் கரத்தை யொல்லையிற்
றுண்டமதாகவே துணித்து வீட்டினான்.

அண்டர்கோன் வீழ்தலும்—தேவேந்திரன் இறந்து வீழுதலும், அலமந்து ஓடிய திண் திறல் அங்கியை—சுழன்றோடிய தண்ணிய திறலினையுடைய அக் கினியை, திறல் கொள் சேவகன் கண்டனன்—வெற்றி வீரரான வீரபத்திரக் கடவுள் கண்டு, அங்கு அவன் கரத்தை ஒல்லையில் துண்டமதாக துணித்து வீட்டினான்—அவ்வக்கினியின் கையை விரைவிலே துண்டுபட வெட்டி எறிந் தருளினார். (29)

கறுத்திடு மிடறுடைக் கடவுட் டேவனை
மறுத்தவ னல்கிய வரம்பி லுண்டியும்
வெறுத்திலை யுண்டியா லென்று வீரனு
மறுத்தன னெழுதிறத் தழலி னாக்களே.

கறுத்திடு மிடறு உடை கடவுள் தேவனை மறுத்தவன் நல்கிய—நீல கண்டத்தினையுடைய தேவ தேவரான சிவபெருமானைத் தூஷித்தவனான தக்கன் தந்த, வரம்பில் உண்டியும் வெறுத்திலை உண்டி என்று—அளவற்ற உண்டிகள் யாவும் மறாமல் உண்டனை என்று கூறி, எழு திறத்து அழலின் நாக்களும் வீரன் அறுத்தனன்—அக்கினிதேவனின் ஏழு திறத்தனவாகிய நாக்குக்களையும் வீரபத்திரக்கடவுள் அறுத்தருளினார், (30)

துள்ளிய நாவொடுந் துணிந்த கையொடுந்
தள்ளுற வீழ்ந்திடுந் தழலின் றேவியை
வள்ளுகி ரைக்கொடு வலங்கொ ணாசியைக்
கிள்ளினன் வாகையாற் கிளர்பொற் றோளினான்.

துள்ளிய நாவொடும்—துடிக்கின்ற நாக்குக்களோடும், துணிந்த கை யொடும்—துணிக்கப்பட்ட கைகளோடும், தள்ளுற வீழ்ந்திடும் தழலின்

தேவியை—தள்ளாடுதல் பொருந்த விழுகின்ற அக்கினியின் மனைவியாகிய சுவாகா தேவியினது, வலம் கொள் நாசியை—மேலுயர்ந்த மூக்கை, வாகையால் கிளர் பொன் தோளினன் வள் உகிரை கொடு கிள்ளினன்—வெற்றியாற் பூரிக்கின்ற அழகிய புயங்களையுடைய வீரபத்திரக்கடவுள் கூரிய நகத்தினாற் கிள்ளியருளினார். (31)

அரிதுணைக் கின்னதோ ராணை செய்திடு
மொருதனித் திறலினு னும்பர் மேலெழு
நிருதியைக் கண்டன னிற்றி யாலெனப்
பொருதிறற் றண்டினாற் புடைத்திட் டானரோ.

அரி துணைக்கு இன்னதோர் ஆணை செய்திடும் ஒரு தனி திறலினன்—அக்கினியின் தேவிக்கு இத்தகைய தண்டத்தைச் செய்தருளாநின்ற ஒரு தனி வீரராகிய வீரபத்திரக் கடவுள், உம்பர் மேல் எழு நிருதியை கண்டனன்—ஆகாயத்தின்மீது எழுந்து செல்லுகின்ற நிருதியைக் கண்டு, நிற்றி என—நில் என்று தடுத்து, பொரு திறல் தண்டினால் புடைத்திட்டான்—பொருகின்ற வலிய தண்டத்தால் அடித்தருளினார். (32)

வீட்டின னிருதியை வீரன் றன்பெருந்
தாட்டுணை வீழ்தலுந் தடித லோம்பினு
னோட்டினன் போதிரென் றுரைத்துச் சென்னெறி
காட்டின னுருத்திர கணத்தர்க் கென்பவே.

வீரன் நிருதியை வீட்டினன்—வீரபத்திரக்கடவுள் நிருதியை அழித்தருளி, உருத்திர கணத்தர்க்கு—உருத்திர கணத்தவர்களுக்கு, தன் பெரும் தாள் துணை வீழ்தலும் தடிதல் ஓம்பினன்—அவ்வுருத்திரர்கள் தமது திருவடிகளில் வீழ்ந்து வணங்குதலும் அவர்களைக் கொல்லுதலை ஒழித்து, போதிர் என்று உரைத்து செல் நெறி காட்டினன் ஓட்டினன்—போங்கள் என்று கூறிப் போகும் வழியையுங் காட்டி ஓடும்படி செய்தருளினார். (33)

ஒழுக்குட னுருத்திர ரொருங்கு போதலு
மெழுக்கொடு வருணனை யெற்றிச் செங்கையின்
மழுக்கொடு காலினை மாய்த்து முத்தலைக்
கழுக்கொடு தனதனைக் கடவுள் காதினன்.

உருத்திரர் ஒழுக்குடன் ஒருங்கு போதலும்—உருத்திர கணத்தவர்கள் வரிசையாக ஒருங்கு செல்லுதலும், கடவுள்—வீரபத்திரக்கடவுள், வருணனை எழு கொடு எற்றி—வருணனை எழுவாயுதத்தால் தாக்கி, காலினை செங்கையின்

மழு கொடு மாய்த்து—வாயுதேவனைச் சிவந்த கையிலுள்ள மழுவாயுதத்தாற் கொன்று, தனதனை முத்தலை கழு கொடு காதினன்—குபேரனை மூன்று தலைகளை யுடைய சூலத்தினாற் கொன்றருளினர். (34)

எட்டெனுந் திசையினோ னேங்கி வெள்கியே
யட்டிடுங் கொல்லென வஞ்சிப் போற்றலுங்
கிட்டினன் வைதனன் கேடு செய்திலன்
விட்டன னுருத்திரர் மேவுந் தொன்னெறி.

எட்டு எனும் திசையினோன்—எட்டாவது திக்குப்பாலகரான ஈசானர், ஏங்கி வெள்கி—ஏங்கி நாணி, அட்டிடும் கொல் என அஞ்சி—தம்மையுங் கொல்லுவாரோ என்று பயந்து, போற்றலும்—துதிசெய்து நிற்றலும், கிட்டினன் வைதனன் கேடு செய்திலன்—அணுகி வைது ஒருகேடும் விளையாமல், உருத்திரர் மேவும் தொல் நெறி விட்டனன்—முன் உருத்திரர் செல்லாநின்ற பழைய வழியைக் காட்டி அவ்வழியிற் செல்ல விடுத்தருளினர். (35)

தாணுவி னுருக்கொடு தருக்கு பேரினா
ணொடு போதலு நடுந டுங்கியே
சோணித புரத்திறை துண்ணென் றோடுழி
வேணுவி னவன்றலை வீரன் வீட்டினன்.

தாணுவின் உரு கொடு தருக்கு பேரினன்—தாணுவாகிய சிவபெருமானுடைய உருவத்தைப் பெற்றுத் தருக்குகின்ற சிவ நாமத்தையும் பொருந்திய ஈசானர், நாணொடு போதலும்—வெட்கத்தோடு உருத்திரர் சென்ற வழியிற் செல்லுதலும், சோணித புரத்து இறை நடுநடுங்கி துண்ணென்று ஓடுழி—சோணிதபுரத்தரசனாகிய அசுரேந்திரன் நடுநடுங்கி அஞ்சி ஓடுஞ் சமயத்தில், வீரன் அவன் தலை வேணுவின் வீட்டினன்—வீரபத்திரக்கடவுள் அவனுடைய தலையை வாளினால் வெட்டியருளினர். (36)

மணனயர் சாலையின் மகத்தின் றெய்வதம்
பிணையென வெருக்கொடு பெயர்ந்து போதலுங்
குணமிகு வரிசிலை குனித்து வீரனோர்
கணைதொடுத் தவன்றலை களத்தில் வீட்டினன்.

மணன் அயர் சாலையின் மகத்தின் தெய்வதம்—யாகச் சடங்கு நடக்கின்ற யாகசாலைக்கண்ணுள்ள யாகத்தின் அதிதேவதை, பிணை என வெருக்கொடு பெயர்ந்து போதலும்—பிணைமானுருவமாக அச்சங்கொண்டு பெயர்ந்தோடுதலும், வீரன்—வீரபத்திரக்கடவுள், குணம் மிகு வரிசிலை குனித்து ஓர் கணை

தொடுத்து—நாண் வலிமிகுகின்ற வரிந்த வில்லை வளைத்து ஓரம்பு தொடுத்து, அவன் தலை களத்தில் வீட்டினுன்—அவன் தலையை அவ்வியாக களத்திற்றுனே அழித்தருளினுர். (37)

இரிந்திடு கின்றதோ ரெச்ச னென்பவன்
சிரந்துணி படுதலுஞ் செய்கை யிவ்வெலா
மரந்தையொ டேதெரிந் தயன்றன் காதலன்
விரைந்தவ ணெழுந்தனன் வெருக்கொள் சிந்தையான்.

இரிந்திடுகின்றதோர் எச்சன் என்பவன் சிரம் துணிபடுதலும்—அஞ்சி யோடுகின்றதொரு யாக அதிதேவதையினுடைய தலை வெட்டுண்ணுதலும், இவ் செய்கை எலாம்—இவைகள் செயல்கள் அனைத்தையும், அயன் தன் காதலன் வெரு கொள் சிந்தையான் அரந்தையொடு தெரிந்து—பிரமபுத்திர ஞன தக்கன் அச்சம் பொருந்திய மனத்தையுடையவனுய்த் துன்பத்தோ டுணர்ந்து, அவண் விரைந்து எழுந்தனன்—அவ்விடத்தில் விரைந்தெழுந்தான். (38)

விட்டனன் றிண்மையை வெய்ய தோர்வலைப்
பட்டதொர் பிணையெனப் பதைக்குஞ் சிந்தையான்
மட்டிட வரியவிம் மகமு மென்முனங்
கெட்டிடு மோவெனு விவைகி ளத்தினுன்.

திண்மையை விட்டனன்—தன் மனத் திண்மையை விடுத்து, வெய்யது ஓர் வலைப்பட்டது ஓர் பிணை என பதைக்கும் சிந்தையான்—கொடியதொரு வலையுளகப்பட்டதொரு மான்பிணைபோலப் பதைக்கும் மனத்தையுடைய வனுய், மட்டிட அரிய இ மகமும்—அளவிடுதற்கரிய இந்த யாகமும், என் முனம் கெட்டிடுமோ என—என் முன்னிலையிற்றுனே கெட்டழியுமோ என்று, இவை கிளத்தினுன்—இவற்றைத் தன் மனத்தொடு கிளத்தினுன். (39)

ஊறக னுன்முகத் தொருவன் வாய்மையாற்
கூறிய வுணர்வினைக் குறித்து நோற்றியா
ஞறணி செஞ்சடை யமலன் றந்திட
வீறகல் வளம்பல வெய்தி னேனரோ.

ஊறு அகல் நான்முகத்து ஒருவன்—குற்றமில்லாத என் பிதாவாகிய பிரமதேவர், வாய்மையால் கூறிய உணர்வினைக் குறித்து—சத்திய வார்த் தைகளால் உபதேசித்த உணர்வைக் கருத்துட் கொண்டு, யான் நோற்று— யான் தவஞ்செய்து, ஆறு அணி செஞ்சடை அமலன் தந்திட—கங்கையை அணிந்த சிவந்த சடையையுடைய சிவபெருமான் தந்தருள, ஈறு அகல் பல வளம் எய்தினேன்—அழிதல் இல்லாத பல வளங்களைப் பெற்றேன். (40)

பெருவள நல்கிய பிரானைச் சிந்தையிற்
கருதுதல் செய்திலன் கசிந்து போற்றிலன்
திருவிடை மயங்கினன் சிவையை நல்கியே
மருகனென் றவனையான் மன்ற வெள்ளினேன்.

பெருவளம் நல்கிய பிரானை சிந்தையில் கருதுதல் செய்திலன்—பெருஞ் செல்வத்தைத் தந்தருளிய பெருமானை மனத்திற் சிந்தித்திலேன்; கசிந்து போற்றிலன்—மனமுருகித் துதித்திலேன்; திரு இடை மயங்கினன்—செல்வத்தில் மயங்கினேன்; சிவையை நல்கி அவனை மருகன் என்று யான் மன்ற எள்ளினேன்—உமையை மணஞ்செய்து கொடுத்து அச்சிவபெருமானை என் மருகன் என்று கருதி யான் பெரிதும் இகழ்ந்தேன். (41)

வேதநூல் விதிமுறை விமலற் கீந்திடு
மாதியா மவிதனை யளிக்கொ ணுதெனத்
தாதையோன் வேள்வியிற் றடுத்தி யானுமிவ்
வேதமா மகந்தனை யியற்றி னேனரோ.

வேதநூல் விதிமுறை விமலற்கு ஈந்திடும் ஆதியாம் அவிதனை—வேத சாத்திர விதிப்பிரகாரஞ் சிவபெருமானுக்கு முதற்கண் கொடுப்பதாகும் அவிப் பாகத்தை, அளிக்கொணுது என—கொடுக்கலாகாது என்று, தாதையோன் வேள்வியில் தடுத்து—தந்தையாகிய பிரமதேவர் செய்த யாகத்திலே தடை செய்து, யானும் இஏதமாம் மகந்தனை இயற்றினேன்—யானும் இந்தக் குற்றமேயாகும் யாகத்தைச் செய்தேன். (42)

தந்தைசொல் லாமெனுந் ததீசி வாய்மையை
நிந்தனை செய்தன னீடு வேள்வியில்
வந்தவென் மகடனை மறுத்துக் கண்ணுதன்
முந்தையை யிகழ்ந்தனன் முடிவ தோர்கிலேன்.

தந்தை சொல் ஆம் எனும்—தந்தையின் சொல்லாம் என்று சொல்லத் தக்க, ததீசி வாய்மையை நிந்தனை செய்தனன்—ததீசி மகா முனிவருடைய ஆப்த வாக்கியங்களையும் நிந்தித்தேன்; நீடு வேள்வியில் வந்த என் மகள் தனை மறுத்து—நிகழ்கின்ற இவ்வியாகத்தின்கண் அழையாமலே வந்த என் புதல்வியையும் மறுத்துப் பேசி, கண் நுதல் முந்தையை முடிவது ஓர்கிலேன் இகழ்ந்தனன்—நெற்றிக்கண்ணையுடைய முதற்பொருளாகிய சிவபெருமானை யும் முடிவைச் சிந்தியேனாய் இகழ்ந்தேன். (43)

அன்றியும் வீரனின் றவியை யீதியா
லென்றலு மவன்றன தெண்ண நோக்கியு
நன்றென வீந்திலன் மறையு நாடிலேன்
பொன்றிட வந்தகொ லினைய புந்தியே.

அன்றியும்—அல்லாமலும், வீரன்—வீரபத்திரக் கடவுள், இன்று அவியை ஈதி என்றலும்—இப்பொழுது அவியைக் கொடுத்தி என்றபோதும், அவன் தனது எண்ணம் நோக்கியும்—அவ் வீரபத்திரரது உள்ளக் குறிப்பை நோக்கி யேனும், நன்றென ஈந்திலன்—மிக நல்லதென்று கொடுத்திலேன்; மறையும் நாடிலேன்—வேத மொழிகளையுங் கேட்டேனல்லேன்; இனைய புந்தி—இவ் வாறுய விபரீத புத்திகள், பொன்றிட வந்த கொல்—நாசம் உண்டாக வந்தன போலும். (44)

அல்லியங் கமலமே லண்ண லாதியாச்
சொல்லிய வானவர் தொகைக்கு நோற்றிட
வல்லபண் ணவர்க்கும்வே தியர்க்கு மற்றவ
ரெல்லவர் தமக்குமோ ரிறுதி தேடினேன்.

அல்லி அம் கமல மேல் அண்ணல் ஆதியா சொல்லிய வானவர் தொகைக்கும்—அகவிதழையுடைய அழகிய கமலாசனரான பிரமா முதலாகச் சொல்லப் பட்ட தேவர்கள் கூட்டத்துக்கும், நோற்றிட வல்ல பண்ணவர்க்கும்—தவஞ் செய்ய வல்ல முனிவர்களுக்கும், வேதியர்க்கும்—பிராமணர்களுக்கும், மற்றவர் எல்லவர் தமக்கும்—ஏனையோரனைவருக்கும், ஓர் இறுதி தேடினேன்—ஒப்பில் லாததோரழிவைச் சம்பாதித்தேன். (45)

துதிதரு மறைப்பொருட் டுணிபு நாடியு
நதிமுடி யமலனை நன்று நிந்தியா
விதுபொழு திறப்பதற் கேது வாயினேன்
விதிவழி புந்தியு மேவு மேகொலாம்.

துதிதரு மறைப்பொருள் துணிபு நாடியும்—துதிக்கப்படுகின்ற வேதங் களின் மெய்ப்பொருட்டுணிபை ஆராய்ந்தறிந்திருந்தும், நதி முடி அமலனை நன்று நிந்தியா—கங்கையைத் தரித்த முடியினையுடைய நின்மலராகிய கடவுளைப் பெரிதும் நிந்தித்து, இதுபொழுது இறப்பதற்கு ஏது ஆயினேன்—இப்பொழுது இறந்துபடுதற்கு ஏதுவாயினேன்; புந்தியும் விதிவழி மேவும் ஆம் கொல்—புத்தியும் விதியின் வழியிலேதான் நடக்கும்போலும். (46)

எனத்தகு பரிசெலா மினைந்து தன்னுடை
மனத்தொடு கூறியே மாளு மெல்லையி
னினைத்தறி வின்மையை நிகழ்த்தி னுவதென்
னினிச்செய லென்னென வெண்ணி நாடினன்.

என தகு பரிசு எலாம்—என்று தகுந்த பண்புகளையெல்லாம், இனைந்து—வருந்தி, தன்னுடை மனத்தொடு கூறி—தன்னுடைய மனத்தோடு கிளத்தி,

மாளும் எல்லையில் அறிவின்மையை நினைத்து நிகழ்த்தின் ஆவது என்—சாகுந் தருணத்தில் முன் செய்துகொண்ட அறியாமையை நினைத்து உரை நிகழ்த்துவதால் வரக்கடவ பயன் என்னை; இனி செயல் என்—இனிச் செய்வது யாது; என எண்ணி நாடினன்—என்று எண்ணிச் சிந்தித்தான். (47)

பாடுறு சாரதர் பரப்பும் வேள்வியி
னூடுறு வீரன துரமுஞ் சீற்றமுஞ்
சாடுறு பத்திரை தகவுங் கண்ணுறீஇ
யோடுவ தரிதென வுன்னி யுன்னிமேல்.

பாடு உறு சாரதர் பரப்பும்—பக்கத்திற் சூழுகின்ற பூதர்களின் பரப்பையும், வேள்வியின் ஊடு உறு வீரனது உரமும்—வேள்விக்கண் உற்ற வீரபத்திரக் கடவுளின் வலிமையையும், சீற்றமும்—அவரது சினத்தையும், சாடு உறு பத்திரை தகவும்—அழித்தலைச் செய்கின்ற பத்திரகாளியின் தகுதிப் பாட்டையும், கண்ணுறீஇ—தக்கன் கண்ணுற்று, ஓடுவது அரிது என உன்னி உன்னி மேல்—யான் தப்பியோடுவது அரிது என்று எண்ணி எண்ணி அதன் மேல். (48)

சென்றதோ ருயிரொடு சிதைந்த தேவர்போற்
பின்றுவ னென்னினும் பிழைப்ப தில்லையால்
வன்றிறல் வீரன்முன் வன்மை யாளர்போ
னின்றிட றுணிபெனத் தக்க னிற்பவே.

ஓர் உயிர் சென்றது ஒடு சிதைந்த தேவர் போல்—ஒப்பற்ற உயிர் போனதோடு உடம்புஞ் சிதைந்த தேவர்களைப்போல, பின்றுவன் என்னினும் பிழைப்பது இல்லை—பின்னிடுவேனாயினும் உயிர் பிழைப்பதில்லை; ஆல்—ஆகையினாலே, வன் திறல் வீரன் முன்—வலிய திறலமைந்த வீரபத்திரக் கடவுளின் எதிரில், வன்மையாளர் போல் நின்றிடல் துணிபு என—வன்மையுடையார்போல எதிரேற்று நிற்றலே துணிபு என்று துணிந்து, தக்கன் நிற்ப—தக்கனானவன் அஞ்சாதவன்போல அச்சத்தால் எதிரில் நிற்ப. (49)

வேறு

கண்டு மற்றது வீரபத் திரனெனுங் கடவுள்
கொண்ட சீற்றமொ டேகியே தக்கனைக் குறுகி
யண்ட ரோடுநீ யீசனை யிகழ்ந்தனை யதனாற்
றண்ட மீதென வாள்கொடே யவன்றலை தடிந்தான்.

வீரபத்திரன் எனும் கடவுள் அது கண்டு—வீரபத்திரக் கடவுள் தக்கனின் நிலையாகிய அதனை உணர்ந்து, கொண்ட சீற்றமொடு ஏகி—மேற்கொண்ட

சீற்றத்தை அதிகரியாமல் அவ்வாறே சென்று, தக்கனைக் குறுகி—தக்கனை அணுகி, நீ அண்டரோடும் ஈசனை இகழ்ந்தனை—நீ தேவர்களுடன் சிவபெருமானை இகழ்தலைச் செய்துவிட்டாய்; அதனால் ஈது தண்டம்—அதனாலே யாம் செய்வதாகிய இது உனக்குக் கழுவாயாகிய தண்டமாம்; என—என்று கூறியருளி, வாள் கொடு அவன் தலை தடிந்தான்—வாள்கொண்டு அவனுடைய தலையை வெட்டியருளினர். (50)

அற்ற தோர்சென்னி வீழுமு னிறைவனங் கையினாற்
பற்றி யாயிடை யலமரும் பாவகற் பாராத்
திற்றி யீதெனக் கொடுத்தனன் கொடுத்தலுஞ் செந்தீ
மற்றோர் மாத்திரைப் போதினின் மிசைந்தது மன்னோ.

அற்றது ஓர் சென்னி வீழுமுன்—வெட்டுப்பட்ட தலை நிலத்தில் விழுவதற்கு முன்னே, இறைவன் அம் கையினால் பற்றி—வீரபத்திரக் கடவுள் அழகிய திருக்கரத்தாற் பற்றி, ஆயிடை அலமரும் பாவகற் பாரா—அவ்விடத்திற் சுழலுகின்ற அக்கினியை நோக்கி, ஈது திற்றி என கொடுத்தனன்—இதுதான் ஏற்ற ஆகுதியாகிய உணவாகும் உனக்கு என்று கொடுத்தருளினர்; கொடுத்தலும்—கொடுத்தருளுதலும், செந்தீ ஓர் மாத்திரைப் போதினில் மிசைந்தது—சிவந்த அக்கினியானது ஒரு நொடிப்பொழுதில் அத்தலையை உட்கொண்டது.

திற்றி—தின்னுதி, எனினுமாம். (51)

மெல்ல வேயெரி யத்தலை நுகர்தலும் வேத
வல்லி யாதியாந் துணைவியர் தக்கன்மா மகளிர்
சில்லி ருங்குழ றாழ்வரச் செங்கரங் குலைத்தே
யொல்லை யத்திறங் கண்டனர் புலம்பிவந் துற்றார்.

எரி மெல்ல அ தலை நுகர்தலும்—அக்கினி அத் தலையை மெல்ல உட்கொள்ளுதலும், வேதவல்லி ஆதியாம் துணைவியர்—வேதவல்லி முதலிய தக்கன் மனைவியர்களும், தக்கன் மா மகளிர்—அவனுடைய பெருமை பொருந்திய புதல்வியர்களும், அ திறம் கண்டனர்—அவ்வியல்பைக் கண்டு, சில் இரும் குழல் தாழ் வர—சிலவாகிய பெரிய கூந்தல் சோர, செங்கரம் குலைத்து—சிவந்த கைகளை உதறிக்கொண்டு, புலம்பி ஒல்லை வந்து உற்றார்—புலம்பிக் கொண்டு விரைந்து வந்தார்கள். (52)

அந்த வேலையின் மறைக்கொடி தன்னைமுன் னணுகி
முந்தி வார்குழை யிறுத்தன ளேனையர் முடியுந்
தந்த நங்கையர் சென்னியும் வாள்கொடு தடிந்து
கந்து கங்கள்போ லடித்தனள் பத்திர காளி.

அந்த வேலையில் பத்திரகாளி—அப்பொழுது பத்திரகாளிதேவி, மறைக் கொடி தன்னை முன் அணுகி—வேதவல்லியின் எதிரிற் சென்று, முந்தி வார் குழை இறுத்தனள்—முதற்கண் வேதவல்லியின் தாழ்ந்த காதுகளை அறுத்து, ஏனையர் முடியும் தந்த நங்கையர் சென்னியும் வாள்கொடு தடிந்து—பின்பு ஏனைய பெண்களின் தலைகளையுந் தக்கன் பெற்ற புதல்வியர்களின் தலைகளை யும் வாள் கொண்டு வெட்டி, கந்துகங்கள் போல் அடித்தனள்—தலைகளைப் பந்தடிப்பதுபோலடித்துத் தலைப்பந்தாடியருளினர். (53)

காளி யாம்பெயர்த் தலைவியுங் கருதலர் தொகைக்கோ
ராளி யாகிய வீரனு மேனையண் டர்களைக்
கேளி ராகிய முனிவரைத் தனித்தனி கிடைத்துத்
தாளி லார்ப்பினிற் றடக்கையிற் படைகளிற் றடிந்தார்.

காளியாம் பெயர்த் தலைவியும்—பத்திரகாளி என்னும் பெயரையுடைய தலைவியும், கருதலர் தொகைக்கு ஓர் ஆளி ஆகிய வீரனும்—பகைவர் ஆகிய யானைக்கூட்டத்துக்கு ஒரு சிங்கம் ஆகிய வீரபத்திரக் கடவுளும், ஏனை அண்டர் களை—தண்டிக்கப்படாத ஏனைத் தேவர்களையும், கேளிராகிய முனிவரை—தக்கனுக்குச் சுற்றத்தினரான முனிவர்களையும், தனித்தனி கிடைத்து—தனித் தனி கிட்டி, தாளில் ஆர்ப்பினில் தடக்கையில் படைகளில் தடிந்தார்—பாதங்க ளாலும் ஆரவாரத்தினுலும் விசாலமான கரங்களினுலும் படைக்கலங்களி னுலுங் கொன்ருர்கள். (54)

மருத்து மூழியி லங்கியு முற்றென மாது
முருத்தி ரப்பெரு மூர்த்தியும் வந்தென வுயர்சீர்
தரித்த வீரனும் பத்திர காளியுந் தக்கன்
றிருத்தும் வேள்வியைத் தொலைத்தனர் தனித்தனி திரிந்தே.

மருத்தும் ஊழியில் அங்கியும் உற்றென—பிரசண்டமாருதமும் ஊழித்தீயும் ஒருங்கு சேர்ந்துற்ருற்போலவும், மாதும் உருத்திர பெரு மூர்த்தியும் வந் தென்—உருத்திராணியும் மகா உருத்திரமூர்த்தியும் ஒருங்கு வந்தாற்போல வும், உயர் சீர் தரித்த வீரனும்—உயர்ந்த சிறப்புக்கள் பொருந்திய வீரபத்திரக் கடவுளும், பத்திரகாளியும்—அத்தகைய பத்திரகாளி தேவியும், தக்கன் திருத்தும் வேள்வியை—தக்கன் நூதன திருத்தஞ் செய்து செய்யும் யாகத்தை, தனித்தனி திரிந்து தொலைத்தனர்—தனித்தனி திரிந்து அழித்தார்கள். (55)

அண்ண றன்மையுந் தேவிதன் னிலைமையு மயரும்
விண்ணு ளோர்சிலர் நோக்கியே யாங்கணும் விரவி
யண்ணு கின்றனர் யாரையுந் தொலைக்குந ரம்மா
வெண்ணி லார்கொலாம் வீரனு மிறைவியு மென்றார்.

அண்ணல் தன்மையும் தேவிதன் நிலைமையும்—வீரபத்திரக் கடவுளின் இயல்பையும் பத்திரகாளியின் இயல்பையும், அயரும் விண்ணுளோர் சிலர் நோக்கி—அஞ்சி அயருகின்ற தேவர்கள் சிலர் உற்றுநோக்கி, யாங்கணும் விரவி அண்ணுகின்றனர்—இவர்கள் எங்கும் வியாபித்து ஆங்காங்கே அணுகிநிற்கின்றார்கள்; யாரையும் தொலைக்குநர்—எங்கே நிற்கும் எவரையும் அழிக்கின்றார்கள்; வீரனும் இறைவியும் எண்ணிலார் ஆம் கொல் என்றார்—ஆகையினாலே வீரபத்திரக்கடவுளும் பத்திரகாளியும் இருவர் அல்லர் எண்ணற்றவர்கள் ஆகும் போலும் என்றார்கள். (56)

இற்றெ லாநிகழ் வேலையின் வீரன திசைவாற்
சுற்று தானைய ரித்திற நோக்கியே சூழ்ந்த
பொற்றை போலுயர் காப்பினை வீட்டியுள் புகுந்து
செற்ற மோடுசென் றார்த்தனர் வானுளோர் தியங்க.

எலாம் இற்று நிகழ் வேலை—செயலனைத்துந் தனித்தனி இத்தன்மைத்தாக நிகழுஞ் சமயத்தில், வீரனது இசைவால்—வீரபத்திரக் கடவுளின் உடன் பாட்டோடு, சுற்று தானையர் இதிறம் நோக்கி—சூழ்ந்து நின்ற பூதர்களுங் காளிகளுமாகிய சேனைகள் இவ்விருவருஞ் செய்யும் இவ்வியல்பை நோக்கி, சூழ்ந்த பொற்றை போல் உயர் காப்பினை வீட்டி—யாகசாலையைச் சூழ்ந்த மலைபோலுயர்ந்த மதிலரணை அழித்து, உள் புகுந்து சென்று—உள்ளே புகுந்து சென்று, வானுளோர் தியங்க செற்றமோடு ஆர்த்தனர்—தேவர் தியக்கமுறக் கோபத்தோடு ஆரவாரித்தார்கள். (57)

இன், சாரியை.

சூர்த்த நோக்குடைப் பூதருங் காளிக டொகையு
மார்த்த காலையின் முனிவருந் தேவரு மயர்ந்து
பார்த்த பார்த்ததோர் திசைதொறு மிரிதலும் படியைப்
போர்த்த வார்கட லாமென வளைந்தடல் புரிய.

சூர்த்த நோக்குடைப் பூதரும் காளிகள் தொகையும் ஆர்த்த காலையில்—அச்சந்தரும் பார்வையினையுடைய பூதர்களுங் காளிக் கூட்டங்களும் ஆரவாரித்த சமயத்தில், முனிவரும் தேவரும் அயர்ந்து பார்த்த பார்த்தது ஓர் திசைதொறும் இரிதலும்—முனிவர்களுந் தேவர்களுங் கண்ட கண்ட திசை தோறும் ஓடுதலும், படியைப் போர்த்த வார்கடலாமென—பூமியைச் சூழ்ந்து வளைந்த நீண்ட கடலைப்போல, வளைந்து—அவர்களைச் சூழ்ந்து வளைந்து, அடல் புரிய—அடுதலைச் செய்ய. (58)

### வேறு

தியக்குற்றனர் வெருளுற்றனர் திடுக்கிட்டனர் தெருள்போய்த்
துயக்குற்றனர் பிறக்குற்றனர் தொலைவுற்றனர் மெலியா
மயக்குற்றனர் கலக்குற்றனர் மறுக்குற்றனர் மனமே
லுயக்குற்றன ரிமையோர்களு முயர்மாமுனி வரரும்.

இமையோர்களும் உயர் மா முனிவரரும்—தேவர்களும் உயர்ந்த பெரிய முனிசிரேட்டர்களும், தியக்குற்றனர்—தியங்கினர்; வெருளுற்றனர்—வெருண்டனர்; திடுக்கிட்டனர்—திடுக்குற்றனர்; தெருள் போய் துயக்குற்றனர்—தெளிவு போய்க் கலங்கினார்கள்; பிறக்குற்றனர்—பின்னிட்டார்கள்; தொலைவுற்றனர்—தொலைந்தார்கள்; மெலியா மயக்குற்றனர்—மெலிந்து மயங்கினர்; கலக்குற்றனர்—நிலைதளர்ந்தனர்; மனம் மேல் மறுக்குற்றனர்—மனங் குழம்பினர்; உயக்குற்றனர்—வாடினர். (59)

அளிக்கின்றனர் தமைத்தம்முனை யருண்மக்களை மனையைக்
களிக்கின்றதொ ரிளையோர்தமைச் சுற்றந்தனைக் கருதி
விளிக்கின்றனர் பதைக்கின்றனர் வெருக்கொண்டனர் பிணத்தூ
டொளிக்கின்றன ரவன்வேள்வியி லுறைகுற்றதொர் மறையோர்.

அவன் வேள்வியில் உறைகுற்றதொர் மறையோர்—அத் தக்கனுடைய யாகத்திலிருந்த பிராமணர்கள், அளிக்கின்றனர் தமை—தம்மை ஈன்ற பிதா மாதாக்களை, தம்முனை—தமையன்மாரை, மனையை அருள் மக்களை—மனைவி மக்களை, களிக்கின்றதொர் இளையோர் தமை—விளையாடிக் களிக்கின்ற தம் இளங்குழந்தைகளை, சுற்றந்தனை—சுற்றத்தவர்களை, கருதி விளிக்கின்றனர்—நினைந்து அழைக்கின்றார்கள்; பதைக்கின்றனர் வெருக் கொண்டனர் பிணத்தூடு ஒளிக்கின்றனர்—பதைத்து வெருக்கொண்டு பிணக்குவியலுள் ஒளிக்கின்றார்கள்.

இளையோர் தம்பிமாருமாம்; தமையன்மார் கண்டு களிக்கின்ற தம்பிமாரென்க. (60)

அலக்கட்படு மிமையோர்களு மருமாமுனி வரரு
நிலக்கட்படு மறையோர்களு நெடுநீர்க்கட லாகக்
கலக்குற்றனர் வரையாமெனக் கரத்தாற்புடைத் துதிர்த்தா
ருலக்கிற்றிர ளாகச்சினத் துயர்மால்கரி யொத்தே.

அலக்கண் படும் இமையோர்களும்—துன்பம் உறுகின்ற தேவர்களும், அரு மா முனிவரரும்—அரிய பெரிய முனிசிரேட்டர்களும், நிலக்கண் படு மறையோர்களும்—பூமியின்கண் உள்ள பிராமணர்களும், நெடு நீர்க் கடலாக—மிக்க நீரினையுடையதொரு சமுத்திரமாக, வரையாம் என—சேனைகளாகிய தாம் அக் கடலைக் கடைவதொரு மந்தர மலையாம் என்று சொல்லும்படி, கலக்குற்றனர்—அவர்களைக் கலக்கினார்கள்; உலங்கின் திரள் ஆக—அன்றி அவர்கள் கொசுக் கூட்டங்களாக, சினத்து உயர் மால் கரி ஒத்து—தாம் சினத்தாலுயர்ந்த பெரிய யானையை ஒத்து, கரத்தால் புடைத்து உதிர்த்தார்—கையினாலடித்து உதிர்த்தார்கள்.

உலங்கின் றிரள், விகாரப்பட்டு நின்றது. (61)

முடிக்குந்திறற் பெருங்கோளரி முழங்கிற்றென முரணு
லிடிக்கின்றனர் கலைமானென விமையோர்தமை விரைவிற்
பிடிக்கின்றன ரடிக்கின்றனர் பிறழ்பற்கொடு சிரத்தைக்
கடிக்கின்றன ரொடிக்கின்றனர் களத்தைப்பொரு களத்தில்.

முடிக்கும் திறல் பெரும் கோளரி முழங்கிற்று என—கொல்லுந் திறலமைந்த பெரிய சிங்கம் கர்ச்சித்தாற்போல, முரணுல் இடிக்கின்றனர்—வன்மையோடு இடிமுழக்கஞ் செய்கின்றார்கள்; கலைமான் என இமையோர் தமை விரைவில் பிடிக்கின்றனர்—சிங்கம் கலைமானைப் பற்றுவதுபோலத் தேவர்களை விரைந்து பற்றுகின்றார்கள்; அடிக்கின்றனர்—அடிக்கின்றார்கள்; பிறழ் பல் கொடு சிரத்தைக் கடிக்கின்றனர்—பிறழ்ந்த பற்களால் அவர்கள் தலையைக் கடிக்கின்றார்கள்; களத்தைப் பொரு களத்தில் ஒடிக்கின்றனர்—கழுத்துக்களைப் பொருகின்ற அக்களத்தில் ஒடிக்கின்றார்கள். (62)

முறிக்கின்றனர் தடந்தோள்களை முழுவென்புட னுடலங்
கறிக்கின்றன ரடிநாவினைக் களைகின்றனர் விழியைப்
பறிக்கின்றனர் மிதிக்கின்றனர் படுக்கின்றனர் சங்கங்
குறிக்கின்றனர் குடிக்கின்றனர் குருதிப்புன றனையே.

தடம் தோள்களை முறிக்கின்றனர்—விசாலமான தோள்களை முறிக்கின்றார்கள்; முழு என்புடன் உடலம் கறிக்கின்றனர்—முழுமையாகிய எலும்புடனே உடல்களைக் கடிக்கின்றார்கள்; அடி நாவினைக் களைகின்றனர்—நாக்களை அடியிற் களைகின்றார்கள்; விழியைப் பறிக்கின்றனர்—விழிகளை அகழ்கின்றார்கள்; மிதிக்கின்றனர் படுக்கின்றனர்—மிதித்துக் கொல்லுகின்றார்கள்; சங்கம் குறிக்கின்றனர்—வெற்றிச் சங்குகளை ஊதுகின்றார்கள்; குருதிப் புனல் தனைக் குடிக்கின்றனர்—இரத்த வெள்ளத்தைக் குடிக்கின்றார்கள். (63)

எடுக்கின்றனர் பிளக்கின்றன ரெறிகின்றன ரெதிர்போய்த்
தடுக்கின்றன ருதைக்கின்றனர் தடந்தாள்கொடு துகைத்துப்
படுக்கின்றனர் தலைசிந்திடப் படையாவையுந் தொடையா
விடுக்கின்றனர் மடுக்கின்றனர் மிகுமூனினைப் பகுவாய்.

எடுக்கின்றனர் பிளக்கின்றனர் எறிகின்றனர்—சிலரை எடுத்துக் கிழித்து எறிகின்றார்கள்; எதிர்போய் தடுக்கின்றனர் உதைக்கின்றனர்—ஓடுவாரை எதிர்சென்று தடுத்து உதைக்கின்றார்கள்; தலை சிந்திட தடம் தாள் கொடு துகைத்துப் படுக்கின்றனர்—தலை சிதறும்படி விசாலித்த கால்களால் உழக்கிக் கொல்லுகின்றார்கள்; படை யாவையும் தொடையா விடுக்கின்றனர்—படைக்கலங்களையெல்லாம் அம்பாகப் பிரயோகிக்கின்றார்கள்; மிகும் ஊனினைப் பகுவாய் மடுக்கின்றனர்—மிக்கெழுகின்ற ஊன்களைப் பிளந்த வாய்களிலே திணிக்கின்றார்கள். (64)

நெரிக்கின்றனர் சிலர்சென்னியை நெடுந்தாள்கொடு மிதியா
வுரிக்கின்றனர் சிலர்யாக்கையை யொருசிற்சிலர் மெய்யை
யெரிக்கின்றனர் மகத்தீயிடை யிழுதார்கடத் திட்டே
பொரிக்கின்றனர் கரிக்கின்றனர் புகைக்கின்றன ரம்மா.

சிலர் சென்னியை நெரிக்கின்றனர்—சிலருடைய தலைகளை நெரிக்கின்றார்கள்; சிலர் யாக்கையை நெடும் தாள்கொடு மிதியா உரிக்கின்றனர்—சிலருடைய உடம்புகளை நீண்ட கால்களால் மிதித்துக்கொண்டு தோலை உரிக்கின்றார்கள்; ஒரு சிற்சிலர் மெய்யை இழுது ஆர் கடத்து இட்டு—சிற்சிலருடைய உடம்புகளை நெய் நிரம்பிய குடத்துள் இட்டு, மகத் தீயிடை எரிக்கின்றனர் பொரிக்கின்றனர் கரிக்கின்றனர் புகைக்கின்றனர்—யாகாக்கினியில் வைத்து எரித்துப் பொரித்துக் கரித்துப் புகைக்கின்றார்கள். (65)

அகழ்கின்றனர் சிலர்மார்பினை யவர்தங்குடர் சூடி
மகிழ்கின்றனர் நகைக்கின்றனர் மதர்க்கின்றனர் சிவனைப்
புகழ்கின்றனர் படுகின்றதொர் புலவோர்தமைக் காணு
விகழ்கின்றன ரெறிந்தேபடை யேற்கின்றன ரன்றே.

சிலர் மார்பினை அகழ்கின்றனர்—சிலருடைய மார்புகளை அகழுகின்றார்கள்; அவர்தம் குடர்சூடி மகிழ்கின்றனர்—அவர்களுடைய குடர்மாலைகளைச் சூடி மகிழுகின்றார்கள்; நகைக்கின்றனர்—சிரிக்கின்றார்கள்; மதர்க்கின்றனர்—செருக்குறுகின்றார்கள்; சிவனைப் புகழ்கின்றனர்—சிவபெருமானைப் புகழுகின்றார்கள்; படுகின்றதொர் புலவோர்தமை காணு இகழ்கின்றனர்—சாகுந் தேவர்களைப் பார்த்து இகழுகின்றார்கள்; எறிந்தே படை ஏற்கின்றனர்—அவர்களை மேலே எறிந்து படைகளால் ஏற்கின்றார்கள்.

எதிர்வாரின்மையிற் படைகளை மேலேயெறிந்து தம் மார்பில் ஏற்கின்றுருமாம். (66)

கரக்கின்றதொர் முனிவோர்களைக் கண்டேதொடர்ந் தோடித்
துரக்கின்றனர் பிடிக்கின்றனர் துடிக்கும்படி படிமேற்
றிரக்குன்றுகொ டரைக்கின்றனர் தெழிக்கின்றனர் சிலவூ
னிரக்கின்றதொர் கழுகின்றொகைக் கீகின்றனர் மாதோ.

கரக்கின்றதொர் முனிவோர்களை கண்டு தொடர்ந்து ஓடி—ஒளிக்கின்றதொரு முனிவர் கூட்டத்தைக் கண்டு பின் தொடர்ந்தோடி, துரக்கின்றனர் பிடிக்கின்றனர்—ஓடப்பண்ணிப் பிடித்து, படிமேல் துடிக்கும்படி திரக் குன்று கொடு அரைக்கின்றனர்—பூமியின்மீது இட்டுத் துடிக்கும்படி வலிய மலைகளால் அரைக்கின்றார்கள்; தெழிக்கின்றனர்—ஆரவாரிக்கின்றார்கள்; சில ஊன்

இரக்கின்றதொர் கழுகின் தொகைக்கு ஈகின்றனர்—சிலவாகிய தசைகளை யாசிக்கின்ற கழுகுக் கூட்டமாகிய இரவலர்களுக்கு வள்ளன்மை செய்கின் றார்கள். (67)

நெய்யுண்டனர் ததியுண்டனர் பாலுண்டனர் நீடுந்
துய்யுண்டன ரிமையோர்கடந் தொகைக்காமென வுய்க்கு
மையுண்டதொ ரவியுண்டனர் மகவேள்வியில் வந்தே
நையுண்டவ ருயிர்கொண்டிடு நாளுண்டவ ரெல்லாம்.

மக வேள்வியில் வந்து நையுண்டவர் உயிர் கொண்டு—இந்த யாகசாலைக் கண் வந்து கேடுபட்டவர்களுடைய உயிரைக் குடித்து, இடு நாள் உண்டவர் எல்லாம்—அவர்களுக்கு விதித்த வாழ்நாளை இடையிற்றொலைத்தவர்களாகிய பூதர் யாவரும், நெய் உண்டனர் ததி உண்டனர் பால் உண்டனர்—நெய்யை அருந்தித் தயிரையுண்டு பாலைப் பருகினார்கள்; நீடும் துய் உண்டனர்—மிக்க உணவுவகைகளை உண்டார்கள்; இமையோர்கள் தம் தொகைக்கு ஆம் என உய்க்கும்—தேவர்கள் குழுவுக்கு உரியதாம் என்று வைக்கப்பட்டிருக்கும், மை உண்டதொர் அவி உண்டனர்—குற்றம் பொருந்தியதோர் அவியையும் உண்டார்கள்.

ஈசனை மறுத்தமையால் மையுண்டதென்க. (68)

உகத்துக்கடை யனலைக்கட லுவர்நீர்தணித் தெனவே
மகத்திற்றிரி விதவேதியில் வைகுங்கன லதனை
மிகத்துப்புர வுளதென்றுகொல் வியப்பார்தம துயிரி
னகத்துப்புனல் விடுத்தேவிரைந் தவித்தார்மக மழித்தார்.

உகத்துக் கடை அனலை—ஊழி முடிவில் உண்ணும் அக்கினியை, கடல் உவர்நீர் தணித்தென—கடலில் உள்ள உப்புநீர் தணித்தாற்போல, மகத்தில் திரிவித வேதியில் வைகும் கனல் அதனை—யாகத்தில் மூன்று வகையான ஓம குண்டங்களிலே தாபித்திருக்கும் மூவகை அக்கினியையும், தமது உயிரின் அகத்து புனல்—தமது உயிரின் உறைவிடமாகிய சரீரத்திலிருந்து வரும் சலம், மிக துப்புரவு உளது என்று கொல்—அவ்வக்கினியிலும் பார்க்க மிகவும் பரிசுத்தம் உள்ளதென்று போலும், வியப்பார்—தமது சலத்தை அவ் வக்கினியினும் மேலானது என்று வியந்து பேசுவாராய், விடுத்து—அவ்வக்கினி யின்மீது சல விசர்ச்சனஞ் செய்து, விரைந்து அவித்தார் மகம் அழித்தார்—விரைந்து அவித்து யாகத்தை அழித்தார்கள்.

கனலதனைப் புனல் விடுத்து அவித்தாரென்க. உயர்ந்ததாகிய அக்கினி சிவத்துரோகமெய்தி இழிவுபட்டதென்க. (69)

தடைக்கொண்டதோர் சிறைதோறுள சாலைக்கத வெல்லா
மடைக்கின்றனர் தழலிட்டன ரவணுற்றவர் தம்மைத்
துடைக்கின்றனர் கலசத்தொடு தொடர்கும்பமும் விரைவா
லுடைக்கின்றனர் தகர்க்கின்றன ருதிர்க்கின்றன ருடுவை.

சாலை—யாகசாலையின்கண்ணே, தடைகொண்டது—தடைசெய்யப்பட்ட, ஓர் சிறை தோறு உள கதவெல்லாம்—ஒவ்வோரிடத்திலுமுள்ள கதவனைத்தையும், அடைக்கின்றனர்—அடைத்து, தழலிட்டனர்—தழலிட்டு, அவண் உற்றவர் தம்மை—அவ்விடத்து அறைதோறும் உள்ளவர்களை, துடைக்கின்றனர்—அழிக்கின்றார்கள்; கலசத்தொடு தொடர் கும்பமும் விரைவால் உடைக்கின்றனர் தகர்க்கின்றனர்—கலசங்களையும் வரிசையாய கும்பங்களையும் உடைத்துத் தகர்க்கின்றார்கள்; உடுவை உதிர்க்கின்றனர்—அவ்வதிர்ச்சியால் நட்சத்திரங்களை உதிர்க்கின்றார்கள். (70)

தவக்கண்டகத் தொகையார்த்திடத் தனிமாமகத் தறியிற்
றுவக்குண்டய ரணிமேதகு துகடீர்பசு நிரையை
யவிழ்க்கின்றனர் சிலர்கங்கையி னலையிற்செல விடுவார்
திவக்கும்படி வானோச்சினர் சிலவெற்றினர் படையின்.

கண்டகம் தொகை தவ ஆர்த்திட—கழுத்தின்கட் கட்டப்பட்டுள்ள மணித்தொகைகள் மிகவும் ஒலிக்க, தனி மா மகத் தறியில்—ஒப்பற்ற பெரிய யாகத் தூணில், துவக்குண்டு அயர்—கட்டுண்டு அயருகின்ற, அணி மேதகு—அழகு மேதக்க, துகள் தீர்—குற்றம் இல்லாத, பசு நிரையை—யாகப் பசுக்களின் நிரையை, சிலர் அவிழ்க்கின்றனர் கங்கையின் அலையில் செலவிடுவார்—சிலர் அவிழ்த்துக் கங்காநதியின் அலைப்பெருக்கிற் செல்லும்படி விடுவார்கள்; சில திவக்கும்படி வான் ஓச்சினர்—சிலவற்றை உயர்ந்து செல்லும்படி ஆகாயத்தில் எறிந்தார்கள்; படையின் சில எற்றினர்—சிலவற்றைப் படையினால் எற்றிவிட்டார்கள்.

கண்டகத் தவத் தொகை—கீழ்மையாய தவக்குழுவினர், தறியில் ஆர்த்திட—தூணிற் கட்ட, என்றுரைப்பதுமாம். யாகப் பசு யாகத்துக்குரிய பிராணி. திவத்தல், துவளுதலுமாம். (71)

பங்கங்கள்ப டச்செய்திடு பதகன்மகந் தனிற்போய்க்
கங்கங்களை முறிக்கின்றனர் கவின்சேரர மகளி
ரங்கங்களைக் கறிக்கின்றன ரறுக்கின்றன ரதனை
யெங்கெங்கணு முமிழ்கின்றன ரெறிகின்றன ரெவரும்.

பங்கங்கள் பட செய்திடும் பதகன் மகம் தனில் போய்—இழிவுகள் உண்டாகச் செய்கின்ற கீழ்மகனான தக்கனது யாகசாலையுட் சென்று, கங்

கங்களை எவரும் முறிக்கின்றனர்—யாகத் தம்பங்களைப் பூதர்கள் யாவரும் முறிக்கின்றார்கள்; கவின் சேர் அரமகளிர் அங்கங்களை கறிக்கின்றனர்— அழகு பொருந்திய அரமகளிரின் உறுப்புக்களைக் கறிக்கின்றார்கள்; அறுக்கின் றனர்—அறுக்கின்றார்கள்; அதனை எங்கு எங்கணும் உமிழ்கின்றனர் எறிகின் றனர்—முறையே அவ்வங்கங்களை எவ்விடங்களிலும் உமிழ்கின்றார்கள் எறிகின் றார்கள்.

கங்கங்கள் பருந்து வடிவிலமைந்த வேதிகைகள் என்பாருமுளர். அவ்வுரை முறிக்கின்றனர் என்பதனோடு பொருந்தாமை அறிக. (72)

படுகின்றவர் வருமூர்தியும் படர்மானமுந் தேருஞ்
சுடுகின்றன ரவர்கொண்டிடு தொலைவில்படைக் கலமு
மிடுகுண்டல முடிகண்டிகை யெவையுந்தழ லிட்டே
கடுகின்றுக ளாகப்பொடி கண்டார்திறல் கொண்டார்.

படுகின்றவர் வரும் ஊர்தியும் படர் மானமும் தேரும் சுடுகின்றனர்— இறக்கின்றவர்களாகிய தேவர்கள் வருகின்ற ஊர்திகளையும் ஆகாயத்திற் படரு கின்ற விமானங்களையுந் தேர்களையுஞ் சுட்டழிக்கின்றார்கள்; அவர் கொண் டிடும் தொலைவில் படைக்கலமும்—அவர்கள் தாங்கிய அழிவில்லாத படைக் கலங்களையும், இடு குண்டலம் முடி கண்டிகை எவையும்—தரித்துள்ள குண் டலங்கள் முடிகள் கண்டசரங்கள் யாவற்றையும், தழல் இட்டு கடுகின் துகளாக பொடிகண்டார்—தீயிலிட்டுக் கடுகினும்பார்க்க நுண் துகளாகும் படி பொடி செய்து, திறல் கொண்டார்—அவ்வாற்றால் வென்றியெய்தி னார்கள். (73)

அடிக்கொண்டதோர் மகச்சாலையு ளமர்வேதியை யடியா
லிடிக்கின்றனர் பொடிக்கின்றன ரிருந்தோரணத் தொகையை
யொடிக்கின்றனர் பெருந்தீயினை யுமிழ்கின்றனர் களிப்பா
னடிக்கின்றன ரிசைக்கின்றனர் நமனச்சுறுந் திறத்தோர்.

நமன் அச்சுறும் திறத்தோர்—யமனும் அஞ்சுந் திறல் படைத்த பூதர்கள், ஓர் மகச்சாலையுள் அடிக்கொண்டது அமர் வேதியை—ஒப்பில்லாத யாக சாலையுள் அடிக்கண் அமைத்துக்கொண்ட ஆங்காங்குப் பொருந்திய வேதிகை களை, அடியால் இடிக்கின்றனர் பொடிக்கின்றனர்—கால்களால் இடித்துப் பொடிசெய்கின்றார்கள்; இரும் தோரணத் தொகையை ஒடிக்கின்றனர்— பெரிய தோரணக் கம்பங்களை ஒடிக்கின்றார்கள்; பெரும் தீயினை உமிழ்கின் றனர்—பேரழலை உமிழ்கின்றார்கள்; களிப்பால் நடிக்கின்றனர் இசைக்கின் றனர்—களிப்பினால் ஆடுகின்றார்கள் பாடுகின்றார்கள். (74)

தருமத்தினை யடுகின்றதொர் தக்கன்றனக் குறவா
மருமக்களைப் பிடிக்கின்றனர் வாயாற்புக லொண்ணுக்
கருமத்தினைப் புரிகின்றனர் கரத்தாலவ ருரத்தே
யுருமுற்றெனப் புடைக்கின்றன ருமிழ்வித்தன ரவியே.

தருமத்தினை அடுகின்றது ஓர் தக்கன் தனக்கு உறவாம் மருமக்களை—தருமத்தைக் கொல்லுகின்ற ஒருவனான தக்கனுக்குச் சுற்றமாகிய அவனுடைய மருமக்களை, பிடிக்கின்றனர்—பிடித்து, வாயால் புகலொண்ணு கருமத்தினைப் புரிகின்றனர்—வாயாற் சொல்லவுந் தகாத கருமத்தைச் செய்து, கரத்தால் அவர் உரத்தே உரும் உற்றெனப் புடைக்கின்றனர்—கைகளினாலே அவர்களுடைய மார்பில் இடி இடித்தாற்போலப் புடைத்து, அவி உமிழ்வித்தனர்—அவர்கள் உண்ட அவியை உமிழ்விக்கின்றார்கள். (75)

தறிக்கின்றனர் சிலதேவரைத் தலைமாமயிர் முழுதும்
பறிக்கின்றனர் சிலதேவரைப் பாசங்கொடு தறியிற்
செறிக்கின்றனர் சிலதேவரைச் செந்தீயிடை வதக்கிக்
கொறிக்கின்றனர் சிலதேவரைக் கொலைசெய்திடுங் கொடியோர்.

கொலை செய்திடும் கொடியோர்—கொலை செய்கின்ற கொடுந்தொழிலை மேற்கொண்ட பூதர்கள், சில தேவரை தறிக்கின்றனர்—சில தேவரை மரந் தறிப்பது போலத் தறிக்கின்றார்கள்; சில தேவரை மா தலைமயிர் முழுதும் பறிக்கின்றனர்—சில தேவர்களுடைய கரிய தலைமயிர் முழுவதையும் பறிக்கின்றார்கள்; சில தேவரை பாசம் கொடு தறியில் செறிக்கின்றனர்—சில தேவர்களைக் கயிறு கொண்டு யாகத்தூணிற் கட்டுகின்றார்கள்; சில தேவரை செம் தீ இடை வதக்கி கொறிக்கின்றனர்—சில தேவர்களைச் சிவந்த அக்கினியிற் பொரித்து வாயிலிட்டுக் கொறிக்கின்றார்கள். (76)

நாற்றிக்கினு மெறிகின்றனர் சிலர்தங்களை நல்லூன்
சேற்றுத்தலைப் புதைக்கின்றனர் சிலர்தங்களைச் செந்நீ
ராற்றுக்கிடை விடுக்கின்றனர் சிலர்தங்களை யண்டப்
பாற்றுக்கிரை யிடுகின்றனர் சிலர்தங்களைப் பலரும்.

பலரும்—பூதர்கள் பலரும், சிலர் தங்களை நால் திக்கினும் எறிகின்றனர்—சிலரை நான்கு திக்கினும் எறிகின்றார்கள்; சிலர் தங்களை நல் ஊன் சேற்றுத் தலை புதைக்கின்றனர்—சிலரை நல்ல நிணச்சேற்றுட் புதைக்கின்றார்கள்; சிலர் தங்களை செந்நீர் ஆற்றுக்கிடை விடுக்கின்றனர்—சிலரை இரத்த ஆற்றில் விடுக்கின்றார்கள்; சிலர் தங்களை அண்டப் பாற்றுக்கு இரை இடுகின்றனர்—சிலரை ஆகாயத்திற் பறக்கும் பருந்துகளுக்கு இரையாக இடுகின்றார்கள். (77)

இடைந்தாரையும் விழுந்தாரையு மெழுந்தாரையு மெதிரே
நடந்தாரையு மிரிந்தாரையு நகையுற்றிட விறந்தே
கிடந்தாரையு மிருந்தாரையுங் கிளர்ந்தாரையும் விண்மேற்
படர்ந்தாரையு மவர்க்கேற்றதொர் பலதண்டமும் புரிந்தார்.

இடைந்தாரையும்—இடைந்தவர்களையும், விழுந்தாரையும்—விழுந்தவர்களையும், எழுந்தாரையும்—எழுந்தவர்களையும், எதிரே நடந்தாரையும்—எதிர்த்து வந்தவர்களையும், இரிந்தாரையும்—விலகி ஓடினவர்களையும், நகை உற்றிட இறந்து கிடந்தாரையும்—நகைக்கும்படி இறந்து கிடந்தவர்களையும், இருந்தாரையும்—வாளா இருந்தவர்களையும், கிளர்ந்தாரையும்—கிளர்ச்சியுற்றவர்களையும், விண்மேல் படர்ந்தாரையும்—ஆகாயத்திற் சென்றவர்களையும், அவர்க்கு ஏற்றதொர் பல தண்டமும் புரிந்தார்—அவரவர்க்கு ஏற்றவாறு பலவகைத் தண்டங்களையுஞ் செய்தார்கள்.

நவையுற்றிட என்றும் பாடம். நவை—குற்றம். (78)

உலக்குற்றிடு மகங்கண்டழு துளநொந்தனர் தளரா
மலக்குற்றிடு மணங்கோர்தமை வலிதேபிடித் தீர்த்துத்
தலக்கட்படு மலர்ப்பொய்கையைத் தனிமால்கரி முனிவாற்
கலக்கிற்றெனப் புணர்கின்றனர் கணநாதரிற் சிலரே.

உலக்கு உற்றிடு மகம் கண்டு அழுது—அழிந்துபட்ட யாகத்தைக் கண்டு அழுது, உளம் நொந்தனர் தளரா—மனம் நொந்து தளர்ந்து, மலக்கு உற்றிடும் அணங்கோர் தமை—மயங்குகின்ற தேவமாதரை, வலிது பிடித்து ஈர்த்து—வலிந்து பிடித்து இழுத்து, நலக்கண்படு மலர் பொய்கையை—பூமியிற் பொருந்திய தாமரைத் தடாகத்தை, தனி மால் கரி முனிவால் கலக்கிற்று என—ஒப்பற்ற பெரிய யானை கலக்கியதுபோல, கணநாதரில் சிலர் புணர்கின்றனர்—பூதகண நாதரிற் சிலர் அம் மாதரைப் புணர்கின்றனர். (79)

குட்டென்பதும் பிளவென்பதுங் கொல்லென்பதுங் கடிதே
வெட்டென்பதுங் குத்தென்பது முரியென்பதும் விரைவிற்
கட்டென்பது மடியென்பது முதையென்பதுங் களத்தே
யெட்டென்பதொர் திசையெங்கணு மெவரும்புகல் வனவே.

களத்து—அந்த யாகசாலையாகிய போர்க்களத்தின்கண், எட்டு என்பது ஓர் திசை எங்கணும்—எட்டுத் திக்குக்கள் முழுவதிலும், குட்டு என்பதும் பிள என்பதும் கொல் என்பதும் கடிது வெட்டு என்பதும் குத்து என்பதும் முரி என்பதும் விரைவில் கட்டு என்பதும் அடி என்பதும் உதை என்பதும்—குட்டு பிள கொல் கடிதில் வெட்டு குத்து முரி விரைவிற் கட்டு அடி உதை என்னும் வார்த்தைகளே, எவரும் புகல்வன—பூதர்கள் எவரும் புகலும் வார்த்தைகளாம். (80)

கையற்றனர் செவியற்றனர் காலற்றனர் காமர்
மெய்யற்றனர் நாவற்றனர் விழியற்றனர் மிகவு
மையுற்றிடு களமற்றன ரல்லான்மல ரயன்சேய்
செய்யுற்றிடு மகத்தோர்களிற் சிதைவற்றவ ரிலேயே.

கை அற்றனர்—கையற்றவர்களும், செவி அற்றனர்—செவி அற்றவர்களும், கால் அற்றனர்—காலற்றவர்களும், காமர் மெய் அற்றனர்—அழகிய உடலற்றவர்களும், நா அற்றனர்—நாவற்றவர்களும், விழி அற்றனர்—விழியற்றவர்களும், மிகவும் ஐயுற்றிடு களம் அற்றனர்—மிகவும் அழகு பொருந்திய கழுத்தற்றவர்களும், அல்லால்—அன்றி, அயன் சேய் செய்யுற்றிடும் மகத்தோர்களில்—பிரம புத்திரனுன தக்கன் செய்த யாகத்திலிருந்தவர்களுள், சிதைவற்றவர் இலே—சிதைவின்றி இருந்தவர் ஒருவருமில்லே. (81)

வேறு

இத்திறம் யாரையு மேந்த ருனேயும்
பத்திரை சேனேயும் பரவித் தண்டியா
மெத்துறு மளேகெழு வேலே யிற்பல
மத்துறு கின்றென மகத்தை வீட்டவே.

இத்திறம் யாரையும்—இவ்வண்ணம் யாவரையும், ஏந்தல் தானேயும்—வீரபத்திரக்கடவுளின் சேனேயும், பத்திரை சேனேயும்—பத்திரகாளியின் சேனேயும், பரவி தண்டியா—எங்கும் பரந்து தண்டித்து, மெத்துறும் அளே கெழு வேலேயில்—மிகுகின்ற தயிர்கெழுமிய சமுத்திரத்தில், பல மத்து உறுகின்றென—பல மத்துக்கள் புகுந்து கலக்குகின்றனபோல, மகத்தை வீட்ட—யாகத்தை அழிக்க. (82)

செழுந்திரு வுரத்திடை தெருமந் துற்றிடத்
தொழுந்திறற் பரிசனந் தொலேய மாயவ
னழுந்திடு கவலொடு மயர்வு யிர்த்தவ
ணெழுந்தனன் மகம்படு மிறப்பு நோக்கினுன்.

செழும் திரு உரத்திடை தெருமந்து உற்றிட—செழுமையாகிய இலக்குமி மார்பின்கண் உலேவுற்றிருக்க, தொழும் திறல் பரிசனம் தொலேய—தம்மைத் தொழுகின்ற வலிய பரிசனங்கள் தொலேய, மாயவன்—திருமால், அழுந்திடு கவலொடும்-அழுந்தாநின்ற துன்பத்தோடும், அயர்வுயிர்த்து—அயர்ச்சி சிறிது நீங்கி, அவண் எழுந்தனன்—அவ்விடத்தினின்றும் எழுந்து, மகம் படும் இறப்பு நோக்கினுன்—யாகம் படுகின்ற அழிவை நோக்கினுர்.

'தடித்திடு மகல மார்பத் தடவரை அகடு சாய
அடித்தனன்..............அரிமுன் வீழ்ந்தான்'

இப்பொழுது, 'அயர்வுயிர்த் தெழுந்தனன்' என்க. (83)

திருத்தகும் வேள்வியைச் சிதைவின் ருகயா
னருத்தியிற் காத்தது மழகி தாலெனக்
கருத்திடை யுன்னினன் கண்ணன் வெள்கியே
யுருத்தனன் மானநின் றுளத்தை யீரவே.

திரு தகும் வேள்வியை—செல்வம் பொருந்திய இந்த யாகத்தை, சிதைவு இன்றாக—சிதைவு வாராதவண்ணம், யான் அருத்தியில் காத்ததும் அழகிது என கருத்திடை உன்னினன்—யான் சிரத்தையோடு காத்ததும் அழகிது என்று மனத்தின்கண் நினைத்து, கண்ணன் வெள்கி—திருமாலானவர் வெட்க முற்று, மானம் நின்று உளத்தை ஈர உருத்தனன்—மானம் நின்று உள்ளத்தை ஈருதலைச் செய்யக் கோபங்கொண்டார். (84)

பரமனை யிகழ்ந்திடு பான்மை யோர்க்கிது
வருவது முறையென மனத்துட் கொண்டிலன்
றெருமரு முணர்வினன் றிறல்கொள் வீரன்மேற்
பொருவது கருதினன் பொருவி லாழியான்.

பரமனை இகழ்ந்திடு பான்மையோர்க்கு—சிவநிந்தனை செய்யும் இயல் பினருக்கு, இது வருவது முறையென மனத்துள் கொண்டிலன்—இத் தண்டம் கிடைப்பது நீதியேயாமென்று மனத்திற் கொண்டிலர்; தெருமரும் உணர் வினன்—திரிந்த அறிவினையுடையராய், திறல் கொள் வீரன்மேல்—வலி மிக்க வீரபத்திரக்கடவுளோடு, பொருவில் ஆழியான் பொருவது கருதினன்—ஒப்பற்ற சக்கரப்படையையுடைய திருமால் போர்புரிவதை நினைந்தார். (85)

உன்னினன் கருடனை யுடைந்த தாதலுந்
தன்னுறு சீற்றமாந் தழலை யாங்கொரு
பொன்னிருஞ் சிறையபுள் ளரச னாக்கலு
மன்னது வணங்கியே யரிமு னின்றதே.

கருடனை உன்னினன்—கருடனை நினைந்தார்; உடைந்தது ஆதலும்—அது முன்னமே இறந்தது ஆகுதலும், தன் உறு சீற்றமாம் தழலை—தமது மிகு கின்ற கோபமாகிய அக்கினியை, ஆங்கு ஒரு பொன் இரும் சிறைய புள் அரசன் ஆக்கலும்—அப்பொழுது பொன்மயமாகிய பெரிய சிறகுகளையுடைய புட்களுக்கு அரசனாயதொரு கருடனாகச் செய்தலும், அது அரிமுன் வணங்கி நின்றது—அக்கோபத்திலுண்டான கருடன் திருமாலினெதிரில் வணங்கி நின்றது. (86)

நிற்றலு மதன்கையி னீல மேனியான்
பொற்றடந் தாள்வையாப் பொருக்கென் றேறியே
பற்றின னெம்பெரும் படையும் வேள்வியுண்
முற்றுறு பூதர்மேன் முனிவுற் றேகினான்.

நிற்றலும்—எதிரில் வந்து நின்றவுடன், அதன் கையில்—அக் கருடனது தோளில், நீல மேனியான் பொன் தடம் தாள் வையா பொருக்கென்று ஏறி—நீல மேனியையுடைய திருமால் அழகிய பெருமை பொருந்திய காலினை வைத்து விரைந்தேறி, ஐம்பெரும் படையும் பற்றினன்—பெரிய பஞ்சாயுதங்களையும் ஏந்தி, வேள்வியுள் முற்று உறு பூதர்மேல்—யாகத்தில் போர் முற்றுதல் உற்று நின்ற பூதர்கள்மீது, முனிவுற்று ஏகினன்—கோபங்கொண்டு சென்றார். (87)

எடுத்தனன் சங்கினை யிலங்கு செந்துவ
ரடுத்திடு பவளவா யாரச் சேர்த்தியே
படுத்தனன் பேரொலி பரவைத் தெண்டிரைத்
தடக்கட லுடைந்திடு தன்மை போலவே.

சங்கினை எடுத்தனன்—பாஞ்சசன்னியம் என்னும் சங்கை எடுத்து, இலங்கு செந்துவர் அடுத்திடு பவளவாய் ஆரச் சேர்த்தி—விளங்குகின்ற செந்நிறம் பொருந்திய பவளவாயிற் பொருந்தச்சேர்த்து, பரவை தெண்டிரை தடக் கடல் உடைந்திடும் தன்மை போல—பரவையாகிய தெளிந்த திரையினையுடைய விசாலமான கடல் உடைந்திடுந் தன்மையை ஒப்ப, பேரொலி படுத்தனன்—பேரொலியை உண்டாக்கினார். (88)

மீச்செலு மமரர்கள் புரிந்த வேள்வியந்
தீச்சிகை யுதவிய சிலையை வாங்கியே
தாச்செலும் வசிகெழு சரங்க ளெண்ணில
வோச்சினன் வீரன துரவுத் தானைமேல்.

மீ செலும் அமரர்கள் புரிந்த வேள்வி—ஆகாயத்திற் சஞ்சரிக்குந் தேவர்கள் செய்த யாகத்திற் பொருந்திய, அம் தீ சிகை உதவிய—அழகிய யாகாக்கினிச் சிகை உதவிய, சிலையை வாங்கி—சார்ங்கம் என்கின்ற வில்லை வளைத்து, தாச் செலும் வசி கெழு எண்ணில சரங்கள்—தாவிச் செல்லுகின்ற கூரிய எண்ணற்ற பாணங்களை, வீரனது உரவுத் தானைமேல் ஓச்சினன்—வீரபத்திரக்கடவுளின் வலிய சேனைமீது விடுத்தார். (89)

காளிக டொகைகளுங் கழுதி னீட்டமுங்
கூளிக டொகைகளுங் குழுமி யேற்றெழீஇ
வாளிக டொகைசொரீஇ மாயற் சூழ்வுரு
நீளிகல் புரிந்தனர் நிகரில் வன்மையார்.

காளிகள் தொகைகளும்—காளிக் கூட்டங்களும், கழுதின் ஈட்டமும்—பைசாசக் கூட்டங்களும், கூளிகள் தொகைகளும்—கூளிக் கூட்டங்களும், குழுமி

ஏற்று எழீஇ—ஒருங்கு குழுமி எதிர்த்தெழுந்து, வாளிகள் தொகை சொரீஇ—அம்புக் கூட்டங்களைச் சொரிந்து, மாயற் சூழ்வுறு—திருமாலைச் சூழ்ந்து, நிகரில் வன்மையார் நீள் இகல் புரிந்தனர்—ஒப்பற்ற வன்மையையுடையவர்களாய்ப் பெரும்போர் புரிந்தார்கள். (90)

தண்டுள வலங்கலந் தடம்பொற் றோளுடை
யண்டனுந் தன்படை யனைத்து நேர்கொடு
மண்டமர் புரிதலை மற்ற வெல்லையிற்
கண்டன னகைத்தனன் கடவுள் வீரனே.

கடவுள் வீரன்—வீரபத்திரக்கடவுள், அ எல்லையில்—அச்சமயத்தில், தன் படையனைத்தும்—தமது சேனைகள் முழுவதும், தண் துளவு அலங்கல் அம் தடம் பொன் தோள் உடை அண்டனும்—தண்ணிய துளவமாலையை யணிந்த அழகிய விசாலமான பொற்புயங்களையுடைய திருமாலும், நேர் கொடு—எதிர்த்து நின்று, மண்டு அமர் புரிதலைக் கண்டனன் நகைத்தனன்—நெருங்குகின்ற போர்புரிதலைக் கண்டு சிரித்தருளினர். (91)

வெருவரும் பெருந்திறல் வீரன் றண்டுழா
யரியொடு போர்செய வாதி நாயகன்
றிரைகட லுலகமுஞ் சிறிது தானென
வொருபெருந் தேரினை யுய்த்திட் டானரோ.

வெரு வரும் பெரும் திறல் வீரன்—பகைவர் அஞ்சும் பெருந் திறல்படைத்த வீரபத்திரக் கடவுள், தண் துழாய் அரியொடு போர் செய—தண்ணிய துழாய் மாலையை அணிந்த திருமாலோடு போர் செய்யும்பொருட்டு, ஆதி நாயகன்—ஆதியாகிய சிவபெருமான், திரைகடல் உலகமும் சிறிது என ஒரு பெரும் தேரினை உய்த்திட்டான்—திரையினையுடைய கடல் சூழ்ந்த உலகமுஞ் சிறிது என்று சொல்லும்படி ஒரு பெரிய தேரினை அனுப்பியருளினர். (92)

பாயிரந் தானெனப் பகரும் வேதமா
மாயிரம் புரவிக ளளப்பில் கேதனங்
காயிரும் படைகண்மீக் கலந்த தாகிய
மாயிருந் தேரவண் வல்லை வந்ததே.

தான் பாயிரம் என பகரும்—சிவபெருமானே தான் நுதலிய பிண்டப் பொருள் என்று அறுதியிட்டுரைக்கும், வேதம் ஆம் ஆயிரம் புரவிகள்—வேதமாகிய ஆயிரங் குதிரைகளையும், அளப்பில் கேதனம்—அளவற்ற கொடிகளையும், காய் இரும் படைகள்—பகைவரைக் காய்கின்ற பெரிய படை

களையும், மீ கலந்தது ஆகிய—தன்கட் கொண்டதாகிய, மா இரும் தேர் அவண் வல்லை வந்தது—மிகப் பெரிய தேர் அவ்விடத்துக்கு விரைந்து வந்தது. (93)

தேரவண் வருதலுந் திறல்கொள் வீரனாற்
பாரிடை வீழ்ந்தயர் பங்க யாசன
னாருயிர் பெற்றென வறிவு பெற்றெழீஇ
நேரறு மகம்படு நிகழ்ச்சி நோக்கினான்.

தேர் அவண் வருதலும்—தேர் அவ்விடத்துக்கு வருதலும், திறல் கொள் வீரனால் பாரிடை வீழ்ந்து அயர் பங்கயாசனன்—திறல் படைத்த வீரபத்திரக் கடவுளின் குட்டினாற் பூமியில் விழுந்து அயர்ச்சியுற்ற பிரமதேவர், ஆர் உயிர் பெற்றென அறிவு பெற்று எழீஇ—அரிய உயிரைப் பெற்றாற்போல அறிவு உதிக்கப்பெற்று எழுந்து, நேர் அறு மகம் படு நிகழ்ச்சி நோக்கினான்—ஒப்பில்லாத யாகம் பட்டிருக்கும் அழிவு நிகழ்ச்சியை நோக்கினார். (94)

அரிபொரு நிலைமையு மாடல் வீரன
துருகெழு செற்றமு மும்பர் தன்னிடை
யிரதம்வந் திட்டதும் யாவு நோக்கியே
கருதினன் யானுயுங் கால மீதென.

அரி பொரு நிலைமையும்—திருமால் போர் புரியும் நிலைமையினையும், ஆடல் வீரனது உரு கெழு செற்றமும்—போராடலை மேற்கொண்ட வீரபத்திரக் கடவுளுடைய உட்கு வருகின்ற சீற்றத்தையும், உம்பர் தன்னிடை இரதம் வந்திட்டதும்—ஆகாய வழியாகத் தேர் வந்ததையும், யாவும் நோக்கி—யாவற்றையும் பிரமதேவர் பார்த்து, யான் உயும் காலம் ஈது என கருதினன்—யான் உயிர் உய்யுங்காலம் இதுவேயாம் என்று எண்ணி. (95)

விண்ணிழி தேரிடை விரைவி னான்முக
னண்ணினன் வலவனி னகைமுட் கோல்கொடு
துண்ணென நடத்தியே தொழுது வீரனும்
புண்ணியன் றனக்கிது புகறன் மேயினான்.

விண் இழி தேரிடை—வானினின்றும் இறங்கி வந்த தேரின்மீது, வலவனின்—அதன் சாரதியைப்போல, நான்முகன் விரைவின் நண்ணினன்—பிரமதேவர் விரைவில் ஏறியிருந்து, நகை முட்கோல் கொடு—ஒளிபொருந்திய முட்கோலை ஏந்தி, துண்ணென நடத்தி—விரைவாகத் தேரை ஊர்ந்து, வீரனும் புண்ணியன் தனக்கு—புண்ணியராகிய வீரபத்திரக்கடவுளுக்கு, இது தொழுது புகல்தல் மேயினான்—இதனை வணங்கிக் கூறுவாராயினார். (96)

நீறணி பவளமெய் நிமல னிற்கிதோர்
வீறணி தேர்தனை விரைவி லுய்த்தனன்
றேறலர் தமையடுந் திறல்கொள் வீரநீ
யேறுதி துணைவியோ டென்று போற்றினன்.

நீறு அணி பவள மெய் நிமலன்—திருநீறணிந்த செம்பவளத் திருமேனியை யுடைய சிவபெருமான், அணி வீறு இது ஓர் தேர்தனை நிற்கு விரைவில் உய்த்தனன்—அழகு வீறுகின்ற இஃதொரு தேரைத் தேவரீருக்கு விரைவில் அனுப்பியருளினர்; தேறலர் தமை அடும் திறல்கொள் வீர—சிவபெருமானே பரம்பொருள் என்பதைத் தேருதவர்களை அழிக்குந் திறல்படைத்த மகா வீரரே, நீ துணைவியோடு ஏறுதி என்று போற்றினன்—தேவரீர் துணைவியாருடன் இத் தேரில் இவர்ந்தருளுக என்று துதித்தார். (97)

போற்றின னிரத்தலும் பொருவில் வேதன்மேற்
சீற்றமுள் ளதிலொரு சிறிது நீங்கியே
யாற்றல்கொள் வீரனெம் மன்னை தன்னுட
னேற்றமொ டதன்மிசை யிமைப்பின் மேவினன்.

போற்றினன் இரத்தலும்—துதித்து இரந்து வேண்டுதலும், பொரு இல் வேதன்மேல் சீற்றம் உளதில்-திருமால்போலப் பொருதல் இல்லாத பிரமாவின்மீது கொண்டதாகிய சீற்றத்தில், ஒரு சிறிது நீங்கி—ஒரு சிறிது தணிந்து, ஆற்றல் கொள் வீரன்—பேராற்றல் படைத்த வீரபத்திரக்கடவுள், எம் அன்னை தன்னுடன்—எமதன்னையாகிய வீரபத்திரையுடன், அதன்மிசை ஏற்றமொடு இமைப்பில் மேவினன்—அத் தேரின்மீது மிக்க உத்துங்கத்தோடு விரைவில் இவர்ந்தருளினர்.

உத்துங்கம்—உயர்ச்சி. (98)

மேவிய காலையில் வெலற்க ருந்திறற்
சேவக வடியனேன் றிறத்தைக் காண்கெனத்
தாவக றேரினைத் தண்டு ழாய்முடிக்
காவலன் முன்னுறக் கடாவி யுய்ப்பவே.

மேவிய காலையில்—தேரின்மீதெழுந்தருளிய சமயத்தில், வெலற்கு அரும் திறல் சேவக—வெல்லுதற்கரிய திறலினையுடைய மகா வீரரே, அடியனேன் திறத்தை காண்க என—அடியேனுடைய சாமர்த்தியத்தைக் கண்டருள்க என்று, கடாவி—குதிரைகளை நடாத்தி, தா அகல் தேரினை—குற்றமற்ற தேரை, தண் துழாய் முடிக் காவலன் முன்னுற உய்ப்ப—தண்ணிய துழாய் முடியினை யுடைய யாகக் காவலரான திருமாலின் எதிரே செலுத்த. (99)

வரனுறு நான்முக வலவ னுய்த்திடு
திருமணித் தேர்மிசைத் திகழ்ந்த வீரன்முன்
னொருதனி வையமே லும்பர்க் காகவே
புரமட வருவதோர் புராரி போன்றனன்.

வரன் உறு நான்முக வலவன் உய்த்திடும்—மேன்மை மிக்க பிரமதேவராகிய சாரதி செலுத்துகின்ற, திருமணி தேர்மிசை திகழ்ந்த வீரன்—அழகிய மணிகட்டிய தேரின்மீது விளங்கிய வீரபத்திரக்கடவுள், முன் ஒரு தனி வையம் மேல்—முன்னொரு காலத்தில் ஒப்பற்றதொரு பூமியாகிய தேரின் மீது, உம்பர்க்காக—தேவர்கள் பொருட்டு, புரம் அட வருவது ஓர் புராரி போன்றனன்—முப்புரத்தை அடுதற்கு எழுந்தருளுதலைச் செய்த ஒப்பற்ற புராந்தகராகிய உருத்திரமூர்த்தியை நிகர்த்தருளினர். *(100)*

எல்லையில் பெருந்திற லிறைவ னேறுதே
ரல்லியங் கமலமே லண்ண லுய்த்திடச்
சொல்லருந் தானையின் றொகையை நீக்கியே
வல்லைசென் றிறுத்ததம் மாயன் முன்னரே.

எல்லையில் பெரும் திறல் இறைவன் ஏறு தேர்—அளவற்ற பெருந் திறல் படைத்த வீரபத்திரக்கடவுள் இவர்ந்தருளிய தேர், அல்லி அம் கமலமேல் அண்ணல் உய்த்திட—அகவிதழ் பொருந்திய அழகிய தாமரையாசனரான பிரமதேவர் செலுத்த, சொல் அரும் தானையின் தொகையை நீக்கி—சொல்லுதற்கரிய பூதசேனையின் கூட்டத்தைக் கடந்து, வல்லை சென்று—விரைந்து சென்று, அ மாயன் முன் இறுத்தது—அத் திருமால் எதிரில் நின்றது. *(101)*

பாருல களவினும் பரந்த பைம்பொனந்
தேரவ ணெதிர்தலுந் திருவு லாவிய
காருறழ் மேனியங் கண்ணன் கண்ணுதல்
வீரனை நோக்கியோர் மொழிவி ளம்பினான்.

பார் உலகு அளவினும் பரந்த—பூவுலகப் பரப்பினும் விசாலமான, பைம் பொன் அம் தேர்—பசிய அழகிய பொற்றேர், அவண் எதிர்தலும்—அங்கே தம்மெதிரில் வருதலும், திரு உலாவிய கார் உறழ் மேனி அம் கண்ணன்—இலக்குமி வாழ்கின்ற மேகத்தையொத்த மேனியையும் அழகிய கண்ணையுமுடைய திருமால், கண் நுதல் வீரனை நோக்கி—நெற்றிக்கண்ணையுடைய வீரபத்திரக்கடவுளை நோக்கி, ஓர் மொழி விளம்பினான்—ஒரு வார்த்தை பேசினார். *(102)*

### வேறு

தெழித்த வார்புனற் கங்கையஞ் சடைமுடிச் சிவனைப்
பழித்த தக்கனை யடுவதல் லாலவன் பாலி
லிழுக்கி றேவரை யடுவதென் வேள்வியை யெல்லா
மழித்த தென்னைநீ புகலுதி யாலென வறைந்தான்.

தெழித்த வார் புனல் கங்கை அம் சடைமுடி—முழங்கி ஒழுகிய நீரினை யுடைய கங்காநதியைத் தரித்த அழகிய சடைமுடியையுடைய, சிவனைப் பழித்த—சிவபெருமானை நிந்தித்த, தக்கனை அடுவது அல்லால்—தக்கனை அழிப்ப தன்றி, அவன் பாலில் இழுக்கில் தேவரை அடுவது என்—அவன் சார்பி லிருந்த ஒரு குற்றமுமில்லாத சாதுக்களான தேவர்களை அழிப்பது என்ன நீதி; வேள்வியை எல்லாம் அழித்தது என்னை—அருமந்த யாகம் முழுவதையும் அழித்த காரணம் என்னை; நீ புகலுதி என அறைந்தான்—நீர் விடை பகருக என்று வினவினர். *(103)*

பாடல் சான்றிடு மாலிது புகறலும் பலரு
நாடு தொல்புகழ் வீரனன் றிதுவென நகையா
வீடு சேரிமி லேறுடன் வயப்புலி யேறொன்
றாடல் செய்தல்போ லொருமொழி யுரைத்தன னன்றே.

பாடல் சான்றிடும் மால் இது புகல்தலும்—பாடுதற்குரிய கீர்த்தி மிக்குள்ள திருமால் இதனைச் சொல்லுதலும், பலரும் நாடு தொல் புகழ் வீரன் இது நன்று என நகையா—பலராலும் விரும்பப்படுகின்ற தொன்மையாகிய புகழினை யுடைய வீரபத்திரக்கடவுள் இது நன்றாயிருக்கிறது என்று நகைத்து, ஈடு சேர் இமில் ஏறுடன்—வலிமை பொருந்திய முரிப்பினையுடைய ஓர் எருதுடன், வயப்புலி ஏறு ஒன்று—சிங்கேறொன்று, ஆடல் செய்தல் போல்—உரையாடி விளையாடுதல்போல, ஒருமொழி உரைத்தனன்—ஒரு வார்த்தை கூறி யருளினர். *(104)*

எல்லை யில்லதோர் பரமனை யிகழ்ந்தவ னியற்று
மல்லல் வேள்வியி லவிநுகர்ந் தோர்க்கெலா மறைமுன்
சொல்லு தண்டமே புரிந்தன நின்னையுந் தொலைப்பாம்
வல்லை யேலது காத்தியென் றனனுமை மைந்தன்.

எல்லை இல்லது ஓர் பரமனை இகழ்ந்தவன் இயற்றும்—பிரமாணங்களால் எல்லைப்படுத்தி அறியமுடியாத ஒப்பற்ற பரமபதியை இகழ்ந்த தக்கன் இயற்றுநின்ற, அல்லல் வேள்வியில் அவி நுகர்ந்தோர்க்கு எலாம்—அல்லலை வருவிக்கும் யாகத்தில் அவியை உண்டவர்களுக்கெல்லாம், மறை முன் சொல்லு தண்டமே புரிந்தனம்—வேதம் முன்னமே சொல்லாநின்ற தண்டத்

தையே செய்தேம்; நின்னையும் தொலைப்பாம்–உன்னையுங் கொல்வோம்; வல்லையேல்–நீ உன்னைப் பாதுகாக்க வல்லையேல், அது காத்தி–அதனைச் செய்குதி; என்றனன் உமை மைந்தன்–என்று கூறியருளினார் உமை புதல்வ ராகிய வீரபத்திரக்கடவுள். (105)

வீர னிங்கிது புகறலுஞ் செங்கண்மால் வெகுண்டு
பார வெஞ்சிலை குனித்தன னாணொலி படுத்தி
யாரும் விண்முகி லொன்றுதன் வில்லொடு மப்பு
மாரி பெய்தெனப் பகழியாற் பூதரை மறைத்தான்.

வீரன் இங்கு இது புகல்தலும்–வீரபத்திரக் கடவுள் இங்கே இதனைக் கூறியருளுதலும், செங்கண் மால் வெகுண்டு–சிவந்த கண்ணையுடைய திருமால் கோபித்து, பார வெம் சிலை குனித்தனன் நாண் ஒலி படுத்தி–பாரமாகிய கொடிய வில்லை வளைத்து நாணொலி செய்து, ஆரும் விண்முகில் ஒன்று–நீராரும் வானத்துப் பருவ முகிலொன்று, தன் வில்லொடு–தனது இந்திர வில்லால், அப்பு மாரி பெய்தென–அம்புமாரியைப் பொழிந்தாற்போல, பகழியால் பூதரை மறைத்தான்–பிரயோகஞ் செய்த அம்பு மழையாற் பூதர்களை முழுக்காட்டினார்.

அப்பு மாரி–நீர்மழை; அம்பு–நீர். (106)

கணங்க டம்மிசை மால்சரம் பொழிதலுங் காணூஉ
வணங்கு தன்னொடு நகைசெய்து வீரனு மமலன்
பணங்கொள் பன்றலைப் பன்னகக் கிறைவனாற் படைத்த
குணங்கொண் மேருவே யன்னதோர் பெருஞ்சிலை குனித்தான்.

கணங்கள் தம்மிசை மால் சரம் பொழிதலும்–பூதகணங்கள்மீது திருமால் அம்புமழை பொழிதலும், காணூஉ–அதனைக் கண்டு, வீரனும் அமலன் அணங்கு தன்னொடு நகை செய்து–வீரபத்திரக்கடவுள் வீரபத்திரையோடு சேர்ந்து சிரித்து, பணம் கொள் பல் தலைப் பன்னகக்கு இறைவனால் படைத்த–படங்களையுடைய பலவாகிய தலைகள் பொருந்திய பாம்புகளின் இறைவனாகிய ஆதிசேடனால் ஆன, குணம் கொள்–நாணைக் கொண்ட, மேரு அன்னது ஓர் பெரும் சிலை குனித்தான்–மேருமலையை ஒத்ததொரு பெரிய வில்லை வளைத்தருளினார். (107)

செற்ற மீக்கொள வையன்வில் வாங்கினன் சிறிதே
பற்றி நாணொலி யெடுத்தலு மொடுங்கின பரவை
பொற்றை யாவையுங் கீண்டன துளங்கின புவன
மிற்றை வைகலோ விறுதியென் றயர்ந்தன ரெவரும்.

செற்றம் மீக்கொள—கோபம் அதிகரிக்க, ஐயன் வில் வாங்கினன்—வீர பத்திரக்கடவுள் வில்லை வளைத்து, நாண் பற்றி—நாணிலே தொட்டு, சிறிது ஒலி எடுத்தலும்—சிறிதே ஒலி எழுப்புதலும், பரவை ஒடுங்கின—சமுத்திரங்கள் ஒடுங்கின; பொற்றை யாவையும் கீண்டன—மலைகள் யாவும் பிளந்தன; புவனம் துளங்கின—புவனங்கள் நடுங்கின; இற்றை வைகலோ இறுதி என்று எவரும் அயர்ந்தனர்—இத்தினந்தானோ முடிவு தினம் என்று யாவரும் அயர்ந்தார்கள். (108)

கோளி லாகிய புற்றிடை யோரராக் குறுகி
மீளில் வெஞ்சினக் குழவிகொண் டேகலின் வீரன்
றோளில் வாங்கிய சிலையினிற் றூணியிற் றுதைந்த
வாளி வாங்கியுய்த் தொருதனி மாயனை மறைத்தான்.

கோள் இல் ஆகிய புற்றிடை ஓர் அராக் குறுகி—கொள்ளும் உறைவிட மாகிய புற்றின்கண்ணே ஒரு பாம்பு சென்று, மீள் இல் வெம் சினம் குழவி கொண்டு ஏகலின்—தணிவில்லாத கொடிய கோபத்தையுடைய குட்டிகளைக் கௌவிக்கொண்டு மீளுமாறுபோல, தூணியில் துதைந்த வாளி வீரன் தோளில் வாங்கி—அம்பறாத் தூணியிற் செறிந்து நிறைந்திருக்கும் அம்புகளை வீரபத்திரக் கடவுள் தமது திருக்கரத்தினால் எடுத்து, வாங்கிய சிலையின் உய்த்து—வளைத்த வில்லினாற் செலுத்தி, ஒரு தனி மாயனை மறைத்தான்—ஒரேயொருவராய் எதிர்ந்த திருமாலை மறைத்தருளினர். (109)

செங்க ணான்றனை மறைத்தபின் மற்றவன் செலுத்துந்
துங்க வெங்கணை யாவையும் பொடிபடத் தொலைப்ப
வங்கொ ராயிரம் பகழியை யைதெனப் பூட்டி
யெங்க ணாயகன் திருமணிப் புயத்தினே ரெய்தான்.

செங்கணன் தனை மறைத்த பின்—திருமாலைப் பாணங்களால் மறைத்த பின்பு, அவன் செலுத்தும் துங்க வெம் கணை யாவையும்—அத் திருமால் செலுத்தாநின்ற உயர்ந்த கொடிய பாணங்கள் முழுவதையும், பொடிபட தொலைப்ப—துகள்படத் தொலைவு செய்ய, அங்கு ஓராயிரம் பகழியை ஐதெனப் பூட்டி—அப்பொழுது திருமால் ஓராயிரம் பாணங்களை விரைந்து பூட்டி, எங்கள் நாயகன் திரு மணிப் புயத்தின் நேர் எய்தான்—எங்கள் நாயகராகிய வீரபத்திரக்கடவுளுடைய அழகிய திருப்புயத்துக்கு நேரே செலுத்தினர். (110)

எய்யும் வெங்கணை யாவையும் வீரரு ளிறையா
மைய ணுசுக மாயிர மோச்சின னகற்றி
யொய்யெ னக்கரி யோனுதன் மீமிசை யொருதன்
வெய்ய பொத்திர மேவின னவனுளம் வெருவ.

எய்யும் வெம் கணை யாவையும்—திருமால் விடுக்கும் பாணங்களனைத்தையும், வீரருள் இறையாம் ஐயன்—வீரசிரேட்டராய வீரபத்திரக்கடவுள், ஆயிரம் ஆசுகம் ஓச்சினன் அகற்றி—ஆயிரம் அம்புகளை விடுத்து விலக்கி, ஒய்யென கரியோன் நுதல் மீமிசை—விரைந்து திருமாலின் நெற்றியின்மீது, ஒரு தன் வெய்ய பொத்திரம்—தம்முடைய வெவ்விய அக்கினியம்பொன்றை, அவன் உளம் வெருவ ஏவினன்—அந்தத் திருமால் உள்ளம் வெருவ விடுத்தருளினர். (111)

ஏவு தொல்கணை மாயவ னுதலிடை யிமைப்பின்
மேவு கின்றுழி யனையவன் றளர்தலும் வீரன்
வாவு தேர்மிசை யூன்றினன் சிலையைவார் கணையுந்
தூவு கின்றிலன் மாலிடர் நீங்குறுந் துணையும்.

ஏவு தொல் கணை—ஏவிய தொன்மையாகிய பாணம், மாயவன் நுதல் இடை இமைப்பில் மேவுகின்றுழி—திருமாலின் நெற்றியின் கண்ணே இமைப்பொழுதிற் புகும்பொழுது, அனையவன் தளர்தலும்—அத் திருமால் தளர்ச்சியுறுதலும், வீரன்—வீரபத்திரக்கடவுள், வாவு தேர்மிசை—ஊருகின்ற தேரின்மீது, சிலையை ஊன்றினன்—வில்லை ஊன்றி, மால் இடர் நீங்குறும் துணையும்—திருமாலின் தளர்ச்சி நீங்கும் அளவும், வார் கணையும் தூவுகின்றிலன்—நீண்ட பாணமெதுவுஞ் செலுத்துகின்றிலராயினர். (112)

இன்ன லத்துணை யகன்றுமா லெதிர்தலு மெமது
மன்னு நேர்ந்தன னிருவரும் வரிசிலை வளையாப்
பொன்னின் வாளிகள் பொழிந்தனர் முறைமுறை பொருதா
ரன்ன பான்மையர் செய்தபோர் யாவரே யறைவார்.

அத்துணை—அப்பொழுது, இன்னல் அகன்று—தளர்ச்சி நீங்கி, மால் எதிர்தலும்—திருமால் எதிர்த்தலும், எமது மன்னும் நேர்ந்தனன்—எமது தலைவராகிய வீரபத்திரக்கடவுளும் எதிர்த்தருளினர்; இருவரும் வரிசிலை வளையா—இருவரும் வரிந்த விற்களை வளைத்து, பொன்னின் வாளிகள் முறைமுறை பொழிந்தனர்—பொன்போலுஞ் சிறந்த அம்புகளை முறைமுறையே பொழிந்து, பொருதார்—போர்புரிந்தார்கள்; அன்ன பான்மையர் செய்த போர் யாவரே அறைவார்—அத் தகுதியுடையார் இருவருஞ் செய்த போரின் இயல்பை எடுத்துச் சொல்ல வல்லவர் யாவர். (113)

மாறு கொண்டபோ ரிவ்வகை புரிதலும் வயத்தால்
வீறு கொண்டுயர் முக்கணன் வெய்யதீ வடவைக்
கூறு கொண்டதோர் படையினை யோச்சலுங் குவட்டி
லேறு கொண்டலை யனையவ னுரத்திலெய் தியதே.

மாறு கொண்ட போர் இவ்வகை புரிதலும்—ஒருவரோடொருவர் மாறு கொண்ட போரை இவ்வாறு நடத்தும்போது, வயத்தால் வீறு கொண்டு உயர் முக்கணன்—வெற்றியினால் வீறுகொண்டுயர்ந்த மூன்று கண்களையுடைய வீரபத்திரக்கடவுள், வெய்ய தீ வடவை கூறு கொண்டது ஓர் படையினை ஓச்சலும்—கொடிய வடவாமுகாக்கினியின் அம்சத்தைக் கொண்டதோர் அக்கினிப் படையைத் திருமால்மீது விடுத்தலும், குவட்டில் ஏறு கொண்டலை அனையவன் உரத்தில் எய்தியது—மலைமீதிவரும் மேகத்தை ஒத்த திருமாலின் மார்பின்மீது சென்று அது தாக்கியது. (114)

எய்து காலையி லுளம்பதை பதைத்திட விரங்கி
வெய்து யிர்ப்புட னுணர்வொரீஇ யுளநனி மெலிந்து
நொய்தின் மையலை நீங்கலு முகுந்தனை நோக்கிச்
செய்தி போரென வுரைத்தனன் சரபமாந் திறலோன்.

எய்து காலையில்—மார்பில் வந்து தாக்கிய சமயத்தில், உளம் பதை பதைத்திட இரங்கி—மனம் பதைபதைக்க இரங்கி, வெய்து உயிர்ப்புடன் உணர்வு ஒரீஇ—வெம்மைத்தாகிய நெட்டுயிர்ப்போடு அறிவு நீங்கி, உளம் நனி மெலிந்து—உளம் மிக மெலிந்து, நொய்தின் மையலை நீங்கலும்—பின்னர் விரைவில் மயக்கந் தெளிதலும், சரபமாம் திறலோன் முகுந்தனை நோக்கி—சரபமாகுந் திறல்படைத்த வீரபத்திரக் கடவுள் திருமாலை நோக்கி, போர் செய்தி என உரைத்தனன்—போர் செய்வாயாக என்று கூறியருளினார். (115)

மெய்வ தத்தினை யாவர்க்கும் விரைவினி லிழைக்குந்
தெய்வ தப்படை முழுவதுஞ் செங்கண்மால் செலுத்த
வவ்வ னைத்தையு மனையவப் படைகளா லகற்றிக்
கவ்வை முற்றின னுதல்விழி யளித்திடுங் கடவுள்.

மெய் வதத்தினை யாவர்க்கும் விரைவினில் இழைக்கும்—உடல் நாசத்தை யாவருக்கும் விரைவில் விளைக்கும், தெய்வதப் படை முழுவதும் செங்கண் மால் செலுத்த—தெய்வப் படைக்கலங்களனைத்தையுஞ் செம்மையாகிய கண்களையுடைய திருமால் செலுத்த, அவ் அனைத்தையும் அனைய அ படைக ளால் அகற்றி—அவை அனைத்தையும் அவற்றையொத்த அவ்வத் தெய்வப் படைகளால் விலக்கி, நுதல் விழி அளித்திடும் கடவுள் கவ்வை முற்றி னன்—சிவபெருமானுடைய நெற்றிக்கண் அளித்தருளிய வீரபத்திரக்கடவுள் செய்யுங் காரியத்தைச் செய்து முடித்தருளினார்.

கவ்வை முற்றினன்—பெருமுழக்கிட்டான், என்றுரைப்பது முண்டு. (116)

### வேறு

தேன்றிகழ் பங்கயத் திருவி னாயகத்
தோன்றறன் படைக்கலந் தூண்ட வெங்கணுஞ்
சான்றென நின்றவன் றனயன் வீரமாம்
வான்றிகழ் படைதொடா வல்லை மாற்றவே.

தேன் திகழ் பங்கயத் திருவின் நாயகத் தோன்றல்–தேன் விளங்குகின்ற தாமரை மலரிலிருக்கும் இலக்குமிக்கு நாயகரான திருமால், தன் படைக் கலம் தூண்ட–தமது நாராயணப் படையைச் செலுத்த, எங்கணும் சான் றென நின்றவன் தனயன்–எவ்விடத்துஞ் சான்ருக நின்றருளுஞ் சிவபெருமா னுடைய குமாரராகிய வீரபத்திரக்கடவுள், வான் திகழ் வீரமாம் படை தொடா–உயர்ச்சி விளங்குகின்ற வீரபத்திரப் படையைத் தொடுத்து, வல்லே மாற்ற–விரைந்து அதனை விலக்க. (117)

அரியதன் பின்னுற வாதி வீரன்மேற்
பொருகணை யளப்பில பொழிய மாற்றியோர்
சரமது செலுத்திமால் சார்ங்க மொன்றையு
மிருதுணி படுத்தின னிறைவன் மைந்தனே.

அரி அதன் பின்னுற–திருமால் அதன்பின்பு, ஆதி வீரன் மேல் பொரு கணை அளப்பில பொழிய–ஆதியாகிய வீரபத்திரக்கடவுள் மீது பொருகின்ற அளவற்ற அம்புகளைப் பொழிய, இறைவன் மைந்தன் மாற்றி–சிவகுமாரர் அவைகளை விலக்கி, ஓர் சரமது செலுத்தி–ஒரு பாணத்தை விடுத்து, மால் சார்ங்கம் ஒன்றையும் இருதுணி படுத்தினன்–திருமாலின் ஒன்ருகிய சார்ங்கம் என்னும் வில்லையும் இரண்டு துண்டு செய்தருளினர். (118)

பின்னுமத் துணைதனிற் பெருந்தி றற்பெயர்
முன்னவ னிருகணை முறையி னேச்சியே
பன்னக மிசைத்துயில் பகவ னூர்திதன்
பொன்னிருஞ் சிறையினைப் புவியில் வீட்டினன்.

பின்னும் அத்துணை தனில்–பின்னரும் அப்பொழுதுதானே, பெருந் திறல் பெயர் முன்னவன்–முதல்வராகிய வீரபத்திரக்கடவுள், முறையின் இருகணை ஓச்சி–முறைப்படி இரண்டு அம்புகளைச் செலுத்தி, பன்னகம் மிசை துயில் பகவன் ஊர்தி தன்–சர்ப்ப சயனத்திலுறங்குந் திருமாலின் ஊர்தியாகிய கருடனது, பொன் இரும் சிறையினை புவியில் வீட்டினன்–பொன்மயமாகிய பெரிய சிறகுகளை வெட்டிப் பூமியில் வீழ்த்தியருளினர். (119)

ஆயதோ ரமைதியி லாழி யங்கையான்
மாயவ னாதலின் வரம்பில் கண்ணுரை
மேயின காதலின் விதிப்ப வீரன்முன்
பாயிருண் முகிலெனப் பரம்பி னரரோ.

ஆயது ஓர் அமைதியில்–அவ்வாருயதொரு சமயத்தில், ஆழி அங்கை யான்–சக்கரம் ஏந்திய அழகிய கையினையுடைய திருமால், மாயவன் ஆதலின்–

மாயம் வல்லவராதலினுலே, வரம்பு இல் கண்ணரை மேயின காதலின் விதிப்ப—அளவற்ற கண்ணர்களைப் பொருந்திய காதலோடு உண்டாக்க, வீரன் முன்—வீரபத்திரக்கடவுளின் எதிரில், பாய் இருள் முகிலெனப் பரம்பினர்—பரந்த கரிய முகிற்படலம்போல அக் கண்ணர்கள் எங்கும் பரவி நின்ருர்கள். (120)

அங்கவர் யாரையு மமலன் வெய்யகட்
பொங்கழல் கொளுவிநுண் பொடிய தாக்கலும்
பங்கய விழியினுன் பரம னன்றருள்
செங்கையி லாழியைச் செல்கென் றேவினுன்.

அங்கு அவர் யாரையும்—அவ்விடத்தில் அம் மாயக் கண்ணர்கள் அனைவரையும், அமலன் வெய்ய கண் பொங்கு அழல் கொளுவி—வீரபத்திரக்கடவுள் தமது அக்கினிக்கண்ணிலிருந்து பொங்குகின்ற அழலைக் கொளுத்தி, நுண் பொடியது ஆக்கலும்—நுண்பொடி செய்தலும், பங்கய விழியினுன்—தாமரைக் கண்ணரான திருமால், பரமன் அன்று அருள் செங்கையில் ஆழியை—சிவபெருமான் அந்நாளில் அளித்தருளிய சிவந்த கையில் உள்ள சக்கரத்தை, செல்க என்று ஏவினுன்—செல்லுக என்று வீரபத்திரக்கடவுள்மீது விடுத்தார். (121)

விடுத்ததோர் திகிரியை வீர னங்கையாற்
பிடித்தவண் விழுங்கினன் பெயர்த்து மாயவ
னெடுத்திடு கதையினை யெறிய வன்னது
தடுத்தனன் றனதுகைத் தடம்பொற் றண்டினுல்.

விடுத்தது ஓர் திகிரியை—திருமால் விடுத்த ஒப்பற்ற சக்கரத்தை, வீரன் அம் கையால் பிடித்து அவண் விழுங்கினன்—வீரபத்திரக்கடவுள் அழகிய கையினுற் பற்றி அவ்விடத்தில் விழுங்கியருளினுர்; மாயவன் பெயர்த்தும்—திருமால் மீண்டும், எடுத்திடு கதையினை எறிய—தாங்கியிருக்குந் தண்டாயுதத்தை எறிய, தனது கை தடம் பொன் தண்டினுல் அன்னது தடுத்தனன்—தமது கைக்கண்ணுள்ள விசாலமான அழகிய தண்டினுல் அத் தண்டாயுதத்தைத் தடுத்தருளினுர். (122)

### வேறு

சங்கார் செங்கைப் புங்கவ னேவுந் தண்டம்போய்
மங்கா வங்கண் வீழ்வது காணு வாள்வாங்கிப்
பொங்கா நின்றே யுய்த்திட வெய்தும் பொழுதின்க
ணுங்கா ரஞ்செய் திட்டன னம்மா வுமைமைந்தன்.

சங்கு ஆர் செங்கை புங்கவன் ஏவும் தண்டம் போய் மங்கா அங்கண் வீழ்வது காணு—சங்கு பொருந்திய செங்கையையுடைய திருமால் தாம் ஏவுந்

தண்டானது சென்று வலி குன்றி அவ்விடத்தில் வீழ்ந்து கிடப்பதைக் கண்டு, வாள் வாங்கி—வாட்படையை எடுத்து, பொங்கா நின்று—கோபங்கொண்டு, உய்த்திட எய்தும் பொழுதின்கண்—அதனைப் பிரயோகஞ் செய்தற்குச் செல்லுஞ் சமயத்தில், உமை மைந்தன் உங்காரம் செய்திட்டனன்—உமை புதல்வராகிய வீரபத்திரக்கடவுள் ஒருதரம் உங்காரஞ் செய்தருளினர்.

உங்காரம்—உறுக்குதல். *(123)*

ஒய்யென் றையன் சீற்றமொ டங்க ணுங்காரஞ்
செய்யுங் காலத் தோவிய மென்னச் செயனீங்கிக்
கையும் வாளு மாயவ னின்றான் கடலூடே
வையம் முண்டு கண்டுயில் கின்ற மாமாயன்.

ஒய் என்று ஐயன் சீற்றமொடு அங்கண் உங்காரம் செய்யுங் காலத்து—விரைந்து வீரபத்திரக்கடவுள் கோபத்தோடு உங்காரஞ் செய்யாநின்ற சமயத்தில், வையம் உண்டு கடலூடு கண் துயில்கின்ற மாமாயன்—உலகினை யுண்டு கடலிற் கண்உறங்குகின்ற மாமாயனுன திருமால், செயல் நீங்கி—எவ் வித செயலுமின்றி, கையும் வாளுமாய் ஓவியம் என்ன அவண் நின்றான்—கையும் வாளுமாய்ச் சித்திரம்போல அசைவற்று அவ்விடத்தில் நின்றார். *(124)*

சான்றகன் மாய னச்சுற வெய்தித் தளர்காலை
மூன்றுகண் வீரன் யாது நினைந்தோ முனிவெய்த
வான்றதொர் செற்ற நீங்குதி யென்னு வண்டத்தே
தோன்றிய தம்மா கண்ணுத லீசன் சொல்லொன்றே.

சான்று அகல் மாயன் அச்சுறவு எய்தி—சான்றுக்குரிய இலக்கணம் நீங்கிய திருமால் அச்சங்கொண்டு, தளர்காலை—தளருகின்ற சமயத்தில், மூன்று கண் வீரன் யாது நினைந்தோ முனிவு எய்த—மூன்று கண்களையுடைய வீரபத்திரக் கடவுள் யாது கருதியோ அச்சமயத்திலுங் கோபம் கொள்ள, ஆன்றது ஓர் செற்றம் நீங்குதி என்னு—மிக்கதொரு கோபத்தை நீங்குதி என்று, கண்ணுதல் ஈசன் சொல் ஒன்று—நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமான் அருளிய அசரீரி வாக்கொன்று, அண்டத்துத் தோன்றியது—ஆகாயத்திலே தோன்றியது.

சூதுபோரிற் சான்றகன்று சபிக்கப்பட்டமைபற்றி, சான்றகல் மாயன் என்றார். *(125)*

அந்தர மீதே வந்திடு சொல்லங் கதுகேளா
வெந்தை மனங்கொள் வெஞ்சின நீங்கி யிடுபோழ்தி
லந்தின் மணித்தே ருய்த்திடு பாக னதுநோக்கி
வந்தனை செய்தே போற்றியொர் மாற்றம் வகுப்பானல்.

அந்தரம் மீது வந்திடு சொல் அது அங்கு கேளா—ஆகாயத்தின்கண்ணே எழுந்த அசரீரி வாக்காகிய அதனை அங்கே கேட்டு, எந்தை மனங்கொள் வெம் சினம் நீங்கியிடு போழ்தில்—எம் பிதாவாகிய வீரபத்திரக்கடவுள் மனத்தின்கட் கொண்ட கொடிய கோபந் தணிந்தருளிய சமயத்தில், மணித்தேர் உய்த்திடு பாகன் அது நோக்கி—மணிகட்டிய தேரைச் செலுத்தும் பாகராகிய பிரமதேவர் அச்சமயத்தைப் பயன்படுத்திக்கொண்டு, வந்தனை செய்து போற்றி—வீரபத்திரக்கடவுளை வந்தனை செய்து துதித்து, ஓர் மாற்றம் வகுப்பான்—ஒரு வார்த்தை உரைப்பாராயினர். (126)

அந்தில், அசை.

### வேறு

அறத்தினை யொருவிச் செல்லு மழிதக னுலக மெல்லா
மிறத்தலை யெய்த விங்ங னியற்றிய மகத்தின் மேவிப்
பெறத்தகு மவியை நுங்கும் பேதையேன் பிழையை யெல்லாம்
பொறுத்தனை கொண்மோ வென்னுப் பொன்னடிக் கமலம் பூண்டான்.

அறத்தினை ஒருவிச் செல்லும் அழிதகன்—தருமத்தை விலகி நடக்கும் அழியுந் தகுதியையுடைய தக்கன், உலகம் எல்லாம் இறத்தலை எய்த—உலகமெல்லாம் அழியும்படி, இங்ஙன் இயற்றிய மகத்தில் மேவி—இங்கே செய்த யாகத்திற் பங்குபற்றி, பெறத்தகும் அவியை—பெறத்தகுவது போன்று தோன்றிய அவிப்பாகத்தை, நுங்கும் பேதையேன் பிழையை எல்லாம்—நுகரும் அறிவிலியாகிய என் பிழைகள் அனைத்தையும், பொறுத்தனை கொள் என்னு—பொறுத்தருள்க என்று, பொன் அடிக் கமலம் பூண்டான்—வீரபத்திரக் கடவுளுடைய அழகிய திருவடித் தாமரைகளைச் சிரமேற்கொண்டார். (127)

பூண்டிடு முலகந் தந்த புங்கவன் றன்னை நோக்கி
யாண்டகை வீர னஃதே யாகவென் றருள லோடு
நீண்டதோர் மாய னன்னு னீடரு ணிலைமை காணூஉ
வீண்டிது கால மென்னு வேத்தின னியம்ப லுற்றுன்.

பூண்டிடும் உலகம் தந்த புங்கவன் தன்னை ஆண் தகை வீரன் நோக்கி—தமது திருவடிகளைத் தலைமேற் கொள்ளுகின்ற உலகைப் படைத்த பிரமதேவரை ஆண்டகையாகிய வீரபத்திரக்கடவுள் நோக்கி, அஃதே ஆக என்று அருளலோடும்—அவ்வாறேயாகுக என்றருளிச் செய்தலும், நீண்டதோர் மாயன் அன்னுன் நீடு அருள் நிலைமை காணூஉ—ஒப்பற்ற திருநெடுமால் அவ் வீரபத்திரக் கடவுளுடைய மிக்க கருணைத்திறத்தினைக் கண்டு, ஈண்டு இது காலம் என்னு—இவ்விடத்திலே தமக்கும் இதுவே சமயம் என்று, ஏத்தினன் இயம்பலுற்றுன்—துதித்துச் சொல்லத் தொடங்கினுர். (128)

பாரவெஞ் சிலையும் வீட்டிப் பல்படைக் கலமுஞ் சிந்திச்
சேரல ருயிர்க ளுண்ட திகிரியுஞ் செல்ல நுங்கிப்
போரிடை யென்னையும் வென்று புகழ்புனைந் திடுதி யென்றால்
வீரநின் றகைமை யாரே முடிவுற விளம்ப வல்லார்.

பார வெம் சிலையும் வீட்டி—பாரமாகிய பகைவர்க்கு வெம்மை செய்யுஞ் சார்ங்கம் என்னும் என் வில்லையும் ஒடித்து, பல் படைக்கலமும் சிந்தி—பல வாகிய எனது படைக்கலங்களையும் அழித்து, சேரலர் உயிர்கள் உண்ட திகிரியும் செல்ல நுங்கி—பகைவர்களின் உயிர்களைப் பருகிய எனது சக்க ராயுதத்தையும் உட்செல்லும்படி விழுங்கி, போரிடை எனையும் வென்று—யுத்தத்தில் என்னையும் வென்று, புகழ் புனைந்திடுதி என்றால்—புகழை ஆபரண மாகத் தரித்தருள்வீர் ஆயினபோது, வீர—மகாவீரரே, நின் தகைமை யாரே முடிவுற விளம்ப வல்லார்—தேவரீரின் தகைமையை யாவர்தாம் எடுத்து முடிவுபோக மொழிய வல்லவர். *(129)*

ஆசறு நெறியி னீங்கு மயன்மக னியற்று கின்ற
பூசனை விரும்பி வேள்வி புகுந்தனன் புந்தி யில்லேன்
மாசறு புகழாய் நின்னான் மற்றிது பெற்றே னந்தோ
வீசனை யிகழ்ந்தோர் தம்பா லிருப்பரோ வெண்ண மிக்கோர்.

ஆசறு நெறியின் நீங்கும்—குற்றமற்ற சன்மார்க்க நெறியினின்றும் நீங்கா நிற்கின்ற, அயன் மகன் இயற்றுகின்ற பூசனை விரும்பி—தக்கன் செய்கின்ற முதற் பூசையை அவாவி, புந்தியில்லேன் வேள்வி புகுந்தனன்—புத்தியீன னாகிய யான் அவனுடைய யாகத்திற் பிரவேசித்தேன்; மாசறு புகழாய் நின்னால் இது பெற்றேன்—ஆகையினாலே மாசற்ற புகழினையுடைய பெருமானே தேவரீரால் இத் தண்டனையைப் பெற்றேன்; அந்தோ—ஐயோ, எண்ணம் மிக்கோர்—சிந்தனையால் மேம்பட்டவர்கள், ஈசனை இகழ்ந்தோர் தம்பால் இருப்பரோ—சிவபெருமானை நிந்திக்கும் சிவ நிந்தகர்கள் மத்தியில் இருப்பார்களா. *(130)*

ஆதிநா யகனை யொல்லா ரனையவர்ச் சேர்ந்தார்க் கெல்லாம்
வேதமே யிசையா நிற்கும் வியன்பெருந் தண்ட மன்றோ
வீதெலா மெம்ம னோர்பா லியற்றிய வினைய தன்மை
நீதியா லெம்பா லன்றி நின்கணோர் குறையு முண்டோ.

ஆதி நாயகனை ஒல்லார் அனையவர்ச் சேர்ந்தார்க்கு எல்லாம்—ஆதியாகிய சிவபெருமானைப் பகைத்தவர் அவர்களைச் சேர்ந்தவர்கள் ஆகிய யாவர்க்கும், வேதமே இசையாநிற்கும் வியன் பெரும் தண்டம் அன்றோ ஈது எலாம்—வேதங்களே விதிக்கும் மிகப் பெரிய தண்டந்தானே தேவரீர் நமக்குச் செய்த இத் தண்டனை முழுவதும்; எம்மனோர் பால் இயற்றிய இனைய தன்மை

நீதி—ஆகையினாலே எம்மனோரிடத்திலே தேவரீர் செய்த இத்தகைய தண்டனை நீதியேயாம்; எம்பால் அன்றி நின்கண் ஓர் குறையும் உண்டோ—எம்மிடத் தன்றித் தேவரீரிடத்துக் குறையேதும் உண்டோ. (131)

விழிதனின் முறுவ றன்னின் வெய்துயிர்ப் பதனி லார்ப்பின்
மொழிதனிற் புவன மெல்லா முதலொடு முடிக்க வல்லோய்
பழிபடு வேள்வி தன்னிற் பலரையும் படையி னோடு
மழிவுசெய் திட்ட தம்மா வடிகளுக் காட லன்றோ.

விழிதனில்—நோக்கினாலும், முறுவல் தன்னில்—சிரிப்பினாலும், வெய்து உயிர்ப்பதனில்—வெம்மைத்தாய மூச்சினாலும், ஆர்ப்பில்—ஆரவாரத்தினாலும், மொழி தனில்—சொல்லினாலும், புவனம் எல்லாம் முதலொடு முடிக்க வல்லோய்—புவனம் முழுவதையும் மூலத்தோடழிக்கவல்ல தேவரீர், பழிபடு வேள்வி தன்னில் பலரையும் படையினோடும் அழிவு செய்திட்டது—பழி பொருந்திய இந்த யாகத்திற் பலரையும் ஆயுதத்தோடும் அழித்தது, அடிகளுக்கு ஆடல் அன்றோ—தேவரீருக்கு ஒரு திருவிளையாடலேயாம். (132)

உறுநர்தந் தொகைக்கு வேண்டிற் றுதவிய முதல்வ னேவு
முறையதை யுன்னி வேள்வி முடிப்பதோ ராட லாகச்
சிறிதெனு மளவை தன்னிற் சிதைத்தனை யன்றி யெந்தா
யிறுதிசெய் திடநீ யுன்னின் யார்கொலோ வெதிர்க்கு நீரார்.

உறுநர் தம் தொகைக்கு வேண்டிற்று உதவிய முதல்வன்—தம்மைச் சரணடையுங் கூட்டத்தினர்க்கு வேண்டியதை உதவியருளிய முதல்வராகிய சிவபெருமான், ஏவும் முறையதை உன்னி—ஆணைசெய்தருளியதொரு முறையை நினைந்து, வேள்வி முடிப்பது ஓர் ஆடலாக—யாகத்தை மாத்திரம் அழிப்பது ஒரு திருவிளையாடலாக, சிறிது எனும் அளவை தன்னில்—சிறிதாகிய கால அளவையுள், சிதைத்தனை—வேள்வியைச் சிதைக்குந் திருவிளையாடலைப் புரிந்தருளினீர்; அன்றி—இங்ஙனம் அன்றி, எந்தாய்—எம் பிதாவே, இறுதி செய்திட நீ உன்னில்—உலகம் முழுவதையுஞ் சங்காரஞ் செய்யத் தேவரீர் திருவுளங் கொண்டால், எதிர்க்கும் நீரார் யார்கொல்—அதனை எதிர்க்கத் தகும் இயல்பினர் யாவருளர். (133)

இறுதிசெய் திடலே சீற்ற மின்பமே யாண்மை யென்னு
வறைதரு சத்தி நான்கா மரன்றனக் கையை காளி
முறைதரு கவுரி யின்னோர் மும்மையும் பெற்றோ ரேனைப்
பெறலருஞ் சத்தி யானிப் பெற்றியு மறைகள் பேசும்.

அரன் தனக்கு—சிவபெருமானுக்கு, இறுதி செய்திடல்—சங்கரித்தலாகிய இலய சத்தி, சீற்றம்—கோபித்தலாகிய கோர சத்தி, இன்பம்—இன்புறுதலாகிய போக சத்தி, ஆண்மை—ஆண்மையுறுதலாகிய வீரசத்தி, என்று அறைதரு சத்தி நான்காம்—என்று சொல்லப்படுகின்ற சத்திகள் நான்காம்; ஐயை காளி கவுரி இன்னோர்—துர்க்கை காளி உமை ஆகிய இம்மூவரும், முறைதரு மும்மையும் பெற்றோர்—முறையே சொல்லப்பட்ட இலயம் கோரம் போகம் ஆகிய மூன்றனையும் பெற்றோராவர்; ஏனை பெறலரும் சத்தி யான்—ஏனைப் பெறுதற்கரிய வீரசத்தி யானேயாவேன்; இ பெற்றியும் மறைகள் பேசும்—இவ்வியல்பும் வேதங்கள் பேசா நிற்கும். (134)

அன்னதோர் பரிசா லீச னரும்பெருஞ் சத்தி யென்னிற்
பின்னமன் றவற்கி யானும் பெரிதுமன் புடையேன் முக்கண்
முன்னவன் றன்பா லீண்டென் மொய்ம்புட னிழந்த நேமி
யின்னுமங் கவன்றா ளர்ச்சித் திமைப்பினி லெய்து கின்றேன்.

அன்னது ஓர் பரிசால்—அவ்வாறுயதொரு தன்மையால், ஈசன் அரும் பெரும் சத்தி என்னின்—சிவபெருமானுடைய அரிய பெரிய வீரசத்தி யான் என்று சொல்லப்படுதலால், அவற்கு யானும் பின்னம் அன்று—அந்தச் சிவ பெருமானுக்கு ஏனைச் சத்திகள் போலவே யானும் வேறல்லேன்; பெரிதும் அன்புடையேன்—அவர்பாற் பேரன்புடையேன்; முக்கண் முன்னவன் தன் பால்—மூன்று கண்களையுடைய முதல்வராகிய சிவபெருமானிடத்தில், ஈண்டு என் மொய்ம்புடன் இழந்த நேமி—இவ்விடத்தில் என் வலிமையோடு சேர்த்து இழந்த சக்கரப்படையை, அங்கு அவன் தாள் அர்ச்சித்து—வாய்ப்பாய தோரிடத்தில் அப்பெருமானுடைய திருவடிகளை அர்ச்சித்து, இமைப்பினில்—இமைப்பொழுதில், இன்னும் எய்துகின்றேன்—மீண்டும் பெற்றுக்கொள் கின்றேன்.

முன்னும் யாண்டுப் பெற்றேனே இன்னும் ஆண்டுப் பெறுவேன் என்றதென்க. (135)

முனிவுட னடிக ளீண்டு முறைபுரிந் ததனுக் கின்னன்
மனனிடை கொள்ளே னின்னான் மற்றிது பெறுத லாலே
புனிதமாக் கொள்வன் றண்டம் புரிந்தனை பொறுத்தி குற்ற
மினியருள் புரிதி யென்னு விணையடி யிறைஞ்ச லோடும்.

முனிவுடன் அடிகள் ஈண்டு முறைபுரிந்ததனுக்கு—கோபத்தோடு அடிகள் இவ்விடத்து நீதியைச் செய்ததற்கு, மனன் இடை இன்னல் கொள்ளேன்—மனத்தின்கண் வருத்தமுறேன்; நின்னால் இது பெறுதலால்—தேவரீரால் இத் தண்டமாகிய பேற்றைப் பெறுதலால், புனிதமாக் கொள்வன்—என்னைப் புனிதஞ் செய்ததாகவே அத்தண்டத்தைக் கொள்ளுவேன்; தண்டம் புரிந்தனை குற்றம் பொறுத்தி—தண்டமாகிய நீதியைச் செய்தருளிய தேவே என் குற்றத்

தைப் பொறுத்தருள்க; இனி அருள் புரிதி என்னு—இனித் திருவருள் செய்க என்று, இணையடி இறைஞ்சலோடும்—இரண்டு திருவடிகளையுந் திருமால் வணங்கி நிற்க. (136)

வீரருள் வீரன் மாலோன் விளம்பிய மாற்றங் கேளா
நாரணற் கன்பு செய்து நணியதோர் காலை தன்னிற்
பாரிடஞ் சூழ நந்தி பரவிட வுமையா ளோடு
மூரிமால் விடைமேல் கொண்டு தோன்றினன் முடிவி லாதான்.

வீரருள் வீரன் மாலோன் விளம்பிய மாற்றம் கேளா—வீரருள் வீரரான வீரபத்திரக்கடவுள் திருமால் கூறிய வார்த்தையைக் கேட்டு, நாரணற்கு அன்பு செய்து நணியதோர் காலை தன்னில்—திருமாலுக்குக் கருணை செய் திருந்ததொரு சமயத்தில், பாரிடம் சூழ நந்தி பரவிட—பூதர்கள் சூழத் திருநந்திதேவர் துதிக்க, உமையாளோடு மூரிமால் விடைமேல் கொண்டு முடிவிலாதான் தோன்றினன்—உமாதேவி சமேதராய் இமிலினையுடைய பெருமை பொருந்திய இடபவாகனத்தின் மீது பரமசிவன் எழுந்தருளினுர். (137)

தேங்கிய கங்கை சூடுஞ் செஞ்சடைக் கடவு டோன்ற
வாங்கது தெரிந்த வீர னச்சமோ டங்கை கூப்பிப்
பாங்குற நிற்ப மாலும் பங்கயத் தயனுந் தாழா
நீங்கிய தாயை நேருங் குழவியி னிலைய ராஞர்.

தேங்கிய கங்கை சூடும் செம்சடைக்கடவுள் தோன்ற—நிறைந்த கங்கையை யணிந்த செஞ்சடையினையுடைய சிவபெருமான் எழுந்தருள, ஆங்கு அது தெரிந்த வீரன் அச்சமொடு அங்கை கூப்பி பாங்குற நிற்ப—அவ்விடத்தில் அப்பெருமான் வரவை யறிந்த வீரபத்திரக் கடவுள் எம் பிதா எழுந்தருளி ஞரேயென்ற அச்சத்தோடு அழகிய கைகளைக் கூப்பி வணங்கிப் பக்கத்தே சென்று நிற்ப, மாலும் பங்கயத்து அயனும் தாழா—பிரம விஷ்ணுக்களும் வணங்கி, நீங்கிய தாயை நேரும் குழவியின் நிலையர் ஆனுர்—விட்டுப்பிரிந்த தாயை எதிர்ப்படுங் குழந்தைகளின் இயல்பினராயினுர். (138)

கண்டனள் கவுரி வேள்விக் களத்திடைக் கழலுங் கையுந்
துண்டமுந் தலையு மார்புந் தோள்களுந் துணிந்து வீழ
வண்டருந் தக்கன் ருனு மாவிபோய்க் கிடந்த தன்மை
கொண்டதோர் சீற்ற நீங்கி யருள்வரக் கூறு கின்ருள்.

அண்டரும் தக்கன் தானும்—தேவர்களுந் தக்கனும், வேள்விக் களத் திடை—வேள்விக் களத்தின்கண்ணே, கழலும் கையும் துண்டமும் தலையும் மார்பும் தோள்களும் துணிந்து வீழ—கால் கை மூக்குத் தலை மார்பு தோள்

என்பன துண்டுபட்டு வீழ, ஆவி போய்க் கிடந்த தன்மை கவுரி கண்டனள்—உயிர்நீங்கிக் கிடந்த தன்மையை உமாதேவியார் கண்டு, கொண்டது ஓர் சீற்றம் நீங்கி—மேற்கொண்டதொரு சினந் தணிந்து, அருள் வரக் கூறுகின்ருள்—அருள் மீக்கூரக் கூறுகின்ருர். (139)

வேறு

பொன்ஞர் சடையெம் புனிதன் றனைநோக்கி
முன்ஞ கியபொருட்கு முன்னேனே வேள்விக்கு
மன்ஞ னவற்கு மிமையோர்க்கு மற்றெவர்க்கு
மென்ஞன் முடிவெய்திற் றென்றுரைக்கு மிவ்வுலகே.

பொன்ஞர் சடை எம் புனிதன் தனை நோக்கி—பொன் போன்ற சடையையுடைய எம் புனிதராகிய சிவபெருமானை நோக்கி, முன்ஞகிய பொருட்கு முன்னேனே—முன்னைப் பழம்பொருளுக்கு முன்னைப் பழம் பொருளே, வேள்விக்கும்—இந்த யாகத்துக்கும், மன் ஆனவற்கும்—யாகாதிபதியாகிய தக்கனுக்கும், இமையோர்க்கும்—தேவர்களுக்கும், மற்று எவர்க்கும்—ஏனையோர் யாவருக்கும், என்ஞல் முடிவு எய்திற்று என்று இவ்வுலகு உரைக்கும்—என்ஞல் முடிவு உண்டாயது என்று இந்த உலகம் உரையாநிற்கும். (140)

மற்றவர்கள் புந்தி மயக்குற் றுனதுதொல்சீர்
சற்று முணராது தவறுசெய்த தன்மையினுற்
செற்றமிகு வீரத் திருமகனு லிஞ்ஞான்று
பெற்றனரே யன்ருே பெறத்தக்க தோர்பரிசே.

அவர்கள் புந்தி மயக்குற்று—தக்கன் முதலியவர்கள் புத்தி மயங்கி, உனது தொல் சீர் சற்றும் உணராது—தேவரீரின் தொன்மைச் சிறப்பைச் சிறிதும் அறியாமல், தவறு செய்த தன்மையினுல்—குற்றஞ் செய்த காரணத்தால், செற்றம் மிகு வீரத் திருமகனுல் இஞ்ஞான்று—கோபம் மிக்க வீரபத்திரனுகிய திருக்குமாரனுல் இத்தினம், பெறத் தக்கது ஓர் பரிசு பெற்றனரே யன்ருே—பெறற்பாலதாய தண்டமாகியதொரு பரிசினைப் பெற்றனரேயாவர். (141)

முந்து மிவரை முடித்தியென வெஃகியதுந்
தந்து முடித்தாய் தனிவீர ஞலனைய
ருய்ந்து குறைபோ யுயிர்பெற் றெழும்வண்ண
மிந்த வரமு மெனக்கருளா யெங்கோவே.

முந்தும்—முன்னரும், இவரை முடித்தி என வெஃகியதும்—இவர்களை முடித்தருள்க என்று வேண்டியதும், தந்து—வேண்டியதாகிய அவ்வரத்தைத் தந்தருளி, தனி வீரனுல் முடித்தாய்—ஒப்பற்ற வீரபத்திர குமாரனுல் அவ் வரத்

தைப் பூர்த்தி செய்தருளினீர்; அனையர் குறை போய் உய்ந்து உயிர் பெற்று எழும்வண்ணம்—இப்பொழுதும் அவர்கள் உடற்குற்றங்கள் நீங்கி உய்ந்து உயிர் பெற்றெழும்வண்ணம், எம் கோவே இந்த வரமும் எனக்கு அருளாய்—எம்மிறையே இந்த வரத்தையும் அடியேனுக்கு அநுக்கிரகிக்க வேண்டும். (142)

என்று தொழுதாங் கெமையுடையாள் கூறுதலு
நன்றுன் னருளென்று நகைசெய்து தன்பாங்கர்
நின்ற திறலோனை நேர்நோக்கி யிம்மாற்ற
மொன்று பகர்ந்தா னுயிர்க்குயிரா யுற்றபிரான்.

என்று எமை உடையாள் ஆங்கு தொழுது கூறுதலும்—இவ்வாறு எம்மையுடையாராகிய உமையம்மையார் அவ்விடத்தில் வணங்கிக் கூறுதலும், உயிர்க்கு உயிராய் உற்ற பிரான்—உயிர்க்குயிராய் இருக்கின்ற பெருமான், உன் அருள் நன்று என்று நகை செய்து—உனது கருணை நன்று என்று புன்னகை செய்து, தன் பாங்கர் நின்ற திறலோனை நேர்நோக்கி—தன் பக்கத்தில் நின்ற வீரபத்திரராகிய திறல்படைத்த குமாரரை எதிர்முகஞ் செய்து, இ மாற்றம் ஒன்று பகர்ந்தான்—இந்த ஒரு வார்த்தையைக் கூறியருளினர். (143)

ஈண்டை மகத்தி லெமையிகழ்ந்து நின்சினத்தான்
மாண்டு சிதைவுற்ற வலியிலோர் தம்முயிரை
மீண்டு மளித்துருவு மேனு ளெனப்புரிதி
யாண்டகைநீ யென்றே யரனருளிச் செய்தலுமே.

ஆண் தகை நீ—ஆண்டகைமையினையுடைய வீர குமாரனே நீ, ஈண்டை மகத்தில்—இவ்விடத்தில் நடந்த யாகத்தில், எமை இகழ்ந்து நின் சினத்தால் மாண்டு—எம்மை நிந்தித்து உனது கோபத்தால் இறந்து, சிதைவுற்ற—உடல் சிதைந்த, வலியிலோர் தம் உயிரை மீண்டும் அளித்து—வலியற்றவர்களின் உயிரை மீண்டுங் கொடுத்து, உருவும் மேனுள் என புரிதி—சரீரங்களையும் முன்னுள் இருந்தவாறு இருக்கச் செய்வாயாக; என்று அரன் அருளிச் செய்தலும்—என்று சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளுதலும். (144)

வீர னதற்கிசைந்து மேனு ளெனவிறந்தீர்
யாரு மெழுதி ரெனவுரைப்ப வானவர்கள்
சோரு முனிவர் மறையோர் துயிலுணர்ந்த
நீர ரெனவுயிர்வந் தெய்த நிலத்தெழுந்தார்.

வீரன் அதற்கு இசைந்து—வீரபத்திர குமாரர் அதற்குடன்பட்டு, இறந்தீர் யாரும் மேனுள் என எழுதிர் என உரைப்ப—இறந்தீரெல்லீரும் முன்போல எழுமின் என்று கூற, சோரும் வானவர்கள் முனிவர் மறையோர்—

சோர்ந்து கிடக்கின்ற தேவர்கள் முனிவர்கள் பிராமணர்கள் யாவரும், உயிர் வந்து எய்த—உயிர் வந்து உடலிற் பொருந்த, துயில் உணர்ந்த நீரர் என நிலத்து எழுந்தார்—துயிலெழுந்த தன்மையினரைப்போல நிலத்தி லிருந்து எழுந்தார்கள். (145)

தண்ட மியற்றுந் தனிவீர ஞற்சிதைந்த
பிண்ட முழுதுருவும் பெற்றூர் மகம்புக்கு
விண்ட செயலுமுயிர் மீண்டதுவுங் கங்குலிடைக்
கண்ட புதிய கனவுநிலை போலுணர்ந்தார்.

தண்டம் இயற்றும் தனி வீரனல்—தண்டத்தைச் செய்யும் ஒப்பற்ற வீரபத்திரக்கடவுளால், சிதைந்த பிண்டம்—சிதைவுபட்ட உடல், முழுது உருவும் பெற்றூர்—முழு உருவத்தையும் பெற்று, மகம் புக்கு விண்ட செயலும்—தாம் யாகத்துக்குப் போய் இறந்து பட்ட செயலையும், உயிர் மீண்டதுவும்—உயிர் மீண்டதனையும், கங்குல் இடை கண்ட புதிய கனவு நிலை போல் உணர்ந்தார்—இரவிற் கண்ட புதியதொரு கனவின் நிலையை ஒப்ப உணர்ந்தார்கள்.

பெற்றூர், எச்சமுற்று. (146)

அந்தண் முனிவோ ரனைவோரும் வானவரு
மிந்திரனே யாதி யிமையோர் களும்வெருவிச்
சிந்தை மருண்டு சிவனை யிகழ்ந்ததனல்
வந்தபழி யுன்னி வருந்திமிக வெள்கினரால்.

அந்தண் முனிவோர் அனைவோரும்—அழகிய தண்ணளியையுடைய முனிவர்கள் யாவரும், வானவரும்—உயர்ந்த பூதேவராகிய பிராமணரும், இந்திரனே ஆதி இமையோர்களும்—இந்திரன் முதலிய தேவர்களும், வெருவி—அஞ்சி, சிந்தை மருண்டு—மனம் மருண்டு, சிவனை இகழ்ந்ததனல் வந்த பழி உன்னி—சிவபெருமானை நிந்தித்ததனுலுண்டான பழியை நினைந்து, மிக வருந்தி வெள்கினர்—மிகவும் வருந்தி வெட்கமுற்றூர்கள்.

அந்தண் முனிவர்-பிராமணர், வானவர்—ஆகாய வாசிகள், என்றுரைத் தலுமாம். (147)

பாணு ரளிமுரலும் பைந்தார் புனைவீரன்
மாணுகத் தன்னேர் மருங்காகத் தேவியுடன்
பூணு ரரவப் புரிசடையெம் புண்ணியனைச்
சேணுர் ககனந் திகழுஞ் செயல்கண்டார்.

பாண் ஆர் அளி முரலும் பைந்தார் புனை வீரன்—இசை நிரம்பிய வண்டுகள் சத்திக்கின்ற பசிய மாலையையணிந்த வீரபத்திரக்கடவுள், தன்

ஓர் மருங்காக—தமது ஒரு பக்கத்தின்கண், தேவியுடன் மாதுகை—பத்திரகாளி யம்மையாரோடு மாட்சிமையுடன் நிற்க, பூண் ஆர் அரவம் புரிசடை எம் புண்ணியனை—அரவாபரணம் பொருந்திய முறுகிய சடையினையுடைய எம் புண்ணிய மூர்த்தியாகிய சிவபெருமானை, தேவியுடன்—உமாதேவி சமேதராக, சேண் ஆர் ககனம் திகழும் செயல் கண்டார்—சேய்மைக்கண்ணதாகிய ஆகாயத்தின்கண் எழுந்தருளி விளங்குவதைத் தரிசித்தார்கள்.

தேவியுடன் முன்னும் பின்னுங் கூட்டப்பட்டது. (148)

துஞ்ச லகன்ற சுரரு முனிவரரு
நஞ்ச மணிமிடற்று நாயகனைக் கண்ணுற்றே
யஞ்சி நடுங்க வதுகண் டெவரிவர்க்குத்
தஞ்ச மெமையல்லா லென்றுதள ரேலென்றான்.

துஞ்சல் அகன்ற சுரரும் முனிவரரும்—இறப்பு நீங்கிய தேவர்களும் முனிவரர்களும், நஞ்சம் அணி மிடற்று நாயகனைக் கண்ணுற்று—நஞ்சை அணிந்த கண்டத்தினையுடைய சிவபெருமானைத் தரிசித்து, அஞ்சி நடுங்க அது கண்டு—அஞ்சி நடுக்கங்கொள்ள அதனைச் சிவபெருமான் நோக்கி, இவர்க்கு தஞ்சம் எமை அல்லால் எவர் என்று—இவர்களுக்குப் பற்றுக்கோடு எம்மையன்றி வேறு யாருளர் என்று திருவுளங்கொண்டு, தளரேல் என்றான்—தளராதொழிமின் என்றருளிச்செய்தார். (149)

என்றாங் கிசைத்த விறைவ னருணாடி
நன்றாலி தென்று நனிமகிழ்ந்து முன்னணித்தாய்ச்
சென்றார் தொழுதார் திசைமுகன்மா லாதியராய்
நின்றா ரெவரு நெறியா லிவையுரைப்பார்.

என்று ஆங்கு இசைத்த இறைவன் அருள் நாடி—தளரேல் என்று அவ்விடத்திலே திருவாய்மலர்ந்தருளிய சிவபெருமானுடைய திருக்கருணை இருந்தபடியைச் சிந்தித்து, இது நன்று என்று நனி மகிழ்ந்து—திருவருள் இருந்தவாறு நன்று என்று மிக மகிழ்ந்து, முன் அணித்தாய் சென்றார் தொழுதார்—திருமுன்னிலையில் அணித்தாகச் சென்று வணங்கி, திசைமுகன் மால் ஆதியராய் நின்றார் எவரும்—பிரம விஷ்ணு முதலியோராய் ஆண்டு நின்றவர்கள் யாவரும், நெறியால் இவை உரைப்பார்—விண்ணப்பிக்கு முறையில் இவற்றை விண்ணப்பிப்பாராயினர். (150)

சிந்தை யயர்வுற்றுச் சிறுவிதிதன் வேள்விதனி
லெந்தை நினையன்றி யிருந்தேங்கள் கண்முன்னும்
வந்து கருணை புரிந்தனையான் மைந்தர்க்குத்
தந்தை யலது பிறிதொருவர் சார்புண்டோ.

எந்தை—எம்பிதாவே, சிந்தை அயர்வுற்று—மனம் மயங்கி, சிறுவிதிதன் வேள்விதனில்—தக்கனுடைய யாகத்தில், நினை அன்றி இருந்தேங்கள் கண் முன்னும்—தேவரீரை விலகியிருந்த பாவியேங்களின் கண்ணெதிரிலும், வந்து கருணை புரிந்தனை—தோன்றியருளிக் கருணை புரிந்தருளினீர்; மைந்தர்க்கு தந்தை அலது பிறிது ஒருவர் சார்பு உண்டோ—புதல்வர்களுக்குப் பிதாவன்றி மற்றொருவர் பற்றுக்கோடாதல் உளதாமோ. (151)

அற்றமி லன்பில்லா வடியேங்கள் பாலடிகள்
செற்ற மதுபுரியிற் செய்கைமுத லானசெயல்
பற்றி முறைசெய் பதமுளதோ வஞ்சலென
மற்றொர் புகலுளதோ மன்னுயிருந் தானுளதோ.

அற்றம் இல் அன்பு இல்லா அடியேங்கள் பால்—நிறைந்த அன்பில்லாத அடியோங்களிடத்து, அடிகள் செற்றம் புரியில்—தேவரீர் சினஞ் செய்தால், செய்கை முதலான செயல்—படைப்பு முதலிய உத்தியோகங்களை, பற்றி—மேற்கொண்டு, முறை செய் பதம் உளதோ—முறைப்படி நடத்தும் பக்குவம் நமக்கு உண்டாமோ; அஞ்சல் என—அஞ்சற்க என்று அபயம் அளித்தற்கு, மற்று ஓர் புகல் உளதோ—மற்றொரு புகலிடம் நமக்கு உளதாமோ; மன் உயிரும்தான் உளதோ—நிலைபெறுதற்குரிய எமது உயிர்தானும் நிலைபெறுவதாமோ.

அற்றம்—குறைவு. (152)

வேதத் திறங்கடந்த வேள்விப் பலியருந்தும்
பேதைச் சிறியேம் பெரும்பகலுந் தீவினையி
லேதப் படாமே யிமைப்பி லதுதொலைத்த
வாதிக் கெவன்கொ லளிக்கின்ற கைம்மாறே.

வேதத் திறம் கடந்த வேள்விப் பலி அருந்தும்—வேதநெறி கடந்த வேள்விக்கண் அவைதிக அவியை அருந்தாநின்ற, பேதைச் சிறியேம்—பேதைகளாகிய சிறியேங்கள், பெரும் பகலும்—நீண்ட காலமளவும், தீவினையில் ஏதப்படாமே—தீவினைப்பயனாகிய துன்பத்தில் அழுந்தாமல், இமைப்பில்—கணப்பொழுதில், அது தொலைத்த—அந்தப் பாவத்தைத் தக்க தண்டஞ் செய்து நீக்கியருளிய, ஆதிக்கு—மூலப் பரம்பொருளான தேவரீருக்கு, அளிக்கின்ற கைம்மாறு எவன்கொல்—எளியோங்கள் செய்கின்ற கைம்மாறுதான் என்னையோ. (153)

இங்குன் னடிபிழைத்தோ மெல்லோமும் வீரனெனுஞ்
சிங்கந்தன் கையாற் சிதைபட்ட வாறெல்லாம்
பங்கங்க ளன்றே பவித்திரமாய் மற்றெங்க
ளங்கங்கட் கெல்லா மணிந்த வணியன்றே.

இங்கு உன் அடி பிழைத்தோம் எல்லோமும்—இங்கே தேவரீருடைய திரு வடிக்குப் பிழைசெய்தோ மெல்லாம், வீரன் எனும் சிங்கம் தன் கையால்—வீரபத்திரக்கடவுள் என்கின்ற வீரசிங்கத்தின் திருக்கரங்களால், சிதை பட்ட ஆறு எல்லாம்—சிதைவுபட்ட சின்னம் அனைத்தும், பங்கங்கள் அன்று—வடு வன்று; பவித்திரமாய்—நம்மைப் பாதுகாக்கும் இரட்சையாய், எங்கள் அங் கங்கட்கு எல்லாம் அணிந்த—எங்கள் உறுப்புக்கள் அனைத்துக்குந் தனித்தனி இட்ட, அணிஅன்றோ—இரட்சாபந்தனமாம். (154)

கங்கை முடித்ததுவுங் காய்கனலை யேந்தியதும்
வெங்கண் மிகுவிடத்தை மேனு ளருந்தியது
நங்கை யுமைகாண நடித்ததுவு முற்பகலு
மெங்கண் மிசைவைத்த வருளன்றோ வெம்பெருமான்.

முற்பகலும்—இப்பொழுது மாத்திரமேயோ முற்பொழுதிலும், எம்பெரு மான்—எம்பெருமானே தேவரீர், கங்கை முடித்ததுவும்—கங்கையைத் தரித்த தும், காய் கனலை ஏந்தியதும்—காய்கின்ற அக்கினியைத் தாங்கியதும், வெம்கண் மிகு விடத்தை மேனுள் அருந்தியதும்—தறுகண்மை மிக்க ஆல காலத்தை அன்று அருந்தியதும், நங்கை உமை காண நடித்ததுவும்—நங்கை யாகிய உமாபிராட்டி சாட்சியாக நடனஞ் செய்ததும், எங்கள் மிசை வைத்த அருள் அன்றோ—ஆன்மாக்களாகிய எங்கள்மீது கொண்ட பெருங்கருணைத் திறமேயாம். (155)

ஐய பலவுண் டறிவிலே நின்றனக்குச்
செய்ய வருபிழைகள் சிந்தைமிசைக் கொள்ளாம
லுய்யும் வகைபொறுத்தி யுன்னடியே மென்றலுமே
தைய லொருபங்கன் றணிந்தனமா லஃதென்றான்.

ஐய—மகாதேவரே, நின் தனக்கு அறிவிலேம் செய்ய வரு பிழைகள் பல உண்டு—தேவரீருக்கு அறிவற்ற யாம் அறியாமையாற் செய்யநேர்ந்த பிழைகள் பல உள; சிந்தை மிசை கொள்ளாமல்—அவற்றைத் திருவுளத்திற் பொருள் செய்யாமல், உன் அடியேம் உய்யும் வகை பொறுத்தி என்றலும்—தேவரீரின் வழியடியோம் உய்யும்பொருட்டுப் பொறுத்தருள்க என்று வேண்டுதலும், தையல் ஒரு பங்கன் அஃது தணிந்தனம் என்றான்—உமாதேவி பாகராகிய சிவ பெருமான் நும் பிழையைப் பொறுத்தோம் என்று அருளிச்செய்தார். (156)

ஏற்றுத் தலைவ னியம்புந் திருவருளைப்
போற்றித் தொழுதுதம புந்தி தளிர்ப்பெய்திக்
கூற்றைத் தடிந்த குரைகழற்றாண் முன்னிறைஞ்சித்
தேற்றத் துடன்பாடி யாடிச் சிறந்தனரே.

ஏற்றுத் தலைவன்—இடபாரூடரான சிவபெருமான், இயம்பும் திருவருளை போற்றி தொழுது—சொல்லி அருளுகின்ற கருணைத் திறத்தைத் துதித்து வணங்கி, தம புந்தி தளிர்ப்பு எய்தி—தம் மனந் தளிர்த்து, கூற்றை தடிந்த குரை கழல் தாள் முன் இறைஞ்சி—காலனை உதைத்த ஒலிக்கின்ற கழலணிந்த திருவடியை எதிரில் வணங்கி, தேற்றத்துடன் பாடி ஆடிச் சிறந்தனர்—தெளிந்த புத்தியோடு பாடி ஆடிச் சிறப்புற்றார்கள்.

தம், என்றும் பாடம். (157)

அன்ன பொழுதத் தயன்முதலாந் தேவர்கண்மே
லுன்ன வரிய வொருவனருட் கண்வைத்து
நுந்நும் மரசு நுமக்கே யளித்தனமான்
முன்ன ரெனவே முறைபுரிதி ரென்றுரைத்தான்.

அன்ன பொழுது—அப்பொழுது, அயன் முதலாம் தேவர்கள் மேல்—பிரமா முதலிய தேவர்கள்மீது, உன்ன அரிய ஒருவன் அருள்கண் வைத்து—நினைத்தற்கரிய ஒப்பற்ற சிவபெருமான் திருவருட்கண் சாத்தி, நும் நும் அரசு நுமக்கு முன்னர் என அளித்தனம்—உங்கள் உங்கள் அரசை உங்களுக்கு முன்போலத் தந்தோம்; முறை புரிதிர் என்று உரைத்தான்—நீவிர் உங்கள் அரசு முறையைச் செய்யுங்கள் என்று பணித்தருளினர். (158)

மாலயனே யாதியராம் வானவர்க ளெல்லோரு
மாலமிடற் றண்ண லருளின் றிறம்போற்றி
யேலமகிழ் வெய்த விறந்தெழுந்தோர் தங்குழுவிற்
சீலமிலாத் தன்மகனைக் காணான் றிசைமுகனே.

மால் அயன் ஆதியராம் வானவர்கள் எல்லோரும்—பிரம விஷ்ணுக்கள் முதலாகிய தேவர்கள் யாவரும், ஆலம் மிடற்று அண்ணல் அருளின் திறம் போற்றி—திருநீலகண்டரான சிவபெருமானுடைய கருணைத் திறத்தைத் துதித்து, ஏல மகிழ்வு எய்த—பெரிதும் மகிழ்ச்சியெய்தாநிற்ப; இறந்து எழுந்தோர் தம் குழுவில்—இறந்து பிழைத்தவர்களின் கூட்டத்தில், திசை முகன்—பிரமதேவர், சீலம் இலாத் தன் மகனைக் காணான்—ஒழுக்கமற்ற தம் புதல்வனாகிய தக்கனைக் காணாராயினர்.

அயனும் மகிழ்ச்சிக்குரியராயினும், மகனைக் காணாது வருந்தினமையின், அயனொழிந்த எல்லோரும் மகிழ்வெய்த என்க. (159)

மாண்டதொரு தக்கன் வயவீரன் றன்னருளா
லீண்டுசனந் தன்னோ டெழாவச் செயனோக்கிக்
காண்டகைய நாதன் கழலிணைமுன் வீழ்ந்திறைஞ்சி
யாண்டு கமலத் தயனின் றுரைக்கின்றான்.

மாண்டது ஒரு தக்கன்—இறந்த ஒருவனான தக்கன், வய வீரன் தன் அருளால்—வெற்றி வீரர் ஆகிய வீரபத்திரக்கடவுளின் திருவருளால், ஈண்டு சனம் தன்னேடு—உயிர்த்தெழுந்து செறிகின்ற சனங்களோடு, எழா அ செயல் நோக்கி—உயிர்த்தெழாத அந்தச் செயலை நோக்கி, காண் தகைய நாதன் கழல் இணைமுன் வீழ்ந்து இறைஞ்சி—பேரழகு தருகின்ற இறைவருடைய இரண்டாகிய திருவடிகளின்முன் விழுந்து வணங்கி, கமலத்து அயன் ஆண்டு நின்று உரைக்கின்றான்—தாமரையாசனரான பிரமதேவர் அவ்விடத்தில் நின்று ஒன்று கூறுகின்றார். (160)

### வேறு

ஐயநின் வாய்மை யெள்ளி யழல்கெழு மகத்தை யாற்றுங்
கையன தகந்தை நீங்கக் கடிதினிற் றண்டஞ் செய்து
மையுறு நிரயப் பேறு மாற்றினை யவனு மெம்போ
லுய்யவே யருளு கென்ன வுமாபதி கருணை செய்தான்.

ஐய—பிரபுவே, நின் வாய்மை எள்ளி—தேவரீரின் வாய்மையாகிய வேதங்களை இகழ்ந்து, அழல் கெழு மகத்தை ஆற்றும்—வேத விரோதமான தீயையுடைய யாகத்தைச் செய்யாநின்ற, கையனது அகந்தை நீங்க—கீழ்மகனாகிய தக்கனது அகங்காரம் ஒழியும்படி, கடிதினில் தண்டம் செய்து—விரைந்து தண்டம் புரிந்து, மையுறு நிரயப் பேறு மாற்றினை—இருள் மிகுகின்ற நரகப் பேற்றை அவனுக்கு மாற்றியருளினீர்; அவனும்—தண்ட முகமாகத் தேவரீரது அருளுக்குப் பாத்திரமான அத் தக்கனும், எம்போல் உய்ய அருளுக என்ன—எம்மைப்போல உயிர்பெற்றெழுந்து உய்யுமாறு திருவருள் பாலித்தருள்க என்று பிரார்த்திக்க, உமாபதி கருணை செய்தான்—உமாபதியாகிய சிவபெருமான் அவ்வாறாகுக என்று கருணை பாலித்தார். (161)

இறையருள் கண்டு வீர னெல்லையங் கதனி லெந்தை
யறைகழல் கண்டு போற்றி யவற்றியல் வினவித் தாழாப்
பொறியுள தென்று தக்கன் புன்றலை புகுத்த வுன்னுக்
குறையுட லதனைப் பானு கம்பனைக் கொணர்தி யென்றான்.

அங்கு எல்லை அதனில்—அங்கே அவ்வாறாய சமயத்தில், இறை அருள் வீரன் கண்டு—இறைவருடைய கருணைத் திறத்தை வீரபத்திரக்கடவுள் உணர்ந்து, எந்தை அறை கழல் கண்டு—எம் பிதாவாகிய சிவபெருமானின் ஒலிக்கின்ற கழலணிந்த திருவடிகளைக் கண்ணாலே தரிசித்து, போற்றி—வாயாலே துதித்து, அவற்று இயல் வினவி—காதுகளாலே அத் திருவடிகளின் இயல்பைக் கேட்டு, தாழாப் பொறி—வணங்காத பொறிகளாகிய இந்திரியங்களை, தக்கன் புன் தலை உளது என்று—தக்கனுடைய புன்மையாகிய தலை உடையது என்று கருதி, புகுத்த உன்னு—அப் புன்றலையை உண்டுபண்ணிப் பொருத்த உன்னாமல், குறை உடல் அதனை—தலை வெட்டுண்டெரிந்து போக

எஞ்சிக் கிடந்த குறையாகிய உடலை, பானுகம்பனை கொணர்தி என்றான்—பானுகம்பர் என்னும் பூதத் தலைவரை நோக்கி எடுத்து வருவாயாக என்று கட்டளையிட்டருளினர்.

தாழா உன்னா ஈறுகெட்ட பெயரெச்ச வினையெச்சங்கள். இனம்பற்றிச் சிவமணம் போற்றாத மூக்குங் கொள்க. தெய்வங் கோளில் பொறிகளை யுடையதாய்த் தக்கன்றலை குணமிலதாய்த் தாழாது புன்றலையாயிற்று. மெய்யின் பிரதிநிதியாய்த் தானிருந்துகொண்டு, ஏனை நாற்பொறிகளு முடைத்தாய், இவ்வாற்றால் தலை ஐம்பொறியுமாயிருத்தலுமுணர்க. (162)

வித்தக வலிகொள் பூதன் வீரபத் திரன்றன் முன்ன
ருய்த்தலு மதன்மேல் வேள்விக் குண்டியாம் பசுவுள் வீந்த
மைத்தலை கண்டு சேர்த்தி யெழுகென்றான் மறைகள் போற்று
மத்தனை யிகழு நீர ராவரிப் பரிசே யென்னா.

வித்தக வலிகொள் பூதன்—சாமர்த்தியமான வலி படைத்த பானுகம்பர் என்னும் பூதத்தலைவர், வீரபத்திரன் தன் முன்னர்—வீரபத்திரக்கடவுள் முன்னிலையில், உய்த்தலும்—தக்கனது தலையற்ற குறையுடலைக் கொணர்ந்து இடுதலும், வேள்விக்கு உண்டியாம் பசுவுள்—யாகாக்கினிக்கு உணவாகும் யாகப் பசுக்களுள், வீந்த—வெட்டுண்டிறந்த, மைதலை கண்டு—ஆட்டின் தலையொன்றைக் கண்டெடுத்து, அதன்மேல் சேர்த்தி—அந்தக் குறையுடலின்கட் பொருத்தி, மறைகள் போற்றும் அத்தனை இகழும் நீரர் இ பரிசு ஆவர் என்னா—வேதங்களாலே துதிக்கப்படும் பரமபதியாகிய சிவபெருமானை நிந்திக்கும் இயல்பினரான பாவிகள் இழிவாகிய இவ்வியல்பினர் ஆவர் என்பதை யாவர்க்கும் புலப்படுத்துவாராய், எழுக என்றான்—தக்கனே எழுவாயாக என்று அருளிச்செய்தார்.

மைத்தலைக்குச் சிவ நிந்தனை செய்யாத ஐம்பொறியுண்மையின், தக்கன் புன்றலையினும் அது சிறந்ததாயிற்று. (163)

என்றலு முயிர்பெற் றங்க ணெழுந்தவத் தக்கன் முன்ன
நின்றதோர் வீரற் கண்டு நெஞ்சுதுண் ணென்ன வஞ்சித்
தன்றக விழந்து பெற்ற தலைகொடு வணங்கி நாணி
யன்றுசெய் நிலைமை நாடி யரந்தையங் கடலுட் பட்டான்.

என்றலும்—எழுக என்றருளிச்செய்தலும், அங்கண் உயிர்பெற்று எழுந்த அ தக்கன்—அவ்விடத்தில் உயிர் பெற்றெழுந்த அசமுகனாகிய அந்தத் தக்கன், முன்னம் நின்றது ஓர் வீரற் கண்டு—எதிரில் நின்றருளிய வீரபத்திரக்கடவுளைக் கண்டு, நெஞ்சு துண் என்ன அஞ்சி—நெஞ்சு திடுக்கிட்டு அஞ்சி, தன் தகவு இழந்து—தன் பெருமை இழந்து, பெற்ற தலைகொடு வணங்கி—தான் பெற்ற ஆட்டுத்தலையால் வணங்கி, நாணி—நாணமுற்று, அன்று செய் நிலைமை நாடி—அன்று நடந்த நிகழ்ச்சியின் நிலைமையை ஒப்ப நாடி, அரந்தை அம் கடலுள் பட்டான்—துன்பத்தையே தனக்கு அழகெனக் கொண்டதொரு சமுத்திரத்துள் முழுகினன். (164)

அல்லல்கூர்ந் திரங்கு கின்ற வசமுக னடல்வெள் ளேற்றின்
மெல்லிய லோடு முற்ற விமலன துருவங் காணூஉ
வொல்லென வெருக்கொண் டாற்ற வுற்றன னச்ச மற்றவ்
வெல்லையி லிறைவன் றக்கா வஞ்சலை யினிநீ யென்ருன்.

அல்லல் கூர்ந்து இரங்குகின்ற அசமுகன்—துன்பம் மிக்குத் தன் நிலைக்கு இரங்குகின்ற ஆட்டு முகத்தனுகிய தக்கன், அடல் வெள் ஏற்றில்—வெற்றி பொருந்திய வெள்ளை இடபத்தின்மீது, மெல்லியலோடும் உற்ற விமலனது உருவம் காணூஉ—மென்மையாகிய இயல்பினையுடைய உமாபிராட்டியாரோடும் எழுந்தருளிய நின்மலராகிய சிவபெருமானது திருவுருவத்தைக் கண்டு, ஒல்லென வெருக்கொண்டு—திடீரென்று வெருட்சியுற்று, ஆற்ற அச்சம் உற்றனன்—பெரிதும் அச்சங்கொண்டான்; அ எல்லையில்—அப்பொழுது, இறைவன்—சிவபெருமான், தக்கா இனி நீ அஞ்சலை என்ருன்—தக்கனே இனி நீ அஞ்சற்க என்று அபயஞ்செய்தருளினர். (165)

அஞ்சலென் றருள லோடு மசமுகத் தக்க னெங்கோன்
செஞ்சரண் முன்னர்த் தாழ்ந்து தீயனேன் புரிந்த தீமை
நெஞ்சினு மளக்கொ ணுதா னினைதொறுஞ் சுடுவ தையா
வுஞ்சன னவற்றை நீக்கி யுனதருள் புரிந்த பண்பால்.

அஞ்சல் என்று அருளலோடும்—அஞ்சற்க என்று அருளுதலும், அசமுகத் தக்கன்—அசமுகனுகிய தக்கன், எம் கோன் செஞ்சரண் முன்னர் தாழ்ந்து—எம்பெருமானுடைய செம்மையாகிய திருவடியினெதிரே வணங்கி, தீயனேன் புரிந்த தீமை நெஞ்சினும் அளக்கொணுது—தீவினையுடையேன் தேவரீருக்குச் செய்த பிழையாகிய தீமை மனத்தாலும் நினைந்து அளக்க ஒண்ணுதது; நினைதொறும் சுடுவது—நினைக்குந்தோறும் அது நெஞ்சைச் சுட்டெரிப்பதாயிருக்கின்றது; ஐயா—பிரபுவே, அவற்றை நீக்கி—தேவரீர் அவற்றைப்போக்கி, உனது அருள் புரிந்த பண்பால்—உமது அருளைச் செய்த தன்மையால், உஞ்சனன்—நாயேன் உய்ந்தேன்.

ஆல், அசை. (166)

அடியனேன் பிழைத்த தேபோ லார்செய்தா ரெனினு மென்போற்
படுவதே சரத மன்ருே பங்கயத் தயனை நல்கு
நெடியவன் றுணையென் றுன்னி நின்பெரு மாயை யாலே
யடிகளை யிகழ்ந்தேன் யாது மறிகிலேன் சிறியே னென்ருன்.

அடியனேன் பிழைத்தது போல் ஆர் செய்தார் எனினும்—அடியேன் பிழைசெய்தது போல் எவர் பிழை செய்தாராயினும், என்போல் படுவதே சரதம்—யான் தண்டிக்கப்பட்டதுபோலத் தண்டிக்கப்படுவதே துணிபாம்; பங்கயத்து அயனை நல்கு நெடியவன் துணை என்று உன்னி—தாமரையாசனராகிய பிரமாவைத் தந்த திருநெடுமாலைத் துணையென்று கருதி, நின் பெரும் மாயையாலே அடிகளை இகழ்ந்தேன்—தேவரீருடைய பெரிய மாயையாலே

தேவரீரை நிந்தித்தேன்; சிறியேன் யாதும் அறிகிலேன் என்றான்—சிறியேன் யாதொன்றும் அறிகிலேன் என்று விண்ணப்பித்தான்.

தக்கப் பிரசாபதி, பிரசைகளின் வல்வினையால் மயக்கமுற்றானாதலின், மாயையாலே இகழ்ந்தேன் அறிகிலேன் என்றான் என்க. (167)

காலையங் கதனி லம்மை காளிதன் னோடு போற்றிப்
பாலுற நின்ற வீர பத்திரன் றனைவம் மென்றே
வேலவன் றேவி யென்ன வெரிந்புற நீவி யன்னார்க்
கேலநல் வரங்க ளீந்தா ளீசனுக் கன்பு மிக்காள்.

காலை அங்கு அதனில்—அவ்வாறாகிய சமயத்தில், ஈசனுக்கு அன்பு மிக்காள் அம்மை—சிவபெருமான்பால் அன்பு மிக்காராகிய உமாதேவியார், காளி தன்னோடு போற்றி பாலுற நின்ற வீரபத்திரன் தன்னை—வீரபத்திரையோடு துதித்துக்கொண்டு பக்கத்திற் பொருந்த நின்ற வீரபத்திரரை, வம் என்று—வருக என்று அழைத்து, வேலவன் தேவி என்ன—முருகனையும் அவன் தேவியை யும் ஒப்ப, வெரிந் புறம் நீவி—இந்த இருவரையும் மதித்து முதுகைத் தடவி, அன்னார்க்கு ஏல நல் வரங்கள் ஈந்தாள்—அந்த இருவருக்கும் இயைபுற நல்ல வரங்களை ஈந்தருளினர்.

என்ன நின்ற எனக் கூட்டியுரைப்பதுமாம். (168)

மீத்தகு விண்ணு ளோரும் வேள்வியந் தேவு மாலும்
பூத்திகழ் கமலத் தோனும் புதல்வனு முனிவர் தாமு
மேத்தினர் வணங்கி நிற்ப வெம்மையா ளுடைய முக்க
ணுத்தனங் கவரை நோக்கி யிவைசில வருளிச் செய்வான்.

மீத்தகு விண்ணுளோரும்—மேன்மை தக்க தேவரும், வேள்வியம் தேவும்—யாகதேவதையும், மாலும்—திருமாலும், பூதிகழ் கமலத்தோனும்—தாமரை மலரில் விளங்கும் பிரமதேவரும், புதல்வனும்—பிரமபுத்திரனை தக்கனும், முனிவர் தாமும்—முனிவர்களும், ஏத்தினர் வணங்கி நிற்ப—துதித்து வணங்கி நிற்ப, எம்மை ஆளுடைய முக்கண் ஆத்தன்—எம்மை ஆளுதலையுடைய மூன்று கண்களோடு கூடிய பரமாப்தராகிய சிவபெருமான், அங்கு அவரை நோக்கி இவை சில அருளிச் செய்வான்—அங்கே அவர்களை நோக்கி இவைகள் சிலவற் றைத் திருவாய்மலர்ந்தருளுவார். (169)

வம்மினோ பிரம னாதி வானவர் மகஞ்செய் போழ்தி
னம்மைநீ ரிகழ்ந்தி யாரு நவைபெறக் கிடந்த தெல்லா
மும்மையில் விதியாந் தண்ட முமக்கிது புரிந்த வாறு
மிம்மையின் முறையே நாணுற் றிரங்கலீ ரிதனுக் கென்றான்.

பிரமன் ஆதி வானவர் வம்மின்—பிரமா முதலிய தேவிர்காள் வம்மின்கள்; மகம் செய் போழ்தில்—யாகஞ் செய்யும்போது, நீர் யாரும் நம்மை

இகழ்ந்து—நீவிர் யாவிரும் எம்மை நிந்தித்து, நவை பெற—அதனுல் சிவத் துரோகமாகிய குற்றம் நும்பாற் பொருந்த, கிடந்தது எல்லாம்—நீவிர் இருக்க நேர்ந்ததாகிய இயல்பு அனைத்தும், உம்மையில் விதியாம்—முந்திய பிறப்பிற் சம்பாதித்த ஊழின் பயனேயாம்; உமக்கு இது தண்டம் இம்மையில் புரிந்தவாறும் முறையே—உமக்கு இத்தண்டத்தை இப்பிறப்பிற் செய்தவாறும் நீதியேயாம்; இதனுக்கு நாணுற்று இரங்கலீர் என்முன்—ஆதலினலே இந் நிகழ்ச்சிக்கு நாணி இரங்கற்க என்று அருளிச்செய்தார். (170)

வேறு

இனைத்தருள் புரிதலு மெண்ண லாரையு
நினைத்தருள் புரிதரு நிமலன் றாடொழாச்
சினத்தொடு மகத்தைமுன் சிதைத்து ளோனையு
மனத்தகு மன்பினல் வணங்கிப் போற்றவே.

இனைத்து அருள் புரிதலும்—இவ்வாறருளுதலும், எண்ணலாரையும் நினைத்து அருள் புரிதரு நிமலன் தாள் தொழா—தம்மை நினையாதவரையும் நினைத்து அருள்செய்கின்ற நிமலராகிய சிவபெருமானுடைய பாதங்களை வணங்கி, சினத்தொடு மகத்தை முன் சிதைத்துளோனையும்—கோபத்தோடு யாகத்தை முன் சிதைத்தருளிய வீரபத்திரக்கடவுளையும், மனத் தகும் அன் பினல் வணங்கி போற்ற—மனத்திற் பொருந்துகின்ற அன்போடு வணங்கித் துதித்து நிற்க. (171)

வீரரில் வீரனும் விசய மேதகு
நாரியு மயல்வர நந்தி முன்செலப்
பாரிட மெங்கணும் பரவ மாதொடே
போரடல் விடையினன் பொருக்கென் றேகினன்.

வீரரில் வீரனும்—மகாவீரராகிய வீரபத்திர உருத்திரரும், விசயம் மேதகு நாரியும்—வெற்றியில் மேம்பட்ட வீரபத்திரையும், அயல் வர—பக்கத்தில் வர, நந்தி முன் செல—திருநந்திதேவர் முன்னே செல்ல, பாரிடம் எங்கணும் பரவ—பூத சேனைகள் எப்பக்கத்திலுஞ் சூழ, மாதொடு—சிவபெருமானனவர் உமா தேவியாரோடு, போர் அடல் விடையினன்—போராடலில் வல்ல இடபத்தின் மீது எழுந்தருளியவராய், பொருக்கென்று ஏகினன்—விரைவில் அவ்விடத்தி னின்றும் எழுந்தருளினர். (172)

கயிலையி லேகியே கவுரி யோடரன்
வியனகர் மன்றிடை வீற்றி ருந்துழி
வயமிகு வீரற்கு வான மேக்குற
வியலுமோர் பதமளித் திருத்தி யாங்கென.

அரன் கவுரியோடு கயிலையில் ஏகி—சிவபெருமான் உமாதேவி சமேதராய்க் கைலாச கிரிக்கட் சென்று, வியன் நகர் மன்றிடை வீற்றிருந்துஉழி—பெருமை

பொருந்திய செம்பொற்றிருக்கோயிலின்கண்ணுள்ள மன்றத்தின்கண்ணே எழுந்தருளியிருந்துகொண்டு அச்சமயத்தில், வயம் மிகு வீரற்கு—வென்றிமிக்க வீரபத்திரக் கடவுளுக்கு, வானம் மேக்கு உற—மேலுலகத்தின்கண்ணதாக, இயலும் ஓர் பதம் அளித்து—பொருந்துகின்றதொரு புவனத்தைக் கொடுத்தருளி, ஆங்கு இருத்தி என—அப் புவனத்தில் இருப்பாயாக என்று பணித்தருள. (173)

இருவர்தந் தாளையு மிறைஞ்சி யன்னவர்
தருவிடை பெற்றன ளுகித் தக்கன
துரியதோர் மகமடு முலப்பில் பூதர்க
டிரைகட லாமெனத் திசைதொ றீண்டவே.

இருவர் தம் தாளையும் இறைஞ்சி—பிதாமாதாக்களாகிய இருவருடைய திருவடிகளையும் வணங்கி, அன்னவர் தரு விடை பெற்றனன் ஆகி—அவ்விருவருங் கொடுத்தருளிய அநுமதியைப் பெற்றவராய், தக்கனது—தக்கனுடைய, உரியது ஓர் மகம் அடும்—சிவநிந்தைக்குரியதொன்ருன யாகத்தை அழியாநின்ற, உலப்பு இல் பூதர்கள்—எண்ணிறந்த பூதர்கள், திரை கடல் ஆம் என திசை தொறு ஈண்ட—அலையெழுகின்ற சமுத்திரமாம் என்று சொல்லும்படி திக்குத் தோறும் நெருங்கிவாராநிற்ப. (174)

தந்தைமுன் விடுத்ததோர் தடம்பொற் றேரயல்
வந்ததங் கதன்மிசை வயங்கொ ளாடலான்
பைந்தொடி யொடும்புகாப் பானு கம்பன
துந்திட வரனரு ளுலகிற் போயினன்.

தந்தை முன் விடுத்தது—பிதாவாகிய சிவபெருமானல் முன்னர் யாக சங்காரத்தின் பொருட்டு அனுப்பப்பட்டதாகிய, ஓர் தடம் பொன் தேர்—ஒப்பற்ற விசாலமான அழகிய தேர், அயல் வந்தது—பக்கத்தில் வந்து நின்றதாக, அங்கு அதன் மிசை—அவ்விடத்தில் அத் தேரின்மீது, வயம் கொள் ஆடலான் பைந்தொடியொடும் புகா—வென்றி கொள்ளுகின்ற போராடலையுடையவராகிய வீரபத்திரக்கடவுள் பசிய வளையலையணிந்த வீரபத்திரையோடும் இவர்ந்தருளி, அது பானுகம்பன் உந்திட—அத் தேரைப் பானுகம்பர் என்னும் பூதத் தலைவர் சாரதியாயிருந்து செலுத்த, அரன் அருள் உலகில் போயினன்—சிவபெருமான் தமக்குக் கொடுத்தருளிய புவனத்துக்குச் சென்றருளினர். (175)

போயின னதனிடைப் பொருவி றெல்பெருங்
கோயிலி னெய்தியே குழுக்கொள் சாரதர்
மேயினர் சூழ்தர வீர பத்திர
னேயதோர் துணைவியோ டினிது மேவினன்.

வீரபத்திரன்—வீரபத்திரக்கடவுள், அதனிடை போயினன்—தமக்களித்த அப் புவனத்துட் சென்று, பொரு இல் தொல் பெரும் கோயிலின் எய்தி—ஒப்பில்லாத பழைமையான பெரிய கோயிலையடைந்து, குழுக்கொள் சாரதர் மேயினர் சூழ்தர—குழுமுகின்ற பூதர்கள் சூழ்ந்து மேவ, ஏயது ஓர் துணைவியோடு—உளம் ஒத்ததொரு துணைவியாகிய வீரபத்திரையம்மையாருடன், இனிது மேவினன்—திவ்விய சிங்காசனத்தின்மீது இனிது வீற்றிருந்தருளினர். (176)

யாக சங்காரப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 1562.

---

# அடிமுடி தேடு படலம்

இங்கிது நிற்கமுன் னிறைவன் வந்துழி
யங்குற நின்றதோ ரமரர் தங்களுட்
செங்கம லத்துறை தேவன் றக்கனுந்
துங்கமின் மைந்தனை நோக்கிச் சொல்லுவான்.

இங்கு இது நிற்க—இஃது இங்ஙனமாக, முன் இறைவன் வந்துழி—முன்பு சிவபெருமான் அங்கே எழுந்தருளியபோது, அங்கு உற நின்றது ஓர் அமரர் தங்களுள்—அங்கு மிக்கு நின்றதொரு தேவர் கூட்டத்துள், தக்கன் ஆம் துங்கம் இல் மைந்தனை—தக்கனாகிய இழிவு அடைந்த தம் புதல்வனை, செங்கமலத்து உறை தேவன் நோக்கிச் சொல்லுவான்—செந்தாமரை மலரிலிருக்கும் பிரம தேவர் நோக்கிக் கூறுவார். (1)

யாதுமுன் னுணர்ந்தனை யாது செய்தனை
யாதவண் கருதினை யாரிற் பெற்றனை
யாதுபின் செய்தனை யாது பட்டனை
யாதிவண் பெற்றனை யாதுன் னெண்ணமே.

யாது முன் உணர்ந்தனை—மகனே நீ முன் எதனை என்னிடம் படித்தாய்; யாது செய்தனை—படித்தபின் எதனை முயன்று செய்தாய்; யாது அவண் கருதினை—அந்த அரிய தவமுயற்சிக்கண் எதனை அடையக் கருதினாய்; யாரில் பெற்றனை—நீ அடையக் கருதியவைகளை யாரிடத்திற் பெற்றாய்; பின் யாது செய்தனை—அடையக் கருதிய ஐசுவரியங்களை அடைந்தபின் யாது செய்தாய்; யாது பட்டனை—அதனால் என்ன பாடுபட்டாய்; யாது இவண் பெற்றனை—இவ்விடத்தில் இப்பொழுது என்ன பரிசு பெற்றிருக்கின்றாய்; யாது உன் எண்ணம்—இனி உன் எண்ணம் யாது.

வேதங்களையுணர்ந்து, தவஞ்செய்து, மோக்ஷத்தைக் கருதாமற் செல்வத்தைக் கருதி, அதனைச் சிவபெருமானாற் பெற்று, பின் அவரை நிந்தித்து யாகஞ் செய்து, இறந்து, ஆட்டுத் தலையைப் பெற்றாய்; இனியேனும் ஏற்ற பரிகாரத்தைச் செய்வாயா என்பார் இவ்வாறு வினவினார் என்க. (2)

பொன்றுத லில்லதோர் புலவர் யாவர்க்கும்
வன்றிறன் முனிவரர் தமக்கும் வையமேற்
றுன்றிய வந்தணர் தொகைக்குந் துண்ணெனக்
கொன்றுயி ருண்பதோர் கூற்ற மாயினாய்.

பொன்றுதல் இல்லதோர் புலவர் யாவர்க்கும்—மரணம் இல்லாததொரு தேவர் கூட்டத்துக்கும், வன்திறல் முனிவரர் தமக்கும்—தவவலிபடைத்த முனிவரர் கூட்டத்துக்கும், வையம் மேல் துன்றிய அந்தணர் தொகைக்கும்—பூமியிற் பொருந்திய பிராமணர் கூட்டத்துக்கும், துண்ணெனக் கொன்று உயிர் உண்பது ஓர் கூற்றம் ஆயினுய்—விரைந்து கொன்று உயிரைப் பருகுவ தொரு கூற்றுவன் ஆயினுய். (3)

சீரையுந் தொலேத்தனே சிறந்த தக்கனும்
பேரையுந் தொலேத்தனே பேதை யாகிநின்
னேரையுந் தொலேத்தனே யேவல் போற்றுந
ராரையுந் தொலேத்தனே யலக்க ணெய்திஞய்.

சீரையும் தொலேத்தனே—தவஞ்செய்து பெற்ற சிறப்புக்களேயுந் தொலேத் தாய்; சிறந்த தக்கனும் பேரையும் தொலேத்தனே—வேதம் உணர்ந்து சிறந்த தக்கன் என்கின்ற புகழையுந் தொலேத்தாய்; பேதையாகி—அறிவிலியாய், நின் ஏரையும் தொலேத்தனே—உன் முக அழகையுங் கெடுத்தாய்; ஏவல் போற்றுநர் ஆரையும் தொலேத்தனே—உன் ஏவலேப் பேணுவோர் எவரையும் இழந்தாய்; அலக்கண் எய்திஞய்—துன்பமொன்றனேயே பேருகப் பெற்ருய். (4)

நின்னுணர் வல்லது நிகரின் மேலவர்
சொன்னது முணர்ந்திலே தொல்லே யூழிஞ
லிந்நிலே யாயினே யிறையை யெள்ளிஞய்
முன்னவ னுயர்நிலே முழுதுந் தேர்ந்தநீ.

முன்னவன் உயர்நிலே முழுதும் தேர்ந்த நீ—முதல்வராகிய சிவபெருமானது உயர்ந்த இயல்பு முழுவதையும் என்பாற் கேட்டுத் தெளிந்த மகாபண்டிதனுன நீ, தொல்லே ஊழிஞல் இறையை எள்ளிஞய்—பழைய ஊழ்வினேப் பயனுல் முழு முதற் பொருளே நிந்தித்தாய்; நிகர் இல் மேலவர்—ஒப்பில்லாத திருநந்தி தேவர் முதலிய மேலோர்கள், சொன்னதும் உணர்ந்திலே—சொன்ன புத்திமதி களேயும் பொருள் செய்தாயல்லே; இ நிலே ஆயினே—இவ்வாற்ருல் இந்த நிலேயை எய்திஞய்; நின் உணர்வு அல்லது—உன் அறிவு அறிவன்று. (5)

இயற்படு வளம்பெறீஇ யீசன் மேன்மைக
ளயர்த்தனே நின்னள வன்று மையரு
னுயிர்த்தொகை தமக்கெலா முள்ள தாதலான்
மயக்கினே யடைந்தனே மற்றென் செய்திநீ.

இயல் படும் வளம் பெறீஇ—தகுதியமைந்த செல்வத்தைப் பெற்று, ஈசன் மேன்மைகள் அயர்த்தனே—சிவபெருமானின் மேன்மைகளே மறந்தாய்; நின்

அளவு அன்று—செல்வம் வந்துற்றகாலைத் தெய்வத்தை மறத்தல் சிறப்பாக உன்னிடத்தில் மாத்திரம் உள்ளதொரு குற்றமன்று; மையல் தான் உயிர்த் தொகை தமக்கு எலாம் உள்ளது—இவ்வாருய மயக்கந்தான் ஆன்மவர்க்கம் அனைத்துக்கும் பொதுவாய் அமைந்ததொரு குற்றமாம்; ஆதலால் நீ மற்று என் செய்தி மயக்கினை அடைந்தனை—ஆதலினாலே ஆன்மவர்க்கத்துட்பட்ட நீ வேறு என்ன செய்வாய் மயக்கம் அடைந்தாய். (6)

முற்றுணர் வெய்தியே முழுத ளித்திடப்
பெற்றவெங் கண்ணினும் பெரிது மாமயக்
குற்றன முற்பக லுதுகண் டின்றுபோ
னெற்றியங் கண்ணினு னருளி னீக்கினுன்.

முற்று உணர்வு எய்தி—சிவபெருமானுடைய திருவருளினாலே எல்லா வற்றையும் அறியும் முற்றறிவைப் பொருந்தி, முழுது அளித்திடப் பெற்ற—உலகம் முழுவதையும் படைத்துக் காக்க அதிகாரம் பெற்ற, எம் கண்ணினும்—பிரம விஷ்ணுக்களாகிய எங்களிடத்திலேயும், முன் பகல் பெரிதும் மா மயக்கு உற்றன—முன்னொரு காலத்திற் பெரிதும் இருண்ட மயக்கங்கள் உண்டாயின; உது நெற்றி அம் கண்ணினன் கண்டு—அதனை அழகிய நெற்றிக்கண்ணினை யுடைய சிவபெருமான் கண்டருளி, இன்று போல் அருளின் நீக்கினுன்—இன்று போல அன்றும் திருவருளினாலே மயக்கத்தைப் போக்கியருளினார்.

ஈண்டு முற்றுணர்வு, இருதொழிற்கும் வேண்டிய உணர்வு. (7)

ஆதலி னருளுடை யமல நாயகன்
பாதம தருச்சனை பரிவிற் செய்குதி
பேதுறு மிப்பவப் பெற்றி நீக்கியே
போதமொ டின்னருள் புரிவ னென்றலும்.

ஆதலின்—ஆதலினாலே, அருளுடை அமல நாயகன் பாதமது அருச்சனை பரிவில் செய்குதி—கருணாகரரும் நின்மலருமாகிய சிவபெருமானுடைய திருவடிகளை அன்போடு அருச்சனை செய்யக்கடவை; பேதுறும் இ பவம் பெற்றி நீக்கி—துன்புறுகின்ற இந்தப் பாவகாரியமனைத்தையும் போக்கி, போதமொடு இன்னருள் புரிவன்—தம்மையறியும் ஞானத்தோடு கூடிய இனிய திருவருளை அப்பெருமான் புரிந்தருளுவர்; என்றலும்—என்று பிதாவாகிய பிரமதேவர் கூறுதலும். (8)

மைதிகழ் முகத்தினன் மற்ற தற்கிசைந்
துய்திற முணர்த்தினை யுங்கள் கண்ணுமுன்
னெய்திய மையலு மெம்பி ரானருள்
செய்தது மியம்புதி தெளிதற் கென்னவே.

திகழ்மை முகத்தினன்—விளங்குகின்ற ஆட்டுமுகத்தனாகிய தக்கன், அதற்கு இசைந்து—சிவார்ச்சனை செய்தலாகிய அதற்கு உடன்பட்டு, உய் திறம் உணர்த்தினை—பிதாவே அடியேன் உய்யுந் திறத்தை உணர்த்தியருளினீர்; தெளிதற்கு—மேலும் தெளிவு உண்டாகும்பொருட்டு, முன் உங்கள் கண்ணும்—முன்பு பிரம விஷ்ணுக்களாகிய உங்களிடத்தும், எய்திய மையலும்—மயக்கம் உண்டாய தனையும், எம்பிரான் அருள் செய்ததும்—அம்மயக்கம் நீங்கும்படி எம்பெருமான் உங்களுக்கு அருள் செய்ததனையும், இயம்புதி—உரைத்தருள்வீராக; என்ன—என்று பிரார்த்திக்க. (9)

பொன்னிருஞ் சததளப் போதின் மீமிசை
மன்னிய திசைமுகன் மதலை மாமுக
முன்னுற நோக்கியே முந்துங் கூறின
மின்னமு மக்கதை யியம்பு வோமெனா.

பொன் இரும் சத தளப் போதின் மீ மிசை மன்னிய திசைமுகன்—பொன் மயமான பெரிய நூறு இதழ்கள் பொருந்திய தாமரை மலரின்மீது வீற்றிருந்த பிரமதேவர், மதலை மாமுகம் முன்னுற நோக்கி—புதல்வனாகிய தக்கனது ஆட்டு முகத்தை எதிருற முகஞ்செய்து, அ கதை முந்தும் கூறினம் இன்னமும் இயம்புவோம் எனா—நமக்கு மயக்கம் வந்து நீங்கிய அக் கதையை முன்னருஞ் சொன்னோம் மயக்கத்தால் மறந்தாயாதலின் பின்னருஞ் சொல்வோம் என்று. (10)

நாலுள திசைமுக நாதன் றொல்லைநாண்
மாலொடு பற்பகன் மலைவு செய்துநா
மேலதோர் பொருளென விமலன் வந்தருள்
கோலம துன்னியே தொழுது கூறுவான்.

நாலுள திசைமுக நாதன்—நான்கு திசைக்கும் நான்கு முகங்களையுடைய பிரமதேவர், தொல்லை நாள்—பழையதொரு காலத்தே, மாலொடு பல் பகல் மலைவு செய்து—திருமாலோடு தாமும் பல நெடுங்காலம் போர்செய்து, நாம் மேலது ஓர் பொருள் என—ஒவ்வொருவரும் நாமே மேலானதாய ஒப்பற்ற ஏக மாய பரம் பொருள் என்று வாதிக்க, விமலன் வந்து—அச்சமயத்திலே தமக்கு மத்தியில் மயக்கமற்றவராகிய சிவபெருமான் தோன்றியருளி, அருள் கோலம் அது உன்னி—தம் மயக்கைப் போக்கித் தமக்கருள்செய்த சிவபெருமானது திருப்பெருங் கோலத்தைத் தியானித்து, தொழுது—வணங்கி, கூறுவான்—சொல்லுவார். (11)

**வேறு**

பத்தினொடு நூறெதிர் படுத்தயுக நான்மை
யொத்தமுடி வெல்லையென தோர்பகல தாகு
மத்தகு பகற்பொழுது மந்தியொடு செல்ல
நத்தமுறு நான்றுயிலி னண்ணுவனவ் வேலை.

பத்திஞெடு எதிர்படுத்த நூறு நான்மை யுகம்—பத்திஞற் பெருக்கப்பட்ட நூருகிய ஆயிரம் சதுர்யுகம், முடிவு ஒத்த எல்லே—இறுதியைப் பொருந்திய கால அறுதி, எனது ஓர் பகல் ஆகும்—எனக்கு ஒரு பகற்காலம் ஆகும்; அ தகு பகற்பொழுதும் அந்தியொடு செல்ல—அத்தகைய பகற்காலமும் அந்திக்காலத் துடன் கழிய, நத்தம் உறும்—இராக்காலம் வரும்; அ வேலே—அப்பொழுது, நான் துயிலின் நண்ணுவன்—நான் நித்திரை செய்வேன். (12)

வாளுமொடுங் கும்பரிதி மாமதி யொடுங்கு
நாளுமொடுங் குந்தமது நாளுமொடுங் குற்றே
கோளுமொடுங் குங்குலிச பாணிமுதல் வாஞேர்
கேளுமொடுங் கும்புவனி கேடுபடு மன்றே.

தமது நாளும் ஒடுங்குற்று—தத்தம் வாழ்நாளும் ஒடுங்கி, பரிதி மா மதி ஒடுங்கும்—சூரியனுஞ் சிறந்த சந்திரனும் ஒடுங்கும்; நாளும் ஒடுங்கும்—நட்சத் திரமும் ஒடுங்கும்; கோளும் ஒடுங்கும்—கிரகங்களும் ஒடுங்கும்; வாளும் ஒடுங் கும்—அவ்வாற்ருல் ஒளி என்பதும் இல்லேயாம்; குலிச பாணி முதல் வாஞேர் கேளும் ஒடுங்கும்—வச்சிரபாணியான இந்திரன் முதலிய தேவச் சுற்றமும் ஒடுங்கும்; புவனி கேடு படும்—உலகம் அழியும்.

வாள் இங்கே அக்கினி எனினுமாம். (13)

மண்ணுலகி லாருயிர் வறந்திறுதி யாகும்
விண்ணுறு பதங்களில் வியன்முனிவர் யாருந்
துண்ணென வெருக்கொடு துளங்கினர்கள் சூழா
வெண்ணுசன லோகமிசை யெய்துவர்க ளந்நாள்.

மண்ணுலகில் ஆர் உயிர் வறந்து இறுதியாகும்—மண்ணுலகிலுள்ள அரிய உயிர்கள் வறந்து அழியும்; விண் உறு பதங்களில் வியன் முனிவர் யாரும்—ஆகாய உலகங்களிலிருக்கின்ற பெருமை பொருந்திய முனிவர்கள் யாவரும், துண்ணென வெருக்கொடு துளங்கினர்கள் சூழா—துண்ணென்று வெருக் கொண்டு நடுங்கி ஆலோசித்து, எண்ணு சனலோக மிசை—மதிக்கப்பகின்ற சனலோகத்தின்கண்ணே, அ நாள் எய்துவர்கள்—அந்த இராக்காலத்தில் அடைவார்கள். (14)

வாரிதிக ளுற்றிறமும் வல்லேயி லெழுந்தே
யாரியை தவஞ்செய்பதி யாதியன வல்லாப்
பாரினே யருந்தியொரு பாகமதன் மேலு
மோரெழு பிலத்துலக முண்டுலவு மன்றே.

நால் திறமும்—நான்கு திக்கினும், வாரிதிகள் வல்லையில் எழுந்து—சமுத்திரங்கள் விரைந்தெழுந்து, ஆரியை தவம் செய் பதி ஆதியன அல்லாப் பாரினை ஒரு பாகம் அருந்தி—ஆரியையாகிய காமாட்சியம்மையார் தவஞ்செய்த பதியாகிய காஞ்சிபுரம் முதலிய புண்ணியத் தானங்களல்லாத பூமியின் ஒரு பாகத்தை விழுங்கி, அதன் மேலும்—அவ்வளவில் அடங்காமல் அதன்மேலும், ஓர் எழு பிலத்து உலகம் உண்டு உலவும்—ஏழு பாதாள உலகங்களையும் மூடிப் பரவும். (15)

ஒண்டிகிரி மால்வரை யுடுத்தநில முற்றுங்
குண்டுறு பிலத்தினொடு கூடும்வகை வீட்டி
யண்டருல குண்டுநிமிர்ந் தப்புறனு மாகி
மண்டுபுன லேயுலகை மாற்றியிடு மன்றே.

ஒண் திகிரி மால் வரை உடுத்த நிலம் முற்றும்—ஒள்ளிய பெரிய சக்கரவாள கிரி சூழ்ந்த நிலவுலகம் முழுவதும், குண்டு உறு பிலத்தினொடு கூடும்வகை வீட்டி—ஆழமான பிலங்களோடு ஒன்றுமாறு ஆழ்த்தி, அண்டர் உலகு உண்டு—தேவருலகத்தை உண்டு, நிமிர்ந்து அப்புறனும் ஆகி—மேற் சென்று அப்பாலுமாய், மண்டு புனலே—நிறைந்த சலப்பிரளயமே, உலகை மாற்றியிடும்—உலகத்தைத் தன்மயமாக மாற்றும். (16)

ஆனதொரு வேலையிலொ ராலிலையின் மீதே
மேனிலவு தண்மதி மிலைந்தவன் மலர்த்தா
டானக முறுத்தியொர் தனிக்குழவி யேபோற்
கானுறு துழாய்மவுலி கண்டுயிலு மாதோ.

ஆனது ஒரு வேலையில்—ஒருமுறை அவ்வாறாயதொரு சலப்பிரளயத்தில், ஓர் ஆலிலையின் மீது—அப்பிரளயத்தில் மிதந்துகொண்டிருந்ததோர் ஆலிலையின் மீது, மேல் நிலவு தண்மதி மிலைந்தவன் மலர்த்தாள் தான் அகம் உறுத்தி—ஆகாயத்தில் விளங்குகின்ற தண்ணிய சந்திரனைச் சூடிய சிவபெருமானுடைய மலரடிகளையே மனத்தின்கண் தியானித்துக்கொண்டு, ஓர் தனிக் குழவிபோல்—தன்னந்தனியானதொரு குழந்தையைப்போல, கான் உறு துழாய் மவுலி கண் துயிலும்—மணங் கமழுகின்ற துழாயணிந்த முடியினையுடைய திருமால் கண் துயிலுவாராயினர். (17)

கண்டுயிலு கின்றபடி கண்டுசன லோகத்
தண்டுமுனி வோர்புகழ வாங்கினம் விழித்தே
பண்டைநில னேட்வது பாதலம தாகக்
கொண்டன்மணி மேனியனொர் கோலவுரு வானான்.

கண் துயிலுகின்றபடி—திருமால் அறிதுயில் செய்கின்ற தன்மையை, சன லோகத்து அண்டு முனிவோர் கண்டு புகழ—சனலோகத்தைச் சேர்ந்து இருந்த முனிவர்கள் கண்டு புகழ்ந்து தோத்திரஞ்செய்ய, ஆங்ஙனம் விழித்து—திருமால் அப்பொழுது துயிலுணர்ந்து, பண்டை நிலன் நேட—பழையதாகிய பூமியைத் தேட, அது பாதலமது ஆக—அப்பூமி பாதலத்தின்கண்ணதாக, கொண்டல் மணி மேனியன்—அழகிய மேகவர்ணரான திருமால், ஓர் கோல உரு ஆனன்—அப்பொழுது ஒரு பன்றி உருவங் கொண்டார். (18)

கோலமெனு மோருருவு கொண்டுபில மேகி
ஞாலமெவ ணுற்றதென நாடியது தன்னை
வாலிய வெயிற்றினிடை வல்லைகொடு மீண்டு
மூலமென வேநிறுவி மொய்ம்பினொடு போனன்.

கோலம் எனும் ஓர் உருவு கொண்டு—பன்றியென்று சொல்லப்படும் ஒப்பற்ற உருவத்தை எடுத்துக்கொண்டு, ஞாலம் எவண் உற்றது என நாடி—பூமி எவ்விடத்தது என்று தேடி, பிலம் ஏகி—பாதலத்தின்கட் சென்று, அது தன்னை—அப் பூமியை, வாலிய எயிற்றினிடை வல்லைகொடு மீண்டு—வெள்ளியதொரு தந்தத்தால் விரைந்தெடுத்துத் தாங்கிக்கொண்டு மீண்டு, மூலம் எனவே மொய்ம்பினொடு நிறுவிப் போனன்—பண்டு போலவே வலியுடன் அதனை வைத்துப் போயினர். (19)

அற்பொழுது நாலுகமொ ராயிரமு மேக
வெற்பொழுது தோன்றியதி யான்றுயி லுணர்ந்தே
கற்பனை யியற்றிய கருத்தினினை போழ்தி
னிற்புழி யடைந்தன நெடும்புணரி யெல்லாம்.

அல்பொழுது நாலுகம் ஓராயிரமும் ஏக—இராப்பொழுதாகிய ஆயிரஞ் சதுர்யுகமுங் கழிய, எல்பொழுது தோன்றியது—பகற்பொழுது ஆரம்பமானது; யான் துயில் உணர்ந்து—உடனே யான் துயிலெழுந்து, கற்பனை இயற்றிய—கற்பனையாகிய சிருட்டியைச் செய்யும்பொருட்டு, கருத்தில் நினை போழ்தில்—மனத்தில் நினைத்தபோது, நெடும் புணரி எல்லாம் நிற்புழி அடைந்தன—பெருகி நீண்டெழுந்த சமுத்திரம் யாவும் பண்டு நிற்குமிடத்திற் சென்று நின்றன.

திருமால் பூமியை நிறுவிப் போக, இருளும் விடிய, பிரமா சிருட்டியை ஆரம்பித்தாரென்க. (20)

அருத்திகெழு பாற்கட லராவணையின் மீதே
திருத்திகழு மார்புடைய செம்மல்புவி தன்னை
யிருத்தின மெயிற்றினி லெடுத்தென நினைத்தே
கருத்தினி லகந்தைகொடு கண்டுயில லுற்றான்.

திரு திகழும் மார்பு உடைய செம்மல்—பூமியை நிறுவிப்போன திருமறு மார்பினரான திருமால், அருத்தி கெழு பாற்கடல் அரா அணையின் மீது—விருப்பம் மிக்க பாற்சமுத்திரத்திலே சர்ப்ப சயனத்தின்மீது, புவி தன்னை எயிற்றினில் எடுத்து இருத்தினம் என நினைத்து—பூமியை எயிற்றாலெடுத்து நிறுத்தினோம் என்று நினைத்துக்கொண்டு, கருத்தினில் அகந்தை கொடு—அதனாலே மனத்தின்கண்ணே அகங்காரத்தைச் சுமந்துகொண்டு, கண் துயிலல் உற்றான்—பகலிரவற்ற யோக நித்திரையைச் செய்தார். (21)

ஆனபொழு தத்தினி லளப்பிலிமை யோரைத்
தானவரை மானுடவர் தம்மொடு விலங்கை
யேனைய வுயிர்த்தொகையை யாவையு மளித்தே
வானகமும் வையகமு மல்கும்வகை வைத்தே.

ஆன பொழுதத்தினில்—அப்பொழுது, அளப்பில் இமையோரை தானவரை மானுடவர் தம்மொடு விலங்கை—அளவற்ற தேவர்களையும் அசுரர்களையும் மனிதர்களையும் விலங்குகளையும், ஏனைய உயிர்த்தொகையை—மற்றைய உயிர்க் கூட்டங்களையும், யாவையும் அளித்து—யாவற்றையுஞ் சிருட்டிசெய்து, வானகமும் வையகமும் மல்கும் வகை வைத்து—விண்ணுலகிலும் மண்ணுலகிலும் அவைகள் விருத்தியுறும் வண்ணஞ் செய்து. (22)

மன்னியலு மிந்திரனை வானரசி லுய்த்தே
யன்னவ னொழிந்ததிசை யாளர்களை யெல்லாந்
தந்நிலை நிறுத்தியது தன்னைநெடி துன்னி
யென்னையல தோர்கடவு ளின்றென வெழுந்தேன்.

மன் இயலும் இந்திரனை வான் அரசில் உய்த்து—இறைமை பொருந்துகின்ற இந்திரனைச் சுவர்க்க அரசியலில் இருத்தி, அன்னவன் ஒழிந்த திசை யாளர்களை எல்லாம்—அவ்விந்திரனொழிந்த திக்குப்பாலக ரனைவரையும், தம் நிலை நிறுத்தி—தத்தம் நிலையில் நிறுவி, அதுதன்னை—இவ்வாறு செய்ததாகிய அச் செயற்கருஞ் செயலை, நெடிது உன்னி—யானன்றி வேறு யார் இது செய்ய முடியும் என்று நெடுந்தூரஞ் சிந்தித்து, என்னை அலது ஓர் கடவுள் இன்று என எழுந்தேன்—என்னையன்றி ஒரு முழுமுதற்கடவுள் வேறு இல்லை என்று அகங்கரித்தெழுந்தேன். (23)

துஞ்சலுறு காலைதனிற் றுஞ்சுமெழும் வேலை
யெஞ்சலி லுயிர்த்தொகுதி யாவுமெழும் யானே
தஞ்சமெனை யன்றியொரு தாதையிலை யார்க்கும்
விஞ்சுபொருள் யானென வியந்தெனை நடந்தே.

துஞ்சல் உறு காலை தனில் துஞ்சும்—யான் துயிலும்பொழுது உலகம் ஒடுங்கும்; எழும் வேலை—யான் துயிலெழும்போது, எஞ்சல் இல் உயிர்த் தொகுதி யாவும் எழும்—குறைவற்ற உயிர்த்தொகுதி அனைத்துமாகிய உலகந் தோன்றும்; தஞ்சம் யானே—அந்தமும் ஆதியுமாய் உலகத்துக்குப் பற்றுக்கோடாவேன் யானே; எனை அன்றி ஒரு தாதை இலை—என்னையன்றி உலகத்துக்கு ஒரு கருத்தா இல்லை; யார்க்கும் விஞ்சு பொருள் யான்—எவர்க்கும் மேலாகிய பரம்பொருள் யானே; என எனை வியந்து நடந்து—என்று என்னை யானே வியந்து நடந்து. (24)

மல்லலுறு மேலுலகு மாதிரமு மேனைத்
தொல்லுலகு மேருவொடு சுற்றுகட லேழு
மொல்லென விரைத்தெழு முயிர்த்தொகையு மல்லா
வெல்லையில் பொருட்டிறனும் யானெடிது நோக்கி.

மல்லல் உறு மேல் உலகும்—பெருமை மிக்க மேலுலகங்களையும், மாதிரமும்—திக்குக்களையும், ஏனைத் தொல் உலகும்—மற்றைய பழைய உலகங்களையும், மேருவொடு சுற்று கடல் ஏழும்—மேருமலையையும் சூழுகின்ற ஏழு கடல்களையும், ஒல்லென இரைத்து எழும் உயிர்த்தொகையும்—ஒல்லென்று ஒலித்தெழுகின்ற உயிர்க் கூட்டங்களையும், அல்லா எல்லையில் பொருள் திறனும்—இவையல்லாத பொருள் வகைகளையும், யான் நெடிது நோக்கி—யான் நீண்ட நேரம் உற்று நோக்கி. (25)

இப்பொரு ளனைத்துமுனம் யான்பயந்த வென்றா
லொப்பிலை யெனக்கென வுளத்திடை மதித்தே
னப்பொழுதி லாரமுத வாழியிடை யாழிக்
கைப்புய லகந்தையொடு கண்டுயிலல் கண்டேன்.

இ பொருள் அனைத்தும்—இப் பிரபஞ்சப் பொருள் அனைத்தும், முனம் யான் பயந்த என்றால்—முதற்கண் யானே சிருட்டித்தனவானால், எனக்கு ஒப்பு இலை என உளத்திடை மதித்தேன்—எனக்கு ஒப்பாவார் பிறர் இலர் என்று மனத்தின்கண் என்னை யானே மதித்து அகங்கரித்தேன்; அப்பொழுதில்—அதே சமயத்தில், ஆர் அமுத ஆழி இடை—அரிய அமுதத்தையுடைய பாற் சமுத்திரத்தில், ஆழிக் கைப்புயல்—சக்கரத்தைத் தரித்த கையினையுடைய மேகம் போன்ற திருமால், அகந்தையொடு—என்னைப்போலவே தாமும் அகங்கரித்துக்கொண்டு, கண் துயிலல் கண்டேன்—அறிதுயில் புரிவதனைக் கண்ணுற்றேன். (26)

அன்றவனை மாலென வறிந்தன னறிந்துஞ்
சென்றன னகந்தையொடு செய்யதிரு வைகு
மன்றன்மணி மார்பமிசை வண்கைகொடு தாக்கி
யின்றுயி லுணர்ந்திடுதி யென்றலு மெழுந்தான்.

அன்று அவனே மால் என அறிந்தனன் அறிந்தும்—அப்பொழுது அங்கே துயில்செய்பவரைத் திருமால் என்று அறிந்திருந்தேனுயினும், அகந்தையொடு சென்றனன்—அறியாதேன்போன்று அகங்காரத்தோடு அவர் அருகிற் சென்று, செய்ய திரு வைகும் மன்றல் மணி மார்பம் மிசை வண் கை கொடு தாக்கி—செம்மையாகிய இலக்குமி வசிக்கின்ற மணங் கமழாநின்ற கௌத்துவ மணி யணிந்த மார்பத்தின்மீது வண்மையமைந்த கையினலடித்து, இன் துயில் உணர்ந்திடுதி என்றலும் எழுந்தான்—இனிய துயிலுணர்ந்தெழுதி என்றவுடன் அவர் எழுந்தார். (27)

ஏற்றெழு முராரிதனை யாரையுரை யென்றே
சாற்றுதலும் யாமுனது தாதையறி யாய்கொ
லாற்றலைகொள் மைந்தவென நன்றெனை நகைத்துத்
தேற்றிடினு நீதுயி றெளிந்திலைகொ லென்றேன்.

ஏற்று—அடித்த அடியை ஏற்று, எழு முராரி தனை—துயிலெழாநின்ற முராரி யாகிய திருமாலை, யாரை உரை என்று சாற்றுதலும்—நீ யாவன் சொல் என்று யான் வினவுதலும், நால் தலை கொள் மைந்த—நான்கு தலைகளையுடைய மைந்தனே, யாம் உனது தாதை—யாம் உன் பிதா; அறியாய்கொல்—நீ இதனை அறியாயோ; என—என்று திருமால் கூற, நன்று என நகைத்து—நான் நன்று என்று சிரித்து, தேற்றிடினும்—நான் துயிலுணர்த்தியவழியும், நீ துயில் தெளிந் திலைகொல் என்றேன்—இன்னும் நீ துயிலுணர்ந்தாயல்லைப்போலும் என்றேன்.

துயிலுணர்ந்தனையாயின் இவ்வாறு பிதற்ருய் என்றவாரும். ஏற்று என் பதற்கு எதிர்த்து என்றுரைப்பினும் அமையும். (28)

தந்தையென வந்தவர்க டாமுதவு கின்ற
மைந்தர்க டமக்குரைசெய் வாசகம தென்ன
முந்துற வெமக்கிது மொழிந்ததியல் பன்ரு
லெந்தையென வேநினைதி யாம்பிரம மேகாண்.

தந்தை என வந்தவர்கள்—பிதா என்றிருப்பவர்கள், தாம் உதவுகின்ற மைந்தர்கள் தமக்கு—தாம் பெற்ற புத்திரர்களுக்கு, உரைசெய் வாசகமது என்ன—சொல்லுகின்ற வாசகத்தை ஒப்ப, முந்து உற—எமக்கெதிரில், எமக்கு—உன் தந்தையாகிய எமக்கு, இது மொழிந்தது இயல்பு அன்று—திருமாலே நீ இந்த வாய்பாட்டை ஒப்பித்து முறையாகாது; எந்தை என நினைதி—எம்மை நீ உன் பிதா என்று கருது; யாம் பிரமம் காண்—நாமே பரப் பிரமம் இதனை அறிகுதி.

யாம் மரியாதைப் பன்மை. (29)

உந்தியி லிருந்துவரு முண்மையுண ராமே
மைந்தனென நீயெமை மனத்தினினை குற்று
யிந்தன முதித்திடு மெரிக்கடவு ளுக்குத்
தந்தையது வோவிது சழக்குரைய தன்றே.

உந்தியிலிருந்து வரும் உண்மை உணராமே—உனது உந்திக்கமலத்தி லிருந்து யாம் தோன்றிய தத்துவத்தை ஆராயாமல், எமை மைந்தன் என நீ மனத்தில் நினைகுற்றாய்—எம்மை உன் மைந்தனென்று நீ மனத்தில் நினைத்துக் கொண்டாய்; உதித்திடும் எரிக் கடவுளுக்கு இந்தனம் தந்தையோ—தன் பால் உதிக்கின்ற அக்கினிதேவனுக்கு விறகு தந்தையாகுமோ; இது சழக் குரை—இவ்வாற்றால் எம்மை மைந்தன் என்று நீ செப்பிய இது பொய்யுரை யாம்.

அது, பகுதிப் பொருள் விகுதி. (30)

நின்னுடைய தாதையென நீயுனை வியந்தா
யன்னதை விடுக்குதி யருந்தவ வலத்தான்
முன்னமொரு தூணிடை முளைத்தனை யவற்று
லுன்னிலது வேமிக வுயர்ந்தபொரு ளாமோ.

நின்னுடைய தாதை என—உன்னுடைய பிதா நான் என்று எம்மை நோக்கிக் கூறி, நீ உனை வியந்தாய்—நீ உன்னை வியந்துரைத்தாய்; அன்னதை விடுக்குதி—அவ்வாறுரைப்பதை இனி விட்டுவிடு; அரும் தவ வலத்தால் முன்னம் ஒரு தூணிடை முளைத்தனை—அரிய தவவலியினாலே முன்னொரு காலத்தில் ஒரு தூணின்கண் நீ நரசிங்கமாய்த் தோன்றினாய்; அ அற்றால்—அந்தத் தன்மை யினால், அது—அந்தத் தூண், உன்னில் மிக உயர்ந்த பொருள் ஆமோ—உன்னிலும் பார்க்க மிகவுயர்ந்ததொரு பொருளாகுமா. (31)

துய்யமக னும்பிருகு சொற்றசப தத்தா
லையிரு பிறப்பினை யடிக்கடி யெடுத்தாய்
மெய்யவை யனைத்தையும் விதித்தனம் விதித்தெங்
கையது சிவந்துளது கண்டிடுதி யென்றேன்.

துய்ய மகனும் பிருகு—தூய்மைபொருந்திய எம்முடைய புதல்வனான பிருகு முனிவன், சொற்ற சபதத்தால்—உனக்கிட்ட சாபத்தால், ஐயிரு பிறப்பினை அடிக்கடி எடுத்தாய்—பத்துப் பிறப்புக்களை அடிக்கடி அடைந்தாய்; மெய் அவை அனைத்தையும் விதித்தனம்—நீ பிறக்குந்தோறும் உரிய உடம்புகள் அனைத்தையும் யாமே படைத்தோம்; விதித்து எம் கை சிவந்துளது—உனக்கு உடம்புகளைப் படைத்துப் படைத்து எமது கை கன்றிச் சிவந்துவிட்டது; கண்டிடுதி என்றேன்—இதோ எமது கையை உற்று நோக்கு என்றேன். (32)

## வேறு

அன்றவற் கெதிர்புகுந் தனையசொற் புகறலுங்
குன்றெடுத் திடுகரக் கொண்டல்போன் மேனியா
னன்றெனச் சிரமசைஇ நகைசெயா வெகுளியாற்
பொன்றளிர்க் கரதலம் புடைபுடைத் துரைசெய்வான்.

அன்று அவற்கு எதிர் புகுந்து அனைய சொல் புகறலும்—அன்று அத் திருமாலுக்கு எதிரே சென்று அவ்வாறாகிய சொற்களைச் சொல்லுதலும், குன்று எடுத்திடு கரக் கொண்டல் போல் மேனியான்—ஒரு காலத்திற் கோவர்த் தனகிரியைக் குடையாக எடுக்கும் மேகவர்ணரான திருமால், நன்று என சிரம் அசைஇ—நன்று என்று சிரக்கம்பஞ் செய்து, நகை செயா—சிரித்து, வெகுளியால்—கோபத்தினாலே, பொன் தளிர்க் கரதலம் புடைபுடைத்து உரை செய்வான்—அழகிய தளிர் போன்ற திருக்கரங்களை ஒன்றோடொன்று பலமுறை தட்டிக் கூறுவார். (33)

நச்சராப் பூண்டிடு நம்பனுன் சென்னியி
னுச்சியந் தலையினை யுகிரினாற் களைதலு
மச்சமாய் வீழ்ந்தனை யதுபடைத் தின்னமும்
வைச்சிலாய் நன்றுநீ மற்றெமைத் தருவதே.

நச்சு அரா பூண்டிடும் நம்பன்—நஞ்சினையுடைய சர்ப்பத்தைத் தரித்த சிவபெருமான், உன் சென்னியில் உச்சி அம் தலையினை உகிரினால் களைதலும்—உன் தலைகளில் உச்சிக்கண்ணுள்ள அழகிய தலையை நகத்தினாலே கிள்ளி எடுத்தலும், அச்சமாய் வீழ்ந்தனை—அச்சமுற்று விழுந்தாய்; அது படைத்து இன்னமும் வைச்சிலாய்—அத் தலையை உண்டாக்கி இன்னமும் வைத்துக் கொண்டாயல்லை; நீ—இவ்வியல்பினையுடைய நீ, எமைத் தருவது நன்று—எம்மைப் படைப்பதென்பது நன்றாயிருக்கிறது. (34)

நேயமாய் முன்னரே நின்னையீன் றுதவிய
தாயும்யா மன்றியுந் தந்தையும் யாமுனக்
காயதோர் கடவுள்யா மடிகள்யா மைந்தநம்
மாயையா லின்றிவண் மதிமயக் குறுதிகாண்.

நேயம் ஆய் முன்னர் நின்னை ஈன்று உதவிய தாயும் யாம்—விருப்பமுற்று முன் உன்னைப் பெற்றளித்த தாயும் யாமே; அன்றியும் தந்தையும் யாம்—அல்லாமலும் உன் தந்தையும் யாமே; உனக்கு ஆயது ஓர் கடவுள் யாம்—உனக்கு நீ வணங்குதற்குரியதொரு தெய்வமும் யாமே; அடிகள் யாம்—குருவும் யாமே; மைந்த—மகனே, நம் மாயையால் இன்று இவண் மதி மயக்குறுதி—நம்முடைய மாயையினாலே இன்று இவ்விடத்திற் புத்தி மயங்குதலைப் பொருந்துகின்றாய். (35)

பொன்னலா தாங்கொலோ பூணெலா மிறைபுரி
மன்னலா தாங்கொலோ மாநில மாநிலந்
தன்னலா தாங்கொலோ தகுவதோர் வளமதி
லென்னலா தாங்கொலோ வெச்சரா சரமுமே.

பொன் அலாது பூண் எலாம் ஆம் கொல்—பொன்னையின்றி ஆபரண வகையெல்லாம் உண்டாகுமோ; இறை புரி மன் அலாது மாநிலம் ஆம் கொல்—அரசு புரியும் அரசனையின்றிப் பெரிய நிலவுலகம் நடைபெறுமா; மாநிலம் தன் அலாது தகுவதோர் வளம் ஆம் கொல்—பெரிய நிலத்தையின்றித் தகுதி பொருந்திய ஒப்பற்ற வளம் உளதாமோ; அதில் என் அலாது எ சராசரமும் ஆம் கொல்—அதுபோல என்னையின்றி எந்தச் சராசரமுந் தோன்றுமோ. (36)

எண்ணுவிப் போனுநா னெண்ணுகின் றோனுநான்
கண்ணுதற் பொருளுநான் காண்டகும் புலனுநா
னண்ணுதற் கரியனு ஞரணக் கடவுணன்
விண்ணகத் தலைவனன் வேதமும் பொருளுநான்.

எண்ணுவிப்போனும் நான்—உயிர்களை எண்ணுவிப்போனுகிய காட்டுவானும் யான்; எண்ணுகின்றோனும் நான்—உயிரினுள் ஒன்றுயிருந்து எண்ணுகின்றவனுகிய காண்பவனும் யான்; கண்ணுதல் பொருளும் நான்—கருதப்படுகின்ற காட்சிப்பொருளும் யான்; காண் தகும் புலனும் நான்—காணத்தகும் ஐம்புலமாகிய காட்சியும் யான்; நண்ணுதற்கு அரியன் நான்—அணுகுதற்கரியவனும் யான்; நாரணக் கடவுள் நான்—நாராயணனுகிய கடவுளும் யான்; விண்ணகத் தலைவன் நான்—இந்திரனும் யான்; வேதமும் பொருளும் நான்—வேதமும் யான் வேதப் பொருளும் யான்.

கண்ணுதல்—கருதுதல். காண்புவன் முதலிய திறமும் என்னுங் கடவுள் வாழ்த்துச் செய்யுளை நோக்குக. (37)

ஆதிநா னுருவுநா னருவுநா னிருளுநான்
சோதிநா னத்தனுன் றூயனுன் மாயனுன்
யாதுநான் பூதநான் யாருநான் சங்கரன்
பாதிநா னவனுநான் பரமெனும் பொருளுநான்.

ஆதி நான்—எவற்றிற்கும் முதலும் நான்; உருவும் நான் அருவும் நான்—உருவமும் நான் அருவமும் நான்; இருளும் நான் சோதி நான்—இருளும் நான் ஒளியும் நான்; அத்தன் நான்—பிதாவும் நான்; தூயன் நான் மாயன் நான்—தூயவனும் நான் மாயவனும் நான்; யாதும் நான் யாரும் நான்—யாவதும் நான் யாவரும் நான்; பூதம் நான்—பூதங்களும் நான்; சங்கரன்

பாதி நான் அவனும் நான்—சிவனது பாதியாகிய சத்தியும் நான் சிவனும் நான்; பரம் எனும் பொருளும் நான்—பரம்பொருளும் நான். (38)

என்றுபற் பலவுரைத் திடுதலும் யானெதிர்
சென்றுருத் திருவருஞ் செருவினைப் புரிதுமேல்
வென்றியுற் றவரரோ மேலையோ ரெழுகென
வன்றிறற் போர்செய்வான் வந்தனன் மாலுமே.

என்று பற்பல உரைத்திடுதலும்—என்று பலபலவாறு திருமால் கூறுநிற்ப, யான் எதிர் சென்று—யான் திருமாலுக்கு எதிரே சென்று, இருவரும் உருத்துச் செருவினைப் புரிதும்—நாம் இருவேமுங் கோபித்துப் போரினைச் செய்வோம்; ஏல்—நீ போரை ஏற்றுக்கொள்; வென்றியுற்றவர் மேலையோர்—போரில் வெற்றி பெற்றவர் மேலோர் ஆவர்; எழுக என—போருக்கு எழுக என்று யான் அறை கூவ, மாலும் வன் திறல் போர்செய்வான் வந்தனன்—திருமாலும் வலிய திறலமைந்த போர்செய்யும்பொருட்டு உடன்பட்டுவந்தார்.

அரோ, அசை. (39)

ஏற்றெழுந் தோர்சிலை யேந்தியே வாங்கிமால்
கூற்றிரும் படைமுதற் கொடியவெம் படையெலா
மாற்றருந் தன்மையால் வல்லையுய்த் திடுதல்கண்
டாற்றினன் குசைகளா லனையவெம் படைதொடா.

மால் ஏற்று எழுந்து—திருமால் போரேற்றெழுந்து, ஓர் சிலை ஏந்தி வாங்கி—ஒரு வில்லினைத் தாங்கி வளைத்து, கூற்று இரும் படை முதல் கொடிய வெம் படை எலாம்—பெரிய யமப்படை முதலிய மிகக் கொடிய படைகள் அனைத்தையும், மாற்றரும் தன்மையால் வல்லை உய்த்திடுதல் கண்டு—தடுத்தற் கரியதொரு பிரகாரம் விரைந்து செலுத்துவது கண்டு, அனைய வெம் படை குசைகளால் தொடா ஆற்றினன்—அவ்வப் படைகளை யானுந் தருப்பைகளாற் பாவனை செய்து செலுத்திப் போர்புரிந்தேன். (40)

### வேறு

ஆங்கவை யழிவுற வரியுந் தன்படை
வாங்கினன் விடுத்தலும் வருதல் கண்டியான்
பாங்கரி னின்றவென் படையை யங்கையிற்
றூங்கிநின் றுய்த்தனன் றடுத்து மீண்டதே.

அரியும்—திருமாலும், ஆங்கு அவை அழிவு உற—அவ்விடத்திலே தாம் விட்ட அப் படைக்கலங்கள் அழிய, தன் படை வாங்கினன் விடுத்தலும்—தமது நாராயணப்படையை எடுத்து விடுக்க, வருதல் கண்டு—அது என்மேல் வருதலைக்

கண்டு, யான் பாங்கரில் நின்ற என் படையை—யான் என்பக்கலிலிருந்த பிரமப் படையை, அகம் கையில் தாங்கி நின்று உய்த்தனன்—கையகத்தே எடுத்துச் செய்யவேண்டியது செய்து நின்று செலுத்தினேன்; தடுத்து மீண்டது—அது நாராயணப் படையைத் தடுத்து என்பால் மீண்டது. (41)

அப்படை மீண்டபி னாதி யாகிய
வொப்பருஞ் சிவனளித் துளது புங்கவ
ரெப்பெரும் படைக்குமோ ரிறைவ னாயது
மைப்புயன் மேனிமால் வழுத்தி வாங்கினான்.

அ படை மீண்டபின்—யான் விடுத்த பிரமப்படை நாராயணப் படையைத் தடுத்து என்பால் மீண்டபின், ஆதி ஆகிய ஒப்பு அரும் சிவன் அளித்துளது—ஆதியாகிய ஒப்பில்லாத சிவபெருமான் கொடுத்தருளியது, புங்கவர் எப் பெரும் படைக்கும்—தேவர்களாகிய நம்மவரின் பெரிய படைகளனைத்துக்கும், ஓர் இறைவன் ஆயது—ஒப்பற்ற நாயகம் ஆனது ஆகிய சிவப்படையை, மை புயல் மேனி மால் வழுத்தி வாங்கினான்—கரிய முகில்போலும் மேனியையுடையராகிய திருமால் பூசித்து எடுத்தார்.

எம் பெரும்படை, எதுகை நோக்கி வலித்தல் விகாரமெய்தியதெனினுமாம். (42)

மஞ்சன முதலிய மறுவில் பூசனை
நெஞ்சுறு புலன்களி னிரப்பி யோச்சலு
மெஞ்சலி லமரர்க ளிரிய மேற்செலு
நஞ்சினுங் கொடிதென நடந்த வேலையே

மஞ்சனம் முதலிய மறுவில் பூசனை—திருமஞ்சனம் முதலிய குற்றமற்ற பூசனையை, நெஞ்சுறு புலன்களின் நிரப்பி—மனத்தின்வழிப்படுகின்ற புலங்களாற் செய்து முடித்து, ஓச்சலும்—விடுத்தலும், எஞ்சல் இல் அமரர்கள் இரிய—அழிதலில்லாத தேவர்கள் அஞ்சி ஓடும்படி, மேல் செலும் நஞ்சினும் கொடிது என—அவர்மேற் செல்லாநின்ற ஆலகாலத்தினுங் கொடியது என்று சொல்லும்படி, நடந்த வேலை—திருமால் விடுத்த சிவப்படை வந்த சமயத்தில். (43)

முன்னமே யெனக்குமம் முக்க ணாயக
னன்னதோர் படையளித் தருளி னானதை
யுன்னியே வழிபடீஇ யொல்லை யுய்த்தனன்
வன்னிமேல் வன்னிசெல் வண்ண மென்னவே.

அ முக்கண் நாயகன் எனக்கும் முன்னம் அன்னது ஓர் படை அளித்தருளினன்—அந்த மூன்று கண்களையுடைய சிவபெருமான் திருமாலுக்குப் போலவே எனக்கும் முன்னர் அத்தன்மைத்தாயதொரு சிவப்படையைத் தந்தருளியிருந்தார்; அதை உன்னி வழிபடீஇ—அச் சிவப்படையைத் தியானித்துப் பூசனை செய்து, வன்னிமேல் வன்னி செல் வண்ணம் என்ன—அக்கினி மீது அவ்வாறுயதோரக்கினி செல்லும் வண்ணம் போலச் செல்லும்படி, ஒல்லை உய்த்தனன்—விரைந்து யானுஞ் செலுத்தினேன். (44)

ஒருதிறத் திருவரு முஞற்றி யேவிய
வரனருள் பெரும்படை தம்மி லாடல்செய்
தெரிகனற் கற்றைகள் யாண்டுஞ் சிந்தியே
திரிதலுற் றுலகெலாஞ் செற்று லாயவே.

இருவரும் உஞற்றி ஏவிய—இருவரும் பூசனையாதியன செய்து செலுத்திய, அரன் அருள் ஒரு திறத்துப் பெரும்படை—சிவபெருமானருளிய ஒரேயியல்பினையுடைய பெரிய சிவப்படைகள், தம்மில் ஆடல் செய்து—தம்முட் போராடல் செய்து, யாண்டும் எரி கனல் கற்றைகள் சிந்தி—எவ்விடத்திலும் எரிகின்ற தீக் கற்றைகளைச் சிதறி, உலகு எலாம் செற்று—உலகம் முழுவதையும் அழித்து, திரிதலுற்று உலாய—உலாவித் திரிந்தன. (45)

அப்படை திரிதலு மவைகள் வீசிய
துப்புறழ் கொழுங்கன றொல்லை வானினு
மிப்புவி மருங்கினு மீண்ட வானவர்
வெப்புற விரிந்தனர் விதிர்ப்புற் றேங்குவார்.

அ படை திரிதலும்—அப் படைகள் அவ்வாறு உலாவித் திரிதலும், அவைகள் வீசிய துப்புறழ் கொழும் கனல்—அப்படைகள் சொரிந்த வலிமை மிக்க கொழுமையான அக்கினி, தொல்லை வானினும்—பழைமையாகிய வானுலகத்தும், இ புவி மருங்கினும்—இந்த மண்ணுலகத்திலும், ஈண்ட—நெருங்கிச் செறிய, வெப்பு உற—வெப்பம் மிகுதலால், வானவர் விதிர்ப்புற்று ஏங்குவார் இரிந்தனர்—தேவர்கள் நடுக்குற்று ஏங்கி ஓடுவாராயினர். (46)

வீண்டன ரொருசிலர் வெதும்பி விம்மியே
மாண்டன ரொருசிலர் வந்த நஞ்சமுண்
டாண்டவர் கழலிணை யடைதும் யாமெனுக்
காண்டகு கயிலையின் கண்ணுற் ரூர்சிலர்.

ஒரு சிலர் வீண்டனர்—ஒருசிலர் தாம் தாம் நிற்குமிடத்தைவிட்டு ஓடினார்கள்; ஒரு சிலர் வெதும்பி விம்மி மாண்டனர்—ஒருசிலர் வெதும்பி அழுது

இறந்தார்கள்; சிலர் வந்த நஞ்சம் உண்டு ஆண்டவர் கழல் இணை யாம் அடைதும் என—சிலர் எழுந்த நஞ்சையுண்டு நம்மை ஆண்டருளிய சிவபெருமானுடைய கழலணிந்த திருவடியிணையை யாம் சரண் அடைவோம் என்று, காண் தகு கயிலையின்கண் உற்றார்—அழகு பொருந்திய திருக்கைலாச மலைக்கட் சென்றார்கள்.

விண்டனர் நீண்டது; விகாரம். (47)

காரெலாங் கரிந்தன ககனந் தன்னொடு
பாரெலா மெரிந்தன பெளவப் பாற்படு
நீரெலாம் வறந்தன நிரந்த பல்லுயிர்ப்
பேரெலாந் தொலைந்தன பின்னும் போர்செய்தேம்.

கார் எலாம் கரிந்தன—முகில்கள் யாவுங் கரிந்தன; ககனம் தன்னொடு பார் எலாம் எரிந்தன—ஆகாயமும் பூமி முழுவதும் எரிந்தன; பெளவப் பாற்படும் நீரெலாம் வறந்தன—சமுத்திரத்தின்கட் பொருந்திய நீர் முழுவதும் வறந்தன; நிரந்த பல்லுயிர்ப் பேர் எலாம் தொலைந்தன—செறிந்த பலவாகிய உயிர் என்று பெயர் சொல்லப்படுவன யாவும் அழிந்தன; பின்னும் போர் செய்தேம்—இங்ஙனமாயபோதும் போரை நிறுத்தினேமல்லோம். (48)

இந்தவா றமர்புரிந் திட்ட காலையிற்
றந்தையா ரருளினாற் றமியன் மாமுகம்
வந்துநா ரதனெனு மறுவின் மாமுனி
சிந்தைசெய் தெமக்கிவை செப்பன் மேயினான்.

இந்தவாறு அமர் புரிந்திட்ட காலையில்—இவ்வண்ணம் போர்புரிந்த சமயத்தில், தந்தையார் அருளினால்—பரமபிதாவாகிய சிவபெருமானது திருவருளால், நாரதன் எனும் மறு இல் மாமுனி—நாரதர் என்கின்ற மாசற்ற மகத்துவம் பொருந்திய முனிவர், தமியன் மாமுகம் வந்து—தமியேனுடைய பெருமைபொருந்திய முகத்தில் அவதரித்து, சிந்தைசெய்து—தியான பரராய், எமக்கு இவை செப்பல் மேயினான்—எம்மிருவருக்கும் இவற்றைச் செப்புவாராயினர்.

தமியேனின் சிறந்த முகத்துக்கு எதிரேவந்து என்றுரைப்பாருமுளர். (49)

நீர்முத லுமென நினைந்து கூறியே
போர்முத லேசில புரிகின் றீர்கொலா
மோர்முத லன்றியே யில்லை யுங்களி
லார்முத லிருவரு மன்ன பண்பினீர்.

நீர்—நீவிர், நாம் முதல் என நினைந்து கூறி—நாம் பிரமம் என்று நினைந்தும் உரைத்தும், போர் முதல் சில புரிகின்றீர் கொல்—போர் முதலிய சில வற்றைச் செய்துகொண்டிருக்கின்றீர்கள் போலும்; ஓர் முதல் அன்றி இல்லையே—முதற்பொருள் ஒன்றேயன்றி இரண்டு இல்லையே; இருவரும் அன்ன பண்பினீர்—நீவிரோ இருவீரும் நாம் பிரமம் என்பதில் ஒத்த பண்பினை யுடையீராயிருக்கின்றீர்; உங்களில் ஆர் முதல்—நும்பண்பு இங்ஙனமாயின் உங்களிருவரில் யார் பிரமப்பொருள் சொல்லுங்கள். (50)

பொருசமர் கருதியே புகுந்த போழ்தினு
முரியதோர் படையல துலகந் தீப்பதோர்
வெருவரும் பெரும்படை விடுத்தி ரப்படை
யருளிய கடவுளை யயர்த்திர் போலுமால்.

பொரு சமர் கருதி—பிரம நிச்சயத்தின்பொருட்டுப் பொருகின்ற போரை மேற்கொண்டு, புகுந்த போழ்தினும்—நீங்கள் நடந்துகொண்ட சமயத்திலும், உரியது ஓர் படையலது—உங்களுக்குரியதொரு படையல்லாததாகிய, உலகம் தீப்பது ஓர் வெருவரும் பெரும் படை விடுத்திர்—உலகத்தை அழிப்பதோ ரச்சந்தரும் பெரும்படையைப் பிரயோகஞ் செய்தீர்களே; அ படை அருளிய கடவுளை அயர்த்திர் போலும்—அப் பெரும்படையாகிய படைகள் நாயகத்தை உங்களுக்குத் தந்தருளிய சர்வலோகைக நாயகராகிய கடவுளை மறந்து விட்டீர்கள் போலும். (51)

கடவுளை மறந்திரேற் கருதி நீர்பெறு
மடுபடை நாமமு மயர்த்தி ரோவது
நெடிதுநும் மனத்தினி னினைந்து தேற்றுமின்
விடுமினி யமரென விளம்பி மேலுமே.

கடவுளை மறந்திரேல்—உங்களுக்குப் பெரும்படை உதவிய கடவுளை மறந்தீரேயாயினும், கருதி—அக்கடவுளைத் தியானித்து, நீர் பெறும் அடுபடை நாமமும் ஓ அயர்த்திர்—நீவிர் அக்கடவுளிடம் பெறுநின்ற உலகத்தை அடுகின்ற அந்தச் சிவப்படையின் நாமத்தினையுமா மறந்துவிட்டீர்; அது—அச் சிவப்படையின் நாமமாகிய சிவநாமத்தை, நும் மனத்தினில் நெடிது நினைந்து—நும் மனத்தின்கண் ஓய்வின்றிச் சிந்தித்து, தேற்றுமின்—புத்தி தெளிமின்; இனி அமர் விடும்—இனிப் போரை நிறுத்துங்கள்; என விளம்பி மேலும்—என்று போதித்துப் பின்னரும், (52)

வாதியா வின்னுநீர் மலைதி ரேயெனி
ளுதியா யருவுரு வான தோர்பொருள்
சோதியாய் நடுவுறத் தோன்றுங் காண்டிரென்
றோதியா லெமக்கிவை யுணர்த்திப் போயினன்.

வாதியா—பிரமப் பொருள்பற்றி வாதித்து, இன்னும் நீர் மலேதிரே ஏனின்—இன்னமும் நீவிர் பொருவீராயின், ஆதியாய் அரு உரு ஆனது ஓர் பொருள்—ஆதியாயும் அருவாயும் உருவாயும் அருவுருவாயும் ஆகியதொரு பரம்பொருள், நடுவுற சோதியாய் தோன்றும் காண்டிர் என்று—உங்கள் மத்தியில் ஒரு சோதியாய்த் தோன்றுநிற்கும் அதன் அடிமுடிகளைக் காண வல்லீரேற் காண்மின் என்று, ஓதியால் இவை எமக்கு உணர்த்திப் போயினன்-தமது ஞான உணர்ச்சியினுல் எமக்கு இவற்றை உணர்த்திச் சென்றுர். (53)

போயின னுரைத்தசொற் புந்தி கொண்டிலந்
தீயென வுருத்திகல் செருக்கு நீங்கல
மாயிர மாண்டுகா றமரி யற்றின
மாயிரும் புவனமு முயிரு மாயவே.

போயினன் உரைத்த சொல் புந்தி கொண்டிலம்—எம்மை விட்டுச் சென்ற நாரதர் கூறிய மொழிகளை மனத்திற் கொண்டோமல்லோம்; தீ என உருத்து இகல் செருக்கு நீங்கலம்—தீயைப்போலச் சீறி இகலுகின்ற அகந் தையை ஒழிந்திலோம்; மா இரும் புவனமும் உயிரும் மாய ஆயிரம் ஆண்டு காறு அமர் இயற்றினம்—மிகப் பெரிய புவனமும் உயிர்களும் அழியும்வண் ணம் ஆயிரம் வருடமளவும் போர் புரிந்தோம். (54)

இங்கிவை யாவையு மிறுதி யூழியி
னங்கியி னடம்புரி யண்ண னேக்கியே
தங்களி லிருவருஞ் சமர்செய் கின்றனர்
புங்கவர் தாமெனும் புகழை வெஃகினுர்.

இங்கு இவை யாவையும்—இங்கே இவை அனைத்தையும், இறுதி ஊழியின் அங்கியில் நடம்புரி அண்ணல் நோக்கி—மகா சங்காரகாலத்தில் ஊழித்தீயின் மத்தியில் நின்று நடம்புரிகின்ற சிவபெருமான் நோக்கியருளி, தாம் புங்கவர் எனும் புகழை வெஃகினுர்—இவர்கள் தாமே தலைமைக் கடவுள் என்னும் புகழை விரும்பி, இருவருந் தங்களில் சமர் செய்கின்றனர்—இருவரும் தங்களுட் போர் செய்கின்றனர். (55)

அறிவறை போயின ரகந்தை யுற்றன
ருறுவதொன் றுணர்கில ருண்மை யோர்கிலர்
சிறுவரி லிருவருஞ் சீற்றப் போர்செயா
விறுதிசெய் கின்றன ருலகம் யாவையும்.

அறிவு அறை போயினர்—இவர்கள் அறிவு குடிபோயினர்; அகந்தை உற்றனர்—அகங்காரங் கொண்டார்கள்; உறுவது ஒன்று உணர்கிலர்—மேல்

வரக்கடவதொன்றையுஞ் சிந்திக்கின்றிலர்; உண்மை ஓர்கிலர்—மெய்ப் பொருளை ஓர்கின்றிலர்; இருவரும் சிறுவரில் சீற்றப் போர் செயா—இருவருஞ் சிறு குழந்தைகள்போலச் சினத்தோடு கூடிய போரைச் செய்து, உலகம் யாவையும் இறுதி செய்கின்றனர்—உலகம் முழுவதையும் அழிக்கின்றனர். (56)

ஈங்கிவர் செயலினை யின்னுங் காண்டுமேற்
றீங்குறு முலகுயிர் சிதைந்து வீடுமா
லோங்கிய நந்நிலை யுணர்த்தி னுயிடைத்
தாங்கரும் வெஞ்சமர் தணிந்து நிற்பரால்.

ஈங்கு இவர் செயலினை இன்னும் காண்டுமேல்—இங்கே இவர்களுடைய செயலை இன்னமுங் கண்டுகொண்டிருப்போமாயின், தீங்கு உறும்—தீமை விளையும்; உலகு உயிர் சிதைந்து வீடும்—உலகமும் உயிர்களுஞ் சிதைந்தழியும்; ஓங்கிய நம் நிலை உணர்த்தின்—நம்முடைய உயர்பெருநிலையை உணர்த்தினுல், ஆயிடை தாங்கரும் வெம் சமர் தணிந்து நிற்பர்—அப்பொழுது தாங்குதற்கரிய கொடும்போர் தணிவர். (57)

தம்மையே பொருளெனச் சாற்று கின்றதும்
வெம்மைசேர் வெகுளியும் வெறுத்து வீட்டியே
செம்மைசேர் மனத்தராய்த் திகழ்வர் தாமெனு
வெம்மையா ளுடையவ னெண்ணி னுனரோ.

தம்மையே பொருள் என சாற்றுகின்றதும்—தம்மையே பரம்பொருள் என்று கூறுவதனையும், வெம்மை சேர் வெகுளியும்—வெப்பம் பொருந்திய கோபத்தையும், வெறுத்து வீட்டி—வெறுத்தொழித்து, தாம் செம்மை சேர் மனத்தராய் திகழ்வர் எனு—தாம் செம்மனத்தராய் விளங்குவர் என்று, எம்மை ஆளுடையவன் எண்ணினுன்—எம்மை ஆளுதலையுடைய சிவபெருமான் திருவுளங்கொண்டருளினுர். (58)

### வேறு

ஆன்றதோ ரளவை தன்னி லடைந்தது மாகந் தன்னில்
வான்றிகழ் பானுட் கங்குன் மதிபக றழுவு நென்னன்
ஞான்றது தனில்யாங் கண்டு நடுக்குற நடுவ ணுகத்
தோன்றினன் கனற்குன் றேபோற் சொல்லரும் பரத்தின் சோதி.

ஆன்றது ஓர் அளவை தன்னில்—அகன்று நீண்டு கழிந்ததொரு காலத்திலே, மாகம் தன்னில் அடைந்தது—மாசிமாசத்தில் வந்ததாகிய, மதி பகல் தழுவு ஞான்று நென்னல் அது தன்னில்—சந்திரனுஞ் சூரியனுங் கூடுகின்ற அமாவாசித் தினத்துக்கு முதற்றினமான சதுர்த்தசியில், வான் திகழ் பால் நாள் கங்குல்—உயர்ந்து விளங்குகின்ற பாதிராத்திரியில், யாம் கண்டு

நடுக்கு உற--நாங்கள் கண்டு நடுங்க, நடுவண் ஆக-எங்களுக்கு மத்தியில், சொல்லரும் பரத்தின் சோதி-சொல்லுதற்கரிய பரம்பொருளாகிய அரும் பெருஞ் சோதி, கனல் குன்றுபோல் தோன்றினன்-ஓர் அக்கினிமலையாய்த் தோன்றியருளினர். (59)

தோற்றிய செய்ய சோதி தொல்லம ருழந்தி யாங்கண்
மாற்றரும் படைக ளாக வழங்கிய விரண்டும் வௌவி
யாற்றருந் தன்மைத் தாக வணுகுரு தகன்று போகிச்
சீற்றமுஞ் சமரு நீங்கிச் சேணுற நோக்கி நின்றேம்.

தோற்றிய செய்ய சோதி—நம் மத்தியிலே தோன்றிய செஞ்சோதியானது, தொல் அமர் உழந்து—பழைமையான போரைப் புரிந்து, யாங்கள் மாற்றரும் படைகளாக வழங்கிய இரண்டும் வௌவி—நாங்கள் ஒருவர்மேலொருவர் நீக்குதற்கரிய படையாக விடுத்த சிவப்படைக்கலம் இரண்டையுந் தன்பாற் கவர்ந்து, ஆற்றரும் தன்மையது ஆக—தாங்குதற்கரிய வெம்மைத் தன்மையை யுடைத்தாக; அணுகுருது அகன்று போகி—யாம் அணுகலாற்ருது விலகிச் சென்று, சீற்றமும் சமரும் நீங்கி—சினமும் அமருந் தணிந்து, சேண் உற நோக்கி நின்றேம்—நமது பார்வை சேணிற் பொருந்த நோக்கியவாறு நின்றேம். (60)

நிற்றலும் யாங்கள் கேட்ப நெடுவிசும் பிடையோர் வார்த்தை
தெற்றென வெழுந்த தம்மா சிறுவிர்கா ணுமது வன்மை
பற்றலர் புரமூன் றட்ட பரமனே காண்பான் சோதி
மற்றித னடியு மீறும் வரன்முறை தேரு மென்றே.

நிற்றலும்—நின்றபோது, யாங்கள் கேட்ப—நாங்கள் கேட்கும்படி, நெடு விசும்பிடை ஓர் வார்த்தை—நீண்ட ஆகாயத்தில் ஓர் அசரீரி வாக்கு, சிறுவிர் காள் நுமது வன்மை பற்றலர் புரம் மூன்று அட்ட பரமனே காண்பான்—சிறுவர்களே உங்கள் வன்மையைப் பகைவரின் முப்புரங்களை அழித்த பரம சிவனே காணுவார்; சோதி இதன் அடியும் ஈறும் வரன்முறை தேரும் என்று தெற்றென எழுந்தது—இச் சோதியின் அடியையும் முடியையும் வரன்முறையே தெளிந்தறிகுதிர் என்று தெளிவாக எழுந்தது.

தெற்றென விரைவுப்பொருட்டுமாம். (61)

கேட்டன மதனை நெஞ்சிற் கிளர்ந்தெழு சீற்றம் யாவும்
வீட்டின மெனினும் பின்னும் விட்டில மகந்தை தன்னைக்
காட்டிய வெமது முன்னேன் காண்பனும் வலியை யென்ன
வீட்டுடன் விசும்பிற் சொற்ருர் யார்கொலென் றெண்ணிப் பின்னும்.

கேட்டனம் அதனை—அவ்வாக்கைக் கேட்டு, நெஞ்சில் கிளர்ந்து எழு சீற்றம் யாவும் வீட்டினம் எனினும்—மனத்தின்கட் கிளர்ந்தெழுகின்ற சீற்றம் முழுவதையும் ஒழித்தோமாயினும், பின்னும் அகந்தை தன்னை விட்டிலம்—பின்னரும் அகந்தையை விடோமாய், எமது முன்னோன் நும் வலியைக் காண்பன்—எமது முதல்வர் நும் வன்மையைக் காண்பர்; காட்டிய என்ன—நீவிர் காட்டுக என்று, ஈட்டுடன் விசும்பில் சொற்றார் யார்கொல் என்று எண்ணி பின்னும்—பெருமையோடும் ஆகாயத்தின்கண் சொன்னவர் யாவரோ என்று சிந்தித்துப் பின்னும். (62)

ஏணுற வெதிர்ந்தி யாஞ்செ யிகலினுக் கிடையூ ருக
நீணில மதனைக் கீண்டு நிமிர்ந்துவான் புகுந்து நீடு
மாணுறு சோதி தானு மறைமுனி யுரைத்த வாறு
காணிய வந்த தெம்மிற் கடந்தவான் பொருள்கொ லென்றேம்.

ஏண் உற எதிர்ந்து யாம் செய் இகலினுக்கு இடையூறுக—வலிமிக எதிர்த்து யாம் புரிகின்ற போருக்கு இடையூறுக, நீள் நிலம் அதனை கீண்டு—நீண்ட பூமியைப் பிளந்து, நிமிர்ந்து—மேல் நிமிர்ந்து, வான் புகுந்து நீடும்—வானத்திற் புகுந்து நிலைக்கின்ற, மாண் உறு சோதி தானும்—மாட்சிமை மிக்க இந்தச் சோதி வடிவந் தானும், மறை முனி உரைத்தவாறு—வேத முனியாகிய நாரதர் கூறியவண்ணம், காணிய வந்தது—நம் வன்மையைக் காணத் தோன்றியதேயாம்; எம்மில் கடந்த வான் பொருள்கொல் என்றேம்—இவ்வாற்றால் எம்மிலும் மேலான உயர்ந்த பரம்பொருள் போலும் என்றையுற்றேம். (63)

தீதறு காலின் வந்த செந்தழ லன்று லீது
யாதுமொன் றறித றேற்று மிருவரு மிதனை யின்னே
யாதியு முடியு நாடி யன்னது காண்டு மென்னு
மாதவன் றானும் யானும் வஞ்சின மிசைத்து மன்னே.

ஈது தீது அறு காலின் வந்த செந்தழல் அன்று—இவ்வொளிப்பிழம்பு குற்றமற்ற வாயுவினின்றுந் தோன்றிய சிவந்த அக்கினியே யன்று; யாதும் ஒன்று அறிதல் தேற்றும்—இதனைக் குறித்து யாதொன்றும் அறியோம்; இருவரும் இதனை இன்னே ஆதியும் முடியும் நாடி—யாம் இருவேமும் இச்சோதியை இப்பொழுதே அடியையும் முடியையுந் தேடி, அன்னது காண்டும் என்னு—அதனதன் எல்லையைக் காண்போம் என்று, மாதவன் தானும் யானும்—திருமாலும் யானும், வஞ்சினம் இசைத்தும்—சபதஞ் செய்தோம். (64)

நீடுவா னுருவிச் சென்று நிலனுற விடந்து புக்கு
மோடிநா மொல்லை தன்னி லுற்றிதற் கடியு மீறு
நாடினு லவற்றி லொன்று நலம்பெற முன்னங் கண்டோர்
பீடுயர் தலைவ ரீதே துணிவெனப் பேசி நின்றேம்.

நீடு வான் உருவிச் சென்றும்—நீண்ட ஆகாயத்தை ஊடுருவிச் சென்றும், நிலன் உற இடந்து புக்கும்—நிலத்தை மிகவும் பிளந்து புகுந்தும், நாம் ஒல்லை தன்னில் ஓடி உற்று—நாம் விரைவிற் பறந்தும் அகழ்ந்தும் அணைந்து, இதற்கு அடியும் ஈறும் நாடினுல்—இச்சோதிக்கு அடியையும் முடியையுந் தேடினுல், அவற்றில் ஒன்று நலம்பெற முன்னம் கண்டோர் பீடு உயர் தலைவர்—அந்த அடிமுடிகளில் ஒன்றை நன்மை பொருந்த முதற்கட் கண்டோர் பெருமை மிக்க தலைவர் ஆவர்; ஈதே துணிவு என பேசி நின்றேம்—இதுவே முடிந்த துணிபாம் என்று உறுதிசெய்தோம். (65)

முடியினைக் காண்ப னென்றே மொழிந்தனன் றமிய னேனே
யடியினைக் காண்ப னென்றே யரியுமங் கிசையா நின்ருன்
னடைபயின் மழலை யோவா நாகிளஞ் சிறுவர் வானிற்
சுடர்மலி கதிரைக் கையாற் றீண்டுவான் றுணியு மாபோல்.

நடை பயில் மழலை ஓவா நாகு இளம் சிறுவர்—நடை பயிலுகின்ற மழலை நீங்காத மிகவும் இளைய சிறுவர்கள், வானில் சுடர் மலி கதிரை கையால் தீண்டுவான் துணியுமாபோல்—ஆகாயத்தின்கண்ணே ஒளிச்சுடர் மிக்க சூரியனைக் கையாற் பற்றும்படி துணியுமாறுபோல, தமியேன் முடியினை காண்பன் என்று மொழிந்தனன்—சிறியேன் சோதியின் முடியைக் காண்பேன் என்றேன்; அரியும் ஏனை அடியினை காண்பன் என்று அங்கு இசையாநின்ருன்—திருமாலும் ஏனையதாகிய அடியைக் காண்பேன் என்று அங்குக் கூறி நின்ருர். (66)

எரியுறழ் தறுகட் செங்க ணிமிலுடை யெருத்தம் யாரு
முருகெழு துழனிக் கூர்வா யொள்ளெயி றிலங்கு தந்தங்
கருவரை யனைய மேனிக் கடுநடைக் குறுந்தாள் வெள்ளைக்
குரமொடு கண்ண னன்றேர் கோலமாங் கோலங் கொண்டான்.

அன்று—அப்பொழுது, கண்ணன்—திருமால், எரி உறழ் தறுகண் செங்கண்—அக்கினியையொத்த தறுகண்மையினையுடைய சிவந்த கண்ணையும், இமில் உடை எருத்தம்—இமில் பொருந்திய எருத்தத்தையும், யாரும் உரு கெழு துழனிக் கூர் வாய்—எவரும் அஞ்சத்தக்க ஒலியினையுடைய கூரிய வாயினையும், ஒள் எயிறு—ஒளி பொருந்திய பற்களையும், இலங்கு தந்தம்—விளங்குகின்ற கொம்புகளையும், கரு வரை அனைய மேனி—கரிய மலையாகிய மைநாகத்தையொத்த மேனியையும், கடு நடை குறும் தாள்—கடுகிய நடையினையுடைய குறுகிய கால்களையும், வெள்ளை குரமொடு—வெண்ணிறக் குளம்பையுங் கொண்ட, ஓர் கோலமாம் கோலம் கொண்டான்—ஒரு பன்றியாகிய வடிவத்தை எடுத்தார். (67)

ஒருபது நூற தாகும் யோசனை யுகப்பி னேடு
பருமையு மாகு மந்தப் பகட்டுரு வாகி முன்னந்
தரணியை யிடந்து கீழ்போய்த் தடவியே துருவிச் சென்று
நிரைபடு புவனம் யாவு நீந்தியே போயி னுனல்.

ஒருபது நூறது ஆகும் யோசனை உகப்பினோடு பருமையும் ஆகும் அந்த பகடு உருவாகி—ஆயிரம் யோசனை உயர்ச்சியும் பருமையும் ஆகாநின்ற அந்த ஆண்பன்றியின் வடிவத்தைக் கொண்டு, முன்னம் தரணியை இடந்து கீழ்போய்—முதலிற் பூமியைப் பிளந்து கீழ்ச்சென்று, தடவி துருவிச் சென்று—தடவித் தேடி அப்பாற் சென்று, நிரைபடு புவனம் யாவும் நீந்திப் போயினன்—வரிசையாயுள்ள புவனங்கள் அனைத்தையுங் கடந்து சென்றார். (68)

பாதல நாடி யன்னான் படர்தலும் யானு மாங்கோ
ரோதிம வடிவ மாகி யொல்லையி லெழுந்து மீப்போய்
மேதகு விசும்பின் மேலாம் வியன்புவ னங்க ணாடிப்
போதலுஞ் சோதி முன்னம் போலமேல் போயிற் றம்மா.

பாதலம் நாடி அன்னான் படர்தலும்—பாதாளத்தில் அடியைத் தேடிக் கொண்டு பன்றியாகிய அத் திருமால் செல்ல, யானும் ஆங்கு ஓர் ஓதிம வடிவம் ஆகி—நானும் அவ்வாறாயதொரு அன்னத்தின் வடிவத்தை எடுத்துக்கொண்டு, ஒல்லையில் எழுந்து மீ போய்—விரைந்தெழுந்து மேலே சென்று, மேதகு விசும்பின் மேலாம் வியன் புவனங்கள் நாடிப் போதலும்—மேன்மை பொருந்திய ஆகாயத்துக்கு மேலாக உள்ள புவனங்களிலே தேடிப் போகப் போக, சோதி முன்னம் போல—சோதியானது முதலிற் காணப்பட்டவாறுபோல, மேல் போயிற்று—மேலே மேலே சென்றது. (69)

முன்னமோ ரேன மாகி முரணொடு புவனி கீண்டு
வன்னியா யெழுந்த சோதி வந்ததோர் மூலங் காண்பா
னுன்னியே போன மாலோ னூக்கியே செல்லச் செல்லப்
பன்னெடுங் காலஞ் சென்ற பாதமுங் காணான் மாதோ.

முன்னம் ஓர் ஏனம் ஆகி—முதற்கண் ஒரு பன்றியாய், முரணொடு புவனி கீண்டு—வன்மையுடன் பூமியைப் பிளந்து, வன்னியாய் எழுந்த சோதி வந்தது ஓர் மூலம் காண்பான்—அக்கினியாய் எழுந்த சோதி தோன்றியதொரு மூலத்தைக் காணும்பொருட்டு, உன்னியே போன மாலோன்—நினைத்துக்கொண்டே சென்ற திருமால், ஊக்கி செல்ல செல்ல—தம்மைத்தாமே ஊக்கப்படுத்திக் கொண்டு போகப்போக, பல் நெடும் காலம் சென்ற—பல நெடுங் காலங்கள் கழிந்தன; பாதமும் காணான்—பாதமூலமேயன்றிப் பாதத்தி னெப்பாகத்தையேனுஞ் சிறிதுங் காணாராயினர். (70)

நொந்தன வெயிறு மேனி நுடங்கின நோன்மை யாவுஞ்
சிந்தின புனலுண் வேட்கை சேர்ந்தன வுயிர்ப்பி னோடும்
வந்தன துயரம் போன வஞ்சின மகந்தை வீந்த
முந்தையி லுணர்வு மால்பான் முழுதொருங் குற்ற தன்றே.

எயிறு நொந்தன—பற்கள் நொந்தன; மேனி நுடங்கின—உடம்பு உறுப்புக்கள் மெலிந்தன; நோன்மை யாவும் சிந்தின—வன்மைகள் எல்லாஞ் சிதறின; புனல் உண் வேட்கை சேர்ந்தன—நீர் அருந்தும் வேட்கையினால் ஆயாசங்கள் உண்டாயின; உயிர்ப்பினோடும் துயரம் வந்தன-நெட்டுயிர்ப்புந் துயரமும் எழுந்தன; வஞ்சினம் போன—சபதங்கள் மறக்கப்பட்டன; அகந்தை வீந்த—அகங்காரங்கள் மடிந்தன; முந்தையில் உணர்வு மால் பால் முழுது ஒருங்கு உற்றது-பழைமையான நல்லுணர்வு திருமாலிடம் முழுவதும் ஒருங்கு உதித்தது. (71)

தொல்லையி லுணர்ச்சி தோன்றத் துண்ணெனத் தெளிந்த கண்ண
னல்லுறழ் புயலின் றோற்றத் தண்ணலங் களிற்றின் யாக்கை
மெல்லவே தரிக்க லாற்றான் வீட்டவுங் கில்லான் மீண்டு
செல்லவு மூற்ற மில்லான் சிவனடி சிந்தை செய்தான்.

தொல்லையில் உணர்ச்சி தோன்ற—பழைய அறிவு உண்டாக, துண்ணெனத் தெளிந்த கண்ணன்—விரைவாகத் தெளிவடைந்த திருமால், அல் உறழ் புயலின் தோற்றத்து—இருளையொத்த மேகம்போலுந் தோற்றத்தினையுடைய, அண்ணல் அம் களிற்றின் யாக்கை—பெரிய ஆண்பன்றியின் வடிவத்தை, மெல்லவே தரிக்கல் ஆற்றான்—மெல்லவாயினுஞ் சுமக்கவும் மாட்டாமல், வீட்டவுங்கில்லான்—நீக்கிவிடவும்மாட்டாமல், மீண்டு செல்லவும் ஊற்றம் இல்லான்—திரும்பிச் செல்வதற்குஞ் சத்தியின்றி, சிவன் அடி சிந்தை செய்தான்—சிவபெருமானின் திருவடிகளைச் சிந்தித்தார். (72)

### வேறு

என்று முணர்வரிய வெம்பெருமா னுன்றிருத்தா
ளன்றி யரணில்லை யவற்றையருச் சித்திடவும்
பொன்றியதென் வன்மை பொறுத்தி குறையடியே
னென்றுமுண ரேனென் றுளநொந்து போற்றினனே.

என்றும் உணர்வரிய எம்பெருமான்—எக்காலத்தும் உணர்வரிய எம் பெருமானே, உன் திருத்தாள் அன்றி—தேவரீருடைய திருவடிகளேயன்றி, அரண் இல்லை—அடியேனுக்குப் புகலிடம் வேறில்லை; அவற்றை அருச்சித் திடவும் என் வன்மை பொன்றியது—அத் திருவடிகளை அருச்சித்தற்கும் வன்மை யற்றவனாயினேன்; அடியேன் குறை பொறுத்தி—அடியேனது குற்றத்தைப் பொறுத்தருள்க; ஒன்றும் உணரேன்—தேவரீரின் பெருமையொன்றனையும் அறியேனாயினேன்; என்று உளம் நொந்து போற்றினன்—என்று மனம் நொந்து துதித்தார். (73)

ஆன பொழுதி லமலன் றிருவருளாற்
றேனுலவு தண்டார்த் திருமான் மிடலுடைத்தா
யேன வடிவோ டெழுந்துபுவிப் பாலெய்தி
வானுறுசோ திக்கணித்தா வந்து வணங்கிநின்றான்.

ஆன பொழுதில்–அவ்வாருய சமயத்தில், அமலன் திருவருளால்–சிவ பெருமானது திருவருளினுல், தேன் உலவு தண் தார் திருமால்–தேன் பொருந்திய தண்ணிய மாலேயையணிந்த திருமால், மிடல் உடைத்தாய்–வன்மை வரப்பெற்று, ஏன வடிவோடு எழுந்து–பன்றி வடிவத்தோடு மேலெழுந்து, புவிப்பால் எய்தி–பூமியை அடைந்து, வான் உறு சோதிக்கு அணித்தா வந்து–வானத்தை அளாவிய சோதிக்கு அணித்தாக வந்து, வணங்கி நின்ருன்–அச்சோதியை வணங்கி நின்ருர். (74)

வேறு

நின்ரு ெருபா னெடுமா லதுநிற்க யான்முன்
பின்ரு வகையாற் பெருஞ்சூ ளிவைபேசி வானிற்
சென்ரு யிரமாண்டு திரிந்து திரிந்து நாடிக்
குன்ருத சோதிக் கொழுந்தின் றலேகூட லேன்யான்.

நெடுமால் ஒருபால் நின்ருன்–திருநெடுமால் அச்சோதியின் ஒருபக்கத்தே வணங்கிக்கொண்டு நின்ருர்; அது நிற்க–அவர் நிலே அவ்வாருக; யான் முன் பின்ரு வகையால்–யான் முன்னர்த் திருமாலுக்குக் குறையாத வகையில், பெரும் சூள் இவை பேசி–பெரிய சபத வார்த்தைகளேப் பேசி, வானில் சென்று–ஆகாயத்திற் பறந்து, ஆயிரம் ஆண்டு திரிந்து திரிந்து நாடி–ஆயிரம் வருடம் அலேந்து அலேந்து தேடி, குன்ருத சோதிக் கொழுந்தின் தலே–யானும் பறக்கத் தானும் வளர்ந்து குன்ருத சோதியாகிய கொழுந்தின் முடியை, கூடலேன் யான்–யான் அணுகேன் ஆயினேன். (75)

மீளும் படியு நினேயேன் வினேயேனு மீளிற்
சூளும் பழுதா மதுவன்றித் துணிந்து முன்ன
மூளுஞ் சுடரின் முதல்கண்டரி மூர்த்தி யாவா
ஞளென்ப ரென்னே யழிவெய்துமிவ் வாற்றன் மன்னே.

வினேயேனும் மீளும் படியும் நினேயேன்–தீவினேயுடையேனுகிய யானும் திரும்பிப் போகவும் எண்ணேன்; மீளில் சூளும் பழுதாம்–திரும்பினுல் முன் செய்த சபதமும் பழுதாகும்; அது அன்றி–அவ்வாறன்றி, முன்னம் மூளும் சுடரின் முதல் அரி துணிந்து கண்டு மூர்த்தி ஆவான்–முன்னரே தோன்ரு நிற்குஞ் சோதியின் அடியைத் திருமால் துணிந்து கண்டு முதல்வர் ஆவர்; என்னே ஆள் என்பர்–அங்ஙனமாலுல் என்னேத் திருமாலின் அடிமை என் பார்கள்; இ ஆற்றல் அழிவு எய்தும்–இதனுல் என்னுடைய இந்த வலிமை அழிந்துபோம். (76)

எந்நாள்வரை செல்லினுஞ் செல்லுக வின்னும் விண்போய்ப்
பொன்ஞர்முடி கண்டபி னல்லது போக லேனென்
றுன்ஞ வதுகாணிய போதலு முள்ளம் வெம்பி
மன்ஞ வுயிரு முலேந்தாற்றலு மாண்ட தன்றே.

எ நாள் வரை செல்லினும் செல்லுக—எக்காலம்வரை கழியினுங் கழிக; இன்னும் விண் போய்—இன்னமும் மேலே பறந்து போய், பொன்னார் முடி கண்டபின் அல்லது போகலேன்—அழகு நிறைந்த முடியைக் கண்டபின்பு அன்றி மீளேன்; என்று உன்னா—என்று நினைந்து, அது காணிய போதலும்—அம் முடியைக் காண்டற்கு மேலே பறந்து போதலும், உள்ளம் வெம்பி—உள்ளம் வெதும்பி, மன்னா உயிரும் உலைந்து—ஒருடம்பிலும் நிலைபெறாத உயிரும் உலைதலைப் பொருந்தி, ஆற்றலும் மாண்டது—வன்மையும் அழிந்தது. (77)

கண்ணுஞ் சுழன்ற சிறைநொந்தன காலு மோய்ந்த
வெண்ணுந் திரிந்த ததுபோதி லெழுந்த சோதி
யுண்ணின்ற சித்த ரெனவேபல ரொல்லை மேவி
விண்ணின் றலைபோ யிதுவொன்று விளம்ப லுற்றார்.

கண்ணும் சுழன்ற—கண்களுஞ் சுழன்றன; சிறை நொந்தன—சிறகுகள் நொந்தன; காலும் ஒய்ந்த—கால்களும் ஒய்ந்தன; எண்ணும் திரிந்தது—எண்ணிய எண்ணமும் மாறுபட்டது; அது போதில்—அப்பொழுது, எழுந்த சோதியுள் நின்ற பலர்—அங்கே எழுந்த சோதியுள் நின்ற பலர், சித்தர் என ஒல்லை மேவி—சித்தர்களாய் விரைந்து வெளிப்பட்டு, விண்ணின் தலை போய்—வானின் உச்சிக்கட் சென்று, இது ஒன்று விளம்பல் உற்றார்—இஃதொன்று கூறுவார் ஆயினர். (78)

வானார்பரஞ் சோதியி னீற்றினை வாரி தன்னுண்
மீனார் தரவே திரிகின்றதொர் வெள்ளை யன்னந்
தானு முணருஞ் சிறைபோகித் தளர்ந்து வன்மை
போனாலு நாட வருகின்றது போலு மம்மா.

வான் ஆர் பரஞ்சோதியின் ஈற்றினை—வானத்தின்கண் நிறைந்தெழு கின்ற பரஞ்சோதியின் முடியை, வாரி தன்னுள் மீன் ஆர்தர திரிகின்றது ஓர் வெள்ளை அன்னம் தானும் உணரும்—நீரினுள்ளே மீனை உண்ணும்படி திரிகின்ற தொரு வெள்ளை அன்னமாம் உணரவல்லது; சிறை போகி—தன் சிறகுகளும் போய், தளர்ந்து—உடலுந் தளர்ந்து, வன்மை போனாலும்—வன்மையுங் கழிந் தாலும், நாட வருகின்றது போலும்—அம் முடியைத் தேட வாரா நிற்கின்றது போலும். (79)

அன்னந் தனக்கீ தறிவின்மைய தாகு மல்லாற்
பின்னென் றுளதோ துணிவுற்றதொர் பெற்றி நோக்கி
னின்னுஞ் சிறிது பொழுதேகி னிறக்கு மிந்த
மன்னுஞ் சுடரைச் சிவனென்று மனங்கொ ளாதோ.

ஈது—இந்த முயற்சி, அன்னம் தனக்கு அறிவின்மை ஆகும்—இவ்வன்னத்துக்கு அதன் அறியாமையின் விளைவாம்; அல்லால் பின் ஒன்று உளதோ—அங்ஙனமன்றிப் பிறிதொன்றுமோ; துணிவு உற்றது ஓர் பெற்றி நோக்கின்—இவ்வன்னந் துணிந்ததொரு தன்மையைச் சிந்திக்கின், இன்னும் சிறிது பொழுது ஏகின் இறக்கும்—இன்னமுஞ் சிறிது பொழுது மேலே பறக்குமாயின் இஃது இறந்தொழியும் இஃதே முடிபாம்; இந்த மன்னும் சுடரை சிவன் என்று மனம் கொளாதோ—இந்த நிலைபெறுஞ் சோதியைச் சிவபரம்பொருள் என்று இந்த அன்னம் மனத்தின்கட் கொள்ளாதோ அந்தோ இதன் அறியாமை இருந்தபடி என்னே! (80)

மாலென் பவனு நிலங்கீண்டனன் வல்லை யேகி
மூலந் தெரிவா னுணராமன் முரணு நீங்கிச்
சீலங் குறுகச் சிவனேசர ணென்று பைய
ஞாலந் தனில்வந் தனல்வெற்பினை நண்ணி நின்றான்.

மால் என்பவனும்—திருமாலும், மூலம் தெரிவான் நிலம் கீண்டனன்—அடியைக் காணும்பொருட்டு நிலத்தைப் பிளந்து, வல்லை ஏகி—விரைந்து சென்று, உணராமல்—மூலத்தைக் காணமல், முரணும் நீங்கி—வலியுமிழந்து, சீலம் குறுக—பக்குவம் உளதாக, சிவனே சரண் என்று—சிவபெருமானே புகலிடம் என்று உணர்ந்து, பைய ஞாலம் தனில் வந்து—மெல்லப் பூமிக்கு வந்து, அனல் வெற்பினை நண்ணி நின்றான்—அக்கினி மலையை அடைந்து நின்றான். (81)

முந்துற் றிதனை யருள்செய்திடு மூர்த்தி தானே
சிந்தைக்குண் மாசு தனைத்தீர்த்தருள் செய்யி னுய்யு
மிந்தப் பறவை யெனயானு மிதனை நாடிப்
புந்திக்குண் மைய லொழிந்தேயவர்ப் போற்றி செய்தேன்.

முந்து இதனை உற்று அருள் செய்திடும் மூர்த்தி தானே—முன்னம் இச் சோதியைப் பொருந்தி அருள்செய்த கடவுளே, சிந்தைக்குள் மாசுதனைத் தீர்த்து அருள் செய்யின்—மனத்துக்கண் மாசினைப் போக்கியருளுவாராயின், இந்தப் பறவை உய்யும் என—இந்தப் பறவை உயிர் பிழைக்கும் என்று கூற, யானும் இதனை நாடி—நானும் அச் சித்தபுருடர்கள் கூறிய இதனைச் சிந்தித்து, புந்திக்குள் மையல் ஒழிந்து—மனத்துக்கண் மாசு நீங்கி, அவர்ப் போற்றி செய்தேன்—அச் சித்தபுருடர்களைத் துதித்தேன். (82)

ஈச னருளா லிவைகூறின ரேக லோடு
மாசின் வழியா மகந்தைத்திற ஞதி யாய
பாசங்களை வீட்டி யரன்புகழ் புன்னி யேத்தி
நேசங்கொடு பூசனை செய்ய நினைந்து மீண்டேன்.

ஈசன் அருளால் இவை கூறினர் ஏகலோடும்—சிவபெருமானது திரு வருளினாலே இவற்றை அச் சித்தபுருடர்கள் கூறிச் செல்லுதலும், ஆசின் வழி ஆம்—குற்றத்துக்கு வழி செய்கின்ற, அகந்தைத் திறன் ஆதியாய பாசங்களை வீட்டி—அகங்காரத்தின் பகுதியவாகிய பாசக் கூட்டங்களையொழித்து, அரன் புகழ் பன்னி ஏத்தி—சிவபெருமானது புகழைப் பாடித் துதித்து, நேசம் கொடு பூசனை செய்ய நினைந்து மீண்டேன்—அன்போடு சிவார்ச்சனை செய்ய நினைந்து திரும்பினேன். (83)

### வேறு

வந்துகண்ணன் றனையணுகி வான்பொருள்யா மென்றிகலி
முந்துறுவெஞ் சமரியற்றி முனிமொழியு முணர்ந்திலமாற்
றந்தைவர வறியாமற் றாண்முடியுந் தேடலுற்றே
மந்தமுறும் வேலைதனி லவனருளா லவற்புகழ்ந்தேம்.

வந்து—திரும்பிவந்து, கண்ணன் தனை அணுகி—திருமாலை அடைந்து, வான் பொருள் யாம் என்று இகலி—பரம்பொருள் யாம் என்று முரண்பட்டு, முந்து உறு வெம் சமர் இயற்றி—முற்பட்ட கொடிய போரைச் செய்து, முனி மொழியும் உணர்ந்திலம்—நாரத முனிவரது உறுதிமொழியையுந் தெளிந் திலோம்; தந்தை வரவு அறியாமல்—சோதியாய்ப் பரமபிதா வந்தருளிய வரவினையும் அறியாமல், தாள் முடியும் தேடலுற்றேம்—அடியையும் முடியை யுந் தேடத் தொடங்கினோமாய், அந்தம் உறும் வேலை தனில்—இறக்குஞ் சமயத்தில், அவன் அருளால் அவற் புகழ்ந்தேம்—அப்பெருமானது திருவருளி னாலே அப்பெருமானைப் புகழ்ந்தோம்.

வந்து அணுகி, என யானுரைப்ப என வருஞ் செய்யுளில் முடிபு காண்க. (84)

கீண்டுநில னிருவிசும்பிற் கிளர்ந்துமடி முடியுணரே
மீண்டுமவன் றன்னருளான் மிடல்பெற்று வந்தனமா
லீண்டுசிவன் றனைவழிபட் டிருவருமன் னவன்றோற்றங்
காண்டுமென யானுரைப்பக் கண்ணனுமங் கதற்கிசைந்தான்.

நிலன் கீண்டும்—நிலத்தை அகழ்ந்தும், இரு விசும்பில் கிளர்ந்தும்—பெரிய ஆகாயத்திற் பறந்தும், அடி முடி உணரேம்—அடியையும் முடியையும் உணரே மாய், அவன் தன் அருளால் மீண்டும்—அப் பெருமானின் திருவருளால் மீண்டேம்; மிடல் பெற்று வந்தனம்—மீளுதற்கேற்ற வலியையும் அப்பெருமா னிடமே பெற்று வந்து சேர்ந்தோம்; ஈண்டு—இனி இவ்விடத்தில், இருவரும்— நாம் இருவேமும், சிவன் தனை வழிபட்டு—சிவபெருமானைப் பூசித்து, அன்ன வன் தோற்றம் காண்டும்—அப் பெருமானது திருக்கோலத்தைத் தரிசிப்போம்; என யான் உரைப்ப—என்று யான் கூற, கண்ணனும் அங்கு அதற்கு இசைந் தான்—திருமாலும் அப்பொழுது அவ்வாறு பூசித்தற்கு உடன்பட்டார்.

மீண்டும் மிடல் பெற்று வந்தனம் என்பதற்கு, திரும்பவும் அப் பெருமா னிடமே வலிமை பெற்று இவ்விடம் வந்தோம் என உரைப்பினுமாம். (85)

இருவருமச் சிவனுருவை யியன்முறையாற் றாபித்து
விரைமலர்மஞ் சனஞ்சாந்தம் விளக்கழலா தியவமைத்துப்
பொருவருபூ சனைபுரிந்து போற்றிசெய்து வணங்குதலு
மெரிகெழுசோ திக்கணித்தா வெந்தையவண் வந்தனனே.

இருவரும்—நாம் இருவேமும், அ சிவன் உருவை—அந்தச் சிவபெருமானது அருவுருவத் திருமேனியை, இயன் முறையால் தாபித்து—வேதாகம விதிப்படி தாபித்து, விரை மலர்—வாசனை பொருந்திய புஷ்பம், மஞ்சனம்—திருமஞ்சனம், சாந்தம்—சந்தனம், விளக்கு—தீபம், அழல்—தூபம், ஆதிய அமைத்து—முதலிய பூசோபகரணங்களை அமைத்துக்கொண்டு, பொரு அரு பூசனை புரிந்து—ஒப்பில்லாத பூசையைச் செய்து, போற்றி செய்து வணங்குதலும்—துதித்து வணங்குதலும், எரி கெழு சோதிக்கு அணித்தா—அக்கினியாக விளங்குகின்ற சோதிக்கு அணித்தாக, அவண் எந்தை வந்தனன்—அவ்விடத்தில் எம் பரமபிதாவாகிய சிவபெருமான் பிரசன்னமானார். (86)

மைக்களமு மான்மழுவும் வரதமுட னபயமுறு
மெய்க்கரமு நாற்புயமும் விளங்குபணிக் கொடும்பூணுஞ்
செக்கருறு மதிச்சடையுஞ் சேயிழையோர் பாகமுமாய்
முக்கணிறை யாங்காண முன்னின்றே யருள்புரிந்தான்.

மைக்களமும்—திருநீலகண்டத்தையும், மான் மழுவும்—மானையும் மழுவையும், வரதமுடன் அபயம் உறும் மெய்க் கரமும்—வரதமும் அபயமுமாய்ப் பொருந்துகின்ற மெய்ம்மையாகிய திருக்கரங்களையும், நாற்புயமும்—நான்கு திருப்புயங்களையும், விளங்கு பணி கொடும் பூணும்—விளங்குகின்ற சர்ப்பங்களாலாய வளைவு பொருந்திய ஆபரணங்களையும், மதிச் செக்கர் உறு சடையும்—பாலசந்திரனை அணிந்த செவ்வானம் போன்ற சடையினையும், சேயிழை ஓர் பாகமுமாய்—உமாதேவியார் வீற்றிருக்கின்ற ஒரு பாகத்தையுமுடையவராய், முக்கண் இறை—சோம சூர்யாக்கினிகளாகிய மூன்று திருக்கண்களையுடைய சர்வலோகைக நாயகரானவர், யாம் காண—பிரம விஷ்ணுக்களாகிய யாம் கண்ணிறையக் கண்டு தரிசிக்க, முன் நின்று—நமது முன்னிலைக்கட் பிரசன்னமாய் எழுந்தருளி, அருள் புரிந்தான்—திருவருள் பாலித்தருளினார். (87)

அவ்விடையா மிருவர்களு மமலன்ற னடிவணங்கிச்
செவ்விதினின் றவனருளிற் றிளைத்திதனைச் செப்பினமான்
மெய்வகையா மன்பின்றி விளங்காநின் னியன்மறையு
மிவ்வகையென் றுணராதே யாங்காணற் கெளிவருமோ.

அ இடை யாம் இருவர்களும்—அச்சமயத்தில் நாம் இருவேமும், அமலன் தன் அடி வணங்கி—சிவபெருமானின் திருவடிகளை வணங்கி, செவ்விதின் நின்று—செப்பமுற நிற்கும் முறையில் நின்று, அவன் அருளில் திளைத்து—அப்

பெருமானது திருவருளில் முழுகி, மெய்வகையாம் அன்பு இன்றி விளங்கா நின் இயல்—உண்மை அன்பின்றி வெளிப்படாத தேவரீரின் இயல்பை, மறையும் இவகை என்று உணராதே—வேதமும் இத்தகையதென்று அறியமாட்டாதே; யாம் காணற்கு—அங்ஙனமேயாகப் புல்லறிவோமாகிய யாங் கண்டு தரிசித்தற்கு, எளிவருமோ—அஃது எளிவருவதொன்ருகுமோ; இதனைச் செப்பினம்—என்றிங்ஙனங் கூறி வணங்கி நின்றேம். (88)

### வேறு

புந்தி மயங்கிப் பொருங்காலை யெம்முன்னிற்
செந்தழலின் மேனிகொடு சென்றருளித் தொல்லறிவு
தந்து நினையுணர்த்தித் தாக்கமரு நீக்கினையா
லெந்திரம்யா முண்ணின் றியற்றுகின்ருய் நீயன்ருே.

புந்தி மயங்கி—மனம் மருண்டு, பொரும் காலை—போர்செய்த காலத்தில், எம் முன்னில்—எமது முன்னிலையில், செந்தழலின் மேனி கொடு சென்றருளி—செம்மையாகிய அக்கினியின் வடிவமாய்த் தோன்றியருளி, தொல் அறிவு தந்து—பழைய நல்ல அறிவைத் தந்து, நினையும் உணர்த்தி—தேவரீரையும் அறியும்படி செய்து, தாக்கு அமரும் நீக்கினை—ஒருவரையொருவர் தாக்குகின்ற யுத்தத்தையுந் தவிர்த்தருளினீர்; யாம் எந்திரம்—நாங்கள் வெறும் யந்திரங்கள்; நீயன்ருே உள் நின்று இயற்றுகின்ருய்—தேவரீரன்ருே உள்ளே நின்று யாம் இயங்குமா இயக்கியருளுகின்றீர்.

தந்தும் என்பதில் உம், நினை என்பதனேடு கூட்டப்பட்டது. (89)

உன்னை யுணரு முணர்வுபுரிந் தாலுன்னைப்
பின்னை யுணர்வேம் பெருமசிறி யேஞ்செய்த
புன்னெறியை யெல்லாம் பொறுத்தியாற் றஞ்சிறுவ
ரென்ன செயினு மினிதன்ருே வீன்றவர்க்கே.

உன்னை உணரும் உணர்வு புரிந்தால்—தேவரீரை அறியும் அறிவைத் தேவரீர் அருளினல், பின்னை—அதன்பின்பு, உன்னை உணர்வேம்—தேவரீரைத் தேவரீரருளிய அருளால் அறிவோம்; பெரும—பெருமானே, சிறியேம் செய்த புன்னெறியை எல்லாம் பொறுத்தி—சிறியேங்கள் செய்த புன்மையாகிய நெறிகள் அனைத்தையும் பொறுத்தருள்வீராக; தம் சிறுவர் என்ன செயினும்—தங் குழந்தைகள் எது செய்தாலும், ஈன்றவர்க்கு இனிது அன்ருே—பெற்ருேர்க்கு அது இனிதாமன்ருே. (90)

இன்னுத் தகைசே ரிரும்பினைவல் லோனிலங்கும்
பொன்னுக் கியபரிசு போலே யெமையருளி
மன்னுக் கினையயர்த்தோ மற்றுனையும் யாங்களுயிர்
தொன்னுட் பிணித்த தொடரகற்ற வல்லோமோ.

இன்னா தகை சேர் இரும்பினை—இன்னாத இயல்பினையுடைய இரும்பை, வல்லோன் இலங்கும் பொன் ஆக்கிய பரிசு போலே—இரசவாதம் வல்லோன் பிரகாசிக்கின்ற பொன்னாக்கிய தன்மை போல, எமை அருளி—ஒன்றுக்கும் பற்றாத எமக்கும் அருள் செய்து, மன் ஆக்கினை—எமது தொழிற்றலைமையையும் நல்கியருளினீர்; உனையும் அயர்த்தோம்—இத்துணை நன்றி செய்த தேவரீரையு மன்றோ மறந்தோம்; யாங்கள்—இவ்வியல்பினையுடைய தமியேங்கள், உயிர்—ஆன்மாவை, தொல் நாள் பிணித்த தொடர் அகற்ற வல்லோமோ—அநாதியே பந்தித்த பாசத்தை நீக்க வல்லோமோ. (91)

வேறு

என்றி யம்பியா மேத்தலு மெதிருற நோக்கிக்
குன்ற வில்லுடை யொருவனீர் செய்தன குறியா
வொன்று மெண்ணலீர் நும்பெரும் பூசனை யுவந்தா
மன்று மக்கருள் பதந்தனை யின்னும்யா மளித்தேம்.

என்று இயம்பி யாம் ஏத்தலும்—என்று கூறி நாங்கள் துதித்தலும், குன்ற வில்லுடை ஒருவன் எதிருற நோக்கி—மேருமலையாகிய வில்லினையுடைய ஏகராகிய சிவபெருமான் எங்களை முன்னிலைசெய்து நோக்கியருளி, நீர் செய்தன குறியா ஒன்றும் எண்ணலீர்—நீவிர் செய்தவைகளைக் குறித்து ஒன்றும் நினையாதீர்; நும் பெரும் பூசனை உவந்தாம்—நீங்கள் செய்த பெரிய பூசனையை ஏற்று மகிழ்ந்தோம்; அன்று உமக்கு அருள் பதம்தனை இன்னும் யாம் அளித்தேம்—ஆதியில் உமக்குத் தந்த பதங்களை மீண்டும் யாம் உங்களுக்குத் தந்தோம். (92)

வேண்டு நல்வரங் கேண்மினீ ரென்றலும் விசும்பிற்
றாண்ட வம்புரி பகவநின் சரணமே யரணாப்
பூண்டி டுந்தலை யன்பரு ளென்றலும் புரிந்து
காண்ட குந்தழற் சோதியு ளிமைப்பினிற் கலந்தான்.

நீர் வேண்டும் நல் வரம் கேண்மின் என்றலும்—நீவிர் விரும்பும் நல்ல வரங்களைக் கேளுங்கள் என்று சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுதலும், விசும்பில் தாண்டவம் புரி பகவ—சிதாகாசத்தில் அனவரத தாண்டவம் புரிகின்ற பகவானே, நின் சரணமே அரணா பூண்டிடும் தலை அன்பு அருள் என்றலும்—தேவரீருடைய திருவடிகளையே புகலிடமாகக் கொண்டொழுகுந் தலையன்பை அருள் புரிக என்று பிரார்த்தித்தலும், புரிந்து—அவ்வாறேயாகுக என்றருள் புரிந்து, காண் தகும் தழல் சோதியுள் இமைப்பினில் கலந்தான்—பேரழகு வாய்ந்த தழற்பிழம்பாகிய சோதியுள் ஒரு கணப்பொழுதில் மறைந்தருளினர். (93)

கலந்த காலையில் யாங்கண்முன் றெழுதெழுங் காலைச்
சலங்கொள் பான்மையின் முன்னுறத் தேடுவான் றழலாய்
மலர்ந்த பேரொளி மீமிசை சுருங்கியே வந்தோர்
விலங்க லாகிய துலகெலாம் பரவியே வியப்ப.

கலந்த காலையில்—சிவபெருமான் சோதியிற் கலந்து மறைந்த சமயத்தில், யாங்கள் முன் தொழுது எழும் காலை—நாங்கள் அச்சோதியினெதிரே வணங்கி எழுகின்றபோது, சலம் கொள் பான்மையில்—ஒருவரோடொருவர் கோபங் கொள்ளும் முறையில், முன் உற தேடு—முன்னர்த் தேடிய, வான் தழலாய் மலர்ந்த பேரொளி—உயர்ந்த அக்கினியாய் விரிந்த பெரிய சோதி வடிவம், மீ மிசை சுருங்கி வந்து—மேலே நின்று சுருங்கி வந்து, உலகெலாம் பரவி வியப்ப ஓர் விலங்கல் ஆகியது—உலகம் முழுவதுந் துதித்து வியப்படைய ஒரு மலையாகியது. (94)

அன்ன தாஞ்சிவ லிங்கரூ பந்தனை யணுகி
முன்ன மாகியே மும்முறை வலஞ்செய்து முறையாற்
சென்னி யாற்றொழு தேத்தியெம் பதங்களிற் சென்றேம்
பின்ன ரெந்தையை மறந்திலம் போற்றுதும் பெரிதும்.

அன்னது ஆம் சிவலிங்க ரூபந்தனை—அம் மலைவடிவினதாகுஞ் சிவலிங்க ரூபத்தை, அணுகி முன்னம் ஆகி—அடைந்து எதிரிற் சென்று, மும்முறை வலஞ் செய்து—மூன்றுமுறை வலம்வந்து, முறையால் சென்னியால் தொழுது ஏத்தி—விதிப்படி தலையால் வணங்கித் துதித்து, எம் பதங்களில் சென்றேம்—எமது பதவிகளுக்குச் சென்றேம்; பின்னர் எந்தையை மறந்திலம்—அதன் பின்பு எம் பரம பிதாவை அன்றுதொட்டு மறவாதிருக்கின்றேம்; பெரிதும் போற்றுதும்—பெரிதுந் துதித்துக்கொண்டேயிருக்கின்றோம். (95)

அரியும் யானுமுன் றேடுமவ் வனற்கிரி யனல
கிரியெ னும்படி நின்றதா லவ்வொளி கிளர்ந்த
விரவ தேசிவ ராத்திரி யாயின திறைவற்
பரவி யுய்ந்தன ரன்னதோர் வைகலிற் பலரும்.

அரியும் யானும் முன் தேடும் அ அனல் கிரி—திருமாலும் யானும் முன்னர் அடியும் முடியுந் தேடாநின்ற அந்த அக்கினிமலையானது, அனல கிரி எனும்படி நின்றது—அருணசலம் என்று புகழ்ந்து கூறும்படி விளங்கியது; அ ஒளி கிளர்ந்த இரவு அது சிவராத்திரி ஆயினது—அந்தச் சோதிவடிவம் எழுந்தருளிய இரவே சிவராத்திரி என்கின்ற சிவபுண்ணிய காலமாயிற்று; அன்னது ஓர் வைகலில் பலரும் இறைவற் பரவி உய்ந்தனர்—அத்தகைய ஒப்பற்ற மகா சிவராத்திரியில் உலகத்தோர் பலரும் சிவலிங்கப்பெருமானை விதிப்படி பூசித்து வீடு பெற்றனர். (96)

ஆத லாலவ னருள்பெறி னவனிய லறியு
மோதி யாகுவ ரல்லரேற் பலகலை யுணர்ந்தென்
வேத நாடியென் னிறையுமன் னவனிலை விளங்கார்
பேதை நீரரு மாங்கவ ரல்லது பிறரார்.

ஆதலால்—ஆதலினுலே, அவன் அருள் பெறின்—அப் பெருமானது அருளைப் பெற்ருல், அவன் இயல் அறியும் ஒதி ஆகுவர்—அப் பெருமானது இயல்பை அறியும் ஞானத்தைப் பெறுவர்; அல்லரேல்—அவனருளைப் பெருராயின், பல கலை உணர்ந்து என்—பல கலைகளைப் பயின்றும் பயன் என்னை; வேதம் நாடி என்—வேதத்தை ஆராய்ந்தும் பயன் என்னை; இறையும் அன்னவன் நிலை விளங்கார்—சிறிதும் அப் பெருமானது இயல்பை அறியமாட்டார்; பேதை நீரரும் ஆங்கு அவர் அல்லது பிறர் ஆர்—அறிவிலிகளும் அவ்வியல்பினையுடைய அவரன்றிப் பிறர் எவர். (97)

மோக வல்வினை யாற்றியே பவத்திடை மூழ்கும்
பாக ரல்லவர்க் கெய்திடா தவனருள் பவமும்
போக மாற்றிடு தருமமு நிகர்வரு புனிதர்க்
காகு மற்றவ னருணிலை பாகரா மவரே.

மோக வல்வினை ஆற்றி—மயக்கத்தினையுடைய வலிய வினைகளைச் செய்து, பவத்திடை மூழ்கும்—பிறவிச் சமுத்திரத்தில் முழுகுகின்ற, பாகர் அல்லவர்க்கு—பக்குவர் அல்லாதவர்களுக்கு, அவன் அருள் எய்திடாது—அப் பெருமானது திருவருள் கிட்டாது; பவமும்—பாவமாகிய தீவினையையும், போகம் ஆற்றிடு தருமமும்—போகத்தை விளைக்கின்ற புண்ணியமாகிய நல் வினையையும், நிகர் வரு புனிதர்க்கு—சமபுத்தி செய்கின்ற மலபரிபாகர்களுக்கே, அவன் அருள் நிலை ஆகும்—அப் பெருமானது நிலையாய திருவருள் கிடைக்கும்; அவரே பாகராம்—அப் புனிதர்களே பரிபக்குவர்களாகிய சத்திநிபாதர்களாம்.

மோக வல்வினை—இருள் சேர் இருவினை. (98)

நீயுந் தொல்வினை நீங்கலி னெம்பிரா னிலைமை
யாயுந் தொல்லுணர் வின்றுவந் தெய்திய தவனே
தாயுந் தந்தையுங் குரவனுங் கடவுளுந் தவமு
மேயுஞ் செல்வமு மனையவற் சார்தியா லென்ருன்.

நீயும் தொல் வினை நீங்கலின்—தக்கனே நீயும் பழைமையாகிய இருள் சேர் இருவினையும் நீங்குதலினுலே, எம்பிரான் நிலைமை ஆயும் தொல் உணர்வு இன்று வந்து எய்தியது—எம் பெருமானது இயல்பினை ஆராய்ந்தறிதற்குரிய தொன்மையாகிய ஞான உணர்வு உனக்கு இப்பொழுது உதயஞ் செய்திருக்கின்றது; அவனே தாயும் தந்தையும் குரவனும் கடவுளும் தவமும் ஏயும் செல்வமும்—அப் பெருமானே நமக்கெல்லாம் அன்னையும் பிதாவும் குருவும் கடவுளும் தவமும் பொருந்துகின்ற செல்வமும் ஆவர்; அனையவற் சார்தி என்ருன்—ஆகையினுலே அத்தகைய பரம்பொருளையே சரண் என்று மகனே நீ அடையக்கடவை என்று பிரமதேவர் தக்கனுக்கு உபதேசித்தார். (99)

அடிமுடி தேடு படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—1661.

---

## தக்கன் சிவபூசைசெய் படலம்

மருமல ரயனிவை வகுப்ப நாடியே
புரிகுவ னஃதெனப் புகன்று தாதைதாள்
பரிவொடு சிறுவிதி பணிந்து காசியாந்
திருநக ரதனிடைச் சேறன் மேயினுன்.

மரு மலர் அயன்—வாசனை பொருந்திய தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமதேவர், இவை வகுப்ப—சிவபரத்துவப் பிரபாவங்களாகிய இவைகளைப் பலவாறு வகுத்து உபதேசஞ்செய்ய, நாடி—அவைகளை நன்கு சிந்தித்து, அஃது புரிகுவன் என புகன்று—சிவத்தைச் சார்ந்து வழிபடுதலாகிய அதனை இனிச் செய்வேன் என்று பிரதிக்கினை செய்து, சிறுவிதி தாதை தாள் பரிவொடு பணிந்து—தக்கனுனவன் தந்தையாகிய குருவின் பாதங்களை அன்போடு வணங்கி, காசியாம் திருநகர் அதனிடைச் சேறல் மேயினுன்—காசி என்று சொல்லப்படுகின்ற அருட்செல்வம் பொருந்திய புண்ணிய க்ஷேத்திரத்தை நோக்கி அங்குச் செல்வானுயினுன். (1)

சென்றனன் காசியிற் சிறந்த தொன்மணி
கன்றிகை யொருபுடை கங்கை வேலையிற்
பொன்றிகழ் செஞ்சடைப் புனிதற் காலய
மொன்றுமுன் விதித்தன னுணர்வு சேர்ந்துளான்.

உணர்வு சேர்ந்துளான்—உபதேசத்தால் நல்லறிவெய்திய தக்கன், காசியில் சென்றனன்—காசியை அடைந்து, கங்கை வேலையில்—கங்கைக் கரையிலே, சிறந்த தொல் மணி கன்றிகை ஒரு புடை—சிறந்த தொன்மையாகிய மணிகர்ணிகை என்னுந் தீர்த்தத்துக்கு ஒரு பக்கத்தில், பொன் திகழ் செம் சடை புனிதற்கு—பொன்போல விளங்குகின்ற சிவந்த சடையினையுடைய சிவபெருமானுக்கு, ஆலயம் ஒன்று முன் விதித்தனன்—ஓர் ஆலயத்தை முதற்கண் அமைத்தான். (2)

அருளுரு வாகியே யகில மாவிக
டருவதுங் கொள்வது மாகித் தாணுவா
யுருவரு வாகிய வொப்பில் பேரொளித்
திருவுரு வொன்றினைச் சிவனுக் காக்கினுன்.

அருள் உருவாகி—திருவருள் வடிவாய், அகிலம் ஆவிகள் தருவதும் கொள் வதும் ஆகி—உலகமும் உயிர்களுமாகிய பிரபஞ்சங்களைத் தோற்றுவதும் ஒடுக்குவதுமாய், தாணுவாய்—தாணுரூபமாய், உரு அருவாகிய—அருவுருவ மான, ஒப்பில் பேரொளி—ஒப்பில்லாத பேரொளியையுடைய, திருவுரு ஒன்றினை—ஒரு சிவலிங்கத் திருமேனியை, சிவனுக்கு ஆக்கினன்—சிவபெரு மானைப் பூசிக்கும் பொருட்டுத் தாபித்தான். (3)

நாயகன் மொழிதரு நவையி லாகம
மேயின முறைதெரி விரத னாகியே
பாய்புனல் புனைசடைப் பரமன் றாண்மல
ராயிரம் யாண்டுகா றருச்சித் தேத்தினான்.

நாயகன் மொழிதரும்—சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிய, நவையில் ஆகமம் மேயின முறை தெரி விரதன் ஆகி—குற்றமில்லாத சிவாகமங்களால் உரைக்கப்பட்ட விதிமுறைகளைப் புலப்படுத்தும் விரதங்களை மேற்கொண்ட வனாய், பாய் புனல் புனை சடை பரமன் தாள் மலர்—பரந்த நீரினையுடைய கங்கையைத் தரித்த சடையையுடைய சிவபெருமானின் திருவடி மலர்களை, ஆயிரம் யாண்டு காறு அருச்சித்து ஏத்தினான்—ஆயிரவருடகாலம்வரை அருச்சனை புரிந்து துதித்தான். (4)

அருச்சனை புரிதலு மயன்றன் காதலன்
கருத்துறு மன்பினைக் கண்டு கண்ணுதல்
பொருக்கென வெளிப்படப் புகழ்ந்து பொன்னுலாந்
திருக்கழல் வணங்கினன் றெளிவு பெற்றுளான்.

அயன்தன் காதலன் அருச்சனை புரிதலும்—பிரமபுத்திரனான தக்கன் சிவா கம விதிப்படி அருச்சனை செய்தலும், கண்ணுதல்—சிவபெருமான், கருத்து உறும் அன்பினைக் கண்டு—அவனது மனத்திற் பொருந்தும் அன்பை அறிந்து, பொருக்கென வெளிப்பட—விரைந்து வெளிப்பட்டருள, தெளிவு பெற்று ளான்—தக்கன் அறிவு தெளிந்து, பொன் உலாம் திருக்கழல் புகழ்ந்து வணங் கினன்—பொன்மயமாய் விளங்கும் அழகிய கழலணிந்த திருவடிகளைத் துதித்து வணங்கினான். (5)

அகந்தைய தாகியே யைய நின்றனை
யிகழ்ந்தன னென்கணே யெல்லை யில்பவம்
புகுந்தன வவையெலாம் போக்கி நின்னிடைத்
தகும்பரி சன்பினைத் தருதி யாலென்றான்.

ஐய—பிரபுவே, அகந்தையது ஆகி—அகங்காரங் கொண்டு, நின்தனை இகழ்ந் தனன்—தேவரீரை நிந்தித்தேன்; என் கண் எல்லையில் பவம் புகுந்தன—

அதனாலே என்னிடத்தில் அளவில்லாத பாவங்கள் வந்து சேர்ந்தன; அவை எலாம் போக்கி—அப் பாவங்கள் அனைத்தையும் ஒழித்து, நின் இடை தகும் பரிசு அன்பினைத் தருதி என்றான்—தேவரீரிடத்துப் பொருந்தத் தகும் இயல்பினை யுடைய மெய்யன்பினைத் தந்தருளுவீராக என்று பிரார்த்தித்தான். (6)

ஆயவை தொலைத்தளித் தவன்றன் பூசையி
னேயம தாகியே நிமலன் றன்கண
நாயக வியற்கையை நல்கி வல்லையிற்
போயினன் றக்கனும் புனித னாயினான்.

நிமலன்—நின்மலராகிய சிவபெருமான், அவன் தன் பூசையில் நேயம தாகி—அத் தக்கனது சிவபூசையில் விருப்பம் உடையராய், ஆயவை தொலைத்து—அவன் சம்பாதித்தனவாகிய பாவங்களை ஒழித்து, அளித்து—கிருபை செய்து, தன் கண நாயக இயற்கையை நல்கி—தங் கணங்களுக்கு நாயகமாயிருப்பதாகிய சிவகணநாத பதம் என்ற நிலையாயபேற்றைக் கொடுத் தருளி, வல்லையில் போயினன்—விரைந்து மறைந்தருளினார்; தக்கனும் புனிதன் ஆயினான்—தக்கப் பிரசாபதியும் சிவகணநாதராய்ப் பரிசுத்தராயினார். சிவபூசாபலம் இருந்தவாறு! (7)

வேறு

கங்கைச் சடையான் றனைத்தக்க னக்காசி தன்னி
லங்கர்ச் சனைசெய்தி டப்போந் துழியம் புயன்மா
றுங்கத் திமையோ ரிறையா வருஞ்சூர மாதர்
சங்கத் தவரு மகவெல்லை தணந்து போனார்.

கங்கைச் சடையான் தனை—கங்கையை அணிந்த சடையினையுடைய சிவ பெருமானை, தக்கன் அ காசி தன்னில் அங்கு அர்ச்சனை செய்திட போந் துழி—தக்கப் பிரசாபதி அக் காசியம்பதியில் அங்கே அர்ச்சனை செய்யச் சென்ற பொழுது, அம்புயன் மால் துங்கத்து இமையோர் இறை யாவரும்—பிரமா திருமால் உயர்ச்சிபொருந்திய தேவர்கள் இந்திரன் முதலிய யாவரும், சூர மாதர் சங்கத்தவரும்—தேவமாதர் கூட்டத்தவர்களும், மக எல்லை தணந்து போனார்—யாகசாலையினிடத்தை விடுத்துச் சென்றார்கள். (8)

போகுற் றவர்க ளனைவோரும் பொருவில் சீர்த்தி
வாகுற்ற வீரன் சயந்தன்னை வழுத்தித் தங்கட்
காகுற்ற தொல்லைத் தலந்தோறு மடைந்து மாதோர்
பாகத் தமலன் றனைப்பூசனை பண்ண லுற்றார்.

போகுற்றவர்கள் அனைவோரும்—அவ்விடத்தினின்றுஞ் சென்றவர்கள் அனைவரும், பொருவில் சீர்த்தி வாகு உற்ற வீரன் சயந்தன்னை வழுத்தி—ஒப்பில்லாத கீர்த்தியையும் வெற்றியினையும் பொருந்திய வீரபத்திரக்கடவுளின் வென்றியைத் துதிசெய்து, தங்கட்கு ஆகுற்ற—தங்களுக்கு ஏற்ற, தொல்லை தலம் தோறும் அடைந்து—பழைமையான புண்ணிய க்ஷேத்திரந்தோறுஞ் சென்று, மாது ஓர் பாகத்து அமலன் தனை பூசனை பண்ணல் உற்றார்—மாதொரு பாகராகிய சிவபெருமானை அர்ச்சித்துப் பூசிப்பாராயினர். *(9)*

ஆரா தனைகள் புரிந்தே யனைவோரு மெங்கும்
பேராது நிற்கும் பெருமா னருள்பெற் றுமெய்யிற்
றீராத சின்னங் களுந்தீர்ந்து சிறந்து தத்த
மூரா கியதோர் பதமேவி யுறைத லுற்றார்.

அனைவோரும் ஆராதனைகள் புரிந்து—அனைவருஞ் சிவபெருமானுக்கு ஆராதனைகள் செய்து, எங்கும் பேராது நிற்கும் பெருமான் அருள் பெற்று—எங்கும் பெயராது நிறைந்து நிற்குஞ் சிவபெருமானது திருவருளைப் பெற்று, மெய்யில் தீராத சின்னங்களும் தீர்ந்து—உடம்பில் நீங்காதிருந்த வடுக்களும் நீங்கி, சிறந்து—சிறப்புற்று, தத்தம் ஊராகியது ஓர் பதம் மேவி உறைதல் உற்றார்—தத்தம் இருப்பிடமாகிய ஒவ்வொரு பதத்தையும் அடைந்து உறைவாராயினர். *(10)*

மேதக்க தக்கன் மகந்தன்னில் விரைந்து புக்காங்
கேதத் தடிசின் மிசைந்தே பொருள்யாவு மேற்றுப்
பூதத் தரின்மாய்ந் தெழுந்தேதம் புரிக டோறும்
பேதைத் தொழிலந்தணர் யாரும் பெயர்ந்து போனார்.

பேதைத் தொழில் அந்தணர் யாரும்—பேதைமைத் தொழிலை மேற்கொண்ட பிராமணர் யாவரும், மேதக்க தக்கன் மகம் தன்னில் விரைந்து புக்கு—மேன்மை பொருந்திய தக்கனது யாகத்தில் விரைந்து சென்று, ஆங்கு ஏதத்து அடிசில் மிசைந்து—அங்கே குற்றத்தை வருவிக்கும் உணவை உண்டு, பொருள் யாவும் ஏற்று—கொடுத்த பொருள் அனைத்தையுந் தானமாக ஏற்று, பூதத்தரின் மாய்ந்து—பூதர்களால் இறந்து, எழுந்து—பின் எழுப்ப உயிர் பெற்றெழுந்து, பெயர்ந்து தம் புரிகள் தோறும் போனார்—அவ்விடத்தினின்றும் மீண்டு தத்தம் ஊர் தோறுஞ் சென்றார்கள். *(11)*

என்றிங் கிவைகள் குரவோனிசைத் திட்டல் கேளா
நன்றென்று சென்னி துளக்குற்று நனி மகிழ்ந்து
குன்றின் சிறைகொய் தவன்றந்த குரிசி லுள்ளத்
தொன்றுங் கவலை யிலனாகி யவ்வும்ப ருற்றான்.

என்று இங்கு இவைகள் குரவோன் இசைத்திட்டல் கேளா—என்று இவ் விண்ணுலகில் இச் சரித்திரங்களைக் குருவாகிய வியாழபகவான் உரைக்கக் கேட்டு, குன்றின் சிறை கொய்தவன் தந்த குரிசில்—மலைகளின் சிறகுகளைக் கொய்தவனாகிய இந்திரன் பெற்ற பெருமையிற் சிறந்தோனான சயந்த குமாரன், உள்ளத்து ஒன்றும் கவலை இலனாகி—மனத்தில் ஒன்றுகின்ற கவலைகள் நீங்கப்பெற்று, நன்று என்று சென்னி துளக்குற்று—நல்லது என்று சிரசை அசைத்து, நனி மகிழ்ந்து அ உம்பர் உற்றான்—மிக மகிழ்ந்து அந்த விண் ணுலகில் அரசுபுரிந்துகொண்டிருந்தான்.

இந்திரன் அரசு துறந்து இன்பத்தில் முழுகியிருந்தானாக, அவ்வரசினை மேற்கொண்ட சயந்தகுமாரன், ஒருதினம் குலகுருவாகிய வியாழபகவானை நோக்கி,

*எந்தைகேள் மலரோன் ஆதி இயம்பிய அமரர் யாரும்
அந்தமில் முனிவோர் யாரும் ஆற்றல்வெம் சூரன் தன்னால்
வெந்துயர் உழந்து தொல்லை மேன்மையும் இழந்து தாழ
வந்தகா ரணம தென்கொல் என்றலும் மறையோன் சொல்வான்.

என்றிங்ஙனந் தக்ஷகாண்டமெழுந்த தொடர்பு காண்க. (12)

தக்கன் சிவபூசைசெய் படலம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — 1673.

---

* கந். இந்திரபுரிப்படலம்—செய். 68.

உ

## திருவாவினன்குடி

" சீரை தைஇய உடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்
மாசுஅற இமைக்கும் உருவினர் மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பு எழுந்து இயங்கும் யாக்கையர்

நன்பகல்
பல உடன் கழிந்த
உண்டியர்

இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும்
கற்ருேர் அறியா அறிவினர் கற்ருேர்க்குத்
தாம்வரம்பு ஆகிய தலைமையர் காமமொடு
கடும்சினம் கடிந்த காட்சியர் இடும்பை
யாவதும் அறியா இயல்பினர்...............
துனிஇல் காட்சி முனிவர்"

— திருமுருகாற்றுப்படை.

# கந்த விரதப் படலம்

உரைசெறி மகவான் செம்ம லும்பரி லிருப்ப விம்பர்
முரசெறி தானை வேந்தன் முசுகுந்த னென்னும் வள்ளல்
விரைசெறி நீபத் தண்டார் வேலவன் விரதம் போற்றித்
திரைசெறி கடற்பா ராண்ட செயன்முறை விளம்ப லுற்றும்.

உரை செறி மகவான் செம்மல் உம்பரில் இருப்ப—கீர்த்திமிக்க இந்திர குமாரனான சயந்தன் விண்ணுலகில் அரசு செய்துகொண்டிருக்க, இம்பர்—இந்த மண்ணுலகில், முரசு எறி தானை வேந்தன் முசுகுந்தன் என்னும் வள்ளல்—வெற்றி முரசு முழங்குகின்ற சேனைகளையுடைய முசுகுந்தச் சக்கர வர்த்தியென்று புகழ்ந்துரைக்கும் அருள் வள்ளல், விரை செறி நீபம் தண் தார் வேலவன் விரதம் போற்றி—வாசனை பொருந்திய தண்ணிய கடப்ப மாலையையணிந்த வேற்படையைத் தாங்கிய சுப்பிரமணியப் பெருமானின் விரதங்களை அநுட்டித்து, திரை செறி கடல் பார் ஆண்ட செயல் முறை விளம்பல் உற்றும்—திரை பொருந்திய சமுத்திரத்தாற் சூழப்பட்ட பூமியை அரசு செய்த சரித்திரத்தைச் சொல்லுவோம். (1)

முந்தொரு ஞான்று தன்னின் முசுகுந்தன் வசிட்ட னென்னு
மந்தண னிருக்கை யெய்தி யடிமுறை பணிந்து போற்றிக்
கந்தவேள் விரத மெல்லாங் கட்டுரை பெரியோ யென்ன
மைந்தநீ கேட்டி யென்ன மற்றவை வழாது சொல்வான்.

முந்து ஒரு ஞான்று தன்னில்—முன்னொரு காலத்தில், முசுகுந்தன்—முசுகுந்தச் சக்கரவர்த்தி, வசிட்டன் என்னும் அந்தணன் இருக்கை எய்தி—வசிட்ட முனிவர் என்கின்ற அந்தணரின் ஆசிரமத்தை அடைந்து, அடிமுறை பணிந்து போற்றி—அவருடைய பாதங்களை முறைப்படி வணங்கித் துதித்து, பெரியோய் கந்தவேள் விரதம் எல்லாம் கட்டுரை என்ன—தேவரீர் சுப்பிர மணிய சுவாமியின் விரத மகிமைகளனைத்தையும் உபதேசித்தருள்க என்று பிரார்த்திக்க, மைந்த நீ கேட்டி என்ன அவை வழாது சொல்வான்—மகனே நீ கேட்பாயாக என்று அவ்விரதங்களைத் தவறாது கூறுவாராயினர். (2)

எள்ளருஞ் சிறப்பின் மிக்க வெழுவகை வாரந் தன்னுள்
வெள்ளிநாள் விரதந் தானே விண்ணவ ருலகங் காத்த
வள்ளறன் விரத மாகு மற்றது புரிந்த மேலோ
ருள்ளமே னினைந்த வெல்லா மொல்லையின் முடியு மன்றே.

எள்ளரும் சிறப்பின் மிக்க—இகழ்தற்கரிய சிறப்பான் மேம்பட்ட, எழு வகை வாரம் தன்னுள்—ஞாயிறு முதலிய ஏழுவகை வாரங்களுள், வெள்ளி நாள் விரதம்—சுக்கிரவார விரதம், விண்ணவர் உலகம் காத்த வள்ளல்தன் விரதமாகும்—தேவ உலகத்தைப் பாதுகாத்த அருள்வள்ளலாகிய சுப்பிர மணிய சுவாமியின் விரதமாம்; அது புரிந்த மேலோர்—அந்தச் சுக்கிரவார விரதத்தை அநுட்டித்த மேலோர்கள், உள்ளம்மேல் நினைந்த எல்லாம் ஒல்லையில் முடியும்—தம் மனத்தின்கண் நினைத்தவை அனைத்தும் விரைவிற் சித்தியாம். (3)

பகிரத னென்னும் வேந்தன் படைத்தபா ருலகை யெல்லா
நிகரறு கோர னென்னு நிருதனங் கொருவன் வௌவ
மகவொடு மனையுந் தானும் வனத்திடை வல்லை யேகிப்
புகரவன் றனது முன்போய்த் தன்குறை புகன்று நின்றான்.

பகிரதன் என்னும் வேந்தன்—பகீரதன் என்னும் அரசன் ஒருவன், படைத்த பார் உலகை எல்லாம்—தான் ஆண்ட மண்ணுலகனைத்தையும், அங்கு நிகர் அறு கோரன் என்னும் நிருதன் ஒருவன் வௌவ—அங்கே ஒப்பற்ற கோரன் என்னும் நிருதன் ஒருவன் கவர்ந்துகொள்ள, மகவொடு மனையும் தானும் வனத்திடை வல்லை ஏகி—மகவும் மனைவியுந் தானுமாய் வனத்தின்கண் விரைந்து சென்று, புகரவன் தனது முன் போய் தன் குறை புகன்று நின்றான்—சுக்கிராசாரியர் முன்னிலையை அணுகித் தனது குறைகளை முறையீடு செய் தான், (4)

பார்க்கவ னென்னு மாசான் பகீரத னுரைத்தல் கேளா
வேற்கரன் மகிழு மாற்றால் வெள்ளிநாள் விரதந் தன்னை
நோற்குதி மூன்றி யாண்டு நுங்களுக் கல்லல் செய்த
மூர்க்கனு முடிவ னீயே முழுதுல காள்வை யென்றான்.

பார்க்கவன் என்னும் ஆசான்—சுக்கிராசாரியர், பகீரதன் உரைத்தல் கேளா—பகீரதன் முறையிட்டதைக் கேட்டு, வேற்கரன் மகிழும் ஆற்றால்—வேலேந்திய திருக்கரத்தினையுடைய சுப்பிரமணிய சுவாமி மகிழும்வண்ணம், வெள்ளி நாள் விரதம் தன்னை மூன்றுயாண்டு நோற்குதி—சுக்கிரவாரவிரதத்தை மூன்று வருடம் அநுட்டிக்கக்கடவாய்; நுங்களுக்கு அல்லல் செய்த மூர்க்கனும் முடிவன்—உங்களுக்குத் துன்பஞ் செய்த மூர்க்கனும் இறந்துபோவான்; நீ முழுது உலகு ஆள்வை என்றான்—நீயே இவ்வுலகம் முழுவதையும் அரசாளுவாய் என்றார். (5)

நன்றெென வினவி மன்னன் ஞாயிறு முதலா நாளி
லொன்றெனும் வெள்ளி முற்று முணவினைத் துறந்து முன்பின்
சென்றிடு மிரண்டு நாளுந் திவாவினி லடிசின் மாந்தி
யின்றுயி லதனை நீத்தி யாண்டுமூன் றளவு நோற்றான்.

மன்னன் நன்று என வினவி—பகீரத மன்னன் நல்லது என்று கேட்டு, ஞாயிறு முதலாம் நாளில் ஒன்று எனும் வெள்ளி முற்றும்—ஞாயிறு முதலிய நாள்களில் ஒன்ருகிய வெள்ளிக்கிழமை முழுவதும், உணவினைத் துறந்து—உபவாசமிருந்து, முன் பின் சென்றிடும் இரண்டு நாளும்—அதற்கு முதனுள் மற்றைநாள் ஆகிய இரண்டு நாளும், திவாவினில் அடிசில் மாந்தி—பகலில் ஒருபொழுது உணவு உண்டு, இன் துயில் அதனை நீத்து—இனிய துயிலை ஒழித்து, மூன்று யாண்டு அளவும் நோற்ருன்—மூன்றியாண்டளவும் அநுட்டித்தான்.

முன் பின்—வியாழன் சனி. வியாழ வாரத்தில் அபரான்ன காலத்திலும், சனி வாரத்தில் முற்பகலில் சூரியன் உதித்து ஆறு நாழிகைக்கு முன்னும் எனக் கொள்க.

அபரான்ன காலம்—சாயங்காலம். (6)

நோற்றிடு மளவி லைய னுதியுடைச் செவ்வேல் வந்து
மாற்றல னுயிரை யுண்டு வல்லையின் மீண்டு செல்லப்
போற்றியே பகீர தப்பேர்ப் புரவலன் றன்னூ ரெய்தி
யேற்றதொல் லரசு பெற்ரு னின்னுமோர் விரதஞ் சொல்வாம்.

நோற்றிடும் அளவில்—விரதத்தை அநுட்டித்துவருங் காலத்தில், ஐயன் நுதியுடைச் செவ்வேல் வந்து—சுப்பிரமணிய சுவாமியினது நுதியையுடைய செம்மையாகிய வேற்படை வந்து, மாற்றலன் உயிரை உண்டு—பகைவனை கோரனின் உயிரை வதைத்து, வல்லையின் மீண்டு செல்ல—விரைந்து மீண்டு செல்ல, பகீரதப் பேர்ப் புரவலன் போற்றி—பகீரதன் என்னும் பெயரை யுடைய அவ்வரசன் துதிசெய்து, தன் ஊர் எய்தி—தனது நகரத்தை அடைந்து, ஏற்ற தொல் அரசு பெற்ருன்—தகுந்த பழைய தனது அரசினைப் பெற்ருன்; இன்னும் ஓர் விரதம் சொல்வாம்—சுப்பிரமணிய சுவாமியின் வேறுமொரு விரதத்தைச் சொல்லுவோம். (7)

வாரிச மலர்மேல் வந்த நான்முகன் மதலை யான
நாரத முனிவ னென்போ னலத்தகு விரத மாற்றி
யோரெழு முனிவர் தம்மி லுயர்ந்திடு பதமு மேலாஞ்
சீரொடு சிறப்பு மெய்தச் சிந்தனை செய்தா னன்றே.

வாரிச மலர் மேல் வந்த—திருமாலின் நாபிக்கமல மலரில் உதித்த, நான் முகன் மதலையான நாரத முனிவன் என்போன்—பிரமதேவரின் புத்திரரான நாரதமுனிவர், நலம் தகு விரதம் ஆற்றி—நன்மையமைந்த விரதத்தை அநுட்டித்து, ஓரெழு முனிவர் தம்மில் உயர்ந்திடு பதமும்—ஏழு முனிவர்களுக்குள்ளே உயர்ந்த பதமும், மேலாம் சீரொடு சிறப்பும் எய்த—மேன்மையோடு கூடிய செல்வமும் வீடுபேறும் அடைய, சிந்தனை செய்தான்—நினைத்தார். (8)

நூற்படு கேள்வி சான்ற நுண்ணிய வுணர்வின் மிக்கோன்
பார்ப்பதி யுதவு முன்னோன் பதமுறை பணிந்து போற்றி
யேற்புறு முனிவ ரான வெழுவகை யோரில் யானே
மேற்பட விரத மொன்றை விளம்புதி மேலோ யென்றான்.

நூல்படு கேள்வி சான்ற—நூலறிவு பொருந்திய கேள்வியறிவு மிக்க, நுண்ணிய உணர்வில் மிக்கோன்—நுண்ணிய உணர்வில் மேம்பட்டோராகிய நாரதமுனிவர், பார்ப்பதி உதவும் முன்னோன் பதம் முறை பணிந்து போற்றி—பார்ப்பதி பெற்றருளும் மூத்த பிள்ளையாராகிய விநாயகக்கடவுளின் பாதங்களை முறைப்படி வணங்கித் துதித்து, ஏற்பு உறு முனிவரான எழுவகையோரில்—யாவரானும் ஏற்கப்படுகின்ற எழுவகை முனிவர்களுக்குள், யானே மேற்பட—யானே மேம்பாடுற, மேலோய்—முதல்வரே, விரதம் ஒன்றை விளம்புதி என்றான்—ஒரு விரதத்தை உரைத்தருளுக என்று வேண்டினார். (9)

முன்னவ னதனைக் கேளா முழுதருள் புரிந்து நோக்கி
யன்னது பெறுதி திண்ண மாறுமா முகத்து நம்பி
பொன்னடி வழிபா டாற்றிப் பொருவில்கார்த் திகைநா ணோன்பைப்
பன்னிரு வருடங் காறும் பரிவுடன் புரிதி யென்றான்.

முன்னவன் அதனைக் கேளா—மூத்த பிள்ளையாராகிய விநாயகப்பெருமான் அதனைக் கேட்டு, முழுதருள் புரிந்து—பூரணகிருபை செய்து, நோக்கி—நாரதரைத் திருநோக்கஞ் செய்து, ஆறு மா முகத்து நம்பி பொன் அடி வழிபாடு ஆற்றி—பெருமை பொருந்திய ஆறுமுகங்களையுடைய நம்பியாகிய சுப்பிரமணியக்கடவுளின் அழகிய திருவடிகளை வழிபட்டு, பொருவில் கார்த்திகை நாள் நோன்பை—ஒப்பில்லாத கார்த்திகை நட்சத்திர விரதத்தை, பன்னிரு வருடங்காறும் பரிவுடன் புரிதி—பன்னிரண்டு வருடமளவும் அன்போடு அநுட்டிக்கக்கடவை; அன்னது திண்ணம் பெறுதி என்றான்—நீ விரும்பியதனை ஒருதலையானே பெறுவாய் என்று கூறியருளினார். (10)

நாரதன் வினவி யீது நான்புரிந் திடுவ னென்னாப்
பாருல கதனில் வந்து பரணிநா ளபரா ணத்தி
லோர்பொழு துணவு கொண்டே யொப்பில்கார்த் திகைநா டன்னில்
வீரவேற் றடக்கை யண்ணல் விரதத்தை யியற்ற லுற்றான்.

ஈது நாரதன் வினவி—இதனை நாரதமுனிவர் கேட்டு, நான் புரிந்திடுவன் என்னா—அவ் விரதத்தை நான் அநுட்டிப்பேன் என்று, பார் உலகு அதனில் வந்து—பூவுலகத்துக்கு வந்து, பரணிநாள் அபராணத்தில் ஓர் பொழுது உணவு கொண்டு—பரணி நட்சத்திரத்திலன்று அபரான்ன காலத்தில் ஒரு பொழுது உணவு உட்கொண்டு, ஒப்பில் கார்த்திகைநாள் தன்னில்—ஒப்பில்லாத கார்த்திகை நட்சத்திர நாளில், வீர வேல் தடக்கை அண்ணல் விர

தத்தை—வீரம் பொருந்திய வேற்படையைத் தாங்கிய விசாலித்த திருக்கரத்தினையுடைய கந்தசுவாமியின் விரதத்தை, இயற்றல் உற்ருன்—அநுட்டிப்பாராய்.

உற்ருன் எச்சமுற்று. (11)

தூசொடு கயத்தின் மூழ்கித் துய்யவெண் கலைகள் சுற்றி
யாசறு நியம முற்றி யான்றமை புலத்த ஞகித்
தேசிகன் றனது பாதஞ் சென்னிமேற் கொண்டு செவ்வேள்
பூசனை புரிந்திட் டன்ஞன் புராணமும் வினவி ஞனல்.

தூசொடு கயத்தில் மூழ்கி—உடுத்த வஸ்திரத்துடன் குளத்தில் முழுகி, துய்ய வெண் கலைகள் சுற்றி—பரிசுத்தமான தோய்த்துலர்ந்த வெள்ளை வஸ்திரங்களைத் தரித்து, ஆசு அறு நியமம் முற்றி—குற்றமற்ற நித்திய நியமங்களை முடித்துக்கொண்டு, ஆன்று அமை புலத்தன் ஆகி—ஆன்றடங்கிய ஐம்புலங்களையுடையவராய், தேசிகன் தனது பாதம் சென்னிமேல் கொண்டு—தேசிகோத்தமரான விநாயகப்பெருமானின் பாதங்களைத் தலைமேற் கொண்டு, செவ்வேள் பூசனை புரிந்திட்டு—சுப்பிரமணியசுவாமியின் திருவடிகளை அருச்சித்து, அன்னுன் புராணமும் வினவினுன்—அப்பெருமானது புராணத்தையுங் கேட்பாராயினர். (12)

கடிப்புன லள்ளித் தன்னோர் கைகவித் துண்டு முக்காற்
படுத்திடு தருப்பை யென்னும் பாயலிற் சயனஞ் செய்து
மடக்கொடி மாதர் தம்மை மறலியா மதித்து வள்ள
லடித்துணை யுன்னிக் கங்கு லவதியு முறங்கா துற்ருன்.

தன் ஓர் கை கவித்து—தமது ஒரு கையைக் கவித்து, கடி புனல் அள்ளி—சுத்த சலத்தை அள்ளி, முக்கால் உண்டு—மூன்றுமுறை ஆசமனஞ் செய்து, படுத்திடு தருப்பை என்னும் பாயலில் சயனம் செய்து—பரப்பப்பட்ட தருப்பையாகிய பாயலிற் சயனித்து, மடக்கொடி மாதர் தம்மை மறலியா மதித்து—மென்மையாகிய கொடிபோன்ற பெண்களை யமனுகக் கருதி, வள்ளல் அடித்துணை உன்னி—அருள்வள்ளலாகிய சுப்பிரமணியசுவாமியின் திருவடிகளிரண்டையுந் தியானித்துக்கொண்டு, கங்குல் அவதியும் உறங்காது உற்ருன்—இராக்காலம் முழுவதும் உறங்காதிருந்தார். (13)

அந்தநாள் செல்லப் பின்ன ருரோகிணி யடைந்த காலைச்
சந்தியா நியம மெல்லாஞ் சடக்கென முடித்துக் கொண்டு
கந்தவேள் செம்பொற் றண்டைக் கான்முறை வழிபட் டேத்தி
வந்தமா தவர்க ளோடும் பாரணை மகிழ்ந்து செய்தான்.

அந்த நாள் செல்ல—அந்தக் கார்த்திகைத் திருநாள் கழிய, பின்னர் உரோகிணி அடைந்த காலை—அடுத்தநாட் காலையில் உரோகிணி நட்சத்திரம் ஆயினபோது, சந்தி ஆம் நியமம் எல்லாம் சடக்கென முடித்துக்கொண்டு—சந்திக்கட் செய்யப்படும் நியமங்களையெல்லாம் விரைவில் முடித்துக்கொண்டு, கந்தவேள் செம்பொன் தண்டைக் கால் முறை வழிபட்டு ஏத்தி—சுப்பிரமணிய சுவாமியின் செம்பொன்னாலாய தண்டையையணிந்த திருவடிகளை முறையே அருச்சித்துத் துதித்து, வந்த மாதவர்களோடும்—தம்மிடம் வந்த மாதவத்தர்களான முனிவர்களோடும், மகிழ்ந்து பாரணம் செய்தான்—மகிழ்ச்சியுடன் பாரணம் செய்தார்.

பாரணம்—உபவாசமிருந்து விரத முடிவில் உண்ணல். (14)

பாரணம் விதியிற் செய்தோன் பகற்பொழு துறங்கு மாயி
னாரண மறையோர் தம்மி லைம்பதிற் றிருவர் தம்மைக்
காரண மின்றிக் கொன்ற கடும்பழி யெய்து மென்னு
நாரதன் மாயம் வல்லோ னிமைத்தில னயனஞ் சற்றும்.

மாயம் வல்லோன் நாரதன்—மாயங்களை வெல்ல வல்லோரான நாரத முனிவர், பாரணம் விதியில் செய்தோன்—பாரணத்தை விதிப்படி உரிய காலத்திற் செய்து முடித்தவன், பகற் பொழுது உறங்குமாயின்—பாரணத்துக்குப் பின் அந்தப் பகலில் உறங்குவானானால், ஆரண மறையோர் தம்மில் ஐம்பதிற்றிருவர் தம்மை—வேதம் வல்ல பிராமணரில் நூற்றுவரை, காரணம் இன்றிக் கொன்ற கடும்பழி எய்தும் என்னு—ஒரு காரணமுமின்றிக் கொலை புரிந்த கடும் பாவம் அவனை வந்தடையும் என்பதை அறிந்து, நயனம் சற்றும் இமைத்திலன்—அன்றுபகல் முழுவதுஞ் சிறிதாயினும் இமைத்தலுஞ் செய்யாது விழித்திருந்தார். (15)

விழியொடு மிமைகூ டாமே வெய்யவன் குடபால் வீழும்
பொழுதள விருந்து மற்றைப் புறத்துள செயலும் போற்றி
யழிவறு விரத மிவ்வா றாறிரு வருட மாற்றி
யெழுவகை முனிவோ ருக்கு மேற்றமாம் பதத்தைப் பெற்றான்.

வெய்யவன் குடபால் வீழும் பொழுதளவு—சூரியன் மேற்றிசைக் கடலில் வீழும்வரையும், விழியொடும் இமை கூடாமே இருந்து—கண்ணோடிமைகூடாமல் விழித்திருந்து, மற்றைப் புறத்துள செயலும் போற்றி—ஏனைய புற நியமங்களாகிய சாயங்கால சந்தியாவந்தனாதிகளையுஞ் செவ்வனே செய்து முடித்து, அழிவு அறு விரதம்—அழிவற்ற இந்த விரதத்தை, ஆறிரு வருடம் இவ்வாறு ஆற்றி—பன்னிரு வருடம் இம்முறைப்படி செய்து, எழுவகை முனிவோருக்கும் ஏற்றமாம் பதத்தை பெற்றான்—எழுவகை முனிவருக்கும் உயர்வாகிய பதத்தைப் பெற்றார், (16)

இந்தநல் விரதந் தன்னை யீண்டொரு மறையோ னேற்று
முந்திய மனுவே யாகி முழுதுல கதனை யாண்டா
னந்தண னொருவன் பின்னு மவ்விர தத்தைப் போற்றிச்
சிந்தையி னினைந்தாங் கெய்தித் திரிசங்கு வாகி யுற்றான்.

இந்த நல் விரதம் தன்னை—இந்த நல்ல கார்த்திகை விரதத்தை, ஈண்டு ஒரு மறையோன் நோற்று—இந்தப் பூமியில் ஒரு பிராமணன் அநுட்டித்து, முந்திய மனுவே ஆகி—நீதியினால் மேம்பட்ட மநுச்சக்கரவர்த்தியாய், முழுது உலகு அதனை ஆண்டான்—உலகம் முழுவதையும் அரசுபுரிந்தான்; பின்னும் அந்தணன் ஒருவன் அவ்விரதத்தைப் போற்றி—பின்னும் ஒரு பிராமணன் அந்த விரதத்தை அநுட்டித்து, சிந்தையில் நினைந்தாங்கு எய்தி—மனத்தில் நினைந்தவைகளை நினைந்தவாறே பெற்று, திரிசங்கு ஆகி உற்றான்—அரிச்சந்திரனின் தந்தையாகிய திரிசங்கு மகாராசனாயினான். (17)

ஈங்கொரு மன்னன் வேட னிருவரு நோற்று வண்மை
தாங்கிய வந்தி மானே சந்திமா னென்று பேராய்
வீங்குநீ ருடுத்த பாரை மேலைநாட் புரந்தா ரென்ப
வாங்கவர் பின்னாண் முத்தி யடைவது திண்ண மம்மா.

ஈங்கு ஒரு மன்னன் வேடன் இருவரும் நோற்று—இவ்வுலகில் ஒரு அரசனும் வேடனுமாகிய இருவரும் இவ்விரதத்தை அநுட்டித்து, வண்மை தாங்கிய—வள்ளன்மையை மேற்கொண்ட, அந்திமான் சந்திமான் என்று பேராய்—அந்திமான் சந்திமான் என்கின்ற பெயர்களையுடையவர்களாய், வீங்கு நீர் உடுத்த பாரை மேலை நாள் புரந்தார் என்ப—மிக்க நீரினையுடைய கடலாற் சூழப்பட்ட பூமியை முன்னாளில் அரசு செய்தார்கள் என்று கூறுவர்; ஆங்கு அவர் பின் நாள் முத்தி அடைவது திண்ணம்—அவ்விருவரும் இறுதியில் பரமுத்தியடைவது சத்தியமாம்.

இவர்கள் இடையெழு வள்ளல்களிலிருவர். (18)

இப்படி யார னாளில் விரதத்தை யியல்பி னோற்று
முப்புவ னத்தின் வேண்டு முறைமையை யடைந்த நீரார்
மெய்ப்படு தொகையை யாரே விளம்புவ ரீதே யன்றி
யொப்பரும் விரதம் வேறு மொன்றுள துரைப்பக் கேண்மோ.

இப்படி ஆரல் நாளில்—இவ்வாறு கார்த்திகை நாளில், விரதத்தை இயல்பின் நோற்று—இக்கார்த்திகை விரதத்தை விதிப்படி அநுட்டித்து, முப்புவனத்தின் வேண்டும் முறைமையை அடைந்த நீரார் மெய்ப்படு தொகையை—மூன்று உலகத்திலும் விரும்பும் பேறுகளைப் பெற்ற புண்ணிய நீர்மையினையுடையவர்களின் உண்மையான தொகையை, யாரே விளம்புவர்—

யாவர்தாம் அளவிட்டுச் சொல்ல வல்லவர்; ஈதே அன்றி—இஃதன்றி, ஒப்பரும் விரதம் வேறும் ஒன்றுளது—ஒப்பற்ற சுப்பிரமணிய விரதம் வேறு மொன்றுண்டு, உரைப்பக் கேள்—முசுகுந்தனே அதனையுஞ் சொல்லுவோம் கேட்பாயாக. (19)

வெற்பொடு மவுணன் றன்னை வீட்டிய தனிவேற் செங்கை
யற்புதன் றன்னைப் போற்றி யமரரு முனிவர் யாருஞ்
சொற்படு துலையின் றிங்கட் சுக்கில பக்கந் தன்னின்
முற்பக லாதி யாக மூவிரு வைக னோற்றார்.

வெற்பொடும் அவுணன் தன்னை வீட்டிய—கிரவுஞ்ச மலையோடு தாரகா சுரனை வதைத்த, தனி வேல் செங்கை அற்புதன் தன்னைப் போற்றி—ஒப்பற்ற வேற்படையைத் தாங்கிய செம்மையாகிய திருக்கரத்தினையுடைய குமாரக் கடவுளை வழிபட்டு, அமரரும் முனிவர் யாரும்—தேவரும் முனிவர்கள் யாவரும், சொல் படு துலையின் திங்கள் சுக்கில பக்கம் தன்னில் முற்பகல் ஆதி ஆக—புகழப்படுகின்ற ஐப்பசி மாசத்துச் சுக்கிலபக்கத்து முதற்றினமாகிய பிரதமை முதலாக, மூவிரு வைகல் நோற்றார்—சட்டி இறுதியாக ஆறு தினங்கள் அவ் விரதத்தை அநுட்டித்தார்கள். (20)

முந்திய வைக லாதி மூவிரு நாளுங் காலை
யந்தமில் புனலின் மூழ்கி யாடையோ ரிரண்டு தாங்கிச்
சந்தியிற் கடன்கள் செய்து தம்பவிம் பங்கும் பத்திற்
கந்தனை முறையே பூசை புரிந்தனர் கங்குற் போதில்.

முந்திய வைகல் ஆதி மூவிரு நாளும்—முதற்றினமாகிய பிரதமை தொடக்கம் சட்டியீறாக ஆறு நாளும், காலை—காலையில், அந்தம் இல் புனலின் மூழ்கி—பெரிய நீர்நிலையில் முழுகி, ஆடை ஓரிரண்டு தாங்கி—இரண்டு வஸ்திரங்கள் தரித்து, சந்தியில் கடன்கள் செய்து—சந்திதோறுஞ் செய்யுங் கடன்களைச் செய்து, கங்குற் போதில்—இரவில், தம்பம் விம்பம் கும்பத்தில் கந்தனை முறையே பூசை புரிந்தனர்—தம்பம் விம்பம் கும்பம் என்னும் மூன்றிலும் கந்தசுவாமியை முறைப்படி பூசித்தார்கள். (21)

நிறைதரு கட்டி கூட்டி நெய்யினாற் சமைக்கப் பட்ட
குறைதவிர் மோத கத்தைக் குமரநா யகற்க ருத்திப்
பிறவுள விதியுஞ் செய்து பிரான்றிருப் புகழ்வி னாவி
யுறுபுனல் சிறிது மாந்தி யுபவசித் திருந்தார் மாதோ.

நிறைதரு கட்டி கூட்டி—இனிமை நிறைந்த வெல்லக்கட்டியைச் சேர்த்து, நெய்யினால் சமைக்கப்பட்ட—நெய்யிலே சமைத்த, குறை தவிர் மோதகத்தை—

குற்றமற்ற மோதகத்தை, குமர நாயகற்கு அருத்தி—குமாரசுவாமிக்கு நிவேதித்து, பிற உள விதியும் செய்து—ஏனைய விதிகளாகிய உபசாரங்களையுஞ் செய்து, பிரான் திருப்புகழ் வினவி—குமாரசுவாமியின் திருப்புகழாகிய திருப் புராணங் கேட்டு, உறு புனல் சிறிது மாந்தி—கவித்த கையில் உற்ற சிறிது சலத்தை ஆசமித்து, உபவசித்து இருந்தார்—ஆறு தினங்களும் உபவாச மிருந்தார்கள். (22)

ஆரண முனிவர் வானோ ரங்கதன் மற்றை வைகல்
சீரணி முருக வேட்குச் சிறப்பொடு பூசை யாற்றிப்
பாரணம் விதியிற் செய்தார் பயிற்றுமிவ் விரதந் தன்னாற்
றாரணி யவுணர் கொண்ட தம்பதத் தலைமை பெற்றார்.

ஆரண முனிவர் வானோர்—வேதமுணர்ந்த முனிவர்களுந் தேவர்களும், அங்கு அதன் மற்றை வைகல்—அந்தச் சட்டித் தினத்துக்கு அடுத்த தினமாகிய சத்தமியில், சீர் அணி முருக வேட்கு சிறப்பொடு பூசை ஆற்றி—திருவருட் சிறப்பமைந்த முருகப்பிரானுக்கு வெகு சிறப்பாக விசேட பூசை செய்து, பாரணம் விதியிற் செய்தார்—விதித்த பிரகாரம் பாரணஞ் செய்தார்கள்; பயிற்றும் இவிரதம் தன்னால்—அநுட்டிக்கும் இந்த விரத விசேடத்தினாலே, தார் அணி அவுணர் கொண்ட தம் பதத் தலைமை பெற்றார்—மாலையையணிந்த அசுரர்கள் தம்மிடமிருந்து கவர்ந்துகொண்ட தத்தம் பதத்தின் தலைமையை மீண்டும் பெற்றார்கள்.

சிறப்பு என்பதற்கு விழா எனினுமாம். தாரணி, பூமியுமாம். (23)

என்றிவை குரவன் செப்ப விறையவன் வினவி யெந்தாய்
நன்றிவை புரிவ னென்னா நனிபெரு வேட்கை யெய்தி
யன்றுதொட் டெண்ணில் கால மவ்விர தங்க ளாற்றிக்
குன்றெறி நுதிவே லையன் குரைகழ லுன்னி நோற்றான்.

என்று இவை குரவன் செப்ப—என்று இந்தக் குமார விரத விசேடங்களைக் குரவராகிய வசிட்ட மகாமுனிவர் உபதேசஞ் செய்ய, இறையவன் வினவி—முசுகுந்தச் சக்கரவர்த்தி கேட்டு, எந்தாய்—பிதாவே, இவை நன்று புரிவன் என்னா—இவ்விரதங்களை நன்கு அநுட்டிப்பேன் என்று சங்கற்பித்து, நனி பெரு வேட்கை எய்தி—அவ்விரதங்களை அநுட்டிப்பதில் மிக்க பெரிய விருப்பங்கொண்டு, அன்று தொட்டு எண்ணில் காலம்—அன்று தொடக்கம் அளவற்ற காலம், அ விரதங்கள் ஆற்றி—அந்தக் கந்த விரதங்களை அநுட்டித்து, குன்று எறி நுதி வேல் ஐயன் குரைகழல் உன்னி நோற்றான்—கிரவுஞ்சத்தைப் பிளந்த நுதியினையுடைய வேற்பெருமானின் ஒலிக்கின்ற கழலணிந்த திருவடிகளைத் தியானித்து நோற்றலைச் செய்தான். (24)

### வேறு

ஆன காலையி லாறுமா முகமுடை யமலன்
கோன வன்றனக் கருளுவான் மஞ்ஞைமேல் கொண்டு
தானை வீரனு மெண்மரு மிலக்கருஞ் சார
வானு ளோர்களுங் கணங்களுஞ் சூழ்வுற வந்தான்.

ஆன காலையில்—முசுகுந்தச் சக்கரவர்த்தி அவ்வாறு விரதங்களை அநுட்டித்து வருங் காலத்தில், ஆறு மாமுகம் உடை அமலன்—பெருமை பொருந்திய நின்மலராகிய ஆறுமுகசுவாமி, கோன் அவன் தனக்கு அருளுவான்—அந்த முசுகுந்தச் சக்கரவர்த்திக்குத் திருவருள்புரியும்படி, மஞ்ஞைமேல் கொண்டு—சூரனாகிய மயில்வாகனத்திலிவர்ந்து, தானை வீரனும்—சேனாபதியாகிய வீரவாகு தேவரும், எண்மரும் இலக்கரும்—இலக்கத்தெண்மரும், சார—உடன் வர, வானுளோர்களும் கணங்களும் சூழ்வுற—தேவர்களும் பூத கணங்களும் புடைசூழ, வந்தான்—எழுந்தருளினார். (25)

வந்து தோன்றலு மன்னவர் மன்னவன் மகிழ்ந்து
கந்த வேளடி பணிந்தனன் கைதொழூஉப் பரவ
வந்த மில்பகல் விரதங்க ளாற்றினை யதனா
லெந்த நல்வரம் வேண்டினை யதுபுக லென்றான்.

வந்து தோன்றலும்—முன்னிலைக்கண் வந்து தோன்றியருளுதலும், மன்னவர் மன்னவன் மகிழ்ந்து—சக்கரவர்த்தியாகிய முசுகுந்தன் மகிழ்ந்து, கந்தவேள் அடி பணிந்தனன் கைதொழூஉப் பரவ—கந்தவேளின் திருவடிகளை வணங்கிக் கைகூப்பித் துதிக்க, அந்தம் இல் பகல் விரதங்கள் ஆற்றினை—அளவில்லாத காலம் எமது விரதங்களை அநுட்டித்தாய்; அதனால்—அக்காரணத்தால், எந்த நல் வரம் வேண்டினை—எந்த நல்ல வரங்களைப் பெறுதற்கு விருப்பங்கொண்டனை; அது புகல் என்றான்—உன் விருப்பமாகிய வரத்தைக் கேட்பாயாக என்று அருளிச்செய்தார். (26)

என்ற காலையின் முசுமுக முடையவ னெந்தாய்
நன்று பாரெலா மெனதுசெங் கோலிடை நடப்பான்
வென்றி மொய்ம்பின னாதியாம் வீரரை யெல்லா
மொன்று கேண்மையிற் றுணைவராத் தருதியென் றுரைத்தான்.

என்ற காலையில்—என்றிங்ஙனம் சுப்பிரமணிய சுவாமி கூறியருளிய சமயத்தில், முசு முகம் உடையவன்—முசுவின் முகத்தினையுடைய முசுகுந்தச் சக்கரவர்த்தி, எந்தாய்—எந்தையே, பார் எலாம் எனது செங்கோலிடை நன்று நடப்பான்—பூமி முழுவதும் என் செங்கோலின்வழி நன்கு நடக்கும் பொருட்டு, வென்றி மொய்ம்பினன் ஆதியாம் வீரரை எல்லாம்—வீரவாகு

தேவர் முதலிய வீரர்களையெல்லாம், ஒன்று கேண்மையின்—ஒன்றுநிற்கும் உறவுமுறையில், துணைவரா தருதி என்று உரைத்தான்—படைத்துணைவ ராகத் தந்தருளுக என்று விண்ணப்பித்தான். (27)

மன்ன னிவ்வகை வேண்டுகோள் வினவுறு வள்ள
லன்ன வாறுனக் குதவுவ மென்றருள் புரிந்து
மின்னல் வாட்படை வீரமொய்ம் பன்முதல் விளம்புந்
துன்னு தானையந் தலைவரை நோக்கியே சொல்வான்.

மன்னன் இவ்வகை வேண்டுகோள்—முசுகுந்தச் சக்கரவர்த்தியின் இவ்வாறாய வேண்டுகோளை, வள்ளல் வினவுறு—அருள் வள்ளலாகிய சுப்பிரமணிய சுவாமி கேட்டருளி, உனக்கு அன்னவாறு உதவுவம் என்று அருள் புரிந்து—முசுகுந்தனே உனக்கு நீ விரும்பியவாறே நல்குவோம் என்று அருள் புரிந்து, மின்னல் வாட்படை வீர மொய்ம்பன் முதல் விளம்பும்—ஒளிபொருந்திய வாட்படையையுடைய வீரவாகுதேவர் முதலாகச் சொல்லப்படுகின்ற, துன்னு தானையம் தலைவரை நோக்கி சொல்வான்—நெருங்கிய சேனைத் தலைவரை நோக்கிக் கூறியருளுவார். (28)

நோற்றல் கூடிய முசுகுந்த னும்மினு மெம்பா
லேற்ற மேதகு மன்பின னெழுகடற் புவியும்
போற்ற வைகுவா னீவிர்க ளாங்கவன் புடைபோ
யாற்றல் சான்றிடு துணைவரா யிருத்திரென் றறைந்தான்.

நோற்றல் கூடிய முசுகுந்தன்—நம் விரதங்களை அநுட்டித்தலில் மேம்பட்ட முசுகுந்தச் சக்கரவர்த்தி, நும்மினும் எம்பால் ஏற்றம் மேதகும் அன்பினன்—நும்மைக்காட்டிலும் நம்மிடத்து ஏற்றமாகிய மேன்மை பொருந்தும் அன்பினையுடையவன்; ஆங்கு அவன் எழுகடல் புவியும் போற்ற வைகுவான்—அவன் ஏழு கடலாற் சூழப்பட்ட பூமி முழுவதுந் தன்னைத் துதிக்கும்படி அரசு செய்துகொண்டிருக்கும்பொருட்டு, நீவிர்கள் புடை போய்—நீவிர்கள் அவனிடஞ் சென்று, ஆற்றல் சான்றிடு துணைவராய் இருத்திர் என்று அறைந்தான்—வலிமிக்க படைத்துணைவராய் இருப்பீராக என்றருளிச் செய்தார். (29)

வேறு

முழுதருட் புரிதருங் கடவுள்சொல் வினவியே முடிவ தில்லாச்
செழுமதித் தண்குடைச் சூர்குலந் தனையடுந் திறலி னேங்கள்
பழிபடப் பானுவின் வழிவருஞ் சிறுமகன் பாங்க ராகி
யிழிதொழிற் புரிதுமோ மெனமறுத் துரைசெய்தார் யாரும்வீரர்.

முழுது அருள் புரிதரும் கடவுள் சொல்—பெருங் கருணையைப் புரியுஞ் சுப்பிரமணியக்கடவுளின் சொல்லை, வீரர் யாரும் வினவி—வீரர் அனைவருங் கேட்டு, முடிவது இல்லா—தேவரீராலன்றிப் பிறரால் அழிதலைப் பொருந்தாத, தண் செழுமதி குடை சூர்குலம் தனை—தண்ணிய செழுமதிக் குடையினையுடைய சூரபன்மனின் குலத்தை, அடும் திறலினேங்கள்—அடுகின்ற வலி படைத்தேமாகிய நாங்கள், பானுவின் வழி வரும் சிறு மகன் பாங்கர் ஆகி—சூரியனின் வழியில் வரும் ஓர் அற்ப மனிதனுக்குக் கிளையாய், பழிபட இழி தொழில் புரிகிலோம் என—பழித்தல் உண்டாக அவன் பணிக்கும் இழி தொழில்களைச் செய்யோம் என்று, மறுத்து உரை செய்தார்—மறுத்துரைத்தார்கள். (30)

ஞானநா யகனவர் மொழிதனைத் தேர்ந்துநம் முரைம றுத்தீ
ரானதோர் பான்மையா னீவிர்மா னுடவரா யவனி மன்னன்
சேனையா கிப்புறம் போற்றியே பற்பகற் சேர்திர் பின்னர்
வானுளோர் புகழவே நோற்றுநம் பக்கலில் வருதி ரென்ருன்.

ஞான நாயகன் அவர் மொழிதனைத் தேர்ந்து—ஞான நாயகரான சுப்பிரமணியப்பெருமான் அவர்கள் மறுத்துரைத்ததனை உணர்ந்து, நீவிர் நம் உரை மறுத்தீர்—நீவிர் நமது கட்டளையை மறுத்தீர்கள்; ஆனது ஓர் பான்மையால்—அவ்வாறு மறுத்ததொரு தன்மையினுல், மானுடவராய்—மனிதராய், அவனி மன்னன் சேனை ஆகி—மண்ணுலக மன்னனுகிய முசுகுந்தச் சக்கரவர்த்தியின் சேனைகளாய், புறம் போற்றி—அவனைப் புறங்காத்து, பற்பகல் சேர்திர்—பலகாலம் இருக்குதிர்; பின்னர்—பின்பு, வான் உளோர் புகழ நோற்று—தேவர்களும் புகழும்படி தவஞ்செய்து, நம் பக்கலில் வருதிர் என்ருன்—எமது பாங்கர் வரக்கடவீர் என்று அருளிச்செய்தார். (31)

ஐயன்வாய் மொழியினுல் வீரமொய்ம் புடையவ னுதி யானுேர்
மையன்மா னுடவராய்த் தொல்லைநா ளுடையதோர் வன்மை நீங்கி
மெய்யெலாம் வியர்வுறப் பதைபதைத் தேங்கியே விழும மிக்குப்
பொய்யரேம் பிழைபொறுத் தருடியா லென்றுபொன் னடிப ணிந்தார்.

ஐயன் வாய்மொழியினுல்—சுப்பிரமணிய சுவாமியினது திருவாய்மொழியினுலே, வீர மொய்ம்பு உடையவன் ஆதியானுேர்—வீரவாகுதேவர் முதலிய வீரர்கள், மையல் மானுடவராய்—மயக்கம் பொருந்திய மனிதர்களாய், தொல்லைநாள் உடையதோர் வன்மை நீங்கி—முன்னைநாளில் உள்ளதாகிய ஒப்பற்ற வன்மை நீங்கி, மெய்யெலாம் வியர்வு உற—மெய்ம்முழுதும் வியர்வை உண்டாக, பதை பதைத்து—நடுநடுங்கி, ஏங்கி விழுமம் மிக்கு—ஏங்கித் துன்பம் மிகுந்து, பொய்யரேம் பிழை பொறுத்து அருள்தி என்று—பொய்யினையுடையேமாகிய எங்கள் பிழையைப் பொறுத்தருள்க என்று, பொன்னடி பணிந்தார்—அப் பெருமானுடைய பொன்னடிகளை வணங்கினுர்கள். (32)

கமலமார் செய்யசே வடியின்மேற் ருழ்ந்துகை தொழுது போற்றிக்
குமரவேள் விடைதனைப் பெற்றுமா னவரெலாங் கொற்ற மன்னன்
றமர்களா யொழுகினுர் நேமியம் படையுடைத் தரும மூர்த்தி
யமரர்கோ னிளவலா யாங்கவன் பின்செலு மமைதி யேபோல்.

கமலம் ஆர் செய்ய சேவடியின் மேல் தாழ்ந்து—தாமரை மலர்போன்ற செக்கச் சிவந்த திருவடிகளின்மீது விழுந்து வணங்கி, கை தொழுது போற்றி—கைகூப்பி வணங்கித் துதித்து, குமரவேள் விடைதனைப் பெற்று—குமாரக்கடவுளிடம் விடையைப் பெற்றுக்கொண்டு, நேமி அம் படையுடைத் தரும மூர்த்தி—அழகிய சக்கரப்படையினையுடைய தரும மூர்த்தியாகிய திருமால், அமரர்கோன் இளவலாய்—ஒரு காலத்திலே இந்திரனுக்கு உபேந்திரன் எனப்படுந் தம்பியாய், ஆங்கு அவன் பின்செலும் அமைதிபோல்—அவ்விந்திரனுக்குப் பின்னே செல்லாநின்றதொரு முறைமைபோல, மானவர் எலாம்—வீரர்கள் யாவரும், கொற்ற மன்னன் தமர்களாய்—வெற்றி பொருந்திய முசுகுந்தச் சக்கரவர்த்தியின் சுற்றத்தவர்களாய், ஒழுகினுர்—அவன்வழி யொழுகினுர்கள். (33)

ஆயதோர் காலையின் முசுமுகத் திறையவ னுடல் வேற்கை
நாயகன் பொற்பதம் வந்தியா நிற்பநல் லருள்பு ரிந்தே
பாயபொன் சுடர்மணித் தோகையம் புரவியும் படைக ளாகு
மாயிரும் பூதருந் தானுமந் நிலைதனின் மறைத லுற்ருன்.

ஆயது ஓர் காலையில்—அவ்வாருகிய சமயத்தில், முசுமுகத்து இறையவன்—முசுகுந்தச் சக்கரவர்த்தி, ஆடல் வேற்கை நாயகன் பொற்பதம் வந்தியா நிற்ப—வெற்றியினையுடைய வேற்படையைத் தாங்கிய திருக்கரத்தினையுடைய சுப்பிரமணியசுவாமியின் பொற்பாதங்களைத் துதித்து நிற்க, நல் அருள் புரிந்து—அவனுக்கு நல்ல திருவருளைச் செய்து, பாய பொன் சுடர் மணி அம் தோகை புரவியும்—பரவிய பொன்னும் ஒளிபொருந்திய இரத்தினமும் செறிந்தாலொத்த அழகிய தோகையினையுடைய மயிற் பரியும், படைகளாகும் மா இரும் பூதரும்—சேனைகளாகிய சிறந்த பெரிய பூதகணத்தரும், தானும்—தாமுமாய், அ நிலைதனில் மறைதலுற்ருன்—அந்நிலைமையிலிருந்தவாறே மறைந்தருளினுர்.

பரி—பரிப்பது; வாகனம். (34)

### வேறு

மறைந்தனன் குமர னேக மன்னவன் மகிழ்ச்சி கொண்டு
சிறந்திடு கருவூ ரென்னுந் திருநக ரரசின் மேவி
யறந்தரு மாட வீதி யளப்பில புரிவித் தாங்கே
நிறைந்திடு வீரர் தம்மை நிலைபெற விருத்தி னனே.

குமரன் மறைந்தனன் ஏக—குமாரசுவாமி மறைந்தெழுந்தருள, மன்னவன் மகிழ்ச்சி கொண்டு—முசுகுந்தச் சக்கரவர்த்தி மகிழ்ச்சியடைந்து, சிறந்திடு கருவூர் என்னும் திருநகர் அரசின் மேவி—சிறப்புப் பொருந்திய கருவூர் என்கின்ற அழகிய நகரத்தில் அரசுவீற்றிருந்து, அறம் தரு மாட வீதி அளப்பில புரிவித்து—அறத்தை வளர்க்கின்ற மாடங்களையும் வீதிகளையும் அளவற்றனவாக இயற்றுவித்து, ஆங்கு—அவைகளில், நிறைந்திடு வீரர் தம்மை—அறிவு ஆண்மை யாவும் நிறைந்த இலக்கத்தொன்பது வீரர்களையும், நிலைபெற இருத்தினன்—நிலைபெற்றிருக்குமாறு செய்தான். (35)

ஆயவர் தங்கட் கெல்லா மரும்பெற லாக்க முள்ள
தேயமுங் கரிதேர் வாசித் திரள்களும் வரிசை முற்றுந்
தூயபல் சனங்க ளாகுந் தொகுதியு முதவித் தண்ட
நாயக முதல்வ ராக நல்கினன் ஞால மன்னன்.

ஞால மன்னன்—புவிச் சக்கரவர்த்தியாகிய முசுகுந்தன், ஆயவர் தங்கட்கு எல்லாம்—அந்த வீரர்களனைவருக்கும், அரும் பெறல் ஆக்கம் உள்ள தேயமும்—பெறுதற்கரிய வளங்கள் நிரம்பிய நாடுகளையும், கரி தேர் வாசி திரள்களும்—யானை தேர் குதிரை ஆகிய இவற்றின் தொகுதிகளையும், வரிசை முற்றும்—உரிய வரிசை முழுவதையும், தூய பல் சனங்கள் ஆகும் தொகுதியும்—பரிசுத்தமான பல காலாட் சேனைத் தொகுதிகளையும், உதவி—கொடுத்து, தண்ட நாயக முதல்வராக நல்கினன்—சேனாதிபதிகளாகிய தலைவர்களாயிருக்கும்படி அதற்கு வேண்டிய உரிமைகள் அனைத்தையும் வழங்கினான். (36)

அன்னதோர் காலந் தன்னி லரம்பைய ரவனி யாளு
மன்னவர் தம்பாற் றோன்றி வளர்தலும் வாகை மொய்ம்பின்
முன்னவன் முதலோர்க் கெல்லா முசுகுந்த வேந்த னந்தக்
கன்னியர் தம்மைக் கூவிக் கடிமண மியற்று வித்தான்.

அன்னது ஓர் காலம் தன்னில்—அக்காலத்தில், அரம்பையர் அவனி ஆளும் மன்னவர் தம்பால் தோன்றி வளர்தலும்—தேவப்பெண்கள் பூமியை ஆளும் அரசர்கள் குலத்திற் பிறந்து வளர்ந்தாராக; முசுகுந்த வேந்தன் அந்தக் கன்னியர் தம்மைக் கூவி—முசுகுந்தச் சக்கரவர்த்தி அந்தக் கன்னியர்களை அழைத்து, வாகை மொய்ம்பின் முன்னவன் முதலோர்க்கு எல்லாம்—வீரவாகு தேவர் முதலிய அனைவருக்கும், கடிமணம் இயற்றுவித்தான்—அப் பெண்களைத் திருமணஞ் செய்வித்தான். (37)

அந்தமில் வன்மை சான்ற வாடலம் புயத்தோன் புட்ப
கந்தியென் றுரைபெற் றுள்ள கன்னிகை தன்னை வேட்டுச்
சிந்தையின் மகிழ்வாற் சேர்ந்து சித்திர வல்லி யென்னும்
பைந்தொடி தன்னை யன்பாற் பயந்தனன் பதும மின்போல்.

அந்தமில் வன்மை சான்ற ஆடலம் புயத்தோன்—அளவற்ற வலி மிகுந்த வீரவாகு தேவர், புட்பகந்தி என்று உரை பெற்றுள்ள கன்னிகை தன்னை வேட்டு—புட்பகந்தியென்று புகழ்பெற்ற கன்னிகையை மணந்து, சிந்தையின் மகிழ்வால் சேர்ந்து—மனமகிழ்ச்சியோடு அப்பெண்ணைக் கலந்து, சித்திரவல்லி என்னும் பைந்தொடி தன்னை—சித்திரவல்லி என்னும் பசிய தொடியையணிந்த புதல்வியை, பதும மின்போல்—தாமரைமலரில் இருக்கும் மின்போன்ற இலக்குமியைப் பெற்றது போல, அன்பால் பயந்தனன்—அன்போடு பெற்றார். (38)

அத்தகு பொழுதிற் பின்னை யனகனே சனக னென்னும்
புத்திரர் தம்மை நல்கிப் புவனியாண் முசுகுந் தற்குச்
சித்திர வல்லி யென்னுஞ் சீர்கெழு புதல்வி தன்னை
மெய்த்தகு வதுவை நீரால் விதிமுறை வழாம லீந்தான்.

அத்தகு பொழுதின் பின்னை—புதல்வியைப் பெற்ற அந்த நல்ல காலத்துக்குப் பின்பு, அனகன் சனகன் என்னும் புத்திரர் தம்மை நல்கி—அனகன் சனகன் என்னும் புதல்வர்களையும் பெற்று, சித்திரவல்லி என்னும் சீர்கெழு புதல்வி தன்னை—சித்திரவல்லி என்கின்ற சிறப்புப்பொருந்திய புதல்வியை, புவனி ஆள் முசுகுந்தற்கு—பூமியை ஆளுகின்ற முசுகுந்தச் சக்கரவர்த்திக்கு, மெய்த்தகு வதுவை நீரால்—மெய்ம்மை விளங்குகின்ற வேத வதுவை முறைமையில், விதிமுறை வழாமல் ஈந்தான்—விதிமுறை வழுவாமல் மணஞ் செய்துகொடுத்தார். (39)

ஏனைய வீரர் தாமு மியல்புளி வழாமல் வேட்ட
தேனிவர் குழலா ரோடுஞ் சிறந்தவில் வாழ்க்கை போற்றிப்
பானலங் குதலைச் செவ்வாய்ப் பாலரை நீல வேற்கண்
மானனை யாரை நல்கி மனுகுலத் தொன்றி யுற்றார்.

ஏனைய வீரர் தாமும்—ஏனைய வீரர்களும், இயல்புளி வழாமல் வேட்ட—வேதமரபு பிறழாமல் தாம் மணந்த, தேன் இவர் குழலாரோடு சிறந்த இல்வாழ்க்கை போற்றி—வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய பெண்களோடு சிறந்த இல்வாழ்க்கையை நடத்தி, பால் நல் அம் குதலைச் செவ்வாய்ப் பாலரை—பால் ஒழுகுகின்ற நல்ல அழகிய மழலை பொழிகின்ற சிவந்த வாயினையுடைய புதல்வர்களையும், நீல வேற்கண் மான் அனையாரை—நீல நிறம் பொருந்திய வேல்போலுங் கண்களையுடைய மானையொத்த புதல்வியர்களையும், நல்கி—பெற்று, மனு குலத்து ஒன்றி உற்றார்—மநுகுலத்தோடு கலந்து வாழ்ந்தார்கள்.

உம், சாரியை நீர்மைத்து. (40)

சித்திர வல்லி யென்னுஞ் சீருடைச் செல்வி யங்கோர்
தத்தையை வளர்த்த லோடுந் தண்டகத் தருமன் றேவி
யத்தனிக் கிளியை வெஃக வாங்கவன் றூதர் போந்து
கைத்தலத் ததனைப் பற்றிக் கடிதினிற் கொடுபோ யீந்தார்.

சித்திரவல்லி என்னும் சீர் உடைச் செல்வி—சித்திரவல்லி என்கின்ற சிறப்புப் பொருந்திய இராசமாதேவி, அங்கு ஓர் தத்தையை வளர்த்த லோடும்—அங்கு ஒரு கிளியை வளர்த்துவந்தாளாக, அ தனி கிளியை—அந்த ஒப்பற்ற கிளியை, தண்டகத் தருமன் தேவி வெஃக—தண்டம் என்கின்ற தருமத்தைப் புரிகின்ற யமனுடைய மனைவி விரும்ப, ஆங்கு அவன் தூதர் போந்து—அப்பொழுது அந்த யமனுடைய தூதுவர்கள் வந்து, கைத்தலத்து அதனை பற்றி—கையினால் அக்கிளியைப் பிடித்து, கடிதினில் கொடு போய்—விரைவிற் கொண்டு சென்று, ஈந்தார்—யமன் தேவியிடம் கொடுத்தார்கள்.

கைத்தலத்து அதனைப் பற்றி என்பதற்கு அரசியின் கைக்கணிருந்த அக் கிளியைப் பற்றி என உரைத்தலும் பொருந்தும். (41)

அவ்வழி கிள்ளை காணா ளாயிழை யயர்த லோடு
மெவ்வழி போயிற் றேவென் றிறையவ னுலகி னாடி
மைவழி கின்ற மேனி மறலிதன் றுணைவி யானாள்
கைவழி யமருந் தன்மை கதுமென வுணர்ந்தா னன்றே.

அ வழி ஆயிழை கிள்ளை காணாள் அயர்தலோடும்—அப்பொழுது சித்திரவல்லி தன் கிளியைக் காணாமல் வருந்துதலும், இறையவன்—முசுகுந்தச் சக்கரவர்த்தி, எ வழி போயிற்றோ என்று உலகின் நாடி—இக்கிளி எவ்விடம் போயினதோ என்று உலக முழுவதுந் தேடி, மை வழிகின்ற மேனி—கருமை வழிந்தொழுகும் மேனியினையுடைய, மறலி தன் துணைவியானாள் கைவழி அமரும் தன்மை கதுமென உணர்ந்தான்—யமனுடைய தேவியினது கைக்கண் அக்கிளி இருப்பதை விரைவாக அறிந்தான். (42)

பூதலம் புரந்த செங்கோற் புரவலன் வீர மொய்ம்ப
னாதியர் தம்மைக் கூவி யங்ஙனந் தூண்ட வன்னோ
ரேதமில் கரிதேர் வாசி யெல்லையின் மறவர் சுற்ற
மேதியங் கடவுண் மூதூர் விரைந்துபோய் வளைந்து கொண்டார்.

பூதலம் புரந்த செங்கோல் புரவலன்—பூமியை ஆண்ட செங்கோலினையுடைய முசுகுந்தச் சக்கரவர்த்தி, வீர மொய்ம்பன் ஆதியர் தம்மை கூவி—வீரவாகு தேவர் முதலிய வீரர்களை அழைத்து, அங்ஙனம் தூண்ட—யமனுலகத்துக்கு ஏவ, அன்னோர்—அவ் வீரர்கள், ஏதம் இல் கரி தேர் வாசி எல்லையில் மறவர் சுற்ற—குற்றமற்ற யானை தேர் குதிரை அளவற்ற காலாட்படை சூழ, மேதி அம் கடவுள் மூதூர்—எருமைக் கடாவினையுடைய யமனுடைய மானசோத்திரம் என்னும் நகரத்தை, விரைந்து போய் வளைந்துகொண்டார்—விரைந்து சென்று முற்றுகை செய்தார்கள்.

அம், சாரியை. (43)

தன்னகர் வளைத லோடுந் தருமன்வந் தேற்ற காலை
யன்னவ ளெடுபோர் செய்தே யடுமுரண் டொலைச்சி யம்பொன்
வன்னமென் கிள்ளை தன்னை வாங்கினர் மீண்டு தங்கண்
மின்னுள மகிழ நல்கி வேந்தற்கு விசயஞ் செய்தார்.

தன் நகர் வளைதலோடும்–தனது நகரத்தை முற்றுகை செய்ய, தருமன் வந்து ஏற்ற காலை–யமன் வந்து எதிர்த்தபோது, அன்னவனொடு போர் செய்து–அந்த யமனோடு போர் புரிந்து, அடு முரண் தொலைச்சி–அடுகின்ற அவன் வலியைப் போக்கி, அம் பொன் வன்னம் மென் கிள்ளை தன்னை வாங்கினர் மீண்டு–அழகிய பொன்வண்ணமான மிருதுவான கிளியைப் பெற்றுக் கொண்டு மீண்டு, தங்கள் மின் உளம் மகிழ நல்கி–தமது மின்னற் கொடியாகிய சித்திரவல்லி மனம் மகிழக் கொடுத்து, வேந்தற்கு விசயம் செய்தார்–முசுகுந்தச் சக்கரவர்த்திக்கு வெற்றியை உண்டாக்கினார்கள். (44)

சித்திர வல்லி பின்னர்ச் சீர்கெழு சூல்கொண் டுற்று
மெய்த்தகு பலங்காய் வேண்டி வேண்டினள் வினவ லோடு
முத்தணி யலங்கற் றிண்டோண் முசுகுந்த னதுகொண் டேக
வத்திரு மலைநன் னாட்டுக் களப்பிலோர் தம்மை யுய்த்தான்.

சித்திரவல்லி பின்னர்–சித்திரவல்லி பின்பு, சீர் கெழு சூல் கொண்டு உற்று–சிறப்புப் பொருந்திய கருப்பந் தரித்து, மெய் தகு பலம் காய் வேண்டி–கருப்பந்தரித்த உடலுக்குத் தகுந்த காய்களையுங் கனிகளையும் உண்ண விரும்பி, வேண்டினள் வினவலோடும்–கேட்டு வேண்டி நின்றாளாக; முத்து அணி அலங்கல் திண்தோள் முசுகுந்தன்–முத்துமாலையையணிந்த திண்ணிய புயங்களையுடைய முசுகுந்தச் சக்கரவர்த்தி, அது கொண்டு ஏக–சித்திரவல்லி விரும்பியதைக் கொண்டுவரும்பொருட்டு, அ திருமலை நன்னாட்டுக்கு அளப்பிலோர் தம்மை உய்த்தான்–அந்த வயாப் பண்டம் உள்ள அழகிய நல்ல மலை நாட்டுக்கு அளவற்றவர்களை அனுப்பினான்.

வயாப் பண்டம்–கருப்பவதி விரும்பும் உணவுப் பொருள். (45)

மஞ்சுசூழ் மலைநாட் டுள்ளார் மன்னவர் மன்ன னாணைக்
கஞ்சல ரிகழ்த லோடு மாடலம் புயனு மேனைச்
செஞ்சிலை வீரர் தாமுஞ் சென்றன ரந்நாட் டுள்ள
வெஞ்சுர மீரொன் பானும் வென்றொரு பகலின் மீண்டார்.

மஞ்சு சூழ் மலைநாட்டுள்ளார்–மேகந் தவழுகின்ற மலைநாட்டில் உள்ளவர்கள், மன்னவர் மன்னன் ஆணைக்கு அஞ்சலர் இகழ்தலோடும்–முசுகுந்தச் சக்கரவர்த்தியின் ஆணைக்கு அஞ்சாதவர்களாய் இகழுதலும், ஆடல் அம் புயனும் ஏனை செஞ்சிலை வீரர் தாமும் சென்றனர்–வீரவாகுதேவரும் ஏனைய

செம்மையாகிய வில்வீரருஞ் சென்று, அ நாட்டு உள்ள வெம் சுரம் ஈரொன் பானும்—அம்மலைநாட்டிலுள்ள கொடுஞ்சுரங்கள் பதினெட்டில் இருப்பவர் கள் அனைவரையும், ஒருபகலில் வென்று மீண்டார்—ஒரு பகற்பொழுதில் வென்று மீண்டார்கள். (46)

பூண்டிடு கழற்கால் வீரர் பொற்புறு புதல்வி யாளுள்
வேண்டிய தீய பைங்காய் வியத்தக நல்கிப் பின்ன
ரீண்டுள தரணி யெல்லா மேகியே திறைகொண் டெங்கு
மாண்டைய மன்னன் கோலு மாணையு நடக்கச் செய்தார்.

கழல் பூண்டிடு கால் வீரர்—வீரக்கழலணிந்த கால்களையுடைய வீரர்கள், பொற்பு உறு புதல்வியாளுள் வேண்டிய—அழகு மிக்க தம் புதல்வியாகிய சித்திரவல்லி விரும்பிய, தீய பைங்காய்—இனிய பசிய காய் முதலியவைகளை, வியத்தக நல்கி—அவள் வியக்கும்படி கொடுத்து, பின்னர் ஈண்டு உள தரணி எல்லாம் ஏகி—பின்பு இந்நிலவுலகத்திலுள்ள தேயங்கள் முழுவதுந் திக்கு விசயஞ் செய்து, திறை கொண்டு—திறை வாங்கி, ஆண்டைய மன்னன் கோலும் ஆணையும் எங்கும் நடக்கச் செய்தார்—கருவூர் ஆகிய அவ்விடத்திலுள்ள முசுகுந்தச் சக்கரவர்த்தியின் செங்கோலும் ஆணையும் உலகமெங்கும் நடக்கு மாறு செய்தார்கள். (47)

கருமுதிர் கின்ற காமர் கற்பக வல்லி யன்னா
ளெரிகிள ரங்கி வன்ம னென்பதோர் குமரன் றன்னை
யரியதோர் தவத்தின் சீரா லளித்தன ளதனைக் கண்டு
பெரிதுள மகிழ்ந்து மன்னன் பேரர சாட்சி செய்தான்.

கரு முதிர்கின்ற காமர் கற்பக வல்லி அன்னாள்—கருப்பம் முதிருகின்ற அழகியதொரு கற்பகவல்லியையொத்த சித்திரவல்லி, எரி கிளர் அங்கி வன் மன் என்பதோர் குமரன் தன்னை—ஒளி கிளருகின்ற அக்கினிவன்மன் என்னும் பெயரினையுடைய ஒரு புதல்வனை, அரியது ஓர் தவத்தின் சீரால் அளித்தனள்—அரியதொரு தவத்தின் சிறப்பினாற் பெற்றாள்; அதனைக் கண்டு—அரியதோர் ஆண் மகவு பயந்ததனைக் கண்டு, பெரிதுளம் மகிழ்ந்து—பெரிதும் மனம் மகிழ்ந்து, மன்னன் பேரரசு ஆட்சி செய்தான்—முசுகுந்தச் சக்கரவர்த்தி பேரர சாய் அரசுவீற்றிருந்தான். (48)

### வேறு

அன்ன காலையில் வலாசுர னென்பதோ ரவுணன்
பன்னெ டும்பெருஞ் சேனையுந் தானுமாய்ப் படர்ந்து
பொன்னி நாட்டினைச் சுற்றியே யடர்த்தலும் புலவோர்
மன்னர் மன்னவ னவனுடன் சிலபகன் மலைந்தான்.

அன்ன காலையில்—அக்காலத்தில், வலாசுரன் என்பதோர் அவுணன்—வலாசுரன் என்று சொல்லுகின்றதோர் அசுரன், பல் நெடும் பெரும் சேனையும் தானுமாய்ப் படர்ந்து—பல நெடிய பெரிய சேனையுந் தானுமாகிச் சென்று, பொன்னின் நாட்டினை சுற்றியே அடர்த்தலும்—சுவர்க்க நாட்டைச் சூழ்ந்து போர்புரிதலும், புலவோர் மன்னர் மன்னவன்—தேவர்களின் அரசனாகிய இந்திரன், அவனுடன் சிலபகல் மலைந்தான்—அவ்வசுரனோடு சிலதினம் போர் புரிந்தான். (49)

நிருதர் போற்றிய வலாசுரன் றன்னொடு நேர்ந்து
பொருது வென்றில னாதலாற் பூதலம் புரக்குங்
குருதி வேற்படை முசுகுந்த மன்னனைக் கூவி
வருதி யென்றொரு தூதனை விடுத்தனன் மகவான்.

நிருதர் போற்றிய வலாசுரன் தன்னொடு—நிருதர்களாலே துதிக்கப்பட்ட வலாசுரனோடு, நேர்ந்து பொருது வென்றிலன்—இந்திரன் எதிர்த்துப்போர் செய்து வென்றானல்லன்; ஆதலால்—ஆதலினாலே, பூதலம் புரக்கும் குருதி வேற்படை முசுகுந்த மன்னனை கூவி வருதி என்று—பூமியை ஆளுகின்ற இரத்தந் தோய்ந்த வேற்படையையுடைய முசுகுந்தச் சக்கரவர்த்தியை அழைத்து வருவாயாக என்று, ஒரு தூதனை மகவான் விடுத்தனன்—ஒரு தூதுவனை இந்திரன் அனுப்பினான். (50)

ஏய தூதுவ னிருநிலம் புக்கன னிமையோர்
நாய கன்பணி யுரைத்தலு நன்றென வினவி
மாயி ருந்திறல் வீரர்தம் படையொடும் வான்மேற்
போயி னான்முசு குந்தனென் றுரைபெறும் புகழோன்.

ஏய தூதுவன்—இந்திரன் அனுப்பிய தூதுவன், இரு நிலம் புக்கனன்—பெரிய பூமியை அடைந்து, இமையோர் நாயகன் பணி உரைத்தலும்—தேவேந்திரன் இட்ட பணியைக் கூறுதலும், முசுகுந்தன் என்று உரைபெறும் புகழோன் நன்று என வினவி—முசுகுந்தன் என்றுரைக்கும் புகழினையுடையோன் நல்லது என்று கேட்டு, மா இரும் திறல் வீரர்தம் படையொடும்—மிக்க பெருந் திறலினையுடைய வீரர்களின் கூட்டத்தோடும், வான்மேல் போயினான்—விண்ணுலகத்துக்குச் சென்றான். (51)

போன மன்னவன் புரந்தரன் பொன்னடி வணங்கித்
தானை விண்ணவர்க் கதிபனுந் தலைமையைத் தாங்கி
மானி னங்கண்மேன் மடங்கல்சென் றென்னவல் லவுணர்
சேனை யங்கடல் யாவையு மிமைப்பினிற் செறுத்தான்.

போன மன்னவன்—விண்ணுலகத்துக்குச் சென்ற முசுகுந்தச் சக்கரவர்த்தி, புரந்தரன் பொன்னடி வணங்கி—தேவேந்திரனது அழகிய பாதங்களை வணங்கி, தானை விண்ணவர்க்கு அதிபனும் தலைமையை தாங்கி—தேவ சேனைக்கு அதிபதியாகுந் தலைமையைத் தாங்கி, மான் இனங்கள் மேல் மடங்கல் சென்றென்ன—மான்கூட்டத்தின்மீது சிங்கம் பாய்ந்தாற்போல, வல் அவுணர் சேனை கடல் யாவையும்—வலிய அசுர சேனை சமுத்திரம் முழுவதையும், இமைப்பினில் செறுத்தான்—இமைப்பொழுதில் அழித்தான்.

அம், சாரியை. (52)

சுற்று நிற்புறு மவுணராஞ் சூழ்பெரும் பௌவம்
வற்று கின்றுழி வலாசுரன் றன்னொடு மகவான்
செற்ற நீரொடு சிலபக னின்றுபோர் செய்து
கொற்ற மார்குலி சத்தினு லவனுயிர் குடித்தான்.

சுற்றும் நிற்புறும்—சுற்றுப்புறமெங்கும் நிற்கின்ற, அவுணராம் சூழ் பெரும் பௌவம் வற்றுகின்றுழி—அசுரர்களாகிய சூழ்ந்த பெரிய சமுத்திரம் வற்றுகின்ற சமயத்தில், வலாசுரன் தன்னொடு மகவான் சில பகல் நின்று—வலாசுரனோடு இந்திரன் சில தினம் எதிர்த்து நின்று, செற்ற நீரொடு போர் செய்து—பழம் பகையானெய்திய கோப நீர்மையோடு போர்புரிந்து, கொற்றம் ஆர் குலிசத்தினால் அவன் உயிர் குடித்தான்—வெற்றிபொருந்திய வச்சிராயுதத்தினால் அவனது உயிரைப் பருகினான். (53)

மன்னு தொல்புகழ் வலனுயிர் கோறலால் வலாரி
யென்ன வோர்பெயர் பெற்றனன் வாகையு மெய்திக்
கொன்னு னைப்படை முசுகுந்த வேந்தனைக் கொண்டு
பொன்ன கர்த்திருக் கோயிலிற் புரந்தரன் புகுந்தான்.

புரந்தரன்—இந்திரன், மன்னும் தொல்புகழ் வலன் உயிர் கோறலால்—நிலைபெறும் பழைமையான புகழினையுடைய வலனது உயிரை வதைத்த காரணத்தால், வலாரி என்ன ஓர் பெயர் பெற்றனன்—வலாரி என்கின்றதொரு சிறப்புப் பெயரைப் பெற்று, வாகையும் எய்தி—வென்றியும் அடைந்து, கொல் நுனை படை முசுகுந்த வேந்தனை—கொல்லுகின்ற நுதிபொருந்திய படையினையுடைய முசுகுந்தச்சக்கரவர்த்தியை, பொன்னகர்த் திருக்கோயிலில் கொண்டு புகுந்தான்—சுவர்க்க நகரத்திலுள்ள அழகிய தனது மாளிகைக்குள் அழைத்துக்கொண்டு சென்றான். (54)

காய்ந்த மாற்றலர் தம்வலி கடந்தெனைக் ககன
வேந்த னுக்கினை வீரமு மேதகு புகழு
மீந்தெ னக்குநற் றுணைவனு மாயினை யிதனு
லாந்த ரங்கமாஞ் சுற்றநீ யல்லையோ வென்றான்.

காய்ந்த மாற்றலர் தம் வலி கடந்து—என்னை வருத்திய பகைவர்களின் வலியைத் தொலைத்து, எனை ககன வேந்தன் ஆக்கினை—என்னை விண்ணுலகுக்கு அரசனுக்கினுய்; வீரமும் மேதகு புகழும் எனக்கு ஈந்து நல் துணைவனும் ஆயினை—வீரத்தையும் மேன்மைதக்க புகழையும் எனக்குத் தந்து நல்ல உற்ற துணைவனுமாயினுய்; இதனுல்—இக்காரணத்தால், ஆந்தரங்கமாம் சுற்றம் நீ அல்லையோ என்ருன்—எனக்கு ஆந்தரங்கமாகுஞ் சுற்றம் நீ அல்லையோ என்று உபசாரமொழி பகர்ந்தான்.

ஆந்தரங்க சுற்றம்—நெருங்கிய சுற்றம். (55)

என்று மன்னனை நோக்கியே முகமன்க ளியம்பிக்
குன்று போலுயர் தன்பெருங் கோயிலுட் கொடுபோய்
மன்றன் மாண்புன லாடியே மணிக்கலை புனைந்து
சென்று மாருெழுந் தேவனைப் பூசனை செய்தான்.

என்று மன்னனை நோக்கி முகமன்கள் இயம்பி—என்றிவ்வாறு முசுகுந்தச் சக்கரவர்த்தியை நோக்கி உபசாரமொழிகள் கூறி, குன்று போலுயர் தன் பெரும் கோயிலுள் கொடு போய்—மலைபோலுயர்ந்த தனது பெரிய கோயிலுள்ளே அழைத்துக்கொண்டு சென்று, மன்றல் மாண் புனல் ஆடி—மணங் கமழ்கின்ற மாட்சிமையான நீரில் முழுகி, மணிக்கலை புனைந்து—அழகிய வஸ்திரங்களைத் தரித்து, மால் தொழும் தேவனை சென்று பூசனை செய்தான்—திருமால் வழிபட்ட தியாகேசராகிய சோமாஸ்கந்த மூர்த்தியை அடைந்து பூசனை செய்தான். (56)

எயிலை யங்கெரி யூட்டிய கண்ணுத லிமைய
மயிலு மைந்தனு மொருபுடை மகிழ்வுடன் மேவக்
கயிலை யின்கணே யமர்தல்போ லிருத்தலுங் கண்டான்
பயிலு மன்புடை மன்னவன் பரவச மானுன்.

அங்கு எயிலை எரியூட்டிய கண்ணுதல்—அக்காலத்திலே திரிபுரங்களை எரியூட்டி யழித்த நெற்றிக்கண்ணினையுடைய சிவபெருமான், இமைய மயிலும் மைந்தனும் ஒருபுடை மகிழ்வுடன் மேவ—இமய மயிலாகிய உமாதேவியாரும் சுப்பிரமணியரும் தமக்கு ஒரு பக்கத்தில் மகிழ்ச்சியோடிருக்க, கயிலையின்கண் அமர்தல்போல் இருத்தலும்—திருக்கைலாயத்தில் எழுந்தருளியிருப்பதுபோல எழுந்தருளியிருப்ப, பயிலும் அன்புடை மன்னவன் கண்டான் பரவசமானுன்—முன்னமே பயிலாநின்ற அன்பினையுடைய முசுகுந்தச் சக்கரவர்த்தி அத் திருக் கோலத்தைத் தன் கண்களாற் கண்டான் கண்ட மாத்திரத்தே பரவச மாயினுன். (57)

ஆடி ளுன்றொழு தேத்தின னடிகளை முடிமேற்
சூடி ளுனுள முருகினன் றுள்ளினன் சுருதி
பாடி ளுன்கரங் கொட்டினன் பகரொணு வுவகை
கூடி ளுன்மொழி குழறினன் பொடிப்புமெய் கொண்டான்.

ஆடினன்—பரவசனுன முசுகுந்தச்சக்கரவர்த்தி ஆனந்த மேலிட்டுக் கூத்தாடினன்; தொழுது ஏத்தினன்—வணங்கித் துதித்தான்; அடிகளை முடிமேல் சூடினன்—திருவடிகளைத் தனது முடிமீது சூடினன்; உளம் உருகினன்—மனம் நெக்குநெக்குருகினன்; துள்ளினன்—மேலெழுந்து துள்ளினன்; சுருதி பாடினன்—வேத கீதங்களைப் பாடினன்; கரம் கொட்டினன்—கைகளை ஒன்றோடொன்று கொட்டினன்; பகர் ஒணு உவகை கூடினன்—சொல்லவொண்ணுத உவகையுந் தானுமாயினன்; மொழி குழறினன்—உரை தடுமாறினன்; மெய் பொடிப்பு கொண்டான்—உடல் புளகங் கொண்டான்.

மெய்த்தொண்டரன்பு வெளிப்பட்டவாறு. (58)

சிறந்த வெள்ளியங் கிரியின்மேற் கண்ணுதற் செல்வ
னுறைந்த விப்பெருங் கோலத்தைக் கண்டுகண் டுளத்தே
நிறைந்த மாமகிழ் வெய்தியே யிருந்தன னெடுநாண்
மறந்த னன்கொலோ பிறப்பினுன் மயங்கியே யென்றான்.

சிறந்த வெள்ளியம் கிரியின்மேல்—பல்லாற்ருனுஞ் சிறந்த திருக்கைலாச மலையின்கண்ணே, கண்ணுதற் செல்வன் உறைந்த இ பெரும் கோலத்தைக் கண்டு கண்டு—நெற்றிக்கண்ணையுடைய அருட்செல்வராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளிய இந்தப் பெருமை பொருந்திய திருக்கோலத்தைத் தரிசித்துத் தரிசித்து, உளத்து நிறைந்த மா மகிழ்வு எய்தி இருந்தனன்—மனத்தில் நிறைந்த மிக்க மகிழ்ச்சியெய்தியிருந்தோனுகிய யான், பிறப்பினுல் மயங்கி—பிறவியுட் புகுந்து அதனுல் மயங்கி, நெடுநாள் மறந்தனன் கொல்—நெடுங்காலம் எம்பெருமானை மறந்து இருந்துவிட்டேன்போலும்; என்றான்—என்றிரங்கினன். (59)

ஓவி லாமலே யொருபொருள் போற்றுவா னுன்னி
மேவு கின்றவ னவசமாய் விழிதுயின் றதுபோன்
மாவின் மாமுகம் வாங்கியு மயங்கிய மன்னன்
றேவ தேவனை நோக்கியே தொழுதிவை செப்பும்.

ஒரு பொருள்—தான் பெற்றதொரு பொருளை, ஓவிலாமல்—உறக்கம் முதலிய ஒய்வு இல்லாமல், போற்றுவான்—பாதுகாத்துக் கொண்டிருப்பவன், உன்னி மேவுகின்றவன்—அப்பொருளையே நினைத்துக்கொண்டிருக்கின்றவன், அவசமாய்—இடையில் அவசமுற்று, விழி துயின்றதுபோல்—நித்திரை செய்தது

போல, மாவின் மாமுகம் வாங்கியும்—சிவபெருமானை மறவாதிருக்கும் பொருட்டு விலங்காகிய முசுவின் முகத்தைக் கேட்டுப் பெற்றிருந்தும், மயங்கிய மன்னன்—பிறப்பினுல் இடையில் மயங்கி அத்திருக்கோலத்தைச் சிறிது மறந்திருந்த முசுகுந்தச் சக்கரவர்த்தி, தேவ தேவனை நோக்கி—மகாதேவராகிய தியாகேசரை நோக்கிக்கொண்டு, தொழுது இவை செப்பும்—வணங்கி இவ்வாறு துதிப்பானுயினுன். *(60)*

**வேறு**

ஏகனே போற்றி யார்க்கு மீசனே போற்றி யம்மை
பாகனே போற்றி மேலாம் பரஞ்சுட ருருவே போற்றி
மேகமார் களனே போற்றி விடைமிசை வருவாய் போற்றி
மோகமார் தக்கன் வேள்வி முடித்திடு முதல்வா போற்றி.

ஏகனே போற்றி—ஏக வஸ்துவாயிருப்பவரே தேவரீருக்கு வணக்கம்; யார்க்கும் ஈசனே போற்றி—யாவர்க்குந் தலைவரே வணக்கம்; அம்மை பாகனே போற்றி—உமையொருபாகரே வணக்கம்; மேலாம் பரஞ்சுடர் உருவே போற்றி—எவற்றிற்கும் மேலாகிய பரஞ்சோதி வடிவினரே வணக்கம்; மேகம் ஆர் களனே போற்றி—மேகம் போன்ற நீலகண்டத்தையுடையவரே வணக்கம்; விடை மிசை வருவாய் போற்றி—இடபத்தில் எழுந்தருளுபவரே வணக்கம்; மோகம் ஆர் தக்கன் வேள்வி முடித்திடு முதல்வா போற்றி—மயக்கம் நிறைந்த தக்கனது யாகத்தை அழித்தருளிய முதல்வரே வணக்கம். *(61)*

அம்புயா சனன்மா லின்னு மளப்பருந் திறத்தாய் போற்றி
நம்பனே போற்றி யெங்க ணுதனே போற்றி கோதில்
செம்பொனே மணியே போற்றி சிவபெரு மானே போற்றி
யெம்பிரான் போற்றி முக்க ணிறைவனே போற்றி போற்றி.

அம்புயாசனன் மால் இன்னும் அளப்பு அரும் திறத்தாய் போற்றி—பிரம விஷ்ணுக்கள் இன்னமும் அளந்து அறிதற்கரிய இயல்பினையுடையவரே வணக்கம்; நம்பனே போற்றி—விரும்புதற்குரியவரே வணக்கம்; எங்கள் நாதனே போற்றி—பசுபதியே வணக்கம்; கோது இல் செம்பொனே மணியே போற்றி—குற்றமற்ற செம்மையாகிய சாம்பூநதம் என்னும் பொன்னே மாணிக்கமணியே வணக்கம்; சிவபெருமானே போற்றி—சிவபெருமானே வணக்கம்; எம்பிரான் போற்றி—எங்கள் பெருமானே வணக்கம்; முக்கண் இறைவனே போற்றி போற்றி—மூன்று கண்களையுடைய இறைவரே வணக்கம் வணக்கம். *(62)*

பொங்கரா வணிக ளாகப் புனைதரு புனிதா போற்றி
யங்கரா கத்திற் பூதி யணிந்திடு மாதி போற்றி
வெங்கரா சலத்தின் வன்றோல் வியன்புயம் போர்த்தாய் போற்றி
சங்கரா பரமா போற்றி தாணுவே போற்றி போற்றி.

பொங்கு அரா அணிகளாகப் புனைதரு புனிதா போற்றி—சீறுகின்ற சர்ப் பங்களை ஆபரணமாக அணிகின்ற மகா புனிதரே வணக்கம்; அங்கராகத்தின் பூதி அணிந்திடும் ஆதி போற்றி—மெய்க்கட் பூசும் பரிமள திரவியத்தைப் போல விபூதியை அணிந்தருளும் முதல்வரே வணக்கம்; வெங்கராசலத்தின் வன் தோல் வியன் புயம் போர்த்தாய் போற்றி—கொடிய கைம்மலையாகிய யானையின் வலிய தோலைப் பெரிய புயத்திற் போர்த்தியருளியவரே வணக்கம்; சங்கரா போற்றி—சுகஞ்செய்பவரே வணக்கம்; பரமா போற்றி—பதியே வணக்கம்; தாணுவே போற்றி போற்றி—என்றும் அழியாத நிலைப்பொருளே வணக்கம் வணக்கம்.

அங்கராகம்—பரிமளத்திரவியங்களை உடம்பிற் பூசுதல். (63)

முன்னெனும் பொருளுக் கெல்லா முன்னவா போற்றி முப்பான்
மன்னுயிர்க் குயிரே போற்றி மறைகளின் முடிவே போற்றி
யென்னைமுன் வலிந்தாட் கொண்டே யிருநிலம் விடுத்தாய் போற்றி
நின்னுருக் காட்டி யென்னை நினைப்பித்த நித்தா போற்றி.

முன் எனும் பொருளுக்கு எல்லாம் முன்னவா போற்றி—முன்னைப் பழம் பொருளுக்கு முன்னைப் பழம்பொருளே வணக்கம், முப்பால் மன் உயிர்க்கு உயிரே போற்றி—விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் ஆகிய மூவகை ஆன் மாக்களுக்கும் பரமான்மாவாயிருப்பவரே வணக்கம்; மறைகளின் முடிவே போற்றி—வேதங்களின் சிரசாகிய உபநிடதப்பொருளே வணக்கம்; என்னை முன் வலிந்து ஆட்கொண்டு—என்னை முன் கைலாச கிரியின்கண்ணே வலிந்து தடுத்தாட்கொண்டு, இரு நிலம் விடுத்தாய் போற்றி—பெரிய பூமிக்கட் செல்ல விடுத்தருளியவரே வணக்கம், நின் உரு காட்டி—என்னைத் தடுத் தாட்கொண்ட உம்முடைய பழைய வடிவத்தைக் காட்டி, என்னை நினைப் பித்த—மறந்திருந்த என்னை நினைக்கும்படி செய்த, நித்தா போற்றி—நித்தி யரே வணக்கம். (64)

எவ்வெவர் தம்மை யேனும் யாவரே யெனினும் போற்றி
னவ்வவ ரிடமாக் கொண்டே யவர்க்கரு டருவாய் போற்றி
மெய்வரு தெளிவி லுன்னை வெளிப்பட வுணர்ந்து ளோர்க்குத்
தெய்வத போக முத்தி சிறப்பொடு தருவாய் போற்றி.

யாவரே எனினும்—எத்தகையோராயினும், எவ்வெவர் தம்மையேனும் போற்றின்—எவ்வெத் தேவர்களையாயினும் வழிபடின், அவ்வவர் இடமாக் கொண்டு—அவ்வத் தேவரை அதிட்டித்து நின்று, அவர்க்கு அருள் தருவாய் போற்றி—அவ்வத் தேவரை வழிபட்டார்க்கு அருள் புரிபவரே வணக்கம்; மெய் வரு தெளிவில்—மெய்ம்மைத் தெளிவாகிய பதி ஞானத்தினால், உன்னை வெளிப்பட உணர்ந்துளோர்க்கு—தேவரீரை ஐயந் திரிபின்றி வெளிப்பட உணர்ந்த மெய்ஞ்ஞானிகளுக்கு, தெய்வத போகம் முத்தி—தெய்வத்தன்மை பொருந்திய சிவபோகத்தையும் பரமுத்தியையும், சிறப்பொடு தருவாய் போற்றி—சிறப்பாக அருள்பவரே வணக்கம். (65)

அம்புய மலர்மே லண்ண லச்சுத ஞதி வானோர்
தம்பத மெமக்கு நல்குந் தற்பரா வென்றே யாரு
நம்புறு பொருட்டால் வேத நவின்றிட வடைந்தோர்க் கெல்லா
வும்பர்தம் பதமு மீயு முலகுடை முதல்வா போற்றி.

அடைந்தோர்க்கு—தம்மைச் சரணடைந்தவர்களுக்கு, அம்புய மலர் மேல் அண்ணல் அச்சுதன் ஆதி வானோர் தம்பதம்—தாமரை மலரிலிருக்கும் பிரமதேவர் திருமால் முதலிய தேவர்களுடைய பதங்களை, எமக்கும் நல்கும் தற்பரா என்று—எம்மனோர்க்கும் வழங்குகின்ற தற்பரரேயென்று, வேதம் நவின்றிட—வேதமந்திரங்களைச் சொல்லி அவர்கள் வழிபட, எல்லா உம்பர் தம் பதமும்—பிரம விஷ்ணுக்கள் முதலிய எல்லாத் தேவர்களின் பதங்களையும், யாரும் நம்புறு பொருட்டு—தம்மை நம்பினோர் கைவிடப்பட்டார் என்பதை உலகத்தாரனைவரும் நம்பும்பொருட்டு, ஈயும்—தம்மையடைந்தோராய் விரும்பியோர் விரும்பிய பதங்களை ஈந்தருள்புரியும், உலகு உடை முதல்வா போற்றி—உலகத்தை உடைமையாக உடைய முதல்வரே வணக்கம்.

அடைந்தோர்க்கு, என்று, நவின்றிட, நம்புறுபொருட்டு ஈயும் என்க.

இச்செய்யுளுக்குப் பிறவாறும் உரைப்பர். (66)

உறைதரு மமரர் யாரு முழையராய்ச் சூழ நாப்பண்
மறைபயில் பெரியோ ருற்று வழிபட விருந்தாய் போற்றி
யறுவகை யைந்து மாறு மாகிய வரைப்பின் மேலா
மிறைவனே போற்றி போற்றி யென்பிழை பொறுத்தி யென்றான்.

உறைதரும் அமரர் யாரும் உழையராய்ச் சூழ—தத்தம் பதங்களில் உறைகின்ற தேவர்களெல்லாம் அணுக்கத் தொண்டராய்ச் சூழ, நாப்பண்—அவர்களுக்கு மத்தியில், மறை பயில் பெரியோர் உற்று வழிபட இருந்தாய் போற்றி—வேதத்தைப் பயின்ற பெரியோர்கள் அடைந்து வழிபாடு செய்ய வீற்றிருந்தருளியவரே தேவரீருக்கு வணக்கம்; அறுவகை ஐந்தும் ஆறும் ஆகிய வரைப்பின் மேலாம் இறைவனே போற்றி போற்றி—முப்பத்தாறாகிய எல்லையினையுடைய தத்துவங்களுக்கு மேலாகிய தத்துவாதீதரே தேவரீருக்கு வணக்கம் வணக்கம்; என் பிழை பொறுத்தி என்றான்-பிறப்பினால் மறந் திருந்த என் பிழையைப் பொறுத்தருள்க என்று பிரார்த்தித்தான்.

போற்றி என்பதற்குப் பாதுகாத்தருள்க என்பதும் பொருளாம். (67)

இவைமுசு குந்தன் கூற வெம்பிரான் கருணை செய்தே
யவன்முகந் தன்னை நோக்கி யாழியா னளப்பில் கால
முவகையால் வழிபா டாற்றி யும்பர்கோ னிடத்தில் வைத்தான்
புவிதனிற் கொடுபோய் நம்மைப் பூசனை புரிதி யென்றான்.

இவை முசுகுந்தன் கூற—இத் தோத்திரங்களை முசுகுந்தன் சொல்லித் துதித்து நிற்க, எம்பிரான் கருணை செய்து—எம்பெருமான் முசுகுந்தனுக்குக் கருணை செய்து, அவன் முகம் தன்னை நோக்கி—அந்த முசுகுந்தனது முகத்தைப் பார்த்தருளி, ஆழியான் அளப்பில் காலம் உவகையால் வழிபாடு ஆற்றி—சக்கரத்தினையுடைய திருமால் அளவில்லாத காலம் மனமகிழ்ச்சியோடு பூசனை செய்து, உம்பர்கோன் இடத்தில் வைத்தான்—பின்பு தேவேந்திரனிடம் நம்மை வைத்தான்; நம்மைப் புவிதனில் கொடுபோய்—முசுகுந்தனே நீ நம்மைப் பூமிக்குக் கொண்டு சென்று, பூசனை புரிதி என்றான்—பூசிப்பாயாக என்று அருள் புரிந்தார். (68)

என்றிவை முக்கண் மூர்த்தி யிந்திரன் கேளா வண்ண
நன்றருள் புரித லோடு நனிபெரு மகிழ்ச்சி யெய்தி
யுன்றிரு வுளமீ தாயி னுய்ந்தன னடியே னென்னு
வென்றிகொண் மன்னர் மன்னன் விம்மித னாகி யுற்றான்.

என்று இவை—என்று இவைகளை, முக்கண் மூர்த்தி—தியாகேசப் பெருமான், இந்திரன் கேளாவண்ணம் நன்று அருள் புரிதலோடும்—இந்திரன் கேளாத பிரகாரம் நன்கு திருவாய்மலர்ந்தருளுதலும், நனி பெரு மகிழ்ச்சி எய்தி—முசுகுந்தன் மிக்க பெருமகிழ்வு கொண்டு, உன் திருவுளம் ஈதாயின்—தேவரீரின் திருவுள்ளம் இதுவானால், அடியேன் உய்ந்தனன் என்னு—அடியேன் உய்ந்தேன் என்று, வென்றி கொள் மன்னர் மன்னன்—வெற்றி பொருந்திய முசுகுந்தச் சக்கரவர்த்தி, விம்மிதன் ஆகி உற்றான்—ஆச்சரியம் அடைந்தவனாய் நின்றான்.

மன்னன் எய்தி என்னு ஆகி உற்றான். (69)

இந்திர னமலன் பூசை யிவ்வழி முடித்த பின்னர்ச்
செந்தழ லோம்பி யேனைச் செய்கடன் புரிந்து வேறோர்
மந்திரம் புகுந்து தேனு வருகென வல்லை கூவி
வெந்திறன் மன்னற் கந்நாள் விருந்துசெய் வித்தா னன்றே.

இந்திரன் அமலன் பூசை இவ்வழி முடித்த பின்னர்—இந்திரன் சிவ பூசையை இவ்வாறாக முடித்த பின்பு, செந்தழல் ஓம்பி—அக்கினி காரியஞ் செய்து, ஏனை செய் கடன் புரிந்து—ஏனைய செய்யக்கடவ கடன்களையுஞ் செய்து, வேறு ஓர் மந்திரம் புகுந்து—மற்றொரு மாளிகையை அடைந்து, தேனு வருக என வல்லை கூவி—காமதேனுவை வருக என்று விரைந்தழைத்து, வெம் திறல் மன்னற்கு—விரும்பத்தக்க வலியினையுடைய முசுகுந்தச் சக்கர வர்த்திக்கு, அ நாள்—அத்தினத்தில், விருந்து செய்வித்தான்—காமதேனுவைக் கொண்டு விருந்து செய்வித்தான். (70)

விருந்துசெய் வித்த பின்னர் விசித்திரக் கலையும் பூணுந்
தெரிந்திடு மணியு முத்துந் தெய்வதப் படையு மற்றும்
பரிந்துட னுதவி யின்னும் வேண்டுவ பகர்தி யென்னப்
புரந்தர னருள லோடும் புரவல னிதனைச் சொல்வான்.

விருந்து செய்வித்த பின்னர்—விருந்து செய்வித்த பின்பு, விசித்திரக் கலையும்—விசித்திரமான வஸ்திரங்களையும், பூணும்—ஆபரணங்களையும், தெரிந்திடு மணியும்—குற்றமறத் தெரிந்தெடுத்த இரத்தினங்களையும், முத்தும்—முத்துக்களையும், தெய்வதப் படையும்—தெய்வப் படைகளையும், மற்றும்—பிறவற்றையும், பரிந்து உடன் உதவி—அன்பு கூர்ந்து அப்பொழுது கொடுத்து, இன்னும் வேண்டுவ பகர்தி என்ன—இன்னும் வேண்டுவனவற்றை உரைப்பாயாக என்று, புரந்தரன் அருளலோடும் புரவலன் இதனைச் சொல்வான்—இந்திரன் கூற முசுகுந்தச் சக்கரவர்த்தி இதனைச் சொல்லுவான். (71)

ஏவருந் தெரித றேற்று திருந்திடு மிமையா முக்கட்
பாவையோர் பாகன் றன்னைப் பரிவொடு கொடுத்தி யைய
பூவுல கதனின் யான்போய்ப் பூசனை புரிதற் கென்னத்
தேவர்கண் முதல்வன் கேளா வினையன செப்ப லுற்றான்.

ஏவரும் தெரிதல் தேற்றாது இருந்திடும் இமையா முக்கண் பாவையோர் பாகன் தன்னை—எவர்களாலுந் தெளிந்தறிய ஒண்ணாமலிருக்கின்ற இமையாத மூன்று கண்களையுடைய உமாதேவியாரை ஒருபாகத்திலே பொருந்திய சிவபெருமானை, பரிவொடு ஐய கொடுத்தி—விருப்பத்தோடும் ஐயனே எனக்கு அளிப்பாயாக; பூவுலகு அதனில் யான் போய் பூசனை புரிதற்கு என்ன—பூவுலகின்கண் யான் கொண்டுபோய்ப் பூசனை செய்யும்பொருட்டு என்று கேட்ப, தேவர்கள் முதல்வன் கேளா—அதனைத் தேவேந்திரன் கேட்டு, இனையன செப்பல் உற்றான்—இவற்றைச் சொல்லுவான் ஆயினன். (72)

உந்தியா லுலகைத் தந்த வொருதனி முதல்வன் முன்ன
மைந்தர்தா மின்மை யாலே மன்னுயிர்த் தொகுதிக் கெல்லாந்
தந்தையா யிருந்த தங்கோன் சரணமே யரண மென்னுச்
சிந்தைசெய் தூழி காலஞ் செய்தவ மியற்றி யிட்டான்.

உந்தியால் உலகைத் தந்த ஒரு தனி முதல்வன்—தமது உந்திக்கமலத்தால் உலகத்தைப் படைத்துதவிய ஒரு தனி முதல்வராகிய திருமால், முன்னம் மைந்தர்தாம் இன்மையாலே—முன்பு புத்திரரின்மையால், மன் உயிர்த் தொகுதிக்கு எல்லாம் தந்தையாய் இருந்த தங்கோன் சரணமே அரணம் என்னு சிந்தை செய்து—நிலைபெற்ற உயிர்த்தொகுதி அனைத்துக்கும் பிதாவாயிருந்த தந் தலைவராகிய சிவபெருமானுடைய திருவடிகளையே புகலிடமென்று

தியானஞ் செய்து, ஊழி காலம் செய்தவம் இயற்றியிட்டான்–ஊழி காலம் செய்யப்படுவதாகிய தவத்தைச் செய்தார்.

ஊழிகாலம் அநேக காலம் என்னும் பொருட்டு. (73)

தவமுழந் திருந்த காலைச் சாரதப் புணரி சுற்றக்
கவுரியுந் தானு மையன் கருணையால் வந்து தோன்றப்
புவிதனை யளந்த மாயோன் பொள்ளென வெழுந்து போற்றிச்
சிவனடி வணக்கஞ் செய்து செங்கையாற் றொழுது நின்றான்.

தவம் உழந்து இருந்த காலை–திருமால் தவஞ்செய்திருந்த காலத்தில், சாரதப் புணரி சுற்ற–பூத சமுத்திரஞ் சூழ, ஐயன் கவுரியும் தானும் கருணையால் வந்து தோன்ற–சிவபெருமான் உமாதேவியாருந் தாமுமாய்க் கருணையோடு எழுந்தருளி வர, புவிதனை அளந்த மாயோன் பொள் என எழுந்து போற்றி–உலகத்தை அளந்த திருமால் விரைந்து எழுந்து துதித்து, சிவன் அடி வணக்கம் செய்து–சிவபெருமானது திருவடியை வணங்கி, செங்கையால் தொழுது நின்றான்–சிவந்த கைகளைக் கூப்பி நின்றார். (74)

**வேறு**

மாதொரு பாகன் மகிழ்ந்தருள் செய்து
நீதவ மாற்றி நெடும்பக னின்றா
யேதிவண் வேண்டு மியம்புதி யென்னச்
சீதர னின்னன செப்புத லுற்றான்.

மாதொரு பாகன் மகிழ்ந்து அருள்செய்து–மாதொரு பாகராகிய சிவபெருமான் மகிழ்ந்து அருள்புரிந்து, நீ நெடும் பகல் தவம் ஆற்றி நின்றாய்–நீ நீண்டகாலந் தவஞ்செய்தாய்; இவண் ஏது வேண்டும் இயம்புதி என்ன–இங்கே உனக்கு யாது வேண்டும் கூறுதி என்று திருவாய் மலர்ந்தருள, சீதரன் இன்னன செப்புதல் உற்றான்–திருமால் இவற்றைச் சொல்லுவாராயினர். (75)

அந்தமி லாயுவு மாருயிர் காப்புஞ்
செந்திரு வோடுறை செல்வமு மீந்தாய்
மைந்தனி லாமல் வருந்தினெ னெந்தாய்
தந்தரு ளாய்தமி யேற்கினி யென்றான்.

அந்தம் இல் ஆயுவும்–நீண்ட ஆயுளையும், ஆர் உயிர் காப்பும்–அரிய உயிர்களைக் காக்குந் தொழிலையும், செந்திருவோடு உறை செல்வமும் ஈந்தாய்–செந்திருவாகிய இலக்குமியோடு உடனுறைகின்ற செல்வத்தையும் ஈந்தருளினீர்; மைந்தன் இலாமல் வருந்தினன்–அடியேனுக்கு எவ்வித குறையும் இல்லையாயினும் புத்திரப்பேறின்றி வருத்தமுற்றேன்; எந்தாய்–

எந்தையே, தமியேற்கு இனி தந்தருளாய் என்ருன்—தமியேனுக்கு இனி அந்தச் செல்வத்தையுந் தந்தருள்க என்று வேண்டினர். (76)

குன்றினை யாற்றிடு கோனிவை செப்ப
நன்றென வேநகை யாநவை யில்லா
வொன்ருெரு செம்ம லுனக்குத வுற்ரு
மென்றருள் செய்தனன் யாரினு மேலோன்.

குன்றினை ஆற்றிடு கோன் இவை செப்ப—கோவர்த்தன மலையைக் குடையாக எடுப்பவரான திருமால் இவற்றைக் கூற, யாரினும் மேலோன்—யாவரினும் மேலானவராகிய சிவபெருமான், நன்று என நகையா—நன்று என்று சிரித்தருளி, நவை இல்லா ஒன்று ஒரு செம்மல் உனக்கு உதவுற்ரும் என்று அருள் செய்தனன்—குற்றமில்லாத ஓர் ஆண்மகவை உனக்குத் தந்தோம் என்று திருவருள் புரிந்தார். (77)

கழையிசை போற்று கருங்கடல் வண்ணன்
முழுதுல கீன்றிடு முற்றிழை பாதந்
தொழுதில னின்று துதித்தில னன்பால்
வழிபடு நீரின் வணங்கிலன் மாதோ.

கழை இசை போற்று கருங்கடல் வண்ணன்—வேய்ங்குழலிசையைப் போற்றுகின்ற கரிய கடல்வண்ணரான திருமால், முழுது உலகு ஈன்றிடும்—உலகம் முழுவதையும் பெற்றருளுகின்ற, முற்றிழை பாதம் தொழுதிலன்—தொழில் முற்றுப்பெற்ற ஆபரணங்களை அணிந்த உமாதேவியாரின் பாதங்களை வணங்கினுரல்லர்; அன்பால் நின்று துதித்திலன்—அன்பினலே எதிரில் நின்று துதித்தாருமல்லர்; வழிபடு நீரின் வணங்கிலன்—வழிபடும் முறையில் எதுவுஞ் செய்திலர். (78)

வேறு

முறையி ஞற்றனக் கிளையவ ளென்றே
முன்னி னன்கொலோ மூலமு நடுவு
மிறுதி யும்மிலாப் பரமனுக் கெம்போ
லிவளு மோர்சத்தி யெனநினைந் தனனே
மறுவி லாமலை மகளென வுளத்தே
மதித்த னன்கொலோ மாயவன் கருத்தை
யறிகி லேமும்ம யம்மைபாற் சிறிது
மன்பு செய்திலன் முன்புசெய் வினையால்.

முறையினுல் தன்க்கு இளையவள் என்று முன்னினன் கொலோ—முறையினலே தமக்குத் தங்கையென்று கருதினரோ; மூலமும் நடுவும் இறுதியும்

இலாப் பரமனுக்கு—முதலும் நடுவும் இறுதியுமில்லாத சிவபெருமானுக்கு, எம்போல் இவளும் ஓர் சத்தி என நினைந்தனனே—எம்மைப்போல இந்த உமா தேவியாரும் ஒரு சத்திதானே என்று கருதினரோ; மறுவிலா மலைமகளென உளத்தே மதித்தனன் கொலோ—மறுவற்ற மலையரசனுக்கு மகள் என்று மனத்திற் கருதினரோ; மாயவன் கருத்தை அறிகிலேம்—மாயவன் கருத்தை அறியோம்; முன்பு செய்வினையால் உமையம்மைபால் சிறிதும் அன்பு செய்திலன்—முன் செய்த வினையால் உமாதேவியாரிடத்துச் சிறிதாயினும் அன்பு செய்தாரல்லர். (79)

ஆன்ற வைம்புல னொருவழிப் படுத்தி
யார்வம் வேரறுத் தையமொன் றின்றி
யூன்றி ரிந்திடி னுந்நிலை திரியா
வுண்மை யேபிடித் துலகங்கண் முழுது
மீன்ற வெம்பெரு மாட்டியை நீக்கி
யெம்பி ரானையே வழிபடு மியற்கை
மூன்று தாளுடை யொருவனுக் கல்லா
லேனை யோர்களாற் முடியுமோ முடியா.

ஆன்ற ஐம்புலன் ஒருவழிப் படுத்தி—விரிந்த ஐம்புலங்களை ஒரு நெறிப் படுத்தி, ஆர்வம் வேர் அறுத்து—ஆசை வேரை அறுத்து, ஐயம் ஒன்று இன்றி—சந்தேகஞ் சிறிதும் இன்றி, ஊன் திரிந்திடினும் நிலைதிரியா—உடல் திரிந்தவழியும் நிலையிற் பிரியாது, உண்மையே பிடித்து—சத்தியத்தையே கடைப்பிடித்து, உலகங்கள் முழுதும் ஈன்ற எம்பெருமாட்டியை நீக்கி—உலகங் களை ஈன்றருளிய எம்பெருமாட்டியாகிய சிவசத்தியைப் பேதஞ்செய்து வழிபடுதலை விட்டு, எம்பிரானையே வழிபடும் இயற்கை—சிவசத்தியோடபின்ன மாகிய சிவபெருமானையே வழிபடும் உண்மை இயல்பு, மூன்று தாளுடை ஒருவனுக்கு அல்லால்—மூன்று கால்களையுடைய ஒருவராகிய பிருங்கி என்னும் முனிவருக்கன்றி, ஏனையோர்களால் முடியுமோ முடியா—விகற்ப புத்திமான் களால் இயலுமோ இயலாது. (80)

அன்ன காலையி லெம்பெரு மாட்டி
யாழி யம்படை யண்ணலை நோக்கி
யென்னை நீயிவ ணவமதித் தனையா
லெம்பி ராற்குநீ யன்புள னன்றுன்
முன்ன நீபெறு மதலையு மையன்
முனிவி னெல்லையின் முடிந்திட வென்னுப்
பன்ன ருங்கொடு மொழிதனை யியம்பிப்
பராப ரன்றனை நோக்கியே பகர்வாள்.

அன்ன காலையில்—அப்பொழுது, எம் பெருமாட்டி ஆழி அம்படை அண்ணலை நோக்கி—எம் பெருமாட்டி சக்கரப்படையையுடைய திருமாலை நோக்கி, நீ இவண் என்னை அவமதித்தனை—நீ இவ்விடத்திற் சிவத்தோடபின்னமாகிய என்னை அவமதித்தாய்; ஆல்—ஆதலால், எம்பிராற்கு நீ அன்புளன் அன்று—எம்பெருமானுக்கு நீ அன்புடையையுமல்லை; முன்னம்—சிறிது முன்பு, நீ பெறும் மதலையும்—நீ சிவபெருமானிடம் பெருநின்ற புதல்வனும், ஐயன் முனிவினல் ஒல்லை முடிந்திட என்று—சிவபெருமானது கோபத்தினல் விரைவில் அழிக என்று, பன்னரும் கொடு மொழிதனை இயம்பி—சொல்லுதற்கரிய கொடிய சாபமொழியைப் பகர்ந்து, பராபரன் தனை நோக்கிப் பகர்வாள்—சிவபெருமானை நோக்கிக் கூறுவார். (81)

ஆன தோர்பரப் பிரமமும் யானே
யல்ல தில்லையென் றறிவிலாப் பேதை
மானு டப்பெரும் பசுக்களை யெல்லா
மருட்டி யேதிரி வஞ்சகன் முன்ன
ஞான நீரினு ரறிவினு லன்றி
நணுகு ருதநீ யணுகிநிற் பதுவோ
வூனு லாவிய வுயிரினுக் குயிரா
மொருவ செல்லுதும் வருகென வுரைத்தாள்.

ஆனதோர் பரப்பிரமமும் யான் அல்லது இல்லை என்று—பதிலக்கணமனைத்தும் நிறைவானதொரு பரப்பிரமமும் என்னையன்றி வேறில்லை என்று, அறிவிலா பேதை மானுடப் பெரும் பசுக்களை எல்லாம்—அறிவற்ற பேதைகளான மிக்க மானுடப் பசுவர்க்கங்களை எல்லாம், மருட்டியே திரி வஞ்சகன் முன்னம்—மருட்டித் திரிகின்ற வஞ்சகனுகிய இம் மாயோன் முன்னிலையில், ஞான நீரினர் அறிவினல் அன்றி நணுகுருத நீ—மகா ஞானிகள் தம் அறிவினலன்றி அணுகுதற்கரிய தேவரீர், அணுகி நிற்பதுவோ—அணுகி நிற்பது தகுதியாமோ; ஊன் உலாவிய உயிரினுக்கு உயிராம் ஒருவ—உடம்பிற் பொருந்திய ஆன்மாவுக்குப் பரமான்மாவாயிருக்கும் ஒரு தனிக்கடவுளே, செல்லுதும் வருக என உரைத்தாள்—இவ்விடத்தை விட்டகன்று செல்வோம் எழுந்தருள்க என்று கூறினர். (82)

இன்ன வாறுரைத் தெம்பெரு மாட்டி
யெம்பி ரான்றனைக் கொண்டுபோ மளவி
லன்ன தன்மைகண் டச்சுதக் கடவு
ளலக்க ணெய்தியே யச்சமுற் றயர்ந்து
தன்னு ளந்தடு மாறிமெய் பனித்துத்
தளர்ந்து நேமியந் தண்கரைக் கணித்தாய்
மன்னு பல்பொருட் கலந்தனைக் கவிழ்த்த
வணிக னுமென வருந்தினன் மாதோ.

இன்னவாறு உரைத்து—இவ்வாறு கூறி, எம்பெருமாட்டி எம்பிரான் தனைக் கொண்டுபோம் அளவில்—உலகமாதா பரமபிதாவை அழைத்துக் கொண்டு செல்லும்போது, அச்சுதக் கடவுள் அன்ன தன்மை கண்டு—திருமால் அத்தன்மையைப் பார்த்து, அலக்கண் எய்தி—துன்பமுற்று, அச்சம் உற்று—அஞ்சி, அயர்ந்து—சோர்ந்து, தன் உளம் தடுமாறி—தமது மனந் தடுமாறி, மெய் பனித்து—மெய்ந் நடுங்கி, தளர்ந்து—தளர்ச்சியுற்று, நேமி அம் தண் கரைக்கு அணித்து ஆய்—சமுத்திரத்தின் அழகிய தண்ணிய கரைக்கு அணிமைக் கண் அடைந்து, மன்னு பல் பொருள் கலம் தனை கவிழ்த்த—நிலைபெற்ற பல வாகிய பொருள்கள் நிரம்பிய மரக்கலத்தைக் கவிழ விட்ட, வணிகனும் என—வணிகனைப்போல, வருந்தினன்—வருத்தமடைந்தார். (83)

அம்மை தன்பொருட் டாலிடை யூறிங்
கடைந்த தென்றுமா லகந்தனி லுன்னி
யெம்மை யாளுடை யிறையவன் றனையு
மிறைவி தன்னையு மிளங்கும ரனையு
மெய்ம்மை சேர்வடி வாகவாங் கமைத்து
வேத வாகம விதிமுறை வழாமற்
பொய்ம்மை தீர்ந்திடு மன்பினாற் பூசை
புரிந்து பின்னரும் வருந்தியே நோற்றான்.

அம்மை தன் பொருட்டால்—உமாதேவியாரை வணங்காத காரணத்தால், இங்கு இடையூறு அடைந்தது என்று மால் அகந்தனில் உன்னி—இங்கு இடையூறு உண்டாயது என்று திருமால் மனத்தின்கண் நினைந்து, எம்மை ஆள் உடைய—எம்மை ஆளாக உடைய, இறையவன் தனையும் இறைவி தன்னையும் இளங் குமரனையும்—சிவபெருமானையும் உமாதேவியாரையும் என்றும் இளையோ ராகிய கந்தசுவாமியையும், மெய்ம்மை சேர் வடிவாக ஆங்கு அமைத்து—மெய்ம்மையின் கூட்டரவாகிய சோமாஸ்கந்த மூர்த்தமாக ஆங்குத் தாபித்து, வேத ஆகம விதிமுறை வழாமல்—வேதாகம விதிமுறைகள் வழுவாமல், பொய்ம்மை தீர்ந்திடும் அன்பினால்—மெய்யன்பினால், பூசை புரிந்து—பூசையைச் செய்துகொண்டு, பின்னரும்—அதன் மேலும், வருந்தி நோற்றான்—வருந்தித் தவஞ்செய்வாராயினார்.

தேவியின் பிரீதி அதிகரித்தற்கும் புத்திரப்பேறு சித்தித்தற்கும் இளங் குமரனையுஞ் சேர்த்து வழிபடுவாராயினாரென்க. (84)

**வேறு**

அனைய தன்மையா லாண்டுபல் லாயிர கோடி
புனித னாகியே நோற்றன னதுகண்டு புழுங்கி
முனிவ ராயுளோ ரின்னமும் வருகிலன் முதல்வ
னினிய ருந்தவஞ் செய்பவ ரில்லையா லென்றார்.

அனைய தன்மையால் ஆண்டு பல்லாயிர கோடி புனிதன் ஆகி நோற்றனன்—அவ்விதமாகப் பல்லாயிரகோடி வருடந் திருமால் பரிசுத்தராய்த் தவமிருந்தார்; முனிவராயுளோர் அது கண்டு—நோற்றலில் வல்ல முனிவர்கள் அக் கடுந் தவத்தைக் கண்ணுற்று, புழுங்கி—சிவபெருமானருளாமை குறித்து மனம் புழுங்கி, முதல்வன் இன்னமும் வருகிலன்—சிவபெருமான் இன்னமும் வருகிலர்; இனி அருந்தவம் செய்பவர் இல்லை என்றார்—இங்ஙனமாயின் இனி அரிய தவத்தைச் செய்பவர் இலர் ஆவர் என்றார்கள். (85)

அந்த வெல்லையிற் சத்தியுஞ் சிவமுமா யனைத்தும்
வந்தி டும்பரி சளித்தவ ரிருவரும் வரலுஞ்
சிந்தை யின்மகிழ் வெய்தியே யம்மைசே வடியின்
முந்தி யோடியே வணங்கினன் முழுதொருங் குணர்ந்தோன்.

அந்த எல்லையில்—அச்சமயத்தில், சத்தியும் சிவமுமாய் அனைத்தும் வந்திடும் பரிசு அளித்தவர்—சத்தியாயும் சிவமாயும் சராசரமனைத்தையும் உண்டாகுமாறு தோற்றுவித்தவராகிய, இருவரும்—சிவபெருமானும் உமாதேவியாரும், வரலும்—எழுந்தருளுதலும், முழுது ஒருங்கு உணர்ந்தோன்—சத்தி சிவ இயல்பை இப்பொழுது முழுதொருங்குணர்ந்தோராகிய திருமால், சிந்தையின் மகிழ்வு எய்தி—மனத்தின்கண் மகிழ்ச்சியடைந்து, ஓடி—விரைவுபட்டு, முந்தி—முதற்கண், அம்மை சேவடியின் வணங்கினன்—மாதாவாகிய உமாதேவியாரின் பாதங்களில் வீழ்ந்து வணங்கினார். (86)

இறைவி தாண்மலர் பணிந்தபின் னெம்பிரான் பதமு
முறையி னுற்பணிந் திருவர்தஞ் சீர்த்திகண் முழுது
மறையின் வாய்மையாற் பன்முறை யால்வழுத் துதலு
நிறையு நல்லருள் புரிந்தனன் றனக்குநே ரிலாதான்.

இறைவி தாள் மலர் பணிந்தபின்—உமாதேவியாரின் பாதங்களை முதற்கண் வணங்கிய பின்பு, எம்பிரான் பதமும் முறையினுல் பணிந்து—சிவபெருமானுடைய பாதங்களையும் முறைப்படி வணங்கி, இருவர்தம் சீர்த்திகள் முழுதும்—அவ்விருவருடைய கீர்த்திகள் முழுவதையும், மறையின் வாய்மையால் பன்முறையால் வழுத்துதலும்—வேத சத்திய வாக்குக்களாற் பலபிரகாரந் துதித்தலும், தனக்கு நேரிலாதான்—தமக்கு ஒப்பில்லாதவராகிய சிவபெருமான், நிறையும் நல்லருள் புரிந்தனன்—நிறைகின்ற நல்ல திருவருளைப் புரிந்தருளினார். (87)

மாது நீயிவற் கருள்புரி யென்னவம் மாது
சீத ரன்றனை நோக்கியே நம்பெருந் தேவ
னோதும் வாய்மையும் யான்முனிந் துரைத்திடு முரையும்
பேதி யாவினி யாவரே யன்னவை பெயர்ப்பார்.

மாது நீ இவற்கு அருள் புரி என்ன—தேவியே நீ இத் திருமாலுக்கு அருள் புரிகுதி என்று சிவபெருமான் திருவாய் மலர்ந்தருள, அ மாது சீதரன் தனை நோக்கி—அந்தத் தேவியானவர் திருமாலை நோக்கி, நம் பெரும் தேவன் ஓதும் வாய்மையும்—நமது மகாதேவர் திருவாய்மலர்ந்தருளுஞ் சத்திய வாக்காகிய வரமும், யான் முனிந்து உரைத்திடும் உரையும்—அத்தேவருக்கு அபின்ன மாகிய யான் கோபித்துக் கூருநின்ற சாபமொழியும், பேதியா—ஒன்றோ டொன்று மாறுபடுவனவாகா; இனி—இங்ஙனமாதலின் இனி, அன்னவை பெயர்ப்பார் யாவர்—அவ்விரண்டனையும் மாற்ற வல்லவர் யாவர். (88)

எங்க ணாயகன் விழிபொழி யங்கியா லிறந்து
துங்க மேன்மைபோய்ப் பின்முறை முன்புபோற் றோன்றி
யுங்குன் மாமக னிருக்கவென் றுரைத்தன ளுமையா
ளங்க தாகவென் றருளியே மறைந்தன னையன்.

எங்கள் நாயகன் விழி பொழி அங்கியால் இறந்து—எங்கள் நாயகராகிய சிவபெருமானது நெற்றிக்கண் பொழிகின்ற அக்கினியால் இறந்து, துங்க மேன்மை போய்—உயர்ந்த மேன்மை ஒழிந்து, பின்முறை முன்புபோல் தோன்றி—பின்னர் முன்புபோலத் தோன்றி, உங்கு உன் மா மகன் இருக்க என்று—உங்கு உனது சிறந்த புதல்வன் இருப்பானாகுக என்று, உமையாள் உரைத்தனள்—உமாதேவியார் கூறியருளினர்; ஐயன் அது ஆக என்று அருளி அங்கு மறைந்தனன்—சிவபெருமான் அவ்வாறாகுக என்று அருள்செய்து அவ் விடத்தில் மறைந்தருளினர். (89)

அம்மை தன்னுட னெம்பிரான் மறைதலு மண்ணல்
விம்மி தத்தொடு தன்பதி புகுந்துவீற் றிருப்ப
மைம்ம லிந்திடு மெய்யுடைக் காமவேள் வாரா
விம்மெ னக்கடி துதித்தன னவன்மனத் திடையே.

அம்மை தன்னுடன் எம்பிரான் மறைதலும்—உமாதேவியாருடன் எம் பெருமான் மறைந்தருளுதலும், அண்ணல் விம்மிதத்தொடு தன் பதி புகுந்து வீற்றிருப்ப—திருமால் அதிசயவுவகையோடு தன் பதியை அடைந்து வீற் றிருக்க, அவன் மனத்திடை—அத் திருமாலின் மனத்தின்கண், மை மலிந்திடு மெய்யுடை காமவேள் இம்மென கடிது வாரா உதித்தனன்—கருமைமிக்க மேனியினையுடைய மன்மதன் வெகு விரைவில் வெளிப்பட்டுத் தோன்றினன். (90)

### வேறு

வந்திடுங் காமவேள் வடிவுடைக் காளையாய்க்
கந்தமார் பூங்கணை கன்னல்விற் கைகொடே
மைந்தரா னோர்களு மாதருங் காமமேற்
புந்திவைத் திடும்வகை போர்புரிந் துலவினன்.

வந்திடும் காமவேள்—அவ்வாறு தோன்றுநின்ற மன்மதன், வடிவு உடை காளையாய்-நல்ல உருவத்தோடு கூடிய காளையாகி, கந்தம் ஆர் பூங்கணை—வாசனை பொருந்திய புஷ்பபாணத்தையும், கன்னல் வில்—கரும்பு வில்லையும், கை கொடு—கையிலேந்தி, மைந்தர் ஆனோர்களும் மாதரும் காமமேல் புந்தி வைத்திடும் வகை—ஆடவரும் மகளிருங் காமத்தில் மனத்தை வைக்கும் வண்ணம், போர் புரிந்து உலவினன்—போர் செய்து எங்கும் உலாவினன். (91)

தண்ணிழற் குடையெனச் சசிபடைத் துடையவ
னெண்ணமற் றொருபகல் யார்க்குமே லாகிய
கண்ணுதற் பகவன்மேற் கணைமலர் சிதறியே
துண்ணெனத் துகளதாய்த் தொலைதலுற் றனரோ.

தண் நிழல் குடை என—தண்ணிய நிழலைச்செய்யுங் குடையாக, சசி படைத்துடையவன்—சந்திரனைப் பெற்றுக்கொண்டவனாகிய மன்மதன், ஒரு பகல் எண்ணம் அற்று—ஒருதினம் சிந்தனையின்றி, யார்க்கும் மேலாகிய கண்ணுதற் பகவன் மேல் கணை மலர் சிதறி—யாவர்க்கும் மேலோராகிய சிவ பெருமான்மீது புஷ்ப பாணங்களைச் சொரிந்து, துண்ணெனத் துகள்தாய்—திடீரென்று சாம்பராய், தொலைதலுற்றான்—இறந்தொழிந்தான்.

தேவியின் சாபம் பலித்தவாறு. கண்ணுதல் என்ற விசேடணத்தாற் சாம்பராதற் காரணங் காட்டியதாம். (92)

பூழியாய் மாண்டுளான் பொருவிலா நல்லரு
ளாழியா னாணையா லருவொடே யுருவமாய்
வாழிசேர் தொல்லைநாள் வளனொடு மன்னினன்
சூழிமால் கிரிதருந் தோகைசொற் றவறுமோ.

பூழியாய் மாண்டுளான்—சாம்பராய் மடிந்த மன்மதன், பொருவிலா நல் அருள் ஆழியான் ஆணையால்—ஒப்பில்லாத நல்ல கிருபா சமுத்திரமான சிவபெருமானது கருணையினால், அருவொடு உருவமாய்—அருவடிவத்தோடு உருவத்தையும் உடையனாய், தொல்லைநாள் சேர் வளனொடு—முன்னாளிற் பொருந்திய வளங்களோடு, மன்னினன்—நிலைபெற்றிருந்தான்; சூழி மால் கிரி தரும் தோகை சொல் தவறுமோ—உச்சியினையுடைய பெரிய இமயமலை பெற்ற தேவியின் சாபமொழி தவறுமோ தவறாதே.

இரதிக்கு உருவமாயிருப்பன் என்க. வாழி, அசை. (93)

நிற்பமற் றித்திற நேமியான் முன்னைநா
ளற்புடன் வழிபடு மமலையைக் குமரனைத்
தற்பரக் கடவுளைத் தனதுமார் பிற்கொடே
பற்பகற் பணியின்மேற் பாற்கடற் றுஞ்சினன்.

இதிறம் நிற்ப—இந்தச் சரித்திரம் இருக்க; நேமியான்—சக்கரப்படையை யுடைய திருமால், முன்னே நாள் அற்புடன் வழிபடும்—முன்னே நாட்டொடக்கம் அன்போடு வழிபட்டு வருகின்ற, அமலையைக் குமரனைத் தற்பரக் கடவுளை—நின்மலையாகிய தேவியுங் குமாரக்கடவுளுந் தற்பரராகிய சிவபெருமானுஞ் சேர்ந்த சோமாஸ்கந்த மூர்த்தத்தை, தனது மார்பிற் கொடு—தமது மார்பில் வைத்துக்கொண்டு, பற்பகல் பணியின்மேல் பாற்கடல் துஞ்சினன்—பல காலமாகப் பாற்கடலிலே சர்ப்ப சயனத்தின்மீது அறிதுயில் புரிவாராயினர். (94)

நீடவே துயிலுமா னெட்டுயிர்ப் பசைவினற்
பீடுசேர் நாகணைப் பேருயிர்ப் பசைவினற்
பாடுசூழ் தெண்டிரைப் பாற்கட லசைவின
லாடியே வைகின ரலகிலா வாடலார்.

நீட துயிலும் மால் நெட்டுயிர்ப்பு அசைவினல்-மிகுதியாகத் துயில் புரிகின்ற திருமாலின் நெட்டுயிர்ப்பின் அசைவினலும், பீடு சேர் நாகணை பேர் உயிர்ப்பு அசைவினல்—பெருமைபொருந்திய சர்ப்ப சயனத்துப் பெருமூச்சினசைவினலும், பாடு சூழ் பாற்கடல் தெண்திரை அசைவினல்—பக்கத்தே சூழுகின்ற பாற் சமுத்திரத்தின் தெளிந்த திரைகளின் அசைவினலும், அலகிலா ஆடலார் ஆடியே வைகினர்—எல்லையற்ற ஆடலினையுடையவராகிய சிவபெருமான் சோமாஸ்கந்த மூர்த்தியாய் ஆடிக்கொண்டே வீற்றிருந்தருளினர். (95)

அன்னதோ ரமைதியி லசுரசே னைக்கெலா
மன்னனு யுற்றுளான் வாற்கலி யென்பவ
னென்னைவா னவரொடு மீடழித் தமர்தனின்
முன்னைநாள் வென்றனன் முடிவிலா மொய்ம்பினல்.

அன்னது ஓர் அமைதியில்—அவ்வாருயதொரு காலத்தில், அசுர சேனைக்கு எலாம் மன்னனுய் உற்றுளான்—அசுர சேனைகள் அனைத்துக்கும் அரசனுயிருப்பவன், வாற்கலி என்பவன்—வாற்கலி என்னும் பெயரையுடையவன், முடிவு இலா மொய்ம்பினல்—முடிவில்லாத தனது வன்மையினல், முன்னை நாள்—முன்னளிலே, என்னை வானவரொடும் ஈடு அழித்து—என்னைத் தேவர்களுடன் வலியை அழித்து, அமர்தனில் வென்றனன்—யுத்தத்தில் வெற்றிகொண்டான். (96)

அத்திறங் கண்டுநா னமரரோ டேகியே
பத்துநூற் றுத்தலைப் பாந்தண்மேற் றுயில்கொளுஞ்
சுத்தனைப் போற்றியே தொழுதுவாற் கலியின
லெய்த்தனங் காத்தியா லெம்மைநீ யென்றனன்.

நான் அத் திறம் கண்டு—நான் அத்தன்மையைக் கண்டு, அமரரோடு ஏகி—தேவர்களோடு போய், பத்து நூற்றுத் தலைப் பாந்தள்மேல் துயில் கொளும்—ஆயிரந் தலைகளையுடைய சர்ப்பத்தின்மீது துயில் புரிகின்ற, சுத்தனைப் போற்றி தொழுது—சுத்தரான திருமாலைத் துதித்து வணங்கி, வாற்கலியினால் எய்த்தனம்—வாற்கலியினால் இளைப்படைந்தோம்; எம்மை நீ காத்தி என்றனன்—எம்மைக் காத்தருள்க என்று வேண்டினேன். (97)

நஞ்சுபில் கெயிறுடை நாகமாம் பள்ளிமேற்
றுஞ்சும்வா லறிவினன் றுயிலைவிட் டேயெழீஇ
யஞ்சலீ ருங்களுக் கல்லலே யாற்றிய
வஞ்சனா ருயிர்தனை வல்லையுண் டிடுதுமால்.

நஞ்சு பில்கு எயிறு உடை நாகமாம் பள்ளிமேல் துஞ்சும் வாலறிவினன்—நஞ்சு காலுகின்ற பற்களையுடைய சர்ப்ப சயனத்தின்மீது துயில்புரிகின்ற தூய அறிவினையுடைய திருமால், துயிலை விட்டு எழீஇ—துயில்விட்டெழுந்து, அஞ்சலீர்—அஞ்சன்மின்; உங்களுக்கு அல்லல் ஆற்றிய—உங்களுக்குத் துன்பத்தைச் செய்த, வஞ்சன் ஆருயிர் தனை வல்லை உண்டிடுதும்—வஞ்சகனது அரிய உயிரை விரைந்து அழிப்போம். (98)

என்றுதன் கையமைத் தேழொடே ழுலகமுண்
டன்றொரா லிலையின்மே லறிதுயின் மேவிய
மன்றலந் தண்டுழாய் மாலைசூழ் மௌலியா
னென்றுபே ரன்பினா லொன்றெனக் குரைசெய்தான்.

என்று தன் கை அமைத்து—என்று கூறித் தமது திருக்கையால் அபயஞ் செய்து, ஏழொடு ஏழுலகம் உண்டு—பதினான்கு உலகத்தையும் உண்டு, அன்று ஓர் ஆலிலையின் மேல்—அக்காலத்தில் ஓர் ஆலிலைமீது, அறி துயில் மேவிய—அறிதுயிலமர்ந்த, மன்றல் அம் தண் துழாய் மாலை சூழ் மௌலியான்—வாசனை பொருந்திய அழகிய தண்ணிய துழாய் மாலையணிந்த மௌலியையுடைய திருமால், ஒன்று பேரன்பினால்—ஒருமை செய்கின்ற பேரன்பினாலே, எனக்கு ஒன்று உரைசெய்தான்—எனக்கு ஒன்று உரைத்தார். (99)

பார்த்தியா லெனதெனும் பைம்பொன்மார் பத்திடை
மூர்த்தியாய் வைகிய முதல்வியைக் குமரனைத்
தீர்த்தனைப் பூசனை செய்துநின் றீவினை
யார்த்திநீங் குதியெனா வாதரத் தருளினான்.

பார்த்தி—இந்திரனே இங்கே பார்; எனது எனும் பைம்பொன் மார்பத்திடை—எனது என்று சொல்லப்படும் பசிய பொன்னாகிய இலக்குமி வசிக்

கின்ற மார்பின்கண்ணே, மூர்த்தியாய் வைகிய—சோமாஸ்கந்த மூர்த்தியாய் எழுந்தருளிய, முதல்வியை குமரனை தீர்த்தனை பூசனை செய்து—உமாதேவி யையும் குமாரக் கடவுளையும் சிவபெருமானையும் பூசனை புரிந்து, நின் தீவினை ஆர்த்தி நீங்குதி எனா—உனது தீவினையினாலான துன்பம் நீங்குவாயாக என்று, ஆதரத்து அருளினான்—அன்புடன் கூறினார்.

எனதெனும் மூர்த்தியாய் என இயைப்பினும் அமையும். (100)

அன்னவா றருள்செய்தே யனையர்மூ வோரையும்
பொன்னுலா மார்பினும் பொள்ளென வாங்கியே
யென்னதா கியகரத் தீந்தன னீதலுஞ்
சென்னிமேற் றாங்கினேன் மாதவத் திண்மையால்.

அன்னவாறு அருள் செய்து—அவ்வாறு கூறியருளி, அனையர் மூவோ ரையும்—அவர்கள் மூவரையும், பொன் உலாம் மார்பினும் பொள்ளென வாங்கி—திருமகள் வசிக்கும் மார்பினின்றும் விரைந்தெடுத்து, என்னது ஆகிய கரத்து ஈந்தனன்—என்னுடைய கையில் அளித்தார்; ஈதலும்—அளித்தலும், மாதவத் திண்மையால் சென்னிமேல் தாங்கினேன்—பெரிய தவவலிமையினாற் சிரமேற்றாங்கும் பேற்றை எய்தினேன். (101)

### வேறு

அங்கதற்பின் முறையாக வச்சுதன்பாற் கடலகன்று
நங்குழுவெ லாஞ்சூழ நாவலந்தீ வகத்தணுகி
யெங்கள்பிரா னருணடஞ்செய் யெல்லையிலாத் தில்லைதனிற்
றுங்கமணி மன்றுதனைத் தொழுதுபர வசமானான்.

அங்கு அதன் பின்முறையாக—அதன் பின்னர், அச்சுதன் பாற்கடல் அகன்று—திருமால் பாற்கடலை விட்டு நீங்கி, நம் குழு எலாம் சூழ—நமது தேவர் கூட்டம் அனைத்துஞ் சூழ்ந்துவர, நாவலந்தீவகத்து அணுகி—நாவலந் தீவையடைந்து, எங்கள் பிரான் அருள் நடம் செய்—எங்கள் பெருமான் ஆகிய நடராஜப்பெருமான் திருவருள் நடனஞ் செய்கின்ற, எல்லை இலாத் தில்லைதனில்—பெருமைக்கு எல்லையில்லாத சிதம்பரத்தில், துங்க மணி மன்று தனை தொழுது பரவசமானான்—உயர்ந்த அழகிய பொன்னம்பலத்தை வணங்கிப் பரவசமாயினார். (102)

செல்லரிய பரவசமாய்த் திருமுன்னே வீழ்ந்திறைஞ்சித்
தொல்லைதனி லறிவிழந்து துணைவிழிகள் புனல்பெருகப்
பல்லுயிர்க்கு முயிராகும் பரமசிவ பூரணத்தி
னெல்லைதனிற் புக்கழுந்தி யெழுந்திலனீ ரிருதிங்கள்.

செல்லரிய பரவசமாய்—நீங்குதற்கரிய பரவசமாய், திருமுன்னே வீழ்ந்து இறைஞ்சி—நடராஜ சந்நிதியில் விழுந்து வணங்கி, தொல்லை தனில் அறிவு இழந்து—பழைய உணர்வை இழந்து, துணை விழிகள் புனல் பெருக—இரண்டாகிய விழிகளில் நீர் பெருக, பல்லுயிர்க்கும் உயிர் ஆகும்—பலவாகிய உயிர்கள் அனைத்துக்கும் உயிராயிருக்கும், பரம சிவ பூரணத்தின் எல்லைதனில் புக்கு அழுந்தி—பரமசிவ பூரணத்தின் எல்லையைத் தலைப்பட்டு அதில் அழுந்தி, ஈரிரு திங்கள் எழுந்திலன்—நான்கு மாசங்காறும் எழாராயினர். (103)

இத்திறத்தா லவசமதா யீறுமுத னடுவுமிலா
வத்தனது திருவடிக்கீ ழடங்கியே யாணையினுன்
மெய்த்துரியங் கடந்தவுயிர் மீண்டுசாக் கிரத்தடையத்
தத்துவமெய் யுணர்ச்சியெலாந் தலைத்தலைவந் தீண்டினவால்.

இ திறத்தால் அவசமதாய்—இவ்வண்ணம் பரவசம் எய்தி, ஈறு முதல் நடுவும் இலா அத்தனது திருவடிக்கீழ் அடங்கி—ஈறும் முதலும் நடுவும் இல்லாத நடராஜப் பெருமானது திருவடிக்கீழ் அடங்கி, ஆணையினுல்—அப் பெருமானது ஆணையினுலே, மெய் துரியம் கடந்த உயிர்—மெய்ம்மையாகிய நின்மல துரியத்தைக் கடந்த உயிர், மீண்டு சாக்கிரத்து அடைய—திரும்பிச் சாக்கிராவத்தையையடைய, மெய்யுணர்ச்சி தத்துவம் எலாம்—சரீர உணர்வுக்குரிய தத்துவங்களெல்லாம், தலைத்தலை வந்து ஈண்டின—இடமிடந்தோறும் பொருந்தின.

'ஆணையினுல்' என்பதனை மீண்டு சாக்கிரத் தடைதலுக்குங் கொள்க; என்னை, மெய்த்துரியங் கடந்து துரியாதீதப்பட்டது மீளாதாதலின். (104)

கண்டுயில்வா னெழுந்ததெனக் கதுமெனமா யோனெழுந்து
புண்டரிகப் பதந்தொழுது போற்றிசெய்து புறத்தேகித்
தெண்டிரைசூழ் புவிக்கரசு செலுத்தியவாற் கலியுடனே
மண்டுபெருஞ் சமர்செய்து வல்லைதனி லுயிருண்டான்.

கண் துயில்வான் எழுந்தது என—கண் துயில்பவன் எழுந்தது போல, மாயோன் கதுமென எழுந்து—திருமால் விரைந்தெழுந்து, புண்டரிகப் பதம் தொழுது—நடராஜப் பெருமானுடைய பாத கமலங்களை வணங்கி, போற்றி செய்து—துதித்து, புறத்து ஏகி—வெளியே வந்து, தெண் திரை சூழ் புவிக்கு அரசு செலுத்திய—தெளிந்த திரையினையுடைய கடல் சூழ்ந்த உலகின்கண் அரசு புரிந்த, வாற்கலியுடன் மண்டு பெரும் சமர் செய்து—வாற்கலி என்பவனேடு நெருங்கிய பெரிய போர் செய்து, வல்லைதனில் உயிர் உண்டான்—விரைவில் அவனுயிரைப் பருகினர். (105)

வாற்கலிதன் னுயிருண்டு வாகைபுனைந் தேதிருமால்
சீர்க்கருணை நெறியதனாற் றேவருக்கு மென்றனுக்கு
மேற்கும்வகை விடையுதவி யிம்மெனவே மறைந்தேகிப்
பாற்கடலிற் பணியணைமேற் பண்டுபோற் கண்வளர்ந்தான்.

வாற்கலி தன் உயிர் உண்டு—வாற்கலியின் உயிரைப் பருகி, வாகை புனைந்து—வெற்றிமாலை சூடி, திருமால் சீர் கருணை நெறியதனால்—திருமாலானவர் சிறந்த அருணெறியானே, தேவருக்கும் என்தனக்கும் ஏற்கும் வகை விடை உதவி—தேவருக்கும் எனக்கும் ஏற்ற பிரகாரம் விடையளித்து, இம்மென மறைந்து ஏகி—விரைந்து மறைந்து சென்று, பாற்கடலில் பணி அணைமேல் பண்டுபோல் கண்வளர்ந்தான்—பாற்கடலிலே சர்ப்ப சயனத்தின் மீது முன்போல அறிதுயில் புரிந்தார். (106)

தேவர்குழாத் தொடுமீண்டு சிறந்திடுமித் துறக்கத்தி
லாவலுடன் வந்தேயா னன்றுமுத லின்றளவும்
பூவைநிறங் கொண்டபுத்தேள் பொன்மார்பில் வீற்றிருந்த
மூவரையு மருச்சித்தேன் முதுமறைநூல் விதிமுறையால்.

யான் தேவர் குழாத்தொடு மீண்டு—யான் தேவர் கூட்டத்தோடு மீண்டு, சிறந்திடும் இது துறக்கத்தில் ஆவலுடன் வந்து—சிறப்புற்றிருக்கின்ற இந்தச் சுவர்க்க நகரத்துக்கு ஆர்வத்தோடு வந்து, அன்று முதல் இன்றளவும்—திருமாலிடத்துச் சோமாஸ்கந்த மூர்த்தியைப் பெற்ற அன்று தொடக்கம் இன்று காறும், பூவை நிறம் கொண்ட புத்தேள் பொன் மார்பில் வீற்றிருந்த—காயாம்பூ வண்ணரான திருமாலின் திருமார்பில் வீற்றிருந்தருளிய, மூவரையும் முது மறை நூல் விதி முறையால் அருச்சித்தேன்—மூவரும் ஒருமையெய்திய சோமாஸ்கந்த மூர்த்தியைப் பழைய வேதநூல் விதிப்படி அருச்சித்து வந்தேன். (107)

மன்னர்க்கு மன்னவநீ வழிபடுதல் காரணமாத்
தன்னொப்பி லாதாரைத் தருகென்றாய் தந்திடுவ
தென்னிச்சை யன்றேமா லிசைவுனக்குண் டாமாகிற்
பின்னைத்தந் திடுவனெனப் பெருந்தகையோன் பேசினனால்.

மன்னர்க்கு மன்னவ நீ—முசுகுந்தச் சக்கரவர்த்தியே நீ, வழிபடுதல் காரணமா—பூசித்தல் காரணமாக, தன் ஒப்பிலாதாரைத் தருக என்றாய்—தமக்கு ஒப்பில்லாத சோமாஸ்கந்தமூர்த்தியைத் தருக என்று கேட்டனை; தந்திடுவது என் இச்சை அன்று—தருவது என் விருப்பம்பற்றியதன்று; மால் இசைவு உனக்கு உண்டாம் ஆகில்—திருமாலின் உடன்பாடு உனக்கு உளதாம் ஆயின், பின்னை தந்திடுவன் என—அதன் பின்பு தருவேன் என்று, பெருந் தகையோன் பேசினன்—பெருந்தகையோனான இந்திரன் கூறினான். (108)

பேசுதலு முசுகுந்தன் பெயர்ந்துபாற் கடலிடைபோய்க்
கேசவனை யடிவணங்கிக் கிட்டிநின்று வேண்டுதலும்
வாசவன்ற னிடந்தன்னில் வைத்திடுநம் முயிர்க்குயிரைப்
பூசனைசெய் கொடுபோந்து பூதலத்தி னிடையென்றான்.

பேசுதலும்—இந்திரன் இவ்வாறு கூறுதலும், முசுகுந்தன் பெயர்ந்து—முசுகுந்தச் சக்கரவர்த்தி அவ்விடத்தை விட்டு நீங்கி, பாற்கடலிடை போய்—பாற்சமுத்திரத்தை அடைந்து, கேசவனை அடிவணங்கி—திருமாலைப் பாதங்களில் வணங்கி, கிட்டி நின்று—அணுகிநின்று, வேண்டுதலும்—சோமாஸ்கந்த மூர்த்தியை அநுக்கிரகிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தலும், வாசவன் இடம் தன்னில் வைத்திடும் நம் உயிர்க்குயிரை—இந்திரனிடத்து யாம் வைத்திருக்கும் நமது உயிர்க்குயிராகிய சோமாஸ்கந்தமூர்த்தியை, கொடு போந்து—பெற்றுக்கொண்டு சென்று, பூதலத்தினிடை பூசனை செய் என்றான்—பூமியின் கட் பூசிப்பாயாக என்று அநுக்கிரகித்தார்.

தன், சாரியை. *(109)*

நன்றெனவே யிசைவுகொ ண்டு நாரணனை விடைகொண்டு
சென்றுபுரந் தரற்குரைப்பச் சிந்தைதளர்ந் தேயிரங்கி
யன்றுதனை யீன்றதனிப் புனிற்றாவை யகலுவதோர்
கன்றெனவே நனிபுலம்பி யொருசூழ்ச்சி கருதினனால்.

நன்று என நாரணனை இசைவு கொண்டு விடை கொண்டு—நல்லது என்று திருமாலிடம் உடம்பாடுகொண்டு விடையும் பெற்று, புரந்தரற்கு சென்று உரைப்ப—இந்திரனிடஞ் சென்று திருமாலின் இசைவைக் கூற, சிந்தை தளர்ந்து இரங்கி—இந்திரன் ஆன்மார்த்த மூர்த்தியை இழக்கின்றேனே யென்று மனந்தளர்ந்து இரங்கி, தனை ஈன்ற அன்று—தன்னை ஈன்ற அத்தினம், புனிறு ஆவை அகலுவது ஓர் தனிக்கன்று என—ஈன்றண்ணிய தாய்ப்பசுவைப் பிரிவதொரு தனிக்கன்றைப்போல, நனி புலம்பி—மிகவும் புலம்பி, ஒரு சூழ்ச்சி கருதினன்—ஒருபாயத்தைச் சிந்தித்தான். *(110)*

தேவர்பிரா னவ்வளவிற் றெய்வதக்கம் மியன்செயலான்
மூவடிவு மூவிரண்டு முறைவேறு வேறாக
வேவர்களும் வியப்பெய்த விமைப்பின்முன மமைப்பித்துக்
காவலன்கை தனிற்கொடுப்பக் கைதவமென் றறிந்தனனே.

தேவர் பிரான் அவ்வளவில்—இந்திரன் அச்சமயத்தில், தெய்வதக் கம்மியன் செயலால்—தேவத் தச்சனுடைய செய்வினைத் திறத்தால், மூவிரண்டு மூவடிவு—ஆறு சோமாஸ்கந்த மூர்த்தத்தை, ஏவர்களும் வியப்பு எய்த—எவர்களும் வேற்றுமை தோன்றாது வியக்கும்படி, இமைப்பின் முனம் வேறு வேறு

ஆக அமைப்பித்து—இமைப்பொழுதுக்குள் வேறுவேறாக ஆக்குவித்து, காவலன் கைதனில் முறை கொடுப்ப—முசுகுந்தச் சக்கரவர்த்தி கையில் முறையே ஒன்று ஒன்றாக ஆறனையுங் கொடுக்க, கைதவம் என்று அறிந்தனன்—சக்கரவர்த்தி இந்திரன் கொடுத்த ஒவ்வொன்றனையும் வஞ்சனையென்று அறிந்துகொண்டான். *(111)*

ஆதியில்விண் ணவர்தச்ச னமைத்திடுமூ விருவடிவும்
பூதலமன் னவன்வாங்கிப் புதல்வனொடுங் கவுரியொடும்
வீதிவிடங் கப்பெருமான் மேவியதா மெனவிருந்து
மேதுமுரை யாநெறியா லிவரவரன் றெனமொழிந்தான்.

ஆதியில்—உண்மையாகிய சோமாஸ்கந்த மூர்த்தியைக் கொடுப்பதற்கு முன், விண்ணவர் தச்சன் அமைத்திடு மூவிரு வடிவும்—தேவத் தச்சன் ஆக்கிய ஆறு சோமாஸ்கந்த மூர்த்தங்களையும், பூதல மன்னவன் வாங்கி—புவிச் சக்கரவர்த்தியாகிய முசுகுந்தன் ஒன்றொன்றாகப் பெற்று, புதல்வனொடும் கவுரியொடும் வீதிவிடங்கப் பெருமான் மேவியது ஆம் என இருந்தும்—குமாரசுவாமியோடும் உமாதேவியாரோடும் கூடிய வீதிவிடங்கப் பெருமானாகிய சோமாஸ்கந்த மூர்த்தி எழுந்தருளியதுபோல அவை ஒவ்வொன்றுந் தோற்றமுற்றிருந்தும், ஏதும் உரையா நெறியால்—அவற்றுள் எதுவும் எதனையுந் தனக்குக் குறிப்பாலுணர்த்தாத காரணத்தால், இவர் அவர் அன்று என மொழிந்தான்—கொடுத்த ஒவ்வொரு மூர்த்தியையும் இவர் அவர் அல்லர் என்று ஒவ்வொரு முறையுங் கூறினான்.

ஆறுமுறை கூறினான் என்க. இவர் அவர் என்பன வடிவங் குறித்து நின்றமையின் அன்று எனப்பட்டது. திருவாரூரில் உற்சவ மூர்த்தியாய்ச் சோமாஸ்கந்த மூர்த்தி வீதியிலெழுந்தருளுதலின் வீதிவிடங்கப் பெருமான் எனப்பட்டார். டங்கம்—உளி. உளியினாற் செய்யப்படாதது விடங்கம், சோமாஸ்கந்த மூர்த்தி சுயம்பு மூர்த்தி. *(112)*

துங்கமுறு முசுகுந்தன் சொல்வினவிச் சுடராழிப்
புங்கவன்றன் மார்பமெனும் பொன்னூச லாட்டுகந்து
மங்கையொடுங் குமரனொடு மகிழ்ச்சியொடும் வீற்றிருந்த
வெங்கள்பிரான் றனைக்கொடுவந் திவரோமோ வென்றனனே.

துங்கம் உறு முசுகுந்தன் சொல் வினவி—பரிசுத்தம் மிக்க முசுகுந்தச் சக்கரவர்த்தி இவர் அவர் அல்லர் என்று ஆறுமுறை மொழிந்த மொழியை இந்திரன் கேட்டு, சுடர் ஆழிப் புங்கவன் தன் மார்பம் எனும் பொன்னூசல் ஆட்டு உகந்து—ஒளி பொருந்திய சக்கரத்தினையுடைய திருமாலின் திருமார்பாகிய பொன்னூசலில் ஆடி அசைந்துகொண்டிருத்தலை மகிழ்ந்து, மங்கையொடும் குமரனொடும் மகிழ்ச்சியொடும் வீற்றிருந்த—உமாதேவியாரோடுங் குமாரசுவாமியோடும் உவகையோடெழுந்தருளியிருந்த, எங்கள் பிரான்

தனை கொடு வந்து—எங்கள் பெருமானாகிய சத்திய சோமாஸ்கந்த மூர்த்தியைக் கொண்டுவந்து, இவர் ஆமோ என்றனன்—இவரோ அவர் என்று கேட்டான். (113)

இந்திரனிவ் வாறுரைப்ப விமையாமுக் கட்பகவன்
முந்துதிறன் முசுகுந்தன் முகநோக்கி நின்பாலில்
வந்தனமா லெம்மையினி மாநிலத்திற் கொடுபோந்து
புந்திமகிழ் வாற்பூசை புரிவாயென் றருள்செய்தான்.

இந்திரன் இவ்வாறு உரைப்ப—இந்திரன் இவ்வாறு கூற, இமையா முக்கண் பகவன்—இமையாத மூன்று கண்களையுடைய பகவனாகிய சோமாஸ்கந்த மூர்த்தி, திறல் முந்து முசுகுந்தன் முகம் நோக்கி—வென்றியால் மேம்பட்ட முசுகுந்தச் சக்கரவர்த்தியின் முகத்தைத் திருநோக்கஞ் செய்து, நின்பாலில் வந்தனம்—உன்னிடம் வந்துவிட்டோம்; இனி எம்மை மாநிலத்தில் கொடு போந்து—இனி எம்மைப் பூமியின்கட் கொண்டு சென்று, புந்தி மகிழ்வால் பூசை புரிவாய் என்று அருள் செய்தான்—மனமகிழ்வுடன் பூசை செய்வாயாக என்று திருவருள் பாலித்தார். (114)

ஊழிநா யகன்மகவா னுணராமே யிஃதுரைப்பக்
கேழிலாப் பேருவகை கிடைத்தினிது பணிந்தேத்தி
யாழியான் பூசனைகொண் டமர்ந்தவரா மாமிவரை
வாழியாய் தருகவென வாங்கினன்மன் னவர்மன்னன்.

ஊழிநாயகன்—ஊழி முதல்வராகிய சோமாஸ்கந்த மூர்த்தி, மகவான் உணராமே இஃது உரைப்ப—இந்திரன் அறியாமல் இதனை உணர்த்தியருள, கேழ் இலா பேருவகை கிடைத்து—ஒப்பில்லாத பேருவகையடைந்து, இனிது பணிந்து ஏத்தி—இனிது வணங்கித் துதித்து, ஆழியான் பூசனை கொண்டு அமர்ந்தவராம்—திருமாலின் பூசனையை ஏற்று அவருடைய திருமார்பில் வீற்றிருந்தருளியவர் இவரேயாம்; ஆம் இவரை வாழியாய் தருக என—அவ்வாறமர்ந்தவராகும் இந்தச் சோமாஸ்கந்த மூர்த்தியை நீடூழி வாழ்வாய் தருக என்று, மன்னவர் மன்னன் வாங்கினன்—முசுகுந்தச் சக்கரவர்த்தி இந்திரனிடம் பெற்றுக்கொண்டான். (115)

வாங்கியபின் னிமையவர்கோன் மன்னவனை முகநோக்கி
யீங்கிவரை யறுவரொடு மிருநிலத்தி னிடைகொடுபோய்ப்
பூங்கமலா லயமுதலாப் புகல்கின்ற தலந்தன்னிற்
றீங்கறவே வழிபாடு செய்தியென விடைகொடுத்தான்.

வாங்கிய பின்—சோமாஸ்கந்த மூர்த்தியைப் பெற்றுக்கொண்டபின், இமையவர் கோன் மன்னவனை முகம் நோக்கி—தேவேந்திரன் முசுகுந்தச் சக்கரவர்த்தியின் முகத்தை நோக்கி, ஈங்கு இவரை—இந்தச் சோமாஸ்கந்த மூர்த்தியை, அறுவரொடும் இருநிலத்தின் இடை கொடுபோய்—மற்றை ஆறு சோமாஸ்கந்த மூர்த்திகளோடுஞ் சேர்த்து எழுவரையும் பெரிய பூமியின்கட் கொண்டு சென்று, பூங்கமலாலயம் முதலாப் புகல்கின்ற தலம் தன்னில்—அழகிய திருவாரூர் முதலாகச் சொல்லப்படுகின்ற சிறந்த தலங்களிற்ருபித்து, தீங்கு அற—பிறவிப்பிணி நீங்க, வழிபாடு செய்தி என விடை கொடுத்தான்—வழிபாடு செய்வாயாக என்று விடைகொடுத்து அனுப்பினன். (116)

நன்றெனவே விடைகொண்டு நானிலத்தி னிடையிழிந்து
தென்றிசையா ரூர்தன்னிற் சிவனுறைபூங் கோயில்புக்கு
மன்றல்கமழ் தண்டுளவோன் வழிபடவீற் றிருந்தோரை
வென்றியரி யணைமீதில் விதிமுறையாற் ருபித்தான்.

நன்று என விடை கொண்டு—நன்று என்று விடை பெற்றுக்கொண்டு, நானிலத்தினிடை இழிந்து—பூமியில் இறங்கி, தென்திசை ஆரூர் தன்னில்—தென்திசையிலுள்ள திருவாரூரில், சிவன் உறை பூங்கோயில் புக்கு—வன்மீக நாதராகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்குங் கமலாலயத்தையடைந்து, மன்றல் கமழ் தண் துளவோன் வழிபட வீற்றிருந்தோரை—வாசனை கமழ்கின்ற தண்ணிய துழாயையணிந்த திருமால் பூசிக்க அவர் மார்பில் எழுந்தருளியிருந்தோரான சோமாஸ்கந்த மூர்த்தியை, வென்றி அரியணை மீதில்—வெற்றி பொருந்திய சிங்காசனத்தின்மீது, விதிமுறையால் தாபித்தான்—வேதாகம விதிமுறையானே தாபனஞ் செய்தான். (117)

கடனாகை நள்ளாறு காருயல் கோளரியூர்
மடனாக முத்தீனும் வாய்மியூர் மறைக்கான
முடனாகுந் தலமாறி லோராறு வடிவுகொண்ட
படநாக மதிவேணிப் பரஞ்சுடரை யமர்வித்தான்.

கடல் நாகை—கடலையடுத்த திருநாகைக்காரோணம், நள்ளாறு—திருநள்ளாறு, காருயல்—திருக்காருயல், கோளரியூர்—திருக்கோளரியூர், மடல் நாகு அம் முத்து ஈனும் வாய்மியூர்—பூவிதழில் சங்குகள் அழகிய முத்துக்களை ஈனுகின்ற திருவான்மியூர், மறைக் கானம்—திருமறைக்காடு, உடன் ஆகும் தலம் ஆறில்—என்றிங்ஙனம் ஒருங்கு எண்ணப்படுகின்ற ஆறு தலங்களிலும், பட நாகம் மதி வேணி—படம்பொருந்திய நாகத்தையும் சந்திரனையும் அணிந்த வேணியினையுடைய, ஆறு வடிவு கொண்ட பரஞ்சுடரை—ஆறு வடிவத்தைக் கொண்ட பரஞ்சுடரான மற்றைச் சோமாஸ்கந்த மூர்த்திகளை, அமர்வித்தான்—தாபனஞ் செய்வித்தான். (118)

இப்படியே யொருபகலி லெழுவரையுந் தாபித்து
மெய்ப்பரிவில் வழிபாடு விதிமுறையாற் புரிவித்துச்
செப்பரிய புகழாரூர்த் தேவனுக்கு விழாச்செய்வான்
முப்புவனங் களும்போற்று முசுகுந்தன் முன்னினனல்.

இப்படியே—இவ்வாறு, ஒரு பகலில் எழுவரையும் தாபித்து—ஒரு தினத்தில் ஒரு முகூர்த்தத்தில் ஏழு சோமாஸ்கந்த மூர்த்திகளையும் ஏழு தலங்களிலே தாபித்து, மெய் பரிவில்—உண்மை அன்போடு, வழிபாடு விதிமுறையால் புரிவித்து—பூசனையை விதிமுறையானே செய்வித்து, செப்பரிய புகழ் ஆரூர் தேவனுக்கு—செப்புதற்கரிய புகழினையுடைய திருவாரூரில் எழுந்தருளியிருக்குந் தியாகராசராகிய சோமாஸ்கந்த மூர்த்திக்கு, விழாச் செய்வான்—திருவிழாச் செய்ய, முப் புவனங்களும் போற்றும் முசுகுந்தன் முன்னினன்—மூன்று உலகமுந் துதிக்கின்ற முசுகுந்தச் சக்கரவர்த்தி நினைத்தான். (119)

அந்நாளி லிமையவர்கோ னருச்சனைசெய் பரம்பொருளைக்
கொன்னார்வேன் மன்னவன்கைக் கொடுத்ததொரு கொடும்பவத்தாற்
பொன்னாட்டிற் றிருவிழந்து புலையுருவந் தனைத்தாங்கிக்
கைந்நாக மிசையூர்ந்து கமலையெனும் பதியடைந்தான்.

அந்நாளில்—திருவாரூரிலே திருவிழாத் தொடங்குங் காலத்தில், இமையவர் கோன்—தேவேந்திரன், அருச்சனை செய் பரம்பொருளை—தான் ஆன்மார்த்தமாக அருச்சித்த பரம்பொருளாகிய சோமாஸ்கந்த மூர்த்தியை, கொன் ஆர் வேல் மன்னவன் கைக் கொடுத்தது ஒரு கொடும் பவத்தால்—அச்சந்தரும் வேற்படையையுடைய முசுகுந்தச் சக்கரவர்த்தியினிடங் கொடுத்ததொரு கொடிய பாவத்தினல், பொன் நாட்டில் திரு இழந்து—சுவர்க்க உலகச் செல்வத்தை இழந்து, புலை உருவம் தனைத் தாங்கி—நீசவேடந் தாங்கி, கைந்நாகம் மிசை ஊர்ந்து—துதிக்கையினையுடைய ஐராவத யானையில் ஏறி அதனை நடத்திக் கொண்டு, கமலை எனும் பதி அடைந்தான்—கமலை என்று சொல்லுந் திருவாரூர் என்ற தலத்தை அடைந்தான். (120)

ஆரூரின் மேவியபின் னமலன்விழாப் போற்றுதற்குப்
பாரூருந் திரையூரும் பலவூரும் வருகவென்றே
வாரூரு முரசெறிந்து மதக்களிற்றின் மிசையேறித்
தேரூருஞ் செம்பொன்மணித் திருவீதிப் புடைசூழ்ந்தான்.

ஆரூரில் மேவியபின்—திருவாரூரையடைந்த பின்பு, அமலன் விழாப் போற்றுதற்கு—நின்மலராகிய தியாகராசப் பெருமானது திருவிழாவைச் சேவித்தற்கு, திரை ஊரும்—சமுத்திரத்தாற் சூழப்பட்டிருக்கும், பார் ஊரும்—பூமியிற் பரந்திருக்கும், பல ஊரும் வருக என்று—பல ஊர்களில் உள்ளவர்

களும் வருக என்று, மதம் களிற்றின் மிசை ஏறி—மதம்பொருந்திய களிற்றி யானையின்மீதேறி, வார் ஊரும் முரசு எறிந்து—வாரினுற் கட்டப்பட்டிருக்கும் முரசப்பறையை அறைந்து, தேரூரும் செம்பொன்மணி திருவீதிப் புடை சூழ்ந்தான்—தேர் ஊருகின்ற செம்பொன் மயமான அழகிய திருவாரூர்த் திருவீதிக்கண் வலம்வந்தான்.

வீதிப்புடை, வீதியின் பக்கமுமாம். (121)

பூங்கமலா புரிவாழும் புங்கவனுர்க் கன்னதற்பி
னோங்குதிரு விழாநடத்தி யொழிந்தபதிப் பண்ணவர்க்கு
மாங்கதுபோ னிகழ்வித்தே யந்தமில்சீர் முசுகுந்தன்
பாங்கில்வரும் வீரருடன் பாருலகம் புரந்திருந்தான்.

அன்னதன் பின்—இந்திரனுகிய வள்ளுவன் பறையறைந்து சாற்றிய பின்பு, பூங்கமலாபுரி வாழும் புங்கவனுர்க்கு—அழகிய திருவாரூரில் எழுந்தருளிய தியாகேசராகிய சோமாஸ்கந்த மூர்த்திக்கு, ஓங்கு திருவிழா நடத்தி—உயர்ந்த திருவிழாவை நடத்தி, ஒழிந்த பதிப் பண்ணவர்க்கும்—ஏனைய ஆறு தலங் களினும் எழுந்தருளிய சோமாஸ்கந்த மூர்த்திகளுக்கும், ஆங்கு அதுபோல்—திருவாரூரில் நடத்தியதாகிய திருவிழாவைப்போல, நிகழ்வித்து—மற்றை ஆறு தலங்களிலுந் திருவிழா நடக்கச் செய்து, அந்தம் இல் சீர் முசுகுந்தன்—அழிவில்லாத சிறப்பினைப் பெற்ற முசுகுந்தச் சக்கரவர்த்தி, பாங்கில் வரும் வீரருடன்—பக்கத்திற் படைத்துணையாய்ப் பொருந்தி வருகின்ற வீரவாகு முதலிய வீரர்களுடன், பார் உலகம் புரந்து இருந்தான்—பூவுலகத்தை அரசு செய்திருந்தான். (122)

ஆண்டுபல வப்பதியி லமலன்விழாச் சேவித்துக்
காண்டகைய தவம்புரிந்து கடைஞர்வடி வினைநீங்கித்
தூண்டகைய தோண்மகவான் றொல்லுருவந் தனைப்பெற்று
மீண்டுசுரர் பதிபுகுந்து விபவமுடன் வீற்றிருந்தான்.

தூண் தகைய தோள் மகவான்—தூணையொத்த புயத்தினையுடைய இந்திர னுகிய வள்ளுவன், பல ஆண்டு—பல ஆண்டுகளாக, அ பதியில்—அந்தத் திருவா ரூரில், அமலன் விழா சேவித்து—சோமாஸ்கந்த மூர்த்தியின் திருவிழாவைப் பறையறைந்து சேவித்திருந்து, காண் தகைய தவம் புரிந்து—குறிப்பிடத் தக்க தவத்தினைச் செய்து, கடைஞர் வடிவினை நீங்கி—புலையுருவம் ஒழிந்து, தொல் உருவம் தனைப் பெற்று—பழைய தேவேந்திர உருவத்தைப் பெற்று, மீண்டு—அவ்விடத்தினின்றும் மீண்டு, சுரர் பதி புகுந்து—தேவருலகத்தை யடைந்து, விபவம் உடன் வீற்றிருந்தான்—செல்வங்களோடு அரசு வீற்றிருந் தான். (123)

விண்ணவர்கோ னேகியபின் விரவுபுகழ்க் கருவூரி
லெண்ணரிய பலகால மிறையரசு செலுத்தியபின்
மண்ணுலகம் புரக்கவங்கி வன்மனுக்கு முடிசூட்டித்
துண்ணெனவே நோற்றிருந்து தொல்கயிலே தனையடைந்தான்.

விண்ணவர்கோன் ஏகிய பின்–தேவேந்திரன் சுவர்க்கத்துக்குச் சென்ற பின்பு, இறை–முசுகுந்தச் சக்கரவர்த்தி, புகழ் விரவு கருவூரில்–புகழ் விரவிய கருவூரிலிருந்து, எண்ணரிய பலகாலம் அரசு செலுத்தியபின்–அளவற்ற காலமாக அரசு செய்தபின்பு, மண்ணுலகம் புரக்க–பூமியை ஆளும்பொருட்டு, அங்கிவன்மனுக்கு முடி சூட்டி–தன் மகனுன அக்கினிவன்மனுக்கு முடி சூட்டி, துண்ணென நோற்றிருந்து–விரைந்து தவம்புரிந்து, தொல் கயிலேதனை அடைந்தான்–தான் முன்னிருந்த பழைய கைலாசத்தை அடைந்தான். (124)

துங்கமிகு முசுகுந்தன் ருெல்கயிலே யடைந்தபின்ன
ரெங்கள்விறன் மொய்ம்பினனு மிலக்கருட னெண்மர்களுந்
தங்கள்சிருர் தமைவிளித்துத் தத்தமது சிறப்புநல்கி
யங்கிவன்மன் பாலிருத்தி யரியதவ மாற்றினரே.

துங்கம் மிகு முசுகுந்தன்–தூய்மை மிக்க முசுகுந்தச் சக்கரவர்த்தி, தொல் கயிலே அடைந்த பின்னர்–தான் முன்னிருந்த பழைய கைலாசத்தை அடைந்த பின்பு, எங்கள் விறல் மொய்ம்பினனும்–எங்கள் தலைவரான வீரவாகுதேவரும், இலக்கருடன் எண்மர்களும்–இலக்கத்தெட்டு வீரர்களும், தங்கள் சிருர் தமை விளித்து–தங்கள் புதல்வர்களே அழைத்து, தத்தமது சிறப்பு நல்கி–தத்தம் வரிசைகளேக் கொடுத்து, அங்கிவன்மன் பால் இருத்தி–அக்கினி வன்மனிடம் அவனுடைய சுற்றமாக இருத்தி, அரிய தவம் ஆற்றினர்–அரிய தவத்தைச் செய்தார்கள். (125)

மாதவமெண் ணிலவியற்றி மானுடத்தன் மையைநீங்கி
யாதிதனி லடலெய்தி யருண்முறையா லனேவர்களு
மேதகுசீர்க் கந்தகிரி விரைந்தேகி வேற்கடவுள்
பாதமலர் பணிந்தேத்திப் பத்திமைசெய் துற்றனரால்.

அனேவர்களும்–வீரவாகு முதலிய இலக்கத்தொன்பது வீரர்களும், எண்ணில மாதவம் இயற்றி–அளவற்ற பெரிய தவங்களேச் செய்து, அருள் முறையால்–சுப்பிரமணிய சுவாமியின் திருவருள் நீதியினுலே, மானுடத் தன்மையை நீங்கி–மானுட வடிவம் முதலிய தன்மைகளே நீங்கி, ஆதிதனில் அடல் எய்தி- ஆதிக்கண் நந்தி கணத்தவராயிருந்த பொழுது உள்ள பராக்கிரமத்தைப் பெற்று, மேதகு சீர் கந்தகிரி விரைந்து ஏகி–மேன்மைதக்க சிறப்பினேயுடைய கந்தகிரியை விரைந்தடைந்து, வேல் கடவுள் பாத மலர்

பணிந்து ஏத்தி—வேற்படையைத் தாங்கிய கந்தசுவாமியின் பாதமலர்களை வணங்கித் துதித்து, பத்திமை செய்து உற்றனர்—அப்பாதங்கள் மீது பத்தி செய்துகொண்டிருந்தார்கள். (126)

ஆகையா லயனறியா வருமறைமூ லந்தெரிந்த
வேகநா யகன்விரத மெவரேனும் போற்றியிடி
னோகையா னினைந்தவெலா மொல்லைதனிற் பெற்றிடுவர்
மாகமே லிமையவரும் வந்தவரை வணங்குவரே.

ஆகையால்—சுப்பிரமணியப் பெருமானது பெருங்கருணைத் திறம் இங்ஙனம் இருந்தவாற்றால், அயன் அறியா அருமறை மூலம்—பிரமதேவரும் அறியாத அரிய வேதமூலமாகிய பிரணவத்தின் பொருளை, தெரிந்த—தவத்திற் கதித்த அகத்திய மகாமுனிவருக்கு உபதேசித்தருளிய, ஏக நாயகன் விரதம்—சர்வலோகைக நாயகராகிய சிவசுப்பிரமணியப் பெருமானின் விரதங்களை, எவரேனும் போற்றியிடின்—யாவரேயாயினும் தம் ஆற்றலுக்கு ஏற்றவாறு ஒன்றாகப் பலவாக விதிப்படி அநுட்டிப்பாராயின், ஓகையால் நினைந்த எலாம் ஒல்லைதனில் பெற்றிடுவர்—உவகையோடு கூடித் தாம் நினைந்தவைகளையெல்லாம் நினைந்தவாறே விரைந்து பெற்று இனிது வாழ்வார்கள்; அவரை மாகமேல் இமையவரும் வந்து வணங்குவர்—அந்த விரத சீலர்களை விண்ணுலகில் வாழுந் தேவர்களும் மண்ணுலகத்துக்கு வந்து வணங்குவார்கள்.

தெரிந்த—தெரிவித்த; பிறவினை விகுதி தொக்குநின்றது.

வாரத்தில் வெள்ளியும் நாளிற் கார்த்திகையும் திதியிற் சட்டியும் கந்த விரத காலமாம். இவ்விரதத்தை ஒன்றாகப் பலவாக விதிப்படி அநுட்டிப்பவர்,

* 'இந்திர ராகிப் பார்மேல் இன்பமுற்று இனிது மேவிச்
சிந்தையில் நினைந்த முற்றிச் சிவகதி யதனிற் சேர்வர்'.

இது, சத்தியம் சத்தியம் முக்காலுஞ் சத்தியம். (127)

கந்த விரதப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — 1800.

---

* கந். நூற்பயன் — செய். 4.

# வள்ளியம்மை திருமணப் படலம்

வெள்ளியங் கிரியி னோர்சார் விளங்கிய கந்த வெற்பி
னள்ளுறு நகரந் தன்னி னங்கையோ டினிது மேவு
மள்ளிலை வேற்கை நம்பி யம்புவி யெயினர் போற்றும்
வள்ளியை வதுவை செய்த மரபினை வழாது சொல்வாம்.

அம் வெள்ளிக் கிரியின்—அழகிய வெள்ளி மயமாகிய திருக்கைலாச மலையின், ஓர் சார் விளங்கிய—ஒருபால் விளங்கிய, கந்த வெற்பில்—கந்த கிரியில், நள் உறு நகரம் தன்னில்—நடுவண் அமைந்த திருக்கோயிலில், நங்கையோடு இனிது மேவும்—நங்கையாகிய தெய்வயானையம்மையாரோடு இனிது வீற்றிருக்கின்ற, அள் இலை வேல் கை நம்பி—கூரிய இலைவடிவமான மூன்று பத்திரங்களோடு கூடிய வேற்படையைத் தாங்கிய திருக்கரத்தினையுடைய நம்பியாகிய சுப்பிரமணியப்பெருமான், அம்புவி எயினர் போற்றும்—பூமியிலுள்ள நம்பியரசன் முதலிய வேட்டுவர் வளர்த்துவருகின்ற, வள்ளியை வதுவை செய்த—வள்ளிநாயகியாரைத் திருமணஞ் செய்த, மரபினை—களவியன் மரபை, வழாது—வேத நெறிக்கு வழுவின்றி, சொல்வாம்—கூறுவாம். (1)

### வேறு

அயன்ப டைத்திடு மண்டத்துக் காவியாய்ப்
பயன்ப டைத்த பழம்பதி யென்பரா
னயன்ப டைத்திடு நற்றொண்டை நாட்டினுள்
வியன்ப டைத்து விளங்குமேற் பாடியே.

நயன் படைத்திடும்—பலவகை நலங்களையுந் தன்பாற்கொண்ட, நல் தொண்டை நாட்டினுள்—சான்றோருடைத்தாகிய நல்ல தொண்டை நாட்டின்கண்ணே, வியன்படைத்து—பல்லாற்றானும் பெருமை படைத்து, விளங்கும் மேற்பாடி—விளங்காநின்ற மேற்பாடி என்கின்ற ஊரை, அயன் படைத்திடும் அண்டத்துக்கு ஆவியாய்—பிரமதேவர் படைக்கும் அண்டமாகிய உடலுக்கு ஆன்மாவாய், பயன் படைத்த—பயன்பாடு பொருந்திய, பழம்பதி என்பர்—பழைமையாகியதோர் ஊர் என்று சிறப்பித்துக் கூறுவர்.

பெருமை, திருமுருகன் தேடிவர வள்ளி வளர்ந்தமையானெய்தியதாம்; அதுவே பயன்பாடுமாம். இவ்வாற்றால் மேற்பாடியாகிய பழம்பதி அண்டத்துக்கு ஆவியாயிற்று. அண்டமென்றது இந்த அண்டத்தை. (2)

ஆய தொல்லே யணிநகர் ஞாங்கரின்
மீயு யர்ந்ததொர் வெற்புநிற் கின்றதாற்
பாய தெண்கடற் பாரள விட்டிடு
மாய வன்றன் வடிவென நீண்டதே.

ஆய—அவ்வாருய, தொல்லே அணி—பழைமையாகிய அழகுகள் அமைந்த, நகர் ஞாங்கரில்—மேற்பாடி என்னும் ஊரினிடத்தே, பாய தெள் கடல்—பரவிய தெளிந்த நீரையுடைய கடலாற் சூழப்பட்ட, பார் அளவிட்டிடு—பூமியை அளந்த, மாயவன் தன் வடிவு என—திருநெடுமாலின் வடிவம்போல, நீண்டது மீ உயர்ந்தது ஓர் வெற்பு—நீண்டதாகிய மிக உயர்ந்ததொரு மலே, நிற்கின்றது—நிலேபெற்று நிற்கின்றது.

ஞாங்கர் நீண்டு நிற்கின்றதென்க. ஞாங்கர்—இடம்; மத்தியாகிய இடம் எனக் கொள்க. (3)

அரவுந் திங்களு மாறுமெல் லாரமுங்
குரவுங் கொன்றையுங் கூவிள மும்மிசை
விரவுந் தன்மையின் வெற்புவிண் ணேரெலாம்
பரவுங் கண்ணுதற் பண்ணவன் போன்றதால்.

அரவும்—பாம்பும், திங்களும்—சந்திரனும், ஆறும்—நதியும், மெல் ஆரமும்—மென்மையாகிய திருவாத்தியும், குரவும்—குராவும், கொன்றையும்—கொன்றையும், கூவிளமும்—வில்வமும் ஆகிய சிவபெருமானது திருமுடிமீது இருப்பவைகள், மிசை விரவும் தன்மையின்—தனது உச்சிக்கண்ணும் பொருந்தியிருக்குந் தன்மையினுலே, வெற்பு—தொண்டைநாட்டு மேற்பாடிக்கண் நின்றதாகிய அந்த மலே, விண்ணேர் எலாம் பரவும் கண் நுதல் பண்ணவன் போன்றது—தேவர்களெல்லாம் வணங்குகின்ற நெற்றிக்கண்ணினேயுடைய சிவபெருமானே நிகர்த்தது. (4)

வாலி தாகிய வானரு வித்திர
ணீல மேக நிரையொடு தாழ்தலிற்
ரூேலு நூலுந் துயல்வரு மார்புடை
நாலு மாமுகன் போலுமந் நாகமே.

அ நாகம்—மேற்பாடிக்கண்ணதாகிய அந்த மலே, வாலிது ஆகிய—தூய வெண்ணிறத்தை உடைத்தாகிய, வான் அருவித் திரள்—உயர்வாகிய மேலிடத்திலிருந்து கீழ் நோக்கி வருகின்ற அருவித் திரள், நீல மேக நிரை ஒடு தாழ்தலின்—தன்மீது படிந்த நீலநிறம்பொருந்திய முகிற்படலத்தை அகப்படுத்திக்கொண்டு தாழ்ந்தொழுகிச் செல்லுதலால், நூலும்—வெண்ணிறம் படைத்த முப்புரி நூலும், தோலும்—அந்நூலிற் கட்டப்பட்ட கிருஷ்ண

ஜினம் என்னுங் கருமான்றேலும், துயல்வரும் மார்பு உடை—ஒருங்கு கிடந்து அசைகின்ற மார்பினையுடைய, மா நாலுமுகன் போலும்—பெருமை பொருந்திய நான்கு முகங்களையுடைய பிரமதேவரையும் ஒக்கும்.

முகிலைச் சுருட்டிக்கொண்டு கீழ்நோக்கித் தாழும் அருவித் திரள், தோல் தொடுக்கப்பட்ட நூலை ஒத்தலின், அம்மலை பிரமதேவரை ஒத்ததென்க. மூன்று பாட்டுக்களானும் மும்மூர்த்திகளோடொப்பிட்டு அம்மலையின் பெருமை பேசியதாம். (5)

குமர வேள்குற மங்கையொ டிவ்விடை
யமரு மாலது காண்பனென் றுசையாற்
றமர வானதி தானணு குற்றிட
நிமிரு கின்றது நீள்கிரி யன்னதே.

தமர வான் நதி தான்—ஒலிக்கின்ற ஆகாய கங்கையானது, குமரவேள்—தன் குமாரனுகிய குமாரக்கடவுள், குற மங்கையொடு—குறமகளாகிய வள்ளி நாயகியோடு, இ இடை அமரும்—இம்மலையின்கட் களவுமணம் புரிந்து எழுந்தருளுவர்; அது காண்பன் என்று—அத் திருமணக் கோலத்தைக் கண்டு களிப்பேன் என்று, ஆசையால்—ஆசையோடு, நணுகுற்றிட—மணமகனையும் மருகியையும் நண்ணும்பொருட்டு, நிமிருகின்றது—நிமிருகின்ற தன்மையை, நீள் கிரி அன்னது—நீண்ட அந்த மலையானது நீண்டிருப்பதனுல் ஒத்தது.

ஆல், அசை. நண்ணுதல்—கிட்டுதல். வானதி நண்ணுதற்கு நிமிருகின்றது உபகாரமாமென்க. அணுகுற்றிட எனப் பிரித்து, வானதி காண்பேன் என்று ஆசையோடு வர, சம்பந்தியை வரவேற்கும்படி நிமிருகின்றதை அன்னது என உரைப்பினும் அமையும். தற்குறிப்பேற்றம்.

இனி மற்றேருரை வருமாறு:

மால்—திருமாலானவர், குற மங்கையொடு—தம் புதல்வியாகிய குறமகளோடு, குமரவேள் இவ்விடை அமரும்—, அது காண்பன் என்று—, ஆசையால்—ஆசையின் மிகுதிப்பாட்டால், நிமிருகின்றதை—மிக உயர்ந்து நிமிர்ந்து நிற்கின்றதை, நீள் கிரி அன்னது—அந்த நீண்ட மலை நீண்டு நிற்குந் தன்மையால் ஒத்தது.

உயர்ச்சி மிகுதியினுலே தமர வானதி அணுகும்படி நிமிருகின்றதென்க. ஆகாய கங்கையானது தம்மைக் கிட்டும்படி மால் நிமிருகின்றதை நீள்கிரி அன்னது என்றவாறு. (6)

## வேறு

கள்ளிறைத் திடுபூந் தண்டார்க் கடம்பணி காளை பன்னாட்
பிள்ளைமைத் தொழின்மேற் கொண்டு பெட்புட னெழுகும் வண்ணம்
வள்ளியைத் தன்பால் வைத்து வள்ளிவெற் பென்னு நாம
முள்ளவக் கிரியின் மேன்மை யுரைத்திடு மளவிற் றுமோ.

கள் இறைத்திடு—தேனைச் சொரிகின்ற, தண் கடம்பு தார் பூ அணி காளை—தண்ணிய கடம்பினது தாராகப் பூத்த பூவை அணிந்த காளையாகிய சுப்பிரமணியப்பெருமான், பிள்ளைமைத் தொழில் மேற்கொண்டு—பால லீலையாகிய திருவிளையாடலை மேற்கொண்டு, பெட்புடன் பல் நாள் ஒழுகும் வண்ணம்—காதலாகிய களவொழுக்கத்தின்கண் பல நாள்கள் ஒழுகும் வண்ணம், வள்ளியைத் தன்பால் வைத்து—வள்ளிநாயகியைத் தன்பால் வைத்திருக்கும் பேற்றைப் பெற்று அக்காரணத்தினாலே, வள்ளி வெற்பு என்னும் நாமம் உள்ள—வள்ளிமலை என்னுந் திருநாமம் படைத்த, அ கிரியின் மேன்மை—அந்த மலையின் மேன்மையாகிய சிறப்பு, உரைத்திடும் அளவிற்று ஆமோ—சொல்லாற் சொல்லும் எல்லையினையுடையதாகுமா.

தாராகப் பூத்த பூவாவது கடப்பமாலையாம்; அது கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பினதென்றுணர்க. காமவெகுளி மயக்கற்றார் செயலாதலின், 'பிள்ளைமைத் தொழில்' எனப்பட்டது. முதல் கரு உரியாகிய பொருள்வகை மூன்றனுள், தமிழ் நுதலிய களவாகிய உரிப்பொருளுக்கு, முதற்பொருளாகிய கால இடங்களுள், இடமாய முதற்பொருளாய் வள்ளி மலை அமைதலின், அதன் மேன்மை உரைப்பரிதாயிற்றென்க. (7)

செய்யவெண் குன்றி வித்துஞ் சீர்திகழ் கழைவீழ் முத்தும்
பையர வினங்க ளீன்ற பருமணித் தொகையு மீண்டிச்
சையம தெங்குஞ் சேர்த ருரகா கணங்க ளெல்லாம்
வெய்யவ னழற்கா ற்ருது வீழ்ந்தென விளங்கு கின்ற.

செய்ய குன்றி வித்தும்—செங்குன்றிமணிகளும், வெண் குன்றி வித்தும்—வெண் குன்றிமணிகளும், சீர் திகழ் கழை வீழ் முத்தும்—சிறப்புப் பொருந்திய மூங்கிலினின்றும் உதிர்ந்த முத்துக்களும், பை அரவு இனங்கள் ஈன்ற பரு மணித் தொகையும்—படம்பொருந்திய சர்ப்பக் கூட்டங்கள் கான்ற பருமையாகிய இரத்தினத் தொகுதிகளும், சையம் எங்கும் ஈண்டிச் சேர்தல்—அம் மலையின் எவ்விடங்களிலுஞ் செறிந்து பொருந்துதலையுடையனவாய், வெய்யவன் அழற்கு ஆற்றாது—சூரியனது வெப்பத்துக்கு ஆற்றாமல், வீழ்ந்த எல்லாம் தாரகா கணங்கள் என—கீழே விழுந்த எல்லாவகையான நட்சத்திரக் கூட்டங்களையும் போல, விளங்குகின்ற—ஆங்காங்குக் கிடந்து பிரகாசிக்கின்றன.

வித்து ஈண்டு மணி. அது பகுதிப்பொருள் விகுதி. உடையனவாய் என்பது அவாய்நிலைபற்றி வருவிக்கப்பட்டது. 'வீழ்ந்த' இறுதி விகாரப்பட்டு நின்றது.

வீழ்ந்தாலென என்பது வீழ்ந்தென நின்றதெனக் கொண்டு, சேர்தல் வீழ்ந்திருத்தலை ஒப்ப என உரைப்பினும் அமையும். (8)

கானுறு தளவம் பூத்த காட்சியாற் கழைக ளெல்லாந்
தூநகை முத்த மீன்ற தோற்றத்தாற் பொதும்பர் தன்னிற்
றேனமர் தொடைய ருங்குஞ் செய்கையாற் சிலம்பின் சாரன்
மீனமும் மதியும் பூத்த விண்ணென விளங்கிற் றம்மா.

கான் உறு தளவம் பூத்த காட்சியால்—வாசனைமிக்க முல்லைமலர்கள் மலர்ந்திருந்த அழகிய காட்சியினாலும், கழைகள் எல்லாம் ஈன்ற தூ நகை முத்தம் தோற்றத்தால்—மூங்கில்கள் யாவுஞ் சொரிந்த தூய ஒளியினையுடைய முத்துக்களின் பிரகாசத்தினாலும், பொதும்பர் தன்னில் தேன் அமர் தொடையல் தூங்கும் செய்கையால்—மரச்செறிவாகிய சோலைகளிலே தேன் நிறைந்திருக்குந் தேனிறால்கள் தூங்குகின்ற நிகழ்ச்சியினாலும், மீனமும்—பல்வகையான பலகோடி நட்சத்திரங்களும், மதியும்—பூரண மதியங்களும், பூத்த—உதயமான, விண் என—ஒரு ஆகாயம்போல, சிலம்பின் சாரல் விளங்கிற்று—அந்த வள்ளிமலையின் சாரல் பிரகாசித்தது.

கான் உறு என்ற விசேடணத்தால் தளவத்துக்கு ஆகுபெயர்ப் பொருள் கொள்ளப்பட்டது. அல் சாரியை. தொடுக்கப்படுவது தொடை. அது இறால் எனப்படும். இறால்—தேன்கூடு. அது உதய மதியம்போல்வது. பொதும்பரில் இறால்கள் பலவாம் ஆதலின் இறால்கள் என்றுரைத்து, மதியமும் பன்மை செய்யப்பட்டது. மதியம் பலவாம் விண் இன்மையின் இல்பொருளாம். (9)

கூட்டளி முரலு நீலக் குண்டுநீர்ச் சுனைகள் யாண்டுங்
காட்டிய பிறங்கல் யாருங் காணொணா வள்ள லீண்டே
வேட்டுவர் சிறுமிக் காக மேவுதல் காண்ப னென்னா
நாட்டமெய்ம் முழுதும் பெற்று நண்ணிய தன்மை போலாம்.

கூட்டு அளி முரலும்—தேனை ஓரிடத்துக் கூட்டுகின்ற வண்டுகள் ஒலிக்கின்ற, நீலக் குண்டு நீர்ச் சுனைகள்—நீலப் பூக்களையுடைய ஆழமாகிய நீர்ச் சுனைகளை, யாண்டும் காட்டிய பிறங்கல்—எவ்விடத்துந் தன்மீது கொண்ட அம்மலை அவ்வாறிருப்பது, யாரும் காணொணா வள்ளல்—எவராலுங் காண ஒண்ணாத அருள் வள்ளலாகிய சுப்பிரமணியப்பெருமான், ஈண்டு வேட்டுவர் சிறுமிக்காக—இங்கே குறவர் மகளாகிய வள்ளிநாயகியாரின் பொருட்டு, மேவுதல்—களவு முறையில் மேவுதலை, காண்பன் என்னா—யான் காணுவேன் என்று சங்கற்பஞ் செய்துகொண்டு, மெய் முழுதும் நாட்டம் பெற்று நண்ணிய தன்மை போலாம்—உடல் முழுவதும் பலவாகிய கண்களைப் பெற்று இருக்கின்ற ஒரு தன்மையை ஒப்பதாம்.

நீலச்சுனைகள் கண்களை ஒப்பன. காணொணாதாரைக் காணுவதன்றி, அவரது களவு தொழிலையுங் கண்டு பிடிப்பல் என்றவாறும். (10)

விண்ணுயர் பிறங்கன் மீது விரிகின்ற சுனைகண் மிக்குத்
துண்ணென விளங்கும் பெற்றி சூரியன் முதலோர் காண
மண்ணெனு மடந்தை யாங்கோர் மதலையில் வரம்பி லாத
கண்ணடி நிரைத்து வைத்த காட்சிபோன் றிருந்த மாதோ.

விண் உயர் பிறங்கல் மீது—ஆகாயத்தை அளாவி உயர்ந்த அந்த வள்ளி மலையின்மீது, விரிகின்ற சுனைகள்—பரவிக்கிடக்கின்ற நீர்ச்சுனைகள், மிக்கு—

மிகுந்து, துண்ணென விளங்கும் பெற்றி—காண்பார்க்கு விரைந்து காணப் பட்டு விளங்குங் காட்சிகள், சூரியன் முதலோர் காண—சூரியன் முதலிய தேவர்கள் தமதழகைத் தாங்கண்டு மகிழ, மண் எனும் மடந்தை—பூமிதேவி யாகிய பெண், ஆங்கு ஓர். மதலையில்—அங்கே ஒரு தூணின்மீது, வரம்பு இலாத கண்ணடி நிரைத்து வைத்த காட்சி போன்று இருந்த—எண்ணில்லாத கண்ணுடிகளை நிரைசெய்து வைத்த காட்சிகள் போன்றிருந்தன. (11)

ஒள்ளிணர்க் கணியின் கொம்ப ருலவியே யசோகில் வாவி
வெள்ளிலிற் பாய்ந்து மந்தி வியன்கடு வுறைப்ப மீள்வ
வள்ளிய ரிடத்துச் சென்றோர் மானவப் பண்பி லோர்பாற்
பொள்ளென விரப்பான் புக்குப் புலம்பொடு மீண்ட வாபோல்.

வள்ளியர் இடத்துச் சென்றோர்—கொடையாளிகளிடத்துச் சென்று இன் புற்ற இரவலர்கள், மானவப் பண்பு இலோர்பால் இரப்பான் புக்கு—மனுடப் பண்பு இல்லாத உலோபிகளிடத்தில் இரக்கும்படி சென்று, புலம்பொடு—வெறுமையாகிய தனிமையோடு, பொள்ளென மீண்டவா போல்—விரைந்து திரும்புமாறு போல, மந்தி—குரங்குகள், ஒள் இணர்க் கணியின் கொம்பர் உலவி—ஒள்ளிய பூங்கொத்துக்களையுடைய வேங்கை மரங்களின் கொம்பர் களிற் சஞ்சாரஞ் செய்து, அசோகில் வாவி—அசோக மரங்களிற்றாவி இங்ஙு னம் இன்புற்ற பின்பு, வெள்ளிலில் பாய்ந்து—விளாமரங்களிற் பாய்ந்து, வியன் கடு உறைப்ப மீள்வ—பெரிய கூர்மையாகிய முட்கள் அழுந்தி உறுத்த மீளுவன.

புலம்பொடு மீள்வ என்க. புலம்பு, துன்பமுமாம். (12)

தொகையுறு குலைச்செங் காந்த டுடுப்பெடுத் தமருஞ் சூழ்விற்
சிகையுறு தோகை மஞ்ஞை செறிந்துலா வுற்ற தன்மை
யகையுறு கழைகொன் றுண்ட வாரழல் சிதற வாங்கே
புகையுறு கின்ற தன்மை போலவே பொலிந்த தம்மா.

தொகை உறு குலைச் செங்காந்தள்—தொகையான் மிக்க பூங்கொத்துக் களையுடைய செங்காந்தள்கள், துடுப்பு எடுத்து அமரும் சூழ்வில்—மேலும் மேலும் முகைக் கொத்துக்களை எடுத்துக்கொண்டிருக்கின்ற அந்த வள்ளிமலைச் சாரலில், சிகை உறு தோகை மஞ்ஞை—உச்சிச் சூட்டினையுடைய விரிந்த கலாபத்தோடு கூடிய மயில்கள், செறிந்து உலாவுற்ற தன்மை—தம்முட் செறிந்து அகவி உலாவுதலைப் பொருந்திய தன்மையானது, அகை உறு கழை—ஒன்றோடொன்று நெருங்குதலைப் பொருந்துகின்ற மூங்கில்களை, கொன்று உண்ட ஆர் அழல் சிதற—அழித்து உண்டு எழுந்த நிறைவாகிய அக்கினி அயலிட மெங்குஞ் சிதற, ஆங்கே—அவ்வக்கினி சிதறிய இடங்களில், புகை உறுகின்ற தன்மை போலப் பொலிந்தது—புகை மிக்கு எழுகின்ற தன்மைபோலப் பொலிவுபெற்றிருந்தது.

காந்தளும் மயிலும், அக்கினியும் புகையும் போன்றிருந்தன. வள்ளி மலையில் முருகனுக்கு உகந்த காந்தளும் மயிலும் அமைந்தமை காண்க. (13)

கண்டுதங் கேளிர் தம்மைக் கைகொடு புல்லி யில்லங்
கொண்டுசெல் பான்மை யுன்னி விலக்குறு கொள்கைத்தென்ன
விண்டொடர் செலவிற் றாகும் வெஞ்சுடர்க் கதிரை வெற்பிற்
றண்டலை கணியின் கொம்பாற் றழீஇக்கொடு தடுக்க லுற்ற.

தம் கேளிர் தம்மைக் கண்டு—தமது சுற்றத்தவர்களை வழியிற் கண்டு, இல்லம் கொண்டு செல் பான்மை உன்னி—அவர்களைத் தமது இல்லத்துக்கு அழைத்துக்கொண்டு செல்லுகின்ற உபசார முறைமையினை உட்கொண்டு, கை கொடு புல்லி—கைகளினாலே தழுவி, விலக்குறு கொள்கைத்து என்ன—மேற் செல்லவொட்டாது தடுக்கின்ற கோட்பாட்டினையுடையதொரு தன்மை போல, வெற்பில் தண்டலை—அவ் வள்ளிமலைச் சோலைகள், விண் தொடர் செல விற்று ஆகும் வெம் சுடர்க் கதிரை—வானத்தின்கட் செல்லுஞ் செலவினை யுடையதாகும் வெம்மையாகிய கிரணங்களையுடைய சூரியனை, கணியின் கொம்பால் தழீஇக்கொடு—வேங்கைமரத்தின் கொம்பராகிய கைகளினாலே தழுவிக்கொண்டு, தடுக்கல் உற்ற—மேற்செல்லவொட்டாது தடுத்தலைச் செய்தன.

சோலையினுயர்ச்சி கூறியவாறு. (14)

நிறையழி கடமால் யானை நெடுவரைச் சிகரம் பாய்ந்து
விறலொடு முழங்க வாங்கோர் விடரளை மடங்கல் கேளாக்
கறுவுகொள் சினத்தி னார்க்குங் கம்பலை கனக னெற்றுந்
தறியிடை யிருந்த சீயத் தழங்குர லென்ன லாமால்.

நிறை அழி கடம் மால் யானை—நிறையழிந்த மதமயக்கத்தினையுடைய யானை, நெடுவரைச் சிகரம் பாய்ந்து—நீண்ட அந்த மலையின் சிகரத்திற் பாய்ந்து, விறல் ஒடு முழங்க—வெற்றிப்பாட்டோடு பிளிறுதலைச் செய்ய, ஆங்கு ஓர் விடர் அளை மடங்கல் கேளா—அங்கே ஒரு பிளப்பில் உள்ள குகையி லிருந்த சிங்கம் அப்பிளிற்றொலியைக் கேட்டு, கறுவு கொள் சினத்தின் ஆர்க்கும் கம்பலை—கறுவுதல்கொண்ட சீற்றத்தோடு கர்ச்சிக்கின்ற முழக்கம், கனகன் எற்றும் தறியிடை இருந்த—இரணியன் எற்றுநின்ற தூணின்கண் அதனைப் பிளந்து வெளிப்பட்ட, சீயத் தழங்கு குரல் என்னலாம்—நரசிங் கத்தினது முழங்குகின்ற கர்ச்சனையேயாம் என்று கூறலாம்.

தழங்கு குரல், தழங்குரல் என நின்றது. (15)

பறையடிப் பதனுற் சேணிற் பயன்விரிப் பார்போன் மாறு
யறையடிப் பாந்த ளார்ப்ப வகலிரு விசும்பே ரார்ப்பக்
கறையடித் தொகுதி யார்ப்பக் கடுந்திற லரிமா னார்ப்பச்
சிறையடிக் கொண்டு சிம்பு ளார்த்திடத் திங்கள் செல்லும்.

அடி அறை பாந்தள் மாறுய் ஆர்ப்ப—அம்மலையின் அடிக்கணுள்ள முழைஞ்சுகளிலிருக்கும் பாம்புகள் சந்திரனுகிய தனக்கு மாறுய் ஆரவாரிக்க, மாறுய்—அப் பாம்புகளுக்கு மாறுய், அகல் இரு விசும்பு ஏறு ஆர்ப்ப—அகன்ற பெரிய ஆகாயத்திலுள்ள இடியேறு ஆரவாரிக்க, மாறுய்—அதற்கு மாறுய், கறை அடித் தொகுதி ஆர்ப்ப—உரல்போன்ற அடியினையுடைய யானைக்கூட்டம் ஆரவாரிக்க, மாறுய்—அதற்கு மாறுய், கடும் திறல் அரிமான் ஆர்ப்ப—கடுந் திறலினையுடைய சிங்கக்கூட்டம் ஆரவாரிக்க, மாறுய்—அதற்கு மாறுய், சிறை அடிக் கொண்டு சிம்புள் ஆர்த்திட—சிறையை அடித்தலைச் செய்து கொண்டு சரபப் பறவைகள் ஆரவாரிக்க [இவ்வாரவாரங்களையெல்லாம் பயன்படுத்திக்கொண்டு], பறை அடிப்பதனுல் பயன் விரிப்பார்போல் திங்கள் சேணில் செல்லும்—பறையறைவதன் மூலம் வரக்கடவதொரு திருமணப் பயனை உலகம் முழுவதுக்கும் விரித்துரைத்துச் செல்லுவதுபோலச் சந்திரன் அம்மலைமீது உதயமாய் ஒன்றற்கொன்று மாறுய பல்வகை ஒலிகள் ஒலிக்க ஆகாயத்தின்கட் செல்லாநிற்கும்.

திருமணம், திருமுருகன் வள்ளி திருமணம் என்க. அது உலகுக்குறுதி பயப்பதாதலின் பயன் எனப்பட்டது. விரிப்பார் தொழிற்பெயர்; விரிப்பது என்னும்பொருட்டு. (16)

இன்னபல் வளமை சான்ற கிரிதனி லெயின ரீண்டி
மன்னிய தாங்கோர் சீறூர் வதனமா றுடைய வள்ளல்
பின்னரே தன்பான் மேவப் பெருந்தவந் தன்னை யாற்றிப்
பொன்னக ரிருந்த வாபோற் புன்மையற் றிருந்த தம்மா.

இன்ன பல் வளமை சான்ற கிரிதனில்—இன்னேரன்ன பலவகை வளங்கள் மிக்க அவ் வள்ளி மலையிலே, எயினர் ஈண்டி ஓர் சீறூர் மன்னியது—வேடுவர்கள் செறியப்பெற்று ஒரு சிற்றூர் நிலைபெற்றிருந்தது; வதனம் ஆறு உடைய வள்ளல்—ஆறு திருவதனங்களையுடைய அருள்வள்ளலாகிய சுப்பிரமணியப் பெருமான், பின்னர் (உம்)—முன்னர்ப் போலப் பின்னும் ஒருமுறை, தன்பால் மேவ—தன்னிடம் எழுந்தருளும்படி, பொன்னகர் பெரும் தவம் தன்னை ஆற்றி—சுவர்க்க நகரமானது பெரிய தவத்தைச் செய்துகொண்டு, ஆங்கு இருந்தவா போல்—அவ்வள்ளிமலையின் கண்ணே வந்து இருந்தவாறுபோல, புன்மை அற்று இருந்தது—புன்மை யாதும் இன்றித் தூய்மையுற்றிருந்தது.

முன்னர், தெய்வநாயகி காரணமாக வள்ளல் தன்பால் மேவப் பெருந்தவம் புரிந்த பொன்னகர், பின்னரும் வள்ளிநாயகி காரணமாக வள்ளல் தன்பால் மேவ வள்ளிமலைக்கண்ணதாகியதொரு சிற்றூராய்ப் பெருந்தவம் இருந்தது எனக் கற்பனை செய்து சிற்றூரைச் சிறப்பித்தவாறு. 'ஆங்கு' என்பதை அசையெனக் கோடலுமாம். பின்னரே என்பதில் ஏ அசை. உம்மை வருவிக்க.

இனிப் 'பின்னர்' என்பதற்கு, 'இனி' எனப் பொருள் கொண்டு, எயினர் மன்னியதாகியதொரு சிற்றூர், வள்ளல் இனித் தன்பால் மேவத் தவத்தை ஆற்றிக்கொண்டு, ஒருகாலத்திலே பொன்னகர் வள்ளலை எதிர்பார்த்திருந்த

வாறு போல, வள்ளலை எதிர்பார்த்துக்கொண்டு, அக்கிரியிற் புன்மையற் றிருந்தது என்றிவ்வாறு பொருள்கோடல் நேரிதாம். பொன்னகர் புன்மையற் றிருந்தவாபோல் இருந்தது எனினுமாம். பொன்னகர்க்குப் புன்மை, 'காடு போந்தனன் இந்திரன் பொன்னகர் கரிந்து பாடு சேர்ந்தது' என்பதனு லறிக. (17)

ஆயதோர் குறிச்சி தன்னி லமர்தருங் கிராதர்க் கெல்லா
நாயக நுகம்பூண் டுள்ளோ ஞமவே னம்பி யென்போன்
மாயிருந் தவமுன் செய்தோன் மைந்தர்கள் சிலரைத் தந்து
சேயிழை மகட்பே றுன்னித் தெய்வதம் பராவி யுற்றான்.

ஆயது குறிச்சி தன்னில்—அத்தன்மையினை உடையதாகிய அச்சிற்றூரில், அமர் தரும் கிராதர்க்கு எல்லாம்—இருக்கின்ற வேடர் அனைவருக்கும், நாயக நுகம் பூண்டுள்ளோன்—நாயகமாகிய தலைமை நுகத்தைப் பூண்டு அரசு செய்பவன், நாம வேல் நம்பி என்போன்—அச்சத்தைத் தரும் வேற்படை யைத் தாங்கிய நம்பி என்று பெயர் கூறப்படுவோன் ஆவன்; முன் மா இரும் தவம் செய்தோன்—அவன் முற்பிறப்பின்கண்ணே மிகப் பெரிய தவத்தைச் செய்தவன்; மைந்தர்கள் சிலரைத் தந்து—இப்பிறப்பின்கண்ணே புத்திரர்கள் சிலரைப் பெற்று, சேயிழை மகள் பேறு உன்னி—செம்மையாகிய ஆபரணத்தை யுடைய மகட்பேற்றையும் நினைந்து, தெய்வதம் பராவி உற்றான்—அதன் பொருட்டு அந்நிலத் தெய்வமாகிய சுப்பிரமணிய சுவாமிக்கு வழிபாடு செய் திருந்தான்.

ஓர்—அசை. நுகம்—பாரம். 'மடுத்த வாயெல்லாம் பகடன்னான்' என்க. மகட்பேறு—மகளைப் பெறுதல். (18)

அவ்வரை மருங்கு தன்னி லைம்புல னொருங்கு செல்லச்
செவ்விதி னடாத்துந் தொன்மைச் சிவமுனி யென்னு மேலோ
னெவ்வெவர் தமக்கு மெய்தா வீசனை யுளத்துட் கொண்டு
சைவநல் விரதம் பூண்டு தவம்புரிந் திருத்த லுற்றான்.

அ வரை மருங்கு தன்னில்—நம்பியரசன் மகட்பேறுன்னி வழிபாடு செய் கின்ற அந்த மலையின் ஒரு பக்கத்திலே, ஐம்புலன் ஒருங்கு செல்ல—ஐம்புலங் களும் ஒரு நெறிப்பட்டு ஒருங்கு செல்லும்படி, செவ்விதின் நடாத்தும்—அவற்றைச் செவ்வனே அறிவின்வழி நடத்துகின்ற, தொன்மை சிவமுனி என்னும் மேலோன்—தொன்மையை மறவாத சிவமுனிவர் என்கின்ற மேலோர், எவ்வெவர் தமக்கும் எய்தா ஈசனை உளத்து உட்கொண்டு—எவ் வகைப்பட்ட எவருக்கும் அடைதற்கரிய சிவபெருமானைத் தியானப்பொரு ளாக மனத்துட்கொண்டு, நல் சைவ விரதம் பூண்டு—நல்ல சிவ விரதங்களை மேற்கொண்டு, தவம் புரிந்து இருத்தல் உற்றான்—தவஞ் செய்துகொண் டிருந்தார்.

தொன்மை திருமாலாகிய தொன்மை என்க. சிவசம்பந்தம் சைவம் ஆதலின் சைவ விரதம் எனப்பட்டது. (19)

சிறப்புறு பெரிய பைங்கட் சிறுதலைச் சிலைக்கும் புல்வாய்
நெறிப்பொடு நிமிர்வுற் றான்ற நெடுஞ்செவிக் குறிய தோகைப்
பொறிப்படு புனித யாக்கைப் புன்மயிர்க் குளப்பு மென்கான்
மறிப்பிணை யொன்று கண்டோர் மருளவந் துலாவிற் றங்கண்.

சிறப்பு உறு பெரிய பைங்கண்—சிறப்புமிக்க மருட்சியாற் பெரிய பசிய கண்களையும், சிறு தலை—சிறிய தலையையும், சிலைக்கும் புல்வாய்—ஒலிக்கின்ற புன்மையாகிய வாயினையும், நெறிப்பொடு நிமிர்வுற்று ஆன்ற நெடும் செவி—நெறிப்புற்று நிமிர்ந்து அகன்ற நெடிய செவிகளையும், குறிய தோகை—குறிய வாலினையும், பொறி படு புனித யாக்கை—புள்ளி பொருந்திய தூய உடலினையும், புன் மயிர்—நொய்ய மயிரினையும், குளப்பு மென்கால்—குளம் போடு கூடிய மென்மையாகிய கால்களையுமுடைய, மறிப் பிணை ஒன்று—மான்பிணை ஒன்று, கண்டோர் மருள—தன்னைக் கண்டோர் மோகங் கொள்ளும்படி, அங்கண் வந்து உலாவிற்று—அச் சிவமுனிவர் தவஞ் செய்துகொண்டிருக்கின்ற அவ்விடத்தில் வந்து உலாவியது.

புன்மை—சிறுமை. (20)

போர்த்தொழில் கடந்த வைவேற் புங்கவ னருளால் வந்த
சீர்த்திடு நவ்வி தன்னைச் சிவமுனி யென்னுந் தூயோன்
பார்த்தலு மிளமைச் செவ்வி படைத்திடும் பிறனிற் கண்ட
தூர்த்தனின் மைய லெய்திக் காமத்தாற் சுழல லுற்றான்.

போர்த் தொழில் கடந்த வைவேல்—போர்த்தொழிலில் மேம்பட்ட கூரிய வேற்படையைத் தாங்கிய, புங்கவன் அருளால் வந்த—உயர்ந்தோரான சுப்பிரமணியப் பெருமானது திருவருளால் ஆண்டுப் போந்து உலாவிய, சீர்த்திடு நவ்வி தன்னை—சிறப்புற்ற அந்த மான்பிணையை, சிவமுனி என்னும் தூயோன் பார்த்தலும்—சிவமுனிவர் என்கின்ற மகா புனிதர் காட்சிமாத்திரையானே நோக்கிய அளவில், இளமைச் செவ்வி படைத்திடும்—இளமைப் பருவமும் அழகும் பொருந்துகின்ற, பிறன் இல் கண்ட தூர்த்தனின்—பிறன் மனையாளொருத்தியைக் கண்ணுற்ற காமுகனொருவனைப்போல, மையல் எய்தி—மயக்கம் எய்தி, காமத்தால் சுழலல் உற்றான்—காம வேகத்தால் அலமருவாராயினர்.

உரைத்துப் பயன்பெறலாகாமையின், பிறனிற் கண்ட தூர்த்தன் ஊமரிற் பொருமுவது போன்று முனிவர் பொருமலுற்றாரென்க. (21)

ஏமத்தின் வடிவஞ் சான்ற விலங்கெழிற் பிணையின் மாட்டே
காமத்தின் வேட்கை வைத்துக் கவலையா யவல மெய்தி
மாமத்த மளைபுக் கென்ன மனக்கருத் துடைந்து வேரு
யூமத்தம் பயன்றுய்த் தார்போ லுன்மத்த ளுகி யுற்ருன்.

ஏமத்தின் வடிவம் சான்ற—இன்பகனம் என்று சொல்லத்தக்கவாறு இன்பத்தின் வடிவம் மிக்கு அமைந்த, இலங்கு எழில் பிணையின் மாட்டு—பிரகாசிக்கின்ற அழகினையுடைய அப்பிணைமானிடத்து, காமத்தின் வேட்கை வைத்து—காமவேட்கையுற்று, கவலையாய் அவலம் எய்தி—கவலை மயமாய்த் துன்பம் அடைந்து, அளை மாமத்தம் புக்கு என்ன—தயிரானது பெரிய மத்துத் தன்பாற் புகப்பெற்ருற்போல, மனக் கருத்து உடைந்து வேருய்—தமது மனக்கருத்துச் சிதறி வேறுபட்டு, ஊமத்தம் பயன் துய்த்தார் போல்—ஊமத்தையின் வித்தை உண்டவரைப்போல, உன்மத்தன் ஆகி உற்ருன்—மயக்கம் உடையவராயிருந்தார். (22)

படவர வனைய வல்குற் பைந்தொடி நல்லார் தம்பாற்
கடவுளர் புணர்ச்சி யென்னக் காட்சியி னின்பந் துய்த்து
விடலரு மார்வ நீங்கி மெய்யுணர் வெய்தப் பெற்றுத்
திடமொடு முந்து போலச் சிவமுனி யிருந்து நோற்ருன்.

அரவு படம் அனைய அல்குல் பைந்தொடி நல்லார் தம்பால்—அரவின் படத்தை ஒத்த அல்குலினையும் பசிய வளையலினையும் உடைய பெண்களிடத்து, கடவுளர் புணர்ச்சி என்ன—காட்சி மாத்திரையாலே துய்க்கின்ற தெய்வப் புணர்ச்சியாகிய உள்ளப் புணர்ச்சியை ஒப்ப, சிவமுனி காட்சியின் இன்பம் துய்த்து—சிவமுனிவர் காட்சி மாத்திரையானே அம்மானிடத்தில் இன்பத்தை அநுபவித்து, விடல் அரும் ஆர்வம் நீங்கி—நீங்குதற்கரிய காம ஆசை திருவருளாலே தானே நீங்கப்பெற்று, மெய் உணர்வு எய்தப் பெற்று—மெய்யுணர்வு தலைக்கூடி, முந்து போலத் திடமொடு இருந்து நோற்ருன்—முன்போலச் சலனமின்றித் தவஞ்செய்துகொண்டிருந்தார்.

மோகம் வந்தவாறே போகுமாறும் பெற்ருரென்க. (23)

நற்றவன் காட்சி தன்ஞ னவ்விபாற் கருப்பஞ் சேரத்
தெற்றென வறித றேற்றிச் செங்கண்மா லுதவும் பாவை
மற்றத னிடத்திற் புக்காள் வரைபக வெறிந்த வைவேற்
கொற்றவன் முன்னஞ் சொற்ற குறிவழிப் படரு நீராள்.

நல் தவன் காட்சி தன்னல்—நல்ல தவத்தையுடைய சிவமுனிவரின் காட்சி மாத்திரையானே, நவ்வி பால் கருப்பம் சேர—அந்த மான்பிணையிடத்துக் கருப்பம் உண்டாக, செங்கண் மால் உதவும் பாவை தெற்றென அறிதல்

தேற்றி—சிவந்த கண்களையுடைய திருமாலுதவும் புதல்வியாராகிய சுந்தரிப் பிராட்டியார் அதனை விரைந்து தெளிவுபெற அறிந்து, வரை பகஎறிந்த வைவேல் கொற்றவன்—கிரௌஞ்ச மலை பிளவு பட எறிந்த கூரிய வேற்படையைத் தாங்கிய சுப்பிரமணியப் பெருமான், முன்னம்—அமிர்தவல்லியுந் தாமும் அப்பெருமானைப் பெறுதற்குத் தவஞ்செய்துகொண்டிருந்த காலத்திலே, சொற்ற குறிவழி—திருவாய்மலர்ந்தருளிய அருட்குறிப்பின்வழியே, படரும் நீராள்—ஒழுகும் நீர்மையினையுடையராகையினாலே, அதனிடத்திற் புக்காள்—அத்தெய்விகக் கருப்பத்திற் பிரவேசித்தார். (24)

வேறு

மானி டத்தின் வருமைந்தன் முந்துநீ
மானி டத்தின் வருகென்ற வாய்மையான்
மானி டத்தின் வயினடைந் தாண்மரு
மானி டத்தின்மா னாகுமம் மான்மகள்.

மருமானிடத்தில்—தமது வழித்தோன்றலாகிய விஷ்ணுயஜசு என்னும் அந்தணனிடத்தில், மான் ஆகும்—இனிக் கற்கி என்னுங் குதிரையாய்ப் பிறக்கும், மால்—திருமாலின், மகள்—புதல்வியாராகிய சுந்தரிப் பிராட்டியார், மான் இடத்தின் வரு மைந்தன்—மகான் ஆகிய சிவபெருமானது நெற்றிக் கண்ணினின்றும் அவதரித்தருளிய சுப்பிரமணியப் பெருமான், முந்து—முன்பு சரவணத் தடாகத்திலே தவஞ்செய்துகொண்டிருந்த போது, நீ மானிடத்தின் வருக என்ற வாய்மையால்—சுந்தரவல்லியே நீ மாநுடப்பிறப்பெடுத்து நம்பால் வருவாயாக என்ற திருவருள்வாய்மையினாலே, மானிடத்தின் வயின் அடைந்தாள்—அந்த மானின் வயிற்றை அடைந்தார்.

மருமான்—வழித்தோன்றல். பிராமணர் பிரமதேவரின் புதல்வரெனப் படுதலின், விஷ்ணுயஜசு, பிரமாவைப் பெற்ற தாதையாகிய திருமாலின் மருமான் எனப்பட்டான். கலியுக முடிவில் விஷ்ணுயஜசுவிடந் திருமால் கற்கியாயவதரிப்பார் என்பது நூற்கொள்கை. (25)

அனைய காலையி லாயிடை நீங்கியே
புனித நவ்வி புனமெங்க ணுமுலாய்ச்
சுனையி னீருண்டொர் சூழலின் வைகியே
யினிய மால்வரை யேறி நடந்ததே.

புனித நவ்வி—பரிசுத்தமான அந்தமான், அனைய காலையில்—அச்சமயத்தில், ஆயிடை நீங்கி—அவ்விடத்தைவிட்டு நீங்கி, புனம் எங்கணும் உலாய்—அம் மலைச்சாரலிலுள்ள தினைப்புனம் எங்கும் உலாவி, சுனையின் நீர் உண்டு—மலைச் சுனைகளில் நீர் பருகி, ஓர் சூழலில் வைகி—ஒரு மரச்செறிவிற் சிறிது தங்கி, இனிய மால்வரை ஏறி நடந்தது—பின்பு சார்ந்தார்க்கு இனிமை செய்கின்ற பெரிய அந்த மலையின்மீது மெல்லென ஏறி நடந்தது. (26)

நடந்த நவ்வி நலத்தகு வெற்பினி
லிடந்தொ றுஞ்செறி யேனற் புனமெலாங்
கடந்து போயது காவல்கொள் வேட்டுவர்
மடந்தை மார்கள் வரிவிழி யென்னவே.

நலம் தகு வெற்பினில் நடந்த நவ்வி—நன்மையுாகிய வளங்கள் பொருந்திய அம்மலையில் நடந்துசென்ற அந்த மான்பிணை, இடம் தொறும் செறி ஏனல் புனம் எலாம்—அம்மலையின் இடந்தோறுஞ் செறிந்திருக்கின்ற தினைப்புனங்களை யெல்லாம், காவல் கொள் வேட்டுவ மடந்தைமார்கள் வரி விழி என்ன கடந்து போயது—ஆங்காங்கே காவல் செய்கின்ற வேட்டுவ மகளிரின் செவ்வரி பரந்த கண்கள் போன்று கடந்து சென்றது.

மகளிர் மானேக்கியராதலின் அவர் நோக்குச் சென்றெனச் சென்றதென்க. (27)

பிள்ளை யீற்றுப் பிணையெயின் சேரியி
னுள்ள மாதரு ளித்தலைக் கோல்கொடு
வள்ளி கீழ்புகு மாமுதல் வௌவியே
பொள்ளல் செய்திடு புன்புலம் புக்கதே.

பிள்ளை ஈற்றுப் பிணை—அந்தத் தலையீற்று மான்மறி, எயின் சேரியில் உள்ள மாதர்—வேட்டுவச் சேரியில் உள்ள மகளிர்கள், உளித் தலைக் கோல் கொடு—உளியைத் தலைக்கட் கொண்ட கோல்வடிவமான கிழங்ககழ் கருவியைக் கொண்டு, கீழ் புகும் மா வள்ளி முதல் வௌவி—நிலத்தின்கீழ்ப் புகும் பெரிய வள்ளிக்கிழங்கை அகழ்ந்தெடுத்து, பொள்ளல் செய்திடு புன்புலம் புக்கது—குழிசெய்த புன்மையாகிய தினைப்புனம் ஒன்றிற் புகுந்தது.

பிள்ளை, முன் ஈன்று பயிலாமை குறித்தது. உளித் தலைக்கோல், பாரை என்னுங் கிழங்ககழ் கருவி. புன்புலம்—புன்செய் நிலம்; வறும் புலமுமாம். (28)

தோன்ற லுக்குத் துணைவியைத் தொல்பிணை
தான்ற ரித்துத் தளர்ந்து தளர்ந்துபோய்
மான்ற ரற்றி யுயிர்த்து வயிறுநொந்
தீன்று வள்ளி யிருங்குழி யிட்டதால்.

தொல் பிணை—இலக்குமியாகிய தொன்மையோடு கூடிய அந்த மான் பிணை, தோன்றலுக்குத் துணைவியை—பெருமையிற் சிறந்தோராகிய சுப்பிர மணியப் பெருமானுக்குத் துணைவியார் ஆவாரை, தான் தரித்து—தான் தனது கருப்பத்தில் ஒருவாறு தாங்கி, தளர்ந்து தளர்ந்து போய்—நடை தளர்ந்து மெல்லென்று போய், மான்று—மயங்கி, அரற்றி—அழுது, உயிர்த்து—நெட்டுயிர்த்து, வயிறு நொந்து—வயிறுளைந்து, வள்ளி இரும் குழி ஈன்றிட்டது—வள்ளிக் கிழங்கை அகழ்ந்தெடுத்த பெரியதொரு குழியில் ஈன்றது. (29)

லில்லாத சிறப்பினையுடைய சரஸ்வதி தேவியின் இனிய இசையோ, என்று அயிர்க்க—என்று கேட்டவர்கள் சந்தேகிக்கும்படி, அழுதிட்டனள்—அழுதாள்.

கின்னர ஒலியோ என்பதற்கு இரட்டையாகிய கின்னர மிதுனப் பட்சிகளின் இசையோ என்றுரைப்பினும் அமையும். (32)

அந்த வளவைதனி லாறிரண்டு மொய்ம்புடைய
வெந்தை யருளுய்ப்ப வெயினர்குலக் கொற்றவனும்
பைந்தொடிநல் லாளும் பரிசனங்கள் பாங்கெய்தச்
செந்தினையின் பைங்கூழ் செறிபுனத்துப் புக்கனரே.

அந்த அளவை தனில்—பிராட்டியார் அழுத அந்தச் சமயத்தில், ஆறு இரண்டு மொய்ம்புடைய எந்தை அருள் உய்ப்ப—பன்னிரண்டு திருப்புயங்களையுடைய எம் தந்தையாகிய சுப்பிரமணியப் பெருமானது திருவருள் தூண்டுதல் செய்ய, எயினர் குலக் கொற்றவனும்—வேட்டுவர் குலத்துக்கு அரசனாகிய நம்பியும், பைந்தொடி நல்லாளும்—அவன் தேவியாகிய பசிய வளையலையணிந்த நன்மையினையுடைய கொடிச்சியும், பரிசனங்கள் பாங்கு எய்த—பரிசனங்கள் தமக்குப் பக்கத்தே வர, செந்தினையின் பைங்கூழ் செறி புனத்துப் புக்கனர்—செம்மையாகிய பசிய தினைப்பயிர்கள் மிக்க புனத்தின்கட் சென்றார்கள். (33)

கொல்லை புகுந்த கொடிச்சியொடு கானவர்கோ
னல்லை நிகர்குழலா ளம்மென் குரல்கேளா
வெல்லை யதனி லெழுமொலியங் கேதென்னா
வல்லை தனிலவ் வறும்புனத்தில் வந்தனனே.

கொல்லை புகுந்த கானவர்கோன்—கொல்லையாகிய தினைப்புனத்தின்கட் சென்ற வேட்டுவ அரசனாகிய நம்பி என்பவன், கொடிச்சியொடு—உடன் வந்த தேவியாகிய கொடிச்சியோடு, அல்லை நிகர் குழலாள் அம் மென் குரல் கேளா—இருளையொத்த கூந்தலையுடையாராகிய அக் குழந்தையின் அழகிய மிருதுவான அழுகுரலைக் கேட்டு, எல்லை அதனில்—அப்பொழுது, அங்கு—அவ்விடத்தில், எழும் ஒலி ஏது என்னா—எழுகின்ற ஒலி யாதாம் என்று, வல்லை தனில்—விரைவில், அ வறும் புனத்தில் வந்தனனே—அந்த வெறுமைப் பட்டிருந்த புனத்தின்கண் வந்தான்.

கிழங்ககழ்ந்தெடுத்தமையால் வறிதாய் வெறுமை எய்திய புனம் என்க. (34)

வந்தான் முதலெடுத்த வள்ளிக் குழியில்வைகு
நந்தா விளக்கனைய நங்கை தனைநோக்கி
யிந்தா விலைதோ ரிளங்குழவி யென்றெடுத்துச்
சிந்தா குலந்தீரத் தேவிகையி லீந்தனனே.

வந்தான்—அந்த வறும் புனத்தில் வந்தோனை நம்பி அரசன், வள்ளி முதல் எடுத்த குழியில் வைகும்—வள்ளிக் கிழங்கை அகழ்ந்தெடுத்த குழியின் கண்ணே தங்கியிருக்கின்ற, நந்தா விளக்கு அனைய நங்கை தனை நோக்கி—தூண்டாத மணிவிளக்கத்தை ஒத்த நங்கையாகிய பிராட்டியைக் கண்டான்; கண்டு, இந்தா இஃது ஓர் இளங் குழவி என்று எடுத்து—இந்தா இஃது ஓர் இளங்குழந்தை என்று சொல்லிக்கொண்டு இரு கைகளாலும் எடுத்தான்; எடுத்து, தேவி கையில்—தேவியாகிய கொடிச்சியின் கைகளில், சிந்தாகுலம் தீர ஈந்தனன்—மனத்தின்கட் கொண்டதொரு வியாகுலம் நீங்கக் கொடுத்தான்.

இந்தா என்று எடுத்து ஈந்தான் என்க. இந்தா என்பது ஏற்றுக்கொள் என்னும் பொருட்டு. ஆனந்த மிகுதியால் எடுக்க முன்னமே கண்ட மாத்திரத்தே, 'இந்தா' என்றானென்க. இனி, இந்தா என்பதற்கு இவ்விடம் என்று உரைப்பதுமாம். சிந்தாகுலம் இருவர்பாலும் மகட்பேறு பற்றி உளதாயது. தீர என்னும் முக்கால வினையெச்சம் ஈண்டுக் காரணப் பொருளிலுங் காரியப் பொருளிலும் வந்தது. தனக்குக் குழவியைக் கண்டமாத்திரத்தே ஆகுலந் தீர்தலின், தேவிக்கு அது தீரும்படி எடுத்து ஈந்தானென்க. (35)

ஈந்தான் சிலைநிலத்தி லிட்டா னெழுந்தோங்கிப்
பாய்ந்தான் றெழித்தா னுவகைப் படுகடலிற்
றோய்ந்தான் முறுவலித்தான் றோள்புடைத்தான் றொல்பிறப்பி
னந்தா மியற்றுதவ நன்றாங்கொ லென்றுரைத்தான்.

ஈந்தான்—தூண்டாமணிவிளக்கத்தைத் தனது மனைவிளக்கத்தின் கைகளிற் கொடுத்தான்; சிலைநிலத்தில் இட்டான்—கொடுத்த அக்கணமே ஆனந்த மேலீட்டால் தன்னைப் பிரியாத தன் வில்லை நிலத்தின்கட் போகட்டான்; எழுந்து ஓங்கிப் பாய்ந்தான்—அவ்வளவிலமையாமல் மேலெழுந்து உயர்ந்து பாய்ந்தான்; தெழித்தான்—உரப்பி ஆரவாரஞ் செய்தான்; உவகைப் படு கடலில் தோய்ந்தான்—உவகையாகிய உவகை மாத்திரமே உண்டாகின்ற சமுத்திரத்தில் முழுகினான்; முறுவலித்தான்—சிரித்தான்; தோள் புடைத்தான்—புயங்களைக் கைகளாற் புடைத்தான்; தொல் பிறப்பில்—பழம் பிறப்புக்களில், நாம் இயற்று தவம் தாம்—யானும் என் மனைவியும் எமது குலமுஞ் செய்துவைத்த தவங்கள்தாம், நன்று ஆம் கொல்—பயன்பாடு படைத்தவை ஆகும் போலும்; என்று உரைத்தான்—என்று உரக்கக் கூறினான். (36)

கொற்றக் கொடிச்சி குழவியைத்தன் கைவாங்கி
மற்றப் பொழுதில் வயாவும் வருத்தமுமாய்ப்
பெற்றுக்கொள் வாள்போலப் பேணிப் பெரிதுமகிழ்
வுற்றுக் கனதனத்தி லூறுமமிர் தூட்டினளால்.

கொற்றக் கொடிச்சி—பெண்மைக் குணங்களால் வென்றி படைத்த அரசியாகிய கொடிச்சி, குழவியைத் தன் கை வாங்கி—நந்தாவிளக்காகிய குழந்தை

யைத் தன் கைகளிற் பெற்று, அப்பொழுதில் வயாவும் வருத்தமுமாய் பெற்றுக்கொள்வாள் போல—அப்பொழுது தானே கருப்பமுங் கருப்ப வேதனையுமாயிருந்து குழந்தையைப் பெற்றெடுப்பவள்போல, பேணி—தான் பெற்ற அக் குழந்தையைப் பேணி, பெரிது மகிழ்வு உற்று—அக் குழந்தையின் முகத்தை நோக்குந்தோறும் நோக்குந்தோறும் ஒருகாலைக்கொருகாற் பெரிதும்மகிழ்ச்சி மீக்கூர்ந்து, கன தனத்தில் ஊறும் அமிர்து ஊட்டினள்—அன்பு மிகுதியினாலே தனபாரத்திற் சுரக்கின்ற அமிர்தமாகிய பாலை ஊட்டினாள்.

சம்பந்தக் குழவியைக் கண்டஞான்று பாண்டிமாதேவிக்கு அன்புமிக்குப் பால்சுரந்தமை ஈண்டுச் சிந்தனை செய்யற்பாலதாம். (37)

வென்றிச் சிலையெடுத்து மேலைப் புனமகன்று
குன்றக் குறவன் குதலைவாய்க் கொம்பினுடன்
மன்றற் றுணைவிதனை வல்லைகொடு சீறூரிற்
சென்றக் கணத்திற் சிறுகுடிலிற் புக்கனனே.

குன்றக் குறவன்—அந்த மலைக்குறவனாகிய நம்பியரசன், வென்றிச் சிலை எடுத்து—முன் போகட்ட வெற்றி பொருந்திய வில்லை எடுத்துக்கொண்டு, மேலைப் புனம் அகன்று—முன் குறிப்பிட்ட அந்தப் புனத்தை விட்டு நீங்கி, குதலைவாய்க் கொம்பினுடன்—மதலை பொருந்திய வாயினையுடைய பூங் கொம்பு போன்ற குழந்தையுடன், மன்றல் துணைவி தனை வல்லை கொடு—மணவாட்டியாகிய கொடிச்சியை விரைந்து அழைத்துக்கொண்டு, சீறூரில் சென்று—சிற்றூரையடைந்து, அக்கணத்தில் சிறு குடிலில் புக்கனன்—அக் கணத்திற்றானே தனது சிறுகுடிலைச் சேர்ந்தான். (38)

அண்ட ரமுத மனையமகட் பெற்றிடலான்
மண்டு பெருமகிழ்வாய் மாத்தாட் கொழுவிடையைக்
கெண்டி யொருதன் கிளையோ டினிதருந்தித்
தொண்டகம தார்ப்பக் குரவைமுறை தூங்குவித்தான்.

அண்டர் அமுதம் அனைய மகள் பெற்றிடலால்—தேவாமிர்தத்தை ஒத்த அரும்பெறற் புதல்வியை வருந்தாதே பெற்றதனால், மண்டு பெரும் மகிழ்வு ஆய்—நிறைந்த பெரிய மகிழ்ச்சியை உடையோனாய், மா தாள் கொழு விடையைக் கெண்டி—பெரிய கால்களையுடைய கொழுமையாகிய கடாவை வெட்டி, ஒரு தன் கிளையோடு இனிது அருந்தி—ஒப்பற்ற தனது சுற்றத்தோடு இனிதாக விருந்தருந்தி, தொண்டகம் ஆர்ப்ப—குறிஞ்சி நிலத்துக்குரிய தொண்டகப்பறை ஒலிக்க, குரவை—குறக்குடி மகளிர் கைகோத்தாடுவதாகிய குரவைக் கூத்தை, முறை தூங்குவித்தான்—அக்கூத்துக்குரிய விதிப்படி நிகழச் செய்தான்.

மாத்தாள் என்றதனால் எருமைக்கடா எனக் கொள்க. (39)

காலை யதற்பின் கடவுட் பலிசெலுத்தி
வாலரிசி மஞ்சண் மலர்சிந்தி மறியறுத்துக்
கோல நெடுவேற் குமரன்விழாக் கொண்டாடி
வேலனைமுற் கொண்டு வெறியாட்டு நேர்வித்தான்.

காலை அதன் பின்—குரவை அயர்ந்த அந்த அமயத்துக்குப் பின்பு, கடவுட் பலி செலுத்தி—தெய்வத்துக்கு இடக்கடவ பலியை இட்டு, வாலரிசி—வெண் ணிறம் பொருந்திய அரிசி, மஞ்சள்—மஞ்சள்மா, மலர்—புஷ்பம், சிந்தி—ஆகிய இவைகளைத் தூவி, மறி அறுத்து—ஆட்டை வெட்டி, கோல நெடு வேல் குமரன் விழாக் கொண்டாடி—அழகிய நீண்ட வேற்படையையுடைய குமாரக் கடவுளுக்கு விழா நடத்தி, வேலனை முன் கொண்டு—வேலைத் தரித்தோனுன படிமத்தானை முன்னிட்டுக்கொண்டு, வெறியாட்டு நேர்வித்தான்—வெறியாட் டைச் செய்வித்தான்.

சுவைக்குப் பலி செலுத்துக என்பது வேதம் ஆதலின், மகட்பெற்றுன், அதற்குப் பலிசெலுத்தினன் என்க. மறி, ஆடு என்னும் பொருட்டு; ஈண்டுக் கடா என்க. வெறியாடுதல் தெய்வமேறியாடுதல். அது செய்வோன் வேல னுகிய படிமத்தான் என்க. (40)

இன்ன பலவு மியற்றி யிருங்குறவர்
மன்னன் மனைவி வடமீன் றனையனையாள்
கன்னி மடமகட்குக் காப்பிட்டுக் கானமயிற்
பொன்னஞ் சிறைபடுத்த பூந்தொட்டி லேற்றினளே.

இரும் குறவர் மன்னன்—பெரிய குறவர் கூட்டத்துக்கு அரசனுன நம்பி, இன்ன பலவும் இயற்றி—இவைபோல்வன பலவற்றையுஞ் செய்ய, வடமீன் தனை அனையாள் மனைவி—அருந்ததியை ஒத்த அவன் மனைவியாகிய கொடிச்சி, கன்னி மடமகட்கு—இளமையும் அழகும் பொருந்திய தன் புதல்விக்கு, காப்பு இட்டு—நெற்றியில் மைத்திலகமும் கையில் இரட்சையுமாகிய காப்பை இட்டு, கானம் மயில் அம் பொன் சிறை படுத்த—காட்டிலுள்ள மயில்களின் அழகிய பொற்புள்ளி பொருந்திய இறகுகளை விரித்த, பூந்தொட்டில் ஏற்றினள்—பொலிவாகிய தொட்டிலின்கண் ஏற்றினுள்.

இயற்றி, செய என்னும் வினையெச்சத் திரிபு. பேய் பூதம் அணுகாது காப்பிட்டென்க. (41)

நாத்தளர்ந்து சோர்ந்து நடுக்கமுற்றுப் பற்கழன்று
மூத்து நரைமுதிர்ந்த மூதாளர் வந்தீண்டிப்
பாத்தி படுவள்ளிப் படுகுழியில் வந்திடலால்
வாய்த்த விவணுமம் வள்ளியெனக் கூறினரே.

நா தளர்ந்து—நாக்குத் தளர்ந்து, சோர்ந்து—அதனுடைமையாமற் சோர்வுற்று, நடுக்கம் உற்று—நடுக்கமும் எய்தி, பல் கழன்று—பற்கள் விழுந்து, மூத்து—இவ்வாற்றால் மூப்பெய்தி, நரை முதிர்ந்த—நரை நரைத்தலில் முற்றுப் பெற்ற, மூதாளர் வந்து ஈண்டி—முதியோர்கள் வந்து கூடி, பாத்தி படு—பாத்திபட்ட, வள்ளிப் படு குழியில்—வள்ளியின் கிழங்குபடு குழியில், வந்திடலால்—தோன்றியதனால், வாய்த்த—வள்ளிக்குழியிலிருந்து தமக்குக் கிடைத்த, இவள் நாமம்—இப் புதல்வியின் பெயர், வள்ளி எனக் கூறினர்—வள்ளி என்று நாமகரணஞ் செய்தார்கள். (42)

தம்மரபி லுள்ள தமரா கியமுதுவ
ரிம்முறையா லாராய்ந் தியற்பேர் புனைந்துரைப்பக்
கொம்மை முலையாள் கொடிச்சியொடு குன்றவர்கோ
னம்மனையை நம்மகளென் றன்பால் வளர்த்தனனே.

தம் மரபில் உள்ள—தமது குலத்திலே தோன்றிய, தமர் ஆகிய முதுவர்—சுற்றத்தவர்களாகிய முதியோர்கள், இ முறையால் ஆராய்ந்து—மேற்காட்டிய இந்த முறைப்படி சிந்தித்து, இயற்பேர் புனைந்து உரைப்ப—வள்ளி என்கின்ற இயற்பெயரை இட்டுக் கூற அதனைக் கேட்டு, கொம்மை முலையாள் கொடிச்சியொடு குன்றவர்கோன்—திரட்சியாகிய தனங்களை யுடையாளாகிய கொடிச்சியோடு கூடிய வேட்டுவர்க்கரசனான நம்பி என்பவன், அம் மனையை—உலக மாதாவாகிய வள்ளிநாயகியை, நம் மகள் என்று—நம் மகள் என்று தானுமொரு பெயரிட்டு, அன்பால் வளர்த்தனன்—அன்பு பாராட்டி வளர்த்து வருவானாயினான்.

மேற்காட்டிய முறை, பாத்தி படு வள்ளிப் படுகுழியில் வந்த முறையென்க. மனைவியையும் உளப்படுத்து நம்மகள் என்றான். (43)

முல்லைப் புறவ முதல்வன் றிருமடந்தை
கொல்லைக் குறிஞ்சிக் குறவன் மகளாகிச்
சில்லைப் புன்கூரைச் சிறுகுடிலிற் சேர்ந்தனளாற்
றொல்லைத் தனித்தந்தை தோன்றியமர் வுற்றதுபோல்.

தனித் தொல்லைத் தந்தை—ஒப்பில்லாத பழைய தந்தையாகிய திருமால், தோன்றி அமர்வுற்றதுபோல்—கிருஷ்ணாவதாரஞ் செய்து ஆயர் பாடியில் நந்தகோபன் மகனாயிருந்து வளர்ந்தது போல, முல்லைப் புறவ முதல்வன் திரு மடந்தை—முல்லைநிலக் கடவுளாகிய திருமாலின் திருப் புதல்வியாராகிய சுந்தரிப் பிராட்டியார், கொல்லைக் குறிஞ்சிக் குறவன் மகளாகி—தினைக் கொல்லையினையுடைய குறிஞ்சி நிலத்து வேட்டுவ அரசன் புதல்வியாய், சில்லைப் புன் கூரை—இழிவாகிய நொய்ய கூரையினையுடைய, சிறு குடிலில் சேர்ந்தனள்—சிறிய குடிசையிலிருந்து வளர்ந்து வருவாராயினர்.

புறவம், நிலம் என்னும் பொருட்டு. முல்லையாகிய புறவமுமாம். (44)

மூவா முகுந்தன் முதனுட் பெறுமமுதைத்
தேவாதி தேவன் றிருமைந்தன் றேவிதனை
மாவாழ் சுரத்திற்றம் மாமகளாப் போற்றுகையா
லாவா குறவர்தவ மாரளக்க வல்லாரே.

மூவா முகுந்தன்—மூத்தலில்லாத திருமால், முதல் நாள் பெறும் அமுதை—முன்பு பெருநின்ற அமுதம் போல்வாரை, தேவாதி தேவன் திரு மைந்தன் தேவி தனை—மகாதேவராகிய சிவபெருமானின் திருப்புதல்வராகிய சுப்பிரமணியப்பெருமானுக்குத் தேவியாகும் பேற்றையுடையவரை, மா வாழ் சுரத்தில்—விலங்குகள் வாழுகின்ற காட்டின்கண்ணே, தம் மா மகளாப் போற்றுகையால்—தம்முடைய பெருமை பொருந்திய புதல்வியாகப் பேணி வளர்த்து வருகையினுலே, ஆ ஆ—அம்மம்ம, குறவர் தவம்—வேடுவர்களின் தவம் இருந்தபடியை, அளக்க வல்லார் ஆர்—அளந்தறிய வல்லவர் யாவருளர்.

காடு மலைசார்ந்த காடு.

*காமர் கடும்புனல் என்னுங் குறிஞ்சிக் கலியிற் குறப்பெண் ஒருத்தி,

> 'காந்தள் கடிகமழுங் கண்வாங் கிருஞ்சிலம்பின்
> வாங்கமை மென்றேட் குறவர் மடமகளிர்
> தாம்பிழையார் கேள்வர்த் தொழுதுஎழலால்; தம்மையருந்
> தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்'

என்றிங்ஙனம் குறக்குடிக் குலமாண்பு பேசி,

இக்குடியில் யாங்காயினும் எவர் ஒருவரையேனும் பொய்ம்மையென்கின்ற புரை வஞ்சிக்குமாயின்,

> 'சிறுகுடி யீரே சிறுகுடி யீரே
> வள்ளிகீழ் வீழா; வரைமிசைத் தேன்தொடா;
> கொல்லை குரல்வாங்கி யீனு'

என்று அறத்தோடு நிற்கும் ஆவேச உரையினுலே, நெஞ்சில் வஞ்சம் அற்ற குறவர் தவம் ஒருசிறிது சிந்திக்கத்தக்கதாம். இவ்வாற்ருல், 'வேதக் காட்சிக்கும் உபநிடத் துச்சியில் விரித்த போதக் காட்சிக்கும்' எட்டாதவன், வஞ்சமற்ற கானவர் மத்தியிலே தானுமொரு கானவனுய்க் கானக் குறமயிலோடாடும் அந்தரங்க உண்மையும் உய்த்துணரற்பாலதாமென்க. (45)

பொற்ருெட்டில் விட்டுப் புவியின் மிசைதவழக்
கற்றுத் தளர்நடையுங் காட்டிக் கணிநீழன்
முற்றத் திடையுலவி முறத்தின் மணிகொழித்துச்
சிற்றில் புனைந்து சிறுசோறட் டாடினளே.

பொன் தொட்டில் விட்டு—அழகிய தொட்டிற் பருவம் நீங்கி, புவியின் மிசை தவழக் கற்று—நிலத்தின்கண்ணே தவழப் பயின்று, தளர் நடையும்

* குறிஞ்சிக்கலி – செய். 3.

காட்டி—பெற்றோரையும் மற்றோரையும் மகிழ்விப்பதாகிய தளர்நடையையுங் காண்பித்து, கணி நீழல் முற்றத்திடை உலவி—வேங்கைமர நீழலையுடைய சிறுகுடிலின் முற்றத்தின்கண்ணே திருத்தமுற நடந்து, முறத்தில் மணி கொழித்து—சிறு சுளகினாலே முத்துக்களையும் இரத்தினங்களையுங் கொழித்து, சிற்றில் புனைந்து—சிறுவீடு கட்டி, சிறு சோறு அட்டு—அவ்வீட்டிற் சிறு சோறு சமைத்து, ஆடினள்—இவ்வாற்றாற் பெண் குழந்தைக்குரிய விளையாட்டுக்களனைத்தையுஞ் செய்வாராயினர் வள்ளிநாயகியார்.

இச்செய்யுள் பருவந்தோறும் விளையாட்டு வேறுபடுகின்ற பெண்பாற் பிள்ளைத்தமிழொன்று உதயமாதற்கு உபகாரமாய், வள்ளிநாயகியம்மை பிள்ளைத் தமிழின் கருவாயமைதல் காண்க. (46)

முந்தை யுணர்வு முழுதுமின்றி யிம்முறையாற்
புந்திமகிழ் வண்டல் புரிந்துவளர் செவ்விக்க
ணெந்தைபுயம் புல்லுவதற் கிப்பருவ மேற்குமெனப்
பைந்தொடியி னுக்கியாண்டு பன்னிரண்டு சென்றனவே.

முந்தை உணர்வு முழுதும் இன்றி—பழைய உணர்வு முழுவதையும் மறந்து, இ முறையால்—தவழுதல் முதலிய இந்த முறையானே, புந்தி மகிழ் வண்டல் புரிந்து—மனமகிழ்வைச் செய்கின்ற மகளிர்க்குரிய விளையாட்டுக்களைச் செய்து, வளர் செவ்விக்கண்—வளர்ந்து வருகின்ற காலத்திலே, எந்தை புயம் புல்லுவதற்கு இ பருவம் ஏற்கும் என—எந்தையாகிய சுப்பிரமணியப் பெருமானது திருப்புயத்தைத் தழுவுதற்கு இந்தப் பருவம் இசையும் என்று அறிஞர்கள் கருதும்படி, பைந்தொடியினுக்கு—பசிய வளையலையணிந்த வள்ளி நாயகியாருக்கு, பன்னிரண்டு யாண்டு சென்றன—பன்னிரண்டு யாண்டுகள் சென்றன.

பெரும்பான்மை பற்றிப் பன்னிரு யாண்டு என்றாரேனும், பதினோராண்டும் பத்துத் திங்களுங் கழிந்தன என்று கொள்க. (47)

ஆன பருவங்கண் டம்மனையு மம்மனையிற்
கோனு மொருதங் குலத்தின் முறைநோக்கி
மானின் வயிற்றுதித்த வள்ளிதனைப் பைம்புனத்தி
லேனல் விளையு ளினிதளிக்க வைத்தனரே.

அம்மனையும் அம்மனையில் கோனும்—தாயாகிய கொடிச்சியும் அந்த இல்லத்தின் தலைவனாகிய நம்பியரசனும், ஆன பருவம் கண்டு—மணத்துக்கு உரியதான பருவத்தைத் தம் புதல்வியார்பாற் கண்டு, தம் குலத்தின் ஒரு முறை நோக்கி—தமது குலத்தில் வழங்கி வருவதொரு முறைமையினைச் சிந்தித்து, மானின் வயிற்றுதித்த வள்ளிதனை—மானின் வயிற்றிற் பிறந்த அந்த வள்ளிநாயகியாரை, பைம்புனத்தில்—பசிய தினைப்புனத்திலே, ஏனல் விளையுள் இனிது அளிக்க வைத்தனர்—தினையின் விளைவை நன்றாகக் காவல் செய்யும்படி வைத்தார்கள்.

காட்டி—பெற்றோரையும் மற்றோரையும் மகிழ்விப்பதாகிய தளர்நடையையுங் காண்பித்து, கணி நீழல் முற்றத்திடை உலவி—வேங்கைமர நீழலையுடைய சிறுகுடிலின் முற்றத்தின்கண்ணே திருத்தமுற நடந்து, முறத்தில் மணி கொழித்து—சிறு சுளகினாலே முத்துக்களையும் இரத்தினங்களையுங் கொழித்து, சிற்றில் புனைந்து—சிறுவீடு கட்டி, சிறு சோறு அட்டு—அவ்வீட்டிற் சிறு சோறு சமைத்து, ஆடினள்—இவ்வாற்றாற் பெண் குழந்தைக்குரிய விளையாட்டுக்க ளனைத்தையுஞ் செய்வாராயினார் வள்ளிநாயகியார்.

இச்செய்யுள் பருவந்தோறும் விளையாட்டு வேறுபடுகின்ற பெண்பாற் பிள்ளைத்தமிழொன்று உதயமாதற்கு உபகாரமாய், வள்ளிநாயகியம்மை பிள்ளைத் தமிழின் கருவாயமைதல் காண்க. (46)

முந்தை யுணர்வு முழுதுமின்றி யிம்முறையாற்
புந்திமகிழ் வண்டல் புரிந்துவளர் செவ்விக்க
ணெந்தைபுயம் புல்லுவதற் கிப்பருவ மேற்குமெனப்
பைந்தொடியி னுக்கியாண்டு பன்னிரண்டு சென்றனவே.

முந்தை உணர்வு முழுதும் இன்றி—பழைய உணர்வு முழுவதையும் மறந்து, இ முறையால்—தவழுதல் முதலிய இந்த முறையானே, புந்தி மகிழ் வண்டல் புரிந்து—மனமகிழ்வைச் செய்கின்ற மகளிர்க்குரிய விளையாட்டுக்களைச் செய்து, வளர் செவ்விக்கண்—வளர்ந்து வருகின்ற காலத்திலே, எந்தை புயம் புல்லுவதற்கு இ பருவம் ஏற்கும் என—எந்தையாகிய சுப்பிரமணியப் பெருமானது திருப்புயத்தைத் தழுவுதற்கு இந்தப் பருவம் இசையும் என்று அறிஞர்கள் கருதும்படி, பைந்தொடியினுக்கு—பசிய வளையலையணிந்த வள்ளி நாயகியாருக்கு, பன்னிரண்டு யாண்டு சென்றன—பன்னிரண்டு யாண்டுகள் சென்றன.

பெரும்பான்மை பற்றிப் பன்னிரு யாண்டு என்றாரேனும், பதினோ ராண்டும் பத்துத் திங்களுங் கழிந்தன என்று கொள்க. (47)

ஆன பருவங்கண் டம்மனையு மம்மனையிற்
கோனு மொருதங் குலத்தின் முறைநோக்கி
மானின் வயிற்றுதித்த வள்ளிதனைப் பைம்புனத்தி
லேனல் விளையு ளினிதளிக்க வைத்தனரே.

அம்மனையும் அம்மனையில் கோனும்—தாயாகிய கொடிச்சியும் அந்த இல்லத்தின் தலைவனாகிய நம்பியரசனும், ஆன பருவம் கண்டு—மணத்துக்கு உரியதான பருவத்தைத் தம் புதல்வியார்பாற் கண்டு, தம் குலத்தின் ஒரு முறை நோக்கி—தமது குலத்தில் வழங்கி வருவதொரு முறைமையினைச் சிந்தித்து, மானின் வயிற்றுதித்த வள்ளிதனை—மானின் வயிற்றிற் பிறந்த அந்த வள்ளிநாயகியாரை, பைம்புனத்தில்—பசிய தினைப்புனத்திலே, ஏனல் விளையுள் இனிது அளிக்க வைத்தனர்—தினையின் விளைவை நன்றாகக் காவல் செய்யும்படி வைத்தார்கள்.

பருவம் எய்திய பெண்ணைத் தினைப்புனங் காக்க வைப்பது குறக்குடிக் குலாசாரம் என்க. (48)

காட்டி லெளிதுற்ற கடவுண்மணி யைக்கொணர்ந்து
கூட்டி லிருளோட்டக் குருகுய்த்த வாறன்றே
தீட்டுசுடர் வேற்குமரன் றேவியாந் தெள்ளமுதைப்
பூட்டுசிலைக் கையார் புனங்காப்ப வைத்ததுவே.

பூட்டு சிலைக் கையார்—நாண்பூட்டிய வில்லை ஏந்திய கையினையுடைய வேடுவர்கள், தீட்டு சுடர் வேல்—தீட்டப்பட்ட சுடர் பொருந்திய வேற் படையை ஏந்திய, குமரன் தேவி ஆம் தெள் அமுதை—குமாரக் கடவுளுக்குத் தேவி ஆகும் பெருமைக்குரிய தெள்ளிய அமுதம்போல்வாரை, புனம் காப்ப வைத்தது—புல்லிய புனத்தைக் காவல் செய்ய வைத்தவாறு, குருகு—தூக்க ணங்குருவியென்னும் பறவை, காட்டில் எளிது உற்ற—காட்டிலே இலகு வாகக் கிடைத்த, கடவுள் மணியை—சிந்தித்தது தரவல்ல தெய்வத்தன்மை பொருந்தியதொரு இரத்தினத்தை, கொணர்ந்து—அதன் அருமை அறியாம லெடுத்துவந்து, கூட்டில் இருள் ஓட்ட உய்த்தவாறு அன்றே—தனது கூட்டில் இருளை ஓட்டும்படி வைத்தவாறேயாம்.

அருமையறியாத இருசெயலுக்கும் பேதமின்மை காட்டியவாறு. (49)

சுத்தமெழு கிட்டுச் சுடர்கொளுவிப் பன்மணியின்
பத்திகுயின் றிட்ட பழுப்பேணி யிற்பாதம்
வைத்துமகிழ்ந் தேறி மகடூஉத் தினைப்புனத்தி
லெத்திசையுங் காணு மிதணத் திருந்தனளே.

சுத்த மெழுகு இட்டு—சுத்தமான மெழுகை இட்டு, சுடர் கொளுவி—நெருப்புச் சுடரைக் கொளுவி மெழுகை இளகச் செய்து, பன் மணியின் பத்தி குயின்றிட்ட—பலவாகிய இரத்தினங்களை வரிசையாகப் பதித்த, பழுப்பு ஏணியில்—கண்ணேணியில், மகடூஉ பாதம் வைத்து மகிழ்ந்து ஏறி—வள்ளி நாயகியார் திருவடிகளை வைத்து மகிழ்ச்சியுடன் ஏறி, தினைப்புனத்தில் எத் திசையும் காணும் இதணத்து—தினைப்புனத்திலே எத்திக்கையுங் காணுதற் குபகாரமான உயர்ந்த பரணின்மீது, இருந்தனள்—தினைப்புனங் காவல் செய்யும்பொருட்டு இருந்தருளினர்.

கண்—கணு, படி. (50)

கிள்ளையொடு கேகயமே யன்றிப் பிறநிலத்தி
லுள்ள பறவை யொருசார் விலங்கினெடும்
வள்ளி மலைப்புனத்தில் வந்துற் றனமாவும்
புள்ளு மயங்கல் பொருணூற் றுணிபன்றே.

கிள்ளையொடு கேகயமே அன்றி—குறிஞ்சி நிலத்துக்குரிய கிளிகளும் மயில்களும் யானை முதலிய ஒருசார் விலங்குகளும் அல்லாமல், பிற நிலத்தில் உள்ள—மற்றை நிலங்களில் அந்நிலங்களுக்குரியனவாயுள்ள, ஒருசார் பறவையொடு விலங்கும்—ஒருசார் பறவைகளும் விலங்குகளும், வள்ளி மலைப் புனத்தில் வந்துற்றன—வள்ளி மலையிலுள்ள வள்ளிநாயகியார் காக்கின்ற தினைப்புனத்தின்கண் வருதலைச் செய்தன; மாவும் புள்ளும் மயங்கல்—ஒரு நிலத்துக்குரிய விலங்கும் புள்ளும் மற்றொரு நிலத்திற் சென்று கலத்தல், பொருள் நூல் துணிபு அன்றோ—தமிழ்ச் சிறப்பாகிய பொருளிலக்கண நூல்களின் துணிபேயாம்.

ஒடு, ஏ உம்மைப் பொருள். இன் சாரியை. யானை முதலிய ஒருசார் விலங்கு என்பது இயைபு நோக்கி வருவிக்கப்பட்டது. தினைப்புனத்தை நாடும் விலங்கும் புள்ளும் ஒருசாரனவாதலின் ஒருசார் என்றார்.

* 'திணைமயக் குறுதலுங் கடிநிலை யிலவே'
† 'உரிப்பொரு ளல்லன மயங்கவும் பெறுமே'
§ 'அந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும்'

என்பன பொருளிலக்கணச் சூத்திரங்கள். (51)

கட்டு வரிவிற் கருங்குறவர் கைத்தொழிலா
லிட்ட விதணத் திருந்தெம் பெருமாட்டி
தட்டை குளிர்தழலைத் தாங்கித் தினைப்புனத்தைக்
கிட்ட லுறு வண்ணங் கிளிமுதற்புள் ளோட்டினளே.

கட்டு வரி வில் கருங்குறவர்—வரிந்து கட்டிய வில்லினையுடைய கரிய வேடுவர்கள், கைத்தொழிலால் இட்ட இதணத்து—கைவினைத் திறத்தால் அமைத்த பரணின்மீது, எம் பெருமாட்டி இருந்து—எம் பெருமாட்டியாகிய வள்ளி நாயகியார் வீற்றிருந்து, தட்டை குளிர் தழலை தாங்கி—தட்டை குளிர் தழல் என்னுங் கிளிகடி கருவிகளைத் திருக்கரத்திலே தரித்து, தினைப்புனத்தைக் கிளி முதல் புள் கிட்டல் உறு வண்ணம் ஓட்டினள்—தினைப்புனத்தைக் கிளி முதலிய பறவைகள் அணுகாதவாறு கிளி கடிந்து குருவி ஓப்பினார்.

தினைப்புனத்தைக் கிட்டும் புட்களுட் கிளி சிறந்தமையின், தட்டை முதலிய குருவி ஓப்புங் கருவிகள் கிளிகடி கருவிகள் எனப்பட்டன. ஓப்புதல்—ஓட்டுதல். (52)

---
* தொல். பொருள். — அகத்திணை 12.
† தொல். பொருள். — அகத்திணை 13.
§ தொல். பொருள். — அகத்திணை 19.

எய்யா னவையு மிரலைமரை மான்பிறவுங்
கொய்யாத வேனற் குரல்கவர்ந்து கொள்ளாமன்
மையார் விழியாண் மணிக்கற் கவணிட்டுக்
கையா லெடுத்துக் கடிதோச்சி வீசினளே.

எய்யானவையும்–முட்பன்றிகளும், இரலை–கலைமான்களும், மான்–மான்பிணைகளும், மரை–மரைகளும், பிறவும்–பிற விலங்குகளும், கொய்யாத ஏனல் குரல் கவர்ந்துகொள்ளாமல்–கொய்யப்படாத தினையின் கதிர்களைக் கவர்ந்துகொள்ளாமல், மை ஆர் விழியாள்–மை தீட்டிய கண்களையுடைய வள்ளிநாயகியார், மணிக்கல் கவண் இட்டு–இரத்தினக்கற்களைக் கவணில் வைத்து, கையால் எடுத்து–அக் கவணைத் திருக்கையினாலெடுத்து, கடிது வீசி ஓச்சினள்–கவணிலிட்ட மணிக்கற்களை விரைந்து வீசி எறிந்தருளினார். (53)

பூவைகாள் செங்கட் புறவங்கா ளாலோலந்
தூவிமா மஞ்ஞைகாள் சொற்கிளிகா ளாலோலங்
கூவல்சேர் வுற்ற குயிலினங்கா ளாலோலஞ்
சேவல்கா ளாலோல மென்று டிருந்திழையாள்.

பூவைகாள் செங்கண் புறவங்காள் ஆலோலம்–நாகணவாய்ப் பறவைகளே சிவந்த கண்களையுடைய புறாக்களே ஆலோலம்; தூவி மா மஞ்ஞைகாள் சொற் கிளிகாள் ஆலோலம்–உச்சிச் சூட்டினையுடைய நீல மயில்களே சொன்னதைச் சொன்னவாறு சொல்லுங் கிளிகளே ஆலோலம்; கூவல் சேர்வுற்ற குயிலினங்காள் ஆலோலம்–கூவுந் தொழிலோடு கூடிப்பிறந்த குயிற் கூட்டங்களே ஆலோலம்; சேவல்காள் ஆலோலம்–சேவல்களே உங்களுக்குச் சிறப்பாகவும் ஆலோலம்; என்றாள்–என்றிங்ஙனந் திருவாயிசையானும் புள்ளோப்பினார்; திருந்து இழையாள்–அணிந்து திருத்தமுறுகின்ற ஆபரணங்களையுடையராகிய வள்ளிநாயகியார்.

ஆலோலம் என்பது புனத்தைவிட்டகலுங்கள் என்ற கருத்திற் புள்ளோப்புதற்கண் நயம்பட இசைப்பதோரொலிக்குறிப்பு. சேவல்கள் பூவைச்சேவன் முதலிய சேவல்கள். தலைமை தாங்கித் தினைப்புனத்துக்குப் படையெடுக்குமவைகளைச் சிறப்பாகவும் விளித்து நாணவைத்தாரென்க. (54)

இந்த முறையிலிவ ளேனற் புனங்காப்ப
வந்த வளவி லவளுக் கருள்புரியக்
கந்தவரை நீங்கிக் கதிர்வே லவன்றனியே
வந்து தணிகை மலையிடத்து வைகினனே.

இந்தமுறையில்–இம்முறையானே, இவள்–இவ்வள்ளிநாயகியம்மையார், ஏனல் புனம் காப்ப–தினைப்புனத்தைக் காவல்செய்துகொண்டிருப்ப, அந்த அளவில்–அவ்வாறான பரிபக்குவ நிலையில், அவளுக்கு அருள் புரிய–அவ் வள்ளி

நாயகியாருக்கு அருள் செய்யும்படி, கதிர்வேலவன்–ஞான கிரணங்களை யுடைய வேற்படையைத் தாங்கிய சுப்பிரமணியப்பெருமான், கந்த வரை நீங்கி–திருக்கைலாசத்தையடுத்த கந்தகிரியை விட்டுநீங்கி, தனியே வந்து–துணைவர்களையன்றித் தெய்வயானையாரையும் பிரிந்து தனிமையாக வந்து, தணிகை மலையிடத்து வைகினன்–செருத்தணிகையாகிய திருத்தணிகை மலையின்கண்ணே எழுந்தருளியிருந்தார். (55)

வேறு

சூரல் பம்பிய தணிகைமால் வரைதனிற் சுடர்வேல்
வீரன் வீற்றிருந் திடுதலும் வேலையங் கதனில்
வாரி யும்வடித் துந்தியும் வரிசையா லுறழ்ந்துஞ்
சீரி யாழ்வல்ல நாரதன் புவிதனிற் சேர்ந்தான்.

சூரல் பம்பிய மால் தணிகை வரை தனில்–பிரப்பங்கொடிகள் பரவிய பெரிய திருத்தணிகை மலையில், சுடர் வேல் வீரன் வீற்றிருந்திடுதலும்–சுடரையுடைய வேற்படையைத் தாங்கிய வீரராகிய சுப்பிரமணியப் பெருமான் வீற்றிருந்தருள, அங்கு வேலை அதனில்–அவ்வாறுன அச்சமயத்தில், வரிசையால்–இசைநூற் கிரமத்தானே, வாரியும்–சுட்டுவிரற் செய்தொழிலாகிய வார்தலைச் செய்தும், வடித்தும்–சுட்டுவிரலும் பெருவிரலுங் கூட்டி நரம்பை அகமும் புறமும் வருடுதலாகிய வடித்தலைச் செய்தும், உந்தியும்–நரம்புகளை வலிவு காணத் தெறித்தும், உறழ்ந்தும்–நரம்புகளை இடையிட்டுத் தீண்டுதலாகிய உறழ்தலைச் செய்தும், சீர் யாழ்வல்ல–இவ்வாற்ருற் சிறப்புப் பொருந்திய யாழ்வாசித்தலில் வல்ல, நாரதன் புவிதனில் சேர்ந்தான்–தேவ இருடியாகிய நாரத முனிவர் பூமிக்கண் வருதலைச் செய்தார்.

உபலக்கணத்தால் உருட்டல் தெருட்டல் அள்ளல் பட்டடை என்னும் நரம்பைப் பற்றிய இசைநூற் செய்திகளுங் கொள்க.

தத்துவ சோபானங்களாகிய ஏணிப்படிகளிலேறிச் சென்று, உயர்வாகிய பரணின்மீது, நன் புலங்களைப் புன்புலஞ் செய்யும் விலங்குகள் பறவைகளை அணுகாதே தூரத் துரந்து, அரியாரொருவர் வரவு நோக்கியிருந்தார் போன்று, எட்டுத் திசைகளையும் அகல நோக்கி, வள்ளிநாயகியார் இருந்தாராக, அவர்தம் முதலாகிய சுப்பிரமணியப்பெருமான், அவரை ஆட்கொள்ளும்படி மகாயுத்தங்களின் தணிவிடமாகிய தணிகை மலையில் எழுந்தருளுவதொரு சந்தர்ப்பம், திரிலோகங்களிலுங் கிடைத்தற்கரியதொன்ரும் ஆதலின், திரிலோகங்களிலுஞ் சஞ்சாரஞ் செய்பவரும் மெய்ப்பொருளை இசைவிக்கும் இசை வல்லோரும் ஆகிய நாரத மகாமுனிவர், கிட்டியதொன்றைத் தவறவிடாது, பூமிக்கண் வரவேண்டியவர் ஆயினர் என்க. (56)

வளவி தாகிய வள்ளிமால் வரைதனில் வந்து
விளையு ளாகிய தினைப்புனம் போற்றிவீற் றிருந்த
புளினர் பாவையைக் கண்டுகை தொழுதுபுந் தியினி
லளவி லாததோ ரற்புதத் துடனிவை யறைவான்.

வளவிது ஆகிய மால் வள்ளி வரை தனில் வந்து—வளத்தினையுடையதாகிய பெரிய வள்ளிமலைக்கண் வந்து, விளையுள் ஆகிய தினைப்புனம் போற்றி வீற்றிருந்த—விளைதல் முற்றிய தினைப்புனத்தைப் பாதுகாத்து வீற்றிருந்த, புளினர் பாவையைக் கண்டு—வேட்டுவர்களின் பெண்ணாகிய வள்ளிநாயகியாரைத் தரிசித்து, கை தொழுது—கைகூப்பி வணங்கி, புந்தியில் அளவு இலாதது ஓர் அற்புதத்துடன்—மனத்தினுள்ளே அளவிடவொண்ணாத ஒப்பற்ற ஆச்சரியத்தோடு, இவை அறைவான்—இவற்றைத் தம்முட் கூறுவாராயினர். (57)

அன்னை யாகியிங் கிருப்பவர் பேரழ கனைத்து
முன்னி யான்புனைந் துரைக்கினு முலவுமோ வுலவா
வென்னை யாளுடை யறுமுகன் றுணைவியா யிருப்ப
முன்னர் மாதவம் புரிந்தவ ரிவரென மொழிந்தான்.

அன்னை ஆகி இங்கு இருப்பவர் பேரழகு அனைத்தும்—உலகமாதாவாய் இங்கே தினைக்காவல் செய்பவர் போலிருப்பவராகிய இவ்வம்மையாருடைய பெரிய அழகுகள் அனைத்தையும், உன்னி யான் புனைந்து உரைக்கினும்—ஒன்று ஒன்றாக நினைத்து நினைத்து யான் புனைந்துரை செய்யப் புகுந்தாலும், உலவுமோ உலவா—அவை முற்றுப் பெறுவனவாமோ? ஆகா; என்னை ஆள் உடை அறுமுகன் துணைவியாய் இருப்ப—அடியேனை ஆளுதலையுடைய ஆறு திருமுகங்களையுடையவராகிய சுப்பிரமணிய சுவாமியின் தேவியாராய் இருப்பதற்கு, இவர்—இவ்வம்மையார், முன்னர் மாதவம் புரிந்தவர்—முன்னமே பெரிய தவத்தைச் செய்துவைத்தவர் ஆவர்; என மொழிந்தான்—என்று நாரதமுனிவர் தம்முட் கூறினர்.

உரைக்கப் புகுந்து முற்றாதனவற்றை உரையாது விடுவதே விவேகம் என்றவாறு. முன்னர்ச் சரவணத்தில் மாதவஞ் செய்த சுந்தரிப் பிராட்டியாரே இவர் என உரைப்பினுமாம். (58)

வேறு

கார்த்தி னைப்புனங் காவற் கன்னியைப்
பார்த்து மற்றிவை பகர்ந்து போற்றிப்போய்
மூர்த்த மொன்றினின் மூன்று பூமலர்
தீர்த்தி கைச்சுனைச் சிகர நண்ணினான்.

கார் தினைப்புனம் காவல் கன்னியைப் பார்த்து—கருமையாகிய தினைப்புனத்திற் காவல் செய்கின்ற கன்னிகையாகிய வள்ளிநாயகியாரைத் தரிசித்து, இவை பகர்ந்து—அழகும் அருமையுமாகிய இவைகளைக் கூறி, போற்றி—துதி செய்து, போய்—அவ்விடத்தைவிட்டகன்று சென்று, மூர்த்தம் ஒன்றினில்—ஒரு நாளில், மூன்று பூ மலர்—மூன்று நீலப் பூக்கள் மலருகின்ற, தீர்த்திகைச் சுனைச் சிகரம் நண்ணினான்—தீர்த்தமாகிய சுனையினையுடைய தணிகை மலையை அடைந்தார்.

கார் பருவமுமாம். முகூர்த்தம் மூர்த்தம் என நின்று ஆகுபெயராய் நாள் என்னும் பொருளில் வந்தது. மூர்த்தம் ஒன்றினில் நண்ணினுன் எனினுமாம். தீர்த்திகை தீர்த்தம்.

சுப்பிரமணிய சுவாமிக்குச் சாத்தும்பொருட்டு நாடோறும் மூன்று நீலப் பூக்கள் ஒரு சுனைக்கண் மலர்தலை,

* 'காலைப் போதினில் ஒருமலர் கதிர்முதிர் உச்சி
வேலைப் போதினில் ஒருமலர் விண்ணெலாம் இருள்சூழ்
மாலைப் போதினில் ஒருமல ராகஇவ் வரைமேல்
நீலப் போதுமூன் றொழிவின்றி நிற்றலும் மலரும்'.

எனப் பின்வருஞ் செய்யுளாலறிக.　(59)

தணிகை யங்கிரி தன்னில் வைகிய
விணையில் கந்தனை யெய்தி யன்னவன்
றுணைமென் சீறடி தொழுது பன்முறை
பணிதல் செய்திவை பகர்தன் மேயினுன்.

அம் தணிகை கிரி தன்னில் வைகிய—திருத்தணிகை மலையில் எழுந்தருளியிருந்த, இணை இல் கந்தனை எய்தி—ஒப்பில்லாத கந்தசுவாமியை அடைந்து, அன்னவன் துணை மென் சீறடி பன்முறை தொழுது—அப்பெருமானுடைய இரண்டாகிய மென்மையான அஞ்ஞானத்தைச் சீறுகின்ற திருவடிகளைப் பலமுறை வணங்கி, பணிதல் செய்து—தாழ்ந்து நின்று, இவை பகர்தல் மேயினுன்—இவற்றைக் கூறுவாராயினர்.

சீறடி, சிற்றடியுமாம்.　(60)

மோன நற்றவ முனிவன் றன்மகண்
மானி னுற்றுளாள் வள்ளி வெற்பினிற்
கான வக்குலக் கன்னி யாகியே
யேன லைப்புரந் திதணின் மேயினுள்.

மோன நல் தவ முனிவன் தன் மகள்—மௌனத்தோடு கூடிய நல்ல தவத்தையுடைய சிவமுனிவரின் புதல்வியார், மானின் உற்றுளாள்—மான் வயிற்றிற் பிறந்தவர்; வள்ளி வெற்பினில் கானவக் குலக் கன்னி ஆகி—வள்ளிமலையிலே வேட்டுவர் குலத்திலே கன்னிப்பருவத்தை எய்தி, ஏனலைப் புரந்து—தினைப்புனத்தைக் காவல் செய்துகொண்டு, இதணில் மேயினுள்—பரண்மீது அமர்ந்திருக்கின்ருர்.　(61)

ஐய னேயவ ளாக நல்லெழில்
செய்ய பங்கயத் திருவிற் கும்மிலை
பொய்ய தன்றிது போந்து காண்டிநீ
கைய னேனிவண் கண்டு வந்தனன்.

---

* கந்தபு. வள்ளியம்மை............ - 222.

ஐயனே—சுவாமீ, அவள் ஆகம் நல் எழில்—அந்தப் பெண் தெய்வத்தி னது திருமேனியின் அழகு நலம், செய்ய பங்கயத் திருவிற்கும் இலை—செந் தாமரை மலரிலிருக்கின்ற மகாலக்குமிக்கும் இல்லை; இது பொய் அன்று—இது சத்தியம்; இவண் கண்டு வந்தனன்—இந்தப் பூமியிற் கண்டறியாத அதனைக் காணும் பாக்கியம் பெற்றுத் தேவரீருக்கு அதனை விண்ணப்பிக்க வந்தேன்; நீபோந்து காண்டி—தேவரீர் அந்த அழகுத் தெய்வத்தைச் சென்று கண்டருள்க; கையனேன்—தேவரீர் சென்று கண்டருளும்வரை யான் சிறுமை யுடையேன் ஆவேன்.

அது பகுதிப்பொருள் விகுதி. காண்டற்குரியாரைக் காணுதற்குரியார் காணுதவழி என் சிறுமை தீராதென்றாராயிற்று. (62)

தாய தாகுமத் தையன் முன்னரே
மாய வன்மகண் மற்றுன் மொய்ம்பினைத்
தோய நோற்றனள் சொற்ற வெல்லையிற்
போய வட்கருள் புரிதி யாலென்றான்.

தாய் ஆகும் அ தையல்—உயிர்களுக்கெல்லாம் மாதா ஆகும் அந்த அம்மையார், முன்னர் மாயவன் மகள்—முற்பிறப்பிலே திருமாலின் புதல்வி யார் ஆவர்; உன் மொய்ம்பினைத் தோய நோற்றனள்—தேவரீருடைய திருப் புயங்களை அணைதற்கு முன்னரே தவஞ்செய்திருந்தார் அவர்; சொற்ற எல்லையில்—சிறியேன் விண்ணப்பித்த இப்பொழுதுதானே, போய்—தேவரீரே ஆண்டெழுந்தருளி, அவட்கு அருள் புரிதி என்றான்—பரிபக்குவம் மிக்க அந்த அம்மையாருக்கு அநுக்கிரகம் புரிந்தருள்க என்று பிரார்த்தித்தார்.

அது பகுதிப்பொருள் விகுதி. சொற்ற எல்லையில் என்பதற்குச் சிறியேன் குறிப்பிட்ட இடத்தில் என்றுமாம். (63)

என்ற வேலையி லெஃகவேலினு
னன்று நன்றிது நவையில் காட்சியோய்
சென்றி நீயெனச் செப்பித் தூண்டியே
கன்று காமநோய்க் கவலை யுள்வைத்தான்.

என்ற வேலையில்—என்று நாரத முனிவர் விண்ணப்பித்த சமயத்தில், எஃகம் வேலினன்—கூரிய வேற்படையைத் தாங்கிய சுப்பிரமணியப் பெருமான், நவையில் காட்சியோய்—மாசறு காட்சியினையுடைய நாரத முனிவனே, இது நன்று நன்று—நீ கூறிய இது நன்மைப்பாலது; நீ சென்றி எனச் செப்பி—இனி நீ செல்லக்கடவாய் என்று கூறியருளி, தூண்டி கன்று காமநோய்க் கவலை—மனத்தைத் தூண்டி ஒருகாலைக்கொருகால் மிகுகின்ற விரக நோயாகிய கவலையை, உள் வைத்தான்—தம்து திருவுள்ளத்திலே வைத்தருளினர்.

நவையில் காட்சியாவது, 'எப்பொருள் எத்தன்மைத்தாயினும்' 'யார் யார்வாய்க் கேட்பினும்' மெய்ப்பொருள் காணும் அறிவு. சுப்பிரமணிய சுவாமி, நவையில் காட்சியோய் என்று விளிப்பாராயின், நாரத முனிவரின் ஞானப் பெருமை இருந்தவாறு யாரே அளவிட வல்லார். தூண்டி என்பதனைச்

செப்பி என்பதனோடியைத்து, அனுப்பி எனப் பொருள் கொள்ளினுமாம். வைத்தான் என்பது, 'கன்று காமநோய்க் கவலை' எஃகவேலினனுக்கு இயல்பு அன்று என்னும் பொருட்பேறுடையதாம். ஆட்பாலவர்க்கு அருளும் வண்ணமே அஃதாம் என்க. (64)

எய்யும் வார்சிலை யெயினர் மாதரா
ளுய்யு மாறுதன் னுருவ நீத்தெழீஇச்
செய்ய பேரருள் செய்து சேவகன்
மையன் மானுட வடிவந் தாங்கினான்.

சேவகன்—மகா சாமர்த்தியம் படைத்தவரான சுப்பிரமணியப்பெருமான், எய்யும் வார் சிலை எயினர் மாதராள் உய்யுமாறு—பாணங்களைச் செலுத்துகின்ற நீண்ட வில்லையுடைய வேடுவர்களின் புதல்வியாராகிய வள்ளிநாயகியார் உய்தி தலைக்கூடுமாறு, செய்ய பேரருள் செய்து—செப்பமாய பெருங் கருணையை மேற்கொண்டு, தன் உருவம் நீத்து—தமது ஞானசொரூபத்தை நீத்து, மையல் மானுட வடிவம் தாங்கினான்—மோகத்துக்குரிய மானுட வடிவத்தைத் தரித்து, எழீஇ—எழுந்தருளி.

தோன்றினான் என அடுத்த செய்யுளில் முடிபு செய்க. தாங்கினான் எச்சமுற்று.

எயினர் ஐம்புல வேடர்கள்.

*'ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த'

எழீஇ என்க. மையல், மானுட வடிவத்தை விசேடித்தது.

எயினர் மாதராள், 'முந்தை உணர்வு முழுதுமின்றி' வளர்தலினாலே, அவளுய்யுந் திறம் நோக்கிச் சேவகன் மானுட வடிவந் தாங்கினான் என்க.

†'அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத்து இளநலங் காட்டி'

என்பது திருமுருகாற்றுப்படை. (65)

காலிற் கட்டிய கழலன் கச்சினன்
மாலைத் தோளினன் வரிவில் வாளிய
னீலக் குஞ்சிய னெடியன் வேட்டுவக்
கோலத் தைக்கொடு குமரன் றோன்றினான்.

காலில் கட்டிய கழலன்—திருவடிகளிற் கட்டிய வீரக் கழல்களையுடையவராய், கச்சினன்—திருவரையிற்றரித்த கச்சினையுடையராய், மாலைத் தோளினன்—திருப்புயங்களிலணிந்த மாலைகளையுடையராய், வரி வில் வாளியன்—அம்பு தொடுத்த வரிந்த வில்லைப் பிடித்தவராய், நீலக் குஞ்சியன்—இருண்ட

* சிவஞானபோதம் — 8ஆம் சூத்.
† திருமுருகாற்றுப்படை — 289, 290.

குடுமியை உடையராய், நெடியன்—நெடியவராய், வேட்டுவ கோலத்தை கொடு—மானுட வடிவத்தில் வேட்டுவ வேடத்தைப் பூண்டு, குமரன்—அந்தச் சேவகராகிய குமாரக்கடவுள், தோன்றினன்—காட்சியளித்தார்.

தாங்கி எழீஇத் தோன்றினனென்க.

*'செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடியன் நெடியன் தொடியணி தோளன்'

என்றிங்ஙனங் குன்றுதொறாடலிலே தோன்றுங் கோலம் ஈண்டுப் புலமாதல் காண்க. (66)

கிள்ளை யன்னதோர் கிளவி மங்கைமாட்
டுள்ள மோகந்தன் னுள்ள கந்தனைத்
தள்ள வெம்பிரான் றணிகை வெற்பொரீஇ
வள்ளி யங்கிரி வயின்வந் தெய்தினன்.

கிள்ளை அன்னது ஓர் கிளவி மங்கை மாட்டு—கிளியின் மழலையை ஒத்ததாகிய ஒப்பற்ற மழலைமொழியினையுடைய வள்ளிநாயகியாரிடத்தில், உள்ள மோகம்—தமக்குண்டான மோகமானது, தன் உள்ளகம் தனைத் தள்ள—தம்முடைய திருவுள்ளத்தைப் பிடர்பிடித்துந்த, எம்பிரான்—எம்பெருமானாகிய சுப்பிரமணியப் பெருமான், தணிகை வெற்பு ஒரீஇ—திருத்தணிகாசலத்தை நீங்கி, வள்ளியங்கிரி வயின் வந்து எய்தினன்—அழகிய வள்ளிமலையினிடத்து வந்தருளினர்.

தணிகையிலமர்ந்தார் ஆங்குத் தரியாதே, வள்ளிமலையிலே தோன்றினர்; வள்ளிநாயகியின் பரிபக்குவம் இருந்தவாறு. (67)

## வேறு

மண்டலம் புகழுந் தொல்சீர் வள்ளியஞ் சிலம்பின் மேல்போய்ப்
பிண்டியந் தினையின் பைங்கூழ்ப் பெரும்புனத் திறைவி தன்னைக்
கண்டனன் குமர னம்மா கருதிய வெல்லை தன்னிற்
பண்டொரு புடையில் வைத்த பழம்பொருள் கிடைத்த வாபோல்.

மண் தலம் புகழும் தொல் சீர் வள்ளி அம் சிலம்பின் மேல் போய்—பூமியில் உள்ளாரால் புகழப்படுகின்ற பழைமையான சிறப்புக்கள் பொருந்திய அழகிய வள்ளிமலைக்கட் சென்று, அம் பிண்டி தினையின் பைங்கூழ் பெரும் புனத்து—நல்ல மாவைத் தருகின்ற தினைப் பயிர்கள் பொருந்திய பெரிய புனத்தின் கண்ணே, பண்டு ஒரு புடையில் வைத்த பழம்பொருள்—முன்பு ஒரு சமயம்

* திருமுருகாற்றுப்படை — 206 - 211

ஓரிடத்தில் வைத்து மறந்த காலங்கடந்த பொருளை, கருதிய எல்லை தன்னில்—பின்பு ஒரு சமயம் நினைத்தபோது நினைத்த அக்கணமே, கிடைத்தவாபோல்—எதிரிற் கண்டவாறுபோல, இறைவி தன்னைக் கண்டனன் குமரன்—பிரிந்திருந்த தலைவியாகிய வள்ளிநாயகியாரைக் கண்டருளினார் குமாரப் பெருமான்; அம்மா—அவர்களியல்பிருந்தவாறு!

'பிரிந்தவர் கூடினாற் பேசல் வேண்டுமோ' என்க. கிடைத்தல் ஈண்டுக் காணுதற்பொருட்டு. காணுங்காலே களிப்பு மிகுதியாமென்க. இனிக் காண்டலே கிடைத்தலாம். 'எத்திசையுங் காணும் இதணத் திருந்தனள்' ஆதலின், அவள் கண்டனள் என்பது கூறாதேயமையும். 'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்' என்க. ஈண்டுக் காட்சி, ஒருவரையொருவர் கிடைக்கப்பெற்ற—தான் அவளற்ற—இருமையின் ஒருமையாய—காந்தருவக் காட்சியாமென்றுணர்க. (68)

பூமஞ்சார் மின்கொ லென்னப் பொருப்பினி லேனல் காக்குங்
காமஞ்சா லிளமை யாளைக் கடம்பமர் காளை நோக்கித்
தூமஞ்சால் விரகச் செந்தீச் சுட்டிடச் சோர்ந்து வெம்பி
யேமஞ்சால் கின்ற நெஞ்ச னிதணினுக் கணியன் சென்றான்.

பூ மஞ்சு ஆர் மின்கொல் என்ன—பொலிவு பொருந்திய முகிலினூடே தோன்றுகின்ற ஒரு மின்னல் என்று சொல்லும்படி, பொருப்பினில் ஏனல் காக்கும்—வள்ளிமலையின்கண்ணே பசிய தினைப்புனத்தைக் காவல் செய்கின்ற, காமம் சால் இளமையாளை—காமஞ்சான்ற இளமைப்பருவத்தினராய வள்ளிநாயகியாரை, கடம்பு அமர் காளை நோக்கி—கடப்பமாலையை விரும்புகின்ற காளையாகிய சுப்பிரமணியப் பெருமான் திருநோக்கஞ் செய்து, தூமம் சால் விரகச் செந்தீ சுட்டிட—புகை மிகுகின்ற சிவந்த விரகாக்கினி பற்றியெரிய, சோர்ந்து வெம்பி—சோர்ந்து வாடி, ஏமம் சால்கின்ற நெஞ்சன்—கலக்கம் மிகுகின்ற மனத்தை உடையவராய், இதணினுக்கு அணியன் சென்றான்—வள்ளிநாயகியார் வீற்றிருக்கும் பரணுக்கு அணியராய்ச் சென்றருளினார்.

ஒத்த கிழவனுங் கிழத்தியுமாதலின், கடம்பமர் காளை என்றுங் காமஞ்சாலிளமையாள் என்றுங் கூறினார். (69)

நாந்தக மனைய வுண்க ணங்கைகேள் ஞாலந் தன்னி
லேந்திழை யார்கட் கெல்லா மிறைவியா யிருக்கு நின்னைப்
பூந்தினை காக்க வைத்துப் போயினார் புளின ரானோர்க்
காய்ந்திடு முணர்ச்சி யொன்று மயன்படைத் திலன்கொ லென்றான்.

நாந்தகம் அனைய உண் கண் நங்கை கேள்—வாட்படையை ஒத்தமையுண்ட கண்களையுடைய பெருமையிற் சிறந்த பெண்ணே கேட்பாயாக; ஏந்திழையார்கட்கு எல்லாம் இறைவி ஆய்—ஏந்துகின்ற ஆபரணங்களையணிந்த மகளிர்

குலம் அனைத்துக்கும் தலைவியாய், ஞாலம் தன்னில் இருக்கும் நின்னை—இந்தப் பூமியில் வதிகின்ற ஒப்புயர்வற்ற உன்னை, புளினர்—உன் அருமையை அறியாத புன்புல வேடுவர், பூந்தினை காக்க வைத்து போயினர்—பொலிவாகிய தினைக்கொல்லையைக் காவல் செய்யும்படி இருத்திச் சென்றார்கள்; ஆனோர்க்கு—அவ்வியல்பினரான அவர்களுக்கு, அயன்—அவர்களுக்கு வேண்டும் வளங்களனைத்தையும் படைத்துதவிய பிரமதேவன், ஆய்ந்திடும் உணர்ச்சி ஒன்றும்—தக்கதிது தகாததிதுவென்று ஆராய்ந்து முடிபு செய்யும் அறிவு ஒன்றையும் மாத்திரம், படைத்திலன் கொல் என்றான்—படையாதொழிந்தனன் போலும் என்று திருவாய்மலர்ந்தருளினார்.

புளினரைக் கடியுமுகமாகத் தேவியின் நலம் பாராட்டி, அவர் திருவாயிற் கிளவி வேட்டு உரையாடலை விரும்பி, இங்ஙனங் கூறியருளினாரென்க. (70)

வாரிருங் கூந்த னல்லாய் மதிதளர் வேனுக் குன்றன்
பேரினை யுரைத்தி மற்றுன் பேரினை யுரையா யென்னி
னூரினை யுரைத்தி யூரு முரைத்திட முடியா தென்னிற்
சீரிய நின்சீ றூர்க்குச் செல்வழி யுரைத்தி யென்றான்.

வார் இரும் கூந்தல் நல்லாய்—நீண்ட கரிய கூந்தலையுடைய பெண்ணே, மதி தளர்வேனுக்கு—புத்தி தளர்ச்சியுறுகின்ற எனக்கு, உன் தன் பேரினை உரைத்தி—உனது பெயரை உரைக்குதி; உன் பேரினை உரையாய் என்னின்—உன் பெயரை உரையாதொழிவாயாயின், ஊரினை உரைத்தி—உனது ஊரின் பெயரையாவது உரைக்குதி; ஊரும் உரைத்திட முடியாது என்னில்—ஊரின் பெயரையும் உரைத்தல்கூடாதாயின், சீரிய நின் சீறூர்க்கு—சிறப்புப் பொருந்திய உனது சிற்றூருக்கு, செல்வழி உரைத்தி என்றான்—செல்லும் வழியையாவது உரைப்பாயாக என்று வினவியருளினார்.

உனதுரை மதிதளர்வுக்கு மருந்தாம் என்றவாறு. (71)

மொழியொன்று புகலா யாயின் முறுவலும் புரியா யாயின்
விழியொன்று நோக்கா யாயின் விரகமிக் குழல்வே னுய்யும்
வழியொன்று காட்டா யாயின் மனமுஞ்சற் றுருகா யாயிற்
பழியொன்று நின்பாற் சூழும் பராமுகந் தவிர்தி யென்றான்.

மொழி ஒன்று புகல்—பெண்ணே யாதாயினும் ஆகுக ஒரு வார்த்தை பேசு; புகலாய் ஆயின்—ஒரு வார்த்தை தானும் பேசாய் ஆயின்; முறுவல் புரி—ஒரு சிறு புன்முறுவலாவது செய்; முறுவலும் புரியாய் ஆயின்—அதனையுஞ் செய்யாயாயின், விழி ஒன்று நோக்கு—ஒருதரம் உன் கண்ணாற் கடைக்கணித்தலாகிய அநுக்கிரகத்தைச் செய்; ஒன்றும் நோக்காய் ஆயின்—ஒரு சிறிதாயினுங் கடைக்கணித்தலுஞ் செய்யாயாயின், விரகம் மிக்கு உழல்வேன் உய்யும் வழி ஒன்று காட்டு—காமங் கைம்மிக்கு உழலுவேனாகிய யான் உயிர் உய்யும் வழியொன்றனை நீயறிந்த பிறிதோராற்றானாயினுங் காட்டு; காட்டாய் ஆயின்—

அதுவுஞ் செய்யாய் ஆயின், மனம் சற்று உருகு—எதற்கும் மூலமான மனத்தை ஒரு சிறிது என்னிலே நோக்கி உருகும்படி செய்; மனமும் உருகாய் ஆயின்—மனம் உருகுதலுஞ் செய்யாயாயின், நின்பால் பழி ஒன்று சூழும்—உன்னிடங் கொலைப்பழி ஒன்று வந்தே தீரும்; பராமுகம் தவிர்தி—ஆதலினாலே உன்னைக் கொலைப்பழி சூழாமற் பராமுகமாய் இருத்தலை ஒழியக்கடவாய், என்றான்—என்றிங்ஙனம் எச்சரிக்கைசெய்தருளினார்.

ஒன்றினொன் றெண்மைத்தாய முத்திறத்தி னொன்றானுகப் பிறிதோ ராற்றானுக என்னை உய்யக் கொள்ளாயாயின், உன் மனங் கன்மனமாம்; அதனால், உன்னைக் கொலைப்பழி ஒன்று சூழும்; என்னைப் பராமுகஞ் செய்யினுஞ் செய்; உன்னைக் கொலைப்பழி சூழாமற் பாதுகாத்துக்கொள் என்றெச்சரித்தவாறு. உன்னைப் பாதுகாத்துக்கொள் என்ற முறையில், 'யான் உயிர் தரியேன்' என்று தம்மைப் பாதுகாத்தலை வேண்டினாரென்க.

புகல் முதலிய சொற்களை முன்னும் பின்னுங் கூட்டவும், உம்மைகளை ஏற்றவாறு பயன்படுத்தவும் இச் செய்யுள் அமைந்து கிடந்தமை பராமுகந் தவிர்ந்து சிந்தித்து வியக்கற்பாலதொன்றாம் என்க. (72)

உலைப்படு மெழுக தென்ன வுருகியே யொருத்தி காதல்
வலைப்படு கின்றான் போல வருந்தியே யிரங்கா நின்றான்
கலைப்படு மதியப் புத்தேள் கலங்கலம் புனலிற் றோன்றி
யலைப்படு தன்மைத் தன்றோ வறுமுக னாட லெல்லாம்.

உலைப்படு மெழுகு என்ன—கொல்லனது உலைமுகத்திலெதிர்ப்பட்ட மெழுகைப்போல, உருகி—வள்ளிநாயகியை எதிர்ப்பட்டு உருகி, ஒருத்தி காதல் வலைப்படுகின்றான்போல வருந்தி—ஒருத்திபாற் காதலாகிய வலையில் அகப்படுகின்றவனொருவனைப்போல வருத்தமுற்று, இரங்காநின்றான்—இரங்கா நின்றருளினார்; அறுமுகன் ஆடல் எல்லாம்—நிர்விகாரியாகிய அறுமுகக் கடவுளின் திருவிளையாடலனைத்தின் தன்மையும், கலைப்படு மதியப் புத்தேள்—கலைகள் நிறைந்த திங்கட் கடவுள், கலங்கல் புனலில் தோன்றி—அலைகளினால் நிலைகலங்குதலையுடைய நீரின்கட்டோன்றி, அலைபடு தன்மைத்து—அசைதலைப் பொருந்துகின்ற தன்மையை ஒத்ததேயாம்.

தன்மைத்தாதலாவது தன்மையை ஒத்தலாம். மதிய உவமை, அறுமுகக் கடவுளின் விகாரமற்ற சுவரூப நிலையை விளக்குவதோடு அவராடலையும் ஒரு புடை விளக்குவதாம். சுவரூபம் இருந்தபடியிருக்கச் சத்தியின் தொழிலாய் ஆடல்கள் நிகழும் என்க. ஆன்ம இயல்புகளாய அறிவு இச்சை செயல்களில் அன்பின் மூலமாகிய இச்சையை ஆன்மாக்கள்பால் விருத்திசெய்யும் முகமாக, ஈண்டு ஆறுமுகன் ஆடல்கள் நிகழ்ந்தன என்க. அம், சாரியை. (73)

செய்யவள் குமரி முன்னந் திருநெடுங் குமர னின்று
மையலின் மிகுதி காட்டி மற்றிவை பகரு மெல்லை
யெய்யுட னுளியம் வேழ மிரிதர விரலை யூத
வொய்யென வெயினர் சூழ வொருதனித் தாதை வந்தான்.

செய்யவள் குமரி முன்னம்—திருமகளின் குமாரியுங் கன்னிகையுமான வள்ளிநாயகியின் முன்னிலையில், திரு நெடும் குமரன் நின்று—அழகிய நெடிய காளையாகிய குமாரக்கடவுள் நின்று, மையலின் மிகுதி காட்டி—இச்சையாகிய மோகத்தின் மிகுதியை வெளிப்படுத்தி, இவை பகரும் எல்லை—இவற்றைக் கூறும்போது, ஒரு தனித் தாதை—ஒப்பற்ற பெருமை படைத்த வள்ளிநாயகியாரின் தந்தையாகிய நம்பியரசன், எயினர் சூழ—வேட்டுவர்கள் புடையிற் சூழ, இரலை ஊத—கொம்பு வாத்தியங்கள் ஒலிக்க, எய் உடன் உளியம் வேழம் இரிதர—முட்பன்றிகளோடு கரடிகளும் யானைகளும் ஓட்டெடுப்ப, ஒய்யென வந்தான்—விரைவாகத் தன் புதல்வியிடம் வந்தான்.

பகரும் எல்லை, அதற்குப் பரிகாரங் காணுதற்குச் சமயமில்லாமலே, ஒய்யெனத் தாதை வந்தான் என்க.

* ''தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாக''

அச்சமயத்திலே,

† ''சுற்றமென்னுந் தொல்பசுக் குழாங்கள் பற்றியழைத்தலை''

ஈண்டுக் காண்க. (74)

ஆங்கது காலை தன்னி னடிமுதன் மறைக ளாக
வோங்கிய நடுவ ணெல்லா முயர்சிவ நூல தாகப்
பாங்கமர் கவடு முற்றும் பல்கலை யாகத் தானோர்
வேங்கையி னுருவ மாகி வேற்படை வீர னின்றான்.

ஆங்கு அது காலை தன்னில்—அவ்விடத்தில் அச்சமயத்தில், வேற்படை வீரன்—வேற்படையையுடையவராகிய சுப்பிரமணியப் பெருமான், தான் ஓர் வேங்கையின் உருவம் ஆகி—தாம் ஒரு வேங்கைமரத்தின் வடிவமாய் மாறி, மறைகள் அடிமுதல் ஆக—வேதங்கள் அவ் வேங்கைமரத்தின் அடியாகிய முதல் ஆக, உயர் சிவ நூல் எல்லாம் ஓங்கிய நடுவண் ஆக—உயர்ந்த சைவநூல்களாகிய சிவாகமங்களெல்லாம் அவ்வேங்கைமரத்தின் மேலான நடுப் பகுதியாக, பல்கலை முற்றும் பாங்கு அமர் கவடு ஆக—பலவாகிய கலைகள் அனைத்தும் பக்கங்களிற் பொருந்திய கொம்பர்கள் ஆக, நின்றான்—நின்றருளினர்.

இழுக்கலுடையுழி ஊற்றுக்கோல் போன்று நின்றருளுதல் காண்க. (75)

கானவர் முதல்வ னுங்கே கதுமென வந்து தங்கண்
மானினி தன்னைக் கண்டு வள்ளியங் கிழங்கு மாவுந்
தேனொடு கடமான் பாலுந் திற்றிகள் பிறவு நல்கி
யேனலம் புனத்தி னின்ற யாணர்வேங் கையினைக் கண்டான்.

கானவர் முதல்வன்—வேட்டுவர் தலைவனாகிய நம்பியரசன், ஆங்கு கதுமென வந்து—அவ்விடத்துக்கு விரைந்து வந்து, தங்கள் மானினி தன்னைக் கண்டு—தங்கள் பெண்ணாகிய வள்ளிநாயகியாரைக் கண்டு, அம் வள்ளிக் கிழங்கும் மாவும் தேனொடு கடமான் பாலும்—நல்ல வள்ளிக் கிழங்குந் தினை

* திருவாசகம் : போற்றித்திரு. — 42.
† திருவாசகம் : போற்றித்திரு. — 48.

மாவுந் தேனுங் காட்டுப் பசுவின் பாலும், பிற திற்றிகளும் நல்கி—பிறவாகிய உணவு வகைகளுங் கொடுத்து அதன்பின்பு, அம் ஏனல் புனத்தில் நின்ற—அழகிய தினைப்புனத்தின்கண் நின்ற, யாணர் வேங்கையினைக் கண்டான்—புதுமையாகிய வேங்கை மரத்தைக் கண்டான். (76)

ஆங்கவ னயலாய் நின்ற வடுதொழின் மறவ ராஞோர்
வேங்கையி னிலைமை நோக்கி விம்மித நீர ராகி
யீங்கிது முன்னுற் றன்ரு லித்துணை புகுந்த வாற்ருற்
றீங்குவந் திடுத றிண்ண மென்றனர் வெகுளித் தீயார்.

ஆங்கு அவன் அயலாய் நின்ற—அவ்விடத்தில் அந்நம்பியரசனுக்கு அயலிடத்தராய் நின்ற, அடு தொழில் மறவராஞோர்—கொல்லுந் தொழிலில் வல்ல வேடுவர்கள், வேங்கையின் நிலைமை நோக்கி—வேங்கை மரத்தின் புதுமையாகிய நிலைமையைப் பார்த்து, விம்மித நீரர் ஆகி—ஆச்சரிய நீர்மையை உடையராய், ஈங்கு இது முன் உற்றன்று—இவ்விடத்தில் இவ் வேங்கை மரம் முன்பு நின்றதன்று; இத்துணை புகுந்த ஆற்ருல்—இப்பொழுது திடீரென்று தோன்றிய உற்பாதம் இருந்தவாற்ருல், தீங்கு வந்திடுதல் திண்ணம்—நமக்கெல்லாங் கேடுவருதல் நிச்சயம்; என்றனர் வெகுளித் தீயார்—என்று கூறிக் கோபமாகிய அக்கினிமயம் ஆயினர்.

உற்றதன்று உற்றன்று என நின்றது. புகுந்த ஆறு என்றது உற்பாதத்தை. 'துணை' என்னுஞ் சொற்பிரயோகம், பொழுது என்னும் பொருள் தந்ததேனும், 'தனித்துணை நீ நிற்க' என்ற திருவாசகத்தில் வரும், 'துணை' என்ற சொற்பிரயோகமுமாய் அமைந்து கிடந்தது; பின்பு நம்பியரசன் வாயிலும் 'நாண்மலர் வேங்கை இன் துணையாய் இவண் எய்தியது' என அத் 'துணை'ச் சொற்பிரயோகம் வருதலும் ஓர்க. (77)

எறித்தரு கதிரை மாற்று மிருநிழற் கணியை யின்னே
முறித்திடு வீர்க ளென்பார் முதலொடு வீழச் சூழப்
பறித்திடு வீர்க ளென்பார் பராரையைக் கணிச்சி தன்னுற்
றறித்திடு வீர்க ளென்பார் தாழ்க்கலீர் சற்று மென்பார்.

எறி தரு கதிரை—இருளை எறிதலைச் செய்கின்ற கிரணங்களை, மாற்றும்—உள் நுழைய ஒட்டாது தடுக்கின்ற, இரு நிழற் கணியை—பெருநிழலைச் செய்கின்ற இந்த வேங்கைமரத்தை, இன்னே முறித்திடுவீர்கள் என்பார்—இப்பொழுதே முறித்துவிடுங்கள் என்பாரும், முதலொடு வீழ—வேரொடு வீழும்படி, சூழ பறித்திடுவீர்கள் என்பார்—சூழ்வர மண்ணைப் பறித்து விடுங்கள் என்பாரும், பராரையை—பருத்த அரையாகிய அடிப்பாகத்தை, கணிச்சி தன்னுல் தறித்திடுவீர்கள் என்பார்—கோடரியினுலே தறித்துவிடுங்கள் என்பாரும், சற்றும் தாழ்க்கலீர் என்பார்—சிறிதுந் தாமதியாதீர்கள் என்பாருமாயினர் அந்த வேடுவர்.

எறித்தலைச் செய்யுங் கதிருமாம். எறித்தல்—ஒளி வீசல். (78)

இங்கிவை யுரைக்குந் தீயோர் யாரையும் விலக்கி மன்ன
னங்கைதன் வதனம் பாரா நறுமலர் வேங்கை யொன்று
செங்குர லேனற் பைங்கூழ் செறிதரு புனத்தின் மாடே
தங்கிய தென்னை கொல்லோ சாற்றுதி சரத மென்றான்.

இங்கு இவை உரைக்கும் தீயோர் யாரையும்—இங்கே இவற்றைக் கூறு கின்ற சினமாகிய தீயினையுடையோராகிய வேடுவர் அனைவரையும், மன்னன் விலக்கி—நம்பியரசன் தடுத்து, நங்கை தன் வதனம் பாரா—வள்ளிநாயகியா ரின் திருமுகத்தைப் பார்த்து, நறு மலர் வேங்கை ஒன்று—நறிய மலர்களை யுடைய புதுமையாகிய வேங்கை மரமொன்று, செம் குரல் ஏனல் பைங்கூழ் செறிதரு புனத்தின் மாடு—செம்மையாகிய கதிர்களைக்கொண்ட தினைப்பயிர் கள் செறிந்த இந்தப் புனத்தின்கண்ணே, தங்கியது என்னை—வந்து நின்ற தென்னை; சரதம் சாற்றுதி என்றான்—அதன் உண்மை வரலாற்றை மகளே நீ கூறுதி என்றான்.

புனங் காக்கும் அவரே அது கூறுதற்குரியாராதலின் அங்ஙனம் வினு வினுனென்க. (79)

தந்தையாங் குரைத்தல் கேளாத் தையலும் வெருவி யீது
வந்தவா றுணர்கி லேன்யான் மாயம்போற் றோன்றிற் றையா
முந்தைநா ளில்லா தொன்று புதுவதாய் முளைத்த தென்னுச்
சிந்தைமே னடுக்க மெய்தி யிருந்தனன் செயலி தென்றாள்.

ஆங்கு தந்தை உரைத்தல் கேளா—அவ்விடத்திலே தந்தையாகிய நம்பி யரசன் உரைத்ததைக் கேட்டு, தையலும் வெருவி—வள்ளி நாயகியாரும் அச்சங்கொண்டு, ஐயா—பிதாவே, ஈது வந்த வாறு யான் உணர்கிலேன்—இந்த வேங்கைமரம் ஈண்டு வந்த வரலாற்றை யான் அறியேன்; மாயம் போல் தோன்றிற்று—மாயாசாலம்போல இம்மரந் தோன்றிநின்றது; முந்தை நாள் இல்லாது ஒன்று—முதல்நாள் இல்லாததொன்று, புதுவதாய் முளைத்தது என்னு—புதிதாய்த் தோன்றியது என்று, சிந்தைமேல் நடுக்கம் எய்தி—மனத்தின் கண் நடுக்கம் உற்று, இருந்தனன்—சிந்தனையில் ஆழ்ந்திருந்தேன்; செயல் இது என்றாள்—இவ்விடத்து நிகழ்ச்சி இதுவாம் என்று கூறினார்.

தம் மனங்கலந்தார்க்கு யாது விளையுமோ என்று வெருவினாரென்க. நடுக்கமும் அன்னதேயாம். வெருவுதற்குரியரல்லராதலின் உம்மை உயர்வு சிறப்பு. 'அறிவிலார்க் குரைப்பவர் அவரிற் பேதையராவ' ராதலின், 'வந்தவா றுணர்கிலேன்' என்றார். இவ்வாற்றால் அவர் கூற்றுப் புரைதீர்ந்த கூற்றாமென்க. இல்லாதது, இல்லாது என நின்றது. புதுவதா என்றும் பாடம். (80)

வேறு

என்றிவை சொற்றபி னேந்திழை யஞ்சே
னன்றிவண் வைகுதி நாண்மலர் வேங்கை
யின்றுணை யாயிவ ணெய்திய தென்னுக்
குன்றுவன் வேடர் குழாத்தொடு போனான்.

என்று இவை சொற்றபின்—என்று இவைகளை வள்ளிநாயகியார் கூறிய பின்பு, ஏந்திழை அஞ்சேல்—ஏந்துகின்ற ஆபரணத்தையுடைய மகளே அஞ்சற்க; நாள் மலர் வேங்கை இன் துணையாய் இவண் எய்தியது—புதிய மலர்களையுடைய இந்த வேங்கைமரம் உனக்கு இனியதொரு துணையாய் இவ்விடம் வந்து தங்கியது; நன்று இவண் வைகுதி—இனிதாக இவ்விடத்தில் இருப்பாயாக; என்னு—என்று அபய வார்த்தையும் வாழ்த்துங் கூறி, குன்றுவன் வேடர் குழாத்தொடு போனான்—அம்மலைக்கரசனான நம்பி வேட்டுவர் கூட்டத்தோடு சென்றான்.

வேங்கை மரத்துக்கு அஞ்சுகின்றாரென்று கருதி அஞ்சேல் என்றான். தவத்தாற் கிடைத்த தனது தெய்வ மகளுக்கு, அம்மரம் திருவருளாலெய்தியதென்று கருதினானென்க. அதனாலே அம்மரம் பற்றி ஆராயாதே போனானென்றுணர்க.

'இன்றுணையாவிவண்' என்பது பாடமன்றாயின், 'ஆய்' என்பதனை 'ஆக' எனத் திரித்துப் பொருள் உரைப்பது சிறப்பாம். *(81)*

போனது கண்டு புனத்திடை வேங்கை
யானதொர் தன்மையை யைய னகன்று
கானவர் தம்மகள் காண்வகை தொல்லை
மானுட நல்வடி வங்கொடு நின்றான்.

போனது கண்டு—நம்பியரசன் சென்றதைக் கண்டு, ஐயன்—சுப்பிரமணியப் பெருமான், புனத்திடை வேங்கை ஆனது ஓர் தன்மையை அகன்று—தினைப் புனத்தின்கண்ணே வேங்கைமரமாய் நின்றதொரு தன்மையை நீங்கி, கானவர் தம் மகள் காண்வகை—குறவர் மகளாகிய வள்ளிநாயகியார் காணும்படி, தொல்லை மானுட நல் வடிவம் கொடு நின்றான்—முன்னர்க் கொண்டு நின்ற மானுட வடிவத்தைக் கொண்டு நின்றருளினார். *(82)*

வேறு

தொல்லையி னுருக்கொடு தோன்றி நின்றவே
ளெல்லையின் மையலுற் றிரங்கு வானென
வல்லிவர் கூந்தலா ளருகு நிற்புறீஇ
நல்லரு ளாலிவை நவிறன் மேயினான்.

தொல்லையின் உரு கொடு தோன்றி நின்ற வேள்—முன்னர்க் கொண்டு நின்ற வடிவத்தை எடுத்துக்கொண்டு எதிரே தோன்றி நின்ற சுப்பிரமணியப் பெருமான், எல்லையில் மையல் உற்று இரங்குவான் என—அளவற்ற மோகங் கைம்மிக்கு இரங்குபவரைப்போல, அல் இவர் கூந்தலாள் அருகு நிற்பு உறீஇ—இருளை ஒத்த கூந்தலையுடைய வள்ளிநாயகியாருக்கு அண்மையில் நின்று, நல் அருளால் இவை நவில்தன் மேயினான்—ஆன்மாக்கள்மீது வைத்த நல்ல திருவருளினாலே இவற்றைத் திருவாய்மலர்ந்தருளலுற்றார்.

வள்ளிநாயகியார்மீது மையல் செய்வது ஆன்மாக்களின் இச்சையை விருத்தி செய்வதாமென்க. (83)

கோங்கென வளர்முலைக் குறவர் பாவையே
யீங்குனை யடைந்தன னெனக்கு நின்னிரு
பூங்கழ லல்லது புகலொன் றில்லையா
னீங்கல னீங்கல னின்னை யென்றுமே.

கோங்கு என வளர் முலை குறவர் பாவையே—கோங்கின் அரும்புபோல வளரும் முலைகளையுடைய குறவர் குலத்துப் பாவைபோல்வாளே, ஈங்கு உனை அடைந்தனன்—இவ்விடத்தில் யான் உன்னைச் சரண் அடைந்தேன்; எனக்கு—தமியேனுக்கு, நின் இரு பூ கழல் அல்லது—உன்னுடைய இரண்டாகிய மலரடிகளேயன்றி, புகல் ஒன்று இல்லை—புகலிடம் பிறிதொன்றில்லை; ஆல்—ஆகையினாலே, நின்னை என்றும் நீங்கலன் நீங்கலன்—நின்னை எப்பொழுதாயினும் பிரியேன் பிரியேன்.

*'எல்லா வகையும் இயம்பும் இவனகன்று
நில்லா வகையை நினைந்து'

என்பது திருவருட்பயன். ஒரு கணமாயினும் எம்பெருமான் பிரியின் உலகுயிர் தரியாமை ஓர்க. (84)

மாவியல் கருங்கணாய் மற்று நின்றனைப்
பாவிய னீங்கியே படர வல்லனோ
வாவியை யகன்றுமெய் யறிவு கொண்டெழீஇப்
போவது கொல்லிது புகல வேண்டுமே.

மா இயல் கரும் கணாய்—மாவின் வடுவகிரை ஒத்த கரிய கண்ணையுடைய பெண்ணே, நின் தனைப் பாவியன்—உன்னைப் பாவனை செய்பவனாகிய யான், நீங்கிப் படர வல்லனோ—நான் நீயாயிருத்தலை ஒழிந்து பிரிந்து செல்லுவதற்கு வன்மையன் ஆவேனோ; மெய் ஆவியை அகன்று—உடம்பு உயிரைப் பிரிந்து, அறிவு கொண்டு எழீஇப் போவது கொல்—அறிவையும் பற்றிக்கொண்டு விலகிப்போதலைச் செய்யுமா; இது புகல வேண்டுமே—இந்த உண்மையை உனக்கு வெளிப்படச் சொல்லவேண்டுமோ.

நீ உணரும் பக்குவம் உடையை என்றவாறு. வடு—பிஞ்சு. வகிர்—பிளவு.

முதல்வன் ஆன்மாவின் பெத்த தசையில், ஆன்மாவின் அறிவு செயல்களை முன்னிட்டுக்கொண்டு, தான் பின்னிலையில் வெளிப்படாதுபகரித்து நிற்பன். பெத்த தசையில் முதல்வன் ஆன்மமயம்; முத்தி தசையில் ஆன்மா, முதல்வன் மயம். இங்ஙனமாதல்பற்றி ஐம்புல வேடர் வயப்பட்ட வள்ளிநாயகியாரை நோக்கி, 'நின்றனைப் பாவியன்' என்றுரென்க. பாவிக்கப்படுபவர், பாவனை

* திருவருட்பயன் : ஐந்தெழுத்தருணிலை — 10.

செய்பவர் ஆயினர் என்றவாறு. 'வல்லனே' என்பது வன்கண்மையனே என்ற பொருள் தந்து நின்றது. நான் நீயாய் உனக்கு உபகரித்தலை நீங்கின் உன்னிலை என்னும் என்றவாறு. மெய், ஆவியின் அறிவைப் பறித்துக்கொண்டு விலகிப் போதலைச் செய்யுமாயின், ஆவியின் நிலை என்னும். அஃதே உன் னிலையுமாம், நான் நீங்கிப் படருவேனாயின் என்றாரென்க. அறிவுகொண்டு எழீஇப் போவதொரு மெய்யின்மையின், இல்பொருளுவமமாம். கொல் எதிர்மறைப் பொருட்டு. **'அவனே தானே ஆகிய அந்நெறி'** என்ற சிவஞான போதச் சூத்திரப் பொருண்மைக்கு இச் செய்யுட்பொருள் இலக்கியமாதல் காண்க.

காதல் கைம்மிக்கானொருவன், 'நான் பாவி; நின்னைப் பிரியிற்றரியேன்; நீ உயிர்; நான் உடல்' என்று கூறும் உலகியற் பொருண்மை தூலமாயமை தலுங் காண்க. (85)

மைதிகழ் கருங்கணின் வலைப்பட் டேற்கருள்
செய்திட லன்றியே சிறைக்க ணித்தனை
யுய்திறம் வேறெனக் குளகொ லீண்டுநின்
கைதனி லிவ்வுயிர் காத்துக் கோடியால்.

மை திகழ் கருங்கண் நின் வலைப்பட்டேற்கு–மைதீட்டப்பட்டு விளங்கு கின்ற கரிய கண்ணாகிய நின் வலையில் அகப்பட்டவனாகிய எனக்கு, அருள் செய்திடல் அன்றி–பூரணமாகிய கண்ணருள் செய்யாமல், சிறைக்கணித்தனை–சிறைக்கணித்தல் செய்தாய்; எனக்கு உய்திறம் வேறு உள கொல்–எனக்கு உய்யும்வழி உன்னை இன்றி வேறு உண்டோ; ஈண்டு இ உயிர் நின் கை தனில்–இப்பொழுது என்னுடைய இந்த உயிர் உன்கையின்கண்ணதேயாம்; காத்துக் கோடி–அதனைப் பாதுகாத்தருள்வாயாக.

அன்றி இன்மைப்பொருளில் வந்தது. சிறைக்கணித்தல்–புறக்கணித்தல்; கடைக்கணித்தலுமாம். இதுகாறும் இரந்து பின்னின்ற வழியும் யாதுங் கூறாமையின் சிறைக்கணித்தனை என்றார். 'உனக்கு' என்று கூறவேண்டியவர், 'எனக்கு' என்றது, ஐம்புல வேடர் வயப்பட்டிருக்கும் வள்ளிநாயகியாராய்த் தாமிருத்தலினென்க. பந்த நிலையில் உன் கைக்கண் உன்வயப்பட்டிருப்பேனைப் பேணிக் கோடலே உனக்கு உய்திறம் என்று குறிப்பிட்டாரென்க. ஈண்டும், **'அவனே தானே ஆகிய அந்நெறி'** என்ற சூத்திரப் பொருண்மை சிந்திக்கற் பாலதாம். ஈண்டு, காலப் பொருள் தந்து நின்றது. (86)

கோடிவர் நெடுவரைக் குறவர் மாதுநீ
யாடிய சுனையதா யணியுஞ் சாந்தமாய்ச்
சூடிய மலர்களாய்த் தோயப் பெற்றிலேன்
வாடின னினிச்செயும் வண்ணம் யாவதே.

கோடு இவர் நெடுவரைக் குறவர் மாது–கொடு முடி செறிந்த நீண்ட மலையில் வாழும் வேட்டுவர் குலக் கன்னிகையே, நீ ஆடிய சுனையதாய்–நீ நீராடுதலைச் செய்த சுனைக்கண் நீராயும், அணியும் சாந்தமாய்–நீ அணிகின்ற

சந்தனக் குழம்பாயும், சூடிய மலர்களாய்—நீ சூடிய மலர்களாயும் நான் இருந்தும், தோயப் பெற்றிலேன்—நீ இரண்டறக் கலந்து என்னைத் தழுவப் பெற்றிலேன்; வாடினன்—நான் எல்லாமாயிருந்தும் நீ என்னைக் கலவாமைக்கு இரங்கி வாட்டமடைந்தேன்; இனி செயும் வண்ணம் யாவதே—இனி உன்னை ஆட்கொள்ளுதற்குச் செய்யும் வண்ணந்தான் என்னையோ.

நான், ஆயும் ஆயும் ஆயும் நீ தோயப் பெற்றிலேன். உம்மை வருவிக்க.

நான் சுனை முதலியவைகளாயாவது உன்னைத் தோயப் பெற்றிலேன்; அதனுல் வாடினேன்; உன்னை அணைவதற்கு இனி நான் செய்யத்தக்கது யாது? என்பது வெள்ளையாய்த் தூலப் பொருளாம். (87)

புல்லிது புல்லிது புனத்தைக் காத்திடன்
மெல்லியல் வருதியால் விண்ணின் பால்வரும்
வல்லியர் யாவரும் வணங்கி வாழ்த்திடத்
தொல்லியல் வழாவளந் துய்ப்ப நல்குவேன்.

மெல் இயல் வருதி—மென்மையாகிய சாயலினையுடைய கன்னிகையே என்னைத் தொடர்ந்து வருவாயாக; விண்ணின்பால் வரும் வல்லியர் யாவரும்—தேவலோகத்தில் உள்ள கொடிபோல்வாராகிய அரம்பையர் அனைவரும், வணங்கி வாழ்த்திட—உன்னை வணங்கி வாழ்த்தெடுக்கும்படி, தொல் இயல் வழா வளம் துய்ப்ப—தொன்மையும் இயற்கையும் நீங்காத நித்திய செல்வத்தை நீ அநுபவிக்குமாறு, நல்குவேன்- உனக்கு நான் தருவேன்; புனத்தைக் காத்திடல்—இத்துணைப் பெருமைக்குரியையாகிய நீ புன்புலமாகிய தினைப்புனத்தைக் காவல்செய்திருப்பது, புல்லிது புல்லிது—நின் பெருமைக்கு இழிவு! இழிவு!

சார்புணர்ந்து சார்பு கெட ஓதியவாறு. (88)

என்றிவை பலபல விசைத்து நிற்றலுங்
குன்றுவர் மடக்கொடி குமரன் சிந்தையி
லொன்றிய கருத்தினை யுற்று நோக்கியே
நன்றிவர் திறமென நாணிக் கூறுவாள்.

என்று பல பல இவை இசைத்து நிற்றலும்—என்று பல பல வார்த்தைகளாகிய இவைகளைக் கூறிநின்றுராக; குன்றுவர் மடக்கொடி—வேட்டுவர் புதல்வியாகிய மடத்தினையுடைய கொடிபோல்வாரான வள்ளிநாயகியார், குமரன் சிந்தையில் ஒன்றிய கருத்தினை—காளையாகிய சுப்பிரமணியப் பெருமானின் திருவுள்ளத்தில் ஒன்றித்திருந்த உள்ளீடான கருத்தை, உற்று நோக்கி—நுனித்து நோக்கி, இவர் திறம் நன்று என நாணி—இவருடைய இயல்பு நன்ருயிருக்கின்றது என்று நாணமுற்று, கூறுவாள்—கூறுவாராயினர்.

வார்த்தைகள் பலவேறு கருத்துக்கள் அமைந்து கிடந்தமையின் பல பல இசைத்து என்ருர். 'முழுதுல கருள்புரி முதல்வர்' ஆவர் என்று தோன்றியமை

யால், ஒன்றிய கருத்தினை உற்று நோக்கினரென்க. நன்று என்பது நேர்பொருளோடு நன்றன்று என்ற குறிப்புப் பொருளையுந் தந்து நின்றது. அவர் பெருமையுந் தமதிழிவும்நோக்கி நன்றன்றென்றார். அவர் பெருமையும் இரப்புரையும் நோக்கி நாணினர் என்க. தாம் அவர்க்குரியரென நாணினருமாம். குன்றவர் எனப் பாடங் கொள்வர் சிவசம்புப் புலவர். குன்றவர், குன்றுவர் ஒரு பொருட் கிளவிகள். முன்னும் 'என்றிவை சொற்றபின்' என்ற செய்யுளிற் 'குன்றுவன்' என வந்தது காண்க. (89)

இழிகுல மாகிய வெயினர் பாவைநான்
முழுதுல கருள்புரி முதல்வர் நீரெனைத்
தழுவுத லுன்னியே தாழ்ச்சி செப்புதல்
பழியது வேயலாற் பான்மைத் தாகுமோ.

நான் இழிகுலமாகிய எயினர் பாவை—யானோ இழிகுலமாகிய வேட்டுவ சாதிப் பெண் ஆவேன்; நீர் முழுது உலகு அருள்புரி முதல்வர்—நீரோ உலகம் முழுவதற்கும் அருள்புரியும் முதல்வர் ஆவீர்; எனைத் தழுவுதல் உன்னி—இழிந்தேனாகிய என்னைத் தழுவக் கருதி, தாழ்ச்சி செப்புதல்—உமது பெருந்தகைமைக்கேலாத தாழ்வு மொழிகளைக் கூறுதல், பழி—குடிப்பழியைத் தருவதாம்; அது அலால்—அஃதன்றி, பான்மைத்து ஆகுமோ—தகுதியுடைத்தன்றுமாம்.

முழுது உலகருள்புரி முதல்வர் என்றது, எல்லா உலகுக்குங் கருத்தா என்ற பொருளோடு அரசர் என்ற பொருளையுந் தந்து நின்றது. குடிப்பழி இருவர் குடிக்குமாம் என்க. (90)

இலைமுதி ரேனல்காத் திருக்கும் பேதையா
னுலகரு ளிறைவர்நீ ருளம யங்கியென்
கலவியை விரும்புதல் கடன தன்றரோ
புலியது பசியுறிற் புல்லுந் துய்க்குமோ.

இலை முதிர் ஏனல் காத்திருக்கும் பேதை யான்—இலைகள் முதிருகின்ற தினைப்புனத்தைக் காவல் செய்யும் பேதையேன் யான்; உலகு அருள் இறைவர் நீர்—உலகத்தைக் காத்தருளுகின்ற முதல்வராவீர் நீர்; உளம் மயங்கி—உமது உயர்வையும் எனது தாழ்வையுங் கருதாது மனம் மயங்கி, என் கலவியை விரும்புதல் கடன் அன்று—எனது கூட்டரவை விரும்புதல் முறையாகாது; புலி பசி உறின் புல்லுந் துய்க்குமோ—புலி பசித்தாற் புல்லையுந் தின்னுமோ தின்னாதே. (91)

### வேறு

என்றிவை பலப்பலவு மேந்திழை யியம்பா
நின்றபொழு தத்திலவ னெஞ்சம்வெருக் கொள்ள
வென்றிகெழு தொண்டகம் வியன்றுடி யியம்பக்
குன்றிறைவன் வேட்டுவர் குழாத்தினொடும் வந்தான்.

ஏந்திழை—வள்ளிநாயகியார், என்று பலப்பலவும் இவை இயம்பா நின்ற பொழுதத்தில்—என்றிங்ஙனம் பலதிறத்தனவாகிய பல வார்த்தைகளையுங் கூறுநின்ற சமயத்தில், அவள் நெஞ்சம் வெருக்கொள்ள—அந்த வள்ளிநாயகியாரின் மனம் அச்சங்கொள்ளும்படி, குன்று இறைவன்—அம்மலைத் தலைவனாகிய நம்பியரசன், வென்றி கெழு தொண்டகம் வியன் துடி இயம்ப—வெற்றி கெழுமிய தொண்டகப் பறையும் பெரிய உடுக்கையும் ஒலிக்க, வேட்டுவர் குழாத்தினொடும் வந்தான்—வேட்டுவர் கூட்டத்தோடும் அவ்விடத்துக்கு வந்தான்.

முதல்வராகிய தந் தலைவருக்கு யாது நிகழுமோ என்று வெருக்கொண்டார் என்க. தம்முதல், குருவுமாய்த் தவத்தாலெதிர்ப்பட்டவழியும் ஐம்புலச் சேட்டை தோன்றுமாறு காட்டியவாறு. (92)

வந்தபடி கண்டுமட மானடு நடுங்கிச்
சிந்தைவெரு விக்கடவுள் செய்யமுக நோக்கி
வெந்திறல்கொள் வேடுவர்கள் வெய்யரிவ ணில்லா
துய்ந்திட நினைந்துகடி தோடுமினி யென்றாள்.

மட மான்—மடம் என்னுங் குணத்தினையுடைய மான் போல்வாராகிய வள்ளிநாயகியார், வந்த படி கண்டு—போர் மேற்கொண்டு வருவார்போன்று தந்தை முதலியோர் ஆங்கு வந்தபடியைக் கண்ணுற்று, சிந்தை நடுநடுங்கி வெருவி—மனம் நடுநடுங்கி அச்சங்கொண்டு, கடவுள் செய்ய முகம் நோக்கி—கடவுளுங் குருவுமாகிய தமது தலைவரது செம்மையாகிய திருமுகத்தை நோக்கி, வெம் திறல் கொள் வேடுவர்கள் வெய்யர்—வெம்மையாகிய வலி படைத்த இந்த வேடுவர்கள் கொடியவர்கள்; இவண் நில்லாது—தேவரீர் இவ்விடத்தில் நில்லாமல், உய்ந்திட—ஏழையேனுய்யும்பொருட்டு, நினைந்து—அதனைத் திருவுளத்தடைத்து, இனி—இப்பொழுதே, கடிது ஓடும் என்றாள்—விரைந்து அகன்றருளும் என்று பிரார்த்தித்தார்.

கடவுள் என்பது ஈண்டுக் கருத்துடை மொழியாம். இச் சொற்பிரயோகத்தால் வள்ளிநாயகியாரின் பரிபக்குவ நிலை புலமாம். ஐம்புல வேடுவர்கள் வெந்திறல் கொண்டெழும்போதுங் கடவுட் பேணும் பரிபக்குவ நிலை பூர்வ தவ விசேடமாம். நடுநடுங்குதல் வெருக்கொளல் இன்றிச் செய்ய முகத்தோடு நின்ற கடவுளை, நீர் உய்ந்திட நினைந்து கடிதோடும் என்பது மிகமிகத் தூலப் பொருளாம். (93)

ஓடுமினி யென்றவ ளுரைத்தமொழி கேளா
நீடுமகிழ் வெய்தியவ ணின்றகும ரேச
னாடுபுகழ் சைவநெறி நற்றவ விருத்த
வேடமது கொண்டுவரும் வேடரெதிர் சென்றான்.

அவண் நின்ற குமரேசன்—அவ்விடத்தில் நின்றருளிய குமாரக்கடவுள், அவள் இனி ஓடும் என்று உரைத்த மொழி கேளா—அவ் வள்ளிநாயகியார் இனி ஓடும் என்று தம்மைப் பேணுமுகமாகக் கூறிய வார்த்தையைக் கேட்டு, நீடு மகிழ்வு எய்தி—தீராத மகிழ்ச்சியைப் பொருந்தி, நாடு புகழ்—உலகம் புகழுகின்ற, சைவ நெறி நல் தவ விருத்த வேடம் கொண்டு—சைவ நெறி கைவந்த நல்ல தாபத விருத்த வேடத்தை எடுத்துக்கொண்டு, வரும் வேடர் எதிர் சென்றான்—வள்ளிநாயகியாரை நோக்கி வருகின்ற வேடர்களுக்கு எதிரே சென்றருளினார்.

'ஓடும் இனி' என்ற வார்த்தையில், அடைக்குந் தாழின்றித் தம்பாலன்பு ஓடுவது கண்டு, மகிழ்வு நீடுவாராயினாரென்க. வள்ளிநாயகியாரின் தவ விசேடம் இருந்தவாற்றால், ஐம்புல வேடர்கள் வெந்திறலொழிந்தடங்கு மாறு, முழுதுலகருள்புரி முதல்வராய் நின்ற தம்முதல், குருவுமாயினரென்க.

*'ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்த விட்டு'

என்பது சிவஞானபோதம். வேடர் எதிர்சென்றமை எடுத்துச் சுமத்தலாம். (94)

சென்றுகிழ வோன்குறவர் செம்மலெதிர் நண்ணி
நின்றுபரி வோடுதிரு நீறுதனை நல்கி
வன்றிறன் மிகுத்திடுக வாகைபெரி தாக
வின்றியமை யாதவள னெய்திடுக வென்றான்.

கிழவோன்—அவ் விருத்த தாபதர், குறவர் செம்மல் எதிர் சென்று நண்ணி நின்று—வேட்டுவர் செம்மலாகிய நம்பியரசனுக்கு எதிரே சென்று கிட்டி நின்று, பரிவோடு திருநீறுதனை நல்கி—அன்போடு திருநீற்றை அவ் வரசனுக்குக் கொடுத்து, வன் திறல் மிகுத்திடுக—வலிய திறல் மிகுவதாக; வாகை பெரிது ஆக—வெற்றி பெருகுவதாக; இன்றியமையாத வளன் எய்திடுக—இன்றியமையாத செல்வம் எய்துவதாக; என்றான்—என்றிங்ஙனம் வாழ்த்துக் கூறினார். (95)

பூதியினை யன்பொடு புரிந்தகுர வன்றன்
பாதமலர் கைகொடு பணிந்துகுற மன்னன்
மேதகுமிவ் வெற்பினில் விருத்தரென வந்தீ
ரோதிடுதிர் வேண்டியதை யொல்லைதனி லென்றான்.

குற மன்னன்—வேட்டுவ அரசனான நம்பி, பூதியினை அன்பொடு புரிந்த—விபூதியை அன்போடு அளித்தருளிய; குரவன் தன் பாத மலர் கைகொடு பணிந்து—விருத்த தாபதராகிய அக் குரவரது பாதமலர்களைக் கைகளினாற் றொட்டு வணங்கி, மேதகும் இவெற்பினில்—மேன்மை பொருந்துகின்ற

---

* சிவஞானபோதம்: சூத். — 8.

இந்த மலையிலே, விருத்தர் என வந்தீர்—விருத்தரென வந்தருளிய தேவரீர், வேண்டியதை ஒல்லைதனில் ஓதிடுதிர் என்றான்—விரும்பியதை விரைவிற் கூறியருள்க என்று பிரார்த்தித்தான்.

விருத்தர் என்பது, 'முதியவர்' 'புதியவர்' என்ற பொருள்களையும், என என்பது, 'போல' 'என்று கருதும்படி' என்ற பொருள்களையுந் தந்து நின்றன. அவ்வாறமைதல் குறிஞ்சிக் கிழவராயினார்க்குப் பொருத்தமாதலுங் காண்க. தரிசன விசேடத்தால் வேட்டுவரிறை அடிபணிந்து ஏவல்வழி நிற்பானாயினான். ஏவலை விரைந்து செய்யக் கருதி, 'ஒல்லைதனில் ஓதிடுதிர்' என்றான் என்க. (96)

ஆண்டொழிலின் மேதகைய வண்ணலிது கேண்மோ
நீண்டதனி மூப்பகல நெஞ்சமரு ணீங்க
வீண்டுநும் வரைக்குமரி யெய்தியினி தாட
வேண்டிவரு கின்றனன் மெலிந்துகடி தென்றான்.

ஆண் தொழிலின் மேதகைய அண்ணல் இது கேள்—ஆண்மைத் தொழிலான் மேம்பட்ட வேட்டுவரிறையே இதனைக் கேள்; நீண்ட—காலத்தால் நீண்ட, தனி—தனக்குத் தானே ஒப்பான, மூப்பு அகல—எனது மூப்பு நீங்கவும், நெஞ்சம் மருள் நீங்க—மனமயல் அகலவும், ஈண்டு—இவ்விடத்தில், நும் வரை குமரி எய்தி—நுமது வரைக்கட் குமரியிற் படிந்து, இனிது ஆட—இன்பமுண்டாக ஆடும்பொருட்டு, வேண்டி—விரும்பி, மெலிந்து—அவ்விருப்பத்தால் மெலிவுற்று, கடிது வருகின்றனன் என்றான்—விரைந்து வருகின்றேன் என்று கூறியருளினார்.

விருத்தர் என வந்தீர் என்பதற்கியைய, நும் வரைக் குமரி எய்தி இனிதாட என்றார் என்க. குமரி, கன்னிகையும் தீர்த்தமும் என இருபொருள் பட்டு நின்றது. (97)

### வேறு

நற்றவன் மொழியைக் கேளா நன்றுநீர் நவின்ற தீர்த்த
நிற்றலு மாடி யெங்க ணேரிழை தமிய ளாகி
யுற்றன ளவளுக் கெந்தை யொருதனித் துணைய தாகி
மற்றிவ ணிருத்தி ரென்ன வழகிதா மன்ன வென்றான்.

நல் தவன் மொழியைக் கேளா—நல்ல தவத்தரான விருத்தரது வார்த்தையைக் கேட்டு, எந்தை நன்று—எந்தையே உமது வருகை நன்றேயாம்; நீர் நவின்ற தீர்த்தம் நிற்றலும் ஆடி—தேவரீர் கூறியருளிய குமரி தீர்த்தத்திலே தினந்தோறும் ஆடுதல் செய்து; எங்கள் நேரிழை தமியளாகி உற்றனள்—எங்கள் புதல்வியாகிய கன்னிகை இதுகாறுந் தமித்தவளாய் இங்கே இருந்தாள்; அவளுக்கு ஒரு தனித் துணை ஆகி—அங்ஙனந் தனித்திருந்தாளுக்கு இனி ஒரு தனித் துணையீராய், இவண் இருத்திர் என்ன—இவ்

விடத்தில் இருந்தருள்க என்று வேண்டுதல் செய்ய, மன்ன அழகிது ஆம் என்ருன்—அரசனே உன் கருத்து அதுவாயின் அக்கருத்து அழகியதாம் என்று அருளிச்செய்தார்.

நேரிழை—ஒத்த ஆபரணங்களை அணிந்தவள்.

மன்னன், தன்னிடந் தந்த பொருளைத் தந்தாரிடம் ஒப்பித்தானுயினன். 'தனித்துணை'யைத் தனித்துணை என்ருன்; அவன் தவம் இருந்தவாறு. (98)

இனையதோர் பொழுதிற் றந்தை யேந்திழை தன்பா லேகித்
தினையொடு கிழங்கு மாவுந் தீங்கனி பிறவு நல்கி
யனையவ டுணைய தாக வருந்தவன் றன்னை வைத்து
வனைகழ லெயின ரோடும் வல்லையின் மீண்டு போனுன்.

இனையது பொழுதில்—இவ்வாருகிய சமயத்தில், தந்தை—பிதாவாகிய நம்பியரசன், ஏந்திழை தன்பால் ஏகி—புதல்வியாகிய வள்ளிநாயகியாரிடஞ் சென்று, தினையொடு கிழங்கும் மாவும் தீங்கனி—தினையுணவுகளையுங் கிழங்கு வகைகளையுந் தினைமாவையும் இனிய கனிகளையும், பிறவும் நல்கி—தேன் முதலிய பிறவற்றையுங் கொடுத்து, அனையவள் துணையாக—அவ் வள்ளி நாயகிக்கு ஒரு தனித் துணையாக, அருந்தவன் தன்னை வைத்து—அரிய விருத்த தாபதரை இருக்கச் செய்து, வனை கழல் எயினரோடு—கட்டப்பட்ட கழலினை யுடைய வேட்டுவர்களோடு, வல்லையின் மீண்டு போனுன்—விரைவாகத் திரும்பிச் சென்ருன்.

அடியார்க்கு எல்லாம் நல்லனவாதலும் ஐம்புலன்கள் ஏவல்வழி நிற்றலும் ஆகிய உண்மை, நம்பியரசன் சுப்பிரமணியப் பெருமானை வள்ளிநாயகி யாருக்குத் துணைவைத்து விரைந்து மீளுதலில் நோக்கத்தக்கது. (99)

போனது முதியோன் கண்டு புனையிழை தன்னை நோக்கி
நானினிச் செய்வ தென்கொ னலிவது பசிநோ யென்னத்
தேனொடு கனியு மாவுஞ் செங்கையிற் கொடுப்பக் கொண்டு
வேனிலு முடுகிற் றுண்ணீர் விடாய்பெரி துடையே னென்ருன்.

போனது முதியோன் கண்டு—வேட்டுவர் தலைவனும் வேடர்களும் மீண்டு சென்றதை முதியோராகிய அத் தாபத வேடத்தர் கண்டு, புனை இழை தன்னை நோக்கி—அலங்கரிக்கப்பட்ட ஆபரணங்களை அணிந்த வள்ளிநாயகியாரைத் திருநோக்கஞ் செய்து, பசி நோய் நலிவது—பசி நோயாகிய அக்கினி வாட்டு வதாயிருக்கின்றது; இனி நான் செய்வது என்கொல் என்ன—இனி நான் செய் யத்தக்கது என்னை என்று வினவ, தேனொடு கனியும் மாவும் செங்கையில் கொடுப்ப—தேனையுங் கனிகளையுந் தினைமாவையுஞ் சிவந்த திருக்கரங்களில் வள்ளிநாயகியார் நிவேதிப்ப, கொண்டு—அவற்றைத் திருவமுது செய்து,

வேனிலும் முடுகிற்று—பசிநோய் வெப்பமன்றி வேனில் வெப்பமும் அதி கரித்தது; நீர் உண் விடாய் பெரிது உடையேன் என்ருன்—நீர்வேட்கையாகிய தாகம் பெரிதுமுடையேன் என்று கூறியருளினுர்.

ஐம்புலவேட்டுவச்சேட்டை அடங்கியது. இனிச் சீவபோதத்தை நுகர்ந்த தன்றித் தணியாத சிவப்பசியாகிய சிவாக்கினி எழுந்தது. அது நிவேதனங்க ளோடு நிவேதனஞ் செய்வாரையும் நுகர்ந்துட் கொள்வதாமென்க. 'நான் இனிச் செய்வதென்', 'வேனிலும் முடுகிற்று' என்பன குறிப்புமொழிகள். இப் பசி தாகம் பரிபக்குவ ஆத்ம போதத்தை நுகரும் பசி தாகம் என்க. *(100)*

செப்புறு மனைய மாற்றஞ் சேயிழைக் கிழத்தி கேளா
விப்புற வரைக்கு மப்பா லெழுவரை கடந்த தற்பி
னுப்புற மிருந்த தெந்தா யொருசுனை யங்க ணேகி
வெப்புற லின்றித் தெண்ணீர் மிசைந்துபின் வருதி ரென்ருள்.

சேயிழைக் கிழத்தி—செம்மையாகிய ஆபரணங்களையுடையராகிய வள்ளி நாயகியார், செப்பு உறு அனைய மாற்றம் கேளா—அத் தாபதர் செப்பிய அவ் வார்த்தைகளைக் கேட்டு, இப் புற வரைக்கும்—இவ்விடத்திலுள்ள இந்த மலையையும், அப்பால் எழு வரையும்—இம்மலைக்கப்பால் ஏழு மலைகளையும், கடந்ததன்பின்—கடந்து சென்றபின்பு, உப்புறம் ஒரு சுனை இருந்தது—மேற் புறத்து ஒரு சுனை உண்டு, எந்தாய்—எமது சுவாமியே, அங்கண் ஏகி—அவ் விடத்துக்குச் சென்று, தெண்ணீர் மிசைந்து—தெளிந்த நீராகிய அமுதத்தை உண்டு, வெப்புறல் இன்றி—வெப்பந் தணிந்து, பின் வருதிர் என்ருள்—பின்பு இவ்விடம் வருவீராக என்று கூறினுர்.

நான்காவது உருபு மயக்கம். எழுவரை என்பதனை மாயாதத்துவம் ஏழும் என்பர். ஆகவே இப்புறம் ஆன்மதத்துவமும் உப்புறம் சிவதத்துவமு மாம். நும்போன்ற தாபதர் மிசைதற்குரியது தத்துவங் கடந்த சுனைக்கண் அமுதமாம் என்றவாறு. *(101)*

பூட்டுவார் சிலைக்கை வேடர் பூவையே புலர்ந்து தெண்ணீர்
வேட்டனன் விருத்தன் வெற்பில் வியனெறி சிறிதுந் தேரேன்
ருட்டுணை வருந்து மென்று தாழ்த்திடா தொல்லை யேகிக்
காட்டுதி சுனைநீ ரென்ரு னறுமுகங் கரந்த கள்வன்.

பூட்டு வார் சிலைக் கை வேடர் பூவையே—நாண் பூட்டிய நீண்ட வில்லைக் கையிற் பிடித்த வேட்டுவர் குலத்துப் பெண்ணே, புலர்ந்தது—எனது நா வரட்சியுற்றது; தெள் நீர் வேட்டனன்—தெள்ளிய நீர்வேட்கையை யுடை யேன்; விருத்தன்—யானே முதியேன்; வெற்பில் வியன் நெறி சிறிதும் தேரேன்—இம்மலைக்கண் ஏற்றிழிவான வழியைச் சிறிதும் அறியேன்; தாள் துணை வருந்தும் என்று தாழ்த்திடாது—இரண்டாகிய பாதங்கள் வருந்தும் என்று தாமதஞ் செய்யாமல், ஒல்லை ஏகி—விரைவாக உடன்வந்து, சுனை நீர்

காட்டுதி—குறிப்பிட்ட சுனைக்கண் நீரைக் காட்டுவாயாக, என்முன்—என்று கூறியருளினர்; அறு முகம் கரந்த கள்வன்—ஆறு திருமுகங்களையுங் கரந்து வந்தருளிய உள்ளங் கவர் கள்வராகிய சுப்பிரமணியப் பெருமான்.

பூவை—நாகணவாய்; உவம ஆகுபெயர். வியம் வியன் என நின்றது. உட ஞுதல் உபகாரம் ஆன்மாவின் பொருட்டேயாதலின் ஒல்லை ஏகிக் காட்டுதி என்றருளினரென்க. பக்குவம் வரும் வரை கரந்துநின்றுபகரித்தலின் கள்வன் என்ரூர். (102)

முருகன துரையை யந்த மொய்குழல் வினவி யெந்தாய்
வருகென வழைத்து முன்போய் வரையெலாங் கடந்து சென்று
விரைகமழ் சுனைநீர் காட்ட வேனிலால் வெதும்பி ஞன்போற்
பருகினன் பருகிப் பின்ன ரிஃதொன்று பகர்த லுற்ருன்.

அந்த மொய் குழல்—செறிந்த கூந்தலையுடைய அவ் வள்ளிநாயகியார், முருகனது உரையை வினவி—விருத்த தாபதராகிய முருகப்பெருமானது வார்த்தைகளைக் கேட்டு, எந்தாய்—எமது சுவாமீ, வருக என அழைத்து முன் போய்—வந்தருள்க என்று அழைத்துக்கொண்டு முன்னர்ப் போய், வரை எலாம் கடந்து சென்று—தத்துவங்களாகிய வரைப்புக்களைக் கடந்து சென்று, விரை கமழ் சுனை நீர் காட்ட—மணங் கமழுகின்ற சுனைக்கண் அமுதமாகிய நீரைக் காட்ட, வேனிலால் வெதும்பிஞன் போல்—வெய்யிலினுல் வெப்பமுற் றவர்போல, பருகினன்—அந்நீரைப் பருகியருளினர்; பருகி—பருகுதலைச் செய்து, பின்னர்—தாகந் தணிந்த பின்பு, இஃது ஒன்று பகர்தல் உற்ருன்—இஃதொன்றனைக் கூறியருளினர்.

வழிகாட்டுவானுக்கு வழிகாட்டுவாராய் முன்போயினர். பந்த நிலையில் முதல்வன் ஆன்மாவாய்ப் பின்னிற்பன் என்க. ஓடிமீள்கென ஆள்தல் பார்த் திருப்பவன் அவன். ஆள்தல்—ஆடல். (103)

ஆகத்தை வருத்து கின்ற வரும்பசி யவித்தாய் தெண்ணீர்த்
தாகத்தை யவித்தா யின்னுந் தவிர்ந்தில தளர்ச்சி மன்னே
மேகத்தை யனைய கூந்தன் மெல்லியல் வினையேன் கொண்ட
மோகத்தைத் தணித்தி யாயின் முடிந்ததென் குறைய தென்ருன்.

மேகத்தை அனைய கூந்தல் மெல்லியல்—மேகத்தையொத்த கூந்தலை யுடைய மென்மையாகிய இயல்பினையுடையவளே, ஆகத்தை வருத்துகின்ற அரும்பசி அவித்தாய்—உடலை வருத்துகின்ற நீக்குதற்கரிய பசியை நீக்கிஞய்; தெள் நீர்த் தாகத்தை அவித்தாய்—தெளிந்த நீர்வேட்கையாகிய தாகத்தை யும் போக்கிஞய்; தளர்ச்சி இன்னும் தவிர்ந்தில—இவ்வாறு நீ செய்தும் எனக் குண்டாய தளர்ச்சி இன்னமுந் தவிர்ந்ததில்லை; வினையேன் கொண்ட மோகத்தைத் தணித்தியாயின்—வினையை மேற்கொண்டேஞகிய யான் எடுத்துக்கொண்ட மோகத்தைத் தணிப்பாயாஞல், என் குறை முடிந்தது என்ருன்—என் மனக்குறை முற்றுப்பெற்றதாம் என்று கூறியருளினர்.

பசிதாகங்களை ஒழியாதொழியினும் ஒழிக, மோகத்தைத் தணித்தலே முக்கியம் என்றவாறு. பஞ்ச கிருத்திய கர்த்தாத் தாமேயாதலின் வினையேன் என்றார். கொண்ட மோகம் ஆட்கொள்ளக் கொண்ட மோகம் என்க. (104)

வேறு

ஈறின் முதியோ னிரங்கி யிரந்துகுறை
கூறி மதிமயங்கிக் கும்பிட்டு நின்றளவி
னாறு மலர்க்கூந்த னங்கை நகைத்துயிர்த்துச்
சீறி நடுநடுங்கி யிவ்வாறு செப்புகின்றாள்.

ஈறு இல் முதியோன்—மிக்க விருத்தராய குமாரசுவாமி, இரங்கி—இரங்குதல் செய்து, குறைகூறி—தமது குறையை எடுத்துச் சொல்லி, இரந்து மதிமயங்கி—இரத்தலைச்செய்து புத்திமயங்கி, கும்பிட்டு நின்ற அளவில்—கும்பிட்டு நின்ற சமயத்தில், நாறு மலர்க் கூந்தல் நங்கை—மணங் கமழுகின்ற மலரணிந்த கூந்தலையுடைய வள்ளிநாயகியார், நகைத்து—சிரித்து, உயிர்த்து—நெட்டுயிர்த்து, சீறி—வெகுண்டு, நடுநடுங்கி—நடுக்கமுற்று, இவ்வாறு செப்புகின்றாள்—இவ்வாறு கூறுகின்றார்.

குமாரசுவாமியின் நிலை, *'**கலைப்படு மதியப் புத்தேள் கலங்கலம் புனலிற் றேன்றி, யலைப்படு தன்மைத் தன்றே**' என்று மேற் கூறப்பட்டது. விருத்த தாபத வேடத்தர் ஐயுற்றுத் தெளியவேண்டியவராயிருத்தலின் வள்ளிநாயகியார்பால் மாறுபட்ட பலவேறு மெய்ப்பாடுகள் தோன்றலாயின. முழுதுலகு அருள்புரி முதல்வராய் நின்றார் தாமே, விருத்த தாபதராயினர் என்று துணிதல் யாங்ஙனம்? விருத்தராயினர் வேடர்கள் சென்றபின் அவ் வேடத்தை மாற்றாததென்னை? என்றிங்ஙனம் ஐயம் எழும் என்க. (105)

மேலா கியதவத்தோர் வேடந் தனைப்பூண்டிங்
கேலா தனவே யியற்றினீர் யார்விழிக்கும்
பாலாகித் தோன்றிப் பருகினு ராவிகொள்ளு
மாலால நீர்மைத்தோ வைய ரியற்கையதே.

மேல் ஆகிய தவத்தோர் வேடம் தனைப் பூண்டு—மேன்மை பொருந்திய தவத்தர்களின் வேடத்தைத் தரித்துக்கொண்டு, இங்கு ஏலாதன இயற்றினீர்—இங்கே அவ்வேடத்துக்குப் பொருந்தாதனவற்றைச் செய்தீர்; ஐயர்—ஐயரே, இயற்கை—உமது இயல்பு, யார் விழிக்கும் பாலாகித் தோன்றி—யாவருடைய பார்வைக்கும் பாலாகிப் புலப்பட்டு, பருகினுர் ஆவி கொள்ளும்—பாலென்று நம்பிப் பருகியவர்களின் உயிரைக் கொள்ளை கொள்ளுகின்ற, ஆலால நீர்மைத்து—வெள்ளை வண்ணமாயதொரு ஆலகால விஷத்தின் தன்மையைக் கொண்டதாயிருக்கின்றது.

---

* கந்தபு: வள்ளியம்மை திருமண. — 73

கொண்டதோ என உரைப்பினும் அமையும். ஆலகாலத்துக்குத் தப்ப லாம்; பாலாகித் தோன்றும் ஆலகாலத்துக்குத் தப்புவதரிதாமென்றவாறு.
(106)

கொய்தினைகள் காப்பேனைக் கோதிலா மாதவத்தீர்
மெய்தழுவ வுன்னி விளம்பா தனவிளம்பிக்
கைதொழுது நிற்றல் கடனன்று கானவரிச்
செய்கை தனையறியிற் றீதாய் முடிந்திடுமே.

கோதிலா மா தவத்தீர்—குற்றமற்ற பெரிய தவத்தையுடையவரே, கொய் தினைகள் காப்பேனை—கொய்யப்படுந் தினைப்புனங் காவல் செய்வேனாகிய என்னை, மெய் தழுவ உன்னி—மெய்யைத் தழுவக் கருதி, விளம்பாதன விளம்பி—கூறத் தகாதனவற்றைக் கூறி, கைதொழுது நிற்றல் கடன் அன்று—கும்பிட்டு நிற்றல் முறையன்று; கானவர் இசெய்கை தனை அறியின்—வேடுவர்கள் இத் தகாத செய்கையை அறிவராயின், தீது ஆய் முடிந்திடும்—கேடாய் முற்றும்.

அவர் கடனை ஞாபகஞ் செய்யும்பொருட்டு, 'கோதிலா மாதவத்தீர்' என விளித்தார். இருவர்க்குங் கேடாம் ஆதலின் பொதுப்படத் 'தீதாய் முடிந்திடும்' என்றார். இவ் விருத்த மாதவத்தரை, முழுதுலகருள்புரி முதல்வரின் வேறனவர் என்று வைத்தே வள்ளிநாயகியார் உரை நிகழ்த்துகின்றனர் என்க.
(107)

நத்துப் புரைமுடியீர் நல்லுணர்வு சற்றுமிலீ
ரெத்துக்கு மூத்தீ ரிழிகுலத்தேன் றன்னைவெஃகிப்
பித்துக்கொண் டார்போற் பிதற்றுவீ ரிவ்வேடர்
கொத்துக்கெ லாமோர் கொடும்பழியைச் செய்தீரே.

நத்துப் புரை முடியீர்—சங்கையொத்த நரைத்த மயிர் முடியையுடையவரே, நல் உணர்வு சற்றும் இலீர்—நீர் நல்லறிவு சிறிதும் இல்லாதவராயிருக்கின்றீரே; எத்துக்கு மூத்தீர்—இவ்வாறாயின் நும் முதுமையானெய்திய பயன் யாதோ; இழிகுலத்தேன் தன்னை வெஃகி—இழிந்த குலத்தேனாகிய என்னை விரும்பி, பித்துக் கொண்டார் போல் பிதற்றுவீர்—பைத்தியம் பிடித்தவர் போலப் பிதற்றுதல் செய்வீர்; இவேடர் கொத்துக்கு எலாம் ஓர் கொடும் பழியைச் செய்தீர்—இவ்வாற்றால் இந்த வேடர் கூட்டம் முழுவதற்குந் தீராததொரு கொடிய பழியைச் செய்தீர் ஆயினீர்.

நந்து நத்து என்றாயிற்று. 'வலம்புரி புரையும் வான்னரை முடியினர்' என்பது திருமுருகாற்றுப்படை. எத்துக்கு—எதன் பொருட்டு; அணுப்புக்கு என்றுரைப்பாரும் உளர். பிதற்றுவீர் என்பது, அது நுந் தொழிலாயமைந்திருக்கின்றதென்றவாறும். இவ் வேடதாரிகளின் கூட்டத்துக்கு என்றுரைப்பினும் அமையும்.

'நேயமலி மெய்யடியார் நேர்ந்துழியு நின்போன்
மாயமென எள்ளுமொரு வான்பழியும் வைத்தாய்'

என்பது தணிகைப்புராணம். (108)

சேவலாய் வைகுந் தினைப்புனத்திற் புள்ளினுடன்
மாவெலாங் கூடி வளர்பைங் குரல்கவரு
நாவலோய் நீரு நடந்தருளு நான்முந்திப்
போவனு லென்று புனையிழையாள் போந்தனளே.

நாவலோய்—வாக்கு வல்லபம் படைத்தவரே, சேவலாய் வைகும் தினைப் புனத்தில்—காவல்செய்பவளாய் யான் காத்திருக்குந் தினைப்புனத்தின்கண்ணே, புள்ளினுடன் மா கூடி—பறவைகளோடு விலங்குகளுஞ் சேர்ந்து, எலாம் வளர் பைங்குரல் கவரும்—யாவும் வளர்ந்த பசிய தினைக்கதிர்களைக் கவராநிற்கும்; நான் முந்திப் போவன்—ஆகையினாலே யான் தாமதஞ் செய்யாமல் நுமக்கு முன்னமே ஆண்டுச் செல்வேன்; நீரும் நடந்தருளும்—நீரும் செல்வுழிச் செல்லும்; என்று—என்று கூறி, புனை இழையாள் போந்தனள்—புனைந்த ஆபரணத்தையுடைய வள்ளிநாயகியார் முன்னர்ச் சென்றார்.

பசுமை ஈண்டு முதிர்ந்த செவ்வி. 'நீரும் நடந்தருளும்' என்னும் பன்மை வாசகமும் அருள் என்ற வார்த்தையும் பிரியலாகாததொரு நிலையையும் புலப் படுத்துவனவாம். (109)

பொன்னே யனையாண்முன் போகுந் திறனோக்கி
யென்னே யினிச்செய்வ தென்றிரங்கி யெம்பெருமான்
றன்னே ரிலாதமருந் தந்திமுகத் தெந்தைதனை
முன்னே வருவாய் முதல்வா வெனநினைந்தான்.

பொன் அனையாள்—இலக்குமியை ஒத்த வள்ளிநாயகியார், முன் போகும் திறன் நோக்கி—உடன்போக்குச் செய்யாது தமக்கு முன் போகின்ற அபக்குவ தசையைக் கண்டு, எம்பெருமான்—எமது பரம குருவாகிய சுப்பிரமணியப் பெருமான், இனி என் செய்வதென்று இரங்கி—இனி என் செய்வது என்று அவர்பாலிரக்கங்கொண்டு, தன் நேரிலாது அமரும் தந்தி முகத்து எந்தை தனை—தமக்கு ஒப்பில்லாதிருக்கின்ற யானை முகத்தினையுடைய எம் பிதாவாகிய விநாயகப்பெருமானை, முதல்வா—மூலப்பொருளாயுள்ளவரே, முன்னே வருவாய்—முனைப்படங்காது செல்லுகின்ற இப்பேதைக்கு முன்னே எழுந்தருளி வழிகாட்டியருளுவீராக; என நினைந்தான்—என்று ஓங்கார முதல்வரைத் தியானஞ்செய்தருளினார்.

முன், காலத்தானும் இடத்தானும் முன் என்க. பேதை, 'பெரும் பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற பேதை' என்க. முனைப்படங் காதே முன்செல்வாருய்யும்பொருட்டுக் குருபரமூர்த்தி உள்ளத்துள் ஓங்கார மாய் நிற்கும் மெய்யை எழுப்பினார் என்க. (110)

அந்தப் பொழுதி லறுமா முகற்கிரங்கி
முந்திப் படர்கின்ற மொய்குழலாண் முன்னுகத்
தந்திக் கடவுட் டனிவார ணப்பொருப்பு
வந்துற்ற தம்மா மறிகடலே போன்முழங்கி.

அந்தப் பொழுதில்—வள்ளிநாயகியாரை வேகங் கெடுத்தாண்டருள வேண்டிய சமயத்தில், அறு மா முகற்கு—பெருமை பொருந்திய ஆறு திரு முகங்களையுடைய குருபரராகிய குருமூர்த்தியின் வேண்டுதனிமித்தம், இரங்கி—வள்ளிநாயகியாரின் போக்குக்கு இரக்கங் கொண்டு, முந்திப் படர் கின்ற மொய்குழலாள் முன்னுக—குருபரருக்கு முந்திச் செல்லுகின்ற வள்ளி நாயகியாருக்கு எதிரே, தந்திக் கடவுள் தனிப் பொருப்பு வாரணம்—யானை முகக் கடவுளாகிய ஒப்பற்ற மலைபோன்றதொரு யானை, மறிகடல்போல் முழங்கி வந்துற்றது—திரை மறிகின்ற கடல்போல முழக்கஞ் செய்துகொண்டு வந்தருளியது.

அறுமுகற்கிரங்கி எனினும் வள்ளிநாயகியார்க்கிரங்கியதேயாம். பக்குவ தசை அணைய, உய்ய உள்ளத்துள் ஓங்காரமாகும் மெய் உதயமாயிற் றென்க. (111)

அவ்வே லையில்வள்ளி யச்சமொடு மீண்டுதவப்
பொய்வேடங் கொண்டுநின்ற புங்கவன்றன் பாலணுகி
யிவ்வேழங் காத்தருள்க வெந்தைநீர் சொற்றபடி
செய்வே னெனவொருபாற் சேர்ந்துதழீஇக் கொண்டனளே.

அ வேலையில்—உய்யும்பொருட்டு ஓங்காரமாகிய மெய் உதயமாகிய அந்தச் சமயத்தில், வள்ளி—வள்ளிநாயகியார், அச்சமொடு மீண்டு—குருமூர்த்தியின் சொற்றப்பி என் செய்தேனென்ற அச்சத்தோடு முன்னே செல்லுதலைத் தவிர்ந்து மீண்டு, தவம்—தமது தவவிசேடங் காரணமாக, பொய் வேடம் கொண்டு நின்ற—பொய்ம்மைகளைப் போக்கும்பொருட்டுப் பொய்வேடந் தரித்துநின்றருளிய, புங்கவன் தன்பால் அணுகி—மேலோராகிய குருபரர் பக்கலை அணுகி, எந்தை—என்குரவரே, இ வேழம் காத்தருள்க—ஏழையேனுக் கிரங்கி எழுந்தருளிய இந்த ஞானவேழத்தைப் பேணியருளுக; நீர் சொற்றபடி செய்வேன் என—தேவரீர் உபதேசித்தவாறு இனி யான் செய்வேன் என்று கூறி, ஒருபால் சேர்ந்து தழீஇக் கொண்டனள்—ஒருபாலாகிய பின்பாலிற் சேர்ந்து தழுவிக்கொண்டார்.

*'உற்கைதரும் பொற்கை யுடையவர்போ லுண்மைப்பின்
நிற்க அருளார் நிலை'

என்னுந் திருவருட்பயனுக்கு இலக்கியமாயினர் வள்ளிநாயகியார்.

ஓங்காரம் உதயமாகவே, முழுதுலகருளும் முதல்வர்தாமே பொய்வேடந் தாங்கி நின்றமை தெளிவாயிற்றென்க. (112)

*திருவருட்பயன்: உயிர்விளக்கம்—8.

அன்னதொரு காலை யறுமா முகக்கடவுண்
முன்னொருசார் வந்து முதுகளிற்றின் கோடொற்றப்
பின்னொருசார் வந்து பிடியின் மருப்பூன்ற
விந்நடுவே நின்று னெறுழ்வயிரத் தூணேபோல்.

அன்னது ஒரு காலை—அத்தன்மைத்தாகிய ஒப்பற்ற பரிபக்குவ சமயத்தில், அறு மா முகக் கடவுள்—பெருமை பொருந்திய அறுமுகக்கடவுளாகிய குருபரர், ஒருசார் முன்—ஒரு புறமாகிய முற்பக்கத்தில், முது களிற்றின் கோடு வந்து ஒற்ற—முதிய பிரணவமாகிய களிற்றின் கொம்பர் பொருந்தி ஒருமையுற, ஒருசார் பின்—அதேசமயத்தில் ஒரு புறமாகிய பிற்பக்கத்தில், பிடியின் மருப்பு வந்து ஊன்ற—வள்ளிநாயகியாராகிய பிடியின் தனங்களாகிய மருப்புக்கள் பொருந்தி ஊன்றுதல் செய்ய, இவ் நடுவே—இவற்றுக்கு மத்தியில், எறுழ் வயிரத் தூண்போல் நின்றான்—வலிய வச்சிரத்தாலான தூண்போன்று நின்றருளினார்.

'உலைப்படு மெழுக தென்ன உருகியே ஒருத்தி காதல், வலைப்படு கின்றான் போல வருந்தியே இரங்கா நின்றமை', கனவாய்ப் பழங்கதையாக, குருபர மூர்த்தி வச்சிரக் கம்பம்போன்று சலனமின்றி இருந்தபடி இருந்தாரென்க.

முதுமை முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளாம் முதுமை. தனங்கள் கற்பின் சின்னமாம். அவை ஊன்றுதலாவது, அப் பரம்பொருளைத் தாரகமாகக் கோடலாம். இவ்—இவை. இவ் + நடு = இந்நடு.

குருபரமூர்த்தி ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு ஓங்காரமூர்த்தியாய் ஓம் பட்டு நிற்புழிப் பக்குவான்மாக்கள் பெண்மையெய்தித் தாரகமாகிய அப் பரம்பொருளோடொன்றுபடுதல் ஈண்டுப் புலமாதல் காண்க. ஓங்காரமுஞ் சுப்பிரமணியப் பெருமானும் வள்ளிநாயகியும் ஒன்றாய் ஒருமையுறும் நிலை ஈண்டுக் காட்டப்பட்டது. (113)

கந்த முருகன் கடவுட் களிறுதனை
வந்தனைகள் செய்து வழுத்திநீ வந்திடலாற்
புந்தி மயறீர்ந்தேன் புனையிழையுஞ் சேர்ந்தனளா
லெந்தை பெருமா னெழுந்தருள்க மீண்டென்றான்.

கந்த முருகன்—கந்தசுவாமியாகிய முருகப்பெருமான், கடவுள் களிறுதனை வந்தனைகள் செய்து வழுத்தி—விநாயகக்கடவுளாகிய களிற்று யானையை வழி பாடு செய்து துதித்து, நீ வந்திடலால்—தேவரீர் வெளிப்பட்டருளியமையால், புந்தி மயல் தீர்ந்தேன்—உள்ள மயக்கந் தீர்தலைப் பொருந்தினேன்; புனை இழையும் சேர்ந்தனள்—அவ்வாற்றால் புனையிழையாகிய வள்ளிநாயகியுந் தானே வந்து சேர்தலைப் பெற்றாள்; எந்தை பெருமான்—எந்தையாகிய பெருமானே, மீண்டு எழுந்தருள்க என்றான்—மீண்டு உரிய தானத்துக்கு எழுந் தருள்க என்று பிரார்த்தித்தருளினார்.

புந்தி மயல்—வள்ளிநாயகியார்பாலுள்ள புந்திமயல். அதனைத் தம்மே லிட்டுக் கூறியருளினாரென்க. நீ வந்திடலாற் புனையிழையுஞ் சேர்ந்தனள்; அவளை ஆட்கொள்ளும் பித்துந் தீர்ந்தது எனினுமாம். (114)

என்னு மளவி லினிதென்றி யானைமுக
முன்னிளவ லேக முகமா றுடையபிரான்
கன்னி தனையோர் கடிகாவி னிற்கலந்து
துன்னு கருணைசெய்து தொல்லுருவங் காட்டினனே.

என்னும் அளவில்—என்று பிரார்த்தனை செய்யா நின்ற சமயத்தில், யானை முக முன் இளவல் இனிது என்று ஏக—முன்னிளவலாகிய யானைமுகக் கடவுள் நன்று என்று சென்றருள, முகம் ஆறு உடைய பிரான்—பின்னிளவலாகிய ஆறுமுகக்கடவுள், ஓர் கடி காவினில்—ஒரு வாசனை பொருந்திய சோலையில், கன்னி தனை கலந்து—கன்னிகையாகிய வள்ளிநாயகியாரை இரண்டறக் கலந்து, துன்னு கருணை செய்து—நிறைந்த கிருபை புரிந்து, தொல் உருவம் காட்டினன்—தமது பழைமையாகிய திருவுருவத்தைக் காட்டியருளினார்.

கலத்தலாவது இருமையின் ஒருமையாகிய அத்வைத நிலையுறுதலாம். அந்நிலை எய்தியவழியே காட்டக் காணுதல் கைகூடுமாதலின், கலந்து காட்டினன் என்க. காட்டியருளிய தொல்லுருவச் சிறப்பை வருஞ் செய்யுளிற் காண்க. முன்னிளவல்—மூத்தோன். (115)

முந்நான்கு தோளு முகங்களோர் மூவிரண்டுங்
கொன்னார்வை வேலுங் குலிசமுமே னைப்படையும்
பொன்னார் மணிமயிலு மாகப் புனக்குறவர்
மின்னாள்கண் காண வெளிநின் றனன்விறலோன்.

முந்நான்கு தோளும்—பன்னிரண்டு திருப்புயங்களும், முகங்கள் ஓர் மூவிரண்டும்—ஒப்பற்ற ஆறு திருமுகங்களும், கொன் ஆர் வை வேலும்—பெருமை நிறைந்த கூர்மையான வேற்படையும், குலிசமும்—வச்சிராயுதமும், ஏனைப் படையும்—ஏனைய படைக்கலங்களும், பொன் ஆர் மணி மயிலும்—பொற் பிரபை சூழ்ந்த பலவாகிய மரகத ரத்தினங்களைக் கொண்ட பச்சை மயில் வாகனமும், ஆக—தம்பாலமைய, புனக் குறவர் மின்னாள் கண் காண—தினைப் புனங் காவல் செய்கின்ற குறமகளாகிய வள்ளிநாயகியாரின் திருக்கண்கள் தரிசிக்கும்படி, விறலோன் வெளி நின்றனன்—திருவருள் வென்றி முற்றுப் பெற்றரான சுப்பிரமணியப்பெருமான் வெளிப்பட்டுக் காட்சியளித்தருளினார்.

*'வீறு கேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம்
மாறி லாதவே லபயமே வலமிடம் வரதம்
ஏறு பங்கய மணிமழுத் தண்டுவில் லிசைந்த
ஆறி ரண்டுகை அறுமுகங் கொண்டுவே ளடைந்தான்'.

இத் திருக்கோலஞ் சயந்தனுக்குக் கனவிற் காட்டியது.

இங்கே தம்மைக் கலந்து காட்ட அப்பெருமானது திருக்கோலத்தை அவரருளினாலே வள்ளிநாயகியார் நனவிற் கண்டருளினாரென்க.

---

* கந்தபுராணம்: சயந்தன் கன.—4.

§ ' அவனருளே கண்ணுகக் காணினல்லாற் காண்பாரார் '
என்ற திருவாக்கு ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

† ' ........................................................ தனக்கொன் றின்றி,
அருள்உரு உயிருக் கென்றே ஆக்கினன் அசிந்த னன்றே'

என்பது சித்தியார். (116)

கூரார் நெடுவேற் குமரன் றிருவுருவைப்
பாரா வணங்காப் பரவலுரு விம்மிதமுஞ்
சேரா நடுநடுங்காச் செங்கைகுவி யாவியரா
வாராத காதலுரு வம்மையிது வோதுகின்ருள்.

கூர் ஆர் நெடு வேல் குமரன் திரு உருவை—கூர்மை பொருந்திய நீண்ட வேற்படையைத் தாங்கிய குமாரப்பெருமானது திருக்கோலத்தை, பாரா—தரிசித்து, வணங்கா—வணங்கி, பரவல் உரு—துதித்து, விம்மிதமும் சேரா—இவற்ருேடு ஆச்சரியமும் அடைந்து, நடுநடுங்கா—நடுநடுங்கி, செங்கை குவியா—செம்மையாகிய கைகளைக் குவித்து, வியரா—மெய் வியர்த்து, ஆராத காதல் உரு—இவ்வாற்ருல் தெவிட்டாத பேரன்பு கைம்மிக்கு, அம்மை இது ஓதுகின்ருள்—வள்ளிநாயகியார் இஃதொன்று சொல்லுகின்ருர்.

தரிசித்த மாத்திரையானே பரவசமுற்ற வள்ளிநாயகியாருக்கு இடையிடையே தம்முணர்வு தோன்றுந்தோறும் விம்மிதமும் ஒன்ருேடொன்று மாறுபடும் மெய்ப்பாடுகளுந் தோன்றுவன ஆயின. (117)

மின்னே யனையசுடர் வேலவரே யிவ்வுருவ
முன்னேநீர் காட்டி முயங்காம லித்துணையுங்
கொன்னே கழித்தீர் கொடியேன்செய் குற்றமெலா
மின்னே தணித்தே யெனையாண்டு கொள்ளுமென்ருள்.

மின் அனைய சுடர் வேலவரே—மின்னலையொத்த ஞானச்சுடர் காலுகின்ற வேற்படையைத் தாங்கிய பிரபுவே, இ உருவம்—இந்தத் திருப்பெருங் கோலத்தை, நீர் முன்னே காட்டி—தேவரீர் முன்னமே காட்டியருளி, முயங்காமல்—என்னைக் கலந்துகொள்ளாமல், இத்துணையும் கொன்னே கழித்தீர்—இத்துணைக்காலமும் வீணே கழித்தலைச் செய்தருளினீர்; கொடியேன் செய் குற்றம்—அவ்வாறு செய்தது பரிபக்குவம் அற்ற பாவியேன் செய்த குற்றத்தினுலேயாம்; எலாம்—இன்னேரன்ன தவக் குறைவுகளனைத்தையும், இன்னே தணித்து—இக்கணமே போக்கி, எனை—அடியேனை, ஆண்டுகொள்ளும் என்ருள்—ஆட்கொண்டருள்வீர் என்று பிரார்த்தித்தார்.

கலந்தன்றிக் காட்டலாகாமையை அறிந்திருந்துங், 'காட்டி முயங்காமல்' என உலக நடைபற்றிக் கூறினுர். கூறியவர், அதுவும் பிறவுமான

§ அப்பர்: தனித்திருத்தாண்டகம்—3.
† சிவஞானசித். சுபக். பிரமாண—47.

எண்ணிறந்த குற்றங்களைத் தம்பாற் கண்டு, தங் குற்றங்களைத் தணித்தாளுதலை வேண்டுவாராயினர். 'இன்னே' என்பது, அதிதீவிர பக்குவத்தானெய்திய விரைவுக் குறியீடாம்.

*'............எந்தாய் அந்தோ தரியேனே'

'தரிக்கிலேன் காய வாழ்க்கை............'

என்பன மணிவாசகங்கள். (118)

உம்மை யதனி லுலகமுண்டோன் றன்மகணீ
நம்மை யணையும்வகை நற்றவஞ்செய் தாயதனு
லிம்மை தனிலுன்னை யெய்தினே மென்றெங்க
ளம்மை தனைத்தழுவி யைய னருள்புரிந்தான்.

நீ உம்மை தனில் உலகம் உண்டோன் தன் மகள்—நீ முற்பிறப்பிலே பூவுலகையுண்ட திருமாலின் புதல்வி; நம்மை அணையும் வகை நல் தவம் செய்தாய்—எம்மை அணையும்படி நல்ல தவத்தை அந்தப் பிறப்பிற் செய்து வைத்தாய்; அதனுல்—அந்தத் தவ விசேடத்தால், இம்மை தனில் உன்னை எய்தினேம்—இப்பிறப்பில் உன்னை அணைந்தாம்; என்று—என்று கூறியருளி, எங்கள் அம்மை தனைத் தழுவி—எங்கள் அம்மையாராகிய வள்ளிநாயகியாரைத் தழுவி, ஐயன் அருள்புரிந்தான்—சுப்பிரமணியப்பெருமான் திருவருள் பாலித்தார்.

காலங் கொன்னே கழிந்ததற்கிரங்கிய மின்னர் துயரை மின்னென மறையும்படி, அவருடைய பூர்வ வரலாறு கூறித் தணிகைப் பிரபு தணித்தருளினர் என்க. (119)

எங்கண் முதல்வ னிறைவி தனைநோக்கி
யுங்கள் புனந்தன்னி லுறைந்திடமுன் னேகுதியான்
மங்கைநல்லா யாமும் வருவோ மெனவுரைப்ப
வங்கண் விடைகொண் டடிபணிந்து போயினளே.

எங்கள் முதல்வன்—எங்கள் தலைவராகிய சுப்பிரமணியப்பெருமான், இறைவி தனை நோக்கி—துயரந் தணிந்து தலைவியாயினரை நோக்கி, மங்கை நல்லாய்—நன்மைப்பாடு பொருந்திய தலைவியே, உங்கள் புனம் தன்னில் உறைந்திட—உங்கள் தினைப்புனத்தின்கண் முன்போலக் காவல்செய்திருக்கும் பொருட்டு, முன் ஏகுதி—முதற்கட் செல்வாயாக; யாமும் வருவோம்—யாமும் ஆண்டு வருவோம்; என உரைப்ப—என்று கூறியருள, அடி பணிந்து விடை கொண்டு—திருவடிகளை வணங்கி விடைபெற்றுக்கொண்டு, அங்கண் போயினள்—அத் தினைப்புனத்துக்குச் சென்றருளினர்.

'புல்லிது புல்லிது புனத்தைக் காத்திடல்' என்றருளியவர், 'உங்கள் புனந்தன்னில் உறைந்திட முன் ஏகுதி' என்று கூறியருளியது, வாசனுமல பரிசோதனம் நடத்தும் பொருட்டுப்போலும். ஆல், அசை. (120)

* திருவாசகம்: திருச்சதகம்—60, 61.

### வேறு

வாங்கிய சிலைநுதல் வள்ளி யென்பவள்
பூங்குர லேனலம் புனத்து ளேகியே
யாங்கன மிருத்தலு மயற்பு னத்தமர்
பாங்கிவந் தடிமுறை பணிந்து நண்ணினாள்.

வாங்கிய சிலை நுதல் வள்ளி என்பவள்—வளைந்த வில்லையொத்த நெற்றியினையுடைய வள்ளிநாயகியார் என்று உலகத்தாற்றுதிக்கப்படுகின்ற அவ்வம்மையார், பூ குரல் ஏனல் அம் புனத்துள் ஏகி—பொலிவாகிய கதிர்களையுடைய அழகிய தினைப்புனத்தின்கட் சென்று, ஆங்கனம் இருத்தலும்—ஆண்டுக் காவல் செய்பவர் போன்றிருக்க, அயல் புனத்து அமர் பாங்கி வந்து—அயலாகிய தினைப்புனத்தின்கட் காவல்செய்திருந்த தோழியானவள் அவ்விடத்துக்கு வந்து, அடி முறை பணிந்து—வள்ளிநாயகியாரின் திருவடிகளை முறைப்படி வணங்கி, நண்ணினாள்—நாயகியாருக்குப் பக்கத்தில் அணுகியிருந்தாள்.

இன்றியமையாததொரு கருமத்தை உசாவுபவள் போன்றிருந்தாளாதலின், நண்ணினாள் என்றார். தமிழ்ச் சிறப்பாகிய களவியன்மணம் இனிது நடத்தற்கு இப்பாங்கி இன்றியமையாதவளென்க. *(121)*

நாற்றமுந் தோற்றமு நவிலொ ழுக்கமு
மாற்றமுஞ் செய்கையு மனமு மற்றதும்
வேற்றுமை யாதலும் விளைவு நோக்கியே
தேற்றமொ டிகுளையங் கினைய செப்புவாள்.

நாற்றமும்—இயற்கையினமைந்த நாற்றமும், தோற்றமும்—உருவத் தோற்றமும், நவில் ஒழுக்கமும்—உயிரினும் ஓம்புக என்று உலகம் புகழும் ஒழுக்கமும், மாற்றமும்—சொல்லும், செய்கையும்—செயலும், மனமும்—நினைவும், மற்றதும்—எஞ்சியதாகிய பயில்வும் ஆகிய ஏழும், வேற்றுமை ஆதலும்—வேறுபட்டிருத்தலையும், விளைவும்—வேறுபட்டிருத்தற்குக் காரணமாய நிகழ்வையும், நோக்கி—என்னை என்று சிந்தித்து, தேற்றமொடு—தெளிவுபிறத்தல் காரணமாக, அங்கு இகுளை இனைய செப்புவாள்—அப்பொழுது அந்தப் பாங்கி இவற்றை வினவுவாளாயினாள்.

ஈண்டு விளைவு தலைவனைத் தலைப்பட்டதாம். கன்னிகை ஒருத்தி தலைவனைத் தலைப்பட்டவழி அவயவ நாற்றம் முதலிய முதன் மூன்றும் வேறுபடுதல் இயல்பாம். ஒழுக்கம் வேறுபடுதலைத் 'தெய்வந் தொழாஅள்' என்பதனானுணர்க. ஏனையிரண்டும் வெளிப்படை. களவிற்றலைப்பட்டார்க்கு இம்மூன்றனோடு மற்றை நான்கும் வேறுபடும். பயில்வு—பயிலும் இடம். அது வேறுபடுதலாவது தனியிடம் நாடுதலாம். மாற்றம் முதலிய மூன்றும் மாறுபடுதல் வெளிப்படை. வேறுபடுவனவாகிய ஏழனுள் எஞ்சிநின்றது பயில்வு ஆதலின் மற்றது எனக் குறிப்பிடப்பட்டது.

வேற்றுமை, சூர் எனப்படுந் தெய்வத்தானும் எய்தலின், விளைவு சிந்திக் கப்பட்டுத் தேற்றத்தை நாடிநின்றது. ஒடு ஏதுப்பொருட்டு.

களவியன் மணத்தால் தலைவிபால் வேறுபாடு கண்ட பாங்கி, முத் திறத்தானாராய்ந்து தன் மதிக்கண் உடம்பாடுறுவள்.

*'முன்னுற வுணர்தல் குறையுற வுணர்தல்
இருவரும் உள்வழி அவன்வர வுணர்தலென்று
அம்மூன் றென்ப தோழிக் குணர்ச்சி'

என்பது இறையனார் களவியற் சூத்திரம்.

§'முன்னுற வுணர்தல் குறையுற வுணர்தல்
இருவரு முள்வழி அவன்வர வுணர்தலென்
றொருமூன்று வகைத்தே பாங்கிமதி யுடம்பாடு'

என்றிங்ஙனம் வழிமொழிந்தது நம்பியகப்பொருள்.

ஈண்டுக் காட்டிய ஏழுதிறத்தானும் ஆராய்வது, முன்னுறவுணர்தலாம். தலைவியிடத்தே முன்னருற்றதாகிய வேறுபாட்டின் விளைவைத் தோழி ஆராய்ந்தறிதல் என்றவாறு.

† 'நாற்றமுந் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வினும்
புணர்ச்சி எதிர்ப்பா டுள்ளுறுத்து வரூஉம்
உணர்ச்சி யேழினும் உணர்ந்த பின்றை'

என்ற தொல்காப்பியச் சூத்திரமும்,

‡ 'நாற்றமுந் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்புஞ் செலவும் பயில்வும்'

என்ற நம்பியகப்பொருட் சூத்திரமும், முன்னுறவுணர்தலை ஏழு துறைப் படுத்தியிருத்தல் காண்க. அவற்றுள், உண்டியும் செய்வினை மறைப்பும் செலவும், ஈண்டு மாற்றமும் செய்கையும் மனமும் என்றும், பயில்வுமற்றது என்றுங் குறிப்பிட்டன.

மாற்றம் முதலிய மூன்றும் முறையே உண்டி முதலிய முப்பொருளையுந் தருவதோடமையாது, ஈண்டைக்கேற்றவாற்றூற் சொல் முதலிய பொருளைத் தந்துநிற்றல் தனிப்பெருஞ் சிறப்பாம் என்க. மாற்றத்துக்கு உணவு மாற்றம் என்றுரைப்பதினும், செவிக்குணவாகிய சொல் என்றுரைப்பது, இச்சூழ்நிலைக் கினிதாம். (122)

இப்புன மழிதர வெங்ஙனேகினை
செப்புதி நீயெனத் தெரிவை நாணுரு
வப்புற மென்சுனை யாடப் போந்தனன்
வெப்புறும் வேனிலான் மெலிந்தி யானென்றாள்.

*இறையனாரகப்பொருள்: சூத்திரம்—7.
§நம்பியகப்பொருள் — 137.
† தொல். பொருள்: களவியல்—114.
‡ நம்பியகப்பொருள் — 138.

இபுனம் அழிதர—இத் தினைப்புனங் காப்பவரின்றி அழிய, நீ எங்ஙன் ஏகினை—காவலைச் செய்யுந் தலைவியே நீ எவ்விடஞ் சென்றாய்; செப்புதி—எனக்குச் சொல்வாயாக; என—என்றிங்ஙனம் உரிமைபற்றித் தோழி வினவ, தெரிவை நாண் உரு—வள்ளிநாயகியார் நாணமுற்று, வெப்பு உறும் வேனிலால் மெலிந்து—வெப்பம்பொருந்திய வேனிற் பருவத்தால் மெலிதலுற்று, அப்புறம் மென் சுனை ஆட—அது தீர்தற்பொருட்டு அப்பாலுள்ள மென்மையாகிய சுனையில் நீராடும்படி, யான் போந்தனன் என்றாள்—யான் சென்றேன் என்று கூறினார்.

உரிமைத் தோழியாதலின் இங்ஙனம் இடித்து வினவினள் என்க. அப்பால், முப்பாலாகிய தத்துவங்களுக்கு அப்பாலாம். உரைப்பரியதனை இங்ஙனங் கூறியதனாற் புரையன்மையுமறிக. (123)

மைவிழி சிவப்பவும் வாய்வெ ளுப்பவு
மெய்வியர் வடையவு நகிலம் விம்மவுங்
கைவளை நெகிழவுங் காட்டுந் தண்சுனை
யெவ்விடை யிருந்துள தியம்புவா யென்றாள்.

மைவிழி சிவப்பவும்—கரிய கண்கள் சிவப்படையவும், வாய் வெளுப்பவும்—சிவந்த வாய் வெளுப்படையவும், மெய் வியர்வு அடையவும்—சரீரம் வியர்வை கொள்ளவும், நகிலம் விம்மவும்—தனங்கள் பூரிக்கவும், கைவளை நெகிழவும்—கைவளையல்கள் சோரவும், காட்டும் தண் சுனை—செய்வதொரு தண்ணிய நீர்ச்சுனை, எ இடை இருந்துளது—எவ்விடத்தில் உள்ளது; இயம்புவாய் என்றாள்—அவ்விடத்தைக் கூறுவாயாக என்றாள் அந்தப் பாங்கி.

அந்த நூதன சுனையைக் காட்டுதி யானுங் காண்பன் என்று நகை செய்தாள் என்க. (124)

சொற்றிடு மிகுளையைச் சுளித்து நோக்கியே
யுற்றிடு துணையதா வுனையுட் கொண்டியான்
மற்றிவ ணிருந்தனன் வந்தெ னக்குமோர்
குற்றம துரைத்தனை கொடியை நீயென்றாள்.

சொற்றிடும் இகுளையை—தம்மை நகைசெய்து பேசுகின்ற அந்தத் தோழியை, சுளித்து நோக்கி—வள்ளிநாயகியார் கோபித்துப் பார்த்து, உனை உற்றிடு துணை ஆ உட்கொண்டு—உன்னை உற்றுழி உதவும் உயிர்த்துணையாக மனத்துட்கொண்டு, யான் இவண் இருந்தனன்—யான் இவ்விடத்துத் தனித்திருந்தேன்; எனக்கும்—உன்னை இன்றியமையாது உன் அயலிலிருந்த ஒரு பாவச் செயலுமறியாத என்மேலும், வந்து—அயலிலிருந்து வந்து, ஓர் குற்றம் உரைத்தனை—ஒரு குற்றத்தைச் சுமத்தினாய் ஆதலினாலே, நீ கொடியை என்றாள்—கண்ணுக்கு இமையை ஒத்த நீ கொடுமையையுடையை என்று கூறியருளினார்.

எனக்கும் என்புழி உம்மை நான் குற்றமற்றவள் என்னும் பொருட்டு. குற்றம் வாராமற் பாதுகாக்கவேண்டியவளும், தெய்வத்தாற் குற்றமொன்று நேர்ந்துழி அதற்குக் கழுவாய் காணவேண்டியவளும் நீயேயாகவுங் குற்ற முரைத்தனையாதலிற் கொடியையாயினை என்றாரென்க.

ஒப்புயர்வற்ற தலைவியின் குணத்தினைக் குற்றமென்றுகொண்டு கொடியள் ஆயினள் தோழி என்க. (125)

பாங்கியுந் தலைவியும் பகர்ந்து மற்றிவை
யாங்கன மிருத்தலு மதனை நோக்கியே
யீங்கிது செவ்வியென் றெய்தச் சென்றனன்
வேங்கைய தாகிமுன் னின்ற மேலையோன்.

பாங்கியும் தலைவியும் இவை பகர்ந்து ஆங்கனம் இருத்தலும்–தோழியுந் தலைவியும் இவற்றைக் கூறி அவ்விடத்தில் உரையாடல் செய்திருப்ப, அதனை–அவ்வாறு அவ்விருவரும் ஒருங்கு இருக்கும் அதனை, வேங்கையாகி முன் நின்ற மேலையோன் நோக்கி–வேங்கை மரமாகி முன்னர் நின்றருளிய முழு முதல்வராகிய அத்தலைவர் கண்டு, எய்த–இவ்விருவரையும் ஒருசேர அணுகுதற்கு, ஈங்கு இது செவ்வி என்று–இச்சமயமே ஏற்ற சமயம் என்று திருவுளங்கொண்டு, எய்தச் சென்றனன்–அவர்களுக்கு அண்ணிதாகச் சென்றருளினர்,

எய்த, முன்னுங் கூட்டப்பட்டது. பாங்கி மதியுடம்பாட்டுக்கேற்ற செவ்வி யறிந்து சென்றருளினாரென்க. அன்றி,

* 'உயிரினுஞ் சிறந்தன்று நாண்'

என்ப ஆதலின், தலைவியின் நாணைப் பேணச் செவ்வியறிந்து சென்றருளினருமாம்.

இனி, முன்னுறவுணர்தலின் பின்னையவாய குறையுறவுணர்தல், இருவருமுள்வழி அவன் வரவுணர்தல் ஆகிய இருதிறத்தினையுந் தனித்தனி பலதுறைப் படுத்தி அகப்பொருளிலக்கணம் விரித்துச் சென்ற பாங்கி மதியுடம்பாட்டினை, இருதிறத்தினையும் ஒருதிறப்படுத்திப் பொருண் மரபு வழாது சுருக்கும் முறையிற் சுருக்கி உரைப்பதற்கொரு செவ்வி கண்டருளிய கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகளின் பொருளறி புலமை, பொருளிலக்கணம் வல்லார்க்குப் புதுவதோர் விருந்தாதலுங் காண்க. (126)

கோட்டிய சிலையினன் குறிக்கொள் வாளியன்
றீட்டிய குறியவாள் செறித்த கச்சினன்
வேட்டம தழுங்கிய வினைவ லோனெனத்
தாட்டுணை சிவந்திடத் தமிய னேகினன்.

* தொல். பொருள்: களவியல் சூத். — 22

கோட்டிய சிலையினன்—வளைக்கப்பட்ட வில்லினையுடையராய், குறிக்கொள் வாளியன்—இலக்கை நாடுகின்ற அம்பினையுடையராய், தீட்டிய குறிய வாள் செறித்த கச்சினன்—தீட்டப்பட்ட குறிய உடைவாள் செறித்த அரைக்கச்சினை யுடையராய், வேட்டம் அழுங்கிய வினை வலோன் என—வேட்டைத் தொழில் பயின்ற அத்தொழில்வல்லோன் ஒருவனைப்போல, தாள் துணை சிவந்திட—இரண்டாகிய பாதங்கள் சிவக்க, தமியன் ஏகினன்—தனித்தவராய் ஆங்குச் சென்றருளினர்.

குறிக்கொள் வாளி எனவே, வில்லிற் பூட்டிய வாளியாம். துணைவரைப் பிரிந்து, யாதோ ஒன்றனைத் துரந்து, விரைந்து செல்வார்போலச் சென்றருளினராதலின், தாட்டுணை சிவந்திடத் தமியன் ஏகினனென்றார். *(127)*

### வேறு

காந்தள் போலிய கரத்தினீர் யானெய்த கணையாற்
பாய்ந்த சோரியும் பெருமுழக் குறுபகு வாயு
மோய்ந்த புண்படு மேனியு மாகியோ ரொருத்தல்
போந்த தோவிவண் புகலுதிர் புகலுதி ரென்றான்.

காந்தள் போலிய கரத்தினீர்—செங்காந்தள் மலர் போன்ற கரங்களை யுடைய நங்கைமீர், யான் எய்த கணையால்—யான் தொடுத்த பாணத்தால், பாய்ந்த சோரியும்—பெருகி ஒழுகிய உதிரமும், பெரு முழக்கு உறு பகு வாயும்—பெருமுழக்கம் மிக்க பிளந்த வாயும், ஓய்ந்த புண்படு மேனியும் ஆகி—இளைத்த புண்பட்ட மெய்யும் உடையதாய், ஓர் ஒருத்தல்—ஒரு யானை, இவண் போந்ததோ—இவ்விடம் வந்ததுண்டோ; புகலுதிர் புகலுதிர் என்றான்—கூறுங்கள் கூறுங்கள் என்று விரைவுபட்டு வினவியருளினர்.

தம் வேட்கை வேட்டத்தின்மேலதே என்பதை வலி செய்வார்போன்று விரைவுபட்டருளினர் என்க.

ஒருத்தல்—யானை; ஈண்டுப் பிடியாகிய பெண்யானையாம். நாற்றம் முதலியன வேறுபட்டு, நாணம் மீதூர்ந்து, மனம் புண்பட்டதொரு பிடி, தோழி பக்கலில் உரையாடிக்கொண்டிருப்பதை அத் தோழிக்கு உய்த்துணர வைத்ததாம். பாங்கி மதியுடம்பாட்டுக்கு முன் எவ்வாற்றானும் வெளிப்படக் கிளத்தல் முறையன்றாமாதலின், விலங்குகளினேற்றுக்கும் பொதுப்பெயராய்த் தமதாண்மையையே புலப்படுப்பதாய ஒருத்தற் சொற்பிரயோகத் தாற் பிடியைக் குறிப்பிட்டதாமென்க.

பிடிக்குக் கணைதொடுத்தேனென்றல் ஆண்மைக்கிழுக்காமாதல்,

* ‘கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்’

என்பதனானுணர்க. ஒருத்தல் என்பதற்குக் களிறென்றல் வெளிப்படைப் பொருளாம். களிற்றைத் தேடுவது போன்று பிடியை நாடியதாம். விலங்கின் ஆணை வினவுவதே பொருண்மரபாம். *(128)*

* திருக்குறள் —774.

வேழ மேமுத லுள்ளன கெடுதிகள் வினவி
யூழி நாயக னிற்றலு முமக்குநே ரொத்து
வாழு நீரருக் குரைப்பதே யன்றிநும் வன்மை
யேழை யேங்களுக் கிசைப்பதென் னென்றன ளிகுளை.

வேழமே முதல் உள்ளன கெடுதிகள் வினவி—யானை முதலாக வினவுதற்கு அமைந்தனவாகிய கெடுதிகளை வினவிக்கொண்டு, ஊழி நாயகன் நிற்றலும்—ஊழி முதல்வராகிய சுப்பிரமணியப்பெருமான் அவர்களயலில் விடைவேண்டி நின்றருளினராக; நும் வன்மை—நுமது ஆண்தகைமையாகிய வன்மையை, உமக்கு நேர் ஒத்து வாழும் நீரருக்கு—மகா வீரராகிய உமக்கு நிகரொத்து வாழும் ஆண்டகைமையினையுடையவர்க்கு, உரைப்பதே அன்றி—கூறுவதே யன்றி, ஏழையேங்களுக்கு இசைப்பது என்—ஏழையேமாகிய பெண் பேதை களுக்குக் கூறுவதனுற் பயன் என்னை; என்றனள் இகுளை—என்று விடை யிறுத்தாள் தலைவியோடுரையாடிக்கொண்டிருந்த அந்தத் தோழி.

'கலைமான் புகுந்ததுண்டோ உரையீ ருங்கள் கார்ப்புனத்தே' என வேறு கெடுதி வினவுதலுமுண்மையின், 'முதலுள்ளன கெடுதிகள்' என்றார். கெடுதி—கேடடைந்த பொருள். கேடு—ஊறு; தப்பிப்போன பொருளுமாம். உயிரினுஞ் சிறந்த நாணுடையாள் தலைவியாதலின் அவள் நாணுக்கு இழுக்கம் நேராமல், அவளையும் உளப்படுத்தி ஏழையேங்கள் என்றாள். என்றாளாயினுந் தலைவர் போக்குக்கு ஒருவாறு நகைசெய்தாளுமாம். *(129)*

ஐயர் வேட்டைவந் திடுவதுந் தினைப்புனத் தமர்ந்து
தையல் காத்திடு கின்றதுஞ் சரதமோ பறவை
யெய்யும் வேட்டுவர் கோலமே போன்றன விருவர்
மைய றன்னையு முரைத்திடும் விழியென மதித்தாள்.

ஐயர்—பூசித்தற்குரியராய இந்தப் பிரபு, வேட்டை வந்திடுவதும்—வேட்டையை மேற்கொண்டு வருதலைச் செய்தலும், தையல்—இந்தத் தலைவி, தினைப்புனத்து அமர்ந்து காத்திடுகின்றதும்—தினைப்புனத்திலிருந்து தினைப் புனங் காத்தலைச் செய்தலும், சரதமோ—உண்மையாமோ உண்மையேயன்று; கோலம்—இந்த இருவரும் மேற்கொண்ட வேட்டைக்கோலம் தினைப்புனக் காவற்கோலம் ஆகிய இரு கோலங்களும், பறவை எய்யும் வேட்டுவர் கோலமே போன்றன—பறவைகளை மறைந்திருந்தெய்கின்ற வேட்டுவர் மேற் கொள்ளுங் கோலத்தையேயொத்தன; இருவர் மையல் தன்னையும்—ஒருவர்மே லொருவர்க்குளதாய இருவரது மையலையும், விழி உரைத்திடும்—இவர்க ளுடைய கண்கள் வாய்திறந்து சொல்லாநிற்கும்; என மதித்தாள்—என் றிங்ஙனம் பாங்கி தனக்குள்ளே மதியுடம்பட்டாள்.

ஓகாரம்-எதிர்மறை. உவமானத்துக்கியையக் கோலம் வருவிக்கப்பட்டது. புட்கள் அயிராமல் வேட்டுவன் தழை முதலியவைகளில் மறைந்து வேறு கோலங் கோடலை, 'புதன் மறைந்து வேட்டுவன் புட்சிமிழ்த்தற்று' என்பத னுரையிற் காண்க. எடுத்த கோலத்துக்கடாத இருவர் மையலுமென்க.

* 'கண்களவு......காமத்திற் செம்பாகமன்று பெரிது'.
என்பதனால் விழியுரைப்பதனை அறிக.

ஈண்டுப் பாங்கியின் மதியுடம்பாடாவது, இருவர்க்குந் தொடர்புண்மை புத்திக்கட்பட்டதாம். (130)

மனத்தி லிங்கிவை யுன்னியே துணைவியு மற்றைப்
புனத்தி லேகிவீற் றிருந்தன ளன்னதோர் பொழுதிற்
சினத்தி டுங்கரி யெய்தன மென்றசே வகன்போய்க்
கனத்தை நேர்தரு கூந்தலாய் கேளெனக் கழறும்.

துணைவியும் மனத்தில் இங்கிவை உன்னி—தோழியுந் தன் மனத்தில் இவற்றை நினைத்து, மற்றைப் புனத்தில் ஏகி—தான் முன்னிருந்த அயற் புனத்தின்கட் சென்று, வீற்று இருந்தனள்—அவர்களிலிருந்து வேறுபட்டுத் தனித்திருந்தாள்; அன்னது பொழுதில்—அச்சமயத்தில், சினத்திடும் கரி எய்தனம் என்ற சேவகன் போய்—சினக்கின்ற யானையை எய்தோம் என்று முன்னர்க் கூறியருளிய வீரராகிய சுப்பிரமணியப்பெருமான் சென்று, கனத்தை நேர்தரு கூந்தலாய்—மேகத்தை ஒத்த கூந்தலையுடைய தோழியே, கேள் என—நான் கூறுவதற்குச் சற்றே செவி சாய்ப்பாயாக என்று, கழறும்—அழுத்திச் சொல்லியருளுவார்.

கண்கள் உரையாடுவது கண்டு, தன் உரையாடலை நிறுத்தித் தலைவியிடம் விடையும் பெறாதே வேறுபட்டுத் தனித்திருக்குந் தோழியின் ஞானக் குறைவுக்கு முழுமுதல்வருந் தலைவியும் இரங்கு வாராயினும், உலக நடைபற்றி அவள் செய்கை நோக்கித் தாமும் வீற்றுவீற்றுவரென்க. வீற்று என்பது வேறுபாடு, தனி என்ற இரு பொருளுந் தந்து நின்றது.

ஈண்டும் ஒருத்தல் என்றதுபோலக் கரி எனப் பொதுப்பெயர் வழங்கப் பட்டது. (131)

உற்ற கேளிரு நீங்களே தமியனுக் குமக்குப்
பற்ற தாயுள பொருளெலாந் தருவனும் பணிகண்
முற்று நாடியே புரிகுவன் முனிவுகொள் ளாது
சற்று நீரருள் செய்திடு மென்றனன் றலைவன்.

தமியனுக்கு உற்ற கேளிரும் நீங்களே—தமியேனுக்கு நெருங்கிய உறவினரும் நீவிரேயாவிர்; உமக்குப் பற்றதாயுள பொருள் எலாம் தருவன்—யான் தமியேனாயினும் நீவிர் விரும்பியுள்ள பொருள்களனைத்தையும் உங்களுக்கு நல்க வல்லேன்; நும் பணிகள் முற்றும் நாடிப் புரிகுவன்—அவ்வாறாய வல்லமையுடையனேனும் நும் பணிகள் அனைத்தையும் நானாகவே ஆராய்ந்தறிந்து செய்வேன்; முனிவு கொள்ளாது—என்மேற்றவறு கற்பித்துக்

* திருக்குறள் — 1092

கோபங்கொள்ளாமல், சற்று நீர் அருள் செய்திடும்—சற்றே நீவிர் அருள் செய்ம்மின்; என்றனன்—என்று வேண்டுதல்செய்தருளினர்; தலைவன்—வேண்டுதல் வேண்டாமையிலாத ஒப்புயர்வற்ற தலைவராகிய சுப்பிரமணியப் பெருமான்.

முன்னிலைப் பன்மைகள், மரியாதைப் பன்மைக்கும் உளப்பாட்டுப் பன்மைக்கும் பொதுவாய் அமையினும், உளப்பாட்டுப் பன்மை என்று கோடலே சிறப்பாம். தலைவியை விட்டுப் பிரிந்து தனித்திருந்தாளைத் தலைவியோடுளப்படுத்தித் தம்மை அவ்விருவர்க்கும் புறஞ்செய்து பேசுதலே ஈண்டுச் சிறப்பாம் என்க. (132)

அண்ணல் கூறிய திகுளைதேர்ந் திடுதலு மைய
ரெண்ண மீதுகொ லெம்பெருங் கிளைக்கிதோ ரிழுக்கை
மண்ணி னாட்டவோ வந்தது மறவர்தம் பேதைப்
பெண்ணை யாதரித் திடுவரோ பெரியவ ரென்றாள்.

அண்ணல் கூறியது இகுளை தேர்ந்திடுதலும்—சுப்பிரமணியப் பெருமானாகிய தலைவர் கூறியருளிய குறிப்பைத் தோழி தேர்ந்து தெளிந்த மாத்திரத்தில், ஐயர் ஈதுகொல் எண்ணம்—ஐயரே இதுவா நுமதெண்ணம்; எம் பெரும் கிளைக்கு மண்ணில் இது ஓர் இழுக்கை நாட்டவோ வந்தது—எமது பெரிய வேட்டுவர் கூட்டத்துக்கு இந்தப் பூமியில் முன்னில்லாத இஃதோர் இழிவை நிலைநிறுத்துதற்கோ நீவிர் ஈண்டுப் போந்தது; மறவர்தம் பேதைப் பெண்ணை—வேட்டுவர்குலத்துப் பேதையாகிய பெண்ணை, பெரியவர் ஆதரித்திடுவரோ—உயர்ந்தோர் விரும்புதல் செய்வரோ; என்றாள்—நுங்கருத்திருந்தபடி என்னை என்று இசையாமை பேசினாள்.

உயர்வு தாழ்வானன்றிப், பேதை என்றமையாற் பருவத்தானும் இசையாமை பேசினாளென்க.

ஐயர் என்பதை விளியாக்காது, ஐயர் கருத்து இதுவா? இழுக்கை நாட்டவோ இவர் வந்தது என்று தன்னுட் கருதி, என்றாள் எனச் சொற்கள் வருவித்துரைப்பதுமாம். (133)

சீத ரன்றரு மமிர்தினை யெயினர்கள் செய்த
மாத வந்தனைப் பெண்ணினுக் கரசைமற் றெனக்குக்
காத னல்கியே நல்லருள் புரிந்தகா ரிகையைப்
பேதை யென்பதே பேதைமை யென்றனன் பெரியோன்.

சீதரன் தரும் அமிர்தினை—திருமால் தாராநின்ற அமிர்தம் போல்வாளை, எயினர்கள்செய்த மாதவம்தனை—வேட்டுவர்கள் செய்த பெருந் தவப்பேற்றை, பெண்ணினுக்கு அரசை—பெண்ணுயகத்தை, எனக்குக் காதல் நல்கி—எனக்குக் காதல் நோயைத் தந்து, நல்லருள் புரிந்த—பின்பு அதற்கு மருந்தாக நன்மையாகிய திருவருட்பேற்றை விரும்பிய, காரிகையை—அழகியை, பேதை

என்பதே—பேதை என்று கருதுவதா; பேதைமை—அங்ஙனங் கருதுவதே பேதைமையாம்; என்றனன் பெரியோன்—என்று கூறியருளினர் மேலோராகிய சுப்பிரமணியப்பெருமான்.

சீதரன் தரும் அமிர்து என்றது திருமால் புதல்வி என்ற பொருளுந் தந்து நின்றது. பேதைமை அறியாமை.

'தலைவி பேதையு மல்லள்; பேதைமையளுமல்லள்; இழிந்தாளும் அல்லள். அவள் உயர்வும் மூதறிவும் உடையள்' என்பதனேடமையாது, 'நல்லருள் புரிந்த' என்றதனல் எமக்குரியள் எனக் குறிப்பிட்டருளியமையுங் காண்க. (134)

என்றெங் கோனுரை செய்தலு மடமக ளிங்ஙன்
குன்றங் காவலர் வருகுவ ரவர்மிகக் கொடியோ
ரொன்றுந் தேர்கிலர் காண்பரே லெம்முயி ரொறுப்பார்
நின்றிங் காவதென் போமென நெறிப்படுத் துரைத்தாள்.

என்று எங்கோன் உரை செய்தலும்—என்றிவ்வாறு எம்பெருமானுகிய சுப்பிரமணியசுவாமி கூறியருளுதலும், மடமகள்—அதனைக் கேட்ட மடம் என்னுங் குணத்தினையுடைய தோழியானவள், இங்ஙன் குன்றம் காவலர் வருகுவர்—இவ்விடத்துக்கு இம்மலையின் காவலர்களாகிய வேட்டுவர்கள் வருவார்கள்; அவர் மிகக் கொடியோர்—அவர்கள் இறப்பக் கொடியர்; ஒன்றும் தேர்கிலர்—அவர்கள் எந்த ஒன்றினையும் ஆராய்ந்தறியும் ஆற்ற லில்லாதவர்; காண்பரேல் எம் உயிர் ஒறுப்பார்—உரையாடுவதைக் காண்பா ராயின் எமதுயிரை வருத்துவர்; இங்கு நின்று ஆவது என்—இவ்விடம் நின்று ஆம் பயன் இன்றும்; போம் என—ஆதலினுலே சென்றருளும் என்று, நெறிப்படுத்து—தலைவியோடு தலைவரைக் கூட்டுதற்கு நெறியொன்று தன் னகத்தே வகுத்துக்கொண்டு, உரைத்தாள்—இவ்வாறு கூறினள்.

மடம்—கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை. மடமகள் என்றத ஞனுங் குன்றவர் பற்றிய அவள் கூற்றினுனுந் தோழியின் இசைவு பெற்றும். இவ்வாற்றல் இழுக்கின்மை உணர்ந்தாளாம்.

தலைவரையுந் தலைவியையும் உளப்படுத்து எம் என்றுள்.

தலைவர், தம்மையும் உளப்படுத்தமையானும், தலைவி முன்னெரு முறை 'ஓடும்' என்றதுபோலப் 'போம்' என்றமையானும், அத்தோழி தன் மனத்தே நெறியொன்று வகுத்தமை உணர்ந்தாராதலின், போகாதே நின்று உரையாடுவதை வருஞ் செய்யுளானுணர்க. (135)

தோட்டின் மீதுசெல் விழியினய் தோகையோ டென்னைக்
கூட்டி டாயெனிற் கிழிதனி லாங்கவள் கோலந்
தீட்டி மாமட லேறிநும் மூர்த்தெரு வதனி
லோட்டு வேனிது நாளையான் செய்வதென் றுரைத்தான்.

தோட்டின் மீது செல் விழியினுய்—காதணியாகிய தோட்டின்மீது செல்லுகின்ற பார்வையினையுடைய தோழியே, தோகையோடு என்னைக் கூட்டிடாய் எனின்—தோகைபோல்வாளாகிய தலைவியோடு என்னைச் சேர்த்து வையாயாயின், ஆங்கு அவள் கோலம் கிழிதனில் தீட்டி—அத்தலைவியின் வடிவத்தை ஒரு கிழியில் எழுதி எடுத்துக்கொண்டு, மடல் மா ஏறி—பனைமடலாற் செய்த குதிரையிலேறி, நும் ஊர்த்தெரு அதனில்—நும்மூர்த் தெருவில், ஓட்டுவன்—ஊண் உறக்கமின்றி அம் மடன்மாவூர்தியை ஊர்வேன்; இது நாளை யான் செய்வது—இந்நிகழ்ச்சி நாளைக்கே என்னுற் செய்யப்படுவதாம்; என்று உரைத்தான்—என்று அச்சுறுத்தருளினுர்.

தோட்டின் மீது செல்விழி—காதளவோடிய கயல்விழி. கிழி—எழுதுபடமாகிய சீலை.

காதல் கைம்மிக்கோன் காதலியின் உருவெழுதிய கிழியைக் கையிலெடுத்துக்கொண்டு மடன்மா ஊர்வன்; அது பயன் செய்யாவழி, வரையேறியுயிர் துறப்பன். இந்நிகழ்ச்சிகள் தலைவிக்கிழுக்காமாதலின், தோழி அவை நிகழவொட்டாது தடுத்து ஆவன செய்வள். (136)

ஆதி தன்மொழி துணைவிகேட் டஞ்சியை யர்க்கு
நீதி யன்றுதண் பனைமட லேறுத னீரிம்
மாத வித்தருச் சூழலின் மறைந்திரு மற்றென்
காதன் மங்கையைத் தருவனென் றேகினள் கடிதின்.

ஆதி தன் மொழி கேட்டு துணைவி அஞ்சி—தலைவராகிய சுப்பிரமணியப் பெருமானது வார்த்தையைக் கேட்டு வடு வருமே என்று தோழி அஞ்சி, தண் பனைமடல் ஏறுதல் ஐயர்க்கு நீதியன்று—தண்ணிய பனைமடலாலான மடன்மா ஏறுதல் ஆரியராகிய நுமக்கு நீதியாகாது; நீர் இம் மாதவித் தருச் சூழலில் மறைந்திரும்—நீர் இந்தக் குருக்கத்திமரச் செறிவிற் கரந்திரும்; என் காதல் மங்கையைத் தருவன்—என் அன்புக்குரியாளாகிய தலைவியைக் கொணர்ந்து நும்மிடம் ஓம்படை செய்வேன்; என்று கடிதின் ஏகினள்—என்று கூறி விரைந்து சென்றுள்.

ஆரியர், ஐயர் என்றுயிற்று; பூசித்தற்குரியர் என்னும்பொருட்டு.

கண்ணொடு கண்ணிணை நோக்கொத்தமை கண்டு, தலைவி தலைவற்கேயுரியாளென உட்கொண்டாளாதலின், தரித்தல் செய்யாது, 'தருவன்' என்றுள். மடல் விலக்கிக் குறை நேர்ந்தாளாயினுள். விரைவு, அச்சத்தானெய்திய விரைவு. (137)

வேறு

அங்க வெல்லையி லகம கிழ்ச்சியா
யெங்க டம்பிரா னினிதி னேகியே
மங்குல் வந்துகண் வளரு மாதவிப்
பொங்கர் தன்னிடைப் புக்கு வைகினுன்.

அ எல்லேயில்—அச்சமயத்தில், எங்கள் தம்பிரான் அகம் மகிழ்ச்சியாய்—எம் இறைவராகிய சுப்பிரமணியப்பெருமான் அகமகிழ்ச்சியுடையராய், அங்கு இனிது ஏகி—தோழி குறிப்பிட்ட குறியிடத்துக்கு இனிது சென்று, மங்குல் வந்து கண்வளரும்—மேகங்கள் வந்து கண்டுயில் செய்கின்ற, மாதவிப் பொங்கர் தன்னிடைப் புக்கு வைகினன்—குருக்கத்திச் சோலேயுட் புக்கு மறைந்திருந்தருளினர்.

இன், சாரியை. (138)

பொள்ளெ னத்தினேப் புனத்திற் பாங்கிபோய்
வள்ளி தன்பதம் வணங்கி மானவேற்
பிள்ளே காதலும் பிறவுஞ் செப்பியே
யுள்ளந் தேற்றியே யொருப்ப டுத்தினள்.

பாங்கி தினேப்புனத்திற் பொள்ளெனப் போய்—தோழி தினேப்புனத்தின் கண் விரைந்து சென்று, வள்ளி தன்பதம் வணங்கி—வள்ளிநாயகியாருடைய பாதங்களே வணங்கி, மான வேற்பிள்ளே காதலும் பிறவும் செப்பி—பெருமை பொருந்திய வேற்பிள்ளேயாகிய தலேவரின் காதலேயும் ஆற்ருமை பெருமை முதலியவற்றையும் எடுத்துக் கூறி, உள்ளம் தேற்றி—மனத்தைத் தேற்றி, ஒருப்படுத்தினள்—உடம்பாடு செய்தாள்.

உலகநடைபற்றி மனந் தேருமை காட்டித் தோழியின் அறநெறி கேட்டு ஒருவாறு தேறி ஒருப்படுவார் போன்று ஒருப்பட்டாரென்க. அறத்தொடு நிற்பவள் தோழியாதலின் அவள் அறிவுக்கு ஏற்றவாற்ருல், வள்ளிநாயகியார் அங்ஙனஞ் செய்தருளினர். உலகருள் முதல்வர், தம்மையாட்கொள்ள எழுந்தருளியமை உரைத்தலாகாமையின் உரையாராயினரென்க. (139)

இளேய மங்கையை யிகுளே யேனலின்
விளேத ரும்புன மெல்ல நீங்கியே
யளவின் மஞ்ஞைக ளகவு மாதவிக்
குளிர்பொ தும்பரிற் கொண்டு போயினள்.

இகுளே—தோழி, ஏனலின் விளேதரும் புனம் நீங்கி—தினேயினது விளேதலேப் பொருந்திய புனத்தைக் கடந்து, அளவில் மஞ்ஞைகள் அகவும் மாதவிக் குளிர் பொதும்பரில்—அளவில்லாத மயில்கள் ஆடுகின்ற குளிர்ந்த குருக்கத்திச் சோலேயில், இளேய மங்கையை மெல்லக் கொண்டு போயினள்—இளம் பருவத்தையுடைய வள்ளிநாயகியாரை மெல்லெனக் கொண்டு சென்ருள்.

அவர் பொருளே அவரிடங் கையுடை செய்வதொரு கருத்து உள்ளத்தைக் கொள்ளேசெய்துந்த, மற்ருென்று சிந்தித்தற்கிடனின்றி, மெல்லக் கொண்டுசென்ருளென்க. இந்நிலேயில் இத்தோழியைப் பரிபக்குவ தசையிற் பதியுந் திருவருளாம் என்பர் பெரியோர். மெல்லக் கொண்டு போதல் தலேவியின் தலேமைப்பாட்டைப் பேணியவாறும். (140)

பற்றின் மிக்கதோர் பாவை யிவ்வரை
சுற்றி யேகிநீ சூடுங் கோடல்கள்
குற்று வந்துநின் குழற்கு நல்குவ
னிற்றி யீண்டென நிறுவிப் போயினுள்.

மிக்கது ஓர் பற்றின் பாவை—உயர்ந்ததாகிய ஒப்பற்ற பற்றினை மேற் கொண்ட கண்ணினுட் பாவைபோல்வாளே, ஈண்டு நிற்றி—நீ இவ்விடத்தில் நிற்பாயாக; இவரை சுற்றி ஏகி—யான் இம் மலையைச் சுற்றிச் சென்று, நீ சூடும் கோடல்கள் குற்று வந்து—நீ முடிக்கட் சூடுதற்குரிய காந்தள் மலர் களைப் பறித்து வந்து, நின் குழற்கு நல்குவன்—நின் கூந்தலுக்குச் சூட்டுவேன்; என நிறுவி—என்று கருதியது கிளவாது பிறிதொன்று கிளந்து வள்ளிநாயகி யாரைக் குறியிடத்து நிறுத்தி, போயினுள்—அப்பாற் சென்றுள்.

உயர்ந்த பற்றுவது ஒப்புயர்வற்ற பற்றற்றுன்மேல் வைக்கும் பற்றும். தொடர்ந்து வரின் மிருதுவான பாதங் கன்றி வருந்துவை என்பாள் போன்று இவ்வரை சுற்றி ஏகி என்றுள். கருதியது கிளவாது அப்பொருள் தோன்றப் பிறிதொன்று கிளப்பது, 'பரியாயம்' என்னும் அலங்காரமாம். ஈண்டுக் கருதியது, வெளிப்படக்கிளத்தற்குரியதன்றுதலின், இவ்வலங்காரம் ஈண்டைக் கின்றியமையாததாய்த் தனிச்சிறப்பெய்தியதென்க. (141)

வேறு

கோற்றெடி யிகுளைதன் குறிப்பி னுல்வகை
சாற்றின ளகன்றிடத் தைய னிற்றலு
மாற்றவு மகிழ்சிறந் தாறு மாமுகன்
றேற்றின னெதிர்ந்தனன் றென்மை போலவே.

கோல் தொடி இகுளை—கோலிய வளையலையுடைய தோழி, தன் குறிப்பினுல் வகை சாற்றினள்—தனது குறிப்பு மொழிகளினுல் இவ்வாறு கூறி, அகன்றிட— அகன்று செல்ல, தையல் நிற்றலும்—வள்ளிநாயகியார் அவ்விடத்துத் தனித்து நின்றருளுதலும், ஆறுமாமுகன்—பெருமைபொருந்திய ஆறுமுகக்கடவுள், ஆற்றவும் மகிழ் சிறந்து—பெரிதும் மகிழ்ச்சி மிகுந்து, எதிர்ந்தனன்—எதிர்ப் பட்டு, தொன்மைபோல தோற்றினன்—முன்னர்ப்போலக் காட்சியளித் தருளினர்.

ஆறுமாமுகன் என்றதனுனும் தொன்மை போலத் தோற்றினன் என் றதனுனும்,

* 'முந்நான்கு தோளு முகங்களோர் மூவிரண்டுங்
கொன்னுர்வை வேலுங் குலிசமுமே னைப்படையும்
பொன்னுர் மணிமயிலு மாகப் புனக்குறவர்
மின்னுள்கண் காண வெளிநின்' றருளினர்

(142)

எனக் கொள்க.

* கந்தபு : வள்ளியம்மை திருமண.—116

வடுத்துணை நிகர்விழி வள்ளி யெம்பிரா
னடித்துணை வணங்கலு மவளை யங்கையா
லெடுத்தனன் புல்லின னின்ப மெய்தினன்
சுடர்த்தொடி கேட்டியென் றிதனைச் சொல்லினன்.

வடு நிகர் துணை விழி வள்ளி—மாவடுவை யொத்த இரண்டாகிய கண்களை யுடைய வள்ளிநாயகியார், எம் பிரான் துணை அடி வணங்கலும்—எம் பெருமானாகிய சுப்பிரமணிய சுவாமியின் இரண்டாகிய திருவடிகளை வணங்கு தலும், அவளை அம் கையால் எடுத்தனன் புல்லினன்—அவ் வள்ளிநாயகி யாரைத் தமது அழகிய கைகளால் எடுத்துத் தழுவி, இன்பம் எய்தினன்—அவ் வம்மையார் பேரின்பமுறத் தாம் இன்புற்றருளி, சுடர் தொடி கேட்டி என்று இதனைச் சொல்லினன்—ஒளிபொருந்திய வளையலையுடையாய் கேட்பாயாக என்று இதனைக் கூறியருளுவார்.

அம்மையாரின்புறத் தாமின்புறுதல் உடனுதல் உபகாரமாம். இவ்வுப காரத்தை உணர்ந்துழி வேகங் கெட்டெழும் இன்பமே பேரின்பமாம். '**விளம்புமா விளம்பே**' என்றற்றொடக்கத்துத் திருவிசைப்பாத் தொடர் களால் அவ்வுபகாரப் பெருமையை உணர்க. *(143)*

உந்தையும் பிறரும்வந் துன்னை நாடுவர்
செந்தினை விளைபுனஞ் சேவல் போற்றிடப்
பைந்தொடி யணங்கொடு படர்தி நாளையாம்
வந்திடு வோமென மறைந்து போயினன்.

உந்தையும் பிறரும் வந்து—உன் தந்தையும் ஏனையோருந் தினைப்புனத்துக்கு வந்து, உன்னை நாடுவர்—உன்னைத் தேடுவர்கள்; செம் தினை விளைபுனம் சேவல் போற்றிட—செம்மையாகிய தினை விளைகின்ற புனத்தைக் காவல் செய்தற்கு, பைந்தொடி அணங்கொடு படர்தி—பசிய வளையலையுடைய தோழியோடு செல்வாயாக; யாம் நாளை வந்திடுவோம்—யாம் நாளைக்கு ஆங்கு வருவோம்; என மறைந்து போயினன்—என்று கூறி மறைந்தருளினர்.

திருவருட் சாந்நித்தியம் ஆதலின் தோழி அணங்கு எனப்பட்டாள். *(144)*

போந்தபி னிரங்கியப் பொதும்பர் நீங்கியே
யேந்திழை வருதலு மிகுளை நேர்கொடு
காந்தளின் மலர்சில காட்டி யன்னவள்
கூந்தலிற் சூடியே கொடுசென் றேகினள்.

போந்தபின்—சுப்பிரமணியப்பெருமான் மறைந்தருளிய பின்னர், இரங்கி—பிரிவாற்றுமையால் இரக்கமுற்று, அ பொதும்பர் நீங்கி—அந்த மாதவிப் பொதும்பரை விட்டு நீங்கி, ஏந்து இழை வருதலும்—ஏந்துகின்ற ஆபரணங்களை யுடைய வள்ளிநாயகியார் தனித்து வருதலும், இகுளை நேர்கொடு—தோழி

யானவள் எதிர்கொண்டு, காந்தளின் மலர் சில காட்டி—காந்தண் மலர்கள் சிலவற்றைக் காட்டி, அன்னவள் கூந்தலில் சூடி—அவ்வம்மையாரது கூந்தலில் அவற்றை அணிந்து, கொடு சென்று ஏகினுள்—அழைத்துக்கொண்டு சென்ருள்.

*'சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்'

என்பது திருமுருகு. (145)

இவ்வகை வழிபடு மிகுளை தன்னெடு
நைவள மேயென நவிலுந் தீஞ்சொலாள்
கொய்வரு தினைப்புனங் குறுகிப் போற்றியே
யவ்விடை யிருந்தன ளகம்பு லர்ந்துளாள்.

நைவளமே என நவிலும் தீம் சொலாள்—குறிஞ்சி யாழின் இசைதான் என்று சொல்லும்படி இசைக்கின்ற இனிக்குஞ் சொற்களையுடையவராகிய வள்ளிநாயகியார், இவ்வகை வழிபடும்—மேற்கூறியவாறு தம்மை வழிபடுகின்ற, இகுளை தன்னெடு—காதற்ரேழியோடு, கொய் வரு தினைப்புனம் குறுகி—கொய்யும் பருவம் நிரம்பிய தினைப்புனத்தை அடைந்து, போற்றி—தினைக்காவல் செய்துகொண்டு, அகம் புலர்ந்துளாள் அவ்விடை இருந்தனள்—மனவாட்டமுடையவராய் அவ்விடத்திலிருந்தார்.

நைவளம், ஆகுபெயர். (146)

வளந்தரு புனந்தனில் வள்ளி நாயகி
தளர்ந்தன ளிருத்தலுந் தலைய ளித்திடு
மிளந்தினை யின்குர லீன்று முற்றியே
விளைந்தன குறவர்கள் விரைந்து கூடினர்.

வளம் தரு புனம் தனில்—வளம்பொருந்திய தினைப்புனத்தில், வள்ளிநாயகி தளர்ந்தனள் இருத்தலும்—வள்ளிநாயகியார் பிரிவாற்ருது தளர்ச்சியுற்றிருக்கும்போது, தலையளித்திடும் இளம் தினை இன் குரல் ஈன்று முற்றி விளைந்தன—அவ் வள்ளிநாயகியார் தலையளி செய்கின்ற இளமையாகிய தினைப் பயிர்கள் கண்ணுக்கினிய கதிர்களை ஈன்று மணி முற்றி விளைந்தன; குறவர்கள் விரைந்து கூடினர்—அது கண்டு வேடுவர்கள் விரைந்து வந்து கூடினர்கள்.

தலையளித்தல்—காத்தல். (147)

## வேறு

குன்ற வாணர்கள் யாவருங் கொடிச்சியை நோக்கித்
துன்று மேனல்கள் விளைந்தன கணிகளுஞ் சொற்ற
வின்று காறிது போற்றியே வருந்தினை யினிநீ
சென்றி டம்மவுன் சிறுகுடிக் கெனவுரை செய்தார்.

*திருமுருகாற்றுப்படை — 43, 44.

குன்ற வாணர்கள் யாவரும்—ஆங்குக் கூடிய வேட்டுவர்கள் யாவரும், கொடிச்சியை நோக்கி—வள்ளிநாயகியாரைப் பார்த்து, அம்ம—தாயே, துன்றும் ஏனல்கள் விளைந்தன—செறிந்த தினைகள் விளைந்தன; கணிகளும் சொற்ற—வேங்கைமரங்களும் பூக்கு முகத்தால் அதனை எடுத்துக்கூறின; நீ இன்று காறு இது போற்றி வருந்தினை—நீ இன்றுகாறும் இத் தினைப்புனத்தைக் காவல்செய்து வருத்தமுற்றாய்; இனி உன் சிறு குடிக்கு சென்றிடு என உரை செய்தார்—இனி உனது சிற்றூருக்குச் செல்வாயாக என்று கூறினார்கள்.

அம்மா அம்ம என நின்றது; குழந்தாய் என்ற பொருளில் அம்ம என்றார்கள்; அசைநிலையுமாம். கணி—சோதிடன். தினைப்புனச் சோதிடர் வேங்கைகள். சிறுகுடி குறிஞ்சி நிலத்தூர்; சிறிய இல்லமுமாம். (148)

குறவ ரிவ்வகை சொற்றன செவிப்புலங் கொண்டாங்
கெறியும் வேல்படு புண்ணிடை யெரிநுழைந் தென்ன
மறுகு முள்ளத்த ளாகியே மற்றவ ணீங்கிச்
சிறுகு டிக்குநல் லிகுளையுந் தானுமாய்ச் சென்றாள்.

குறவர் இவ்வகை சொற்றன—வேடுவர்கள் இவ்வாறு கூறியவைகள், செவிப்புலம் கொண்ட ஆங்கு—செவிப்புலங்களைப் பொருந்திய அப்பொழுதே, எறியும்வேல் படு புண்ணிடை—மாற்றாரால் எறியப்படும் வேல்பட்ட புண்ணின் கண்ணே, எரி நுழைந்து என்ன—எரி நுழைந்தாற்போல, மறுகும் உள்ளத்த ளாகி—வெந்து கலங்குகின்ற மனத்தையுடையராய், அவண் நீங்கி—அவ் விடத்தை அரிதினீங்கி, நல் இகுளையும் தானுமாய்—நன்மையையே செய்யுந் தோழியுந் தாமுமாய், சிறு குடிக்குச் சென்றாள்—சிற்றூருக்குச் செல்லலுற் றருளினார்.

கொண்டவாங்கு, கொண்டாங்கு என நின்றது. எரி நுழைந்தவழி வெந்து கலங்குவதுபோல வெந்து கலங்கி என்றவாறு. பிரிவால் அகம் புலர்ந்திருந் தாருக்குக் குறவர் கூற்றுப் புண்ணுழை எரியாயிற்றென்க. (149)

மானி னங்களை மயில்களைக் கிளியைமாண் புறவை
யேனை யுள்ளவை தங்களை நோக்கியே யாங்கள்
போன செய்கையைப் புகலுதிர் புங்கவர்க் கென்னாத்
தானி ரங்கியே போயின ளொருதனித் தலைவி.

ஒரு தனித் தலைவி—ஒப்பற்ற தாமே தமக்கு நிகராய தலைவியாகிய வள்ளி நாயகியார், மானினங்களை—மான் கூட்டங்களையும், மயில்களை—மயிற்கூட் டங்களையும், கிளியை—கிளிகளையும், மாண் புறவை—மாட்சிமை பொருந்திய புறாக்களையும், ஏனை உள்ளவை தங்களை—அவைபோன்ற ஏனைய பறவைகளும் விலங்குகளுமாகிய தமக்கினமானவைகளையும், நோக்கி—பார்த்து, யாங்கள் போன செய்கையை—யானுந் தோழியும் இவ்விடத்தை விட்டகன்று சென்ற கொடுஞ் செயலை, புங்கவர்க்கு புகலுதிர் என்னா—மேலோரான அந்தத்

தலைவருக்குக் கூறுங்கள் என்று வேண்டுதல் செய்து, தான் இரங்கியே—தாம் இரங்குதல் செய்துகொண்டே, போயினள்—சென்றருளினர்.

எம்மை மறக்கினும் மறக்குக; இக்கூற்றை மறவாது புகலுதிர் என்றார் என்க. புங்கவர்க்கு அலைவு செய்தல் அடாது என்றுருமாம். (150)

பூவை யன்னதோர் மொழியினுள் சிறுகுடிப் புகுந்து
கோவில் வைப்பினுட் குறுகியே கொள்கைவே றாகிப்
பாவை யொண்கழங் காடலள் பண்டுபோன் மடவா
ரேவர் தம்மொடும் பேசலள் புலம்பிவீற் றிருந்தாள்.

பூவை அன்னது ஓர் மொழியினுள்—நாகணவாயின் மொழியையொத்த ஒப்பற்ற மொழியினையுடைய வள்ளிநாயகியார், சிறு குடிப் புகுந்து—சிற்றூரை அடைந்து, கோ இல் வைப்பினுள் குறுகி—நம்பியரசனின் இல்லமாகிய குடிசைக்கட் புகுந்து, கொள்கை வேறு ஆகி—தமது கோட்பாடுகள் மாற்றம் உற்று, பாவை ஒண் கழங்கு ஆடலள்—மரப்பாவை ஒள்ளிய கழற்காய் இவை கொண்டு ஆடும் விளையாட்டுக்களை ஆடாதவராய், பண்டு போல—முன்னர்ப் பேசுவதுபோல, மடவார் ஏவர் தம்மொடும் பேசலள்—மகளிரெவரோடும் பேசாதவராய், வீற்று—வேறுபட்டு, புலம்பி—தனித்து, இருந்தாள்—இருந் தருளினர்.

வைப்பு இடம்; இல்லாகிய இடம் என்க. (151)

மற்ற வெல்லையிற் செவிலியு மன்னையு மகளை
யுற்று நோக்கியே மேனிவே றாகிய துனக்குக்
குற்றம் வந்தவா றென்னென வற்புறக் கூறிச்
செற்ற மெய்தியே யன்னவ டன்னையிற் செறித்தார்.

அ எல்லையில்—அப்பொழுது, செவிலியும் அன்னையும் மகளை உற்று நோக்கி—வளர்த்த தாயும் நற்றாயுந் தம் புதல்வியாகிய வள்ளிநாயகியாரை உற்றுப் பார்த்து, உனக்கு மேனி வேறு ஆகியது—உனக்கு மேனி வேறுபட் டுள்ளது; குற்றம் வந்தவாறு என் என—அதற்குக் காரணமான குற்றம் வந்த வகை யாது என்று, வற்பு உறக் கூறி—வன்சொற்களை மிகுத்துக் கூறி, செற்றம் எய்தி—சினஞ்செய்து, அன்னவள் தன்னை இல் செறித்தார்—அவ் வள்ளிநாயகியாரை இற்செறிப்புச் செய்தார்கள்.

இற்செறித்தலாவது புறத்தே செல்லாது இல்லகத்தே இருக்கச் செய்தல். வன்சொல் வழங்கல் சினத்தல் வள்ளிநாயகியார்பால் மறந்துஞ் செய்யாதன வாயினும், அன்பு மிகுதியானுங் குடிப்பழிக்கஞ்சியும் மெய்ம்மையை முற்றுந் தேருமையால் அப்பொழுதைய நிலையிற் செய்யவேண்டியவர்களாயினர்கள். அற்புறக்கூறி எனினுமாம். அற்பு—அன்பு. (152)

### வேறு

ஓவிய மனைய நீரா ளுடம்பிடித் தடக்கை யோனை
மேவினள் பிரித லாலே மெய்பரிந் துள்ளம் வெம்பி
யாவிய தில்லா ளென்ன வவசமா யங்கண் வீழப்
பாவைய ரெடுத்துப் புல்லிப் பருவர லுற்றுச் சூழ்ந்தார்.

ஓவியம் அனைய நீராள்—ஒரு செயலுமற்றுத் தீட்டிய சித்திரத்தை ஒத்த தன்மையினராகிய வள்ளிநாயகியார், உடம்பிடித் தடக்கையோனை மேவினள் பிரிதலாலே—வேற்படையையேந்திய பெருமை பொருந்திய திருக்கரத்தினை யுடைய சுப்பிரமணியப் பெருமானைக் கூடிப் பிரிந்தமையால், மெய் பரிந்து—உடல் மெலிந்து, உள்ளம் வெம்பி—உள்ளம் வெதும்பி, ஆவி இல்லாள் என்ன—உயிரை இழந்தவள் போல, அவசமாய்—பரவசமாய், அங்கண் வீழ—அவ்விடத் திற் சோர்ந்து வீழ, பாவையர் எடுத்து புல்லி—வேட்டுவ மகளிர் எடுத்துத் தழுவி, பருவரல் உற்றுச் சூழ்ந்தார்—துன்பமுற்றுச் சிந்திப்பாராயினர்.

* 'பேயொன்றுந் தன்மை பிறக்கு மளவுமே
நீயொன்றுஞ் செய்யாமல் நில்'

என்பது திருவருட்பயன். வள்ளிநாயகியார்பாற் பேயொன்றுந்தன்மை பிறந்தது. (153)

ஏர்கொண்மெய் நுடங்கு மாறு மிறைவளை கழலு மாறுங்
கூர்கொள்கண் பனிக்கு மாறுங் குணங்கள்வே றுய வாறும்
பீர்கொளு மாறு நோக்கிப் பெண்ணினைப் பிறங்கற் சாரற்
சூர்கொலாந் தீண்டிற் றென்றுர் சூர்ப்பகை தொட்ட தோரார்.

ஏர்கொள் மெய் நுடங்குமாறும்—அழகு பொருந்திய திருமேனி துவளுந் தன்மையினையும், இறை வளை கழலுமாறும்—முன் கை வளையல் கழலுந் தன்மையினையும், கூர் கொள் கண் பனிக்குமாறும்—கூர்மையைக் கொண்ட கண்கள் நீர் துளிக்குந் தன்மையினையும், குணங்கள் வேறு ஆயவாறும்—குணங் கள் வேறுபட்ட தன்மையினையும், பீர் கொளுமாறும்—பசலை உடலிற் பரவுந் தன்மையினையும், நோக்கி—உற்றுநோக்கி, பெண்ணினை—நம் மகளை, பிறங்கற் சாரல் சூர் தீண்டிற்று ஆம் கொல் என்றுர்—மலைச்சாரலிலுள்ள தெய்வம் தீண்டியதுபோலும் என்றுர்கள்; சூர்ப்பகை தொட்டது ஓரார்—சூரனை வதைத்துச் சூர்ப்பகையாகிய திருமுருகு தீண்டியதை அறியாராகிய அம் மடவார்.

பசலை, நிறவேறுபாடு. (154)

தந்தையுங் குறவர் தாமுந் தமர்களும் பிறரு மீண்டிச்
சிந்தையுள் ளயர்வு கொண்டு தெரிவைதன் செயலை நோக்கி
முந்தையின் முதியா ளோடு முருகனை முறையிற் கூவி
வெந்திறல் வேலி னுற்கு வெறியயர் வித்தா ரன்றே.

* திருவருட்பயன்: இன்புறுநிலை—7

தந்தையும்—பிதாவாகிய நம்பியரசனும், குறவர் தாமும்—வேடுவர்களும், தமர்களும் பிறரும் ஈண்டி—உறவினரும் பிறருஞ் செறிந்து கூடி, தெரிவை தன் செயலை நோக்கி—வள்ளிநாயகியாரின் தன்மையைப் பார்த்து, சிந்தையுள் அயர்வு கொண்டு—மனத்தில் அயர்ச்சியுற்று, முந்தையின் முறையில்—தொன்றுதொட்ட சம்பிரதாய முறையானே, முதியாளோடு முருகனைக் கூவி—முதியாளாகிய தேவராட்டியோடு தேவராளனாகிய வெறியாட்டாளனை அழைத்து, வெம் திறல் வேலினாற்கு—வெய்ய வலிபடைத்த வேற்படையையுடைய சுப்பிரமணியப் பெருமானுக்கு, வெறி அயர்வித்தார்—வெறியாட்டு விழாவைச் செய்வித்தார்கள்.

குறை நேரின், முருக பூசையாகிய வெறியாட்டயர்தல் குறிஞ்சிநிலக் குறவரின் தொன்றுதொட்ட வழக்காகும். முருகன் அந்நிலத் தெய்வம். முருகு ஆவேசித்தலின் தேவராளனை முருகன் என்றார். தேவராளன் தெய்வத்தாலாளப்படுவோன்; சன்னதகாரன். தேவராட்டி—சன்னதகாரி. வெறியாடலின் விரிவைத் திருமுருகாற்றுப்படையிற் குன்றுதொறாடலிலும் பழமுதிர் சோலையிலுங் காண்க. வெறியாடலுக்குத் தேவராட்டியும் இன்றியமையாதவளாதலின், முதியாளோடு முருகனை என்றார். அவள் அநுபவத்தான் மிக்கு முதிர்ந்தவளாயிருப்பளென்க. (155)

வெறியயர் கின்ற காலை வேலன்மேல் வந்து தோன்றிப்
பிறிதொரு திறமு மன்றாற் பெய்வளை தமிய ளாகி
யுறைதரு புனத்திற் றொட்டா முளமகிழ் சிறப்பு நேரிற்
குறையிது நீங்கு மென்றே குமரவேள் குறிப்பிற் சொற்றான்.

வெறி அயர்கின்ற காலை—வெறியாடலைச் செய்கின்ற சமயத்தில், குமரவேள்—நிலத்தெய்வமுங் குலதெய்வமுமாகிய குமாரக்கடவுள், வேலன்மேல் வந்து தோன்றி—வெறியாடுவோன்மீது ஆவேசித்து, தமியளாகிய உறைதரு புனத்தில் பெய்வளை தொட்டாம்—தனித்தவளாய் இருத்தலைச் செய்த தினைப் புனத்தின்கண்ணே இப்பெண்ணை யாம் தீண்டினும்; பிறிதொரு திறமும் அன்று—இவளது வேறுபாடு வேறொரு காரணத்தானும் எய்தியதன்று; உளம் மகிழ் சிறப்பு நேரின்—யாம் உள்ளம் மகிழுஞ் சிறப்பினைச் செய்தால், இது குறை நீங்கும் என்று—இக்குறை நீங்கும் என்று, குறிப்பில் சொற்றான்—குறிப்புப் பொருள் தோன்றக் கூறியருளினார்.

வேல் கைக்கொண்டு ஆடுதலின் வெறியாட்டாளன், வேலன் எனப்பட்டான். இனி வேலன் ஆவேசித்தலால் வேலனுமாம். தொட்டாம் என்பதன் வெளிப்படைப்பொருள் தெய்வந் தீண்டிற்றென்பதாம். உளமகிழ் சிறப்பு என்பதன் வெளிப்படைப் பொருள் விசேட பூசை; குறிப்புப் பொருள் திருமணச் சிறப்பாம். (156)

குறிப்பொடு நெடுவே லண்ணல் கூறிய கன்ன மூல
நெறிப்பட வருத லோடு நேரிழை யவச நீங்கி
முறைப்பட வெழுந்து வைக முருகனை முன்னி யாங்கே
சிறப்பினை நேர்து மென்று செவிலித்தாய் பராவல் செய்தாள்.

நெடு வேல் அண்ணல் குறிப்பொடு கூறிய—நெடிய வேற்படையையுடைய சுப்பிரமணியப்பெருமான் குறிப்பாற் கூறிய வார்த்தைகள், கன்ன மூலம் நெறிப்பட வருதலோடும்—செவிப்பொறியின் மூலத்திலே வழுவின்றிச் சேர்ந்த மாத்திரத்தே, நேரிழை அவசம் நீங்கி—வள்ளிநாயகியார் அவசநிலை நீங்கி, முறைப்பட எழுந்து வைக—எழுகின்ற முறையானே எழுந்திருக்க, செவிலித் தாய்—அதனைக் கண்ட செவிலித்தாய், ஆங்கே—அப்பொழுதே, முருகனை முன்னி—முருகக்கடவுளைத் தியானித்து, சிறப்பினை நேர்தும் என்று—சிறப்பாகிய விசேட பூசையைச் செய்வோமென்று சங்கற்பித்து, பராவல் செய்தாள்—தெய்வம் பராயினாள்.

கன்ன மூல நெறிப்பட வருதலோடும்—கேட்ட அளவில், தலைவி எழுந்திருந்தது கண்டு நேர்கடன் செய்தலிற் செவிலி விரைவுபட்டாளென்க. *(157)*

மனையிடை யம்மை வைக வனசரர் முதிர்ந்த செவ்வித்
தினையினை யரிந்து கொண்டு சிறுகுடி யதனிற் சென்றா
ரினையது நோக்கிச் செவ்வே ளிருவியம் புனத்திற் புக்குப்
புனையிழை தன்னைக் காணான் புலம்பியே திரித லுற்றான்.

அம்மை மனையிடை வைக—இவ்வாற்றால் வள்ளிநாயகியார் இல்லத்தின் கண் இருக்க, வனசரர்—வேடுவர்கள், முதிர்ந்த செவ்வித் தினையினை அரிந்து கொண்டு—விளைந்த பருவத்தினையுடைய தினைக்கதிர்களைக் கொய்துகொண்டு, சிறு குடி அதனில் சென்றார்—தமது சிற்றூரை அடைந்தார்கள்; செவ்வேள் இனையது நோக்கி—சுப்பிரமணியப்பெருமான் இவ்வியல்பை நோக்கித் தமது ஆட்கொண்டருளும் ஆடலைத் தொடர்ந்து செய்வாராய், இருவியம் புனத்தில் புக்கு—தினைத்தாளையுடைய தினைப்புனத்தின்கட் சென்று, புனையிழை தன்னைக் காணான்—புனைந்த ஆபரணத்தையுடைய வள்ளிநாயகியாரைக் காணாதவராய், புலம்பி திரிதலுற்றான்—தனிமையுற்றுத் திரிவாராயினார்.

வறும் புனமாதலின் இருவியம் புனமென்றார். அம், சாரியை; அழகுமாம். *(158)*

கனந்தனை வினவு மஞ்ஞைக் கணந்தனை வினவு மேனற்
புனந்தனை வினவு மம்மென் பூவையை வினவுங் கிள்ளை
யினந்தனை வினவும் யானை யிரலையை வினவுந் தண்கா
வனந்தனை வினவு மற்றை வரைகளை வினவு மாதோ.

கனம்தனை வினவும்—முகில்களை வினவுவார்; மஞ்ஞைக் கணந்தனை வினவும்—மயிற் கூட்டங்களை வினவுவார்; ஏனல் புனம்தனை வினவும்—தினைப் புனத்தை வினவுவார்; அம் மென் பூவையை வினவும்—அழகிய மென்மையாகிய நாகணவாய்களை வினவுவார்; கிள்ளை இனந்தனை வினவும்—கிளிக் கூட்டங்களை வினவுவார்; யானை இரலையை வினவும்—யானைகளையும் மான்களையும் வினவுவார்; தண் கா வனந்தனை வினவும்—தண்ணிய சோலையை வினவுவார்; வரைகளை வினவும்—மலைகளை வினவுவார்.

நம் காதலுக்குரியாள் யாண்டுச் சென்றனளோ கூறுக என்று, தலைவியோ டொவ்வோராற்றுற் றொடர்புடையவைகளனைத்தையும் வினவுவாராயினு ரென்க. தொடர்புடையவை புண்ணியப் பொருள்களாதலுந் தெளிக. *(159)*

வாடினுன் றளர்ந்தா னெஞ்சம் வருந்தினுன் மையற் கெல்லை
கூடினுன் வெய்து யிர்த்தான் குற்றடிச் சுவடு தன்னை
நாடினுன் றிகைத்தா னின்று நடுங்கினு னங்கை தன்னைத்
தேடினுன் குமரற் கீது திருவிளை யாடல் போலாம்.

வாடினுன்—வாட்டமுற்று, தளர்ந்தான்—தளர்ந்து, நெஞ்சம் வருந்தினுன்—மனம் வருந்தி, மையற்கு எல்லை கூடினுன்—மயக்கத்தின் எல்லையைப் பொருந்தி, வெய்து உயிர்த்தான்—வெய்தாக உயிர்த்து, குற்றடிச் சுவடு தன்னை நாடினுன்—குறுமையாகிய அடிச்சுவடுகளை நாடி, திகைத்தான்—திகைப் புற்று, நின்று நடுங்கினுன்—நின்றபடி நின்று நடுங்கி, நங்கை தன்னைத் தேடினுன்—இவ்வாற்றுனெல்லாம் பெருமையிற் சிறந்தவராகிய வள்ளிநாயகி யாரைத் தேடுதல் செய்வாராயினுர்; ஈது குமரற்கு திருவிளையாடலாம்—இங்ஙனமாதல் குமாரப்பெருமானுக்கு உய்வார்கள் உய்யும் வகை ஆட்கொண் டருளுந் திருவிளையாடலேயாம்.

போல் அசை. தம்மைத் தேடுவாரைத் தாந் தேடியவாறு. *(160)*

வல்லியை நாடு வான்போன் மாண்பகல் கழித்து வாடிக்
கொல்லையம் புனத்திற் சுற்றிக் குமரவே ணடுநாள் யாமஞ்
செல்லுறு மெல்லை வேடர் சிறுகுடி தன்னிற் புக்குப்
புல்லிய குறவர் செம்மல் குரம்பையின் புறம்போய் நின்றுன்.

குமரவேள்—குமாரப் பெருமான், வல்லியை நாடுவான்போல்—கொடி போல்வாராகிய வள்ளிநாயகியாரைத் தேடுவார் போன்று, கொல்லை அம் புனத்திற் சுற்றி—அழகிய தினைக்கொல்லை எங்குந் திரிந்து, வாடி—அதனுல் வாட்டமுற்று, மாண்பகல் கழித்து—இவ்வாற்றுல் மாட்சிமைப்பட்ட பகற் பொழுது முழுவதையுங் கழித்து, நடுநாள் யாமம் செல்லுறும் எல்லை—நடு இரவாகிய யாமநேரம் நிகழும்போது, வேடர் சிறுகுடி தன்னில் புக்கு—வேடுவர்கள் வசிக்குஞ் சிற்றூருக்குப் போய், குறவர் புல்லிய செம்மல் குரம்பையின் புறம்போய் நின்றுன்—குறவர்களோடு கூடிய நம்பியரசனது சிறுகுடிலுக்குப் புறத்தே சென்று நின்றருளினுர்.

நாள், இரவாகிய நாள் எனக. *(161)*

பாங்கிசெவ் வேளைக் கண்டு பணிந்துநீர் கங்குற் போதி
லீங்குவந் திடுவ தொல்லா திறைவியும் பிரியி னுய்யா
ணீங்களிவ் விடத்திற் கூட நேர்ந்ததோ ரிடமு மில்லை
யாங்கவ டன்னைக் கொண்டே யகலுதி ரடிக வென்றுள்.

செவ்வேளை—நடுயாமத்திற் குடிலுக்குப் புறத்தே ஒதுங்கி நிற்குஞ் சுப்பிர மணியப் பெருமானை, பாங்கி கண்டு—தோழி கண்டு, பணிந்து—வணங்கி, நீர் கங்குற் போதில் ஈங்கு வந்திடுவது ஒல்லாது—நீயிர் இராக்காலத்தில் இவ்விடத் துக்கு வருதல் பல்லாற்றானும் தகுதியாகாது; இறைவியும் பிரியின் உய்யாள்—தலைவியும் நும்மைப் பிரியின் உயிர் தரியாள்; நீங்கள் இவ்விடத்தில் கூட நேர்ந்தது ஓர் இடமும் இல்லை—நீவிர் இருவீரும் இவ்விடத்திற் றலைக்கூடு தற்கு இயைந்ததாகியதோரிடமுமில்லை; அடிகள்—ஆதலினாலே அடிகளே, ஆங்கு அவள் தன்னை—அத்தலைவியை, கொண்டு அகலுதிர் என்றாள்—உடன் கொண்டு சென்றருளுதிர் என்றாள்.

தலைவியின் அதிதீவிர பக்குவங்கண்ட தோழி பகற்குறி இரவுக் குறிகளுக் கிடமின்றி உடன்போக்குக்கு உடம்பாடு நேர்வாளாயினாளென்க. (162)

என்றிவை கூறிப் பாங்கி யிறைவனை நிறுவி யேகித்
தன்றுணை யாகி வைகுந் தையலை யடைந்து கேள்வ
ருன்றனை வெளவிச் செல்வா னுள்ளத்திற் றுணியா விங்ஙன்
சென்றனர் வருதி யென்னச் சீரிதென் றொருப்பா டுற்றாள்.

என்று இவை கூறி—என்றிவற்றைக் கூறி, பாங்கி—தோழியானவள், இறைவனை நிறுவி ஏகி—ஆன்ம நாயகராகிய சுப்பிரமணியப்பெருமானை அவ் விடத்தில் நிற்கச் செய்து சென்று, தன் துணையாகி வைகும் தையலை அடைந்து—தனக்குத் தனித்துணையாயிருக்கும் வள்ளிநாயகியாரை அடைந்து, கேள்வர் உன்தனை வெளவிச் செல்வான்—ஆன்ம நாயகர் உன்னைக் கவர்ந்து கரந்து செல்லும்பொருட்டு, உள்ளத்தில் துணியா இங்ஙன் சென்றனர்—திருவுள்ளம்பற்றி ஈண்டுப் போந்தனர்; வருதி என்ன—தாமதஞ் செய்யாது வருவாயாக என்று கூற, சீரிது என்று—இஃது அழகிதே என்று, ஒருப்பாடு உற்றாள்—உடன் போக்குக்கு உடம்பாடு செய்தருளினாள்.

தலைவியின் நாணுக்கஞ்சி, உள்ளங் கவர் கள்வராகிய தலைவர்மேலிட்டுக் கூறினாளென்க. தலைவி தனக்குத் தனித்துணையாயவழியும், அத்தலைவி தாடலைப் படும்வழி விரைவுபட்டு உடன்போக்கு நேர்ந்தமை தோழிபாலமைந்த அருட் குணமேயாம். (163)

தாய்துயி லறிந்து தங்க டமர்துயி லறிந்து துஞ்சா
நாய்துயி லறிந்து மற்றந் நகர்துயி லறிந்து வெய்ய
பேய்துயில் கொள்ளும் யாமப் பெரும்பொழு ததனிற் பாங்கி
வாய்தலிற் கதவை நீக்கி வள்ளியைக் கொடுசென் றுய்த்தாள்.

பாங்கி—தோழியானவள், தாய் துயில் அறிந்து—நற்றாய் செவிலித் தாயாகிய தாய்மாரின் துயிலையுமறிந்து, தங்கள் தமர் துயில் அறிந்து—தங்கள் உறவினருடைய துயிலையுமறிந்து, துஞ்சா நாய் துயில் அறிந்து—பெரிதுந் துயிலாத நாயின் துயிலையும் அறிந்து, அ நகர் துயில் அறிந்து—

அவ்வூரிலுள்ளாருடைய துயிலையுமறிந்து, வெய்ய பேய் துயில் கொள்ளும்—கொடிய பேய்களுந் துயில்செய்கின்ற, யாமப் பெரும் பொழுது அதனில்—நடுயாமமாகிய பெருமை படைத்த இராப்பொழுதில், வாய்தலில் கதவை நீக்கி—வாயிற் கதவை மெல்லெனத் திறந்து, வள்ளியைக் கொடு சென்று—வள்ளிநாயகியாரை அழைத்துக்கொண்டு சென்று, உய்த்தாள்—ஓம்படை செய்தாள்.

அறிவு அருள்வயப்பட்டு அருண்மயமாயவழி, மனப்பேயும் அதன் பரிவாரங்களுஞ் செயலிழந்து துயில்கூடு மென்க. 'யாவையுஞ் சூனியம் சத்தெதிர்' என்பது சிவஞானபோதம். சத்தை எதிர்ப்பட்டவழித் துஞ்சாத நாயுந் துஞ்சுமென்றவாறு. யாமம் சிறு பொழுதாயினுந் தாடலைப்படும் பொழுதாயமைந்து பெருமையுறுதலின் பெரும்பொழுதாயிற்று. ஒலி எழாமல் ஒளிபுகாமல் நீக்கி என்க.

அகக்கரணங்களும் புறக்கரணங்களுந் துயில் கூடும் வகையறிந்து கூட்டுந் தோழி குருவருளேயாமென்க. (164)

அறுமுக வொருவன் றன்னை யாயிழை யெதிர்ந்து தாழ்ந்து
சிறுதொழி லெயின ரூரிற் றீயனேன் பொருட்டா லிந்த
நறுமலர்ப் பாதங் கன்ற நள்ளிருள் யாமந் தன்னி
லிறைவநீர் நடப்ப தேயென் றிரங்கியே தொழுது நின்றாள்.

அறுமுக ஒருவன் தன்னை—ஆறு திருமுகங்களையுடைய சர்வலோகைக நாயகராகிய சுப்பிரமணியப் பெருமானை, ஆயிழை எதிர்ந்து—வள்ளிநாயகியார் எதிர்ப்பட்டு, தாழ்ந்து—தாடலைப்பட்டு வணங்கி, இறைவ—நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதரே, சிறு தொழில் எயினர் ஊரில்—இழிவாகிய சிறு தொழில் செய்கின்ற ஐம்புல வேடர்கள் வசிக்கின்ற ஊனுடலாகிய இந்தச் சிற்றூரில், தீயனேன் பொருட்டு—வேடர்கள்பாலகப்பட்டுத் தீமையுடையேனாகிய சிறியேன்பொருட்டு, நறு மலர் பாதம் கன்ற—தெய்வ நறுமணங் கமழ்கின்ற மலர்ப் பாதங்கள் நோவ, இந்த நள்ளிருள் யாமம் தன்னில்—இந்தச் செறிந்த இருள்யாமத்தில், நீர்—தேவரீர், நடப்பதே—நும்பெருமை நோக்காது நடந்தருளுவதுஞ் செய்வதே; என்று இரங்கி—என்று கூறி இரங்கி, தொழுது நின்றாள்—வணங்கி நின்றார்.

அவனருளாலே அவன்றாள் வணங்கி நின்றாரென்க. (165)

மாத்தவ மடந்தை நிற்ப வள்ளலை யிகுளை நோக்கித்
தீத்தொழி லெயினர் காணிற் றீமையாய் விளையு மின்னே
யேத்தருஞ் சிறப்பி னும்மூர்க் கிங்கிவ டனைக்கொண் டேகிக்
காத்தருள் புரியு மென்றே கையடை யாக நேர்ந்தாள்.

மா தவ மடந்தை—மாதவத்தையுடையராகிய வள்ளிநாயகியார், நிற்ப—தொழுது நிற்ப, இகுளை வள்ளலை நோக்கி—தோழி அருள்வள்ளலாகிய சுப்பிர

மணியப் பெருமானை நோக்கி, தீத்தொழில் எயினர் காணின்—கொடுந் தொழிலையுடைய வேடுவர்கள் காண்பாராயின், தீமையாய் விளையும்—தீமை முளைகொண்டு வளர்ந்து முதிரும்; இன்னே—இக்கணமே, ஏத்து அரும் சிறப்பின் நும் ஊர்க்கு—புகழ்தற்கரிய சிறப்புக்களையுடைய உமது ஊருக்கு, இங்கு இவள் தனை கொண்டு ஏகி—இத்தலைவியை உடன்கொண்டு சென்று, காத்து அருள் புரியும் என்று—பாதுகாத்தருளும் என்று கூறி, கையடையாக நேர்ந்தாள்—அடைக்கலப் பொருளாக ஓம்படை செய்தாள்.

இக் களவியன் மணத்தில், தந்தையுந் தாயுந் தானேயாதலின் தோழி இங்ஙனம் வேண்டுதல் செய்துரைப்பாளாயினள் என்க. (166)

முத்துறு முறுவ லாளை மூவிரு முகத்தி னுன்றன்
கைத்தலந் தன்னி லீந்து கைதொழு திகுளை நிற்ப
மெய்த்தகு கருணை செய்து விளங்கிழாய் நீயெம் பாலின்
வைத்திடு கருணை தன்னை மறக்கலங் கண்டா யென்றான்.

இகுளை—தோழி, முத்து உறு முறுவலாளை—முத்தம் விளைகின்ற முறுவலினை யுடைய வள்ளிநாயகியாரை, மூவிரு முகத்தினன் தன் கைத்தலம் தன்னில் ஈந்து—ஆறு திருமுகங்களையுடைய சுப்பிரமணிய சுவாமியின் திருக்கரத்திற் கையடை செய்து, கைதொழுது நிற்ப—கைகூப்பி வணங்கி நிற்ப, மெய் தகு கருணை செய்து—சுப்பிரமணியசுவாமி அத்தோழிக்கு மெய்ம்மை விளங்குகின்ற கிருபை செய்து, விளங்கு இழாய்—பிரகாசிக்கின்ற ஆபரணங்களையணிந்த தோழியே, நீ எம்பாலில் வைத்திடு கருணை தன்னை—நீ எம்மிடத்து வைத்த தயையை, மறக்கலம் என்றான்—யாம் ஒருபோதும் மறவோம் என்று கூறி யருளினர்.

முத்தம் விளைதலாவது முறுவலிக்குந் தோறும் முத்த வரிசையின் தோற்றம் உண்டாதலாம்.

தலைவிமேல் வைத்த கருணையைத் தம்மேல் வைத்த கருணையெனக் கூறி யருளினரென்க. இனித் தலைவியையும் உளப்படுத்திக் கூறினருமாம். கண்டாய், முன்னிலை அசை. (167)

மையுறு தடங்க ணல்லாள் வள்ளியை வணக்கஞ் செய்து
மெய்யுறப் புல்லி யன்னாய் விரைந்தனை சேறி யென்னா
வையனோ டினிது கூட்டி யாங்கவர் விடுப்ப மீண்டு
கொய்யுறு கவரி மேய்ந்த குரம்பையின் கூரை புக்காள்.

மை உறு தடம் கண் நல்லாள்—மை தீட்டப்பட்ட விசாலமாகிய கண்களை யுடைய தோழி, வள்ளியை வணக்கம் செய்து—வள்ளிநாயகியாரை வணங்கி, மெய் உறப் புல்லி—இருவர் மெய்யும் ஒருமையுறத் தழுவி, அன்னாய்—என் தாயே, ஐயனோடு—என் பிதாவோடு, விரைந்தனை சேறி என்னா—விரைந்து உடன்போக்குச் செய்வாயாக என்று, இனிது கூட்டி—இனிதாகத் தன்னிற் பிரித்து அத்தனோடு ஒருமை செய்து, ஆங்கு—அப்பொழுது, அவர்—இருமை

யின் ஒருமையெய்திய அவ்விருவரும், விடுப்ப—விடையீந்தருள, மீண்டு—அவ் விடத்தினின்றும் மீண்டு, கொய் உறு கவரி மேய்ந்த—கொய்யப்பட்ட கவரிமா மயிரால் வேயப்பட்ட, கூரையின் குரம்பை புக்காள்—கூரையினையுடைய சிறுகுடிலைச் சேர்ந்தாள்.

செய்வன செய்து சேர்ந்தாளென்க. *(168)*

விடைபெற்றே யிகுளை யேக வேலுடைக் கடவு ளன்ன
நடைபெற்ற மடந்தை யோடு நள்ளிரு ளிடையே சென்று
கடைபெற்ற சீறூர் நீங்கிக் காப்பெலாங் கடந்து காமன்
படைபெற்றுக் குலவு மாங்கோர் பசுமரக் காவுட் சேர்ந்தான்.

இகுளை விடைபெற்று ஏக—தோழி விடைபெற்றுக்கொண்டு செல்ல, வேல் உடைக் கடவுள்—வேற்படையைத் தாங்கிய சுப்பிரமணியப் பெருமான், அன்னம் நடை பெற்ற மடந்தையோடு—அன்னம் நடையைக் கற்றுக்கொண்ட வள்ளிநாயகியாரோடு, நள் இருள் இடையே சென்று—நடு யாமமாகிய இர வின்கட் சென்று, சீறூர் பெற்ற கடை நீங்கி—சிற்றூரிலமைந்த தலைக்கடை வாய்தலை நீங்கி, காப்பு எலாம் கடந்து—அப்பாலுள்ள எல்லாக் காவல்களை யுங் கடந்து, ஆங்கு—அப்பாலாகிய அவ்விடத்தில், காமன் படை பெற்றுக் குலவும்—மன்மதனுடைய படைகள் அனைத்தையுந் தன்பாற்கொண்டு விளங்கு கின்ற, ஓர் பசு மரக்காவுள் சேர்ந்தான்—ஒரு பசிய மரங்கள் செறிந்த சோலையுட் பிரவேசித்தருளினார்.

பரிபக்குவான்மா தன் இளைப்புக்கள் அனைத்துந் தவிர்ந்து இன்புறுகின்ற தத்துவாதீதச் சோலை அச்சோலை என்க. ஐயனைத் தொடர்ந்து வள்ளிநாயகி யார் நடக்கும் உயர்நடையே உலகங் கற்றுப் பெற்றுக்கொள்ளற்பாலதாம் ஆதலின், அன்னம் நடை பெற்ற என்றார். நடையாற் சிறந்த அன்னம் பெறு வதை உலகம் பெறுக என்பதாம்.

உலகம் விருத்தியெய்துதற்குப் போகமூர்த்தியாயெழுந்தருளுதலின், காமன் படைகளாகிய வில்லும் அம்பும் பிறவுமமைந்த சோலையுட் சேர்ந் தருளினாரென்க. *(169)*

செஞ்சுடர் நெடுவே லண்ணல் செழுமலர்க் காவிற் புக்கு
வஞ்சியொ டிருந்த காலை வைகறை விடியல் செல்ல
வெஞ்சலில் சீறூர் தன்னி லிறையவன் றனது தேவி
துஞ்சலை யகன்று வல்லே துணுக்கமுற் றெழுந்தா ளன்றே.

செம் சுடர் நெடுவேல் அண்ணல்—செம்மையாகிய ஒளிகாலுகின்ற நீண்ட வேற்படையைத் தாங்கிய சுப்பிரமணியப்பெருமான், வஞ்சியொடு—கொடி போல்வாராகிய வள்ளிநாயகியாரோடு, செழு மலர் காவில் புக்கு இருந்த காலை—செழுமையாகிய மலர்களையுடைய சோலையுட் புகுந்திருந்தபோது, வைகறை விடியல் செல்ல—வைகறையாகிய புலரிக்காலம் நிகழாநிற்ப; எஞ்சல்

இல் சீறூர் தன்னில்—குறைதலில்லாத அந்தச் சிற்றூரில், இறையவன் தனது தேவி—நம்பியரசனின் தேவியாகிய கொடிச்சியென்பாள், துஞ்சலை அகன்று—துயிலுதல் ஒழிந்து, துணுக்கம் உற்று—நடுக்கமுற்று, வல்லே எழுந்தாள்—விரைந்து துயிலெழுந்தாள்.

வைகறை விடியல்—வைகறையாகிய விடியல். வைகறை, விடியல், புலரி ஒருபொருட் கிளவிகள். வைகுதல்—கழிதல். இராப்பொழுது கழிதலாகிய அறுதல் என்க. அறு+ஐ=அறை. ஐ தொழிற்பெயர் விகுதி. இது வைகுறுதல் எனப்பட்டு, விகுதி கெட்டு வைகுறு எனவும் நிற்கும். 'வைகுறு விடியல் மருதம்' என்பது தொல்காப்பியம். 'வைகறை விடியல் மருதம்' என்றும் பாடம் உண்டு.

சிறுபொழுது ஆறு கொள்வார், 'வைகறை விடியல்' என்பதை இருவேறு சிறுபொழுதெனக் கொண்டு, வைகறைப் பின்னர்த்தாய விடியல் என்பர். அது பொருந்தாது; என்னை? வைகறைக்குப் பின்னர்த்தாய விடியல், நாள் வெயிற் காலை எனப்பட்டுத் துயிலெழற்காகாமையினென்க. வைகறைத் துயிலெழு என்பது அன்னையின் வாக்கு.

இனிச் சிறுபொழு தைந்தே என்பதும் வைகறையே விடியல் என்பதும் இவ்வாசிரியருக்குக் கருத்தாதலை,

* 'காலை வெம்பகல் கதிரவன் குடதிசைக் கரக்கும்
மாலை யாமம்வை கறையெலாம்'

எனவரும் ஆற்றுப்படலச் செய்யுளானறிக.

† 'காலையும் பகலுங் கையறு மாலையும்
ஊர்துஞ் சியாமமும் விடியலு மென்றிப்
பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்'

என்னுங் குறுந்தொகைப் பாட்டு, ஆசிரியர் கருத்துக்கரணுதலுங் காண்க. ஆற்றுப்படலத்தில் வைகறை என்றதனைக் குறுந்தொகை விடியல் என்றது. ஒருபொருட் கிளவிகளாகிய இரண்டனையும் ஒருங்கு சேர்த்து 'வைகறை விடியல்' என்றார்.

சிறுபொழுதைந்தாமாறு கடாவிடையுள்ளுறுத்துச் சிவஞானசுவாமி களாற் சூத்திர விருத்தியில் நாட்டப்பட்டது.

தன் புதல்வியையே நினைவில் வைத்துத் துயின்றாளாதலின், கொழுநற் றெழுதெழ வேண்டியவள் துணுக்கமுற்றெழுந்தாளென்க. *(170)*

சங்கலை கின்ற செங்கைத் தனிமகட் காணு ளாகி
யெங்கணு நாடிப் பின்ன ரிகுளையை வந்து கேட்பக்
கங்குலி னவளு நானுங் கண்படை கொண்ட துண்டா
லங்கவ ளதற்பின் செய்த தறிகில னன்ன யென்றாள்.

சங்கு அலைகின்ற செங்கைத் தனி மகட் காணுளாகி—தாயானவள் சங்கு வளையல்கள் அலைதலைச் செய்கின்ற செம்மையாகிய கைகளை உடைய ஒப்பில்

* கந்தபுராணம்: ஆற்றுப்படலம் — 15.
† குறுந்தொகை — 32

லாத தன் புதல்வியைக் காணுதவளாய், எங்கணும் நாடி—எவ்விடத்தி லுந்தேடி, பின்னர் இருளையை வந்து கேட்ப—பின்பு தோழியிடம் வந்து வினவ, அன்னுய்—தாயே, கங்குலின் அவளும் நானும் கண்படை கொண்டது உண்டு—இந்த இரவில் அத் தலைவியும் யானுங் கண்துயில் கொண்டதுண்டு; அதன் பின்—துயில் கூடியபின், அங்கவள் செய்தது அறிகிலன் என்ருள்— அத்தலைவி செய்ததை யான் அறியேன் என்று தோழி கூறினுள்.

தலைவியின் வேற்றுமை பற்றிய சிந்தனையை உட்கொண்டிருந்தமையா னும், இற்செறிப்புச் செய்தமையானுந் தானே தேடி, பின் இருளையை வினவினள் என்க.

தலைவி எய்திய பேரின்பநிலை வாக்கு மனங்கட்கெட்டாததாதலின், 'பின் செய்ததறிகிலன்' என மெய்ம்மையே பேசினுள். 'வாய்தலிற் கதவை நீக்கி வள்ளியைக் கொடுசென்றுய்த்த'மை தன்வயம்போய அருண்மயச் செயலாமென்க. *(171)*

தம்மகட் காணு வண்ணந் தாய்வந்து புகலக் கேட்டுத்
தெம்முனைக் குறவர் செம்ம றெருமந்து செயிர்த்துப் பொங்கி
நம்மனைக் காவ னீங்கி நன்னுதற் பேதை தன்னை
யிம்மெனக் கொண்டு போந்தான் யாவனே வொருவ னென்ருன்.

தம்மகட் காணு வண்ணம்—தம் மகளைக் காணுத வகையை, தாய் வந்து புகல—நற்ருய் தன்பால் வந்து கூற, தெம் முனைக் குறவர் செம்மல் கேட்டு— பகைமுனைக்கொருவனுகிய வேட்டுவ மன்னன் கேட்டு, தெருமந்து—புத்தி சுழன்று, செயிர்த்துப் பொங்கி—கோபித்துக் கிளர்ந்து, நம் மனைக் காவல் நீங்கி—நமது மனையகத்துக் காவல்களைக் கடந்து, நல் நுதற் பேதை தன்னை— நல்ல நெற்றியினையுடைய பேதையாகிய என் புதல்வியை, யாவனே ஒருவன்— எவனே ஒருவன், இம்மெனக் கொண்டு போந்தான்—விரைந்து களவிற் கொண்டு சென்றனன்; என்ருன்—என்றிங்ஙனங் கொதித்தான்.

நெருநல் விளைவு இங்ஙனம் நினைக்கச் செய்தது. *(172)*

மற்றிவை புகன்று தாதை வாட்படை மருங்கிற் கட்டிக்
கொற்றவில் வாளி யேந்திக் குமரியைக் கவர்ந்த கள்வ
னுற்றிடு நெறியை நாட வொல்லையிற் போவ னென்னுச்
செற்றமொ டெழுந்து செல்லச் சிறுகுடி யெயினர் தேர்ந்தார்.

தாதை இவை புகன்று—தந்தையாகிய நம்பியரசன் இவற்றைக் கூறி, வாட்படை மருங்கில் கட்டி—வாட்படையை அரையிற் கட்டி, கொற்ற வில் வாளி ஏந்தி—வெற்றி பொருந்திய வில்லையும் அம்பையுங் கையிலெடுத்துக் கொண்டு, குமரியை நாட—குமரியாகிய தன் புதல்வியைத் தேடிக் காண, கவர்ந்த கள்வன் உற்றிடு நெறியை ஒல்லையில் போவன் என்னு—அவளைக் கவர்ந்த அக் கள்வன் சென்ற நெறிக்கண் விரைந்து செல்வேன் என்று, செற்ற

மொடு எழுந்து செல்ல—மிக்க சினத்தோடெழுந்து செல்லாநிற்ப, சிறுகுடி எயினர் தேர்ந்தார்—அதனை அச் சிற்றூர் வேட்டுவர்கள் அறிந்தார்கள். (173)

எள்ளுதற் கரிய சீறூ ரிடைதனில் யாமத் தேகி
வள்ளியைக் கவர்ந்து கொண்டு மாயையான் மீண்டு போன
கள்வனைத் தொடர்து மென்றே கானவர் பலருங் கூடிப்
பொள்ளெனச் சிலைகோல் பற்றிப் போர்த்தொழிற் கமைந்து போனர்.

எள்ளுதற்கு அரிய சீறூர் இடைதனில்—காவல்கள் இகழுதற்கரிய நமது சிற்றூரின்கண்ணே, யாமத்து ஏகி—யாமநேரத்தில் வந்து, வள்ளியை மாயையால் கவர்ந்து—நம் வள்ளியாகிய கன்னியை மாயத்தாற் களவு செய்து, கொண்டு—தன்னுயிரையுந் தாங்கிக்கொண்டு, மீண்டுபோன—உயிர் பிழைத்துப் போன, கள்வனை—அந்தத் திருடனை, தொடர்தும் என்று—தொடர்ந்து பற்றுவோம் என்று சபதஞ் செய்துகொண்டு, கானவர் பலரும் கூடி—பலராகிய வேடுவர் யாவரும் ஒருங்கு திரண்டு, சிலை கோல் பற்றி—வில்லையும் அம்பையுங் கையிற் பிடித்து, போர்த் தொழிற்கு அமைந்து—யுத்த சன்னத்தராய், பொள்ளெனப் போனர்—விரைந்து சென்றார்கள்.

தங்காவலை இகழ்ந்தமையிற் சீறி எழுவாராயினர். தம்மவள்பாற் குற்றங் கூற மனம் ஒருப்படாராய், மாயையாற் கவர்ந்து என்றார். (174)

வேடுவர் யாரு மீண்டி விரைந்துபோய் வேந்த னோடு
கூடின ரிரலை தன்னைக் குறித்தனர் நெறிக டோறு
மோடினர் பொதும்ப ரெல்லா முலாவினர் புலங்கள் புக்கு
நாடினர் சுவடு நோக்கி நடந்தன ரிடங்க ளெங்கும்.

வேடுவர் யாரும் ஈண்டி—வேடுவர்கள் யாவரும் ஒருங்கு திரண்டு, விரைந்து போய்—விரைந்து சென்று, வேந்தனோடு கூடினர்—தமது அரசனோடு சேர்ந்து, இரலை தன்னைக் குறித்தனர்—தமது வீர முழக்கச் சின்னமாகிய கொம்பை ஊதி, நெறிகள் தோறும் ஓடினர்—பெரியவுஞ் சிறியவுமான நெறிகள்தோறும் ஓடி, பொதும்பர் எல்லாம் உலாவினர்—மரச்செறிவாகிய சோலைகளிலெல்லாம் உலாவி, புலங்கள் புக்கு நாடினர்—விளைபுலங்களிற் புகுந்து தேடி, இடங்கள் எங்கும்—இவ்வாற்றான் எவ்விடங்களிலும், சுவடு நோக்கி நடந்தனர்—அடிச் சுவடுகளை உற்று நோக்கிக்கொண்டு பரந்து சென்றார்கள். (175)

ஈங்கன மறவ ரோடு மிறையவன் றேடிச் செல்லப்
பாங்கரி லொருதன் காவிற் பட்டிமை நெறியா லுற்ற
ளாங்கனந் தெரியா வஞ்சி யாறுமா முகத்து வள்ளல்
பூங்கழ லடியில் வீழ்ந்து பொருமியே புகல லுற்றாள்.

ஈங்கனம் மறவரோடும்–இவ்வாற்றான் ஐம்புல வேடுவர்களோடும், இறையவன்–புலங்களை நடத்தும் மனம் என்கின்ற அவ் வேட்டுவ மன்னன், தேடி–தம்மகத்து வளர்ந்த தன் புதல்வியை அகப்படுத்தும் பொருட்டுத் தேடி, செல்ல–செல்லாநிற்ப, பாங்கரில்–பக்கமாகிய ஆங்குத்தானே, ஒரு தண் காவில்–ஒரு குளிர்ந்த சோலையில், பட்டிமை நெறியால் உற்றாள்–ஐம்புல வேடர்களை வஞ்சித்துக் களவு நெறியானே உடன் செல்லற்குரியாரோடு சென்றிருந்த வள்ளிநாயகியார், ஆங்கனம் தெரியா–அவ்வாறாகிய ஆரவார வாசனையை அறிந்து, அஞ்சி–அச்சங்கொண்டு, மா ஆறுமுகத்து வள்ளல் பூங்கழல் அடியில் வீழ்ந்து–பெருமைபொருந்திய ஆறுமுகப் பெருமானாகிய அருள் வள்ளலின் வீரக்கழலணிந்த திருவடி மலர்களில் அழுந்தி, பொருமி–பொருமலுற்று, புகலல் உற்றாள்–கூறுவாராயினர்.

'மீண்டுமிப் புன்புலக் குரம்பையுள் விட்டிடுதியோ' என்று அஞ்சிப் பொருமினர் என்க.

*'ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டந்நிய மின்மையின் அரன்கழல் செலுமே'

என்று சிவஞானபோதங் கூறியவாறு, குறக்குலக்கொடி குகன்கழல் செல்லுமாறுணர்க.

†'மன்னவன்தன் மகன்வேடர் இடத்தே தங்கி
வளர்ந்துஅவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என்மகன்நீ என்றுஅவரில் பிரித்துப்
பெருமையொடும் தானாக்கிப் பேணு மாபோல்
துன்னியஐம் புலவேடர் சுழலில் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறும்தொல் உயிரை
மன்னும்அருட் குருவாகி வந்துஅவரின் நீக்கி
மலம்அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்.'

என்பது சித்தியார்.

இங்கே மகன் என்றதனை மகள் என்று கொள்க. அங்ஙனமாதலை,

‡'இருவர் மடந்தையருக் கென்பயன்'

என்ற திருவருட்பயனாற்றெளிக. (176)

கோலொடு சிலையும் வாளுங் குந்தமு மழுவும் பிண்டி
பாலமும் பற்றி வேடர் பலருமாய்த் துருவிச் சென்று
சோலையின் மருங்கு வந்தார் துணுக்கமுற் றுளதென் சிந்தை
மேலினிச் செய்வ தென்கொ லறிகிலேன் விளம்பா யென்றாள்.

வேடர் பலருமாய்–வேடர்கள் பலரும் ஒருங்கு திரண்டு, கோலொடு சிலையும் வாளும் குந்தமும் மழுவும் பிண்டிபாலமும் பற்றி–அம்பும் வில்லும்

* சிவஞானபோதம்: சூத். — 8.
† சிவஞானசித்தியார் சுபக்கம்: சூத். — 8 : 1.
‡ திருவருட்பயன்: இன்புறு — 2.

வாளுங் கைவேலும் மழுவும் எறிகின்ற ஈட்டியும் ஆகிய இவைகளைப் பற்றிக் கொண்டு, துருவிச் சென்று—எங்குந் தேடித் திரிந்து, சோலையின் மருங்கு வந்தார்—இச் சோலைக்கு அண்மைக்கண் வந்துவிட்டார்கள்; என் சிந்தை துணுக்கம் உற்றுளது—என் உள்ளமாகிய ஆத்ம போதம் துணுக்கம் எய்தியது; மேல் இனிச் செய்வது என்—இனி என்செயலாவது யாதொன்றுமில்லை; அறிகிலேன்—வேண்டத்தக்கதைத் தேவரீரே அறிந்தருள்வீர் யான் அறிய கில்லேன்; விளம்பாய்—விளம்புவதுளதேல் விளம்புமா விளம்பியருள்க; என்றாள்—என்று பிரார்த்தித்தார்.

மேல் இனி—இனி. என், இன்மை குறித்தது. 'வேண்டத்தக்க தறிவோய் நீ' என்பது மணிவாசகம். அறிவையும் அர்ப்பணஞ் செய்தாராகலின் அறிகிலேன் என்றார். விளம்புமா விளம்பாய் என்பதிற் செய்யுமா செய்யாய், நினையுமா நினையாய் என வருவன யாவும் அடங்கும்.

* **'அன்றே என்தன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமும்**
**குன்றே அனையாய் என்னைஆட் கொண்ட போதே கொண்டிலையோ**
**இன்றோர் இடையூறு எனக்குண்டோ எண்தோள் முக்கண் எம்மானே**
**நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ இதற்கு நாயகமே'**

என்றவாறு பிரார்த்தித்தாரென்க. *(177)*

வருந்தலை வாழி நல்லாய் மால்வரை யோடு சூர
னுரந்தனை முன்பு கீண்ட வுடம்பிடி யிருந்த நும்மோர்
விரைந்தமர் புரியச் சூழின் வீட்டுது மதனை நோக்கி
யிருந்தரு ணம்பி னென்னு விறைமகட் கெந்தை சொற்றான்.

நல்லாய்—நன்மையாகிய சிவமாந்தன்மையை எய்திய நங்கையே, வாழி—பேரின்பப் பெருவாழ்வு வாழ்வாயாக; நும்மோர்—நும்மவரான ஐம்புல வேடர்கள், விரைந்து—விரைவுபட்டு, அமர் புரியச் சூழின்—போர்புரியச் சூழுவாராயின், மால்வரையோடு சூரன் உரந்தனை முன்பு கீண்ட உடம்பிடி இருந்த—கிரௌஞ்ச கிரியையும் சூரபன்மனின் மார்பையும் முன்னர்ப் பிளந்த ஞான போதமாகிய வேல் நம்பாற் செவ்விநோக்கியிருந்தது; வருந்தலை—ஆதலினாலே இனிப் புன்புலச் சேட்டைகட்கஞ்சி வருந்தற்க; வீட்டுதும்—யாம் யாவையுஞ் சூனியஞ் செய்வோம்; அதனை நோக்கி—அங்ஙனமாதலைக் கருத்துட் கொண்டு, நம்பின்—எம்முள் அடங்கி எம்மை முன்னிட்டு, இருந்தருள்—சும்மா இரு; என்னு—என்று, இறை மகட்கு—சர்வலோகத்துக்கும் இறையாகிய மன்னவன் மகள் ஆயினாளுக்கு, எந்தை சொற்றான்—எந்தையாகிய சுப்பிரமணியப் பெருமான் உபதேசித்தருளினார்.

† **'செம்மான் மகளைத் திருடுந் திருடன்'** என்பின், **'சும்மா இரு'** என்றானென்க.

---

* திருவாசகம்: குழைத்தபத்து — 7.

† 'செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா இருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே.' — கந்தரநுபூதி — 12.

சூழ்தல் கருதலுமாம். இருந்தது—இறுதிகெட்டு நின்றது; அந்நில வழக்கில் அவ்வாறியம்பியதுமாம். சூழின் இறந்துபட்டார் என்ற விரைவுக் குறிப்பை, 'இருந்த' என்புழி இறந்தகாலந் தந்து நின்றது.

சூர்மார்புங் குன்றுந் துளைத்தவேல் என்க. ஆன்மபோதத் துணுக்கத்தை ஞானபோத வேல் நீக்க வல்லதாமென்பது.

இரு என்னுது இருந்தருள் என்றது, இறைமகள் ஆயினுள் ஆதலின் என்க. ஈண்டுப் 'பின்' என்றது,

> * 'உற்கைதரும் பொற்கை உடையவர்போ லுண்மைப்பின்
> நிற்க வருளார் நிலை'

என்புழி வரும் பின்னுமென்க.

> † 'மன்னவன்தன் மகன்வேடர் இடத்தே தங்கி
> வளர்ந்துஅவனே அறியாது மயங்கி நிற்பப்
> பின்னவனும் என்மகன்நீ என்றுஅவரில் பிரித்துப்
> பெருமையொடும் தானுக்கிப் பேணு மாபோல்'

என்ற சித்தியார்ப் பாடலில் வரும் மகன் என்பதை மகள் என்று மாற்றிப் படித்து, ஈண்டுப் போந்த இறைமகள் என்பதன் நயங் காண்க. (178)

> குறத்திரு மடந்தை யின்ன கூற்றினை வினவிச் செவ்வேள்
> புறத்தினில் வருத லோடும் பொள்ளெனக் குறுகி யந்தத்
> திறத்தினை யுற்று நோக்கிச் சீறிவெய் துயிர்த்துப் பொங்கி
> மறத்தொழி லெயினர் காவை மருங்குற வளைந்து கொண்டார்.

குறத் திரு மடந்தை—குறப்பெண்ணாகிய அழகிய வள்ளிநாயகியார், இன்ன கூற்றினை வினவி—இந்த உபதேச வார்த்தைகளைக் கேட்டு, செவ்வேள் புறத்தினில் வருதலோடும்—செவ்வேளாகிய சுப்பிரமணியப்பெருமானை முன்னிட்டுப் பின்னே சும்மா இருத்தலும், மறத்தொழில் எயினர் பொள்ளெனக் குறுகி—மறத்தொழிலினையுடைய வேடுவர்கள் விரைந்து கிட்டிச் சென்று, அந்தத் திறத்தினை உற்று நோக்கி—வள்ளிநாயகியார் தம்மை மறந்து திருடிச் சென்றுரை முன்னிட்டுப் பரவயப்பட்டிருக்கும் அந்த இயல்பை ஆழ்ந்து சிந்தித்து, சீறி—கோபித்து, வெய்து உயிர்த்து—வெம்மைத்தாக நெட்டுயிர்த்து, பொங்கி—கிளர்ந்து, காவை மருங்கு உற வளைந்துகொண்டார்—அந்தச் சோலையை எல்லாப் பக்கத்திலும் பெரிதும் முற்றுகை செய்தார்கள்.

வள்ளிநாயகியாரின் போக்கு மேலுஞ் சினத்தை மிகுத்தது போலும். (179)

---

* திருவருட்பயன் : உயிரவை — 8.

† சிவஞானசித்தியார் சுபக்கம் : சூத். — 8 : 1.

தாதையங் கதனைக் கண்டு தண்டலை குறுகி நந்தம்
பேதையைக் கவர்ந்த கள்வன் பெயர்கில னெமது வன்மை
யேதையு மதியா னம்மா விவன்விற லெரிபாய்ந் துண்ணு
மூதையங் கான மென்ன முடிக்குது மொல்லை யென்றான்.

தாதை தண்டலை குறுகி—தந்தையாகிய நம்பியுஞ் சோலையுட் புகுந்து, அங்கு அதனைக் கண்டு—அங்கே அவ்விருவர் திறத்தினையுங் கண்டு, நம் தம் பேதையைக் கவர்ந்த கள்வன்—நம் பேதையாகிய புதல்வியைக் கவர்ந்த இந்தத் திருடன், பெயர்கிலன்—நம்மைக் கண்டும் அவளை விட்டுப் புடைபெயருகின் றிலன்; எமது வன்மை ஏதையும் மதியான்—எமது வலிமை எதனையும் பொருள் செய்யான்போலும்; அம்மா—அம்மம்ம இவன் துணிவு இருந்தவாறு!, இவன் விறல்—இத்தகையானது வலியை, எரி பாய்ந்து உண்ணும்—எரி பரந்து அழிக்கின்ற, ஊதை கானம் என்ன—காற்றோடு கூடிய காட்டை ஒக்கும் படி, ஒல்லை முடிக்குதும் என்றான்—விரைவில் ஒழிப்போம் என்று கூறினான்.

தாதையும் என உம்மை வருவிக்க. மகள் நிலை கண்டும் மகட் பற்றினால் மகள்பாற் குற்றமின்றென்பானாய்ப் பேதையைக் கவர்ந்த கள்வன் என்றான். அம்—சாரியை. இனி மூதை எனப் பிரித்து மூதையாகிய கானம் எனினுமாம். மூதை—வெட்டிச் சுட்ட காடு.

மனமாதி பொறி புலன்களின் வயப்பட்ட இவ்வுலகம் தவஞ்செய்து ஆதி பகவனாகிய முதலைத் தொடராதவழி, ஊழித்தீ பரவு மூதையங் கானமேயாம்.
(180)

குறவர்கண் முதல்வன் றானுங் கொடுந்தொழி லெயினர் யாரு
மறிகட லென்ன வார்த்து வார்சிலை முழுதும் வாங்கி
யெறிசுடர்ப் பரிதித் தேவை யெழிலிகண் மறைத்தா லென்ன
முறைமுறை யம்பு வீசி முருகனை வளைந்து கொண்டார்.

குறவர்கள் முதல்வன் தானும்—வேடுவர்களின் அரசனாகிய நம்பியும், கொடுந்தொழில் எயினர் யாரும்—கொடுந்தொழிலினையுடைய வேட்டுவர் யாவரும், மறி கடல் என்ன ஆர்த்து-திரைமறிகின்ற கடல்போல ஆரவாரஞ் செய்து, வார் சிலை முழுதும் வாங்கி—நீண்ட வில்லை முழுவதும் வளைத்து, சுடர் எறி பரிதித் தேவை—ஒளிக்கிரணங்களை வீசுகின்ற சூரியமூர்த்தியை, எழிலிகள் மறைத்தால் என்ன—முகில்கள் மழைசொரிந்து மறைத்தாற்போல, முறை முறை அம்பு வீசி—ஒவ்வொருவரும் ஒருவர்பின் ஒருவர் முறைமுறையே அம்பு மழையைச் சொரிந்து, முருகனை வளைந்து கொண்டார்—முருகப்பெருமானை அகப்படுத்தற்கு முற்றுகை செய்தார்கள்.

கோப வேகத்தால் வில்லை வட்டவடிவாக வளைத்தமையின், வார்சிலை முழுதும் வாங்கி என்றார். உவமேயத்துக்கியைய மழை சொரிதல் வருவிக்கப் பட்டது. மழை சொரிதலால் மேகம் வெளிறுபடுதல்போல, இவர்கள் செயலும் வெளிறுபடுஞ் செயலேயாமென்க. அன்றி, அம்பு வீசுதல் அடியார்கள் அபிடேகஞ் செய்தலையுமொக்குமென்க.
(181)

ஒட்டல ராகிச் சூழ்ந்தாங் குடன்றுபோர் புரிந்து வெய்யோர்
விட்டவெம் பகழி யெல்லா மென்மலர் நீர வாகிக்
கட்டழ குடைய செவ்வேற் கருணையங் கடலின் மீது
பட்டன பட்ட லோடும் பைந்தொடி பதைத்துச் சொல்வாள்.

வெய்யோர்—எம்பெருமான் செயலில் விருப்பம் வைத்தற்குரியோராகிய அந்த வேடுவர்கள், ஒட்டலராகி—அறியாமையினுற் பகைவர்களாய், ஆங்கு—அச்சோலையின்கண், சூழ்ந்து—முற்றுகைசெய்து, உடன்று—மாறுபட்டு, போர் புரிந்து—போரினைச் செய்து, விட்ட வெம்பகழி எல்லாம்—செலுத்திய வெய்ய பாணங்களெல்லாம், கட்டு அழகுடைய—கண்டாரைப் பிணிக்கும் பேரழகினை யுடைய, செவ்வேல்—செம்மையாகிய வேற்படையைத் தாங்கிய, அம் கருணைக் கடலின் மீது—அழகிய கிருபாசமுத்திரமாகிய சுப்பிரமணியப் பெருமான்மீது, மென்மலர் நீரவாகி—மென்மையாகிய மலர்களின் நீர்மையையுடையனவாய், பட்டன—மிருதுவாகப் பட்டன; பட்டலோடும்—அவ்வாறு படாமலே பட்ட தற்கும், பைந்தொடி பதைத்துச் சொல்வாள்—பசிய வளையலையணிந்த கரத்தினையுடைய வள்ளிநாயகியார் நடுக்கமுற்றுக் கூறுவார்.

ஒட்டலராகி என்பதனுல், அங்ஙனம் ஆகாமை பெற்றும். மேல் அபிடேக நீர்போன்றிருந்த பாணங்கள் ஈண்டு அருச்சனை மலர்போன்றமைந்தன என்க. ஒடு உருபுமயக்கம். பைந்தொடி என்றதனுற் கரங்கள் விதிர்விதிர்க்க நடுங்கினு ரென்க.

* 'காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்து ளோருயிர் கண்டனம் யாமின்றி யாவையுமாம்
ஏகத் தொருவ னிரும்பொழி லம்பல வன்மலையில்
தோகைக்குந் தோன்றற்கு மொன்றுய் வருமின்பத் துன்பங்களே'.

என்ற திருக்கோவைச் செய்யுளினுல், இருமையின் ஒருமை எய்திய வள்ளி நாயகியாரின் பதைபதைப்பின் உண்மை உணர்க.

உயிர்க்கோரூறு வருமானுல் ஒன்றியிருந்த சடமான உடல் பதைக்கின் றது. இங்ஙனமாயின், உயிர்க்குயிருக்கு ஒன்று வருமானுற் சித்தாகிய உயிர் எங்ஙனமாம் என்க. (182)

நெட்டிலை வாளி தன்னை ஞெரேலென நும்மேற் செல்லத்
தொட்டிடு கையர் தம்மைச் சுடருடை நெடுவே லேவி
யட்டிடல் வேண்டுஞ் சீய மடுதொழில் குறியா தென்னிற்
கிட்டுமே மரையு மானுங் கேழலும் வேழந் தானும்.

சீயம் அடு தொழில் குறியாது என்னின்—மிருகராசனுன சிங்கம் கொலைத் தொழிலைக் கருதாது சாதுத்தன்மையை மேற்கொள்ளுமாயின், மரையும் மானும் கேழலும் வேழமும்—மரையும் மானும் பன்றியும் யானையும் என் றிவைகள், கிட்டுமே—அணுகி உறவுமுறை கொண்டாடும் அன்றே ஆதலி

* திருக்கோவையார் — 71.

ணுலே, நெடு இலே வாளி தன்னை—நெடிய இலைவடிவமைந்த அம்பை, நும்மேல் செல்ல ஞெரேலெனத் தொட்டிடு கையர் தம்மை—தேவரீர்மீது பாயுமாறு விரைந்து செலுத்துகின்ற கீழ்மக்களாகிய வேடுவர்களை, சுடர் உடை நெடு வேல் ஏவி அட்டிடல் வேண்டும்—ஒளி உடைத்தாய நீண்ட வேற்படையை ஏவி அழித்தருளல் வேண்டும்.

தான் அசை. புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய விலங்கு மனத்தைப் பராமுகஞ் செய்து உறவு கொண்டாடின் இழுக்கேயாமென்றவாறு. (183)

என்றிவை குமரி செப்ப வெம்பிரா னருளாற் பாங்கர்
நின்றதோர் கொடிமாண் சேவ னிமிர்ந்தெழுந் தார்ப்புக் கொள்ளக்
குன்றவர் முதல்வன் ருனுங் குமரருந் தமரும் யாரும்
பொன்றின ராகி மாண்டு பொள்ளெனப் புவியில் வீழ்ந்தார்.

என்று இவை குமரி செப்ப—என்றிவற்றை வள்ளிநாயகியார் கூற, எம் பிரான் அருளால்—எம்பெருமானுகிய சுப்பிரமணியசுவாமியின் திருவருளி ணுலே, பாங்கர் கொடி நின்றது ஓர் மாண் சேவல்—அயலிற் கொடியாயமைந்து நின்றதாகிய ஒப்பற்ற பெருமையினையுடைய சேவலானது, எழுந்து நிமிர்ந்து ஆர்ப்புக் கொள்ள—மேலெழுந்து தலைநிமிர்ந்து கூவி ஆரவாரஞ் செய்ய, குன்றவர் முதல்வன் தானும்—குன்றக் குறவரின் மன்னனுன நம்பியும், குமரரும் தமரும் யாரும்—புதல்வர்களும் உறவினரும் யாவரும், பொன்றினர் ஆகி—நிலையழிந்தவராய், மாண்டு—இறந்து, புவியில் பொள்ளென விழுந்தார்—பூமியில் விரைந்து விழுந்தார்கள்.

அறிவுச் சேவல் மேலெழுந்து கூவ, அறியாமைப் புலங்கள் அமைந் தொடுங்கியவாருமென்க. (184)

தந்தையு முன்னை யோருந் தமரும்வீழ்ந் திறந்த தன்மை
பைந்தொடி வள்ளி நோக்கிப் பதைபதைத் திரங்கிச் சோரக்
கந்தனத் துணைவி யன்பு காணுவான் கடிகா நீங்கிச்
சிந்தையி லருளோ டேக வனையளுந் தொடர்ந்து சென்ருள்.

தந்தையும்—பிதாவும், முன்னையோரும்—குல முதல்வராகிய முதியோரும், தமரும்—உறவினரும், இறந்து வீழ்ந்த தன்மை—இறந்து பூமியில் விழுந்த தன்மையை, பைந்தொடி வள்ளி நோக்கி—பசிய வளையலையணிந்த வள்ளி நாயகியார் பார்த்து, பதைபதைத்து இரங்கிச் சோர—பழைய வாசனையாற் பதைபதைத்து இரக்கமுற்றுச் சோர, கந்தன்—அச்சந்தர்ப்பத்திற் கந்தசுவாமி, அ துணைவி அன்பு—அட்டிடல் வேண்டும் என்று வற்புறுத்திய அத் துணைவி யாகிய வள்ளிநாயகியாரின் தலையாய அன்பை, காணுவான்—உலகத்தாருக்குக் காட்டும்பொருட்டுத் தாம் பரீட்சை செய்வாராய், கடி கா நீங்கி—தெய்வ மணங் கமழுகின்ற அந்தச் சோலையை விட்டு நீங்கி, சிந்தையில் அருளோடு ஏக—திருவுள்ளத்தின்கண்ணே இறந்தவர்பாலும் அருளுடையராய்ச் செல்லா

நிற்ப, அனையளும் தொடர்ந்து சென்றுள்—அவ் வள்ளிநாயகியாரும் பந்துக்களாற் சிறிதுந் தொடக்குறுது தொடர்ந்து சென்றருளினர்.

ஆதி, பகவனைத் தொடர்ந்தவாறும், ஆரூரர், ஆரூர் விழாவுக்குச் சென்றவாறும் ஈண்டுத் தொடர்ந்து சென்றவாறுபற்றிச் சிந்திக்கற்பாலவாம்.

பிறப்பறுக்கலுற்றூர்க் குடம்பு மிகையாயவழிப் பந்துக்கள் எம்மாத்திரம் என்க. (185)

செல்லநா ரதப்பேர் பெற்ற சீர்கெழு முனிநேர் வந்து
வல்லியோ டிறைவன் றன்னை வணங்கிநின் செய்கை யெல்லாஞ்
சொல்லுதி யென்ன வன்னுன் றேகையைக் காண்ட றெட்டு
மல்லல்வேட் டுவரை யட்டு வந்திடு மளவுஞ் சொற்றூன்.

செல்ல—வள்ளிநாயகியார் பின்தொடரத் தாம் முன்னே சென்றருள, நாரதப் பேர் பெற்ற—நாரதர் என்கின்ற பெயரினைப் பெற்ற, சீர்கெழு முனி நேர் வந்து—சிறப்புப் பொருந்திய முனிவராகிய பாங்கர் எதிரே வந்து, வல்லியோடு இறைவன் தன்னை வணங்கி—வள்ளிநாயகியாரையும் சுப்பிரமணிய சுவாமியையும் வணங்கி, நின் செய்கை எல்லாம் சொல்லுதி என்ன—சுப்பிரமணியசுவாமியை நோக்கி நுமது செயல்களனைத்தையும் ஆதியோடந்தமாகத் திருவாய்மலர்ந்தருளுக என்று பிரார்த்திக்க, அன்னுன்—சுப்பிரமணியசுவாமி, தோகையைக் காண்டல் தொட்டு—வள்ளிநாயகியாரைப் பரண்மீது கண்ட முதற்காட்சிதொட்டு, மல்லல் வேட்டுவரை அட்டு—இடையிலே தொகையான் மிக்க வேட்டுவரை அழித்து, வந்திடும் அளவும்—வள்ளிநாயகியார் உடன்வர வாராநின்றது வரையும், சொற்றூன்—நடந்தவைகளைக் கூறியருளினர்.

வல்லி—கொடி. தோகை—மயில். (186)

பெற்றிடு தந்தை தன்னைப் பிறவுள சுற்றத் தோரைச்
செற்றமொ டட்டு நீக்கிச் சிறந்தநல் லருள்செ யாமற்
பொற்றெடி தன்னைக் கொண்டு போந்திடத் தகுமோ வென்னு
மற்றிவை முனிவன் கூற வள்ளலு மஃதா மென்றூன்.

பெற்றிடு தந்தை தன்னை—வள்ளிநாயகியாரைத் தவத்தாற் பெற்று வளர்த்த பிதாவையும், பிற உள சுற்றத்தோரை—ஏனைய உறவினரையும், செற்றமொடு அட்டு—கோபத்தோடழித்து, நீக்கி—அவர்களினின்றும் வள்ளி நாயகியாரைப் பிரித்து, சிறந்த நல் அருள் செயாமல்—சிறந்த நல்ல திருவருளை அவர்களுக்குச் செய்யாமல், பொற்றெடி தன்னை—வள்ளிநாயகியாரை, கொண்டு போந்திடத் தகுமோ—உடன்கொண்டு போந்திடுதல்கிருபா சமுத்திரமாகிய தேவரீருக்குத் தகுதியாகுமோ; என்னு இவை முனிவன் கூற—என்று இவைகளை நாரதமுனிவர் எடுத்துச் சொல்ல, வள்ளலும்—அருள் வள்ளலாகிய சுப்பிரமணியப்பெருமானும், அஃது—நாரதனே நீ கூறியது, ஆம் என்றூன்—முறையேயாம் என்று உடன்பட்டருளினர்.

மனமாதி புலங்களை ஒருமுகஞ் செய்தலே முறையாமாதலின் நாரதர் வாயிலாக ஆம் என்றருளினரென்க. அட்டுநீக்கி என்பதற்கு, கொன்றழித்து எனப் பொருள் கோடலுமாம். (187)

விழுப்பம துளதண் காவில் விசாகன்மீண் டருளித் தன்பான்
முழுப்பரி வுடைய நங்கை முகத்தினை நோக்கி நம்மேற்
பழிப்படு வெம்போ ராற்றிப் பட்டநுங் கிளையை யெல்லா
மெழுப்புதி யென்ன லோடு மினிதென விறைஞ்சிச் சொல்வாள்.

விழுப்பம் உள தண் காவில்—உயர்வாகிய சிறப்பமைந்த குளிர்ந்த அந்தச் சோலையில், விசாகன் மீண்டு அருளி—விசாகராகிய சுப்பிரமணியப்பெருமான் குறித்த இடத்துக்கு மீண்டு வந்தருளி, தன் பால் முழுப் பரிவுடைய நங்கை முகத்தினை நோக்கி—முழுமையாய தலையன்பைத் தம்பாற் கொண்ட வள்ளி நாயகியாரின் முகத்தை நோக்கி, நம்மேல்—நம்மீது, பழி படு வெம்போர் ஆற்றி—பழியைத் தம்பால் வருவிக்கின்ற வெய்ய போரைத் தொடுத்து, பட்ட நும் கிளையை எல்லாம்—இறந்துபட்ட உங்கள் சுற்றத்தையெல்லாம், எழுப்புதி என்னலோடும்—எழுப்புதி என்று பணித்தருளுதலும், இனிது என இறைஞ்சி—தேவரீரது அருள் மிக இனிது என்று வணங்கி, சொல்வாள்—எழுதிர் என்று கூறி எழுப்புவா ராயினர்.

வேட்டுவரை உளப்படுத்தி நும் என்றார். (188)

விழுமிய வுயிர்கள் சிந்தி வீழ்ந்தநங் கேளிர் யாரு
மெழுதிரென் றருள லோடு மிருநிலத் துறங்கு கின்றோர்
பழையநல் லுணர்வு தோன்றப் பதைபதைத் தெழுதற் கொப்பக்
குழுவுறு தமர்க ளோடுங் குறவர்கோ னெழுந்தா னன்றே.

விழுமிய உயிர்கள் சிந்தி—சிறந்த உயிர்களை இழந்து, வீழ்ந்த—இறந்து பட்டு வீழ்ந்த, நம் கேளிர் யாரும்—நமரங்காள் நீவிர் எல்லீரும், எழுதிர் என்று அருளலோடும்—எழுமின் என்று கூறியருளுதலும், இரு நிலத்து உறங்கு கின்றோர்—பெரிய பூமியில் உறங்குகின்றவர்கள், பழைய நல் உணர்வு தோன்ற—உறங்குதற்கு முன்னிருந்த பழைய நல்ல உணர்ச்சி உண்டாக, பதைபதைத்து எழுதற்கு ஒப்ப—துடிதுடித்தெழுதலை நிகர்ப்ப, குறவர்கோன்—வேட்டுவ அரசனை நம்பி, குழுவுறு தமர்களோடும்—குழூஉக்கொண்ட சுற்றத் தவர்களோடும், எழுந்தான்—எழுதலைச் செய்தான்.

எழுதற்கு, உருபு மயக்கம். எழுதலை ஒப்ப எழுந்தானென்க. (189)

எழுந்திடு கின்ற காலை யெம்பிரான் கருணை வெள்ளம்
பொழிந்திடு வதன மாறும் புயங்கள்பன் னிரண்டும் வேலு
மொழிந்திடு படையு மாகி யுருவினை யவர்க்குக் காட்ட
விழுந்தனர் பணிந்து போற்றி விம்மித ராகிச் சொல்வார்.

எழுந்திடுகின்ற காலை—அவர்கள் உயிர்பெற்றெழுகின்ற சமயத்திலே, எம்பிரான்—எம்பெருமானாகிய சுப்பிரமணியப் பெருமான், கருணை வெள்ளம் பொழிந்திடும் வதனம் ஆறும்—கருணையாகிய வெள்ளத்தைப் பொழிகின்ற ஆறு திருமுகங்களும், புயங்கள் பன்னிரண்டும்—பன்னிரண்டு திருப்புயங்களும், வேலும்—வேற்படையும், ஒழிந்திடு படையுமாகி—ஏனைய படைக்கலங்களும் உடையவராய், உருவினை—தமது திருவுருவத்தை, அவர்க்குக் காட்ட—அந்த வஞ்சனையற்ற வேட்டுவர்களுக்குக் காட்டியருள, விழுந்தனர்—அவர்களெல்லாம் அடியற்ற மரம்போல விழுந்து, பணிந்து போற்றி—வணங்கித் துதித்து, விம்மிதராகி—எமது குலதெய்வத்தின் செயல் இஃதோ என்று ஆச்சரியம் உடையவராய், சொல்வார்—பின்வருமாறு சொல்லுவாராயினர். (190)

அடுந்திற லெயினர் சேரி யளித்திடு நீயே யெங்கண்
மடந்தையைக் கரவில் வௌவி வரம்பினை யழித்துத் தீரா
நெடுந்தனிப் பழிய தொன்று நிறுவினை புதல்வர் கொள்ள
விடந்தனை யன்னை யூட்டின் விலக்கிடு கின்றா ருண்டோ.

அடும் திறல் எயினர் சேரி அளித்திடு நீயே—அடுகின்ற வலிபடைத்த வேட்டுவர்களின் சிற்றூரைப் பாதுகாத்தற்குரிய தேவரீரே, எம் கண் மடந்தையை—எமது கண்மணியாகிய புதல்வியை, கரவில் வௌவி—களவிற் கவர்ந்து, வரம்பினை அழித்து—தொன்றுதொட்ட நமது குலாசார வரம்பை அழிவுசெய்து, தீரா நெடும் தனிப் பழி ஒன்று நிறுவினை—என்றுந் தீராத நீண்ட ஒப்பற்ற வசையொன்றினை நிலைநிறுத்தியருளினீர்; புதல்வர் கொள்ள—புதல்வர்கள் உட்கொள்ளும்படி, விடம் தனை அன்னை ஊட்டின்—விடத்தைத் தாயானவள் ஊட்டுவாளேயாயின், விலக்கிடுகின்றார் உண்டோ—அதனை விலக்குவார் யார்.

தமது நிலைக்கேற்பக் குற்றங் கூறினாராயினும், 'தாய் விடமூட்டமாட்டாள்; ஊட்டுவாளாயின் பிள்ளைகளின் தீராநோய் தீர்க்கும் மருந்தாயே யிருக்கும்' என்ற குறிப்புந் தோன்றுமாறு காண்க. (191)

ஆங்கது நிற்க வெங்க ளரிவையை நசையால் வௌவி
நாங்களு முணரா வண்ண நம்பெருங் காவ னீங்கி
யீங்கிவட் கொணர்ந்தா யெந்தா யின்னினிச் சீறூர்க் கேகித்
தீங்கனல் சான்றா வேட்டுச் செல்லுதி நின்னூர்க் கென்றார்.

ஆங்கது நிற்க—அது நிற்க; எந்தாய்—எமது பிதாவே, எங்கள் அரிவையை—எங்கள் புதல்வியை, நசையால் வௌவி—காதல் மிகுதியாற் கவர்ந்து, நாங்களும் உணராவண்ணம்—களவியலைக் காண வல்ல நாங்களும் அறியாத பிரகாரம், நம் பெரும் காவல் நீங்கி—நமது பெரிய காவல்களைக் கடந்து, ஈங்கு இவள் கொணர்ந்தாய்—இவ்விடத்துக்கு இவ் வள்ளிநாயகியைக் கொண்டு வந்துவிட்டீர்; இன்னினி—நடந்தது போக இனி, சீறூர்க்கு ஏகி—நமது

சிற்றூருக்கு மீண்டு வந்து, தீம் கனல் சான்று வேட்டு—நல்ல அக்கினி சான்றாகத் திருமணஞ் செய்து, நின் ஊர்க்குச் செல்லுதி என்றார்—நும்பதிக்குச் செல்லுதிர் என்று பிரார்த்தித்தார்கள்.

நிகழ்ந்த நிகழ்ச்சி சிந்தனைக்கெட்டாததாதலின் அது நிற்க என்றார்கள். (192)

மாதுலன் முதலோர் சொற்ற மணமொழிக் கிசைவு கொண்டு
மேதகு கருணை செய்து மெல்லிய றனையுங் கொண்டு
கோதிலா முனிவ னோடுங் குளிர்மலர்க் காவு நீங்கிப்
பாதபங் கயங்க ணோவப் பருப்பதச் சீறூர் புக்கான்.

மாதுலன் முதலோர் சொற்ற மண மொழிக்கு இசைவு கொண்டு—மாமனாகிய நம்பி முதலியவர்கள் கேட்டுக்கொண்ட திருமண வார்த்தைக்குத் திருவுளமிசைந்து, மேதகு கருணை செய்து—அவர்களுக்கு மேன்மை பொருந்திய திருவருள் பாலித்து, மெல்லியல் தனையும் கொண்டு—மெல்லியலாகிய வள்ளி நாயகியாரையும் இசைவு செய்து, கோது இலா முனிவனோடும்—குற்றஞ் சிறிது மற்ற நாரத முனிவராகிய பாங்கரோடும், குளிர் மலர்க் காவு நீங்கி—குளிர்ச்சி பொருந்திய மலர்ச்சோலையை விட்டு நீங்கி, பாத பங்கயங்கள் நோவ—பாத தாமரைகள் வருந்துமேயென்று அன்பர்கள் வருந்த, பருப்பதச் சீறூர் புக்கான்—வள்ளிமலையில் உள்ள சிற்றூர்க்குச் சென்றருளினார்.

*'சாடுந் தனிவேல் முருகன் சரணம்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ
வீடுஞ் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே.'

என்று பாத பங்கயங்களினருமையைக் கந்தரநுபூதி ஓதுகின்றது. (193)

தந்தையுஞ் சுற்றத் தோருஞ் சண்முகன் பாங்க ரேகிச்
சிந்தையின் மகிழ்ச்சி யோடு சிறுகுடி யோரை நோக்கிக்
கந்தனே நமது மாதைக் கவர்ந்தன னமது சொல்லால்
வந்தனன் மணமுஞ் செய்ய மற்றிது நிகழ்ச்சி யென்றார்.

தந்தையும் சுற்றத்தோரும்—தந்தையாகிய நம்பியும் உறவினர்களும், சண்முகன் பாங்கர் ஏகி—சண்முகப்பெருமானுக்கு அயலில் உடன் சென்று, சிந்தையின் மகிழ்ச்சியோடு—மனத்திற் பொங்குகின்ற இனிய மகிழ்ச்சியோடு, சிறு குடியோரை நோக்கி—துயருற்றிருந்த சிற்றூரிலுள்ளோரைப் பார்த்து, கந்தனே—நமது குலதெய்வமாகிய கந்தசுவாமியே, நமது மாதைக் கவர்ந்தனன்—நம் புதல்வியைக் களவியன் முறையில் ஆட்கொண்டருளினார்; நமது சொல்லால் மணமும் செய்ய வந்தனன்—அவ்வாறாட்கொண்டருளி எமது

* கந்தரநுபூதி —44

வேண்டுதலாலே திருமணச்சடங்கு நிகழ்த்தவும் உடன்பட்டு ஈண்டு மீண்டெழுந்தருளினர்; இது நிகழ்ச்சி என்றார்—இதுவே இங்கு நிகழ்ந்த நிகழ்ச்சியென்று மனமகிழ்ச்சி தெரிவித்தார்கள்.

துயருற்றாரைச் சாந்தி செய்து மகிழ்வித்தார்களென்க. (194)

சங்கரன் மதலை தானே தையலைக் கவர்ந்தா னென்று
மங்கல வதுவை செய்ய வந்தன னிங்ங னென்றுந்
தங்கள்சுற் றத்தோர் கூறச் சிறுகுடி தன்னி லுற்றோர்
பொங்குவெஞ் சினமு நாணு மகிழ்ச்சியும் பொடிப்ப நின்றார்.

சங்கரன் மதலை தானே—சுகஞ் செய்பவராகிய சிவகுமாரர்தாமே, தையலைக் கவர்ந்தான் என்றும்—வள்ளிநாயகியாரைக் களவிற் கவர்ந்தருளினர் என்றும், மங்கல வதுவை செய்ய இங்ஙன் வந்தனன் என்றும்—சுபசோபனமாகிய திருமணஞ் செய்ய ஈண்டெழுந்தருளினரென்றும், தங்கள் சுற்றத்தோர் கூற—தங்கள் சுற்றத்தினர்கள் நிகழ்ச்சியை எடுத்துச் சொல்ல, சிறு குடி தன்னில் உற்றோர்—அச் சிற்றூரில் வசிக்கும் வேடர்கள், பொங்கு வெம் சினமும்—கிளர்ந்தெழுகின்ற வெய்ய கோபமும், நாணும்—அதனைத் தலைமடங்கச்செய்கின்ற நாணமும், மகிழ்ச்சியும்—திருமண உவகையும், பொடிப்ப—முறையே ஒன்றையொன்று பொடிசெய்ய, நின்றார்—விம்மிதராய் வரவேற்று நின்றார்கள்.

சினம் எழுந்து நாணத்தாற்றலைமடங்கி உவகையாய் மலர்ந்ததென்க. எம்பெருமானாகிய சங்கரரின் பிள்ளையையுமா சினந்தோமென்று நாணிப் பின் மகிழ்ந்தார்கள் என்றவாறு. (195)

குன்றவர் தமது செம்மல் குறிச்சியிற் றலைமைத் தான
தன்றிரு மனையி னூடே சரவண முதல்வன் றன்னை
மன்றலங் குழலி யோடு மரபுளி யுய்த்து வேங்கைப்
பொன்றிக ழதளின் மீது பொலிவுற விருத்தி னானே.

குன்றவர் தமது செம்மல்—வேட்டுவரின் அரசனான நம்பி, குறிச்சியில் தலைமைத்தான தன் திருமனையின் ஊடு—அச் சிற்றூரின்கண்ணே தலைமை படைத்ததான தனது திருமனையில், சரவண முதல்வன் தன்னை—சரவணபவராகிய முதன்மைபொருந்திய மணமகனை, மன்றல் அம் குழலியோடு—இயற்கை மணங் கமழுகின்ற அழகிய கூந்தலினையுடைய வள்ளிநாயகியாரான மணமகளோடு, மரபுளி உய்த்து—தமது குலாசாரப்படி எழுந்தருளுமாறு செய்து, பொன் திகழ் வேங்கை அதளின்மீது—அழகு விளங்குகின்ற புலித்தோலாசனத்தின்மீது, பொலிவு உற—அந்த ஆசனமும் மண்டபமும் ஆங்குள்ளாரின் அகமும் புறமும் பொலிவு பொருந்தும்படி, இருத்தினன்—வீற்றிருந்தருளுமாறு செய்தான்.

அவன் தவம் இருந்தவாறு! (196)

அன்னதோர் வேலை தன்னி லறுமுக முடைய வள்ள
றன்னுழை யிருந்த நங்கை தனையரு ளோடு நோக்கக்
கொன்னவில் குறவர் மாதர் குயிற்றிய கோல நீங்கி
முன்னுறு தெய்வக் கோல முழுதொருங் குற்ற தன்றே.

அன்னது வேலை தன்னில்—அச்சமயத்தில், அறுமுகம் உடைய வள்ளல்—ஆறு திருமுகங்களையுடைய அருள் வள்ளலாகிய சுப்பிரமணியப் பெருமான், தன் உழை இருந்த—தமது பக்கத்திலிருந்த, நங்கை தனை அருளோடு நோக்க—வள்ளிநாயகியாரைத் திருவருணோக்கஞ் செய்ய, கொன் நவில் குறவர் மாதர் குயிற்றிய கோலம் நீங்கி—புனைதலிற் பெருமை பேசுகின்ற குறப்பெண்டிர்கள் புனைந்த திருமணக்கோலம் மறைய, முன் உறு தெய்வக் கோலம்—முன்னமே உள்ள தெய்வத் திருக்கோலம், முழுது ஒருங்கு உற்றது—முழுவதும் ஒருங்கு வெளிப்பட்டது.

ஓர், அசை. நீங்கி, செயவின்றிரிபு.

'ஆடில விமைகள் நீழல் அளித்திலது உருவ மாலை
வாடில குழலின் வண்டு மருவில நுதலின் வேர்வை
கூடில மாசு தூசு கொண்டில மாத ராட்கே'

என்ற தணிகைப்புராணச் செய்யுளால், வள்ளலின் திருவருணோக்கால் வள்ளி நாயகியார்க்கெய்திய தெய்வத் திருக்கோலங் காண்க. *(197)*

கவலைதீர் தந்தை தானுங் கணிப்பிலாச் சுற்றத் தாருஞ்
செவிலியு மன்னை தானு மிகுளையுந் தெரிவை மாருந்
தவலருங் கற்பின் மிக்க தம்மகள் கோல நோக்கி
யிவளெம திடத்தில் வந்த தெம்பெருந் தவமே யென்றார்.

கவலைதீர் தந்தை தானும்—புதல்வியானெய்திய கவலை முழுதுந் தீர்ந்த தந்தையாகிய நம்பியரசனும், கணிப்பு இலாச் சுற்றத்தாரும்—எண்ணிறந்த சுற்றத்தவர்களும், செவிலியும்—வளர்த்த தாயும், அன்னையும்—நற்றாயாகிய கொடிச்சியும், இகுளையும்—அருட்டோழியும், தெரிவைமாரும்—ஏனைய குற மகளிரும், தவல் அரும் கற்பின் மிக்க—தூய கற்பால் மேம்பட்ட, தம் மகள் கோலம் நோக்கி—தம் புதல்வியின் தெய்வத் திருக்கோலத்தைக் கண்களாற் பருகி, இவள்—இந்த ஆரணங்கு, எமது இடத்தில்—சிறியேங்களது சிற்றூரில், வந்தது—வள்ளிநாய்கி என்று பெயர்தரித்து வளர்ந்து வந்தது, எம் பெரும் தவமே என்றார்—எம் முன்னோரும் யாமுஞ் செய்த பெருந் தவத்தின் பயனேயாம் என்று விம்மிதம் உற்றார்கள். *(198)*

அந்தநல் வேலை தன்னி லன்புடைக் குறவர் கோமான்
கந்தவேள் பாணி தன்னிற் கன்னிகை கரத்தை நல்கி
நந்தவ மாகி வந்த நங்கையை நயப்பா லின்று
தந்தனன் கொள்க வென்று தண்புனற் றாரை யுய்த்தான்.

அந்த நல்வேலை தன்னில்—அந்த நல்ல சுபமுகூர்த்தத்தில், அன்புடைக் குறவர் கோமான்—அன்பினையுடைய வேட்டுவ அரசனாகிய நம்பி என்பான், கந்தவேள் பாணி தன்னில்—சுப்பிரமணியப்பெருமானது திருக்கையில், கன்னிகை கரத்தை நல்கி—கன்னிகையாகிய வள்ளிநாயகியாரின் திருக்கையை வைத்து, நம் தவம் ஆகி வந்த நங்கையை—நமது தவப்பயனாய் நம்பால் வளர்ந்த நம் புதல்வியை, நயப்பால்—விருப்பத்தோடு, இன்று தந்தனன்—இப்பொழுது தேவரீருக்குத் தத்தஞ் செய்தேன்; கொள்க என்று—ஏற்றருள்க என்று பிரார்த்தித்து, தண்புனல் தாரை உய்த்தான்—தண்ணிய நீர்கொண்டு தாரை வார்த்தலாகிய கன்னிகாதானத்தைச் செய்தான்.

மகட்பெறத் தவஞ்செய்தானாதலின் சுப்பிரமணிய சுவாமிக்குக் கன்னிகா தானஞ் செய்யும் பேறு பெற்றான் நம்பியரசன். *(199)*

நற்றவ மியற்றுந் தொல்சீர் நாரத னனைய காலைக்
கொற்றமு துடைய வேலோன் குறிப்பினா லங்கி யோடு
மற்றுள கலனுந் தந்து வதுவையின் சடங்கு நாடி
யற்றம தடையா வண்ண மருமறை விதியாற் செய்தான்.

அனைய காலை—கன்னிகாதானம் நடந்த அந்தச் சமயத்தில், நல் தவம் இயற்றும் தொல் சீர் நாரதன்—நல்ல தவத்தைச் செய்கின்ற தொன்மையாகிய சிறப்புப் பொருந்திய நாரதமுனிவர், கொற்றம் உடைய வேலோன் குறிப்பினால்—வெற்றிபடைத்த வேற்படையையுடைய சுப்பிரமணியப்பெருமானது திருக்குறிப்பினால், அங்கியோடு—ஓமாக்கினியோடு, மற்றுள கலனும் தந்து—அக்கினிகாரியத்துக்கு வேண்டுவனவாகிய உபகரணத் திரவியங்களையுங் கொணர்ந்து, வதுவையின் சடங்கு நாடி—திருமணச் சடங்கைச் சிந்தித்து, அற்றம் அடையாவண்ணம்—தோஷம் வாராத பிரகாரம், அருமறை விதியாற் செய்தான்—அருமையாகிய வேதவிதிப்படி செய்தார். *(200)*

ஆவதோர் காலை தன்னி லரியுநான் முகனும் வானோர்
கோவொடு பிறருஞ் சூழக் குலவரை மடந்தை யோடுந்
தேவர்க டேவன் வந்து சேண்மிசை நின்று செவ்வேள்
பாவையை வதுவை செய்யும் பரிசினை முழுதுங் கண்டான்.

ஆவது காலை தன்னில்—அவ்வாறு திருமணம் நிகழுஞ் சமயத்தில், அரியும்—விஷ்ணுவும், நான்முகனும்—பிரமாவும், வானோர் கோவொடு—தேவேந்திரனோடு, பிறரும் சூழ—தேவர்கள் முதலிய பிறருஞ் சேவிக்க, தேவர்கள் தேவன்—மகாதேவராகிய சிவபெருமான், குலவரை மடந்தையோடு வந்து—இமயமலையரசன் புதல்வியாகிய உமாதேவியாரோடும் எழுந்தருளி, சேண் மிசை நின்று—ஆகாயத்தின்கண்ணே பிரசன்னமாய், செவ்வேள்—செவ்வேளாகிய சுப்பிரமணியப்பெருமான், பாவையை—குறவர் பாவையாகிய வள்ளி நாயகியாரை, வதுவை செய்யும்—திருமணஞ் செய்கின்ற, பரிசினை முழுதும் கண்டான்—திருக்கல்யாண வைபவம் முழுவதனையுந் திருநோக்கஞ் செய்தருளினர். *(201)*

கண்ணுத லொருவன் ருனுங் கவுரியுங் கண்ணுற் கண்டு
தண்ணளி புரிந்து நிற்பத் தண்டுழாய் முடியோ னுதிப்
பண்ணவ ருவகை நீடிப் பனிமலர் மாரி வீசி
யண்ணலை வழிபட் டேத்தி யஞ்சலி புரிந்திட் டார்த்தார்.

கண்ணுதல் ஒருவன் தானும்–ஒருவன் என்னும் ஒருவனுகிய கண்ணுதற் பெருமானும், கவுரியும்–பொன் வண்ணத்தராகிய உமாதேவியாரும், கண்ணுல் கண்டு–திருக்கண்களினுலே திருமண வைபவத்தைத் திருநோக்கஞ் செய்து, தண்ணளி புரிந்து நிற்ப–தண்ணளியைப் பெருக்கி நின்றருள, தண் துழாய் முடியோன் ஆதிப் பண்ணவர்–அதனைக் கண்ட தண்ணிய துழாய்முடியை யுடைய திருமால் முதலிய தேவர்கள், உவகை நீடி–உவகை கைம்மிக்கு, பனி மலர் மாரி வீசி–குளிர்ந்த மலர்மழையைப் பொழிந்து, அண்ணலை–பெருமையிற் சிறந்த வள்ளிநாயகராகிய திருமுருகப் பெருமானை, வழிபட்டு–வழிபாடு செய்து, ஏத்தி–துதித்து, அஞ்சலி புரிந்திட்டு–கை கூப்பிக் கும்பிட்டு, ஆர்த்தார்–ஆனந்தமிகுதியால் ஆரவாரஞ் செய்தார்கள். (202)

அறுமுக முடைய வள்ள லன்னது நோக்கிச் சீறூ
ரிறையது முணரா வண்ண மிமையமே லணங்கி னேடுங்
கறையமர் கண்டன் றன்னைக் கைதொழு தேனை யோர்க்கு
முறைமுறை யுவகை யோடு முழுதருள் புரிந்தா னன்றே.

அறு முகம் உடைய வள்ளல்–ஆறு திருமுகங்களையுடைய அருள் வள்ள லாகிய சுப்பிரமணியப் பெருமான், அன்னது நோக்கி–பிதாமாதா எழுந் தருளியதும் ஏனையோர் புஷ்ப மழை பொழிந்ததுமாகிய அந் நிகழ்ச்சியைக் கண்டு, சீறூர் இறையும் உணராவண்ணம்–அச் சிற்றூரிலுள்ளார் அந் நிகழ்ச்சி யையுந் தமது செயலையுஞ் சிறிதும் உணராத பிரகாரம், இமையமேல் அணங்கினேடும் கறை அமர் கண்டன் தன்னை கை தொழுது–இமய மலையில் உதித்தருளிய உமாதேவியாரையுங் காள கண்டராகிய சிவபெரு மானையுங் கைகூப்பி வணங்கி, ஏனையோர்க்கு–தம்மை வழிபட்டு நின்ற மற்றையோருக்கு, முறை முறை–அவரவர் தாரதம்மிய முறையானே, உவகையோடு முழுது அருள் புரிந்தான்–மகிழ்ச்சியோடு பூரண கிருபை செய்தருளினுர்.

உணரலாகாமையின் உணராராயினுர். (203)

வேறு

அங்க வேலையி னலரின் மேலவன்
செங்கண் மாயவன் றேவர் கோமகன்
சங்கை தீர்தருந் தவத்தர் தம்மொடு
மங்கை பாதியன் மறைந்து போயினுன்.

அங்கு—அவ்விடத்தில், அ வேலையில்—சுப்பிரமணியப்பெருமான் தம்மை வழிபட்டுக்கொண்டு ஏனையோருக்கு அருள்புரிந்த அந்தச் சமயத்தில், அலரின் மேலவன்—தாமரையாசனரான பிரமதேவரும், செங்கண் மாயவன்—சிவந்த கண்களையுடைய திருமாலும், தேவர் கோமகன்—தேவர்களுந் தேவேந்திரனும், சங்கை தீர்தரும் தவத்தர் தம்மொடும்—எண்ணில்லாத தவத்தினையுடைய முனிவர்களும் ஆகிய தம்மைச் சேவித்து வந்த அனைவர்களோடும், மங்கை பாதியன் மறைந்து போயினன்—உமாதேவி பாகராகிய சிவபெருமான் மறைந்தருளினார்.

சங்கை, ஆசங்கையுமாம். (204)

போன வெல்லையிற் பொருவி னாரதன்
றானி யற்றிய சடங்கு முற்றலுங்
கான வேடுவர் கன்னி தன்னொடு
மான வேலனை வணங்கிப் போற்றினான்.

போன எல்லையில்—உலகமாதாவும் பரம பிதாவுந் திருமால் முதலியவர்களோடும் மறைந்தருளிய சமயத்தில், பொருவில் நாரதன்—முனிவர்களுட் சிறந்தோராகிய நாரத மகா முனிவர், தான் இயற்றிய சடங்கு முற்றலும்—தாம் நடாத்திய திருமணச் சடங்கு நிறைவேறியதும், கான வேடுவர் கன்னி தன்னொடு—கானக் குறக் கன்னிகையாகிய வள்ளிநாயகியாரையும், மான வேலனை—மானத்தோடு கூடிய வேற்படையைத் தாங்கிய சுப்பிரமணியப்பெருமானையும், வணங்கிப் போற்றினான்—வணங்கித் துதித்தார். (205)

### வேறு

மற்றது காலை தன்னின் மாதுலன் வள்ளி தன்னைக்
கொற்றவே லுடைய நம்பி வதுவைசெய் கோல நோக்கி
யுற்றவிவ் விழிக டம்மா லுறுபய னொருங்கே யின்று
பெற்றன னென்றா னன்னா னுவகையார் பேசற் பாலார்.

அது காலை தன்னில்—அப்பொழுது, மாதுலன்—மாமனாகிய நம்பியரசன், வள்ளி தன்னை—வள்ளிநாயகியாரை, கொற்ற வேல் உடைய நம்பி—வெற்றி பொருந்திய வேற்படையையுடைய சுப்பிரமணியப் பெருமான், வதுவை செய் கோலம் நோக்கி—மணஞ்செய்தருளிய திருமணக்கோலத்தைத் தரிசித்து, உற்ற இவிழிகள் தம்மால்—இந்தத் தேகத்திற் பொருந்திய இக் கண்களினால், உறு பயன்—பெறக்கடவ பயன்களை, இன்று ஒருங்கு பெற்றனன்—இத்தினம் ஒருசேரப் பெற்றேன்; என்றான்—என்று உவகை மிக்கான்; அன்னான் உவகை யார் பேசற்பாலார்—அவனை விழுங்கி மேலெழுந்த உவகையை இத்தகையது என்று யாவர்தாம் வருணிக்க வல்லவர். (206)

மெல்லிடை கொம்பென் றுன்ன விரைமலர் தழைமேற் கொண்ட
புல்லிய குறவர் மாதர் பொருவில்சீர் மருகன் றானும்
வல்லியு மின்னே போல வைகலும் வாழ்க வென்று
சொல்லிய லாசி கூறித் தூமல ரறுகு தூர்த்தார்.

மெல் இடை கொம்பு என்று உன்ன—மென்மையாகிய இடையைப் பூங் கொம்பேதான் என்று நினைக்கும்படி, விரை மலர் தழை மேற் கொண்ட—வாசனைபொருந்திய மலர்களையுந் தழைகளையுந் தம்மீது தரித்த, புல்லிய குறவர் மாதர்—ஒருவரோடொருவர் நெருங்கிச் செறிதலைப் பொருந்திய குற மகளிர்கள், பொருவில் சீர் மருகன் தானும்—ஒப்பற்ற சிறப்பினையுடைய தம் மருகரும், வல்லியும்—மகளும், இன்னே போல—இப்பொழுது போலவே, வைகலும் வாழ்க என்று—எப்பொழுதும் ஒருமை எய்தி இனிது வாழ்வார்க ளாக என்று, சொல் இயல் ஆசி கூறி—மங்கல மொழிகளானியன்ற ஆசி வசனங்களைச் சொல்லி, தூ மலர் அறுகு தூர்த்தார்—தூய மலர்களையும் அறுகையும் அவற்றோடு கூடிய அரிசியையும் மணமக்கள்மீது சொரிந்து சுற் றிடங்களை நிறைவு செய்தார்கள்.

அறுகு என்றதனால் அரிசியுங் கொள்க. (207)

செந்தினை யிடியுந் தேனுந் தீம்பல கனியுங் காயுங்
கந்தமும் பிறவு மாக விலைபொலி கலத்தி லிட்டுப்
பைந்தொடி யணங்கு நீயும் பரிவுட னுகர்தி ரென்ன
வெந்திற லெயினர் கூற வியனருள் புரிந்தான் மேலோன்.

செந்தினை இடியும்—செந்தினைமாவையும், தேனும்—தேனையும், தீம் பல கனியும்—இனிய பலவாகிய கனிகளையும், காயும்—காய்வகைகளையும், கந்த மும்—வள்ளி முதலிய கிழங்கு வகைகளையும், பிறவும்—பிற பதார்த்தங்களையும், ஆக—ஆறு வேறாக, இலை பொலி கலத்தில் இட்டு—இலைகளினாலான விசால மான பாத்திரத்திலே தனித்தனி படைத்து, நீயும் பைந்தொடி அணங்கும்—தேவரீரும் பசிய வளையலையணிந்த தெய்வப் பெண்ணான வள்ளிநாயகியும் ஆகிய இருவீரும், பரிவுடன்—இருமையை ஒருமை செய்வதாகிய அன்பை அளாவி, நுகர்திர் என்ன—திருவமுது செய்ம்மின் என்று, வெம் திறல் எயினர் கூற—விரும்பத்தக்க திறல்படைத்த வேட்டுவர் பிரார்த்திக்க, மேலோன்—மேலோராகிய சுப்பிரமணியப் பெருமான், வியன் அருள் புரிந்தான்—அதற்கு உடம்பாடு காட்டுவாராய் அவர்களுக்குப் பெருமையாகிய திருவருள்பாலித் தருளினர்.

* 'மாவொடு வாழை வருக்கைகொள் பைங்காய்
தீவிய கன்னல் செறிந்திடு செந்தேன்
ஆவருள் பாலிவை அண்டர்கள் செம்மல்
மூவிரு மாமுக னேநுகர் வித்தான்'

எனத் தெய்வயானை திருமணத்திலும் அறுமுகப் பெருமானுக்கு அறுவகை நிவேதனம் நிவேதித்தமை காண்க. (208)

*கந்தபு: தெய்வயானையம்மை திருமணப் படலம் — 248.

### வேறு

கிராதர் மங்கையும் பராபரன் மதலையுங் கெழுமி
விராவு சில்லுண மிசைந்தனர் மிசைந்திடு தன்மை
முராரி யாதியாந் தேவர்பான் முனிவர்பான் மற்றைச்
சராச ரங்கள்பா லெங்கணுஞ் சார்ந்துள தன்றே.

கிராதர் மங்கையும்—அருட்சத்தியாகிய குறப்பெண்ணும், பராபரன் மதலையும்—பரம்பொருளாகிய சிவகுமாரரும், கெழுமி—ஒருமையெய்தி, விராவு சில் உண மிசைந்தனர்—நிவேதித்த சிலவாகிய நிவேதனங்களைத் திருவமுது செய்தருளினர்கள்; மிசைந்திடு தன்மை—திருவமுது செய்ததனலாம் பயன், முராரி ஆதியாம் தேவர்பால்—திருமால் முதலிய தேவர்களிலும், முனிவர் பால்—முனிவர்களிலும், மற்றைச் சராசரங்கள்பால்—ஏனைச் சராசரங்களிலும், எங்கணும் சார்ந்துளது—எவ்விடங்களிலுஞ் செறிந்தது.

எல்லா உலகமுமாய அந்தர்யாமியை நுகர்விக்க, அகில உலகமும் பூரித்த தென்க. இவ்வாற்ருற் சுப்பிரமணியபரத்துவம் இருந்தவாறு காண்க. இது மங்கைக்கும் பொருந்தும். தன்மை, ஈண்டு மிசைந்ததனலாம் பயன் குறித்து நின்றது. (209)

அனைய காலையி லறுமுக னெழுந்துநின் ருங்கே
குனியும் வில்லுடைக் குறவர்தங் குரிசிலை நோக்கி
வனிதை தன்னுடன் சென்றியாஞ் செருத்தணி வரையி
லினிது வைகுது மென்றலு நன்றென விசைத்தான்.

அனைய காலையில்—அவ்வாருகிய சமயத்தில், ஆங்கு—அம் மணமண்டபத்தில், அறுமுகன் எழுந்து நின்று—ஆறு திருமுகங்களையுடைய சுப்பிரமணியப் பெருமான் எழுந்து நின்று, குனியும் வில்லுடைக் குறவர்தம் குரிசிலை நோக்கி—வளைந்திருக்கும் வில்லினையுடைய குறவர்கள் மன்னனை நம்பியைத் திருநோக்கஞ் செய்து, யாம் வனிதை தன்னுடன் சென்று—யாம் மணமகளாகிய வள்ளிநாயகியோடு இவ்விடத்தைவிட்டு நீங்கி, செருத்தணி வரையில் இனிது வைகுதும்—செருத்தணிகையாகிய திருத்தணிகை மலையில் இனிது வீற்றிருப்போம்; என்றலும்—என்று கூறியருளுதலும், நன்று என இசைத்தான்—நன்று என்று கூறித் தனது உடம்பாட்டை அவன் தெரிவித்தான். (210)

தாயும் பாங்கியுஞ் செவிலியுந் தையலை நோக்கி
நாய கன்பின்னர் நடத்தியோ நன்றெனப் புல்லி
நேய மோடுபல் லாசிகள் புகன்றிட நெடுவேற்
சேயு டன்கடி தேகவே சிந்தையுட் கொண்டாள்.

தாயும்—தாயாகிய கொடிச்சியும், பாங்கியும்—தோழியும், செவிலியும்—வளர்த்த தாயும், தையலை நோக்கி—வள்ளிநாயகியாரைப் பரிந்து நோக்கி, நாயகன் பின்னர் நடத்தியோ—இனி நீ உன் ஆன்மநாயகரைப் பின்ளுெடர்ந்து நடத்தலைச் செய்வாயோ; நன்று—நல்லது அப்படிச் செய்; எனப் புல்லி—என்று கூறித் தழுவி, நேயமோடு பல் ஆசிகள் புகன்றிட—ஆராமையோடு பலவாகிய ஆசிமொழிகளைப் புகலாநிற்ப, நெடு வேல் சேயுடன் கடிது ஏகவே—நெடிய வேற்படையையுடைய முருகப்பெருமானோடு விரைந்து உடன் செல்லுவதற்கே, சிந்தையுட் கொண்டாள்—வள்ளிநாயகியார் மன ஒருப்பாடுற்றருளினர்.

கற்புடை மகட்குக் கணவனைத் தொடர்ந்து சேறலே அறமாம் என்று ஆசிகள் வழங்கினராயினும், அவர்கள் கூற்றிலுஞ் செயலிலும் பற்றுகிய தளையொன்றெழுவது குறிப்பாற்றோன்றலின், அத்தளையைப் பொடி செய்து ஏகவே உட்கொண்டாரென்க. ஏகாரம் தேற்றம். நாயகனர் ஒருகணந் தரிப்பினும் நாயகியார் தரியாராயினர். அதிதீவிரபக்குவம் இருந்தவாறு!

§ 'முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணங் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானுள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றுள் அகலிடத்தார் ஆசா ரத்தைத்
தன்னை மறந்தாள் தன்னுமங் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் றுளே.'

என்பது அருமைத் தேவாரம்.

இத்துணைக்காலமுந் தம்முடன் பயின்றுரைப் பிரியுங்கால் அகலிடத்தார் செய்யுமாசாரத்தை இந்த வள்ளிநாயகியாராகிய நங்கையார் ஒரு சிறிதும் நினையாதே தலைவன்றுளைத் தலைப்பட்டார் என்க. *(211)*

பாவை தன்னுடன் பன்னிரு புயமுடைப் பகவன்
கோவி னீங்கியே குறவர்தங் குரிசிலை விளித்துத்
தேவ ருந்தொழச் சிறுகுடி யரசியல் செலுத்தி
மேவு கென்றவ ணிறுவியே போயினன் விரைவில்.

பன்னிரு புயமுடைப் பகவன்—பன்னிரண்டு திருப்புயங்களையுடைய பகவராகிய சுப்பிரமணியப்பெருமான், பாவை தன்னுடன்—பாவை போல்வாராகிய வள்ளிநாயகியாரோடு, கோவில் நீங்கி—நம்பியரசனின் இல்லத்தை விட்டு நீங்கி, குறவர்தங் குரிசிலை விளித்து—வேட்டுவர்க் கரசனுகிய நம்பியை அழைத்து, தேவரும் தொழ—தேவர்களும் வணங்கும்படி, சிறுகுடி அரசியல் செலுத்தி—இந்தச் சிற்றூரின்கண்ணே அரசுபுரிந்து, மேவுக என்று—வாழுக என்று, அவண் நிறுவி—அங்கே அவனை நிறுத்தி, விரைவில் போயினன்—விரைந்து சென்றருளினர். *(212)*

§ திருநாவுக்கரசர் தேவாரம்: திருமுறை — 6.

இன்ன தன்மைசேர் வள்ளியஞ் சிலம்பினை யிகந்து
பன்னி ரண்டுமொய்ம் புடையவன் பாவையுந் தானு
மின்னும் வெஞ்சுடர்ப் பரிதியும் போலவிண் படர்ந்து
தன்னை யேநிகர் தணிகைமால் வரையினைச் சார்ந்தான்.

பன்னிரண்டு மொய்ம்பு உடையவன்—பன்னிரண்டு திருப்புயங்களையுடைய சுப்பிரமணியப்பெருமான், இன்ன தன்மை சேர் அம் வள்ளிச் சிலம்பினை இகந்து—இத்தன்மையவாய சிறப்புக்கள் பொருந்திய அழகிய வள்ளிமலையை நீங்கி, பாவையும் தானும்—வள்ளிநாயகியாருந் தாமும், மின்னும் வெம் சுடர்ப் பரிதியும் போல—மின்னற்கொடியும் வெய்ய சுடரினையுடைய சூரியனும் ஒருங்கு செல்லுமாறுபோல, விண் படர்ந்து- ஆகாயவழிச் சென்று, தன்னையே நிகர் மால் தணிகை வரையினைச் சார்ந்தான்—தானே தனக்கு நிகராய பெரிய தணிகைமலையை அடைந்தருளினுர்.

'தானுந் தோழியும் பாகனும் வந்தென் நலனுண்டான்' என்புழிப் போல, பாவையுந் தானும் படர்ந்து சார்ந்தான் எனச் சிறப்பு வினைமுடிபு கொள்க. (213)

செச்சை மௌலியான் செருத்தணி வரைமிசைத் தெய்வத்
தச்சன் முன்னரே யியற்றிய தனிநகர் புகுந்து
பச்சி ளங்கொங்கை வனசரர் பாவையோ டொன்றி
யிச்ச கத்துயிர் யாவையு முய்யவீற் றிருந்தான்.

செச்சை மௌலியான்—வள்ளிநாயகியாரை ஆட்கொண்டதன் சின்னமாக வெட்சி மாலையைத் தரித்தருளிய முடியினையுடைய சுப்பிரமணியப் பெருமான், செருத்தணி வரை மிசை—திருத்தணிகை மலையின்கண்ணே, தெய்வத் தச்சன் முன்னரே இயற்றிய—தெய்வத் தச்சனாகிய விசுவகன்மன் முன்னமே சிருட்டி செய்த, தனி நகர் புகுந்து—ஒப்பற்ற திருக்கோயிலினுள்ளே எழுந்தருளி, பச்சிளங் கொங்கை வனசரர் பாவையோடு ஒன்றி—பசிய இளமையாகிய தனங்களையுடைய குறமாதாகிய வள்ளிநாயகியாரோடு ஒருமையுற்று, இ சகத்து உயிர் யாவையும் உய்ய—இவ்வுலகத்துள்ள உயிர்கள் யாவும் இருமையின் ஒருமை எய்தி அவ்வாற்ருல் உய்தியெய்த, வீற்றிருந்தான்—இச்சையைப் பெருக்கும் போக மூர்த்தியாய் வீற்றிருந் தருளினுர்.

*'வேற்றுப் புலக் களவின் ஆதந் தோம்பல் மேவற்று'

என்பது குறிஞ்சிக்குப் புறமாகிய வெட்சித்திணை. 'ஆதந்தோம்பல்' ஆவைக் கவர்ந்து பாதுகாத்தல். வேற்றுப்புலத்துச் சென்று களவால் இது செய்வோர் வெட்சிப்பூச் சூடுவர்.

ஈண்டு வெட்சியின் அகமாகிய குறிஞ்சிக்கண் ஐம்புல வேடரிடத்துப் பட்ட வள்ளிநாயகியாராகிய ஆவைக் களவிற்றந்து ஓம்புந் திருமுருகப்

* தொல். புறத்திணை: சூத். — 2

பெருமான் வெட்சி சூடிய அதனுனே புறத்துக்கும் அகத்துக்கும் உளதாய ஒற்றுமை காண்க. ஈண்டுப் புறம் சமயப் புறம்போலாகாது ஆதாரமாம். போர் தணிந்துறையுமிடமாதலால் திருத்தணிகை செருத்தணிகை எனவும் படும். அறிவு இச்சை செயல்களில் இச்சையே முதலில் விருத்தி செய்யற்பாலதாம். பாவையோ டொன்ருதவழி அது கூடாமை,

† 'போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரித லோரார்'

என்ற சித்தியாராலும்,

§ 'பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண்'

என்ற திருவாசகத்தாலுந் தெளிக.

உரைக்கண் இருமை, ஆண்மை பெண்மை. (214)

அந்த வேலையில் வள்ளிநா யகியயில் வேற்கைக்
கந்த வேள்பதம் வணங்கியே கைதொழு தைய
விந்த மால்வரை யியற்கையை யியம்புதி யென்னச்
சிந்தை நீடுபே ரருளிஞ லின்னன செப்பும்.

அந்த வேலையில்—உயிர்கள் உய்யும்பொருட்டுப் போகமூர்த்தியாய் எழுந்தருளியிருந்த சமயத்தில், வள்ளிநாயகி—வள்ளிநாயகியார், அயில் வேற்கைக் கந்தவேள் பதம் வணங்கி—கூரிய வேற்படையைத் தரித்த திருக்கரத்தினையுடைய சுப்பிரமணியசுவாமியின் பாதங்களை வணங்கி, கைதொழுது—கை கூப்பித் தொழுது, ஐய—ஆன்மநாயகரே, இந்த மால்வரை இயற்கையை—இந்தப் பெருமைபொருந்திய மலையின் சிறப்பியல்புகளை, இயம்புதி என்ன—கூறியருளுக என்று வேண்ட, சிந்தை நீடு பேரருளினுல்—திருவுள்ளத்தின் கண்ணே உயிர்கள் உய்யும்வண்ணம் முகிழ்த்தெழுந்து பெருகுகின்ற பேரருளினுல், இன்னன செப்பும்—இவற்றைத் திருவாய்மலர்ந்தருளுவார்.

உயிர்கள் உய்யும் முகமாக வேண்ட, அம் முகமாகச் செப்பியருளுவாராயினுரென்க. (215)

செங்கண் வெய்யசூர்ச் செருத்தொழி லினுஞ்சிலை வேடர்
தங்க ளிற்செயுஞ் செருத்தொழி லினுந்தணிந் திட்டே
யிங்கு வந்தியா மிருத்தலாற் செருத்தணி யென்றேர்
மங்க லந்தரு பெயரினைப் பெற்றதிவ் வரையே.

செங்கண் வெய்ய சூர் செருத் தொழிலினும்—சிவந்த கண்களையுடைய கொடிய சூரபன்மனேடு செய்த செருத்தொழிலின்கண்ணும், சிலை வேடர் தங்களிற் செயும் செருத் தொழிலினும்—வில்லினையுடைய வேடர்களோடு

† சிவஞானசித்தியார் சுப: முதற் சூத். செ. — 70
§ திருவாசகம்: திருச்சாழல் — 9

செய்யாநின்ற செருத்தொழிலின் கண்ணும், தணிந்திட்டு—அவர்களுக்கு உண்டாய ஆத்மவேகந் தணியுமா தணிந்து, இங்கு வந்து யாம் இருத்தலால்—இவ்விடத்துக்கு வந்து சாந்தமூர்த்தியாய் யாம் இருத்தலினாலே, செருத் தணி என்று ஓர் மங்கலம் தரு பெயரினை இவ் வரை பெற்றது—செருத் தணிவரை என்றொரு மங்களகரமான சிறப்புப்பெயரை இந்தத் தணிகைவரை பெற்றிருக்கின்றது.

விளம்புமா விளம்பு என்புழிப்போலத் தணியுமா தணிந்து என்க. திருத் தணிகை செருத்தணிகையாம்; எனவே வேகங் கெடுத்தாளுந் தலமாம் என்றவாறு. (216)

முல்லை வாணகை யுமையவண் முலைவளை யதனான்
மல்லன் மாநிழ லிறைவரை வடுப்படுத் தமரு
மெல்லை நீர்வயற் காஞ்சியி னணுகநின் றிடலாற்
சொல்ல லாந்தகைத் தன்றிந்த மால்வரைத் தூய்மை.

முல்லை வாள் நகை உமையவள்—முல்லையரும்புபோன்ற ஒளிபொருந்திய பற்களையுடைய காமாட்சியம்மையார், முலை வளை அதனால்—முலைகளினாலும் வளைகளினாலும், மல்லல் மா நிழல் இறைவரை—பொலிவுபொருந்திய மாமர நீழலில் எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாத சுவாமியை, வடு படுத்து அமரும்—தழுவித் தழும்புசெய்து வீற்றிருந்தருளுகின்ற, நீர் வயல் காஞ்சி எல்லையின் அணுக நின்றிடலால்—நீர்வளம்பொருந்திய வயல்களையுடைய காஞ்சி நகரின் எல்லைக்கண் அணித்தாக நிற்றலால், இந்த மால்வரைத் தூய்மை—இந்தப் பெரிய தணிகைவரையின் தூய்மை, சொல்லலாம் தகைத்து அன்று—சொல்லாற் சொல்லமுடியுந் தகைமையினையுடையதன்று.

தேவி, உலகு தூய்மையுறுமாறு தம்மைத் தூய்மைசெய்த காஞ்சியின் எல்லைக்கண் நிற்பதுந் தூய்மைத்தேயாமென்றவாறு. தேவி தழுவித் தூய்மை செய்த வரலாறு, 'கயிலையிலரனை' என வருந் திருநகரச் செய்யுளிற் காண்க. (217)

விரையி டங்கொளும் போதினுண் மிக்கபங் கயம்போற்
றிரையி டங்கொளு நதிகளிற் சிறந்தகங் கையைப்போற்
றரையி டங்கொளும் பதிகளிற் காஞ்சியந் தலம்போல்
வரையி டங்களிற் சிறந்ததித் தணிகைமால் வரையே.

விரை இடம் கொளும் போதினுள்—நறுமணத்தைத் தம்மிடத்தே கொள்ளும் மலர்களுக்குள், மிக்க பங்கயம் போல்—மேலான தாமரைமலர் போலவும், திரை இடம் கொளும் நதிகளில்—திரையைத் தம்மிடத்தே பொருந்துகின்ற நதிகளுக்குள்ளே, சிறந்த கங்கையைப்போல்—சிறந்த கங்கா நதிபோலவும், தரை இடம் கொளும் பதிகளில்—பூமியை இடமாகக் கொள்ளும் புண்ணியத் தலங்களுக்குள்ளே, காஞ்சி அம் தலம் போல்—அழகிய காஞ்சி

நகரமாகிய தலம்போலவும், இத் தணிகை மால் வரையே—இந்தத் தணிகை யாகிய பெருமைபொருந்திய இம்மலையே, வரை இடங்களில் சிறந்தது—மலைக ளாகிய இடங்களுக்குள்ளே சிறந்ததாம்.

அவை சிறந்தவாறு போலச் சிறந்ததாமென்க. எனவே, குன்றுதொறாடல் செய்யும் எமக்கு இதுவே உவந்ததாம் என்றவாறு. (218)

கோடி யம்பியும் வேய்ங்குழ லூதியுங் குரலா
னீடு தந்திரி யியக்கியு மேழிசை நிறுத்துப்
பாடி யுஞ்சிறு பல்லியத் தின்னிசை படுத்து
மாடு தும்விளை யாடுது மிவ்வரை யதன்கண்.

கோடு இயம்பியும்—கோடு குறித்தும், வேய்ங்குழல் ஊதியும்—வேய்ங்குழலை ஊதியும், குரலால் நீடு தந்திரி இயக்கியும்—உரோமத்தாலியன்ற நீண்ட யாழ் நரம்பை இயக்கியும், ஏழிசை நிறுத்துப் பாடியும்—ஏழிசைகளை அளவுபடுத்திப் பாடியும், பல் சிறு இயத்து இன்னிசை படுத்தும்—அப்பாடலைப் பலவாகிய சிறு வாத்தியங்களின் இனிய இசைக்கட் படுத்தியும், இவ் வரையதன்கண் ஆடுதும்—இம்முறையானே இந்த மலையின்கண்ணே நித்திய நர்த்தனம் புரி வோம்; விளையாடுதும்—அன்றி வேறு பல விளையாட்டுக்களையுஞ் செய்வோம்.

குறித்தல், ஒலித்தல் என்னும் பொருட்டு. (219)

மந்த ரத்தினு மேருமால் வரையினு மணிதோய்
கந்த ரத்தவன் கயிலையே காதலித் ததுபோற்
சுந்த ரக்கிரி தொல்புவி தனிற்பல வெனினு
மிந்த வெற்பினி லாற்றவு மகிழ்ச்சியுண் டெமக்கே.

மணி தோய் கந்தரத்தவன்—திருநீலகண்டராகிய சிவபெருமான், மந்த ரத்தினும்—மந்தரமலையைக் காட்டிலும், மேருமால் வரையினும்—மேரு வாகிய பெரிய மலையைக் காட்டிலும், கயிலையே காதலித்தது போல்—திருக் கைலாச கிரியினையே பிரீதியுற்றிருப்பதுபோல, தொல் புவி தனில்—பழைமை யாகிய இப் பூமியில், சுந்தரக் கிரி பல எனினும்—அழகிய மலைகள் பல உள வாயினும், இந்த வெற்பினில்—இந்தத் தணிகையாகிய கிரியிலேதானே, ஆற்றவும் மகிழ்ச்சி எமக்கு உண்டு—பெரிதும் பிரீதி எமக்கு உளதாம். (220)

வான்றி கழ்ந்திடு மிருநில வரைபல வவற்று
ளான்ற காதலா லிங்ஙன மேவுது மதற்குச்
சான்று வாசவன் வைகலுஞ் சாத்துதற் பொருட்டான்
மூன்று காவியிச் சுனைதனி லெமக்குமுன் வைத்தான்.

வான் திகழ்ந்திடும் இரு நில வரை பல அவற்றுள்—ஆகாயத்தை அளாவி விளங்குகின்ற பெரிய பூமியிலுள்ள பலவாகிய மலைகளுக்குள், ஆன்ற

காதலால் இங்ஙனம் மேவுதும்—மிக்க விருப்பத்தோடு இம்மலைக்கண் என்றுஞ் சாந்நித்தியம் ஆவோம்; அதற்குச் சான்று—அவ்வாறுதற்குத் தக்க சான்றாக, வாசவன்—இந்திரனானவன், வைகலும் எமக்குச் சாத்துதற் பொருட்டு—நாள்தோறும் முப்போழ்தும் எமக்குச் சாத்தி வழிபடும்பொருட்டு, மூன்று காவி—மூன்று நீலோற்பலக் கொடிகளை, இ சுனை தனில்—இம்மலையிலுள்ள நீர்ச்சுனைக்கண்ணே, முன் வைத்தான்—முன்னமே உண்டாக்கி வைத்தான்.

ஆக வருவிக்கப்பட்டது; போல என்னும் பொருட்டாம். நித்திய சாந்நித்தியம் உண்மையினாலேயே, அதற்குச் சான்று போல, முப்பொழுதும் பூசிக்கும் பொருட்டு மூன்று காவிகள் வைக்கப்பட்டன என்க. (221)

காலைப் போதினி லொருமலர் கதிர்முதி ருச்சி
வேலைப் போதினி லொருமலர் விண்ணெலா மிருள்சூழ்
மாலைப் போதினி லொருமல ராகவிவ் வரைமே
னீலப் போதுமூன் றொழிவின்றி நிற்றலு மலரும்.

காலைப் போதினில் ஒரு மலர்—உதயகாலத்தில் ஒரு மலரும், கதிர் முதிர் உச்சி வேலைப் போதினில் ஒரு மலர்—சூரியகிரணங்கள் முதிருகின்ற உச்சிக்காலத்தில் ஒரு மலரும், விண் எலாம் இருள் சூழ் மாலைப் போதினில் ஒரு மலர் ஆக—ஆகாயம் முழுவதும் இருள் பரவும் மாலைக்காலத்தில் ஒரு மலருமாக, இ வரைமேல்—இத் திருத்தணிகை மலைக்கண், நீலப் போது மூன்று—மூன்று நீலப் பூக்கள், நிற்றலும் ஒழிவின்றி மலரும்—எப்போதும் முப்போதும் இடையீடின்றி மலராநிற்கும். (222)

ஆழி நீரர சுலகெலா முண்ணினு மளிப்போ
ரூழி பேரினு மொருபகற் குற்பல மூன்றாய்த்
தாழி ருஞ்சுனை தன்னிடை மலர்ந்திடுந் தவிரா
மாழை யொண்கணு யிவ்வரைப் பெருமையார் வகுப்பார்.

மாழை ஒண் கணாய்—மாவடுவகிரன்ன ஒள்ளிய கண்களையுடையவளே, நீர் ஆழி அரசு உலகெலாம் உண்ணினும்—நீரினையுடைய சமுத்திரராசனை வருணன் உலகம் முழுவதையும் உண்டாலும், அளிப்போர் ஊழி பேரினும்—படைப்போர் காப்போர் ஆகிய பிரம விஷ்ணுக்களின் முடிவுகாலமாகிய ஊழிக்காலம் நேர்ந்தாலும், தாழ் இருஞ் சுனை தன்னிடை—இம் மலைக்கண்ணுள்ள ஆழ்ந்த பெரிய நீர்ச்சுனைக்கண், ஒரு பகற்கு மூன்றாய் உற்பலம் மலர்ந்திடும்—ஒரு பகற்போதுக்கு முப்போதாய் நீலப் போதுகள் மலர்ந்து கொண்டிருக்கும்; தவிரா—அங்ஙனமாதலில் அவைகள் தவறுதலடையா; இவ் வரைப் பெருமை யார் வகுப்பார்—இவ்வாற்றால் இத் தணிகை வரையின் பெருமையை யாரே வகுத்துரைக்க வல்லார்.

மாழை ஆகுபெயர். தவிராது இறுதிகெட்டதெனக் கொண்டு இந் நியதி தவறாது என்றுரைப்பினுமமையும். அற்புத நீர்மையிருந்தவாற்றாற் பெருமை யார் வகுப்பார் என்க. (223)

இந்த வெற்பினைத் தொழுதுளார் பவமெலா மேகுஞ்
சிந்தை யன்புட னிவ்வரை யின்கணே சென்று
முந்த நின்றவிச் சுனைதனில் விதிமுறை மூழ்கி
வந்து நந்தமைத் தொழுதுளார் நம்பதம் வாழ்வார்.

இந்த வெற்பினைத் தொழுதுளார் பவம் எலாம் ஏகும்—இத் திருத்தணி காசலத்தை வணங்குபவருடைய பாவங்களெல்லாம் நீங்கும்; சிந்தை அன்புடன் இ வரையின்கண் சென்று—மன அன்போடு இம்மலைக்கண் வந்து, முந்த நின்ற இ சுனைதனில்—முற்படவிருந்த இந்த நீர்ச்சுனையில், விதி முறை மூழ்கி—விதித்த முறையானே முழுகி, வந்து—நமது சந்நிதிக்கு வந்து, நம் தமைத் தொழுதுளார்—நம்மை வணங்கியவர், நம் பதம் வாழ்வார்—நமது கந்த பதவியைப் பெற்று வாழ்வார்கள். (224)

அஞ்சு வைகலிவ் வகன்கிரி நண்ணியெம் மடிக
டஞ்ச மென்றுளத் துன்னியே வழிபடுந் தவத்தோர்
நெஞ்ச கந்தனில் வெஃகிய போகங்க ணிரப்பி
யெஞ்ச லில்லதோர் வீடுபே றடைந்தினி திருப்பார்.

இ கிரி அகம் அஞ்சு வைகல் நண்ணி—இத் திருத்தணிகை வரைக்கண் ஐந்து தினந் தலவாசஞ் செய்து, எம் அடிகள் தஞ்சம் என்று உளத்து உன்னி—எமது பாதங்களையே தஞ்சமென்று மனத்தின்கண்ணே தியானித்து, வழி படும் தவத்தோர்—வழிபடுகின்ற தவத்தினையுடையோர், நெஞ்சகம் தனில் வெஃகிய போகங்கள் நிரப்பி—மனத்தில் விரும்பிய போகங்களை அநுபவித்து முடித்து, எஞ்சல் இல்லது ஓர் வீடுபேறு அடைந்து—குறைதலில்லாத ஒப்பற்ற வீடுபேற்றையும் பெற்று, இனிது இருப்பார்—இனிது வாழ்வார்கள்.

அகல் எனினுமாம். எஞ்சலின்மையாவது புணர்ந்தாற் புணருந்தொறும் புதுமையாதல். (225)

தேவ ராயினு முனிவர ராயினுஞ் சிறந்தோ
ரேவ ராயினும் பிறந்தபி னிவ்வரை தொழாதார்
தாவ ராதிக டம்மினுங் கடையரே தமது
பாவ ராசிக ளகலுமோ பார்வலஞ் செயினும்.

தேவராயினும்—தேவர்களாயிருந்தாலும், முனிவரர் ஆயினும்—முனிவரர் களாயிருந்தாலும், சிறந்தோர் ஏவர் ஆயினும்—சிறப்புற்ற மற்றையோர் யாவராயிருந்தாலும், பிறந்த பின்—உடம்பெடுத்துப் பிறந்த பின்பு, இவ் வரை தொழாதார்—இந்தத் திருத்தணிகைமலையை வணங்காதவர், தாவராதிகள் தம்மினும் கடையரே—தாவரம் முதலிய கீழ்ப் பிறவிகளிலுங் கீழ்களேயாவர்; பார் வலஞ் செயினும்—பூமியை வலம் வந்தாலும், தமது பாவ ராசிகள் அகலுமோ—அவர்களுடைய பாவக் கூட்டங்கள் நீங்குமா. (226)

பாத கம்பல செய்தவ ராயினும் பவங்க
ளேதும் வைகலும் புரிபவ ராயினு மெம்பா
லாத ரங்கொடு தணிகைவெற் படைவரே லவரே
வேதன் மாலினும் விழுமிய ரெவற்றினு மிக்கார்.

பாதகம் பல செய்தவராயினும்—பலவாகிய பாதகங்களைச் செய்தவ ராயினும், பவங்கள் ஏதும் வைகலும் புரிபவராயினும்—பாவங்கள் யாவற்றை யுந் தினந்தோறுஞ் செய்பவராயினும், எம்பால் ஆதரங்கொடு—எம்பால் அன்பு பூண்டு, தணிகை வெற்பு அடைவரேல்—திருத்தணிகை வரையினை அடைவாராயின், அவரே—அத்தகையோரே, எவற்றினும் மிக்கார்—எல்லா வகையானும் மிக்காராய், வேதன் மாலினும் விழுமியர்—பிரம விஷ்ணுக் களிலும் விழுமியோராவர்.

யாவதும், ஏதும் என்ருயிற்று. (227)

வேறு

உற்பல வரையின் வாழ்வோ ரோரொரு தருமஞ் செய்யிற்
பற்பல வாகி யோங்கும் பவங்களிற் பலசெய் தாலுஞ்
சிற்பம தாகி யொன்ருய்த் தேய்ந்திடு மிதுவே யன்றி
யற்புத மாக விங்ங னநந்தகோ டிகளுண் டன்றே.

உற்பல வரையின் வாழ்வோர்—புதுமையாகிய நீலோற்பலத்தையுடைய திருத்தணிகை வரையின்கண் வாழ்பவர்கள், ஓர் ஒரு தருமம் செய்யின்—ஓரோர் தருமஞ் செய்தால், பல் பலவாகி ஓங்கும்—ஒவ்வொரு தருமமும் பலப்பல தருமமாகி விருத்தியுறும்; பவங்களில் பல செய்தாலும்—பாவங் களிலே பலவற்றைச் செய்தாலும், சிற்பம் ஆகி ஒன்ருய்த் தேய்ந்திடும்—அவை சிறுமையெய்தி ஒன்ருய்த் தேய்ந்து கழியும்; இதுவேயன்றி—இவ் வற்புதமேயன்றி, இங்ஙன்—இம்மலையில், அற்புதமாக—அற்புதங்களாக, அநந்த கோடிகள் உண்டு—அநந்தகோடி விசேடங்கள் உளவாம். (228)

என்றிவை குமரன் கூற வெயினர்தம் பாவை கேளா
நன்றென வுவகை யெய்தி நானில வரைப்பி னுள்ள
குன்றிடைச் சிறந்த விந்தத் தணிகைமால் வரையின் கொள்கை
யுன்றிரு வருளாற் றேர்ந்தே யுய்ந்தனன் றமிய னென்ருள்.

என்று—திருத்தணிகையாகிய செருத்தணிகை இவ்வியல்பிற்று என்று, இவை குமரன் கூற—இவற்றைக் குமாரக்கடவுள் திருவாய்மலர்ந்தருள, எயினர் தம் பாவை கேளா—குறப்பாவையாகிய வள்ளிநாயகியார் கேட்டு, நன்று என உவகை எய்தி—ஆன்மாக்களுக்கு நன்மை பயப்பதாம் என்று மகிழ்ச்சியடைந்து, நால் நில வரைப்பின் உள்ள குன்றிடை—நால்வகை நிலத்தினையுடைய இப் பூமியின்கண் உள்ள மலைகளுக்குள்ளே, சிறந்த இந்தத்

தணிகை மால்வரையின் கொள்கை—சிறந்த இந்தப் பெருமை பொருந்திய தணிகை மலையின் சிறப்பியல்பை, உன் திருவருளால் தேர்ந்து—தேவரீரது திருவருளினாலே அறிந்து, தமியன் உய்ந்தனன் என்றான்—தேவரீரையன்றி வேறு பற்றுக்கோடில்லாத தமியேன் உய்தி பெற்றேன் என்று விண்ணப்பஞ் செய்தார்.

பாலை நால்வகை நிலத்துள் அடங்கும். ஆன்மாக்களின் உய்தியைத் தம்மேலிட்டு உய்ந்தனன் என்றருளினார். (229)

இவ்வரை யொருசார் தன்னி லிராறுதோ ளுடைய வெந்தை
மைவிழி யணங்குந் தானு மாலய னுணரா வள்ள
லைவகை யுருவி லொன்றை யாகம விதியா லுய்த்து
மெய்வழி பாடு செய்து வேண்டியாங் கருளும் பெற்றான்.

இவ்வரை ஒரு சார் தன்னில்—இத் தணிகைமால் வரையினொருபாலில், இராறு தோள் உடைய எந்தை—பன்னிரண்டு திருப்புயங்களையுடைய எந்தையாகிய சுப்பிரமணியப்பெருமான், மை விழி அணங்கும் தானும்—மைதீட்டிய கண்களையுடைய வள்ளிநாயகியாருந் தாமும், மால் அயன் உணரா வள்ளல் ஐவகை உருவில் ஒன்றை—பிரம விஷ்ணுக்களால் அறியலாகாத அருள்வள்ளலாகிய சிவபெருமானின் ஐவகைச் சாதாக்கிய வடிவங்களுள் ஒன்றாகிய பீடமும் இலிங்கமுமான கர்ம சாதாக்கிய வடிவத்தை, ஆகம விதியால் உய்த்து—ஆகம விதிப்பிரகாரந் தாபித்து, மெய் வழிபாடு செய்து—மெய் வழிபாடாகிய சிவபூசையைச் செய்து, வேண்டியாங்கு அருளும் பெற்றான்—வேண்டியவாறு நிறைந்த திருவருளையும் பெற்றார்.

தருமவழியிற் போர்புரிந்தோர் அபுத்தி பூர்வமாக நேருங் குற்றத்துக்குக் கழுவாயாகப் போர்முடிவிற் சிவார்ச்சனை செய்யும் முறையில், உலகம் உய்யும் முகமாக, போர் தணிந்துறையும் இடமான செருத்தணிகையிற் சிவபூசை செய்தருளினாரென்க. உலகஞ் செய்யுமா செய்தாரென்றவாறு. (230)

கருத்திடை மகிழ்வு மன்புங் காதலுங் கடவ முக்க
ணொருத்தனை வழிபட் டேத்தி யொப்பிலா நெடுவே லண்ணன்
மருத்தொடை செறிந்த கூந்தல் வள்ளிநா யகியுந் தானுஞ்
செருத்தணி வரையில் வைகிச் சிலபக லமர்ந்தா னன்றே.

ஒப்பிலா நெடு வேல் அண்ணல்—ஒப்பில்லாத நீண்ட வேற்படையைத் தாங்கிய சுப்பிரமணியப்பெருமான், மருத் தொடை செறிந்த கூந்தல்—வாசனை பொருந்திய மாலைகள் செறிந்த கூந்தலினையுடைய, வள்ளிநாயகியும் தானும்—வள்ளிநாயகியாருந் தாமும், கருத்திடை—உள்ளத்தின்கண்ணே, மகிழ்வும் அன்பும் காதலும் கடவ—சிவபூசையாலெய்திய மகிழ்ச்சியும்

அன்பும் அப்பூசைமீது மேன்மேலுளதாய பெருவிருப்புந் தம்மை மேற்கொண்டு உந்த, முக்கண் ஒருத்தனை வழிபட்டு ஏத்தி—மூன்று கண்களையுடைய ஏகராகிய சிவபரம் பொருளைப் பூசித்துத் துதித்துக்கொண்டு, செருத் தணி வரையில்—செருத் தணி வரையாகிய திருத்தணிகை வரையில், சிலபகல் அமர்ந்து வைகினன்—சில தினம் விருப்புற்று வீற்றிருந்தருளினர்.

வள்ளிநாயகியுந் தானும் அமர்ந்தான் எனச் சிறப்பு வினையான் முடிந்தது. (231)

தள்ளரும் விழைவின் மிக்க தணிகையி னின்று மோர்நாள்
வள்ளியுந் தானு மாக மானமொன் றதனிற் புக்கு
வெள்ளியங் கிரியின் பாங்கர் மேவிய கந்த வெற்பி
லொள்ளிணர்க் கடப்பந் தாரோ னுலகெலாம் வணங்கப் போனன்.

ஒள் இணர் கடப்பந் தாரோன்—ஒள்ளிய கொத்தாயமைந்த கடப்ப மலர்மாலையை அணிந்த சுப்பிரமணியப்பெருமான், வள்ளியும் தானும் ஆக—வள்ளிநாயகியாருந் தாமுமாக, ஓர் நாள்—ஒருதினம், தள்ளரும் விழைவின் மிக்க தணிகையினின்றும்—தள்ளுதற்கரிய விருப்பத்தைப் பெருக்குகின்ற தணிகை வரையினின்றும் நீங்கி, மானம் ஒன்று அதனில் புக்கு—விமானம் ஒன்றில் இவர்ந்து, வெள்ளியங் கிரியின் பாங்கர் மேவிய கந்த வெற்பில்—அழகிய கைலாசகிரியின் பக்கத்திற் பொருந்திய கந்த கிரிக்கண், உலகெலாம் வணங்கப் போனன்—உலகமெல்லாம் வணங்கச் சென்றருளினர்.

உலக மென்ப துயர்ந்தோர் மேற்று. (232)

கந்தவெற் பதனிற் சென்று கடிகெழு மான நீங்கி
யந்தமில் பூதர் போற்று மம்பொனா லயத்தி னேகி
யிந்திரன் மகடூ வாகு மேந்திழை யினிது வாழு
மந்திர மதனிற் புக்கான் வள்ளியுந் தானும் வள்ளல்.

வள்ளல்—அருள் வள்ளலாகிய சுப்பிரமணியப்பெருமான், வள்ளியும் தானும்—வள்ளிநாயகியாருந் தாமும், கந்த வெற்பதனிற் சென்று—கந்த கிரிக்கட் சென்று, கடிகெழு மானம் நீங்கி—விரைவின்மிக்க விமானத்திநின்றும் நீங்கி, அந்தம் இல் பூதர் போற்றும்—அளவில்லாத பூதகணங்கள் காக்கின்ற, அம் பொன் ஆலயத்தின் ஏகி—அழகிய பொன்னாலாய ஆலயத்துக்குள்ளே போய், இந்திரன் மகடூஉ ஆகும் ஏந்திழை இனிது வாழும் மந்திரம் அதனிற் புக்கான்—இந்திரன் புதல்வியாகிய தெய்வயானையம்மையார் இனிது வாழ்கின்ற கோயிலுட் பிரவேசித்தருளினர்.

எங்குமாய பெருமானை அகத்தாலென்றும் பிரியாத மறுவில் கற்பின் வாணுதலாதலின், இனிது வாழும் என்றார். மகடூஉ என்பது மகடூ என் நின்றது. (233)

ஆரணந் தெரித றேற்ரு வறுமுகன் வரவு நோக்கி
வாரண மடந்தை வந்து வந்தனை புரிய வன்னுள்
பூரண முலையு மார்பும் பொருந்துமா றெடுத்துப் புல்லித்
தாரணி தன்னிற் றீர்ந்த தனிமையின் றுயரந் தீர்த்தான்.

ஆரணம் தெரிதல் தேற்ரு அறுமுகன் வரவு—வேதக் காட்சிக்கெட்டாத ஆறுமுகப் பெருமானது வருகையை, வாரண மடந்தை நோக்கி—தெய்வ யானையம்மையார் கண்டு, வந்து—கண்ட அந்தக் கணமே எழுந்து எதிர்வந்து, வந்தனை புரிய—வழிபாடு செய்யாநிற்ப, அன்னுள் பூரண முலையும்—அந்தத் தெய்வநாயகியாரது முல்லையென்கின்ற கற்புப் பூரணமெய்தி அதன் சின்னமாய் விளங்குந் திருமுலைகளும், மார்பும்—தமது இருதயமும், பொருந்து மாறு—ஒருமையெய்துமாறு, எடுத்து—அக் கற்புக்கு அணியைத் தமது அருமைத் திருக்கரங்களாலெடுத்து, புல்லி—தழுவி, தாரணி தன்னில் தீர்ந்த—பூமியின்கட் பிரிந்து சென்றதனுலுண்டான, தனிமையின் துயரம் தீர்த்தான்—ஒருமையின் சிறுமையாகிய துயரத்தைத் தீர்த்தருளினர்.

இங்ஙனமாகவே தெய்வநாயகியார் ஒருமையின் சிறுமை தீர்ந்து இருமையின் ஒருமையெய்தி அப்பாலான ஒருமையின் பெருமையுற்றருளினு ரென்க.

† 'இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்
மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை.' (234)

ஆங்கது காலை வள்ளி யமரர்கோ னளித்த பாவை
பூங்கழல் வணக்கஞ் செய்யப் பொருக்கென வெடுத்துப் புல்லி
யீங்கொரு தமிய ளாகி யிருந்திடு வேனுக் கின்றோர்
பாங்கிவந் துற்ற வாறு நன்றெனப் பரிவு கூர்ந்தாள்.

ஆங்கு—அவ்விடத்தின்கண்ணே, அதுகாலை—அச்சமயத்தில், வள்ளி—வள்ளி நாயகியார், அமரர் கோன் அளித்த பாவை பூங்கழல் வணக்கம் செய்ய—தேவேந்திரன் பெற்ற பாவை போல்வாராய தெய்வநாயகியாருடைய மலர்ப் பாதங்களை வணக்கஞ் செய்ய, பொருக்கென எடுத்துப் புல்லி—தெய்வ நாயகியார் ஒரு கணமுந் தரியாதே விரைந்தெடுத்து வள்ளிநாயகியாரைத் தழுவி, ஈங்கு—இன்ப சாகரமாகிய இவ்விடத்தில், ஒரு தமியளாகி—யான் ஒருத்தியேயாய், இருந்திடுவேனுக்கு—இன்பமுற்றிருந்தேனுக்கு, இன்று—இத் தினம், ஓர் பாங்கி—என்போலத் திருமுருக இன்பவாழியில் இன்புறுதற் குரிமையுடையாளொருத்தி, வந்து உற்றவாறு—அடைந்தவாறு, நன்று என—நற்பேறேயாம் என்று, பரிவு கூர்ந்தாள்—அன்பு முதிர்ந்து உவகை மிக்கார்.

ஆத்மநாயகன் சர்வலோகைக் நாயகனுதலை அறிந்துவைத்தும், தாமணைந் தின்புறுவது போல மற்றையோரணைந் தின்புறுவதைப் பொருதே யூடுவாருள

† சம் தேவாரம்: திருவெழுகூற்றிருக்கை — 42 - 44

ராகவும், தெய்வநாயகியார் அந்நிலைகடந்து, கற்பின் பரிபூரண நிலை முற்றுப் பெற்று, மறுவில் கற்பின் வாணுதலாய்த் தம் நாயகன், 'ஊருணியுற்றவர்க்கு ஊரன் மற்றியாவர்க்கும் ஊதியமே' என்று கண்டு, தாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம் என்ற முறையில், பாங்கிவந்துற்றவாறு நன்றெனப் பரிவு கூர்ந்தாரென்க. பாங்கி—உரிமையுடையாள் என்னும் பொருட்டு. (235)

சூர்க்கடல் பருகும் வேலோன் றுணைவிய ரிருவ ரோடும்
போர்க்கடல் கொண்ட சீயப் பொலன்மணி யணைமேற் சேர்ந்தான்
பாற்கட லமளி தன்னிற் பாவையர் புறத்து வைகக்
கார்க்கடற் பவள வண்ணன் கருணையோ டமரு மாபோல்.

கார் கடல் பவள வண்ணன்—கரிய கடலிற்றோன்றும் பவளம்போலும் செவ்வண்ணத்தினையுடைய திருமால், பால் கடல் அமளி தன்னில்—பாற் சமுத்திரத்திற் பொருந்திய சயனத்தின்மீது, பாவையர் புறத்து வைக— சீதேவி பூதேவியாகிய தேவியர் இருபக்கத்திலும் இருக்க, கருணையோடு அமருமா போல்—கிருபையோடு அமருமாறுபோல, சூர் கடல் பருகும் வேலோன்—அச்சந் தருஞ் சமுத்திரஞ் சுவற அதன் நீரைப் பருகாநின்ற வேற்படையையுடைய சுப்பிரமணியப்பெருமான், போர்க்கு அடல் கொண்ட சீயப் பொலன்மணி அணைமேல்—போர்செய்தற்கண் வலிமிக்க சிங்கங்கள் தாங்குகின்ற பொன்னும் இரத்தினங்களாலும் ஆன ஆசனத்தின்மீது, துணைவியர் இருவரோடும்—தெய்வநாயகியார் வள்ளிநாயகியார் ஆகிய இருவர் தேவியரோடும், கருணையோடு சேர்ந்தான்—ஆன்மாக்கள்மீது வைத்த கருணையோடு வீற்றிருந்தருளினர்.

சூர்க்கடல், சூரனாதி அசுர சமுத்திரமுமாம். பவளவண்ணம், திருமாலின் இயற்கை நிறம். கருமை, செயற்கை நிறம். அஃது ஆலகாலத்தை எதிர்த்த தனாலெய்தியது. கருணை உபமேயத்தோடுங் கூட்டப்பட்டது. (236)

செங்கனல் வடவை போலத் திரைக்கடல் பருகும் வேலோன்
மங்கைய ரிருவ ரோடு மடங்கலம் பீட மீதி
லங்கினி திருந்த காலை யரமக ளவனை நோக்கி
யிங்கிவள் வரவு தன்னை யியம்புதி யெந்தை யென்றாள்.

செம் வடவைக் கனல் போல—சிவந்த வடவாமுகாக்கினி போல, திரைக் கடல் பருகும் வேலோன்—திரையையுடைய கடலைச் சுவறச் செய்யும் வேற் படையையுடைய சுப்பிரமணியப்பெருமான், அங்கு—கந்தகிரிக்கண்ணுள்ள அக் கோயிலில், அம் மடங்கல் பீடம் மீதில்—அழகிய சிங்காசனத்தின்மீது, மங்கையர் இருவரோடும் இனிது இருந்த காலை—இருவர் தேவியரோடும் இனிது வீற்றிருந்த சமயத்தில், அரமகள்—தெய்வயானையம்மையார், அவனை நோக்கி—சுப்பிரமணியப்பெருமானை நோக்கி, எந்தை-பிரபுவே, இங்கு இவள் வரவு தன்னை—இங்கே இந்த வள்ளிநாயகியார் வந்தெய்திய வரலாற்றை, இயம்புதி என்றாள்—திருவாய்மலர்ந்தருளுக என்று பிரார்த்தித்தார். (237)

### வேறு

கிள்ளை யன்னசொற் கிஞ்சுகச் செய்யவாய்
வள்ளி தன்மையை வாரணத் தின்பிணுப்
பிள்ளை கேட்பப் பெருந்தகை மேலையோ
னுள்ள மாமகிழ் வாலிவை யோதுவான்.

வாரணத்தின் பிணுப் பிள்ளை—ஐராவத யானையால் வளர்க்கப்பட்ட பெண்பிள்ளையாகிய தெய்வயானையம்மையார், கிள்ளை அன்ன சொல்—கிளி மொழியையும், கிஞ்சுகச் செய்ய வாய்—முருக்கம்பூப்போன்ற சிவந்த வாயையும் உடைய, வள்ளி தன்மையை—வள்ளிநாயகியாரின் வரலாற்றியல்பை, கேட்ப—வினவ, பெருந் தகை மேலையோன்—பெருந்தகையாகிய சுப்பிரமணியப் பெருமான், உள்ளம் மா மகிழ்வால்—திருவுள்ளத்தில் எழுந்த மிக்க மகிழ்ச்சியோடு, இவை ஓதுவான்—இவற்றைக் கூறியருளுவார்.

பிணுப் பிள்ளை—பெண்பிள்ளை. * **'கோதில் குலத்தான்றன் கோயிற் பிணுப் பிள்ளைகாள்'** என்பது திருவாசகம். வாரணம் வளர்த்தமையின் பெண்மைப் பொதுப் பெயராற் பிணு என்ரு்.                (238)

நீண்ட கோலத்து நேமியஞ் செல்வர்பா
லீண்டை நீவி ரிருவருந் தோன்றினீ
ராண்டு பன்னிரண் டாமள வெம்புயம்
வேண்டி நின்று விழுத்தவ மாற்றினீர்.

ஈண்டை நீவிர் இருவரும்—இவ்விடத்து எம்மோடொருமையுற்றிருக்கும் நீவிர் இருவீரும், நீண்ட கோலத்து நேமியம் செல்வர்பால்—நீண்ட வடிவத்தினையுடைய அழகிய சக்கராயுதத்தைத் தரித்த செல்வராகிய திருமாலினிடத்து, தோன்றினீர்—முன்னர் உற்பவித்தீர்; ஆண்டு பன்னிரண்டு ஆம் அளவு—அவ்வாறுற்பவித்த நீவிர் உமக்குப் பன்னிரண்டு வயசு பூரணமாகும் அளவும், எம் புயம் வேண்டி நின்று—எமது புயங்களை அணைதலை வேண்டுதல் செய்து, விழுத் தவம் ஆற்றினீர்—விழுமிதாகிய தவத்தை இளமைதொட்டுச் செய்தீர்கள்.

இளமையை ஐந்தாமாண்டு முற்றி ஆருமாண்டுத் தொடக்கமெனக் கொள்க. இங்ஙனமாதல்,

† **'ஆறுன ஆண்டெல்லை அணைதலுமம் பிகைதனக்கோர்
கூறுன பிரான்றன்னைக் கோடன்முறை குணித்தனளாய்'**

என்றும்,

‡ **'ஆண்டுபன் னிரண்டு சென்ற அம்பிகைக் கனைய காலை'**

என்றும் வரும் உமை தவம்புரியுங் கால எல்லைகொண்டு துணியப்படும்.  (239)

---

* திருவாசகம்: திருவெம்பாவை — 10

† கந்: உமை தவம்புரி படலம் — 3

‡ கந்: உமை தவம்புரி படலம் — 12

நோற்று நின்றிடு நுங்களை யெய்தியா
மாற்ற வும்மகிழ்ந் தன்பொடு சேருதும்
வீற்று வீற்று விசும்பினும் பாரினுந்
தோற்று வீரென்று சொற்றனந் தொல்லையில்.

நோற்று நின்றிடும் நுங்களை யாம் எய்தி—தவஞ் செய்துகொண்டிருந்த உங்களை யாம் அடைந்து, ஆற்றவும் மகிழ்ந்து—உங்கள் தவத்துக்குப் பெரிதும் மகிழ்ந்து, அன்பொடு சேருதும்—உங்களை யாம் அன்போடணைவோம்; விசும்பினும் பாரினும் வீற்று வீற்று தோற்றுவீர் என்று—விண்ணுலகிலும் மண்ணுலகிலுந் தனித்தனிசென்று தோன்றுங்கள் என்று, தொல்லையில் சொற்றனம்—பண்டு உங்களுக்கு உரைத்தோம். (240)

சொன்ன தோர்முறை தூக்கி யிருவருண்
முன்ன மேவிய நீமுகி லூர்தரு
மன்னன் மாமக ளாகி வளர்ந்தனை
யன்ன போதுனை யன்பொடு வேட்டனம்.

இருவருள் முன்னம் மேவிய நீ—இருவீருள் முன்னர் உதித்த மூத்தோயாகிய நீ, சொன்னது ஓர் முறை தூக்கி—யாம் உரைத்ததொரு முறையைக் குறிக்கொண்டு, முகில் ஊர்தரு மன்னன் மாமகள் ஆகி—மேகவாகனனுகிய இந்திரனுக்குப் பெருமை பொருந்திய புதல்வியாய், வளர்ந்தனை—அவன்பால் வளர்ந்தாய்; அன்ன போது—அவ்வாறு வளரும்போது, உனை அன்பொடு வேட்டனம்—உன்னை யாம் அன்போடு திருக்கலியாணஞ் செய்தோம். (241)

பிளவு கொண்ட பிறைநுதற் பேதைநின்
னிளைய ளாய்வரு மிங்கிவள் யாம்பகர்
விளைவு நாடி வியன்றழல் மூழ்கியே
வளவி தாந்தொல் வடிவினை நீக்கினுள்.

பிளவு கொண்ட பிறை நுதற் பேதை—பாதிச் சந்திரனையொத்த நெற்றியினையுடைய தெய்வநாயகியே, நின் இளையளாய் வரும் இங்கிவள்—உன் தங்கையாய்த் தோன்றுநின்ற இவள், யாம் பகர் விளைவு நாடி—யாம் உரைத்ததனுலாம் பயனைச் சிந்தித்து, வியன் தழல் மூழ்கி—பெருமை பொருந்திய அக்கினியில் முழுகி, வளவிது ஆம் தொல் வடிவினை நீக்கினுள்—தெய்வவளம் படைத்ததாகும் பண்டை வடிவத்தை நீக்கினுள். (242)

பொள்ளெ னத்தன் புறவுடல் பொன்றலு
முள்ளி னுற்ற வுருவத் துடனெழீஇ
வள்ளி வெற்பின் மரம்பயில் சூழல்போய்த்
தெள்ளி திற்றவஞ் செய்திருந் தாளரோ.

தன் புறவுடல் பொள்ளெனப் பொன்றலும்—தன் புறமாகிய தூலவுடம்பு விரைந்தழிய, உள்ளின் உற்ற உருவத்துடன் எழீஇ—அதன் அகத்தே பொருந்திய சூக்குமவுடம்போடெழுந்து, வள்ளி வெற்பில் மரம் பயில் சூழல் போய்—வள்ளிமலையின்கண்ணே மரங்கள் செறிந்ததொரு பொதும்பரிற் சென்று, தெள்ளிதில்—தெளிந்துபட்ட நிலையில், தவம் செய்திருந்தாள்—தவஞ் செய்து கொண்டிருந்தாள். (243)

அன்ன சார லதனிற் சிவமுனி
யென்னு மாதவ னெல்லையில் காலமாய்
மன்னி நோற்புழி மாயத்தி னீரதாய்ப்
பொன்னின் மானொன்று போந்துல வுற்றதே.

அன்ன சாரலில்—வள்ளிமலையில் வள்ளிநாயகியார் தவஞ்செய்துகொண்டிருந்த அந்த மலைச்சாரலில், சிவமுனி என்னும் மாதவன்—சிவமுனியென்னும் பெயரினையுடைய மாதவனாகிய முனிவன் ஒருவன், எல்லை இல் காலமாய் மன்னி நோற்புழி—அளவற்ற காலமாக நிலைபெற்றிருந்து தவஞ் செய்வானாயினன் அவன் தவஞ் செய்யுமிடத்தில், பொன்னின் மான் ஒன்று—பொன்மான்பிணையொன்று, மாயத்தின் நீரது ஆய்—மாயத்தின் நீர்மையை உடைத்தாய், போந்து—முனிவன் முன்னிலைக்கட் சென்று, உலவுற்றது—உலாவியது.

அது, பகுதிப்பொருள் விகுதி. அன், சாரியை. சிவமுனி திருமாலேயாதலின் மாதவன் என்றார். அவ்வாறே இலக்குமியே மான் ஆதலின் அது பொன் எனப்பட்டது. காலமாய் என்புழி ஆய், ஆக என்பதன் திரிபு. மாயத்தின் நீர்மையாவது, மோகத்தை விளைவிக்கும் நீர்மையாம். (244)

வந்து லாவு மறிதனை மாதவன்
புந்தி மாலொடு பொள்ளென நோக்கலு
மந்த வேலை யதுகருப் பங்கொள
விந்த மாதக் கருவினு ளெய்தினாள்.

மாதவன்—மாதவனாகிய சிவமுனிவன், வந்துலாவும் மறிதனை—எதிரில் வந்து உலாவுகின்ற பொன்மான் மறியை, புந்தி மாலொடு பொள்ளென நோக்கலும்—மனத்தின்கண் எழுந்த காம மயக்கத்தால் விரைந்து நோக்கினனாக; அது கருப்பங் கொள—அதனால் அம் மான்மறி கருப்பந் தரிக்க, அந்த வேலை—அந்தச் சமயத்தில், இந்த மாது—செவ்விநோக்கித் தவஞ் செய்து கொண்டிருந்த இவள், அக் கருவினுள் எய்தினாள்—அக் கருப்பத்துட் பிரவேசித்தாள். (245)

### வேறு

மானிவ டன்னை வயிற்றிடை தாங்கி
யானதொர் வள்ளி யகழ்ந்த பயம்பிற்
றானருள் செய்து தணந்திட வங்கட்
கானவன் மாதொடு கண்டன னன்றே.

மான்—அப் பெண்மான், இவள் தன்னை வயிற்றிடை தாங்கி—இவளைத் தன் வயிற்றிற் சுமந்து, வள்ளி அகழ்ந்த ஆனது ஓர் பயம்பில்—வள்ளிக்கிழங்கை அகழ்ந்தெடுத்த அதனால் உண்டானதாகிய ஒரு வள்ளிக்குழியில், அருள் செய்து தணந்திட—ஈன்றுவிட்டு நீங்கியதாக; அங்கண் மாதொடு கானவன் கண்டனன்—அவ்விடத்தின்கண் மனைவியாகிய கொடிச்சியோடு சென்ற வேட்டுவ அரசனாகிய நம்பி என்பவன் குழந்தையைக் கண்ணுற்றான்.

தான், சாரியை; சுட்டுப் பொருட்டுமாம். அன்று, ஏ அசைநிலை. (246)

அவ்விரு வோர்களு மாங்கிவ டன்னைக்
கைவகை யிற்கொடு காதலொ டேகி
யெவ்வமில் வள்ளி யெனப்பெயர் நல்கிச்
செவ்விது போற்றினர் சீர்மக ளாக.

அவ்விருவோர்களும்—நம்பியுங் கொடிச்சியுமாகிய அவ்விருவரும், ஆங்கு—அவ்விடத்தினின்றும், இவள் தன்னை—இவளை, கை வகையில்—தந்தை கை தாய் கை என்கின்ற கைவிசேஷங்களில், காதலொடு—அன்போடு, கொடு—மாறிமாறி ஏந்திக்கொண்டு, ஏகி—இல்லத்துக்குச் சென்று, எவ்வம் இல் வள்ளி எனப் பெயர் நல்கி—உச்சரிப்பார்க்குத் துன்பத்தை இன்மை செய்கின்ற வள்ளி என்கின்ற திருநாமத்தை இட்டு, சீர் மகளாக—தமது செல்வப் புதல்வியாக, செவ்விது போற்றினர்—செவ்வனே வளர்த்து வந்தார்கள். (247)

திருந்திய கானவர் சீர்மக ளாகி
யிருந்திடு மெல்லையில் யாமிவள் பாற்போய்ப்
பொருந்தியும் வேட்கை புகன்று மகன்றும்
வருந்தியும் வாழ்த்தியு மாயைகள் செய்தேம்.

திருந்திய—நெஞ்சில் வஞ்சமின்மையினாலே திருத்தம் படைத்த, கானவர் சீர் மகள் ஆகி—வேட்டுவர்களின் செல்வப் புதல்வியாகி, இருந்திடும் எல்லையில்—வளர்ந்திருந்த காலத்திலே, யாம் இவள்பாற் போய்—யாம் இந்த வள்ளிநாயகியிடத்தே சென்று, வேட்கை புகன்றும்—எமது வேட்கையை முறையீடு செய்தும், பொருந்தியும்—கூடியும், அகன்றும்—பிரிந்தும், வருந்தியும்—பிரிவாற்றாது வருத்தமுற்றும், வாழ்த்தியும்—வாழ்த்துதல் செய்தும், மாயைகள் செய்தேம்—இவ்வாற்றாற் பலவேறு மாயாலீலைகள் புரிந்தோம். (248)

அந்தமின் மாயைக ளாற்றிய தற்பின்
முந்தை யுணர்ச்சியை முற்றுற நல்கித்
தந்தை யுடன்றமர் தந்திட நென்ன
லிந்த மடந்தையை யாமணஞ் செய்தேம்.

அந்தம் இல் மாயைகள் ஆற்றி—அளவில்லாத மாயாலீலைகளைச் செய்து, அதன்பின்—அவ்வாற்றாற் பரிசோதனம் நிகழ்த்திய பின்பு, முந்தை உணர்ச்சியை—பழைமையாகிய முன்னுணர்ச்சியை, முற்று உற நல்கி—முழுதொருங்கு கொடுத்து, தந்தையுடன் தமர் தந்திட—தந்தையுஞ் சுற்றத்தோரும் மணஞ் செய்து தர, நென்னல்—நேற்றைத் தினம், இந்த மடந்தையை யாம் மணஞ் செய்தேம்—இந்த வள்ளிநாயகியை யாம் திருமணம் புரிந்தோம்.

அண்மை குறித்து நென்னல் என்றருளினர். (249)

அவ்விடை மாமண மாற்றி யகன்றே
யிவ்விவ டன்னுட னிம்மென வேகித்
தெய்வ வரைக்கணோர் சில்பகல் வைகி
மைவிழி யாயிவண் வந்தன மென்றான்.

மைவிழியாய்—மைதீட்டிய கண்களையுடைய தெய்வநாயகியே, மா மணம் ஆற்றி—களவியலொழுக்காற் பெருமை பொருந்திய திருமணத்தைச் செய்துகொண்டு, இ இவள் தன்னுடன்—இங்கே இருக்கின்ற இந்த வள்ளி நாயகியோடு, அ இடை இம்மென அகன்று—அவ்விடத்தைவிட்டு விரைந்து நீங்கி, தெய்வ வரைக்கண் ஏகி—தெய்வத்தன்மை பொருந்திய திருத்தணிகை மலைக்கட் சென்று, ஓர் சில் பகல் வைகி—ஒரு சில தினம் ஆங்குத் தங்கியிருந்து, இவண் வந்தனம்—இக் கந்தகிரிக்கு வந்தோம்; என்றான்—என்றிங்ஙனம் வள்ளிநாயகியாரின் வரலாற்றைச் சாங்கோபாங்கமாக எடுத்துக் கூறியருளினர். (250)

என்றிவை வள்ளி யியற்கை யனைத்தும்
வென்றிடு வேற்படை வீர னியம்ப
வன்றிறல் வாரண மங்கை வினவி
நன்றென வொன்று நவின்றிடு கின்றாள்.

வென்றிடு வேற்படை வீரன்—சூரனுதியரை வெற்றிகொண்ட வேற்படையைத் தாங்கிய சுப்பிரமணியப் பெருமான், என்று—என்றிங்ஙனம், வள்ளி இயற்கை இவை அனைத்தும்—வள்ளிநாயகியாரின் இயற்கை வரலாறுகளாகிய இவையனைத்தையும், இயம்ப—கூறியருள, வன் திறல் வாரண மங்கை வினவி—வலிய திறலமைந்த ஐராவத யானையால் வளர்க்கப்பட்டவராகிய தெய்வயானையம்மையார் கேட்டு, நன்று என ஒன்று நவின்றிடுகின்றாள்—நல்லது என்று கூறித் தாமுமொன்று கூறுகின்றார். (251)

வேறு

தொல்லையின் முராரி தன்பாற் றேன்றிய விவளும் யானு
மெல்லேயில் கால நீங்கி யிருந்தன மிருந்திட் டேமை
யொல்லேயி லிங்ஙன் கூட்டி யுடனுறு வித்த வுன்றன்
வல்லபந் தனக்கி யாஞ்செய் மாறுமற் றில்லே யென்ருள்.

தொல்லேயில்—முன்னர், முராரி தன்பால் தோன்றிய யானும் இவளும்—திருமாலிடத்து உதித்த யானும் இந்த வள்ளிநாயகியும், எல்லேயில் காலம் நீங்கி இருந்தனம்—அளவில்லாத காலம் பிரிந்திருந்தோம்; இருந்திட்டேமை—அவ்வாறு பிரிந்திருந்த எம்மை, ஒல்லேயில் இங்ஙன் கூட்டி—விரைவில் இவ்விடத்தின்கட் கூட்டி, உடன்—தேவரீருடன், உறுவித்த—ஒருங்கு இருக்கச் செய்த, உன்தன் வல்லபந் தனக்கு—தேவரீரது அருள்வல்லபத்துக்கு, யாம் செய் மாறு—யானும் இவளுஞ் செய்யத்தக்க பிரதியுபகாரம், மற்று இல்லே என்ருள்—யாதும் இல்லேயா மென்றிங்ஙனம் பிரார்த்தித்தார். (252)

மேதகு மெயினர் பாவை விண்ணுல குடைய நங்கை
யோதுசொல் வினவி மேனு ளுனக்கியான் றங்கை யாகு
மீதொரு தன்மை யன்றி யிம்மையு மிளேய ளானே
ஞதலி னுய்ந்தே னின்னே யடைந்தன னளித்தி யென்ருள்.

மேதகும் எயினர் பாவை-மேன்மை பொருந்தாநின்ற குறவர் பாவையாகிய வள்ளிநாயகியார், விண் உலகு உடைய நங்கை ஓது சொல் வினவி—தேவலோகத்தையுடைய தெய்வநாயகியார் கூறிய வார்த்தையைக் கேட்டு, மேல் நாள்—முந்திய பிறப்பில், யான் உனக்குத் தங்கையாகும்—யான் உமக்கு உடன்பிறந்த தங்கையேயாம்; ஈது ஒரு தன்மை அன்றி—இஃதொரு காரணத்தானன்றி, இம்மையும்—இப்பிறப்பின்கண்ணும், இளேயள் ஆனேன்—பிறிதோராற்ருல் தங்கையாய் அமைந்தேன்; ஆதலின்—ஆதலினுலே, நின்னே அடைந்தனன் உய்ந்தேன்—நும்மைச் சரணடைந்து உய்திகூடினேன்; அளித்தி என்ருள்—தங்கையாகிய அடியேனேக் காத்தருள்க என்று பிரார்த்தித்தார். (253)

வன்றிறற் குறவர் பாவை மற்றிது புகன்று தெளவை
தன்றிருப் பதங்க டம்மைத் தாழ்தலு மெடுத்துப் புல்லி
யின்றுனேத் துணேயாப் பெற்றே னெம்பிரா னருளும் பெற்றே
ஞென்றெனக் கரிய துண்டோ வுளந்தனிற் சிறந்த தென்ருள்.

வன் திறல் குறவர் பாவை—வலிய திறலமைந்த வேட்டுவர் புதல்வியாகிய வள்ளிநாயகியார், இது புகன்று—இதனேக் கூறி, தெளவை தன் திருப்பதங்கள் தம்மைத் தாழ்தலும்—முன்பிறந்தாராகிய தெய்வயானேயம்மையாருடைய திருவடிகளேத் தாழ்ந்து வணங்குதலும், எடுத்துப் புல்லி—அவ்வம்மையார் வள்ளிநாயகியாரை எடுத்துத் தழுவி, இன்று உனேத் துணேயாப்

பெற்றேன்—இந்த நல்ல தினத்திலே உன்னை முன்போலவே தங்கையாகப் பெற்றேன்; எம்பிரான் அருளும் பெற்றேன்—அம்மட்டோ எம்பெருமானது திருவருளையும் ஒருங்கு பெற்றேன்; ஒன்று—இவ்வாற்ருல் இப் பேறுகளைக் காட்டிலும் இனி மற்றென்று, அரியது—பெறுதற்கரியதாய், உளந்தனிற் சிறந்தது—உள்ளத்திற் பொருந்தி அதனைக் கொள்ளைகொள்ளுஞ் சிறப்புடைத்தாய், எனக்கு உண்டோ என்ருள்—எனக்கு உளதாமோ என்று கூறியருளினர்.

இப்பேறுகள் ஒவ்வொன்றுந் தனித்தனி அரியதுஞ் சிறந்ததுமாயமையுமென்றவாறு. (254)

இந்திர னருளு மாது மெயினர்தம் மாது மிவ்வா
றந்தரஞ் சிறிது மின்றி யன்புட னளவ ளாவிச்
சிந்தையு முயிருஞ் செய்யுஞ் செயற்கையுஞ் சிறப்பு மொன்ருக்
கந்தமு மலரும் போலக் கலந்துவே றின்றி யுற்ருர்.

இந்திரன் அருளும் மாதும்—இந்திர குமாரியாகிய தெய்வயானையம்மையாரும், எயினர்தம் மாதும்—வேட்டுவர் குமாரியாகிய வள்ளிநாயகியாரும், இவ்வாறு அந்தரம் சிறிதும் இன்றி—இவ்வாற்ருல் வேற்றுமை சிறிதும் இன்றி, அன்புடன் அளவளாவி—ஒருவரோடொருவர் அன்போடளவளாவி, உயிரும் சிந்தையும் செய்யும் செயற்கையும் சிறப்பும்—உயிரும் உள்ளமுஞ் செய்யும் செயலும் நாயகனுர் செய்யுஞ் சிறப்பும், ஒன்ரு—ஒன்றேயாக, மலரும் கந்தமும் போலக் கலந்து—மலரும் மணமும்போல ஒருமையுற்று, வேறு இன்றி—இருமையின்றி, உற்ருர்—ஒருவன் என்னும் ஒருவனைப் பற்றிக்கொண்டு இருவரும் ஒருவராய் இருந்தார்கள்.

தோகைக்குந் தோன்றற்கும் ஒன்ருய் வருமின்பத்துன்பங்கள், அவ்வாற்ருல், தோகைக்குந் தோகைக்கும் ஒன்ருய்வர ஒருவராய் இனிது வீற்றிருந்தருளினரென்க. (255)

இங்கிவ ரிருவர் தாமு மியாக்கையு முயிரும் போலத்
தங்களில் வேறின் ருகிச் சரவண தடத்தில் வந்த
புங்கவன் றன்னைச் சேர்ந்து போற்றியே யொழுக லுற்ருர்
கங்கையும் யமுனை தானுங் கனைகட லுடன்சேர்ந் தென்ன.

இங்கு இவர் இருவர் தாமும்—ஈண்டு விதந்தோதிய இந்த இருவர் சத்திகளும், யாக்கையும் உயிரும் போலத் தங்களில் வேறு இன்று ஆகி—உடலும் உயிரும் போலத் தங்களுட் பேதமின்றி, சரவண தடத்தில் வந்த—சரவண தடாகத்திலே திருவவதாரஞ் செய்த, புங்கவன் தன்னை—ஞானநாயகர் எனப்படுஞ் சுப்பிரமணிய சுவாமியாகிய கிருபாசமுத்திரத்தை, கங்கையும் யமுனையும் கனை கடலுடன் சேர்ந்தென்னச் சேர்ந்து—கங்கா நதியுங் காளிந்தி நதியும் ஒலிக்கின்ற கடலோடு சேர்ந்தொன்ருமாறு போலச் சேர்ந்து,

போற்றி—அப்பெருமானை வழிபாடு செய்து, ஒழுகல் உற்ருர்—அவர் வழியில் ஒருமையுற்று ஒழுகியருள்வாராயினர்.

ஈண்டொருமை அறிவு இச்சை செயல் ஆகிய மும்மையினெருமையாம். இரு சத்திகளும் ஞான சமுத்திரத்தின் பெருக்கமாய் அடியார்களின் உள்ளக் கமல வயல்களிற் பெருக்கெடுத்தொழுகலாறு செய்யுமென்க. தான், சாரியை. (256)

கற்றையங் கதிர்வெண் டிங்க ளிருந்துழிக் கனலிப் புத்தே
ளுற்றிடு தன்மைத் தென்ன வும்பர்கோ னுதவு மானு
மற்றைவில் வேடர் மானும் வழிபடல் புரிந்து போற்ற
வெற்றியந் தனிவே லண்ணல் வீற்றிருந் தருளி ஞனே.

கற்றை அம் கதிர்—திரளாகிய அழகிய கிரணங்களையுடைய சூரியனும், வெண் திங்கள்—வெண்மையாகிய சந்திரனும், இருந்துழி—ஒருங்கே இருந்த இடத்தில், கனலிப் புத்தேள்—அக்கினியாகிய தெய்வம், உற்றிடு தன்மைத்து என்ன—அவற்றுக்கு நடுவில் இருக்கின்றதொரு தன்மையைத் தமது வீற் றிருக்கை ஒப்புமையானுடைத்து என்று சொல்லும்படி, உம்பர்கோன் உதவும் மானும்—தேவேந்திரன் உதவும் மான்போல்வாராகிய தெய்வயானை யம்மையாரும், வில் வேடர் மானும்—வில்லினையுடைய வேட்டுவர் உதவும் மான்போல்வாராகிய வள்ளியம்மையாரும், வழிபடல் புரிந்து போற்ற—வழி பாடு செய்து துதிக்க, வெற்றி அம் தனிவேல் அண்ணல்—வெற்றிபொருந்திய அழகிய ஒப்பற்ற வேற்படையைத் தரித்த சுப்பிரமணியப்பெருமான், வீற் றிருந்தருளினுன்—அவர்களுக்கு நடுவிலே சத்தி சமேதராய்வீற்றிருந்தருளினர். (257)

கல்லகங் குடைந்த செவ்வேற் கந்தனேர் தருவ தாகி
வல்லியர் கிரியை ஞான வல்லியின் கிளையாய்ச் சூழப்
பல்லுயிர்க் கருளைப் பூத்துப் பவநெறி காய்த்திட் டன்ப
ரெல்லவர் தமக்கு முத்தி யிருங்கனி யுதவு மென்றும்.

கல் அகம் குடைந்த செவ்வேற் கந்தன்—கிரௌஞ்சகிரியை அகத்தே துளை செய்து அழித்த செம்மையாகிய வேற்படையைத் தாங்கிய கந்தசுவாமி, ஓர் தருவாகி—ஒப்பற்றதொரு தெய்வத் தருவாகி, வல்லியர்—கொடிபோல்வா ராகிய சத்திகள் இருவரும், கிரியை ஞான வல்லி இன் கிளையாய்—கிரியை ஞானம் என்னுங் கொடிகளாகிய இனித்த சுற்றமாய், சூழ—தருவாகிய தம் மீது பற்றிச் சுற்றிப் படராநிற்ப, பல் உயிர்க்கு அருளைப் பூத்து—பலவாகிய உயிர்கள் உய்யும்பொருட்டுத் திருவருளாகிய பூவைப் பூத்து, பவம் நெறி காய்த்திட்டு—பிறவிவழியாகிய காயைக்காய்த்து, அன்பர் எல்லவர் தமக்கும்— அவ்வாற்ருல் ஞானங் கைகூடி அயரா அன்பினராயினர் யாவருக்கும், முத்தி இரும் கனி—வீடுபேருகிய பெருமைபொருந்திய அரும்பெறற் கனியை, என்றும் உதவும்—எப்பொழுதும் இடையீடின்றி நுகருமாறு அளித்தருளாநிற்பர்.

கந்தன் தருவாதற்கேற்ப, வல்லியர் கிரியை ஞானக் கொடிகளாக உருவகிக்கப்பட்டனர். வேதம், கருமம் ஞானம் என இருவகைத்தாதல்போல,

அதன் விளைவாகிய அருணெறி எனப்படும் ஆகமமும், கிரியை ஞானம் என இருதிறத்ததாம். சரியை கிரியையிலும், யோகம் ஞானத்திலும் அடங்கும். கிரியை ஞான நிமித்தம்; ஞானம் வீட்டுக்கு வாய்தல். இங்ஙனமாதல்,

*'கிரியையென மருவுமவை யாவும் ஞானம் கிடைத்தற்கு நிமித்தம் .........'

என்னுஞ் சிவப்பிரகாசத்தானும்,

†'ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராணம்
நல்லஆ கமஞ்சொல்ல அல்லவா மென்னும்
ஊனத்தார் என்கடவர் ............' என்ற சித்தியாராலுந் தெளிக.

கந்தனுகிய தருவை அணுக அவாவும் ஆன்மாக்கள், முதலிற் கிரியாவல்லியைப் பற்றிக் கர்ம சுத்தி எய்தும்பொருட்டு, அந்தத் தரு பூக்கத் தாமும் பூத்து, அது காய்க்கத் தாமுங் காய்த்து, அவ்வாற்ருற் சுத்தியெய்தி, ஞான வல்லியைத் தொடர்ந்து பற்றி, அயரா அன்பு முதிர்ந்து, தாமுமத் தருவேயாய், அஃதுதவும் அத்துவித முத்திக் கனியை நுகர்ந்து பேரின்பப் பெருவாழ்வு பெறும் என்க.

கிரியையும் ஞானமும் முத்திக்கனி பெறுவார்க்குதவும் ஏணிப்படிகளாம். 'கற்பெனப் படுவது களவின் வழித்தே' என்ற களவியற் சூத்திரத்தானே ஞானத்தைக் கிரியை வழித்தெனக் கொண்டு, கற்பு முற்றுப்பெற்ற தெய்வ நாயகியம்மையாரை ஞானவல்லி எனவும் களவு முற்றுப்பெற்ற வள்ளி நாயகியாரைக் கிரியாவல்லி எனவுங் கொள்க. களவு கற்பு அன்பினைந் திணையின் இருவகைக் கைகோளாம். கைகோள்—ஒழுக்கங் கோடல்.

‡''பல்லுயிர்க்கருளைப் பூத்து என்றது அறிவுந் தொழிலும் வலியுங் குணமுமின்றி அணுத்துவம் பூண்டு, ஆணவம் என்னும் இருளிற் கிடந்து தடுமாறி இடருழக்கும் பல்வகையுயிர்க்கும் குருடர்க்குக் கோல்கொடுத்துதவுதல்போலத் தநுகரணதிகளைக் கொடுத்து அவ்விருளினின்றும் வெளிவருமாறு அருள்புரியக் கருதிய இச்சையை. இவ்வருள் காய் தோன்றுதற்குக் காரணமாகிய பூப்போன்று நிற்றலிற் பூ என உருவகிக்கப்பட்டது. இதனுற் கேவல நிலையிலே உபகரித்தல் கூறினுர். கேவலமாவது உளதாந் தன்மையாகிய தனிநிலை. 'கேவலந்தன் னுண்மை' என்பது சித்தியார்.

பவநெறி என்றது ஆணவமாகிய அவ்விருளினின்றும் நீக்கி அவ்வுயிர்களுக்குத் தநுகரணதிகளைக் கொடுத்து மயக்கம் நீக்குதற்கு இயன்ற வழியாகிய பிறவி வழியை. இது பூவினின்றுந் தோன்றிய காய்போலப் பயன் படனேக்கிக் காயென உருவகிக்கப்பட்டது. இதனுற் சகல நிலையிலே உபகரித்தல் கூறினுர். சகலமாவது கலை முதலியவற்ருேடு கூடிய நிலை.

அன்பர் என்றது பாச நீக்கமுஞ் சிவப்பேறும் அடைந்து சுத்த நிலையராகிய அயரா அன்பினரை. சுத்தமாவது மலம் நீங்கிய நிலை.'' (258)

பெண்ணெரு பாகங் கொண்ட பிஞ்ஞகன் வதன மொன்றிற்
கண்ணெரு மூன்று வைகுங் காட்சிபோ லெயினர் மாதும்
விண்ணுல குடைய மாதும் வியன்புடை தன்னின் மேவ
வண்ணலங் குமர னன்னுர்க் கருள்புரிந் திருந்தா னங்கண்.

---

* சிவப்பிரகாசம் :பாயிரம் — 10

† சிவஞானசித்தியார் சுபக்கம்: சூத். — 8 : 27

‡ இவ்விசேட உரைப்பகுதி, சுன்னுகம், அ. குமாரசுவாமிப்புலவர் அவர்கள் இயற்றிய தமிழ்ப்புலவர் சரித்திரத்திற் கண்டது.

பெண் ஒரு பாகங் கொண்ட பிஞ்ஞகன் வதனம் ஒன்றில்—உமாதேவியாரை ஒருபாகத்திற் கொண்டருளிய சிவபெருமானது ஒரு திருமுகத்தில், ஒரு மூன்று கண் வைகும் காட்சி போல்—சோமசூரியாக்கினிகளாகிய ஒப்பற்ற மூன்று திருக்கண்கள் ஒருங்கிருக்குங் காட்சியைப்போல, எயினர் மாதும்—குறவர் மாதாகிய வள்ளிநாயகியாரும், விண்ணுலகு உடைய மாதும்—விண்ணுலகத்தையுடைய தேவமாதாகிய தெய்வயானையம்மையாரும், வியன்புடை தன்னில் மேவ—பெருமை பொருந்திய இருபக்கத்திலும் இருக்க, அண்ணல் அம்குமரன்—அண்ணலாகிய திருமுருகப்பெருமான், அன்னார்க்கு அருள்புரிந்து—அவ்விருவருக்குந் திருவருள் பாலித்து, அங்கண்—அந்தக் கந்தகிரியில், இருந்தான்—அவருடன் மூவராய்க் காட்சிதந்து அவர் நடுவில் வீற்றிருந் தருளினர்.

உவமானத்துக் கியைய உவமேயம் உரைக்கப்பட்டது. பிஞ்ஞகன்—தலைக் கோலமுடையான். (259)

சேவலுங் கொடிமான் றேருஞ் சிறைமணி மயிலுந் தொன்னுண்
மேவருந் தகரும் வேலும் வேறுள படைகள் யாவு
மூவிரு முகத்து வள்ளன் மொழிந்திடு பணிக ளாற்றிக்
கோவிலின் மருங்கு முன்னுங் குறுகிவீற் றிருந்த மன்னோ.

சேவலும்—சேவற்கொடியும், கொடி மான் தேரும்—கொடிபொருந்திய குதிரை பூண்ட மனோவேகப் பொற்றேரும், மணி சிறை மயிலும்—மரகதமணி போலும் பச்சைப் பசுந் தோகையினையுடைய மயில்வாகனமும், தொன்னாள் மேவரும் தகரும்—முன்னொரு காலத்தில் நாரதர் செய்த வேள்வியில் வாரா நின்ற ஆட்டுக்கடா வாகனமும், வேலும்—வேற்படையும், வேறு உள படைகள் யாவும்—வேறாயுள்ள படைக்கலங்கள் யாவும், மூவிரு முகத்து வள்ளல் மொழிந்திடும் பணிகள் ஆற்றி—ஆறு திருமுகங்களையுடைய அருள்வள்ளலாகிய சுப்பிரமணியப்பெருமான் பணிக்கும் பணிகளைச் செய்துகொண்டு, கோவிலின் மருங்கும் முன்னும்—ஆலயத்தின் பக்கங்களிலுஞ் சந்நிதியிலும், குறுகி—அண்மையவாய் அணுகி, வீற்றிருந்த—வீறுபடைத்திருந்தன.

வேறுள படைகள் பதினோருருத்திரர்கள். பணி, 'ஏக னாகி இறைபணி நிற்க' என்புழிப் பணியாம். சேவலாதியன ஆத்மவேகமாகிய முனைப்படங்கி, ஏகனாகி இறைபணி நிற்கும்பொருட்டு முன் தவஞ்செய்து வைத்தவைகளாம். தம்முனைப்படங்கினமையின், 'மொழிந்திடு பணிக ளாற்றி' என்றார். வீறு 'நாமார்க்குங் குடியல்லோம்' என்னும் வீறும். (260)

ஆறிரு தடந்தோள் வாழ்க வறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வே
ளேறிய மஞ்ஞை வாழ்க யானைதன் னணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீ ரடியா ரெல்லாம்.

செவ்வேள்—செம்மையாகிய தூய விருப்பத்துக்கிடமான சிவசுப்பிரமணியப் பெருமானின், ஆறிரு தடம் தோள் வாழ்க—விசாலமான பன்னிரண்டு திருப்புயங்கள் வாழ்க; அறுமுகம் வாழ்க—ஆறு திருவதனங்கள் வாழ்க; வெற்பைக் கூறு செய் தனி வேல் வாழ்க—கிரௌஞ்ச கிரியைப் பிளந்த ஒப்பற்ற வெற்றிவேல் வாழ்க; குக்குடம் வாழ்க—சேவற்கொடி வாழ்க; ஏறிய மஞ்ஞை வாழ்க—அப்பெருமான் இவர்ந்தருளிய மயில்வாகனம் வாழ்க; யானை தன் அணங்கு வாழ்க—தெய்வயானையம்மையார் வாழ்க; மாறு இலா வள்ளி வாழ்க—ஒப்பில்லாத வள்ளிநாயகியார் வாழ்க; சீர் அடியார் எல்லாம் வாழ்க—சிறப்புப்பொருந்திய அடியார்கள் யாவரும் பேரானந்தப் பெருவாழ்வு வாழ்க.

அடியரெல்லாம் என்றும் பாடம்.

இருதயந்தோறும் வாழ்க என்றவாறும். அதனானே, இருதய மாசைப் போக்கித் தூய்மை செய்து வாழக்கடவன வாழ்தற்கு வழி செய்வோமாக என்பதாம். (261)

புன்னெறி யதனிற் செல்லும் போக்கினை விலக்கி மேலா
நன்னெறி யொழுகச் செய்து நவையறு காட்சி நல்கி
யென்னையு மடிய னாக்கி யிருவினை நீக்கி யாண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங் கயங்கள் போற்றி.

புன்னெறி அதனிற் செல்லும் போக்கினை விலக்கி—கீழ்நெறியாகிய புன்புல நெறிக்கட் செல்லும் எனது செல்லுகையைத் தடுத்து நிறுத்தி, மேல் ஆம் நன்னெறி ஒழுகச் செய்து—மேன்மைத்தாகும் நன்னெறிக்கண் என்னை ஒழுகச்செய்து, நவை அறு காட்சி நல்கி—மாசறு காட்சியாகிய மெய்யுணர்வை அருள்செய்து, என்னையும்—ஒன்றுக்கும் பற்றாத என்னையும், அடியன் ஆக்கி—தமக்கு அடியவன் ஆக்கி, இருவினை நீக்கி—நல்வினை தீவினைகளாகிய இருள்சேர் இருவினைகளையும் ஒழித்து, ஆண்ட—ஆட்கொண்டருளிய, பன்னிரு தடம் தோள் வள்ளல் பாத பங்கயங்கள்—பன்னிரண்டு விசாலமான திருப்புயங்களையுடைய அருள் வள்ளலாகிய சுப்பிரமணியப்பெருமானின் திருவடித் தாமரைகளை, போற்றி—யாமெல்லாம் போற்றுவோமாக.

கந்தபுராணம் பதினாயிரஞ் சொன்ன கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் தங் குலதெய்வமுங் குருமூர்த்தியுமாகிய சுப்பிரமணிய சுவாமியாலெய்திய அருளநுபவத்தை அடக்கலாற்றாது ஒருவாற்றாற் புலஞ்செய்து அப் பெருமானுடைய பாதபங்கயங்களைத் துதித்தருளினாரென்க. இவ்வாறு தம்மநுபவம் மேலிட்டுத் துதித்தருளினாராயினும், விலக்கியன ஒழித்து விதித்தன செய்வதாகிய அறங் கைவந்து, அதனானே மனமாசு தீர்ந்து, அது தீர்ந்த வழி மெய்ப்பொருளுணர்ச்சி பிறந்து, அம் மெய்ப்பொருளுக்கடிமையாதலாகிய இன்பமெய்தி, இருவினையொப்பும் மலபரிபாகமுஞ் சத்திநிபாதமுந் தலைக்கூடி, ஆட்கொள்ளப்படுதலாகிய வீடுபேற்றைப் பெறுகின்ற புருஷார்த்த நெறியைக் காட்டியருளினாருமாம். அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனும் என்க.

இனி, புன்னெறிக்கட் சென்ற தேவாசுரர்களையும், மேலாம் நன்னெறி யொழுகிய முசுகுந்தர் போல்வாரையும், நவையறு காட்சி வல்ல நாரதாதி

முனிவர்களையும், அடிமையாய்த் தம்மையணைந்தின்புறும் வள்ளிநாயகியார் போல்வாரையும் ஆட்கொண்டருளும் முறையிலாட்கொண்டு, வீடுபேறாய் விளங்கும், பன்னிரு தடந்தோள் வள்ளலின் பாதபங்கயங்களின் திருவருள் வரலாறே கந்தபுராணமாம் என்பதைக் காட்டியருளினருமாம்.

பாதபங்கயங்கள் என்னைக் காக்குக என்றுரைப்பதினும் யாம் போற்று வோமாக என்றுளப்படுத்துரைப்பது சிறப்பாம். (262)

வேறு

வேல்சேர்ந்த செங்கைக் குமரன்வியன் காதை தன்னை
மால்சேர்ந் துரைத்தேன் றமிழ்ப்பாவழு வுற்ற தேனு
நூல்சேர்ந்த சான்றீர் குணமேன்மை நுவன்று கொண்மின்
பால்சேர்ந் ததனாற் புனலும்பய னாவ தன்றே.

வேல் சேர்ந்த செங்கைக் குமரன் வியன் காதை தன்னை—வேற்படை பொருந்தியிருக்கின்ற சிவந்த கைகளையுடைய சுப்பிரமணியப்பெருமானது பெருமை பொருந்திய சிவகதையை, மால் சேர்ந்து—பித்துப் பிடித்து, உரைத்தேன்—பிதற்றுதல் செய்திட்டேன்; தமிழ்ப் பா—என் பிதற்றுரை யாகிய தமிழ்ப் பாடல்களாலான இப் புராணம், வழு உற்றதேனும்—வழுக்கள் நிரம்பியதேயாயினும், நூல் சேர்ந்த சான்றீர்—நூலொடு பட்ட சான்றோர்களே, மேன்மை குணம் நுவன்று—இப் புராணப் பொருளின் மேன்மைக் குணங்களைப் பாராட்டி, கொண்மின்—அவ்வாற்றால் இப் புராணத் தையும் ஏற்றுக்கொண்மின்; பால் சேர்ந்ததனால்—இனிய பாலோடு சேர்ந்தத னால், புனலும்—இனிமையற்ற நீரும், பயன் ஆவது அன்றே—பயன்படுதல் உண்டே.

என் பாடல் பாலோடு கலந்த நீராகுக என்றதாம். 'மால் சேர்ந்து' செயப்படுபொருளைச் செய்தது போலச் செப்பியது. குணமேன்மையாவது சுப்பிரமணியப் பிரபாவமாம். அன்று, ஏ இரு எதிர்மறைகள். பால் என்று பொருள்படும் பயம், பயன் என நின்றதெனினுமாம். அன்று என்பதை அசை யெனக் கொண்டு, பயனாவதே எனக் கோடலுமாம். ஏ, தேற்றம். (263)

பொய்யற்ற கீரன் முதலாம்புல வோர்பு கழ்ந்த
வையற் றெனது சிறுசொல்லுமொப் பாகு மிப்பார்
செய்யுற் றவன்மா லுமைபூசைகொள் தேவ தேவன்
வையத் தவர்செய் வழிபாடு மகிழு மன்றே.

இப்பார் செய்யுற்றவன்—இந்தப் பூமியைச் சிருட்டிசெய்த பிரமதேவரும், மால்—திருமாலும், உமை—உமாதேவியாரும், பூசை—செய்கின்ற பூசையை, கொள் தேவதேவன்—ஏற்றருளுகின்ற மகாதேவராகிய சிவபெருமான், வையத்தவர் செய் வழிபாடும் மகிழும் அன்றே—இப் பூமியிலுள்ள மனிதர் செய்கின்ற வழிபாடாகிய பூசையையும் பொருள் செய்து ஏற்று மகிழுகின்றா ரன்றோ; இம் முறையானே, பொய்யற்ற கீரன் முதலாம் புலவோர் புகழ்ந்த

ஐயற்கு—பொய்யடிமையில்லாத புலவர் பெருமானாகிய நக்கீரர் முதலிய சங்கத்துச் சான்றோர்கள் புகழ்ந்து பாடிய சுவாமியாகிய சுப்பிரமணியப் பெருமானுக்கு, எனது சிறு சொல்லும் ஒப்பாகும்—எனது புன்மையாகிய சொற்கூட்டமாய பாடலும் இயைபுடைத்தேயாம்.

பாடலும் பூசையேயாம். தந்தை குணம் மைந்தர்க்குமாம் என்னுங் கருத்தைப் புலப்படுத்தும் முகமாகக், குருடர்க்குங் கோல்கொடுத்துதவும் பெருங் கருணைத் திறத்தை விரித்தவாறும். (264)

என்னா யகன்விண் ணவர்நாயகன் யானை நாம
மின்னா யகனான் மறைநாயகன் வேடர் நங்கை
தன்னா யகன்வேற் றனிநாயகன் றன்பு ராண
நன்னா யகமா மெனக்கொள்கவிஞ் ஞால மெல்லாம்.

என் நாயகன்—எனது குருநாதன்; விண்ணவர் நாயகன்-தேவாதிதேவன்; யானை நாம மின் நாயகன்—மறுவில் கற்பின் வாணுதலாகிய தெய்வயானை கணவன்; நான்மறை நாயகன்—நான்காய வேதங்களுக்கு அதீதன்; வேடர் நங்கை தன் நாயகன்—குறவர் மடமகளாகிய வள்ளி மணவாளன்; வேல் தனி நாயகன்—வேற்படையைத் தரித்த ஒப்பில்லாத சர்வலோகைக நாயகன்; தன்—ஆகிய சுப்பிரமணியசுவாமியினது, புராணம்—புராணமாகிய இக் கந்த புராணம், நல் நாயகமாம்—புராணங்களுக்கெல்லாம் நல்ல நடுநாயகமாம்; என—என்று, இஞ்ஞாலமெல்லாம் கொள்க—இந்த உலகமெல்லாம் கொண்டாடுவதாக.

சர்வலோகைக நாயகன் புராணம், புராண நாயகமாமென்க. (265)

வற்றா வருள்சேர் குமரேசன்வண் காதை தன்னைச்
சொற்றாரு மாராய்ந் திடுவாருந் துகளா றுமே
கற்றாருங் கற்பான் முயல்வாருங் கசிந்து கேட்க
லுற்றாரும் வீடு நெறிப்பாலி னுறுவ ரன்றே.

வற்றா நருள் சேர்—வற்றுதலை அறியாத அருட்பிரவாகத்தைக் கொண்ட, குமரேசன் வண் காதை தன்னை—குமாரக்கடவுளது அருள்வளம் பொருந்திய புராண சரிதையை, சொற்றாரும்—தக்கார் கேட்கச் சொன்னவர்களும், ஆராய்ந்திடுவாரும்—புராணத்தின் மெய்ப்பொருளை ஆராய்ந்து காணுவாரும், துகளாறுமே கற்றாரும்—சொற்குற்றம் பொருட்குற்றம் வாராமற் புராணத்தைக் கசடற வரன்முறையிற் கற்றவர்களும், கற்பான் முயல்வாரும்—புராணம் வல்லாரிடம் முறையே கற்க முயல்பவரும், கசிந்து கேட்கல் உற்றாரும்—புராணத்தை வாசிக்கும் முறையில் வாசிக்க அதன் பொருளைச் சொல்லும் முறையிற் சொல்ல அதனைக் கசிந்துருகிச் சிரத்தையோடு கேட்கும் முறையிற் கேட்டலைச் செய்தோரும், வீடு நெறிப்பாலின் உறுவர்—வீடு பெற நிற்பவரேயாவர்.

வீடு நெறி—முத்திவழி. பால்—முத்திவழிக்கண் வழிப்படுத்தும் நற்சார்பு. வீடு பெற நில் என்பது உலக அன்னையாகிய ஒளவையாரின் திருவாக்கு.

எத்தொழிலேச் செய்துகொண்டு எங்கே நிற்பவராயினுங் கந்தபுராணத் தொடர்புடையார் வீடுநெறிப்பாலினராய் வீடுபெற நிற்பவரேயாவர் என்க. நெறிப்பாலின் வீடு உறுவர் எனினுமாம். (266)

பாராகி யேனைப் பொருளாயுயிர்ப் பன்மை யாகிப்
பேரா வுயிர்கட் குயிராய்ப்பிற வற்று மாகி
நேராகித் தோன்ற லிலதாகிநின் ருன்க ழற்கே
யாராத காத லொடுபோற்றி யடைது மன்றே.

பார் ஆகி—பிருதிவியாகியும், ஏனைப் பொருளாய்—ஏனைய நான்கு பூதங்கள் சந்திர சூரியர் என்னும் இவைகளாகியும், உயிர்ப் பன்மை ஆகி—பலவாகிய ஆன்மாக்களாகியும், பேரா உயிர்கட்கு—தம்மைவிட்டு என்றும் அகலாத நிலேயாய ஆன்மாக்களுக்கு அவை இயங்கும்பொருட்டு, உயிராய்—பரமான்மாவாகியும், பிறவாகி—ஏனைத் தத்துவ தாத்துவிகங்களாகிய பிற வேறு பதார்த்தங்களாகியும், நேர் ஆகித் தோன்றல் இலதாகி—நேர்பட்டு முன்னிலேச் சுட்டாய்த் தோன்றுதல் இல்லேயாகியும், நின்ருன் கழற்கு—நின்றருளும் பரம்பொருளின் திருவடிக்கண், ஆராத காதலொடு—தெவிட்டாத ஆராமையோடு, போற்றி—துதிசெய்து, அடைதும்—சரண்புகுவோமாக.

அட்ட மூர்த்தத்தில் முதலும் இறுதியும் பாரும் உயிரும் ஆதலின், ஏனைப் பொருளிற் சந்திரனுஞ் சூரியனுஞ் சேர்க்கப்பட்டன. உயிரொடு கலந்து உயிராயிருப்பதோடமையாது, அவ்வுயிர்களுக்கு வேருய் உடனய் உபகரித்தற் பொருட்டு உயிர்க்குயிராயும் பரம்பொருள் இருக்குமென்க. ஒன்ருதல் வேருதல் உடனுதல் மூன்றும் இரண்டற்று நின்று செய்யும் அத்வைத உபகாரமாம். பிறவற்றும் என்புழி அற்று சாரியை; வகரம் உடம்படு மெய்; உம், எச்சம். பிற என்பதில் நவந்தரு பேதமும் பிறவும் அடங்கும். 'திருவந்த' 'ஊனுகி' 'காண்பவன்' என்னுங் கடவுள் வாழ்த்துச் செய்யுள்கள் ஈண்டைக் கியைபுடையனவாம்.

நேராகித் தோன்றலிலவாதல் தத்துவங் கடந்த வாக்கு மனுதீத சொரூப நிலேயாம்.

'ஒன்றுநீ யல்லே அன்றி ஒன்றில்லே'
'ஏகன் அநேகன் இறைவன் அடி வாழ்க'

சிவ சிவ

திருச்சிற்றம்பலம். (267)

வள்ளியம்மை திருமணப்படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் – 2067.

தக்ஷ காண்டம் மூலமும் உரையும் முற்றுப்பெற்றன.

திருச்சிற்றம்பலம்.

வேலும் மயிலுந் துணே.

கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்
திருவடி வாழ்க.

உ

ஒரு முகம்

குறவர் மடமகள்
கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு
நகைஅமர்ந் தன்றே.

ஒரு கை

நீல்நிற விசும்பின்
மலிதுளி பொழிய; 1

ஒரு கை

வான்அர மகளிர்க்கு
வதுவை சூட்ட; 2

— திருமுருகு.

1. வான்சிறப்பு.
2. காமத்துப்பால்.

## வாழ்த்து

வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக வுலக மெல்லாம்.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்

''வேதமொடு வேதாங்கம் பயின்று வல்லோன்
விரிந்தசிவா கமமுணர்ந்து மேன்மை பூண்டோன்
போதநிறை சிவமறையோன் காஞ்சி வாழும்
புனிதமிகு கச்சியப்ப குரவ ஞனேன்
வாதமுறு புலவர்குழா மகிழ்ந்து போற்ற
மதிமலிமா டம்புடைசூழ் குமர கோட்டத்
தேதமறு சகாத்தமெழு நூற்றின் மேலா
யிலகுகந்த புராணமரங் கேற்றி ஞனே.''

— அபியுக்தர் வாக்கு.

❋

கந்தபுராணச் சுருக்கம்

''போதமுறு சூதமுனி புகன்ற காந்தப்
புகழ்க்கடலிற் படிந்ததன்கட் பொருள தான
மேதகுவண் புனலருந்தி வைய முய்ய
வெய்யதுயர்ப் பிறவியெனும் வெம்மை தீரத்
தாதவிழ்பூம் பொழிற்காஞ்சிக் குவட்டி லேறிச்
சலதியமு தினைநிகர்செந் தமிழ தான
காதன்மழை பொழிந்தவருட் கொண்ட லான
கச்சியப்ப னிருபாத முச்சி வைப்பாம்.''

— சம்பந்தசரணுலய சுவாமிகள்.

உ

# கந்தபுராணம் — தக்ஷ காண்டம்

## பாட்டு முதற் குறிப்பகராதி

இ

## ஈ



## உ

